கரைகாணாகோடி பிர்மாகண்டாரையா கரையற்றவிஷ்ணுமயங் கோடிகண்டார், தரைகாணாச்சங்காரங் கோடிகண்டார் தாக்கோடே மயேஸ்பரத்தைத் தாண்டிநின்று, துரைகாணாச்சதாசிவன்தா னொடுங்கிச்சத்தி துலையாதவாதமுடன் விந்துவற்று, திரைகாணாசிவன்சென்றுசிற்பரையிற்சேர்ந்து தெளிகடந்தபூரணத்தில் சொக்கினாரே. ()

சொக்கியேபுசுண்டருமே யவளைத்தொட்டு சுழுத்தியென்ற சினேந்திரன் றானுநின்றார், பக்கியிந்திரசாலவித்தை போட்டாளாகில் பரிந்துமேக்ஷணப்பொழுதிற் பணியும்வந்து, நிக்கிநிஜமெனவிரித்தாள் யீடாரத்தை நிமிஷத்திவண்டமெல்லா மாய்ந்துபோச்சு, சுக்கியதைவேணுமென்றால் றுடைக்கவல்லாள் சுருதிக்குவித்தான முத்தித்தாயே. 178

முத்தியிலேநின்றமர்ந்த கண்டமூர்த்தி முன்போலேகற்பகமே யாவாவென்றார், பத்தியிலேயதுமேலே கூடாரமென்றார் பார்சகையிலேகூட்டோடேவிருட்சமாச்சு, நித்தியிலேநின்றுரைத்த சித்தைப் போலேநிலவரமாகக்கூட்டுக்கு ளமர்ந்துநின்றார், கத்தியிலே நிற்கிறதோர்பூவைப்போல கண்டத்தேநின்றுரைத்துக் கருதினாரே. 179

உரைத்துமே புசுண்டருடபிறப்பைக்கேளு உகந்துமதுநடனங்கள் களிக்கும்போது, பரைந்துமேபரிதிமுதற்சாமனையுந் தரித்துப் பராபரமும்பார்வதியும் பார்த்தாரத்தை, நிரைத்துமேசிவகலையை காமம்போல நேர்ந்தனையயன்னமங்கே நிறைகெர்ப்பமாச்சு, இரைத்துமேயிருபத்து ஒன்றுபிள்ளை யீசனுடகலையாலே புசுண்டராச்சே.

ஆச்சென்றவிருபது பேர்காமத்தாலே யனேகநாளிருந்துமேலிருந்துபோனார், போச்சென்று அவர்பிடித்தார் பிராணயோகம் பேரானசிவகலை மூர்க்கத்தாலே, பேச்சென்றவாணவம் பிறந்தால் யார்மேற் பேறுபெறவவர்போலே யாருக்காகும், மூச்சென்றுமுந்தி முந்திமூலயோகம் ஒளிவுகண்டமட்டுமே நெஞ்சிற்பாரே. 181

பாரென்றநெஞ்சில்நிற்கும் நடுமூலந்தான் பரிநேராய்ப்பார்த்துமேபழக்கமாக்கி, பூரென்றுவந்துதென்றார் புசுண்டமூர்த்திபொருநெருப்புபஞ்சுபட்டார் போலேயாகும், போரென்றபரத்தேறுபோகரையப்பாம் பின்குஞ்சுசிறகொடிந்து காலும்போனால், ஏரென்றவினத்தோடேகூடாதாய்போ விளமையிலே மூலத்தைக்கூட்டிடாயே. ()

கூடாட்டாலரிதரிது பிராணனென்றார் கூறியதோர் சொன்னமொழி கேட்டுப்பொங்கி, ஆடாட்டலடியற்ற மரம்போலியானுமவர் பதத்தில் வீழ்ந்தெழுந்தேன் ஆண்மையாக, நாடாட்டா லையரன்று

போகமூர்த்திநம்போலே வாழ்ந்திரென்று யெடுத்தாரய்யர், மூடாட் டால்சொன்னதொருமூலமாதி முதிர்ந்துநின்றபிராணனைத்தா னறிந் திடாயே. 183

அறிந்திட்டவையரெங்கே யிருப்பதென்றால் அதிகமாமேருவு ச்கு தெற்கேயாகும், முறிந்திட்டவாதமுண்டுஞானமுண்டு மூர்க்க மாம்யோகமுண்டு சித்தரெல்லாமுண்டு, பிறந்திட்டபிராணனைத்தா னறியப்பண்ணி பூரணந்தான்லயிக்கின்றபோகங்காட்டி, உருந்திட் டமாவாசனுணர்வுகாட்டி ருபதேசத்துண்மைதா னுரைத்திட்டாரே.

உரைத்திட்டுமழிக்கிறதும் படைக்கிறதுஞ்செய்தா னுரையான சிவலோக வாண்மையாலே, வரைத்திட்டுவனுப்பியே விடைகொடு த்துமாசற்றமூர்த்தியே போய்வாவென்றார், தரைத்திட்டுவையருமே சாகைக்குப்போனார் சாங்கமாய் பிள்ளைகட்குத் தன்மைசொல்லி, புரைத்திட்டுப்பிராணனைத்தா னறியுங்களென்று போதித்தேன்பிள் ளைகட்குப் புத்திதானே. 185

தானனரண்டெழுத்தை பூட்டியேறச் சதிரானசிவயோகம்மை யிற்சிக்கும், ஆனனவிசுத்தியிலே நின்றுகொண்டு அப்பனேநினைவா லே மூலம்பாரு, கூனனசுழிமுனையிற் குழலாய்க்காணுங் குறிப்பாக வாசிவைத்துக் காலையாட்டு, பானனபதிசென்றுநத்திகாந்தி பண்பா னமதுவையுண்டு பரிந்துபாரே. 186

பரிந்துநின்றுகண்டத்தைப் புருவமையம்பாரு பண்பானசுடர் போலபகுந்துகாணும், குரிந்துநின்று குருபதத்தைத் துவாதசத் தைப்பாரு கூர்மையாய்பதினொன்றுங் கடந்துதோன்றுங், கரிந்து நின்றகண்டத்தில் நாகத்தைப்பாரு கலங்காமல்பிராணனுமே நிலைத் துக்காணும், அரிந்துநின்றவனுகதத்தை மாலோடுபிரமன் அடுத்துப் பார்வெட்டவெளியல்லலாமே. 187

அல்லலாந்தேகத்தை யறியவென்றால் அடுத்தேறியுன்மனையில் நின்றுபாரு, கல்லலாங்கீழ்நோக்கக் கண்டிப்பற்று கையினால்பிடித்த விடமொன்றுமில்லை, வல்லலாம்லெட்சியங்கள் வழியாச்சானல்வாறு துநித்திரையும் பசியுங்கேளு, புல்லலாம்பிரசத்தங் கேளாப்பக்கம் பிறந்திருந்து லெட்சியத்தைப் பூட்டிமூட்டே. 188

பூட்டையிலே பிரசத்தங்கேட்டுதானால் புலங்களது முஷ்கர மாய் முறித்துப்போடும், மாட்டையிலேமனதுசற்றே நழுவிற்றானால் மடையனுக்க் கடித்தவெள் ளெலும்பாய்ப்போவாய், தூட்டையிலே மனமலைக்குஞ் சூடொட்டாதுசோதனையாங் குறிகளெல்லாஞ்சுழற்

றிப்போடுங், காட்டையிலேகைநெல்லிக் கனிபோலாகுங் கனமான வாசிவைத்துக் கருத்தைவூனே. 189

ஊணிப்போங்கப்பலுக்கு நங்கூரமபோட்டா லுறிகின்றவாசி யைநீ யுரைத்துக்கட்டி, ஆணிப்போலசையாமல் மனத்தைமாட்டி யடியோடேயழுக்காறு தளத்திலோட்டி, நாணிப்போம்புலன்றன்னை நாட்டிநாட்டி கரிபரிக்குக்கடிவாளம்பூட்டிக்கட்டி, மூணிப்போமூலை யடித்துக்குருபதத்தில் பிடிக்கமுனிந்தநிராகாரத்தில்மூட்டிபோடே.

ஒட்டியேமூலத்தால் முத்திபெற்றார் உத்தமனே பாட்டனெ ன்ற மூலநாயர், நாட்டியேநந்தியல்லோ வுபதேசித்தார் நலமானமூல த்தில் நந்திநந்தி, ஏட்டியேமூலத்தால் முத்திபெற்றார் ஏத்தமாம பாட்டரென்ற வெட்டுபேரும், மூட்டியேவிதுகடந்த மூலம்மூலமூல மென்று மூச்சுவிட்டுப் பேசொண்ணாதே. 191

பேசொண்ணாமூலத்தே யெல்லாந்தோன்றும் பொருளாகவிரி த்துநின்று பிரபஞ்சமாகிப், பேசொண்ணாப்போகமெல்லா மனுபோ கித்துப் பெரிதானமூலத்தே வந்துசேரும், பேசொண்ணாவகசரத் தோ யுற்பனமும்பயமும் போக்கொன்று வரத்தொன்று ரண்டுஞ் சொல்வேன், பேசொண்ணாவகாரமது வுற்பனத்தைப்பண்ணும் பிரி ந்துகொள்ளு முதாரத்தா லயமுமாமே. 192

வயமானநிஷ்களமா மகாரமொன்றில் நந்தியென்பா ரதின்பே ருயதுவேபோகம், நயமானவோங்காரமதிலேநின்று ஓராறுமறியுயர் ந்து தாழ்ந்துகாணும், நியமானபனிரண்டாய் நின்றுஆடி நிலைத்து நின்ற வெட்டினுட கலையைவாங்கி, மயமானகாமப்பாலிரைத்திரை த்து மாண்டுபோங்கள்ளருடன் மருவிடாதே. 193

மருவதுதானெதையென்றால் மூலத்தீயை மாட்டினால்வாசிலை யுங் கைவிட்டேகுங், கருவதுவும்பேச்சால்கருதிடாதே காமப்பேய் பிடித்தது போக்கேயூணு, வருவதுதான்மொத்துஉள்ளே பார்த்தா னுற்ற கள்ளரைவருந்தா னோடிப்போவார், முருவதுதான்முன் பின்னையென்றாயானல் மூலத்தில்காலனுங் காலனில்லைதானே ()

தானானகாலனுண்டென் னுலகோர்சொல்வர் தனிக்காலன்வே றில்லை மூலன்காலன், ஆனைவாலமுண்டா னஞ்சேசெய்தா ரதைக் கண்டு பதஞ்சலியு மன்புகூர்ந்தார், கோனானபிரபஞ்சத்திற் றில்லைக் குளமிளே கூப்பிட்டு ஆட்டுவித்துக் கூத்துகண்டார், ஆனைகன்னி யன்றுவாலங்காட்டு லாட்டிவித்தாள் திருநடனஞ் சிவனைத்தானே.

சிவசத்திவுந்தியிலே தானாய்நின்று சேர்ந்துநின்றயிடபாகத்துரி
யவீடு, அவசத்தபானமது நின்றுகொண்டு அதிகமலஞ்சலங்கருத்து
யருந்தல்கேட்கும், தவசத்தமானனதிற் கூடிக்கொண்டு சாப்பிட்ட
பதார்த்தமெல்லாஞ் சமனாய்ச்செய்யும், துவதத்தநெஞ்சானகழுத்தி
யுள்ளே துலங்கியதோரெனவாசத்தி யீசன்றானே. 196

ஈசனென்றயிடத்துள்ளே யிதனைக்கேளு யீராறுவதினுள்ளே
காவலாச்சு, தாச்சென்றபதினொருவர் கருவிகூட்டந் தனித்துநின்ற
பிராணனங்கே நிற்கும்பாரு, கோச்சென்றாங்கொலுவிருந்தார்யத்தி
யீசன் கொள்கின்றசொர்பனத்தின் வீட்டைக்கேளு, பாச்சென்ற
பரத்தினிடவடிவுமாச்சு பாங்கானவுதான்னங்கே பாரித்தாளே. ()

பாரித்துப்பதினாறு கருவிகூட்டம் பண்பாகக்கொலுவிருந்தார்
பரமன்சத்தி, வீரித்துயவ்விடத்தே நின்றவரானோர் விராடன்மதினா
றைந்தால்முன்பி னிரண்டுங்கானார், ஏரித்துபெட்டினாட கலையை
வாங்கியிடிசூரை விட்டுவிடமேங்கிப்பாரு, பூரித்துகடந்தவெள்ளப்
புருவமையத்தே பேரானசாக்கிரமாந் தலமிதாச்சே. 198

ஆச்சென்றபதினாலு கருவிகூட்டம் மதிநின்றார் சதாசிவனு
மணித்தாயாரும், வேச்சென்ற வியானனங்கே விரைந்துநின்றான்
மேலானகொலுவாச்சுபிரபஞ்சமாச்சு, தேச்சென்றகவியெங்கேதொ
ண்ணூற்றாறு சுயம்பாகவதினுடைய தொழிலைச்செய்யு, மாச்சென்ற
மறங்கதெல்லாந்தோற்றமாகு மனங்குவிந்துபூரணத்தின் கொலுவி
தாமே. 199

தாமென்றகொலுக்கண்டு கருவிகூட்டந் தனித்தங்கேயிந்திரி
யக் கூத்துகண்டு, மானென்றமாயைபெண்ணாசை மகத்தானபடுகுழி
யில் மாய்ந்துகாண்பார், ஆமென்றவடிவெடுத்து வங்காரங்கூட்டியமு
ம்பானமயக்கத்தா னகமேலாக்கி, பாமென்றபாவத்தைத் தலைமேற்
கொண்டு பாங்கானவாசனையிற் குருகுவாரே 200

புருகுவார்நரகத்தில்மூலங்கண்டு புகுந்துமேதீயொளியிற் கூடக்
கூட்டி, கருகுவார்களையிருந்த பானுவீட்டில் கலங்காமல்கலந்துமந்த
வொளியுங்கண்டு, தகுறவேசந்திரனாற் விந்துவீட்டில் தாயதமாய்
வித்தணலை மேவப்பண்ணி, அகுறவேயாரணசோலைப்போல அழுந்
தவேயுடல்குளிர்ந்து புளகமாமே. 201

ஆமென்றசாம்பவிமுன் திரையைக்காட்டி வைங்கோணக் குரு
பகத்திற் புகழைக்கண்டு, நாமென்றநாதவிந்தமீசன்சத்தி நற்கமலமா
யிரத்தெட்டிதழின்மையம், தாமென்றரவிகோடிமதிதான்கோடிசார்

ந்துநின்றமூலத்திற் சதமாங்கோடி, வேமென்றயவ்வொளிக்கு நின் றுமேலே விருக்கிறதே தேவியென்றபிரமன்தானே. 202

பிரமமாம்பிரமமென்பார்போதமென்பார் பிரகாசசுத்தவெளிசா ரலென்பார், நிறமமாம்வேறொன்றிலாத நிற்குணந்தான்நிர்மலமாங்க டந்துநின்ற வேதாந்தமென்பார், விபரமாம்பிரபஞ்சமெல்லாம்விளைந் துதென்பார்வெளியாகநின்மபமாய்நிறைந்துதென்பார், வர்மமாங்கட ந்தவழி வெளிதானென்பார் வாய்பேச்சேயல்லாமல் வரைகாணாரே.

கரைகாணாப்பூரணத்தினொளியைச்சொல்ல மதியேதுநதியேது நீய்தானேது, நிரைகாணாநிரஞ்சனமா மெழியைக்காண நிசமாகக்கே சரியால்நீட்டிப்பாரு, புரைகாணாப்புல்லருக்கு வொன்றுமில்லை புத்தி யுள்ளசித்தருக்குப் பொருள்தான் மேலே, உரைகாணார்மூலத்தேபார் த்து யென்னவுறுதியில்லா துண்ணியேவுளரிப்போச்சே. 204

ஆசனத்திலப்பியாசிக்கமுறை.

உண்ணவே யகாரமுதலன்பத்தொன்று முறுதியாம்பதினாறிற் பிரிந்துதப்பா, பண்ணவேயகாரமது யீசனாச்சுபதிக்கடுக்க வார்த்தி கஞ்சத்தியாச்சு, எண்ணவேயிப்படிபதினாயிரமும்வத்தமாஞ்சிற்றசத் தியாகநின்று, முண்ணவேயிதனாலே முப்பத்தைஞ்சாச்சு மூவுலகோ ரெழுத்தாக முதிர்ந்தவாறே. 205

முதிர்ந்தவன்பத்தோ ரெழுத்தால்வேதமாச்சுமுக்யமாம்புராண மொடு சாஸ்திரங்களெல்லாம், விதிர்ந்தபின்புயிதற்குள்ளேவிரிந்துத ப்பாமிக்க சச்சிதானந்தவிரினாலே, நதிர்ந்தாறுநதிகளெல்லாஞ்சமுத் திரத்திற்புக்கி நகர்ந்தாப்போல் பூரணத்தில்பிச்சுப்போகும், ஓதிர்ந்து தேயொன்றுமில்லை யோக்கியதோர் நாலுமில்லை யொளிதான்காணே.

ஒளியானவாசியைத்தானுன்னிக்கொண்டு உருண்டாலும்பிரண் டாலுமுன்னாமூலம், அளியானயாணியடித்தாப்போலக்கூடும் அப்ப வொரு விக்கினங்களணுகிடாது, குளியானமுழங்கால்மேல்குதிகால் போட்டுக்கொடுஞ்சுழிக்காங் கோமுதாசனத்திற்கூட்டு, வெளியாகவ ணிந்தாக்கால் வலக்கால்மேலே விபரமாமாசனத்தில் கூடிடாயே.

ஆசனத்தில்கூடயிலேவாசினைசுண்டி லத்துடைமேல்ரணடான் பதத்தைவைத்து, பாசனத்தில்பற்பாசனமாய்க்கட்டிப்பதிவாகநுனி மூக்கைப்பரிந்துபாரு, வாசனத்தில்சுழிமுனையில்வாசிகூடு மருவுகின் றவாசினைதானோடிப்போகும், ஏசனத்திலிதுமார்க்கந் தாயைக்கண்டு இருக்கலாம்பூரணத்தில் யெய்தலாமே. 208

எய்தினால்சிவயோகிஞானியாவானிருக்கியே வாசியெல்லாமுடலிற்சேரும், அய்தினால்மூலத்திலொளிமேயவீசு மாறுதலங் கிரந்தியெல்லாமற்றுப்போகும், கொய்தினால்கும்பகத்தேமிதக்கவாகுங்கொடிதானதணலையசைக்கப்போகார், மைதினால்வாய்வுவென்ன மசகமாச்சு மறந்தந்த சித்தருங்கண்டவாறே. 209

வாரானமூலத்தையவ்வென்றாணு மருவியபின்முனைகொண்டால்வங்கொறாணு, பாரானபளிச்சென்றால் சிங்கென்றாணுபற்றியேமுன்னூறுவகைகாணுங்காணு, மீரானமின்னினுடவொளிபோல்காணும்மிரளாதே மனமுள்ளேசாரமுண்ணு, ஆரானயாவமுண்டசிவன்முக்கண்போல் ஆங்காரதீயொளியை யழுந்திப்பாரே. 210

தீயொளிதான்பளிச்சென்றால் பிரண்டையிலேஊதுசிந்தித்தால் யோகமங்கேசித்தியாச்சு, சுரவொளியாங்கும்பகமூளைக்கேறுது கொடி தானவாயுவங்கேமவுனமாகுர், சாவொளிதான்சமைப்பதற்குத்தீயும்வேண்டாம் சமர்த்தானசிகாரத்தைவூதப்பற்றுஞ், சூமொளியாஞ்சுழுத்தியங்கேநெடும்பாதையோடுசுளுக்காகயிம்முறையையாடிப்பாரே

ஆடியங்கேபார்ப்பதற்கு முறையைக்கேளு ஆடவெல்லாஞ்சொல்லுகிறேனறிந்துகொள்ளு, ஈடியங்கே யிடகலைபால் பூரித்துனின்று எழிலாகமூலத்தேனினைவாய்க்குப்பி, நீடியங்கேபின்கலையினுள்ளேரே சிநேர்ப்பாகநேர்ப்பாகபேத்திவாநீ, தூடியங்கேவிரைத்தாக்கால்சுத்தி நாடிதிறமானவாதபித்தஞ் சிலேட்டுமம்போமே. 212

திறமானமூன்றுவகைநோயும்வெந்து சித்தியாய்க்காயந்தானிருக்கும்நன்றாய், நலமானநல்வினையும் தீவினையும்நீறும்நலியானவைம்புலனும்விரைந்துபோகும், உறவானஓங்காரநாதனாலே ஒருகோடியிடிபோலயோங்குமோங்கும், அறமானதிப்படியேயனைஞ்சுகண்டேனறிந்துமேநாங்களுமிப்படிதான்பாரே. 213

பாருநீயவ்வென்றாலுர்புக்கூடும் பரவியதோர் மகாரமதில்சேர்ந்துநின்றால், ஊருநீஉகாரமாய்மேலேயேறு மிதுகாணும்பிரசாதமென்றமார்க்கம், நாருநீபளிச்சொன்றால் நந்தியாகநயமாகயிதினோடே வாசிசேரு, ஆருநீயட்சரமுமகாரத்தோடு யணைந்ததோர்வாசிரண்டுநாதவிந்தே. 214

நாதமென்றும்விந்துவென்றும் வாசிக்கபேருரவிமதியுஞ்சிவசத்தியென்றுபேரு, வாதமென்றும் வசியமென்று மதுக்கேபெரு மனமென்றும்போதமென்று மிதுக்கேபேரு, நீதமென்றும்பூமியென்றுமி

தற்கேபேரு நிலையானவேகமென்றும்கந்தமென்றும்நேரு, காதமென்றுந்தாரமென்று மிதற்கேபாரு கண்ணொளியாய் நின்ற திரண்டுந்தானே. 215

வெண்டையுந்தானுற்றுப்பார்க்கப்பார்க்க நிறையற்று உறையற்றவுணர்வுமற்று, அண்டையுந்தான்நல்லற்றுப்போனதெல்லா மடங்கிற்றவுட்புகுந்தந்தநாலில், தண்டையுந்தான்சிதறொத்துத தெளிவுமொத்து செயலற்றநிஷ்களமாய்க்காணுங்காணும், பண்டையுந்தான் பற்றற்றசிற்பரந்தாள் பணிந்திடுமென்றுசொல்லி பகர்ந்திட்டாளே.

பகர்ந்திட்டவாசியதுயென்றபேச்சு பண்பாகவாய்க்குமெத்த எளிதோசொல்லு, திகர்ந்திட்டதேசிதான்ஞானதேசி சேர்ந்திதைத்தான் மனமொத்துயேறுவோர்க்கு, புகர்ந்திட்டபுருவத்தில் நின்றுஆடும்பொருளான மனோன்மணியாம்பெண்ணைப்பாரு, இகர்ந்திட்டகாசிகங்கையமுனையூன்று மேகமாய்க்கண்டுந்தான் புருவமென்னே.

என்னவேசிகாரமது நெருப்பாரம்மா யிசைந்துநின்றவுகாரமது மயிர்ப்பாலமாம், உன்னவேரண்டும்விட்டா லொன்றுமொன்றில்ஓங்கியதோர் சிகாரத்தையொளிக்கான்று, மன்னவேயோகாரமுந்தில்வசவுமுந்தும் வருந்தியேமிதுநன்றுநள்ளநன்று; தன்னவேரண்டொளித்தால்சாந்தியாவான் தனித்திரண்டுமாறுக்குந் தள்ளநன்றே. 218

நன்றானசிகாரத்தில் கோபமெய்துநானென்ற வாணுவத்தால் ஓகாரந்தாக்கும், பொன்றானவிதுரண்டும்பெரியோரையா பிறப்பதற்குமிறப்பதற்கும் பெரியவித்து,உண்டாடஉகாரமதுவுடனேயாச்சு ஓங்கியதோர்சிகாரமது வரைந்தேபுக்கி, என்றானபிறப்பிறப்பு மிரண்டுமாச்சு எழுத்துரண்டுமேத்தமாமிருத்திப்பாரே. 219

இருத்தியேபாரென்றுயொண்டயேத்தமாங்காலாங்கிவையர்தாமும், பருத்தியே பக்குவம்பார்த் தெனக்குச்சொன்னார் பாரென்றார் வாசியைத்தான்பூரணத்திலயிக்க,மருத்தியேநண்ணிமைக்குள்வாயில்வந்த கலர்குமருவிரண்டும்பிறந்திறந்து, வித்திதென்றார் மறித்துமேமவுனத்தைவிடாதேயென்றார்மகத்தானவிதுரண்டால்பிறப்புமாச்சு.

பிறவாமல்ஞானத்தில்கூடுகூடு பிறத்தியாந்தூரமல்ல புகழ்ந்தநாலு, மறவாமலெந்நாளும் வாழ்வாய்நீதான் மாசற்றநாளைப்பார் சக்மோடாது, கறவாமல்கண்டதைவைத்துக் கனிந்துமே யோடுறதைரகடுகிப்ப, நறவாமல்கைக்கனிபோல் நாலுந்தோன்றும்நாதாந்தமணித்தாயுமழைப்பாள்பாரே. 221

பாரென்றநாலையேபார்க்கவென்றால் பண்பாக வகையெல்லாஞ் சொல்லக்கேளு, காமனென்றகாலையேமாலைக்கண்டாங் கடியதோர்கூட்டங்கள்கலக்கவேண்டாம், நானென்றநிசியான நடுசாமத்தில்நலங்காமலசைவற்றயிருந்துபாரு, கோனென்றகோலத்தைக் கூட்டிப்பார்த்துக்குறுமுனியாந்தலத்தில்னின்று குறித்துநோக்கே. 222

நோக்கியேனிலைத்துனின்றுகண்டத்துள்ளே நுட்பமா மட்சரந் தான்பதினார்தன்னில், ஒக்கியேயொன்றிநின்றா லுயிரேயாகும் உள்ளாறில்வகாரம்னிற்குஞ்சாவுபொய்யாம், நாக்கியேகைக்கெட்டா நாலுங்காணும் நாலதனிலேனின்று வாசியோட்டி, மூக்கியேதாய்காண்பாள் மூன்றும்வீதி முப்பாழெல்லாம் வெளியாமுன்பின்னுமே.

பின்னைகப்புக்கியிருவென்பாள்தாயும் போர்தமொழியிருவென்றசொல்லைக்கேட்டு, முன்னைக்குதிரைநான்பாகத்தோ ணன்மூலமாமாதாரத்தளமெல்லாங்காணேன், கொன்னைக்குருவென்றமொழியுங்காணேன் குறித்திட்டபொறியோடு நெறியுங்காணேன், மன்னைகமறுவென்ற தாயுங்காணேன் மட்டற்றபோதத்தி லுன்னினேனே.

உன்னியேசமாதியைந்தி னுறுதிகேளு உகப்பான தத்துவல்யசாதியென்று, முன்னியேதத்துவங்கள் முப்பத்தாறும் முனிந்தகலாப்பூதங்களைந்தாகும், துன்னியே சூட்சமத்தில்தானடக்கி சூட்சமத்தைநம்பெரியவாசன்போலாக்கி, கன்னியேகாரணமாஞ் சரீரத்திலடக்கிக்கருதியிதைப்பிரகிருதியிலேகலறப்பண்ணே. 225

கலறவேபுருடனையந்திட்டமானமாகக்கலந்துனின்றசைதன்னியமாகக்கண்டு, ஒலறவேகருத்தழிந்துயொன்றேயாகி உள்ளரையில் காற்றசையாவிளக்குப்போல, அலறவேயலைச்சலற்றுத் தானேதானாயகண்டமெய்ப்பூரணமாய்னின்றுபின்னை, துலறவேதேகமற்று யிருப்பதாலே சுத்தமாமதத்துவல்ய சமாதியாச்சே. 226

சமாதியாஞ்சவ்விகற்பச்சமாதிகேளு தனித்தனித்தா னிரண்டுவகையதிலேயுண்டு, சமாதியாஞ்சத்தநனுவித்தையுண்டு தரிப்பான திரிசானுவித்தையொன்று, பெமாதியாஞ்சத்தானு வித்தைமார்க்கம் பெரியதொரு தத்நுவசமாதிக்குத்தான், பமாதியாஞ்சத்தங்கள்பட்சியோசை படுகிறது உன்மனத்தை பாருமங்கே. 227

பருவமாஞ்சத்தானு வித்தையொன்று படியானசவ்விகற்ப மென்றுபேரு, திருவமாந்திரிசானு வித்தைமார்க்கஞ் சூட்சியா யந்தனிலைக்குள்ளேனின்று, தருவமாந்தன்னையனுசந்தானம் பண்ணி சஞ்

சரிக்கிதிரிசானுவித்தையாகு, மருவமாம்சவ்விகற்பச் சமாதிமார்க்க
மருவியதோர்சஞ்சாரத்திருக்கில்பாரே 228

பாரென்றநிருவிகற்பசமாதிகேளு பாங்கான தத்துவநிலை சமாதி
முத்தி, காரென்றசத்தானுவித்தை முத்திதன்னைத்தான்மறந்துதூக்
கமுறுமயக்கம்போல, வாரென்றபிரசத்தங்காதிற்கேளா மருவியந்த
ப்பூரணத்தே லயித்துநிற்கும், சேரென்றசைதன்னியமாகப்போனால்
நிருவிகற்ப்பசமாதியென்ற நேர்மையாச்சே. 229

நேர்மையாய்சமாதிவிட்டுசஞ்சரிக்கில் நினைவாகச்சமாதியிலேயி
ருக்கும்போது, தீர்மையாய்க்காலமென்றதிரையத்துள்ளுஞ்சிதைந்த
பிரபஞ்சமெல்லாம்பொய்யென்றெண்ணு, வேர்மையாய்விவகாரத்தா
லேதோன்றி விரிந்தபிரபஞ்சத்தின்பாசந்தள்ளி, நேர்மையாய்நிருவிக
ற்பமாகநின்றால் நெளிவானநிருவிகற்பமிதுவேயாச்சே. 230

ஆச்சென்றதத்துவல்யசமாதிமுத்தி அறிவானநிருவிகற்பமாகு
ம்போது, நீச்சென்றநிருவிகற்பசமாதிக்குள்ளேநேரானவிக்கினங்கள்
நாளதுண்டு, தூச்சென்றதெதுவென்றால்சொல்லக்கேளு சுருதிலயம்
விட்சேபஞ்சட்சேபமாகும், காச்சென்றகரமாஞ்சுவாசமொன்று கரு
த்தூணிச்சொல்லுவது நாலுதானே. 231

நாலென்றதிதற்குள்ளே யிடத்தைக்கேளு நளிந்துநின்ற நித்தி
ரைதான்விட்சேபந்தான், காலென்றராகமுறுங்கலகத்தாலே கலந்து
வரும்வாசியுங் காரணத்தாலே, மாலென்றமனோகை ராச்சியத்தினாலே
வருகுந்தான்சஞ்சேபசித்திரையுமல்ல, ஆலென்றமனோகராச்சியமும
ல்ல அரவானசொரூபங்கள் மறக்குமதுவே. 232

அதுமறந்துயிடமாகயகணடுநிற்கு மத்தியதிலாச்சரியஞ் சுவாச
மாகும், கதுநமக்குமனமொழிந்தகணுவில்நின்ன கருதுகின்றசுரூபத்
தேசந்தோஷித்துச், சதுமறந்துதனித்துயர்ந்த சமாதியுள்ளே தனித்
துநின்றவானந்த மனுபோகத்தைந்து, பறந்துபோம் நாலுவிக்கினமு
மற்று நலமுற்றசொரூபத்தி லயிக்கநன்றே. 233

அயிக்கவேநன்றானவகண்ட விருத்தியகாத காற்றில்லாவிளக்கு
ப்போல, ஐயிக்கவேயலைச்சலற்றுத் தண்ணீருமுப்ப மடங்கிநின்றவா
றதுபோலமூததிநிற்கும், தயிக்கவேபிரமன்மா லுருத்திரனுங்கேட்டு
த்தனித்துமேவேற்றுருவாய்ப் பிரமன்தானும், அயிக்கவேயிப்படிதா
ன்கடிகையொன்று யறுநேரங்கடிகையுற்றால் பதத்தைக்கேளே.

கேளுமேயசுவாதியாகங்கோடி கிருபைபண்ணிசெய்ததோர்பல
னுக்கொக்கும்,மூளுமேயிப்படிதான்சமாதிமூட்டில்முனையாகச்சுழுத்

தியென்றுயெண்ணவேண்டாம், கேளுமேசுழுத்திக்குச்சித்தந்தானுந் தி ங்கின்றவத்துமேசித்துப்போகும், ஆளுமேசமாதிக்கு நாம்பிர மமென்று யாண்மையாயதுவிருந் தயிருக்கும்பாரே. 235

பாரென்றுசொல்லுகையால் ரண்டுக்கும்பேதம்பண்பானநிருவி கற்பச்சமாதிமார்க்கம், தாரென்றசஞ்சாரச்சமாதிகேளு சார்ந்துநின் றனிருவிகர்ப்பம்பட்டேயப்பா,பேரென்றுயெழுந்திருந்துபிரபஞ்சத் தைப்பார்த்து பிரிவாகவிவரிக்குங்காலமெல்லாம், ஆகான்றபிரபஞ்ச மெல்லாஞ்சமுத்திரத்தி லதில்நிர்க்குந்துறைபோலமாயந்தானே.

தானனமாயமூன்றுகிலந்தியிடமலேபோல் தயங்குகின்றகூர்மத் தினங்கம்போல, ஆனனதோயமுற்றயாகாசம்போலமூழ்ந்துகின்றசொ ர்பனத்தினறிவைப் போலே, தானைதம்மிடத்தேயுண்டாச்சையாதம் மிடத்தேயிருந்துகொண்டுமார புக்கி, கானனவறிவழிந்து போறதா னல்கலந்துநன்மைவிடவொன்றுங்காண்கிலேனே. 237

காண்கிலேன்சகலமும் யானென்றுனின்றுக் கலந்துநாமொன்ற ல்லோவேறொன்றில்லை, பூண்கிலேனென்னிடத்தே பிறந்ததெல்லாம் பேயாகவழிந்தெல்லாமெண்ணிலெய்தும்,யெண்கிலேனென்னைவிட்ட தொன்றுமில்லை யியல்பாகவுரைந்துனில்லுயெந்நேரந்தான், மாண்கி லேன்மனததோடுசந்தானத்து மருகியேயுள்ளிட்டுவுரைதல் நன்றே

உரைத்திட்டார்சாதாரப்பயந்தான்வந்து உறப்பெரியபிராமண னுருப்பயந்தான்வந்து, மறைத்திட்டுமானபங்கமகத்தாய்வந்துமயக்க மாய்க்கண்முன்னேதேவதைகள்வந்தும், குறைத்திட்டக்குருவினிட கோபம்வந்தும் கோளுகையும்விகற்பமென்றமறியரியுமாகி, பரைத்தி ட்டுபரியாசந்தபிபழிபோட்டுபதவிகற்கமனதிங்கே யில்லையென்னே.

என்னவேயென்னிடத்தேயொன்றுங்காணே னியல்பாகநானொ ருவனென்னுலெல்லாம், பொன்னவேநான் கண்டதெல்லாம் பொய் பொய்போனசத்தியுடயிந்திரசாலம், மன்னவேமனமுரைந்துசஞ்ச ரித்தால்மகத்தானசஞ்சாரமாதியாச்சு, அன்னவேயாரூட சமாதிதன் னையாய்ந்துமேசொன்னபடி யறிந்துகொள்ளே. 240

கொள்ளென்றதேவதைகள் வந்தாலுந்தான் குவித்துசட்டைவ ண்ணுதேயகண்டமாய்னில்லு, அள்ளென்னவத்துவித நெறியிற்கூடி அறிந்துமேசஞ்சாரச்சமாதிக்குளளுந்,தெள்ளென்றதிடப்பட்டபின் புகேளுதெளிந்துமேசகலத்தில்சம்சயம்போக்கித், துள்ளென்றகட்ட சட்டிவிட்டாப்போலே தோற்றமாந்தேவதையை சத்தாய்க் காணே.

காணவே தேவதைகளை மனதிலெண்ணிக் கலங்காமல்மலைபோலே யசைவுமற்று, நீணவே தேவதைகள் காற்றுபோலென்று நிச்சயித்து வொன்றாக நில்லு நில்லு, ஆணவே யத்துவித நிலைதானென்றறிவோடே திடப்பட்டு திறத்தில் நில்லு, பூணவே சாதகத்தி னிலையைக் கூட்டி யுத்தமமா மாருடச் சமாதியாச்சே. 242

சமாதியெல்லாம் பார்க்குமுன்னே சாதகத்தைக்கேளு தம்பித் துவாசியை நீ பூட்டி மூட்டு, உமாதியா மூலங்கண்டுரைத்தபின்பு யோகமெல்லாம் நவ்வொன்றாவூட்டிப்பாரு, வமாதியாய்பாயமெல்லாந் தள்ளிப்போட்டுவகையாகச் சமாதியைந்தும்வாய்க்கும், நமாதியாய் நாலுமங்கே முன்னேத்தோன்றும் நாடிலுல்சமாதிக்கு முறையிதாமே.

முறையான மவுனமான சமாதிகேளுமொழிந்துநான் சொல்வதேதுகுருசொல்லவேணு, மறையானமாய்கையறுமனஞ் செம்மையாகுமாசற்றால் ராசமென்ற யோகந்தானும், அறையான மனஞ்சென்றுவறிவில்கூடுமதீதமதாங்கண்ட வெளிகாந்திகாணும், பாறையானயதுக்கெல்லாம் படுதீபற்றும் பண்பான மவுனத்தை யுரையிறேனே. 244

யுரையுறேன் அகாரமது மூலத்தில்நிற்கும் பண்பான உகாரமதுகண்டத்தில்நிற்கும், வரையிறேன்மகாரமது மன்னுன்மணியில் நிற்கும்வாககயிழுத்தொன்றாய்க் கூட்டினக்கால், நிரையிறேன் மவுனமதறிவில் கூடுநின்றாரைக்கில் கண்டந்தா னுள்ளேகொள்ளும், இறையிறே நடக்கையிலு மிருக்கையிலுமைந்தா யிருந்துரைக்கப் பிரபஞ்ச மெல்லாமெளிதாய்ப் போச்சே. 245

போச்சுதே பாழாச்சுமுன்பின்னில்லை பெரும்பரியாந் திசை நாதங்காதில்கேட்கும், ஆச்சுதேமதிகோடி வன்னிகோடி யடங்காத ரவிகோடிகாந்தியாகும், பாச்சுதே தினந்தோறும் பார்க்கக்கிட்டில் பண்பாக முழுகிப்போமவுனப்பாம்பு, தேச்சுதேசடத்துக்குச் சிதைவுகாணுஞ் சடந்தானுஞ் சித்தியாய்த் திடமாய்ப்பண்ணே. 246

திடமாகப்பண்ணினால் சடம்போகாது சிதையாது மவுனத்தை திடமாய்நில்லு, மடமாகவுனத்தா லாவிலையைப்பாரு மனமொன்றில் கண்டத்திலொளியேகாணும், பிடிக்கப்பொய்யாம்பெரிதானகற்பூர தீபம்போல்நிற்கும், சடமாகக்கண்ணினால் சாய்கையினாலாச்சு சச்சிதானந்தமென்ற தேகமாமே. 247

தேகமே யாறுதலை யாறுகாலாய்ச் சித்திமுத்தி கண்டுநின்ற பானுவுக்குள், மாகமே யிப்படியேமதிபைப்பார்த்தால்மகத்தானவமூர்த

மென்றதேகமாகும், பூகமேபொன்போலே வர்னமாகும் பொருள் கடந்துவண்டத்தில் புக்கலாகுஞ், சோகமேசோம்பலுண்டு சட்டைத்தோலுரியும் மவுனத்தின் சூட்சந்தானே. 248

தானென்றசமாதியத்தான் முன்னேபார்த்து சாதித்துவப்பியரசம்பண்ணக்கேளு, ஊனென்ற ஓகாரமாமுதாசனந்தான்தள்ளு உத்தமனேசிகாரமென்ற கோபம்போக்கு, வானென்றவாயில்வந்தால் மனதுட்கொள்ளு மகத்தானதுவைதமென்ற வாசினைதான்முந்தும், தேனென்றவிதிரண்டுஞ் செயிக்கமாட்டார் திறமாகத்தள்ளிவிட்டுச் சமாதிசேரே. 249

சேராகமுந்தின தத்துவத்தைப்பாரு சேர்ந்தபின்பு எமமென்ற சயதையைத்தான்பாரு, பூராககிரிகைசென்ற நேமத்தைப்பாரு புகழானயோமென்ற பிராணாபாமம், போராகவுண்ணியபின் பிரத்தியாகாரம் பெரிதானதாரணையும் யோகமாச்சு, தாராகசமாதியைந்தும் ஞானமாச்சு சாதகமாயிதனாலுஞ் சார்ந்துபாரே. 250

சார்ந்துமேநாலுமுறை பார்ப்பதற்குமுன்னே தனிபஞ்சகிர்த்தியமெல்லாஞ் சாதித்தேறி, மார்ந்துமேமவுனமாஞ் சமாதிக்குள்ளே மாசற்றசிவமான தெரிசனையைக்கண்டு, சார்ந்துமேதத்வப்யசமாதி பார்த்துதனிப்பின்புசஞ்சார சமாதிசென்று, சேர்ந்துமேநிருவிகற்ப சமாதியானால் சிறந்தபின்யாறாடச் சமாதியாமே. 251

ஆமென்றவேதாந்தஞ் சித்தாந்தத்தோடே ஆண்மையாஞ் சமதாந்தமப்பியாசமார்க்கம், ஊமென்றநாதாந்த யோகமார்க்கம் உற்றுநின்றபோதாந்த ஞானமார்க்கம், வாமென்றகாலாங்கி வைக்குமார்க்கம்வகைமுறையாயிதுவாறுங் காணுங்காணும் ஊமென்றவுடம்பெடுத்துவிட்டகுறைவந்தா லுயர்ந்துநின்றவகண்டமுன்னே யுண்ணுந்தானே. 252

தானென்ற உண்ணுவதுதவளைசற்பம்போலுந் தனித்துநின்றகெருடன்கைக் கோழிம்போலும், வேனென்றவேங்கைகையிலாடுபோலும்விரவியதோர்மயிலின்வாய் சற்பம்போலும், மானென்றயிடிவிழுந்தமலையைப்போலு மகத்தானதுஷ்டர்கையில் செந்துபோலும்பானென்றபோதமுன்னைப்பாய்ந்திறைஞ்சி பருவமேதீயானால் பண்ணுந்தானே. 253

பண்ணவேதத்துவத்தைப் பரிந்துபாருபாங்கான யோகத்தில் மாய்ந்துபாரு, குண்ணவேமவுனத்தில்கூடிப்பாரு கேசரிதானேனென்றால் கூர்ந்துகேளு, நண்ணவேரவிமதியாம் வன்னிமூன்றும் நாடிநின்றதுவல்லோ கேசரிதான்மைந்தா, லண்ணவேயானந்த வேதாந்தம்பார்ப்பாலதிலொன்றுங் கேசரியை யார்க்கிலேனே. 254

ஆர்ந்துவதெவ்வாறு வேதாந்தமார்க்கம் அறிவான மூன்றெழு த்தினிடமேசமுண்மேண, நார்ந்துநாலெழுந்துரண்டாந்தீட்சைப்பாரு நலம்பெறவே யைந்தெழுத்துமூன்றாந்தீட்சை, போர்ந்துவது வாறெ ழுத்துநாலாந்தீட்சை போரானயெட்டெழுத்து மைந்தாந்தீட்சை, பாரந்துவதுபத்தெழுத் தாறுந்தீட்சை பதினைந்துவட்சரந்தானேழு மாச்சே. 255

ஏழோடுபதினாறு யெட்டாந்தீட்சை ஏற்றமாஞ்சத்தியுடபிரசா தவித்தை ஊமேழாடுவொன்பதுதான்பின்புகேளுவுத்தமனே பரமான பிரசாதவித்தை, மாழோடுபத்தாச்சுதீட்சைமார்க்க மருவியதோர் பதினொன்றுமவுனதீட்சை, மூமேழாடு ஆடாதுயெட்டிற்சேரு மூத ண்டமவுனத்தை மெள்ளவறிவில்சேரே. 256

சேருநீகுருசொன்ன வெழுத்தையொட்டி திறமானவறிவிலே யகண்டத்தைப்பாரு, ஆருநீயகண்டமதுவுன்னைத்தூக்கு மறிவிலே மனஞ் செல்லநாதயமாங்கு, மாருநீமவுனத்தைச் சொல்லாராசான் மகத்தானவகண்த்தில்சொக்கிபுக்க, வாருநீமந்திரம்பொய்வாயைமூடு மாற்றபதினோராந்தீட்சைதானே 257

தானென்ற குருபமந்தான் தாமரைப்பூப்போல் சகஸ்திரத்தி லெ டிதழாயத் தயங்கிநிற்கும், நானென்ற நடுவேதான்மட்டமாக நலமானவைங்கோணநிற்கும்பாரு, தேனென்றநடுவேதான் சிவசத்தி யொன்றாய்ச் செயலற்று யுருவமற்று வொளியுநிற்கும், கானென்ற ரவிகோடிகாந்தியாகுங் கண்கூசுமின்னலொளி கண்கண்டாயே. 258

கண்டிட்டால்தத்துவங்கள் சூழ்ந்துனிற்குங் கருத்தாகதத்துவ த்தின்தெரிசனையைக்கண்டு, அண்டிட்டால் ஞானத்துக்காதிபீடம் அண்டமெல்லாம் போகுதடா யுருவித்தாண்டி, வண்டிட்டால்ஞான மென்பார்வாய்ப்பேச்சாலே வந்துதென்று வித்தைசொல்லிவாதுங் காட்டி, கொண்டிட்டால் குறிகளை காட்டமாட்டார் கொடிதான திருப்பாட்டு கூறுவாரே. 259

கூறுவார் குருபதத்தின் தத்துவத்தைத்தாண்டி குறிப்பானசிவ னுடதெரிசனையைக்கேளு, தேறுவார்சிவகளை கோடிரவிபோலச்சிறப் பாகநின்றுதடா திடமாய்ப்பாரு, ஆறுவார் சிவனென்ன சிவமேயா ச்சு அறையிறேனதில் னின்று லுறையொட்டாது, ஊருவாருன்னி யத்தில் னின்றுயானால் உயரவல்லோர் தூக்கியே விழுக்குந்தானே

இழுக்காணமூலமுத லாறுங்வள்ளி யேறினின்று மேலற்றமடு த்துநோக்கி, உழுக்கானவுன்மனையைத்தாண்டியேறி யுதிப்பானஞா னசத்திக்குள்ளேசென்று, மழுக்கானகேசரியாமனத்தாடி மங்கத்

தின்பராபரமாய்ஞானமூர்த்தி, பிழுக்கானகாலமொடு பிறப்பிறப்பு போகும் பிடித்துவிட்டகூடாலே யோங்காராமாமே. 261

ஓங்காரமத்துனின்று மண்ணையுண்ணு முருவியந்த மனஞ்செ ன்றுதண்ணிருண்ணும், தேங்காரந் தண்ணீர்தான் தீமையுண்ணுந் தீங்கானதீர்சென்று காலையுண்ணுங். காங்காரங்கால்சென்றுவிண்ணை யுண்ணுங் கருத்தழிந்துமேசடலமென்றேயுண்ணும், வோங்காரம் வேதாந்தஞ்சித்தாந்தம்போச்சு மேலேறிமதுவுண்டு விரைந்துபாரே.

உண்டு ஓங்காரமூதலஞ் செழுத்தோடாறும் உற்றுனின்ற பஞ் சகர்த்தாளிருக்குந்தானம், அண்வாங்காரமொடு ஆணவமூற்று அதி ஷ்டானம்நானென்றதற்றுப்போனல், பண்டுதானகாரமொடு வுகார ங்காணும் பாங்கானமகாரமொடு விந்துநாதம், விண்டுவதின் மேல் நிற்கும் பாபரத்தின் வெளியானமவுனத்தைம் பற்றியேறே. 263

ஏறவேயகாரமது உகாரத்தைக்கொள்ளும் ஏத்தமாம் உகார மது மகாரத்தைக் கொள்ளும், மாறவேமகாரமது விந்துவையுட்கொ ள்ளுமகத்தானவிந்துவது நாதத்தைக் கொள்ளுந், தாறவேநாதமடி சத்தியைத்தான்கொல்லுந் தனித்துநின்ற சத்தியல்லோ சிவத்தைக் ளும், சீறவேபுரந்றன்னைப்பரந்தான்கொள்ளும் சிவபதத்தைக்கொ ண்டவிடஞ்சேர்ந்து உண்ணே. 264

சேர்ந்துநின்றமூலமுதலாறும்பார்த்து சுழிமுனைதானுறவி நின் றதோற்றம்பாரத்து, சார்ந்துநின்ற மதிபோலே சாம்பவிவைக்கண்டு தாக்கிநின்று வனமுறைத்துத் தேர்ந்தபின்பு, பார்த்துநின்ற திவ்வள வும் யோகமார்க்கம் பகலிறவுற்றவிடம் ஞானமார்க்கம், கார்ந்துகன் னிநின்றவிடங் கண்டால்ஞானங் காட்டுவாள் கேசரியைக்கண்டுபார்.

கண்டுபார்வாசியுன்னிமேலேஏத்த கைவிட்டமயக்கத்தைக்கீழே தள்வாள், விண்டுபார் க்ஷணத்துக்குள் வெளியுங்காணும் விடுபடுவா ளண்டண்ட மாலைபூண்டாள், அண்டுபார் ஆதிவலையத்து அநாதி வலையத்து அதீதமாம் ரண்டுமொன்று அறிந்துகூடு. உண்டுபார் நிற் குணத்திலமூர்தமள்ளி லுயர்ந்துநின்றஞானசத்தி யுண்மைதானே.

உண்மையாம் வாசியென்று மவுனமொன்று முத்தமமாம் ரண் டுவித்தை யுரைக்கக்கேளு, தண்மையாஞ் சாம்பவியுங்கேசரியும்ரண் டுதனித்தேசி யேருதற்குக் காதிவித்தை, வண்மையா மனமென்று ஞானவித்தை மாசியென்றமனமானல் ரண்டும்பொய்யாஞ், ஆண்மை யாமறிவந்தாண்டுமோகு மதிதனின்றவெளியல்லோ வகண்டம்பரே.

பாரென்றதீயிற்குள் பராபரந்தானிருந்தார் பண்பாகக்கண்ட வரார்சித்தயோகி ஏரென்றவுன்மனத்தாய்கேசரிக்குள் நிற்பாளேறிப் பார்மவுனம்வைத்து ஆதுஊது, நீயென்றநிற்குணந்தானதிலேகொள் ளுநிலையாரெமவுனமொன்றுவதியுண்டு, கானன்றநீராகார மொன்று மில்லைகட்டுறதாரறிவுகொண்டு கருதிக்காணே. 268

காணவேகுண்டலியின் மூலமொன்று கண்டத்தில் பாரபரமா மூலமொன்று, பூணவேயுருமயமூலமொன்று புகழான விந்துவிலே மூலமொன்று, தாணவேசத்தியிலே மூலமொன்று தனித்துநின்ற பராபரத்தில் மூலமொன்று, ஆணவேயிதையாறுங்கண்டோன்ஞா னியறிந்துணர்ந்தால் மும்மூலயோகியாமே. 269

யோகியாம்நகாரவரையகாரவரை மட்டும்முறுதியாம் யோகத் தின்மூலமாச்சு, வாசியாம் அகாரமுதல் உகாரந்தொட்டுவதிதமாம காரவரைஞானமூலம், தேசியாந்திசைநாதமவுனத்தில்காணுஞ்சேர்ந் தேறச்சேர்ந்தேறகண்டவீதி ஆதியாங்காமப்பாலுண்டால்கேளியோ கசித்திக்கடுக்கானற்பாலை யுண்ணே. 270

கடுங்கானற்பாலுண்ண, ஞானசித்தகடிதான யோகத்திலஞ்நா தமடுங்கான பவுறுத்தி லஞ்சுநாதமறைதானுங் கடந்திடத்தே சுத் தநாதம், நெடுங்கானல்யீசத்தில்வாசிமுத்தி நேர்ப்பானமூலத்திடு லாவியேசத்தி, திடுங்கானல்சொலித்து நிற்குமென்னுலுந்தான் தூர மல்லகாதமல்ல கண்ணிமைக்குளாமே. 271

கண்ணிமைக்குள் விண்ணுக்குள் கலந்துகாணுங்கடிதான விண் ணேது வெளியெங்கேது, ஒண்ணிமைக்குளொளியேது உரைத்தப டியிம்மூன்று முன்னிதமாங்கே சரிதானுயர்த்தியாச்சு, நுண்ணிமை க்குள்கண்ணேது மூக்கங்கேது நுண்மையாங்கண்டிப்பு வழிந்துபோ ச்சு உண்ணிமைக்கு ளொன்றிரண்டு சமரசந்தானேது வுற்றுப்பார் வெட்டவெளிஒண்ணில்தானே. 272

ஒண்ணிலே நின்றுரைத்துப்பழக்கமாகி உத்தமியாமனோன்ம ணியைப்புருவமைத்தோடே, உண்ணியேயொளிவோடே மவுனத் தையோட்டி ஆதியேசாம்பவியைக்கண்டுகொள்வாய், நிண்ணியேயிவ் வளவுயோகமார்க்கம் நின்றவனேசிவயோகி நினைவாய்கேளு. குண் ணியேவிந்துவென்ற குருபதத்தைக்கூட்டப்பபா மவுனத்தைத்தா ரையாமே 273

தாரையாம் விந்துலேதிரமதியோகோடி தனுக்காகக்கண்கூசி மயக்கமாகும், ஓரையாம் நாதத்தில் செவிடுபட்டு வூமையென்றவெ ருத்திறுடவுருவந்தோன்றும், வாரையாமயசத்தியிலே வன்னியேடு

மாசற்றகோடிரவிமதியுமொவ்வா, சூரையாஞ்சோமப் பானுண்டவர்
க்குக்காணுஞ் சூதானஞானிகட்க்குமாயந்தானே. 274

மாயமாஞ்சிவத்துக்குள் மவுனஞ்சென்றால் மாசாற்றநவகோடி
வன்னிரவுசோமன், பாயமாம்பரத்தின்கீழ்முப்பாழுண்டு பார்க்கவே
யகாரமொன்று உகாரமொன்று, மோயமா மகாரமொன்றும்மும்பா
ழாகமுனைந்திந்து வதிஞெளியைச் சொல்லப்போகா, தூயமாமொழி
யுடையவுன்மனத்தை தேவியுடபதமொன்றே கேசரிதான்காணே.

கேசரிதான் தாயானபதத்தின்காந்தி கீர்த்திக்கண் கொள்ளா
துவிண்கொள்ளாது, ஆசரியென்பார் ரம்பாரந்தூளென்பார் அவனு
க்குள்மவுன முண்டுயறிவுன்னிப்பாரு, கேசரியின்மவுனத்தே நிஷ்க
ளமாய்போவாய் கெடியானவம் பரத்திலேதோவேதோ தூசரியின்
படிமைந்தா லட்சியத்திநேர்மை சொல்லரிதுவப்புறத்தே சோதித்
தானே. 276

தானென்ற மகாரவரைகாதவோசை தாயானகன்னிக்குப் பீட
மாகு, மானென்ற யூணப்பாமவுனஞான மகத்தானநாதத்தோடென்
றியொரு முனையாய், ஊனென்ற ஒருவழியா யொன்றுயோடுவுட்பு
குந்தால்தோற்று தங்கொன்றுமில்லை, தூனென்றசுத்த வெளிரவி
கோடி வன்னிகுழப்பாக மதிகோடி கண்டுகொள்ளாதே, 277

கொள்ளாத வதிதமென்ற மகாரங்காணுங் குறிப்பகனகாரமல்
லோகுருகைகாட்டும், வள்ளாதமகாரமல்லோயடங்கியகந்தாண்டி
வழிகாட்டு மிடமல்லோகேசரி தான்மைந்தா, மள்ளாதமகார மென்
னமேலெழுத்தே யென்பார் மாட்டுவதுமூன் றெழுத்துங் காணமாட்
டார், அள்ளாதமசாரமென்ன மவுனவித்தைவாய்திறமாமவுனமாமே

வாமென்றமவுனவித்தை மூன்றெழுத்துயென்பார் மாட்டுகிறவி
னங்காணுமார்க்கங்காணார். வாமென்றமவுனவித்தைவாய் மூடயென்
பார் மாடாடு குதிரையதுவாய்போக்கேது, கோமென்றமவுன வித்
தைகேட் டிருப்பார் கூட்டுறவுகாணார் கள்நாதங்கேளார், ஆமென்ற
மவுனவித்தைதாண்டி நாட்டி ஆதியாந்திசைநாதங்கேட்குங்காணே.

காணேதான் மதியினுடவமூர்தஞ்சிந்துங்கலங்காலம் துவாதசங்
கடந்துதோன்றும், தானேதானேசையறந்தன்னினையுவும் போகுந்
தாரை போலண்ணுக் கிலமூர்தமொடு, மானேதானமும் மலங்களற்
றுப்போகும் சகத்தானவைம்பொறிக ளடங்கிநிற்கும் தேனேதான்
மேலாமுதம்லகிரிமீறிச் சணமாகுமுன்றாக்கு மேற்செயமுமாமே.

செயமானவுலகத்திலகிரிவுண்டு தீர்க்கமாய்முதிர்ந்தபின்பு உன்னுளக்கிரி, மயமானமகாரத்தால்வந்துதாக்கும் மகாரத்தைக்கூட்டையிலேயறிந்துகூடு, குயமானகும்மென்ற நாதத்தில்கூடு குறியோடேயறிவென்றமவுனத்தைநாட்டு, நயமானகாதத்திலுட்டங் கேளுகலங் காமலொருவழியேநாட்டிடாயே. 281

நாடினால்சன்னமது முத்தியாகும் நலமாகவேறுதற்கு வழியைக்கேளு, வாடினால்மூலத்தில்வாசிவைத்து வழியோடேபிராணயமாம் பண்ணத்தீரும், கூடினால்குண்டலிக்கும்நடனங்கண்டு கொடிதான வாதித்த ஞெளியைக்காணு, ஆடினால்கண்டத்தி லங்கென்றாணு ஆடாதவழிதிறக்கா வழிசெல்வாமே. 282

மனோன்மணிப் பெருமை

செவ்வையாய்நின்றுரைத்த பழக்கமானால் சிறப்பானமனோன்மணிதான்புருவமையத்தே, மவ்வையாமொளியோடே மவுனத்தையூதுமகத்தானசாம்பவியைக்கண்டுகொள்வாய், நெவ்வையாமிவ்வளவும் யோகமார்க்கம் நின்றவகை சிவயோகிகிலேத்துக்காணுந், தவ்வையாம் விந்துவென்றகுருபதத்தில் தாக்கவேமவுனத்தைத்தாரையாமே. ()

அஷ்டாங்க சித்தி.

தாரையாமஷ்டாங்கஞ்சாற்றகேளு தனித்தனியேவொவ்வொன்றுய்விரித்துச்சொல்வேன், நேரையாஞ்சாட்டியமாம் நித்திரையைப்போக்கு நியமமாய்சதாநித்தந்தாரகத்தில்நில்லு, தூரையாமனங்குவிந்துகேசரியைப்பாரு சோமப்பால்கசிந்தோடுங்கேசரியைக் கண்டால், காரையாரவிமதியும்வன்னிகூடி கலந்துநின்றயிடமல்லே கேசரிதான் காணே. 284

ஏமசித்தி.

காணவேயேமமொடுநேமமாகுங் கருதிய தோராசனமும்பிராணயாமம், பூணவேபிரத்தியாகாரந்தாரணையினோடு பெருமையாந்தியானமொடு சமாதியாகும், ஏனவேயிதுவெல்லா மெட்டேயங்குமிசைவானசித்தாந்தம் வேதாந்தமிரண்டும், ஆணவேயடமெல்லாஞ் சொல்லக்கேளு அறிந்துகொள்ளும் நிரைநிரைவாயறிவில்தானே. ()

அங்கிஷசித்தி.

தானென்றவேமமது பத்துமாகும் தனித்ததோர் ஐங்கிஷையுஞ்சத்தியத்தினோடு, ஆனென்றஆர்த்திகப்பிரமங்கேளு ஆச்சரியந்தயவினொடு யாட்சேபமாகும், கானென்றகூர்மையினொடுதிருதிகூட

கடிதானமிதாசார மஞ்சனத்தோடு, பானென்றபத்துமேயேமமாச்சு பண்பானநேமத்தைப் பகர்ந்துபாரே. 286

## அட்டாங்கம்

பாரென்றசோலையத்தி கோமுத்தினோடு பரமமொடுவீரமாஞ் சிங்கமாகும், சூரென்றமந்திரமொடு முத்தமாகு முனையானமயூர மொடு சகந்தானுகும், ஓவென்றவொன்பதுமாசனந்தானச்சு உற்றுக் கேள்பிராணய பிரிதிதன்னை, காரென்றரேசகமுப்பூரகமுங் கலந்து நின்ற அற்பிசமு நிற்பிசமஞ்சே. 287

அஞ்சவேஆறுவகை பிரத்தியாகார மனுகூலசரீரமென்ற பிரத் தியாகாரம், இஞ்சவேயிந்திரியம் பிரத்தியாகார மியல்பானபிராண னென்ற பிரத்தியாகாரம், கஞ்சசீவகரணமென்ற பிரத்தியாகாரம் கைகலந்தகாமியமாம் பிரத்தியாகாரம், துஞ்சவேபிரத்தியாகாரந் தன்னை சொல்லிவிட்டேன்தனியாறுஞ் சூட்டிப்பாரே. 288

சூட்டியேதாரணையி லாறுவிதஞ்சொல்வேன் சுயபஞ்சபூதத் தின் தாரணைதானென்று, பூட்டியேபிராணனென்ற தாரணையினோடு புகழானபிர்மமென்ற தாரணையுமாகும், தாட்டியேதாகமென்ற தார ணையினோடு தத்துவமென்தொரணையுஞ் சார்ந்துகேளு, மாட்டியே தாரணையினோடுமைந்தா மகத்தானயாறுவித முண்டுபாரே. 289

பார்க்கவேபத்துவித தியானஞ்சொல்வேன் பரிவானசடாதா ரத் தியானமொன்று, மார்க்கவேதேகமொன்று தியானமொன்று மருவிநின்றமண்டலத்தில் தியானமொன்று, வேர்க்கவேபிரமத்தின் தியானம்ஒன்று வெளியானவிட்டுணுவின் தியானமொன்று, ஊர்க்க வேருத்திரனுந் தியானமொன்று உகப்பான தேவதா தியான மொன்றே. 290

## ஏமம்பத்துக்கு விபரம்

ஒன்றானசஞ்சாரச் சமாதியொன்று உதிக்கின்றஆரூடச் சமாதி யொன்று, அன்றானசமாதிக்குளஞ்சு விதஞ்சொன்னேன் அப்பனே அட்டாங்கமெட்டுமாச்சு, பன்றானயேமமதுபத்துங்கேளு பயனெல் லாஞ்சொல்லுகிறேன் பட்சிமிருகம், துன்றானபோதுவுந்தன் சுகதுக் கம்போல துப்புறவாய்மனதொன்று தெளிந்திடாயே. 291

தெளிந்திட்டாலங்கிஷைதா னென்றுசொல்வார் சித்தாந்தவிபரந் தான் சொல்லும்வாறு, விளிந்திட்டவேதாந்திசொல்லும்வாருவிரிவா னபொறிவழியேயறிந்துநின்று, அளிந்திட்டயகண்டமென்றுபூரணத்

தையப்பா லறிந்திட்டுப்பரிசனனுகக்கண்டு, தளிந்திட்டசாதிவர்ணுச்சிரமத்தாலே சங்கற்பவிகற்பமெல்லாந் தள்ளிப்போடே. 292

போட்டுமேவேறுகூறுகப்பண்ணிபூதாமலங்கிஷையாய்ச்சார்ந்து நிற்கில், கீட்டுமேநின்றநிலே ஆயிங்கிஷையென்பார்கள் நேரானபரியாசம்விளையாட்டாலும், ஆட்டுமேபோய்விட்டு யெங்குமான்மாயந்தரமாய்நிறைந்திருந்தசொரூபமூர்த்தி, சாட்டுமேயிதுவல்லோ சத்தியந்தான்மைந்தா தனித்தனியேகண்டிக்கப்படாதென்பாரே. 293

என்பார்களங்கிஷையில்கூடிநின்று இறந்துமேபரிபூரணமாயிருப்பதாக்கி, மன்பார்கள்வஸ்வையுந் தவிரவேறே மார்க்கங்காணில்லையென்றுசந்தானித்து தன்பார்கள்சத்தியமாம்வாக்குக்காயஞ் சாதமென்றும் பாலென்றுங்கிரகியாமல், அன்பார்களபகரிப்பைவிட்டுமனமுரைத்தால் அனித்தியமாஞ் சரீரர்திசுபாவமாச்சே. 294

சரீரியென்றேயரிந்துபார்சகலமெல்லாந் தாரானசரீரத்தில் வருத்தத்தைநீக்கு, துரியமென்றேசகலசனம்நன்மைபோலச் சுகம்வருத்தமல்லோர்க்குந்தந்தைதாய்மைந்தர், பிரியமென்றேசனந்தம் வந்தாலுந்தான் போரானசத்துருவுக்கிதமேசெய்யில், தெரியமென்றேபாட்சேபமிதையென்பார்கள் நேராகயிதுவுமல்லோ சொல்லக்கேளே.

கேளப்பாவேதாந்ததாஸ்திரமேசெம்மைகேள்வியுற்றசமயமெல்லாம்பொய்யென்றுதள்ளி, தேளப்பாதிடப்பட்டா லாட்சேபமாகும் செயமானசத்துருவும் வியாதிபீடையென்பார், மீளப்பாநிரஞ்சனமுஞ்சிதளமுமாகு மிஷ்டானதுக்கவபிமானம்வந்து, ஏளப்பாசொற்பனம்போ லென்றுயெண்ணி யேங்காமல்சேருவது சமயமென்பாரே.

என்பார்கள்வேதாந்தத்துள்ளேமுத்தி யொடுகுறியாஞ்சாஸ்திரத்தில்முத்தியில்லை, வென்பார்களதினலே சொன்னபொருளென்னவேறில்லைகாமதுதானெனன்பதல்லோ, உன்பார்கள்காரியத்தில் மனத்திற்கோளை யுருகாமலிருப்பதேதிர்ப்தியென்பார், இன்பார்கள்வேதாந்தத்தாலேமுத்தி யிதைவிட்டால் மற்றென்றுமில்லைதானே. 297

இல்லையேபூரணந்தானாமென்றெண்ணி யேகநித்தமறவாமலிருந்தானுகில், கொல்லையேநம்மிடத்தேவந்ததொன்றுமில்லை கூடிநின்றால் மிதாகாரமென்றுமாகும், வெல்லையேநிர்க்குணம்வேறொன்றில்லைவிருதாவர்யாகாரந்தன்னைச்சுக்கி, கல்லையேதுருத்திகையுஞ் சலத்தினலே கனிந்துநின்றவாசனந்தான் சவுசமாச்சே. 298

சவுசமாய்வேதாந்தசாரத்தாலே சுகமென்றதுரியமதில் தானேநின்று; நிவுசமாஞ்சொற்பனத்திலவத்தைகளைக்கண்டுநெருங்கிநின்று

போனதில்லைவந்ததில்லையென்ற, வெவுசமாம்வேதாந்தகுருமுகத்தில் விரைந்துகொண்டுகாலம்வந்துநேர்ந்துதானால், துவுசமாயிருப்பதுவே சவுசமாகுந் துரிதமாமெமமென்றப்பத்துமாச்சே. 299

பத்தானநேமத்தைப்பகரக்கேளு பாங்கானசத்தியமென்னமித்தையென்ன, நத்தானநானேதுநானென்றதாரு கமக்குத்தான் மகத்துவந்தபேதமேது, சுத்தானசோத்தியங்காணதுவாலாச்சு சுருதியாம் வேதாந்தத்தலேபார்த்து, நித்தானநிரந்தயமுமாலோசித்து நீங்காட்டால்பொல்லாங்கைத்தவசுமாச்சே. 300

ஆச்சுதேபிரமாதிலோகத்துள்ளே யழுத்திநின்ற காமியத்தை நாகம்போலெண்ணி, துச்சுதேவெறுப்புவந்து சொற்பனம்போலாச் சுத்துக்கமிதுவென்றுசொல்லிமனதுதேறி, தாச்சதேபொருளானசச்சிதானந்தத் தடையற்றுதெளிந்துநின்று தானேதானால், போச்சுதேபானந்தவடிவுமாகி போதமாயிருக்கில் சந்தோஷந்தானே. 301

நேமம்பத்துக்கு விபரம்.

தானைவாகமபுராணந்தன்னை தணிவாகவெல்லோர்க்கும்வெளியிலிட்டு, வேனைவேதாந்தபிரமசாரம் விளங்குகிற கருச்சொல்லும் பூரணமென்றெண்ணி, ஆனைதறிந்துகொண்டாரத்திமமாச்சு யரியதாய்க்குருவுரைத்தவுபதேசத்தைக் காணைதறிந்துபொருள்முத்தனுகிக்கருதியதோரத்தமெல்லாங் குருவுக்கீயே. 302

ஈய்ந்துபார்பரம்நோக்கத்தானமாகும் இருக்கிறதோர் தன்தேகசுகபோகமெல்லாம், ஆய்ந்தபார் செய்துந்தனக்கு வந்தாப்போலே யனேகசெந்துபொசித்ததெல்லாம்நாமென்றுதிருத்தி, நயந்துபாரொருமித்தாலீசர்க்குப் பூசைகலமாக யாச்சுதென்று யறிந்துகொள்ளு, தோய்ந்துபாரிப்படிதாந்திருத்தியானால் தீர்க்கமாஞ் சிவபூசை யென்றுகாணே. 303

காணவேசாஸ்திரங்களெல்லாம்விட்டு கலந்தாடுவிர்த்தியெல்லாமடித்துத்தள்ளி, தாணவேதன்னிழல்போல்குருவினுட்பின்னே சச்சிதானந்தவெள்ளந்தானென்றெண்ணி, தோணவேதெளிவிக்கும் வஸ்துக்குள்ளே தோற்றியேசோதித்துமனந்தானென்றால், ஆணவேதெளிவுக்குமுபஷத்துவென்று வறிவிக்கும்பூரணமே சிரவணமுமாமே.

அறிவிக்குமாங்காரவியாபாரத்தாலாதாய மிகுதியாயகப்பட்டாலும்,பொரிவித்துமதின்மேலே யபேட்சைவிட்டுபொறிதானும்புலன்வழியே போக்குண்டாக்கி, வறிவிக்குங்கேட்டிருந்த ஞானமெல்லாங்

நெடியாகநிலைகுலைந்து வுலகத்தேசிக்கி, வறிவிக்கும்வாசனையாம்பெ ண்டீர்பிள்ளை வருகின்றபாசமெல்லாம் லட்சமெண்ணே. 305

எண்ணவேபெண்ணிபக்த மதியாறில்வந்தா லியல்பாகயழிசகத் திலிருந்துகொண்டு, திண்ணமேதமனதொன்றில் வேதாந்தம்பார்த்து சீராகநிற்கிறதேலட்சையாகும்,வண்ணவேவேதாந்தபிரமந்தன்னில் விரைந்துநின்றபூரணத்தைத்தினந்தானோக்க, வண்ணவேகோழைவி ட்டுத்தெளிவுவந்து வளப்பமுற்றால்மதியென்று சொல்லலாமே. ( )

சொல்லவேநான்பிரமமென்றவாசான் சுருதிகுருவுபதேசப்படி யேநின்று, வெல்லவேமேதாந்தப்பொருளென்றெண்ணிமிகுதியாசை தன்னைத்தள்ளிவிட்டால், மல்லவேமனமொத்தால்சிவமிதாச்சு மற்ற தெல்லாஞ்சிவமல்ல மாயங்காணும், வல்லவேமவுசத்தை பைம்பொ றியின்வழியில் மருவாமல்நிறுத்தினால் மாயம்போமே. 307

மாயாமல்நான்பிர்மமென்றெண்ணி மனதொத்துநிரந்தரமும் வேதாந்தம்பார்த்து, பேயாமலெங்கெந்தகாரியங்கள்வந்தும் புகழாக த்துக்கமுடன்சுகந்தான்வந்தும், காயாமல்குருசொன்னகாரியத்தின் வழியைக் கைமுறையாய்நிற்பதுவேவிரதமாச்சு, நேயாமலேமமென்ற பத்துஞ்சொன்னே னேராகவிருபதையு மனுஷ்டித்தேரே. 308

ஏறியிந்தவிருபதையு மனுஷ்டித்தாக்கால் ஏற்றமாமனத்திட மில்லாவிட்டால், தேறியிந்தச்சுவறில்லாசித்திரம்போலாகுஞ் சிறந்த சீவரடிப்படைதான் வைக்குமுன்னே, சூரியிந்தகுளிகையைவயத்து மொக்குதுப்புரவாய்க்காயசித்தி பண்ணுமுன்னே, ஊறியிந்தச்சது ருகத்தைக்கண்டதொக்கு முண்மையிருபதுமனுஷ்டித்தா லறிவுண் டாமே. 309

அறிவுண்டாம்சதுர்யுகத்தோடே மூர்த்தியைக்காணு யப்பனே யஷ்டாங்க மறிந்துயுண்ணு, தறிவுண்டாச்சுகசாதனமா;யிருந்துகொ ண்டு தனித்ததோர்மூலத்தில் வங்கென்றுபூரிக், குறிவுண்டாய்க் கும் பித்துமாத்தீயையேற்றி கூராகசிகாரத்தால் முடியுண்டாக்கி, நெரி யுண்டாய்மூன்றுமுறை மாறினக்கால் நேராகக்கும்பகமே ரேசிப் பாயே. 310

ரேசித்துயிப்படிதா னங்கென்றுகும்பி நில்லாமலிதுரண்டுந்தீர்ந் தபின்பு, ஆசித்துயகாரமுதலுகாரங்கூட்டி அப்பனேமவுனத்தால் கும்பித்தேக்கு, மாசற்றமவுனந்தான் குவிந்தபின்பு மருவியதோர் மூலத்தை விட்டுநீயுங், காசிததுகண்டத்தே நின்றவூது காலடங்கி வந்தபின்பு மூலம்பாரே. 311

பார்த்துமேயறிவோடேமவுனப்பூரி பரிவாகப்பூரணத்தையதுக்குள்கும்பி, நீர்த்துமேமுனையோடே ரேசகத்தைப்பண்ணு நிற்பிசமாய்பிரமமென்ற பிராணாயாமம், பூர்த்துமேபிரபஞ்சமென்ற யாசைவிட்டுப்பின்னென்றுமனதுள்ளே சங்கியாமல், ஆர்த்துமேயந்தமென்றகாரணமுமாகி யந்தமென்றமார்க்கத்தி லாடிக்காணே. 312

ஆடியேயாசனத்தை விரித்துச்சொல்வே னதிகமாஞ்சோஸ்திகத்தை யறியக்கேளு, மூடியேமுழங்காலாங் குளச்சில்ரண்டில்முனிந்தாக்கால்ரண்டும்வைக்கச்சொல் லதிக்மாச்சு, சூடியேசிங்காதனத்தைக்கேளுசுறந்தயோவேட்டிதனைப் போட்டுக்கொண்டு, நாடிகயமுழங்கால்கள்நீட்டி நுனிமூக்கைப்பார்த்திருப்பார் நிசமாங்காணே.

நிசமானபத்திராசனத்தைக்கேளு நேராகவுட்கார்ந்து காலைரண்டுங், துசமானபிறகாலேகையாற்கட்டி சுகமுற்றுயிருக்கையி லாசனமுமாச்சு, நிசமானமுத்தயாசனத்தைக்கேளு முனிந்துமேகாட்டோடுகொடுபோட்டு, குசமானகுத்துக்குள் குதிரைவைத்து கூசாமலிருப்பதிந்தக் கொள்கைதானே. 314

கொள்கையாம்பூர யாசனத்தைக்கேளு குறிபெறவேரண்டுகையுந் தரையிலூணி, கிள்கையாமுழங்கையைத் தொப்புளிலேவைத்து கலந்துதடிபோலாகக் கவருவார்கள், துள்கையாஞ்சுகமுற்ற யாசனத்தைக்கேளு சுகமாகவேண்டியதோர் படியிருப்பு, உள்கையாமென்பதுக்கும்பருவஞ்சொன்னே னுரைந்துயினிபிராணுப முரைக்கக்கேளே. 315

கேளென்றசரீசத்தில்பஞ்சபூதங் கெடியாகவிருக்கின்ற தானத்துள்ளே, மாளென்றமண்டலத்தில் வர்னமுத்து மனதுள்ளேதரித்துடனே பிராணுதாரம், பாளென்றபதினாறு மூலத்தொட்டு பருவமுடன்பிராணனைத்தான் றரிக்கப்பண்ணி, தானென்றகிரமத்தோடேசஞ்சரிக்கில் தாரணைதானுலுவிதஞ் சாதிப்போர்க்கே. 316

சாதித்ததியானத்தை சாற்றக்கேளு சட்டமாம்பிரமருட வீட்டுக்குள்ளே, ரேதித்தமண்டலமுங் குண்டலங்கிரீடங் கலந்துமேசரசோதி லோகப்ரதானம், சோதித்தபரிவாரஞ் சூழ்ந்துநிற்கச் சொல்லுகிறேன்வானத்திற் சூட்டினோர்க்கு, மாதித்தவரனுடைய தியானங்கேளு மாசற்றபச்சைவர்னம் வருத்திட்டாயே. 317

வருத்திட்ட சங்கொடுசக்கரமுந்தடியும் தரைந்துநின்றபதுமைபோல் நாற்கரங்கள், குருந்திட்டக்குண்டலமுங் கிரீடம்வைத்துக் கொத்தானமுத்தோடு துளசிமாலை, கருந்திட்டகவுஸ்துவமாம் ரத்தி

னம் பூண்டுகையெடுக்க லட்சுமியுங் கலந்துவைத்து, அருந்திட்டபிர மாதிலோகபால ரருகிருத்தி தியானிப்பா ரறிந்துகாணே. 318

அறிந்துமேருந்திரனைத் தியானம்பண்ணு ஆண்மையாமஞ்செழுத்துமாயுதங்களோடு, பிரிந்துமே குண்டலமுங்கிரீடம்பூண்டு புகழானருத்திரியை வாமம்வைத்து, எரிந்துமேயிருக்கிறதாய் தியானித்துள்ளேயெளிதாகவுபசரிப்பார் பெரியோர்தாமு, மறிந்துமே மயேஸ்பரனைக்கருத்தாய்நோக்கி மாசற்றுவர்ச்சிப்பார் வண்மையோரே. ()

வண்மையாஞ்சதாசிவனு மனோன்மணியைநோக்கி மனதுண்ணித் தியானிப்பாரதிகமெத்த, ஆண்மையாயிப்படியே அறுவரை தியானமானபின்பு மண்டலத்தில் மூன்றுவகையானம், உண்மையாயிப்படியே வுபாசிப்பார்க்க ளுத்தமமாந்தேவதாத் தியானமாச்சு, விண்மையாய்விசுவமென்ற தியானங்கேளு விளங்கிநின்ற பிரபஞ்சமெல்லாஞ் சரீரமொன்றே. 320

சரீரமொன்றேநானென்று அபிமானித்து தனித்திருந்து யீஸ்பரனைச் சிந்திப்பார்கள், சரீரமென்றேசிவனுக்குரீரவான கலந்துநின்றலிங்கத்தைக் கண்டாப்போலே, உரீரமொன்றே ரூபமாய்நின்றதெல்லாம் உண்மையாய்யீஸ்பரனைப்போலே பார்ப்பார், புரீரமொன்றே பிராணயத் தியானங்கேளு புகழ்பெறவேவொன்றுவஞ்சக முப்பத்தாறே. 321

ஆறேடுபிரகிருதியென்ற புருஷனப்பா அதிகமாம்பரமார்த்த மூன்றாய்க்கண்டு, மாறேடுகாஷமஷ்டி மருவிநின்ற வியாஷ்டியாய்ப்பிரித்துக்கொண்டு, தேறேடுமந்திரத்தாற் பூசைபண்ணி செபித்துநின்று உபாசியபார்நாற் பத்திரண்டு, ஊறேடுலவ்வொன்றே யெட்டாய்வாங்கி யுயர்ந்துனின்றதித்தனையும் வித்தையாமே. 322

வித்தையாம்பிரமமென்ற தியானங்கேளு விரிவானமாயையெடு மாயப்பூமி, சுத்தையானசுத்தமென்ற சைதன்னியந்தான் சுருதியாயிதுமூன்றும் விண்ணைப்போலே, வித்தையாபறந்திருக்கக்காடுகண்டு மதித்தவரைதீர்த்தமுத்தி சேத்திரமாய்ப்பார்த்து, உத்தையாயெந்நேரஞ்சிந்தைசெய்து உகந்துநான்பிரமமென்றுயெண்ணியெண்ணே.

எண்ணியேபத்துநா னியல்பாச்சொன்னே னெளிதாகச்சமாதி அஞ்சுமுன்னே சொன்னேன், அண்ணியதோஷ்டாங்க மடக்கிசொன்னே னடவெல்லாந்தானறிந்தால் ஞானியாவன், எண்ணியதோர் சாமதிக்கு ஆதிக்கஞ்சொன்னே னுரைப்பானமாயியுட வுறுதிசொன்னேன், உண்ணியதோர் உனைஞ்சுமுன்னே பார்த்துத்தேறி உண்ணியேவாசியென்ற திறத்தைப்பாரே. 324

திறமாகவிப்படிதான் பிராணாயாமம் செய்வதற்கு ரோமமெல்லாம் வேர்வையோடு, அறமாகயாடனென்று வாசிதன்னையனுதினமுமப்பியாசம் பண்ணினக்கால், தறமானதாதுவெல்லாஞ் சித்தியாகுந் தசையிலுள்ள தோஷமெல்லாஞ் சாடிப்போகும், னிறமானநோயெல்லாங்கக்கும்பாரு நெடிதாகச்சட்டையொன்று திரண்டுபோமே. ()

போகுமேசடத்தினுள்ளே நோய்களெல்லாம் பொருமியேநீராக வெந்துபோகுந், தேகுமேதேகமது சிவப்புமாகுஞ் செவ்வலரிப்பூபோலாங் கண்கள்ரண்டும், வாகுமேசடமிந்த பிறகுந்தேகம் மகத்தான சக்கரங்களாறுங்காணும், ஒகுமேபஞ்சகர்த்தாளை வருந்தான்வந்து உற்றவவர்கேட்டதெல்லா முதவுமாறே. 326

உரைக்கவேரேசகந்தான் விடுவதாகு மோங்கியதோர்பூரகந்தானுள்ளேவாங்கல், தரைக்கவேகும்பகந்தான் தம்பிச்சிருத்தல் தாங்கியதோர் பீசமந்திரத்திலூடல்விரைத்துமேனிற்பீசமந்திரத்தைவிட்டு தெளியிலேபூரித்தால் மெதுவிலேதான், அரைக்கவேயஞ்சுவித பிராணாயாமமசையாம துயாசனத்தி லிருத்திப்பாரே. 327

பார்க்கவேமாத்திரைதான் முப்பத்திரண்டு பண்பாகப்பூரிப்பாய் மூலத்துக்குள்ளே, ஆர்க்கவேமாத்திரைதானறுபத்திநாலு அடவாக கும்பித்துப்பாரு, மூர்க்கவேமாத்திரைதான் பதினறப்பா முனையாக ரேசிப்பாய் தவறிடாமல், நார்க்கவேயறிந்துகொண்டுநந்தியைத்தான் பார்த்து நலந்தபின்பிறநலம் நாடிஊதே. 328

நாடியேவிஷ்ணுவை நயந்துவூது நலமாகவுரைத்தபின்புருத்திரனிற்சேரு, ஊடியேமயேஸ்பரத்தில் னின்றுவூது உரைத்தபின்பு சதாசிவத்திலுகந்துகூடு; ஓடியேயாறுதலமுத்தியேறி உகந்துமேயொன்ருச்சு பிராணாயாமம், பீடியேவிரமத்தின் காயமத்தின் பேராக வொருமுறைக்குள் நீங்கிப்போமே. 329

நீங்கிப்போம் பிராணயஞ்செய்யும்போது னிலைத்துமேமாத்திரைதா னேறயேறக், காங்கிப்போங்கப்பமிகும் நேர்மைகொள்ளுங் கதித்துமேகபாலத்தை யசைத்துதூக்கும், வூங்கிப்போமும்மலமுங் களிம்புபோல மூர்ந்துனின்றநாடியெல்லாஞ் சுத்தியாகும், ஓங்கிப் போம்பிராணய முரைத்துதானு லோங்குமேதிசைநாத வுண்மை தானே. 330

உண்மையெட்டு பருவமுண்டுபிராணயத்தி லொளியாமல்சொல்லுகிறேன் வந்துகேளு, வெண்மைமத்தினின்று முத்திவேர்வையாகு மிக்கநின்றதம்பிக்குரண்டாம்பட்சம், தின்மையற்பததீபமரமூன்றும்

பட்சம்செடந்தாணும்லெகுவாகும் நாலாம்பட்சம், பெண்மையொத்துபிரகாசிக்கு மஞ்சாப்பட்சம் பேரானகுண்டலிமேலாறிலாமே.

காமப்பாலுடம்பில்கலத்தல்

ஆறவேவாகாயகெவுனமார்க்க மதிகமாந்தூரதிஷ்டியறியப்பண்ணும், ஏறவேபெட்டினுடபெருமைகேளு ஏற்றமாங்கேசத்தில்திசைநாதங்கள், நாறவேநல்வினையுந்தீவினையுநீறும் நயந்தபின்புநாடியுத்திதானுமாகும், ஊறவேகாமப்பாலுடம்போடே கலக்கு மூவந்துமே பிராணயமுரைத்துப்பாரே. 332

உரைத்துமேசொல்லுகிறேன் பிரிதியாகார முண்மைபாய்வாசினேயின்வறியிற்சென்று, மிரைத்துமே நடந்துவிக்குந் துரியந்தானுமிகையாதவுனத்தைமெள்ளமுயற்சியாக்கி, விரைத்துமேதிரிபுரத்தைதிரியவொட்டாமல் வெட்டியத்தைமறிக்கிறதே பிரத்தியாகாரங், கிரைத்துமேயிதற்குள்ளேயாறவிதமுண்டு எடுத்துமே சொல்லுகிறேனியல்பாய்க்கேளே. 333

பிரத்தியாகரமாறுக்கும்

இயல்பானசரீரமென்ற பிரத்தியாகாரமெய்வதரண்டுவிதம்கன்றுய்க்கேளு, நயல்பானபிரபஞ்சத்தில்மனம்போகாமல் நலமாகச்சமாதியிலேயிருத்தலொன்று, கயலாககாடியத்திகலந்தபின்பு கலந்துபோமிளமையெல்லா மழைப்பதொன்று, ஒயலானவொருபொருளைநாடிநின்றால் உத்தமனேபிரத்தியாகாரமாச்சே. 334

ஆச்சென்றவிந்திரியபிரத்தியாகர மாண்மையுற்ற தாதுவெனுந்தனத்தரோகம், போச்சென்றபோகாமல் சமாதியில்வைத்து புத்தியொத்துபூட்டுகிறதுவொன்றுகாணும், நீச்சென்றபிராணனால்பிரத்தியாகாரம் நேர்மையொத்துநாடிசுத்தியானபின்பு, ஊச்சென்றவிச்சிமிகலாடத்தோடு உறுதியுற்றவாக்கினையுஞ்சோத்திறந்தானுமே. 335

தானனேத்திரமுநாசிவாய்தான் தனித்தபடிநாக்குதான்சண்டம்நெஞ்சு, ஊனனவுதிரமொடுயிடுப்புநாபி உற்றதுடைமுழங்காலுபாதங்கேளு, ஆனனயங்குஷ்டம் வயவங்களோடு மன்பானபிராணனேத்தான்தானம்விட்டு, வேனனகாலத்தில் விரைந்தணைத்து விடுகிறதுதுராணமென்றபிரத்தியாமே. 336

ஆமென்றபிரத்தியாங்தரமாங்கானந் தன்னையலைத்துபிரபஞ்சத்தையணுகொட்டாமல், வாமென்றவஸ்துவொடி மார்க்கத்தாடி மகத்தானகாமியத்தை நரகம்போலெண்ணி, தாமென்றசங்கற்பவிகற்பமெ

ல்லாந்தனியானமனதினுள்ளேசங்கியாமல்,வேமென்றவேதாந்தவிசா ரத்தாலே விளங்கியதோ ஞானத்திலிருத்தல்நன்றே. 337

இருத்தினல்கரணமென்ற பிரத்தியாகாரம் எளிதானதனதான் யம்பொன்னுமண்ணும், தருத்தினலாபரணஞ் சகலவஸ்துந்தந்தினு ல்மனதிலேயபேட்சிக்காமல், வருத்தினல்வயிராக்கிய மனதிலெண் ணி மனம்வெருத்துவிடுதல்மெத்தவுயர்ததிகேளு, பருத்தினல்கருவ சங்கபிரத்தியாகார பரிவாகவேதாந்தம் பார்த்துத்தேறே. 338

தேறவேசாட்சியெங்கும் நாமாய்நின்றோம் திகைத்துநின்றமாய மெல்லாநமக்குகீழே, ஊறவேநிரந்தரமுமுரைத்துநின்றஉலிங்துநின் றமார்க்கமெல்லாம் நமக்குள்நின்று, மாறவேமாயமென்றதெல்லாந் தள்ளி மகத்தானலோகத்தோர்வணங்கிநின்று, சாரவேசர்வசித்தியா கும்பாரு சருகாதிபட்சணையுமுதவுவாரே. 339

உதவுவார்நிர்வாணி யேவல்கேட்பார் உண்மையாம் யோகசித்தி வாதசித்தி, விதவுவார்வினைகளெல்லாங் கழன்றுபோகும் விரைந்த தோர்சுழிமுனையும் வெளியாய்க்காணும், பதவுவார்சடமதுவும்வண்டு போலாம் பொற்பதுமைபோலதுதானிருக்கலாகும், சிதவுவார் சடந் தானுஞ்சொன்னபடிகேட்கும் சித்தியாய்க்கூடுவிட்டுப்பாயலாமே.

பாயவேவுமிநீரும்பானமாகும் பார்க்கவொட்டால் திரியதுகண் ணில்மீரும், தோயவேதேவரெல்லாம் வணங்கிநிற்பார் செடம்போச் சுகயிலாசதேகமாச்சு, ஆயவேயஷ்டமாசித்தியாகு மதுகடந்துநிர்க்கு ணமுமடுக்கக்காட்டும், வாயவேகோபத்தால் வார்த்தைசொன்னால் ம ண்ணோடுகல்முதலாய் நீறாய்ப்போமே. 341

நீரானவக்கினிமண்டலந்தா நேர்ந்ததுவாதிஷ்டானத்தின்கீழாக வாறானமூலமாமுக்கோணத்தின், மருவயதோர்நாலிதழ்மே லமர்ந்து நிற்குந் தேறானவானமதுசிவப்புமாகுந், தெரிந்துகொண்டு வாசியினு லுன்னியாடும் காறானகளிம்பற்றுசடமுந்தானுங், கனமில்லாவண்ட துபோல்தேகமாகு மூறானமும்மலமுங்களிம்புநீங்குமீளாத்தியக்கினி மண்டலமுமாமே. 342

ஆமென்றமாலிடைவிஷ்ணுமேலே யதீதமாம்ருத்திரன்ரன்பதிக் குக்கீழே, பாமென்றுபன்னிருவர்காவலாக பரிவான பிராணனைதான் காத்துநிற்கும், பாமென்றபளிங்குநிறம்போலிருக்கும் பரிவாக வாசி வைத்துயூதிப்பாரு, தேபென்றசிவகளை தேசுபோல சிறந்தவாதித்த ன்மண்டலமுந்தானே. 343

மண்டலமாய்விசுத்தியின்மேலேகாணு மனேன்மணித்தாய்கொலுவுக்குக்கீழேபாரு, குண்டலமாய்ச்சந்திரமண்டலமுந்தானுங் குறிப்பாகமவர்ந்திருக்குங்கூடிப்பாரு, மண்டலமாயமூர்தகலையருவியகு மதிற்சொக்கிலமூர்தத்தையுண்ணலாகும், பண்டலாய்ப்பதினாறுகளையுந்தானாய் பரிசுத்திதமைசுத்தி பரவுந்தானே. 344

பரவியேகாலாங்கி நாதர்சொன்னர் பக்குவத்திலடியேனும் பார்ததுத்தேறி, புரவியைபொதிகைக்கும்வாய்வுமூலைபெருத்ததோரசோகமாமரததின்கீழே, அருவியையறுபத்துமூன்றுபோக்கு மஷ்டாங்கயாகத்தைப்போதித்தேதாள், பரவியேயறுபத்து மூன்றுபேர்க்குப் பலித்துதே யஷ்டாங்கசித்திதானே. 345

சித்தியாயறுபத்துமூன்றுபேருந் தேகமெங்குந்திரிந்திட்டுவிண்ணிலேறி, அத்தியேயடுக்காறுமதனில்புக்கி பதிசெயங்களெல்லாந்தானறிந்துபார்த்து, நத்தியாய்நடனத்தின்புதுமைகண்டு நாதாந்தத்திசைநாதம்நாட்டம்பார்த்து, புத்தியாய்ப்பூமிக்குள் மேருவலமவந்துபுகழ்ந்தாரே பிள்ளைகள்தான் புகழ்ந்தேன்காணே. 346

காணவேபிள்ளைகள்தான் வணக்கஞ்செய்தார்கையமர்த்திச்சமாதிக்குள்செல்லுமென்றேன், ஊனவேகாலாங்கிநாயகர் மூவக்குருதுமேநெஞ்சில்வைத்துமூலநாயர், தோணவேபாதமெந்தன்சிரசில்வைத்துசிவயோகமார்க்கத்தில் தெளியவென்று, வேணவர்சாகமாமரத்தின்கீழே வேட்டிதனைவிரித்துமே விரைந்தேன்பாரே. 347

விரைந்துமேநூறாண்டுசிவயோகத்தில் வெளியொளிபாழ்தன்னில்மனம்விரவிப்போச்சு, நிறைந்தமேவாண்பெண்ணைஞ் சிங்கம்ரண்டுஞ்சிலையென்றநங்மையெண்ணிச்சிறக்குநூலில், புரைந்துமேவெகுநாள்தான் பிள்ளைகளைப்பெற்றுப் பெருக்கங்களாகியே சிங்கக்கூட்டம், நரைந்துமே நன்மைசுத்தியிருந்துகொண்டு நாட்டமாயிரைகொண்டுயொடுக்கும்பாரே. 348

பார்க்கவே வெகுநாள்தானிருக்கும்போது பதிவாக வதிலொருநாள்நமக்குத்தானும், ஆர்க்கவேயானந்தங்கழிந்துதானு மருவிபோல் திவலைசிங்கமடியின்மேலே, தீர்க்கவேசிங்கமது படுத்திருக்கத் திவலைதான் சிங்கத்தின்வாயில்வீழ, ஆர்க்கவேயெழுந்திருந்து விழித்துப் பார்த்து ஆனந்தவாரியினால் ஞானமாச்சே. 349

ஞானமாய்ப்பந்துகனந்தனையழைத்து நாதாந்தசிவயோகி தன்னைத்தாமும், கானமாய்க்கல்லென்று யருகிருந்தோம்கடுஞ்சாபம்நமக்

குவரப்போகுமென்று, தூனமாய்விடமெல்லாஞ் சுத்திபண்ணிசுற்றி லூர்தான்பிள்ளைகளைக்காவல்வைத்து, தமனமாய்த்தங்களுக்கு யிடந் தான்வேறே யவதரித்துச்சதானித்தம் போற்றுவாரே. 350

போற்றியேயர்ச்சித்து யஞ்சவிபண்ணி பேரானசிவசொத்தை பொசித்திடாமல், தேற்றியேபுல்சருகு தனைப்பொசித்து சிவசிந்தை மறவாமல்காத்திருக்கும், ஆற்றியேயிப்படிதா னனேகங்காலமர்ச்சித் துக்காத்திருக்கும்நாளில்தானும், லேற்றியேவெளியொளிபாழ் தன் னைவிட்டுவெளியிலேமனந்தன்னை விரைந்திட்டேனே. 351

விரைந்திட்டுக்கண்விழித்துப்பார்க்கும்போது மிருகமென்றசிங் கமெல்லாம்நடுநடுங்கி, அரைந்திட்டுபடிவணங்கிநிற்கும்போது ஆர்நீ ங்களென்றுசொல்லி யான்றான்கேட்க, திரந்திட்டமிருகமென்ற சிங் கம்நாங்கள் செயறியாப்புத்தியினிற்செயலெண்ணி, முறைத்திட்ட மூர்த்தியிடபதத்தில்நின்றே முனிந்தகண்ணீர்த்திவலையினு லறிவுண் டாச்சே. 352

அறிவுண்டாய்ப்பயந்துமேநடுங்கி அடியேன்கள் கடந்தேறும் பொருட்டுக்காகத், தெறவுண்டாய்த்தேவர்மறங் கரத்திருந்தோஞ் சேயமேதுதேவரீர்கடாக்ஷத்தாலே, நெறியுண்டாய்மிருகமென்ற சட் டைநீங்கி நித்யமாமுத்தியெனக்கருளுகன்னே, நெறிவுண்டாய்நான் தானுமுபதேசிக்க நாடாளும்ராஜாவாய்ப்பிறந்திட்டாரே. 353

பிறந்திட்டுராச்சியங்கள் மிகவுமாண்டுபேரானசுகாதிகளையனுப வித்து, மறந்திட்டமாம்கைபெண்ணாசைமயக்கறுத்துமனதுகன்னைவ ழிப்பாடாக்கி, திறந்திட்டுத்திரேகசதமல்லவென்று திரும்பிவந்துரா சாவாய்க்குருவேயென்று, கறந்திட்டபால்போலயோகஞானங் கருத் தெனக்கு அருளியென்றான் கடாட்சித்தேனே 354

என்றானகடாட்சத்தால்யோகம்பார்த்து எத்தானவரசானயோ கத்தில்நின்று கன்றானகைநெல்லிக்கனிபோலேதான் கருதியேயோ கத்தின் கருத்தறிந்து, தின்றானகற்பங்கள் வெகுநாள்தின்று செட மிருக்கக் கற்பாந்தகாலந்தானுங், குன்றானவாதமெல்லாங் கூர்ந்து பார்த்து குளிகைகட்டிக் கெவுனவழிகொண்டிட்டாரே. 355

கொண்டிடவே ஐவரையுஞ்சோதித்தேறி கூர்ந்துமேதிரும்பிவந் துயடியேன்பக்கல், அண்டிட்டவஷ்டாங்கமறிந்துபார்த்து அஷ்டான சைதன்யத்தடைந்திருந்தார், விண்டிட்டுவதுபத்தாறுபேர்சிஷர்மே தினியிலெங்குமேசஞ்சரித்து, அண்டிட்டுநிச்சமாதிக்கு ளமைந்திருந் தாரறியாட்டல் யோகத்தை யவத்தமாமே. 356

அவயோகம்

அவத்தமாவயோகங்கள்சேப்தானுகி லரியாமல்பூரித்த லொதுங் கிற்ருனல், விவத்தசாம்வியாப் பிரத்தைச்சொருக்கிக்கொள்ளும் விழி ப்பானகன போகமுங் கோணிப் போகும், உவத்தமாயுடம்மெரிவுமிக் கலாகு முடலெல்லாம்வேர்வைபால்வலி யேகாணும், கவத்தமாமட்ட யோககர்மயோகம் கடிதான வபபோகங்கருமங்கேளே. 357

கருமமாய்ப்பூதமெல்லாம் லபமேசெய்து காரணமாந்தத்துவத் தை லயமேசெய்து, நருமமாய்க் குருபதத்தில் காட்டினின்று நயந்து மேயேறுவார் கடினமெத்த, பருவமாய்ப்பிரியங்கியோகத்தாலே பரித் துமேமலிவார்கள் கர்மகர்மம், நிருபமாய்மிக்கானராசபோகம் நிலைத் தல்லோசாதித்து நினைவாய்ப்பாரே. 358

நினைவாகவதன்மேலே மந்திரயோகம் நேரானதசதீட்சைமுறை யோடொக்க, அனைவாகவண்டவெளிச்சக்கரத்தை ஆடிநின்றுபிரா ணையந் தீர்ந்துதேறி, மனைவாகநிர்க்குணத்தின்மவுனத்தூடி மருவிவி ட்டாய் மருவிவிட்டாய் பூரணத்திலேடு, வினைவாகத்தசதீட்சையார் சொல்லப்போருர் விரைந்துணர்ந்தபெரியோரை யடுத்திடாயே. ()

பெரியோரையடுத்திட்டுத் தொண்டுபண்ணி போற்றிசெய்து யனுசரித்துக்கேட்டால்சொல்வார், மரியோரைக்கேட்டேனேசொல் லவில்லையென்று வனக்குறங்கால்கெட்டவர்கள் கோடாகோடி, துரி யாதேயலையாத மோட்சம்வேண்டித், துரிசில்விடுக்காத்திருந்து குரு பதத்தில்கேளு குரியார்க்குக்கொடுத்திட்டால் தீட்சையாவார்கூட் டாபூரணத்தில் கடுகநீயே. 360

கடுகவேயேறயிலே தீட்டைவிதிக்கருவைக் கருத்துண்ணியங்கங் கே கலந்துகாணும், அடுகவேபிராணை மங்கங்கேவைத்து வாகாக விழுங்கையிலே பொளியேயபிறுந், திடுகவேவெளியோடேசேறுசேர சிறப்பானதிசைநாதஞ் செவியில்கேட்கும், அடுகவேபராபரத்தா யமிர்தமீவா ளகண்டபரிபூரணந்தான் பேசும்பாரே 361

பார்க்கவேபூரணந்தா னொளிதோமைந்தா பரிவானதசதீட்சை க்குருவைக்காரு, ஆர்க்கவேயவர்மனதுவந்துதானால் ரண்டிலேசித்தி யா மடைந்துகூடு, நோக்கவேயிதைவிட்டு மத்தில்சென்று நினைவு கெடப்பானமுண்டு நிலைத்துவுண்ணு, தாக்கவேகூசாதேசற்குருனவ த்தேடித்தானசையா முடல்பொருளு மாவிநீயே. 362

ஆவியவர்கைக்கொண்டால் கண்டங்கொள்ளு மடுக்கானவானு வந்தான் பிறவிபோச்சு, பாவியென்றபேரெல்லாம் படுதீயாச்சு பார பரத்திலுன்னறிவு பாய்ந்துபோச்சு, காவியென்றசீலையென்ற வேஷ மென்னக்கருவுண்ணிசமுசாரத் துள்ளேயிற்பார், கோவியென்ற கோபம்வந்து செபித்தாரானால் கோட்டிவிழுந்தாப்போல கொள்குந் தானே. 363

தானானபிராணாயாமம்பண்ணும்போது தயங்கியே யபினுபரத் தில் பானந்தாக்கில், ஊனனஉகாரத்தி லுந்தியிலேநேர்வாய் முகப் பானமருந்துகொண்டால் கருமநோய்தான், ஆனனலட்சியத்தையதி லேவைத்து அடியற்றுமூர்ச்சையுள்ளே வாங்கிநின்றால், பானனவபா னமது பிரிந்துபோகும் பண்பானபானத்தைப் பாங்காயுண்ணே. ()

உண்ணவேயிவ்வளவும் யோகமார்க்கம் உறுதியாய்ப்பார்த்தபடி யுண்மைசொன்னேன், கண்ணவேகாலாங்கி ஐயர்சொல்லக் கடாட் சித்தபாட்டரென்ற மூலநாயர், திண்ணவேயவர்பதத்தைச் சிரசில் வைத்துச் சிறந்தமனோன்மணித்தாயார் சொல்லக்கேட்டு, விண்ண வேபதஞ்சலியர் வியாக்கிரமர்தாமும் விதியுள்ளாரென்றுசொல்லிப் போதித்தாரே. 365

போதித்த பெரியோர்கள்ரிஷிகள் சித்தர் புத்தியுள்ளாரென்று மாகக்கண்டு, ஓலறவேகருத்தழிந்து யொன்றேயாகி உள்ளரையில் காற்றசையா விளக்குப்போல, அலறவேயலைச்சலற்றுத் தானேதானு யகண்டமெடுப் பூரணமாய்நின்றுபின்னே, துலறவேதேகமற்றயிருப் பதாலேசுத்தமாமகத்துவல்ல சமாதியாச்சே 366

ஆச்சப்பாசவர்க்கார குருவைப்பண்ண வறையிறேனனந்தமறி ந்தமட்டும், போச்சப்பாசவர்க்கார மென்னவென்பார் பொல்லாதரெ ண்ணெயை கழற்றமாட்டார், மாச்சப்பாபூநீரா லெல்லாமாச்சு மரு வியதிப்பழச்சாற்றை விட்டுஆட்டி, பாச்சப்பாபுடம்போட்டுயெடுத் துப்பார்த்து பாரமில்லைலேசாச்சு வென்பார்பாரே. 367

பாரப்பாசவர்க்காரமார்க்கம்பாரு பங்குனிதனிலெடுத்தப் பூநீர் தானும், நேரப்பாபடிநாலு பாண்டத்திற்போட்டு, தாரப்பாவாட்டி நன்றாய் வகையதிலேயுண்டு, சமாதியாஞ்சத்தானு வித்தையுண்டு தரிப்பானதிரிசானு வித்தையொன்று, பெமாதியாஞ்சத்தானு வித் தைமார்க்கம்கலக்கிவைத்து சமர்த்துடனே நாலாநாள் தெளிவை வாங்கே. 368

வாங்கியேயடுப்பில்வைத்து யெரிநேர்பாக வற்றியேகுழம்புபோல் வருதல்கண்டு, தேங்கியேபடியரைதா நல்லெண்ணெயும் சிறப்பாக கூடவிட்டுத்திரளாய்க்காய்ச்சி, பாங்கியேபக்குவத்திலான பின்பு பரு

வமுடன் விபூதிமேற் சிலைபோட்டு, நீங்கியேயகப்பையினு லெடுத்து விட்டு நெகிழாமல் விளாங்காய்போ லுண்டைசெய்யே. 369

செய்தவுண்டைரவிதனிலே யுலரவைத்து சிறப்பாகவெடுத்து நவபாண்டத்தில், மைதபின்புலோகத் தோர் சவர்க்காரந்தான் வாத த்துக்காகாது வண்ணார்க்காகும், பைதபின்புயிதற்கடுத்தசுத்திகேளு பாங்காகப்பாக்குபோற் சீவிக்கொண்டு, கொய்தமல்லி சாறதனுல் பாகமேசெய்து கூரறியரவிதனிலே காயப்போடே. 370

காயவேயேழுநாள் கலைத்துப்போடு காய்ந்தபின்பு செய்கிறவரி சைகேளு, மாயவேநெல்லதனைப் பாண்டத்திட்டு வகையாகத்தண்ணீ ருங்கூடவிட்டு, நேயாமல்லிகையினிலையை நினைவாகவதின்மேலேசவ ர்க்காரம்வைத்து, தோயவேமேலுமந்த யிலைபரப்பித் தோலைகட்டி மேல்மூடி யடுப்பிலேற்றே. 371

அடுப்பெற்றிக்கடிகைரண்டு தீயைமூட்டி ஆவிமேல்வருதல்கண்டு யெடுநேர்பாகத், துடுப்பேற்றரவிதனிலே யுலரப்போட்டுத் துலங்க முன்போலிலைபரப்பி நெல்லிவைத்து, வடுப்பேற்றரவிதனிலே யுலரப் போட்டுமறுகாலு முன்போலேயிலைபரப்பிக், கடுப்பேற்றியெரித்து முன்போல் பதத்தைபார்த்து கனமானவெயிலுக்குட்காயப்போடே.

போட்டுடனே தந்தம்போற்சுத்தியாகும் புகழாகக்கிளிபோலத் தாழக்கட்டி, ஆட்டுடனேகற்சுண்ணங் கிளிஞ்சிற்சுண்ண மப்பனே யகண்டோறி நத்தைச்சுண்ணம், நீட்டோடேசங்குசுண்ணம் புதிதா ய்ச்சுட்டு நீற்றுமேலொன்றுககலந்துகொண்டு மாட்டுடனேகிளியெடு த்துநடுவேவைத்து வளமானசட்டியிலே வைத்திடாயே. 373

வைத்தபின்பு அயத்தகடுகெண்ணிப்பார்த்து வளமாகப்பதியை யுறவாகப்போட்டு, உயத்தபின்புமூவரிதன்னில் மல்லிகையினிலையை யுறவாகப்போட்டு நன்றாய்க்காச்சிக்கொண்டு, நைத்தபின்பு இந்நீ ரைவிட்டுநீயுப் நலமாகமேற்சட்டிமூடிப்போடு ஐத்தபின்புகிளிவாங்கி யுலரப்போடு ஐந்துதரமிப்படிதா னீற்றிடாயே. 374

நீற்றபின்பு கிளிவாங்கியுலரப்போடு நிதமாக அண்டோட்டிதனை வைத்து, மாட்டியபின்னண்டோடுமேலேமூடி மறவாமல்சுண்ணும் புச்சிலைசெய்து, தோற்றியதோர்பத்தெருவிற் புடத்தைப்போடு சுக மாகக்குளிர்ந்தபின்பு யெடுத்துப்பாரு, ஆற்றியதோர் தவளகமாம் படிகம்போல வம்மம்மா சவர்க்காரகுருவுமாமே. 375

குருவுக்குக்கடுங்கார செயநீர்கேளு கூரறியபூநீறுங்கல்லுச்சுன னங், தருவுக்குளமுரிவிட்டுக்கலக்கிவைத்துச் சாதகமாய்மூன்றுதின

ங்கடந்தபின்பு, திருவுக்குள்தெளி விருத்துச்சேருரண்டு திறமான பீங்கானில்வைத்துக்கொண்டு, கருவுக்குள்போடுகிற மருந்தைக்கே ளுகனமான ஐந்துசுன்னங் காசுப்போடே. 376

போடப்பா காசெடைதான்வாங்கச்சுன்னம் பொலிவானவெடியுப்பு சுன்னம்போடு, நீடப்பாசினமொருகாசுபோடு நிகருனரூடனுமோர் காசுபோடு, மூடப்பாபூரமொருகாசுபோடு முனையானசலாசத்துகாசுபோடு ஆடப்பாநாபியொரு காசுபோடு ஆதியென்றசாரமொரு காசுதானே. 377

காசெடைதான்குருவண்டு உரமூஞ்ஞூதங் கனமானபுழுகோடு புருவினெச்சில், நேசித்தோர்குக்குடத்தின் வெண்மலமுங்கூட நெகிழாமலமுரிவிட்டு யரைநாற்சாமம், வாசியதாமுன்னீரிற் கரைத்துக்கொண்டு மறவாமலண்டமது மூப்பத்தொன்று, தேசியாதவெண்கருவைக்கூடவிட்டுச் சிறப்பானவெருக்கம்பால் சோரைவாரே. 378

வார்த்துநன்ருய் மத்திப்பாய்குச்சியாலே மறவாமல் மூன்றுநாள்மத்திச்சப்பால், போற்றியதோர் தெளிவிறுத்துப் பீங்கானுக்குள் பொற்கொடிமுன்வைத்ததனைப் பூசைபண்ணி, மாற்றியதோர் வஸ்துசித்திபானஞ்செய்து மறவாமலஞ்செழுத்து யெட்டெழுத்து மாதி, தூற்றியதோர் சவர்க்காரந் தோய்த்துப்போடு சுகமாகவேழுநாள் றவியிற்போடே 379

போட்டபின்புசுண்ணும்பு முப்புநேரே பொடித்துஅரை சுண்ணும்பு தண்ணீர்விட்டு, நாட்டபின்புபுடம்போட்டுயெடுத்துரைத்து நலமாகக் குகைபோலப் பண்ணிக்கொண்டு, நீட்டமுடன்சரக்கெல்லாம்மொன்ருய்ச்சேர்த்து நெடிதானபருவமிட னணுகியேதான், ஆட்டியபின்மேல்மூடிச் சீலைசெய்து அதட்டியொருபுடம்போடச் சுன்னமாமே. 380

சுன்னமென்ற துரைக்கலாங்கடுங்காரமெத்த தொடுகுறிபோற் கடுங்கார மேறுமேறும், கன்னமென்றதிறவுகோல் வழலைச்சுன்னக் கடுங்காரமேறிஞல் சரக்குக்கக்கும், பன்னமென்றகல்லுப்பு விதுக் குட்சாகும்படுமுன்னே நவாச்சாரங் கட்டிப்போகும், வன்னமென்ற வீரமதுமணியுமாகு மகத்தானபூரமது சுன்னமாமே. 381

உப்புக்கட்டு

ஆமப்பாதாதுவகை யறுபத்துநாலுமப்பனே மெழுகாகுங் குருவுமாகும், வாமப்பாவுபசரங்களீயமாகும் மார்க்கத்தில் குளிகையுமாஞ்செந்தூரமாகும், போமப்பாவெகுதூரமெட்டியோடும் போகத்தில்

மெத்தவுண்டுபுகட்டியாடும், ஊமப்பாகாலாங்கிபாதம்போற்றியுலகத்
தோர்பிழைக்கவென்று வுரைசெய்தேனே. 382

உரைசெய்தேனீசருவடமொழியைப்பார்த்து உத்தமனேயேழு
ஆயிரமாமுன்னே, நிரைசெய்தேனேழைத்தானெழுநூறுகஙிகண்டா
கமறையாமல்திறந்துபோட்டேன், புரைசெய்தவென்னூலிலொன்று
பொய்யாபுத்தியில்லாப்புல்லருக்குமலேவுந்தான்றுங், கரைசெய்தேன்
வாதமடந்திறந்துபோககைதவறில் நூல்களெல்லாம்மசடாய்போகும்.

ஆயிபூசை.

போகாது ஆயிபதம்பூசைபண்ணு பொங்கோடேயாதாரமேறிப்
பாரு, ஏகாமல்வாசியைத்தானங்கெறாணு எழும்பாமல்வாசியைத்தா
னறுத்துத்தள்ளு, நேகாமல்சடமெல்லாங் கற்பமுண்ணுநோக்கிநின்
றவறிவுக்குள் மனத்தைப்பூணு, சாகாமல்தேகத்தைச் சுத்திபண்ணு
சதாநித்தங்குருவுடைய பதத்திலுன்னே. 384

உன்னவேவுப்புடைய கட்டைக்கேளு ஒடுகிறதூரமதுவுயர்த்தி
மெத்த, பன்னவேபலனூலிலில்லையில்லை பாடினதால் சித்தரென்ப
கையுமாச்சு, கன்னவேசவர்க்காரச்சுன்னமொன்று கலருகமன்சார
த்தைக்கல்வத்திட்டுப், பன்னவேநாற்சரமமுமிநீர்விட்டுப் பக்குவமா
யரைத்துருட்டிக் குகையில்வையே. 385

வைத்துமேசில்லிட்டுச்சீலைசெய்து வளமாகபத்தெருவிற் புடத்
தைப்போடு, கைத்துமேவாவிட்டு யெடுத்துவாங்கிநலமான கடுங்கார
ச்செயநீர்சுத்தித், தைத்துமேமூன்றுநாள் ரவியிற்போடு சாதகமாய்
த்தினந்தினமுஞ்செயநீர்சுத்திப், பைத்துவெண்ணெய் பக்குவமாய்ப்
பிங்கானிலப்பிப் பருவமாயிராக்காலம் பனியில்வையே. 386

வைத்துடனேமொழுமொலென்த்தண்ணீராகும் வாதாகவிங்கீரி
ல்வீரம்போட்டுக், கைத்துடனேயிந்துப்புக்கலவத்திட்டுக் காணிதே
நீரிலரைநாலுசாமம், மொய்த்துடபன்யெடுத்துருட்டிச் சுன்னமுளை
மேல்மூடியேசீலைசெய்துபுடத்தைப்போட்டு, நைத்துடனேயிந்துப்பு
ச்சுன்னமாகும் நனேத்துமே கடுங்காரம்ரவியிற்போடே. 387

பூர வுப்பு.

போடப்பாதினமூன்றுகாயம் பொசிவானபின்பெடுத்துப் பனி
யில்வைப்பாய், நீடப்பாசெயநீராமிதனைவாங்கி நிலைத்துநிற்கும்வீரத்
தைப்பொடித்துத்தூவி, ஆடப்பாசெயநீரு மொருபலந்தான் வாங்கி

யதற்குள்ளேபூரமொருபலத்தைப்போடு, நாடப்பாகாற்றில்லாக்குளி ர்ந்தவிடந்தன்னில் நணுகாமல்மூன்றுநாள் மூடிவையே. 388

வையப்பாரவிதனிலே ஐந்துநாள்தான் மகத்தாளபூரமதுமுப்பு மாகுன், செய்யப்பாசுண்ணுபுக்குகையிலிட்டு சிறப்பாக மேல்மூடிச் சீலைசெய்து, மெய்யப்பாபத்தெருவில் புடத்தைப்போடே வெரித்த புலிபோலுமுன்றுவெண்ணெயாகும், கையப்பாபட்டுடனேவெந்து நீ றுங் கடுங்காரஞ்செபநீராலரைத்துஅப்பே. 389

அப்பியேபிங்கானில் ரவியில்போடு ஐந்துநாள் தினந்தினமுஞ் செயநீர்குத்தி, செப்பியேயொருவருடன் பேசவேண்டாம்ஜெகஜால மிதற்குள்ளே யடங்கிப்போச்சு, கப்பியாஞ்சுன்னமெல்லா மிதற்குள் ளாச்சு கலையில்லையிதற்குள்ளே சொல்லவென்றால், வெப்பியேவெம் பியேயலையவேண்டாம் வெகுளாதேபிங்கானில் பதனம்பண்ணே.

பண்ணப்பாவீரமொரு பலந்தான் தூக்கி பரியான சவர்க்காரஞ் செயநீர்விட்டு, தண்ணப்பாகல்வத்திலரைநாற்சாமந் தனில்பிறகுவழி த்தெழித்துவில்லையாக்கி, கண்ணப்பாரவிதனிலே யுலர்ந்தபின்புகாசி டைதான்சவர்க்காரச்சுன்னம்போட்டு, விண்ணப்பாபூரணமாஞ் சுன் னமொன்று வெண்காரஞ்சாரமிருகாசுதூக்கே. 391

தூக்கியபின்கல்வத்திற்சாரநீரால் துடியாகவரைத்துமேற்கவச ங்கட்டி, தாக்கியபின்ரவிதனிலேவுலரவைத்துச் சாதகமாய்ச்சுண்ணு ம்புக்குகையிலிட்டு, நோக்கியேவச்சிரமாஞ் சீலைசெய்து கொடியான காந்தவாஞ்சீலைசெய்து, நீக்கியபின்சீலைசெய்துபுடத்தைப்போடு நிர் மலம்போல் வெண்ணீராய் நிரைந்துபோமே. 392

வெட்புப்புச் செயநீர்.

போகாமல்வெடியுப்புச்செயநீர்கேளு போக்கோடே வெடியுப்பு நாலாங்காய்ச்சல், வாகாமல்பலம்பத்து நிறுத்துக்கொண்டுமைந்தனே பூநீறுபலமும்போடு, தாகாமல்சீனமொரு பலமும்போடு தயங்காதக ல்லுப்புப்பலமும்போடு, வேகாமல்சூடனது காசுபோடு விரவியதோ ர்காரமொருகாசுபோடே. 393

போட்டெல்லாங்கல்வத்திற பழச்சார்விட்டுப்பொலிவாக மூன் றுநாளாட்டுஆட்டு, நீட்டெல்லாம்வழித்துய்யச் சட்டிக்கிட்டுசோர்ப் பாமத்தீயெரிப்பாய்நாலுசாமம், வாட்டெல்லாம் வடித்துமொரு பிங் கானுக்குள் மைந்தனேகடுங்காரச் செயநீர்குத்தித், தீட்டீடாடேஐந் துநாள்ரவியிற்போட்டுச் சிறப்பாகச்சுன்னமென்ற குகைபிலூதே.

ஊதையிலே சுண்ணும்புபாய்வெந்துநீறு முத்தமனே பீங்கானி லெடுத்துக்கொண்டு, மாதையிலேகடுங்காரச் செயநீர்குத்தி மைந்த னேநீற்றியதைப் பனியில்வைப்பாய், பாதையிலேசலமாகு மிந்தநீரில் பருவமுடன்வழலையென்றகன்னங்காசு, கோதையிலே பூரமென்றகசு ன்னங்காசு கொடியதொருவீரமென்ற சுன்னங்காசே. 395

காசெடைதான்செயநீரில் கலக்கிக்கொண்டு கடியதொருசரக்கு களிற்சுக்குபோட்டே, ஆசெடைதானறுபத்துநாலுங்கட்டு மாச்சரிய்வு பரிசங்கள்சத்தேயாகும், காசெடைதான்கெவிரிவெள்ளை லிங்கம்வீர ந்தயங்காததாளகமுஞ் சிலையுங்கெந்தி, தேசெடைதான் நாகத்தைப் பகையாமல்கொல்லுஞ்செணத்திலே கவருஞ்கஞ்சாய்க்காச்சாமே.

சாமப்பாவுப்பிதுக்குள் சாற்றக்கேளு தனிதததொரு வெடியுப் புசீனக்காரம். ஓமப்பாகடல்நுரையுஞ்சூடனிந்து உத்தமனேவெண் காரம்துரசுச்சாரம், நாமப்பாவெடியுப்புநீரைவார்த்து நலச்கவரைமே மூநாள்ரவியிற்போடு, வேமப்பாசரக்கெல்லாம் வெந்துநீறும் வெகு ளாதேபீங்கானிலெடுத்துவையே. 397

வையப்பாவுப்பேது வென்றுயானல் மகத்தானவாரிதியில்சத்தி நாதம், தையப்பாமலைபோலே நிற்கும்பாரு தனையெடுத்துப்பாக்குப் போலுண்டைகொண்டு, செய்யப்பாபூச்சாறுதினமூன்றுவிட்டித்திற மானபுப்பங்கேசுத்தியாகும், மெய்யப்பா நினைவாகவுலரப்போடு விர வியங்கேவுட்பூசமருந்துகேளே. 398

கௌப்பாசவர்க்காரச்சுன்னமொன்று கெடியானவீரமொன்று பூரமொன்று, வாளப்பாசவர்க்காரச்செயநீர்விட்டு மைந்தான குழம் புபோல்கல்வத்தாட்டி, கேளப்பாகல்லுப்பில் துவைத்துவாட்டு கொ ள்கியந்தத்தணலுக்குளடர்ந்துவாட்டி, நாளப்பாகுழம்பையெல்லாம் பூசிவாட்டி கலத்தபின்புமுன்னெட்டுமருந்துபூசே. 399

பூசியதைவாட்டுதற்குவிபரங்கேளுபொலிவானவெடியுப்புநீரை வார்த்து, தாசியதைக்கல்வத்தில் குளப்பிக்கொண்டு தழையெல்லாம் பிரட்டிநன்றுய்வரட்டிப்போடு, வாசியதைகல்லுப்பு பலத்தைக்கேளு வகையாகமும்மலத்திற்பூசிப்போடு, தேசியதையடுக்கடுக்க முதிரவா ட்டிச்சிறப்பாகதணலுக்குளடந்ததுவாட்டே 400

வாட்டிடவேகல்லுப்புத்தேறிப்போகும் மருவியதோர்ஊசரமும் உப்பும்நேரே, நாட்டிடவேநாயுருவி புரண்டைச்சாம்பல்நலமானகிளி ஞ்சிநீர்சரியாய்க்கூட்டி, ஆட்டிடவேவமுரிவிட்டு மெழுகாய்ப்பண்ணி

அடைபோலேரண்டாக்கி சட்டியிலேபோடு, நீட்டிடவேயடைமேலே யுப்பைவைத்து நேர்பாகவதின்மேலே யடையால்மூடே. 401

மூடியேமேல்மூடிச்சீலைசெய்து மூசியாதே யடுப்பேற்றியெரிநால்சாமம், ஆட்டியேதீபம்போலெரித்துவாங்கி ஆறவிட்டுயெடுத்தந்த படியேவைத்து, நாட்டியேகசபுடத்திற்போட்டாயானால் நலமான வயிரம்போலுருகிக்கட்டும், தேற்றியேயாறவிட்டுத்துப்பாருசிவாசிவா முத்துபோல்மணியுமாமே. 402

ஆமப்பாமணியெடுத்து வுருக்கிப்பாரு அரகராபொன்போல நின்றாடும், தேமப்பாகரிதனிலே யிரங்கிற்றானால் சிறப்பாகமுன்போலமருந்துப்பூசி, வாமப்பாபுடம்போடுவுருகிநிற்கு மணிபோலே நின்றுடுங்கரியினுள்ளே, தாமப்பாவுப்புமணித்தாழ்வடமாய்கோர்த்துத் தாயோடுதங்கையும்பூசைபண்ணே. 403

பண்ணப்பாபானமொடு சுத்திவைத்துப்பரிவாகப்பூசைபண்ணி மதுவையுண்ணு, விண்ணப்பாதாழ்வடத்தைக்காதில்வைத்துவேதாந் தவனுபவத்தில்மனதையுன்னிக், கண்ணப்பாவஞ்செழுத்துமெட்டெழுத்துமோத கயிலையுறைசிவன்வந்து நித்தஞ்செய்வார், நண்ணப்பா சிறுபிள்ளையாயில்வந்து நாட்டிலுள்ள வதிசயங்கள்சொல்லுவேனே.

சொல்லுவாளட்டகர்மமெட்டுந்தானும் தோற்றாகருமத்தில் வழியுஞ்சொல்வாள், கொல்லுவாள்வாமத்தைப்பணிந்தபேரைகூப்பிடுவாள்வாமத்திற்கொள்கின்றோரை, வெல்லுவாள்சிவகாமிசொல்லையானுவிடுத்துப்பார்த்து மக்கட்காகச்சொன்னேன்,மல்லுவாள்சமாதியிலேயுரைத்துப்பாரு மாயப்பிரபஞ்சமெல்லா மொழிந்துபோமே. 405

போகாமல்உப்பினிடகுருவைச்சொல்ல புகழாகச்சவர்க்காரச்சுன்னமொன்று, நோகாமற்கர்ப்பூரச்சுன்னமொன்று நேர்ப்பாரவீரத்தின்சுன்னமொன்று, வேகாமற்புழுகொன்று சீனமொன்று விரவியரைச்சவர்க்காரநீரினாலே, வாகமதுப்பினுடமணிக்குப்பூசீர் மாசற்றாவிதனிலேயுலரப்போடே 406

உலர்ந்தபின்புசுண்ணும்புக்குகையில்வைத்து உத்தமனே மேல்மூடிச்சீலைசெய்து, அலர்ந்தபின்பு பத்தெருவிற்புடத்தைப்போடு ஆதியென்றகல்லுப்பு சுண்ணும்பாகும், குலந்தனக்குக்கோடாலிக்காம்புபோலேகொள்ளியதோர் சரக்குக்குகாலன்காலன், நலந்தனக்கடுங்காரச்செயநீர்குத்தி நாளெழுரவியிற்குள் உலரப்போடே. 407

போடவேவதின் மேனிப்பூப்போலாகும் பொலிவானசுனன்மிடை சாரங்கூட்டி, நாடவேதினமொன்று அரைத்தாயானால் நலமானவருண சலம்போலேநிற்கும், நீடவேரவிதனிலேயுலர்ந்தபின்பு நேரானசுண்ணம்புக் குகையில்வைத்து, ஆடவேமேல்மூடிச்சீலை செய்து அகட்டியொருபுடம் பொடச்சுன்னமாமே. 408

சுன்னத்தைப்பனியில் வைக்கச்செய நீராகுந்தோற்றறியவெந்நீரில் வீரச்சுன்னம், வன்னத்தைமாற்றிவிக்குஞ் சவர்க்காரசுன்னமாசற்ற வெளியாகும்பூரச்சுன்னம், கன்னத்தைவெளியாக்கும் நீற்போட்டுக் கலக்கியொன்றாய்மத்தித்தாச்சரக்கிற்பூச, அன்னத்தையடுத்தபால்சலம் வேறாம்போல் வனுகிலேகட்டியங்கேமணிபோலாமே, 409

ஆமப்பாயறுபத்துநாலுதானும் அப்பனேவுபசரங்கள் நூற்றிரண்டுபத்தும், போமப்பாலவணமுதலிருபத்தஞ்சும் பொன்காய்க்குமரமாகப்பண்ணுவிக்கும், நாமப்பாகாலாங்கிபதத்தைப்போற்றி நாட்டிலுள்ளபேர்களுக்குப்பிழைக்கச்சொன்னேன், வாமப்பாயென்னூலிலொன்றுதப்பில் மதிகெட்டபோகமுனியென்றுசொல்லே. 410

சொல்லவே உபிணிடமணியைக்கேளு துடியாகக்கருவில் வைத்து வுருக்கும்போது, மல்லவேதங்கமோரிடையைநீட்டு வாய்திறந்து ஆவென்றசுழித்துவாங்கும், வெள்ளவேநாகமோரிடையைப் போடு பேதித்து வாங்கையிலேசூதம்போடு, தெள்ளவேவீரமோரிடையைப்போடுத்திரண்டுருகிவாங்கையிலேகெந்திபோடே. 411

போட்டுடனேகளங்காகுமுப்பூவுங்கால் பொலிவானநவலோகமன்பதுக்கொன்று, காட்டுடனேபத்தரையேமாற்றுகாணுங் கனகத்தைக் கண்டுடனேகொர்ச்சிக்காதே, ஆட்டுடனே அன்னமரை தண்ணீர் கொள்ளு ஆசையென்றபுளியுப்பை யகற்றித்தள்ளு, நாட்டுடனேசிவசொத்தை வறுமைபோலெண்ணு நலம்போலேசமாதியிலேயிருந்திடாயே. 412

இருந்திட்டவுப்பினிட செந்தூரத்தை யிதமாகக்கேளுங்கள் மாணுக்காளே, தருந்திட்டசூதமொன்றுநாகமூன்று மருவியிதையுருக்கியல்லோபொடியாய்ப்பண்ணி, திருந்திட்டவீரமென்றசின்னமொன்று சிறப்பாகமத்தித்து பனியில்வைக்க, அருந்திட்டசெயநீரா மிதனைவாங்கி ஆதியென்றவுப்புபணிதன்னிற்றேயே. 413

தோச்சுமேபரித்த கட்டைமேலேதூற்றிற் சுகமானவிலுப்பை நெய்யால்விளக்கைவைத்துப், பாச்சுமேநூலிழையில் திரியைப்

போட்டுப் பக்குவமாய்வாங்குமட்டுப்வாட்டித்தீரு, ஏய்ச்சுமேயுப்ப ருந்துபரிதானப்பா இதமானவருணனைப்போலாகும்பாரு, காச்சுமே நவலோகமைம்பதுக்கொன்றிய கையோடேபத்தரையாங்கண்டு கொள்ளே. 414

கொள்ளப்பாசெந்தூரங்குன்றிமட்டுங் கோடானகோடிவரை யிருத்துந்தேகம், விள்ளப்பாசுக்கிலத்தைக்கட்டிநீற்ற மேலேறுமல் லாதுகீழோடாது, தள்ளப்பாநரைதிரைகளெல்லாமாறுஞ் சுகமா குங்காயமது சிவந்துபோகும், விள்ளப்பாசட்டையொன்று சுக்கிப் போகும் வேதாந்தசாரமெல்லாம்வெளியாய்ப்போமே. 415

போமப்பா பச்சையுப்புதின்றாயானால் புகழானவேருவையில் சுக்கிபோடும், வேமப்பாவழுரியிலேயிரங்கிப்போகும் வெறிப்பானச் சடமெல்லாம்தளர்ந்துபோகும். போமப்பாசடமலைந்து நரைமெத் தாகி புகழானதந்தமெல்லாங்கழன்றுபோகும், நாமப்பாகட்டிய தோருப்பைத்தின்று நலமானசமாதியிலே யிருந்திட்டேனே. 416

இருந்திட்டேன் சமாதியிலேகற்பமுண்ட ஏழுயுகங்கடந்த பின்பு யெழுந்தேனையா, அருந்திட்டபாட்டர்பக்கல்சென்றயானும் அருகிருந்தெழுந்திறைஞ்சி தீட்சைகேட்டேன், திருந்திட்டகா லாங்கிஐபர்யாதவசென்று செப்பமுடனேயுகம்வாதம்பார்த்தேன், பருந்திட்டமாகியல்லோகுளிகைகட்டிப் பக்குவமாயண்டமெல்லாம் பார்த்திட்டேனே. 417

பார்த்திட்டேனண்டரண்ட பத்துமட்டும் பரிவானமலைதோறும் நாதாக்கள்கோடி, ஆர்த்திட்டமலைதோறுஞ் சித்தர்கோடி அந்தந்த மலைகளிலே மூலிகையோமெத்த, ஏர்த்திட்டசாஸ்திரங்க ளனேக முண்டு எந்தநூல்பார்த்துமே யெளிதில்காணார், மார்த்திட்கிமாக வல்லோ வுப்புச்சொன்னேன் மறைத்தார்கள் சாஸ்திரத்தில் சித்தர் தானே. 418

மறைத்ததென்னவென்றக்கால் சொல்லக்கேளு மலைகளெல் லாம்சித்தர்மய மாச்சுதென்று, நிறைந்ததென்ன ஆதியுப்பையிழுக் காய்ச்சொல்லி நேராகவழலையைத்தான்மூடிப்போட்டார், உரைத்த தென்னவாலையினால்வாதம்போச்சு ஓம்காம்காகாயசித்திகெவுன சித்தி போச்சு, குரைத்ததென்ன சித்தரென்றுசொல்லியானுங் கூறினேன் வெளியாகக் கூறினேனே. 419

கூறியதோர்சவர்க்கார வுண்டைசெய்து குறிப்பாகச்சுத்திபண்ணி சுன்னம்பண்ணு, மாறியதோர்கடுங்காரச்செயநீர்பண்ணு மைந்தனே கற்பூரவுப்புபண்ணு, தேறியதோர்வீரத்தைச்சுண்ணம்பண்ணு சிறப்

பாகவெடியுப்பிற் செயநீர்பண்ணு, ஆறியதோர்கல்லுப்பைக் கட்டி யாடுஅரகராவாதமிதிலடங்கிப்போச்சே. 420

போச்சென்றவுப்பினிட மெழுகைக்கேளு பேரானவுப்பதுவும் பலமுமொன்று, ஆச்சென்றகுகையில்நின்றவுருகும்போது அப்ப னேசாரமதுபலமுங்கால்தான், நீச்சென்றவெண்காரம்பலமுங்கால் தான் நேரானகெந்தகமும்பலமறைதான்சேர்த்து, காச்சென்றசவர் க்காரநீறைவார்த்துக் குன்றியளவுண்டைசெய்யே. 421

செய்தவுண்டைவுப்புநின்றுருகும்போது சிதராமலொவ்வொன் ருய்க்கொடுத்துவாநீ, மைதவுண்டைபுகையாமலுள்ளேவாங்கி மகி மாமலுப்பதுவுமிப்பால்வாங்கிப், பெய்தநவலோகத்தில் நூற்றுக்கொ ன்றுபோட்டிடவேதசமாற்ருய்நிற்கும்பாரு, ஐதவுப்புக்காவிக்குமோ டாதப்பா ஆச்சரியங்காயசித்தி சுருக்கம்பாரே. 422

பாரிந்தமெழுகதனைக் குன்றியுண்ணு பத்தியமாய்ப்புளியுப்புப் பெண்ணுந்தள்ளு, காரிந்தநாற்பதுநாளுள்ளவரையில்வாழுங் கன மானயோகத்தேநின்றுதேரு, சாரிந்தசட்டையொன்றுதள்ளிப்போ டுஞ் சந்திரனேசூரியனேவென்பார்பாரு, ஆரிந்தபடிசெய்வார்நாதா க்கள்செய்வார் ஆச்சரியமுலகத்தோர்பாஷாண்டிதானே. 423

தானென்றவுலகோர்க்குவாதமெய்தி லத்தருவமயனுய்த்திரிந்து பெண்ணைச்சேர்ந்து, பானென்றவமுதமுண்டுமற்றேயாகிப் பலஜீனை வாய்க்கற் பழுத்துப்பாசமெய்திக், கோனென்றகுருவேது காயசித் தியேது குறிப்பான ஆதாரவழிதானேது, வாஞென்றியாடுகிறகுளி கையென்னவென்று வாய்ப்பேச்சாய்த்திரிந்துழன்று மருளுவானே.

மருளாமற்போகவல்லோவாதஞ்சொன்னே மாண்டிறந்துப்போ காமற்காயசித்திசொன்னேன், இருளானவெளிகாண யோகஞ்சொ ன்னே னேழுவகைகாணவல்லோகுளிகைசொன்னேன், அருளான மனமடங்கப்போதஞ்சொன்னேன் வாநந்தமாவதற்கு வஸ்துசொன் னேன், பொருளானகுருபதத்தில் தொண்டுபண்ணிபோக்கோடே வுப்பைமுந்திக்கட்டியாடே. 425

ஆடவேவுப்பென்றசுன்னமொன்று அணைத்திடுநீசாரத்தைரண் டையுந்தான், நீடவேகல்வத்திலரைநாற்சாமம் நேர்ந்தபின்புசுன்ன மென்றகுகையில்வைத்தூது, நாடவேகடுங்காரசெயநீர்குத்தி நாள் மூன்றுமத்தித்துரவியில்வைப்பாய், மூடவேரவியில்வைக்கச் செயநீ ராகுமுத்தமனேயிந்நீரினேட்டங்கேளே. 426

கேளப்பாயிந்நீரில்வீரச்சுன்னங் கெடியாகமத்தித்துப் பலந்தா பூரம், காளப்பாமீங்காணிற்பூரம்போட்டு நலமாகச்செயநீணை யதி மேலவாரும், நீளப்பாமூன் றுநாள்கிழலில்வைத்து நேர்பாகரவிதனிமேல ஐந்துநாள்போடு, வாளப்பாயரைத்து நன்றாய் பில்லைதட்டி வளமான சவர்க்காரச்சுன்னம்பூசே. 427

பூசியல்லோசுன்னமென் றகுகையில்வைத்துப் பொருந்தவேமே ல்மூடிச்சீலைசெய்து, ஆசியல்லோபீசானம்பூசைபண்ணி ஐங்தெரு விற்புடம்போடப்பூரம்நீறும், வாசியல்லோகடுங்காரச்செயநீர் குத்தி மகத்தானரவிதனிமேலயுலரப்போடு, தேசியல்லோசிவகாமி சொன்ன மார்க்கஞ் செப்புகிறேனதின்வேகஞ்செப்புறேனே. 428

செப்பியதோர் பூரமதுபலந்தானென்று தெளிவான சாரமது பலமுமொன்று, ஒப்பியதோரிதுரெண்டுக்கல்வத்தாட்டு ஓங்கியதோ ர்நெட்டெழும்பமாட்டுமாட்டு, தப்பியதோர் சுண்ணும்புக்குகையில் வைத்து சார்பாகமேல்மூடிச்சீலைசெய்து, அப்பியதோ புடம்போட வெந்துநீறு மாச்சரியம்பணியில்வைக்கசெயநீராமே. 429

ஆமப்பாவிந்நீரில்வீரச்சுன்ன மதட்டியேகலக்கிமெள்ளவைத்து க்கொண்டு, ஓமப்பாசரக்கானவறுபத்திநாலு முற்றுமெள்ள மாட்டி டவேமணியுமாகுஞ், சாமப்பாசாரமது லவணமெல்லாஞ் சுஷணத்தி லேசுண்ணும்பாய்விரிந்துபோகும், வேமப்பாகண்டருமோவெள்ளையா கும் வேதித்ததாளகத்தின் மஞ்சள்போமே. 430

மஞ்சளென்றகெந்தகமேவெள்ளையாகு மாசற்றவீரமது சுன்ன மாகு, மஞ்சளென்றலிங்கமதுமெழுமேயாகு மாதியென்றகல்லுப்பும ணியுப்பாகுந், துஞ்சளென்றஉபசாரங்களியாகுந் தொடுமுன்னே தேகமதுவிரைத்துப்போகும், சுஞ்சளென்றலோகங்கள் வெண்ணையா குங் காட்டிடவேநூற்றொன்றிலேமமாமே. 431

ஏமமேயாச்சுதென்றுபுளகிக்கவேண்டா மெளிதாகமூலத்தையி ருத்திப்பாரு, வாமயமகெதியாகவனுதினமும்போற்று வழியாறுதல மெல்லாம்கண்டுபாரு, தேவமேசமரசவாசலுக்குள்ளேபுக்கிச் செப்ப ரியமதியளவுந்தொட்டுயேறு, காமமேகதியென்று விழுகவேண்டாங் கருத்தென்றவாளிறைற் பொறியைவீசே. 432

வீசிடவே பூரமென்ற நீறினாலே விளங்கியதோர் தாளகத்திற் சுருக்குப்போடு, தூசிடவேசுவர்க்காரச்சுன்னந்தானுந் துடியானபூர மென்றசுன்னமூன்று, ஆசிடவேவெடியுப்பு நீராலாட்டி அப்பியதா

ளகத்தில் விரவிப்போடு, வாசிடவேசுண்ணும்புக் குகையில்வைத்து மண்செய்து ஊதிடவே சுன்னமாமே. 433

சுன்னமென்றதாளகத்தில் வீரங்கூட்டித் துடியாக மத்தித்து வங்கத்தப்பி, கன்னமென்ற அண்டோடுகீழ்மேலிட்டு கடுகவேசுன்ன மென்ற குகையிலூது, வன்னமென்றவங்கமது சுன்னமாகும் வாத மென்றகடைதிறக்குந் துரவுகோலாஞ், சின்னமென்ற வேங்கையி லாடுபோன திடுக்கிட்டுச் சூதமது வுண்டையாமே, 434

ஆமப்பாதுரிசியொரு பலமேதூக்கு அதிகமென்றபூரநீர்தன் னில்தோய்த்து, சேமப்பாரவிதனிமேல யுலரப்போடு சிறப்பாகவேழு நாளானபின்பு, தாமப்பாசவர்க்காரச் சுன்னமொன்று தயங்காதவீர மொன்று சுன்னமொன்று, வாமப்பாவங்கமொன்று பூரமொன்று வகையாகசூதமொரு காசுந்தானே. 435

தானென்றபுழுகொடு உரமுங்கூட்டிச் சமரசமாய்க்கடுங்காரச் செயநீர்குத்தி, மானென்றதுரிசியின்மேல் கவசங்கட்டி வகையான சுண்ணும்புக் குகையில்வைத்து, கானென்றமேல்மூடிச் சீலேசெய்து கசபுடத்தில்போட்டெடுத்து யாறவிட்டு, ஆனென்ற கவசத்தை யுடைத்துப்பார்த்தா லம்மம்மாகடுஞ்சுருக்கு சுன்னமாச்சே. 436

ஆச்சப்பாதுரிசியது குருவுமாகு லண்டரண்டகடாகமெல்லாங் கிழிந்துப்போகு, மூச்சப்பாயாடுமுன்னே நாகங்கட்டு மூதண்டசவ் வீர மெழுமேயாகும், பாச்சப்பாயண்டமெல்லா மெழுகாய்ப்போ குமப பாஷாணகுலமெல்லாம் வெண்மையாகும், ஏசப்பாபனிநீரும் வெள்ளைநீருமெடுத்துவந்தாமொன்றிரவிற் கோடியாமே. 437

கோடியென்றுசொல்லுவதுங் கொஞ்சங்கொஞ்சங் குறைக்காம லெடுக்கலா மனேகவித்தை, மாடியென்றமிளையாமற்சித்தியாகுமாசி த்தராட்டமெல்லா மிதுதானல்லோ, நாடியென்றந்துரிசிஞல் சிங்கி பண்ணி நலமுற்றகுளிகைகட்டிச் சாரணேசெய்து, ஆடியென்றங் குளிகைதனேவாயில்வைத்து அண்டரண்டபதமெல்லாம் பார்த்திட் டேனே. 438

பார்த்திட்டேனண்டத்திற் சித்தர்கோடிபரிவாகயவரைநீகண்டு பேசில், மார்த்திட்டகுருவேது வென்றுராகில் மகத்தானமூலரிட பேரனென்றுசொல்லு, சேர்த்திட்டாலஸ்திரமுஞ் சூஸ்திரமுங்கே ட்பார் சிறப்பாகக்கக்கத்தி லிருக்குதென்று, கார்த்திட்டகுளிகை யுடவேகங்கேட்கில் கண்ணிமைக்குள் கற்பமென்னு புக்குமென் றன்னே. 439

### சாரசுத்தி

என்னவேசாரத்தை பண்டம்போற்சீவி யிதமானவபினோடு மிளகு பூரங், கன்னவேமேனிச் சாறரைத்துப்பூசிக் கடுகவேரவிதன்னி லுலரப்போடு, பன்னவேயதின்மேலேசரக்குத்தானும் பக்குவமாயிறக்கி யதில் கவசங்கட்டி, மன்னவேசாணுக்கிச் சீலைசெய்து வகையாகவங்கத்தில் தோய்க்கக்கேளே. 440

கேளப்பாவங்கத்தைக் குகையிலிட்டு கெடியாக வுருகையில் தோய்ததுவாரீ, வாளப்பாவழுதரந் தோய்த்துவாரீ வகையானகாரமது சுத்தியாகுந், தாளப்பாசவர்க்காரச் சுன்னவீரந் தயங்காதபூரமொடு மூன்றுங்கேளு, வேளப்பாவெடியுப்பு நீரைவார்த்து விரவியரை சாரத்தின் மேலேபூசே. 441

பூசியதைசுண்ணும்புக் குகையில்வைத்துப் புடம்போட்டுயெடுத்துப்பார் தவளநீரும், ஆசியதைக்கடுங்காரச் செயநீர்குத்தி யப்பனேபனியில்வைக்கச் செயநீராகும், தேசியதிற்சரக்குகளிற்சுருக்குப் போடசெயமான மெழுகாகும் வேதையாகும், ஆசியதையெண்ணு தேகற்பமுண்ணு அருணனைப்போல்சிவப்பாகுங் காயந்தானே. 442

தானென்றசெயநீரில் வீரச்சுண்ணஞ் சமரசமாய்பூரமொன்று சுன்னமொன்று, கானென்றசவர்க்காரச் சுன்னந்தானுங்கலந்தசெயநீரால் படிகைமேலே, வானென்றதினந்தோறுந் தோய்த்துத் தோய்த்து மகத்தானரவிதனி லேழுநாள்போட்டு, பானென்றவெடியுப்புச சுன்னம்பூசப் பருவமாய்சுன்னமொரு குகையில்வையே. 443

வைத்துமேசிலைசெய்து புடத்தைப்போடு வாகாகவெடுத்துப் பார் சினச்சுன்னம், கைத்துமேகடுங்காரச்செயநீர்குத்திகணிதமாய்ச் சமனுகச் சாரஞ்சேர்த்து, தைத்துமேகல்வத்திலிட்டு ஆட்டிச்சமமாகப்புடம்போடு யெடுத்துக்கொட்டு, மைத்துமே பனியில்வைக்கச்செயநீராகு மாசற்றநீராலே யெல்லாஞ்சாமே. 444

### சாரச்சுன்னம்

சாமென்றநீரிலே வீரச்சுன்னந் தயங்காதபூரமென்ற சுன்னம் போட்டு, காமென்றநீரிலே கலக்கிவைத்துக் கடுஞ்சூடன்பலமொன்றில் நீரைவார்த்து, ஆமென்றநிழலிலே மூன்றுநாள்வைத்து அதன் பிறகுயேழுநாள் ரவியிற்போட்டு, வாமென்றபில்லைபண்ணி யுலரப் போட்டு மாசாரக்கல்லுப்பு சுன்னம்பூசே. 445

சாரநீர் சீனச்சுன்னம்

பூசியேசுண்ணும்புக்குகையில்வைத்துப் பொலிவாகப்புடம்போ டப்பூப்போலாகும், காசியென்றகடுங்காரச்செயநீர்குத்திக் கனமாக யண்டத்தின்மேலேபூசி, தேசியென்றசேர்த்துருக்க முன்னேவைத்து ச்சிறப்பாகமூன்றுநாள் ரவியிற்போடு, தூசியென்றமேலோடு ரண்டு கருக்கூடம்சுழன்றுவெந்து சுண்ணும்பாய் நீறிப்போமே. 446

சூடச்சுன்னம்

நீறியதில்வீரமென்ற சுன்னம்போட்டு நேர்ப்பாகச் சாரநீர்விட் டுஆட்டி, மாறியதில்கிமிளேதனேகவசங்கட்டி மகத்தானசுண்ணும்புக் குகைக்குள்வைத்து, தேறியதில்மேல்மூடிச்சீலேசெய்து சிறப்பாகக் கெசபுடத்தில்போடுநீயும், ஆறியபின்பெடுத்துப்பார் கடிதாஞ்சுன்ன மாகாரமுதிறுண்மை யறிந்திலேனே. 447

அண்டச்சுன்னம்.

அறிந்திலேனிச்சுன்னம் வீரச்சுன்னமப்பனேரண்டையுந்தான் சாரநீரால், பிறிந்திலேன்மத்தித்துத் தங்கத்துக்கப்பிபேரானயண்ட த்தோல்கீழ்மேலிட்டு, செறிந்திலேன் கேசபுடமாய் வெளியிற்போடு சிறப்பானபரிதானுஞ்சுன்னமாகும்; கறிந்திலேன்வாதமடந்திறந்துப் போச்சு கரைக்குள்ளாய் வாதமடஞ்சிக்கிப்போச்சே. 448

கிமிளேச்சுன்னம்.

போச்சப்பாபரிதானுஞ்சுன்னமானல் போட்டிட்டால் சூதமது கட்டிப்போகும், நீச்சப்பாவாதமெல்லாங்கைக்குள்ளாகும்கிரைகிரை த்தாதுவெல்லாமணிபோலாடும், காச்சப்பாதேகமது பொன்போலா குங்கண்டுகொள்ளுகாயசித்தி சுருக்குமெத்த, வாச்சப்பாவித்தனேயு முப்பாலாச்சு மபங்காதேவுப்பைமூந்திக் கட்டியாடே. 449

பரிச்சுன்னம்.

ஆடவேவாசினேயையடித்துத்தள்ளு அப்பனே யஷ்டாங்கமறிந் துபாரு, போடவேகற்பமுண்டு காயசித்தியுண்டு புகழுமனேன்மணி த்தாளைபநீராய்பூசி, கூடவேகுருபதத்தை தொண்டுபண்ணு குறிப்பா னைம்முறையுமினமும்பாரு, நீடவேசத்துருவு மித்துருவும்பாரு கி ளேவெல்லாம் வேதாந்தக்குறிப்பில்வையே. 450

சாரக்கட்டு.

குறிப்பாகவெங்காரக்கட்டுக்கேளு கூறியதுயிதின்பெருமைசிவ னுங்காணுர், நெரிப்பாகச் சத்தெல்லாமிதிலைல்லோ நேரானகாமவி

டாய்சத்துப்போச்சு, வெறிப்பானலோகங்கள் தம்மினத்துக்கெல்லா ம்விரவியிதையிட்டல்லோ கண்விட்டாடும், கறுப்பாகம்கபாலல்லோ காரஆட்டு கைவிட்டால் சரக்கெல்லாமுட்கொள்ளாதென்னே. 451

என்னவேசாரமதுபலகைபோல வெடுத்துமே யாவெருதின் சா ணிபாலே, கன்னவேகழுவிநன்ருய் சுத்திபண்ணி கலங்காதே சவர்க் காரச்சுன்னம்வீராம், என்னவேபூரமொடுமூன்றுங்கேளு பதமுமல் கழஞ்சிவைதான் சாக்கிக்கொண்டு, தன்னவேமத்தித்துச் சாரநீரில் தயங்காதே ரவிதனிலேதோய்த்துப்போடே. 452

போடவேதினமெழில் வெளுரிக்கட்டும் பூனைக்கண்ணெளிபோ லவரவுங்காணும், ஆடவேநாகத்தின்செயநீர்க்குள்ளே யபரஞ்சிரேக் கதனைமேலேசுற்றி, நீடவேதீபத்தில்வாட்டுநேர்ந்த நேரான அபஞ்சி யைத்தான் சுளித்துவாங்கும், மாடவேயருணனைப்போல் சிவப்பேயா கிமாதளம்பூப்போலிருக்கு மக்காள்பாரே. 453

பார்க்கவேநவலோகம் றாற்றுக்கொன்று பாய்ச்சிடவேபதினாறு மாற்றுமாகும், ஆர்க்கவேதினம்பணந்தா னுண்டாயானு லருணனைப் போல் தேகமுமாங்கண்ணொளிமேயவீறும், சேர்க்கவேகாயமது கர்ப் பாந்தகாலந் திரையாமல்பண்ணிவைக்கும் நாரையோயில்லே, சார்க்க வேசூதத்தை க்ஷணத்திற்கொல்லும் கண்ணிமைக்குள் பாஷாணஞ்ச த்துமாமே. 454

சத்தானசாரநீர்க்குள்ளேமைந்தா தயங்காதசவர்க்காரச் சுன்ன மிட்டுப், பத்தானவீரமிட்டும் பூரமிட்டுப்பரிவாகப்பிங்கானில் வாங் கிக்கொண்டு, அத்தானயண்டமது அன்பத்தொன்று அதிகமென்ற மஞ்சளாய்கருவைவாங்கி, நித்தானசட்டியிட்டு யடுப்பிலேற்றி நினை வாகவறுத்திடுவாய் கருகத்தானே. 455

கருகவேவறுத்திடவே மயிலமாகும் காணந்தவேளையிலேபடிதா னென்று, பகருவேயிலுப்பையெண்ணைக்கூடவிட்டு பக்குவமேயான பின்பு யிறுத்துக்கொண்டு, தருகவேயப்புருகம் பலந்தாரண்டு தன் னேடுகாந்தமது பலமும்ரண்டு, திருகவேகருவளகில் பலமும்ரண்டு சிரந்ததொருவெங்காரம் பலமும்ரண்டே 456

ரெண்டோடுயிதுவெல்லாம் பொடியாய்ப்பண்ணி நேரானஅண் டத்தின்தயிலத்திற்குழப்பி, பண்டோடே மண்ணுலே குகைதான்ப ண்ணி பக்குவமாயச்சுட்டெடுத்துவைத்துக்கொண்டு, சண்டோடே தயிலத்தையுடகுகையிற்பூசிச் சார்பாகநாகம் பலந்தானெடுக்,கண்

டோடேவெறுங்குகைக்கு ஞரிக்கிமைந்தா கனமானசாரத்தின்பொ
டிமேல்தூவே. 457

தூவியேநாகமது கண்விட்டாடுஞ் சுகமாகமருந்திட்டகுகையில்
வார்த்துத், தாவையிலே தயிலத்தைக்குத்துகுத்து தனிப்பிறகுசார
நீர்குத்திவாநீ, பாவையிலே வில்லைபாயிருக்கும்பாரு பக்குவமாயெடு
த்துமுன்போல் தயிலம்பூசிக், காவையிலேமுன்போலவுரு மைந்தா
கனமானசாரத்தின் பொடிமேல்தூவே. 458

தூவியபின் முன்குகையில்மருந்துபூசித் துடியாகவதற்குள்ளே
சாய்த்துப்பின்பு, பாவியபின்னதின்மேலே தயிலங்குத்திப் பரிவாக
வதின்மேலே சாரநீர்க்குத்தி, மேவியபின்னிப்படியே ஐம்பத்தொன்
றுமொலிவாகச்சாய்ந்துவா பாகமாக, காவியபின் புகையஞ்சுங்கட்
டிப்போகும் கனமானமுழுக்கட்டு நாகம்பாரே. 459

பாரப்பாநாகமதுகட்டிற்றுல் பண்பேதிசண்பேதி கத்திபேதி,
ஆரப்பாயிதிறைட்டைக் காணப்போறுர் அம்மம்மாசிவரிஷிசித்தர்கா
ண்பார், தூரப்பாவெடுத்தசலந் துலையாப்போலத் துடர்ந்தேறிக்கொ
டிமட்டு மெட்டியோடுங், காரப்பாகுருபதத்திற் றெண்டுபண்ணு
கைம்முறைகள் தவறுமற் சூட்டுவிட்டே. 460

சூட்டவேநாகமொரு பலந்தானப்பா துடியானதங்கமொருபல
த்திலீய, நீட்டவேரண்டுமொன்று யுருகும்போது நினைவாகச்சூத
மொரு பலத்தைப்போடு, ஆட்டவேக்ல்வத்தி லதனைக்கொட்டியணை
யப்பாபலநாலு கெந்திதானும், கூட்டவேசூடனது பலமிரண்டுகொ
டிதானமல்லிகையின் சாற்றுலாட்டே. 461

ஆட்டியேதின மூன்றுகாயக்காய அதன்பின்பு பொடியாக்கிக்
குப்பிக்கேற்றி, நீட்டியேவாலுகையிற் பனிரண்டுசாமம் நேர்ப்பாக
முத்தீயு மாட்டித்தீரு, கூட்டியேவஸ்துசுத்தி யீசானத்தில்கொடிய
திருவாணிக்குப் பூசைசெய்து, மாட்டியேநவலோக மாயிரத்துக்கொ
ன்றுமாற்றது யிருபத்து அஞ்சுதானே. 462

அஞ்சானசெந்தூரங் குன்றியுண்ணு அப்பனேமண்டலத்தில்
சட்டைபோகும், பஞ்சாங்கநோய்களெல்லாந் தவிடுபொடியாகும்
படுமுன்னேகாபமது யிருக்கிக்கொள்ளும், தஞ்சானசிலைபோலத்
தேகமாகுஞ்சாவில்லையுகாந்தவரை நரைதிரையோயில்லை, பிஞ்சான
காயமுமாம் பத்தியாமுண்ணு பேசாதேயொருவருடன் மூலம்பாரே.

பார்க்கவேநாகமொடு பலத்தைநீயும்பரிவாகத்தகடாக்கிப் பூச்ச கேளு, சேர்க்கவேவீரமென்ற சுன்னமொன்றுசிறப்பானபூரமென்ற சுன்னமொன்று, கார்க்கவேதாளகத்தின் சுன்னமொன்றுகலங்காதே சாரநீர் விட்டுஆட்டி, ஆர்க்கவேமத்தித்துத் தகட்டிற்பூசி ஆதியாஞ் சுண்ணும்பு குகயி றாறதே. 464

ஊதவேசுண்ணும்பாய் நீறிப்போகும் உத்தமனேவாசனைக்குப் பாஷாணஞ்சாகும், பாதவேருதமது யிட்டிளிபோலாகும் பண்பான வீரமது மணியுமாகும், கோதவேலிங்கமது கட்டிப்போகும் கொடி தானசரக்குகளிற் பூசிவாட்ட, ஒதவேசரக்கெல்லாம் மணிபோலா கும் உத்தமனேநாகத்தி னேட்டந்தானே. 465

தானென்றநாகம்போற் காரீயஞ்சாய்த்துச் சமர்த்துடனே தக டாக்கிப் பூசக்கேளு, ஆனென்றவெள்ளையென்ற பாஷாணத்தோடு உத்தமனே சவ்வீரம்பூரஞ்சீனம், கானென்றசவக்காரச் சுன்னஞ் சூடன்கலந்தரைத்துச் சாரதின்செயநீராசில், பானென்றதகடுத னிற் பூசிவைத்துப் பக்குவமாஞ் சுன்னமென்ற குகையிலூதே. ()

ஊதையிலே வெந்துருகிச்சுன்னமாகும் உத்தமனே சுன்னத்தின் சாரங்கூட்டிப், பாதையிலேகல்வத்திலிட்டு ஆட்டிப் பக்குவமாய்ச் சுன்னமென்ற குகையில்வைத்து, வேதையிலேமேல்மூடிச் சீலசெ ய்துவிளங்கவே புடம்போட மலரும்பூப்போல், காதையிலேகடுங்கா ரச்செயநீர்குத்திக் கனமான பீங்கானிற் பணிப்படவேவையே. 467

வைத்துடனே பலபலெனத் தண்ணீராகும் வாகாகயின்னீரில் வீரம்பூரம், கைத்துடனேஉப்பான சுன்னமிட்டுக்கனமான துரிசிநீர் கழஞ்சுபோட்டுத், தைத்துடனேகல்வத்திற் சூதம்போட்டுத் தாக்கி யரைநால்சாமம் கல்வத்திட்டு, மொய்த்துடனே யுண்டையா யெடுத் துக்கொண்டு முயற்சியாய் ஆரையிலே கவசங்கட்டே. 468

கட்டியே அவிர்ப்புடமாய்ப்பத்துபோடு கனமானசூடன்தீதன் னில்வாட்டித், தேட்டியேகாண்டியிலே யெண்ணெய்குத்தி யுருக்கிச் செயமான பின்பெடுத்து சிரசில்வைக்க, வெட்டியேபார்நீ மகற்றி போடு விரவியேவாயில்வைக்கத் தம்பனையேயாகும், வட்டியேயுபசா த்தின்சத்தையீந்து மார்க்கமாய்ச் சாரணைதான் செய்திடாயே. 469

செய்திட்டகுளிகைதன்னை வாயில்வைக்கத் திறமான அண்டா ண்டதலங்களெல்லாம், கைத்திட்டமாகவுந்தன் காட்டிவிக்கும் கண் ணிமைக்குள் சங்கவரை புக்குவிக்கும், கொய்திட்ட ஆண்டத்தில்சித் தருண்டு குளிகையெங்கே பார்ப்பமென்ப ரறியவேண்டாம், மெய்

திட்டபுத்தியினுல் கொடுத்தாயானல் விரைந்தெடுத்து அண்டத்தில் பாய்வார்பாரே. 470

பாரப்பா அடுக்குகளிற்புத்திகொள்வார் பாய்ந்துபோய்நீயங்கே தடவப்போருய்ச், சேரப்பாபாட்டருட மணியைவாங்கித் திறமாகப் பார்ப்பமென்றுவாயில்வைத்து, காரப்பாஅண்டத்திற்புக்கிபோனன் கடுகவொருமணிவாயில் வைத்துப்பாட்டர், தூரப்பாகேதனத்தில் தேடிப்பார்த்தார் சுற்றியெங்குங்காணமல் திகைத்திட்டாரே. 471

திகைத்திட்டுக் குகையில்வைத்துச் சீஷருக்குச்செப்பினர்கேச ரத்தி லாடுபபோது, பகைத்திட்டசித்தர்கள்தா னனேநங்கோடிபாசிக்கும் குளிகையைத்தான் கேட்பார்மக்காள், நகைத்திட்டு அவர்கையிலீயவேண்டாம் நம்போலேயேளிதயாய்ப் போகவேண்டாம், புகைத்திட்டார் பாட்டர்சொல்லக்கேட்டே னியானும்பேய்மக்காள் புத்திகொண்டு பிழைத்திட்டீரே 472

பிழைத்திட்டுக் குளிகைகட்டி யோகம்பார்த்துப் பேரானகாயத்தைச் சுத்திபண்ணி, குழைத்திட்டு ஆத்தாளே பூசைபண்ணிக் கூரியவஸ்துசுத்தி பானம்பண்ணி, அழைத்திட்டுவாசியைத்தான் அங்கென்றாணி அடுக்காறுதளத்தில்நிற்கும் அச்சமுங்கண்டு, வழைத்திட்டசாந்திதனி லமுர்தத்தையுண்டு வழியோடே மனதூன்றிப் பாருபாரே. 473

பார்த்திடவேதங்கமொன்று உருகும்போது பரிவானசூதமொன்று காரத்தோடீய்ந்து, கார்த்திடவேநாகமொன்று கொடுத்துவாங்கிக்காணிதுக்குச் சமஞகக்கெந்திகூட்டி, ஆர்த்திடவேதாளக முஞ்சிலையும்வீரம் அழகாகநாலிலொன்று கூடக்கூட்டி, மார்த்திடவே கல்வத்திலிதனையிட்டு மல்லிகையினிலேச் சாற்றிலரைத்திடாயே. ()

அரைத்திடுவாய் தினமூன்றுசாறுவிட்டு அழகாகப்பொடியாக்கிக்குப்பிக்கேற்றி, நிறைத்திடுவாய் வாலுகையி னடுப்பிலேற்றி நேர்பாகத்தீயெரிப்பாய் பனிரண்டுசாமம், விரைந்திடுவாய் ஆயிபதம் பூசைபண்ணி வெகுளாதேயெடுத்துப்பா ரருணன்போலாங், கரைத்திடுவாயாயிரத்துக் கொன்றேயீயக் கைகண்டமாற்றென்ன விருபத்தஞ்சே. 475

அஞ்சுமேசெந்தூரம் பணந்தானென்று அனுபானந்தேனேடே மண்டலமேகொள்ளு, கெஞ்சுமேநோய்களெல்லாந் தவிடுபொடியாகுங்கொடியானகாசித்தி யருணன்போலாங், துஞ்சுமேநரைதிரைகளெல்லாமாறுஞ் சகமானசட்டையொன்றி கக்கிப்போகும், வஞ்சுமேகற்பாந்தகோடிகாலம் வாசியைந்துலத்தி லிருத்திப்பாரே. 476

இருந்திடவேசவ்வீர வைப்புக்கேளு எழிலானவெடியுப்புநாலு பத்துபலந்தான், பொருத்திடவேசீனமது அஞ்சுபத்துபலந்தான்புக ழாமலிதுரண்டுங் கல்வத்திட்டு, வருத்திடவேமேனிசார்விட்டு ஆட்டு வகையாகவில்லேதட்டி யுலரப்போட்டு, தரித்திடவேகவசத்தி லிதனை ப்போட்டு சக்கரமாம்பானையைத்தான் மேலேமூடே. 477

மூடியேசிலைசெய்து அடுப்பிலேற்றி முசியாதேபீங்கானில் கிண் ணிவைத்துச், சாடியேதணலெறிப்பாய் முச்சாமந்தான் தன்னுக்குள் வேர்வைபோ லிறங்கும்பாரு, வாடியேவெளுப்பாக விறங்கும்நீரை வகையாக வூற்றிவிடுமறுகாலே நீரைத், தேடியேவீதருக்குளடைத்து வைத்துச் சிதராமல் நீரையெல்லாம் வாங்குவாங்கே. 478

வாங்கியேசூதமொரு பலந்தாவெட்டு வகையாகமறுபீங்கான் தன்னில்வைத்து, ஓங்கியேதிராவகத்தை யதிலேவிட்டு உர்ப்பனமா ய்த்தனலிட்டு வுருகவைத்து, தேங்கியேமனல்போலே யாகும்பாரு சிறக்கவே கல்லுப்புப் பலந்தாவென்று, பாங்கியேதுரிசியொரு பலந் தானுலு பக்குவமாம் பூநீறுபலந்தான் ரண்டே. 479

ரெண்டோடுவெடியுப்பு ஒன்றைதானப்பா நேர்ப்பானசீனமது ஒன்றறையேயாகும், ரண்டோடு அன்னமென்றபேதிதானுங் கருவ வே ஒருபலந்தான் கூடப்போடு, தண்டோடுசாரமதுஅரையேபோடு சார்வானகல்லுப்பு துரிசுதன்னை, பண்டோடேபொடியாகவறுத்துப் போடு பக்குவமாய்வெவ்வேறே பொடித்துவையே. 480

வைத்தெல்லாஞ் சூதத்தில்நன்றாய்ப்போட்டு வாகாகப்பொடி செய்து குப்பிக்கேற்றிப், பைத்ததெல்லா மரைவாசிதானே போட் டுப்பக்குவமாய் வாலுகைவின் மேலேயேற்றி, கைத்தல்லோதீபோட் டுக்கமலம்போல நாலுநாள்முச்சாமம் ஆறவிட்டுப்போடு, கைத்தல் லோபனிரண்டுசாமமானல் கனமானத்தங்கம்போ லிருக்குந்தானே.

தானென்றசவ்வீரப் பொடிதான்சேரை சமர்த்தானகல்லுப்பு லுப்புவொன்றுக்கு முக்கால், மானென்றசவ்வீரப் பொடியாக்குப் பாதி மகத்தானமுரில்யென்ற பலந்தானப்பா, கானென்ற துரிசிக் குப்பாதிப்பூநீறு கனமானநீறுக்குச் சீனமுக்கால், வேனென்றவெடி யுப்புமப்படியேயாகும் வெடியுப்பு மூன்றிலொன்று சாரஞ்செய்யே.

சேர்க்கவே யன்னமென்ற பேதிதானுஞ் சிறந்தபூநீறுக்குப்பாதி யப்பா, ஆர்க்கவே பொடிசெய்து குப்பிக்கேற்றி அரைவாசிவாலு கையின்மேலேவைத்து, ஏர்க்கவேதீயிடுவாய் கமலம்போல இதமான

நாலுமுச்சாமமப்பா, பார்க்கவேயாறவிட்டு யெரித்தாயானால் பருவ மாய் பனிரண்டு சாமந்தானே. 483

தானென்றமும்முறைதா னிப்படியே செய்தால் சமர்த்தான கொச்சியென்றபேருமாச்சு, தானென்பரங்கிவைத்தான் மாயிசொல லக் கனமானவீரத்தால்வாதமாச்சு, வேனென்றவீரத்தைச்சுன்னஞ் செய்தால் வெகுளாமல் தங்கமதுபூப்போலாகுந், தேனென்றசரக் கெல்லாஞ்சுண்ணும்பாகுஞ் சிறுபிள்ளையாடுமிந்தவாதந்தானே. 484

வாதத்துக்காதியென்ற வீரப்போக்கை மறைத்தாரே நாதாக்க ள்ரிஷிகள்சித்தர், வேதத்தின்முடிவுபோலொளிப்பு மெத்த வெட்ட வெளியாச்சுதென்றார் லோகமெல்லாம், போதத்தின்பஞ்சகர்த்தாள் சிருட்டிபோகும் பொன்மயமாயுலகமெல்லாம் போகுமென்று, நீதத் தல்சொன்னவராருமில்லை நேர்ப்பாக வென்னூலிற் சொன்னேன் காணே. 485

சொன்னதினால் சித்தரென்னபகையுமாக்க தோற்றுதகருவெல் லாம் வெட்டவெளியாகப், பன்னதினால்பலனென்று விரித்துச்சொ ன்னேன் பரத்துக்கேவுப்பென்று மனதிலெண்ணித், தன்னதினால் மன்னதினால் தூல்கொடுத்தோ னரகமெய்திமாண்டிறந்து கடைநர கில்வீழ்வான்காணே. 486

காணவேநிர்மூட லாதிகட்குக்கைக்கொடுக்கிலிந்நூலில் கருவை யுண்ணி, பூணவேபார்த்தலைந்து யேமங்கண்டு புளகித்து மெய்மறந்து பெண்ணைக்கண்டு, ஆணவேதனமேய்ந்து கற்பழிந்து அழும்பாக்கிக்கு டிகெடுத்து ஆசைபூட்டி, ஊணவேகாமநோய் கொண்டுயேங்கி உலக த்து நடத்தைதப்பியவன்றானே. 487

தானானஞானிக்கு இந்நூலெய்தில் சண்டாளப்பாசத்தையறுத் துத்தள்ளி, ஊனான காயத்தைச்சுத்திபண்ணி ஊரூரு தலங்களெல்லா ஞ்சோதித்தேறிப், பானானநிராதாரத்துள்ளேசொக்கிப் பரத்துக்கு அடுக்கநின்று பானம்பண்ணி, ஆனான அன்னமறைதண்ணீர்கால மருந்தியேயொருபொழுது யிருப்பார்தானே. 488

இருந்திட்டகருவெல்லாமெண்ணிப்பார்த்து எளிதாகத்தொழி ல்செய்து ஏமங்கண்டு, திருந்திட்டசிவனுடையசொத்திதென்று செ லவுசெய்யார் கனமானகர்மத்துக்குப், பொருந்திட்ட மாத்திரையே யெடுத்துவித்து பூசைதிரவியத்துக்குக் கற்பத்துக்கும், அருந்திட்டு மொன்றுமறியாதார்போல வசைவற்று இருப்பார்கள் ஞானிதானே.

ஞானிக்குவறுமைவந்தால் சகலசித்தும்பொய்யாம் நாட்டிலுள்ளமனிதர்கள்தா னகைப்பாரென்று, ஞானிக்குப்பசிவந்தால்மனமலையுமென்று நலமானகாயசித்தி போகுமென்று, ஞானிக்கு விகடம்வரலாகாதென்று நாதாக்கள்சொல்லாத கருவைச்சொன்னேன், ஞானிக்குச்சொன்னதாங் குருவுக்காச்சு நலமானசவ்வீர வைப்புக்கேளே.

சிவப்புசவ்வீரவைப்பு.

கேளப்பாவெடியுப்புப்பலமேநூறு கெடியானசீவமது நூற்றுப்பத்து, வானப்பாசவுட்டுப்பு இருபத்தைஞ்சு மருவியதோர் துரிசியதுமுப்பதாகும், நாளப்பாநவாச்சாரம் பலமும்பத்து நண்பானசத்தியென்ற சாரமாச்சு, காளப்பாகல்லுப்புப் பலமுமஞ்சு கடிசாகக்கல்வத்திற் பொடியாய்பண்ணே. 491

பொடிபண்ணிபிரண்டைச்சார் தன்னிலே பூணியரைத்தேழுநாள் பில்லைசெய்து, கெடிபண்ணிரவிதனிலே யுலரப்போட்டுக்கெட்டியாம்பாண்டத்தில்லரைவாசியிட்டுத் தடிபண்ணிச்சக்கரமாம்பானைதன்னைச் சாங்கமாய் மூடியெல்லாஞ்சீலைமண்செய்து, துடிபண்ணி யடுப்பேற்றிதீயைமூட்டித் துப்பரவாய்த் தீநீரைவாங்கு வாங்கே. 492

நீரிலேவெள்ளைநீர்தனையகற்றி நேர்பானசிவந்தநீர் தன்னைவாங்கிச், சீரிலேயாக்கானதுய்யர்தன்னில் சிறப்பாக அடைத்துவைத்துச்சேதிகேளு, தூரிலேசூதமது பலந்தான்பத்துச் சூடாதி சல்லுப்புஅஞ்சுமாகும், ஊரிலேதுரிசியதுரண்டரையேபலந்தான் முற்பனமாய் வெடியுப்பு ரண்டுபலமுமாமே. 493

ஆமப்பாசீனமது ரண்டுபலமாகு மன்னமென்றபேதியதுபலமுமிரண்டு, ஓமம்பாசாரமதுபலமும்ரண்டு உறுதியாம் பூநீறுபலமும் ரண்டு, காமப்பாலிங்கமது பலமுமெட்டுக் கம்பிரசகர்ப்பூரபலமுமெட்டு, காமப்பாவெள்ளையது பலமேயொன்று நற்கெவுரிமனோசிலையும் பலமுமொன்றுபோடே. 494

போடவேபலமொன்று கெந்திதானும் புகழானசூடனது பலமுமொன்று, வாடவேதொட்டியொடு அப்புரகமிவை வர்த்தமொடுவைகிருந்து தமர்காந்தலோகம், தேடவேகற்காதி சாத்திரவேதிசிறப்பானசிங்கியொடு குதிரைப்பல்லு, நீடவேஅஞ்சனக்கல் துத்தத்தோடு நெடிதானசலாசித்துக் கல்நார்தானே. 495

தானென்ற கடல்நுரையு மொவ்வொன்று பலந்தான் தாக்கியயரை◌ட்டுநாள் திராவகத்தைவிட்டு, பானென்றரவிதனிலே யுலரப்போட்டு மருப்பீங்கான்றன்னிலிட்டுத்தணலில்வைத்து,ஊனென்ற

பொடிப்போலெ வறுத்துக்கொண்டு, உற்பனமாய்க்காசியென்ற மே ருக்கேற்றி, வானென்றஅறைவாசி மட்டும்போட்டு மயங்காதேமாலு கையில் வைத்திடாயே. 496

வைத்திட்டுத்தீயெரிப்பாய்பனிரண்டுசாமம் வளமானதீபம்போ லாறவிட்டுக், கைத்திட்டுதீயெரிப்பாய்க் கமலம்போலக்கலங்காதபனி ரண்டுசாமந்தானும், மொய்த்திட்டுபகல்முழுதுந்தீயைப்போடு முயற் சியாய் ராக்காலமாரப்போடு, நைத்திட்டுஆறுநாளானபின்பு நலமா கும்பதம்பார்த்து யிறக்கிடாயே. 497

இறக்கியேகுப்பியைத்தான் முன்மருந்துகூட்டி இதமாகத்திரா வகத்திலரைத்துலர்த்தி, நறுக்கியேமுன்போலப்பொடியாய்ப்பண்ணி நலமானகாசியென்ற மேருக்கேற்றி, உறக்கியே வாலுகையின்மேலே வைத்து உற்பனமாய்த்தீயிட்டு அறுநாலுசாமம், இறக்கியே யாறவி ட்டு வுடைத்துவாங்கி மறுகாலுமுன்போலே மருந்தைக் கூட்டே.

பரங்கி பாஷாணவைப்பு

கூட்டியேமும்முறைதான் செய்தாயானால்கொடுவசிப்பாய்ச்சவ் வீரமிருக்கும்பாரு, நீட்டியேசிறுவிஷமும் பலமுமஞ்சு நெடிதானஅ லரிவேர்பட்டைபலம்பத்து, மூட்டியேகெந்தகந்தான் பலமுரண்டுமூ ட்டையா மஞ்சளென்றகருவாலாட்டி, வாட்டியேபில்லை பண்ணிப்பு டத்தயிலம்வாங்கி வகையானவீரத்திற் சுருக்குபோடே. 499

போட்டுடனேமெழுகாக பதத்தில்வாங்கிப்பேரான ரேக்குசுத் திவைக்கத்தின்னும், நீட்டுடனே வுள்ளுக்குநாலுதங்கம் நிகழாமல் சுற்றிவைக்கத்தின்றுபோடும், மூட்டுடனே ஆயிரத்துக்கொன்றேயீ யமுசியாதேபதினாலு மாற்றுமாகும், மாட்டுடனேவுபசவங்க ளீயமா குமாசற்றவீரத்தை யொளித்தார்பாரே. 500

ஒளித்தாரே நாதாக்களென்றுசொல்லி உத்தமித்தாய்ப் பாதத் துக்குண்மையாக, அளித்தாரேலோகத்தோர் பிழைக்கவென்று ஆச் சரியம்வீரம்விட்டால்வாதம்போச்சு, களித்தாரே முன்சொன்னவீர மெல்லாங் காரமிடும்வயித்தியத்துக்குறுதியாகுஞ், சளித்தாரேயேம மென்றுங் காணுதேங்கிச் சுணங்களாய்ச்சுடலைந்து மாள்வான்றானே.

மாளாமல்பறங்கியென்ற பாஷாணத்தை மகிழ்வாக வைக்கிற தோர்முறமைகேளு, தாளாமல்சூதமொரு பலந்தான்பத்து சாகாமா ல்கல்லுப்புப்பலந்தானெட்டு, மீளாமல்வெள்ளையென்றபாஷாணமை ந்து விரவியேகல்வத்திற் பொடித்துக்கொண்டு, சேளாமல்திராவகத் தாலெட்டுநாளாட்டிக் கெடியாகப்பொடிபண்ணி மேருக்கேற்றே.

மேருக்கேயேற்றிபின்வாலுகையில்வைத்து விதமாகத்தீயுங்கள் பனிரண்டுசாமம், பேருக்கேபதங்கமது யிறங்கியேறும் பெருந்தேங் காய்போலிருக்கும் பாஷாணந்தான், பேருக்கேறினபோலமருந்து கூட்டிப்பேசாதே திராகவத்தைவிட்டுஆட்டிப், பாருக்கே பொடிபண் ணிமேருக்கேற்றி பக்குவமாய்வாலுகையில் பதித்திட்டாயே. 503

பதித்திட்டுப்பனிரண்டு சாமத்தீயைப் பகல்முழுது மெரியிட்டு ஆறப்போடு, விதித்திட்டபக்குவத்தி லிறக்கிப்பாரு வேலோடுதள்ளி யேபொடியாய்ப்பண்ணு, மதித்திட்டுமுன்போல மருந்துகூட்டி மற வாதேமூன்றுதரந் திறந்தாயானால். கதித்திட்டுபரங்கியென்றபாஷா ணமாகுங் கண்ணிமைக்குள் ரகிதவித்தையாகும்பாரே. 504

பாரப்பாபரங்கியென்ற பாஷாணந்தான் பலமெடுத்துஆயச்சட் டிக்குள்ளேவைத்து, நேரப்பாதுண்டிப்பாய் நாலுசாமம் நீத்தாதே சுருக்கிடனே மெழுகாய்ப்போகும், தூரப்பாயிரும்புசெம்பில்நூற்றுக் கொன்றி துடியானரசிதமது பதினாறுகுஞ், சீரப்பா சரக்கெல்லாங் கட்டிப்போகுஞ் சிறுபிள்ளையாடுமிந்த வாதந்தானே. 505

வாதமென்றால் கொஞ்சத்தில் கிடைக்குமோதான் மகத்தான யோகிமுதல் ரிஷிகள்சித்தர், நீதமென்ற பஞ்சகர்த்தா ளிவர்களெல் லாம் நேர்ப்பாகபாக்கையிலுந் தப்பிப்போரும், வேதமென்ற அந்தர த்தின்முடிவுக்கேற்கும், விரைந்தமனோன்மணித்தாயார் சொல்லயா லும் பாதமென்றன் சிரசில்வைத்துக்கேட்டு, கேட்டுப்பரிவாகப் பிள் ளைகட்காயுரைசெய்தேனே. 506

நூன்முறை.

உரைசெய்தார்சித்தர்கள்தானனேகங்கோடி உத்தமனேஅகஸ் தியர்தானெட்டுப்பாவாய், நிரைசெய்தேநவகண்டஞ்சொன்னாரையா நேர்பாகவெண்பாவாய் கோரக்கர்தாமும், திரைசெய்தவெழு ஆயிரந் தான்சொன்னார், திரட்டியல்லோமச்சமுனி யேழுகாண்டஞ் சொன் னார் புரைசெய்த சிவவாக்கிய ரஞ்சுகாண்டஞ்சொன்னார் போக்கோ டேசித்தர்சொன்னார் கரைகாணேனே. 507

காணுதகாசிபர்தான் வண்ணஞ்சொன்னார் கறையற்ற ரோமமு னிவடுகிற்சொன்னார், பூணுதராமதேவர் சந்தப்பாசொன்னார் புகழ்ரி யசந்திகள்தான் சந்தஞ்சொன்னார், கோணுதசங்குமா முனிதானேயா குறைத்துமே கலித்துறையாய்த்தெளிவாய்ச்சொன்னார், கோணாதே திருமூலநாயர்தாமுஞ் சொன்ன திருமந்திரமுந்தான் காடுகாடே.

காடாகப்போகாமல் பதஞ்சலிமாமூர்த்தி கண்க்கோடே யேழு காண்டஞ் சொன்னுரையா, தோடாகச்சட்டைமுனி நிகண்டோ டொக்கத்தோராம விருபத்தியேழு நூறு, பாட்டாகக்காலாங்கிநாதர் தாமும் பக்குவமாய் நாலுகாண்டஞ் சொன்னுரையா, நாயாகவிருந்த யோர்க்குதவியென்று நலமாகவேழுகாண்டஞ் சொன்னேனென்பாரே.

பார்க்கவே யென்மைந்தாவெழு நூராகப் பரிவாகச்சொல்லி விட்டேன் சூத்திரமாய்த்தானும், நோக்கவேயென்பிள்ளை கொங்க ணர்தானப்பா நிறைமூன்று ஆயிரத்தன் னூருசொன்னார்,சேர்க்கவே சட்டைமுனி நூலும்நன்று செகமறிய கொங்கணர் தாநூலும்நன்று கார்க்கவே வேகங்குமாமுனி னூலும்நன்று கருதியேமனதூன்றிப் பாருபாரே. 510

பாரப்பானூல் மற்றநூல்களெல்லாம் பரிபாஷைக் கருவாகச் சொன்னுரையா, நேரப்பாகண்ணுடி மூக்குப்போல நேர்பாகசமர் சொல்லிவைத்தார்தேவர், சேரப்பாசாஸ்திரங்கள் பார்க்கபார்க்கத் திருட்டெல்லாம் வெளியாகு மறைப்புமில்லை ஆரப்பாயென்னுடைய நூலுகண்டோ ராதியென்ற கொங்கணர்தான் கரைகண்டாரே. 511

கண்கண்ட கோரையென்ற வீரவுப்பைக் காட்டுகிறேன் கருவா கக் கேளுங்கள்மக்காள், பாரைகண்டசவ்வீரம் பலந்தாடுனட்டு பாய் ச்சிநன்றாய்க் கல்வத்திற் பொடியாய்ப்பண்ணி, திரைகண்ட கல்லுப் புச் சுன்னம்ரண்டு செகமறிய சவர்க்காரச் சுன்னம்ரண்டு, மறைகண் டதுரிசியென்ற சுன்னம்ரண்டு மாசற்றவெடியுப்புச் சுன்னம்ரண்டே

ரெண்டானசாரமென்ற சுன்னம்ரண்டுநேர்பான சீனமென்ற சுன்னம்ரண்டு, பண்டானஅன்னமென்ற பேதிரண்டு பாங்கானபொ டியோடே வொக்கக்கூட்டித், தண்டானமேருவுக்கரைவாசி சோட்டு ச்சாதகமாய் வாலுகையின்மேலேவைத்து, செண்டான வடுப்பேற்றி வைப்பாயப்பா செகமறியாப் பனிரண்டு சாமந்தானே. 513

தானென்றவீரத்தை யெடுத்துப்பார்த்தால் சாதகமாயடியிலே தானேநிற்கும், கானென்ற விரும்புமே லணுபோல்வைத்து கனமான நீரையள்ளி யதிலேகுத்தி, தேனென்ற குருவாகுந் தண்ணியிலே குழைத்துச் சிறப்பாகக்காகத்தி னிறகிற்பூசக், கோனென்ற கொக்கி றகுபோலேயாகுங் கொள்ளேயோ கொள்ளேயிதில் வாதந்தானே.

வாதந்தானெப்படிதான்வருகுமக்காள் மகத்தானதுரிசியல்லோ நீறுபண்ணவேணுஞ், சூதந்தான் தன்னையல்லோ கட்டத்தேணுந்துடி

யான சூதமதிலேகாயசித்தியாகும், வேதமென்ற பொருளறிந்தான் ஞானியாவான் விரைந்தாறு தலங்கண்டோன் யோகியாவான், காதந் தானென்று சொல்லவார்த்தையாச்சு சலந்தொட்டி நடந்தாக்கால் துலையும் பாரே. 515

துரிசி குரு.

பார்ப்பதுபோல்துரிசி யொருபலத்தைவாங்கிப் பரிவானசேரை யென்ற வீரந்தன்னை, சேர்ப்பதுதான் முக்காயெடையே தூக்கிச் செயமான வால்நீரால் மத்தித்தப்பா, கார்ப்பதுதான் துரிசியின்மே ற்பூசுபூசு கனமான ரவிதனிலே போடுபோடு, தோர்ப்பதுதான் பத் துநாள் போட்டாயானால் சுகமானதுரிசியது நீறுமாமே 516

ஆமேதான் சாறுவாரத் தழைகளெல்லாம் அதட்டிமெள்ளக் குருபோட்டுப் பிழியத்தண்ணீர், போமேதான் பாலெல்லாமுறித்து நீராய்ப் பிடில்லை சுத்தசலம்போலே நிற்கும், வேமேதான்சரக்குகளி ற்சுருக்குப்போட விடுபட்ட மெழுகாகும் வேதையாகும், ஓமேதான வலோகந் தீர்ந்தாயானா லொருகோடிக் கோடுமிது வுயர்த்திதானே.

உயர்த்தியென்ற விராலியிலைக்குள்ளேகேளு வுரலிலிட்டுக் குடி த்தபின்பு துரிசிச்சுன்னம், புயர்த்தியென்ற விராகனிடை யதிலே போட்டுப் பிசைந்துவைத்துக் கிட்டிகட்டிப் பிழியத்தண்ணீர், குயர் த்தியென்றசூதமது அயச்சட்டியிட்டுக் கொடுஞ்சுறுக்காய்ப்போட்டு வரவொரு சாமந்தான், கயர்த்தியென்ற யிட்டிலிபோலாகும்பாரு நாமறியோ மிதுபோலப் போகந்தானே. 518

போக்கான சூதத்தில் தங்கமிட்டுப் போரானகெந்தமோ சரியா ய்க்கூட்டித், தாக்கானதாளகமுஞ் சிலையும்வீரம் தயங்காத மல்லிகை யின் சாற்றாலாட்டி,நோக்கான குப்பியிலே பொடிபண்ணிப்போட்டு துகந்துநின்ற வாலுகையில் செந்தூரித்து, வாக்கான ஆயிரத்துக் கொன்றேவிய மாற்றென்ன பணிரண்டு காணுங்காணே. 519

காணந்த வுபரசங்கள் நூற்றிரண்டு பத்துங் கனமானபாஷாண மறுபத்துநாலுந் தோணந்தலவணமுத லிருபத்துஞ்சுஞ்சொல்முறை யாம் நவலோகம் நவரத்னங்கள், ஆணந்தவிதுவெல்லாஞ் சத்தாய் வாங்கி அம்மம்மாசூதத்தி லொவ்வொன்றாயீய்ந்து, பூணந்தக்குடோ ரிவிட்டுக் கக்கப்பண்ணி புகழானசாரணையில் சாய்த்திடாயே. 520

சாய்த்திடவே யொருதந்தான் பாசத்தையீய்ந்து சாதகமாஞ் சகடென்ற குளிகையாச்சு, வாய்த்திடவே ரண்டுதரந்தீர்ந்தாயானால்

மாசற்ற போகியென்ற குளிகையாச்சு, மாய்த்திடவே மூன்றுதரந் தீர்ந்தாயானால் மகத்தான யோகியென்ற குளிகையாச்சு, ஆய்ந்திடவேயைந்துதரந் தீர்ந்தாயானு லதிசெயமாங் குளிகையென்று வறிந்திடாயே. 521

அறிந்திடவே யொருதரந் தீர்ந்தாயானு லப்பனே மோகினியென்ற குளிகையாச்சு, செறிந்திடவேயிரு நாலுதீர்ந்தாயானல் செகமறிய வஸ்டமாசித்தியாச்சு, பிறிந்திடவே பதினென்றே தரமுந்தீர்ந்தால் பேரானகாமதேவர் குளிகையாச்சி, கறிந்திடவே பதின்மூன்று தரந் தீர்ந்தாயானல் கமலினியாங் குளிகையென்ற நாமமாச்சே. 522

ஆச்சப்பா பதினைந்து தரமுந்தீர்ந்தா லப்பனேசந்தான குளிகையாச்சு, போச்சப்பா பதினேழுதரமுந் தீர்ந்தால்போரான சுரூபமென்ற குளிகையாச்சு,வாச்சப்பா குளிகைதனை வாயில்வைத்து வடகடலுந் தென்கடலு மருவலாகுந், தோச்சப்பா யண்டத்தில் மரிற்புக்கிச் சுரூபமெனச் சிலம்பொலியில் மேவலாமே. 523

மேவவே துரிசியென்ற குருவைத்தொட்டு விளம்புகிறேன் தாசானபூவைவாங்கிப் பாவவேதுரிசியிட்டுப் பிழிந்துக்கொண்டு பருவான அயச்சட்டிக்குள்ளேவார்த்து, தாவவேகெடுங்கம் பிலிங்கமொன்றுதனைப்பொடித்துஅயச்சட்டிக்குள்ளேவைத்து, காவவேவெடியுப்புக்காசெடையைவைத்துக் கனமானவடுப்பேற்றித் தீயைமூட்டே.

மூட்டவேவெந்துநன்ருய் மெழுகுமாகுமுனியவேவழித்தெடுத்துப்பிங்கானில்வைத்து, நாட்டவேநவலோகம் நூற்றுக்கொன்றுநலமான மாற்றென்னபத்தரையேகாணும், ஆட்டவே தினங்குன்றியுள்ளேகொள்ள அருணனைப்போல் தேகமுமாங் கண்டுகொள்ளு, பூட்டவேநரையெல்லா மாறிப்போகும் பொற்சடையோன் தேகமுமாங் கண்டுபாரே. 525

கண்டுபார்விராகனிடை துரிசுன்னங் கனமானசதுரக்கள்ளிபாலிற்போட்டு, விண்டுபார் சாமந்தான்மூடிவைக்க விடுபட்ட சுத்தசலம் போலேயாகும், கொண்டுபார்வெள்ளையென்ற பாஷாணந்தான் கொடிதான அயச்சட்டிக்குள்ளே வைத்து, மண்டுபார் நாற்சாமஞ் சுருக்குப்போட மகத்தானவெள்ளையது மெழுகுமாமே. 526

மெழுலெடுத்து வங்கத்திலிடைதானிய மெதுவானவங்கமது நொறுங்கும்பாரு, அழுகெடுத்துவங்கத்தை வெள்ளியிலேதாக்க அப்பனேரசிதமது பொடியேயாகும், தழுகெடுத்துச் சூதத்தைச்சமனுய்ச்சேர்த்து தாக்கியரைபாறென்ற தண்ணீர்விட்டு, அழுகெடுத்து நாற்சாமமரைத்தபின்பு நலமாகவழித்தெடுத்து அய்யவகலில்வையே.

வைத்துமே அயவகலால்சீலைமண்செய்து வாகாகப்பத்தெருவிற் புடத்தைப்போடு, தைத்துமே வெந்ததுங்குருவாய் நிற்குஞ் சம்சபங் களெண்ணுமல் வங்கநூற்றில், நைந்துமேயரிசெடைதான் குருமுடித்தாயானுல் நலமானமாற்றென்ன பதினைந்தாகும் வெய்த்துமேசெப்பு அயந்தன்னிலிய விடுபட்டவெள்ளிய மாகும்பாரே. 527

பாரப்பா ரசிதமென்ற பாஷாணம்வைக்கப் பண்பாகச் சொல்லுகிறேன் மாணுக்கானே, நேரப்பாசங்கினுட சுன்னந்தானும் நிறுத்தல்லோ பலம்பத்து கல்வத்திலிட்டு, சேரப்பாசீனமென்ற பொடிதான்பத்து சிறப்பான கல்லுப்பு பொடிதான்பத்து, வேரப்பாவெள்ளையென்ற பாஷாணம்பத்துமேவியதோர் சாரமதுபலமும் ரண்டே.

ரெண்டோடே சூதமதுபலமும்பத்து நேர்ப்பான திராவகத்திலெட்டுநாளாட்டி, தண்டோடே ரவிதனிலே யுலரப்போட்டுச் சாங்கமாய்ப் பொடிபண்ணி மேருக்கேற்றி, வெண்டோடேவாலுகையின் பாலேவைத்து விரவியே கமலம்போல் தீயைப்போடு, பண்டுடாடே பனிரண்டு சாமமானுல் பக்குவமாய்ப் பலகைபோற் பதங்கமாமே.

ஆமிந்தப்பாஷாணம் பலந்தான்வாங்கி அயச்சட்டிக்குள் வைத்து அப்பால்கேளு, சாமிந்தச்சதிரக்கள்ளிப்பால்தான்சேரை சமர்த்துடனேயெலியாலம்பலந்தான்சேரை, வேமிந்தரண்டுமொன்ருய்க்கலக்கிவைத்து விரவியதோர்கருநாபிபலம் பொடித்துப்போட்டு, ஊமிந்த மூன்றுநாள்கலக்கிவைத்து வற்பனமாந்தண்ணீராகுஞ் சுருக்குபோடே

சுருக்கிடவேரசிதமென்ற பாஷாணந்தான் துடியானமெழுகாகுஞ் சுரண்டிவாங்கி, நருக்கிட்டவெள்ளியைத் தீர்ந்தாயானுல் நலமானநீர்வற்றிரசிதமாகும் முழுக்கிட்டமெழுகாலே சூதக்கட்டுமுயர்ச்சியாந்துரிசியது குருவுமாகும், குருக்கிட்டவாதமொன்று பார்ப்போமென்றுங் குலாமானமாதியல்ல குருடனுமே. 531

குருடனென்ருல் பத்தியுண்டு பயபக்தியுண்டு குரங்கானவாதியென்ருலிலை தழையைத்தேடி, குருடனைப்போலொன்ருேடே யொன்றைச்சேர்ந்து முயற்சியாயுரைத்தங்கே புடத்தைப்போடு, திருடனைப்போல்விழித்தங்கே யெடுத்துப்பார்த்துச் சீயென்று யெறிந்துவிட்டுப் பின்னுன்றைப்பார்ப்பான், கெருடனைப்போல்ஞானமுற்றவாதியென்ருல் கேள்வியாய்ச்சுடுகாமல் குருதேடுவானே. 532

குருத்தேடியவர்கள்சொன்ன மொழியைக்கேட்டுக் குறையாதே சாஸ்திரத்தை தேடிச்சேர்த்து, கருத்தேறிக் கைம்முறைகள் கண்டு தேறிக் கலங்காதேயோகத்தை நின்றதேறி, உருத்தேடியுட்கருவிற்

கருவையறிந்து உடலறிந்தவுயிர்நிற்கும் தானந்தேடி, அருள்தேடி யாத்தாளையறிந்துதேடி யவள்சொல்லக் கேட்டுணர்ந்து வாதம்பாரே

பாரப்பா துரிசுயென்றசுன்னந்தானும் பதருமல்விராகனேடை யெடுத்துக்கொண்டு, நேரப்பாயெருக்கனுட பால்ரண்டுசேரில் கினி வாகவதிலிட்டுச் சாமம்வைக்க, சேரப்பாகசடற்றிச் சலமாய்நிற்குஞ் சிறப்பானகெவுரியென்ற பாஷாணந்தான், வாரப்பா அயச்சட்டிக் குள்ளேவைத்து மறவாமல்நாற்சாமஞ் சுருக்குப்போடே. 534

போட்டுடனேமெழுகாகு மெடுத்துமக்காள் பேரானகாரியம் பலந்தானென்றில், நீட்டுடனேசரியிடையாய் மெழுகிலீயநேர்ப்பாக வாங்கியது தூளாய்ப்போகும், மாடடுடனேஈயத்தில் தங்கமீய்ந்தால் மலிந்துதங்கம்நொருங்கியே தூளாய்ப்போகும், ஆட்டுடனேயிதற்கு நேர்சூதங்காட்டி யரைத்துமுந்நீர் தன்னாலே பில்லைகட்டே. 535

கட்டியே அயச்செம்புக்குள்ளேவைத்துக் கனமானபத்தெரு விற் புடத்தைப்போடு, உட்டியேகுருவாகும் நூற்றுக்கொன்றீயஓடி யேபத்தரைதா னுயர்த்திமெத்த, துட்டியேயம்மெழுகுசூதங்கட்டுந் துலையாதசரக்கெல்லாங் கொல்லும்கொல்லும், எட்டியேவெகுதூர மோடுமோடு மெடுக்கெடுக்கத் துலையாத ஆற்றுமாமே. 536

ஊற்றான தாளகந்தான் பலத்தைவாங்கி யுறுதியாஞ்சுன்னத்தில் சுத்திபண்ணி, மாற்றானவயச்சட்டிக்குள்ளேவைத்து மருவவேயிலைக் கள்ளிப்பாலுக்குள்ளே, நீற்றானதுரிசியென்ற சுன்னம்போடு நீறாக முறித்தபின்பு யெடுத்துக்கொண்டு, காற்றானதாளகத்திற் சுருக்குப் போடக் கனமானமெழுகாகு மெடுத்துக்கொள்ளே. 537

கொள்ளவேசுத்தித்த செம்புவொன்றுருகிந்துநின்று வுருகையி லேமெழுகொன்றீய, மெள்ளவேவெங்கலம்போல் தகர்ந்துநிற்குமேதி த்துவுருகையிலே தங்கமீயத், தள்ளவேசுழன்றுவொன்று யாடும் போதுதங்கத்தின் சரியிடைக்குநாகமீய, அள்ளவேகூட்டி யெல்லாம் பொடியாய்ப்பண்ணி யதிகமாய்ச்சூரணத்தைச் சரியாய்க்கூட்டே.

கூட்டவேசூதந்தான் கெந்தகத்தில்கொட்டி குறிப்பாகமுன்பா லின் தண்ணீராலாட்டி, நாட்டவேபில்லைபண்ணி அயச்சிமிளில்வை த்து நயமாகமேல்மூடி மண்சீலைசெய்து, வாட்டவே பத்தெருவிற் புடத்தைப்போடு மகத்தானசெந்தூரம் ரவிதானப்பா, ஆட்டவே மதிதன்னில்நூற்றுக்கொன்றீய வருணனைப்போற் சிவப்பானதங்க மாமே. 539

தங்கமாம்குருபட்டால் சூதங்கட்டுஞ் சாவென்றபேர்போச்சுத் தேகத்துக்குப், பங்கமாஞ்சரக்குகளிற் போட்டுப்போடப் பதைத்த

ங்கே கட்டிப்போந்நூரவோடுங், கெங்கையாஞ்சாறு வாரத்தழைக ளெல்லாங் கெடியாகப்பிசைந் தழுத்திப்பிழியத்தன்னீர், சங்கையா முட்கொள்ளக் காயசித்தியாகிச் சதகோடியுகம்வரைக்கு மழியா தெண்ணே. 540

சிவப்பு யெவாச்சாரம்

எண்ணவே சிவப்பானயெவாச்சாரத்தை யிதமாகக்கேளுங்கள் மாணுக்கானே, யண்ணவேவெடியுப்பு ரண்டுபத்துபலந்தான் பருவ முடன்சீனமது யிருபத்தைந்து, கண்ணவேரண்டையுந்தான் கல்வத் திலிட்டுகாரமாம்நாயுருவிச் சாற்றுலாட்டி, தெண்ணமேவதெல்லுப் போல்பில்லைகட்டித் திறமான ரவிதனிலே காயப்போடே. 541

போடவேதினமூன்று காயகாயப் பொருக்கான பின்பெடுத்துக் கலையத்திட்டு, ஆடவேசக்கரமாம்பானைமேலே யணைத்தாப்போல்வை த்திட்டு மாசிமண்பூசி, நீடவேயடுப்பில்வைத்துத் தீயைமூட்டு நினை வாகவெள்ளைநீர் வருகும்பாரு, வாடவேசிவந்தநீர்பன்வருகுமுக்கால் மகத்தானபீங்கானி லெடுத்துவையே. 542

வைக்கவேயாக்காலே குப்பிபண்ணி வருகிறதோர் திராவகத்தை யதிலேவாரு, நைக்கவேவெள்ளைதன்னை வீசிப்போடு நவாச்சாரமொ ருசேரைக் கல்வத்திட்டு, ஐயிக்கமேதிராவகத்தாலாட்டு ஆட்டுஅறு சாகமாட்டியபின் வழித்தெடுத்து, பைக்கவேபரும்பீங்கான் றன்னில் வைத்தும் பருவமாய்த திராவகத்தை வாங்கிக்குத்தே. 543

குத்தியேரவியில்வைத்து மூன்றுநாள்தான் குறிப்பாகத்தணல் மேலே பீங்கான்வைத்துப், பத்தியேபொடிபொடிபோல் வறுத்துக் கொண்டு பருவமாய்காசிமீபன்ற மேருக்கேற்றி, அத்தியேயரைமாசி மட்டும்போடு அளிகானவாலுகையின் மேலேவைத்து, எத்தியே தீப் போடுகமலம்போல யிதமாகப்பனிரண்டு சாமந்தானே. 544

தானென்றநாற்சாமம் மெரித்துப்போடு சாதகமாயிராக்கால மாறப்போடு, கானென்றமூன்றுநாளானபின்பு கடுங்குப்பியெடுத் துடைத்தால் தேங்காய்போலத், தேனென்றசிறுதிடத்திற் சிவந்து காணுந் திரும்பவதைக்கல்வத்திற் பொடியாய்ப்பண்ணி, வானென்ற திராவகத்தைவிட்டுஆட்டு பரும்பீங்கான் றனிலிட்டுத் திராவகத் தைக் குத்தே. 545

குத்தியேநாள் மூன்றுரவியிற்போடு குவிந்தபின்புதணலுக்குள் வறுத்துப்போடு, எத்தியேபொடியாக்கி மேருக்கேற்றி யிதமானவா லுகையிற்றீயைமூட்டு, பத்தியேகமலம்போ லெரிப்பாயப்பா பனிர

ண்டுசாமமுந்தான் கடந்தபின்பு, தத்தியேகுப்பியைத்தானுடைத்து ப்போடு தணலில்நிற்குந்தங்கமதை யெடுத்துக்கொள்ளே. 546

கொள்ளவேமுன்போலே திராவகத்தாலாட்டு குவிந்தபின்புநீர் க்குத்திரவியிற்போடு, அள்ளவேதணலுக்குள் வறுத்துப்போடு அதி கமாங்காசியென்ற மேருக்கேற்றி, தள்ளவேவாலுகையிற்றீயை மூட் டித்தனேயெடுத்து முன்போலப்பாவனேயேசெய்து, துள்ளவே யேழு தரந்தீர்ந்தாயானல் சூரியன்போல்வந்திருக்குஞ் சாரந்தானே. 547

சாரந்தான்பலம்பத்து நிறுத்துக்கொண்டு சமர்த்தாகச்சூதமது பலமும்பத்து, வாரந்தான் தங்கமது ரண்டரையேபலந்தான் மருவிந ன்றாய்லேசாக் கல்வத்திட்டுத், தீரந்தானெனுமிச்சம் பழச்சார்விட்டு திரளவகைமூன்றுநாள் பொடியாய்ப்பண்ணி, காரந்தான் காசியென் றமேருக்கேற்றி கனமானவாலுகையில் வைத்திடாயே. 548

வைத்துமேபனிரண்டுசாமந்தீயை மறவாமல்போட்டுவரத் தீபம் போல, மைத்துமே மாதளம்பூப்போலேயாகும் மைந்தனேவேறுன் றுகுப்பிக்கேற்றி, வைத்துமண்சிலேயினுற் காற்றேறுடாமல் நலமாகக்க ட்டிவைத்து ஆயிரத்துக்கொன்று, தைத்துமேகாசிடைதான் கொடு ப்பாயானல் தங்கமதுபதினுறு மாற்றுமாமே. 549

தங்கமேயாச்சுதென்று கெர்விக்காதே தளராமல்காயத்தைசித் திபண்ணு, பங்கமேவாராமல் தினம்பணந்தானுண்டு பளபளக்கு மு டம்பெல்லாம் பாலேயாவாம், அங்கமேமாசரீரமது பவளமபோலாம்அ ரனுண்டகற்பமிது யானுமுண்டேன், சிங்கமேயிவனென்பார் நரை யோயில்லே செகமெல்லாங்குன்றியிடைக் கொவ்வாவாரே. 550

ஒவ்வாதுஏகம்பசாரத்துக்கு உத்தமியாமனேன்மணித்தாய்பிள ப்புமெத்த, சவ்வாதுவுடன்கூடிச் சரக்கிற்பூசித் தணலிலேவாட்டை யிலேசவளேயாகும், கவ்வாதநவலோகம் படிகுமுன்னே கனகமயமா கிவிடுங்கணக்கோமெத்த, பவ்வாதுவுலகத்திற் கெட்டபேர்கள்பரியா சமென்பார்கள் பாஷாண்டிதானே. 551

பாஷாண்டிமெத்தவுண்டு லோகத்துள்ளே பாவாக அவனேடே பேசவேண்டாம், பாஷாண்டிவாதமுண்டோயென்றுகேட்டால் பண் பாகச்செய்தொழிலேவாதமொன்றுசொல்லு, பாஷாண்டி வைதாலு ஞ்சகித்துக்கொண்டு பயபத்திமார்க்கமாய் விசேஷஞ்சொல்லிப், பா ஷாண்டிமுகத்துமுன்னேநிற்குமூதேவி பாங்கான தேசம்விட்டு மறு தேசம்புக்கே. 552

புக்கவேஞானமுற்ற வாதியுடன்பேசு சிறப்பான மனிதருடன் பேசவேண்டாம், மக்கியேமனதடக்கிப் போதம்பாரு மகத்தான பெரியோர்க்குத்தொண்டுபண்ணு, எக்கியேமூலத்தைக்குப்பிக்கேற்று இயலானதளங்களெல்லாஞ்சேதித்தேறி, நக்கியேவமுதத்தை மவுனமுன்னிநாதாக்கள் ரிஷியுடையமரபில்நில்லே. 553

நில்லென்று அறுபத்துநாலுமரபுள்ளே நிலைத்துநிற்கும் வாதசித்திகுளிகைசித்தி, கல்லென்றகாயசித்திகெவுனசித்தி கரையுடனே காயசித்திஞானசித்தி, வில்லென்றவெட்டெட்டுஞ்சித்தியுண்டு மேதினியுங்கொள்ளாது கரைகொள்ளாது, சில்லென்றகாடுபோற்சாத்திரங்கள்மெத்த செப்பரிது உரைகாணில்வாதந்தானே. 554

வாதந்தான்முன்பின்னைச்சொல்லிவைத்து மறைத்தாரே சரக்கென்றவைப்புதன்னை, சீதந்தானுதியுப்பை யிழுக்காய்ச்சொல்லிநிலைத்துநிற்கும் வீரத்தைமறைத்துப்போட்டார், வேதந்தான்முடிவுக்குவொப்பாய்நின்ற வீரத்தைவைத்தாலே வாதமாகும், பாதந்தானில்லாமல் நடக்கப்போமோ பரிவாகச்சிவந்திருந்த சாரந்தானே. 555

சிவந்திருந்தசாரத்தின் மகிமைசொல்லச் சித்தர்முதல்ரிஷிகளுக்குமுடியாதப்பா, உவந்திருந்தகாலாங்கி நாயனார்சொல்ல உண்மையாய்க்கேட்டிருந்துயானுங்கண்டேன், நவத்திருந்த சூதத்தைத் தூர்த்திக்கொல்ல நலமாகவெகுசுளுக்கு நல்கப்போகா, தவழ்திருந்துபிள்ளைசென்றுநடந்தாப்போல சரக்கெல்லாங் கண்ணிமைக்குள்கொல்லுந்தானே. 556

கொல்லுகிறகருவேது யென்றுயானல் குருந்தபடி சொல்லுகிறேன்குறிப்பாய்கேளு, வெல்லுகிறசூதமென்ற கெந்தியொன்று விடுபட்டதாளகமுஞ் சிலையும்லிங்கம், அல்லுகிறசிவப்பான சாரமொன்று அப்பனேபழச்சாற்றால்சாமமாட்டி, தெல்லுகிறபில்லைதட்டியுலரப்போட்டு சிறப்பானஐங்குகையில் வைத்திடாயே. 557

வைத்துமேசீலைசெய்துபுடத்தைப்போடு வயிரவற்கு வஸ்துசுத்திபூசைபண்ணி, கைத்துமேவசத்தைவாங்கிப்போடு களங்காகவேயிருக்கும்நவலோகத்தில், ஐந்துமே ஆரத்துக்கொன்றுபோடுஅப்பனே மாற்றென்னபனிரண்டாகும், கைத்துமேகாவிக்கு உப்புக்கேகா நலமானசீஷருக்குத் தொழிலில்லைசொல்லே. 558

சொல்லவேசூதத்தைகட்டுதற்கு சுளுவாகவழிசொல்வேன் கேளுமக்காள், அல்லவேயிருப்பகலிற்பழச்சார்விட்டு அதீதமென்றசாரத்தைப்பொடியாய்ப்பண்ணி, மல்லவேசூதமொரு பலத்தைவிட்டு

மறவாமல்தணலில்வைத்துப் பொடியைத்தூவு, கல்லவேகட்டியதும மண்போடுங் கரியில்வைத்து உருகிடவேரசிதாமே, 559

ஆமப்பாயிச்சாரம்பொடியாய்ப்பண்ணி அப்பனேமஞ்ச ளென்றகருவைப்போட்டு,ஓமப்பாரவியில்வைக்கத்தயிலமாகும் உற்பனமாம்பணவிடைதான் தயிலங்கொள்ள, போமப்பாசாவுபொய்யாக்கற்பகாலம்புகழான வயிரம்போலிருக்குந்தேகம், காமப்பாவித்தைக்குமெத்தநன்று கைவிட்டகுத்திரம்போ லாடும்பாரே. 560

பார்க்கவேதுரிசியொரு வைப்புச்சொல்லப் பண்பாகச் செம்பாலேபானேபண்ணி, கார்க்கலேகல்லுப்புப் பொடியாய்ப்பண்ணி காணிதுக்குப்பதினறில் வெடியுப்புச்சீனம், நிர்க்கவேநிருத்தந்தபானையிலேபோட்டு இதமானபழச்சாறுமோருமவார்த்து, ஆர்க்கவேமல்மூடிப்புதைத்துப்போடு ஆறுதிங்களானபின்பெடுத்துப்பாரே. 561

எடுத்துப்பார் பச்சையாய்க்கட்டியாக இதமான வயிரம்போல் துரிசியாகும், அடுத்துப்பாருப்பதுவுஞ்சத்தியாச்சு அப்பனேசெம்பதுவுஞ்சிலமுமாச்சு, கடுத்துப்பார்தயிரதுவும் விஷ்ணுவாச்சு கலந்து நின்றகழச்சாறு பிருமாவாச்சு, தொடுத்துப்பாரிதைக் குருவுசெய்யில்வேதைதுலையாதுவாதத்திலாதியாமே. 562

வாதத்திலாதியென்றகூதக்கட்டு வகைசொல்வேன் பச்சையென்றுமயங்கவேண்டாம், நீதத்தில்துரிசியதுபலமுமொன்றுநேர்ப்பாகப்பொடிபண்ணி வைத்துக்கொண்டு, பூதத்திலிரும்பானகரண்டி தன்னைப்புதுக்கியேதண்ணீர்விட்டுக் கழுவிப்போடு. சூதத்தை நிறுத்தல்லோ பலமும்போட்டு சுறுக்குடனேதண்ணீரை முக்கால்வாரே.

தண்ணீர்தான்கொதிக்கையிலே துரிசித்தூளேச்சாதகமாய்த்தூவிவரத்தண்ணீர்மலே, தண்ணீர்தான்சுண்டிடவே மறுதண்ணீர்விட்டுச்சாகாமல்தூவிவரத்தண்ணீர்சுண்டும், விண்ணீர்தான் மூன்றுதரம் விட்டுக்காய்ச்சு மெழுகுபோலுருண்டிருக்குஞ் சூதந்தானும்,தண்ணீரைவி டுகன்றாய்த் தோய்த்துத்தோய்த்துச் சிறப்பாகக்கழுவிவிடத் தீர்க்கமாமே. 564

தீர்க்கவேயுருட்டியதைவைத்துக்கொண்டு செப்பரிய மத்தங்காய்க்குள்ளேவைத்து, மூர்க்கமாய்ப்புடந்தன்னைப்போத்துப்போடு முயற்சியாய்ப்பின்பெடுத்துக்கழுவிப்போடு, ஆர்ககமாய் வெள்ளியதன் விராகனிடைபத்து வழகாகச்சிமிழ்போல திருவள் வைத்துப்பண்ணி தூர்க்கதேசூதவுண்டை நடுவேவைத்துத்துப்பரவாய் மேல்மூடி திருவிப்போடே 565

திருவியே மறுசற்றுல்நல்லயெண்ணை சிறப்பாகக்கல்வத்திலரை
ட்டம்வார்த்து, மருவியேவெள்ளியென்ற கிண்ணிதன்னைவட்டமிட்
டுவுஞ்சல்போல்கல்வத்திட்டு, தருவியேமேலோடுகொண்டுமூடிச்சாங்
கமாய்மராஷமண்மேலேபூசி, கருவியேகலசத்தின் கழுத்துதன்னில்
கடுகியேபணம்போலத்தமருபோடே. 566

தமரிட்டுக்கலசத்தை ஆணிமேல்வைதது த் தயங்காதே விரல்ப
நமன்கிரியைப்போட்டு, கமரிட்டுவிளக்கேற்றிநாலுசாமங்கலங்காதே
யெரியிட்டுஆறவிட்டு, அமரிட்டுவெள்ளியென்ற கிண்ணிதன்னை அ
சையாமல் திருகிவிடுஉண்டைவாங்கி, பமரிட்டுத்தண்ணியிலேகழுவி
ப்போட்டு பத்துவிசையவிப்புடமாய்காயில்போடே. 567

காயிலேபோட்டபின்பு தண்ணீரிற்கழுவிக் கசகாமல்வெள்ளியி
டசிமிளில்வைத்துப், பாயிலேமுன்போல யெண்ணையிலே போடடுப்
பக்குவமாய்நாற்சாமமெரித்துபின்பு, போயிலேயிப்படிதா னூறுபுட
ம்போடு பேரானயெண்ணையிலே பத்துவிசைபோடு, தோயிலேவெள்
ளியைத்தாநடித்துபோடு சிறப்பானவெள்ளியைததானீயம்விட்டுமே.

ஊதியேமுன்னிரையில் சிமிள்போலப்பண்ணு உத்தமனே புத
ம்பத்துயெரிப்புப்பத்து, பாதியேயிப்படிதான் செய்துகொண்டு பரி
வாசக்கரியில்வைத்து வுருக்கஆடும், கோதியேதங்கமிட்டு வுருக்கிக்
கொண்டு குறிப்பானநாகமதுகூடவிட்டு, ஆதியேசகளுகப் பொடியா
ய்ப்பண்ணி அற்றகெந்தி சூதமிடைசரியாய்க்கூட்டே. 569

கூட்டியேகல்வத்திற் பொடியாய்ப்பண்ணி கொடியான மல்லி
கையின்சாற்றுலாட்டி, நீட்டியேமூன்றுநாளரைத்தபின்பு நேராகப்
பொடிபண்ணிகுப்பிரகேற்றி, மூட்டியேவாலுகையின் மேலேவைத்
துமுயற்சியாய்த் தீயிட்டுக்கமலம்போல, ஆட்டியேபனிரண்டுசாமமா
று லருணநிறம்போலாகும் வேதைகேளே. 570

கேளப்பாநூற்றொன்றுலோகத்தோடுங்கெடியானமாற்றென்ன
யெட்டுமாகும், வேளப்பாகுளிகைக்குச்சாரணையே செய்தால் விரவி
யேகோடிலட்சங் காணலாகும், தாளப்பாஆசுண்டு தயங்கவேண்டாங்
தயங்காதமூலிகையிலாச்சுமெத்த, பாளப்பாதுரிசுவிட்டு சூதக்கட்டு
படுசுருக்கு மூலிகையிற் காட்டாதென்னே. 571

என்னவேவுபசுரங்கள் நூற்றிரண்டுபத்து இலைகளினுல்கருக்கிட்
டால்சத்துவாரா, பண்ணவேபாஷாண மறுபத்துநாலும் படுமுன்னே
நட்டாகச்சுன்னம்மாகா, மண்ணவேயுப்புவகையிருபத்தஞ்சு மல்லிகை

பூப்போல்மலர்ந்து சுன்னம்மாகா, தன்னவேகாரசாரங்களாலேசகல முந்தான் கடினவாங் குருவுமானே. 572

ஆமப்பாமூலிகையிற் சிறிதுவுண்டு அந்தவித மூலிகைதான் மனுடருக்கெய்தா, வாமப்பாமலைகளிலே யுண்டுவுண்டு மகத்தான கல்லருகில் சூதமுண்டு, தாமப்பாமனிதரங்கே சஞ்சரிக்கப்போகார் சஞ்சரிப்பார் நாதாக்கள் ரிஷிகள்சித்தர், போமப்பாமனிதருக்குச் சாரகாரம் புகழாதிவாதத்தில் துரிசியாமே. 573

ஆதியாந்துரிசியொன்றில் களங்குசொல்ல அறைகிறேன் பண்பாக வறிவுள்ளோர்க்கு, பாதியாந்துருசியிலே ஒருபலமேதூக்குபண் பாகக்செந்தியது பலமேமுக்கால், வாதியாஞ்சூடனதுபலமரைதான் போடுமாசற்ற வீரமதுபலமுங்கால்தான், பேதியாம்மிதுமூன்றுமுமி நீர்விட்டுப் பிலக்கவரை நாற்சாமம் பின்புகேளே. 574

கேளுநீமெழுகாகும் பதத்தில்வாங்கிக் கெடிபடவே துரிசியின் மேலப்பிப்போடு, வாளுநீயுலர்ந்தபின்பு அதின்மேற்போட வகைபாகச்சுண்ணும்புக் கவசம்ப்பாடு, தாளுநீயுலர்ந்தபின்பு சீலைசெய்துதனை லிமேலூதிநன்றாய்க் கவம்வாங்கி, நீளுமேநீறியதைக் குகையில்வைத்து நேராகவிட்லிருக்க மணியுமாமே. 575

மணியெடுத்து அடித்தாக்கால்ரவியுமாகு மாசற்றவெள்ளிதனில் நாலுக்கொன்று, தனியாகவுருக்கிடவே மூன்றுமாற்று தப்பாதுகை கண்ட தொழிலுமாகும், அணியாகயிச்செம்பு களங்குசெய்ய அப்பனேசெந்தூரங் குருந்தான்செய்ய, கணியாகநாலாறுங் காணுங் காணுங் கருத்திதுக்கருளென்றால் கெந்திதானே. 576

தானுகுந்துரிசியென்ற செந்தூரத்தைச் சாற்றுகிறேனிதுவேகு முன்னேபாரு, தேனுகும்வெடியுப்புச் செயநீர்தன்னில் சிறந்துநின்ற துரிசியொரு பலந்தானெட்டு, கானுகுஞ்செயநீரில் தோய்த்துத்தோய்த்துக் கடுரவியில்போட்டுவர சனந்தானேமு, பானுகும்வெடியுப்பு மூன்றுபத்துபலந்தான் பண்பானசீனமது முப்பததஞ்சே. 577

அஞ்சவேகல்வத்திற் பொடியாய்ப்பண்ணி யப்பனேகழுதையிட ரத்தம்வார்த்துத், துஞ்சவேயரைத்துநன்றாய் வில்லைபண்ணித் துடியானரவிதனிலே யுலரப்போட்டு, மிஞ்சவேகல்வத்திற்போட்டுநீயு மேலானசக்கரமாம் பானைவைத்து, கெஞ்சவேயுளுந்தரைத்துச் சீலைசெய்து கெடியானவடுப்பேற்றித் தீயைமூட்டே. 578

மூட்டவேலோடிப் புகையோடொக்க மூக்காலேசலம் விழுகும்வெள்ளைநீராய், ஆட்டவேவெள்ளையைத்தா னகலவைத்துஅதன்

பின்பு சிவந்தசலம்வருகுமக்காள், பூட்டவேபிங்கானில் வாங்கிவாங் கிப்பேரான அரகாக்லேகுப்பிபண்ணி, நீட்டவேயதில்வாரு கரையா தப்பா நேரானநீலாகமென்றால் கரைந்துபோமே. 579

போமெனவேரவியில்வைத்துத் துரிசியைநீவாங்கிப் பொடிபண் ணிக் கல்வத்தில் திராவகத்தைவார்த்து, ஆவெனவே யறுசாமமரை த்தபின்பு அப்பனேமறுபிங்கான் றன்னில்வைத்து காமெனவே நீர் குத்திரவியிற்போடு கலங்காதேமூன்று நாளானபின்பு, தாமெனவே தணலுருகுவறுத்துப்போட்டுத் தயங்காதே பொடிப்போலே மேருக் கேற்றே. 580

ஏற்றியேதீமூட்டு பனிரண்டுசாமம் இதமாகக்கடந்தபின்பு ஆற விட்டு, மாற்றியேபுடைத்தெடுத்துக் கல்வத்திலிட்டு வாகானதிராவ கத்தி லரைத்துமுன்போல், தூற்றியேசெரும்பிங்கான் றன்னில்வை த்து துடியானதிராவகத்தைக் குத்துகுத்து, ஆற்றியேதணலுக்குள் வறுத்துப்போடு அதீதமாங்காசியென்ற மேருக்குப்போடே. 581

போட்டுமேவாலுகையின் மேலேவைத்துப் பொலிவாகத்தீபம் போல் தீயைப்போடு, ஆட்டுமேபனிரண்டுசாமமாறு லப்பனே ஆற விட்டு யெடுத்துப்பாரு, காட்டுமேஐந்துதர மிப்படியேபண்ணுகசட கொண்டு செதுக்கியதோர் வாறுக்குந் துரிசியாட்டே. 582

ஆட்டானசெந்தூரம் நவலோகத்தி லணைத்திடவே பத்தரை தானுயிரத்துக்கொன்று, மூட்டானசூதகத்தைக் கரண்டியிலேவிட்டு மூந்துநின்ற செந்தூரமாரை யிலேக்கட்டு, காட்டானசாறதனைப்பிழி ந்தாயானால் கனகம்போல் திரண்டுருண்டு மணியுமாகும், வாட்டான சூடன்தீக்குள்ளேவாட்டி மருவநன்றுயுருக்கிடவே சோதியாமே. ()

சோதியாங்குளிகைதனை வாயில்வைக்கச் சுக்கிலத்தம்பனையா கும் வசியமாகும், வாதியாங்கைக்குளிது இருந்துதென்றால் வாதாடி சண்டையிட்டோர் வணக்கமாவார், சாதியாங்குலங்களென்று தர்க் கம்யேசிச் சண்டையிட்டுமயிர்பிடித்துச் சாகவேண்டாம் பேதியாங் காயத்தை சித்திபண்ணி பேரானசித்திவிட மரபில்நில்லே. 584

சித்தரென்றநாமமது யெதினலாச்சு சிவலிங்கைகட்டியதோர் தீர்மையாலே, பத்தனென்றநாமமது யெதினலாச்சு, பானமென்ற தூசிக்கா பருவத்தாலே, நித்தனென்றநாமமது யெதினலாச்சு நிலைத் தாறுதலங்கண்ட நினைவினலே, முத்தனென்றநாமமது யேதுக்காச்சு மூச்சற்றஞானவிடங்கண்ட ஞானியோர்க்கே. 585

ஞானிகா னென்றுசொல்லி வாய்ப்பேசாமல்மாண்பர் நலமான அவ்வேடம் பூண்டுகொண்டு, யோனிதனக்காசை சாத்திரங்கள் சொல்லி வுண்மையாயென்ற மந்திரங்களுபதேசித்து, பானியென்ற பணம்பரித்துப் பொய்கள்சொல்லி பார்த்துக்கொள்வேனென்று நரகத்தில்புக்கி, ரூணியென்ற நோய்வந்தா லமைத்தபடியென்று கூழன்றலேவார் ஞானியல்ல வேடத்தோரே. 585

வேடமாந்துரிசியென்ற செந்தூரம்பலந்தான் விளங்கியதோர் சுத்தித்த பூரமெகன்று, காடமந்த தங்கமென்றரேக்குத்தானுங் கடுகவே யரைப்பலந்தான் கூடவிட்டு, பாடமாம்பெற்றலேயின் சாற்றுலாட்டு பக்குவமாய்ப் பொடியாக்கிக் குப்பிக்கேற்றி, வாடமாய்வாலுகையின் மேலேவைத்து வளமாகபனிரண்டு சாமத்தீயெரியே. 586

தீயெரித்து ஆறவிட்டு எடுத்துப்பாரு சிதப்பென்றால் வெகுசிவப்பு அருணன்போலாம், ஆயெரித்துநவலோக மாயிரத்துக்கொன்று அணைத்திடவே பதினாறு மாற்றுமாகும், பாயெரித்து பணவிடைதான் தேனிலுண்ணு பளபளக்குமுடம் பெல்லாமண்டலத்தில், மனம் வெருத்து வறுமையுற்று லெனனஞானம் வழங்கியதோர் சித்தியெல்லாமண்ணுய்ப் போமே. 587

மண்ணுசை கொண்டல்லோ சிறிதுபேர்கள் மாயமாம்வாசனையிலிறந்துபோனார், பெண்ணாசை கொண்டல்லோ சிறிதுபேர்கள் பொன்தோற்றுப்பேயராய் மாண்டுபோனார், உண்ணுசை கொண்டல்லோ சுறிதுபேர்கள் உலுத்தருய்ப்பிச்சை யெடுத்துண்டிறந்தார், கண்ணுசைபசுவுக்கு யிருக்குமாப்போல் கலக்கமற்றஞானிக்குவேடமென்ன சொல்லே. 588

## இந்துப்பு வைப்பு.

வேடமாமிந்துப்பு வைப்புச்சொல்வேன் விளங்கியதோர் காலாடுப்பு வரிசையாய்க்கட்டி, பாடமாமடிகனத்த சட்டிவைத்து பருவமாய்க் கடனீரிலுப்புக்காய்ச்சி, கோடமாமரத்தினந் தினமுங்காய்ச்சிக் காய்ச்சிக் கொட்டியே வடிப்பாரமுள்ளபானை, காடமாய்நிறைத்திட்டு வடுப்பிலேற்றிக் காடாக்கினியாகவே தீயைமூட்டே. 589

மூட்டவே வெந்துருச்சிச் சலமாய்நிற்கு முனையாக முப்பத்துக்கொன்றுசீனம், நீட்டவே வெடியுப்பு முப்பத்துக்கொன்று நேராகப் பொடி பண்ணியதிலேபோடு, ஆட்டவேவெந்து வொன்ருய்க் குழம்பாய்நிற்கும் ஆறவிட்டும் பானையைத்தானுடைக்துவாங்கி, காட்டவே வெளுப்பாகக் கட்டியாகுங் கல்லுப்பில் செய்தாக்கால் சிவந்துபோமே. 590

சிவக்கின்ற இந்துப்புவாதத்துக் காய்ச்செய்கின்ற பேர்களுக்குக்கல்லுப்புச்சுளுகு, பவக்கின்ற லோகத்தோர் கல்லுப்பில் செய்வார் பரங்கியென்றால் கடல்நீரிலுப்புக்காய்ச்சி, கவக்கின்றவண்ணார் தன்னுப்பப்போலச் சதுரமாய்க் கட்டில்வைத்துச் செய்வாரையா, அவக்கின்ற கட்டியாய் வெளுப்புமெத்த ஆகையால் சுண்ணும்புக்கிதுதானென்றே. 591

கெந்தியுப்பு.

நன்றெனவே கெந்தியுப்பு வைப்புக்கேளு நலமாகக்கடல்நீரிலுப்புக்காய்ச்சி, கண்டனவே யடிகனத்த பானையிலேபோட்டுக் காய்ச்சினதோருப்புக்குப் பதினறிலொன்று, தண்டனவே சுரைகெந்திபொடித்துப்போட்டுச் சாதகமாய் முப்பத்துக்கொன்றுநீலம், பண்டெனவே வெடியுப்பு மப்படியேயாகும் பாங்காகப் பொடித்ததெல்லாங் கூடப்போடே. 592

கூடவிட்டு வடுப்பேற்று யெரிநால்சாமங் கோடிகோடாக்கினியாந் தீயைப்போடு, ஆடவிட்டுஉப்புருகிநிற்கும்போது அதிற்போடு மருந்தெல்லாம் பொடியாய்ப்பண்ணி, வாடவிட்டு நால்சாமம்மெரித்தபின்பு மயங்காதே சீதளமாயாறப்போடு, நாடவிக்கிப் பானையைத் தானுடைவாங்க நலமானவயிரம்போ லுப்புமாமே. 593

உப்பானகெந்தியது திராவகத்துக்காதி உத்தமனே சாரணைக்கு முதலியாகும், தப்பானசொல்லில்லை கருமறைப்போயில்லை சத்தியமாய் நான்பார்த்தபடிதான்சொன்னேன், சப்பானஅஞ்சு கொம்பில் மனந்தான்சென்று கலகத்தில்விழுகாதே கருத்தூன்றிப்பார், அப்பான வுப்புப்போல் நேர்மைபாரு அழும்பருடன் பேசாமலிருக்க நன்றே. 594

குடோரி.

நன்றெனவே குடோரியொன்று சொல்லக்கேளு நலமானவெடியுப்பு நாலாங்காய்ச்சல், கன்றெனவே பலம்நாலு கல்வத்திலிட்டு, காணிதுக்கு சமனுகப்பூநீறுபோட்டு, வின்றெனவே வெள்ளையென்ற பாஷாணந்தான் வெங்காரம் பலம்நாலுபொறித்துப்போட்டு,தன்றெனவே தாளகமும் நாலுபலமேபோட்டுச் சாதகமாய்ச் சூதமது பலமும் நாலே. 595

நாலோடுஅரைபலந்தான் சாரம்போடு நலமாககல்லுப்பு வறுத்துப்போடு, சாலோடு நாலுபலங்கூட்டிப்போடு தனையெல்லா மெருக்கினுடபாலினுலே, காலோடு மறுசாமமரைத்து நன்றாய்க் கனமான ரவிதனிலே பொடியாய்ப்பண்ணி, மேலோடுகாசியென்ற மேருக்கைகேற்றி விரவியேயரைவாசி மட்டும்போடே. 596

போட்டுமே வாலுகையின்மேலேவைத்துப் பொலிவாகத்தீமூட்டுகமலம்போல, வாட்டுமேபணிரண்டு சாமந்தானும் பதறுமல்போட்டுவா கமலத்தீயாய், ஆட்டுமேயாறவிட்டு யெடுத்துப்பாரு அரகராவயிரம்போல் பதங்கித்துநிற்கும், காட்டுமேசத்துகளில் கரைநீராகக் கண்விட்டு ஈயம்போலிருக்குந் தானே. 597

சூடன் வைப்பு.

தானென்ற சூடானதுவைப்புகேளு தனித்துநின்ற வாழையுடகிழங்குத்தண்ணீர், தேனென்றபடிபத்து அளந்துகொண்டு சிறப்பானசெம்பினுட பாண்டத்தில்விட்டு, வேனென்ற வெடியுப்பு நாலுப்த்து பலந்தான் வெருளாமல் பொடிபண்ணிக் கூடப்போட்டு,மானென்ற வடுப்பேற்றியெறிநேர்பாக வற்றியெல்லாம் குழம்புபோல் வருகும் பாரே. 598

வருதல்கண்டு கருவாயின் பட்டைதன்னை வகையாகத் தூள்பண்ணித் தயிலம்வாங்கித், திருதல்கண்டுபடிதானுங் கூடவிட்டு சிறப்பான புட்டானபதத்திற்காய்ச்சி, கருதல்கண்டு இறக்கியே ஆறவிட்டுக் கசகாமலுளிகொண்டு வெட்டிவாங்கி, அருகல்கண்டு பரணிதனிலடைத்துப்போடு ஆச்சரியஞ்சூடனென்ற பேருமாச்சே. 599

ஆச்சிந்த சூடனைத்தாள் பொடியாய்ப்பண்ணி அசண்டசெம்புபானைதனிற் கால்வாசிபோட்டு, பாச்சிந்தசெம்பினுட குடத்துநீரைப்பக்குவமாய் மேல்வைத்துச்சீலைசுற்றி, காய்ச்சிந்த அடுப்பேற்றிக்கமலம்போலக் கைபொருக்கத் தண்ணீரைப் பதத்தைப்பார்த்து,கீச்சிந்த ஆவிவிடுத்துப்பார்க்க கிண்ணியென்ற கற்பூரமாகும்பாரே. 600

பாரப்பாகிண்ணியென்ற கற்பூரத்தில் பக்குவமாய்க் கட்டினதோர் சரக்கையெல்லாம, வாரப்பா பரிசுற்றி வாட்டென்றதெல்லாமைந்தனே யிதினுடைய தீயில்வாட்டு, நேரப்பாபுகையடங்கி பரியுள்ளவாங்கி நேர்ப்பாகச் செந்தூரமாகும்பாரு, காரப்பாவிளக்குதான் கற்பூரவிளக்குக்கருகாமல் சிவக்குமிந்த தீபந்தானே. 601

அய முருக்கு.

தானென்ற அயமுறக்க வித்தைகேளு சாதகமயெலியாலம்பால்ரண்டுசேரில், கானென்ற கெந்தகத்தைப் பொடியாய்ப்பண்ணி கனமான நாலுபலங்கூடப்போட்டு, லவனென்ற வெண்காரம் பலமும்ரண்டு மெலிவானகுடோரி கால்பலமும்போடு, ஊனென்ற செவ்வலிக்கிழங்குதானும் உரலிலிட்டு யிடித்துச்சார்சேரவாரே. 602

வார்த்துடனே யெள்ளெண்ணை ரெண்டுசேரு வாகாகவுதுவெல்லாமயச்சட்டியுட்டு, பேர்த்துடனே யடுப்பேற்றி யெறித்துமெள்ளு

ளப்பொங்காமல் தயிலமென்ற பதத்தில்வாங்கு, சேர்த்துடனே யர ப்பொடிதான் பலமும்நாலு திறமானகாந்தத்தா லெடுத்துக்கொண் டு, ஏர்த்துடனே பீங்கானிற் பொடியைப்போட்டு இதமாகத் தயில த்தில் பிசறிவையே. 603

வைத்துமே மூன்றுநாளானபின்பு வச்சிரமாங் குகைதன்னில டைத்துமூடி, பொய்த்துமே சரவுலையில்வைத்துவூத பேரான அயங் தானு முருகியாடும், நைத்துமே பொடியாக்கித் தயிலத்திற் கிசறிநல மாக்முன்போல வுருக்கித்தீரு, தைத்துமேதா முருக்கித்தீர்ந்தால் கனமான அயந்தானுநாகந்தானே. 604

நாகமாமயந்தானுஞ் சிவந்திருக்கும் கண்பாகவிடைக்கிடைதான் தங்கத்திலீய்ந்து, பாகமாயுருகையிலே ஈாகமீயப்பதையாமல் நாகவங் கேகட்டிப்போகும, சாகமாங்கல்வத்திலிதனையிட்டு தனைப்பொடித்து நாகயிடைச் சூதங்கட்டி, ஆகமாஞ்சூதத்தில் ரெட்டிகெந்தி யரைத் துமே மல்லிகையின் சாற்றாலாடடே. 605

ஆடடுவது நாகரசமானபின்பு அப்பனே ரவியில்வைத்துபொடி யாய்ப்பண்ணி, பூடடுவது காசியென்ற மேருக்கேற்றிப் பேரானவா லுகையின்மேலேவைத்துக், காடடுவாய்ப் பனிரண்டுசாமத் தீயைக் கமலம்போ லெறியிடடுக்கலரவாங்கி, ஊட்டுவது நவலோகம் நூற்று க்கொன்று உடபுகுந்து பத்தரைதான் தப்பாவறே. 606

வாறுகேள் செந்தூரங்குன்றியுண்ணு மண்டலத்தில் நரைதிரை களெல்லாமாறுங், கூறுகேள்தேகமது கருங்கல்லாகுங் குத்திஞல் மலைகளெல்லாம் பொடியாய்ப்போகும், தேறுகேள்தேகமது வுவர்ந்த காலஞ்சென்றாலும் பதினாறுவயதுபோலாகும், வேறுகேள்வாசி யெல் லாமுள்ளே ற்கும் வெளியோடே மனங்கப்பண்ணும் பாரே. 607

காந்தசத்து.

பண்ணவே காந்தத்தின் சத்துகேளு பருக்கையாய்ப்பொடித்து அயச்சட்டியிட்டுக், குண்ணவே கொள்ளிலையின் சாறுவாங்கிக்குன் றுதே நால்சாமஞ்சிருக்குப்போடு, விண்ணவேவெள்ளாடடு வுதிரம் வார்த்து விளங்கவேயதின் தோலில்வைத்துக்கட்டி. கண்ணவே குழி வெட்டி குப்பைக்குள்வைத்து கலங்காதே யிருபதுநாள்மூடிப்போடி

போட்டபின்பு யெடுத்து அதைக்கல்வத்தாடடிபுகழானகொள் ளிலையின் சாற்றினாலே, நீட்டபின்பு கலசத்தில்சாறுவிடடு நினைவாக வதற்குள்ளே காந்தம்வைத்து, வாட்டபின்பு மேல்மூடிச் சீலைசெய்து

வலியபுடம்போட்டெடுத்துவைத்துக்கொண்டு, நாட்டபின்பு நல்லெ
ண்ணெய்படிதானென்று நலமானகுன்றிமணிபடியரைதான்போடே

போட்டதனைக்குள்சாற்றிலூறவைத்துப் புகழாகவூறியபின்கல்
வத்தாட்டி, நீட்டதனைமெழுகதுபோலரைத்துவாங்கி நினைவாக நல்
லெண்ணெய்தன்னிற்போட்டு, ஆட்டதனையெலியாலம்பால் சேரை
விட்டுஅழகான கொள்ளிலைச்சார்சேரைவிட்டு, கேட்டபின்பு கெந்த
கந்தானுலுபலம்போட்டுகெடியானவெண்காரம் ரண்டுபலம்போடே.

போட்டப்பாகுடோரியொருபலமுங்கால்தான்பொடித்தெல்லா
ங்கொள்ளிலையின்சாற்றாலாட்டி, நாட்டப்பாநல்லெண்ணெய்தன்னிற்
போட்டு நலமாகவடுப்பேற்றியெறிநேருக, கூட்டப்பாகுழம்பாகியிறக்
கிவைத்துக் கொடியதொருகாந்தத்திற் பிசறிகொண்டு, மூட்டப்பா
மூன்றுநாளானபின்பு மூச்சைக்கே யெடுத்திட்டு வுருக்கிடாயே 611

உருக்கவே வெங்துருக்கிக்காடுமாகும் உத்தமனே யுடைத்தெடு
த்துப்பொடியாய்ப்பண்ணி, தருக்கவேமுள்குழம்பிற் பிசறிவைத்துச்
சாதகமாய்முன்போலேவுருக்கித்தீரு, பருக்கவேயிப்படிதானேழுமூ
துபண்பானகாந்தமதுசத்தேயாகு, மிருக்கவேகற்பாந்த காலமென்று
லென்மகனே மெழுகுகட்டிக்கிண்ணிவாரே. 612

வார்த்திந்தகிண்ணியிலே பாணம்பண்ணி வகைவகையாய் கற்ப
மெல்லாமதிலேயுண்ணு, போர்த்திந்தகிண்ணியிலேசூதம்வார்த்துபுக
ழானகருவூமத்தஞ்சாறுவிட்டு, பேர்த்திந்தவாலுகையின்மேலேவைத்
துபிருபமாய்த்தீயெரிக்கவுண்டையாகும், பார்த்திதனை வழித்தெடுத்
து கழஞ்சிநிறையாக பக்குவமாயுண்டைபண்ணித் தமரும்போடே

தமரிட்டுவுண்டைபண்ணி யதிலேபோட்டு சாதகமாய்மூன்றுதி
னங்கழிந்தபின்பு, அமரிட்டசெம்பட்டில் கோர்த்துக்கொண்டு ஆதி
யாபராபரியைப்பூசைபண்ணி, கமரிட்டவஸ்துசுத்தியர்ச்சனையே செ
ய்து காரணமாஞ்சாம்பவி விமோசனமேபண்ணி, குமரிட்டுஆதார நி
ராதாரம்பார்த்து கொள்கியதோர் சபைதன்னில் மனதையுன்னே.

உன்னியபிரசத்தங்களாப்பக்கம் உவந்திருந்து நிஷ்டையிலே
செபமேசெய்து, கன்னியேயஞ்செழுத்து மூன்றெழுத்துமோதிகார
ணமாங்குருசொல்லவுறுதிகேட்டு, பன்னியேமதியில்நின்று அமுதத்
தையுண்ண பரிதிகண்டபனிபோல பாவம்நீங்கி, மன்னியேசிலம்பொ
லிநாதங்கேட்டு மகிழ்ச்சியாய்க் பற்பத்தையுண்டுதேறே. 615

தேறவேகாந்தசத்துபலத்தைவாங்கிச் சிவப்பாகத் தங்கத்தையி டைக்கிடையேகூட்டி, மாரவேரண்டுமொன்று யுரும்போது மைந்த னேநாவமொருபலத்தைப்போடு, ஆறவேகல்வத்தி லிதனைக்கொட்டி அதட்டியேபொடிபண்ணிச்சூதஞ்சேர்த்து, காரவேரண்டுபலங் கெந் தியிட்டுக் காரியமாய்ப்பொற்றலையின் சாற்றாலாட்டே. 616

ஆட்டியேஅறுசாமம் ரவியில்வைத்து அப்பனேபொடிபண்ணி குப்பிக்கேற்றி, நீட்டியேவாலுகையின் மேலேவைத்து ஜெனவாகத்தீ போட்டுபனிரண்டுசாமம், பூட்டியேசெந்தூரப் பதத்தைப்பாரு புக மூாகச்சிலாகைதுனிக்கருப்புக்காணும், வாட்டியோயாறவிட்டு இறக்கி க்கொட்டி மைந்தனே தங்கமென்றசிமிளில்வையே. 617

வைக்கவேநவலோகம்நூற்றுக்கொன்று மாட்டிடவேபனிரண்டு மாற்றுமாகும், மெய்க்கவேபணவிடைதான் தேனிலுண்ண மேனியெ ல்லாந் தங்கமயமாகும்பாரு, நைக்கவே நரைதிரைகளெல்லாமாறுநம னென்றசொல்லுமில்லைகற்பகோடி, சைக்கவேபுளியுப்பிரண்டும்விட்டு க்கள்ளியின்மேலாசைவிட்டு உண்ணு உண்ணே. 618

உண்ணவேகற்பத்துச்குறுதிகேளு உப்பாகா புளியாகா பெண் ணுமாகா, கண்ணவேதுவர்ப்பாகாமோருமாகா கசிந்தயெள்ளுநல்லெ ண்ணெய் சுண்ணும்பாகா, விண்ணவேநித்திரையின் சோம்பலாகா வேறுனமாங்கிஷங்கள் மச்சமாகா, பண்ணவேகடுகுள்ளி காயமாகா பலபலவாஞ்சிந்தையெல்ல மறுத்துத்தள்ளே. 619

தள்ளியேயுண்ணுகிற பத்தியத்தைக்கேளு சார்பான நெய்யாகு ம்பாலுமாகும், அள்ளியேசிறுபயறு முருங்கையாகு மப்பனே வெள் ளாட்டுக்கரியுமாகும், துள்ளியேதூதுவளை யிலைகாயாகுஞ்சுண்டெலி யாங் கவுதாரிகாடையாகும், பள்ளியேபழமாகும் பழுவெல்லாந்தே ருகும்பானமாமே. 620

ஆமப்பாசிறுகீரை யரைக்கீரையாகும் அதிதமாம்புளியாரைநல் லாரையாகும், போமப்பாபொன்னிநல்லாங்காணியாகும் புளிப்பான நெல்லிக்காய் ஊற்காயாகும், தேமப்பாவழுதலங்காய்ப் பீர்க்கங்காயா குஞ் சிறப்பானமுசலாகுமூர்க்குருவியாகும், வாமப்பாமரையாகுமா னுமாகும் வகையாக இப்படிதான் பத்தியமாயுண்ணே. 621

உண்ணுறது ஒருசேரை யரிசியப்பா உத்தமனே ஒருபொழுது வெந்நீர்கொள்ளு, பண்ணுறதோர் மருந்துகளில்காந்தி கொண்டால் பசுவின்பால் ராக்காலமொருசேர்கொள்ளு, விண்ணுறதுவுள்ளமுட

மெல்லாம்பாரு வேதாந்தவாலேயைத்தான் சித்தம்பூசி, அண்ணுறது குருபதத்தை யடுத்து சித்தம் அடுக்கடுக்காயுண்ணுகிற கற்பங்கேளே.

உண்ணவே வயதங்கேபிருபதாகி யுத்தமனே யிருபதுநாள்கடுக்காய் கொள்ளு, கண்ணவேவயதங்கே முப்பதாகில் கடிதாகமுப்பது நாள்கொள்ளுகொள்ளு, பண்ணவேவயதங்கே நாற்பதாகில் பரிவாக்கடுக்காயை நாற்பதுநாள்கொள்ளு, ரண்ணவேவயதங்கே யன்பதாகில் நலமாகப்பதினைந்து நாள்தான்கொள்ளே. 623

கொள்ளவேவயதங்கே யறுபதாகில் குறையாதேகடுக்காயைப் பத்துநாள்கொள்ளு, அள்ளவேயறுபதின்மேல் வயதேயானால் ஆச்சரியங்காயசித்தி யாகாவாமா, விள்ளவேகடுக்காயைப் பொடியாய்ப் பண்ணி மெல்லிதாய்ச்சீலேயிலே யறிந்துக்கொண்டு, துள்ளவேயமுரிதனை முரித்துக்கொண்டு சகமாகவெருகடித்தூள்குழப்பிக்கொள்ளே

கொள்ளுதற்கு அமுரிதனை முறிக்கக்கேளு கொடூரமாங் காந்தமென்றபாத்திரத்தில், விள்ளுதற்குமுன்னீரா மமுரிதள்ளி விளங்கவேகொள்ளுமட்டும் பின்னீர்வாங்கித், துள்ளுதற்கு தேத்தினுடவித்துதன்னை துடியாகவிதிற்கலக்கி வைத்துப்பின்னுர், அள்ளுதற்குத்தெளிவிருத்து தூளேப்போட்டு, அங்கனவே வாசியோடிழுத்து வாங்கே. 625

வாங்கியேதினந்தோறும் விடியற்காலமாலேயிலே கியாழமொன்றுவைக்கக்கேளு, பாங்கியே மிளகதுதானிருபத்தஞ்சுபரிவான அறுகம்வேர் பிடி தானென்று, தேங்கியேயிடித்துநன்றாய்ச் சட்டியிலே போட்டுத் திறமாகபடியொன்று தண்ணீர்விட்டு, ஆங்கியே ஆழாக்காய் காச்சிக்கொண்டு ஆவெண்ணெய்பாக்களவு போட்டருந்தே. ()

அருந்தியேகாலமே கடுக்காய்கொள்ளு அப்பனே மாலேயிலே கியாழங்கொள்ளு, பொருந்தியே வுடலுக்குத்தாகமில்லே புளியுப்பு யெண்ணெயெல்லாந் தள்ளுதள்ளு, அருந்தியேமண்டலந்தான்கொள்ளும்போது அப்பனேயொருமுறைதான் சட்டைநீங்கும், பொருந்தியேயிக்கற்பங்கொண்டாயானால் புண்ணியனேதிரேகமது யிறுகும்பாரே. 627

மாதம்பனிரண்டுக்கும்கற்ப அனுபானங்கள்.

இறுகுமேசெங்கடுக்காய் மெத்தநன்று இதமாகக் கிடைக்காட் பொற்கடுக்காய்நன்று, அறுகுமே ஆணியாவணிக்குமப்பா அழகான வெல்லத்தினேடே கொள்ளு, தருகுமேசித்திரை வைகாசிக்கப்பா சாதகமாய் சுக்கினுட கியாழத்திற்கொள்ளு, மறுகுமேபுரட்டாசியாடிக்கப்பாமாசற்ற குறிஞ்சுத்தேன் தன்னிற்கொள்ளே. 628

கொள்ளவேயைப்பிசிக்குங் காத்திகைக்குமப்பா குமறியாஞ்சார் தனிலே வைத்துக்கொள்ள, விள்ளவேகாயசித்தி யோகசித்தி வேதா ந்தமனேன்மணியாஞ் ஞானசித்தி, தள்ளவேயஷ்டமாம் யோகசித்தி தாரணியில்மானிடர்கள் கௌசித்தி, மெள்ளவே சதாகாலமிந்தமார் க்க மேதினியிற்கசடறவே வைத்துப்போற்றே 629

வைத்துமேமார்கழி தை மாசிக்கப்பா வாகானகற்கண்டிடனேடே யுண்ணு, பைத்தும்மபங்குனிக்கு நெய்யிற்கொள்ளுபனிரண்டுமாதத் திப்பருவஞ் சொன்னேன், நைத்துமேயிப்படிதான்பருவமாக நானு ண்டபடிசொன்னே னீயுமுண்ணு, பொய்த்துமேபோகாமல் பூசை பண்ணுபோக்கோடே வாசியைத்தானிழுத்துவாங்கே. 630

சதுரகள்ளி கற்பம்.

வாங்கியே சதுரக்கள்ளிகாயேபதது மைந்தனேகுமரிச்சோற்கா சுரண்டு, தேங்கியேஅமுரியுடன் கலந்துகொள்ளச் சிதைந்துநின்ற ஆமமெல்லாந் தள்ளிப்போடு, பாங்கியேகைம்முறையாய்ச் செய்தா யானல்பலிக்குமே வயித்தியவாதயோகம், ஏங்கியேசடத்திலுள்ள விஷநீர்வற்றும் எலும்பில்நின்ற சுண்ணும்பு வேகம்போமே. 631

மிளகு கற்பம்

வேகம்போமிருபதுநாள் காலமேகொள்ளு மெலிவானமாலையி லே கியாழங்கொள்ளு, தாகம்போந்தாளிசப்பத்திரியுஞ் சுக்குந்தனி த்ததொரு சீரகமுமாஞ்சியேலம், ஆகம்போய் வராகனிடை யொவ் வொன்றுக்கு அதட்டியேசட்டியி லே பொடித்துக்காய்ச்சி, நாகம்போ மாழாக்குமாலையிலேகொள்ளு நமக்குநமனுவாய் நன்றாய்ப்பாரே. ()

பாரப்பாயிதுகடந்த பின்புநீதான் பரிவாக அவ்வஞ்சாய் மிளகை யேற்றி, சேரப்பா அமுரியிலே காலமேகொள்ளு சிறப்பானநாற்பது நாள்கொள்ளுகொள்ளு, காரப்பாயிருபதுநாளேற்றியுண்ணுகைம்மு றையாய் நூறுமட்டுமானபின்பு, தூரப்பா அவ்வஞ்சாகுறைத்து எண்ணு சொல்முறையாய் மாலையிலே பொடிநீயுண்ணே. 633

பொடியாவதேதென்றால் சொல்லக்கேளு பேரானபொற்கொன் றைப் பூவினோடு, கொடியானமல்லிகையின்பூவினோடு கொக்கிறகுமந் தாரைவெள்ளைப்பூவும் அடியாகநிழலுலர்த்தாயுலத்திக்கொண்டுஅப் பனேபொடித்து நன்றாய்ச் சூரணமேசெய்து, கொடியானதேனத னில்குழப்பியுண்ணு நேர்பாகமாலையிலே மண்டலந்தானுண்ணே. ()

மூப்பொடி தூதுவளை அமுர்தம்

மண்டலந்தானுண்டபின்பு சொல்லக்கேளு வாகானதூதுவளை யிலையிலேயோடு, விண்டலாந்தான் தக்கோலஞ் சாதிக்காயுமேலானவாலு ழுவைவித்திரனோடு, குண்டலந்தான் கொடிவேலி பொற்கொன்றைப் பூவு கூரானநிலப்பனையின் கிழங்குருட்டி, முண்டலந்தான் பொடி செய்து வைத்துக்கொண்டு மூசகழஞ்சுமுட்டன்றிநெய்யிற்கொள்ளே

கொள்ளவேவதத்தையக் கறிப்போடு கொடிதானபித்தமெல்லா முறிந்துபோகும் கள்ளவேசிரசில் நிற்குங்கற்பத்தைச் சாடுஞ்சங்கிலை போற்கோழையறுந்தமர் திறக்கும் விள்ளவேமதிதன்னி லமுதஞ்சோ க்குமெய் நிறைந்தாடி யெல்லாமிறுகிக்கொள்ளும், துள்ளவேயிந்திரி யச்சேறுபொங்குந் துடியாதே காமநோய் கொல்லுந்தானே. 636

கொல்லுகிற காமத்தை மதியிலேற்று குறிபார்த்துத்தலங்களெ ல்லாங்கூர்ந்துபாரு, வொல்லுகிற மனக்குரங்கு அஞ்சுகொம்பிற்று ண்ட விடுகாதே போகமென்ற வாளால்வீசு, மல்லுகின்ற யோகத் தைச் சதாசித்தம்பகரு மதியினிற்கும் மூதத்தைச்சிந்தியுண்ணு,அல் லுகிற ஆத்தாளைநித்தம்பூசி யரிவில்நின்ற குருபதத்தை யடுத்துக் கேளே. 637

கரிசாலை.

கேளப்பாகரிசாலைக் குடிபைமேனி கெடியானகரந்தையொடுவல் லாரைநீலி, வாளப்பாபொற்றலையின் சமூலமோடுவகையாக நிழலுல ர்த்தா யுலர்த்திக்கொண்டு, தாளப்பாயிடித்து நன்றாய்ச்சூரணமேசெ ய்து சாதகமாய்வெரு கடிதானதேனிலுண்ணு,கேளப்பாகட்டியதோ ர்மேகம்போலக் கெணத்திலே காயசித்தி யிருவேளை யுண்ணே. 638

உண்ணப்பா மண்டலந்தான் நோம்மூன்றுபோம் உத்தமனே உதரத்தில கிருமிபோகும், கண்ணப்பாபவளம்போல் சிவந்திருக்கும் காயமெல்லாஞ் சம்பளத்தின் வாசம்வீசும், விண்ணப்பா அந்தரத்து மீன்களெல்லாம் வெகுளாமல்பகல் காணத்தோற்றுவிற்கும் வண்ண ப்பா பாதாளநிதிகள் தோற்றும் வாய்திறந்த தனமாறும் வெளியாய் ப்போமே. 639

வேம்பு.

போமப்பா யிதுகடந்தபின்புநீதான் புகழ்பெற வநூறுண்டின் வேம்பைப்பார்த்து, ஆமப்பாபட்டையைத்தான்வெட்டிவந்து அப்ப னே நிழலுலர்த்தா யுலர்த்திபின்பு, காமப்பாயிடித்து நன்றாய்ச்சூர ணமேசெய்து கரிசாலைமல்லிகையின் சாறுவார்த்தை,தேமப்பாயேழு தரம் பாவனையேசெய்து சிறப்பான வெருகடித்தூள் கொண்டிடாயே.

கொண்டிடவே யனுபான வகையைக்கேளு குறிஞ்சித்தேன் தனிற்குழைத்து நாற்பதுநாள்கொள்ளு, விண்டிடவே யந்திசந்தி நினைவாய்க்கொள்ளு மெய்யெல்லாங்கருங்காலின் வயிரமாகும், சுண்டிடவே நரைதிரைகளெல்லாம்போகும் சுக்கிலந்தான் மேலிறுகிக் கீழோடாதுகண்டிடவே யாறுதலம் வெளியாய்க்காணுங் காலனுமே யஞ்சிடுவான் காணுகாணே. 641

சர்க்கரைவேம்பு குமரிமலைமூலி

காணவேமலைதோறுஞ் சர்க்கரைவேம்புண்டு காய்தின்றால்கற் கண்டுபோலே தோன்றும், பூணவேயிலைதின்றால் மண்டலத்தில்சித்தி புகழானகாய்தின்றால் பட்சத்தில்சித்தி, தோணவேபூதின்றால் வாதத்திற்சித்திதொகுத்ததொகை சித்தருக்குயிதுவேயாகும், ஆணவே கிழவழிபார்க்குமப்பா ஆச்சரியமிதுதேடி அறிந்துகொள்ளே. 642

கொள்ளவேசிவப்பான கற்றாழைதானுங் கொண்டுவரமண்டலந் தானந்திசந்தி விள்ளவேதேகமதுகஸ்தூரிவீசும் வேர்வைதான்தேகத் திற்கசியாதப்பா, துள்ளவேநரைதிரைகளெல்லாமாறுஞ் சோம்பலென்றசித்திரையுங் கொட்டாவியில்லை, கள்ளவேகாமமிது வுடபிலூறும் கண்களுமேமாசெவ்வாளிப் பூப்போலாமே. 643

ஆமிந்தச்சேரமெடுத்துச்சூதத்துக்கு அனலிலேவைத்துமெள்ள சுறுக்குப்போட, வாமிந்தச்சூதமது மணிபோலாகே வகைவகையாய் பாஷாணங் கட்டிப்போகும் சேமிந்தத்தங்கத்தை யுருக்கிச்சாய்க்கச் க்ஷணத்திலே செம்பாகுந்தூரவோடும், நாமிந்தப்படிபார்த்தோங் காரியஞ்செம்பாம் நாதாக்களிப்படியே பார்த்திடாரே. 644

பார்த்திட்டமலைகளிலே மூலிகையைக்கேளு பரிவானகருநெல்லி கறுத்தகொச்சி, பூர்த்திட்டபுறச்சோதிபெரியசோதி புகழ்பெரியவெள்ளைப்பூ துத்தியோடு, வர்த்திட்டகல்லுக்குள் கோசஞ்கம்பாளளிதானரேமவிருட்சம் எருமைவிருட்சம், கார்த்திட்டகருநீலி சுணங்கல் விருட்சம் கறுத்திருக்குக்கொடுவேலி செந்திராயே. 645

செந்திரால்வெண்புரசு வெள்ளைக்கண்டா செங்கள்ளிசேம்பல்லி குண்டலமாம்பாலை, கந்திராம்கசப்பானபசலையோடு கடியதொருபொற்சீந்தி சாய்கைவேதி, அந்திராய்கருவிருசிவதத்தில்லை அதிவெள்ளை தூதுவளைகறுத்தவாளை, கந்திராய் கருப்பானகரியசாலை கறுத்தமத்தை வெண்காந்தை கல்லரையுமாமே 646

ஆமப்பாமூவிலைகுருந்திஞேடு ஆச்சரியங்கருந்தும்பை வெள்ளைக்காந்தி, ஓமப்பாவெண்டான ஆதண்டையோடு உத்தமனே முப்பத்

துரண்டுமூலி, வாமப்பாமலைதோறுமுண்டுவுண்டு மகத்தான மூலிகை தான்பரிசுவேதை, காமப்பாலைப்பின்றிசூதங்கட்டும் கலந்துநின்ற வாசனைபாஷாணஞ்சாகே. 647

சாகவேசரக்கானவறுபத்துநாலுந் தனித்தனியேவேதையுமாஞ் சகஸ்திரத்துக்கோடுஞ், சாகவேவுபசரங்கள்நூற்றிரண்டுபத்துஞ்சமனைபோல்சத்தாக யிறங்கும்பாரு, சாகவேலவணமூத லிருபத்தஞ்சும் தனித்தனியேகட்டாகுஞ் சரக்கைக்கொல்லும், சாகவே பண்ணுமலி ருத்திவிக்குஞ் சங்கற்பவிருப்பமென்றீட்டைபோக்கே. 648

கிளிமூக்குமாங்காய்

போக்கானகிளிமூக்குமாவொன்றுண்டு புகழானகிளிபோலேகாயுங்காய்க்கும், வாக்கானயிலையதுவுமரசிலைபோற்காணு மைந்தனேயிதனுடையபழத்தையுண்ணு, நோக்கானகெவுனவழி சுறக்காயோடும் கொடியிலேகாயசித்தி கிடைக்குமப்பா, போக்கானபூப்பூத்த பத்துநாள்பழமாம் புண்ணியராஞ்சித்தருக்கு மெய்தும்வாறே. 649

வாறுகேள்விடத்தோல்வேர்பட்டைவாங்கி மருவநன்றாய்கிழுலுலர்த்திச்சூரணமேசெய்ய, பேறுகேள்பலம்நாலு நிறுத்துக்கொண்டு யேச்சரியசூதமதுபலந்தானுலு, தாறுசேள்கல்வத்திலிதனைப்போட்டு சாதகமாய் மல்லிகையின்சாறு விட்டு, தேறுகேளெண்சாம மரைப்புமைபோல் தேன்வார்த்துவுண்டைசெய்து வைத்துக்கொள்ளே.

வைத்ததொருமருந்தெடுத்து அந்திசந்தி வகையாக மண்டலந் தானுண்டாயானால், கைத்ததொறுபித்தமறுங் கபத்தைச்சாடுங் கசடான ஆறுதளந்திறந்துபோகும், வெய்த்ததொரு வாதமெண்பதுவும் போகும் மேலானசிலேத்துமமு மகன்றுபோகும், வித்ததொரு சரசோதிநிர்த்தஞ்செய்வள் வினைபோலொளியாகும் வாக்குத்தானே.

தானென்றபொற்சீந்தியானுல்நன்று சாதகமாய்சிகப்புநன்று கிடையாவிட்டால், பானென்றநற்சீந்தி மேல்தோலைப்போக்கி பருந்தண்டாய்க்கொண்டுவந்து கிழித்துப்போட்டு, கோனென்றநிழலுலர்த்திச்சூரணமேசெய்து கூறுனகற்கண்டு சமபாகஞ்சேர்த்து, வேனென்றவொருகடித்தூளந்திசந்தி வெருளாதேமண்டலமு முண்டுபாரே.

பாரப்பாமேகமென்றதெல்லாம்போகும் பரிவாகவாதபித்தம்பக்குவமாகுஞ், சேரப்பாகபாலத்தின்வெட்டைபோகுஞ்செகமறியஅட்டசுரவேகம்போகும், காரப்பாதாதுமூற்றுந்தழைக்குந்திரேகஞ் சதி

ரான ஆறுதளம்வன்னிமீதும், போப்பா சிந்திக்குச்சாவேயில்லை பேரி ன்பசாஸ்திரத்தைப்பேணிப்பாரே. 653

நெல்லிக்காய்.

பேணிபார்நெல்லிக்காய்முத்தல்வாங்கி போரான பால்விட்டவி த்துகொண்டு, ஊணிப்பா நிழலுலரத்திச் சூரணமேசெய்து உத்தம னேசுத்தித்தகெந்திசரிகூட்டி, பேணிப்பாதேனதனிற் குழைத்துவு ண்ணும்பராகமண்டலந்தானுண்டாயானால், ஆணிப்பார் முன்னெடு த்ததேகம்போக்கி ஆச்சரியஞ்சிவசத்திதேகமாச்சே. 654

சத்தியதுயேதென்றால் கெந்தமுமாச்சு தனித்துநின்ற சிவந்தா னுஞ்சூதமாச்சு, புத்தியதுயேதென்றால்மூலமாச்சுபுகழானவாறுதள ந்தன்னிப்பாரு: பத்தியதுவயதென்றாலபிவுட்புக்கி பராபரத்தி லிச் சதுவேபத்திபத்தி, முத்தியதுயேதென்ல் மவுனந்தாண்ட மோசமில் லைசையன்னிய முத்தியாமே. 655

சிவனார்வேம்பு.

ஆமப்பாயிதுகடந்த சிவனார்வேம்பை அப்பனேயிடித்துநன்றாய் சூரணமேசெய்து, தேமப்பாவாலுழுவைசரியாய்க்கூட்டி சிறப்பாகக் கரைந்தைச்சார்வார்த்தரைத்து, காமப்பாவில்லைபண்ணி நிழலுலர்த் திசாதகமாய்ப்பூப்புடத்தில்தயிலம்வாங்கி, வாமப்பாமுக்கழஞ்சு அந் திசந்தி மறவாதெமண்டலமுங் கொண்டிடாயே. 656

கொண்டிடவேகுட்டமெல்லாம் போகும்பாருகூரானசரீரத்தில் வாதம்போகும், கண்டிடவேவிஷங்களெல்லாமகன்றுபோகும் மேனி வயர்மாந்துளிர்நிறமுமாகும், கண்டிடவேகன்னியர்கள் வசமதாவார் க்காரியமாயைம்புலனையடுத்துச்சாடுந், தூன்றிடவேஆசையற்றால்கா யசித்திபோகுந் தூசித்துக்கன்னியரைத்தொடலாகாதே. 657

அண்டகற்பம்.

ஆகவேயண்டத்தின்கற்பங்கேளு அப்பனே கருங்கோழிச் சாவ லுடன்போடு, வாகவேவளர்த்ததின்முட்டையெல்லாம்வாங்கி வகை யாககல்லுப்புக்குள்ளேவைத்து, ஏகவேயிருபதுநாள்கழிந்தபின்பு எ டுத்தல்லோஅயச்சட்டிக்குள்ளேவைத்து, போகவேகெருடனிடகிழ ங்குசார்விட்டுப் புகழாகவடுப்பேற்றி யெரித்திடாயே. 658

எரித்திடவே சாறெல்லாஞ்சுண்டிப்பாரு மிதமாக ஆறவிட்டு வைத்துக்கொண்டு, பரித்திடவேமேலோடு அண்டமொன்று வாங்கி

பதறாமல் ரண்டாக்கியச்சந்திகொள்ளு, தரித்திடவே தினமொன்று மேலோடுவாங்கிச் சாதகமாய்தினந்தினமு மொவ்வொன்றாக, மரித்திடவே யெரித்தசலங் கற்பாந்தகாலம் வைத்திருக்கவேணுமென்றால் மண்கலந்தான்கொள்ளே. 659

கொள்ளவேகாயமிது சிவந்துமின்னுங் குறிப்பானகண்கள்ரண்டு செய்தஞ்சம்போலாம், விள்ளவேகைகால்ரண்டுங் கற்றாணுது மெலிவானநரம்பெல்லா மிருகிக்கொள்ளும், துள்ளவேயனுபவித்தால் விந்துவிழாச்சுக்கிலந்தா னிறுகியங்கே மேலையோடுந், தள்ளவேசெட்டையொன்று கக்கிப்போகுஞ் சமர்த்துடனேயிவ்வளவுஞ் சாதித்தேறே. 660

சாதித்துத்தலைமுழுக வரிசைகேளு சாதகமாயப்பட்சத்துகொருக்காலப்பா, பேதித்துமிளகோடு மஞ்சள்நெல்லி பேரானவெப்பரிசிகடுக்காய்தானும், வாதித்துசமபாகம் நிறுத்துக்கொண்டு வளமான ஆவின்பால்விட்டுஆட்டி, காதிச்சுத்தலைதனிலே தேய்த்துக்கொண்டு கனமானவெந்நீரில் முழுகிடாயே. 661

முழுகிடவேகபலாமிது கெட்டியாகும் மூச்சானவாசியதுமேற்கொள்ளாது, நழுகிடவேரோமமது தும்பிபோலாம் நனைந்தாலுங்குளிராதுவன்னிமீறும், அழுதிடவேகண்ணீர் தண்ணீர்விழாது அந்தரத்தின்மீனெல்லாம் பகலிற்றோணும், விழித்திடவேயுடலிலுள்ள விஷநீர்வற்று மேனியுமோபொன்னிறம் போலாகும்பாரே. 662

பார்க்கவேவார்த்துமிக வுருகிக்கால்தான் பரிவாக ஆவினெய் தேய்த்துக்கொண்டு, ஏர்க்கவேபசும்பாலுமரைப்பாய்ப்பண்ணியெளிதாகவெந்நீரில் முழுகிவாநீ, கார்க்கவேரோமமது கருவண்டுபோலாங் கண்ணுக்குளொளிமீறுந் தாகமில்லை, தோர்க்கவேசுருமுனையும் நெட்டிட்டேறுஞ் சுள்ளாமல்பிரபஞ்ச மாயைநீக்கே. 663

நீர்க்கவேதாம்பூலந்தின்பதற்கு நினைவாகச்சுண்ணாம்பு செய்யக்கேளு கார்க்கவேகற்பூரச்சிலையின்மேலே கல்லுக்குள்சுன்னத்தைக் கவசம்போட்டு, பார்க்கவேகறிபோட்டிலூதுவூது பஞ்சுபோல்பொருமியங்கே சுன்னமாகும், தோர்க்கவே கல்நாரிப்படியேயூது துடியான அண்டத்தோ லூதிடாயே. 664

ஊதிடவேகெருடப்பட்சிபவளமுத்து உத்தமனேயிவ்வகையுஞ் சுன்னமாகும், கோதுவதுகொட்டைப் பாக்கதனைச்சீவி குறிப்பாகப் பழுத்தவெற்றிலையிற்பூசி, ஓதுவதுமுன்சாற்றை யுமிழ்ந்துபோட்டு உத்தமனேதாம்பூலந் தின்றுத்துப்பு, வாதுவதுவாததத்தம் கேட்டு மத்தைப்போக்கு மகத்தானவுபரசத்தின் சுன்னந்தானே. 665

தானென்றகாலையிலே வழலைவாங்கச் சாதகமாய்ச் சொல்லுகிறேன் மக்காள்கேளும், வானென்ற கரிசாலஞ்சாற்றினோடு வளமான ஆவினெய் சமனாய்ச்சேர்த்து, ஊனென்ற அங்குட்டவிரலில்தோய்த்து உத்தமமான யண்ணாக்கில் பிரளதேய்த்து, தேனென்றசங்கிலிபோற் கபந்தான்வீழுஞ் சிறப்பாகப்பதினாறுதரமும் வாங்கே. 666

வாங்கியேமண்டலந்தா னிப்படிதானப்பா மாலையிலேசெய்கிற வரிசைகேளு, பாங்கிலாயோரண்டத் தெண்ணெய்தன்னைப் பரிவாகத் தான்துனியிற் றோய்த்துக்கொண்டு தேங்கியேபாவைபோற்காலவூன்றிச் சிறப்பாகக்குஞ்சனத்தில் சுத்துநூலு, ஓங்கிவாயிடசாரிதிருப்புநூறு ஒளித்திருந்த ஆமமெல்லாங் கழன்றுபோமே. 667

ஆமமேகழலாட்டால் காயசித்தியில்லை அண்ணாக்கில் வீழாட்டி லமுதஞ்சிந்தாம், வாமமேயில்லாட்டால்பூசை போச்சுமாயிங்கே சொல்வது மறைந்துபோச்சு, ஏமமேபிறப்பதுவு மண்ணாய்ப்போச்சு எடுத்ததொரு குளிகையுட வேகம்போச்சு, காமமேகெதியென்று விருக்கவேண்டாம் கைம்முறையாயிருகலத்தின் சட்டைதள்ளே. ()

தள்ளியேமூலிகையைக் கறுப்புப்பண்ணச் சாதக்மாயரைமட்டுங் குழிதான்வெட்டித், தெள்ளியேசெங்கொட்டைஒன்றிரண்டாய் வெட்டிச் சிறப்பாகமிளகுசாம்பல் பரப்பிமேலே, அள்ளியேகரம்பை மண்ணை மேலேபோட்டு அழகாகப்பாத்திகட்டி நீர்விட்டு, நள்ளியேயழுகவிட்டுமூன்றுதினங்கள் நலமாகக் கொத்தியே யாறப்போடே.

ஆறவிட்டுப்பதிப்பதற்கு விபரங்கேளு அழகானகுமரியோடு ஓமங்கஞ்சா, தேறவிட்டுவல்லாரை கரிசாலைசிறப்பான செருப்படையும் நீலிவீழி, ஏறவிட்டுப்பொற்றலையி னைச்சிநெல்லி யிதமானகரந்தையோடு மத்தந்தும்பை, சீறவிட்டுக்கொல்லனி கோவைவாழைசிறப்பாகப்பதித்துவைத்துத் தண்ணீர்வாரே. 670

வார்த்தல்லோபயிராக்கித் தண்ணீர்வார்த்து வாகாகக்காய்ந்தபின்பு விரையைவாங்கிப், பார்த்தவலோ முன்போலசெங்கொட்டையிட்டுப் புகழானமறுபடிதான் விரையைப்போடு, கோர்த்தல்லோரண்டிடத்தில் கொட்டையிட்டுக் கொடுஞ்சுறக்காய் மாறியேபயிரைப்போடு, ஏர்த்தல்லோவிப்படிதா னாலுதரம்போடு என்மகனே முழுக்கறுப்பாய் மூலிதானே. 671

தானென்றமூலிகைதான் மலைகள்தோறுஞ் சாதகமாய்வைத்தாரே ரிஷிகள்சித்தர், வாவென்ற கறுப்புக்குப்பரிட்சைகேளு வாகாகக் கொக்கிறகு கொண்டுவந்து, பானென்ற யிலைகசக்கி மேலேபூசப்

பரிவாகக்காகத்தி னிற்கோயாகும், கோனென்றயிலேதின்றால் காயசி
த்துகொடுஞ்சுறுக்காய்ச் கொடியவரையிறுத்துந்தானே. 672

இறுத்தியதோர் குமரியுடசற்பமுண்டு எழுபதுதான்கோடியுக
மிருந்தார்பாட்டர், அருந்தியதோர் ஓமமுண்டு காலாங்கிநாயனறுப
துதான்கோடியுகம் வாதம்பார்த்தார், வருந்தியதோர்கஞ்சாதால்கோ
ரக்கர்தானு மனதொன்றில் சமாதியிலே ஏழுயுகம்நின்றார், திருந்திய
தோர்கரிசாலேலற்பமுண்டு சிவயோகிமுனியுடைய திறமைகேளே.

கேளப்பாஅஞ்சுயுகம் நாதாக்களோடே கொடிதாகத் தான்சிறி
த்துவேதாந்தம்பார்த்தார், கேளப்பாநீலியுண்டுராமதேவர் விழைந்தே
ழுலட்சமப்பா யோகம்பார்த்தார், நாளப்பாவாமமுனி செருப்படை
யையுண்டு நாலேழுலட்சமப்பாசமாதியுற்றார், தேளப்பா ஓமமுண்டு
ஆனந்தநாதர் செகத்திலுள்ள வதிசயங்கள் பார்த்திட்டாரே. 674

பார்த்திட்டுவிழிகொண்டு கஞ்சமலேசித்தர் பத்துயுகம் ஆரூடச
மாதியிலேநின்றார், ஏர்த்திட்டபொற்றலையார் கொங்கணர்தானப்பா
ஏழுயுகங்குளிகைகட்டி வாதம்பார்த்தார், கார்த்திடவேபதஞ்சதான்
காந்தையுண்டு கைகொட்டிச்சிதம்பரத்தில்நடனங்கண்டார், போர்த்
திட்டகொல்லனுட கோவையுண்டு போகர்முனியென்றுசொல்லிப்பு
ளகித்தேனே. 675

புளகித்துக்கோடியுகம் வாதம்பார்த்து போக்கோடே யொவ்
வொன்றாய்விரித்துயானும், இளகித்துஏழுகாண்டம்இதுவேசொன்னே
னேமையுந்தா னெழுநூறாய் நிகண்டாய்க்கோர்த்தேன், அழகித்துக்
கண்டபடிசொன்னமாக்கள் ஆச்சரியம் வெட்டவெளிமறைப்போயி
ல்லே, ஊசித்துவுப்பைநன்றாய்க்கட்டியுண்ணு ஒருசொல்லுந்தப்பாது
சித்தியாமே. 676

உப்புக் கட்டு.

சித்தியாமன்னத்திலுப்புக்கூட்டச் செப்புகிறேனதாக்கள் சொ
ல்லாதெல்லாம், பத்தியாய்ப்புங்கம்வேர்ப் பாலைவாங்கு பாரையுப்புத்
தோய்த்தெடுத்துரவியிற்போட்டு, முத்தியாயேழுநாள் ரவியிற் போ
ட்டு முனையான வெடியுப்புப்பலந்தானஞ்சு, வெத்தியாய் சீனமதுப
லந்தானைந்து வெண்காரம் பலமஞ்சுகல்லுப்பஞ்சே. 677

அஞ்சோடுசாரமஞ்சுபூநீறஞ்சு ஆதியாங்கடநுரையுஞ்சூடனஞ்சு
பிஞ்சோடுசவ்வீரபெலந்தானரண்டு பேயானபுங்கன்வேர் பாலிலாட்
டிநஞ்சோடுயேழுநாள்வார்த்தரைத்துநலமானரவிதனிலேயுலரப்போ

ட்டுகுஞ்சோடு அண்டநீர் பலந்தானைந்து குழப்பியேபாவாலே வைத்துக்கொள்ளே. 678

கொள்ளவேபாரவுப்பில் தோய்த்துதோய்த்து குறிப்பாகக்கரிவோட்டில்வாட்டுவாட்டு, மெள்ளவேதணக்குளடர்ந்து வாட்டுவெளுப்படங்கியுப்பதுவுஞ்செம்மையாகுந், தள்ளவேசுண்ணும்புமுப்புநோரே சமனாகப்பொடுத்துமைபோல்மூறியறவே, துள்ளவே ரண்டடையாய்த்தட்டிவைத்துத்துடியாக விசித்தவுப்பை வைத்துவையே.

வைத்துமோலடைமூடிச்சட்டியில்வைத்து வாகாகநாற்சாமந்தீயைமூட்டி, மொய்துமேல்மூடியொருசீலைசெய்து முசியாமல் நூறெருபுடத்தேபோடு, தைத்துமேயாறவிட்டு யெடுத்துப்பாரு தவளம்போற்றப்பளிங்கு நிறமாகிநிற்கும், நைத்துமோ கரிச்சோரி லிந்தவுப்பையிட்டு நலமாகநாள்தோறுங் கொண்டிடாயே. 680

கொண்டிட்டாலிந்தவுப்புச்சட்டையெல்லாந்தள்ளுங்கூசாதே வாசியெல்லாம் நெட்டிட்டேறும், விண்டிட்டபுருமமையத்தமர்திறக்கும் விழியோடே மனங்கலங்கபண்ணிவிக்கும், தண்டிட்ட அமுரியிலேயிரங்காதுப்புச் சாதகமாய்ப்பச்சையுப்புத் தின்றாயானால், மண்டிட்டசித்தியெல்லாம் பழாய்ப்போகும் வாய்த்திருந்தகருவெல்லாம் மண்ணுப்போமே. 681

போமென்றவுப்புக்குக்காரமேற்றிப் பொலிவாகச் சுன்னமென்னகுகையிலூத,ஆமென்றபூப்போலே சுன்னமாகு மத்திடைக்குச்சாரம்விடச்செயநீராகும், வேமென்றசாரக்கான வறுகத்துநாலும் வெகுளாமல் மணிபோலக்கண்விட்டாடும், சாமென்றசாவுபொய்யாம்வோதையாகும் சகஸ்திறந்தான் மாற்றுகுந்தன்னிற்பாரே. 682

பாரப்பாவுப்புநின்றுருகும்போது பரிவோடுயிடைக்கிடையாய் நாதம்போடு, காரப்பாநாகயிடை ரூதம்போடு கனமானகெந்தகந்தான்ரெட்டிப்போடு, சேரப்பாயெடுத்துடனே களங்குமாகுஞ்சேர்ந்தநவலோகத்திலன்பதுக்கொன்றி, ஓமப்பாமாற்றுறிகாணுங்காணும்வெகுளாதே பணவிடைதான்தேனிலுண்ணே. 683

உண்ணவேமண்டலத்தி வெளியோமீறு முத்தமனே கால்கள்ரண்டுங்கற்றாணும்,விண்ணவேபச்சைரசமென்றுதின்னு வெகுளாதே பாஷாணமெல்லாந்தின்னு, விண்ணவே உபரசத்தின் சத்தைத்தின்னு கலங்காதேவாசிகொண்டுவுள்ளேபூரு, பண்ணவேநடக்கையிலுமிருக்கையிலுநீரன் பழக்கமுண்டு மூலத்தைப்பாருபாரே. 684

பார்க்கவே வுப்பென்றகளங்கள்தன்னைப் பலபலவாம்லோகத்தி லன்பதுக்கொன்றீய்ந்து, ஏர்க்கவே யிதைவிற்றச்செலவுசெய்த எளி தாக அன்னவரைதண்ணீர்கொள்ளு, கார்க்கவேயொருசேரைசமைத் துவுண்டு கனமானகற்பத்தையுண்டுதேறு, தோர்க்கவே வுட்புகுந்து மூலப்பாரு தொடுகுறிபோலாறுதளம் வெளியாய்ப்போமே. 685

வெளியானவப்பிரேகசத்துகேளு விளங்குகின்றவப்ரோகமுதற் றரந்தான் சுளியானரத்தவர்னம், ரண்டாம்பட்சம் முயர்ந்தமூன்றும் தரந்தான் கிருஷ்ணவர்னம், அளியாதவப்பிரேக நவநீதம்பண்ணிஅப் பனேகிளிபோலக்கட்டிக்கொண்டு, களியான கொள்ளிலையின் சாறு தன்னால் கலங்காதேநாள்மூன்றேயாக்கே. 686

ஆர்க்கவேவோலைபோற் சட்டியிலேவிட்டு அசையாதே கொள் ளிலையின்சார்தன்னாலே, பார்க்கவேயடுப்பேற்றி எரித்துபின்புபருவா ழைக்கிழங்குச்சார்மூன்றுநாள்தான், காக்கவேயறுசாமமூறப்போட் டுக் கலங்காமல்வடிகட்டி யெடுத்துக்கொண்டு, நீக்கவேவாலுகையில டுப்பிலேற்றி நிதானமதாயெரித்துமெள்ளக் குளிகைவாங்கே. 687

வாங்கியேபலம்பத்து கல்வத்திற்போட்டு வகையானவெங்காரம் பலந்தான்பத்து, தேங்கியேகாரமைந்து கட்டுப்புவொன்று சிறப்பா னசர்க்கரைதேன் பழமும்போடு, ஓங்கியே ஆகளையின்பாலைவார்த்து உறதியாங்குடோரியொரு பலமும்போட்டு, நீங்கியேமூன்றுநாள்நெ கிழவாட்டி லேசானவடைதட்டி யுலரப்போடே. 688

உலர்ந்தபின்பு வங்கமென்றதாதொத்தாலூறு உத்தமனே சர வுலையில் வைத்துவூது, அலர்ந்தபின்புயப்பிரேகஞ்சத்தாய்வீழுமாரா ய்ந்து சத்தெல்லாம் பொருக்கிக்கொண்டு, கலர்ந்தபின்புகாடெடுத் துக் கல்வத்தாட்டி கலங்காதேமுன்போல மருந்தரைத்துக்கூட்டி, நலர்ந்தபின்புவில்லைதட்டிச் சரவுலையிலூது நலமாகவப்பிரேகஞ் சத் துமாமே. 689

ஆமப்பாகாடெடுத்து முன்மருந்துக்கூட்டி அரைத்துநன்றாய் வில்லைத்தட்டி ஐந்தரமூது, ஓமப்பாசத்தெல்லாமொன்றாய்ச்சேர்த்து உத்தமனே வெண்காரஞ் சரியாய்க்கூட்டித், தாமப்பாகுகையிலிட்டு வுருக்கிநன்றாய்ச் சாய்க்கவே நல்லெண்ணெய் தேங்காய்ப்பாலும், காமப்பாயிலுப்பைப்பூ நெய்யுந்தேனுங் கலந்தொன்றுமத்தித்து சாய் த்திடாயே 690

சாய்த்திடவேமூன்றுதரங் கன்மிசங்கள்போகுந் தங்கமதாரண் டுக்கு அம்பிரேகம்நாலு, பாய்த்திடவேரண்டுமொன்று யுருக்கிக்கொ ண்டு பரிவாகமெழுகுகட்டிக் கிண்ணிதாரு, மாய்ந்திடவே சீலையது

திறவமாய்செய்து வாலுகைமேல்வைத்ததற்குசூதம்பாரு, எய்த்திட வேகருமத்தஞ்சார்விட்டு கிண்ணிக்கிதமாக வைத்திடவே வெண்ணெ யாமே. 691

வெண்ணெயெல்லா வழித்துமொரு மொத்தையாக்கி மேலான குளுந்ததண்ணீரிற்போட்டுத், திண்ணெய்தாயிறுகியது கல்லுப்போ லாஞ் சேர்த்தெடுத்துயாரையிலே கவசங்கட்டி, தண்ணெயாயவிர்ப்பு டமாய்ப்பத்துப்போட்டு தயங்காமேதமத்தங்காய்க் குள்ளேவைத்துப் போடு, விண்ணெயாவ்விராலிமலைக்குள்ளேபோடு விதமானவிராலியி லைக்குள்ளேபோடே. 692

போட்டெடுத்துச்சூடனுட தீயில்வாட்டிப்புகழாகக் கரண்டியி லெண்ணெய்க்குத்தியுருக்கி, ஆட்டெடுத்துவொன்றுக்கு நாலுதங்க மழகாகச்சூதத்திற்பாதிநாகம், நீட்டெடுத்துவுருக்கியொன்றும்மணி யாய்வாங்கி நேரப்பாகக்கல்வத்திற்பொடித்தூன்றுய்த், தொட்டெடு த்துச்சுத்தித்தகெந்திதானுந் துரிசாகசூதயெடை கெந்திகூட்டே.

கூட்டியெல்லாம் பொற்றலையின்சாற்றுலாட்டி குறிப்பாகப்பொடி பண்ணிக்குப்பிக்கேற்றி, ஆட்டியேவாலுகையின்மேலேவைத்து யறு சாமமானபின்பு கடுந்தீப்போடு, நீட்டியேபனிரண்டு சாமமானால்நிலை த்துநிற்கு மாதளம்பூ நிறத்தைப்போல, வாட்டியேநவலோகம் நூற் றுக்சொன்றீ மாற்றென்ன பனிரண்டாம் பணவிடைதாலுண்ணே.

உண்ணவேமண்டலந்தா னந்திசந்தி வுத்தமனே யுகாந்தவரை யிறுத்துந்தேகம், தண்ணவேயிருட்டறையி லிருந்தாயானால் சந்திர னேசூரியனே வென்பார்பாரு, கண்ணவேமேனியது கஸ்தூரிவீசுங் கமலம்போல் கால்கைரண்டு மிருதுவாகும், எண்ணவே கற்பமெல் லாம் படிபடியாயேறு மிருந்துபார் சமாதிக்குட் கற்பமொன்றே. ()

ஒன்றானகெந்தகந்தான் பலமோபத்து உத்தமனேசுத்திபண்ணி அயச்சட்டியிட்டு, கன்றானகுமரிச்சோர் கிழ்மேலுமிட்டுக் கலறவே கொதிப்பாக நாலுசாமம், பன்றானபழச்சாறு சுருக்குப்போடு பருவ மாய்ப்புங்கம்பால் நாலுசாமம், கன்றானநிழலுலர்த்திக் கல்வத்திட் டுக் கடுகவே பொடிபண்ணி மாந்துளிரின்சாறே. 696

சாறதினாலெண்சாமமட்டு ஆட்டு தயங்குமணித்தக்காளிச் சாற் றுலாட்டு, பேறதினல் மந்தாரை வெள்ளைப்பூவைப் பிசைந்தரைச் சாற்றினா லெண்சாமமாட்டு, வாறதினல்புளிப்பான மாதளையின்பழ ந்தான் வகையானசாரதினா லெண்சாமம்மாட்டு, தேறதினல் .தாம ரைப்பூச் சாற்றுலாட்டிச் சிறப்பாகக்காந் தமைந்து பலந்தான் போடே. 697

போடவேவெண்காரம் பலந்தானைந்து புகழானகுடோரியொரு பலமும்போடு, கீடலேகுன்றிமணிக் கட்டுவுப்பு நிலைக்கவொரு பலம் போட்டு ஆகளையின்பாலால் வாடவேயெண்சாக மாட்டிப்பின்பு வகையாக வில்லைதட்டியுலரப்போட்டு நாடவேநல்லெண்ணெய்பலந் தானென்று நயமானவயச்சட்டிகுள்ளேவாரே. 698

வார்த்துமே யடுப்பேற்றிவில்லைத்தட்டிவாகானகமலம்போலெரி நேர்ப்பாக, ஏர்த்துப்பொறுத்தபதந்தன்னில்வாங்கு யிருபுவிழுந்துரு த்தியிட்டுச்சரவுலையிலூது பேர்த்துமே மணிமணியாய்ச்சத்துவிழும் பேராகக்கட்டையெல்லாஞ்சோதித்துவாங்கிக், காற்றுமே முன்போ லக்காரங்கூட்டி கலங்காதே ஐந்துதரமூதிடாயே. 699

ஊதியேசத்தெல்லா மொன்றாய்ச்சேர்த்து உத்தமனேவெண்கா ரங்கூடக்கூட்டி, காதியே ஐங்குதுகையிலிட்டுருக ஆட்டிக்கனமான அப்பிரேகஞ்சாய்த்தாப்போல, சாதியேசாய்க்காக்காலவருணன்போ லத்தயங்காதே சத்தாகுங்கெந்திசந்து, வாதியேயிதைக்காணப் போறார் மாண்பர்மாசற்றநா தாக்களாடும்ஆட்டே. 700

ஆட்டானகெந்தகத்தின் சத்துவேகம் ஆரறிவார்சிவயோகி யல்லார்காணார்நீட்டான அம்பலத்திற்சோழன்றானும் நிலைத்தநடரா சரைத்தான்வார்க்கச்சொன்னார் பூட்டானசிற்பர்கள்தான் கருக் கட்டிடுவார்த்தார்பின்புபின்பு போகவமேசிற்பரேங்கிச் கூட்டான மனதுநொந்து திகைக்கும்போது கொடுமூலநாயனங்கேவந்திட் டாரே. 701

வந்திட்டுசிற்பரைதான் வரவழைத்து மனக்குறைநா னென்ன சொல்லும்மைந்தாவென்ன, மெந்திட்டுவிக்கிரகம்வார்க்கவார்க்கவின் னமாய்ப்போடுதென செய்வோமென்ன நெந்திட்டமனதுகண்டுதிரு மூலர்தாமுநொடிக்குள்ளேவார்த்திடுநீயென்றசொல்லிக்கந்திட்டுக்கா செயைதான்செம்பையீந்தார் கடுகவேசிப்பருந்தான்வார்த்திட்டாரே

வார்த்திடவே தங்கமெல்லாஞ் செம்பாய்ப்போச்சு மனம் புண்ணாய்நிற்குவப்போசோழன்வந்தார், ஏத்திடவே விக்கிரகம் வார்ப்பித்தாயோ எடுத்துவாதென்றிடவே கொடுமுன்வைத்தார், பார்த்திடவே தங்கமெல்லாமெடுத்துக்கொண்டு பரிவாகச்செம்பா லே வார்த்தாயென்று வேர்த்திடவேஆக்கினைதான் பண்ணச்சொன் னார் விடுபட்டார்சோழன் முன்னேநாயன்தாமே. 703

ஆமப்பாசிற்பரைதான் சொல்லவேண்டாம் அதிகமாய்ப்பொன் னுனக்குத்தாரோமென்றவேமப்பாவெள்ளியைத்தானுருகச்சொல்லி

விரைந்தழுவாயிரத்திற்காசெடைதான் போட்டார், தாமப்பாமாற்
றது வுமிருபதாச்சு சாதகமாய்,குளிகையிட்டுமறைா துபோனார்சேமப்
பாத வசியங்கேயென்றுகேடகத் தேடியெங்கும் பார்த்திட்டுத்
திகைத்திட்டாரே. 704

திகைத்திட்டுவந்துசொன்னார் சோழன்முன்னே சிவசிவாவென்
றுசொல்லி வாயைப்பொத்தி, நகைத்திட்டுசிற்பருக்கு வெகுமானஞ்
செய்து நாதாக்கள்மகிமை சொல்லயெவரால்கூடும் மிகைத்திட்டு
விடுதிக்குப்போனார்சோழன் வேண்டியதோர்கெந்தகத்தின் சத்து
வேகம் பகைத்திட்டுச்சித்தருபங்களுக்குங் சொன்னேன் பாரிதுக்
குள் செந்தூரஞ்செய்யக்கேளே. 705

கேளப்பாகட்டியதோர் சூதமொன்று கெடியாகவுருகையிலே
சத்துவொன்று நீளப்பா தங்கமொன்று நாகமென்று நேராகவுருகி
யொருமணியாய்வாங்கி வேளப்பா கல்வத்திற்பொடியாய்பண்ணி
விளங்கி நின்றதாளகமுஞ்சிலையு மொன்றுபோட்டு நாளப்பாபொற்
றலை யிறுசாற்றாலாட்டி நலமாகத்தெல்லுப்போல்வில்லைபெண்ணே.

பண்ணியதோர்வில்லைதன்னையகலிலிட்டுபாய்ச்சியேமூடியொரு
சீலைசெய்து கண்ணியேபதத்தெருவிற்புடத்தைப்போடு கண்கொள்ளா
வருணன்போற் செந்தூரமாகும், கண்ணியே செந்தூரமாயிரத்துக்
கொன்றுநாட்டிடவேபதினாறுமாற்றுமாகும், புண்ணியமேசெய்த
வற்குசெந்தூரமாகும் பொல்லாததுரோகிக்கு எய்தவாறே. 707

வாறுகேள்செந்தூரங் குன்றியுண்ணு மண்டலத்தாகந்திசந்தி
மறவாமல்நீயும் தேறுகேதேகமது செப்புத்தூணும் சிதறடித்தால்
மலைகளெல்லாந் தவிடுபொடியாகும் சாறுகேள்கத்தியினால் வீசினுக்
கால் கலீரென்றுவெங்கலத் தினுசையாகும் நாறுகேள்நரமெல்
லாஞ்சி வந்து காணும் நாதாக்கள் சித்தியெல்லா மிதற்குள்ளாச்சே.

மயூரச் செம்பு.

ஆச்சப்பாமயூரத்தின் செம்பெடுக்க அறையிறேனறிந்த மட்
டுந்தானுந் வாச்சப்பாமயிலிறகு கொண்டுவந்து வளமாகத்திரிதிரி
த்து நல்லெண்ணெய்தோய்த்து நீச்சப்பாகட்டெடுத்துகரியாய்ப்
பண்ணி நிலைக்கவொருசேருமட்டு நிறுத்துக்கொண்டுதேச்சப்பாகல்
வத்திலிதனை போட்டுத் துரியாகக்காரமொடு பலந்தானஞ்சே. 709

அஞ்சானவெண்காரம் பலந்தாஞ்சு யாதியாங்குடோரியொகு
பலமுங்கொண்டு, நஞ்சானவீரமொரு பலமூமூன்று நாயகமாங்கல்

அப்புபலமுமொன்று, பிஞ்சானகுன்றி மணியெள்ளுமொச்சை பே சாதேயொவ்வொன்று பலமும்போட்டுக், கஞ்சானவாதளையின்பாலை வார்த்துக் கடுகியே திரைமூன்றுநாள் வில்லைகட்டே. 710

கட்டியேவில்லைதன்னை காளத்தூதிக் கட்டோடேமணிமணியாய் ரவிதனினிற்கும், ஒட்டியேதே செம்பெல்லா மெடுத்துக்கொண்டு ஓகோகோகரடெல்லா முன்போலூது, தெட்டியேதோரைந்துதர மருந்திட்டுத் தெல்லிப்போல்வில்லைதட்டி யூதுவூது, யெட்டியதோர் செம்பெல்லாங்காரமிட்டு யாட்டியேகாரமுன்போல் சாய்த்திடாயே.

சாய்த்திடவேசெம்பாலே சூதங்கட்டுஞ் சமுசயங்களெண்ணு தே பாஷாணஞ்சாகு, மாய்த்திட்ட அரவமது தீண்டாதையா மகத் தான விஷங்களொன்றுங் கிட்டாதப்பா, பாய்த்திட்டசெம்போடே தங்கஞ்சேர்த்து பாங்கானநகைவளைகள் பண்ணுபண்ணு, காய்த்திட்ட குண்டலங்கள் விக்கிரகம்பண்ணு காட்டினுள்ளே சித்தரெல்லாந் தரிப்பார்பாரே. 712

பாரப்பாமயூரத்தின் செம்புஒன்று பாங்கானதங்கமொன்றுநாக மொன்று, சேரப்பாமூன்றுமொன்று யுருக்கிக்கொண்டு செயலான சூதத்தை யொங்கக்கூடி, காரப்பாகல்வத்திற் பொடியாய்ப்பண்ணிக் கசடற்ற கெந்தகத்தைப் பாதிகூட்டு, வாரப்பாசெருப்படையின் சாற்றாலாட்டி வளமாகக்கல்லுபோல் வில்லைகட்டே. 713

கட்டியேயஞ்செருவிற் புடத்தைப்போட்டு கைம்முறையாயாற விட்டு எடுத்துப்பாரு, தட்டியேமாதளம் பூப்போலேயாகுந் தனையெ டுத்துயாயிரத்துக் கொன்றேபோடு, மட்டியேமாற்றென்ன பதினாறு காணு மைந்தனேபனவிடைதான் பாலிலுண்ணு, எட்டியேகாயமது யிருப்புத்தூணு மென்னென்னகடித்தாலுஞ் செத்துப்போமே. 714

அயச் செம்பு.

போமென்ற அயத்தினுடசெம்புகேளு புகழானரோமமதுயெள் ளெண்ணெய்தோய்த்து, வாமென்ற அயச்சட்டிதன்னிலிட்டு அப் பனேமூன்றுபத்து பலத்தைபோடு, காமென்றயரப் பொடிதான்பல மோபத்து கைம்முறையா யறைப்பொடியைப்பிசரிவைக்கத், தேமெ ன்றவடுப்பேற்றி ரோமத்தின்றயிலஞ் சிறப்பாகவேயுண்ணப் பிரட்டி த்தீரே. 715

தீரென்றரோமமெல்லாங் கரியாகுமட்டுஞ் செய்முறையாயாரப் பொடியைப் புரட்டிவாங்கி, காமென்ற கரியோடேவைத்துக்கொ ண்டுகார்த்திகையின்கிழங்கதுவும் பலமும்பத்து, சேரென்றசெவ்

வல்லிக்கிழங்குபத்து சேர்த்திடித்துசாறு ஒருபடியும்வாங்கி, ஆமெ ன்ற ஆதளையின்பாலைவார்த்து அழகானயெள்ளெண்ணெய்படிதான் வாரே. 716

வார்த்தெல்லாங் குழம்புபோல்வருதல்கண்டு வகையானவெண் காரம் பலந்தானைந்து, சேர்த்தெல்லாந்துரிசியொறு பலந்தானைந்து தேசில்லாக்கெந்தகந்தான் பலமுமூன்று, கோர்த்தெல்லாம் பொடி யாக்கி யெண்ணெயிலேபோட்டுக் கொதிப்பித்துக்குழம்பான பதத் தில்வாங்கிக் கார்த்தெல்லாம்வழித்துவொரு கலவத்திலிட்டுக் கைம் முறையா யரைப்பொடியை பிசரிவையே. 717

வையப்பாரோமமென்ற கரியிேனுடே மயங்காதேகுகையிலிட்டு மாட்டிபூது, தையப்பாமணிமணியா யிறங்கும்பாரு தனையெடுத்து வுடைத்துமுன்போல் தைலத்திற்பிசரி, கையப்பாஅஞ்சுதரம் உருக் கித்தீரு கசடற்றவெள்ளிபொன்போற் கண்விட்டாடு, மையப்பாகச டற்றசெம்பேயாகும்வயதையிதில்முடிவுசொல்லி விண்கொள்ளாதே.

கொள்ளாத அயச்செம்பு பலந்தானுலு குறிப்பானதங்கமொ ன்று நாகமொன்று, விள்ளாத ஈயமொன்று வுருக்கியாட்டி விரவிடுநீ கல்வத்திற் பொடியாய்ப்பண்ணி, அள்ளாதசூதமது பலந்தானொ ன்று அசடில்லாக்கெந்தகந்தான்பலமுநாலு, துள்ளாதமாளிகையின் சாற்றாலாட்டித் து; யாகவெண்சாமம் ரவியிற்போடே 719

போட்டெடுத்துப் பொடியாக்கிமேருக்கேற்றிப் புகழானவாலு கையின் மேலேவைத்து, ஆட்டெடுத்துப் பனிரண்டுசாமந்தீயை ஆற விட்டுப்பார்த்தாக்கால் செந்தூரமாகும், பூட்டெடுத்து ஆயிரத்துக் கொன்றுபோடு புகழாகப்பதினாறு மாற்றாகாணும், நீட்டெடுத்துமண் டலந்தான் தினங்குன்றியுண்ணு நேரானசட்டைகக்கிப்பாலையாமே.

காந்தசத்து

ஆமென்றகாந்தமது பலந்தான்பத்து அப்பனேகுன்றிபோலு டைத்துக்கொண்டு, காமென்றசெம்பிலிப்பால் படிதானுலு கலர விட்டுசுருக்கிடுநீ நாலுசாமம், தாமென்றகல்வத்தில் செம்பிலிப்பால் விடடுத்தாக்கியரைநால்சாமம் புடைத்தைப்போடு, ஆமென்றபாலா லே யரைத்தரைத்து அப்பனேஐந்துபுடம் போடடுத்தீரே. 721

தீர்ந்தபின்புபொடியாக்கிச் சடடியிடடு செம்பிலியின்ரோமமது பலந்தான்பத்து, ஆய்ந்தபின்புசுருக்கிடடு ராமந்தன்னை அப்பனே தயிலத்திற்பிரடடிபோடு, காய்ந்தபின்புரோமத்தின் றயிலமெல்லாங்

கரியோடேவாரிவைத்து கருத்தைக்கேளு, தேப்த்தபின்புகருங்குண்றிச்சாறதுவும்படிதான்சிறப்பானகொள்ளிலைச்சார் படி தானென்றே.

ஒன்றானபொன்னிறு வாரையின்சாறு உயர்ந்தஆதளையின் பால்படிதானென்று, கன்றானசெவ்வல்லிக்கிழங்குசார்படிதான்கார்த்திகையின் கிழங்குசார்படிதானென்று, தின்றான புளிபரணைக்கிழங்குச்சாறு சிறப்பானநல்லெண்ணெய் சமனுக்கூட்டி, நன்றானவடுப்பேற்றிக் கமலம்போலெரித்து நலமாகக்குழம்பான பதத்திற்பாரே.

பார்க்கவேகெந்தந்தான் பலமுமூன்று பரிவானவெண்காரம்பலமுமைந்து, ஏர்க்கவேயிதைவிற்றுச்செலவுசெய்து வெளிதான வீரமதுபலமுமொன்று, கார்க்கவேகுடோரியது பலமுமொன்று கல்வத்திலிட்டெல்லாம் பொடியாய்ப்பண்ணிச், சேர்க்கவேமுன்மருந்திலொக்கப்போட்டுச் சிறப்பாகக்குழம்பானபழத்தில்வாங்கே. 724

வாங்கியேகாந்தத்தில் பிசறிக்கொண்டு வளமாகச்சரவுலையி லூதுவூது, தாங்கியேகாட்டோடு சத்தாய்வீழுந் தப்பாமல்சத்தெல்லாம்பொருக்கிக்கொண்டு, தேங்கியேகரடெடுத்துத் தயிலத்தில்பிசறிச்செப்பரியநாளத்தாலூதித்தீரு, பங்கியேஐந்துதர மூதித்தீரு பரிதிபோற்செம்பாக நிறமுமாச்சே. 725

செம்பானகாந்தமது பலந்தானாலு திறமானதங்கமது பலந்தானென்று, கம்பானநாகமதுபலந்தானென்றுகருதியதோர்கட்டானசூதமொன்று, நம்பானபிதுநாலுமுருக்கிக்கொண்டு நலமா கக்கல்வத்திற்பொடியாய்ப்பண்ணு, கொம்பானகுலாமல்லிச் சாற்றாலாட்டிக்கூறவேமுன்னநாள் ரவியிற்போடே. 726

போட்டுவாமுன்சொன்ன சூதத்திலாட்டி பெரிதானகெந்தகத்தைச்சுத்திப்போடு, கேட்டுவாபொடிபண்ணி மேறக்கேற்றிக் கெடியானவாலுகையின் மேலேவைத்து, நாட்டுவாபணிரண்டுசாமந்தீயை நலமாகஆறவிட்டு யெடுத்துப்பாரு, காட்டுவாய்மாதளம்பழம் பூப்போலேயாகுஞ் சாத்திறத்திற்கொண்டாடும் வேதைதானே. 727

தானென்றசெந்தூரங்குன்றியுண்ணு சாதகமாய் மண்டலத்திற்சட்டைகக்கும், கோனானகாயமெல்லாஞ் சிவந்துமின்னுங்கெடிதானநாகமெல்லாம் பவளம்போலா, பானனவஸ்துவுண்டா லாகிரியில்லை பாஷாண வர்க்கங்கள் கறிசோறாகும், ஊனானசடந்தானுங் கோடிகாலம் உத்தமனே சமாதியிலேயிருக்கலாமே. 728

இருக்கவேலோகமென்ற திராவகத்தை யியம்பிடவேயானந்தா வுற்றுக்கேளு, பருக்கவேவெடியுப்பு பலந்தானூறு பாவியம்தார்சீன மது எண்பத்தைந்து, சுருக்கவேதுரிசியது நாற்பதாகுஞ்சுளுவான சாரமது இருபதாகும், உருக்கவேகல்லுப்புப் பலந்தான்பத்து உயர்த்தியாம்பூநீறு பலந்தானஞ்சே. 729

அஞ்சான சத்தியென்றசாரம்நாலு அழகானகெந்தியுப்பு பலந்தான்மூன்று, வஞ்சானவுருவியுப்பு பலந்தானொன்று வகையெல்லாம் பொடித்துமொரு சட்டியிலிட்டு, கஞ்சானகழுதையுட ரத்தம்வார்த்து கடுகரைத்து ஏழுநாள்ரவியிற்போட்டு, துஞ்சானஅடிகனத்தகலசத்திட்டு துயரறவேயடிக்கலச மட்டும்போடே. 730

போட்டதின்மேற்சக்கரமாம் பாலைச்சட்டி பொருந்தவேமேல் கவிழ்ந்து மாஷந்தன்னால், நாட்டதின்மேல் சீலைசெய்து ரவியில்வைத்து நலமாகவடுப்பேற்றி யெரி நர்பாக, நீட்டதின்பின் பீங்கானால் கிண்ணிவைத்து நேர்ப்பாகச் சட்டியின்மேல்தண்ணீர்குத்தி, பூட்டதின்மேற்புகையோடச் சலந்தான்வீழும் பொருந்திமுன்னீர்தனை யகற்றிப் பின்னீர்வாங்கே. 731

வாங்கியேமுன்வைத்த சரக்குதன்னை வகையாகஐந்துபங்குபண்ணிவைத்து, தேங்கியேஒருபங்கிலிதனையூத்து சிறப்பாகமுன்போலே கலசத்திட்டு, தாங்கியேயடுப்பேற்றியெரித்துவாங்கி சாதகமாய்முன்போலே மறுசரக்கிலூற்றி, பாங்கியேயுலரவிட்டுக் கலசத்திட்டுபக்குவமாய் ஐந்துதரமிப்படியே வாங்கே. 732

வாங்கியே அரக்காலேகுப்பிபண்ணி வளமாகதிராவகத்தையதிலேவாரு, தேங்கியேசூதமொரு பலந்தானெட்டு சிறப்பாககல்வத்திலிட்டுக்கொண்டு, வாங்கியேதினமூன்று திராவகத்தாலாட்டி மறுபீங்கான்றனனிலே வழித்தெடுத்து, தாங்கியேகரியோட்டில் வறுத்துக்கொண்டு சமரசமாய்ப் பொடிபோலே மேலுக்கேற்றே. 733

ஏற்றியே வாலுகையின்மேலேவைத்து இதமாகத் தீயெரித்து பனிரண்டுசாமம், போற்றியேயாறவிட்டு யெடுத்துக்கொட்டி புகழாகத்திராவகத்தி லரைத்துலர்த்தி, தூற்றியேகொடிபோலே குப்பிக்கிட்டுச்சுகமானவாலுகையின் மேலேவைத்து, பாற்றியேபனிரண்டு சாமந்தானும் பக்குவமாய்தீயெரித்து ஆறவிட்டுவாங்கே. 734

வாங்கியெல்லா முன்போல வரைத்தெடுத்து வரிசையாயைந்து முறைதீர்ந்துயேறு, தாங்கியேசெந்தூரமருணன்போலத் தலத்திலே

யிருக்குமப்பாயிதனின்வேதை, ஓங்கியேகோடிக்குஒன்றுஒடும் உத்தமனேகதலியுட பழத்தைவாங்கி, தேங்கியேபணவிடைதா னுள்ளே கொள்ளச் சிவசிவாசூரியன்போல் தேகமாச்சே. 735

ஆச்சப்பாதிராவகத்திலனந்தம்வித்தை ஆராய்ந்து ஒவ்வொன் ருய்ப்பார்த்துத்தேறு, எச்சப்பாகட்டினமோ உருக்கினமோ கோடியெடுத்தோடுங் குளிகைமுதல்செந்தூரங்கோடி, வாச்சப்பாகன்னமுதற்களங்துகோடி வழங்கியதோர் குருக்கோடிமெழுகுகோடி, பாச்சப்பா ஒவ்வொன்றில்வேதைகோடிபரிட்சிக்கத்தாமமுதலெட்டுமாமே

துரிசிதிராவகம்

ஆமென்றதுரிசியுடதிராவகத்தைச்சொல்வேன் அப்பனேதுரிசியொருபலந்தானாறு, காமென்றவெடியுப்புபலந்தானாறு கலங்காதசினமதுபலந்தானாறு, வேமென்றசவுட்டுப்பு பலமுமைந்து வெகுளாலேவளயலுப்புபலமுமைந்து, தாமென்றகெந்தியுப்புபலமுமைந்துதங்காதேயிந்துப்புபலமுமைந்தே. 737

அஞ்சோடுசத்தியென்றகாரம்பத்து அப்பனேகல்லுப்புபலமும் பத்து; நஞ்சோடுவீரமதுபலமுமூன்று நவாச்சாரமும் பத்துபலமும் போடு, பிஞ்சோடுகருவங்கபலமுமூன்று பேசாதவாதனையுப்புஉருவியுப்பு, பஞ்சோடுமணியுப்பு மேனியுப்புபதறுதே ஒவ்வொன்று பலமும்போடே. 738

போட்டெல்லாம் பரங்கியுட சாராயம்வார்த்துப் பொருந்தவே மூன்றுநாளாட்டுஆட்டு, ஆட்டெல்லாம்ரவியிலிட்டு ஐந்துபங்குபண்ணி அப்பனேஒருபங்கு கலசத்திலிட்டு, பூட்டெல்லாம்மாலையென்ற சட்டிமூடிப்புகழாகமாஷத்தால் சீலைசெய்து, மூட்டெல்லா மடுப்பேற்றிபீங்கான்வைத்து முடீற்சியாய்த்திராவகத்தை வாங்கிடாயே.

வாங்கிட்டதிராவகத்தை மறுசரக்கிலூற்றி வளமாகரவியிலிட்டு கலசத்திற்போடடு, தேங்கிடடதிராவகத்தைவாங்கித்திரு சிறப்பாக வைந்துதரமிப்படியேவாங்கு, பாங்கிடட அரக்காலேகுப்பிப்பண்ணிப்பதனமாய்மூடிவைத்து பாங்கைக்கேளு, தேங்கிடடபாறையுப்புபலமீரேழு சிறப்பாகத்திராவகத்தில் தோய்த்திடாயே. 740

தோய்த்துமேதினமேழு ரவியிற்போடுதொன்மையாம்வெடியுப்புச்சீனங்காரங், காய்த்துமேகடல்நுரையுங்குடனிந்து கலங்காதபூநீர்க்காரம்வீரம், தேய்த்துமேநவாச்சாரந்துரிசு வெள்ளைசிறப்பாகப்

பதினொன்றதிராவகத்திலாட்டி, ஏய்த்துமேவில்லைகட்டு புலரப்போடு
இதமாக அகலிட்டு அவிர்ப்புடமாய்ப்போடே. 741

புடம்போடுஅரைத்தரைத்து ஐந்துதரந்தானும் புகழாக வெரு
வெடுத்துபத்துமட்டும், திடம்போடுதிராவகத்தில் பலந்தானேழுசிற
ப்பாகப்புடம்போட மருந்தைத்தானும், க-ம்போடுகுழம்பாகக்கரை
த்துக்கொண்டு கல்லுப்பில்பிசறியல்லைா கரியோட்டில்வாட்டு நடம்
போடுகுழம்பெல்லாந்தோய்த்துவாட்டுவாட்டே. 742

வாட்டியேகவிசிக்கு மருந்துகேளு வகையாகபேறனென்ற கிளி
ஞ்சில்தன்னை' காட்டியேசுண்ணும்புஞ்சவுட்டுமண்ணிங் கலங்காதேத
ண்ணீரிற்கலக்கிக்கொண்டு, ஓட்டியேதீயெரித்துவற்றுமட்டும் உத்த
மனேபுடம்போட்டுத்தூளாய்ப்பண்ணி, நாட்டதியே திராவகத்தால
ரைத்தரைத்து நலமாகஐந்துபுடம் போட்டுத்தீரே. 743

தீரவேபுடம்போட்டமருந்துதன்னை சிராவகத்தாலளரதீதுருட்
டிமெழுகுபோல, ஆறவேமுன்னுய்பில் கவசங்கட்டி அசையாதேகல
சத்திற்பூநீறுவைத்து, ஊரவேயதின்மேலே உப்பைவைத்து உத்தம
னேமேலுமந்தபூநீறுபோட்டு, தேறவேசில்லிட்டுச்சீலைசெய்து தீர்க்க
மாய்ஜகெஜபுடமாய்ப்போட்டுவாங்கே. 744

வாங்கியேயுப்புபண்ணிப்பார்த்தயல் மக்காள் வயிரம்போலிருகி
யது தங்கம்போலாம், ஓங்கியேகரியில்வைத்து உருகிப்பாகு உத்தம
னே தங்கம்போல்கண்விட்டாடும், தேங்கியேகரியில்நின்று கம்மித்தா
ளுல் சிறப்பாகமுன்போல்ப்புடத்தைப்போடு, ஏங்கியே ஒருவருடன்
பேசவேண்டா மேத்தியேகடுங்காரச் சுன்னத்திலூதே. 745

பா ல ர ச ம்.

சுன்னமென்றகுளிகைதனிலே ஊதிப்பின்மைந்தா துடிராகப்ப
லம்நாலுநிறுத்துக்கொண்டு, சுன்னமென்றதிராவகத்தி லிதனைப்போ
ட்டுகயறவேமக்தித்துவைத்துகொண்டு, பன்னமென்றசூதமது பலந்
தானெட்டு பாய்ச்சியேகல்வத்தில் திராவகத்தைப்பாரு,சின்னமென்
றசாமமொன்று அரைத்துநன்றாய்ச் சிறப்பாகரவிதனிலே போட்டி
டாயே. 746

போட்டுவாயரைத்தரைத்து ரவிதனிலேயப்பாபுகழாகமாதமொ
ன்றமறவாமல்நீயும், காட்டுவாய்சூதமதுசிவப்பேயாகுங்கண்டுகொள்
ளாவேதையுமாக்கண்டுகொள்ளு, நீட்டவேகுகையில்வைத்துகாயவை

த்து நினைவாகக்கையிடேகுளிந்துபோகும், பூட்டுவாவெங்நீரைக் கொப்பரையிற்காய்ச்சிப் புகழாகத்துளிசூதமதுக்குள்போடே. 747

போட்டுடனேகுளுந்ததண்ணீர்போலேயாகும் போக்கானபலா சம்பரிட்சைசெம்மை, காட்டுடனேநாலுபலம் நிறுத்துக்கொண்டு நல மானதங்கமது பலந்தானென்று, பூட்டுடனேகல்வத்திலிதனைப் போட்டுப் புகழானகருத்துளசிசாறுவிட்டு, தொட்டுடனேநாள் மூன்று அரைத்துபின்பு துடியானகெந்தகத்சேருபோடே. 748

சந்திரோதயம்.

போட்டரைத்துத்தினமொன்று ரவியில்சேர்த்துப் பொடி யாரைக் காசியென்ற மேருக்கேற்றி, நீட்டரைத்துவாலுயின் மேலே வைத்து நினைவாகத்தீயிடுவாய்பன்னிரண்டுசாமம், கூட்டரைத்து ஆற விட்டுயெடுத்துப்பாரு கொடியானமாதளம்பூ நிரம்போல் நிற்கும், தொட்டரைத்து சந்திரோதய மென்றநாமந் துலங்கியிதின் மகிமை சொல்ல முடியாதாமே. 749

முடியாதசெந்தூரங் குன்றியுண்ண முனையானகாயமதுகிவந்து மின்னும், பிடியாதமதயானைபிலனுக்கொக்கும் பெண்களுடனனு போகம்பண்ணினுக்கால், துடியாதநூறுபேர்வேணும்வேணுஞ் சுக் கிலந்தானூருகின்றநீகெணியாகும், அடியாதநோயெல்லா மறுத்துப் போடு மம்மம்மாசெண்பகத்தின்கண்போலாமே. 750

ஆமிந்தச்செந்தூரமாயிரத்துக்கொன்று அணைந்திடவே யிரு பத்துஐந்துமாற்று, போமிந்தசரக்குகளிற் போட்டுப்போட்டுப் புக ழாகக்கட்டுண்டுமெழுகுமாகும், காமிந்த துரிசியின்மேல்வாய்நீரா லப்பி கடுரவியிற்போட்டிடவேகுருவுமாகும், வாமிந்ததுரிசியினல் சூதங்கட்டும் மகத்தானலிங்கமது ஒருபயந்தான். 751

ஒருபலந்தான்கட்டியாய் வாங்கிக்கொண்டு உத்தமனே அயச் சட்டிக்குள்ளேவைத்து, சுருபலந்தான்சுருக்கிடவே மெழுகாய்ப் போகும் சூட்சாதிவேதைகள் கோடியுண்டு, கருபலந்தான்ரவிமதி யுஞ்சேர்த்து கண்காணுமாற்றதுவுமதிகங்காணும், நிருபலமாய்நவ தோகநூற்றிலீய நிச்சயமாய்மாற்றென்னபனிரண்டாமே. 752

மகாதிராவகம்.

ஆமப்பாதிராவகத்தைசொல்லேவனப்பா அப்பனேஎருக்கோடு குப்பைமேனி, போமப்பாதாழையொடு அறுகுவாழை போரான

மத்தை யொடுதுத்திகள்ளி, தாமப்பாதென்னிலையும்நாயுரு நாணல் தயங்காத பிரண்டையொடுமுடக்கொத்தானும் சாமப்பாபுரசோடு முள்ளங்கித்திப்புல் தயங்காதேகாயவைத்துச்சாம்பலாக்கே. 753

காயவைத்துச்சுட்டுமேசாம்பலாக்கிக் கலங்காறேவெவ்வேறாய்த தண்ணீர்கரைத்துத், தோயவைத்து மூன்றுநாள் தெளிவைவாங்கிச் சுகமாகவடுப்பெரித்து உப்பாய்க்காய்ச்சி, மேயவைத்து ஒவ்வொன் றாய்க் காய்ச்சிவெவ்வேற் றெகிழாமலொவ்வொன்றுபலமுந்தூக்கிச், சாயவைத்துமானிறொடு ஆடுயானை தயங்காத ஒட்டையொடு கழு தைதானே. 754

தானென்றகுதிரையொடு மாடுயேழுந் தனித்தனியே நீர்வாங்கி உரைப்பாய்க்காச்சி, வானென்றரண்பெலந் தூக்கிக்கொண்டு வள மான முசல்புழுக்கையெலிப்புழுக்கை, தேனென்றவவ்வாலின்புழுக் கையோடு சிறப்பாகயிவைமூன்றுஞ்சுட்டசாம்பல், கானென்றரண்டு பலங்கடல்நீர் தன்னில் கரைத்திறுத்தெளிவிறுத்துஉப்பாய்க்காச்சே.

காச்சியதுபலம்பத்து நிறுத்துக்கொண்டு கடிதானவீரமது பலமுமூன்று, காய்ச்சியேதாளகமும்பலமுமூன்று தயங்காதசிலை யதுவும் பலமுமூன்று, பாச்சியவெள்ளையதுபலமுமூன்று பரி வானகெந்தகமும்பலமுமூன்று, வாச்சியேதுத்தமதுபலமுமூன்று மகத்தானபேதியது பலந்தானூறே. 756

ஆறுகச்சாரமது பலந்தானாறு அடைவானகல்லுப்புபலந்தா னாறு, ஏறுகயிந்துப்புபலந்தானாறு எளிதானவளகிலுப்புபலந்தானாறு போராகவெண்காரம் பலந்தானாறு பெலத்துநின்ற சத்தியென்ற சாரமாறு, நீறுகப்பூநீறுபலந்தானாறு நிலைத்தகெந்திவுப்பதும் பலந் தானெட்டே. 757

எட்டாதகடல்நுரைதான்பலமுமெட்டு இயல்பானதுரிசியது பலந்தானெட்டு, காட்டாதவெடியுப்புபலந்தானாறு கலங்காதசீன மது பலமும்நீறு தெட்டாதபரங்கியுடசாராய்வார்தது சிறப்பாக யேழுநாளரைத்துலர்த்து, பட்டாதஐந்துபங்கு பண்ணிவைத்து பக்குவமாயொரு பங்குகலயத்தூட்டே. 758

ஊட்டியே மேற்சட்டி கவிழ்த்துமூடி உத்தமனே மாமிஷத் தாற் சீலைசெய்து, நீட்டியேஅடுப்பேற்றியெரிநேர்பாக நிலைத்தவுப்பு கையோடேசலந்தான்வீழும் காட்டியேபுகைநின்றாய்திராவகமும் நிற்கும் கலங்காதேமுன்வைத்த சரக்கில்வார்த்துச், சூட்டியேரவி யில்வைத்துக்கல்வத்திட்டு துடியாகத்தீநீரைவாங்குவாங்கே. 759

வாங்குமே ஐந்துதரமூட்டியூட்டி மறவாதே அரக்கானகுப்பி யிலேவாரு, தேங்குமேமணற் கல்லுரோமமத்தி சிறப்பானநவ லோக மெல்லாஞ்சாம்பல், எங்குமேமுகத்திலந்த தூபம்பட்டால் வெளிதிலே கண்களெல்லாங் கரைந்துபோகும், பாங்குமேதூபமுகம் பார்த்து நின்று பதருதேவிறகைமெள்ள அடுப்பிற்போடே. 760

போட்டிடுதூரத் தேநின்றுகொள்ளு புகைமேலேபட்டுதென் றால் சடம்விரிந்துபோகும், வாட்டிட்டுசரக்குகளிற்றேய்த்துப் போட மகத்தானமெழுகாகும் வேதையாகும், நீட்டிட்டுயேற லென்றகிளிஞ்சில் தன்னை நீரோடேயுவ 'மண்ணுந்தண்ணிலே போட்டு, காட்டிட்டு அடுப்பேற்றி யெரித்துவாங்கி கனபுடமாய்ப் போட் டெடுத்துத்தூளாய் பண்ணே. 761

பண்ணியேதிராவகத்திலிதனைப்போட்டு பதருமே மூன்று தரங் கழிந்தபின்னை, நண்ணியேகல்வத்திலரைத்துருட்டி நலமாக அகலிலிட்டு புடத்தைப்போடு, கண்ணியேயைந்துதரந் திராவகத்தி லரைத்துக் கடுகியேபுடமைந்துபோட்டுத்தீரு,திண்ணியேபொடியாக் கிப்பீங்கானில்வைத்துச் சிற்பரம்போ சாரமொருகட்டிவாங்கே.

சாரக்கட்டுசுன்னம்.

வாங்கியொருகலசத்திற் பொடிக்கீழிட்டு வாகானசாரமென்ற கட்டிவைத்து, தேங்கியேமேலும்மிந்தப்பொடியைப் போட்டுச்சிறப் பாக மேல்மூடிசீலைசெய்து, தாங்கியேஐந்தெருவில்புடத்தைப் போடுதயங்காதே ஆறவிட்டெடுத்துக்கொண்டு,ஓங்கியேபொடியெல் லாம் பொடித்துக்கொண்டு உத்தமனேமுன்போலக்கட்டிவையே.

கட்டிவைத்து முன்போலப் புடத்தைப்போடு காணப்பாரேழு புடம்போட்டுத்தீரு, அட்டிவைத்ததந்தம்போலிருக்கும்பாரு ஆச் சரிய சாரத்தின்மூடிவு சொல்லப்போகா, முட்டிவைத்து சாரத்தில் செயநீர் கோடிமூதண்டகுருக்கோடி செந்தூரங்கோடி, பொட்டி வைத்துத்திறந்ததுபோல்வாதமாச்சு போக்கிதிலே மெத்தவுண்டு புகட்டியாட்டே. 764

ஆடவேசாரத்தைக்கட்டியாக அதின்மேலே சவ்வீரபூரம் போட்டு நீடவேபுழுகோடு சூதமைந்தும் நேரானவாய் நீராலரைத் துப்பூசிக், கூடவேசுண்ணம்புக்குகையிலிட்டு கூசாதேகரி யோட்டி ஊதிவாங்கு, சூடவேநீராகும் பீங்கானில்வைத்துத் துடியாகப்பனி யில் வைக்கச்செய்நீராமே. 765

ஆமின்னஞ்செய நீரால்சொல்லக்கேளு ஆச்சரியஞ்சூதவித்தை கல்வத்திட்டு, வேமுன்னஞ்செயநீராலரைத்தரைத்து வெகுளாதேர விதனிலேகாயப்போடு, தாமின்னமிருபதுநாளரைத்தரைத்துச் சார் பாகரவிதனிலேகாயப்போடு, சேமின்னமேழுசட்டை நீக்கிப்போடு சேர்ந்திருக்கும்சந்தானுஞ் செய்திகேளே. 766

சேதிகள்தேங்காயின் குடுக்கையிலேவார்த்துச் சிறப்பாகமெழு கடைத்து வைத்துக்கொண்டு, வாதிகேள்ரவிமதியில்தகடுவாங்கி வள மானரசந்தடவிப்புடத்தைப்போட்டு, பாதிகள் பதினுறுமாற்று மாகும பாசத்தில் வேதையுமாம் பாருபாரு, சோதிகேனிந்தரசந் தின்றால் காயஞ்சுறுக்காதச்சட்டைதக்கிவாலையாமே. 767

கெந்தகத்தயிலம்.

ஆமின்னங்கெந்தகத்தின் தயிலஞ்சொல்வேன் அப்பனேகெந்த கந்தான்பலமும்பத்து, காமின்னங்கற்றாழைக்குள்ளேவைத்து கடுஆ வினெய்பாலிற்சுத்திபண்ணி, தேமின்னங்கல்வத்திலிதனைப்போட் டுச் சிற்பான குருகத்திவிரையைவாங்கி, ஓமின்னமயிற் கொன்றை விரையிநாடே உற்பனமாய்ச்சமனுக்கி வெங்காய்ச்சாறே. 768

சாற்றினு லரைத்தரைத்து வில்லைகட்டி சார்வாகப்பூப்புடத் தில் தயிலம்வாங்கு, தேற்றினல் தயிலம்விட்டுக் கெந்தகத்தை சிறப்பாக விருபதுநாளாட்டு ஆட்டு, பேற்றினல்துரிசி வெள்ளைபலந் தானென்று பேராகக்கட்டிய தோசாரமொன்று காற்றினல்கட்டிய தோர் உப்புவொன்று கலங்காதே கூடவிட்டுமூன்றுநாளாட்டே

ஆட்டியயின்காசியென்ற மேருவிலேபோட்டுஅப்பனேமூக்கின் வாய்க்கதம்பைவைத்து,மூட்டியபின்கும்பித்துச் சட்டியிலேபோட்டு மூக்கின்வாய்ப் பிரம்பைவிட்டு மண்ணைக்கொட்டி, தீட்டியபின் அடுப்பேற்றியடுப்புக்குள்ளே சிறப்பாகப் பீங்கானும்பரணிவைத்து, ஓட்டிய பின்கட்டியிலே எருவைப்போட்டு உத்தமனே தயில மெல்லாமெடுத்துவையே. 770

தயிலமெல்லாம் வீழ்வதற்குமூன்று புடம்போடத் தங்காம லிறங்கிப்போம்பீங்கானுள்ளே, அகிலமெல்லாமீந்தானுந்தயிலவிலைக் கொவ்வாதாச்சரியம்பரிமேலே பூசிக்காய்ச்ச. பயிலமெல்லாந்தங்க மதுசெம்பேயாகும்மாசற்றசெம் பொன்னுசவலோகங்கோடி, தயில மெல்லாமுன்னையிலேசெம்பையீயக் கண்கொள்ளாவேதை வுமாங் கண்டுபார்.  771

### கேசரத்தின் தயிலம்

பாரப்பாகேசரத்தின் தயிலஞ்சொல்வேன் பரிவானகேசரந்தான் பலந்தானூறு, சேரப்பாயிளவயது ரோமந்தன்னை சீயக்காய்கொதியிட்டுக்கழுவிப்போட்டு, சாரப்பாயெள்ளுபோல் நறுக்கிக்கொண்டு சாகாமலெண்ணெய்தண்ணில் தோய்த்து, சீரப்பாசட்டியிலே வறுத்துக்கொண்டு சிறப்பான கலுவத்தி லிதனைப்போடே. 772

போடவேகெந்தகந்தான் பலமும்பத்து புகழானதாளகமும்பலமுமைந்து, நாடவேசிலையதுவும் பலமுமூன்று நஞ்சானவீரமதுபலமும்ரண்டு, கூடவேகட்டியதோர் சாரமொன்று குறிப்பாகக்கட்டியதோர் கல்லுப்பொன்று, தேடவேதுரிசுகுரு பலந்தானொன்று சிறப்பாகக்கூடவிட்டுத் திறமயாட்டே. 773

ஆட்டுவதுயெருக்கம்பால் நாலுசாமம் அப்பனேமெழுகாகும் பதத்தில்வாங்கிப், பூட்டுவதுதெல்லுப்போல் வில்லைகட்டி பேரான பூப்புடத்தில்தயிலம்தாங்கி நாட்டுவதுபரணியிலேயடைத்து நலமாக அரப்பொடிதான் பலமுமெட்டு, மூட்டுவதுதயிலத்திற் பிசறிக்கொண்டு முயற்சியாயக்காரமிட்டு வுருக்கிடாயே. 774

### அயச் செம்பு

உருக்கிடவேயைந்துதரந் தயிலத்திற்பிசறி உத்தமனேரவிபோலே செம்புமாகும், சொருக்கிடவேமதிதனிலே வைப்பதுக்கு ஒன்றுதுடியாகமாற்றேழு காணுங்காணும், அருக்கிடவேதங்கமிட்டு வுருகிக்கொண்டு ஆ ; யென்ற சூதமிட்டுக்கெந்தியிட்டு, பருக்கிடவேவாலுகையில் செந்தூரித்தால் பதினாறுமாற்றாக விளங்கும்பாரே. 775

பாரின்னந்தாளகத்தின் செம்புசொல்வேன் பருகல்லுஞ்சுண்ணும்புசுட்டுக்கொண்டு, காரின்னம்தாளகத்தைக் கிளிபோற்கட்டுக் கச்சுண்ணாங் கீழ்மேலுபூசிநன்றாய், வாரின்னம் வெந்நீரைவிட்டுநீற்று மறவாதேயிருபத்து வென்றுநீயும், சேரின்னங்கூழ்ப்பாண்டங்காடியிலேபோட்டுத் திறமாகக்கொதிக்கவிட்டு யிறக்கிடாயே. 776

### தாளகம்

இறக்கியேகல்வத்திற் சேரைபோட்டு இதமானகுலாமல்விச்சாற்றாலாட்டி, அறக்கியேயுரைவிட்டு யைந்தூளாட்டி ஆடுதின்னாப்பாளைசாற் நாலுசாமம், மறக்கியேசிறுகுட்டித் தக்காளிச்சாறு மைந்தனேயமுரியிலைச் சாற்றாலாட்டு, நறுக்கியேயெருக்கினுட பழுப்புச்சாறு நலமானவகத்தியுட பழுப்புச்சாறே 777

பழுப்பானகெருடனுட கிழங்குசாறு பரிவானயெருக்கினுட
கிழங்குச்சாறு, கொழுப்பானவெள்ளாட்டு ரத்தத்தோடு கூரான
முசல்ரத்தங் கோழிரத்தங், கொழுப்பானவெள்ளைமந்தாரைபூச்சாறு
திறமானயிந்திரமாங் கோபப்பூச்சி, நழுப்பானபூநாகம் நூறுபோட்டு
நல்கரைத்து ஒவ்வொருநாளுலரப்போடே. 778

உலர்ந்தபின்புதுரிசிபலம் நாலும்போடு உத்தமனே வெண்காரம்
பலந்தான்மூன்று, அலர்ந்தபின்புவெடியுப்பு பலந்தான்ரண்டு அப்ப
னேவீரமது பலந்தானொன்று, கலந்தபின்புசினமது பலந்தான்போடு
கற்பூரசிலாசத்துப் பலந்தான்ரண்டு, குலந்தனக்குக் கோடாலி
குடோரியொன்று கூசாதேகூடவிட்டு அரைத்திடாயே. 779

அரைத்திடவே யெலியாலம்பாலலாட்டி அப்பனேமூன்றுநாள
ரைத்துப்பின்பு, நிரைத்திடவேதெல்லுப்போல் வில்லைகட்டி நேராக
சரவலையிலூதுலூது, துரைத்திடவேயுருகியது சத்தாய்வீழுஞ்சித
றுமலெடுத்தெல்லாங் கடடைதானும், புரைத்திடவே பின்பொருகா
லுருக்கிப்பாரு பொன்போலாஞ் சத்தெல்லா மெடுத்துக்கொள்ளே.

கொள்ளவே குகையில்வைத்துக்காரமிட்டுக் கூசாதேவுருகியெல்
லாமணியாய்வாங்கே, விள்ளவேநவலோகம் நூற்றுக்கொன்றுமேவிய
காசெடைதான் சத்தையீய, துள்ளவேபதினாறுமாற்றுமாகுந்துடியா
னசத்திலே கிண்ணிவார்த்து, அள்ளவேசீலைசெய்து வாலுகையில்
வைத்து ஆதியாஞ்சூதமிட்டுக் கொதிக்கவையே. 781

கொதிக்கையிலே கருமத்தஞ்சாறுவாறு கூசாதேவெண்ணெ
யைப்போலாகுமட்டும், விதிக்கையிலேவெண்ணெயெல்லாம் வழித்து
க்கொண்டுமேலான குளிர்ந்ததண்ணீற் தன்னிற்போட்டு, மதிக்கையி
லே ஆரையிலைக்கவசங்கட்டி வகையாகயீரஞ்சு புடத்தைப்போடு,
துதிக்கையிலேமணியாலே சிவத்தைப்பண்ணு செனனமென்றமூவே
மூமோக்ஷந்தானே. 782

தானென்ற மணியாலே கெந்தூரம்பண்ணு சமர்த்தாகக்குரு
பண்ணுகளங்குபண்ணு வாவென்றவெளிகடக்கா சித்திபண்ணு மாசு
ற்றயோகசித்தி கெவுனசித்திபண்ணு, தேனென்ன வமுர்தமங்கே
சித்திபண்ணு செகசால வார்த்தையெல்லாஞ் சகம்போலெண்ணு,
கோனென்றகுருதேடி கூப்பிட்டாலேனென்பாளாயிதானே. 783

சாதிலிங்கவைப்பு

தானென்றசாதிலிங்கவைப்புக்கேளு சாற்றறியசூதமதுபலந்தா
னூறு, தேனென்றகெந்தகந்தானிருபத்தைந்து தேர்ப்பாககெந்தகத

தைஓட்டிவிட்டு, வானென்றகணவில்வைத்து உருக்கிக்கொண்டு வரிசையாய்ச் சூதத்தையதிலேபோட்டு, கானென்ற அயத்துடுப்பால் கிண்டிக்கிண்டுக் கறுப்பாகத்தூள்போலேயாகும்பாரே. 784

ஆகுமப்பாகெந்தகத்தில் காலத்தோன்று அசையாதேவெடியுப் புப்பொடித்துப்போடு, வாகுமப்பா செம்பாலேகுடம்போலான வகையாக அதற்குள்ளே தூளைப்போடு, ஏகுமப்பா அரைவாசி மட்டும்போடு எழிலானவாலுகையின் மேலேவைத்து, போகுமப்பா தீயெரிப்பாயெட்டுநாள்தான் புகழாகப்பதங்கித்துலிங்கமாமே. 785

ஆமப்பாபதங்கித்துப் பவளம்போலே அசையாதுமேல் நின்றததுதான்லிங்கம், போமப்பாபாண்டமது செம்புத்தொட்டி புகழான அடியில்நின்றால் தீமுறுகலாச்சு, காமப்பாநடுவில்நின்றால்கார்முகிலுமாச்சுகடுகியிதைமெழுகுசெய்யில்வேகையாகும், சேமப்பாஷாண முப்பத்திரண்டு சிறப்பானவைப்புக்குநாலுமாச்சே. 786

வைப்பானநாகமென்ற பாஷாணத்தைவகையாக சொல்லுகிறேன் வேதையாக, மெய்ப்பானநாகமதுபலந்தான்பத்து விரவியேயிலுப்பை நெய்யிற்சுத்திபண்ணி, நைப்பானதகடுகட்டிப்புளியிலைபோல் நறுக்கி நயமானகூத்தனென்ற யிலையரைத்து, கைப்பானதகட்டுக்குகவசங் கட்டிகடுகியைந்து வெருணிலேபுடத்தைபோடே.

போட்டபின்புயீரைந்து புடந்தானப்பா புகழான அயச்சட்டித்தனிலுருக்கி, நீட்டபின்புகுமரிவேர் பொடியாய்நறுக்கி நிற்வாக கூடவிட்டுஅயத்தால்கிண்டு, மூட்டபின்பு பனிரண்டுசாமந்தானு முத்தமனே வேர்போட்டுக்கிண்டக்கிண்ட, மாட்டபின்பு மஞ்சள் நிறம்பற்பமாகுமைந்தனேயிதை நிறுத்துக்கல்வத்திற்போடே. 788

போடவேநாகமென்றதுள்தான்பத்து புகழான சூதமதுபலந்தான்பத்து, நீடவேதுரிசியது பலந்தானைந்து நேர்பானசூடனது பலமூமைந்து, வாடவேவெண்சாரம் பலந்தானைந்து வரிசையாய்க் கெந்தியதுபலமுமைந்து தேடவேவெள்ளையது பலமுமூன்றுசிறப்பான வீரமதுபலமுமூணே. 789

தீமுருகல்பாஷாணம் கார்முகில்பாஷாணம்.

மூணோடு தாளகமும் பலமுமூன்று முயற்சியாஞ்சிலையதுவும் பலமுமூன்று, தூணோடு யிதுவெல்லாங் கல்வத்திட்டு துடியாமல் பொடிபண்ணிசூட்சங்கேளு, நாணுக்குமட்டிமாதளம் பூசாற்றில்

கரைத்து வெட்டுநாள்ரவியில்வைத்து, பூநீறுடுபொடி பண்ணிக்குப்பிக்கேற்றி புகழாகவாலுகையில்வைத்திடாயே. 790

வைத்திட்டு தீயெரிப்பாய்ப் பனிரண்டுசாமம் வாகானகமலம் போல்தீயைமூட்டு, கைத்திட்டு ஆறவிட்டு மூன்றுநாள் போடுசாதக மாயாறியபின்னுடைத்துப்பாரு மொய்த்திட்டுமேலேறிப்பதங்கிப் போகு மூர்க்கமாம் பாஷாணம் இந்திரனும், கைத்திட்டவிலாபக்கஞ் சோரமென்றநாமங் காணப்பா அடியில் நின்றால் நாகமாமே. 791

ஆமென்றபாஷாணமூன்றுதானும் அன்றெரித்தார் மன்மதனை யீசன்றானும். ஓமென்றநெற்றிக்கண்சுவாலைக்கொக்கும் உத்தமனே சரக்குக்குக்காலகாலன். போமென்ற வெகுதீரன் வெட்டியோடும்போனபுன்பு கற்பகமாம் விருக்ஷமப்பா வேமென்றகாலனுண்டகற்பமம்பா விரைந்துண்ணக்காயசித்தி மண்டலத்தில்தானே.

சித்தியாஞ்சூதமென்ற பாஷாணவைப்பு செப்பரிது சித்தருட நூலிலில்லை, பத்தியாம்பாஷாண பணந்தானென்பார் பரியாசபேச் சாச்சுவாதப்பேச்சு முத்தியாஞ்சூதமென்ற பாஷாணத்தைமூன்றாற் றுக் கொன்றிடவேபத்தும்பத்தும் வெத்தியாம் பாஷாணம் யச்சைதன்னில்வைதைவெகுநூலை யாராய்ந்து சொன்னேன்காணே. 793

இந்திரகோபம் பூதபாஷாணம்

காணப்பாயென்னூலி லொன்றுதப்பில் கடைகெட்டபோகரென்றுசொல்லிக்காட்டு பூணப்பாகைதப்பில் போக்குதப்பும் புத்தியுண்டாய்ச் செய்திடிலோவென்றும்பொய்யா, வீணப்பா ஒரு தரந்தான் தப்பிற்றானல் மீளவதைமூன்று தரமறைத்துப்பாரு, தூணப் பாதுரும்யானவாறுபோலச் சொல்முறையைமறவாதே சூட்டிப் பாரே. 794

சூட்டியதோரென்நூலில் பாஷாணங்கள் சுளுக்காகும்வேதைக்குபச்சைதன்னில், பூட்டியதோர்பூட்டென்ன பாஷாணதில்பிரித்திதற்குள் வேதையென்று சொல்லேனில்லை காட்டியதோடடித்துடையில்புண்தனக்குக் கண்மறையச்சீலையினால் மூடினாபோல் மூட்டென்னவிதுதான்மைந்தா மூட்டாளேயிம்மட்டும்மறிந்து ஆடே.

ஆடவேசூதமதுபலந்தான்பத்து அந்திடைக்குவெள்ளையென்ற பாஷாணந்தான், நீடவேகெந்தியது பலமுமைந்து நிலையானவெடியுப்புபலமுமூன்று மகத்தான தாளகமும் பலமுரண்டு மூடவே சிலையதுவும் பலமுமொன்று முயற்ச்சியாய்க்கல்வத்திற் பொடியாய்ப்பண்ணே. 796.

பொடிபண்ணித்தவசியென்ற முருங்கைச்சாற்றில் போக்கோ டேயேழுநா ளரைத்துமைபோல், முடிபண்ணிரவியிலிட்டு மேருக் கேற்றிமுயற்சியாய் வாலுகையின் மேலேவைத்து, அடிபண்ணிதீயெரிப்பாய் பனிரண்டுசாமம் யாறவிட்டுராமாறு மகலிற்போடு, கெடிப் பண்ணி பனிரண்டுசாமமானல் கெடியாகக் குப்பியைத்தா னுடைத் துப்பாரே. 797

உடைத்திடவேமேலோடி பசுங்கித்துநின்றால் உத்தமனேசூத மென்ற பாஷாணமாச்சு, அடைத்திடவேயடியில் நின்றபாஷாணந் தான் அப்பனேநீலமென்ற பேருமாச்சு, குடைத்திடவேயடியில்நின் றால் காகபாஷாணங்கூறிதுக்குள்கரைகண்டு சொல்லப்போகா,நடைத்திடவேசிவகாமி சொல்லக்கேட்டு நாதாக்கள்பதமறியச் சொன் னேன்பாரே. 798

சொன்னதொரு சாத்திரபலங்களெல்லாஞ் சொற்பெரியமணித் தாய்க்குக் குருவுமாச்சு, பன்னதொரு மனதிலுள்ளகருவையெல் லாம் பாடினேன் வெட்டவெளி யாகத்தானும், மன்னரொருநாதாக் கள்நூலைப்பார்த்து மவுனமாய்வைத்ததெல்லாம் வெளியிற்போட் டார், இன்னதொரு சாஸ்திரத்தைக்குள்வைத்து இழுக்காகும்நூல் களையே மெளிவைத்தாரே. 799

வைத்ததொரு சாஸ்திரத்தில்வழலைதன்னை வகையாகச்சொல் லாமல் கருமறைத்துபோட்டார், மெய்த்ததொரு வீரமென்றப்போ க்குதன்னை வெளியாகச் சொல்லாமல் சூத்திரமாய்ச் சொன்னார், தைத்ததொரு சரக்கானவைப்புதன்னை நலமாகஉளித்துவிட்டால் வாதமெங்கேசெய்வார், பைத்ததொரு வாதத்தியென்ன பாங்கான வழலையொரு வீரந்தானே. 800

தானென்றவழலையது சுன்னமானல் சரக்கெல்லாங் கண்டுசுன் னமாகும், வேனென்ற மகாவீரம் வாச்சுதென்றால் வேதையென்ற சொல்லுக்கு உறுதியாகும், கானென்றகல்லுப்பு கரியில்நீற்று கசமா னசரக்கெல்லா மூறல்போகும், வேனென்றமகாவீரம் வாய்க்காவிட டால் வேதையென்றசொல்லெல்லாம் விழலாய்போமே. 801

குங்குமபாஷாணம்

போமென்றகுங்குமப் பாஷாணவைப்பு காட்டுகிறேன்புத்தியில் லாப்புல்லருக்குங்காண, வாமென்ன சூதமதுபாஷாணம்பத்து அழ கானகுதிரைப்பல் பாஷாணம்பத்து, வேனென்ற வெண்காரபொறி

பலந்தான்பத்து வெளுப்பானசீனத்தின் பொரிதானைந்து, காமென்ற அன்னத்தின் பேதிபலமைந்து கடிதானகெந்தகமும் பலமுமைந்தே. 802

பலமானதாளகந்தான் சிலையுமானால் பாங்காகநிறுத்தல்லோகல் வத்திட்டு, குலமாகுமெலுமிச்சம்பழச்சாறுவிட்டு குமட்டியேயரைத் தேழுநாள் ரவியிற்போட்டு, தலமாகுங்காசியென்ற மேருக்கேற்றி தளறுமல் வாலுகையின் மேலேவைத்து, நிலமாகும்பனிரண்டு சாமந் தீமூட்டி நிசமாகும் பதம்பார்த்து ஆறப்போடே. 803

ஆறவிட்டு உடைத்துப்பார் கட்டியாகுமப்பனே குங்குமத்தினிறமதாகும், நீறவிட்டசரக்குக்காலனுகும் நெடுங்காலமிருக்கவென்றால் வீசமிதையுண்ணு, தேறவிட்டுமண்டலத்திற் சடைகக்குஞ் சித்தர்கள் தானுண்டல்லோ காயசித்தியாளுற், மீறவிட்டுமெழுகாகப் பண்ணிக்கொண்டு விரவியத்தோர்குதத்திற் போட்டுப்போடே. ()

போடவே ஆனையைப்போல்வீறிட்டுச்சாகும் போக்கோடே தங்கமிட்டு காகமிட்டு, ஆடவேகெந்தியிட்டு செந்தூரித்து ஆயிரத்துக் கொன்றிடவே னம்மைந்தாகும், வாடமேமயங்காமல் சரக்குவைப்பு வரிசையாயொவ்வொன்றுய்ப் பார்த்துத்தேறு, தேடவேகாயத்தைச் சுத்திபண்ணு செகச்சாலத்துன்மார்க்கச் சட்டைபோக்கே. 805

லவணபாஷாணம்

போக்காணலவணமென்ற பாஷாணத்தை பொல்லாதவாதிக்குக் காட்டவேண்டாம், தக்காணகெதிஞலென்றுகேட்கில்செகசால மயக்கத்திற் சிக்கிக்கொண்டு நோக்கானபெண்ணுசைதனிலுழன்று நோயெத்திக்குடிகெடுத்தால் றுணக்கமாகித், தாக்கானலோகத்தோர் குடிகெடுத்துசசங்கியாதேயிருப்பாள் சண்டிதானே. 806

தானென்றமனதை யுற்றுப்பார்த்தரானல் சண்டாளகோபத்தை நிறுத்தமாட்டார், ஊனென்றசுகத்தையல்லோ யிச்சித்துக்கொண்டு உற்றுநின்றசை யோகத்தாலேகெட்டு, வானென்ற பொருள் தேடமாட்டார்மாண்பர் மகத்தான அறுதலத்தின் தரிசனையைப்பார்ப்பார், பானென்ற ஞானவெள்ள முண்டுகொண்டு பதறுமலிருக்கரியார் மூடர்தாமே. 807

தானென்றவெடியுப்பு பலந்தானூறு சாதகமாய்ப்பாண்டத்திற் போட்டுபின்பு, காளென்றகாடியொடு லெலுமிச்சம்பழத்தால்கலந்துகொண்டு சமனுக உப்புக்கு நாலு, பானென்றசாறுவிட்டுகரையக்கா

ய்ச்சி பக்குவமாய் வடிகட்டிப் பதத்திற்காச்சி, வானென்றயைந்துத ரங்காச்சிக்கொண்டு மார்க்கமாய்ரவியுலர்த்திபிரம்பாய்வையே. 808

பிரம்பானபூநீறு பலந்தாநூறு புளிப்பானகாடி யொடுளனுமிச் சம்பழச்சாற்கூட்டி, திரமானதெளிவிருத்துஉப்பாய்காச்சிச்சேர்ந்து நின்ற உப்பதனை முன்போல்கரைத்து, அரம்பானவொரு நிரைக்கு நாலு நிரைதண்ணீர் அரட்டையாய்விடுகாதே பைந்துதராங்காச்சி, உரம்பான உப்பெடுத்து ரவியில்வைத்து உத்தமனே கல்லுப்புபலந் தானூறே. 809

நூறேறுடுபழச்சாறுபுளித்தக்காடி நுகர்ந்துநின்றநானூறுபலந் தான்வார்த்து, காறேறுடுகொதிக்கவைத்துக்காய்ந்த பின்புகலங்காமல் வடிகட்டி உப்பாய்க்காச்சு, வீறேறுடியைந்துதராங் காச்சி காச்சி விள ங்கியதோரவியிலிட்டுப்புபலம்பத்து நிறுத்துத், தாறேறுடுகாச்சிதோர் வெடியுப்புப்பார்த்து தாழ்ச்சியில்லாப்பூநீறுவுப்புபத்தே. 810

உப்போடு வெள்ளையென்றபாஷாணம்பத்து உயர்ந்தநின்றசூர மதுபலந்தான்பத்து, அப்போடுகெந்தமதுபலமும்பத்து ஆசியென்ற துரிசியது பலமும்பத்து, வைப்போடுதாளகமும் பலமுமைந்து மாச ற்றதாளகமுஞ்சிலையதுவுஞ்சியதுவுமூணே. 811

மூணோடுயிதுவெல்லாங் கல்வத்திரட்டு முப்புரத்தையெரித்த குப்பைமேனிச்சாறு, பூணோடுயேழு நாளரைத்துமைபோல்பொடி யாக்கிகாசியென்ற மேருக்கேற்றி, வாணோடுவாலுகையின் மேலே வைத்துமறவாதேதீமூட்டிக் கமலம்போல, துணோடுபனிரண்டு சாம மானல்துடியாணலவணமென்ற பாஷாணமாச்சே. 812

ஆச்சென்றகொடுஞ் சிங்சித்தயிலஞ்சொல்வேன் ஆதலையும் வாலுழுவை புரசுருட்டி, நீச்சென்ற கஞ்சாவூமத்தையுங்கு கெடுதா னகுருக்கத்தி அழிஞ்சில்புன்னை, வாச்சென்றதாளையொடுவாளம்வே ம்பு வகையான நீர்வெட்டிசமூதைமுள்ளி, காச்சென்ற பல்லைந்தும் விரையைவாங்கிகணக்காகப்படியொன்று அளந்துபோடே. 813

போட்டெல்லாங் கெருடனுகிழங்குச்சாற்றில் புகழாகவூறவை த்துமூன்றுநாள்காண், நாட்டிதெல்லாங்கல் வத்திலிட்டுயாட்டி அதி ற்போடுமருந்தினைத்தானறையக்கேளு, நீட்டிதெல்லாமரிதாரஞ்சிலை யுங்கெந்தி நேரானவெடியுப்பு சீனஞ்சூடன், பூட்டிதெல்லாஞ் சாம் பிராணிச்சாரம்வீரம் புகழ்ந்தகருங்குங்கிலியப்பூநீர்தானே. 814

தானனென்றதுரிசியோடு அன்னபேதி சாதகமாய்வகைக்குர ண்டுபலந்தான்போடு, காளனென்றமுன் மருந்தோடொக்கப்போட்டு

கலந்துதரைப்பாய்கெருடனுட கிழங்குச்சாற்றால், தேனென்றவெட்டுநாள் வெழுகுபோலாட்டி, தெல்லுப்போல் வில்லைபண்ணியுலரப்போடுபாளென்றபூட்புடத்தில் தயிலம்வாங்கி பாச்சியெல்லாம்பரணி தனிலடைத்திடாயே. 815

அடைத்திட்ட தயிலத்தில் துரிசுவெள்ளைப் பனேபலமொன்று நிறுத்துக்கொண்டு, கிடைத்திட்டதயிலத்தில மத்தித்தப்பா கெடியானலிங்கத்திற் சுருக்குப்போட்டு, படைத்திட்டலிங்கமதுமெழுகுமாகும் பாங்கானநவலோகம் வேதையாகும், முடைத்திட்ட மெழுகாகும்பரிசினத்தில் மூதண்டவேதையுமாங்கண்டுபாரே. 816

சூதக்கட்டு

பாறென்றசூதமொரு பலந்தானெட்டு பாய்ச்சியல்லோ கல்வத்திலிட்டுநீயும், வாவென்றதயிலமது ஏருதுளிதான்குத்தி அரைத்திடவே வெண்ணெயைப்போ லாகும்பாரு, காரென்றகிளிக்கட்டிச்சூடன் தீயில்கலங்காதே யிருநாழிவாட்டிப்பின்பு சீரென்றகரண்டியிலேயெண்ணெய்குத்தித் திறமாகவுருக்கிடவே மணியுமாமே. 817

ஆமிந்த மணிதனக்குசாரணையைச்செய்ய அண்டரண்டபதமளவும் போகலாகும், போமிந்தமணிதனையே வாயில்வைத்துப் புகழானயுமிநீரை யுள்ளேகொள்ள, சாமிந்தசடந்தானும் சட்டைகக்கி சந்திரர்கள் சூரியர்கள்போலாந்தேகம், தாமிந்தப்படியுண்டாம் பாட்டருண்டார் நாதாக்களிப்படியே உண்டிட்டாரே. 818

உண்டிட்டமணிதனுக்கு நாலத்தொன்று உத்தமனேதங்கமிட்டு நாகமிட்டு, பண்டிட்டகாரமிட்டு உருக்கிக்கொண்டு பாய்ச்சிதற்குச்சரியாகக் கெந்திகூட்டி, கண்டிட்டகல்வத்திற் பொடித்துக்கொண்டு கலங்காதேகுலாமல்லிச் சாற்றாலாட்டி, மண்டிட்ட மூன்றுநாளரைத்துப்பின்பு மயங்காதே காசியென்ற மேருக்கேற்றே. 819

ஏற்றியல்லோ முத்தீயுமூன்றுநாள்தா னிதமாகவாரவிட்டுயெடுத்துப்பாரு, போற்றியல்லோ வருணனைப்போற்சிவந்துநிற்கும்பொலிவாகப்பணவிடைதன்மேதனிலுண்ணு, சாற்றியல்லோமண்டலந்தான் தப்பாதுண்ணு சட்டைகக்கிச்சந்திரன்போல் முகமுமாகும், வாற்றியல்லோவுனவழி சுறுக்குமெத்தவாச்சரியசிங்கியென்றதயிலந்தானே

துவாதசத்தின் றயிலம்

தானென்ற துவாதசத்தின் தயிலஞ்சொல்வேன் சாதகமாய்ச்சேங்கொட்டைநீர் வெட்டிமுத்து, தேனென்றகுருக்கத்தி வாலுழுவை

வித்து சிறப்பான குமட்டிவித்திேனுடு, வேனென்றவாலுழுவையரிசி யோடு விரும்பியேசமனிடையாய்த் தூக்கிக்கொண்டு பானென்றபெ ருங்காட்டா மணக்குவித்துப்பகாரியகுன்றிமணி யழுஞ்சில்வித்தே.

வித்தோடுபிராயமணி பனிரண்டுங்கேளு விளங்கியதோர் படி யொன்று அளந்துபோட்டு, புத்தோடுசெங்கணுர் கிழங்குசாற்றில் யொலிவாகவூறவைத்து மூன்றுநாள்தான், பத்தோடுகல்வத்தி லரை த்துமைபோலபகாரியகந்தக முந்தாளகமும்சிலையும், கொத்தோடுகை வீரங்கெவுரிவெள்ளை கொடியதொரு பூநீறஞ்சவட்டு உப்பே. 822

உப்பானகல்லுப்பு வெடியுப்புச்சீனம் உத்தமனே துரிசியொடு சூடனிந்து, விப்பானமுன்மருந்தோ டொக்கப்போட்டு விரவியரை யெட்டுநாள் கிழங்குச்சாற்றில், அப்பாநீதெல்லுப்போல் வில்லை பண்ணி யாத்தியாம பூப்புடத்தில் தயிலம்வாங்கி, செப்பானதீயிட்டு துருசுநீரிட்டுக் சீரானசரக்குகளிற் சுருக்குபோடே. 823

கருக்கிடுவதெதிலென்று லிங்கம்வெள்ளை துடியானமாகல்தேவி சிலையும்வீரம், முருக்கிட்டகெவுரியொடு கெந்திசூதமுனையான நாக மொடு காரீயம்வங்கம், நரிக்கிடுவதுரிசியொடு செம்புகாரம் நலமான சிங்கியொடு மெழுகுமாகும், கருக்கிடுவதொவ்வொன்றில் வேதை கோடி கரையில்லை கணக்கில்லை கலந்துபாரே. 824

பாரப்பாசதமுகமாங் குருவிநாட்டு பண்பேதிசெண்பேதிபெண் சத்தபேதி, தாரப்பாதூமமொடு சந்தானபேதி தயங்காதபரிசமொடு லேபனபேதி, சேரப்பாதீபமொடு எட்டுமாகும்சித்தருடநூல்களிலே யில்லையில்லை, யாரப்பாவிதன்பெருமை யறியப்போறுர் அரனறிவார் யாத்தாளறிந்தவாறே. 825

வாறுனநீறுபதக்குவாரி மாட்டிதற்குளெட்டிலொன்று கல்லுச் சுன்னம், பேறுனகழுதையுடமூத்திரத்திற் பிசைந்துநன்றுய் கலக்கி வைத்து மூன்றுநாள்தான், தாறுனநாள்தெளிவைவாங்கி தயங்காத கல்லுப்புச் சூடன்ரண்டு, காறுனவகைக்குரண்டு பலமேதூக்கி அப் பனேபொடிபண்ணித் தெளிவில்போடே. 826

போட்டுமேயடுப்பேற்றி யெரித்து உப்பாய்ப் புகழானபதத்தெ டுத்து கல்வத்திட்டு, மீட்டுமேமூன்றுநா ளரைத்தபின்புமெழுகாகும் பதத்தெடுத்து வில்லைகட்டித், தீட்டுமே மூன்றுதரம் வில்லைதட்டி நீட்சயமாய்ச் சீனமொடு கலலுப்போடு, நீட்டுமோவிதனிலே காயப் போடு செப்பில்வைத்துச் சீலைசெய்து புடத்தைப்போடே. 827

புடம்போட்டுவைத்தெருவி லாரவிட்டுவாங்கிப் போராகமுன்போ லரைத்துக்கட்டி, கடம்போட்டு மூன்றுதரம்போட்டுத்தீரு கசகா மல்வழலையென்ற குருந்தானைந்து, திடம்போடு செம்புக்குள்ளொடுத் துக்கொண்டுத் திறமானநாயுருவிசுட்டசாம்பல் புடம்போடு, பதக் கெடுத்து யானைநீர்விட்டு அதட்டிநன்றாய்க் கலக்கிவைத்துத் தெளி வாவாங்கே. 828

வாங்கியே அண்டோடு சுண்ணம்பண்ணி வலமாகப்பலம்ரண்டு கூடப்போட்டுத்தேங்கியேயிந்துப்புபச்சைபூரஞ் சிறக்கவேண்டுபலம் கல்வத்திரட்டு, தாங்கியேயரைத்துமைபோல் தெளிவிலிட்டு சாற் பாக வடுப்பேற்றி யெரித்துவுப்பாய்ப், பாங்கியேகல்வத்தி லிட்டுயா ட்டிப்பதமாக மூன்றுநா ளாட்டிடாயே. 829

ஆட்டியே மூன்றுபுடந்தீர்ந்தபின்பு அசங்காமல் வெவ்வேறே யெடுத்து வைத்து, தேட்டியேபூரமென்ற திதுதானுச்சுசெகமெல்லா மெச்சுமிந்த குருதானுட்டு, தட்டியேயெருக்குமிலைச் சமூலஞ்சுட்டு தயங்காமல் பதக்கெடுத்துக் குதிரைநீரில், மட்டியேயிருதூணி நீரிற் போட்டுமறவாமல் மூன்றுநாள் கலக்கிவையே. 830

வைத்தபின்பு தெளிவிறுத்துப் பாண்டத்திலிட்டு மறவாமற்சங்கு நீரிரண்டுபலந்தான்போட்டு, நைத்தபின்பு கடல்நுரையுஞ் சாரம் ரண்டு நலமாகப்பலம்ரண்டும் கல்வத்திட்டு, கைத்தபின்புபொடிபண் ணிக்குழம்பில்போட்டுக் கலங்காதேவுப் பானபதத்தில்வாங்கி, மொ ய்த்தபின்பு முன்னீராலரைத்துக்கட்டி மூன்றுபுடம் போட்டெடு த்து பதனம்பண்ணே. 831

பண்ணியபின் சாரமென்றகுருதானுச்சு பகர்சதுரக்கள்ளிதனைச் சுட்டசாம்பல், நண்ணியதோரபதக்கெடுத்துப் பாண்டத்திலிட்டு நல மானவெள்ளாட்டு மூரிதானும், கண்ணிமதாலி தூணியமூரிவிடடுக் கலக்கிவைத்துத் தெளிவிறுத்துக் கிளிஞ்சிற்சுன்னம், எண்ணியதாம் ரண்டுபலங்கூடவிட்டு இதமாகவடுப்பேற்றி யெரித்திடாயே. 833

எரித்திடவே குறுகியதுகுழம்புபோலா மெளிதானவெண்காரந் துரிசிரண்டு, மரித்திடவேபொடியாக்கிக் குழப்பிவிட்டு வளமாகக் காய்ச்சியதை யுப்பாய்ப்பண்ணி, தரித்திடவேமுன்போலப் புடத் தைப்போடு தயங்காதே யெரித்துவைத்து மாட்டக்கேளு, குரித்தி டவேதுரிசியென்ற குருதானுச்சுகொடுவேலிசமூலமே சாம்பலாக்கே.

சாம்பலைத்தான்பதக்கெடுத்துப் பாண்டத்திட்டுச்சார்பானபசுவின் காசலத்திவிட்டு, சாம்பலைத்தான் கரைத்துவைத்து மூன்றுநாள்

தான்வகையாகத் தெளிவிறுத்துநத்தைச்சுன்னம், சாம்பலைத்தான்ர
ண்டுபலங்குகூடப்போட்டுக் கலர்குழம்பம் பக்குவத்தில் வெடியுப்புப்
போடு, வேம்பிலைத்தான் வீரமதுபலமும்ரண்டு விரவிநன்றாய்ப் பொ
டிபண்ணிக்குழம்பில்போடே. 834

போட்டபின்பு அடுப்பேற்றி யெரிக்கவுப்பாம் புகழாகமுன்னீ
ராலரைத்துதட்டி, நாட்டபின்புமுன்போலமூன்றுபுடம்போட்டுநல
மாகவெடுத்துவைத்துச் செம்புக்குள்ளே, ஆட்டபின்பு வீரனென்ற
குருகாணுச்சு அப்மம்மாயிதன்வேக மன்டரண்டாீறும், நாட்டபின்பு
கொடிக்கள்ளிசாம்பலாக நலமாகமனிதனுடவமுரியிலேபோடே.

போட்டுமேயகட்டிநன்றாய்க் கலக்கிவைத்துப் புகழாகத்ளெித
விறுத்துவடுப்பிலேற்றி, வாட்டுமேநாகமாம் வண்டுசுட்டு மருவியதே
சுண்ணும்பாய் ரண்டுபலம்போடு, கேட்டுமேகுழம்பான் பதத்தில்வா
ங்கிச் சிறப்பானவெள்ளையொடுசீனம்ரண்டு, ஆட்டுமேபொடிபண்ணி
க்குழம்பில்போட்டு அடுப்பேற்றியெரித்தந்தவப்பைவாங்கே. 836

வாங்கியேஊமையென்ற சிப்பிதன்னை வகையாகச்சுத்திபண்ணி
ச்சுண்ணும்பாக்கி, தேங்கியேரண்டுபலம்நிறுத்துப்போட்டுச் சிறப்பா
கவடுப்பேற்றிக் குழம்பாய்க்காய்ச்சி, ஓங்கியேதாளகமும்வளகிலுப்பு
ஒக்கவேபொடிபண்ணி ரண்டுபலம்போட்டு, ஏங்கியேவுப்பாகக் காய்
ச்சிக்கொண்டு யெடுத்றரைத்துமுன்போலப் புடைத்துப்போடே.

போடென்றவமுரிசுட்டுச்சாம்பலாக்கிப் புகழாகப் பதக்களந்து
பாண்டத்திற்போடு, நாடென்றகடலில்நிற்குஞ் சிவந்திருந்த சொரி
யை நலமாகயெடுத்துவந்துபாண்டத்துள்ளே,ஊனென்னவுப்பிடவுந்
தண்ணீராகு முத்தமனேயிருதூணிநீரைவிட்டு, ஆடென்ற மூன்று
நாள்கழித்தபின்பு அப்படினேதெளிவிருத்துப்பாண்டத்தில்வாங்கே

வாங்கும்போதடுப்பேற்றி யெரிக்கும்போதுவளமானநன்டோடு
சுன்னம்பண்ணி, தாங்கும்பே ரண்டுபலங்கூடப்போட்டு தயங்காதே
யடுப்பேற்றி யெரிப்பாயானல், ஓங்குமப்போகுழம்பான பதத்தைப்
பார்த்து உற்றுநின்றசரக்கையினிச் சொல்லக்கேளு, தூங்குமப்போ
சூதமரண்டுபலத்தைப்போடுதுடியாநகெந்தியுப்புரண்டுபலம்போடே

போட்டெல்லாமடுப்பேற்றி யுப்பாய்க்காய்ச்சிப் பொலிவானபி
னபெடுத்துக்கல்வத்திட்டு, மூட்டெல்லாமுன்னீராலரைத்றுக்கட்டி
மூன்றுபுடம் போட்டெடுத்து வைத்றுக்தொள்வாய், ஆட்டெல்லா

ஞ்சூதத்திலாட்டு ஆட்டு அண்டபகிரண்டமுதல் வெந்துநீறும், காட்
டெல்லாம்வாழையுடசருகுசுட்டு காரியமாய்ப்பதக்களந்து பாண்ட
த்திற்போடே. 840

போட்டுமேவாழையுடக்கிழக்குச்சாற்றில் புகழாகத்தெளிவிறு
த்து அடுப்பில்வைத்து, ஊட்டுமேசுண்ணும்புசொல்லக்கேளுஉயர்ந்த
வாங்கூமச்சிஷன்னம்பண்ணி, நாட்டுமேபலமிரண்டுநிறுத்துப்போட்டு
நயிமானகுழம்பாகும் பதத்திற்கேளும் ஆட்டுபேயன்னமென்றபேதி
யோடு அசையாதலிங்கமது ரண்டுந்தூக்கி, பூட்டியே பொடிபண்ணி
குழம்பிற்போட்டு புரட்டியெல்லாம் வாங்கியல்லோ கல்வத்தாட்டே.

ஆட்டியேமுன்போலமூன்றுபுடம்போட்டு அயச்சிமிழி லெடுத்
துவைத்துப்பதனமாகப், பூட்டியேதெர்ப்பைசுட்டுச் சாம்பலாக்கிப்
புகழாகமூன்றுபடி பாண்டத்திற்போட்டு, மூட்டியேகள்ளென்ற கா
டிதானுமுசியாமலிருதூணிவிட்டுப்பின்பு, வாட்டியேமூன்றுநாள்கல
க்கிவைத்து மறவாதேதெளிவிறுத்து அடுப்பிற்காய்ச்சே. 842

காய்ச்சியேகுழம்பான மக்குவத்தில் கலந்திடுநீகெருடபட்சி க
ன்னம்ரண்டு, பாய்ச்சியேகுக்குட வெண்மலமும்ரண்டுபகரறிய கெந்
தகமும்பலமும்ரண்டு, தாய்ச்சியேபொடிபண்ணிக் குழம்பிற்போட்டு
ச்சார்பாகவடுப்பெரித்து வுப்புவாங்கு, முயற்சியேமுன்போலேவரை
த்துக்கட்டி மூன்றுபுடம்போட்டெடுத்துப் பதனம்பண்ணே. 843

பண்ணியபின்சதமுகமாங் குருவுமாச்சுப்பணவிடைதான்பத்து
மெடுத்தொன்றாய்க்கூட்டி, ஒண்ணிப்பின்கல்வத்தில் முன்னீராலா
ட்டி உத்தமனேசெப்புகுளெடுத்து நண்ணியபின்மேல்மூடிச்சீலைசெ
ய்து நலமாகவஞ்செருவிற் புடத்தைப்போடு, எண்ணியபின்னாறவிட
டு யெடுத்துக்கொண்டு இதமானபொற்சிமிளிற் பதனம்பண்ணே.

பண்ணியதோர் குருவெடுத்து விராலிக்கிட்டுப் பரிவாகச்சாறெ
டுத்து அயச்சட்டிவார்த்து, ஒண்ணியதோர் நல்லகொழுக்கரியி னூதி
உத்தமனேகாந்தமதிற் காட்டிற்றோய்ப்பாய், விண்ணியதோர்கொழு
க்காய்ச்சித்தோய்க்கவிண்டுவிண்ணு அகரதாலப்பொருமிவீழும், ந
ண்ணியதோர்சாதெல்லாம் ஏற்றதோய்த்து நலமானஅகரெல்லாம்
வாக்கொள்ளே. 845

வாரியேயெருங்காட்டாமணக்கி னெண்ணெய் வார்த்தல்லோ
வெண்காரஞ்சரியாய்க்கூட்டி, நாரியேகுகையிலிட்டுமூன்றுதரம்புரு
க்கநலமானஈயம்யோற் சவளையாகும், ஏரியேவுடைந்ததுபோல் வாத

வெள்ளமிரைக்கவேதுலையாது அயத்தூள்வித்தை, வாரியேபொங் கையிலேசதமுட்கொள்ளு மகத்தான அயமுருக்கில் கொல்லுந் தானே. 846

தானென்றநாகத்தை பதையாமற் கொல்லுஞ்சமுசயங்களெண் ணுதேசகலமு முட்கொள்ளும், வானென்றசூதமது கட்டிப்போகு மாசற்ற அயனைகமாட்டி ஆட்டு, தேனென்றசிவகாமி சொன்ன மார்க்கஞ் செப்பரியநாதர்கள் மெச்சும்வித்தை, பானென்ற செந் தூரங்களங்கு செய்யில் பரிவாகவாயிரத்துக் கோடும்பாரே. 847

ஓடுமே அண்டத்தைப் பணம்போல்போற்று உத்தமனே கழச் செடைதான் குருவைப்போடு, வாடுமேசெந்தூருக்க மேலேவைத்து மாசற்றவிதனிலே சாமம்வைக்கத், தேடுமேமெழு கெல்லாமெழு காய்ப் போகுஞ் சேர்ந்தமூவாயிரத்துக் கொன்றேயோடும் பாடுமே வீணையைப்போல்மெழுகு கொள்ளபரிவான அண்டரதிணண்மை தானே. 848

அண்டவித்தையாருக்காஞ் சிவயோகிக்காம் ஆத்தாளைப்பூசித்த வாமிக்காகும், பிண்டவுத்தை மும்மூலயோகிக்காகும் பேரான அசையையுட மூலிக்கொக்கும், வண்டவித்தை பொல்லாதது ரோகிக்கெய்து மகத்தானவேதாந்தரிஷிகள்சித்தர், கண்டவித்தை மனதடக்கி யூமையாவார் காரணமாஞ்சீஷருக்குப் போதிப்பாரே.

பாரென்றகுருவெடுத்துக் காசெடைதானதூக்கிப் பரிவான சதுரக்கள்ளிப்பாளிற்போட்டுக், காரென்றசாமத்தில்சுத்தசலமாகுங் கல்வத்தின் சூதம்விட்டுச் சுத்திபண்ணிப், பாரென்றஅயச்சட்டிக் குள்ளே விட்டுப் பதறமலொருசாமஞ் சுருக்குபோட, கோனென்ற யிட்டிளிபோல் கட்டியாகுங் கூப்பிட்டாலேனென்னும்வாதந்தானே.

வாதந்தான்வேண்டுமென்றால் சூதத்தாட்டு மகத்தான அஷ்ட கர்மமெட்டுமாகும், காதந்தான்கோடியது நிமைக்குமுன்னே கலந் தோடிப்புக்கிவரு மணியிஞ்ஞசை, வேதந்தான் திடத்துமே முடிவுக் கொக்கு மேவியதோர் சிலம்பொலியில் நாதங்கேட்கும், நீதந்தான் குகத்துக்கடுத்தவாறு நிமிஷத்திற்காயசித்துகெவுன சித்துமாமே.

ஆமிந்தமணிநின்று வுருகும்போது அந்திடைக்குத் தங்கமிட்டு ஆட்டுஆட்டு, சேமிந்தகெந்தகத்தை ரெட்டுயிட்டு சிறப்பான பொற்றலையின்காற்றுலாட்டி, போமிந்தசாக்கதனைகுப்பியில் வைத் துப் புகழாக சீலைமண்வலுவாய்ச்செய்து, ஓமிந்தக்காசியென்ற மக்ருக்கேற்றி யுற்பனமாம்வாலுகையின் மேலேவைமே. 852

வைக்கவேபனிரண்டு சாமத்தீயை மறவாதேமுத்தியு மாட்டுமா டடு, கைக்கவேதாளம்பூநிறத்தைப்போலாஞ் சார்பாகச்சிலாகிட டுக் கிண்டிப்பாரு, உய்க்கவேகவலோக மாயிரத்துக்கொன்று வுத்தமனே பதினறுமாற்றுமாகு, மொய்க்கவேசெந்தூரங்குன்றியுண்ணு மேனி யுமேயகுணன்போலாகுந்தானே, 853

வங்காளப்பச்சை.

தானென்றவங்காளப் பச்சைவைப்புச் சாதகமாய்ச் சொல்லுகி றேன்மாணுக்கானே, ஊவென்றசெம்பான அரப்பொடிதான் பத்து வுத்தமனேதுரிசிபத்துவெடியுப்புரண்டு, வாளென்றயெலுமிச்சம்பழ ச்சாற்விடடு மருவவேமத்தித்துச்கல்வத்திட டு, தேனென்றகுப்பையி லேமூன்றுதினங்கள்புதைத்துத்திறமாகவெடுத்துப்பார்பச்சையாமே

செப்பு சுத்தி.

ஆமப்பாபிசம்புதனைசுத்திபண்ண அறையுறேன் கருங்குன்றிக் கொள்ளிலையின்சாறு, வாமப்பாகல்லுருவி நொச்சியோடு வகைநாலு மிடித்துநன்றுய்ப்பழச்சார்விடடு, காமப்பாகுன்றிமணி யரைத்துப் போடடுக் கலக்கியொன்றுய்மத்தித்து யதிற்குடசாய்ப்பாய், சேமப் பாவேழுதர முருக்கிச்சாய்க்கச் செம்பினுடஆறலெல்லாங் கழன்று போமே. 855

போகவேயிச்செம்பில் கிண்ணிபண்ணுபுகழானசெங்கொடடை நீர்வெடடிமுத்து, வேகவேவெளிக்காடடா மண ' குவித்து விரைந்த வேர்வாழைவித்துச்சரியாய்க்கூடடி, சாகவேதுரிசியொன்றுசாரமொ ன்றுசாதகமாய்க்கல்லுப்பு வெடியுப்பொன்று, ஏகவேயுரலிலிடடு யி டித்திதெல்லா மிதமானகார்த்திகையின் கிழங்குசாறே. 856

சாற்றினல்மூன்றுநாளரைத்துமைபோல்சந்திச்சுபில்கடடியுலர ப்போடு, பேற்றினல்பூப்புடத்தில் தயிலம்வாங்கிபீங்கானும் பாணில டைத்துவைத்து, வாற்றினல்பதங்கமொன்று சொல்வேன்யானும் வகையானகல்லுப்பு வெடியுப்புசீனம், தேற்றினல்துரிசியொடு சாரந் தானுஞ் சிறப்பாகவொவ்வொருகாசெடைதான்தூக்கே. 857

தூக்குவதுஅரிதாரஞ் சிலையுங்கெந்தி துடியானவெள்ளையொடு கெவுரிலிங்கம், ஆக்குமதுகடல்நுரையும் வீரந்தொடடி அழகானகு திரைப்பல் அன்னபேதி, தேக்குவதுபூநீறுத்தியானமாகும் சிறப்பா னவெண்காரங்காந்தஞ்சிங்கி, நீக்குவதுஅப்பிரேகம் ராசவந்தாம்நே ரானகிமுளையொடு பொன்னம்பர்தானே. 858

தானான அரம்பொடியும்நாகம்வங்கம் சார்பானகாரீயம்வெங்கலதின்பொடியும், தேனானவகைக்குமொருகாசெடையேதூக்கிசிறப்பாகமுப்பத்திலொன்றுமாச்சு, வானானசூதமது முப்பத்தொன்றுவகையெல்லாங்கல்வத்திற் பொடித்துப்போட்டு, தேனானதைலத்தைக் குத்திஆட்டிக் குறிப்பாகவேழுதர மரைத்துலர்த்தே. 859

சூதப்பதங்கம்.

உலர்த்தியேயிரும்பாலே யுள்ளங்கைபோ லுத்தமனேசாகச்சட்டிபண்ணி, மலர்த்தியேவரைவிட்டுச் செம்புகிண்ணி மருவவே வதைக்குள்ளேவழக்கம்பார்த்து, அலர்த்தியேசட்டியிலே வருந்துவைத்து அதன்மேலேகிண்ணிவைத்துப் பொருந்தப்பார்த்து, சிலர்த்தியே சந்துக்குச்சீலைசெய்யுந் திறமையாய்த் தான்வரிசை செப்புவேனே.

செப்பவேசெம்பினுட அரப்பொடியுங்கடுக்காய்த்திறமானயிரும்பினுட அரப்பொடியுங்கூட்டி, அப்பவேகருமணலுஞ் செம்புநீறுமடலானகுருந்தக்கல்மீனிணெட்டி, நப்பவேவெண்கருவு மத்திப்பாகும் நலமாகவிதில்விட்டியிடித்துவைய, உப்பவேமெழுகுபோல்பதமாய்பண்ணி யுத்தமனே சந்துக்குளடைத்திடாயே. 861

அரைத்திட்ட செம்புபோல்கவசம்பண்ணி அசகாமல்பதனமாய்ச்சீலைசெய்து, உடைத்திட்டுமுக்கவரில் சட்டிவைத்து உற்பனமாயிலுப்பைநெய்யால் விளக்குவைத்து, படைத்திடடு அங்குட்ட பருமமாகப் பக்கத்தில்நின்றதிரி விளக்கையேற்றி, கடைத்திட்டுமூன்றுநாளவியாமலெடுத்துக் கைகண்டபதங்கமது ஏறும்பாரே. 862

ஏறியதோர்பதங்கமெல்லாம் வழித்தெடுத்துஇதமானவப்பிரேகநவநீதம்பண்ணி, கூறியதோர்வெண்கருவாலரைத்துவாங்கிக் குகைசெய்துமேல்மூடிரண்டுசெய்து, மாறியதோர்பதங்கத்தையுள்ளேவைத்து வகையாகமேலேமூடிச்சீலைசெய்துத், தேரியதோர் செகபுடத்திற்போட்டெடுத்துச் சிறப்பாகமருந்தெல்லாம்வாங்கிக்கொள்ளே.

வாங்கியேகுகையிலிட்டுக் காரம்வைத்துவளமாக யுருக்கியொருமணியால்வாங்கி, தாங்கியேயெடுத்துப்பார் முத்துப்போலத் தவளம்போல்சூதமதுயிருக்கும்பாரு, ஏங்கியேஆச்சுதென்று மயங்கவேண்டாம் இயல்பாகக்கெந்தியிட்டுப் பதங்கஞ்செய்து, ஓங்கியேநாகமிட்டுக்கல்வத்திற்போட்டு உத்தமனேமயிற்கொன்றை சாற்றாலாட்டே.

ஆட்டியேகாசியென்றமேருக்கேற்றி அப்பனே வாலுகையில்மேலேவைத்து, மூட்டியேபணிரெண்டுசாமந்தீயை முசியாமலாறவிட்டு

யெடுத்துப்பாரு, நீட்டியேசெந்தூர மருணன்போலாம் நேரானநவ லோகம் நூற்றுக்கொன்று, காட்டியேதனமாற்றுய்க்கண்டுபாரு கன மான பதங்கமது மகிமைதானே. 865

தானனஅரைவாசி வுப்பின்மேற்போட்டுத் தன்னுக்குள்சூதத் தூள் பரப்பிவைத்து, கானனவதின்மேலே செங்கல்தூள்போட்டுக் கையாலே அமிழ்த்திட்டு மேல்தோண்டிகவிழ்த்து, வானனசந்துக்கு மண்ணைச்செய்து மருவியதோர்வடுப்பேற்றி யெறிப்பாயப்பா, தே ஞனகாடாக்கினிசாமம்நாலு, சிறப்பாகவெரித்திடவே பதங்கமாமே.

மகிமையென்றபதங்கத்தை பலந்தான்தூக்கி மகத்தானகலுவத் திற் போட்டுப்பின்பு, மகிமையென்றஅரப்பொடியு நாலுபலம்போ ட்டு மகத்தானகாரமொரு பலமும்போட்டு, மகிமையென்றபெருங் காட்டாமணக்கினெண்ணெய் வார்த்தரைத்துச்சாமமொன்று குகை யிலிட்டு, மகிமையாய்மூன்றுதர முருக்கிப்போட மாசற்ற அயந்தா னும் நாகமாமே. 867

நாகமென்ற அயத்திடைக்கிச் சூதங்கூட்டி நலமாகவுருக்கையி லே நாகமிட்டு, மோகமென்ற புகையெழுப்பிக்கட்டிப்போகு முத்த மனே செந்திமிட்டுச்சூதமிட்டுப் பாதமென்றபொற்றலையின் சாற்று லாட்டிப்பக்குவமா யைந்தெருவிற் புடத்தைப்போட்டு, வேகமென்ற நவலோகம் நூற்றுக்கொன்று வேதிக்க மாற்றென்ன பணிரெண் டாச்சே. 868

வெள்ளைப்பதங்கம்.

ஆச்சப்பாவெள்ளையென்ற பதங்கங்கேளு ஆதிவெள்ளைப்பா ஷாணக் குரைப்பல்லும், ஓச்சப்பாதாளகமும் பூரீறம்வீரம் உத்த மனே சாரமொடு துருசுசீனம், பாச்சப்பாகல்லுப்பு வெடியுப்புக் கௌரி பரிவாக வெள்ளையென்ற அப்பிரகத்தோடு, காச்சப்பாநாக மொடு வெள்ளீயப்பொடியும் கடல்நுரையும் சவ்வுீரண்டத்தோடே

ஓடோடு அன்னமென்றபேதிதானு முத்தமனேசூடனொடு அரப் பொடியுஞ்சிங்கி, காடோடுவக்கிராந்த கஞ்சமென்றசிமிளை காந்த மொடு சத்தியென்ற சாரந்தானும், நாடோடுயிருபத்து ஐந்துமாச்சு நலமானசூடனது யிருபத்தைந்து, பாடோடுயெருக்காலம்பால்விட் டாட்டி பதறும லேழுநாளரைத்துலர்த்தே. 870

உலர்த்தியேவிமலையாய் வைத்துக்கொண்டு உத்தமனேவெள்ளி பண்ணி, அலர்த்தியே அயச்சட்டியுள்ளங்கைபோல் அப்பனேவரை யிட்டுபண்ணிவைத்து, மலர்த்தியேமருந்துதனையுள்ளேவைத்துவகை

யாகமேற் கிண்ணிப் பொருந்தப்பார்த்து, பிலாத்தியே முன்கவசம் போலேசெய்து போாகமுக்கலரின்மேலே யேற்றே. 871

ஏங்கியேகல்வைத்துத் திரியைப்போட்டு இதமானமுள்ளி எண்ணெவிளக்குபேற்றி, போற்றியேமூன்றுநா லவியாமலேற்று புகழான பதங்கமது யேறும்பாரு, ஆற்றியேபதங்கமெல்லா மெடுத்துவாங்கியாதிவெள்ளை யப்பிரேக நவநீதம்பண்ணி, சாற்றியேகுகையொன்று சில்லுபண்ணிச் சார்பான அண்டவெள்ளைக் கருவால்வண்ணே. 872

பண்ணியதோர் குகைக்குள்ளே மருந்தைவைத்துப் பரிவாக மேல்மூடிச் சீலைசெய்து, கண்ணியதோர் கெஜபுடத்திற் போட்டெடுத்துக் கனமானகுகைக்குள்ளே வைத்துருக்கி, நண்ணியதோர் சூதம்நின்று வருகும்போது நலமானகிண்ணியைநீ சமனைப்போடு, திண்ணியதோர் சூதமிடை வெள்ளீயம்போட்டுத் திறமாகக்காரமிட்டு வுருககிச்சாயே. 873

சாய்த்திடவே மருந்தெடுத்து நிறுத்துக்கொண்டு சார்பானநாலுக்குச் சூதமொன்று, போய்த்திட்டமருந்துக்கு நாலத்தொன்று புகழான வெள்ளியது நிறுத்துப்போட்டு, காய்த்திட்ட மூலைப்பாலை விட்டுயாட்டிக் கனமானவில்லைசெய்து அயச்செம்பில்வைத்து, ஏய்த்திட்ட யைந்தெருவிற் புடத்தைப்போடு எளிதான செம்புவங்கம் நூற்றுக்கொண்ணே. 874

ஒண்ணுனவெள்ளியது மாற்றுக்கெளு உற்பனமா யிருபத்தையைந்துமாற்று, கண்ணுனசூதமது வெள்ளியாகுங் காரீயம்வெள்ளீயம் நாகம் வெள்ளியாகும், விண்ணுனசெம்பதுவும் வெள்ளியாகும் மகத்தானவயமதுவும் வெள்ளியாகும், விண்ணுனஅம்பலத்தை தெரிசித்தப்பா மேவியதோர் சிலம்பொலி நாதங்கேளே. 875

ரசகற்பூர வைப்பு.

நாதமென்ற பச்சைரச கற்பூரம்பண்ண நலமாகச்சொல்லுகிறேன்கேளுகேளு, போதமென்றசூதமது பலந்தானெட்டுப் புகழான கெந்தகமே பலந்தானொன்று, நீதமென்ற கெந்தகத்தை ஒட்டிலிட்டு வுருக்கி நினைவாகச்சூதத்தை யதில்விட்டுக்கிண்டு, நாதமென்றகரிபோல தூளாய்ப்போகும் நலமாகவெடுத்துவை பாகங்கேளே. 876

கேளப்பாமண்ணுலே தோண்டிபண்ணிக் கெடியாகச் சந்துவாய்ப் பொருந்தச்சுட்டு, நாளப்பா மேல்தோண்டிக் குள்ளேபூச நலமான மத்தைச்சார் மூன்றுதரம்பூசி, வேளப்பா வுலர்ந்தபின்பு அடிததோண்டிக்குள்ளே விரவியதோர்கறியுப்பு அரைத்தோண்டிமட்டும்,

வாளப்பா பொடிபண்ணித் தோண்டியிலேபோட்டு, மருவியதோர் செங்கல் மண்ணுழிதானே. 877

ஆமப்பாபதங்கமது மேல்தோண்டிக்குள்ளே அப்பனேயேறிய துமாப்போல்நிற்கும், தாமப்பா பதங்கமெல்லா மயிற்குச்சுகட்டித்த தும்பாம லெடுத்தல்லோ குப்புக்கிட்டு, வாமப்பா வாலுகையின்மே லேவைத்து மறவாமல் தீப்போடு பனிரண்டுசாமம், காமப்பா பதங்க மதுயிறகியேறிக் கம்பிபோல் வெளும்பாக விருக்கும்பாரே.

இருக்கிறதோர் கற்பூரம்விராகநாலு இதமானகெந்தியது விரா கனென்று, பருக்கிறதோர் கல்வத்திற் பொடியாய்ப் பண்ணிப் பண விடைதா னனுபானத்தோடேகொள்ள, செருக்கிறதோர் கடிவிஷங் கள் புண்கள்சூலை செருமியவெண் குஷ்டங்கள் பவுத்திரங்கள்கிரந்தி அருக்கிறதோர் வியாதியெல்லா மகன்றுபோகு மாதித்தன் கண்ட தொரு பனிபோலாமே. 879

ரசசெந்தூரம்.

பனியென்ற பச்சைரசஞ் செந்தூரிக்கப் பாங்கானசூதமது பல ந்தானெட்டு, கனியென்ற கெந்தகந்தான்ரண்டு பலமாகுங் கனமான வோட்டிலிட்டுத் தணலில்வைத்து, தொனியென்ற கெந்தகத்தை யுருக்கிக்கொண்டு, சூதத்தையதில்விட்டு அயத்தால்கிண்டி நனியெ ன்ற சூதமது கரிபோலாகும் நயத்தோடே வாங்கிமெள்ளக் குப்பியி ற்போடே. 880

போட்டுமே யரைவாசிக் குப்பிக்கப்பா புகழான வாலுகையின் மேலேவைத்து, நாட்டுமேலோடாலேமேலேமூடி நயமாகவடுப்பெரித்து ச்சாமம்ரண்டு, ஓட்டுமே ஓடதனைவாங்கிப்போட்டு வுக்கிரமாயெரித் தாக்கால் கெந்தகந்தான்பத்தும், வாட்டுமே வகந்தகத்தின் நாலத் தொன்று மருவியதோர் தாளகத்தை நிறுத்துவைமே. 881

வைரகவேகொஞ்சமாய்ச் சூப்பியிலேபோட்டு மறவாமல் அயக் கத்திரால் கிண்டுகிண்டு, நைக்கவேதாளகத்தைப் போட்டுப்போட்டு நலமாக கிண்டிவரச் சாகையாலே, உய்க்கவேசரக்கெல்லாம் பதங்க மாகும் உற்றவெறுங் குப்பியாயடியிற்காணுஞ், செயிக்கவே யடியி லே மருந்தில்லாட்டால் சீரானபதமென்று அடும்பையாற்றே.

ஆற்றியே யிருநாழியானபின்பு அயக்குறட்டால் குப்பிதனைவெ ளியில்வாங்கி, போற்றியே நீர்தெளித்து ஆறப்போட்டுப் புகழாகக் குப்பியெல்லாந் தள்ளிப்போட்டு, தேற்றியே சிவப்பாகக் கம்பிபோ லாய்ச் சிறுகதிராய்ப் பலகைபோலிருக்கும்பாரு, சாற்றியே பணவி டைதான்றேனி லுண்ணத் தப்பாதுநோயெல்லாஞ் சாடிப்போமே.

சாட்டியேகல்வத்தி லிதனைப்போட்டுத் தயங்காமல் பொடிபண் ணிக்காட்டுச்செம்பு, நீட்டியேகிழங்கின்சாற் றுவைத்துக்கொண்டுநி னைவாகயரைத்திடுவாய் மூன்றுநாள்தான், வாட்டியேரவியில்வைத்து ப்பொடியாய்ப்பண்ணி வளமானகாசியென்ற குப்பியிலேபோடு, ஒட் டியே வாலுகையின் மேலேவைத்து உற்பனமாயடுப்பெரித்து ஆற விட்டுவாங்கே. 884

வாங்கியேமுன்போலக் கல்வத்திற்போட்டு வளமானகிழங்குச் சார்விட்டுஆட்டி, தேங்கியேயரைத்திட்டு மூன்றுநாள்தான் திறமா கப்பொடியாக்கிக்குப்பிக்கேற்றி, ஒங்கியேயரைக்கையிலே பலந்தான் கெந்தி உற்பனமாய்ப்போட்டரைத்துக் குப்பிக்கேற்றி, தாங்கியேமூ ன்றுநாள்தீயையாட்டு தப்பாமலிப்படிதா னைந்துதரமேற்றே. 885

யைந்துமேவாலுகையின் தளத்தில்நிற்கும் அசங்காமலச்சிமிழி லெடுத்துவைத்து, உஞ்சுமேநவலோகம் நூற்றுக்கொன்றி யுற்பனமா ய்ப்பத்தரையேமாற்றுகாணும், செஞ்சுமேநோயெல்லாந் தவிடுபொ டியாகுங்கெடியானகாலனுமே யஞ்சிப்போவான், மிஞ்சியதோர் புளி யுப்புவிட்டுத்தின்றால் மேவியதோர் சட்டைகக்கிப் பாலையாமே,

பாலையாஞ்சிவப்பான கெந்திதன்னைப் பகரக்கேள்பராபரைக்கு முதல்நாகந்தான், ஓலையாலெழுதவென்றுலிதனிளுட்டு உத்தமனேக டல்தண்ணீர்க்கொப்பேயாகு, மாலையாங்கொன்றையைத்தான் றரித் தசிவன்மைந்தர் மயங்கினரிதினுடைய ஆட்டைப்பார்த்து, ஆலையாய் சரக்கெல்லாங்கொல்லும்கொல்லும் அம்மம்மாஆயியுடநாதந்தானே.

நாதமென்றுமிதுக்குப்பேர்சத்திகெந்தி நலமான கோழித்தலைச் சூடனென்றும், போதமென்ற விதினுடையவைப்புதன்னைப் போக் கோடேவெளியாகச் சொன்னேன்மக்காள், நீதமென்றநெல்லிக்காய் கெந்தகத்தை நினைவாகப்பலம்பத்து நிறுத்துக்கொண்டு, சீதமென்ற செவ்வகத்தி செவ்வலரிமுருக்கு கெடியானசெவ்வல்லி கெம்பரித்தி தானே. 888

தானனமாந்துனிருங் குமரிவேருந் தயங்காமணித் தக்காளிசா ணுக்கியோடு, பானைபுளியாரைபத்துங்கேளு பாங்காககெவ்வேறாய் படிதான்சாறு, கோனைகவார்த்துவொவ்வொன்றாய்க்கலக்கிக்கொண்டு கொடியதொரு யிந்திரமாங்கோபப்பூச்சி, தேனைபூநாகம் ரண்டுங் கேளு தேசிக்காயளவரைத்துசீடப்போடே. 889

போடவேவெடியுப்பு சீனம்ரண்டு பொலிவாக வகைக்குமொரு பலமும்போட்டு, வாடவேபசுவின்பால் படிதானைந்து மாசற்றளவுமி

ச்சம்பழச்சாறுசேரை, தேடவேகலக்கியொன்றாய் வைத்துக்கொண் டுதிறமாகச்சட்டியிலே படிதான்வார்த்து, நீடவேசீலைகட்டி அதின்மே ற்கெந்தி நினைவாகப்பரப்பியல்லோ மேற்கட்டிமூடே. 890

மூடியேசீலைசெய்து குருதான்கெல்லி முயற்சியாய்ச்சட்டிதனை ப்புதைத்துப்போடு, நாடியேமேற்சட்டி தெரியவிடநழுகாமல்புடம் போடுபத்தெருவிலப்பா, தேடியேஆரவிட்டுயெடுத்துப்பாரு சிறப்பா கவுறுகியெல்லாஞ் சாறுதனில்நிற்கும், வாடியேமணியெல்லாம் பொ ருக்கிக்கொண்டு மறுபடியுஞ்சாறெருக்கப் படிதான்வாறே. 891

படிச்சாறுவார்த்துமே மறுசீலைகட்டிப் பாங்காகமணியெல்லாம் பொறுக்கிவைத்து, துடியாகபரப்பியே மேற்சட்டிமூடிதுப்புரவாய்ச் சீலைசெய்துபுடத்தைப்போடு, அடிச்சாறுவற்றவற்ற மறுவாறுவார்த் து அதட்டியே யிருபத்துஒன்றுபோடு, கடிதுதள்ளிவிட்டுமணியெல் லாம்பொருக்கிக் கழுவியேதண்ணீரில் ரவியிற்போடே 892

போட்டபின்புயெடுத்ததனை கல்வத்திலிட்டுப்பொடிபண்ணிக்க ல்வத்தில் மயில்நெய்வார்த்து. பூட்டபின்புவாலுகையின் மேலேவை த்துப்பொருந்தவே தீமூட்டிக்கமலம்போல, நாடடபின்புகாடாக்கினி நாலுசாமம் நலமாகத்தீபாக்கினியாறுசாமம், கேட்டபின்பு நாற்சாம மாறவிட்கி யெரிக்கச்சிவாசிவா மாதளம்பூ நிறம்போலாமே 893

நிறமானகெந்தகத்தில் வேகம்பட்டால் நினைக்குமுன்னேசூதம துயேமமாகு, மறவானலோகத்தில் பரிசிக்கவேதை யானுண்ட கற்ப மிதுயானுங்கொண்டேன், திறமானதங்கமது செம்புமாகுஞ்சேர்ந்த நவலோகத்தில் யிரத்துக்கோடும், குறமாதுமாமியுடநாதமப்பா கொ ண்டாக்கால் கடிகையிலே சித்தியாமே. 894

சித்தியாங்தேவருக்கு மைந்துபூதம் செகத்திலுள்ள சித்தருக்கு மைந்துபூதம், மூத்தியாமூர்வனமுமைந்துபூதம் உயர்ந்தநிறைவிருட் சமெல்லாமைந்துபூதம், புத்தியாம்பாம்பின்முமைந்துபூதம் போச்கா ணயைந்திருலெல்லாமாக்சு, பத்தியாம்வாதத்தில் பஞ்சபட்சி பாஷா ணவைப்பதனைப்பாடினேனே. 895

பாடினேன்வடமொழியைப் பிரித்துப்பார்த்துபரிவாக ஆத்தா ளைக்கேட்டுக்கேட்டு, ஓடினேன்குளிகையிட்டு நாதாக்கள் பதத்தில் உகந்தடுமையாகியல்லோ வாதம்பார்த்தேன், வாடினேன்மனமிளைத் து வாதம்பார்த்து பயக்கமெல்லாங் குருசொல்ல மனதிலெண்ணி, நாடினே னுலகத்தோர் நம்மைப்போலே, கலிந்துயான் வெளியாகத்தி றந்திட்டேனே. 896

திறந்திடாதிருந்தாக்கால் சரக்குவைப்பைச் சகத்திலேவதாம் பொய்யாகுமென்று இறந்திடாதிருக்க வெளியாகச்சொன்னேன் ஏழைமதிபோகாதே பார்க்கவென்றால், மறந்திடாக் கருவையெல்லா முன்னிப்பாரு மாயமாம்வாசியினால் மனம்புண்ணாகும், பிறந்திடா திருக்கவென்றால் காயசித்திபண்ணு பெரியோர்கள் பதம்போற்றிக் கருவைக்கேளே. 897

கருவென்னதாளகமும் பலமுமைந்து காந்தளப்பூப்போலான பூநிறைந்து, உருவென்னலிங்கமது பலமுமைந்து உயர்த்தியாய்ச் சிலையதுவும் பலமுமைந்து, குருவென்ன கெவுரியது பலமுமைந்து கூட்டியெல்லாங்கல்வத்திற் பொடியாய்ப்பண்ணி, திருவென்னசெங் கீரைச்சாறுவிட்டுச் சிறப்பாகவேழு நாளரைத்திடாயே. 898

அரைத்திட்டுப் பொடிபண்ணி மேருக்கேற்றி ஆறவிட்டுப்பனி ரண்டுசாமந் தீயைப்போடு வரைத்திட்டப் பதங்கமதுயிறங்கி யேறி வகையானபஞ்சபட்சி பாஷாணமாகும் நரைத்திட்டுப் போகாது, மெழுகுப்பண்ணிக்கொண்டால் நவலோகமாயிரத்துக் கோடும்பாரு, புரைத்திட்டுவிசமுடை பாலிலுண்ணு பொலிவான சட்டைகக்கி வாலையாமே. 899

பவளப்புற்றுபாஷாணம்

ஆமென்றபவளபுற்று பாஷாணந்தா நரையிறேனியான்றானு மறிந்தமட்டும், போமென்றகாளகந்தான் பலமும்பத்து புகழானவெ ள்ளையென்ற பாஷாணந்தான், காமென்றபலம்பத்து கல்வத்திட்டு கனமாகவரைத்துநன்றாய்ப் பொடியாய்ப்பண்ணி, தேமென்றரண்டு பலங்கெந்தியிட்டுச் சிறப்பாகக்காசியென்ற மேருக்கேற்றே. 900

ஏற்றியேவாலுகையின் மேலேவைத்து இதமாகக் கமலம்போல் தீயைமூட்டு, போற்றியேநால்சாமங் கமலம்போலாட்டு புகழாக ஆற விட்டுத் தண்ணீர்க்குத்து, சாற்றியேகுப்பியைத்தா னுடைத்துப்பார் த்தால் சாங்கமாய்ப்பாஷாணம் புற்றுப்போலாகு, மாற்றியேயிதைக் கட்டிவேதையோடி லம்மம்மாவெகு தூரமோடுங்காணே 901

கெவுரிபாஷாணம்

காணப்பாகெவுரியுட வைப்புகேளு கடிதான வெள்ளையென்ற பாஷாணந்தான், ஊணப்பாபலம்பத்துநிறுத்துக்கொண்டு வுத்தமனே கெந்தகம் ரண்டரைபலந்தான், பூணப்பாபொடிபண்ணி மேருக்கேற் றிப் புகழானவாலுகையின் தீயைமூட்டு, வீணப்பா கமலம்போல் நாலுசாமம் விடுபடவே யெரித்திட்டு உடைத்துவாங்கே. 902

ஊங்கியே யுடைத்தாக்கா லடுக்குப்போல வகையான சிவப்பு மஞ்சள் போலிருக்கும், ஓங்கியேயிதைக்கட்ட ஆராலாகுமூத்தமனே வெடியுப்புச் செந்நீராகும், தேங்கியேவெடியுப்புச் செயநீர்கேளு சிறப்பான பெருங்கயபி காலாங்காய்ச்சல், பாங்கியேபலம்பத்து நிறுத்துக்கொண்டு பக்குவமாஞ்சாரமது காசெடைதானைந்தே. 903

வெடியுப்புச்செயநீர்

ஐஞ்சோடு கல்லுப்புகாசெடைதானைந்து அழகானபூநீறு காசுமைந்து, நஞ்சோடுசீனமது காசுமைந்து நலமானவப்பிரேகங் காசுமைந்து, பஞ்சோடுசீனமது காசுமைந்து பாங்கான சூடனதுக்காசுமைந்தே. 904

காசுதானைந்தாகும் வெண்காரம்பூரங் காணிதுக்குள் சமனாகக் கடல் நுரையைப்போடு, மாசுதானிந்துப்பு அன்னபேதி மகத்தான சத்தியென்ற சாரத்தோடு, தூசுதானிதுவெல்லாங் கல்வத்திட்டுத் துடியாகப் பொடிபண்ணிச் சொல்லக்கேளு, பூசுதான்பழம்புளிதான் பலமும்பத்து புகழான கொறுக்காயின் பலமும்பத்தே. 905

பத்தானஎறலென் சதையினேடு பாங்கானபருங் கொன்றை பழத்தைக்கேளு, வித்தானபலம்பத்து நிறுத்துப்போட்டு மேவிய தோரொலுமிச்சம் பழச்சார்விட்டு, முத்தாகவிடித்துமைபோல் மெழுகாய்ப்பண்ணி முயற்சியாய்பில்லைசெய்து வுலரப்போட்டு, அத்தான பூப்புடத்தி தயிலம்வாங்கி அழகானமுனமருந்தில் விட்டுஆட்டே.

ஆட்டியேஏழுநாள் ரவியில்போடு அழகானவடிகனத்த கலசம் வாங்கி, பூட்டியேகற்சுன்னங் குழைத்துக்கொண்டு புகழானவிரல் பருமங் கனமாய்ப்பூசி, தேடியேகலபத்தி னுள்ளும்பூசிச் சிறப்பான சில்லுங்கு நடுவேபூசி, வாட்டியேகலயத்துள் மருந்தைவைத்து வகையாகச்சில்லிட்டுச் சீலைசெய்யே. 907

செய்தபின்பு நூறெருவிற் புடத்தைப்போடு திறமாக ஆறவிட்டு யெடுத்துப்பாரு, கைதபின்பு பொடிப்பண்ணிப் பீங்கானில்வைத்துக் கனமான பனியில்வைக்கச் செயநீராகு, மைதபின்பு இந்நீரில் வீரம் பூர மருவநன்றாய் பொடிபண்ணிச் செயநீரிற்போடு, எய்தபின்புசரக்கான வறுபத்துநாலு மிதமானசெயநீரில் தோய்த்துவாட்டே 908

வாட்டியபின்சுறுக்கிடவே மெழுகாய்ப்போகும் வகையானகட்டினமாம்நீற்றினமுமாகும், பூட்டியபின்செந்தூரங்களங்கமாகும்போக்கானசத்துவகை குளிகையாகும், நீட்டியபின்னவலோகம் வேதை

பாகுகிலேநிற்கும்காவிக்கும் புடத்துக்கீக, ஒட்டியபின் ஜெயநீரில்
சுருக்காம் வேதை உற்பனமாங்காயசித்துக்கெவனமாமே 909

சாரநீர்

சீனமாமப்பிரேகங்காசுமைந்து சிறப்பானசூடனதுகாசுமைந்து,
பானமாம்பூரமதுகாசுமைந்து பகருகின்றவெண்காரங்காசுமைந்து,
ஆனமாம்வீரமதுகாசுமைந்து உற்பனமாஞ்சத்தியென்றசாரமைந்து,
கானமாமன்னமென்றபேதியைந்து கனமானகல்வத்திற்பொடியாய்
பண்ணே. 910

பண்ணியேவெடியுப்பு நீரைவார்த்து பாங்காகவரைத்திடுவா
யேழுநாள்தான், ஒண்ணியேகலசத்திற்சுண்ணைப்பூசி வுத்தமனே
யதற்குள் வைத்துப்புடத்தைப்போடு, நண்ணியேயாறவிட்டுப் பனி
யில்வைக்க நலமானவாரிதிபோற்கலமுமாகும், கண்ணியேயிந்நீரில்
வீரம்பூரம் காசெடைதான்பொடித்திட்டு வைத்துக்கொள்ளே. 911

கொள்ளென்றஜெயநீரால்பாஷாணங்கள் குறிப்பாகச்சுருக்கிட
வே கட்டிப்போகும், அள்ளென்றகல்லுப்புமணிபோலாடு மாச்சரிய
நாகத்தையமுக்கிக்கொல்லும், துள்ளென்றசூதத்தைமாலையாக்குந்
துடியானபூரத்தைச்சுன்னம்பண்ணும், புள்ளென்றலிங்கத்தை மெ
ழுகுபண்ணும் போகத்திலே வெகுகோடியாடலாமே. 912

துருசு ஜெயநீர்.

ஆடலாம்துருசென்ற ஜெயநீராலே அப்பனேதுருசதுவும்பலந்
தான்பத்து, சூடலாங்கெந்தகந்தான்பலந்தான்மூன்று சுடர்கொடி
றாஞ்சூடனதுபலமுமூன்று, ஆடலாம்வீரமதுபலந்தானொன்று உற்
பனமாம் வெள்ளையதுபலமுமூன்று, நீடலாம்பூநீறுபலமுமொன்று
நிச்சயமாங்காரமதுபலமுமொன்றே. 913

ஒன்றானசத்தியது காசுமைந்து உற்பனமாந்தாளகமுங்காசு
வைந்து, மன்றானசிலேயதுவுங்காசுவைந்து மாசற்றசீனமதுகாசு
வைந்து, குன்றான அண்டநீர்காசுமைந்து கோழியுடவெண்மலமுங்
காசுவைந்து, வென்றானசூதமதுகாசுவைந்து மெய்யான பூரமது
காசுவைந்தே. 914

காசெடைதானைந்தாகும் வெள்ளூரம்பூம் கனத்ததொருகுரு
வண்டுவைம்பத்தொன்று, தூசெடைதான்கல்வத்திற்பொடியாய்ப்
பண்ணிதுவளவரையேழுநாள்சாரநீரால், மாசெடைதான்தெல்லுப்
போல்வில்லேபண்ணி வளமானகல்வத்திற்சுன்னம்பூசி, ஆசெடை
தான்மருந்தை யிட்டுங்கிலேசெய்து வைம்பதெருவனைத்துமெள்ள
புடம்பலவாமே. 915

பலமதுதான்கெந்தகத்தை நிறுத்துப்போடு பாஷாணவெள்ளை யது காசுயைந்து, நிலமதுதானீலமதுகாசுயைந்து நீச்சானவீரமது காசுயைந்து, குலமதுதான்கல்லுப்புகாசுமைந்து கொடிதானசார மதுகாசுயைந்து, நலமதுதான்சீனமதுகாசுயைந்து நற்கெவுரிமனோ சிலையுங்காசு யைந்தே. 916

அஞ்சோடு வெங்காரமன்னபேதி அழகானதுத்தமொடுகாசு மைந்து, கஞ்சோடுயிதுவெல்லாங்கல்வத்திட்டு கடிதானவெண்கருவு மெருக் கம்பாலு, நஞ்சோடுவார்த்தறைத்துக்குழம்பிக்கொண்டு நல மானதாம் பரத்தின்தகட்டிலப்பி, மிஞ்சோடுகொடிவேலி வேரின் பட்டை மெலிவான அண்டோடுஞ்சமனுய்ச்சேரே, 917

சேர்த்தல்லோபொடியாக்கி யெருக்கன்பாலுஞ் சினத்தஅடை வெண்கருவுமத்தித்துக்கொண்டு, வார்த்தல்லோயரைத்திடுவாய் நாலு சாமம் வளமானகுகைபண்ணித்தாம்பரத்தைவைத்து, ஏர்த்தல்லோ மேல்மூடிச்சீலைசெய்து இயல்பாகக்குழிவெட்டி முழங்கால்மட்டும், போர்த்தல்லோ புலிப்பாணியெருவடுக்கி புகழாகக்கெஜபுடமாய் போட்டுவாங்கே 918

வாங்கியேமேற்கவசந்தள்ளிப்போட்டு வாசியர்முன்குழம்பில் பிசறிக்கொண்டு, தேங்கியேமூன் குகையில்வைத்துப்பூசிச் சிறப்பாக முன்போலபுடத்தைப்போடு, தாங்கியேயிப்படிதான் மூன்றுதரம் போடு தவளம்போல் குருவாகுஞ்செம்புதானும், ஓங்கியேயிக்குருவுக் கென்ன வொப்பு உத்தமித்தாயொப்பென்றுவுரைசெய்தேனே.

உரைசெய்தகுருவுக்கு யெடைக்கெடைதான்சாரம் உத்தமனே பொடிசெய்துகல்வத்திட்டு, நிரைசெய்த முன்னீராலரைத்துக்கட்டி நேர்பாகப்புடம்போட்டுப்பனியில்வைக்கக், கரைசெய்தஜெயநீராம் பூரவீரம் கனமாகப்பொடிசெய்துநீரிற்போட்டு, பரைசெய்தசெய நீரைவார்த்துக்கொண்டு பாங்கானசூதத்தையரைத்துருட்டே. 920

உருட்டியதைத்தான்வடமாய்க் கோர்த்துக்கொண்டு உத்தனே வைந்தெழுத்துமெட்டெழுத்துமோது, மருட்டியதை யவர்கையில் காண்பிக்கவேண்டாம் மாஞானமன்மவித்தையுற்றுப்பாரு. சிருட்டி யிதை யொளித்துவிட்டுமூலம்பாரு சிவயோகம்பிரமநிட்டைதெளிந் துகண்டு, திருடடியமாய் மூலமென்றமௌனம்பாரு தீர்க்கமுடன் சின்மயத்தையறிந்துபோற்றே. 921

பொற்ஜெட்டி வைப்பு.

போற்றவே பொற்றெட்டி வைப்புகேளு புகழாகத் தலாமது மேருபணணி, மாற்றவேமண்சிலே பிலக்கச்செய்து மகத்தான சூதம துபந்தானெட்டு, ஏற்றவேரெண்டு பலஞ்சுத்திகெந்தி யியல்பான ஓ-டிலேகெந்த கத்தையுருக்கி, தோற்றவே சூதத்தையதில் வைத்து க்கிண்டு துடிக்கின்ற சூதமது கரிபோலாமே. 922

சரியான சூதத்தில் வெடியுப்பு பலந்தான் கனமான தாளகமும் பலந்தான்போட்டு, உரியான பொடிபண்ணி மேருவிலேபோட்டு உத் தமனே குப்பிவாய்ச் சில்லிட்டுமூடி மரியானவாலுகையின் மேலே வைத்து வாமபாகத்தீமூட்டு பனிரண்டுசாமம் தெரியான கெந்தகத் திலெரிசசல் கண்டால் சில்லதனைத் தள்ளிவிட்டு சீலாகைவுட்டுக் கிண்டே. 923

ரத்தபாஷாணம்.

கிண்டையிலே அடியில் மருந்தில்லாவிட்டால் கெட்டியான பதமென்று தீயையாற்றி, சண்டையிலே ஆவவிட்டு ஒருசாமந்தான் சாதகமாயிருப்பான குறட்டினலே, மண்டையிலே குப்பியை தன் வெளியேவாங்கி மகத்தான கண்ணீரைத் தெளித்துஆற்றி, பண்டை யிலேயிரும் பானகத்திகொண்டு பக்குவமாய் மேலோடு பிரப்பாய் வாங்கே. 924

அஞ்சனபாஷாணம்.

வாங்கியதோர் தொட்டின்பேற் பொற்றெட்டியாச்சு மருவியே மோலோடிப் பதங்கித்து நின்ருல், ஓங்கியதோரத்தமென்ற பாஷா ணகாமம் உற்றஅடி நின்றதுவுமஞ்சனமுமாச்சு, ஏங்கியதோர் நடு வில்நின்ருல் கற்பரியுமாச்சு ஏகருனிமுன் நிற்கில் சரக்கண்டமாச்சு, தாங்கியதோரித்தனையு மாயிசொல்லச் சாதகமாய்ச் சித்தரெல்லாஞ் சமைத்திட்டாரே. 925

சமைத்திட்ட சரக்குகளில் வேதைகோடி சாதகமா யெவ்வொ ன்ருய்ப் பார்த்துக்கொண்டு, அமைத்திட்ட நூல்களிலே மறைப்பில் லாமலறியாத பசகட்குந் தெரியவென்று, குவைத்திட்ட முத்துபோ லொருகயிற்றில் கோாத்தேன் கொடிகொம்பு கயிற்கொடி மாமொன் றேபோல், இமைத்தி ட பிள்ளைகளுக்குகந்து சொன்னேன் ஏழா யிரம் பார்த்தவர்களென் போலாமே. 926

நாகப்பதங்கம்.

ஆமின்னம் நாகத்தைச் சொல்லக்கேளு ஆச்சரியம் நாகமது பலந்தான்பத்து, ஓமின்னம் நாகத்தைத்த கடுகவாங்கி வுயர்ந்தமயிர்

கொன்றையிலை யரைத்துக்கொண்டு, தாமின்னந் தகடுமேல் பொதிந்து மூடிச்சார்பாகப் புடம்போட்டு யெடுத்துக்கொண்டு, காமின்னமிப்படியே பத்துவிசை போட்டுக் கார்த்திகையின் கிழங்காலே பத்துவிசை போடே. 927

போடப்பா வெருகினுட கிழங்கில்பத்து புளியரனைக் கிழங்கதனில் பத்துவிசைபோடு, நாடப்பாபின்பெடுத்து எண்ணெய் குத்தியுருக்கி நலமாகக் கிண்ணியைப்போல் வார்த்துக்கொண்டு, ஊடப்பா நேர்வாளந் தயிலம்வாங்கி யுத்தமனே சாரமது காசஐந்து நீடப்பா துரிசியது காசுஐந்து நிலையான கல்லுப்புக்காசு அஞ்சே. 928

அஞ்சான பூநீறுகாசுஐந்து ஆதியென்ற கெவுரியது காசுஐந்து, பிஞ்சான கெந்தகமுங் காசுஐந்து பேசாத சிலையதுவுங் காசுவைந்து, மஞ்சான வீரமது காசுவைந்து மாசற்றலிங்கமுந்தான் காசுவைந்து, துஞ்சான தாளகமுங்காசுவைந்து துடியானவெடியுப்பு காசுமைந்தே.

காசுதானந் தாகுஞ்சினமப்பா கலந்திந்த இடையெல்லா மறுபதாச்சு, மாசுதான் சூதமது மறுபதாகும் வாகானகல் வத்திலிட்டுக்கொண்டு, ஆசிதானேர்வாளத் தயிலத்தாலே யைந்து நாளரைத்து நன்றாய் வில்லைகட்டி தூசுதானிழலுலர்த்தி அயத்தகடுக் குளழுத்தி துப்புரவாய்க் கிண்ணியைத் தான்பதித்திடாயே. 930

பதித்திடவே யரைத்துநன்றாய்ச் சீலைசெய்து பாங்கான முன்னிசைத்த மெழுகினாலே, நிதித்திட்டு இலுப்பை நெய்யால் விளக்குவைத்துநேராக விளக்கெரிப்பாய் மூன்றுநாள்தான், கொதித்திட்ட ரசமெல்லாம் பதங்கமேறுங் கொள்கியந்த பதங்கத்தைக் கத்திகொண்டுவாங்கி விதித்திட்ட நவலோகம் நூற்றுக்கொன்றி விரைந்ததுவும் பனிரண்டு மாற்றுமாமே. 931

ரத்தசிங்கி.

மாற்றான ரத்த சிங்கிவைப்புகேளு மருவியதில் காயசித்திலோக சித்தியாகும், கூற்றானயெமன்போலே சுருக்குமெத்த கொடியவிஷ சூதத்தை, நிமைக்கு முன்னேகொல்லும் காற்றான காரீயம்பொடி பலந்தான்பத்து, கனகத்தின் பொடிதானும் ரண்டரையே பலந்தானீற்றான நாகத்தின் பொடிபலந்தானைந்து நெல்லிக்காய்க் கெந்தகந்தான் பலம்பத்துபோடே. 932

பத்துடனே வெடியுப்புப்பலமுமைந்து பாங்கான தாளகமும் பலமும்நாலு.கொத்துடனே குதிரைப்பல பாஷாணமூன்று கொடிதான சாராயம்விட்டுஆட்டிசித்துடனே லோகமெல்லாங்கரையுமட்டு

ஆட்டிசிறப்பாகரவியிட்டுப் பொடியாய்ப்பண்ணி, முத்துடனேகாசியென்றமேருக்கேற்றி மூதண்டவாலுகையில் வைத்திடாயே. 933

வைத்திட்டுத்தீயெரிப்பா யெட்டுநாள்தான் மாராமலிரவுபகலாறுமற்று, ஊனத்திட்டு அடியதனில் தானேநிற்குலமாக ஆரவிட்டுடைத்துவாங்கி, கைத்திட்டுக்கம்பியா யருணன்போலக் கட்டியாயிருக்குமப்பாரத்தசிங்கி, பைத்திட்டுயிதினுடைய ஆட்டினுலைபத்து யுகமாடியல்லோ கரைகாணேனே. 934

ஏமசிங்கி

கரைகாணுரத்தசிங்கி பலந்தான்பத்து கலரிதற்குள்சூதமதுபலமும்பத்து, உரைகாணுக்கெந்தகமும் பலமும்பத்து உகந்துநின்றவெடியுப்புப்பலமுமைந்து, பரைகாணுதாளகமும் பலமுமொன்றுபரிவானசிலையதுவும் பலமுமொன்று, புரைகாணுவவுரிச்சார்விட்டுயாட்டுப் போனநாள்மூன்று அரைத்திடாயே. 935

மூன்றுநாளரைத்திட்டுப் பொடியாய்ப்பண்ணி முயற்சியாய்க்காசியென்ற மேருக்கேற்றி, பூணுநாள்வாலுகையின் மேலேயாற்றிப் பொருந்தவே தீமூட்டுமூன்றுநாள்தான், தோணுநாளாறவிட்டுவுடைத்துவாங்கித் துடியானயெமனென்ற சிங்கியாச்சே வீணுநாள்போகாமல்வீசமிடையுண்ணு மேனியுமோதங்கநிற மாகும்பாரே. 936

தங்கநிறமாணுக்கால் மேனிதானும் சாவேதுநோவேது கற்பாந்தகாலம், மங்களமாம்பெண்மாய்கை தனையகற்றிப் பாழாளபுளியுப்பைத் தள்ளிவிட்டு, சங்குநிறமாகவே பாலினுண்ணு சாவெனறததுபொய்யா முகாந்தவரைநிற்குங் கொங்கநிறமாகவுந்தான் லோகந்தனில் கொடுத்திடவேபதினாறு மாற்றுமாமே. 937

புடம்போட்டுயெடுத்துடனே குருவுமாகும் புகழாககாலிலொன்று காரங்கூட்டி, திடம்போட்டுக் கல்வத்திலிட்டுயாட்டிச் சீராகநாற்சாம மாட்டுமாட்டு, தடம்போட்டு அண்டோட்டிலிட்டுமூடிச் சார்பாகபுடம்போட்டுப் பனியில்வைக்க, நடம்போட்டயாறுபோல் செயநீராகும் நலமாவிந்நீரில் வீரம்போடே. 938

வீரமிட்டால்சிவப்பாகுஞ் செயநீரப்பா வீறுபட்டசூதமதுமதயானையொக்கும், வாரமிட்ட புலிகையிலாடுபோல அடர்ந்துபோஞ் செயநீரைகண்டவுடனப்பா, காரமிட்டசூதத்தைக் கல்வத்திட்டுக் கடியதொரு செயநீரால் மூன்றுநாளாட்ட, தூரமிட்டவெண்ணெயைப்போ லாகும்பாரு துடியானமத்தங்காய்க்குள்வைத்துவாட்டே,

வாட்டியேயேழுபுடம் போட்டெடுத்து வரிசையாய்க் கரண்டி தனில் வெண்ணெய்குத்தியுருக்கிப், பூட்டியேயெடுத்துப்பார் நாக த்துமீன்போல் புகழாகப்பளிச்சென்று மணியுமாகும், ஊட்டியேயுப சாரங்கள்நூற் றிரண்டுபத்து உத்தமனேபாஷாண மறுபத்துநாலு, தீட்டியேலவணவகை யிருபத்தைந்துதிரமாகவாட்டினம் நவலோகத் தாடே 940

ஊட்டுமேசத்தெடுத்து விடுவித்தாக்கா லுத்தமனேசாரணை தா னென்றேயாச்சு, பூட்டுமேயிப்படியே யிருபத்தொன்று போக்கான சத்தெடுத்துக் கொடுத்துகக்கில், யாட்டுமேநிசரூபமென்ற குளிகை யாச்சு அண்டமுதல் பதங்களெல்லா மிமைக்குள்புக்கி, சூட்டுமேநீ மீண்டுவருங்குளிகைவேதஞ் சரூபசித்துங் கவனசித்துஞ் சுருக்கம் பாரே. 941

தாம்பரச்சுன்னம்

சுறுக்காகத் தாம்பரத்தின் சுன்னங்கேளு சுளுகாமம்புளியிலை போல் தகடுவாங்கி, முறுக்காகப்பலமெட்டு நிறுத்துக்கொண்டு முனை யானபழச்சாற்றி லூறவைத்து, நறுக்காகக்கழுவியதை யெடுத்துக் கொண்டு நாறுகின்றசெம்பினிய வூறல்போக்கி, அறுக்காகவெள்ளி யஞ்சட்டியிலேயுருக்கி இதமாகமிளைதனைப் பொடியாய்ப்பண்ணே.

பண்ணியதோர் பொடிதானும வங்கத்திலுருக்கு பரவியதோர் சமபாகம் நிறுத்துக்கொண்டு, ஒண்ணியதோர்வெடியுப்பு நிமிக்குப் பாதி யுத்தமனேபொடியாக்கி வேறேவைத்து, நண்ணியதோர்வங்கம் நின்றுருகும்போது நலமாகவொவ்வொன்றாய் மாறிமாறி, கண்ணிய தோர்வங்கத்தில்போட்டுக்கிண்டு கசகாமல்சுண்ணமது வாகும்பாரே.

சுன்னமின்னமாவதற்கு வகையைக்கேளு துடியானவெண்கருவு மெருக்கப்பாலும், வன்னமின்ன ரெண்டுமொன்றாய்க் கலக்கிக்கொ ண்டு வங்கத்தில்விட்டரைத்து வில்லைதட்டி, தின்னமின்னவகலிலிட் டிப் புடத்தைப்போடு தீர்க்கமாயாறினபின் னெடுத்துவாங்கி, என்ன மின்னநாலுபலம் நிறுத்துக்கொண்டு இயலான சூதமதுபலந்தா னென்றே. 944

மிறுதார்சிங்கு

மாற்றானமிருதாருசிங்கிவைக்க மாணுக்காசொல்லுகிறேன் மகி ழ்வாய்க்கேளுங், காற்றானகாரீயம்பலந்தான்பத்து கலரிதற்குள்நாலி லொன்று சரகெந்தியப்பா, மூற்றானகெந்திக்குப்பாதி வெடியுப்பு முயற்சியாய்ப் பொடிபண்ணி வைத்துக்கொண்டு, தேற்றானயீயத் தைச்சட்டியிலேயுருக்கிச் சிறப்பாகபொடியிட்டு வருத்திடாயே. ()

வறுத்திடவேபொடிபோலே யீசஞ்சாறு மாசற்றபொடியெல்லா ங்கலசத்திட்டு, நிறுத்திடவேகலசத்தில லைவாசியிட்டு நேராதமேல்

மூடிச்சீலைசெய்து, கறுத்திடவேயடுப்பேற்றிப் பனிரண்டுசாமங்கால
ம்போலெரியிட்டுவுடைத்துவாங்கி, மறுத்திடவேபார்த்தாக்கால் கம்
பிபோலா மாசற்றமிருதாசிங்கியாமே. 946

ஆமப்பாபாஷாணமுப்பத்திரண்டி மப்பனேவைப்பதனைச் சொ
ல்லிப்போட்டேன், ஓமப்பாசித்தர்சொன்ன நூலைப்போல ஒளித்து
வைத்துச்சூத்திரத்தைச் சொல்லவில்லை, நாமப்பாகருவெல்லாமாரா
ய்ந்துபார்த்து நலமாகவொவ்வொன்றாப் பார்த்துகண்டு, சேமப்பா
ஏழாயிரஞ்சிக்கில்லாமல் சிறப்பாகவெளியாகத் திறந்திட்டேனே.

திறந்திட்டேன்சிவயோகி சித்தர்ஞானி சீராகப்பிழைக்கவென்
றுதிருவுளத்துக்கொப்பாய், திறந்திட்டேன் சித்தருடன்வாதுபோட்
டுச்சிவயோகிபிரமநிஷ்டை முனிகளுக்காய், திறந்திடடேனுத்தாளைக்
கேடடுக்கேடடுத் தேகசித்தியாகவென்று லோகத்தோர்கள், திறந்தி
டடேன் தேவியுட்பூசைக்காகச் சிவசொத்தைவலுமைபோ லுண்டி
டாயே. 948

வறுமைபோலுண்டுடுத்திவாதம்பாரு மகாசெறிமாயததே யழுந்
திடாதே, வறுமைபோல்திரிந்துகொண்டு காயசித்திபண்ணு மகத்தா
னரிஷிகளைத்தொண்டுபண்ணு, வறுமைபோல் திரிந்துகொள்ளுநாட
டிளுள்ளமோக்குமன் னுயிருந்தன்னுயிராயமனதிலுன்னு, வறுமை
யாம்மலையிலுள்ளவதிசயத்தைப்பாரு, மகாமூலிபாஷாணவகையைத்
தேடே. 949

பாஷாணப்பேர்வகை.

வகைகேளுபாஷாணப்பிறப்புதன்னை மைந்தனே முப்பததுரண்
டுதாவது, துகைகேளுமலைதோறுமுண்டுமுண்டு கணங்களாய்த் திரி
யாதேவுடபுகுந்துபாரு, நகைகேளுபாஷாணபேருதன்னை நகையான
கர்க்கடகங்கோளகமுஞ்சூத, மிகைகேளுமரிதாரங்கெந்தந்தானு மிக்
கானவக்கிராந்தவீரந்தானே. 950

தானென்றமுர்தமொடுசேர்பந்தங்கொடடி சங்கசிப்பாஷாணங்கு
திரைப்பகெவுரி, பானென்றபல்லாண்டுமுகந்துதப்பா பரிவானசரக்
காண்டம் லிங்கபாஷாணம், தேனென்றகாலபாஷாண மவுல்பாஷா
ணம், ஊனென்றகல்லானபாஷாணத்தோ டுத்தமனே கச்சாலபாஷா
ணமாமே. 951

ஆமென்றவஞ்சனப் பாஷாணத்தோடு மப்பனேபாஷாண லேச
கடுமாகும், தாமென்றக்கார்முகியுஞ் சிலாமாதம்பாஷாணம் கடிதான

வெள்ளையொடு அப்ரகபாஷாணம், போமென்றகாந்தபாஷாணத்தோ
டுபுகழான முப்பத்திரண்டுதாது, வானெறமலைதோறு மூண்டுவுண்டு 952
மகத்தானபெரியோரை வணங்கிக்கேளே.

கேட்கையிலேஆருடைய வர்க்கமென்னில் கெடி.யானமூலவர்க்
ககாலாங்கிநாதர், தாட டையிலே காலாங்கிமைந்தன்போகர் சார்பா
ணசீஷனென்று சொல்லிக்காட்டு, வீட்கையிலே சந்தோஷித்தமை
த்தேயுன்னை வேண்டிதோர்பாஷாண மூலிகையுமீய்வார், வாடகையி
லேவீடுசற்றும்வேட்டை நாய்போல்மாயத்தே யுண்மையுள்ள வாதந் 953
தானே.

வாதத்தானெளிதென்று யெண்ணவேண்டா மகத்தானசிவத்தி
னுடதெரிசனையேயொக்கும், நாகமென்றசிலம்பொலியில் மேவப்பண்
ணும் நாதாக்களருகிருந்து வார்த்தைசொல்லலாகும், கீதமொடுமூன்
றுலகஞ்சஞ்சரிக்கலாகும் செடியாங்காயமதுவுகாந்தவரைநிற்கும், நீ
தமென்றசிங்கியைத்தான் செம்புபண்ணு நில்வரமாய்ப்பதினாறு மா 954
ற்றுமாமே.

மிருதாருசிங்கிச் செம்பு.

சிங்கியென்றசெம்புக்குத் தண்ணீர்மிட்டான் திறமானபழச்சா
றுபடிதான்வாங்கி, அங்கியென்றசிங்கியைத்தான் பொடிபோற்பண்
ணி அயச்சட்டிதனில்வைத்து குருக்குப்போடு, மங்கியென்றபொடி
போலவறுத்துப்போடு மாசற்றதண்ணீர்மிட்டான்கிழங்குவாங்கி தெ
ங்கியென்ற பொற்பொடியர்ய்ச்சிவைத்துக் கெடியாகபிழலுலர்த்தி 955
த்தயிலம்வாங்கே.

வாங்கியந்தத்தயிலத்தாலாட்டும்ஆட்டு மறவாமல்மூன்றுநாளா
குமட்டும், வங்கியந்தவெங்காரங் கூடயிட்டு யியல்பானமூசையிட்டு
லையிலூது தாங்கியந்தமணிமணியாய்ச் செம்புமாகுந் தக்கறடெல்லா
ந்தயிலத்தாட்டித், தேங்கியந்தமுன்போலமூன்றுதாமூது சிவாசிவா 956
சிங்கியென்ற செம்புமாச்சே.

சிங்கியென்றசெம்பாலே சுன்னங்கோடி திறமான செந்தூரங்
களங்குகோடி, தங்கியென்றசெம்பெடுத்துத்தங்கள்கூட்டிச்சார்பான
தகடாக்கிச்சூதங்கெந்தி, நங்கியென்றசாரரைத்துத்த கட்டிற்பூசிநல
மாகமூன்றுபுடம் போட்டெடுத்துத், தெங்கியென்றநவலோகம்நூற் 957
றுக்கொன்றீ திறமானமாற்றதுவும் வார்த்தல்லோ.

வார்த்தல்லோதினந்தினமுமுறவைத்துமண்டலந்தான்கடந்தபி
ன்புளடுத்துவாங்கிப், போர்த்தல்லோ அயமெல்லாந் தாராய்போகும்

பேர்க்கான மருந்தோடே சுரண்டிவாங்கி, ஏர்த்தல்லோ சுண்ணும்பு உப்புநேரே யிடித்தல்லோ மருந்துக்குக் கவசங்கட்டி, ஆர்த்தல்லோ புடம்போட்டு எடுத்துக்கொண்டு அதட்டியே கையிலிட்டு வுருக்கிடாயே. 956

ஆமென்று அயச்செம்பு சொல்லக்கேளு அயத்தாலே கிளைமூடிமேல் மூடிபண்ணி, பேமென்ற தூரிசியது பலந்தான்ரண்டு போக்கானகெந்தியது பலமும்ஒன்று, காமென்றசூதமது பலமுமுக்கால் காரமாய்வீரமது காசுமைந்து, சாளென்றபொடிபண்ணி அயத்திற்போட்டு சம்பீரபழச்சாறு தினமும்வாரை. 957

உருக்கிடவே செம்பாகுஞ் சிவப்புமெத்த ஓகோசகோசெம்பெடுத்து மதியில்பத்து, நருக்கிட்டு இச்செம்புக்கொடுத்தாயானல் நலமாகமாற்றைந்து காணுங்காணும், அருக்கிடவே தங்கமிட்டு செந்தியிட்டு யாதியென்ற சூதமிடடுச் செந்தூரித்தால், பருக்கிடவே பத்துக்கு குறையாதப்பா பாரிந்த செந்தூரங் குன்றியுண்ணே. 958

பூநாகச்சத்து.

உண்ணென்ற பூநாகச்சத்துகேளு உத்தமனே செம்மண்ணில் பூநாகந்தான், கண்ணென்ற ரிஷபத்தின் சாணிதன்னில் கலங்கெடுத்துப் பிசறிநன்றாய்த் தட்டிப்போட்டு, கண்ணென்ற காய்ந்தபின்பு பாண்டத்திற்போடடு மறவாமல்மேல்மூடி யெரித்தெடுத்து, நண்ணென்ற சாம்பலைத்தான் காடிவிடடுக்கரைத்து நலமான தெளிவையெல்லா மிறுத்திடாயே. 959

இறுத்துவிடடு அடிவண்ட லூற்றுப்பார்த்தா லிதமாகப் பளிச்சென்று மின்னல்காணும், பறுத்துவிட்ட சூதத்தைவிடடுத் தேய்க்கமாசற்ற செம்பெல்லாம் பிடித்துக்கொள்ளும், கறுத்துவிட்ட காரத்தை யிட்டுருக்க கண்விடடு யாடியல்லோ செம்பாய்நிற்கும், அறுத்துவிட்ட குளிகைக்கு முந்திமுந்தி அப்பனேவுருக்கையிலே யிச்செம்பு தாக்கே. 960

தாக்காட்டால் குளிகைக்கு தீபனமேயில்லை சார்பானசத்தெல்லாமுடகொள்ளாது, தாக்காட்டால் கெவுனத்தில் சுறுக்கோடாது

தனித்த மின்னலிடியுடற்குள் களித்துப்போகுந், தாக்காட்டால் சந்திரனிற் குளிர்ச்சியாலே சங்கரிக்க வொட்டாது குளிர்ச்சிகாணுந், தாக்காட்டா லக்கினியிற் காந்திகாணுந் தாக்கியல்லோ சாரணையி லாடினாரே. 961

ஆடினதோர் செம்புக்கு நாலிலொன்று அப்பனே தங்கமிட்டுத் தகடுதட்டி, ஓடினதோர்சூதமொடு சிலையுங்கெந்தி வுயர்ந்துநின்ற தாளகமும் வீரஞ்சேர்த்து, நாடினதோர் முலைப்பால்தான் விட்டியாட்டி நலமான தகட்டின்மேற் பூசிப்பூசிப் பாடினதோர் மூன்றுபுடம்போட்டெடுத்து பாய்ச்சிநூலாயிரத்துக் கோடும்பாரே. 926

ஓடுமேபடிகத்தின் செம்புசொல்வே னுத்தமனே வெகுயுளுக்கு ஓடும்வேதை, பாடுமேபடிகக் கல்பொடியாய்ப்பண்ணி பண்பாகமா வாக்கிச் சேரைநாலு, ஆடுமேயாவாரம் வேர்தனின்பட்டை அப்பனேமறுதோன்றி வாகைநெல்லி, தேடுமேபூவரசு மருதுவன்னி சிறப்பான கிளுஞ்சியொடு நுணாவேர்தானே. 963

தானென்ற கருவேலும் வார்த்தங்கிபூவாம் சார்பானயின்பூரம் கருக்காயோபட்டை, வானென்ற வில்வரையின்பட்டை யெல்லாம் வளமாகச் சமபாகம் நிறுத்துக்கொண்டு, கோனென்ற வுரலிலிட்டு யிடித்து நையக்கொட்டியே பாண்டத்தில் தண்ணீர்விட்டுப், பானென்ற யெட்டிலொன்றாய்க் காய்ச்சிக்கொண்டு பக்குவமாய் வடித்திறுத்து அயப்பாண்டத்தி லூற்றே. 964

ஊற்றினபின் படிகாரஞ் சேருவொன்று ஒளியான கெந்தகந்தான் பலமும்நாலு, சாற்றியபின்பூநீரு பலமும்ரெண்டு மாசற்றதுரிசியது பலமும்நாலு, சாற்றியபின்பு நீறுபலமும்ரண்டு சாரித்துயாதனையின் பாலினாலே, ஏற்றியபின் கியாழத்தில் கூடவிட்டு எளியாலம்பால் சேருகூடவாரே. 965

வார்க்கவே நல்லெண்ணெய் நாலுசேரை நலமாகக்காய்ச்சியெல்லாங் குழம்பாய்ப்பண்ணி, ஏர்க்கவேகலயத்தில் வார்த்துக்கட்டி இச்சையாம்படிகத்தின் மாவில்விட்டு, தோர்க்கவேயரைத்து நாற்சாமமட்டுந் தெல்லுப்போல் வில்லையண்ணிச் சரவுலையில்வைத்து, பார்க்கவேதுருத்தியிட்டு யிருபுறமூடு படிகமதுசெம்பாகும் பண்பாய் வாங்கே. 966

வாங்கியேசெம்பெல்லாமெடுத்துக்கொண்டு, வளமானகறடெடு த்துத்தயிலத்தாலாட்டிப், பாங்கியேமுன்போலவைந்துதரமூதிப்பரு வமாய்ச்செம்பெல்லா மெடுத்துக்கொண்டு, ஓங்கியேகுளிகைக்குச்செ ம்பையீய ஓடுகிறகெவுனத்தி லிருளெல்லாந்தீர்க்குந் தாங்கியே யிச் செம்பைமதியிலீயச் சார்பாகப்பணிரெண்டுமாற்றுமாமே. 997

சங்கு செம்பு

மாற்றானபடிகத்தைப் போலேயப்பா வளமானதங்கத்தைச்செ ம்புபண்ணு, கூற்றானகுளிகைக்குக்கொடுத்தாயானால்கொடுவேகமோ டையிலேநாதம்பண்ணு, நாற்றானததுவிளைந்து தெல்லானுப்போல் நலமானசங்கத்திலுயர்த்திவேதை, மூன்றானதேவிவிடுபட்டுப்போவா ள்முழங்கியதோர் சங்கத்தைசெந்தூரித்துண்ணே. 998

உண்ணவேசங்கத்தின்செம்புகேளு ஒளியாகப்பலம்பற்று நிறுத் துக்கொண்டு, கண்ணவேஐவேலிக் கொட்டைகோவை கலந்துநின்ற முசுமுசுக்கைமணித்தக்காளி, பண்ணவேஅழுக்குறாஆறுந்தானும் ப ழம்வாங்கிச்சமமாக நிறுத்துக்கொண்டு, திண்ணவேநிழலுலர்த்திப்பூ ப்புடத்தில் சிறப்பாகவாங்கியல்லோ தயிலஞ்செய்யே. 996

செய்யப்பாதயிலத்தைவிட்டுஆட்டு சிறக்கவேயெண்சாமம் வில் லைகட்டி, மெய்யப்பாரவிதனிலேயுலரப்போடு மெதுவாகச் சீலைமண் ணேழுஞ்செய்து, வையப்பாவாலுகையில் தீயைமூட்டு மைந்தனே கைபாகம் நழுகிடாமல், பொய்யப்பாபோகாமல் சரவுலையிலூதுபோ க்கெல்லாமணியணியா யிறங்கும்பாரு. 1000

இறங்குகின்றசரக்கெல்லா மெடுத்துக்கொண்டு எளிதாகக்கொ டுக்குமூன்மருந்துகூட்டி, அறங்குகின்றதயிலத்தா லரைத்தெடுத்து அடவாகவில்லைதட்டிச்சரவுலையிலூது, தாங்குகிறசத்தெல்லாமெடுத் துக்கொண்டு சார்பாகமுன்போலவுருக்குமப்பா, உறங்குகிற யானை யைப்போல் சத்துவேக மொருகொடிக்குள் சூதமது விரைத்துப் போமே. 1001

போமென்றசூதத்தில் தங்கஞ்சேர்த்துப் பூவையாம்நாகமிட்டுக் கெந்தியிட்டு, ஆமென்றவாலுகையின் செந்தூரித்தாலருணன்போல்

செந்தூரமாகும்பாரு, ஓமென்றநவலோகம்நூற்றுக்கொன்றுயுயர்ந்த துவும்பதினாறுமாற்றுகாணும், தாமென்றசெந்தூரங் குன்றியுண்ணு சதகோடிவருமெல்லா மொருநாளாமே. 1002

வக்கிராந்தசத்து.

ஆமென்றவக்கிராந்தசத்துகேளு அப்பனேபலம்பத்து நிறுத்து கொண்டு, ஓமென்றவெண்காரம்பலந்தானைந்து உயர்ந்துநின்றகெந்தி யதுபலமுமைந்து, வாமென்றகௌரியதுபலந்தான்ரண்டு வளமான சிங்கியதுபலமுநான்கு, தேமென்றமலைத்தேனுங்கதண்டுத்தேனுநீர்க் கமுடன் தானரைப்பாய்சாமம்நாலே. 1003

நாலானசாமமதுவரைத்தபின்பு நலமானசரக்கதுவு மெழுகதா கும், காலானமெழுகுதனையெடுத்துமைந்தா கலங்காமல் மூசைதனி லடைத்துக்கொண்டு, மாலானரவிதனிலேகாயவைத்து மார்க்கமுட ன்குகைதனிலேயேற்றியேதான், பாலானதுருத்தியது நன்மதாகும் பாலகனேதானுவந்து ஊதிடாயே. 1004

ஊதவேவங்கமது யென்னசொல்வேன் வுத்தமனேகளங்கென்ற சத்துமாச்சு, நீதமுடன்சரக்கதுவுஞ் சேர்ந்துமல்லோ நிட்களங்கமா னதொருவெள்ளையாச்சு, தோதமுடன்சவளைக்குநாலுக்கொன்று து ப்புரவாய்த்தங்கமதுவொன்றுங்கூட்டி, வாதமறுசெய்வதற்கு வழியு ண்டாக்கிவளமுடைய சத்துதனைவுருக்கிடாயே. 1005

உருக்கிடவேயேமனென்றசத்துமாச்சு வுத்தமனேகெந்தியதுநா லுக்கொன்று, வருக்கமுடன்சூதமது யிடைதான்கெந்தி வளமாகதா ன்சேர்த்துபொடித்துமைந்தா, பெருக்கமுடன்முப்புமென்ற பூநீரப் பாபோரானகளஞ்சியது வொன்றேசேர்த்து, சுருக்கமுடன்பொற்கை யான்சாற்றினாலே சுந்தரனே யரைத்திடுவாய் சாமம்நாலே. 1006

சாமமதுநாற்சாமமரைத்தபின்பு சாங்கமுடன்ரவிதனிலே காய வைத்து, ஏமமென்றபொடிதானுங்காய்ந்தபின்பு யெழிலானமரக்க ல்லால்கொண்டுமேதான், நாமமென்றவளையலதுகுப்பிதானும் நலமா னசீலையதுயேழுஞ்செய்து, வாமமுடன்பொடியதனைக்குப்பிக்கேற்றி வளமானமரக்கல்லு கொண்டுமூடே. 1007

மூடியே யெழுசீலை வலுவாய்ச்செய்து வுத்தமனே காய்ந்தாறி யெடுத்து மைந்தா, தேடியேதளவாயாம் மண்பாண்டத்தில் தேற்ற முடன் மணல்தனை விரல்நாற்போடு, கூடியேகுப்பிவாய்த் தெரியுமட் டும் கூசாமல் மணல்தனைப் போடுபோடு, வாடியேமயங்காதே யருண் மைந்தா கேள் வளமாக மேல்மூடிச் சீலைசெய்யே. 1009

செய்யவேசீலையது வலுவாய்ச்செய்து செயம்பெறவே வாலுகை யாமேந்திரத்தில் பையவேபாண்டமதை யடுப்பிலேற்றி பாங்கான கணபதிக்குப் பூசைசெய்து, துய்யவே மனோன்மணியாள் பாதம் போற்றி துப்புரவாய் சின்மயத்தை மனதிலுன்னி, வெய்யவே நாற் சாம மெரித்தபோது வேதாந்தசிந்தூரம் போலேயாச்சே. 1010

ஆச்சப்பா செந்தூரமென்னசொல்வேன் அப்பனே நாதாக்கள் செய்யும் வேதை, மூச்சடங்கிக்காலாங்கி நாதர்தாமும் மூதலகில் சமாதிமுகஞ் சென்றபோது, பாச்சனுடனெந்தனுக்கு வுபதேசித்த பாங்கானசெந்தூர வேதையப்பா, ஆச்சரியமானதொரு சித்துவே தை ஆகாகாநாதாக்கள் வேதைதானே. 1011

தானனசெந்தூரமாரிப்பின்பு தாக்கானசோடசமாம் பூசைமார் க்கம், கோனனகுருவருளை முன்னையெண்ணி கொற்றவனே லட்ச முரு மோதுவோது, தேனனமனோன்மணியும் நிர்த்தஞ்செய்வாள் தேகமதிலுந்தனுக்கு வாதஞ்சித்தி, மானனமகதேவர் கடாட்சத்தா லே மதியமுர்தங்கொண்டுமல்லே வாழ்குவீரே. 1012

வாழ்கவென்றால் செந்தூரந்தனையெடுத்து வளமான வெள்ளி யது நூற்றுக்கொன்று, தாழ்கவேதானுருக்கி கொடுத்தாயானல் தப் பாதுமாற்று பனிரெண்டதாகும், மூழ்கவேபுடந்தனக்கு யேகாத ப்பா மூதுலகில் நவகண்டர் செய்யும்வேதை, வேழ்விமுகந்தானிரு ந்து வம்பாள்பூசை மேதினியில்செய்துமல்லோ வெடுத்திடாயே.

எடுத்திடவேயேமமது யென்னசொல்வேன் யெழிலானவைப்ப துவும் பிறவித்தங்கம், கொடுத்திடவே செம்பதனில் நூற்றுக்கொ ன்று கொற்றவனேதானுருக்கிகொடுத்தபோது, தடுத்திடாவர்ணத்து

சோடகமுமாகும் தாக்கானசெம்பதுவுந் தங்கச்செம்பாம், கொடுத்திடாசமுசாரிக் கானவேதை கேசரத்திலிந்த வருஞ்செய்யலாமே.

காயகற்பம்

செய்யவே புலிப்பாணி மைந்தாகேளு செயலான மார்க்கமது யின்னஞ் சொல்வேன், துய்யநல்லவக்கிராந்த செந்தூரத்தை துப்புரவாயுண்டவர்க்கு பலனைகேளு வையகங்கள்நாலுயுக மிருக்கலாகும் வாகானசெந்தூர மதித்தமார்க்கம், வெய்யபுகழ் வாசியைத்தான் மேல்நோக்காது மேனியதுசிவப்பேரி மின்னுபாரே. 1015

மின்னுமேதேகமது செந்தாழைவீசும் மிக்கானவாசியது கீழ்நோக்காகும், பன்னவேநெடுங்கால மிருக்கலாகும்பாங்கான தூலமது வழியாதப்பா, சொன்னதொரு காலாங்கிநாதர்வாக்கு துப்புரவாய் வைகத்தில் பொய்யாதப்பா, நன்னயமாய் ஞானமென்ற பொருள் தான்காட்டும் நாதாந்தசெந்தூர வேதைகாணே. 1016

நூற்பெருமை

காணவேபுலிப்பாணி மைந்தாகேளு காசினியில்திக்கெட்டுங் கண்டுவந்தேன், தேணவேசீனபதித் தன்னிற்சென்று தோற்றமுடன் காலாங்கி நாதர்பக்கல், வேணபடி சமாதிமுகந்தானிருந்து வெகுகால மகிமையெல்லாங் கண்டுவந்தேன், ஆணவங்கள் தானொடுங்கி குளிகை பூண்டு வப்பனே நாற்றிசையுஞ் சுத்தினேனே. 1017

சுத்தினேன்மலைவளங்கள் யானுங்கண்டேன் சுந்தரனேசாத்திரங்கள் சமாதிகண்டேன் எத்திசையும்பதினெண்பேர் நவகோடிதானும் யெழிலான நாற்பத்தெண் முனிவரோடும், புத்தியுள்ளயிதிகாச புராணம்யாவும் புகழானசித்துமுனி யாயுற்வேதம, பத்தியுடனாராய்ந்துவுளவுகண்டு பாங்கானசாஸ்திரததைப் பாடினேனே.

பாடினேன் போகரேழாயிரந்தான் பாங்கானகாண்டமது சத்தகாண்டம், தேடினேன்யோகமது வட்டவேதைதெளிவானஜாலங்கள் கருவுமார்க்கம், நீடியதோர் பிறப்புரூபா வர்ணம் நெடிதானயிந்திர

மாம் ஜலாப்போக்கு, கூடியதோர் மந்திரமாந் தந்திரபோக்கும் குறிப்பான மாற்றமது வமைத்திட்டேனே. 1019

அமைத்தேனே முதற்காண்டந் தன்னிலப்பா வப்பனே யோகிகளுக்கான மார்க்கம், நிமைப்பொழுது தவப்பொழுது மழியாவண்ணம் நீடாழியுலகுமது முடிவுமட்டும், தமையான அத்வீதஞானந் தன்னில் தபோதனர்கள் ரிஷிகள்முதல் கூறுவண்ணம், சுமைபோன்றஞானமெனும் வடிவந்தன்னை சூட்சமுடன் கொட்டி வைத்தேன் கூாமைபாரே. 1020

பாரேதான் யெந்தனது காண்டமேழு பான்மையுடன் கண்டவர்க்கு யெல்லாஞ்சித்தி நேரேதான் பன்னீராயிரத்துக் கொப்பாய் நேர்மையுள்ள தைத்தியனுர் கூறும்நூலில், வேரோடுஞ் சொல்லியதோர் ஞானமார்க்கம் வேதாந்த சின்மயத்தை வெளியதாக்கி,கூரோடு முதற்காண்டந் தன்னிலேதானே கூறினேன் சங்கையறக் கூறினேனே. 1021

கூறினேன் போகரேழா யிரந்தான் குருவானநூலிது தான் சத்தகாண்டம், மீறியே தோரின்னூலுக் கெந்தநூலும் மேதினியில் செய்தவர்களாருமில்லை, தேறியதோர்கும்பமுதி யுன்னீராயிரந்தான் சிறப்பான நூலென்றே செப்பலாகும், ஆறியதோர் போகரேழாயிரந்தான் வப்பனே முதற்காண்டம் முற்றதாமே. 1022

# போகர் சத்தகாண்டம்–7000

## 1 - வது காண்டம்

முற்றிற்று.

---

உ

கடவுள் துணை.

மஹாமகுத்துவம் பொருந்திய

# போக முனிவர்

திருவாய்மலர்ந்தருளிய

# சத்த காண்டம் - எ௲.

## இரண்டாவது, காண்டம்

காப்பு.

ஆதிபராபரத்தினிட கிருபைபோற்றி
    அன்பானவடிமுடியும் நந்திகாப்பு
சோதியாமுச் சுடரினருளேகாப்பு
    சூட்சமாஞ்சதாசிவத்தின் பொருளேகாப்பு
பாதிமதிசடையணிந்த பரமன்காப்பு
    பத்தியுடன்முத்திதரு முதல்வன்காப்பு
ஓதியதோர்வாணிசரஸ் வதியேகாப்பு
    ஓங்காரத்துள்வட்டத் தொளிகாப்பாமே.

காப்பானயேழுலட்சங் கிரந்தந்தன்னில்கருவாக வொளித்து
வைத்த சூட்சமார்க்கம், காப்பானவைப் புடனேசீனவெப்பு காரமா
ங்குடோரிமுதல் கண்டாராய்ந்து, காப்பானகளங்குகளும் கன்னப்
போக்கும் களிப்பான செந்தூரக்காடெல்லாந்தான், காப்பானசெய
நீர்கள் பூநீர்யாவும் கடையான திராவகமு மெழுகுமாமே. 2

ஆமேதான் மெழுகுடனே தயிலமார்க்கம் அழகானவஞ்சனமா
மையின்போக்கும், தாமேதானதர்வணத்தின் யெழுத்தின்போக்கும்
தாக்கான மூலிகையின் சாபப்போக்கும், வேமேதான் வெகுகோடி
காலகற்பம் விருப்பமுடனுண்டுபின் காட்சியெல்லாம், நாமேதானறி
வதற்கு யாவுஞ்சொன்னேம் நாதாக்களடிவணங்கி நவிறிட்டேனே. 3

நவின்றிட்டே னேழுலட்சங் சிறக்கப்போக்கை நயமுடனே
நாட்டுளோர்க் கறியவென்று, புகின்றிட்டேனே ழாயிரக்காண்டமாக

பூட்டினேன் சத்தகாண்டம் பண்பதாக, தவின்றிட்டேனிக் காண்ட மிரண்டாங்காண்டம் தருமானபோக்ருகளு மனந்தஞ்சொன்னேன், கவின்றிட்டபோகரிஷி சொன்னநூலில் கருமான நூலிதுதான் மூத நூல் தானே. 4

வாதலிங்க வைப்பு.

தானானபெருநூலேழாயிரந்தான் தாக்கானசீனமுடன்வைப்பு மாற்கம், போனானகுருசொன்ன நீதிமார்க்கம்| குறிப்பானகைபாகஞ் செய்பாகந்தான், வேனானலிங்கமதுவைப்புமார்க்கம் வெளிதாகக் கூறு கிறேன் மைந்தாகேளு, பானானபடிகாரம் கெந்திதானும் ¦பளிங்கான ரகமுடனே மதியுமாமே. 5

மதியானபூநீறு காரந்தானு மார்க்கமாமூவருப்பு நாகத்தோ டோ, ததியானவறுவகை செயநீராலே தண்பெறவெண்சாம மரைத் துப்போடு, பாயானசெம்பினிட பாத்திரத்தில் பதிவாகத்தாள்கொ ட்டிசட்டிமூடி, விதிபோலே முப்பொழுது யெரித்தாயானல் விளையு மடா லிங்கமென்ற கம்பியாச்சே. 6

கம்பியாமேற் பதங்கலிங்கமாச்ச காட்டுமேநீமுறுவல் நடுவிலா ச்சு, தும்பிபோல் நிறமுடைய பாண்டந்தானுந் தொட்டியென்பாஷா ணந்தானுமாச்சு, தம்பாலென்றலிங்கமது வெள்ளி செம்பில் தாக்காக பத்துக்கு வொன்றபோடு, அம்பொன்னுமாற்றதுவு மொன்பதாகும் அப்பனே லிங்கமது குருவுமாச்சே. 7

லிங்கசெம்பு.

குருவானலிங்கமதை செம்புதன்னில் கொடுத்துமேசரியெடை யாய் வூதிப்போடு, கருவானவெள்ளியிலே பத்துக்கொன்று கருத்தா கத்தானுருக்கி யெடுத்துப்பாரு, உறவானமாற்றதுவு மெட்டதாகு முத்தமனே பத்திலொன்று தங்கஞ்சேர்த்து, பருவாகத்தக டடித்து ப்புடத்தைப்போடு பாங்கானதங்கமது பிறக்கும்பாரே. 8

பாரப்பா தங்கமென்ன சொல்லப்போமோ பழுப்பான பசுந்த ங்கம் யென்னசொல்வேன், கூறப்பாசிவயோகநிலையில் நின்றுகும்பித் துரேசகத்தை மாறிக்கொண்டு, சேரப்பாநடுநிலையை மையம்பற்றி சிறக்கவே சுழிமுனையை நிறுத்திக்கொண்டு, பாரப்பா தவநிலையைக் கைவிடாமல் பக்குவமாய் வாசியோகம் பாருபாரே. 9

பார்க்கையிலே தேகமதுக் கற்பமுண்ணு பச்சையென்ற வில்வ மது இதழையாகும், சேர்க்கையுட னிதமொன்று மிளகுவொன்று சிறப்பாகக் காலையிலே வுண்ணவேண்டும், தீர்க்கமுடன் காளொன்

றுக்கதிகமாக திறமுடனேமிளகதனை யேத்தவேண்டும், ஆர்க்கமுடன்மண்டலந்தா னுண்டுபாரு அப்பனேதேகமது பொன்னும்பாரே.

பொன்னனதேகமது கற்றாலும் போகுமேநரை திரையும்பூதலத்தில், மன்னனகண்ணிரண்டு மொளிமேயவீசமயக்கமில்லை யென்னுளுங் கொதிப்புமில்லை, கன்னன மாய்கையதுயற்றுமேதான் காலனுக்கு நாளதுவுமிடங் கொடாமல், எங்காளுமூலமதில் வாழ்வீரென்று யியம்பினர் போகரிஷி யெழிலாய்த்தானே. 11

சிடிகைவேதை.

தானைநாகமென்ற சிறுகண்ணுகம் தனியானசாரமுட னிலுப்பை நெய்யில், வேனுகவேழுதர முருக்கிச்சாய்க்க வெழிலானசட்டைதள்ளிசுத்தியாச்சு, கோனனதாளகமும் வீரனென்று கொடிதானகெவுரியுடன் துருசுவொன்று, பானுகவோர் நிறையாயெடுத்துக்கொண்டு பாங்கான நாகத்திற் சரியாய்க்கூட்டே. 12

கூட்டியேதானுருக்கி கிராசமீவாய் குருவானநாதமது கட்டிப்போகும், தாட்டீகமாய் வெள்ளிக்கு நேராநாகம் தாக்குவாய்த்தானுக்கி வூதிப்போட்டு, மாட்டுவாய் முன்சொன்ன லிங்கசெம்பு மார்க்கமுடன் வெள்ளிதனில் பத்துக்கொன்று, வாட்டமாய்த் தானுருக்கி யெடுத்துப்பாரு மகத்தான வர்ன்னமது மேவும்பாரே. 13

பாரான செம்புதனில் வர்னமுண்டாய்ப் பாங்கான நாகத்தை வேதிக்கும்பா, கூராகவிரண்டிலொன்று தங்கஞ்சேர்த்து குறிப்பாகத்தகடடித்துப் புடத்தைப்போடு,வீரானமாற்றதுவும் விஷம்போலே றிமிக்கான வெட்டரையு மாகும்பாரு, காறுககாவிக்கு முப்புக்கேகாகனமான செம்பிலிட வேகந்தானே. 14

லிங்ககுரு.

வேகமாம்லிங்கமொரு பலமொன்றுகு மிக்கானமுலைப்பாலால் சுருக்குதாக்கு, பாகமாமெலுமிச்சம் பழச்சார்சாமம் பசுவானமேனிச்சார் சாமந்தாக்கு, யூகமாங்தேனுமோர் சாமந்தாக்கு யுற்பனமாமெருமைப்பால் சாமந்தாக்கு, சாகாமல்மேதிப்பால் சாமந்தாக்கு சாரவேசாட்டரணை சாமமாமே. 15

சாமந்தான் சுருக்கிடவே கட்டியாகும் சாங்கமாய் வயமதுவும் பொடிகாலாகும், தாமந்தான்றுளமுங்கால் தானுகும்தனியான கெந்தியது கால்தானுகும், வெமந்தான் சிங்கியதுகால்தானுகும் வெடியா

னவுப்பதுவும் கால்தானு நம், ஆமந்தான் சிற்றண்டக் கருவாலாட்டி அப்பனே லிங்கத்திற் கவசம்போடே. 16

போடவேரவிதனிலே காயப்போடு பொங்கமுடன் சீலையதுயே மூஞ்செய்து, நீடவேபூப்புடமாமுமியிற்போடு நெடிதான லிங்கமது கட்டியாடும், கூடவேவெள்ளிசெம்பில் பத்துக்கொன்று குறிப்புடனே யுருக்கிப்பார் மாற்றுராகும், தேடவேனத்துக் குறுதிமெத்தசிறப்பாகயூதியபின் னெடுத்துக்கொள்ளே. 17

கொள்ளவே மாற்றதுவு முறுதிமெத்த கூறவேயிடைக் கிடைதான் தங்கஞ்சேர்த்து, விள்ளசீவனத்தை செய்துகொண்டு விரிவான சாத்திரத்தை யறிந்துகொள்வாய், தள்ளவேபொய்சூது கள்ளுநீக்கு தாழ்மையா யெளியோரைப்போலவாழ்ந்து, மெள்ளவேதுன்பசாகரத்தைவிட்டு மெதுவாக துவாதசாந்தத்தில் நில்லே. 18

நில்லவே கருமானமின்னமொன்று நெடிதானலிங்கமது பலந்தானுகும், புல்லவேவங்கமது பலந்தானென்று புகலவேதாளகமும் பலந்தாமென்று, முல்லவே மூலைப்பாலால் நாலுசாமமூர்க்கமாய் தானரைத்துக்கவசித்தேதான், வெல்லவே லிங்கமதுக்கங்கிபூட்டிவிருப்பாகரவிதனிலே காயப்போடே. 19

காயவேரவிதனிலே யுலர்ந்தபின்பு கருவாகசாண்குழியில் புடமேபோடு, மாயவேயுமிப்புடமாம் லகுப்புடந்தான் மயங்காமல் தான் போட கட்டிப்போகும், சாயவேகவசமது நீக்கிப்பாரு சட்டமுடனுருகியறுகட்டிநிற்கும், பாயவேவெள்ளிசெம்பில் பத்துக்கொன்று பாச்சடாமாற்றதுவு மாறதாமே. 20

ஆறுனமாற்றதுவு மென்னசொல்வேன் அரகராசிவயோகம் காணலாச்சு, பாருனதங்கமது நேரேசேர்த்து பரிவாகத்தக டடித்துப்புடத்தைப்போடு, கூறுனமட்டதங்கஞ் சேர்த்துருக்க குசலமாம் மாற்றதுவும் பத்ததாகும், பேறுனலிங்கமது குருவினுலே பிலத்துதடாவாதவித்தை நிசமதாச்சே. 21

நிசமானவாதவித்தைக் கைக்குள்ளானுல் நிச்சயமாம் விட்டகுறைவாய்த்து தென்பார், குசமானவிதியாளி சாதியாவான் கும்பகத்தைச்சேர்ந்துகொண்டு கூர்மைசொல்வான், தசமானமூலத்தை யிருத்திக்கொண்டு தாக்கியேசதாநித்தம் நிஷ்டைசெய்வார், வசமானநிஷ்டையிலே யிருந்துக்கொண்டு வாதிப்பான்சண்டாளர்க் கிடங்கொடானே. 22

இடங்கொடான் கோடிபேரணுகினுலும் இயலானது வாதத்திலிருந்துகொண்டு,மடமுடனே சிவலாயங்கள் கட்டுவான்பார்மகத்தா

ணசித்தர்கட்கு தொண்டுபண்ணி, திடமுடனேயவர்களிடங் கோடி காலந்தான் தெரிசித்துவிருப்பமுட னியாவுங்கேட்டு, சடமதற்கு காயசித்தியேத்தவென்று சதாகாலம்நிஷ்டையிலே நிற்பர்தானே.

லிங்ககுரு

தானனலிங்கமது பலந்தானென்று சார்வானசீனமுட னண்ட மொன்று, வேனனவெடியுப்பு பலந்தானென்று வெடியானவீரமதை சேர்த்துமேதான், பானனமுட்டையின்கருவினலே பதமாகத்தான ரைத்துக் கங்கிபூட்டி, மானனரவிதனிலே காயப்போடு மகத்தான மண்மறைவில் புடத்தைப்போடே. 24

போடவேபத்துமுறை முன்போல்தானே போக்கானசரக்கெ ல்லாம் மொன்றாய்க்கூட்டி, தேடவேதானரைத்துக் கவசஞ்செய்து தெளிவாகமண்மறவிற் புடத்தைப்போடு, நாடவேசாண்குழியில்வர ட்டிநாலாம் நலமாகப்புடம்போடக் கட்டிப்போகும், வாடவேகவ சத்தைநீக்கிநீங்கி வண்மைபெறப்போடுவது வலுமைபாரே. 25

வலுவானலிங்கமதுகுருவுமாச்சு வரிசைபெற வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று, சலுவாகக்கொடுத்துருக்கி வூதிப்போடு சூட்சமா மாற்றதுவு மாறதாகும், மலுவாகத்தங்கமதுக்கிடையேசேர்த்து மதி ப்புடனே தானுருக்கிப் புடத்தைப்போடு, மெலுவானமாற்றதுவு மதிகங்காண மேன்மைபெறகுப்பகத்தில் நின்றுகொள்ளே. 26

கொள்ளவேயோக சாதனத்தைப்பாரு குறிப்புடனேபெப்போ தும் வாசிபாரு, மெள்ளவேமுப்பூவையறிந்துபாரு மேன்மையாம் ஞானத்தை மேவிப்பாரு, உள்ளவேமனவாக்குக் காயம்பாரு உற்ப னமாயவஸ்தைமுத லுளவுபாரு, தள்ளவேமோகத்தை யகற்றிப் போடுசதானந்தம் நிஷ்டையிலே தனித்துநில்லே 27

நின்றமேதுஷ்டர்களை யகலத்தள்ளி நிட்சமாய்கருவிகரணாதி யெல்லாம், வென்றும்மெயாராய்ந்துமேலுக்கேறி வேதாந்தவிளக்கொ ளியை மேவிப்பாரு, குன்றமேலிருந்தாலும் குறைவுமுண்டோகூற வேகுபகத்தி லிருந்துக்கொண்டு, கன்றதான் தாய்தனையேதேடினாற் போல்கடுகவே சின்மயத்தை யறிந்துகொள்ளே. ᒾ8

லிங்ககுரு

அரியவேயிருளதனைப்போக்கடிக்க அப்பனேசூரியன்வந் துதித் தாற்போல, முறியவேலிங்கமதுபலந்தானாகு முசியாதசூடனதுபலந் தாகும், தெரியவேவிரண்டுருவ மொன்றாய்ச்சேர்த்து தேய்த்திடவே

மெழுகதுபோ லாட்டிமைந்தா, கரியவேலிங்கத்திற் கங்கிபூட்டிக் கச
காமல் தீயதனில் வாட்டிடாயே. 29

வாட்டவேயிந்தமுறை பத்துமாற்கம் வரிசைபெறநெருப்பதனிற்
றீயாலாட்டு, நீட்டமுடன்லிங்கமதை யெடுத்துப்பாரு நிறையான
கட்டியது வுறுகிநிற்கும், தேட்டமாஞ்செயநீரில் சுருக்குதாக்குதெ
ளிவாகலிங்கமது வுருக்குபோலாம், முட்டமாம்லிங்கமதுகருக்குருவு
மாச்சுமுசியாது வர்ணமது கண்கொள்ளாதே. 30

லிங்ககுரு அறுவகைசெயநீர்

கண்ணவேதுருசுடனே காரமாகும் கடிதானவெடியுப்பு சீனந்
தானும், நண்ணவேயுப்புடனேசாரமாகும் நலமானசரக்கதுதானரா
தாரம், பண்ணவேசெயநீராய் செய்துகொண்டு பாங்கானலிங்கத்திற்
சுருக்குதாக்கு, எண்ணவேசெயனீரின் போக்கையாவும் யென்ன
சொல்வோம்நாதாக்கள் போக்குதானே. 31

போக்கானபேர்க்கிதுவே யென்னசொல்வேன் பூட்டினார்மர்
மங்க ளிதுக்குள்ளாச்சு, தூக்கானவண்டபிண்ட மிதனுலாச்சுதுறை
கோடிதொந்தங்கள் கோடாகோடி, தாக்கானவிதியாளி யறிவான
ல்லால்தனியான வீணுளனறிவானோதான், வாக்கானவீணருடன்
வாய்பேசாதேவழிவிட்டு வழிபோவான் மடையன்தானே. 32

மடையனும் நூல்பார்த்தேனென்பான்பாரு மகத்தானரகசிய
ங்க ளனேகமுண்டு, இடையனைப்போல் தோள்கொண்டு வாட்டை
யேத்திவாடெங்கேயென்று சொன்னகதையைப்போல, தடையன்றி
பலநூல்கையேந்தியேதான், சதாகாலம்வாசித்துப் பலந்தானென்ன
விடையின்றிநுட்பங்க ளறியார்மாண்பர் வீணிலேவாதிகளாய்த் திரி
வார்தாமே. 33

திரிந்துமேகும்பல் கும்பலாகக்கூடி திறமுடனேசாஸ்திரத்தின்
நுட்பங்காணார், பரிந்துமேயோகியிடஞ் சொல்லமாட்டார் பக்குவ
மாய்தொழில்முறையைக் கேட்கமாட்டார், எரிந்துமேதெரிந்தவர்
போல் யாவும்பேசி யெழிலானசாஸ்திரத்தை தாறுமாராய், வரிந்
துமேதலையேடு காப்பேடுந்தான் வரிசைமுதல்குறிநோக்க மறியார்
தாமே. 34

நந்திலிங்ககாரசாரலோக குரு

நோக்கமாங்கண்போன குருடனுக்குநுணுக்கமாந் தடிகொடு
த்த கதையைப்போல, சூசகமாலிங்கமொரு பலமேவாங்கிசுருதி
பெறமுலைப்பாலில் சுத்திசெய்து, தீக்கமாயமதுவும் பலந்தானெ
ன்றுதிறமான வெள்ளியது பலந்தானென்று, பாக்கமாந்தாளகமும்
பலந்தானென்று பளுவானசிங்கியது பலந்தானென்றே. 35

ஒன்றான வங்கமது பலந்தானென்று ஓகோகோதுருசுடனே காசுகட்டி நன்றான அபினியது பலந்தானென்று நயமான நாகமது பலந்தானென்னீ, குன்றுமல்பொடியதுவாய் மைந்தாமைந்தா குழுறவே யெலுமிச்சன்பழச்சாற்றாலே, பன்றுகபாகுபோலரைத்துக்கொண்டு பாங்குபெறலிங்கத்திற் கங்கிபூட்டே. 36

பூட்டியேசுண்ணும்பு சீலைசெய்து புகழ்ச்சியாய்சட்டிக்குள்மணல்தான்றப்பி, வாட்டமாய்மணல்நடுவில் வைத்துமூடி வாகாகத் தானெரிப்பாய்கமலம்போல, பூட்டமாய் நாற்சாமம் யெரித்துவாங்கி பொங்கமுடன்சுண்ணும்புக் கவசம்நீக்கி, நாட்டமுடன் வச்சிரமாங் குகையில்வைத்து நலமாகவுருக்கிடவே களங்கமாமே. 37

களங்கான காரசாரலோகந்தன்னைக் கருவாக வோட்டில்வைத்தூதிப்பாரு, வளமானவெள்ளியிடை நின்றுமேதான் வாகாகமாற்றதுவுமேழதாகும், மனமுடனேநாலுக்குத் தங்கஞ்சேர்த்து மாசற்ற புடமடாவன்னிமீறும், தனமானயோகத்தில் நின்றுக்கொண்டு சதா நித்தமயேஸ்பரியைபூசிப்பாயே. 38

லிங்ககுருகாயாதிகற்பம்.

பூசிப்பாய் கட்குடத்திலீக்கண்மொய்க்கும் புகழான மும்மலத்தின்தன்மைபோலும், ஆசிப்பாய்புழுவினல்சூழ்ந்தமேதகம் வப்பனே கடைத்தேறக்காயகற்பம், நேசிப்பாய்லிங்கமது பலமேவாங்கி நெடிதானபொடுதலையின் மூலியாலே, மாசிப்பால்தேங்காயின் பிரமாணந்தான் மதிப்பாகக்கவசமது மாட்டிடாயே. 39

மாட்டவேபச்சரிசி தன்னிலேதான் மார்க்கமுடன் பாண்டமதுக்குள்ளேபோட்டு, வாட்டமாய்லிங்கத்தைப் பொதிந்துமூடி வரிசைபெறதான்சமைத்து சாதந்தன்னை, தீட்டமாய்மண்டல மிப்படியே செய்துதிறமாகத்தானருந்தக் காயம்பொன்னும், தேட்டமாம் லிங்கத்தைத்தேனிலுண்ணு தேகமதுகற்றாணுமாகுந்தானே. 40

தேன்கற்பகாயம்.

தானனபிள்ளையழசத்தங்கேட்டுத் தயவுடனே பால்கொடுக்குந்தாயைப்போல, வேனைபோகருஷி யிறக்கம்வைத்து விருப்பமுடன்தாலுரைக்குங்கசாயகற்பம், பானைதேனதுவும் படிதானெட்டுப் பாங்காகவளந்துமொரு பாண்டமிட்டு, கோனைமேல்முடி சீலைசெய்துகுறிப்புடனே பூமிக்குள் புதைத்திடாயே. 41

புதைத்துமேதீமூட்டி மண்டலந்தான் பொங்கமுடன் தானெறிப்பாய்சதுரமட்டும், சிதைத்துமே மண்டலமுங்கடந்தபின்பு தெளி

வாதத்தேனதுவுங் கட்டிப்போகும், பதத்துடனே தானெடுத்துக் காலேமாலே பதராமல்மண்டலந்தான் மூன்றேயாகும், மிதத்துடனேபல மதுவாய் கொண்டுவந்தால் மிக்கானதேகமது யிறுகலாச்சே. 42

ஆச்சப்பாதேகமது கல்தூணுகும் அப்பனே வாசியதுமேலேருது, மூச்சப்பாவாசியதுகீழ்நோக்க முறுகுடனேதாதுகளும் வலுத்துப்போகும், பேச்சப்பாயில்லையா பிராணயாமம் பேரான கும்பகத்திலிருந்துகொண்டு, மாச்சப்பா மாய்கைதனை விட்டொழித்து மகத்தானகேசரத்தில் நின்றுவாடே 43

ஆடையிலேசித்தாகளு முனிவர்தாமும் அங்ஙனவே யோடிவந்றுவதீதங்கேட்பார், மேடையிலே யிருந்துமங்கே வங்கென்றானு மிக்கதொருகேள்விக்கு விடையுஞ்சொல்லி, கூடையிலே பிராயணுயைந் தன்னிற்சென்று குப்புவாய்படுத்திருந்து பிணம்போற்பேசி, பாடையிலேபோறமட்டும் பராபரியையுன்னிப் பதாம்புயத்தையடைவதுதான் பான்மையாமே. 44

காந்தகாயாதிகற்பம்.

பன்மையாய்கடல்தனிலே வீழ்ந்தபேருக்கு பருந்தொப்பங்கை தனிலே கிட்டினாற்போல, மேன்மையாய்போகரிஷி மனமுவந்துமே தினியில் காயாதிகற்பஞ்சொல்வேன், கான்மையாம்சதவீசி காந்தந் தன்னை களிப்புடனேபலமெடுத்துக்கல்வமிட்டு, வான்மையாய் தாளகமும்விராவனென்று வாகபாஷாணம் விராகனென்றே. 45

ஒன்றானகெவுரியது விராகனென்று ஒளிவானசிங்கியதுவிராகனென்று, குன்றானவீரமது விராகனென்று குறிப்பானபூரமதுவிராகனென்று, தன்றானலிங்கமது விராகனென்று தாங்கான சூடனது விராகனென்று, பன்றானதுரிசியதுவிராகனென்று பாங்கான சூதமது விராகனென்றே 46

சூதமுடனகைமது விராகனென்று சூட்சமாந்துத்தமது விராகனென்று, நாதமாங்கெந்தியது விராகனென்று நலமானகாரமதுவிராகனென்று, சீதமாங்குபோரியது விராகனென்றுகெடியானசீனமது விராகனென்று, வேகமாங்கருடக்கால் விராகனென்றுவிரைவான கருமாவும் விராகனென்றே. 47

ஒன்றாகவிவையெல்லாங்கல்வமிட்டு வுத்தமனேமலைத்தேனில்தன்னிலாட்டும், குன்றாமல்நாற்சாமமாட்டியேதான் குழறவேவச்சிரமாங்குகையிலவைத்து, பன்றாகச்சீலையதுவலுவாய்ச்செய்துபாங்குட

னேரவிதனிலே காயவைத்து, நன்ருகயுலேமுட்டிமூசைவைத்து நல மாக மூசையது வூதிடாயே. 48

ஊதியேவச்சிரமாங் குகையேதன்னை வுடைத்துப்பார் உத்தம னே யென்னசொல்வேன், நீதியாங்காந்தமதுசத்தேயாகி நிலேத்து தடாகாயத்துக் குயிருமாச்சு, வாதியேகெந்தகமும் ரசமுமூட்டி வரி சைபெற பொற்றலேயின் சாற்றினுலே, ஆதியாமுப்பூவில் நருவுஞ் சேர்த்து அப்பனேநாற்சாம மறைத்திடாயே. 49

அரைத்துமேகாசியென்ற மேருக்கேத்தி அடவாகமூன்றுநா ளெரித்துமேதான் நிரைத்துமேபாறவிட்டு யெடுத்துப்பாரு செடி தானசெந்தூர குப்பிவைப்பு, பரைத்துமேசெந்தூர மண்டலந்தான் பாங்காககொண்டிடவே காயம்பொன்னும், திரைத்துமேநரைதிரையு மற்றுப்போகும் தெளியுமேதேகமது கற்றாணுமே. 50

கற்றாணுக்காயத்தை நிறுத்திக்கொண்டு கடந்தவெளிமுப்பா ழாம் மதிகடந்து, பற்றாணுமாயசாகரத்தைவிட்டுப் பதிவாகமேலேரி கும்பகத்தில் நின்று, வெற்றிபெறசின்மயத்தை மிகவிரும்பி வெளி யானசெகசோதி தன்னைக்கண்டு, பற்றியேபாரபரத்தினடியைக்காண பராபரிமணித்தாயைப் பணிந்துபோற்றே. 51

போற்றவேதாலிப்பொன் னேளிதத்தைப் பொலிவானவிசுவகரி மியறிவான்பாரு, ஏற்றவேவுன்னெளிமை யறிவாரார்தான் யெழிலா னசித்தர் முனியறிவாரப்பா, மாற்றமேவசீவனத்துக் கிடமதாகமகா கோடிரிஷிதேவர் கைமறைப்பு, ஆற்றவேகூடாது யொருவராலும் அப்பனேநாமுனக்கு வரைவோம்பாரே. 52

போகர்நாகவேதை

பாரேதான்நாகமது பலமஞ்சாகும் பதிவானதுப்பைநெய்யில் சுத்திசெய்து, நேரேதான்கிண்ணமது குடம்போல்செய்து நேரான தாசிளமுஞ் சரியாய்க்கொண்டு, சீரேதான்பழச்சாற்றுல் மைபோ லாட்டிக் கறப்பகக்கிண்ணிக்கு வார்ங்கிபூட்டி, வாரேதான்கிண்ணத் தில்சூதராசன் வளமாகவாய்மட்டும் நிறையவாரே. 53

நிறையவேசட்டியிலே மணல்தான்கொட்டி நெடிதானகிண்ண மதை மணல்மேல்வைத்து, அறையவேயெலுமிச்சம்பழச்சாற்றன்னை அம்பனேசுருக்கிடவே மண்டலந்தான், கரையமேவதாளகத்தின்வங்க வாசால் கடிதானநாகமதுக் கட்டிப்போகும், முறைபோலசூதமது விடையேசேர்த்து முயற்சியாய்குகையிலிட்டு வுருக்கிடாயே. 54

உருக்கியேகெந்தியது பாதிசேர்த்து வுற்பனமாமேருவென்ற கும்பிக்கேற்றி, நெருக்கியேநாற்சாம மெரித்தபோது நிலையானசெந் தூர மென்னசொல்வேன், பருக்கியேவெள்ளிசெம்பில் பத்துக்கொன்று பாங்காகக்கொடுத்திடவே மாற்றுபத்தாம், பெருக்கியே சிவயோகந்தன்னிற்சென்று பேரின்பலாபமென விதியைத்தேடே. 55

தேடவேசித்தர்களு முனிவர்தாமும் தெளிவுடனேமறைப்பெல்லாம் தெரிவிப்பார், கூடவேயோகத்துக் குறுதிசொல்வார் குறியான வாசி பீடகத்தைச்சொல்வார், நாடவேநாலுயுக மகிமைசொல்வார் நாதாக்கள்மறைப்பினுட மார்க்கஞ்சொல்வார், பாடவேபோகரிஷி மர்மமெல்லாம்பாடிவைத்தேன் சத்தகாண்டந்தன்னிற்றானே. 56

கயாதி கற்பம்

தானேதானுப்பிட்ட பாண்டந்தானும் தப்பாதுதானுளுக்குந் தன்மைபோல, வேனென்றகாயமது நில்லாதப்பா வெகுசுருக்குமே தினியிலார்தா னின்றார், நாமொன்றுகாயாதிற் கபஞ்சொல்வோம்நல மானகையானின் சார்தனுழி, போமென்றபொன்முசுட்டை சார்தானுழி போற்றவேயாவாரைச் சார்தான்கூட்டே. 57

கூட்டவேதலைச்சுருளி சாற்தானுழி கொடிதானசிறியாளின்சாற் தானுழி, நீட்டவேகொடிவேலிச் சாற்தானுழிநெடிதானபுனல்முருங்கைச்சார்தானுழி, பூட்டவேநறுதாளிச் சார்தானுழி புகலவேவெள்ளறுகுச் சார்தானுழி, மாட்டவேபுளியாரைச் சார்தானுழி மதிப்புடனே செங்கடுக்காய்ச் சாற்தான் கூட்டே. 58

சாறானதழுதாழைச் சாற்தானுழி தாக்கானகுமரிச்சாற்தானுழி மாரானவழுதலையின் சாற்தானுழிமதிப்பானகாசானின்சாற்தானுழி, வேரானவிஷப்பாகல் சாற்தானுழி வெடிப்பானகொமட்டியின் சாற்தானுழி; கூறானபொடுதலையின் சாற்தானுழி குறிப்பானமாமதளையின் சார்தான்சேரே. 59

சேர்க்கவேபசும்பாலைச் சாற்தானுழி சிவப்பானசெம்பசளைசாற் தானுழி, தீர்க்கவேதைவேளை சார்தானுழி திறமானவாதண்டைசாற் தானுழி, பார்க்கவேமுசல்மூலிச் சாற்தானுழி, பாங்கானபழுபாகல் சாற்தானுழி, பூர்க்கவேநொச்சியில் சாற்தானுழி போக்கானதக்காளிச் சாற்தான் பூட்டே. 60

பூட்டயிலேவிதுவெல்லாம் பாண்டத்திட்டுப் பொங்கமுடனிது நேரே யெண்ணைசேர்த்து, மாட்டுவாய்கடைசரக்கு சொல்லக்கேளு

மகத்தானவிராம்புடனேயேலந்தானும், நீட்டுவாய்சுக்குடனேமிளகு சேரு கெடிதானவலம்புரியின் மாசிக்காயும், தேட்டமேமதுரமுடன் கோஷ்டந்தானும் தெளிவானதிப்பிலியும் ரோசனையுமாமே. 61

ஆமேதான்பரங்கியுடபட்டைதானும் அடவான மாசிக்காய்தான்றிக்காயும், வேமேதான்குரோசாணி ரோமந்தானும் விரைவானமுட்டியுடன்கடுகுரோணி, தாமேதான் வாய்விளங்கம்லவங்கப்பட்டை தயவான வால்மிளகுசித்ரமூலம், நாமேதான் வசம்புடனே சித்தரைத்தை நலமானசாதிக்காய் தானுங்கூட்டே. 62

கூட்டியேவகைவகைக்குப் பலந்தான்காலாம் குறிப்புடனே தானிடித்துச்சூரணித்து, பூட்டியேயெண்ணையுடமூலிசேர்த்துப் புகழாகமூன்றுமொன்றாய் ஒக்கக்கூட்டி, மாட்டியேபசும்பாலுங்கூடச்சேர்த்து மதிப்பாகமெழுகுபதந்தன்னிற்காய்ச்சி, தாட்டியால்சீசாவில்தானடைத்துச் சாங்கமாய்னெல்லாவிக்குள்ளேவையே. 63

வைக்கவேமண்டலந்தான் கொள்ளவேண்டும்வகையாககாசிடைதானருந்தவேண்டும், மெய்க்கவே புளிபுகையுந்தள்ளவேண்டும்மேன்மைபெறபத்தியந்தா னிருக்கவேண்டும், சொக்கவேபெண்மாய்கை நீககவேண்டும் சூட்சாதிசூட்சத்தை யறியவேண்டும், புக்கவேவாசியைத்தானிறுத்தவேண்டும் புகழானதேகமது பொன்னும்பாரே. 64

பொன்னாகும்நரைதிரையு மற்றுப்போகும் போகாது சடலமது கல்லாகும், மன்னுமேகள் மூப்பதுவும் வகலும்பாரு மைந்தனேவாலையதுயாவாய்யும், பன்னவேமூச்சதுவும் கீழ்நோக்கும் பாங்கான முனைமூக்குப்பிடரிதன்னில், என்னவேமூச்சதுவு மேவும்பாரு எழிலானசுழிமுனையுமாகுந்தானே. 65

மாறமேசுழிமுனையும்விந்துதானே மாறுமல்மேல்மூலத்தொடுங்கும்பாரு, கோறமேதிரிகோணவட்டத்துள்ளே குறிப்பாகச்சிவாத்துமாவைக்காணலாகும், நீறமேரவிமேநேர் மதிதாநிற்கும் நெடிதானவாகாசம்பிரமபீடம், பாறமேமுத்திவழிக்காணலாகும் பதிகடந்த ஞானியாம்யோகியாமே. 66

யோகியாமுனைமுக்குமத்தியத்தில் யொளிவீசுமோரி தழத்தாமரையின்மேலே, போகியாம்வினையத்திலூடுதாக்கி புகட்டவே வங்குலந்தா னின்றுசென்றால், சாகியாம்ரவிமதியு மொன்றாய்க்கூடும்சாங்கமாய்க்கோட்டைவிட்டு வுடலுய்யாது, வேகியால்காதுபொரிமிகவேக்காடு விலங்கவேயோகத்துக் குறுதியாச்சே. 67

ஆச்சப்பாமுத்திவழிகாணலாச்சி அடவான நினைவுதடுமாறல் கண்டாய், பேச்சப்பாமிகப்பேச்சு பேசினுக்கால் பிராணய யோகினிலை

காணலாமோ, மூச்சப்பாபிரளாது வயானத்தின்கீழ் முடியர்ன் வபா னத்தில்மனமேகுற்றம், சீச்சப்பாவுதரத்தில்நாடிதானும் நெடிதான மூலவலைசேர்க்கும்பாரே. 68

பாரேதான்யையந்தும்போக்கிவிட்டால் பசியேது ஞானத்தின் கதையேகாட்டும், சீரோதான்கலபமறிந் துண்ணவேண்டும் சிறப்பான வியாதிதன்னைத்தீர்க்கவேண்டும், நேரேதான்ரேசகத்தை நிறுத்தவே ண்டும் நெடிதானகும்பத்தை மாற்றவேண்டும், கூரேதான்பூரகத்தை ச்சாரவேண்டும் கூசாமல்காலூறி செபத்திடரே 69

செபிக்கவேநெற்றியிலே விபூதிபூசி சிறப்பானவஷ்டாங்கயோக ஞ்சென்று, லபிக்கவேபலநூலுங் கற்றுக்கொண்டுலோசித்து யோகத் தைப்போற்றிக்கொண்டு, குபிக்கவே பம்பரத்தி ஞட்டினாற்போல் கு டங்கொண்டபெண்ணையது தண்ணீராமோ, தபிக்கவே நாய்போலக் கெட்டலைந்து சதாகாலங்காசினியி லுழல்வார்தாமே. 70

தாமேதான்பசுவுக்குஞானமார்க்கம் தாக்குடனேபோதித்தால றிவுமுண்டோ, வேமதான்கரைகடந்த ஞானிதானும் வெளியானச ற்குருவின்முன்னேவந்து, போமேதான் சொன்னாலுந் தெரியாதொ ன்றும் புகட்டினாலென்னபலன் தானுண்டாமோ, நாமேதான்சொன் னபடியேயெழாயிரத்தில் நலமானநுட்பமெல்லாம் காட்டினேனே.

காட்டினேன்நுட்பமெல்லா முலகத்தோர்க்கு நலமாகக்கொட் டிவிட்டேன்பிசகுமல்ல, காட்டினேன்பிள்ளைகளும் பிழைக்கவென் று கருத்தறியாப்போனால்நா னென்னசெய்வேன்,பூட்டினேன்பிழை க்கவென்று மைந்தாகேளு பிசகாமல்சொல்லிவிட்டேன் ஞானமார்க் கம், மாட்டினேனரைக்கீரையறுத்தாலுந்தான் மறுக்காலுந் தழைப் பதுபோலாகும்பாரே. 72

பாரேதானவரவர்கள் குணம்போலாகும் பாங்கானகற்பகத்தை சார்ந்தாலென்ன, சீரேதான்பலநூலுங் கற்றாலென்ன சிவயோகந்த ன்னிலேசென்றாலென்ன, நேரேதான்தத்துவங்க ளறிந்தாலென்ன நெடிதானவாசியைத்தா னிறுத்திலென்ன, கூரேதான் அஷ்டசித்துக் கொண்டாலென்ன குணமில்லைபூவுலகி லொன்றுங்காணே. 73

காணவேதாளகத்தின்வேதைகேளு கடிதானதாளகமோர் பலம தாகும், மாணவேசுண்ணாம்புக் கவசஞ்செய்து மதிப்புடனே பனங்க ள்ளிற்சாமம்நாலு, நீணவேதாளித்துச்சுத்திசெய்து நெடிதான தாள

கத்தையெடுத்துப்பாரு வேணேவ துருசதுவும் நேரேயொக்க விரை வாகப்படிசாற்று லரைத்துப்பூசே. 74

பூசியேரவிதனிலே காயப்போடு பொங்கமுடன் சுண்ணம்புச் சீலைசெய்து, வீசியேகுக்குடமாம்போடயீயம் விரைவானவங்கமது வென்னசொல்வேன், ஊதியேகாந்தமதுயீயமாச்சி உப்பனமாந்தாள கத்தின் வேதையாச்சு, மாசில்லாவங்கமது நேரேருதம் மாட்டர கெந்தகமுமாட்டித்தீரே. 75

மாட்டவேயறுவகை செயநீர்தன்னால் மதிப்புடனே நாற்சாம் மறைத்துமேதான், நீட்டவேமேருவென்ற குப்பிக்கேற்றி நெடிதாக வெண்சாமம் மெரித்துப்போடு, கூட்டவேயாறவிட்டுயெடுத்துப்பாரு கொடிதானசெந்தூர முருக்கம்பூப்போல், தீட்டவேவெள்ளிசெம் பில் பத்துக்கொன்று திறமுடனே கொடுத்துருக்க மாற்றுறுமே. 76

ஆமேதான்செம்பதனை யூதிப்போடு அப்பனேமாற்றதுவு மின் னும்பாரு, தாமேதான்பத்திலொன்று தங்கஞ்சேர்த்து தாக்காகப் புடம்போட மாற்றெட்டாகும், வேமேதான்சிவபதத்தி லிருந்துகொ ண்டு வெளியானசெகசோதி தன்னைக்கண்டு, போமேதான்பராபரியை மனதிலெண்ணி போற்றடா குருபதத்தைப் பணிந்துநில்லே 77

நில்லவேதுவாதிஷ்டானந் தன்னிற்சென்று நிலையானகும்பக த்தி லிருந்துகொண்டு, புல்லவேவிராணயந் தன்னிற்சென்றுபோற் றவே நிர்வாணிரூபிதன்னை, மல்லவேசதாகாலம் போற்றிசெய்துமக்க மென்னுஞ்சாகரத்தை யகற்றிப்போடு, வெல்லவேவேதாந்தந் தன் னிற்சென்று விரையுடனே சொரூபநிலை சார்ந்துதேறே. 78

## காயகற்பசமாதி

சார்ந்துமேவுப்பிட்ட பாண்டம்போல தட்டழிந்துபோகுமே தேகந்தானும், கூர்ந்துமேதேகமது கல்தூணுக்குறியான காயமது கற்பஞ்சொல்வேன், தேர்ந்துபார்செங்கடுக்காய்நிதமுமுண்ணு தெளி வானமண்டலந்தா னுண்டபோது, ஆர்ந்துமேசுவாசமது கீழ்மேலோ க்கு மகங்கார்க்குண்டதியி னுணுக்கம்பாரே. 79

நுணுக்கமாம்சதாசிவத்தின் பெருமைபாரு நுனிநாக்குமூக்கு மூனை சிரசுதானும், கணுக்கமாம்குண்டலியை வாசிபற்றிக் கதிரொ ளியைக் காணுதற்கு லக்கோயில்லை, பணுக்கமாம்நேசகபூரகத்தில் தானும்பார்க்கவே மதிலயத்தை யூணிநிற்கும், துணுக்கமாம்காயமது யிறுகிப்போகும் துன்பசாகரத்தைவிட்டுத் துலைவாய்நில்லே. 80

மெய்ஞ்ஞானோபதேசங்களாவன

துலைவான செம்பொன்னைக் கோடாகோடி துறையாகத்தேடி யென்ன பலந்தானென்ன, நிலையானதேகமது போகும்போது நேரா னகடுகளவு செம்பொன்றானும், கலையானபொன்னதுவுந் தன்னோ டொக்க கடைசியிலேயாதொன்றுங் கண்டதில்லை, மலையானசாத்தி ரத்தினுபதேசம் மார்க்கமுடனறிவதற்கு வகைதான்கேளே. 81

கேளேதான்சார்புறா லறியவேண்டும் கொடியானவஷ்டாங்கம் பார்க்கவேண்டும், மீளேதான்தத்துவத்தின் மூலமார்க்கம் மிக்கான சடாதாரக்குருவின்மார்க்கம், பாளேதான்குண்டலியின் வசிமார்க்கம் பாங்கான வாறுதாரத்தின் மார்க்கம், சூளேதான்ஓங்காரக் குளிகை மார்க்கம் சுடரொளியின் சின்மயத்தின் மார்க்கந்தானே. 82

லிங்கப்போக்கு

தானானலிங்கமது சுத்திசெய்து தாக்கானவைங்கோலத் தயிலத் தாலே, வேனாகச்சுருக்கிடவே கட்டிப்போகும வெழிலாகவங்கமதை விதுபோற்செய்து, பானுகவிரண்டையுந்தா னுருக்கிப்பாருபாங்கான மணிபோலக் கட்டியாடும், தேனானமணியதனை யுடைத்துக்கொண்டு தெளிவாகவெள்ளிசெம்பில் தன்னிற்ருக்கே. 83

தாக்கவேகரியோட்டி ஊதிப்போடு தளுக்கறவேகசடுதா னக ன்றுபோகும், நோக்கவேமாற்றதுவு மாற்றதாகும் நொடிதானயேம வித்தை சொல்லப்போமே, தேக்கவேபத்திலோர் தங்கஞ்சேர்த்து தெளிவறவேதகட்டித்துப் புடத்தைப்போடு, நோக்கவேபரியதுவுஞ் சேர்ந்துமல்லோ நொடிதானமாற்றதுவு மெட்டதாமே. 84

எட்டானமாற்றதுவுங் காணமாட்டார் யெழிலானவிஞ்சிதின் னுங் குரங்கைப்போல, வட்டாகமயங்கியல்லோ யேங்கிநிற்பார்வரி சைபெற கருமான மின்னமொன்று, திட்டமுடன் சொல்லுகிறேன் மைந்தாகேளு தெளிவானதாளகமும் பலந்தானென்று, திட்டமாய் சுண்ணாம்புப்பூநீர்தானும் கெடியானவமுரியினு லாட்டித்தீரே. 85

தீர்க்கவேதாளகத்துக் கங்கிபூட்டி திறமானமணல்மறைவிற்புட த்தைப்போடு, மார்க்கமாய்புடம்போடயீயமாகும் மகத்தானயீயமது யென்னசொல்வேன், பார்க்கவேசூதமது சரிநேரொக்கப்பாங்காகத் தானாட்டி செயநீர்தன்னால், மூற்கமாய்நாற்சாம மரைத்துமேதான் முனையானமகமேருக் குப்பிக்கேற்றே. 86

ஏற்றவேசாவமது பனிரெண்டாகும் யெழிலானசெந்தூரமென் னச்சொல்வேன், மாற்றவேவெள்ளிசெம்பில் பத்துக்கொன்றுவரிசை

பொத்தானுருக்கி குருவென்றீய, நாற்றமுடன் செம்பதுவும் நீங்கி யேதான் நலமானவெள்ளியது மாற்றுகாணும், தோற்றவே பத்தி லோர்தங்கஞ்சேர்த்துசுருதிபெறத் தகட்டித்துப்புடத்தைப்போடே.

போடவேமாற்றதுவு மிகுதியாகிப் பொங்கமுடன்னெட்டரை யுங்காணும்பாரு, கூடவேசிவயோகந் தன்னிற்சென்று கும்பகத்தில் மீதிருந்துபாய்ச்சலாகி, நீடவேசதாங்கித்தம் வாசியோகம் நெடியான பூரணத்தில்ரேசித்தேதான், மாடவேயோகத்தை சாதித்தேறு மகத் தானரேசகத்தில் மருவிப்பாரே. 88

மருவியதோர்வாலையது பிர்ம்மபீடம் மகத்தான புவனையதுகரு விதாரம், மருவியதோர் திரிப்புரைதான் கபாலபீடம் மகத்தானவஷ் டாங்கந்தன்னிற்சென்று, கருவியதோர் ஞானத்தின் மார்க்கங்கண்டு கருவானவெட்டவெளிதன்னிற்சென்று, உருவியதோர்பரபிரமந்தன் னிற்புக்கி வுத்தமனேலகிரியிலே போற்றிநில்லே. 89

போற்றவேமனோன்மணியாள் நிர்த்தஞ்செய்வாள் பொங்கமுட னின்னமொருமார்க்கங்கேளு, ஆற்றவேபாஷாணம் பலமைந்தாகும ப்பனேசுக்கான்றன் கல்லைத்தானும், தூற்றவே திருகுகள்ளிப்பாலா லாட்டி தூய்மைபெறக்கவசித்துக்காயவைத்து, மாற்றவேசட்டியிலே மணல்தான்கொட்டி மறவாமல்மணலையுந்தான் மேல்மூடே. 90

மூடியேசட்டிகொண்டு சீலைசெய்து முயற்சியாய்த்தானெரிப்ப ய்கமலம்போல, ஓடியேநாற்சாம மெரித்தபோது வுயர்வானபற்பமது மென்னசொல்வேன், நாடியேபற்பமது தன்னைவாங்கி நலமாகவெள் ளிசெம்பில் பத்துக்கொன்று, தேடியே வுருக்குமுகந்தன்னிலீய தெ ளிவானமாற்றதுவும் காணும்பாரே. 91

காணவேகரியோட்டிஊதிப்போடு கருதான வெள்ளியது கனக மாகும், தோணவேநாலுக்கோர்தங்கஞ்சேர்த்துச் சிறப்பாகத்தகட்டி த்துப்புடத்தைப்போடு, மாணவேதங்கமது யிறங்கும்பாரு மகத்தா னவேதையிது களுக்குவேதை, நீணவேசீவனத்தைசெய்துகொண்டு நெடிதானசாத்திரத்தை யறிந்துபாரே. 92

பாரேதான்கோடி பொருளிருந்துமென்ன பாருலகில் வெகுநா ளாய்வாழ்ந்துமென்ன, சீரேதான் மனமகிழ்ச்சி கொண்டுமென்னசிற ப்பானமாளிகையுங்கட்டியென்ன, நேரேதான் வாசியோகஞ்செய்து மென்ன நெடிதானமலைகளிலே யிருந்துமென்ன, கூரேதான்ரிஷிசித் தராயுமென்ன குவலயத்தில் காயமது யிருக்கப்பாரே. 93

## காயகற்பம்.

இருக்கவேயுகாந்தவரை யிருக்கவேண்டும்யெழிலானகாயத்தை நிறுத்தவேண்டும், பொருக்கவே மனமாசை வெறுக்கவேண்டும் பூதலத்தில் காயகற்பமருந்தவேண்டும், வருக்கமே வாலுழுவைத்தயிலத்தாலே வாகாககாயததை இருத்தலாகும், தருக்கவே வெகுகோடிகாலமட்டும் தரணியிலேதானிருந்து வாழலாமே, 94

வாழலாம்பொய்யான வாழ்வைநம்பி வகைதெரியா பசகளெல்லாங்கூட்டங்கூடி, வாழலாமென்றுசொல்லி வாதந்தேடி வையகத்தில்சுட்டிறந்தோர்கோடாகோடி, வாழலாமென்றுமல்லோபொருளைத்தேடி வையகத்தில் மோசங்கள் மிகவும்பண்ணி, வாழலாம்புக்கோடி காலமட்டும் நீனிலத்திலெப்போதும் யோகம்பாரே. 95

நிலையென்றயிஞ்சுதின்ற குரங்கைப்போல விளித்தேங்கி நின்றதினல்பயனுண்டாமோ, நிலையானபத்தியமு மில்லாவிட்டால் நேரானமோட்சவழிக்கேகலாமோ, நிலையானகாயத்தை நிறுத்தவேண்டும் நெடுங்காலம்யோகநிலை யறியவேண்டும், நிலையான பதவிமனையடையவென்று நீனிலத்திலெப்போதும் யோகம்பாரே. 96

## இலிங்கவேதை.

பார்க்கவேலிங்கமொரு பலமேதூக்கு பாங்கானமுலைப்பாலில்சுத்திசெய்து, ஏர்க்கவேவீரமென்ற செயநீர்தன்னால் யெழிலாகசாற்சாமஞ்சுறுக்குதாக்கு, தீர்க்கவேவெள்ளிபோல் கட்டியாகும்தெளிவானலிங்கமதுவுருகியாடும், வேர்க்கவேவங்கமதை வெட்டைசெய்து விரைவாகலிங்கமுடனுகஞ்சேரே. 97

சேரவேநாகத்தையொன்றாய்க்கூட்டி செழிப்புடனே செந்தூரஞ்செய்யலாகும், கூரவேவெள்ளியதுவாரதாகும் குணமானசெம்பதுவுமூன்றதாகும், நேரவேமூசையிட்டு வுருக்கினன்றாய் நேரானகண்விட்டுப்பாடும்போது, தீரவேசெந்தூரம்வொன்றுபோட திறமுடனே மாற்றதுவுங்காணுந்தானே. 98

தானனகளங்குதன்னை யோட்டில்வைத்து தகமைபெற ஆதிடவேதெளிவதாகி, வேனனாவிம்தியுமொன்றாய்ச்சேர்ந்து விரைவானமாற்றதுவுமிகுதியாகும், கோனனகுருவருளால் வாதசித்திக் குணமானசின்மயமும்வெளியாய்த்தோன்றும், பானனசிவயோகந் தன்னிற்சென்றுபாருலகில் வாழுவதுபான்மையோர்க்கே 99

பான்மையாம் லாகிரியைநீக்கவேண்டும் பாங்கானமோகமதை தவிர்க்கவேண்டும் மேன்மையாஞ்சின்மயத்தைப் பூசித்தேதான் மேலான

கருவிகாரணுதியெல்லாம், வான்மையாமடிமுடியுங் கண்டுமேதான்வா குடனேபராபரியை நிர்த்தஞ்செய்து, துன்மைபெறவஷ்டாங்கயோ கஞ்சென்று துறைகோடிமுசுவுபட்டுந் துலவாய்நில்லே. 100

சூட்சமுப்பூமார்க்கம்

நில்லவேசித்திராப்பர்வந்தன்னில் நெடிதானபூரணையில் சாம நேரம், கல்லானகளர்மண்ணு முவர்மண்பூமி கடிதானமலைச்சாரல் தன்னிற்சென்று, புல்லானமணற்றாரு யாவுமாய்ந்துபோக்கானசவு ட்டுமண் தன்னைப்போக்கி, வல்லானகிட்டணைகள் யாவும்செய்துவள மாக மூங்கல்தனை யாப்புமாச்சே. 101

ஆச்சப்பாமூங்கலா லாப்பேயாச்சு அப்பனேநடுச்சாமம் கதிர் போனுப்பாம், பேச்சப்பாவொன்றில்லை பூநீர்பூக்கும் பேரானகற்ப மது பூநீராகும், மூச்சப்பாமுன்சொன்ன பூநீராலே முன்னிரைத்த செந்நீரு மளவாய்க்கொண்டு, காச்சப்பாகலசமது தீபம்போல கண் கொள்ளாபுப்பதுவும் பூநீராமே. 102

ஆமேதான்பூநீரின் மார்க்கங்கேளு அப்பனேசீனமது பலந்தா னென்று, தாமேதான்வெடியுப்பு பலமதொன்று தாக்கான இந்து ப்பு பலமதொன்று, வேமேதான்வீரமது பலமதொன்று மிக்கான சூடனது பலமதொன்று, நாமேதான்சொன்னபடி யெல்லாங்கூட்டி நலமாகத் தானரைப்பா யுமிநீர்தானே. 103

லிங்ககுரு

தாளுனசாக்கதனை தசப்பங்காக்கிச் சார்பானலிங்கமதுக் கங்கி பூட்டி, வேளுகரவிதனிலே காயவைத்து விருப்பமுடனேட்டில்வை த்து சீலைசெய்து, கோளுனகுக்குடத்தி லிறக்கிக்கட்டும் குருவான வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று, மாளுகைகொடுத்திடவே வுருக்கிப் பாயும் மாசற்றகளங்கதுவு மாகும்பாரே. 104

பாரேதானேட்டில்வைத்து வூதிப்போடு பழிப்பானமாற்றதுவு மெட்டதாகும், சீரதாளுலுக்கோ தங்கஞ்சேர்த்து சிறப்பாகப்புடம் போட மாற்றுகாணும், கூறேதான்வணிகரிடஞ்சென்றுமாறி குறிப் பானசிவயோகந் தன்னிற்சென்று, நீரேதான்நிர்த்தமுடன் மாயிபூ சை நேர்ப்பாகசெய்து சிவசொத்தை யுண்ணே. 105

உண்ணயிலேவஷ்டாங்கந் தன்னிற்சென்று உத்தமனே அரமனை த்துங் கைவிடாமல், எண்ணயிலேயெளியார்போல் மனதிலெண்ணி

ஏற்றமாங்கெர்வமதை யகற்றித்தள்ளி, நண்ணயிலே சிவவேடம்பூண் டுகொண்டு காதாக்களடிவணங்கி நானிலத்தில், திண்ணையிலேவொது ங்கிருந்து யோகம்பார்த்து தேவியாமனோன்மணியைப் போற்றி டாயே. 106

போற்றவேமேருகிரி தன்னிற்சென்று புகழானசித்தர்வர்க்கம் பாவக்கண்டு, ஆற்றவேயுந்தனது வுள்ளந்தன்னில் வடக்கியதோர் கருவிகரணாதி யெல்லாம், சேற்றமுடனவர்பாதம் பணிந்துபோற்றிச் செழிப்புடனேதாமுரைத்து வதிகங்கேட்பீர் கூற்றனுமேதானகற்றி யுந்தன்மீது குருவினதுகடாட்சம்வைத்து ரட்சிப்பாரே. 107

நாகவேதை

இரட்சிக்கவின்னமொரு கருமானங்கேள் இயலானநாகமது பலந்தானென்று, இரட்சிக்கெந்தகமும் பலந்தானென்று யெழி லானமஞ்சளிட கருவாலாட்டி, இரட்சிக்கெந்தகத்தைதயிலமாக்கி யெழிலானதயிலமதை நாகத்தூண்டு, இரட்சிக்கநாகமது கட்டிப் போகும் இயலானநாகத்தின் வேதையாமே. 108

வேதையாமதிதனிலே சரியாய்க்கூட்டி வேடிக்கைசிமிட்டுவித் தை வாதங்கேளு, பாதையாம்கரியோட்டி லூதிப்போடு பாங்கான வெள்ளியது மாற்றுகாணும், நீதியாம்வெள்ளியது யெட்டாதாறும் நிலையானசெம்பதுவு மொன்றுகூட்டி, மாதையாந்தானுருக்கி யெடு த்துப்பாரு மகத்தானமாற்றதுவு மேழதாமே. 109

ஏழானவெள்ளிக்கு யிரண்டுதங்க மேற்றமாந்தகட்டித்துப்புட த்ததைப்போடு, சாழானதங்கமது நேரேசேர்ந்து சரியானதன்னிறம் போலாகும்பாரு, மாழானபிரமவித்தை வாதவித்தை வாய்க்குமோ எல்லோர்க்கும் வாய்க்குமோசொல், பாழானதுக்கசாகரத்தைவிட் டுப் பதறுமல் பதாம்புயத்தை பணிந்துநில்லே. 110

பணியவேகன்றுக்குப் பால்கொடுத்த பழங்கதையாம்போல்யா கும் பரிந்துபார்த்து, துணியவேபோகரிஷி சொன்னநூலில் துறை கோடியுககோடி தொந்தங்கோடி, அணியவே வொவ்வொன்றுமாரா ய்ந்தேதான் அப்பனேசெய்திடிலோ யெல்லாஞ்சித்தி, கணியவேகா லாங்கி பாதம்போற்றி கருதினோர்போகரிஷி கருதினாரே. 111

உப்புக்கட்டுசெந்தூரம்

கதவவேவுப்பதுதான் சேரொன்றுகும்கனமான புளியாரைச்சா ரைவாங்கி, திருத்தமாய்த்தானரைத்துப் பில்லைதட்டி திறமாகரவித னிலே காயப்போடு பருதமாம்குக்கிடத்தில் புடத்தைப்போடு பாங்

கானசெந்தூரமாகும்பாரு, வெருதமாமிப்படியே பத்துமுறைபோடு
வெளியான சூதத்தைக் கூடச்சேரே. 112

சேர்த்துமே மேனிச்சார் தன்னாலரட்டி சிறப்பாகபத்துமுறை
யிப்படியேபோடு, கார்த்துமேயாறவிட்டு யெடுத்துப்பாரு கனமான
செந்தூரஞ்சொல்லப்போமோ, திர்த்துமே செந்தூரந்தானெடுத்து
திகழானவெள்ளிசெம்பில் பத்துக்கொன்று, பார்த்துமே தானுருக்கி
க்கொடுத்துப்பாரு பாங்கானமாற்றதுவுங்காணும்பாரே, 113

மாற்றான வெள்ளிக்குநேரேதங்கம் மதிப்புடனேதான்சேர்த்து
வுருக்கிப்பாரு, தூற்றான திரைநீங்கிசிவந்ததங்கம் துரைகோடிசென்
றாலும்பழுதாராது, காற்றான காயகற்தன்னிற்சென்று கருமூலிவிஷ
மூலியாவும்பார்த்து, சோற்றான தருத்தியென்னுங்காயந்தன்னை சுக
ம்பெறவேசாதித்துக் கற்பங்கொள்ளே. 114

கொள்ளவேகாயாதிசற்கங்கொண்டால் கோடிவரையுகங்கோடி
யிருக்கலாகும், தள்ளவேமாய்கைதனையறக்கவேண்டும், சமுசார
தொல்லைதனைவெறுக்கவேண்டும், மெள்ளவேசிவயோகங் காணவேண்
டும் மேலான பதாம்புபத்தை நண்ணவேண்டும், உள்ளவேவாசியைத்
தானித்தவேண்டும் முத்தமனே போகரிஷி யுரைத்ததாமே.

உலகவாதி.

ஆமென்ற வுலகத்தோர்வாதந்தேடி ஆராய்ந்துசரக்குகளைப்பா
ர்த்துபார்த்து, போமென்றாயிதனாலே சிவனங்கள்பண்ணிப் புல்லர்
கள்தானெட்டுபேர் பத்துபேர்கூடி, காமென்றவோசனைதான்மிகவும்
பண்ணிக் கலந்துநின்ற சாத்திரத்தில் மறைத்துப்போட்டார், நா
மென்னசெயநீரில் பார்ப்பதொன்று நலமாகச்சாறுவிட்டு அரைப்பா
ர்பாரே. 116

அரைத்துமேபுடம்போட்டுப் பனியில்வைத்து ஆகாரசெயநீர்
தானுச்சுதென்பார், நிரைத்துமே புடம்போட்டுச் சாக்கைகட்டிநே
ராகவாச்சுதென்றுலோகத்தீய்ந்து, கரைத்துமேசெம்பையிட்டுக் கா
ரீயங்குத்தி கசடகற்றிபூதியேயுரைத்துப்பார்த்து, மறைத்துமேகால்
மாற்று ஆச்சுதென்று மயங்குவாருலகத்துச் சண்டிதானே. 117

சண்டிகள்தான்மெத்தவுண்டு வுலுத்தமாண்பர்தருகுரும்பனதி
லொருவன் பொன்னைச்சேர்த்து, மண்டியேகடைதனிலேவுரைத்து
க்காட்டி.மனதுநொந்து புண்ணாகிப் போடடபொன்போய், தண்டி
யேஒருகாசிரண்டுகாசி சார்பாகபின்னென்று பார்ப்போமென்று,
மண்டியேநான்போட்டே னீபோடென்று மயிர்பிடித்துச் சண்டை
யிட்டுவழக்கப்பாரே. 118

வழக்கிட்டுச் சண்டைகொண்டு பின்னொருவள்வந்து வாதியொருபாதேசிவந்தானப்பா, வழக்கிட்டுதொழில்செய்து கடையில்விற்றுன்கரன்பார்த்தேன்வெகுசனுவு நீயும்பாரு, அழுக்கிட்டு ஒன்றோடேஒன்றைச்சேர்த்து அமர்த்தியவர்புடம் போடப்புகைத்துபோயி, பழுக்கிட்டுயிப்படியேசாகுமட்டும் புலம்பியிறந்துண்டவர்கள் கோடியாமே. 119

இறந்திட்டார்சித்தர் சர்வாதிஞானி யியல்பான சாத்திரத்தை ஆராய்ந்துபார்த்து, மறந்திட்டார் கருவையெல்லா மனதிலெண்ணி மகத்தானபெரியோர்க்குத் தொண்டுபண்ணித், திறந்திட்டார் குருசொன்ன மொழியைத்தானுஞ் சிவயோகமார்க்கத்தின் வழியிற்சென்று, அறந்திட்டா ஆத்தாளைக் கேட்டுக்கேட்டு அவள்சொன்னபடி செய்வார் பெரியோர்தானே. 120

பெரியோர்களென்றுசொன்னமொழி யேதுக்குப்பேரின்பச்சாத்திரத்தி லுரைத்ததாலே, பெரியோர்களாவதுவு மேதாலென்றால் பொய்மறந்து மெய்யுரைத்த பிரதாபத்தாலே, பெரியோர்களான தென்ன யோகநிஷ்டை பேரானகற்பமுண்டு காயசித்திசெய்தார், பெரியோர்கள் குருபதத்தைமறவாமலென்றும் பேசாமலூமையைப்போலிருப்பார்பாரே. 121

பாரப்பாகிர்மூடவாதிகட்குப் பலியாதுயேமமென்ற வித்தைதானும், சோரப்பாபொய்சொல்லும்புலையருக்கு நிச்சயமாய்க்காணுகிற யோகம்பொய்பாம், சேரப்பாகாமமென்ற காதுகட்குத்தானும் செயலானகாயசித்திசோபம்பொய்யாக், தூரப்பாகுருசொன்னமொழியாவைவிர்ததுஷ்டருக்குச்சகலநூல்களெல்லாம்பொய்யே. 122

பொய்யென்றவார்த்தையது சொன்னானாகில் போக்கோடேயெழுசென்மபலையனுவான், பொய்யென்றுகாயசித்தியென்றுசொன்னால் பிறந்திடுவோன்கழுதையென்ற சென்மமாகப், பொய்யென்றுயோகத்தைச்சொன்னானாகில் புனுவானபாழ்நரகில் வீழ்வான்பாவி, பொய்யென்றபூசையைத்தான் தூசித்தோர்க்கும் போரகமூவேழுவங்கிஷம்பாழாமே. 123

பாழகும் வஸ்துசத்தி பானந்தன்னைப் பகையாமற் சொன்னோர்க்குஅல்லலுண்டாம், கூழகுங்கஞ்சிக்கி ஏங்கிஏங்கிக் கொடிதான பெருவயறானையெய்தி, மீளாகுங்குணமுவலி பித்துகொண்டு மிகைபெய்திகைபெய்திவிடுதோறும் நாளாகயிரப்புண்டுகொடுப்பார்கைபார்த்து நமனுக்குப்பகையாகி நரகெய்வானே. 124

சகஸ்திரசத்து

எய்தவேசகஸ்திரமாஞ் சத்துகேளு இதமான ஆதளையின்பால் தானல்லோ, கொய்தவேபெருங்கம்பால் சேரையொன்று கோழி முட்டை வெண்கருவுஞ் சமனுக்கூட்டி, பைதவேவெண்காரம்பலந் தானைந்து பகருகின்றகெந்தகந்தான் பலமும்நாலு, நைதவேதுரிசி யதுபலமுமூன்று நாட்டிடுவாய்தாளகமும் பலமும்ரண்டே. 125

ரண்டெல்லாம்பொடிபண்ணிப் பாலிற்போடு நேர்ப்பானபன்றி நெய் சேரவிட்டு, பண்டெல்லாமயச்சட்டிக் குள்ளேவார்த்துப்பருவ மாயடுப்பேற்றி யெரித்துவாங்கிக், கொண்டெல்லாங் குழம்பான பதத்திற்கிண்டிக்கொண்டுமே கலயத்திற் கட்டிவைத்துத், துண்டெல்லாஞ்சகஸ்திரமாம் வேதையிலேபோட்டுத் துவளயரையெஞ்சா மம் வில்லைகட்டே. 126

வில்லைகட்டி சரவுலையிற் போட்டுவூது மேலானசத்தெல்லாங் கழன்றுவீழும், கல்லைகட்டிசத்தெல்லாம் பொருக்கிக்கொண்டு கற டெடுத்துத் தயிலத்தி லரைததுவூது, வில்லைகட்டி ஐந்துதரமூது வூது சிறப்பாகச்சத்தெல்லா மொன்றாய்ச்சேர்த்து முல்லைக்கட்டிக் காரமிட்டு வுருக்கினுக்கால் முத்துபோல் வெளுப்பாகுஞ் சத்தாகும் பாரே. 127

சத்தெடுத்துப்பலமொன்று நிறுத்திக்கொண்டு தங்கமதுநாலு க்கு ஒன்றுமிட்டு, பத்தெடுத்துநாகமது அரைப்பலந்தான்போட்டு பரிவாகவுருக்கியொண்றாய்ச் சூதம்போட்டுக், கொத்தெடுத்துக்கெந் தகத்தை ரண்டுபலம்போட்டுக் குறிப்பாகக்கல்வத்தில் பொடியாய்ப் பண்ணி, மத்தெடுத்து அந்திமல்லிச் சாற்றாலாட்டி வகையாகப்பொ டிபண்ணிக் குப்பிக்கேற்றே. 128

குப்பிக்கேயேற்றிடுவாய் வாலுகையில்வைத்துக் கூசாமற்பனி ரண்டு சாமந்தீப்போடு, குப்பிக்கேசூரியன்போற் சிவந்துகாணுந்துடி யாகப் பணவிடைதான் தேனிலுண்ணு, சிப்பிக்கேவுடலைப்போல் கனசட்டைதள்ளுந் தேசிபைப்போல் நடப்பதற்கு லெகுவுண்டா கும், அப்பிக்கே ஆயிரத்துக்கொன்றேயீய மருமமென்றமாற்றுரு மறிந்துகொள்ளே. 129

அண்டசத்து

கொள்ளென்ற அண்டோடுசத்துபண்ணிக்குன்றி மணித்தோல் போக்கிப்படிதானென்று, அள்ளென்றரோமமது பலந்தான்பத்து அப்பனே அண்டத்தின்மேலேசைத்தி, தள்ளென்றகெசபுடத்தினீற்

நீக்கொண்டு தயவாகப்பற்பத்தைக் கவசஞ்செய்து, முள்ளென்ற முசலெலும்புத் தூள்தான்பத்து முயற்சியா யெருக்கம்பால் விட்டு ஆட்டே 130

ஆட்டியேயைந்தாநாள் வில்லைபண்ணி அழகானபூப்புடத்தில் தயிலம்வாங்கிப், பூட்டியேகலயத்திற் கட்டிவைத்துப் பொறித்தெடுத்த முட்டைத்தோல் பலமும்பத்து, நீட்டியேகல்வத்திற்பொடியாப் பண்ணி நினைவாகவெண்காரம் பலமுமைந்து, தீட்டியேவீரமதுபல மும்ரண்டு சிறப்பாகக்கூடவி டுத் தயிலத்தாலாட்டே 131

ஆட்டியேமூன்றுநாள் வில்லைகட்டி அசங்காமல்சரவுலையிலேந்து தாமூது, பூட்டியேசத்தெலலாம் பொருக்கிக்கொண்டு பொரிக்கார மிட்டுருக்கி யொன்ருய்ச்சேரத்து, வாட்டியே ஒன்றுக்குநாலுதங்க மருவிநின்று வுருகையிலே கூடவிட்டுத், தீட்டியேநாகமி- டுச் சூத மிட்டுச் சிறப்பாகக்கெந்தியிட்டுக் களங்கமாமே. 132

ஆமிந்தக்களங்கெடுத்து நவலோகத்தி லந்நூற்றுக்கொன்றிடவே மைம்பத்தைந்து, வாமிந்தப்பொன்னதும் பச்சைபோல்காணும் வாய்ப்பாகக்குப்பியிலே செந்தூரித்துண்ணு, சேமிந்தச்சடந்தானும் பச்சைநிறமாகுந் தேகமென்ருல் பொற்சிலைபோ லழுந்திக்காணுங், காமிந்தக்கற்பாந்தகோடிகாலங் காலனுமேயணுகாமல் சித்தியாமே.

நாகபற்பம்

சித்தியாம்வெகுசுளுக்கு நாகபற்பம்திறமாகக்கேளுங்கள் மாணுக்காளே, பத்தியாம்நாகமதுபலந்தான்பத்து பகருகின்ற இலுப்பை நெய்யில் சாரம்போட்டு, முத்தியாமூமாறுதரநதான்சாய்த்து முசியாமல் தகடுதட்டிப்புளியிலேபோல்நறுக்கிக் கத்தியாங்கடுகொருபலந் தானைந்து காரமாமிளகாயும் பலமுமஞ்சே. 134

அஞ்சான அபினைந்துபலமுந்தூக்கி அழகானஎலிமிச்சம்பழச் சாறவிட்டு, துஞ்சானமூன்றுநாள் நேயமுடனரைத்து துடியாகவழித்தெல்லாம்குழம்பாய்வைத்து, பிஞ்சானதகட்டுக்குப்பூசுபூசுபோராக வாகையுட படைவாங்கி, தஞ்சானதிடித்துநன்ருய்த் தகடுவைத்து சார்பாக மேல்மூடி புடத்தைப்போடே. 135

மூடியேசீலைசெய்து அவிர்ப்புடமாய்ப்போடு முயற்சியாய்ப்பத்து விசைபோட்டெடுத்து, ஆடியேவிளக்கெண்ணெய்விட்டுருக்கி அப்பனோநாதத்தைக் கிண்ணிபண்ணிக்கொண்டு, நாடியேகிண்ணிநிறைகுதமப்பா நலமானதாளகமுஞ் சரியாய்க்கூட்டி, தேடியேதேடிசார் விட்டரைத்து சிறப்பாகக்கிண்ணிதனி லுள்ளேபூசே. 136

பூசியேவாலுகையில் சட்டிவைத்துப்பொருந்தவேமணல்விட்டு அடியிற்ருனும், நேசியேயதின்மேலேபுப்புவிட்டுவினை வாகக்கிண்ணி தனைப்பதித்துவைத்து, தேசியேயெலுமிச்சம்பழச்சாறு தானுஞ்சிறப்பாகளரியிட்டுச்சுறுக்கும்போடு, மாசியேபதினைந்துநாள் தான்தீபை மறவாமல்போட்டிடு வாயிரவுபகல்தானே. 137

தானருகுமெலுமிச்சம்பழச்சாறு தானுஞ்சாதக மாய்வற்றவற்றச் சுறுக்குப்போடு, பானருகும் பதினைந்துநாள் தான்சென்றால் பக்குவமா யெடுத்துவைப்பாய் பீங்கானுக்குள், கானருகுமல்லிகைப் பூப்போலே நிற்குங்கசடற்ற செம்பிலேநூற்றுக்கொண்ணு, கோனருகு மெழுகி லோட்டிகொடுத்தாயானால் குறையாதுபனிரண்டு மாற்றுமாமே.

வெள்வங்க பற்பம்.

ஆமப்பாதுரிசியதுபலமுமொன்று அழகான தாளகமும்பலமு மொன்று, வேமப்பாகள்ளிப்பால்வார்த்தரைத்து விளங்கவேமூன்று நாளாகுமட்டும், தாமப்பா குன்றிபோலுண்டைபண்ணி தாக்கான வெள்ளீயம்பலந்தானனு, போமப்பா குகையில்நின்று வுருகும்போது போக்கானவுண்டையெல்லாங் கிராசம்போடே. 139

போட்டுடனேயுண்டையெல்லா மானபின்பு பொடிபண்ணிச் சாரத்தூள்மேலேபோட்டு, ஆட்டுடனே கற்றாழஞ்சாற்றில்சாய்த்து அடவாகயேழுதர்முருக்கிப்சாய்ப்பாய், பூட்டுடனேவங்கத்தில் ச மனுப்வெள்ளி பொலிவாகவுருக்கியல்லோ கிண்ணிவார்த்து, மாட்டு டனே கிண்ணியிடை சூதம்வீர மருவியதோர்வெள்ளை யென்றபா ஷாணங்காணே. 140

காணிந்தமருந்தெல்லாங் கல்வத்திட்டு கடிதானயெருக்கம்பால் வார்த்து ஆட்டிப், பூணிந்த மருந்தை கிண்ணிக்குள்பூசிப் பேரான வாலுகையின் மேலேவைத்து, ஆணிந்தவடுப்பேற்றிப் பட்சமொன் றுஆறுமலெரியிட்டு அப்பால்வாங்கித், தோணிந்தப்பீங்கானி லெடுத்துவைத்து சூட்மாங்குருவாகும் நூற்றுக்கொன்றியே. 141

ஈவதுதான் வங்கத்திற்செம்புதனி லெடுத்துப்பா ரிதுபத்து ஐ ய்ந்துமாற்று, ஆவதுதான் சூதமது வெள்ளியாகுமதிகமாம்பித்தளை யும்வெள்ளியாகும், போவதுதானே மணித்தையிதுதானப்பா பூட்டி னேன்தொந்தங்க ளனேகங்கோடி, தேவதுதான் வெள்ளிவித்தைக ருக்குமெத்த சிவசிவாசித்தர்சொன்னர் கரைகாணேனே. 142

கரைகாணச்சாத்திரங்கள் மெத்தவுண்டு காரணமாங்காலாங்கி நாயனர்தாமும், நிறைகாண ரேழுலட்சம் விரித்துசொன்னர் நேர்ப்

பாகவிரிவையெல்லாப் பிரித்துப்பார்த்து, உரைகாணுச் சூத்திரமா ய்ச்சருக்கு அப்பாபுறம்பனமாந் தொழில்வகையெ லாஞ் சொன்னே ன், பரைகாணுமென்னாலைப் பொய்யென்றெண்ணில் பாழாகும் நர கத்தி லெய்துவாரே. 143

எய்துவார்ரவி கோடிநரகத்தில்தானு மேனமென்ற பிறபாகச் சபிப் பாளாத்தாள், அய்துவார்வாதம்பொய் யென்றுசொன்னுலா காகா வங்கிஷங்கள் குடும்பமெல்லாம், நய்துவார்நரகெய்திவறுமை யாகும் ஈதாக்கள் பெரியோர்களி டசாபம், கொய்துவாராணுலுந் தீர்க்கக்கூடா கொடுஞ்சத்திரி ஷியிட்டசாபம்வேரே. 144

துரிசிகட்டு.

வாருனவுப்பினிட செயநீர்தன்னுல் வாகாகதுருசுதனையாட்டி மைந்தா, சேருனகுளம்பு பதந்தன்னிலாட்டிச்சிறப்பாக வுண்டைக் குச்சாரந்தன்னை, கூருகக்கவசமது செய்துமைந்தா குணமாகரவித னிமேலகாபவைத்தி, தாருனகுக்குடமாம் வைத்துநீறு தயவாகச்சூ தமதைக் கொல்லும்பாரே. 145

கொல்லுமேசூதமதுமாண்டு தானுல் கோடானகோடி வித்தை யாடலாகும், வெல்லுமேசூதத்திற் கெந்திரெட்டி வினவாகத்தான் சேர்த்துசெயநீர்தன்னுல், புல்லுமேசாற்சாமமறைத்தபோது புகழா னமதவானையடங்கும்பாரு, தெல்லுபோல்பில்லையது செய்துமேதா ன்சிறப்பாகரவியில்வைத்துக்காயப்போடே. 146

போடவேபில்லையதுகாய்ந்தபின்பு பொலிவாக ஓட்டில்வைத்து ச்சீலைசெய்து, நீடவேதளவாபாஞ்சட்டிதன்னில் கெடிதாகவுப்பதனை நிரபக்கொட்டி, சூடவேவகலதனைவோட்டில் வைத்துசூட்சமுடன் தாகனரிப்பாய்காலுசாமம், சாடவே ஆறவிடுமறுநாள்தீயைசட்ட முடன்ருகெறியாய்க்கமலந்தானே. 147

கமலமாமேழுநாளெரிப்பாய்மைந்தா கருணைபெற தீயாறியெடு த்துப்பாரு, அமலமாஞ் செந்தூரமென்னசொல்வேன் அப்பனே க ண்கொள்ளாவேதையாகும், தமலமாய்வெள்ளிசெம்பில் பத்துக்கொ ன்றுதாக்கடாமாற்றதுவும் பத்தேயாகும், புமலமாம் பகுந்தங்கமிது க்கொப்பாமோ பூதலத்திலாச்சாரியமிகு வேதையாமே. 248

வேதையாக்குடவனிவேமாற்றெட்டாகும்வெளியானதனிச்செ ம்பில்மாச்றேமெத்த, பாதையாமின்ன வெகுவேதை யொடும்பாங் கானசெந்தூரஞ்சொல்லப்போமே, நீதையாம்ரசிதமென்ற சூதவித்

தைகிலைதததடாயேமமென்ற வித்தையாகும், மேதையாஞ்சிவயோ
கம்கிலைக்கப்பாரு மேதினியில்ராசனைப்வாழலாமே. 149

தானனகுருவுடைய பத்தைபோற்றி சமுசயங்க ளிருந்ததெல்
லாங் கேட்டுக்கேட்டு, கோனைகுருசொல்லவாதம்பாருகுருவில்லா
திருந்தாக்கால் நூலைப்பாரு, ஆனைநூலல்லால்வாதம்பார்த்தா
லனுகாதுவாதமொன்றந்தலைகீழாகுக், தேனைசூதத்தின்சாமமட்டு
ந்தியங்கியே நரகெய்திமாளுவேனே. 150

குளிகைசாரணை.

மாளாமற்கனமான கற்பமுண்ணு மாயிலைத்தான் பூசைபண்
ணுமயக்கம்போக, தாளாமல்வாசியைத்தான் பூட்டிவாங்கிச்சதா
சித்தம்குருபதத்தில்சாரணம்பண்ணு, ஆளாமல் பதத்தில்படனைத
யூணு ஆனந்தமாவதற்கு அமுதமுண்ணு, மீளாமற்கெவனத்திலேற
வென்றால்விடுஞ்சூதப்பசிக்குண்ணமருந்துகேளே. 151

கேளுநீயானையென்ற சூதராசன் கெவனத்தில்பறக்கின்றமார்
க்கமெல்லாம், வேளுநீபரிசத்தலேமமாக விளங்கியதோர் பகலிரவு
மொன்றாய்க்காட்ட, தாளுநீமைக்குமுன்னேகோடிகாதஞ்சஞ்சரி
த்து அடுக்கெல்லாந் தாண்டியேற, மீளுநீயட்டமா சித்தியாடமிருக்
துவட வாக்கினிபோல்பசியுண்டாக்கே. 152

ஆக்குவதுசூதமதுகுகையில்நின்று அமணியாயுருக்கையிலே பூ
நாகத்தை, நோக்குவதுசமனைக்கொடுத்துவாங்கி நேராகப்புடமி
ட்டுவிடுவித்தாக்கால், தேக்குவதுசூதமென்றரா சாவுக்குச்சிவனுண்
டஆலம்போல்பசியுண்டாகும், நீக்குவதுஅரசனைப்போல் நினைத்த
தெல்லாம்வெல்லும் நேரிட்டகெந்திசத்தையிட்டுத்தாண்டே. 153

தாண்டியேபின்னு பாசங்களெல்லா மூட்டுதனித்தபின்பு
மூலிகைக்குச்சத்தையூட்டு, நீண்டியபின்கவேலாகமிட்டுத்தீருதிற
மாகப் புடத்தையிட்டு சுவாவிட்டிணமூட்டு, வேண்டியபின் தனித்த
தங்கச் செம்பையூட்டுமேலானமணிபார்த்த வருணனைப்போலாகுக்,
தூண்டியேயிவ்வளவுங்கடந்துபோச்சகமான செம்பையினிச்சொல்
லக்கேளே. 154

குகைக்குள் பூசமருந்து.

சொல்லவேகுகைக்குள்ளே மருந்துபூசத்துடியானசிலைகெந்தி
மிளைக்காந்தம், கொல்லவேபூநாகமிவை தானைந்து கொடிதாகச்சம
பாகம்நிறுத்துக்கொண்டு, கல்லவேகஞ்சாவின்விரையிளெக்க கலா

வேரோமத்தின் றயிலம்வார்த்து, பல்லவேமூன் றுநாளாடடியாட்டிப் பக்குவமாய்ரோமத்தின் றயிலம்வாரே. 155

வார்த்துமேயரைத்து நன்றாய்குகையிற் பூசிவாகாகக்கட்டினே நேர்த்துதப்வைத்து, ஏர்த்துமேவுருகையிலேபூராகசத்தை இதமான குகத்தினிடையேதாக்குபோர்த்துமே புடந்தானுஞ்சொல்லக்கேளு பகழானவாசைத்தைசித்திரமூலக, கோர்த்துமேதொடையோடுமு ன்னக்கித்தாளை கொடிதானநாயுருவிவமுரிகூட்டே. 156

கூட்டுநீபுரசோடுதேவதாளி கொடிக்கள்ளிபுனமுருங்கைசதுர க்கள்ளி, மாட்டுநீயெள்ளோடு புருவினெச்சமகத்தான பதினைந்தும் வேர்வேறேவாங்கித் தீட்டுநீவெவ்வேறாய்ச் கட்டுசாம்பல்திறமாக வகைவகையாய்ப்படியளந்துபோட்டு, மூட்டுநீபாண்டத்திற்கொட்டி நீயுமூத்திரந்தான் பதினைந்துபடியும்வாரே. 157

படியைந்துகோமியத்தைக் கூடவாரு பாங்கானகழுதையொடு குதிரையானை, நெடியைந்துஆட்டோடுநாலுங்கேளு நிலவரமாயமுரிப டியைந்துவாரு, கொடியைந்து படிதானும் நாற்பதாச்சு கூசாதே சாம்பலுக்கிங்கரைத்துவவத்து, தேடியைந்துமூன் றுநாள்தெளிவை வாங்கிச்சிறப்பாகவடுப்பேற்றியெரித்திடாயே 158

எரித்திடவேகுழம்புபோல்வருதல்கண்டு இணங்கவேடுபடிகா ரம்கர்த்திறுப்பு, அரித்திட்டுக்கல்லுப்புசத்திசாரம் ஆதியாம்நவாச்சா ரம்வெடிசாரந்தான், பொரித்திட்டவெங்காரஞ்சவர்க்காரந்தான் பு கழானசேர்தியப்புவளகிலுப்பு, சரித்திட்டுகடல்நுரையுமன்னபேதி சாரானதுரிசியோடுபூநீறுதானே. 159

புடத்துக்குராசன்.

தானானவகைக்கொன் று பலமுமைந்து சார்பாகப்பொடிபண் ணிக்குழம்பிலிட்டுப், பானனபாஷாண நிலைக்கேளு பரிவானசெ ந்திபொடுசங்குசுண்ணந், தேனனவீரமொடுவகைக்கு மொருபலந் தான்சிறக்கவேளருக்கம் பால்படிதான்வாரு, கானனகுழம்புதனி லொக்கவிட்டுக் கலரவேயடுப்பெரித்துமெழுகுபோல்வாங்கே. 160

வாங்கியேபீங்கானில்பதனம்பண்ணி வளமானநெற்குழியில் புதைத்துவைத்து, பாங்கியேபட்சத்திற் பிறகுவாங்கிப்பார்க்கையி லே நடராசனென்றுபேர், ...ங்கியேகோபமாய்ருத்திரனுருஞ் சிக்கமாய்கொடுஞ்சூரனுரும், ...கொடுங்கால விஷமதாகுங் குளிகைக்குப்புடந்தானுஞ் சுருக்கம்பாரே. 161

பாரென்றபுடந்தானுஞ்சாத்திரத்திலுள்ளே பலபலவாய்சொன்ஞர்கள் நாதாக்கள்சித்தர், நேரென்றதிருமூலர் ஆயிரத்தில்சொன்ஞர் நேர்ப்பான காலங்கி சொல்லக்கேட்டுக், தேனென்ற வேழாயிரத்திற்ருன் திறத்துசொன்னேன் சிறப்பானசாரணைதான் செய்யுமார்க்கம் வானென்றஆகாசவீதியோடிலா வக்காமல் சிறுபிள்ளைபோடுங்கரணே. 162

காணிந்தக் குருதம்நின்று வுருகும்போது கலங்காதேசம்பாதஞ் சத்தைவூட்டு, பூணுந்தரசம்பத்துசத்துபத்து பொலிவாக வுருகையிலே புடம்மொன்று நீட்டு, ஆணிந்தசத்துடாராகமெல்லா மப்பனே பலபலவா வர்னங்காணும், தோணிந்தச்குருத்தை நிறுத்துப்பார்க்கத் தடியாகமணியிடைபேசிற்குமென்னே. 163

என்னவேபுடத்துக்குமே ஒப்பு ஈசனுடபுடக்தானுந்தோற்றப் போகு, மன்னவேமனித்தாயார் சொல்லையாலும் வகைவகையாய்ச் சோதித்து யானுங்கண்டேன், கன்னவேயுபசங்கள் நூற்றிரண்டு பத்துங்காரசாரங்கள் முதலிருபத்தைந்து, பன்னமேபாஷாண மறுபத்துநாலும் பாங்கான நவலோகம் நவாஷ்டட்டின்மூட்டே. 164

ஊட்டியேயிப்படிதான்சாரணைபெநெய்யில் ஒன்ருச்சிக்கெவன மதுராற்றுக்கோடி, மாட்டியேமறுதாந்தான் விடுவித்தாக்கால் மகத்தான ஆயிரமாங்காதமோடும், நீட்டியேரவிதனிலே யீயந்தாயானல் நிகரானசிகாரவரை காணலாகும், ஆட்டியேநாலுதாம் விடுவித்தேற அப்பனே லட்சமாங் காதம் போமே. 165

போமெனவேஐந்துதாம்விடுவித்தேறப் பொருந்த ஒருகோடிக்கே யோடும்பாரு, தாமெனவேஆருறல் பரிசைவேதை தாண்டியே யேழுதாங் கடந்துயேற, ஆமெனவேலக்கினங்கள் சொல்லப்போகா அஷ்டொணு லோகத்தில் தெரிசவேதை, நாமெனவே காண்கிலேன் சித்தர்வேதை நண்ணிய பேரீதுகில் வேதையாமே. 166

வேதையாஞ்செப்பிடிலோ ரூபவேதை விளங்கியே பழுக்கவென்ருல் பழுக்கும் வேதை, காதையாங் குளிகைதனைக்காதில் வைத்துக் கடுகியேயுரைப்பாராகில் பொன்னுமாஞல், மாதையாம் பொன்னென்றே உன்னநெஞ்சில் மலைகளெல்லாம் பொன்னுகுமக்காள்பாரு, பாதையாபகலிரவு மொன்ருய்ப்போகும் பராபரத்தாய் சிவன்வந்துபூசிப்பாரே. 167

பாருங்கள்உபசாங்கள் நூற்றிரண்டு பத்தும் பாஷாண மூலிகையின் சத்துங்கூட, கோருமேநவலோகம் பாஷாணங்கள் குறிப்பாகக் குளிகைக்குக்கொடுத்துருக்கில், வீருமேமாற்றதுவுமிருபதாகும் விண்ணுலகி லில்வேதை கட்டப்போமோ, ஆருநீவிடுவித்தால் சதமுமாச்க அறிந்தித்தப்படி செய்வார்தானுவாமே. 168

ஆமிந்தமார்க்கமாய்ச் சூதத்துக்கு அணைத்தணை சத்துகளை ஈயானுகில் போமிந்தக்கெவுன மோசித்துபொய்யாய்ப் போனமட்டுங் கண்டலைந்து பழுத்துமாய்வான், காமிந்தவுபசாரங்கள் பொன்னே யாச்சு கடுஞ்சூதராயன் நிகேபதளித்தாக்கால், தாமிந்தநாகமுண்ட சூதங்கேளுதனி வேதையாத்தாளுமறியாள்கேளே. 169

கேளுநிபனிரண்டாம்குளிகைதன்னில் கெடியானசுரபி யொடு போகந்தன்னை, வாளுநீரண்டு நவலோகம்போது மற்ற மற்றகுளிகை தனைவிடுவித்தேறு, வேளுநீசத்துகளை யூட்டியூட்டிவிடுவித்துச் சாரணையில் செய்யாவிட்டால், தாளுநீகெவுனமது எடுத்துஓடா தனித்துமேபரிசத்தில் வேதையில்லை யென்னே. 170

என்னவேசாரணையைத்தீர்க்கமாய்ச் செய்யில் எடுத்தோடு மண்டமெல்லாம் பதமுந்தாண்டி, பன்னவேரவிகோடிபிடியோகோடி பரிதியிலே கணங்களெல்லாமயங்கிப்போகும், தன்னவேகுளிகையி னல் மேற்கொண்டோடுஞ் சந்திரனிலோடையிலே நடுக்கங்காணும், மன்னவே குளிகைதன்னல் குளிரும்போகுமாயமாஞ் சொரூபமெல் லாம் வெளியாய்ப்போமே. 171

வெளியாகசூதத்தைக் கட்டாவிட்டால் விரைந்தேறும் ஞான மெல்லாம் பொய்யாய்ப்போகும், ஒளிவானயோகமது பாழாய்ப் போகும் உற்பனமாங்காயசித்தி யொன்றுமாகும் அளியானஆதார குறியுமில்லை அணுகையிலே வேதிக்கு மேமமில்லை, தெளிதானமன தாலே யோகம்பார்பார் நிர்மூட ஞானியென்று சொல்வார்பாரே.

பாரப்பாமூலவன்னி துலங்கினக்கால் பளிச்சென்று ஆறுதலம் வெளியாய்க்காணும், நேரப்பாமேலாறும் வெளியாய்ப்போகும் நேரா னசாத்திரந்தானுறங்காணும், சேரப்பாபராபரையின் செயலுங்கா ணுஞ் சேர்ந்த நிஷ்களமதுதான் வெளியாய்ப்போகும், ஆரப்பாநிரா காரத் தடங்கினோர்க்கு மாதியந்த நாமற்ற அந்தந்தானே. 173

தானென்றசிங்கியொன்று சொல்லக்கேளு சாதகமாயிது லெக் குமுன்னேபாரு, ஈனென்றவேழா யிரத்திலொன்றேமிஞ்சியிதமான வுடம்பாமை அழக்கினேடு, தானென்ன தாயீசல் மாட்டினுட கொழுப்புகலந்தைந்து ஐங்கழஞ்சு கொழுப்புதூக்கி, பானென்ற புழுகைந்து சவ்வாதைந்து பருவமுடனென்றாகப் பண்ணிக் கொள்ளே. 174

கொள்ளையிலேபரிசுன்னந்துரிசுசுன்னங்கொடிதானபூரமென்ற சுன்னமூன்றும், விள்ளயிலேயொவ்வென்று கழஞ்சிதூக்கி ரவி யொன்றுய மததித்துக் கல்வத்திலப்பி, நள்ளவேரவியில்வைத்துக் காந்திகாட்டநலம் பெறவேதயிலமாய் வழித்துவாங்கு, துள்ளவே

நில்லாமல் நன்றாய்வாங்கு, துடியானபீங்கானில் வைத்துக்கொள்ளே.

வைத்தபின்பு கூடயிடமருந்துகேளு வானவெண்காரப்கெந்தீ, வைத்தபின்புசவ்வீரம்அரிதாரம்பூரம்கருநாபிகஸ்தூரிதொட்டிகூட, வைத்தபின்புவகையொன்று பணந்தானென்று பண்பானவொன்ப தையுங் கல்வத்திட்டு, வைத்ததிலே யரைத்துநன்றாய்த் தயிலத்தில் சேர்த்து சாங்கமாய் வைத்திடவே சிங்கியாச்சே. 176

ஆச்சப்பாசூதமது கருத்துகொண்டு அழகாகுங் கல்வத்திற்திற த்திவிட்டு; யாச்சப்பாசிங்கி யொருபொட்டுப்போடப் பதையாமல் சேருரசம்வெண்ணெயாகும், கேச்சப்பாகிளிபோல கட்டிக்கொண்டு சிறப்பான சூடனிடதீயில்வாட்டி, ஓச்சென்ற கறண்டியிலே எண் ணெய் குத்தி யுருக்கிடவே வெள்ளிபொன்போலாகும்பாரே. 177

ஆடுகிறசூரமென்ற ஆணைப்பட்டுதானால் ஆகாகவாதமென்னம சகமாச்சு, நாடுவாரிச்சூதம் தாழ்வடமாய்கோர்த்து நலமாகச்சுகாச னத்தி லிருந்துகொண்டு, ஊடுவார்சிவசிவா வென்றமூட்ட வுவந்து முன்னே பஞ்சகர்த்தாள் நிற்பார்பாரு, தேடுவார்கேட்டதெல்லாமீ வாரீசன்செகசாலவித்தையெல்லாந் தெளிந்துபோமே. 178

போமென்றசிங்கினால் கட்டுசூதம் புகழாக வேரடைக்குத் தங் கம்நாலு ஆமென்றசுண்ணும்புக்கு கையில்வைத்து அப்பனே புடம் போட தங்கம்நீறும் நாமென்றநவலோக மாபிரத்துக்கோடும் நாமறி யோ மிதனுடைய வர்னந்தன்னை, ஓமென்னபரிதிபோல் நிறமேபா கும் உத்தமனே வெகுசுருக்கு ஓடிப்பாரே. 179

ஓட்டுவதுசவர்க்காரச் சுன்னத்தொட்டு உப்பினுடவுறதிதொ ட்டுவுயர்ந்துஓடும், ஆட்டுவதுவர்னமென்ன சூதத்தாலே ஆச்சரியஞ் சிவப்பென்னகெத்தியாலே, பூட்டுவதுதங்கத்தால் காரத்தாலே பூப் போலாஞ் சுன்னமென்னவீரத்தாலே, நாட்டுவது விண்ணுன பூரத் தாலே நலமான வாமிதிலடங்கிப்போச்சே. 180

போகாமல் சவர்க்காரச்சுன்னஞ் சொல்வேன்பொற்கொடிக்கு யீசனன்றுபுகழ்ந்தவாறு, வேகாமல்பூநீறுபதக்குவாரி விரைந்துவொ ருபாண்டத்தி லளந்தபோட்டு ஏகாமல்மனிதனுட அமுரிதானுமித மாகப்பதினுறுபடி தான்வார்த்து, சாகாமல்மூன்றுநாள்கலக்கிவைத் துச்சார்ந்த பின்புநாலாநாள் தெளிவைவாங்கே. 181

வாங்கியந்தத் தெளிவிலேகல்லுச்சுண்ணம் வளமாகத்தீநிறுத்த றைப்படிறண்டுபோட்டுத், தேங்கியதைமூன்றுநாள்கலக்கிவைத்துச் சிறப்பாகநாலாநாள் தெளிவைவாங்கி, ஓங்கியொருபடிதாணுங்கல்லு நயப்பொடித்து வொக்கவந்ததெளிவிலேகரைத்துப்போடு, தாங்கியே நாலாநாள் தெளிவைவாங்கிச் சமர்த்தாகவடிகனத்த சட்டியிலே ஆற்றே. 182

ஊற்றியேவெடியுப்புச்சீனந் தானுமுயர்ந்துநின்ற துரிசியோடு சாரம்வீரம், ஆற்றியேவெள்ளையென்றபாஷாணந்தானப்பனேவகை க்குமொறு பலந்தான்றாக்கிச் சாற்றியேகல்வத்திற்பொடித்து மை போல்சார்பாக முன்தெளிவி லொக்கப்போட்டுப், போற்றியேயீசா னபூசைப்பண்ணிப் புகழாகவடுப்பேற்றியெரித்திடாயே. 183

எரித்திட்டுத்தீபம்போலடிபாருமவிதமாகவயத்துடுப்பால் கிண் டிக்கிண்டி, வரித்திட்டுக்குழம்புபோல் வருதல்கண்டு வாகானநல்லெ ண்ணெய்சேரவார்த்து, தரித்திட்டுமெழுகுபோல் பில்லைபண்ணிச் சமரசமாய் ரவியிலிட்டுக்காய்ந்தபின்பு, மரித்திட்டு மல்லிகையின் சாறுவாங்கி வரிசையாய்த்தோய்த்தெடுத்துரவியிற்போடே. 184

போட்டுவாதினமேழுபக்தோட்டுக்கிள் பொலிவானவெண்ணெ யெல்லாமோடேயுண்டு, காட்டுவாய் கருப்பாகமிருக்கும்பாறு கண்டு நீமயங்காதேபாக்குபோல்சீவி, நீட்டுவால்சீலைதனைக் கீழேபோட்டு நேராகமல்லிகையினிலைபரப்பி, மாட்டுவாய்சீவல்தன்மேலேவைத்து மல்லிகையினிலையாலேமூடிப்போடே. 185

மூட்டியேநெல்லதனைப்பாண்டத்திட்டு முயற்சியாய்த்தண்ணீரி ல்பிசரிக்கொண்டு, நீட்டியேயடுப்பேற்றயதின்மேற் சீலைநேற்பாகவை த்தெரித்துநினைவாய்வாங்கி, வாட்டியேமேற்சடடி கவிழ்த்துமூடிமய ங்காதேயாவிகண்டபதத்தில்வாங்கு, தேடடியேசீவலெல்லா மொன் றுய்ப்போகுந்திறமாக ரவிதனிலேகாயப்போடே. 186

காய்ந்தபின்புயிலைபரப்பிநெற் பாண்டத்திடடுக் காரியமாய்முன் போலே அவித்தெடுத்து, மாய்ந்துபின்பு ரவியிலிடடுக்காய்ந்தபின்பு மறக்காலுமறுந்ததனைச்சீவலாக்கிக், காய்ந்தபின்புயிலைபரப்பிஅவித் தெடுத்துக்கவனமாமூன்றுதரமானபின்பு, ஆய்ந்தபின்புபில்லையைப் போல் பண்ணிக்கொண்டு வற்பனமாய்க் கீழ்மேலுங் கற்சுன்னம் வையே.
187

வையப்பாசிலேக்குள் கிளிபோற்கட்டு வளமாகச்சட்டியிலேவோடு நடுவேவைத்து, மெய்யப்பாமேலாகவாட்டவோடு மெல்லிதாய்த்தம ருமொரு நூறுமிட்டுச், செய்யப்பாசட்டியின்மே லூறப்போட்டுச்சி றப்பாகமல்லிகையி னிலேதுவைத்து, கொய்யப்பா தண்ணியிலேபோ ட்டுக்ராய்ச்சி குறிப்பாகத் துவாரத்தால் விட்டுநீற்றே. 188

சிறுகண்ணுகவேதை

ஆமேதானுகமொரு பலமேவாங்கி அடவாகயிலுப்பைநெய்யில் வுருக்கிச்சாய்த்து, வேமேதான்சின்னிஎலேக் கவசம்செய்து மிக்கான காடையென்ற புடத்தைப்போடு, காமேதான்புகையதுவுங் கட்டியே தான் நலமாகக்கண்ணெல்லாங் கட்டிபோகும், தாமேதானுகமிடை சூதஞ்சேர்த்து தாக்கானகளங்காக வுருக்கிடாயே. 189

உருக்கையிலே கெந்தியைநீ களஞ்சிபோடு வுத்தமனோகமது களங்கமாகும், வருகையிலேகலங்குதனை யெடுத்துப்பாரு மகத்தான சொர்னமது வுள்ளேநிற்கும், தருகையிலேவெள்ளிசெம்பில் பத்துக் கொன்று தாக்கடாகுருவதனை களங்குதன்னை, நிருகையிலேவிருக்கு முகந்தன்னிலேய நெடிதானமாற்றதுவு மாகும்பாரே. 190

பாரேதான் சரியோட்டிலூதிப்போடு பாங்கானசெம்பதுவு நீங் கியேதான், சீரேதான்வெள்ளியது மாற்றுகாணும் சிறப்பாகத்தகட டித்துப் புடத்தைபோடு, நேரேதானிரண்டாக்கோர் தங்கஞ்சேர்த்து நேர்ப்பாகத்தானுருக்கி யெடுத்துப்பாரு, தீரேதான்சிவனத்தைசெய் துக்கொண்டு தெளிவானசாத்திரத்தை யறிந்துபாரே. 191

அறிந்துமேயோகமுத லறியவேண்டும் அப்பனேகாரணத்தின் குருவைக்கண்டு, முறிந்துமேகுருசாம்பிரதாயங்கண்டு முடிவணங்கி யடிதொழுது முழுதும்பார்த்து, குறிந்துமேகும்பகத்தி லிருந்துகொ ண்டு கூற்றனுக்குச்சற்றேனு மிடங்கொடாமல், சறிந்துமேபராபரத் தின்மார்க்கங்கண்டு சாதிப்பாய்சதாசித்தம் சாதிப்பாயே. 192

அயக்களங்கு

சாதிப்பாயின்னமொரு கருமானங்கேள் சாற்றுகிறேன்லோக த்து மாந்தர்க்காக, வேதிப்பாமயமதுவு மொன்றேகாலாம் வெளுப் பானசெம்பதுவும் விராகனென்று, சோதிப்பாய்கடைசரக்கு சொல் லக்கேளுந்து யானதாளகமுங் களஞ்சியொன்று, சாதிப்பாங்காடி யென்முகாரந்தானும் கருவானபாஷாணங் களஞ்சியொன்றே. 193

ஒன்றானபூரமது களஞ்சியொன்று வுத்தமனேவீரமது களஞ்சியொன்று, குன்றாதருசியொரு களகஞ்சியொன்று கூரானதுத்தமது களஞ்சியொன்று, கன்றானகௌரியது களஞ்சியொன்று தாக்கானவெடியுப்புக் களஞ்சியொன்று, அன்றானசீனமது களஞ்சியொன்று அழகானலிங்கமது களஞ்சியொன்றே. 194

களஞ்சியாம்காரமது களஞ்சியொன்று கடிதானநாகமதுகளஞ்சியொன்று, தளஞ்சியாஞ்சூதமது களஞ்சியொன்று தாக்கானவிவையெல்லா மொன்றாய்ச்சேர்த்து, அளஞ்சியாமெரிகாலன்பாலாலாட்டியப்பனேவச்சிரமாங் குகையில்வைத்து, முளஞ்சியாஞ் சில்லிட்டுச்சீலைசெய்து முயற்சியாய்ரவிதனிலே காயப்போடே. 195

போடேநீதீமூட்டி யூலையில்வைத்துப் பொங்கமுடன்தானுருக்கியெடுத்துப்பாரு, நாடவேகளங்கமது யென்னசொல்வேன் நயமானகளங்கமது சொல்லப்போமோ, நீடவேவெள்ளிசெம்பில் பத்துக்கொன்று நினைவாகத்தானுருக்கி யெடுத்துப்பாரு, நாடவேகரியோட்டிஊதிப்போடு நுணுக்கமாமாற்றதுவு மாறதாமே. 196

ஆறானமட்டமது சொல்லப்போமோ அப்பனேநாலிக்கோர்தங்கஞ்சேர்த்து, வாறானவாறடித்துப் புடத்தைப்போடு வரைகட்டித்தங்கமது யிறங்கும்பாரு, கூறானதங்கமதுபசுமைமெத்தக் குவலயத்தில்யத்தங்கஞ் சொல்லப்போமோ, நாறானசவளையது வதிதங்காணீர் நாதாக்கள்செய்திடுவார் நளினமாமே. 197

கெந்தகத்தயிலம்

நளினமாமின்னமொரு போக்குச்சொல்வோம் நாதாக்கள்வித்தையது கூறப்போமே, மளினமாங்கெந்தியொரு பலமேவாங்குமகத்தான விரும்பிலியின் தயிலத்தாட்டி, களினமாமாத்திரைபோ லுண்டைசெய்து, கலசத்தில்தானடைத்துச் சீலைசெய்து தளினமாய்குழித்தயில மிறக்கிப்பாரு தாக்கானபொன்வர்னத் தயிலமாமே. 198

ஆமேதான்தயிலவதை ரசத்திற்குக்கு அப்பனேசூதமதுமடிந்துபோதும், தாமேதான்சூதமதுமடிந்துதானால் தாரணியில்வெகுகேடிவேதைபோடும், வேமேதான்சூதமது நேரொயொக்க வெடியானவுப்பதுவுங் காலாய்க்கூட்டி நாமேதான்அறுவகை செயநீர்தன்னால் நலமாகத்தானரைப்பாய் சாமம்நாலே. 199

நாலானபில்லையதுக் காயவைத்துநலமாகஓட்டிலிட்டுச்சீலைசெய்து காலானகுக்குடமாம் புடத்தைப்போடு கருவானசெந்தூரம்யென்ன

சொல்வேன், வேலானவெள்ளியது செம்பிற்றுக்குமிக்கானமாற்றது வுமென்னசொல்வேன், சூலானவர்ன்னமது சொல்லப்போமோ சுரு தியாம்வாதவித்தை தீதம்பாரே. 200

பாரேதான்லோகமதில் பஞ்சமானுல் படுவுரனுங்கல்லுமது பஞ் சுமாமோ, சீரேதான்குகைதனிலே வாழுஞ்சித்தர் சிறப்பானதெரிசி னைக்குறவுமுண்டோ, காரேதான்சித்தர்செய்யும் வேதைமாற்கம்கடி தானசெம்பொன்று செப்பக்கேளும், கூரேதான் செம்பதுவும் பல மேவாங்கிக் குறிப்பாகத்தானுருக்கிகிராசமீயே. 201

செம்புசுத்தி.

சுயமேவவீரமதுகாலதாகு மியலானசிற்றண்டங்காலதாகும், நை யமேவமதியுப்புக்காலதாகும் நலமானசாரமது காலதாகும், பையமே விதுவெல்லா மொன்றாய்ச்சேர்த்துப் பரிவாகசெம்புக் குகிராசமீவாய், நொய்யவே செம்பதுவுங்கசடுநீங்கி நுணுக்கமாஞ்சவளேபோ லாகுந் தானே. 202

தானனசெம்பதனைத் தகடடித்து தாழ்ச்சியாய்ப்புடம்போடம ருந்தைக்கேளும், தேனன மனோன்மணியாள் சுத்தரூபி தெளிவான செம்புதனிற்கவசம்பூசி, வேனனசீலையது வலுவாய்ச்செய்து விருப் பமுடன் குக்குடயாம்புடத்தைப்போடு, பானனபுடமாறியெடுத்துப் பாரு பாங்கானசெம்பதுவுஞ் சுத்தியாச்சே. 203

ஆச்சப்பாசெம்பதுவு மொன்றேயாகும் அப்பனே வெள்ளியது மூன்றேயாகும், காச்சப்பாதங்கமது வொன்றேயாகும கருவாகத்தா னுருக்கியெடுத்துப்பாரு, பேச்சப்பாபேசுதற்கு யிடமேயில்லை பேரா னபொன்னதுவும் மாற்றுஞ்சூம், மூச்சப்பாதானெடுங்கி யுண்டுநீயும் முனையானபராபரியை தியானம்பண்ணே. 204

பண்ணவேநிர்வாணி நிர்த்தஞ்செய்வாள் பாங்கான வாறுதலங் காணலாகும், எண்ணவேயுகாந்தவரைக் காணலாகும் யெளிதானகும் பகத்தைநிறுத்தவேண்டும், திண்ணவேபதாம்புயத்தை நண்ணவேண் டும் தெளிவானரேசகத்தை யறியவேண்டும், கண்ணவேகால்மாடுதலை மாடெல்லாம் கருத்தினிலேயெப்போதும் நாட்டுவீரே. 205

பச்சைவேட்டுவேதை.

நாட்டவே யெச்சிலைதான்கொண்டபோது நாடுமே தாகவிடாய் தீருமோசொல், மூட்டவேபச்சிலையில் காசாரமுடிப்பதுவும் பொன்

னல்லோபொய்யுமாமே, காட்டவேதினையளவு சூதம்விட்டால் காசி னியில் லாதமென்றபயேமமில்லை, நீட்டவேபோகரிஷிசொன்னநூலில் நெடிதானபொன்கணக்கு யிந்நூலாமே. 206

இந்நூலாமேழாயிரக்காவியத்தில் யெழிலானகுறுக்குடனேநெ டுக்குப்பாதை, பந்நூலாமநேகவிதக்காவியத்தில் பலபலவாம் பாடி வைத்தார்சித்தராஞேர், அந்நூலில் மறைத்ததொரு கருவெல்லாந் தான் அப்பனேயாவுமிந்தக் காவியத்தில், எந்நூலாமேழாயிரச்சத்த காண்டமெழிலாகத் தாமுரைத்ததுண்மையாமே 207

ரசிதமார்க்கம்.

உண்மையாஞ்சதகோடி சூரியன்போல் வுத்தமனே தாமுறைப் போமுறுதியாக, தன்மையாய்பாஷாணம்வீரந்தானும்பாங்கானரசமு டனேகாரந்தானும், தண்மையாய்பூநீறு சுண்ணும்போடு தாக்கியே தாரைப்பாயுமிநீராலே, வண்மையாய் செம்பகலில்வைத்துமூடி வா காகப்புடம்போட வெளுக்குஞ்செம்மே. 208

செம்பானகளங்குடனே மதிசேரொக்க சேர்க்கவேவ வயமதுதா னெட்டதாகும், செம்பானகளங்கதுவும் வெள்ளிசேர்ந்து செழிப்பா னதுய்யான்போல் சிவந்துமின்னும், செம்பானசெம்பதுதான் சிவப்பு மாறி சிறக்கவேவாளமது மாறிப்போகும், செம்பான லோகமது நிற மேதுன்றில் தேகமதில்வெகுவித்தையாடலாமே. 209

சவுக்காரமறைப்பு.

ஆடலாமுழக்கினிலே கிழக்குமேற்கு அப்பனேநின்றநிலை விள் ளுவாறே, தேடவேபராபரத்திஞுதியந்தம் சேர்ந்துரைப்பாரிவ்வுலகி ல்கூறப்போமோ, பாடலாம்போகரிஷி சொன்னநூலில் பார்க்கவே வாதியந்தம்காணப்போமோ, நீடலாஞ்சித்தர்முதல் கூட்டங்கூடிநேர் ப்பாக பாடிவைத்தார் பலநூலாமே. 210

தாமேதான்வழலையைத்தான் மறைத்துவிட்டார் சதகோடிரிஷி கள்முதல்முனிவர்தாமும், நாமேதான்வழலையுட மார்க்கந்தன்னை நா தாக்கள்தானறிய வெளியாய்ச்சொன்னேன், போமேதான்வெண்பே ரிற் கோபங்கொண்டு புறங்கூறிதூஷணைகள் மிகவுஞ்சொன்ஞர், வே மேதான் ரிஷிகளுட சாபத்தாலே வெளிப்பட்டேன் சீனபதிசென் றேன்தானே. 211

அயக்களங்கு.

தானனஅயமதுதான் பொடிதான்பத்து தாக்கான செம்பதுவு ம்விருகமென்று, வேனனதாளகம் விராகனென்று வியர்வானபாஷா

ணம்விராகனென்று, கோறனலிங்கமது விராகனென்று கொடிதான பூரமது விராகனென்று, காறனவீரமது விராகனென்று கடிதான சீனமுடன் விராகனென்றே. 212

ஒன்றான வெடியுப்பு விறுகனென்று வுறுதியாந்துருசுடனே விறுகனென்று, நன்றான துத்தமது விறுகனென்று நலமான காரமது விறுகனென்று, பன்றானகெவிறியது விறுகனென்று பாங்கானரசமது தான் விறுகனென்று, தன்றானவிவைவெல்லாம் மொன்றாய்ச்சேர்த்து தாக்குடனே யெரியாலன்பாலாட்டே. 213

ஆட்டியேநாற்சாமமரைத்துதீரு வன்பாகக் குகைதனிலே சீலை செய்து, மாட்டியேயுலையில்வைத்து வூதித்தீரு மகத்தானகளங்கமது சொல்லப்போமோ, தாட்டிகமாய் களங்கொன்று செம்புவொன்று கருவானவெள்ளியது வொன்றதாகும், பூட்டியேதானுருக்கி வூதிப்போடு போக்கானவெள்ளியது கட்டிப்போச்சே. 214

போச்சென்றுவிடுகாதே மைந்தாகேளு பொங்கமுடனுலிலென்றுதங்கஞ்சேர்த்து, காய்ச்சியே தகடடித்துப்புடத்தைப்போடு கலங்காமல் மாற்றதுவுங்காணும்பாரு, காய்ச்சியேவுருக்குமுகந்தன்னிலே தான் சார்வானசெந்தூர முப்புமாகும், பாச்சவேமாற்றதுவு மிருதுவாகும் பாடினார்போகரிஷி பாடினாரே. 215

தாளக்கட்டு.

பாடியேதாளகமோர் பலந்தாகுனும் பாங்கானதுருசுடனே காரந்தானும், கூடியேசரிஎடையா யெடுத்துக்கொண்டு குணமாகதாளகத்துக்கங்கிபூட்டி, நாடியேமுலைப்பாலில் அரைத்துமேதான் நலமாகமூன்றுபுடக்தாமேனபோடு, நீடியேமண்மரைவில் புடமேபோடு நேர்ப்பாகத்தாளகமும் கட்டிப்போமே. 216

கட்டியதோர்தாளகமும் விராகனென்று கருவானவெள்ளியறு விறுகனென்று, திட்டமுடன் செம்பதுவும் விறுகநாலுதிறமாகத்தானுக்கிகுருதானீய, கிட்டமாமோடதினி னூதிப்போடு கொடிதான வெள்ளியதுமாற்றாகும், வட்டமுடன்தங்கமது நேரேசேர்த்து வளமாகத்தகடடித்துப் புடத்தைப்போடே. 217

போடவேமாற்றதுவுமிறங்கியேதான் போகாதுமுப்புக்கு காணிக்குந்தான், தீடவேசொர்னமது மதிகவன்னம் திறமானவாதவித்தையிதனலாச்சு, கூடவேசிவயோகந் தன்னில்நின்று கும்பகத்தைமேல்நோக்கிமேவிப்பாரு, பாடவேபோகரிஷி தேவர்தாமும் பாடிவைத்தார்லோகத்துமாண்பருக்கே. 218

அயக்கலங்குசெம்பு.

மான்பானவின்னமொரு கருவைக்கேளு மகத்தானவேதையிது சுளுக்குவேதை, கான்பானவயமதுதான் ராவிமைந்தாகணக்குடனே பொடியதுவும் பலந்தானென்று, நாண்பானதுருசதுவும் பலந்தானு ஞநலமானசினமது பலந்தானுஞ, வீண்பானசாரமது பலந்தானுஞ வெடியானயுப்பதுவும் பலந்தானுலே. 219

நாலானபடிகாரந் தன்னைத்தானும் நலமாகப்பங்கிட்டுவதிலோர் பாகம், மாலானவயப்படியில் போட்டரைத்து வளமாக மூரியினால் கழுவிப்போடு, சேலானவிந்தமுறை நாலுபாகஞ் சிறப்பாகக்கழுவிட வேவயமுந்தானும், காலானகசடதுதான் நீங்கியல்லோ காரானபொடியாகவிருக்குந்தானே. 220

தானானபொடியதனில் சாரந்தன்னைத் தாக்குடனேநாலுவிதயா கஞ்செய்து, பானனவயப்பொடியி லோர்பாகந்தான் பதராமல்தான் போட்டு வரைத்துமேதான், வேனகயிந்தமுறை நாலுபாகம் விடாம லேவமூரியினால் கழுவிப்போடு, கோனகதுருசிதனை நாலுபாகம் குறிப்புடனே முன்போலசெய்துகொள்ளே. 221

கொள்ளவேவமூரியினால் கழுவிப்போடு கொற்றவனேநாலுமுறையிந்தபாகம், விள்ளவேவமூரியினால் கழுவிப்போடு விகற்பமுடன் வந்திடைக்கு சூதஞ்சேர்த்து, மெள்ளவேகுழியம்மிதன்னுலாட்டி விருப்பமுடன் சட்டியிட்டுசீலைசெய்து, உள்ளவேயடுப்பேற்றிநாலுசாமமுத்தமனே தானெறித்தாய் கமலந்தானே. 222

கமலமாஞ்செந்தூரமாகும்பாரு கதிப்புடனே செந்தூரம் நாலிலொன்று, விமலமாய்காரமது காலேசேர்த்து விருப்பமுடன்குகையிலிட்டுவுறுக்கிப்பாரு, தமலமாம்களங்குடனே செம்புமாகும் தனிராகவங்கமுட நேரேசேர்த்து, விமலமாவூதிடவே செம்புமாகும் விசையானகளிப்பதுவுங் கட்டிப்போச்சே. 223

கட்டியதோர்செம்பொன்று தங்கமொன்று கருவானவெள்ளியதுவிராகமொன்று, திட்டமுடன்தானுருக்கிவூதிப்போடு தெளிவானமாற்றறுவுமெட்டதாகும், நட்டமென்னவணிகரிடஞ் சென்றுமேதான்நலமாகநீர்கொடுக்கி லாபங்காணும், கட்டமுட னிருந்துகொண்டு கவனியாவாய் கருவருடன்கூடாதே கருவைப்பாரே. 2:4

கருவானபிராணையந்தன்னில்நின்று கதிப்புடனே சின்மயத்தைக்கடந்துமேதான், உருவானகுருபீடந் தன்னைப்போற்றி யுத்தமனே யுதாசினத்தைதள்ளிப்போடு, மருவானகும்பகத்தில் நின்றுகொண்டு

மகத்தானசெகசோதி தன்னைப்பாரு, திருவானமயேஸ்பரியாள் நிர்வாணிதானும் தேவியருங்கடாட்சித்து அர்ச்சிப்பாளே. 225

பாஷாணகட்டு

பாளேதான்பாஷாணம் பலமைந்தாகும் பாங்கானபூநீறுபலமைந்தாகும், சூளேதான்பூநீறுதன்னைத்தானும் சோகமாங்கேசரியிந்நீரா லாட்டி, கோளேதானேராமற் பாஷாணத்துக் குருதிபெறக்கவசத்துக்கங்கிபூட்டி, சாளேதான்போலாந்திர மாகக்கட்டி நயவுடனே வடிப்பில்வைத் தெரித்திடாயே. 226

எரித்தபின்பாஷாணங்கவசநீக்கி எழிலாகதானெடுத்து எருக்கன்பாலால், பரித்துமேநாற்சாமம் சுருக்குதாக்க பளிங்கானபாஷாணங்கட்டிப்போகும், தெரிந்துமேசூதமது நேரேதாக்கு தெளிவாக வறுவகையின் செயநீராலே, முறித்துமேஎண்சாமமறைக்கும்போது முனையானமெழுகதுபோ லாகும்பாரே. 227

பாரேதான்மெழுகெடுத்து வெள்ளியத்தில் பாச்சப்பாபத்துக்கு ஒன்றுபோடு, நேரேதான்வெள்வங்கம்நீரைவாங்கி நிலைத்துதடாவாத வித்தை நிசமதாச்சு, கூரேதான்சிவயோகந் தன்னிற்சென்று குறிப்புடனே மனோலயத்தை மேவிப்பாரு, வீரேதான்போகாமல் காயந்தன்னை விருப்பமுடன் யோகநிலை சாதிப்பீரே. 228

நாகவேதை

சாதிப்பீர்தவளைபூ மணத்தைதானும் சற்றுமேயதின்வாச மறியாற்போலும், சோதிக்கசித்தர்சொல்லும் நூல்கள்யாவும் சுருதிபெறும்வேதாந்த நூல்கள்தானும், வாதிக்கவெவராலுமுடியாதப்பா வரியென்னூலில் நுட்பம்வைத்து, நீதியாய்மனோன்மணித்தாய் பாதம் போற்றி நிஷ்களமாய் பராபரியை பரவிநில்லே. 229

நில்லடாநாகமதுபலந்தானைந்து நெடிதானதாளகமும் பலந்தானைந்து, கொள்ளடாகெந்தகமும் பலந்தானைந்து கொடிதானசிங்கியது பலந்தானைந்து, மெல்லடாசூதமதுபலந்தானைந்து மேலானதுருசதுவும் பலந்தானைந்து, கல்லடாவாக்ராந்தம் பலமைந்தாகும் கருவாகவெள்ளிபது பலமைஞ்சாமே. 230

அஞ்சானசரக்கெல்லாம் வொனருய்க்கூட்டி அப்பனேகுழியும் மிதன்னலாட்டி, திஞ்சானசெயநீரில்தன்னால்மைந்தா தெளிவாகவறு சாமம் வகைத்துமேதான், கஞ்சானவச்சிரமாங் குகையில்வைத்து

கலங்காமலுலையில்வைத் தூதித்தீரு, மிஞ்சாமல்மூசைதனைவுடைத்து ப்பாரு மிக்கானகளங்கமது வாகுந்தானே. 231

தானானகளங்கமதை யென்னசொல்வேன் தாக்கானவெள்ளி செம்பில் தன்னிற்றுக்கு, கோனானகுருமுறையாய் ஊதிப்போடுகுண மானமாற்றதுவுஞ் சொல்லப்போமோ, வேனானநாலிலோர் தங்கஞ் சேர்த்து விருப்பமுடன்தகட்டித்துப் புடத்தைப்போடு, மானனமா ற்றதுவுமிகுதியாகி மாசற்றதங்கமது வாகும்பாரே. 232

பாரேதான்பராபரியைப் பூசித்தேதான் பாங்கானசின்மயத்தி லிருந்துகொண்டு, நேரேதான்மும்மலமும்விட்டகற்றி நெறியானவெ ட்டவெளி தன்னிற்சென்று, சீரேதான்சோதிமயந்தன்னைக் கண்டு சுடரொளியையெப்போது மனதிலெண்ணி, கூரேதான்விட்டகுறை நேருமட்டும் குறிப்பாகசமாதியிலே யிருந்துபோற்றே. 233

லிங்கவேதை

போற்றவேதாயறியாச்சூலுமிந்த பூதலத்திலில்லை என்றவாக்கி யம்போல, ஏற்றவேகானறியா வாதந்தானும் யெழிலாகத்தானுமுண் டோ தரணிமீது, ஆற்றவேலிங்கமது பலமதாகும் அப்பனேபாவை யர்பா லூறவைத்து, தூற்றவேசுருக்குடனே நாலுசாமம்துடிப்பான லிங்கமது சுத்தியாச்சே. 234

ஆச்சப்பாதேனதுவும் நாலுசாமம் அப்பனேசுருக்கதுவுந்தாக்க வேண்டு, மூச்சப்பாதைவேளை நாலுசாமம் முசுக்கையுடன்கருப்பன் சார்நாலுசாமம், பேச்சப்பாபழச்சாறு நாலுசாமம் பேரானசங்கன் சார் நாலுசாமம், பேச்சப்பா மேனிச்சார்நாலுசாமம் கலங்காமல் சுரு க்கிடவே கட்டிப்போமே. 235

கட்டியதோர் லிங்கமது பலமேயாகும் கடிதானரவிமதியும் பலமேயாகும், திட்டமுடன்தான்ராவிமைந்தாகேளு திறமானகுன் றிமணி யரைத்தும்மேதான், பட்டயம்போல்தான்பிசறி லிங்கமீதில் பக்குவமாயங்கியது பதியமாட்டி, சட்டமதாய்சிலையது வலுவாய்ச் செய்து சார்புடனேமிப்புடத்தில் போட்டிடாயே. 236

போடவேலிங்கமது வுருகியாடும்போக்கான சரக்கைந்துங்கட் டிப்போகும், நீட்டமுடன்லிங்கருருதனையெடுத்து நேர்ப்பாகவெள் ளிசெம்பில்பத்துக்கொன்று, வாட்டமுடன் கொடுத்துருக்கமாற்று கும்மைந்தனே வுப்புக்கு காவிக்கேகா, தேட்டமுடன்கரியோட்டி லூதிப்போடு தெளிவானமாற்றதுவும் பாருபாரே 237

பாரேதான்செம்பதுவும்நீங்கியல்லோ பாங்கானவெள்ளிபதுமா ற்றுகாணும், சீரேதானவ்விடைக்குத் தங்கஞ்சேர்த்துச் சிறப்பாகத் தகடடித்துப் படத்தைப்போடு, நேரேதான்தங்கமதுவதிகங்காணும் நிலையான வித்தையடாவாதவித்தை, கூரேதான்போகரிஷிசொன்ன மார்க்கம் குவலயத்தில் பொய்யாது மெய்யாங்காணே. 238

காணவேதுடுப்பொன்று தானிருக்ககருவான கையதுதான் வேகுமோசொல், நாணவேதவமொன்று தானிருக்க நாம்செய்ய வினையதுதானென்னசெய்யும், பூணவேமருந்தினது போக்கிருக்க பொலிவானபாகமது வென்னசெய்யும், நீணவேபோகரிஷிபுகலுமார்க்கம்நிட்சயமாய் தெரிந்துகொள்ளும் நெளிவைத்தானே. 239

இரசவேதை

தானான இரசமதுவும் சேர்தானென்று தாக்கானகெந்தியதுசேர்தானிரண்டு, வேனுனவடிகனத்த சட்டிலேதான் வெகுளாமல்வுப்பதனைபடிதான்கொண்டு, பாளுகைகீழ்மே லுப்பைகொட்டிப் பாங்காக கெந்தகத்தைக்கீழ்மேலிட்டு, கோனுகாசமதுவை நடுவேயூதிக் குப்புறவாந்தீயெரிப்பாய் சாமம்பத்தே. 240

பத்தானசாமமது சென்றபின்பு பாங்காகஎடுத்துப்பார்செந்தூரந்தான்புத்தானலிங்கமதுபோலிருக்கும்பொலிவாகசெந்தூரஞ்சொல்லப்போமே, சத்தானதங்கமது பத்துக்கொன்று தாக்கியரை செயநீரால் மறுக்காலுந்தான், வித்தானசெந்தூரம் வேகமிஞ்சி வெகுதூரம் வேதையது ஓடும்பாரே. 241

பாரேதான் வெள்ளிசெம்பில்பத்துக்கொன்று பாங்காகத்தானுருக்கியெடுத்துப்பாரு, சீரேதாகருப்புவன்னக் கனகமாகும் சிறப்புடனே யூதிப்பார் சிவந்தபொன்னும், நேரேதான்தகடடித்து புடத்தைப்போடு கெடிதானமாற்றதுவுமாறதாகும், கூரேதானுலுக்கோர்தங்கஞ்சேர்த்துக் குறிப்புடனேசென்றெடுத்து யுருக்கிப்பாரே. 242

போகர்குளிகைவதிசயம்

சென்றேனேவஷ்டதிசை குளிகைகொண்டேன் திரளானகதிமலைகளனைத்துப்பார்த்தேன், சென்றேனே பொன்விளையு மணலுங்கண்டேன் செழிப்பான கெம்பினிடவிளையுங்கண்டேன், சென்றேனே பச்சைமலையானுஞ்சென்றேன் சிவப்பானவயிசிரியவிளையும்பார்த்தேன், சென்றேனே நாகார்ச்சுனன்மலையுங்கண்டேன் சேனவிதவதிசயங்களறிந்திட்டேனே. 243

அறிந்திட்டேன் வெள்ளியென்ற மலையுங்கண்டேன் அப்பனே செம்பினிடமலையுங்கண்டேன், பிரிந்திட்டேன்மேருகிரி தன்னிற்சென்றேன் ரோமரிஷிகள்முனிசித்தர்தம்மை, பரிந்திட்டு யவர்களிடஞ்சென்றுபேசி பலபலவாஞ்சாத்திரங்கள் மறைத்ததெல்லாம், குறித்திட்டுவெளியாக்க வென்றேயெண்ணி குளிகையிட்டுசீனபதி யமர்ந்திட்டேனே. 244

பதியான தீவுதீவாந்திரங்கள் பறக்கவே குளிகையொன்று செய்துகொண்டேன், நதியானசத்தசாகரமுங்கண்டேன் நாதாக்களிருப்பிடமுந்துறையுங்கண்டேன், விதியானசத்திரங்கள் மலைபோற்றங்கம் விஸ்தாரமாயிருக்குங் குகையுங்கண்டேன், மதியானவெள்ளியென்றகாறுற்கண்டேன் மகத்தானசுரங்கமுதல் யான்கண்டேனே.

கண்டேனேரிஷிகளுட கூட்டந்தன்னைக்காலாங்கிநாயனுர் சமாதிகண்டேன், உண்டானசமாதியிட பக்கந்தன்னில் வுத்தமனமேருகிரிசமாதியோகம், அண்டாததடாகமொன்று யங்கேயுண்டு அதிலுள்ளவதிசயங்கள் யாவுஞ்சொல்வேன், திண்டானவாயிரக்கால்மண்டபந்தான் திறமாகக்கட்டிருக்கும் வண்மைபாரே. 246

சித்தர்கள் வருத்துப்யோக்கு.

பாரேதான்சித்தர்கள்கூட்டமாகப் பதிவாகதூணருகில் சமாதிருப்பார், நேரேதான் காலாங்கிமூவர்தாமும் நெடுந்தூரஞ்சமாதியதுநெருங்கிருப்பார், சாரேதான்சதகோடி ரிஷிகள்தாமும்சார்பாகத்தாணருகில்வந்துநின்று, கூரேதான்நீதங்கள் மிகவுங்கேட்பார் கோடிமனுதானுரைப்பார் சித்தர்தாமே. 247

தாமேதான் கருக்குருவும் விள்ளச்சொல்வார்தாக்கானசெந்தூரக்காடுஞ்சொல்வார், வேமேதான்சுன்னமென்றக் காடுஞ்சொல்வார் மிக்கானகிடாரங்களிருப்புஞ்சொல்வார், போமேதான்ராமரிடவைப்புஞ்சொல்வார், பொலிவானகெடிஸ்தலமும் புகழ்ந்துசொல்வார் நாமேதான் ராவணிஸ்தலமுஞ் சொல்வார் நலமானதிரவியமு மிடஞ்சொல்வாரே. 248

இராஜாக்கள்வைப்பு.

சொல்லுவார்பொன்னென்றகாட்டையெல்லாம்சூட்சமுடன்றுனுரைப்பார்வதீதமெத்த, வெல்லுவா ரயோத்திநகராசனுன வீரியனுமரிச்சந்திரன்வைத்தபொன்னை, கெல்லுவார் பாதாளவஞ்சனத்தைக்

கீர்த்தியுடன்றுன்கொடுப்பார்மைந்தாகேளு, புல்லுவார்புருரான்றன் பொன்னையெல்லாம் பொருப்பாகத்தானெடுக்கும்வகைசொல்வாரே.

வகையுடனேராசாக்கள்வைத்த மார்க்கம்வகுப்புடனே தானெடுப்பார்சித்தர்வர்க்கம், தொகையுடனே விக்கிரமாதித்தன் சொத்தைதுறைகோடி பரிசனமாமெல்லாஞ்சொல்வார், நகையுடனேராசருடசோழவர்க்கம் நாட்டிலுள்ளபொருளையெல்லாம் விரித்துச்சொல்வார், பகையுடனேபாண்டவாள் திருதராட்சன் பண்பாகத்தேடி வைத்தபொருள்சொல்வாரே. 250

பொருள்சொல்வார் களராசன்திரவியங்கள் பூதலத்தில்மெத்தவுண்டுபுகலப்போமோ, இருள்சேர்ந்தகாட்டகத்தில புதைத்துவைத்தார் எழிலானதேவரிஷிவனந்தானப்பா, மருள்சாய்ந்தமராமரமாம் விருட்சமுண்டுமலையோர லதினருகேசித்தர்கூட்டம், அருள்குழந்த மூலவர்க்கர் மெத்தவுண்டு அவருடைய பலாபலத்தையறையக்கேளே. 251

கேளேநீதிரவியங்கள்மலைபோற்றங்கம் குவித்திருக்குஞ்சாவடியாங்குளமொன்றுண்டு, சூளைநீராட்சதங்கள் கூட்டமப்பா சொல்லவொண்ணுரிஷிகளுடசேர்வைமெத்த ஆளைதான்மானிடர்களெவர்போனலும அண்டவொண்ணுதிரவியத்தை யெடுக்கப்போமோ, தாளேதான் மந்திரமாமதர்வணவேதம் தாக்குடனேதானறிந்தோர்போகலாமே. 252

போகலாம் பொன்னெல்லாம்வாரிவந்து பூதலத்திலரசனுய்வாழலாமே, வாழலாமென்றுசொல்லித்தனத்தைத்தேடி தாரணியில் வைத்திறந்தோர் கோடாகோடி, வேகலாந்தீயதனி லென்றுசோதி மேதினியில்கேட்டிருந்துவீணுய்மாண்டார், நோகலாஞ் சித்தர்மனமென்றெண்ணுமல் நொடிக்குள்ளேசாபத்தால்மாண்டிட்டாரே.

விலாடமாநகரம் தருமர்வைப்பு.

மாண்டிட்டார்வரைகோடிரிஷிசாபத்தால் மண்டலத்தில்மடிந்தவர்கள் கோடாகோடி, தூண்டிட்ட கருமான மினனமொன்றுசூட்சமுடன் சொல்லுகிறேன்மைந்தாகேளு, வேண்டிட்டதிரவியங்கள்மெத்தவுண்டு விலாடனும் நகரமதில்மலையோரந்தான், தாண்டிட்ட கோபுரமாந் தேவஸ்தானம் தனிப்பிள்ளையார் கோவில்வுண்டுபாரே. 254

பாரேதான் திருக்கோயில்குளமுமுண்டு படிகமாம்வட்டக்கல்பாறையுண்டு, நேரேதான்சிவாலிங்கஞ்சமைத்திருக்கும் நெடிதானகுத்துக்கல்பாறையுண்டு, சீரேதான் தருமரிடதிரவியங்கள் தேடவொண்ணுமலைபோலதங்கமப்பா, சீரேதான்களஞ்சியங்கள் கோடாகோடி குறிக்கமுடியாதென்றுகூடினரே. 255

விபீஷணன் வைப்பு.

கூறினேன் போகரிஷிசொல்லுமார்க்கம் கொற்றவனும்விபீஷணன்திரவியங்கள், தேறினதோர்கோடிவரையுகாந்ததங்கம் கொட்டியேகிடக்குமதுலங்கைதன்னில், மீறினதோர்பச்சைவடம் தாவடங்கள் மின்னலைப்போலொளிவீசு மிலங்கைதன்னில், மாறியதோர் கோட்டை முகம்பதிமுன்னாக மன்னவனார் நிதியனைத்துங்காணலாமே. 256

காணலாம்பொற்கோபுரவாசல்முன்னே கருவானசெந்தூரக்கிடாரமுண்டு, தூணெலாந்தங்கமதுசெம்புவன்னம் துறைநடுவேசெயரசக்கிடாரமுண்டு, பூணெலாம்வாபரணமெத்தவுண்டு பொங்கமுடன்தானிருக்கும்புரவிபூண்டு, நீணலாந்தெய்வலோகபுரவிமீதில் நெடிதானரக்கையது தோன்றுந்தானே. 257

விபீஷணன்தாம்பிரமாளிகையை இந்திரசித்தன் தூம்பரவேதை.

தானனபுரவியதுதானிருக்குந்தனியான சப்ரகூடமண்டபந்தான், வேனனசெம்பினிடமாளிதானும் விண்ணுலகில்விஸ்வகர்மநிருபர்தன்னால், பானனவிபீஷணனுமாண்டுதன்னில்பாவித்த மண்டபத்தின்மகிமைசொல்வோம், கானனயிந்திரசித்தன் சிசுபாலன்தான்காட்டியதோர் வாதவித்தைக்காணலாமே. 258

ஆமேதான்செயரசமாஞ்செந்தூரத்தை அடவுடனே தாம்பிரத்தின்மாளிதன்னில், தாமேதான்காலடியில் மண்டபத்தில் தாக்கவேதூம்சரமாம்செயசூதத்தை, காமேதான்தடவிதணலைக்காட்டக் கட்டடமாமாளிகையும் பழுத்துதங்கம், நாமேதான்கண்டபடிசொன்னமாளிகளினமுடனிந்தரசித்தனுட்டினனே. 259

நாட்டினன்சித்தர்முதல்ரிஷிகள்தாமும் நடுக்கமுடன்திடுக்கிட்டுவோடிவந்து, மீட்டினதோர் செயசூததூம்பரத்தைமேதினியிகாரிடமுங்கிட்டாமுற்றுன், பூட்டினர்கிராடமென்றசெயசூதத்தைபூதலத்தில்யாரேனும் நெருங்கவொட்டாற் தாட்டினர் சமாதியிலேகிடாரமெல்லாந் தாரணியில்பாதாளம்புதைத்திட்டாரே. 260

## இந்திரசித்துசாபம்

புதைத்துமேரிஷிகோடி முனிவர்தாமும் பூதலத்திலிந்திரனுஞ் சித்தனுக்கு, பதைத்துமேசாபமது கொடுத்திட்டார்கள் பாருலகில் பத்தனுய்த் திரியவென்முர், சிதைத்துமேயிந்திரனுஞ் சித்தராசன் சிறையிட்டுமுறையிட்டுத் திரிந்தான்பாரில், வதைத்துமேதானிறுந்த யிந்திரசித்தை வாகுடனே சாபமதை தீர்த்தார்பாரே. 261

## சாபநிவர்த்தி

தீர்க்கவேஜனகமுனி பெரியோர்தாமும் திறமுடனேகானகத்தில் கொண்டுசென்று, பார்க்கவேயெல்லோரும் புகழவென்றுபாலித்தார் ஞானுப தேசவுண்மை, தேர்க்கவேசித்தருடமகுத்துவத்தை தெளிவுறவேஜனகமுனி யெடுத்துக்கூற, மார்க்கவேமனுலயத்திலகித்துநின்று மதிப்புடனேயோகசமாதியில் நின்முரே. 262

நின்முரேயிலங்கைபதி யோரந்தன்னில் நெடுந்தூரம்சுனையொன்று தடாகமுண்டு, குன்முனமலைபோலப்பூஷணங்கள் கோடானகோடிசெம்பொன் கிடாரந்தன்னே, வன்முனபூமியிலேவைத்தார் வாகானவேதாளங் காவலுண்டு, தன்முனபூஷணமாஞ் சாடிவைப்பை தரணியில் போகரிஷி கண்டிட்டாரே. 263

கண்டிட்டே னிலங்கைக்குமேற்புரத்தில் கருவானசுரங்கமுண்டு கிடாரந்தன்னில், குண்டிட்டகாவடியாங் கோட்டைவாசல் கொடிதானகிங்கிலியர் அனுமார்கூட்டம், தாண்டிட்டகாவற்கா ரனேகருண்டு சதகோடிரிஷிகளெல்லாம் வருவார்போவார், கொண்டிட்ட சீதையாபரணந்தன்னைக் கோடித்துத்தான்வருவார் முனிவர்தாமே.

## இராவணன்வைப்பு.

முனியானலங்கைக்கு வடபாகத்தில் முனையானமலையோரம்பாறையுண்டு, தனியானமண்டபமாங் கோட்டையுண்டு தாக்கான கடலோரங்குத்துக்கல்லாம், கனியானதேவதாமாவிருட்சம் கடலருகே ராட்சதாள்கூட்டங்காவல், பணியானசூரியசந்திரனுங்காணுர் பாருலகில் யெவராரும் பார்க்கப்போமோ. 265

பார்க்கவேவெகுகொடி சித்தர்தாமும் பதிவாகக்காண வென்று வருவார்பேவோர், ஆர்க்கமுடியாது தனத்தின்சேர்வை ஆரறிவாரிவ்வுலகில் தீதமெத்த, தீர்க்கவே குளிகைகொண்டு யானுஞ்சென்று திரளான கோட்டைவழிதான்கடந்து, ஏற்கவேசுரங்கத்தின் வழியுங்கண்டேன் யெழிலான ராவணனுர் நீதிகண்டேன். 266

பாஞ்சாலன்வைப்பு

நிதியானதளவாச லனைத்துங்கண்டேன் நெடிதானபாஞ்சாலன் கிடாரவைப்பு, பதியானகடலோரம் விருட்சமுண்டு பாங்கானகோட் டைக்கு யிடபாகத்தில், வதியானமணலென் றவாறுமுண்டுமகத்தான வாற்றருகே சுனையுமுண்டு, துதியானகிங்கிலியர் காவலுண்டு துறை முகத்தில் கறுப்பண்ணன் நிற்பான்பாரே. 267

நிற்பானேபாஞ்சாலன் எக்கியசாலை நெடிதானபொன்விலையுந் தலமொன்றுண்டு, கற்பானகன்னிகை களங்கிருப்பார்கண்டாலே சாபத்தால் சமைப்பார்கண்டீர், பொற்பான குடமெடுத்துச் சலமே தூக்கி போற்றியேயெக்கியத்திற் கர்ச்சனையேசெய்வார், துற்பான யாகசாலயத்தைக்கண்டேன் துடியான குளிகையிட்டு நடந்தேன் பாரே. 268

நடந்தேனேசீனபதி நாடிவந்தேன் நானங்கேசிலகால மிருந்து பார்த்தேன், தொடர்ந்தேனே தட்சணமாம்பதிக்குவந்தேன் தொட ரானவஞ்சனமாங் கிரியில்வாழும், அடர்ந்தேனேயவரிடமாங் குகை யிற்சென்று அடங்காதசாத்திரத்தி னுளவுபார்த்துக், கடந்தேனே சிகரமலை மேலைசென்றேன் கடாட்சிக்கரிஷிபதத்தை துறைபார்த் தேனே. 269

துறைகண்டேன் காலாங்கிபாதங்கண்டேன் தூய்யமலர் தானெ டுத்துச்சரணஞ்செய்தேன், கரைகடந்தேன் கடந்தமுனிரிஷிகள்தம் மை கார்க்கவென்று வவர்களிட பாதஞ்சென்றேன், முறைகொண் டேன்சித்தர்களை யான்வணங்கி மொழிந்திட்டேன் லோகத்தின்மகி மைதன்னை, தரைகண்டே னடிமுடியுமனைத்துங்கண்டேன் சதாநிஷ் டையத்தனையும் வெளியிட்டேனே. 270

வெளியிட்டயெந்தன்மேல் சந்தோஷித்து வெளியாக சாத்திரத் தின்மறைப்புதன்னை, பலியிட்டசாபத்தை நிவர்த்திசெய்து பாருலகி லெல்லோரும் பிழைக்கவென்று, குளியிட்டகவனமுதல் கெவுனசித் தி குறிப்பான வடையாளமனைத்துங்காட்டி, வளியிட்டா ரெந்தனு க்குவாக்குசொல்லி வரங்கொடுத்தா ரிஷிமுனிவர்சித்தர்தாமே. 271

போகர் இறந்தவரைக்காண்பிக்க ஜாலமாளிகை

சித்தருடன்வரம்பெற்றுத் திரும்பியானும் சென்றேனே சீனப திதேசந்தன்னில், நித்தமுடன்முனிரிஷிகள் சித்தர்தாமும் நேர்ந்து ரைத்தமுறைப்படியே யானுங்கொண்டு, சத்தமுடன் செத்ததொரு மனிதர்தம்மை தாரணியில்காணுதற்கு ஜாலஞ்சொல்வேன், பத்தியு டன்மாளிகையாமச்சிவீடு பாங்காகத் தான்சமைப்பீர்மைந்தர்கேளீர்

கேளவேபத்தடியாய் நான்குபக்கம் கெடியானசந்தில்லா மச்சி வீடு, நீளவேயொருபக்கம்சந்தமைத்து நிலையானவாள்போக யிடமுண்டாக்கி, தாளவேகண்ணாடிக்கீழ்புதைத்து தாக்காகச்சுற்றிலும்படமடைத்து, ஆளவே ஒவ்வொருபடத்தில்தானும் அய்யனே ஆண்பெண்ணாய் ரூபஞ்செய்யே. 273

செய்யவேகண்ணாடி யறுபத்துநான்கு திறமுடனேவைங்கோலமையினாலே, பையவேவெவ்வேரு சட்டந்தன்னில்பாங்காகப்பலவித ரூபமாக, தொய்யவே சகலவிதவர்ன்னத்தாலே தோற்றவே நேத்திரத்திற்கழகதாக, மையவேமறைப்பினிட கருவினாலே மாட்டடாசெற்றுதனில் பொட்டும்வையே. 274

வைக்கவேமாளிகையில் மேற்புரத்தில் வகையுடனேவாகாஷங்காண்பதற்கு, கைக்கனத்தக்குழாவொன்று துத்தநாகம்கடுந்தூரம் பார்வையது தெரியவேதான், மெய்க்கவேகுழாவினிட சந்தினாலே மேல்நோக்கி வாகாஷந்தன்னைப்பாரு, பொய்க்கவே கண்ணிமைகள் சிமிட்டாமற்றான் பொங்கமுடன் தானின்று சிரசைப்பாரே. 275

பார்க்கையிலேரூபமது வெதிரேநிற்கும் பாங்குடனேமறுபடியுமாயாரூபம், பார்க்கையிலே மறுபடியுங்கண்ணாடிபாரு படிகமென்ற கண்ணாடி ரூபங்காட்டும், பார்க்கையிலேயாரைநீ நினைந்திட்டாலும் பட்சமுடனெதிர்நின்று தோற்றங்காணும், பார்க்கையிலேநிஜரூபமிறந்தோர்காண்பீர் பாரினிலேசாலவித்தை பகரலாமே. 276

பகரலாம்தோற்றமதை காணும்போது பகற்காலமேகமதுயிருக்கப்போகா, நகரெலாஞ்சூரியனி னொளியேவேண்டும் நாட்டமுடன் திரைக்குள்ளே நிற்கும்போது, சகரெலாம்காண்பதற்கு யிடமும்வேண்டு சட்டமுடன்கடிகைதனில் பத்துக்குள்ளே, புகரலாம்மாளிகையில் சாலவித்தை புகழ்ச்சியுடனெப்போதுங் காட்டுவீரே. 277

காட்டவேமாளிகையிலுட்புகுந்து கனமானரூபமதைக் காணும்போது, நாட்டமுடன் மனேலயமுமாறியேதான் நடுக்கமுடன்நேத்திரத்தில் ரூபங்காட்டும், வாட்டமுடன்செகசால வித்தைதன்னை வாகுடனே மானிடர்க ளறியவென்று, தேட்டமுடன்போகரிஷியானுங்கண்டு தெளிவாகப்பாடிவைத்தேன் திறமிதாமே. 278

திறமான வித்தைதனை சீனந்தன்னில் தெளிவாகச் செய்துமல்லோ கீர்த்திபெற்றேன், திறமான போகரிஷி யென்றுசொல்லி திக்கி

துள்ளசெனமெல்லாங் கண்டுவந்து, திறமானவித்தையிது வதீதவித் தை தேசத்திலகிட்டாது சித்தாக்கில்லை, திறமானலோகமதைமயக் கும்வித்தை தெரிவித்தார் போகரிஷி யென்றிட்டாரே. 279

என்றிட்டசித்தரெல்லா மொன்றுய்க்கூடி ஏகாந்தம்பேசியல் லோ எனைக்கோபித்தார் கன்றிட்டபாலதுபோல் யானும்பொங்கிகடி ந்துரைத்த மொழிதனையே கருத்திலுன்னி வென்றிட்டரிஷிமுனிவர் சாலம்சொன்னார், வேதாந்ததாயெனக்குச் சாபந்தீர்த்தாள் அன்றி ட்டசாபமதை கடந்துயானும் அப்பனேயனேகவித்தை செய்தேன் பாரே. 280

போகர்மலையின்பேரிலிருந்து குதித்தது

பார்க்கவேவாகாஷ பர்வதந்தன்னில் பரிவுடனேகுதிப்பதற்கு கூண்டுசொல்வேன், கார்க்கவேவட்டமாங் குடைதானென்றுபாங்கா னகுடைநிகள மகலங்கேளீர், ஏர்க்கவேயாரடியாவட்டவீடு யெழிலா னபட்டுவடந் தன்றைற்செய்து, தீர்க்கவேபிரம்பதுவு முப்பத்திரண்டு திறமானசக்கரமு மொன்றேமாட்டே. 281

மாட்டவேசக்கரத்தி லிரும்புக்கம்பி மார்க்கமாய்தான்முடுக்கி வாணிமாட்டி, நீட்டமுடன்கம்பிக்குத் துணிதான்போர்த்துநெடிதா னசூத்திரமாங் கயற்தான்கோர்த்து, வாட்டமுடன்தான்விரித்து குடைகையேந்தி வாகாகத்தான்குதிக்கில் வாயுபூந்து, தேட்டமுடன் காற்றதுவுங் கூண்டேதூக்கும் தீவிரமாய்மனிதனுந்தான் கீழ்நோக்க லாமே. 282

நோக்கலாம் குடைதனையேகையிலேந்தி கொடிக்குள்ளே மலை யைவிட்டு குதிக்கும்போது, தூக்குமேகொடைதானு மனிதனைத் தான் துப்புரவாய்மனிதனங்கே துணிவுகொண்டு தேக்குடனேபூமி தனி லிறங்கும்போது, தேசமெல்லாங்கண்ணுக்கு ளணுவுபோலும் நோக்குடனே தெரியுமென்று போகர்தானும் நேராகப்பாடிவைத் தேன் நேர்மைபாரே. 283

பாரேதானின்னமொரு சூட்சஞ்சொல்வேன் பாருலகிலிந்தவித் தை பழக்கஞ்செய்ய, சீரேதானுற்றருகே தன்னிற்சென்றுசிறப்பான ஜலமதுவும் நிற்கும்போது, நீரேதான்பாளமதில் நின்றுகொண்டுநேர் த்தியாய்க்குடைதனையே கையிலேந்தி, தீரேதான்சலமதினில் குதிப் பாயானல் திறமானதேகமது பழுதாறுதே. 284

பாளம்எண்பது வாராவதி

பழுதுமேவாராது தேகந்தானும் பலகாலுமிப்படியே பழக்கஞ் செய்தால், கழுதுவளதானிருக்கம் பனையின்மேல் கருவாகத்தானே

றிகுடைகையேந்தி தொழுமேபராபரியை மனதிலெண்ணி தொய்யா
மலேபூமியிலேகுதிப்பீரானுல், முழுதுமேலேசுடனேபழக்கந்தன்னு
ல்முனையானகோபுரத்திலேறலாமே. 285

ஏறலாந்தேவதா கோபுரத்தில் யெழிலானகுடைதனையேகையி
லேந்தி, தேறலாஞ்சிகரபுரைமீதிருந்துதேற்றமுடன் குடைதனையே
விரித்துயேந்தி, மாறலாமேலிருத்து கீழ்குதிக்கில்மதிப்புடனேதீரனு
யிருந்துக்கொண்டு, கூறலாமிகபழக்கமதிகமாகிகுன்றின்மேலேறுதற்
குகுணமுண்டாமே. 286

குணமுண்டாமடமணமுண்டாங் குவலயத்தில் கோடிபேருளே
வந்துமனங்களிப்பார், பணமென்னகோடி தனம்படைத்தாலென்ன
பாருலகிலிவ்வித்தைப் பகரம்போமோசின்மதிலே யானுமிந்தவித்தை
தன்னைச்சீனபதிசென்று செய்துகீர்த்திபெற்றேன், வனமுடனேமா
னிடர்கள்பிழைக்க வென்றுவாகுடனே பாடிவைத்தேன் வளமை
பாரே. 287

பாடினதோர்வண்மையினுல் சித்தரெல்லாம்பாருலகிலென்மீது
கோபங்கொண்டார், தேடினதோநாதாக்க ளதீதவித்தைதெருவினி
லேவீணுகப்போச்சுதென்று, கூடியேயெல்லோருமொன்றாய்க்கூடி
கூறினார்சாபமது யென்னசொல்வேன், நாடியேகாலங்கிநாதர் பாதம்
நான்வணங்கிசாபமதை தவிர்த்திட்டேனே. 288

தவிர்த்திட்டேன் மறுபடியுஞ் சித்தர்கூடி தயவுடனே யெனைய
ழைத்து தர்க்கம்பேசி, மவிர்த்திட்டசாலமது மிஞ்சிப்போச்சு மகத்
தானவித்தையதுபாழாய்ப்போச்சு, உயிர்த்திவிட்டவித்தையதுசொ
ல்லப்பாவுத்தமனே செத்தவரைபிழைக்கும்வித்தை, நிவர்த்திகட்டு
மற்றதெல்லாஞ்செய்யவென்றுநீணிலத்தில்நாதாக்கள்தடுத்தட்டார்.

தடுத்திட்டமொழிப்படியேயாண்வணங்கி தட்டாமலவர்பாதம்
பணிந்துமேதான், அடுத்திட்டநிர்வாணிபாதஞ்சென்று அப்பனே
நெடுந்தவசுதானிருந்து கொடுத்திட்டவித்தையெல்லா குவலயத்தில்
கொட்டினேன்மானிடர்கள் பிழைக்கவென்று, எடுத்திட்டுக்குளிகை
தனைகொண்டுயானும் ஏகினேன்சீனபதியமர்ந்திட்டேன். 290

பதியானமேருகிரிதன்னிற்சென்றேன் படியானசிகரைவரையா
னுங்கண்டேன், நதியானதனையொன்று வங்கேகண்டேன்நாதாக்களி
ருப்பிடமுந்துறையுங்கண்டேன், பொதியானபுத்தொன்று வங்கேயு
ண்டுபுகழானசித்தொருவ ரதிலேகண்டேன். துதியானநமஸ்காரஞ்
செய்துகொண்டுதொழுதுமேயவர்பாதம்பணிந்திட்டேனே. 291

போகர் வெளியாங்கம்

வெளியானசாத்திரங்க ளனைத்துங்கண்டேன் வேதாந்தத்தாயி னதுவருளினாலே, ஒளியான காலாங்கிகடாட்சந்தன்னால் ஒளித்திருந்தசாத்திரங்கள் கைமறப்பை, தெளிவாகமானிடர்கள் பிழைக்கவென்று தேசதேசங்கள்முதல் குளிகைபூண்டு, நெளிவானமலைகுகைகள் வனாந்தரங்கள் நேர்ப்புடனேகுளிகையிட்டு பறந்தேன்தானே. 475

தானானசித்தர்முனி யிருப்பிடங்கள் தாக்கானசமாதிமுதலெல்லாம்பார்த்து, கோனானவரவர்கள்செய்தநூலை குகைதனிலே மறைத்துவைத்தகருவையெல்லாம், பானுகசித்தரிடம்வாதுபேசி பழிபோட்டுசாத்திரங்களனைத்தும்பெற்றேன், மானுகமறைத்துவைத்த நுட்பமெல்லா மதிப்புடனேயாருய்ந்து நூல்செய்தேனே. 476

செய்தேனேபெருநூ லேழாயிரந்தான்செப்பினேன்போகரிஷி சத்தகாண்டம், செய்தேனே நாதாக்க ளுளவைப்பார்த்து திறட்டினேன்குருநூலாய்க்காவியந்தான், செய்தேனே நூலினிடைவண்மை பார்த்து சீறியேசித்தரெல்லாம் சினந்தாரென்னைசெய்தேனேலோகமெல்லாஞ்சித்தாச்சென்று சித்தரெல்லாமென்னைச்சபிக்கவந்திட்டாரே

வந்திட்டார் கோடானகோடிபேர்கள் வரைகோடி துரைகோடி தொந்தங்கோடி, நொந்திட்டுசித்தர்களைசெய்தேனென்று நொடிக்குள்ளேயென்னைக்கொல்லவந்தாரையா, முந்திட்டுயான்பயந்து காலாங்கிதன்னைமுறையமிட ரெனதையர் கிருபையாலே, தந்திட்ட சாபமதை நிவர்த்திசெய்து தாரணியில்பிழையென்று யென்னைவிட்டாரே.

போகர்கமலமுனியைக்கண்டது

விட்டவுடன்யானுமல்லோ சீனதேசம் விடுப்பட்டுபோயிருந்து கமலர்தன்னைச், சட்டமுடன்சமாதியிலேயிருந்தாரங்கேசார்புடனே யவர்பாதம்தொழுதிட்டேதான், இட்டமுடன்யானுமல்லோசீனதேசம்பின்பமுடன் கானைவென்றுகுளிகைபூண்டு, சட்டமுடன்யான்வந்தேனென்றுசொல்லிக் கமலமுனிதன்பாதந் தொழுதிட்டேனே.

தொழுதிட்டயெந்தனுக்குமுனிதான்சொன்னார் தொல்லுலகில் நீர்கற்றவித்தைதன்னை, பழுத்திட்டமில்லாமல் சீனந்தன்னில் பட்சமுடன்மாணுக்கள் பிழைக்கவென்று, முழுதிட்டந் தன்னுடனேமுனிதான்சொல்ல முயற்சியுடன் கற்றவித்தைப்பழுதில்லாமல்,வழுதிட்டமுடன்ரூனு மறைப்பையெல்லா மானிடத்தில் கொட்டிவிட்டேன் வண்மைபாரே. 480

வெள்வங்கம்வெட்டை

வண்மையாமின்னமொரு மாற்கங்கேளு வளமானவங்கமொரு பலமேதூக்கு, திண்மையாந்தாளகமும் பாஷாணந்தான் திறமான சவுக்காரஞ் சாரந்தானும், உண்மையாம்பூநீறு கிளிஞ்சிற்சுண்ணம்வுத் தமனேவகைக்குவொரு பலமுமதுதூக்கு, நன்மையாங்கல்வத்திலாட் டியேதான் நலம்பெறவே கலசமென்ற குடுவைவாங்கே. 481

வாங்கியேமுன்னுரைத்த சரக்கையெல்லா மார்க்கமுடன்கலசத் திலுள்ளேபோட்டு, தேங்கியேதிரியாதே மைந்தாகேளு தெளிவான வங்கமதைசரக்கில்போட்டு, ஓங்கியேசில்லிட்டுச்சீலேசெய்து வுத்தம கோழியென்ற புடத்தைப்போடு, தூங்கியேதிரியாதே மைந்தாபாரு துடியானகளங்குபோ லிருக்கும்பாரே. 482

களங்கான வங்கமது வொன்றேயாகும் கடிதானவெள்ளியது வொன்றேயாகும் குளங்கானரூதமது ரண்டேயாகும் கொடிதான சாரமது காலேயாகும், பளங்கானமதிசேயநீர்தன்னாலாட்டி பாங்கு பொரவில்லையது லேசாய்த்தட்டி, முளங்கானரவிதனிலே காயப்போடு முத்தமனேவோட்டிலிட்டுச் சீலேசெய்யே. 483

செய்யவேகாடையென்ற புடத்தைப்போடு சேரவேவோடது தான்குளிர்ந்தபின்பு, வையவேதானெடுத்துப் பார்க்கும்போது பாங் கானபற்பமது சொல்லப்போமோ, வெய்யவேரவிதனிலே பத்துக் கொன்று விதமுடன்றூனுருக்கிக் கொடுக்கும்போது, துய்யவே துய் யானுக்கிகொப்பதாகும் துரைமுசர் மெச்சுகின்ற மதியுமாமே.

மதியானவெள்ளிதனில் பத்துக்கொன்று மாற்கமுடன்றூன்சே ர்த்துவங்கத்தூது, நிதியானவெள்ளியது துய்யரூபாய் நிகரில்லைமாற் றில்லைகணக்குமில்லை, பதியானபதிதனிலே நின்றுகொண்டு பட்சமு டன்திரிபுரையைப் பணிந்துபோற்றி, துதியானவாலேதனை வணங்கிநி த்தம் சூட்சமுடனிறங்குநிலே கண்டிடாயே. 485

கண்டபின்புசமாதிக்கி நிலையைப்பாரு காலாங்கி வையர்தம்மை க்கருத்திலுன்னி, அண்டரண்டம்தான்புகழு மெந்தனேய ரருளிருந் தால் கதிபெறலாமன்பர்கேளு, தொண்டுசெய்துசித்தர்களே வணங் கிநித்தம் தொடர்ந்துமே யவரிடத்தில் பத்திவைத்தால், விண்டுபுகழ் மாலயனர்கிருபையாலே விட்டகுறைவுந்தனுக்கு வாய்க்குந்தானே.

துருகபற்பம்.

வாய்க்கவேவின்னமொரு கருமானங்கேள் வளமானதுருகவொ ருசட்டிவாங்கி காய்க்கவேபொன்வேண்டுமானலைப்பாகணக்காகவெடி

யுப்பு சரிநேராக, மாய்க்கவே பூநீறுசரியோடொக்க மாற்கமுடன்
தான்கூட்டியரைப்பாய்நீதான், மீதாய்க்கவேவறுவகை செயநீர்தன்
னால் துப்புரவாய்தானரைப்பாய் சாமம்நாலே. 487

நாலானசாமமது தானரைத்து நலமாகப்பில்லைதட்டிக் காயவை
த்து மாலானபுடம்போடப் பற்பமாகும்மகத்தான துருசுனிடபச்சை
நீங்கி, சேலானவெளுப்புநிற மதிகங்காட்டும் செழிப்பானபற்பமது
சிவந்துபோனால், காவானமின்னமொரு புடந்தான்போட்டுக் களிப்
புடனேதானரைப்பாய் செயநீராலே. 488

செயநீரைவிட்டுமல்லோ யரைப்பாய்சாமஞ் சிறப்புடனேபில்லை
தட்டிக் காயவைத்து, நயமுடனே ஒட்டிவிட்டுசீலைசெய்து நன்றாக
ரவிதனிலே காயவைத்து, பயமுடனேதீமூ-டி புடத்தைப்போடு
பக்குவமாயாறினபின் னெடுத்துப்பாரு, மயமுடயபற்பமதுயென்ன
சொல்வேன் மாணுக்கன்பிழைக்கவென்று மதிப்பிட்டேனே. 489

மதிக்கவேபற்பமதுநேரேசூத மாட்டடாகுழிக்கல்லில் செயநீ
ராலே, கதிக்கவேதானரைப்பாய் நாலுசாமம் தண்மைபெறமூசையி
ட்டுப்புடத்தைப்போடு, விதிக்கவேபுடமாறியெடுத்துப்பாரு வீரியமா
ம்பற்பமதுகாரமெத்த, துதிப்புடனேவெள்ளிதனில் பத்துக்கொன்
றுதுறைபார்த்துகொடுத்துப்பார் மாற்றெட்டாமே. 490

எட்டானமாற்றதுவுமென்னசொல்வேன் யெருவான பசுமைய
துமிகவேகாட்டும், நாட்டானசூதமது லெகுவிலோடும் கசடகற்றிமா
ற்றதுவுங்காணலாகும், மாட்டானபொன்னதுவில் நாலுக்கொன்று
மாட்டடாதங்கமது ஒன்றுகூட்டு, திட்டானவாரடித்துப்புடத்தைப்
போடு திகழானபசுந்தங்கஞ் சொல்லப்போமே. 491

சொல்லவென்றால் நாவில்லைபாவமில்லை சூட்சாதிசூட்சமெல்லா
ஞ்சூதத்தாட்டு, மெல்லவேசீவனத்தை செய்துகொண்டு மேதினியில்
யோகத்துக்குருகிபாரு, வல்லவேஞானத்தைமிகவேவுன்னிவழியான
முனைமூலத்துள்ளேபுக்கி, கொல்லவே ஓங்காரமுள்ளடக்கிகுறிப்புட
னேசமாதிநிலையறிந்துபோற்றே. 492

போற்றவேசிகாரத்தின்மீதிருந்து பொலிவானமகாரத்தை யுன்
னிப்பாரு, ஆற்றவேவகாரமா மனாதிபீடம் அப்பனேநகாரமாம்பிரம
பீடம், தூற்றவேயகாரமாம் லட்சுமிபீடம்தலையாதகர்மேந்திரியமை
ந்துக்குள்ளே, மாற்றவேமனோலயத்தை மருவிப்பாரு மகத்தானநா
தாக்கலாடுங்கூத்தே, 493

கூத்தான்பஞ்கர்த்தாளாடுங்கூத்து குடியானவீட்டுக் குளைந்து போராம், காத்தானவாசலது வொன்பதாகும் கருவிகரணாதி முதல் பொந்துக்குள்ளே, மாத்தானும்வந்தவுடன்சாமிபூனும் மகத்தான திரேகமதுபொய்யாம்பாரு, ஆத்தாளைவணங்கிமிகவனுசத்து அப்பனே சாயுச்சியபதத்தைதேடே. 494

வெள்ளிவித்தை.

தேடையிலேயின்னமொருமார்க்கங்கேளு வெளிவாகவெள்ளி வித்தையார்தான்காண்பார், வாடையுள்ளபாஷாணம்பலமென்றுகும் வகுப்பானகோழியென்ற மூலிதானும், மேடையிலே தான்விளையும் மூலியப்பா மேன்மையுடன்கொண்டுவந்துசாற்றைவாங்கி, ஆடையிலேதான்பிழிந்துமைந்தாக்கேளு அப்பனேநாற்சாமம்சுருக்குதாக்கே.

தாக்கவேபாஷாணம்புகையடங்கி சார்புடனேகட்டியது பொருமிக்கொல்லும், நோக்கவேபூநீறுவுப்பெடுத்து னுணுக்கமுடன் ருன் சேர்த்துகவசம்செய்து, போக்கவேரவிதனிலேகாயவைத்து பொங்கமுடன்சுண்ணும்புசிலைசெய்து, பார்க்கடவேசட்டிதனில் மணல்தான் கொட்டி. பாங்காகநடுமையம்வைத்திடாயே. 496

வைத்துமேசட்டிகொண்டுமேலேமூடிவாகுடனே மண்சீலைவனுவாய்ச்செய்து, பொய்த்துமேபோகாமல்வடுப்பிலேற்றி புகழாகத்தானெரிப்பாய்நாலுசாமம் கைத்துமேயாறினபின்னெடுத்துப்பாரு கனமானபாஷாணமுருக்கிக்கட்டும் மெய்த்துமேகட்டினதோர் பாஷாணத்தில் மேன்மையுடன்வங்கமதுகாலாய்க்கூட்டே. 497

கூட்டியேவங்கதோர் நிடைதானகம் குமுறவேவறுவகைசெயநீர்தன்னல், தாட்டிகமாய்தானரைப்பாய்நாலுசாமம் சார்பாகபில்லை தட்டிக்காயவைத்து, நீட்டமுடன்வோட்டிலிட்டுச்சீலைசெய்து நேர் பாகக்காடையென்றபுடத்தைப்போடு, வாட்டமுடன்கோழியென்ற புடந்தானகும்மைந்தனே தீயாறியெடுத்துப்பாரே. 498

எடுக்கவேபற்பமதுயென்னசொல்வேன்என்மைந்தாநாதாக்கள் செய்யும்வேதைகொடுக்கவேசெம்பதனில் கொடுத்துப்பாரு, சொக்கமுள்ளவெள்ளியது கூறப்போமோ, மடுக்கவேபத்துக்கு வொன்று வெள்ளிமாற்கமுடன்று னுருக்கிகொடுத்துப்பாரு, விடுக்கவேவுப்புக் குகாய்ப்புண்டாகும் விபரமுடன்செய்யும்வழியறிந்துபாரே. 499

பார்க்கவேநாதாக்கள்கைமறைப்பு கருவாளிகண்டறிவான் மற்றோர்காணர், ஏர்க்கவேயவர்களிடம்தொண்டுசெய்து என்மகனேய

வர்கள்மனங்கனியவேண்டும், பூர்க்கவேமனது வந்தவுந்தனுக்கு புக ழ்ச்சியுடன்வேதைமுகம் யாவுஞ்சொல்வார், தீர்க்கவே சாத்திரங்கள் முரைப்பார் தீர்க்கமுடனறிபவனேசித்தனுமே. 500

சாரக்கட்டு.

சித்தனுமின்னமொருமார்க்கங்கேளு சிவப்பானசாரமது கட்டு சொல்வேன, நித்தமுடகாரமதுவொன்றேயாகும் நிகரானசீனமது வொன்றேகும், துத்தமுடன்பூநீறுவொன்றேயாகும் துடியானசிப்பி யென்ற தண்ணந்தானும், முத்தமுடன் சிப்பியுடசெயநீர் தன்னுல் மூன்றுநாளரைத்து பாவகமேசெய்யே. 501

செய்யவேமெழுக்காலேகுகையுண்டாக்கி செழிப்புடனேசாரம துக்கங்கிபூட்டி, நையவேசுண்ணும்புசீலேசெய்து நலம்பெறவேரவித னிலேகாயவைத்து, முயயவேமுழப்புடந்தான் பூப்புடந்தான் முனே யானமணல்தனிலேநடுவேவைத்து, பையவேமணலாலே மேலேமூடி பாங்குபெறதீமூட்டி போட்டிடாயே. 502

போடவேதீயாறியெடுத்துப்பாருபொங்கமுடன்சாரமது கட்டி ப்போடும், நீடவேமுப்புடமிப்படியேதிற நிலையானசாரமதுதந்தம் போலாம், நீடவேசாரணேதான் சொல்லக்கேளாய் கொடிதான நாயு ருவிசாரம்பல்தன்னில், மூடவேசாரமதைவுள்ளேவைத்து முழுகவே சாம்பலையும் மேலேபோடே. 503

போடவேசட்டிதனில்பொதிந்துமூடி பொங்காமல்சீலேயதுவலு வாய்செய்து, சூடவேதணல்மூ - டிமூன்றுநாளாய் சுகம்பெறவேதா னெரிப்பாய்மைந்தாகேளு, தாடவேயாறினபின்னெடுத்துபாரு துடி யானசாரமதுக்கிணேவேறுண்டோ, ஆடவேசாரமதையென்னசொல் வேன் அப்பனேகருவாளிசெல்வான்பாரே. 504

பாரேதான்சாரமது கட்டுமானுல்படுமுன்னே சரக்கெல்லாங் கட்டிப்போடும், நேரேதான்நாகமதை நொடியிற்கொல்லும் நேரான செம்பதுவுமூறல்போகும், சீரேதான்சாரமதுகட்டுமானுல்சிறப்பான வீடுகளுங்கட்டினுற்போல், கூரேதான்சரக்குதான்காலனுகும்கொடி தானசாரத்தின் நேர்மைபாரே. 505

நேர்மையாஞ்சாரமதுகட்டிற்ருனுல் நெடுந்தூரம் வேதைமுகம் காணலாகும், கூர்மையாம்சூதத்தைக்கொல்லுங்காலன் கொடிதான கன்னமதைசெப்பவென்ருல், வாரமையார் வுப்புக்குச்சத்துருமேயா கும் வாகானசெந்தூரகோடிவேதை, மேர்மையாஞ்சித்தர்முனிசெய் வாரப்பா மேதினியில்மற்றவரால் செய்யப்போமோ. 506

போகுமேசார மென்றசெந்தூரத்தை பொல்லாதவயிற்றுவலி குன்மத்தொக்கும், ஏகுமேவாயுவென்றதெண்பதுக்கு மெழிலான சோகைகாமாலையேற்கும், பாகுமேசூதகத்தில் வாய்வுள்ளோர்க்கும் பாங்கானமகோதரமாம்பீலியோர்கும், வாகுடனேதேன்திலேகொடுத்தாயானல் வளமானதேகமதுகர்ப்பமாமே. 507

காந்தகர்பம்.

கற்பமாமின்னமொரு கருமானங்கேள் காசினியோர்பிழைக்கவென்றுலகுவாய்ச்சொல்வோம், அற்பமென்றுநினையாதே வன்பாகேளு அருங்காந்தமூசியென்றதேழதாகும், துற்பாவாய்பலமதுதான்கொண்டுவந்து துடியானவறவகைசெயநீர்தன்னல், சிற்பரம்போல்மெழுகாக்கிமூசையிட்டு சில்லிட்டுச்சீலையதுவலுவாய்ச்செய்யே.

வலுவாகச்செய்து மல்லோரவியில்வைத்து வாகுடனேதீமூட்டிப்புடத்தைப்போடு, சுலுவானபுடமதுதான்போட்டாயானல் சுறுக்கென்றகாந்தமதுயீயமாகும், பலுவானயீயமது சொல்லப்போமோ பதங்தெருந்துயெடுத்தவனேவாதியாவான், மெழுகானகாந்தமதுயீயமானல் மேதினியில்வெகுகோடி வேதையாமே. 509

வேதையாங்காந்தமென்ற யீயந்தானும் விரைவானகெந்திபிடசத்துதானும், பாதையாம்நாகமென்றசத்துதானும் பாங்கானவயத்தினிடசத்துதானும், மேதையாம்பூநாகச்சத்துதானு மிக்கானவப்பிரேகசத்துதானும், தோகையுடன்றனெடுத்து வொன்றாய்க்கூட்டி தொந்தமுடன் றனெடையாய்த்தங்கஞ்சேரே. 510

தங்கமுடனிடையாகவொன்றாய்க்கூட்டித் தாழ்மையுடன்றனைப்பாய்கையான்சாற்றால், துங்கமுடன் நாற்சாமமரைத்துப்பில்லைதுப்புறவாய்பில்லைதட்டிகாயவைத்து, பக்கங்கள்வாறுமல்ஓட்டிலிட்டுப் பாங்குபெறசீலையது வலுவாய்ச்செய்து, அங்கமுடன்கோழியென்றபுடத்தைப்போடு அப்பனெசெந்தூரமாகுந்தானே. 511

தானகயிப்படியேபத்துபுடம்போடு தாக்கானமூலிகையாலரைத்துப்போடு வேணுகசெந்தூரம்வீரமெத்த வேதைக்குவெகுதூரமெட்டியோடும், பானுகசெந்தூரம்பதனம்பண்ணு பத்துக்குவொன்று குருவெள்ளிசெம்பில், மானுகேள்கொடுத்திடவே வேதிக்கும்பார் மகத்தானமருந்திணிட போக்குத்தானே. 512

போக்கானசெந்தூரங்குன்றியுண்ணு பொங்கமுடன்மண்டலந் தான்கொண்டாயானல், தூக்கானதேகமதுசுற்றாணுகும் துலையாது

வயதுமிகவதிதங்காணும், நோக்கானநரைதிரையு மற்றப்போகும் நோய்தானுஞ்சடந்தனிலேமேவலாகா, பாங்கானகண்ணுரண்டுமொளியேவீசும் பார்வைக்குவருந்துதியுங்காணலாமே. 513

காணலாம்நட்சத்திரம் பகற்காலத்தில் கருவிழியுமொருக்காலும்திரைதானில்லை, பூணலாம்தேகத்தைவுறுதிபண்ணுபோக்கான சட்டையதுதள்ளிப்பாரு, வேணலாம்வெகுகாலமிருக்கலாகும் வேண்டியேதவநிலைக்குசமாதிதேட, நீணலாம்வாசியதுமேல்நோக்காது நீணிலத்தில் நீயுமொருசித்தனுமே. 514

போகர்கெடை கட்டிவித்தை.

சித்தனும்கெடையாட்டஞ்சொல்வேன்கேளுசெழிப்பானதுலாக்கோலாமூங்கலொன்று,முத்தலாய்நூறடியாம் பருவமீட்டமுனையானகொய்புக்குகயிர்தான்நாலு, சுத்தமாம்வெட்டாரவெளியில்நின்று சுகமுடனேகால்நாட்டிபதுங்குமாட்டி, துத்தமுடன்முனைகிடையில் காந்தம்வைத்து துறையானவிரும்பினிடசட்டைபூணே. 515

பூணவேகைதனிலேமாத்திரைக்கோலும்புகழான நெற்றிதனிலேங்கோலமையும், நாணவேமானிடர்கள்நடுங்கவென்று நாதாக்கள் மெச்சிடவேகச்சைபூண்டு, காணவேதலைதனில்கலசப்பானைகடினமுடன்பத்தொன்றுவொன்றேடொன்று, வணவேபானைதனில் காந்தம்பூசி வுத்தமனேகிடைதனிமேலயேறலாமே. 516

ஏறலாமுச்சிவரைக்கிடைமேல்நின்று ஏற்றமுடன்துத்தாரிவாயிலேந்தி, கூறலாமேர்டியென்றவித்தைதன்னை குவலயத்தில்மெச்சிடவேபோகர்தாமும், தேறவேமேல்நின்றுகாணந்தன்னில் திறமுடனேவாசியைத்தான்கீழ்நோக்காமல், மாரவேபிரணவத்தைமாறிமார்க்கமுடன்நின்றுவிளையாடினாரே. 517

ஆடினார்சீனமென்றதேசந்தன்னில் அன்புடனேமாணுக்கள்பிழைக்கவென்று, பாடினார்சித்தர்முனிசொன்னநூலைப் பரிவாகத்தானெடுத்துபாருளோர்க்கு, மூடினதோர்வுளவெல்லாமிகவேபார்த்து முயற்சியுடன்வெளியாங்கமாகச்செய்தேன், கூடினதோர் கருமானமெல்லாந்தேர்ந்து குறிகண்டுநிலைகண்டார்சீனத்தாரே. 518

சீனபதிமானிடர்கள்செய்யுமார்க்கம் சித்தர்முனிரிஷிதேவர்முறைகளாகும், மானபதிமாண்பர் கருவாளியல்லோமண்டலத்திலாருமில்லைபேருமில்லை, தானமுடன்கொச்சியென்றமார்க்கத்தாரும்சட்டமுடன்செய்வார்களிவர்போலா, மோவானமுடன் தேவதாரிஷிக்கோப்பாவார் மண்டலத்தில்சீனபதிமாந்தர்தாமே. 519

தாமேதான் சத்தியங்களுண்டு தரணிதனில் பொய்சொல்வார் மாண்பர்தாமும், வேதமேதான்நீதிமனுமுறைகளுண்டு வெகுகோடி வித்தைகளுஞ் செய்வாரப்பா, போமேதான் பொய்யொன்றுஞ்சொல்லமாட்டார் பொன்னுலகுக்கொப்பான மாந்தரப்பா, நாமேதான் கண்டபடிசொன்னேனப்பா நாட்டினிலேசீனத்துக் கிணையாகாரே.

ஆகாதுகாலங்கிநாதர்தாமும் அவருடையசீர்பாத கிருபையாலே, போகாததேசமெல்லாங் குளிகைபூண்டு போனேனேசேரசோழ பாண்டிநாடு, சாகாதசித்தர்முனி யென்றுசொல்லி சமாதியிலேயிருப்பேனென்றமர்ந்தார்தம்மை, வேகாதவெயில்தனிலே தவசிருந்தவேணசித்துப் பொய்ஞ்ஞானி கண்டிட்டேனே. 521

கண்டிட்டேனவர்களிடம் வாதுபேசிக் கருவானமறைப்புமுதல் திறப்புங்கேட்டேன், விண்டிட்டசாத்திரங்கள் கற்றோர்போல வீண்வார்த்தை பேசியல்லோ பொய்மைச்சொல்வார், துண்டிட்டுவவர்களிடம்துஞ்சிப்பேசி தூரானமாராட்டப் பேச்சரிந்து, பண்டிட்டசீனபதிவந்துசேர்ந்து பலபலவாம்வித்தைகளைக் கற்பித்தேனே, 522

கற்பித்தவித்தைகளும் கணக்கேயில்லை கால்மாடுதலைமாடு பிரட்டார்மாண்பர், துற்புத்திசற்றேனுமில்லாபாலர் துறைமுகமும் ஒருமுகங்கண்டதில்லை, விற்புத்தியானதொரு மாண்பரப்பா விண்ணுலகில்சீனபதிக் கிளையாமோதான், சற்புத்தியுடையதொருசித்தர்க்கொப்பாய சாற்றலாஞ்சீனபதி தேசத்தாரே. 523

தேசமென்றால்தேசமது சீனமாமோ செகத்திலேகண்டவர்கள் யாருமில்லை, பாசமென்றால்பிரமத்தின் பாசமாகும் பாருலகில்சதாநித்தம தொழுவார்மாந்தர், நேசமென்றால்போகரிஷி தன்னைப்போற்றி நெடுங்காலஞ்சமாதியிலே யிருந்தார்கோடி, வாசமுடன்சீனபதி யாவுங்கண்டேன் வளமாகமாந்தருட வுண்மையாரே. 524

நாகவெள்ளி

வண்மையாமின்னமொரு கருமானங்கேள் வுத்தமனேமாணாக்கள் பிழைக்கவென்று, தண்மையாம்நாகமது சேர்தானென்று தாக்கானபாஷாணம் சேர்தானென்று, கண்மையாஞ்சுண்ணம்புஞ் சேர்தான்பாதி கருவானமதியுப்பு சேர்தான்காலாம், நன்மையாமித்தனையுமொன்றாய்ச்சேர்த்து நலம்பெறவே சிப்பியென்ற சாரத்தாட்டே.

சாரமென்றசெயநீரி லறைத்துமைந்தா 'சாங்கமுடன்நாகத்துக் கங்கிபூட்டி, காரமென்றசுண்ணம்புசீலைசெய்து கருத்துடனேரவிதனிலே காயவைத்து, ஈரமென்றசீலையது காய்ந்தபின்பு யென்மகனே

கோழியென்ற புடத்தைப்போடு, பாரமென்றகண்ணதுவும் நீங்கியே தான் பளபளத்தவெள்ளியது வாகுந்தானே. 526

தானனவெள்ளியது சிவத்துக்கொப்பாம் சங்கரனார்பூசைக்கு யுகந்தவெள்ளி, கோனனவெள்ளிதனை கடையில்மாற்றி கொப்பன வேபூசையர்ச்சனைகள்செய்வாய், பானனபரங்களுக்கு வன்னமீவாய் பட்சமுடன்கோயில் குளம்கட்டவேண்டும், வேனனவந்தணராம் குருக்கள்மாற்கு வேணவுபசாரமது செய்யநன்றே. 527

செய்யவேதிரிவாமி பூசைசெல்ண்டும் சிறப்பானமனோன்மணியை நணுகவேண்டும், பையவேசத்தியுடபூசைவேண்டும் பாருலகில்தேவ தைகள் வணக்கம்வேண்டும், முய்யம்வேசிதாநக்கம் போற்றிசெய்து மோட்சத்திற்கேகும்வழி தேடவேண்டும், மையவேகாலாங்கிதனை நினைந்து மண்டலத்தில் வாழ்பவனே யோகவானே. 528

போகர்சொர்னவயிரவபூசை

யோகமென்றால்யோகமது சொல்லப்போமோ யொளிவானவயி ரவன்றன் பூசைசொல்வேன், போகனென்னும்வடியேனுந் தாள்வண ங்கி பொங்கமுடன் காலாங்கிநாதர்பாதம், வேகமுடன்றாள்பணிந்து வணங்கிநின்று வேதாந்தத்தாயினது வருளும்பெற்று, சாலமுடன் நவகோணவாசலிட்டு சாந்தமுடன்கலசமது வைத்திடாயே. 529

வைத்திடவேகலசமது நூலேசுற்றி யாருடனேதேங்காயைமே லேவைத்து, கைத்திடவேமாயிலையைக்கவசம்பூண்டு கலசத்தின்கீழே நவதானியங்கள், மெய்த்திடவேதான்பரப்பி கலசம்வைத்து மேன் மையுடன்கலசமது யெதிர்நேராக, பைத்திடவேமஞ்சளென்ற பிள் ளையாரைப் பக்குவமாய் எதிர்வாசல்வைக்கநன்றே. 530

நன்றானரீங்காரமோங்காரத்தை நலமுடனேவஷ்டதிசை வாசல் போடு, குன்றானவயிரவனைமுன்னேவைத்து கூறுவாய்யங்சிங்வங்கே ன்றேயோது, பன்றானசதுர்வாசல்தூபதீபம் பாருடனேபாணக்கம் பகுந்தவன்னம், வன்றானவுருதானும் லட்சமோது வயிரவனார்பூசை யது வகுத்தவாறே. 531

வாரானவாதமது முடிந்தாறானல் வளமுடனேவயிரவன் பூசை வேண்டும், சிறானதங்கமதுபலிக்கும்பாரு செகத்திலே சித்தர்களுஞ் செய்வாரப்பா, கூறானபுத்தியுடன் குருபதத்தைக் கொப்பனவே தான்வணங்கி நிற்கவேண்டும், காறானகாலாங்கிநாதர்பாதம் கடாட் சித்தேதொழுகவென்று பாடினேனே. 532

முத்துவித்தை

பாடினேன்முத்துயென்ற வைப்புசொல்வேன் பாங்குபெற மாணுக்கள்பிழைக்கவென்று, தேடியேமுத்தினிடசிப்பிஒளோட்டை தெளிவானவெண்மைநிறம்போன்றதாக, கூடியேவொருசேருதானெடுத்துக்குடிலமுடன்ருனிடித்துப்பிழிந்துகொண்டு, ஆடியேநவநீதம் வெண்ணெபோல அப்பனேதானெடுத்து வளமைசெய்யே. 533

வளமையென்ன சொல்லவென்ருல் பயணங்கேளு வாகானநீதமுடன்குடோரிகாரம், பளமையாம் கட்டினதோர் காரந்தானும்படிகமாம்சீனமென்றபதியினுப்பு, மளமையாமிதுவெல்லாஞ் சரியாய்க்கூட்டி மார்க்கமுடன்மூசையிட்டுச்சீலைசெய்து, தளமையா யுலையிலிட்டுவுருக்கிப்பாரு தளுக்கானமுத்துபோல் வெளுக்கும்பாறே.

வெளுப்பானமுத்துதனை யுடைத்துப்பாரு வெகுளாமல் சிறுமணியாங்கருவுகட்டி, பளுக்கானமூசையிட்டு வுருக்கித்தீருபாலகனேகருக்களிலேதுவாரமிட்டு, சுளுக்கானகருக்களிலே வார்ப்பாயானல் சூட்சமுடன் முத்ததுவும்பாய்ந்துநிற்கும், தளுக்கானமுத்ததனையெடுத்துக்கொண்டு தண்மைபெறராஜரிடம் சென்றுபாரே. 535

சென்றுமேயவர்களிடஞ் சிறக்கவேதான் சீரான முத்ததனைக்கணிதமிட்டு, குன்றுபோல்திரவியங்கள் மிகவும்பெற்றுகோடானகோடிமரியாதைபூண்டு, நின்றுமேயவர்களிடம் விடைகள்பெற்று நீணிலத்தில்நீயுமொரு வரசனுவாய், நன்றுமேகாலாங்கி நாதர்பாதம் நலமுடனே யான்வணங்கிபாடினேனே. 536

போகர்கெம்புவுருக்கு

பாடியேதளமென்னகெம்புராசி பழுதுள்ளகாய்ச்சக்கள்தன்னிலொப்பாய், ஆடியேசேர்முன்று வாங்கிமைந்தா அழகான குருந்தக்கல்நாலிலொன்று, தேடியேகட்டினதோர் காரமொன்று தெளிவான பூநீறுநாலிலொன்று, கூடியேவறுவகை செயநீர்தன்னல் குணமுடனேதானரைப்பாய் சாமம்நாலே. 537

நலமானசாமமதுவரைத்துமைந்தா நலமுடனேமூசையிட்டுசீலைசெய்து, காலானரவிதனிலேகாயவைத்துக் களிப்புடனே வுலையிலிட்டுவூதித்தீரு, சேவானசரக்கதுவுமொன்ருய்ச்சேர்த்துசெழிப்புடனே தானுருகி சிவப்புமெத்த, பாலானமுகம்விட்டு கண்விட்டாடும்பாலகனேகருக்கட்டி வார்த்திடாயே. 538

வார்க்கவென்ருல் சிறுகருவாம்பொடியாய்செய்து வளமாகத்தானெடுத்துவார்ப்பாயானல், தீர்க்கமுடன்மணிபோல யிறுகிக்கட்டும்

திறமானகெம்பினிடவலுவுகாணும், பார்க்கவேவேண்டுமென்று லதீ தமெத்தப்பாரினிலே சித்தர்செய்யும்வேதைமார்க்கம், சேர்க்கவேபடி கமென்றசானைதன்னில் சிறப்புடனேதான்கொடுக்கவொளிகாணுமே

ஒளிவானகெம்பினுடமகிமைமெத்த ஓகோகோ வுலகுதன்னில் செய்வாருண்டோ, தெளிவானகெம்பெடுத்து ராஜர்மார்க்கம்சென்று வெகுமதிப்புடனே லாபங்காண்பீர், நெளிவானவித்தையிது யாருஞ் சொல்லார் நீனிலத்தில்மாணுக்கன் பிழைக்கவென்று, கனிவுடனே காலாங்கிதன்னைப்போற்றி கருவாகப்பாடிவிட்டேன் போகர்தானே.

போகர் பச்சைக்கர்ப்பூரவைப்பு.

தானானசூடனது பலமேவொன்று தாக்கானசீனமது பலமோ கால்தான், வேனானசாம்பிராணி பலமோகால்தான் மூக்கானமதியுப் புபலமோகால்தான், பானானபூநீறுபலமோகால்தான் பாங்கான தா ழைபுப்புபலமோகால்தான், கோனானகோரைபிட கிழங்குதானுங்கு ணமானவாடையென்ற காறமாமே. 541

காரமாங்கஸ்தூரிமஞ்சள்தானும் கருவான ஏலக்காய் தன்னோ டொக்க, வீரமாமிலாக்காயின்சந்தனந்தான் விரைவான கிளியூறல்ப ட்டைதானும், கோரமாம்பச்சிலைக்கிச்சிலிதான்கூட்டிகோமகனைகவ னமுடன்விருகன்சேரு, தீரமாமாவினிடநெய்யில்தானும்தீர்க்கமுட ன்றனரைப்பாய்சாமமட்டே. 542

எட்டானசாமமதுவரைத்தபோது ,யெழிலான மெழுகதுபோ லாகும்பாரு, வட்டானபீங்கானுள்ளேபோட்டு வளமுடனே மேற்பீ ங்கான்புனுகுபூசி, திட்டானசட்டிதனில் மணல்தான்கொட்டி திறமு டனேபூங்கானும் நடுவேவைத்து, மட்டானமணல்தனை மேலேகொட் டிமாற்கமுடன்றனெறிப்பாய் சாமம்வொன்றே. 543

ஒன்றானசாமமதுயெரிந்தபோது வுத்தமனே மேற்பகங்க கின் றமேதான், குன்றானபீங்கான்மேல் தேங்காய்ப்போல பிறைபோல வொளிவதுவாயேறிநிற்கும், தன்றானதகடதுதான் வெளியிற்காட்டு ம் தயவானபூரமதுபச்சைப்பூரம், பன்றானராசர்களுக் குகந்தபூரம் பாரினிலே சித்தர்செய்யும்பூரமாமே 544

கஸ்தூரிவைப்பு.

பூரமாமின்னமொருவைப்புகேளு போக்கானரத்தமென்றயாள ந்தானும், வீரமாம்வேங்கைமரப்பிசுனுங்கூட்டிவிகற்பமுடன்பழந்தி ன்னும்வெளவாளலெச்சம், காசமாங்கலைமானின்ரத்தத்தைக்கூட்டிகசகா

ம்ல்தாழைமலர் கவசஞ்செய்து, தீரமாஞ்சட்டிக்குள் பொதிந்துமூடி திட்டமுடன் பூமிதனில் புதைத்திடாயே. 545

புதைத்துமேமண்டலஞ்சென் றெடுத்துப்பாரு புகழானகஸ்தூரி யென்னசொல்வேன், சிதைத்துமேஜலந்தனிலே போட்டுபார்த்தால் சிறப்பானரத்தமது போலேயோடும், கதைத்துடனேசன்னிக்குகால ஞருங் கடிதானவைப்புமல்லோ சீனவைப்பு, விதைத்துடனேயின்ன மொருமார்க்கஞ்சொல்வோம் விரைவுடனே கேட்பவர்க்குயினஞ் சொல்வேனே. 546

சொல்லுதற்குநாவுமில்லை யாவுமில்லை துரைகோடிமுறைகோடி தொந்தங்கோடி, வெள்ளுதற்குகாண்டாவின்மிருகமப்பா வெழிலான வுதிரமதுபடிதானெட்டு, கொல்லுதற்குகருங்காலிப் பட்டைத்தூ ளுங்குணமானகாசியென்ற கட்டிதானும், புல்லுதற்குகிராம்புடனே யேலந்தானும் புகழானகெவுளாவும் சரியாய்க்கூட்டே. 547

கூட்டவேநாற்சாம மரைத்துமேதான் குணமானசாடியென்ற பாண்டத்துள்ளே, மாட்டவேமுதற்றிரமாம் பன்னீர்தானும் மயங் காமல் நிறைபவிட்டு தாளிக்கேற்றி, தீட்டவேசீலைபது மேலேசெய்து திட்டமுடன்யெரித்திடுவாய் மூன்றுநாளும், நீட்டமுடன்சரக்கெல் லாமொன்றாய்ச்சேர்த்து நேர்ப்பாகவுதிரமுடன் கட்டிப்போமே.

போமேதான்பாண்டமது திறந்துபார்க்கப் பொங்கமுடன்சீன மது வைப்புமார்க்கம், ஆமேதான்சரக்கினிடவேகமெத்த மப்பனே நாசிதனில் முகரும்போது, வேமேதான்வுதிரமது கலக்கங்காணும் விரைவானகூடதுதான் கபாலத்தோடும், போமேதான் கஸ்தூரி யெ ன்னசொல்வேன் புகல்வரோசித்தர்முனி சொல்லார்தாமே. 549

தாமேதான்போகரிஷி சொன்னமார்க்கம் தப்பாதுவொருக்காலு முறைபொய்யாது, வேமேதான்வேணபடி சித்தர்தாமும் வெகுவெகு வாய்ப்பாடிவிட்டார் நூல்கள்தோறும், நாமேதான்காலாங்கி நாதர் பாதம் நற்கமலத்தாள்வணங்கி வடியேன்றானும், போமேதான்பிச கொன்றுநேரிடாமல் பூதலத்தில்பிழைக்கவென்று பூட்டினேனே.

கஸ்தூரிவைப்பு

பூட்டினேனின்னமொரு கருமானங்கேள் புகழானயிரத்தமெ ன்ற பாளந்தானும், மூட்டினேன்கார்போகவரிசிதானும் முக்கியமாம் வாலுழுவையரிசிதானும், தாட்டிகமாம்நீலமென்றகூகைநீறும் தாக் கானபன்னீரா லரைத்துமைந்தா, நீட்டமுடன்பாண்டத்தி லிடித் துப்போடு நேர்ப்பாகபூமிதனில் புதைத்திடாயே. 551

புதைத்தவுடன் நீரெல்லாஞ்சுண்டவேதான் பொங்கமுடன்கரு திறமாயிருக்கும்பாரு, சிதைத்துமேநாசிதனில் முகந்திட்டாக்கால் திக்காடுஞ்சுவாசமது திணறிக்காட்டும், பதைத்துமேமேனியது சிலிர்ப்புகாணும்படுஞ்சுலுக்குகஸ்தூரி பகரப்போமோ, மிதத்துடனேமருந்துகளில் சேர்க்கவேண்டும் மிக்கானபோகருட வைப்புதானே. 552

## கஸ்தூரிவைப்பு

வைப்பானமின்னமொரு மார்க்கங்கேளு மகத்தானகமலமுனி சொன்னமார்கம், வைப்பானகாசியென்றகட்டிதானும் வாகானகருவாயின்பட்டைதானும், வைப்பானவவிரியுட சார்தான்கூட்டி வளமானஒட்டகத்தி னுதிரந்தானும், வைப்பானசரக்குடனே வுதிரவேங்கை வளமுடனேருன்சேர்த்து வரைத்திடாயே. 553

அரைக்கவேபன்னீரா லரைக்கவேண்டும் அப்பனேசாடிதனில் பொதியவேண்டும், திரைக்கவேபூமிதனில் புதைக்கவேண்டும் திகழானமண்டலந்தான் சென்றபின்பு, நிறைக்கவே ழிதோண்டியெடுத்துப்பாருயென்மகனேகஸ்தூரி யென்னசொல்வேன், பரைக்கவேராசரிடம்சென்றுமேதான் பாங்குடனேவெற்றியது பெறலாம்பாரே.

## அயவெட்டு

பாரேதான்வயமதுவும் பலம்பத்தாகும் பாங்கானதாளகமும் பலமைந்தாகும், சீரேதான்பெரிகாலன்பாலாலாட்டி சிறப்புடனே வெண்காரம் பொரித்துப்போடு, கூரேதான்வச்சிரமாங் குகையில் வைத்து குமுறவேமேல்மூடிச் சீலைசெய்து, நேரேதான்சரவுலையில் வைத்துவூது நேர்ப்பானகளங்கமது சொல்லொண்ணாதே. 555

சொல்லவேசாரமென்ற செயநீர்தன்னால் சுறுக்குடனேதானுருக்கி சாய்ப்பாயானால், கொல்லவேவயமதுவும்சவுடுநீங்கி குணமாகும் களிம்பூற லற்றுப்போகும், வெல்லவேசெந்தூரஞ் செய்தாயானால் மிக்கானகாயத்துக் குறுதியாகும், புல்லவேதேனதிலே யுண்டுபாரு புகழான தாதுகளும் வலுத்துப்போச்சே, 556

## போகர்லிங்கக்கட்டு

போச்சென்றுவிடுகாதே மைந்தாகேளு பொங்கமுடன்லிங்கமது பலந்தானொன்று, பேச்சொன்றுமில்லாமல்லிங்கானுக்குள் பேரான பாலதனைவிட்டுமைந்தா, நீச்சென்றபாலதனால் சுறுக்குதாக்கு நெடிதானலிங்கமது சுத்தியாச்சு, மாச்சென்றபழரசமும்நாழியாகு மகத்தான தேனதுவும் நாழியாமே 557

நாழியாமேனிச்சாற்நாழியாகும் நலமானகையான்சாற் நாழியாகும், தாழியாமிலைச்சாறுநாழியாகும் தாக்கானவாதனையின்சாறுநாழி கோழியாமிலைமூலிச்சாறுநாழி கொடிதானமுசுக்கையுட சாறுநாழி, வாழியாம்படாமூலிச்சாறுநாழி வளமானகழற்சிக்காய் நாழியாமே.

ஆமேதான்பூலாவுஞ்சாறுநாழி அப்பனேவாதண்டைச் சாறுநாழி, வேமேதான் கொடிக்கள்ளிச்சாறுநாழி விரைவான தும்பைமலர் சாறுநாழி, காமேதான்பூப்பனையின் சாறுநாழி கருவானவிளாவிலையுஞ்சாறுநாழி, போமேதான்பூப்பனையின் சாறுநாழி பொலிவான கஞ்சாவின்சாறுமாமே. 559

நாறானகுமரிச்சார் நாழியாகுஞ் சதாவேரிமூலியது சாறுநாழி, வேறானமுசுட்டையுடசாறுநாழி மிக்கானகவுதும்பைச்சாறுநாழி, கூறானமத்தங்காய்ச்சாறுநாழி குணமானசிவதைவேர்சாறுநாழி, பாறானதேட்கொக்குசாறுநாழி பாங்கானமுறுக்கன்சாற் நாழிகூட்டே.

கூட்டவேமுடக்கொத்தான்சாறுநாழி குறிப்பானதக்காளிச்சாறுநாழி, மாட்டவேபழுபாகல்சாறுநாழி மதிப்பான குவளைச்சாறுநாழியாகும், நீட்டவேதிருகள்ளிச்சாறுநாழி நெடிதானபாலையுடச் சாறுநாழி, மூட்டவேபெருந்தாளிச்சாறுநாழி முனையானபொன்முசுட்டைசாத்தான்சேரே. 561

சேர்க்கவேவிவையெல்லா மொன்றாய்ச்சேர்த்து சிறப்பாகலிங்கத்திற்சுறுக்குதாக்கு, ஏர்க்கவேலிங்கமது கட்டிப்போகும் எழிலானலிங்கமதுவுறுக்குபோலாம், பார்க்கவே வெட்டுருக்குபோலேகாணும் பாங்கானலிங்கமது சொல்லப்போமோ, தீர்க்கமுடன்கவசமது சொல்வேன்பாரு தெளிவானசரக்குகளுஞ் சாற்றக்கேளே. 562

கேளேநீவெடியுப்பு பலமொன்றாகும் கெடிதானவிந்துப்ப பலமொன்றாகும், சூளேதான்பூநீறுபலமொன்றாகும் சுடரானதுருசதுவும்பலமொன்றாகும், வீளேதான்படிகாரம் பலமொன்றாகும் மிக்கானகாரமதுபலமொன்றாகும், பாளேதான்கெந்தியது பலமொன்றாகும்பருவமாம்வளையலுப்பு பலமொன்றாமே. 563

ஒன்றானவுப்புடனே சாரமொன்றாம் ஒளிவானதாளகமும் பலமொன்றாகும், குன்றானவீரமது பலமொன்றாகும் குறிப்பானபூரமதுபலமொன்றாகும், நன்குணங்கியதுபலமொன்றாகும் நலமான தொட்டியதுபலமொன்றாகும், அன்றானவாறுவகைசெயநீர்தன்னால் அப்பனேநாற்சாமமரைத்திடாயே. 564

அரைக்கவேமைபோலே வெண்ணெயாகும் அப்பனே மெழுகத னெடுத்துக்கொண்டு, திறைக்கவேதசபங்காய் செய்துகொண்டு தெளிவானலிங்கத்திற்கங்கிபூட்டி, மரைக்கவேசுண்ணும்பு சீலைசுற்றி மார்க்கமுடன்ரவிதனிலே காயவைத்து, விரைக்கவே மணல்மறைவி ல்புடத்தைப்போடு வீரமுடன்லிங்கமது கட்டிப்போமே. 565

போமேதானிப்படியேபுடமேபத்துப் பொங்கமுடன் மாறுமல் புடத்தைப்போடு, வேமேதான்லிங்கமத கவசம்நீக்கிமேன்மையுடன் றுன்பார்க்கவுருக்குமாகும், சாமேதான்லிங்கமது யெடுத்துமைந்தா சாங்கமுடன் தங்கமதுபத்துக்கொன்று, நாமேதான் சொன்னபடித ங்கரேக்கை நயமாகலிங்கத்திற் கங்கிசுத்தே. 566

சுத்தியேகுன்றிமணிபசையினாலே சூட்சமுடன்விராலியிடதயி லங்கேளு, பத்தியுடன்பீங்கானுக் குள்ளே வைத்து பாலகனேயெருக் கன்பால்சுருக்குதாக்கு, துததியுடன்தீநெருப்பை மூட்டிக்கொண்டு சுடரொளியின்மேல்வைத்து வாட்டுமார்க்கம், புத்தியுடன் விராலியி டதயிலத்தாலே பொங்கமுடன் சுறுக்கிடவேமெழுகுமாமே. 567

மெழுகானபதம்பார்த்து மைந்தாகேளு, மேன்மையுடன்யெரு க்கன்பால்சுறுக்குதாக்கு, நழுகானவராகத்தின நெய்யால்மைந்தா ந லமுடனே நாற்சாமஞ்சுருக்குதாக்கு, வழுகாது மெழுகாகும்சிதத்து க்கொப்பாம் வாகானமெழுகெடுத்துப் பதனம்பண்ணு, தொழுகாத வயிரவரைப்பூசித்தேதான் தோற்றமுடன் கொடுக்கும்விதி சொல் லுவேனே. 568

சொல்லவேவெள்ளிதனில்நூற்றுக்கொன்று சூட்சமுடன்றுனு ருக்கிமாற்றைப்பாரு, வெல்லவேமாற்றதுவுமெட்டதாகும் மேன்மை பெறசெப்பிலே கொடுத்துப்பாரு, கொல்லவேவசம்பினிட வூறல்நீங்கி குருமருந்தால் செம்பினிமேல நூத்துக்கொன்று, புல்லவேகொடுத்தி டமாற்றேபத்து குறையாதுவித்தையது வதீதந்தானே. 569

தானனசித்தர்முனி ரிஷிகள்தாமும் தயவுடனேசெய்யுமிந்தவே தையாகும், கோனனகுருவருளைப்பெறவேவேண்டும் பெறுவிட்டா ல்வாதமதுவாய்க்குமோசொல், தேனனமனோன்மணியை பணியவே ண்டும பணியாட்டால் வாதசித்திகிடைக்குமோசொல், பானனபரா பரியைத்துதிக்கவேண்டும் துதியாட்டால்விட்டகுறை லபியாதாமே.

ஆமேதான்சித்தர்முனிரிஷிகள்சாபம்அப்பனே முன்னின்றுவக ற்றவேண்டும், போமேதான்குருபதத்தைவணங்கவேண்டும் வணங்கா ட்டால் காயுமில்லை பூவுமில்லை, வேமேதான் சித்தருடன் வாதுபேசி

வேதாந்தத்தாயினதுவருளினாலே, நாமேதான்காலாங்கிவரமும்பெ
ற்று நாட்டினிலேமாணுக்கள் பிழைக்கத்தானே. 571

பிழைக்கவென்றுசீனபதிசென்று மேத்தான்பிழைமோசம்போரா
மல்கருவாய்க்கண்டு, தழைக்கவேதாரணியில்பிழைக்கவென்று தடு
மாற்றம்வாராமல்மைந்தாயானும், பழக்கமுடன்கிட்டிருந்துதொண்
டுசெய்துபலகாலுங்கைமறப்பைபழுதாராய்ந்து, வழக்கமுடன்விடை
பெற்றுசீனம்விட்டு வந்தேனேதெட்சணத்தில்பாதைதாமே. 572

பாதையால்வந்துனக்குப் பாகஞ்சொன்னேன்படுங்காளிமுழும
க்களானபேரை, வாதையுடன்றானகற்றி தூரத்தள்ளிவளர்ப்பமுடன்
கைமசக்குயாருங்காணார், வேழைமுகமுன்னிருந்து சித்தன்போல
மேதினியிலதுஷ்டர்களையகலத்தள்ளி, கோதையெனனுஞ் சமுசார
மாய்கைநீக்கி குணமுடனேயிவ்வேதைசெய்வாய்தானே. 573

செய்குவாய்பிராணயந்தன்னில்நின்றுசிறப்புடனே சிதானந்தம்
பாசம்நீக்கி,உய்குவாய்சடாட்சரத்தையுச்சரித்துவுத்தமனேசுடரொ
ளியைக்கண்டுபோற்று, வைகுவார் தன்னேமனமெதிர்நோகாமல்வாச
வனேமுன்னிருந்துவம்பாள்பாதம், மைகுடனேவம்பரத்தைமேலே
கும்பிவரமுடனேவாழ்கவென்று வசனித்தேனே. 574

பாஷாணமெழுகு.

வசனித்தேனின்ன மொருகருமானங்கேள் வாகுடனேமாணுக்
கள்பிழைக்கவென்று, தூசனித்தபாஷாணம் பலமொன்றாகும்துடியா
சிப்பியென்றசுன்னந்தானும,பசனித்தசுக்கான்றன் சுண்ணந்தன்னே
பாகுடனேபாஷாணத்தங்கிபூட்டி, நிசனித்துசட்டியிலேமணல்தான்
கொட்டி நிறையவேமணலாகிலமூடிப்போடே. 575

போடவேநாற் சாமமெரித்தபோது பொங்கமுடன்தீயாறியெடு
த்துப்பாரு, நாடவேபாஷாணஞ்சுத்தியாச்சுநலமாக கட்டிதனையெடு
த்துக்கொண்டு, மூடவேவெள்ளியென்றரேக்குதன்னால் முறைப்படி
யெபாஷாணத்தங்கிபூட்டி, மாடவேசாறையென்ற சர்ப்பந்தன்னால்
மார்க்கமுடன்றானெடுத்து கொழுப்பைவாங்கே. 576

வாங்கியேகொழுப்பு நிகர்வீரஞ்சேர்த்து வாகுடனேபாஷாண
ஞ்சுறுக்குதாக்கு, தேங்கியேபோகாமல்மெழுகு பண்ணுதெளிவான
செம்பதனைவெள்ளிபண்ணு, ஓங்கியேயச்செம்புநாலுக்கொன்று வுத்
தமனேமெழுகெடுத்துகுருவொன்றீய, ஏங்கியேதிரியாதே மைந்தா
கேளு யெழிலானவித்தையதுவதிதங்காணே. 577

காணவேவெள்ளியென்றசெம்புதன்னில் கருவானவெள்ளியது நாலுக்கொன்று. பூணவேதான்சேர்த்துவுருகிப்பாரு புண்ணியனே துய்யனுக்கிணைவேறுண்டோ, தோணவேபாஷாண மிகவேதிக்கும் துறைகோடிமுறைகோடிதொந்தங்கோடி, நாணவேசித்தர்கள்தான் செய்யுமார்க்கம நலமுடனேமானிலத்தில்செய்யலாச்சே. 578

தாளகயீயம் செந்தூரம்.

செய்யவேயின்ன மொருமார்க்கங்கேளு தெளிவானதாளகமும் பலமொன்றாகும், நையவேதுருசுடனே சாரநீரால்நவிலவேதானரைத்துமெழுகுபண்ணு,துய்யவேதாளகத்துக்கங்கி பூட்டித்துடியுடனே சுண்ணம்புச்சீலைசெய்து, பையவேகோழியென்ற புடத்தைப்போடு பாங்கானதாளகமும்கட்டிப்போமே. 579

போமென்றுவிடுகாதேபூபாகேளு புகலுவேனின்னமொருமார்க்கம்பாராய், காமென்றகடுங்காரச்சீனமொன்றுகலறவிட்டுச்செயநீராலரைத்துமேதான், வேமென்றதாளகத்துக்கங்கிபூட்டிவிரைவுடனே சுண்ணம்புசீலைசெய்து, பாமென்றவெயில் தனிலேகாயவைத்துப்பாலகனேகோழியென்ற புடத்தைப்போடே. 580

போடவேதாளகமுஞ்சிவந்து மின்னும் போக்கானசரக்கதுவுங் கட்டிப்போகும், நீடவேவங்கமதுபோலேகாணும் நீணிலத்தில்வாதிமெய்ச்சும்வங்கமாச்சு, கூடவேவங்கமதைதானெடுத்துகுறிப்புடனே காரமதுகாலாய்சேர்த்து, போடவேமூசைதனிலுருகித்தீருபொங்கமுடன்தாரத்தின்வங்கவாமே 581

வங்கமென்றால் வங்கமதுசொல்லப்போமோ வளவானதாரத்தின் வங்கமாகும், பங்கமொன்றுஞ்சொல்லாதவங்கமாகும் படுமுன்னேகுருத்தைக்கட்டிக்கொள்ளும், தங்கமென்றத்லாகமதை சரியாய்க்கூட்டிதாக்கிடவேதங்கமதுவங்கமாகும், அங்கமுடன்தங்கமது வங்கமானுலவணியிலேவாதவித்தைப் பார்க்கப்போமோ. 582

போமென்றுவிடுகாதேமைந்தாகேளு பொங்கமுடன்கெந்தியது நாலுக்கொன்று, வேமென்றசிலைபதுவுமொன்றேயாகு மிக்கானகாரமதுவொன்றேயாகும், பாமென்றவீரமதுவொன்றேயாகும் சடுக்கானவளையலுப்புவொன்றேயாகும், யாமென்றபடிகார மொன்றெயாகும் பாங்குடனேவிவையெல்லாமொன்றாய்க்கூட்டே. 583

கூட்டியேதானரைப்பாய்செயநீர்கேளு குறையாதசாரமென்ற செயநீர்தன்னால், தாட்டிகமாய்தானரைப்பாய் நாலுசாமம்சட்டமுடன்ரவிதனிலேகாயப்போடு, நீட்டமுடன்சரக்கதனைபொடிதாக்கிசிலை

வரமாய்குழிக்கல்லில் பொடித்துக்கொண்டு, வாட்டமுடன் காசியெ ன்றகுப்பிகொண்டு வளமாகசீலையதும்வழுசெய்யே. 584

செய்யவேகாசியென்றமேருதன்னில் சிறப்புடனே மருந்தெல் லாங்குகையிலிட்டு, பையவேமாக்காலால்கொண்டுமூடி பாங்குடனே சீலையதுவலுவாய்ச்செய்து, மையவேசட்டிதனில்மணல்தான்கொட்டி மாற்கமுடன்மேல்சட்டிகொண்டுமூடு, துய்யவேசீலையது வலுவாய்ச் செய்து தோராமவாலுகையிலேற்றிடாயே. 585

ஏற்றவேசாமமதுயிருபதாகும்யெழிலான தீமூட்டியெரித்தாயா னல், மாற்றமுடன்செந்தூர மென்னசொல்வேன்மயங்காதேவருண் மைந்தாபுகலக்கேளு, சீற்றமென்றசெம்புதனில்பத்துக்கொன்றுதிற முடனேதானுருக்கிக் கொடுத்துப்பாரு, கூற்றமென்றவூரலது மெங் கேபோச்சு குணமானசெம்பதுவுமாற்றமாச்சே. 586

மாத்தானபொன்னதுவும்பசுமைமெத்த மண்டலத்திலார்செய் யப்போராரப்பா, நீத்தானசித்தர்முனி செய்வாரப்பா நேர்மையுடன் கருவாளிசெய்வான்பாரு, கூத்தான கூத்துவிதிசித்தர்கூத்து குவலய த்தில்முழுமக்கள்செய்யமாட்டார் நாத்தானநாதாக்கள் செய்யுமாற் கம்நலமுடனே யுங்களுக்காக யுரைத்திட்டேனே. 587

உரைத்திட்டேன்காலாங்கிதனைநினைந்து வுத்தமனே ஒருகோடி நூலைப்பார்த்து, நிரைத்திட்டேன்சாத்திரத்தி னுளவையெல்லாம் நேர்மையுடன்பிழைக்கவென்றுயானுஞ்சொன்னேன், குறித்திட்டே ன்சிததர்சொன்னநூலையானுங் குவலயத்தில் பிழைப்பதற்குகாண்ட ஞ்சொன்னேன், உரைத்திட்டேனேழுலட்சங்கிரந்தந்தன்னையேழை கட்காயிரக்கம்வைத்தும்பாடினேனே. 588

பாடினேன்யேழாயிர சத்தகாண்டம் பாங்குபெறசிமிழ்போல பாடிவைத்தேன், தேடியேபார்த்தாலுங்கிடைக்குமோசொல் தேசத் தில் கிட்டாதுசிவயோகிக்கு, நாடிநூல்தானும் கிட்டும்பாரு நரகில் விழும்பாவியற்குகிட்டுமோசொல், கூடியேசீனபதிசென்று யானும் குறிப்புடனேபாடிவிட்டேன் மர்மந்தானே. 589

குடவன்செம்பு.

தானனவின்னமொருபோக்குகேளு தாக்கானபித்தளைதான்சே ர்தானென்று, கோனனவச்சமென்றதகடதாக்கி கோர்வையுடன்க டைசரக்குசொல்லகேளும், பானனபாஷாணம் பலங்காலாகும் பதி வானதாளகமும் பலங்காலாகும், வேனனலிங்கமது பலங்காலகு மிக்கானவீரமதுபலங்காலாமே. 590

பலமானபூரமது பலங்காலாகும் பாங்கானகெவுரியது பலங்காலாகும், நலமானருடனது பலங்காலாகும் நாற்றமுள்ள கெந்தியது பலங்காலாகும், சலமானரசமதுதான் பலங்காலாகும் காந்தமுடன் மதியுப்புபலங்காலாகும், சலமானபூரீறு பலங்காலாகும் சார்பான யிந்துப்புபலந்தான்கூட்டே. 591

கூட்டியேவறுவகைசெயநீர்தன்னல் குமரவேசரக்கெல்லாமொன்றாய்க்கூட்டிதாட்டிகமாய்தானரைப்பாய் நாலுசாமம்தகமையுடன் தகடெல்லாம்பூசித்திரு, வாட்டமுடன்ரவிதனிலேகாயவைத்துவாகாகப்புடம்போடவிபரங்கேளு, நீட்டமுடன்ஓடதனில்தான்பரப்பிநிலைமையுடன்கோழியென்றபுடத்தைப்போடே. 592

போடவேதீயாறியெடுத்துப்பாரு பொங்கமுடன்தகடதுதான் வதரேபோகும், நீடவேகுடவனென்ற தகட்டைதானும் நேர்பாகப்புடம்போடவூரல்போகும், கூடவேசரக்கதனைதசபங்காக்கிகுழம்பாகத் தான்குழப்பிதகட்டிற்பூசி, சாடவேபுடம்போட குடவன் செம்பாம் சாங்கமுடன்வெள்ளிக்குதாக்கிடாயே. 593

தாக்குவாய்வெள்ளிக்குநாலுக்கொன்றுதகமைபெறசெம்புதனைகொடுத்துப்பாரு, நோக்கமுடன் வெள்ளியதுவாறுகாணும் நொடிக்குள்ளே வாதவித்தைகைகுளாச்சு, பார்க்கவேமட்டமது சொல்லப்போமோ பசுந்தங்கமிரண்டுக்கு வொன்றேசேரு, தூக்கமுடன்தகடடித்துப்புடத்தைப்போடு துளிரானதங்கமதுமிரங்கும்பாரே. 594

தங்க செந்தூரம்.

பாரேதானின்னமொருகருமானங்கேள் பசுந்தங்கமிரண்டுதுலாம்பகர்ந்தெடுத்து, சேரேதான்மாசியென்றபத்திரி தன்னால்செழுமையுடன்றானரைத்துப்புடத்தைப்போடு, நேரேதான்பத்து முறைபோட்டயானல் கெடிதானசெந்தூரம் சொல்லப்போமோ, கூரேதான் செந்தூரங்குன்றியுண்ணும் குணமாகும்மண்டலத்தில் வடிவுகாணே.

காணவேதேகமது மின்னல்தோன்றும் கடிதானரோகமெல்லாமகன்றுபோகும், பூணவேதாதுகளும்வலுத்துகாணும் புரையோடுஞ்சிலவிஷபங்களற்றுப்போகும், தோணவேநரைதிரையுமாறிப்போகும் தொடராதுவாயுவென்றதெண்பதும்போம், மாணவேசெந்தூரம்வெள்ளிசெம்பில் மாட்டடாபத்துக்குவொன்றுபோடே. 596

போட்டுமேதானுருக்கி யெடுத்துப்பாரு புகழுடனேவேதிக்கும் பொன்னேமெத்த, நீட்டமுடன்கரியோட்டிலூதிப்போடுகிலையானத்

தங்கமது கூறப்போமோ, வாட்டமுடன்தகடடித்துப் புடத்தைப் போடு வளமானபசுந்தங்கமாகும்பாரு, நாட்டமுடன் சிவயோகிக் குகந்தபொன்னும் நலமானசித்தர்செய்யும் வேதையாமே. 597

வேதையிலேயின்னமொரு கருமானங்கேள் விதமான பெரிய கண்ணுகமப்பாபோதையிலே வெண்வங்கந்தன்னோடொக்க புகழான சூடனுடன் கெந்திதானும், தீதையிலேகெவுரியுடன் தாரந்தானும் திறமானபூரமுடன் சரியதாகும், பாதையிலேயித்தனையுங் கூட்டி மைந்தா பாங்குடனேகுழியம்மி லாட்டிடாயே. 598

ஆட்டவே குமரியுடபாலினாலே அப்பனேயெண்சாமமரைத்த போது, வாட்டமுடன்சரக்குடனே வங்கஞ்சேர்த்து வளமானசெந் தூரத்தாதியாகும், நீட்டமுடன்காசியென்ற குப்பிகொண்டுநேர்மை யுடன்சீலையது வேழுசெய்து, மூட்டமுடன்மருந்தெல்லாங் குப்பிக் கேற்றிமுனையானமரக்கல்லால் கொண்டுமூடே. 599

மூடவேகுப்பியென்றவாயிற்சீலை முயலவேதான்செய்து முசியா மற்றான், நீடவேசட்டிதனில் மணலைக்கொட்டி நினைவாகக்குப்பிதனை நடுவேவைத்து, சாடவேமேற்சட்டிக் கவிழ்த்துமூடி சாங்கமுடன் சீலையது வலுவாய்ச்செய்து, போடவேதீயதுதான்சாமம்பத்து புகழ்ச் சியாய் நீயெரிப்பாய் மைந்தாபாரே 600

பாரேதான்தீயாறி யெடுத்துப்பார்க்கப் பதனமாசெந்தூரமெ ன்னசொல்வேன், சீரேதான்வெள்ளிசெம்பில் பத்துக்கொன்றுதிற மாகத்தானுருக்கி கொடுத்துதீரு, நேரேதான்கரியோட்டி லூதிபோடு நேர்ப்புடனேதங்கமது நாலுக்கொன்று, வாரேதான் சேர்த்துருக்கி புடத்தைப்போடு மகத்தானவேதையிது சொல்லொண்ணாதே. 601

சொல்லவே சித்தர்செய்யும்வேதைமார்க்கம் செகத்தினிலேமா னிடர்கள் செய்வாரோதான், பல்லவேகருவாளிசெய்வான்பாரு பூத லத்தில் முழுமக்கள் செய்யப்போமோ, வெல்லவேகாலாங்கிநாதர் பாதம் விருப்பமுடன்றாள்பணிந்து செப்பலுற்றேன், நல்லதொரு ஞானவாணுகவென்றால் நானுரைத்தநூலதனை யறிவான்காணே. 602

## அயக்களங்கு

ஞானபிரகாசமானபோகர் சதகோடிசூரியர்போல் பிரகாசிப் பார், கோனைகுருவருளால் தன்னைப்பார்த்து கூறுவேன்பின்ன மொரு குருவைக்கேளாய், வேனை அயமதுதான்ராவிமைந்தா விபர

முடன்பழச்சாற்றி லூறவைத்து, வூனை அமுரியினால் கழுவிப்போ ட்டு வுத்தமனே யிதில்சேர்க்க மருந்துகேளே. 603

கேளடா அயப்பொடிக்குரெட்டிமைந்தா கெணிதமுடன் துரு சுடனே காரமாகும், வாளடாகெந்தகமும் கூடன்வீரம் மார்க்கமாய் யப்பொடிக்கு நாலிலொன்று, கோளடாவாராமல் லெல்லாம்கூட்டி குமுறவேசம்பழத்தின் சாற்றாலாட்டி, காளடாவச்சிரமாங் குகையில் வைத்து கலக்காமல்வுலையில்வைத்து வூதிடாயே. 604

ஊதிடவேவயமதுதான் சரக்குச்சேர்த்து வுண்மையுடன்செம் பதுவாய் வுரிகிசிற்கும், நீதியாம்அயமதுதான் செம்பேயானால் நிலைத் துதடாவாதவித்தை நிசமதாச்சு, ஆதியாம்அயமதனால் சகலசித்தும் அப்போதேசித்தியடா தப்போயில்லை, சோதியாங்குருபாந்தன்னரு ளினாலே சுத்தமுள்ள அயத்தினிட செம்பைவாங்கே. 605

வாங்கியேசெம்புநிகர் தங்கம்சேர்த்து வரிசையுடன்தானுருக்கி வைத்துக்கொண்டு, ஏங்கியேதிரியாதே மைந்தாநீதான் இன்பமுடன் வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று, ஓங்கியேதானெடுத்து வருக்கிப் பாரு வுறுதியாமாற்றுபனி ரண்டதாகும், பாங்குபெற சோதிமயம் தன்னைக்காணில் பாலகனேசிவயோகம் பலிக்குந்தானே. 606

நவகோடிசித்தர்வைப்பு

தானானபொதிகைமலை வைப்புச்சொல்வேன் தாக்கானதென் பொதிகை தன்னிலோரம், வேனைமடாலயமண்டபந்தான் வெளி யானகனைகரைக ளங்குமுண்டு, பானைவாய்க்கால்மண்டபத்தில்படி யோரம் மேவாராளின் மட்டந்தன்னில், கோனைகுருகூட்டம் சித்தர் கூட்டம் கோடானகோடிபொருள் வைததிட்டாரே. 607

வைத்திட்டதிரவியங்கள் மெத்தவுண்டுமானிலத்தில் சித்தர்வை ப்பு யார்தான்காண்பார், கைத்திட்டதிரவியத்தை யெடுக்கவென்றால் கதவுடனேதாளணைத்து கீலுமாட்டி, மெய்த்திட்டகரப்பனென்ற காத்தராயன்மேல்வாசல்தனிக்காவல் வீற்றிருப்பான், மைத்திட்ட வடபுரத்தில் பூதங்காவல் மானிடர்கள்யாரேனுஞ் செல்லார்பாரே

பாரேதான்திரவியத்தை யெடுக்கவென்றால் பராசத்திகிருபை யதுபெறவேவேண்டும், சீரேதானன்னடக்கைகொள்ளவேண்டும் சீர் தப்பிதீவினையை யகற்றவேண்டும், நேரேதான் மனோன்மணியாள் பூசைவேண்டும் நெறிமுறைமைதவறாத வருளேவேண்டும், கூரேதான் சிற்பரத்தைநாடவேண்டும் கோடியுகந்தானிருக்க கற்பந்தேடே. 609

போகர் மூலிகற்பம்

தேடவேகையானின் மூலிதானும் தெளிவானநற்கையான்மூலி தானும், கூடவேமேனியிட மூலிதானும் குணமானகஞ்சாவின் மூலி தானும், நாடவேகருவேல்மூலிதானும் நலமானவெள்வேலி மூலிதா னும், சாடவேபேய்மிரட்டி மூலிதானும் சாங்கமுடனேவிரலியான்மூ லியாமே. 610

மூலியாம்தைவேளைத் தழையுமாகும் முயலான கவுதும்பைத்த ழையுமாகும், பாலியாம் பாவட்டையினிலையுமாகும் பாங்கான வா தொண்டைத்தழையுமாகும், சாலியாம்தும்பையிட யிலையுமாகும் சார்பானவழுதலையு மிலைதானுகும், வேலியாம்பருத்தியுட மூலிதானு ம் வேரானகொடிவேலி தழையுமாமே. 611

தழையானசங்கனிடமூலியாகும் தாக்கானபுங்கனிடமூலியாகு ம், மழையானபேய்ச்சுரையாம் பனிநாக்கோடு மகத்தானபாற்சாண் டினிலைதானுகும், குழையானகொள்ளுக்கா மூலிதானும் கோடான சுழிமூலி நிலைதானுகும், இழையானயிண்டிலையுனிலையுமாகுமெழிலா னகோரையிட யெலையுமாமே. 612

இலையானவிஷமூலியெலையுமாகு மெழிலானபம்பையுடபொன் முசுட்டை, தலையானபரட்டையுடமூலிதானும் தனியானகுணமூலி வெளிச்சிமூலி, கலையானநக்கியென்றமூலிதானும் கடிதான பற்பாட மூலிதானும், வலையானசின்னியிடமூலிதானும்வகுப்பானகுறுந்தொ ட்டிமூலியாமே. 613

ஆமேதான்செந்தொராமூலிதானும் அய்யனேகருவாலிமூலிதா னும், வேமேதான்விழிவிரட்டிமூலிதானும் வெடிப்பானகாந்தியுடமூ லிதானும், போமேதான்மலைதாங்கிமூலிதானும் போக்கான சிறுதும் பைமூலிதானும், தாமேதான்திக்கோட்டான் மூலிதானும் தாக்கான சூரியென்றமூலிபாரே. 614

பாரேதான்தக்காளிகொன்றைமூலி பாங்கானவெண்ணொச்சியி லையுங்கூட்டு, சீரேதான்குட்டிவிளா மாவின்கொன்றை சிறப்பான கூர்மல்லிபாளைதானும், நேரேதான்வெவ்வல்லி பத்திரிதானும் நெடி தான வெள்ளல்லிமூலிதானும், கூரேதான் பிரமராட்சதையுங்கூட்டி பேரானநற்றும்பை தானுங்கூட்டே. 615

கூட்டியேரவிதனிலேகாயவைத்து குறிப்புடனே யொவ்வொன் றும்பொடியாய்த்தெள்ளி, தாட்டிகமாய்சர்க்கரைதான்சமனாய்சேர்த்

து சார்படனேனெய்தேனிற் கொண்டாயானல் வாட்டமுடன் சேத்துமங்கள் தொண்ணூற்றுறும் வாகானவாயுவென்ற தெண்பதும்போம், தேட்டமுடன்பித்தமென்ற நாற்பதும்போம் தெளியாகும்திரேக மதுபிறகுங்காணே. 616

காணவேதேகமதுகற்றாணுகும் கருவானநரம்புகளு முறுக்கிக்காட்டும், தோணவேசதாகாலமிருக்கலாகும் துன்பமென்ற சாகரத்தைவிட்டொழித்து, மாணவேசதாசித்தம் பூசித்தேதான் மகத்தான கெவனமுதல்கொள்ளலாகும், வேணவேசமாதியிலே யிருக்கலாகும் வெகுகோடிகாலமட்டும் தேகம்போமோ. 617

போகாதுகற்பாந்திரகாலகட்டும் பொலிவானதேகமது யிரும்புபோலாம், வேகாதுசடந்தானும்தீயில்தானும் விருப்பமுடன்கோடியுகங்காணலாகும், சாகாதுபூமிதனில்யிருந்துகொண்டு சதாகாலம் வாமியைத்தான் பூசிப்பாய்நீ. ஆகாதுலோகமென்ற மாய்கைநீக்கி வப்பனேயெனைப்போலயாகுவீரே. 618

அபினிவைப்பு.

ஆகவென்றுலின்னவொரு கருமானங்கேள் அப்பனேவபினி என்றவைப்புசொல்வேன், பாரமுடன்கடுகுடனே கசகசாவும் பாங்கானகஞ்சாவும்சரியாய்த்தூக்கி, வேகமுடன்மராட்டியமா மொக்குதானும் விசையுடனேகியாழமதுசெய்துகொண்டு, தோகமுடன் சாக்கதனை யரைப்பாய்மைபோல் தொவுரதனை தான்போக்க முறைதான்கேளே. 619

கேளேநீசீனமென்ற வெல்லந்தன்னை கிருபையுடன்பாகுபதஞ்செய்துகொண்டு, கோளேதான்வாராமல் மைந்தாகேளு கொப்பெனவேசாக்கதனைகிளறிக்கொண்டு, பாளேதான்போகாமல் மெழுக்கெடுத்துபான்மைபெறபரணிதனில் பதனம்பண்ணு, தாளேதான்பிணியதுசொல்லப்போமோ தாரணியில்மானிடர்கள் பிழைக்கத்தானே.

தானனவபினியதுமயக்கமெத்தத் தாரணியில் நாதாக்கட்குகந்தபோதை, வேனனயிடுமருந்து பாஷாணந்தான் மிக்கானபுதிதனை மயக்கப்பண்ணும், கோனனகுருவருளாலிந்தபாகம் குணமாகப்பாடிவைத்தேன்மாந்தர்க்காக, தேனனகாலாக்கித் தன்னைப்போற்றி தேற்றமுடன்சதாகாலம் தவத்தில் நில்லே. 621

போகர்வுப்புமணி.

நில்லவேபோகரிடமணியைக்கேளு நிலையானமணியதுவும்சித்தர்வேதை, புல்லவேசாகத்தின் சலமேயாகும் போக்கான படிரண்டு

வளர்ந்துவாரு, கொல்லவேசேர்த்துப்புபடியேயாகும் குணமாளவ ளையலுப்புபடியேயாகும், வெல்லவேவிதரண்டும் பொடியதாக்கிமே ன்மையுடன்காச்சும்வகை செப்பக்கேளே. 622

செப்பவென்றால்சலந்தனிலேவுப்பைக்கொட்டிசிலமுடன்தான் கரைத்துதெளிவைவாங்கி, ஒப்பமுடன்சிலையதுவேடுகட்டி வுத்தம னே அடுப்பேற்றியெரிப்பாயப்பா, தெப்பமுடன்நீரெல்லாம் சுண்டி யேதான்தெளிவுபெறவுப்பதுதான்வட்டுபோலாம, நெப்பமுடன்தா னிருக்கும்வுப்பைத்தானும் நேர்ப்பாகசுரண்டியதையெடுத்திடாயே,

எடுத்துமேமறுசட்டிதானெடுத்து யெழிலானகடல்சலந்தான் படிரண்டப்பா, தொடுத்துமேமறுபடியும்வுப்பைக்கொட்டிதொடர வேதான்கரைத்துவடிதான்கொண்டு, விடுத்துமேமேற்கவசம் சீலை கட்டி விருப்பமுடன்றனெரிப்பாய்சண்டமட்டும், கொடுத்துமேதா னிறக்கியெடுத்துப்பாரு குடிலமுடன்வுப்பதுதான்கரடுமாமே.

கரடானவுப்பதனையெடுத்துக்கொண்டுகருத்துடனே மறுசட்டி கடற்சலந்தான், பிரட்டாதேபின்னுமந்தசட்டிக்குள்ளேபேரானகட ற்சலந்தான்படிரண்டிட்டு, வரட்டுடனேவுப்பையெல்லாம்சீவிவாங்கி வளமாககடல்சலத்தில்கரைத்துக்கொண்டு, திரட்டுடனே வடிகட்டி யெடுத்துக்கொண்டு தீர்க்கமுடனடுப்பேற்றி யெரிப்பாய்கேரே.

நேரானவுப்பையெல்லாஞ் சுரண்டிவாங்கிநேர்ப்புடனேமறுசட் டிதன்னிற்போட்டு, கூரானதீகெருப்பில்யெரிக்கும்போது குணமுட னேவுப்பெல்லாம்வுருகிக்கட்டும், பேரானவுப்பதுவும்வயிரம்போலா ம் பெரிதானவயிரமதையெடுத்துக்கொண்டு, சேரானமண்ணனசட் டிதன்னில் தெளிவுடனேகாச்சியல்லோ மூசைக்கேற்றே. 6 6

ஏற்றவேவுப்பதனைமூசையிட்டுயெழிலானதன்பதத்திலிருக்கித் திரு, போற்றவேகருகட்டிசிலைதான்வார்ப்பாய் புகழானசிலையதுவும் பாய்ந்தபின்பு சிற்றமுடன்சிலையதுவுஞ்சாரணிப்பாய் சிறப்புடனே மேனியென்னுங்குப்பைமேனி, தேற்றமுடன்சார்பிழிந்து காய்ச்சி தோய்ப்பாய் தேர்மையுடன்சிலையதுவு மிறக்குப்பாரே. 627

பாரேதான்சிலையதுவுமிறகிக்காட்டும் பாங்கானலிங்கமுடன்து ருசுதானும்,சீரேதான்கெந்தியுடன்தாரந்தானும் சிறப்பானசூதமுட னிடையாய்ச்சேர்த்து, வேரேதான்முலியதுவிராலிதானும் வேகமுட ன்றன்பிழிந்துசாக்கைமைந்தா, கூரேதான்மை போலரைத்துபின்பு குணமானமருந்தையெல்லாஞ் சிலையிற்கேற்றே. 628

சிலையானவுப்பினிடகெதையைமைந்தா சீர்பெறவேகவசித்துப் பூசிப்பின்பு, மலையானவோரமதில்தானேபூர்க்கு மகத்தான பூநீறு கவசஞ்செய்து, குலையானசித்தர் முனிரிஷிகளில்லாக் கொலுக்கூடவனந்தனிலைபுடத்தைப்போடு, விலையானவுப்பதுவும்சிவந்துமேதான் விண்ணுலகந்தான்மதிக்கு மதீதம்பாரே. 629

அதிதமாங்கெதையதனை யெடுத்துமைந்தா அழகுபெறகுகை வீட்டில்பதனம்பண்ணு, துவிதமுடனுந்தனுக்கு வறுமைவந்தால் துடியானகெதையதனைச் சிமைந்தா, நதீதமுடன்செம்பதனில் தூற்றுக்கொனறு நாட டிடவேமாற்றுபனிரண்டதாகும், பதியானசித்தர் முனிசெய்யும்வேதை பாருலகில்யார்செய்வார் நம்பிடாதே. 630

சன்னிக்கு சுடரெண்ணை.

நிம்பயெண்ணை படியாழாக்கரண்டியிட்டுநினைவாகவெள்ளுள்ளி தாரங்கொஞ்சம், தெம்புடனேவிட்டெரித்துச்சூடுதண்ட திறமான பருவமதில்சிரசிலூற்று, துன்பமதுசன்னிதனிற் பிரட்டல்போகுந் துடிப்புள்ளசலவைகளுஞ் சொல்லாதோடும், நம்பியிட்டபயிர்போலேகலமதாகும் நாதாந்தமாகபோகர் நவின்றிட்டாரே. 631

விஷபேதிக்கு.

கருத்துடையமானிடர்க்குப்பேதிகண்டால் கைக்கடங்கப்பிடியெடுத்துமூளகாய்தன்னை இருத்தியரைவெண்ணைபோலமூளைதன்னி லிதமாகப்பதித்திட்டுப்பின்புநீயும், பொருத்தமுள்ளவன்னிபற்பமுடனேதாக்கு பேருலகிற்சன்னியற்றுப் பிழைப்பார்பாரு, வருத்தமில்லை கைகண்டதொழிலுமாகும் வண்மையாய்போகமுனிவழுத்தினரே. 632

பேதிகண்டவுடனே தான்பத்துஒத்து பேதமிலாவாக்கிருணம் கலிக்கம்பற்பம், நீதியாய்மாத்திரைகளன்னப்போக்குநிலையாகவொருநாளிற்செய்துகொள்ளு, சோதிபெறநாளிரண்டிற்செய்ய வேண்டாஞ் சுருக்கிலேகுளுமைவந்து முடிப்போகும், நாடிதானில்லாமலுயிரும்போகும் நலமானபோகரிஷி நவின்றவாரே. 633

நிம்பயிலையிடை யெட்டுவுரலிலிட்டு நேகயிடிபாணிரெட்டிசாலிலிட்டு, தம்பமறவெட்டிலொன்றாய்க் காச்சிக்கொண்டுதனையெடுத்து கிட்டிகட்டிப்பிழிந்துதன்னை, நிமபயிடு அரன்பிசப்பலமுமஞ்சுநிரம்பிட்டு ஓட்டியெரிக்குழம்பதாக, நம்பியெடுகல்வமிட்டு அரைநேர் காமம்நாடி யெடுமெழுகாகும் நாட்டுளோர்க்கே. 634

எண்ணை

ஈரவெங்காயமது கழற்ச்சிக்கொட்டை யிலையிடித்து இரண்டெ டையும்படியுமிட்டு, காரமுள்ளமுத்தெண்ணை படியுமொன்று கருத் தறிந்ததந்திவிரை பலமுங்கால்தான், கோலமுள்ளரசமெழுகு பல முங்கால்தான்கூட்டி யெரிவடிகட்டிப் பூசைசெய்து, பாரமுள்ளயெ ண்ணையதுபணமும்வீதம் பாச்சிட்டநோய்தீரும் பரிசுகேளே. 635

பாரிந்தயெண்ணைதனை மூன்றுபோது பாச்சிடவே பாரிசமாஞ் சூலையெல்லாம், சாரியந்தப்படியோடுமேகமெல்லாந்தாக்கி நெய்யடி படுங்காண் மகோதரங்கள், கூறிந்தப்படிபோகும் வாதமெல்லாங் கொள்ளையதுகொண்டாப்போ லோடிப்போகும், சொரிந்தமேகவெ ட்டைநீர்களெல்லாஞ் சுவரிடுங்காண்வாயுவெல்லாம் சூட்சமாமே.

சுவறிடுங்காண்பௌத்திரங்கள் மூலரோகஞ் சொல்லியநீரும்பல் துடிகள்போகும், கவறதுபோலாகிவிடு மெண்ணைப்போக்கு கை கண்டுபோகரிஷி கருத்தில்வைத்து, தவறிடா தெனக்குரைத்தார் லோகத்தோர்கள் தான்பிழைக்கச் சொன்னதிந்த மார்க்கந்தன்னை எவரிடத்தில்சொல்லாதே புளிப்புதள்ளு இனமாகவுண்டவர்க்குப் பிணிகள்போமே. 637

காரிநாகபதங்கம்.

காரியெடைசேர்த்துமே கூடச்சேர்த்துக் காண்டியிட்டு யிலுப் பைநெய்யிலுருக்கிமெள்ள, சாரியிட்டுப்பத்திரண்டு தரமுங்காச்சி ச ரியரவேகாண்டியிட்டு வுருக்கிமெள்ள, கூறியதோர்சூதமிட்டு வுருக் கத்தானே நாற்றமறமுன்னெண்ணைநிறையவிட்டு, பாரியிது பத்தும துயெரியவிட்டுப் பாகமதுயெடுத்துநிறை யிடைபோகாதே. 638

போகாதேஅன்னமிட்டு வுடைத்துஅன்னம் பூட்டியரைவில்லை கட்டுகிடத்திலிட்டு, பாகமாயெரித்திடவேயுயரவேறிப் பார்த்திடவு மெடுத்துவைத்துமடியில்நின்ற, தாகமாய்வில்லையரை சோறுவிட்டுத் தாக்கியேவில்லைகட்டிப் புடமூன்றிட்டால், நாகமாம்வில்லையதுசிவந் துபோகும் நாதாக்கள்சொன்னதிந்த நாட்டந்தானே. 639

எறிகின்றசூதமிடைபுகைநீர்விட்டு எரியழலிற்றபன்னிடம்வை த்துப்பாரு, கூறியதோர்காளாஞ்சி வந்தவில்லை கூட்டியரைபுடமிட்டு எரிநேர்ப்பாக, மாறியெடுசிவந்துநிற்கும் ரவியில்நீறு மயமாகத்தாக்கி டவேயொன்றதாகப், பாரியதுஏமமது பத்துமாகும் பாலித்தா ரிஷி போகர் பண்பதாமே. 640

தேனிலிடுசகலநோயெல்லாந்தீருஞ் செங்கதிருமேனியது இரும்புபோலாம், வானிலேயிப்பாகம்பொய்யோவென்றால் வண்மையுள்ள ஆண்டவனும் பொய்யதாகும், ஞானிகளுக்கிவ்வேதையெறக்கமிட்டு நாட்டிலுள்ள நல்லவர்கள் செய்துகொள்வார், கூறுமிருதவர்கள் செய்யமாட்டார் கொட்டிரைமெய்போகர் குணமிதாமே. 641

மகோதிரத்துக்கு

வீரமுடன் பதங்கபற்பம்பலமும்நெலு வீதமிடை மிளகுசுக்கு தந்திகூட்டி, பாரமுள்ளநெல்லிமுள்ளி கடுக்காய்நேறாய் பார்த்து அரைபுகைநீறற் சாமம்ரண்டு, கோரமதாயுத்தியளவாகவுண்டைகொடுத்துவிடுமகோதரங்கள் முப்பத்தொன்றும், நேரமில்லையோடிவிடு நிமிஷந்தன்னில் நிட்சயமாய்போகரிஷி நேர்சொன்னாரே. 642

நல்லிரும்புவோடையாஞ் செம்புநேரே நாட்டியரைபொடியாக குகையிலிட்டு, மெல்லவதையுருக்கிவிட புட்டுபோலாம்விரும்பியெடுரண்டுமுக்கால் நாத்தஞ்சூடன்செல்ல, நிறுவிரண்டுமரை நிறுத்திக் கொள்ளுசிறுகவதுவீரமது யிரண்டுகாலாம், சொல்லவிந்தவைந்துடனேநிறுத்துக்கல்வஞ் சுறுதியுடன்பாணிவிட்டுஅரைத்துக்கொள்ளே.

அரைத்துவில்லையங்கியிடுபத்துந்தாமம் அதின்பேருசயமக்கினியதைநிறுத்து, வரைத்துபல்மொன்று நிறுவேலிவேருவகை கடுகுஓமமெடு சிறுதேக்காகும், நிறுத்துஎடு ஆனைத்திப்பிலியிந்துப்பு நேரான கோஷ்டமொரு வகைக்குவொன்று, அரைத்துநிறுகாயங்கால் வசம்புகாலாங் குணமானகடுகுபொடி அரையும்போடே. 644

அயக்காந்த லேகியக்குளிகை.

சங்குநிறம்நீறியதோர்சீனச்சுன்னஞ் சாதகமா யெடுத்துநேரே துடிசாற்றக்கேளு, இங்கிதமாய்வன்னிரசம் உப்பிலிட்டுஇதமாகயெரித்திடவேபதங்கமேறும், துங்கவதையெடுநிறுத்துமுன் சுன்னவைத்துசகமாகச்சேர்த்து கல்வமீதிட்டு, சங்கைபடப்பழச்சாற்றாற் சாமமாட்டிச் சதுரகைக்கிடைத்திலிட்டு மூடிகேளே. 645

மூடியதைச்சீலைசெய்து எரிகால்சாமம் முத்தியதை யெடுத்து மண்டலமேயுண்ண, கோடியதுநோயெல்லாங் குஷ்டம்போகுங்குணமாகும்வாதவெடி சூலைபோகும், நாடியதுமகோதரமுப்பதாகும்நாட்டிலுள்ளசீரிழிவுநடுங்கியோடும், வாடிமுகங்கனலில்கண்டவிருள்போலாகும் வகையாகபோகரிஷி சொன்னார்தாமே. 646

பாஷாணக்கட்டு.

வச்சிரத்தின்பாலாழாக்குப்பீங்கானிவிட்டு வசமாகமுற்றிவெள் ளைக்கருநேரிட்டு, தச்செயலாய்த் திரிநால்வைமுரிந்து நீராந்தகை மைபெறஎலிகொல்லியோட்டிவிட்டு வைச்சபடி முன்னீரால் சுருக்கு யிட்டு வகையாகநாற்சாமம்போட்டுத்திரு, உச்சிதமாயண்டமென்ற சுண்ணங்கட்டி யூரறியப்புடமிடவேகட்டுந்தானே. 647

கட்டுகின்றபாஷாணங்கரியிலாடுங் காதலாயெடுத்தைவைத்துக் கொண்டு, வெட்டுநீவெள்ளீய நூற்றுக்கொன்று விரும்பியிடுரசிதமா நீர்களற்று, தட்டுநீகாதம்வரும்கடையில்விற்று தகமையுள்ளஞானத் தைத்தரித்துக்கொள்ளு, பட்டுநூற்சாயம்போற்பாகம்பாரு பதிவா னபோகரிஷிபாலித்தாரே. 648

சடைக்கஞ்சாய்நூறுசட்டியிட்டுச்சலம்விட்டு திரிநாள்வைபலம் பிவாங்கி, திட்டமாகபின்னுமொருசட்டியிட்டுச் சீறுவின்பால்படியு ம்பாணிநேரே, விடையாகவிட்டெரி நீக்கோணியிட்டுவிதமாகப் பிழி ந்துரசம்வாக்கிபின்பு, கிடமிட்டு ஆவினெய்சிறுகவிட்டுக் கிருபையா ய்வைத்துநீபகரக்கேளே. 649

சக்கரையின் சுக்கேலமிளகுமாஞ்சி சாதிக்காய்பத்திரியுங்கிரும் புகோஷ்டம், மிக்கஅதிமதுரமுடன் அமுக்கருவும்விதமானவாள்மிள குகசகசாவும், தொக்கவகைபலமிரண்டுதட்டியிட்டுச் சுருதியெனும் பாலிவிட்டுப்பாகாய்க்காச்சி, பக்கமுளமுன்ரசத்தை யதிலேயிட்டுப் பாகமாயிறுகபதம்பார்த்துக்கேளே. 650

பார்த்தெடுநீசாறுயங்தேனுமட்டும் பதமாகவூத்தி யளவாகச்செ ய்து, சாற்றிடுவாயொருகுளிகைகொடுத்துப்பாரு,சதுரத்தில்வசனமு தற்பேதிநிர்க்கும், காத்துநல்லமூலத்திற் கிருணிநல்ல கடிதானசெறி யாமைவாந்திநிற்கும், போற்றியேதேகத்தைபார்த்துதாக்கு புகலரிய போகரிஷிபுகன்றிட்டாரே. 651

போகர்சீனபதியில் வெள்ளைமனுஷர்பிரதாபம்.

புகன்றிட்டாரின்னமொரு கருமானங்கேள் புகழானபோகரிஷி கீர்த்திமார்க்கம், தகன்றிட்டசீனபதிசென்றுயானும் தாழ்வாககுளி கைகொண்டுபூமிதன்னில், மகின்றிட்டுயானுமங்கேயிரங்கிப்பார்த்தே ன்மனிதருடநிறந்தானுமேமகவெள்ளை, பகின்றிட்ட நிறமதுதான்வெ ள்ளையாகக் கண்டேனேபெண்களுடரூபந்தானே. 652

தானனரூபமதுவெண்மைகண்டேன் தாக்கானதரணியெல்லாம் சுத்திவந்தேன், கோனனபெண்களெல்லாம்வானபேதம் குணக்குறிகளனேகமதாய்தோற்றங்காணும், வேனனசீனபதிபெண்க ளெல்லாம்மேன்மையுடன் றானிருக்கக் கண்டேயானும், பானனகாரமது பூமிதன்னில் பாங்கியர்களெல்லவரும்வெண்மைதானே. 653

வெண்மையாம் பெண்களுடன்போகம்செய்தேன் வேதாந்த தாயினதுவருளினாலே, கண்மையாம் காலாங்கி தனைநினைத்து களிப்புடனேயிந்திரபோகஞ்செய்தேன், தண்மையாம்பதினெட்டுத தொப்பிக்காரர் தரணியிலவதரித்தார் புகழ்ச்சிமெத்த, உண்மையா மானிடர்கள்பிறந்தாரப்பா வுற்பனமாம்கோடிவித்தை பெற்றோர்தாமே. 654

தாமேதான்சவுக்காரவழலைசெய்வார் தகைமையுள்ள கண்ணாடிகாய்ச்சுவார்பார், போமேதான்பூநீரை சுண்ணாம்பாக்க புத்தியுள்ள மாந்தரப்பா சீனதேசம், காமேதான்மற்றுந்தார் தேசமெல்லாம் கருவனையல்பூநீரைக்காய்ச்சுவார்பார், நாமேதான்போகரிஷிகண்ட மார்க்கம் நாதாக்கள்கைமறப்பும் வெளியிட்டேனே. 655

வெளியிட்டேன்கோடியுக வித்தையெல்லாம்வேணபடியுபதேசஞ்செய்தேன்யானும், பளியிட்டயெந்தனுக்குசாபமில்லை பாருலகில் சித்தர்முனிகைமறப்பை, நெளியிட்டவெள்ளையென்ற மனிதருக்குநேர்புடனே காட்டிவிட்டேன் காரணத்தை, துளியிட்டதேசமெங்குஞ்சுற்றிவந்தேன் சூட்சாதிசூட்சமெல்லாந்திறந்திட்டேனே. 656

திறந்திட்டேன்வெள்ளையென்றமனிதர்நீங்கி செப்பவில்லைகருநிலமாந்தருக்கு, குறைந்திட்ட வித்தையெல்லாம் கூறவில்லை கொட்டிலைமோசமது வாகும்பாரு, முறைந்திட்டசாஸ்திரங்கள் சாபமெய்தும் மோட்சமென்ற வீடில்லைநரகம்போவார், வரைந்திட்டவாக்கியங்கள்பிசகாய்போகும் வாகுடனேபோகரிஷி பாடினேனே. 657

காந்தசெம்பு.

பாடினேனின்னமொருகருமானங் கேள்பாருலகில் சித்தர்முனிகூறுமார்க்கம், நீடியதோர்காந்தமதுபலமோவைந்து நேரானவெண்காரம்பலமோவைந்து, தேடியதோர்பூநீறுபலமோவைந்துதெளிவானகெந்தியதுபல மோகால்தான், கூடியதோர் சரக்கெல்லாமொன்றாய்ச்சேர்த்து குமுறவேகுழிக்கல்லில் போட்டிடாயே. 658

போடவேதேனதுவும் விட்டுமைந்தா பொங்கமுடன்றானரைப்பாய்சாமம்நாலி, நீடவேவச்சிரமாங் குகையில்வைத்து நேர்புடனே

சில்லிட்டுச்சீலைசெய்து, கூடவேரவிதனிலே காயவைத்து குணமாகவு லையில்வைத்து ஊதிப்பாரு, வாடவேசாந்தமதுசத்தேயாகும் வளமா கச்சத்தெல்லா மெடுத்துக்கொள்ளே. 659

கொள்ளவேகாந்தமென்ற சத்துதன்னைக் குமுறவேமறுபடியும் மூசைக்கேற்றி, விள்ளவேதானுருக்கியெடுத்துப்பாரு வீரானமணிய துவாய் வுருகிநிற்கும், மெள்ளவேசத்தெடுத்துகல்வமிட்டு மேன்மை பெறவாறுவகை செயநீர்தன்னால், துள்ளவேதானரைப்பாய் நாலுசா மம் துறையாகதானெடுத்து ரவியிற்பூசே. 660

பூசவேசெம்பென்ற தகட்டில்மைந்தா புகழாகபத்துக்குவொன் றேயாகும், காசென்றதுட டின்மேல்பூசிப்பூசிச் களமாகரவியில்வைத் துப் புடத்தைப்போடு, மாசென்றபுடமதுவும் பத்தேயாகும்மகத்தா னசெம்பதுவு மூறலேகும், பாசென்றகளிம்பதுவு மற்றுப்போய்பளி ங்கானதம்பாக்கு நிறம்போலாமே. 661

நிறமானசெம்பதுவு மொன்றேயாகும் நிறையானவெள்ளியது வொன்றேயாகும், திறமானதங்கமதுவொன்றேயாகும் திடமுடனே மூசையிட்டு வுருக்கித்தீரு, பரமானசரக்கதுவு மொன்றாய்ச்சேர்த்து பளபளத்தவர்னமது காந்திமெத்த, உறமானமாற்றதுவுமெட்டதாகு முத்தமனேபோகரிஷி யுரைத்தவாரே. 662

வாறானபொன்னதுவும்வாரடித்து வளமுடனேபூங்காவிதன்னி ற்போட, மாறானமாசியதுநீங்கியேதான் மகத்தானபசுமைநிறத்தங்க மாகும், காறானகடைத்தங்க மிதுக்கொப்பாமோ கடந்தமுனிசித்த ரிஷி செய்யுமாற்கம், பேறானகாலாங்கியடிவணங்கி பேருலகில்மாந் தர்கட்காய் செப்புவேனே. 663

செப்பினேன்னர்தாக்க ளருமைவித்தை செகத்திலேயாராலுங்கூ றப்போமோ, ஒப்பவேமனோன்மணியாள் பாதம்போற்றி ஒழுங்குட னேசிதாபாசந் தன்னைநீக்கி, தப்பவேபூரணத்தைமனதிலுன்னி சதா காலம் நிருவாணிமுன்னதாக, மெப்புடனேபராபரியை மன்னிப்பாக மேதினியில்தவசிருந்து நாளைப்போக்கே. 664

போக்கவேதுஷ்டருடன் கூடவேண்டாம் பொலிவானவுளவை யெல்லாங் காட்டவேண்டாம், தூக்கமுடன்சோம்பருடன்கூடிவார்த் தைதுறைமுறைகள்யாதொன்றுங் காட்டவேண்டாம், வாக்கிலுள்ள சித்த முனிரகசியத்தை வளப்பமுடன்விருதாவில் கொட்டவேண் டாம், நோக்கமுடன்றனிருந்து பொருளாராய்ந்து நொடிக்குள்ளே காயசித்திக்கிடமுந்தேடே. 665

ஆமேதானித்தனையுமொன்றாய்க்கூட்டி அப்பனேபுனுகுடனே பச்சைப்பூரம், போமேதான்கோரோசனை குங்குமப்பூ பொலிவானச வ்வாது தானுங்கூட்டி, காமேதான்கஸ்தூரி வாடைதானும் கருவான முதற்றிட்டுசீலையோடு, காமேதான்வழிஞ்சியிட தயிலத்தாட்டிவிருப் பமுடன்பரணிதனில் பதனம்பண்ணே. 673

பண்ணவேமையதனை யெடுத்துக்கொண்டு பதிவானவுருவுதனை யேற்றியேதான், திண்ணமுடனஞ்சனையர் வுருவைமாட்டித்திரமுட னேலட்சமுரு போட்டுக்கொண்டு, வண்ணமுடன் லலாடமதில் மை வைத்திட்டி மயங்கிடவேலோகமெல்லாம்வசியமாவார், நண்ணமுடன் ராஜாதிராஜர்தாமும் நாட்டிலேசித்தர்களும் வசியமாமே. 674

வசியமாமஷ்டசித்து யிதனாலாகும் வளமானமோகனமு மிதனா லாகும், வசியமாம்ஸ்தம்பனமுமிதனாலாகும்வாகானகருவுகளுமிதனா லாகும், வசியமாம்பேதனமுமிதனாலாகும் மகத்தானகிரியைமுதலித னாலாகும், வசியமாமுச்சாடனமிதனாலாகும் மார்க்கமுட னுருமாற்ற மிதனாலாமே. 675

ஆமேதான் சித்தர்முனிசெய்யும்பாகம் அடவாகப் பலநூலுமா ராய்ந்தேதான், நாமேதான் காலாங்கிநாதர்பாதம் நாட்டமுடன்றாள் பணிந்துநவிலலுற்றேன், வேலேதானிக்கருவை வெளிவிடாதே விட் டாலேவெகுமோசமாகும்பாரு, நாமேதான் சொல்லுகின்றோம் யானை மாற்கம் நாதாக்கள்பிடிவாதம் நவில்வோம்பாரே. 676

பாரேதான்குருவாணை சுவாமியாணை பராபரியாய்தன்னாணை சி வனாராணை, சீரேதானுமையாணைவும்பராணைசிவாலயங்கள் கன்னாணை தேவியாணை, கூறேதான்குருவாணை கணேசனாணை குறிப்பானகன்ன னிடவாணைகண்டீர், நேரேதான்சித்தரிடயாணைகண்டீர் நெரியானமு னிவரிஷிகளாணையாமே. 677

ஆமேதானாணையது கடக்கவேண்டா மப்பனேசாமமது செய்து ம்பாரு, நாமேதான்சொல்லுகின்றோம் ரிஷிகள்போக்கு நன்மையுடனு பசாரஞ்செய்யவேண்டும், வேமேதான்மனதுவரா நடக்கவேண்டும்வே தாந்தத்தாயினது வருளேவேண்டும், போமேதான்கற்பமதுகொள்ள வேண்டும் பொலிவானநன்னடக்கை வேண்டுந்தானே. 678

தானனரிஷிகளிட பதாம்புயத்தைச் சதாகாலம் சிரசின்மேற்று க்கவேண்டும், கோனனசாபத்திற்கிடங்கொடாமல் குருநிந்தை யணு காமலிருக்கவேண்டும், மானனசித்தர்முனிதங்களுக்கு பட்சமுடன்ம னதுவாநடக்கவேண்டும், மானனசாத்திரத்தை யாருக்குந்தான் மா னிடரேகொடுத்தாக்கால் தீமையாமே. 679

தீமையாந்தலையதுதான் வெடித்துப்போகும் திகழானசாபமது மேவும்பாரு, சாமையாங்கோபமதுவதிகமாகி சண்டாளதுரோகியென்று சபிப்பார்சித்தர், ஊமையாமூடனென்ற பெயர்தானுகு மூர்க்கமுடன்தானுரைப்பார் வதிதமெத்த, ஆமைபோலுறுப்பெல்லாந்தானடக்கி அவனியிலேவாழுவது மதிதங்காணே. 680

காணவேநல்வழிபோகாவிட்டால் கடிந்துரைப்பார் சித்தரெல்லாம் நாள்கடோறும், மாணவேசாபத்துக்கிடமுண்டாகு மாற்கமுடன்யாதொன்றுங் காட்டவேண்டாம், வேணவேருத்திர சாத்திரங்களெல்லாம் விள்ளாதகைமறப்பு வுளவுசொல்லி, நாணவேமுப்பூவுக்குறவுஞ்சொல்லி நாதாக்கள்தானெடுக்கும் வகையைத்தேடே. 681

பூநீறுக்குபூமிவளம்

தேடையிலேபூம்பாறை யானைக்கல்லாம் தேசத்தில்சோழனிடநாடேயாகும், ஓடையிலேவிராலியிடமலைதானுகும் வுத்தமனே திருப்பாண்டிநாடேயாகும், மேடையிலேநாகார்ச்சன மலையுமாகும் மேலானநாமக்கல் பாறையாகும், வாடையிலேசுவாமியிட மலைதானுகும் வளமானசுரசிந்து யோரமாமே. 682

ஓரமாமநர்மதாபூமியாகு முத்தமனேதிருமாளிகைரமாகும், காரமாமுகவைபதி கடலோரந்தான், கரியானபூமியிடம் படிகக்கல்லாம் தூரமாம்தாம்பரபரணி ஸ்தலமுமாகும் தூக்கானவேகவதி தீர்த்தமாகும், பாரமாம்சித்தூராமாக்காடாகும் பசுவலையும்நீரெடுக்கப்பதியுமாமே 683

பதியானகங்கைநதிக் கடலோரந்தான் பாங்கானவளர்பூமிதேசம் யாவும், கதியானவால்மீகர் பாளந்தன்னில் நயமானயிடப்பாகம் புத்தாருண்டு, விதியானசித்தர்முனி யிருக்குந்தானம் விளைதவதியாரொன்று கம்பவொன்று, சதியானமிருகங்க ளிருக்குந்தானம் சதகோடிசூரியர்போல் ரிஷிகள்பாரே. 684

பாரேதான்கல்லானை வாசஞ்செய்யும் பனிமூடும்தேசமது பகரப்போமோ நேரேதான்கணையொன்று மலையுண்டுண்டு கொடிதானபூமியெல்லா மளவேயாகும், சீரேதான்பாலைநில மென்பார்சித்தர் சீர்பாதம்பட்டாலே வெந்துபோகும், ஊரேதான்பூண்டுமுத லில்லையப்பா வுத்தமனேகாரமென்ற பூமியாச்சே. 685

சுண்ணமென்றபூமிதனில்பூநீரப்பா சுருதியுடன்றானெடுத்துமாண்டார்கோடி, அண்ணலென்றவாவடையார் கோயிலுண்டு அதன்பக்கமெண்ணாயிரங் காதமப்பா, கண்ணபிரான்றானிருக்கு கோயிலு

ண்டுகருந்தூரமானிடர்கள் செல்லமாட்டார், தண்ணமுடன் மகா கோடிமுனிவர்சித்தர் சதாகாலவாசமது செய்வார்தானே. 686

தானனகோயில்குள மதிகங்காணு தாக்கானமானிடர்கள் காணுதேசம், பானனவூர்வனமுமில்லாத்தேசம் புகழான மலைகுகைகள் கண்டோரில்லை, தேனனதேன்விளையுங்கதண்டுக்காடு தெற்கான தேசமதுசுள்ளர்நாடு, மானனவழகர்மலை புத்தூராகு மகத்தானவைகை நதிபூமியாமே. 687

ஆமேதானத்திநகராசேர்மந்தான் அயோத்திநகராற்றேரங்கரை தானகும், வேமேதான்விலாடபுரி குகையோரந்தான் வெளிக்காடு பூமியெல்லாமளவேயாகும், நாமேதான்கண்டபடி பின்னஞ்சொல்வோம் நாதாக்கள்தானெடுக்கும் வளமுஞ்சொல்வோம், போமேதான்பொன்னகரமேருபக்கம் பொலிவானஸ்தலமுண்டு புகலக்கேளே. 688

கேளேதான்ஸ்தலமதுவும் தேவஸ்தானம் கெடியானகோபுரமும்தங்கமாகும், காளேதான்விக்கினங்கள் தங்கமாகும் கடலான மதிளெல்லாம்தங்கமாகும், ஆளேதான்கண்டறியாதேவதானம் ஆத்தானமண்டபமுந்தங்கமாகும், மீளேதான் வாகனங்களெல்லாந் தங்கம் மேலானபூமியெல்லாந் தங்கமாமே. 689

தங்கமாம்தேரதந்தங்கவர்னம் தனியானபிரதமைகள் தங்கமாகும், அங்கமாலட்சுமியும் வாசஞ்செய்வாள் அங்ககாம்கண்டவர்களாருமில்லை, புங்கமாஞ்சித்தர்முனிரிஷிகள்தாமும் பொலிவான கூட்டமெத்தகோயிலுள்ள, சிங்கமுடன்கோபுரமாம் வாசல்தன்னில் சிறப்புடனேகாவலது கண்டேன்பாரே. 690

கண்டேனேவன்னகரஞ்சிலதுகாலம் கவனமுடன் குளிகையது பூண்டுகொண்டு, அண்டரண்டமுடையதொரு கோபுரத்தில அப்பனேயான்சென்று பார்த்தபோது, திண்டமுடனவ்விடத்தில்ரிஷிகளப்பா தேவாதிகோஷ்டமுடன் தியானஞ்செய்வார், தெண்டமுடனவரைக்கண்டபோது திடுக்கிட்டுமனங்கலங்கி தியங்கிட்டேனே

தியங்கட்டுவடியேனும் காலாங்கிதன்னைத் தியக்கமுடன் தானினைத்துவிழித்துப்பார்த்தேன், மயங்கிட்டயெந்தனையும் ரிஷிகள்பார்த்துமனமிறங்கிதிரமுடன் வதீதஞ்சொன்னர், தயங்கிட்ட யெந்தனையும்யாரென்றுகேட்கத் தாழ்மையுடன்சிரங்குவித்து வணக்கஞ் சொன்னேன், நயங்கிட்டுவடியேனும் குளிகைபூண்டு நாட்டமுடன் பூவினையும் தேசம்வந்தேன். 692

வந்தேனேபூமிவளங் காணவந்தேன் வளமையுடன்நாதாக்களெ டுக்கும்ஸ்தானம், சந்தேகமில்லாதவனந்தானுடு சார்புடனே மலைகு கைகள்யாவுங்கண்டேன், தொந்தமுடன்நதிகரைகள் யமுனையாவும் தோறுமல் குளிகைகொண்டு சுத்திப்பார்த்தேன், எந்தனிடதைரியங் கள்மிகவுமாகி யேகினேன்பொன்னகரங் காணத்தானே. 693

காணயிலேதேவஸ்தான பெருமைகண்டேன் கைலங்கிரிவாசங் களிதற்கீடல்ல, வேணவே வதிசயங்களெல்லாம்பார்த்தேன்விளேகின் றபூரீரும்காரமெத்த, தோணவே மானிடர்களெடுக்கமாட்டார் தொ லைதூரதேசமுந்தொடரமாட்டார், மாணவேவந்தாலு மாண்டுபோ வார் மகிதலத்தில் சித்தருடதேசந்தானே. 694

தேசத்தைக்கண்டாலுமாண்டுபோவார் தெரிசித்தால்சித்தர்களு ஞ்சாபஞ்சொல்வார், பாசத்தைவிட்டொழித்து வந்திட்டாலும்பதை யாமற்காரத்தால்சாவாதாமும், வேஷத்தைபோட்டுமல்லோ வீணர் கூடி, வெகுவெகுவாய் வளம்பார்ப்பார்கோடிகோடி, தேசத்தை விட் டொழியார்மாய்கையாலே நெடுந்தூரஞ்செல்லார்கள் சண்டிமாடே.

மாடானசண்டிகளைவிட்டுநீங்கி மார்க்கமுடன்குளிகைகொண்டு பார்க்கவந்தேன், காடானவனுந்திரங்கள் குகைகள்கண்டேன்கனமா னசித்தரிடமார்க்கம்பார்த்தேன், கோடானகோடிமுறையாவும்பார்த் தேன் குறிப்புடனே பொன்னகரம் கண்டுவந்தேன், சேடானபகவா னால் சொல்லலாகா சிறப்பான பொன்நகரங் கண்டேன்தானே.

கண்டேன்சதாசிவத்தின் கோயில்கண்டேன் கைலங்கிரிவாச ரையான்கண்டதில்லை, தொண்டுசெய்யும் ரிஷிமுனிவர்பாதங்கண்டே ன் தோராதவர்ச்சனைகள்யாவும் பார்த்தேன், அண்டரண்டசராசரங் களிதற்கீடல்ல ஆதிசேடன்தன்னாலுங் காணலாகா, தெண்டமுடன் மேற்புறவாசல்வந்தேன் தேவரிஷியென்றொருவர் முனிகண்டேனே.

முனியானரிஷிசித்தர்யானுங்கண்டேன் மூலஸ்தானப்பெருமை கோயில்கண்டேன், கனியானவடலாசல் சேர்வைகண்டேன் தாக்கா னபொன்கோபுரவாசல்கண்டேன், தொனியானவாத்தியங்கள் வழங் கக்கண்டேன் தோராதகண்ணபிரானுஞ்சல்கண்டேன், இனியானத டாகங்கள்படிகளெல்லா மியலானதங்கமது வர்ணமாமே. 698

ஆமேதான்வண்ணங்களெல்லாம்பார்த்தேன் அதற்கப்பால்பூமி யிடாதங்கண்டேன், தாமேதானின்னகரம்பூரீரப்பா தாக்கான சித் தர்களுங்கண்டமார்க்கம், போமேதான்முந்நூறுகாதந்தானும் பொ லிவானபூரீறவிளையும்பூமி, தாமேதான் கண்டுவந்தேன் பூரீர்தன்னை நாட்டிலேகண்டவர்களில்லைதானே. 699

தானேதான்கண்டமட்டுங் குளிகைகொண்டேன் தயவுடனே மாணுக்கள் பிழைக்கவென்று, நானேதான்சித்தர்முனி சொன்ன நூலை நலமுடனேயாருய்ந்து வளமுங்கண்டு, மானேதான்தேர்ந்தெடு த்தேனிந்ததேசம்மகத்தானதேசங்க ளிதற்கீடல்ல, பானேதான்முன் சொன்னதேசமெல்லாம் பாங்கானபூநீறுக் காதியாச்சே. 700

பூநீரெடுக்கவிதி

ஆச்சப்பாபூநீறு யெடுக்குமார்க்கம் அப்பனேவிதிசொல்வேன் மதியாய்க்கேளு ., பேச்சப்பாசித்தருடசாத்திரத்தில்பிரட்டானதை மறப்பு வதீதமெத்த, காச்சவேபூநீரை யெடுக்குஞ்சைதை கருவாகச் சொல்லவில்லைசாத்திரத்தில், பார்சனுடன்காலாங்கி வைபர்பாதம் கருணையுடன்றுள்பணிந்து உறுகுவேனே. 701

கூறுவேன்பங்குனியாம் பருவந்தன்னில் குறிப்புடனே நாதாக் கள் சொன்னமார்க்கம், மாறுபடுபேதனங்கள்கண்டாராய்ந்துமதிதல த்தில்பூநீறு காய்க்குங்காலம், வேறுடனேராக்காலஞ் சாமத்திலிரு ப்பமுடன் காட்டகத்தே சென்றுமேதான், சாறுடனேகாடெல்லாம் திரிந்துபார்த்தால் சதிரானபூநீறு பூக்குந்தானே. 702

பூர்க்குமேபூநீறு கதிர்போலாகும் பொங்கமுடன்றுனெழும்பி மலர்போல்வீழும், நீர்க்குமேவிடியநற்சாமந்தன்னில் நிலையாதுபூநீறு காரம்போச்சு, தீர்க்கமுடன்காரமது யில்லாவிட்டாலும் தெளிவான பூநீரைவாரிவந்து, மார்க்கமுடன்றுன்கரைத்து தெளிவிறுத்தி மயங் காமல் தீட்சையது பத்துசெப்பே. 703

செய்யவேயின்னமொரு வயணங்கேளு செழிப்பானசித்திரை யாம் பருவகாலம், பையவேபூரணையாம் பட்சந்தன்னில் பாங்கான நடுச்சாம வேளைபார்த்து, மெய்யவேபூநீறு விளையுமாற்கம் மேன்மை யுடன்கண்டறிந்து யெடுக்கும்போது, தொய்யவே தேவதையின் பூசைவேண்டுந் தோராமல்வட்சரத்தை மாறிக்கொள்ளே. 704

கொள்ளவேதீட்சைவிதி மார்க்கந்தன்னை குறிப்பாகத்தான்செ ய்து முடிப்பாயானுல், எவ்வளவுங்கோளாறுநேராதப்பா என்மகனே குருமுடிக்கும் வகையைத்தேடு, விள்ளவேபூமியுடவளமுஞ் சொன் னேன் விருப்பமுடன்நாதாக்கள் துறையுஞ்சொன்னேன், மெள்ள வேயன்றுலேழாயிரந்தான் மேன்மையுடன் கண்டறிந்து யோகந் தேடே. 705

தேடையிலேபோகரிஷி சொன்னமாற்கம் தெளிவாகயாருந் தான் சொல்லாரப்பா, நீடையிலேவாசனத்துக் குறதிசொல்வேன்

நெடிதான மான்தோ லாசனந்தானும், அடையிலேகாவிகாஷாய மாகு மப்பனேயடிவேட்டிமுழந்தானுவு, முழங்கால்மட்டும்முக்கிய மாய்த்தானணிதல் முறைமையாமே. 706

முறைமையாய்த்தானிருந்து யோகவெட்டி முடிமீதுதானணிந்து யோகஞ்செய்வாய், நிறைமையாய்கைகாலை முடக்கவேண்டும்நித்தியமும்வாசிதனை நடத்தவேண்டும், நிறைமையாய்வட்சரத்தை மாறவேண்டும் தீர்க்கமுடன்சின்மயத்தி லேறவேண்டும், வறைமையாய் சூட்சாதிவாராதாரம் வகுப்புடனேயறிந்தவனே யோகியாமே. 707

பூநீரெடுக்க மறுபாகம்

யோகியாமின்னமொரு மார்க்கங்கேளுநெடிதான சித்திராப்பர்வ முன்னே, ஆகியேபூமிவயந்தன்னைப்பார்த்து அப்பனேயளர்பூமியாராய்ந்தேதான், பாகியேயோராளினுழமட்டும் பாங்குடனேயளர்களத்தை யாராய்ந்தேதான், மாகியேகிட்டணைகள் மிகவுஞ்செய்து மார்க்கமுடன்பன்னுடை மேலேசாத்தே. 708

சாத்தவேமூன்றுநாள் சென்றபின்பு சாங்கமுடன்றான்சென்று பார்க்கும்போது, ஏத்தமுளவளர்போல யிருக்கும்பாரு என்மகனே வாரியதை பீங்கானிட்டு, தூத்தமுடன்பனிநீரால் கரைத்துமேதான் தோராமல்சத்துமுறை தெளிவிறுத்து, மாத்தமேமறுசட்டிக்குள்ளே வார்த்து மயங்காமல்பத்துமுறை காச்சுகாச்சே. 709

காய்ச்சவேவுப்பதுவு மிகவேபூர்க்கும் கருவானவுப்பதுவுங்காரமெத்த, மாய்ச்சலுடன்சரக்குக் கடுங்காலனுக்கும் மகத்தானவேதையிதுகோடிக்கொவ்வும், தீய்ச்சலுடன்வுப்புக்கு தீட்சைசெய்துதிறமுடனேகாயத்துக் குறுதிபண்ணு, பாய்ச்சலுடன்முப்பூவுந் தின்றுயானல்பாங்குடனே தேகமது யிறுகுந்தானே. 710

தானனகாயத்தை நிறுத்தவேண்டும் சதாகாலம் சுக்கிலத்தைக் கட்டவேண்டும், வேனனமும்மலத்தை யறுக்கவேண்டும் வெளியான சிதாபாசம் நீக்கவேண்டும், பானனமுச்சுடரை யறுக்கவேண்டும் பாழான நூலமதை வெறுக்கவேண்டும், மானனபராபரியை நிர்த்தஞ் செய்து மானிலத்தில் வாழ்பவனே சித்தனாமே. 711

மேருவுக்கு இடபாகத்தில் கண்ணபிரான்
ஸ்திரீகள் லீலைமண்டபத்தை போகர்கண்டது

சித்தனுங்காலாங்கிநாதர்பாதம் சிறப்புடனேபோகரிஷியடிபணிந்து, சுத்தமுடன்மேருவுக்குயிடபாகத்தில் சுடரொளிபோல்மடுவொ

ன்றுநதியொன்றுண்டு, முத்தமுடன்மண்டபமுஞ்சுனையுங்கண்டேன்
முயலானமண்டபத்தி னருகேசென்றேன் கர்த்தனெனுங் கண்ணபி
ரான்மாளிகண்டேன் கதிரொளிபோநவரத்தின கசிதந்தானே. 712

கசிதமாமண்டபத்தினடியோரந்தான் கதிரோனைக் கண்மறைக்
கும் சித்தரப்பா, நிசிதமுடன்தவநிலையில் வணங்கிநிற்பார் நீடூழிகால
வரைக்கண்டதில்லை, உசிதமுடன் கண்ணபிரானானவற்கு வுற்பன
மாங்குளிகையது மிகவேசுவார், றுசிதமுடன் குளிகையது பூண்டு
கொண்டு துரைராஜர்சதாநித்தம் கலவிசெய்வார். 713

செய்வாரே பன்னிரண்டாயிரந்தான் சிறப்பான தேவதாபெண்
கள்தானும், உய்குவாரெட்டெட்டுகலவியோடு வுற்பனமாம்நிசித
களை யார்செய்வார்பார், மொய்க்குழல்மார்தானிருக்கும் பளிங்குமா
டம்மூம்மணியாம் தேவரிட வாசீர்மந்தான், நெய்தலுடன்கொட்டி
யவர்தாமரைப்போல் நேரானதடாகமது கண்டேன்பாரே. 714

போகர் ஸ்ரீகிருஷ்ண மண்டபத்தில் சித்தர்களைக்கண்டது

பாரேதான்தடாகத்தில் கோடிசித்தர் பாங்கானயாதவத்தின்
சித்தராகும், நேரேதான்தடாகத்தில் கீழ்பாகத்தில் நெடிதானசித்
தாகளோ குறும்பராகும், சேரேதான்தடாகத்தின் மேற்பாகத்தில்
சிறப்பானசித்தர்களோ மூலவர்க்கும், ஊரேதான்தடாகத்தின் குண
பாகத்தில் வுத்தமனேகன்னடியர் சித்தராமே. 715

ஆமேதான்சித்தருட வளமுங்கண்டேன் அதற்கப்பாலவருடை
யவுளவுங்கண்டேன், தாமேதான்தவநிலையி னுறுதிகண்டேன் சாங்க
முடன்வயதல்லோலக் கோயிலில்லை, போமேதான்குளிகையது பூண்
டுகொண்டு பொங்கமுடன்தவநிலையி லெதிரில்நின்றேன், வேமேதான்
சித்தர்களுமென்னைகண்டு வெகுவெகுவாய் மாருட்டஞ் செய்தார்
பாரே. 716

செய்யவேயடியேனுங் குலைநடுங்கித் திடுக்கிட்டுமெய்மறந்துயே
ங்கிநின்றேன், பையவேயெந்தனையாரென்றுகேட்க பட்சமுடன்கா
லாங்கிதனைநினைந்து, மெய்யுடனேயென் பேருபோகர்யென்றேன்மெ
ய்ச்சிபயெனக்கு யுபதேசஞ்சொன்னார், வலமையுடனே லலாட
மதில் பூண்டுகொண்டு மகத்தானகண்ணபிரான் தனைக்கண்டேனே.

கண்டேனேகண்ணபிரா னருகில்வந்தேன் கனமுடனேயவர்பா
தம் போற்றிசெய்தேன், தொண்டனெனுமடியேனுந் தாள்பணிந்து
துரைராஜர்முன்பாக நிற்கும்போது, தெண்டமுடன்மண்டபத்தி
னருகேநீதான் தீவிரமாய்போய்வரலாமோ சித்தாவென்றார், பெண்
டுகள்தாமிருக்குமிடந்தெரியாதோ போனபோகரிஷி சாபந்தானே,

சாபமதுசொன்னவுட னடியேன்தானும் சாங்கமுடன்கண்ண பிரான்தன்னைநோக்கி, வேகமுடன்காலாங்கிதனைநினைந்து விகற்ப மதுயெந்தனுக்கு நேர்ந்ததென்று, சாகமுடனடியேனுஞ் சாபம்நீக் கித்தாரணியில்பிழைப்பதற்கு கெதிதானென்ன, பாகமுடன்கண்ண பிரான்மனமும்வந்து பட்சம்வைத்து யெந்தனுக்கு மொழிசொன் னாரே. 719

சொன்னாரேகண்ணபிரான் மனமுவந்து சுட்டெரிக்கபோகரை யுமனதிலெண்ணி, நன்னயமாய்குளிகைகொண்ட போகர்தன்னை நய முடனேதாமுரைப்பார் தீதமெத்த, பன்னகசாலையிலிருக்கும் பாங்கி மாரைப்பார்த்ததினாலுந்தனுக்கு கெடுதியாச்சு, வன்னயமாயெந்த னையுமெடுத்துக்கூற வாகுடனேமறுபடியும் வணங்கிட்டேனே. 720

வணங்கிட்டேபோதையிலே சித்தரெல்லாம் வாகாகவோடிவந்து யென்னைச்சூழ்ந்தார், பிணங்கிட்டயெந்தனையும் ரிஷிகள்பார்த்து பிரி யமுடனோடிவந்து பின்னுஞ்சொல்வார் தணங்கிட்ட யெந்தனுக்கு சொன்னதென்றால் தயவுடனேபோகரிஷி சொல்லக்கேளும், சுணங் கிட்டுகண்ணபிரான்மண்டபத்தில் துறைகோடிரிஷிமுனிவர் போனார் காணே. 721

காணேமேயிதுநெடுநாள் சித்தர்தம்மைக் காத்திருந்தோம்நெடு நாளாய் நதியோரத்தில், காணவேதேவாதிரிஷிகளெல்லாம் நலமுட னேயன்றாடம் வருவார்போவார், வேணவேவுபசாரம் நடக்குமிங்கே விசையுடனேமண்டபத்தில் போனாரில்லை, ஆனவேயும்முடையவிறு மாப்பாலே ஆக்கினையைதான்கடந்து வந்திட்டீரே. 722

போகருக்குச் சாபங்கொடுத்தது

வந்ததினாலுந்தனுக்குச் சாபமப்பா வரைகோடியுகவருஷம் தந் தோம்காணும் தொந்தமுடன்றான்கொடுத்தார்சித்தரெல்லாம்தொல் லுலகில்போவதற்கு யிடமுமில்லை, சந்தமுடன்கிருஷ்ண மண்டபத்தி னோரம்சாங்கமுடன் றானிருந்தேன் சிலகாலந்தான் கந்தமுடன் பெண்களெல்லாம் நதியோரத்தில் கலந்துமேசலக்ரீடை செய்யவந் தார்தாமே. 723

தாமேதானெந்தனையுங் கண்டாரப்பா சதகோடிசூரியர்போல் கண்டேன்யானும், காமேதான்பெண்களெல்லாம் கிட்டிவந்தார் கண் டாரே யெந்தனையும் பெண்களெல்லாம், வேமேதான்யெந்தனையும் யாரென்றார்கள் மிக்கவுமேதான்பணிந்து யடிவணங்கி, நாமேதானிவ் வூறுதேசமல்ல நலமுடனேசினபதி யென்றிட்டேனே. 724

என்றவுடன்பெண்களெல்லா மதிசயித்து ஏற்றமுள்ளசிறுபாலா யேன்தான்வந்தீர், கன்றுடனேபசுநீங்கும் கதையைப்போல பாங்கி

யற்குப்பரிதாபமெடுத்துச்சொன்னேன், நன்றுடனேகாலாங்கிசீஷன ம்மாநாட்டிலுள்ளவளமெல்லாங் காணவந்தேன், தென்திசையில் நா னிருந்துகுளிகைபூண்டு சிறப்பானசீனபதி போனேன்தானே.

போனதினால் வதிசயங்கள்மெத்தவுண்டு பூதலத்தாருருந்தான் கண்டதில்லை, நானதினால் சிலகாலமங்கிருந்தே நயமுடனேபெண்க ளெல்லாம் வெண்மைகண்டேன், தானவனும்கமலமுனியங்கிருந்தார் சாஷ்டாங்கதெண்டனிட்டுத் தாள்பணிந்தேன், ஆனதினாலெந்தனுக் குவுபதேசங்களனேகமதாய் தானுரைத்தார் வதிசயந்தானே. 726

தானானவதிசயங்களனேகஞ்சொன்னேன் தகமையானசீனபதி சிறப்புஞ்சொன்னேன், வேனானமேருகிரிபோனேனம்மா வெழிலான விருவத்தோர்வரைதானுண்டு, கோனானயேழுவகைசொன்னேனம்மா கோடிமுனிசித்தர்களைக் கண்டேனென்றேன், பானானவடிவேலர்ந்த லமொன்றுண்டு பாங்கானபொன்மானுங்கண்டிட்டேனே. 727

கண்டேனேசித்தர்வர்க்கங் கோடாகோடி காணாதவரைதேசம னந்தமுண்டு, அண்டானமுனியறியாக் காடுங்கண்டேன், அங்குள்ள வதிசயங்களெல்லாஞ்சொன்னேன், பண்டமுடன்கிடாரங்கள் வைப் புசொன்னேன் பாங்கியர்களெல்லோரு மதிசயித்தார் தெண்டமுட னெந்தனுக்குச் சாபந்தீர்த்து திகழுடனேயனுப்பவென்று விடைகே ட்டேனே. 728

கேட்டவுடன்பெண்களெல்லாம் கிருபைவைத்துக் கிருபையுட ன்கண்ணபிரான் பக்கல்வந்து,கோட்டமுடன் பன்னீராயிரங்கள்பே ரும் நுணுக்கமுடன்றாமுரைத்தா ரென்னைத்தானும்,தேட்டமுடன் சீனபதியிருந்தசித்தன் திறமுடனே லோகமெல்லாங் காணவென்று வாட்டமுடன்குளிகையது பூண்டுகொண்டுவந்திட்டானும்பர்பதியெ ன்றிட்டாரே. 729

என்னவேபெண்களெல்லா மொன்றாய்க்கூடி யெழிலாகவெந்த னுக்குச்சாபம்நீக்க, நன்னயமாய்க்கண்ணபிரான தன்றமக்குநலமுட னேதாமுரைத்தாரதீதமெத்த, சொன்னவுடன்கண்ணபிரு கடாட்ச ம்வைத்து சுகமுடனேசித்தர்தம்மை தாமழைத்து, பன்னயமாய்சா பமதை நீக்கவென்று பட்சமுடனெந்தனுக்கு விடைதந்தாரே.

விடைதந்தார்சித்தர்களுந்தானுங்கேட்டு விரைவுடனேயோடிவ ந்துவுண்மைகூறி, படையுடனேகூட்டமதாயொன்றாய்கூடிப் பரிவா கவுபதேசம்பாலித்தேதான், சடையுடனேரிஷிமுனிவர்சித்தர்தாமும்

சமைத்திட்டார் சாபமதையெந்தனுக்கு, தடைநீங்கிகண்ணபிருன்வி டைகள்பெற்றுச் சாங்கமுடன்சீனபதி வந்திட்டேனே. 731

கமலமுனியைக்கண்டது.

வந்தவுடன்கமலமுனிதன்னைக்கண்டேன் வாகுடனேகண்ணபி ருன்வளமைசொன்னேன், நொந்துமனமுருகியல்லோ சித்தரெல்லா ம் நொடிக்குள்ளேயெந்தனுக்கு சாபம்சொன்னார், வந்தபெண்களெ ல்லாருமென்னைக்கண்டு கருணைபெறசாபமதை தீர்க்கவென்று, அந்த முடன்கண்ணபிருன் பக்கல்சென்று அடிவணங்கிசாபமதை தீரென் றாரே. 731

என்றயிலேகண்ணபிருன் முனிவர்தம்மையெழிலாகத்தாமழை த்து வுறுதிசொன்னார், அன்றையிலேரிஷிமுனிவர்சித்தர்கூடி அகமு டனேமுகமலர்ந்து சாபநீர்ந்து, இன்றையிலேசாபமது தீர்ந்ததெ ன்று யெழிலுடனேசீனபதி போகவென்று, சென்றுடனேபோகவெ ன்றுவிடையுந்தந்தார் சிறப்புடனே தம்பாதங்கண்டிட்டேனே.

கண்டேனேகாலாங்கி கடாட்சத்தாலே கருணைபெறயெந்தனுக் குவிடைதாவென்ன, தெண்டமுடன்விடைபெற்று நிடததேசம்திரு ம்பினேன் குளிகைகொண்டு வெகுகாலந்தான், தண்டுலவுமாலயனைத் தரிசித்தேதான் சாங்கமுடன் நளபதியைக்காணவென்று, அண்டமு டன்குளிகையிட்டுராஜதேகம் அப்பனேவந்திட்டேன் யானும்பாரே.

போகர் நளபதியைக்கண்டது

பாரேதான்ருஜாதிசக்கிரவர்த்திப் பரிவானமாளிகையுங் கோட் டைகண்டேன், சீரேதான்சித்திரரதம் தங்கமாகும் சிறப்பானகோட் டைகளும் குருந்தக்கல்லாம், நேரேதான்வைடூரியமண்டபந்தான்நெ டிதானவாகனங்கள் தக்கவன்னம், ஊரேதான்பொன்னகரங் கைலை யென்பார் வுத்தமனேநளபதிக்கு யீடாகாதே 735

ஈடானதேசமதுகண்டோருண்டோ யெழிலானமாபுரமும்தங்க வர்னம், கோடாகோடிபொருளங்கங்குண்டு குகையுண்டு சுனையுண்டு தடாகமுண்டு, வூடானமிருகங்க ளனேகமுண்டு வுத்தமனே புலிபசு வுமொன்றேடொன்று, காடானவனுந்திரத்தி லுறவுகொண்டு கரு ணையுடனெப்போதும் குடியுமாமே. 736

ஆமேதான்கோட்டைக்குள் குளிகைபூண்டு அப்பனேசுரங்கத் தின்வழியதாக, நாமேதான்சென்றல்லோ பார்க்கும்போது நாட்டமு டனரசாட்சிக்கொலுக்கூடந்தான், போமேதான்கிட்டயல்லோ சென் றுநின்றேன்பொலிவான நவரத்னங் கசிதத்தாலே, மாமேதான்பிரத மைகள்சூழ்ந்துநிற்க மயக்கமுடன் சிம்மாதனங் கண்டேன்தானே.

தானானமேற்புறத்தில் பக்கஞ்சென்றேன்தாக்கானகொலுமாளி
சலவைக்கூடம், வேனானகற்றாணும் வயிரக்கல்லாம் வெழிலானபக்க
மெல்லாம்பச்சைக்கல்லாம், மானானதேவதச்சன் மயனினாலேமார்க்க
முடன்புஷ்பரதமொன்று கண்டேன், கானானகைலாசமென்பார்தா
னுங் காசினியிற்கண்டவரை விண்டிலேனே. 738

விண்ணவேதலைவாசல் பக்கம்போனேன் விராஜனிடகாவல்கண
மாயிரம்பேர், திண்ணமுடனங்கிருந்தார் தவசியோர்கள் தீர்க்கமுட
ன்யெந்தனையுங்கண்டிட்டார்கள், எண்ணமுடன் யானுமல்லோ கண்
டபோது எனைக்கொல்ல திருஷ்டித்துப் பார்த்தாரென்னை, அண்ண
லென்றகாலாங்கிதனைநினைந்தேன் அப்போதே யெந்தனையுஞ் சூழ்ந்
திட்டாரே. 739

சூழவேயடியேனுங்கிடுகிடுத்து துப்புறவாய்தான்பணிந்துசரண
ஞ்சொன்னேன், தாழவேகாவற்காராயிரம்பேர் சார்புடனே யெந்த
னையுமாரென்றார்கள், மீளவேயானுமல்லோ தீரங்கொண்டுமேன்மை
யுடனவர்களுக்கு வதீதஞ்சொன்னேன், ஆளவேயெந்தனையும்வரலா
ர்கேட்டார் அப்பனே அடிமுதலுமுரைத்திட்டேனே. 740

உரைதேனேவதிசயங்க ளெல்லாஞ்சொன்னேன் வுலகமெலா
ஞ்சென்றதொரு கீர்த்திசொன்னேன், இரைத்தேனே தேசத்திலுள
வுமாற்க மெழிலாகக்கேட்டவுடன் கிருபைகூர்ந்து, வுரைத்துடனே
யெந்தனையுமழைத்துமேதான் வாகாகக்கோட்டைக்குள்கொண்டுசெ
ன்று, நிரைத்துடனே சித்தர்முனிகாவர்காரர் நிறையுடனே காண்பி
த்தாரதீதந்தானே. 741

தானானநளபதியின் கிடாரங்கண்டேன் தாக்கானசுரங்கத்தினு
ளவுகண்டேன், வேனானபச்சையென்ற மாளிகண்டேன் வெழிலான
கெம்பினிட மதிலுங்கண்டேன், மானானதன்வாசல் நான்குபக்கம் ம
ன்னனிடகாவல்களாஞ் சிங்கமுண்டு, பானானமதிலோரம் கானாருண்
டு பக்கமெல்லாந் தேக்கினிடக்காடுமாமே. 742

காடானகோட்டைக்குள் மானியேழு கருவானமண்டபங்கள
னேகமுண்டு, வீடானமாபுரத்தில் சித்தர்கோடி விடுதியாய்த்தாமிரு
ப்பார்கூறப்போமோ, நீடானமலையுண்டு சுனையொன்றுண்டு நித்திய
மும் சித்தர்முனிவாசஞ்செய்வார், நாடானமனிதர்களுங் காணமாட்
டார் நாட்டிலேகண்டவர்க ளில்லைதானே. 743

இல்லையேயின்னமொரு மார்க்கங்கேளும் யியலானராஜனிடதே
வீகோட்டை, பல்லையாம்வெகுதூரங்காந்தமாகும் பாரினிலோராசர்க

ட்குகிட்டுமோசொல், மல்லவேதமயந்திபூணூரந்தான் மாற்கமுடன் கண்டுவந்து யேங்கிநின்றேன், சொல்லவே பூணூரந் தனனைத்தானும் சூட்சமுடன்கண்டுவந்தேன் போகர்தாமே. 744

தாமேதான்சித்தர்முனிரிஷிகள்தாமும் தயவுடனே யெந்தனுக் குவதீதஞ்சொன்னார், போமேதான் குகைமுதலும் கிடாரந்தன்னை பொங்கமுடன் தான்கொண்டுகாண்பித்தார்கள், நாமேதான் கண்டும னமுவந்துமெத்தநாதாக்கள் கிருபையது மிகவும்பெற்றேன், ஆமே தான்விசுவாசமருளும்பெற்று அப்பனே சினபதியமர்ந்திட்டேனே.

போகர் அகஸ்தியர்மலைகண்டது.

அமர்ந்திட்டே தின்னமொருமார்க்கங்கேளு அப்பனேகுளிகை யதுபூண்டுகொண்டு, தமர்ந்திட்டவகஸ்தியனார் மலையைக்கண்டேன் தாக்கானமலையோரம் சென்றபோது, கமர்ந்திட்ட சித்தர்முனி கோ டானகோடிகண்டிட்டாரெந்தனையும்பார்நீயென்றார், சுமர்ந்திட்டகா லாங்கிநாதர்பாதம்சுடரொளியின்பாதாம்புயத்தைநினைத்தேன்பாரே.

நினைத்துமேகாலாங்கி சீஷனென்றேன் நேரானபோகரிஷியென் பேரென்ன, முனைத்துமேசித்தரெல்லா மொன்றாய்க்கூடி முனையான வகஸ்தியனார்பக்கல்சென்று, திளைப்புடனேவாய்பொத்திகரங்குவித் துதேவனேசாஷ்டாங்கஞ்சரணமென்றார், பனைப்புடனேவகஸ்தியரு ங்கண்டுமேதான் பட்சமுடன் தானுரைப்பார் சித்தர்தாமே. 747

சித்தர்முனிரிஷிமுதலோரொன்றாய்க்கூட்டி தெட்சணாமூர்த்தி யிடம்வந்ததென்ன, சத்தமுடனெல்லவரு மொன்றாய்ச்சேர்ந்துசதா சிவமேசுடரொளியே தயாளவானே, பத்தியுடன்காலாங்கி சீஷனெ ன்று பாரினிலேபேர்படைத்த சித்துவொன்று, முத்திபெற தங்களி டங்காணவென்று முறைமையுடன்குளிகைகொண்டு வந்திட்டாரே.

வந்திட்டாரென்றதுமே கும்பமுனிவாகுடனே வருகவென்று விடைதந்தாரே, பந்திட்டயெந்தனையும்பட்சம்வைத்துப் பாருடனே குகைக்குள்ளேகொண்டுசென்று, முந்திட்டசாத்திரங்க ளெல்லாங் கேட்டாமோசமில்லையென்றெனனைக் கொண்டணைத்து, தந்திட்டா ரெந்தனுக்குநாலுமீய்ந்தார் சதகோடிவித்தைகளுங் கற்பித்தாரே.

கற்பித்தார்பிரமமென்றவித்தைதானும் கருவானயேமத்தின்வி த்தைதானும், உற்பித்தசாத்திரத்தி னுளவையெல்லா மொன்றாகத் தானெடுத்துவுபதேசித்தார், கற்பித்தகருவுகாணுதியெல்லா மார்க்க முடன்றான்கொடுத்தாருவமையாக, தற்பித்துசெய்துமல்லோ புத்தி கூறி சகலகலைக்கியானமோதிட்டாரே. 750

ஓதவேயடியேனுக்குறுதிசொன்னார் வுத்தமனேபோகரிஷி சொல்லக்கேளும், நீதமுடன்சாஸ்திரங்களெல்லாங்கற்றீர் நிலையானகாயத்தைநிறுத்தக்கண்டீர், தோதமுடன்சித்தருட குளிகைகொண்டீர் தோராதகீர்த்தியுடன்சீனம்சென்றீர், பாதமுடன் காலாங்கியருளும் பெற்றீர் பட்சமுடன்சித்தருட வரங்கொண்டீரே. 751

கொண்டீரேபோகரென்றபெயருங்கொண்டீர் குவலயத்தில்சித்தருடமகிமைகண்டீர், அண்டரண்டசராசரங்க ளனைத்துங்கண்டீர் ஆகாயப்பூமிமுதலுளவாராய்ந்தீர், திண்டமுடன்ராஜாதி ராசர்சேர்வை திறமுடனேயவர்கள்வைத்த கிடாரங்கண்டீர், மண்டபங்கள் தடாகமுதல்குகையுங் கண்டீர் மன்னவர்கள்ராச்சியங் கள் கண்டீர் பாரே. 752

கண்டதினால்கீர்த்தியுண்டு குற்றமில்லை கைலாசநாதரைப்போல் சித்தரப்பா, மண்டபங்கள்கடலோரம் ரிஷிகள்தானும் மகாகோடி மகானுக்கள் மிகவுண்டப்பா, தெண்டமுடனுந்தனுக்கு சாபமீவார் தெளிவாகவவர்களிடஞ் சொல்லவேண்டாம், அண்டர்முனிபோலவரும்வதீதங்கேட்பார் அப்பனேதாள்பணிந்து வுரைசொல்வீரே.

சொன்னதினால்சாபமது கிடமுருது தொல்லுலகினுன்னையொரு சித்தனென்பார், நன்னயங்கள்தாமுரைத்து நலமும்பேசி நாட்டினுள்ளவளப்பமெலாங் கண்டாராய்ந்து, வின்னமிலாவரமுடனே சாபம் நீக்கி வேதாந்தத்தாயினது வருளும்பெற்று, முன்னமாய் பெரியோர்கள்வரமும்பெற்று முகைமையுடனேசீர்மவருள் தந்தாரே. 754

போகர் இரத்தினகிரி கண்டது

அருள்பெற்றுபோகருமே சீனஞ்சென்று அங்ஙனவேபோயிருந்து சிலதுகாலம், தெருளுடனே வித்தையெல்லாம் செய்துபார்த்து தேவதைக்கொப்பான மாந்தருக்கு, பொருளுடையகருவான வதீதவித்தைப் புகட்டினார்சீனமென்ற மாதருக்கு, இருளகலப்போதித்துப் போகர்தாமும் யெப்போதும்போலாகப் பறந்திட்டாரே. 755

பறந்திட்டார்சீனபதி விட்டுநீங்கி பாங்குடனே குளிகையது பூண்டுகொண்டு, மறந்திட்டகாலாங்கி தனைநினைந்து மார்க்கமுடன் இரத்தினகிரி மலைமேற்சென்று, துறந்திட்டசித்தர்களைக் காணவென்று துரைராஜர்வீற்றிருக்கும் பக்கல்சென்று, நிரைந்திட்ட முனிவரிடம்நின்றுபேச நீனிலத்தில் போகரையா ரென்றிட்டாரே. 756

என்னவேயடியேனுந் தாள்பணிந்தேன் யெழிலான காலாங்கி தனை நினைந்தேன், சொன்னதோர் சித்தர்கட்கு விடையுஞ்சொன்

னேன் சுடரொளியாங்காலாங்கி சீஷனென்றேன், நன்னயமாயென்னை யழைத்து குகையிற்சென்று நாதாக்களிருப்பிடமுங் காண்பித்தே தான், பன்னயமாஞ் சித்தர்களின் மறபுஞ்சொல்லி பட்சமுடனெந் தனுக்கு வழிசொன்னாரே. 757

வழியுடனே யிரத்தினகிரிமேலேசென்றேன் வாகுடனேரத்தின மென்ற கிரியிற்கண்டேன், அழியாதவாஸ்தான கோட்டைகண் டேன் அதற்கப்பால்திருமாலின் கோயில்கண்டேன், குழிபோலக் குகையுடனே புனலொன்றுண்டு கூரானமச்சமுனி சித்தனுண்டு, வழிபோகக்காண்பதற்கு துரையுமில்லை மகத்தானசித்தர்முனி காவல் தானே. 758

தானனகாவலிடம் சென்றுபோனேன் தயவாகயெந்தனையுங் கண்டிட்டார்கள், மானனமச்சமுனி யெங்கேயென்றேன் மகத்தான சித்தர்களுங் கொண்டுசென்றார், வேனனமச்சமுனி கண்டபோது வெகுவெகுவாயெந்தனிட மவர்சொன்னாரே, பானனதிருமூலர்பாட் டரெங்கே பார்த்துநெடுநாளாச்சு யென்றிட்டேனே. 759

போகர்திருமூலர் பாட்டரைசமாதியில் கண்டது

என்றையிலேபோகரிஷி சொன்னபோது யெடுத்துரைத்தார் திருமுகங்க ளனேகமுண்டு: நின்றையிலேசமாதியிடங் கொண்டுசெ ன்றார் நிலையானரத்னகிரி மலையோரந்தான், நன்மைபெற திருமூலர் பாட்டர்தம்மை நாதாந்தசித்தொளிவைக்காணவென்று, தண்மையுட னவர்பாதம் தொழுதுநின்றேன் க்ஷணத்திலேசமாதியது வெடிப்பு ண்டாச்சே. 760

ஆச்சப்பாசமாதியது வெடிக்கக்கண்டேன் அப்பனேதிருமூலர் பாட்டர்கண்டேன், மூச்சப்பாதானடங்கி பூமிக்குள்ளே மூன்றுயுக ந்தானிருந்த சித்துதன்னை, பேச்சப்பாவெகுபேச்சு பேசுதற்கு பீட முதல்தலைவாசல் முன்னேநின்றேன், நீச்சப்பாவாசனைக ளொன்று மில்லை நிலையானகற்பமுண்ட காயமாமே. 761

காயமதுவாசனைகள் கூறப்போமோ கடும்பச்சைப் பூரமென்ற வாடைவீசும், நேயமுள்ளமல்லிகைப்பூ மணம்போலெங்கும் நெருங் கவேவொட்டாது குகையினுள்ளே, சாயமென்றசீதகமது குங்குமம் போல் தரிசிக்கமானிடர்க்கு கிட்டுமோசொல், மாயமென்றசித்தொ ருவர் மகிமைசொல்ல மாளாதுவையகத்தில் மாளாதாமே. 762

மாளாதசித்தென்னைக் கண்டபோது மகிதலத்திலாரப்பாகாண வந்தீர், சூளாதசெனமில்லாச் சமாதியுள்ளே சூட்சமுடன்வந்தலுவ

லென்னவென்றார், கோளான வார்த்தைகளும் பேசவேண்டாம் குறி
ப்புடனேயிரண்டொரு வார்த்தைகள்சொல்லி, தாளானசமாதிதனை
மூடிப்போடு தரணியுள்ளசித்தரெல்லாம் வருவார்தாமே. 763

வந்தாரேயாமானால் கேள்விகேட்பார் வளமுடனேயவர்களுக்கு
விடைசொல்லவேண்டும், சிந்தனையையான்மறந்து பேசவேண்டும்பே
சாட்டாலவர்களுக்கு மனநோயுண்டாம், பாங்கானமூலவர்க்கக் கோ
டியுண்டு பந்துபந்தாய்வருவார்கள் சமாதியண்டை தொந்தரவுயென
க்கல்லோ மிகுதியாகும் துரைராஜசுந்தரனே சமாதிமூடே. 764

மூடனென்றுசொல்லுகையி லடியேன்தானும் முடிவணங்கிதெ
ண்டனிட்டுகெதியேதென்ன, நாடென்றபதிதனிலே வாழுஞ்சித்தர்
நாமிருக்குமிடந்தனையே யறியமாட்டார்,மாடென்றமனிதரப்பாமுழு
மக்கள்தாமுமுடையர்களோகோடானகோடிபேர்கள், கூடென்றகூடு
விட்டுப்பாய்ந்தேனென்று குவலயத்தில்கூக்குரலு மிகவுண்டாச்சே.

ஆச்சதினாலெந்தனையுமனேகம்பேர்கள் அதிசயமாய்க்காணவே
வருவார்மாண்பர், மூச்சடங்கிமூன்றுயுக மிருந்தேனப்பா முனையான
காலாங்கிசிஷன்தானும், பாச்சலுடன்குளிகையது பூண்டுகொண்டு
பட்சமுடன்வந்ததொரு சோதிதன்னால், காச்சலுடன் மூடிருந்தச
மாதிதானும் கடுகெனவேவெடித்துமல்லோ காணலாச்சே. 766

கண்டதினாலுந்தமக்குக்கருணைகூர்ந்து கடாட்சித்தேன் திருமூ
லர்பாட்டர்தானும், விண்டதில்லையொருவருக்கும்ரகசியார்த்தம் வே
தாந்தத்தாயினது கடாட்சத்தாலே, மண்டலத்திலுந்தனுக்குவுபதே
சித்தேன் மானிலத்தில்குளிகையது பூண்டுகொண்டு, தெண்டமுட
ன்சித்தர்களை வணங்கிநீயும் தேசமெலாங்குளிகைகொண்டு திரிவாய்
நீயே. 767

திரியென்றபோதையிலே விடையும்பெற்றுத் திரும்பினேன் சீ
னபதிகுளிகைபூண்டு, நெரியென்றசத்தியத்தைக் கைவிடாத நேர்ப்
பானவெள்ளையென்ற மாந்தர்முன்னே, பரியென்றகருவிகரணாதியெ
ல்லாம் பாங்குடனே வுபதேசம்செய்தேன்யானும், சரியென்று யெந்
தனையுமாசீர்மித்து சாஷ்டாங்கநமஸ்காரஞ்செய்திட்டாரே. 768

செய்தபின்புவடியேனுஞ் சீனந்தன்னில் சிறப்புடனே சிலகால
மிருந்தேனப்பா, மெய்யுடனே இன்னம்வெகுதேசம்காண மேதினி
யில்குளிகையது பூண்டுகொண்டு, கைதவமாய்சீனபதி விட்டுநீங்கிகா
லாங்கிநாதர்பதம் மனதிலுன்னி, பையவேயானுமல்லோபறந்தேனப்
பாபாரினிலேவயோததிகர் கண்டிட்டேனே. 769

போகர்அயோத்தியில் திருச்சங்குசமாதிகண்டது.

கண்டேனே திருச்சங்குசமாதிகண்டேன் கடலோரம் போயிற
ங்கிநின்றேனப்பா, அண்டர்முனிராட்சதர்களிருக்குங்கூட்டம்அணி
யணியாயவர்பாட்டன் சமாதிகண்டேன், தண்டுடனே ராட்சதாள்
கூட்டம்பக்கல் தாழ்மையுடன்போயிருந்து தெண்டஞ் செய்தேன்,
கொண்டென்னைதானணைத்து ராட்சதாக்கள் கொண்டுபோய்சமாதி
யிடம்விட்டிட்டாரே. 770

விட்டவுடனடியேனுந் தாள்பணிந்து விருப்பமுடன் காலாங்கி
தனைநினைந்தேன், கிட்டநின்றுபாலகனுமேசிரங்குவித்துக் கிருபையு
டன்திருச்சங்கைக்காணவென்று,திட்டமுடன்முழங்காலுசமாதியிட்
டுத்தீவிரமாயடிதொழுதுபோற்றிநின்றேன், சட்டமுடன்சமாதியது
தாள்திறந்து சடுக்செனவே சத்தமதுகேட்டிட்டேனே. 771

கேட்டவுடனடியேனுங் கிடுகிடுத்து கிருபையுடன் சாஷ்டாங்க
ஞ்சமர்ப்பித்தேதான், வாட்டமுடனெந்தனை யாரென்றுகேட்க வள்
முடனே சிறுபாலனுரைக்கலுற்றேன், பாட்டரென்ற திருச்சங் ரா
ஜன்தன்னை பாரினிலேகாண்பதற்கு மனமுவந்து, கோட்டமுடன்ச
மாதியிடம்வந்தேனென்றுநுட்பமதாய்போகரிஷிவுரைத்திட்டேனே.

உரைத்தேனே யெந்தனிடதீரத்தாலே வுத்தமனே காலாங்கி
கடாட்சந்தன்னால், திறப்புடனேகாலாங்கி சீஷனென்றேன்திகழுட
னேசீர்பாதங்காணவென்று, மரைப்புடனேகுளிகையதுபூண்டுக்கொ
ண்டு மார்க்கமுடன் சீனபதிவிட்டுநீங்கி, விரைப்புடனே சமாதியிட
ங்கண்டுவந்து விருப்பமுடன்வந்தேனே போகர்தானே. 773

திருச்சங்கு போகருக்குபுத்திகூறல்.

தானனபோகரென் றபோதேயப்பா தயவுடனே வென்மீதில்
பட்சம்வைத்துக், கோனனதிருச்சங்கு ராஜன்தானும் கொற்றவனு
ரெந்தனுக்கு வுபதேசித்தார், பானனபுத்திமதி மிகவுரைத்து பாங்கு
டனேகுளிகைகொண்டுபோமிடத்தே, வேனனசித்தர்முனி ரிஷிகள்
தாமும் வேணுமென்றேசபித்திடுவார் தப்பிக்கொள்ளே. 774

கொள்ளுவதுவுந்தனுக்கு புத்திமார்க்கம்கோளாறுநேராமல்சித்
தர்முன்னே, எள்ளளவும்பிசகின்றி நடந்துகொள்வாய் என்பேராவு
ந்தனுக்குசாபமில்லை, கள்ளமனமுடையதொரு சித்தரப்பா கண்டா
லேவுன்னையுந்தான் சபிப்பார்சித்தர், உள்ளபடிபோலாக வுறவுபேசி
ஒருகடிகைநேரமதில் சபிப்பார்பாரே. 775

பாரென்றபோதையிலே யானடுங்கிபட்சமுடன் பாட்டரையான் பரிவுகேட்டேன், நேரென்றசேதியெனக்கு பாட்டரென்றேன் விருப்பம்வைத்து யெந்தனுக்கு ஞானோபித்தார், சீருடனேயடியேனும் நடுநடுங்கி சிறப்புடனேவுபதேசம் பெற்றுக்கொண்டு, பேருடனே காலாங்கிதனைநினைந்து பேரின்பசாகரத்தை யடைந்திட்டேனே.

போகர் கமலமுனியைக் கண்டது

அடைந்தபின்பு குளிகையது பூண்டுகொண்டு அரசனுய்திருச் சங்கு விடையும்பெற்று, கடந்துமேயயோத்திநகர் தன்னைவிட்டுக் காலாங்கிநாதருட கிருபையாலே தொடர்ந்துமே சீனபதிக்கேகி யானும் துப்புரவாய்கமலமுனி பக்கல்சென்றேன், நடந்ததொரு சங்கிரகம் யானுரைத்தேன் நலமுடனேகமலமுனி மகிழ்ந்திட்டாரே.

மகிழவேயடியேனும் விடைகள்பெற்று மார்க்கமுடன் வெள்ளையென்ற மனிதர்பக்கம், நெகிழவேபோயிருந்து யாவுஞ்சொன்னேன் நெடிதான கருவிகரணாதியெல்லாம், மகிழவேமுடித்திட்டேன் தலைகீழாகச் சதாகாலம்வெள்ளையென்ற மனிதருக்கு, புகழவேசீனபதி யோர்கள்மெச்ச புகட்டினேன் வினோதமென்ற வித்தைதானே. 778

தானானவினோதமென்ற வித்தையப்பா தாரணியிலசெய்தவரும் பார்த்தோரில்லை, கோனானகுருவருளால் குளிகைபூண்டு குவலயங்கள்சுற்றியல்லோ முழுதும்பார்த்தேன், பானானகற்றவித்தை வீண்போகாமல் மாறாமல்சதாகால மென்பேர்கூற, வேனானவித்தைகளை விரும்பியானும் விபரீதமாகவல்லோ விரித்திட்டேனே. 779

விரித்துமேசீனபதி தன்னில்யானும் வெகுகாலம்நானிருந்தேன் மைந்தாகேளு, நெரித்துமேமறுபடியும் குளிகைபூண்டு நேரானசீனபதிவிட்டுநீங்கி, புரிந்துமேசத்தி யரிச்சந்திரன்றன் புகழானசமாதியிடங் காணவென்று, தெரித்துமேவயோத்திநகர் வடபாகத்தில் திறமுடன் சமாதிகண்டு புறப்பட்டேனே. 780

போகர்சத்திய அரிச்சந்திரன் சமாதிகண்டது

புறப்பட்டேன் குளிகைகொண்டு பறந்தேனப்பா பொங்கமுடனயோத்திநகர் வடபாகத்தில், துறப்புடனேசமாதிபுறம் காணவென்றுதுப்புறவாய் நதியோரம் போனேன்யானும், முறப்புடனே கிங்கிலியர் கோடாகோடி மூர்க்கமுடன் காவற்காரங்கிருந்தார், சிறப்புடனேயடியேனுங் காலாங்கிதன்னை சீர்பாதந்தனைநினைந்து கண்டிட்டேனே. 781

கண்டவுடன் கிங்கிலியராரென்றார்கள் காலாங்கி வையருடசீடனென்று, தெண்டமுடன்றிருச்சங்கு பேரனென்றுதீவிரமாய்முறை

கொண்டு செப்பலுற்றேன், மண்டலங்கள் யான்முழுதும் குளிகை பூண்டு மானிலத்தில் சத்தியஞ்சீலா வரிசைபெற்றேன், குண்டலங் கள்சரப்பளிகள் பதக்கம்யாவும் குவலயத்திலெனக்களித்து போவெ ன்றாரே. 782

என்றார்கள்மனுகோடி சித்த கூட்டி மொழிவுடனே ரிஷிகள் முதலாசீர்மித்தார்; குன்றானமலைநதிகள் குகைகள்போனேன் கோடி வரை வெகுகால மிருந்துபார்த்தேன், பன்றானசினபதி தலைமையெ ன்ற பாங்குடனேகுளிகையது பறந்திட்டேன்யான், நன்றானகமல முனிசித்தர்தம்மை நலமுடனே சீனமதில் பார்த்திட்டேனே. 783

பார்த்தேனே வெள்ளையென்ற மனிதரப்பா பரிவாகபூமியெல் லாங் காரமாகும், சீர்த்தமுடன் பொய்கையொன்று சுனையொன் றுண்டுதிகழானபடியோரம் சித்தொன்றுண்டு, ஊர்த்தமுடன்சமாதி யிலேயிருந்தாரப்பா வுவமையுடனவர்பாதங் கண்டுவந்தேன், ஏர்த்த முடன்வரரிஷியா மவர்போராகு சமழிலானமார்க்கமெனக் கோதிட் டாரே. 784

ஓதவேசிறுபாலன் விடைகள்பெற்று வுகமையுடனனேகவித நூல்கள்பார்த்தேன், நீதமுடன்வரரிஷியார் நூலில்சொன்ன நுட்ப மாமரிச்சந்திரன் சமாதிகாண, வேதமுதலாராய்ந்துங் காணவில்லை வெளியானவரரிஷியின் நூலிற்சொன்னார், பாதமுடன்சத்தியரிச் சந்திரன்றன்பாதம்புயத்தைக் காணவென வந்திட்டேனே. 785

என்னவேயடியேனும் போகர்நாயன் யெழிலாகத் தானுரைத் தேன் யிரக்கம்வைத்து, சொன்னபடிவிதிமுறையின் நுணுக்காராய் ந்து சுடரொளியின்காலாங்கி சீஷனென்றும், நன்னயமாய்ரிஷிமுனி வர் சித்தர்தம்மால் நயமுடனேபலபேரின் வரமும்பெற்றேன், வன் னமுடனரிச்சந்திரன் சமாதிமார்க்கம் வகையுடனே காணவென்று வழிகேட்டேனே. 286

வழிகேட்டேன் துறைகேட்டேன் சமாதிகேட்டேன் வண்மை யுடன்யெந்தனுக்குப் பட்சம்வைத்து, மொழியுடனேகாலாங்கி சீஷ னென்று முறைகொண்டுவந்ததினால் போகருக்கு, பழியுண்டாமென் றல்லோ பயந்தெல்லோரும் பாராளுமரிச்சந்திரன் சமாதிதன்னை, குழியுடனேதானிருக்குங் குகையினுள்ளே கொண்டுபோய்விட்டார் கிங்கிலியர்தாமே. 787

விட்டவுடன்போகரும்யான் முன்னேசென்று விரைவுடனேதான் பணிந்து கரங்குவித்து, பட்டமன்னன்கொலுவினிட சமாதிபக்கம் பாங்குடனேநிற்கையிலேசித்தர்கூட்டம், திட்டவந்துயென்னையாரெ

ன்றுகேட்க கீர்த்திபெற்றகாலாங்கிசிஷனென்றேன், சட்டமுடனெ ன்னையவர்பட்சம்வைத்து சாங்கமுடனுசிர்மஞ் செய்தார்தாமே.

தாமேதானனேகவித தர்க்கஞ்சொன்னார் தாழ்வாக யானுமல் லோ வெடுத்துரைத்தேன், போமேதான்சமாதியிடம் செல்கவென் றார்போனேனே ஓங்காரஞ்சத்தங்கேட்டேன், வாமேதான்வாததியங் கள் கோஷ்டம்போல வளமையுடன் விநோதவகை வரிசைகேட்டே ன் நாமேதானிருக்குமந்த காலந்தன்னில் நலமாகச்சமாதியது திறக் கலாச்சே. 789

சமாதிதிறந்தது.

திரக்கையிலே சத்தியரிச்சந்திரன்றன் திறலானசமாதியதுயெ ன்னசொல்வேன், சுரங்கமுடன்சுடரொளிபோல் காணலாச்சகுக்கு மமாந்தேகமது மின்னல்போலாம், இரங்கவேமுன்றுபடி கடந்துபோ னேன் இராஜனுமரிச்சந்திர னருகிற்சென்றேன், வரங்கொண்டவரி ச்சந்திரனென்னைப்பார்த்து யாரப்பாவந்தவனீ ரென்றார்பாரே. 790

பார்க்கவேபாலனுமே கால்நடுங்கி பாராளும்ராசனுக்குப் பதிவு கூற, ஏர்க்கவேமுடியாமல் மைந்தாயானும் யெழிலாகக் காலாங்கி சி ஷனென்றேன், தீர்க்கமுடனவர்தானு மென்னைப்பார்த்து திறமுட னேயவரெனக்குவுரைத்தவாறு, மார்க்கமுட னென்தகப்பன் திருச் சங்குபானு மகத்தானசமாதியிலே போனார்தாமே. 791

போகையிலேகாலாங்கி சமாதிதன்னைப் பொங்கமுட னவர்போ ய்க்கண்டதுண்டு, சாகையிலேயிடமவர்க்குத் தெரியும்பாலா சதகோ டியுகமதுவுஞ்சென்றுபோச்சு, ஆகையினாலுந்தனக்கு யானுஞ் சொ ன்னேனப்பனே போகரிஷிவன்பதாக, வேகையிலேபுறங்காடு சுடுகா டப்பா வெகுகாலம்யானுமல்லோ காத்தேன்பாரே. 792

காத்தேனேமேதினியில் மெய்யொன்றுக்காய் கனமழிந்து காடு றைந்துகடந்துநின்றேன், நாத்தமுடன்சுடுகாடு காத்திருந்து நலமு டனேபிள்ளைமுதல் மனைவிதோத்தேன், பூத்தமலர்முச்சுகுண தேவி தன்னை பொற்காசுவிசுவாமிக்கடனுக்காக, தோத்தேனே நாடுமுதல் நகரமெல்லாந் தொலைத்தேனே சமுசாரத்தொல்லைதாமே. 793

தொல்லைவிட்டுசமாதிக்குட்சென்றேனப்பா தொல்லுலகில் பற் றென்றுயில்லைகண்டீர், அல்லலெனுமாசாட்சிவிட்டுநீங்கி அப்பனே சமாதியிடங்கணடேனென்றார், மெல்லவேசதாகாலம் பூமிதன்னில் மேனியிலிருந்தோர்க்குப் பலனொன்றில்லை, வெல்லவே பூலோகமாய் கைவிட்டு விருப்பமுடன்சமாதிதனி லிருக்கநன்றே. 794

அரிச்சந்திரனிடம் போகர் வுபதேசம்பெற்றது.

இருக்கவென்றவார்த்தையது கேட்டபோது யென்மகனே யென்புத்திலயித்துப்போச்சு, பொருத்துமுடிபோகவில்லை பூமியாசை பொன்னுலகம்காண்பதுவே புண்ணியந்தான், திருத்தமுடனிவ்வுலகிலிருந்துமென்ன திரள்கோடிவித்தைகளுங் கற்றுமென்ன, வருத்தமுடன் குளிகையிட்டுபறந்துமென்ன வாகுடனுலகமதி லொன்றுங் காணே. 795

காணேமேயென்றுமல்லோ கலங்கினேனே காலாங்கிநாதருட கிருபையாலே, தூணதுபோலங்கிருந்தவிருட்சந்தன்னில் சுடரொளிபோல் சோதியதுகாணலாச்சு, வீணையுடன் வாத்தியங்கள் முழங்கலாச்சு வேதாந்தத்தாயினது மகிமையப்பா, நாணமுடன் பார்த்துமுனிசித்தரப்பா நடுக்கமுடன் முனடுங்கிபயந்திட்டாரே. 796

பயந்திட்டசித்தர்களை யான்வணங்கி பரிவாகசிரங்குவித்துவணக்கஞ்செய்து, நயமுடனேவதிசயங்கள் கேட்கும்போது நாதாந்தத்தாயினதுபிரகாசந்தான், மயமுடனே சத்தியரிச்சந்திறற்கு மகிமையுடனெப்போதுங்காட்சியுண்டு, தயவுடனேநிர்வாணிரூபவாணிசதா காலங்காட்சியது தருவான்பாரே. 797

தருவாளேமனோன்மணியுந் திரிகாலந்தான் தரணிபதியாளுமரிச்சந்திரற்கு, குருவானசித்த முனிரிஷிகளப்பா கூறினாரெந்தனுக்கு வண்மைமெத்த, திருவானவார்த்தையது மிகவுங்கேட்டுதீரனும் ராஜனிடமொழியுங்கேட்டு, மருவானவுபதேச மெல்லாம்பெற்று மார்க்கமுடன் சீனபதிக்கேகினேனே. 798

போகர் சீனபதிக்கு வந்தது

ஏகினேன்சீனமென்றபதிக்குமைந்தா யெழிலானகுளிகைகொண்டுபறந்தேனப்பா, பாகமுடனுபதேசம் பெற்றமார்க்கம் பாங்குடனேவெள்ளையென்றமனிதரப்பா, வாகுடனே நூல்படியேமுறையோதித்து வளமைபெறசமாதிக்கு வழியுஞ்சொன்னேன், வேகுடனே வெகுகாலமிருந்தேன்யானும் வேடிக்கைசிமிட்டுவித்தை செய்தேன் தானே. 799

போகர் காத்தாடிவித்தைசெய்தது.

தானானபிரமகோடிவித்தைசெய்தேன் தாக்கானகாத்தாடி வித்தைவித்தை, மானானவித்தைவிளும்நிதவித்தை மாணர்கள் புகலுகிறேன்மகிமைகேளு. வேனானபட்டமதுகெஜமோபத்து வேகமுடன் நீளமதுகெஜமோபத்து, பானானவட்டமது நடுவட்டந்தான்பாங்குடனேவுளவட்ட முழந்தான்ரண்டே. 800

இரண்டானபக்கவட்டமூன்றேபாகும்மெழிலான நெடுவட்டம் நாலேயாகும், மிரண்டான வெளிவட்டம்சக்கரம்போல் மூலத்தின் வுள்வட்டம்கமலமாகும், திரண்டானசுற்றோரம்கம்பியப்பாதிரளான கம்பிகளில்காதுரண்டாம், உருண்டானநடுக்கம்பில் சூட்சாதாரம் வுத்தமனே புறவட்டம்வளையமாமே. 801

வளைவுடனே ஒவ்வொன்றில் கொளுசுமாகும் வரிகளிலேகாந்த மதுசத்தேயாகும், களையுடனேநாரென்றபட்டேயாகும் கம்பிகளில் தையல்களைவோட்டவேண்டும், துலையானகொளுசுகளில் குண்டே யாகுந்தோராதகயறுகளில்சூட்சமாட்டி, மூளையுடனேபூமிதனில்கயி றைமாட்டி மூர்க்கமுடன்பறக்குகையில் கயிறைத்தட்டே. 802

தட்டையிலேகாத்தாடிதான்பறந்துசந்திரனூர்மண்டலத்தினள வுமட்டும், நெட்டையிலேதான்பறந்துநின்றுவாடும் நிலையானசூட்சா திசூட்சத்தாலே, முட்டையிலேவுள்ளிருந்த கருவைப்போலுமொரு நக்குடனேநின்றுடும் நெடுநேரந்தான், சட்டையிலே நாற்பட்டுக்காற் றைக்கொண்டு சடுதியிலேதானெடுக்கும்பான்மைபாரே. 803

பான்மையாம் வாயுவதுமேலாதாரம் பற்றுகையில்காத்தாடிமே லேநோக்கும், வான்மையுடனடுக்கம்பிவட்டந்தன்னில் நயமுடனே சூட்சாதிசூட்சந்தன்னைமேன்மையுடன் கயிர்மாட்டிசுறுக்கும்போது மெல்லெனவே காத்தாடியிறங்கலாகும், தான்மையுடன் சுக்கானின் சூட்சமப்பா தாரணியிலாரறிவார்விசுவர்தானே. 804

விசுவனும்தேவகம்மாளசித்தன் வேணபடிசெய்துமல்லோ சூட் சங்காண்பான், பசுவுடனேகண்சேர்ந்தகதையைப்போல கருத்தறி யார்முழுமூடர்காண்பரோதான், முசுருடையயிரும்பதனில்காந்தஞ் சேர்ந்து முடித்தார்கள்காத்தாடிவித்தைதவித்தை, நசுறுண்டாய்சூட் சாதிசூட்சமார்க்கம்நாமுரைத்தபடியாருங் கண்டிடாரே 805

கண்டபடிகருத்துடைய சித்தர்தாமும் காசினியில்செய்தவருங் கண்டோரில்லை, கண்டபடிகாத்தாடிசூட்சாசூட்சம் கயிர்நிற்கும்வழி யறியார்துறையுங்காணூர், கண்டபடிகருவூரார் செய்துபார்த்தார்கரு த்திலேயவர்தனக்குந்தோன்றவில்லை, கண்டபடி யெந்தனுடபுத்தியா லேகாத்தாடியான் முடித்தேனவனியோர்க்கே. 806

முடித்தேனேசினமென்றபதியில்தானும் முனையான காத்தாடி யடிவாரத்தில், படித்தளமாம் தோணியது மிகபோல்கட்டி பாங்கான

மாளிகைபோல்தானமைத்து, குடித்தனமாஞ்சனங்கள் பதினையிரம் பேர்குடையடியில்தானேத்திக் கொண்டுசென்று, நடிப்புடனேதே வாதிதேவர்தானும் நாணமுற்றுபார்த்திடவே நடத்தினேனே. 807

நடத்தினேன்சீனபதிசனங்களெல்லாம் நலமுடனேகாத்தாடித ன்னிற்கொண்டு, திடத்துடனேசீனபதிமூன்றுகாதம் திறமையுடன் சுத்திவந்தேன்சித்தர்மெச்ச, வடத்திடமாய்சூத்திரக் கயிர்திரட்டி வாகுடனேசீனபதியிறக்கிவிட்டேன், தடத்துடனேசீனபதி சனங்க ளெல்லாஞ் சந்தோஷித்தென்பேரிலன்புற்றாரே. 808

கமலமுனி பரிவுகூறினது.

அன்புற்றார்கமலமுனிசேதிகேட்டு அப்பனேபோகரிஷி புகலக் கேளும், வன்புற்றயிதிகாசவித்தையெல்லாம்வளமுடனேகாட்டிவிட் டால்பூலோகத்தில் இன்புற்றயாரொருவர்மதிக்கப்போறார் யேகவெ ளியாகிவிடுமன்றுகேளு, துன்புற்றுவெந்தனையுஞ்சபிப்பார்ப்பா சூட் சாதிசூட்சமதைவெளிகாட்டாதே. 809

காட்டினல்லோகமெல்லாஞ் சித்தாய்போகும் கசடருக்குகாட் டாதேகருணைபோகும், தாட்டிதமாய்நல்லோருக்குகருவிகாட்டுதயை யுடனேயுபதேசம்யாவுங்கூறும், நோட்டமுடன்முழுமக்களொன்று ய்க்கூட்டி கொடிப்பார்கள் பகடிமெத்தக் கூறுவார்கள் தாட்டியுடன் புலவோர்க்குபுத்திகூறு சதாகாலம்தானினைப்பார்தன்மைபாரே.

இரசசெந்தூரம்

பாரேதானின்னமொரு மாற்றங்கேளு பாங்கானசூதமது சேர் தாவொன்று, சீரேதான்நாகமதுசேர்தான்பாதி சிறப்புடனேயூகமதா ய்வொன்றாய்க்கூட்டி, நேரேதான்வட்டோட்டில்பில்லையூத்து நேர்ப் பாகபில்லைக்கு சுறுக்குத்தாக்கு, ஆரேதானுதாரச் சரக்காலப்பனே செயநீர்தான் செய்துகொள்ளே. 811

கொள்ளவேசெயநீரைசுருக்குதாக்கு முணமுடனே சூதமதுயி ருக்கிக்காட்டும், விள்ளவேகிண்ணமதுசாற்றக்கேளும் வேடிக்கைசிமி ட்டுவித்தைவாதம்பாரு, மெள்ளவேசரக்குவகை யாமுரைப்போம் மேதினியிலார்செய்தாரிந்தபாகம், துள்ளவேமிறுதாரு, சிங்கிதானும் துறையானதுருசுடனேகாரமாமே. 812

காரமாம்வீரமுடன்பூரமாகும் கருவானசீனமுடன் பாஷாணந் தான், தாரமாம்கெந்தியுடன்லிங்கந்தானும்தாக்கானசூடனுடன்கெ

வுரிதானும், காரமாம் காந்தமுடன்காடிக்காரம் கடிதான்சாரமுடன் பூநீராகும், தீரமாய்பவளத்தின்புத்துமாரும் திறமானசலாசத்துப் பலந்தான்தூக்கே. 813

தூக்கவேசரக்கெல்லாஞ் சமனதாக துறையோடுமுறையோடும் மொக்கச்சேர்த்து, நோக்கவேசூழியம்மிதன்னிலாட்டி நுட்பமுடன் பழச்சாற்றில்நாலுசாமம், தாக்கவேதானரைப்பாய் குமரிச்சாற்றால் தப்பாதுதானரைப்பாய்கையான்சாற்றால், ஊக்கமாய்வகைவகைக்கு நாலுசாமம்வுத்தமனேதானரைப்பாய்மூலியாமே. 814

மூலியாம்கவுதும்பைச்சாறுதானும் முயலானமுசல்க்காதுசாறு தானும், நீலியாம்அவிரிடச்சாறுதானும் நேரானவற முள்ளிச்சாறு தானும், பாலியாம்குடசப்பால்மூலிதானும்பாங்கான துளசியிடமூலி தானும், வேலியாம்முத்தாமணிச்சாறுநாழி வெளியானகள்ளிச்சார் தானுங்கூட்டே. 815

கூட்டியேவகைவகைக்கு நாலுசாமம் குறிப்புடனே தானரைப் பாய்மூலியாலே, நீட்டமுடன்வெண்ணெயதுபோலேயாட்டிநினைவுட னேவகல்போலமூசைபண்ணி, வாட்டமுடன்மூசையிலே பில்லைவை த்துவாகாகமேல்மூசைதான்பொதிந்து, தேட்டமுடன்மாசீலைவலுவா ய்ச்செய்து தேர்ந்துமோவிதனிலேகாயப்போடே. 816

போடவேசீலையதுகாய்ந்தபின்பு பொங்கமுடன்சுண்ணும்புசீலை யேழு, கூடவேசீலையதுவலுவாய்ச்செய்து குமுறவேசட்டிதனில்மண லைக்கொட்டி, நீடவேசட்டிநடுகலசம்வைத்து நினைவுடனேமேலுமந்த மணலைக்கொட்டி, சூடவேமேற்சட்டிக்கவிழ்த்துமூடி துப்புரவாய்ச் சீலையதுவலுவாய்ச்செய்யே. 817

செய்யவேசீலையதுகாய்ந்தபின்பு செம்மையுடன்சட்டிதனையடுப் பிலேற்றி, முப்பவேவாலுகையின் மேலேவைத்துமுயற்சியுடன்தீபம துகமலமெட்டு, நையவேதீபமதுகாடோபத்து நயமுடனேதீபமது யெரிப்பாயப்பா, பையவேயாறினபின்னெடுத்துப்பாரு பளிங்கான செந்தூரம்சொல்லொண்ணதே. 818

சொல்லாலேநாவேதுபாவுமேது சுடரொளிபோல் செந்தூரஞ் சொல்லப்போமோ, வல்லலேவருணனிடனிறம்போலாகும்வலுவான சூதமதுகாரமெத்த, மெல்லவேஒடதனைத்திறந்து பாருமேலானசெந் தூரம்தீதம்போக்கு, புல்லவேமுடியாது சித்தர்தாமும் புகலார்கள் லோகத்துமாந்தர்தாமே. 819

ஆமேதான் செந்தூரம்பதனம்பண்ணு அப்பனேநாதாக்கள்காண்பாராகில், போமேதான்விடுவாரேசெந்தூரத்தை போக்கோடேகொடுபோகும் வழியைப்பார்ப்பார், நாமேதானுந்தமக்குச் சொன்னேனப்பா நாட்டிலேயாரேனுஞ்சொல்வாருண்டோ, வேமேதான் செந்தூரம்குன்றியுண்ணு வெகுகோடிகாலவரையிருக்கலாமே.

இருக்கலாம்கற்பாந்திர காலமட்டும் யிளப்பில்லைதவிர்ப்பில்லைசளையில்லை, முறக்குடனேதேகமதுயிருக்கிக்காட்டும் கூதண்டங்கொண்டவருமுமசகீடுண்டா, பொருக்கவேமுடியாதுவன்னிமீறும் பூதலத்தில்நீயுமொருசித்தனுவாய், வெடுக்கவே சமுசாரமாய்கைதன்னைவிட்டொழித்துநிற்பதுவேசமாதியாமே. 821

ஆமென்றுலின்னமொருவயணங்கேளுஅடவானசெந்தூரங்களைஞ்சிதானும், போமென்றுவிடுகாதேமைந்தாகேளு போக்கானசூதமதுசெந்தூரத்தை, நாமென்றவாக்கியமும்பொய்க்காமற்றான் நலமுடனேவெள்ளிதனில் நூற்றுக்கொன்று, தாமென்றவுருக்குமுகந்தன்னிற்றானுந் தப்பாதுதான்கொடுக்க மாற்றெட்டாமே. 822

எட்டானமாற்றதுவும் பசுமைமெத்த ஏற்றமுடன்ரவிதனிலே நூற்றுக்கொன்று, மட்டாகத்தானுருக்கிகொடுத்துப்பாரு மகத்தானவர்னமது சிவப்புமெத்த, வட்டானமாற்றதுவு மெட்டரையுமாகு மகத்தானவேதையிது கிட்டுமோசொல் திட்டானவெள்ளிசெம்பில் கொடுத்துப்பாரு திறளானசெகசோதி தெளிவைப்பாரே. 823

தெளிவானமாற்றதுவு மொன்பதாகும் தேசத்தில்கிட்டாது யார்க்குக்கிட்டும், ஒளிவானசித்தர்முனி ரிஷிகட்கப்பா வுத்தமனே கிட்டுமது சிவயோகிக்கும், வழியானமுறைப்படியே கண்டாராய்ந்து வகுப்புடனேசித்தரிட நூலும்பார்த்து, தெளிவானநூல்களெல்லா முளவாராய்ந்து சேர்ப்புடனேசோதித்தேன் மாந்தற்காமே. 824

மாந்தர்கள்பிழைக்கவென்று வடியேன்தானும் வளப்பமுடன் காலாங்கிநாதர்பாதம், சாந்தமுடன்சீற்பாதம் தனைநினைத்து சாற்றினேன்லோகத்து மாண்பருக்கு, வேந்தனெனும்ராஜாதிராஜர்கட்கும் வெகுதூரம்கடந்துசென்ற ஞானிகட்கும், போந்தமுடன்போகரிஷியடியேன்யானும் போதித்தேன்வெள்ளையென்ற மனிதற்காமே. 825

ஆமென்றவித்தங்கம் அருமையப்பா யாராலுங்கண்டறிவதெளிவையாகும், காமென்றசூதத்திறட்டுதன்னை நயமுடனேகாரசாரங்க

ளாலே காமென்றசத்துருமித்துருகளாலே கருவிகரணதியின் றன் போக்கறிந்து, வேமென்றகுறுக்குவழிபோக்குப்பாதை வெகுதூர மறிந்துமல்லோ சாற்றினேமே. 826

சீனவீரவைப்பு செந்தூரம்.

போற்றினேமின்னமொரு கருமானங்கேள் பொங்கமுடன்வீர மென்றசெந்தூரந்தான், மாற்றமுடன்வில்வத்தின் றயிலத்தாலே மய ங்காமல்சுறுக்கிடவே கட்டிப்போகும், கூற்றமுடன் மேற்போக்கு புகல்வோர்கண்டீர் போக்கானசரக்குவகைநிற்கப்பாரும், தேற்றமு டன்தாரமொன்றுதுத்தமொன்று தெளிவானசிங்கியொன்று கெவுரி யொன்றே. 827

ஒன்றான அயமதுவுஞ்செம்புவொன்று வுத்தமனேபொடிபொடி யாய்ராவிக்கொண்டு, பன்றானசரக்குகளுஞ்சரியதாக பண்பாகக்குழி க்கல்லிலிட்டுமைந்தா, யொன்றாகத்தளவிட்டுமாவதாக்கிப் பொங்க முடன்காலனென்றசெயநீர்தானும், தன்றானவறுவகையாஞ்செயநீர் தன்னால் தன்மையுடன்றானரைப்பாய்சாமம்நாலே. 828

நாலானசெயநீரில்மைந்தாகேளு நலம்பெறவே தானரைப்பாய் மைபோல்தானும், மாலானசெப்பகலும் வொன்றுசெய்து மார்க்கமு டனவ்வகலில்சரக்கைப்பூசி, வேலானரவிதனிலே காயப்போடுவெளு மையுடன் காய்ந்தபின்புவிபரங்கேளு, சாலானவகல்தனிலே வீரம் வைத்துச்சார்புடனே சீலையதுவலுவாய்ச்செய்யே. 829

செய்துமேரவிதனிலேகாயவைத்து செம்மையுடன்தளவாயாஞ் சட்டிதன்னில், பெய்துமேவுப்பையரவாசியிட்டுப் போரானவீரத்தை நடுவேவைத்து, கைமுறையாய்மேலுமந்தவுப்பைக்கொட்டிக்கணக்கு டனேமேற்சட்டித்தன்னைமூடி, மெய்முறையாய்ச் சட்டிக்குச் சீலைய ப்பா மேன்மையுடன்செய்துமல்லோ ரவியிற்போடே. 830

போடவேசீலையதுகாய்ந்தபின்பு போற்றமுடன்மனோன்மனியா ள்கிருபையாலே, நீடவேகாலாங்கி தமைநினைந்து நீடூழிகாலம்வரை யிருப்பதற்கு, கூடவேசித்தர்முனி ரிஷிகள்பாதங் கும்பிட்டு யடியே னைமிகத்தொழுது, மூடவேவாலுகையாமேந்திரத்தில் முடிமீதில்தா னிருத்தியெரித்திடாயே. 831

எரிக்கையிலேகமலமென்ற சிறுதீயப்பா யென்மகனேவாறுநாள் யெரிநேரப்பா, கரிகியல்லோவுப்பெல்லாங் கறுத்துக்காணும் கனக

மென்றசெம்பதுவு மக்கியல்லோ, நொரிக்கியேசரக்குடனே செம்பு சேர்ந்து நொடிதானவீரத்துக்காரமேறி, பரிக்கியேவுட்கொண்டுகார சாரம் பாங்குடனே யேறியல்லோ சிவக்குந்தானே. 832

தானனசெந்தூரமென்னசொல்வேன் தகைமைபெறத்தானெடு த்துசீஷாவிற்ருன், கோனன குருபதத்தைநணுகியேதான் கொற்றவ னேதானெடுத்துவைத்துக்கொண்டு, வேனனவெள்ளிசெம்பில் நூற் றுக்கொன்று விபரமுடன்ருனுருக்கி வூதிப்பாரு, பானனமாற்றதுவு ம்யெட்டதாகும் பசுந்தங்கம்போலிருக்கும் பண்புதானே. 833

பண்பானபொன்னதுவும் பத்துக்கொன்று பான்மைபெறத்தங் கமது வொன்றுசேர்த்து, திண்பானதகடடித்துப் புடத்தைப்போ டு தெளிவானதங்கமது பிறவியாச்சு, வண்பானதங்கமது லோகமெய் ச்சும் வாய்க்காது கருமிகட்கு வாம்க்குமோசொல், நண்பானசித்தர் முனிரிஷிகட்கப்பா நலமுடனே வணங்கியல்லோ வேதைவாங்கே.

வாங்கவென்ருல் குருமொழியைமனதிலுன்னி வாகுடனேயவர் வாசல்காத்திருந்து, தூங்காமலவர்பணிக்கு தொண்டருகிதுணையோ டுகிட்டிருந்து யேவல்செய்து, தாங்கியேயவர்பாத மர்ச்சித்தேதான் தாழ்மையுடன் கேழ்விக்குமுதல்வனுக, ஏங்கியே யவர்முகத்தின் மு ன்னேநின்று யெத்தொழிலுஞ் சோராமல் செய்யநன்றே. 835

குருவுபசாரம்

நன்றுடனே சதாகாலங்காத்திருந்து நலமுடனே முடிவுகாள்வ ருகுமட்டும், சென்றல்லோ சமாதியிடஞ்சென்றுநீயுஞ் செம்மைபெற திருப்பணிகள் மிகவுஞ்செய்து, பன்றுடனேவாய்மொழிக்குப் பதி லுங்கூருப்பதிவாகப்பாத்திருந்து பேழைபோலே, கொன்றைமலர் தானெடுத்துவர்ச்சித்தேதான் கோடித்துசிவமதத்தில்போற்றிநில்லே

போற்றியேவஞ்சலிகள்மிகவுஞ்செய்து பொருந்திமனமெய்போ தும்புண்ணுகாமல், நேற்றியாய்மனதுவர நடந்துகொண்டு நேர்ப்புட னேசகலகலையறியவேதான், கூற்றனெனுங்காலனுக்கு விடங்கொடா மல்கூர்மையுடன் சித்தர்களைவணங்கிநித்தம், தோற்றமுடன் சதாகா லம்ரிஷிகள்தம்மைத் தொழுதுமிகவேபணிந்து வேதைவாங்கே.

வேதைகளைவாங்கிநித்தஞ்சேர்த்துமென்ன வெகுகோடி வாதவி த்தைப்பாடிவிட்டார், போதையுடன்பாடிவிட்டா ரென்றுசொல்வா ர்பூதலத்தில்ரிஷிகோடிமகிமைமெத்த,தீதையிலே சாத்திரங்கள்தொ

யாமற்றான்சீர்கெட்டுதலைகெட்டு பாடல்கெட்டு, பாதையிலேபோகா மல்துறையுங்கெட்டு பாழாகச்சுட்டுகெட்டா ரனந்தமாமே. 838

அனந்தமுடன்வேதைமுகஞ் செய்வாரப்பா அதினுடையநுட்ப வழிகாணுமற்றான், வனந்தனிலேதான்திரிந்துமூலிதேடி வாகுடனே கெட்டவர்கள் லக்கோயில்லை, மனந்தனிலே சேர்ந்தமட்டும் செய்து பார்த்துமார்க்கமுடன்சாக்கிறதை மறைந்தாரென்று, எனந்தனிலே கும்புகும்பலாகக்கூடி யேளிதங்கள்செய்தாரே சண்டிமாடே. 839

மாடானமாடுகள்தான் காணப்போறார் மகத்தானசித்தருடகை மறைப்பை, கோடானகோடி பொருளிழந்துவிட்டார் குவலயத்தில் கெட்டுவிட்டு வீடுவிட்டு, கேடானதிரவியங்கள் யெல்லாந்தோர்த்து தெருத்திண்ணைப்பரதேசியாகிநின்றார், கூடானகூடுவிட்டுப் பாய்வே னென்று கூக்குரலால்பேசியல்லோ பிழைப்பார்தானே. 840

தானனபிழைப்புக்கு யிடமில்லாமற் தட்டழிந்துகெட்டழிந்து தாறுமாறாய், கோனனபோலாடுதன்னை சேதாளிவிட்டு வாடெங்கே யென்றுசொன்ன கதையைப்போலே, தேனனசாத்திரத்தின் கருகா ணுமல் தேங்கியேகெட்டலைந்தார் கோடாகோடி, ஊனனதேகமது புண்ணுமாகி வுடலழிந்துவுருண்டவர்க ளனேகந்தானே. 841

அனேகமுடன் மருந்துவகை செய்குவார்கள் அப்பனேசித்தர் களை நினைக்கமாட்டார், அனேகவிதசாத்திரத்தின் மருந்துசெய்வார் அந்நூலின்சித்தர்களைத் துதிக்கமாட்டார், அனேகவிதநூல்படியே மருந்துசெய்வார் அக்காலஞ்சித்தர்களைத் துதிக்கமாட்டார், அனேக விதமுறைப்படியே மருந்துசெய்து வவரவர்கள்குருபதத்தை நினை யார்தானே. 842

குருநிந்தைசாபம்

நினையாதகுருவென்ற நிந்தையாலே நீனிலத்தில்சாபமது நேர்ந்து மேதான், தினையானமருந்துகள்தான் பலிக்காமற்றான் திசைகெட் டுத்தடுமாறி தேங்கிநின்றான், வினைபோலதுன்பமதுமிகவுமாகி மேதி னியில் அசுருண்டாய மாண்டுபோனர், மனைவிட்டுபொருள்தோற்று மாடுதோற்று மனைவிமுதல்தானிழந்தார் சாபத்தாலே. 843

சாபமதுவந்துமல்லோ நேருமப்பா சதாகாலஞ்சித்தர்களை வண ங்கிநித்தம், கோபமதுவாராமல்வுள்ளடங்கி குவலயத்திலிருந்துகொ ண்டு வாசனுக, பாபமதுவிற்றகன்றுபூமானுக பாருலகில்வாழுவது தருமமப்பா, தர்மமுடன்சதகோடி சூரியன்போல் தாரணியில்வாழு பவன் சித்தனுமே. 844

சித்தனுமென்றுசொல்லி மெய்ச்சுவார்பார் செகதலத்தில்யென்னை ப்போல நீயுமாவாய், பத்தனுயிருந்துகொண்டு பரமன்றன்னை பட்ச முடன்யெப்போதும் பாலித்தேதான், நித்தமுடன்குருபதத்தைப் போற்றிசெய்து நீடூழிகாலம்வரை யோகஞ்செய்து, முத்திபெறவழி யுனக்குத்தெரியுங்கண்டீர் முயற்சியுடன்பலநூலும் பாருபாரே. 845

பார்க்கையிலேசின்மயத்தின் பொருள்கள்தோன்றும் பாருடனேயவரவர்கள் துறையுங்காணும், ஏர்க்கையிலே சுடரொளியின் பரிவுதோன்றும் யென்மகனேசூட்சாதி சூட்சங்காணும், காக்கை யிலேகருவிகரணதியெல்லாம் கண்ணுக்குவொளியாகக் காணும்பாரு சேர்க்கையிலேவஷ்டாங்கங் காணலாகும் செகத்திலேசடாட்சரத் தை மேவிப்பாரே. 846

மேவுடனேவாராதாரங்கள்தோன்றும் வெளிக்கப்பால் முப்பாழுங் காணலாகும், பாவுடனே சிராமயத்தின் சோதிகாணும் பார்க் கையிலேசோதியது நிலைவாய்த்தோற்றும், நாவுடனேவுள்மூலம் நடுக்கங்காணும் நடுக்கத்தால்தேகமது கீழ்போலாம், தாவுடனேமூலா தாரங்கப்பா தடுமாறிக்காணல்போல் தோற்றமாமே. 847

தோற்றமாம்சிகாரத்தின் மகாரமிஞ்சும் தொகுப்புடனேமகார த்தின் வகாரமிஞ்சும், கூற்றவாம்யகாரத்தில் வுகாரமிஞ்சும் குறிப் புடனேவுகாரத்தில் லகாரமிஞ்சும், தோற்றமாம்லகாரத்தில் ரகார மிஞ்சும்சேர்ந்தவுடன் ரகாரத்தில் ழகாரமிஞ்சும், பேற்றமாம்ழகா ரத்தில் னகாரமிஞ்சும் யெளிதல்லோசிவயோகிக் கெளிதிதானே.

வெடியுப்புசெந்தூரம்

எளிதானவின்னமொரு மாற்கம்பாரு ஏற்றமுள்ளவெடியுப்பு நாலாங்காய்ச்சல், நெளிதானசேதுதான் வொன்றேயாகும் நேர்த்தி யாப்புளியுடனே காரமாகும், ஒளிவானதலையண்டம் பேரண்டந் தான் வுத்தமனேசேரிரண்டு தூளதாக்கி, வளிவானசட்டிதனில்கீழே போட்டு வளமாகவெடியுப்பை நடுவேவைவையே. 849

வைக்கவேமேலுமந்த மாவைகொட்டி வகையாகமேல்மூடி சீலை செய்து, மெய்க்கவேரவிதனிலே காயவைத்து மேன்மைபெற வாலு கையில் யெரிப்பாய்தானும், பொய்க்கவேநாற்சாம மெரித்தபோது போக்கானவுப்பதுவும் கட்டிநிற்கும், மொய்க்கமேசட்டிதனைத் திறந் துபாரு மோசமில்லைகட்டியது வுருக்கிப்போச்சே. 850

போச்சென்றுவிடுகாதே புண்ணியாகேள் போக்கானவெடியுப்பு வதீதமெத்தநீச்சென்றபேரண்டந் தன்னால்தானும் நிலையாகமதியுப்பு

க்கட்டலாச்சு, மாச்சலென்றவுப்பாலேசகலசித்து மாற்கமுடனுடலாங்கோடிவித்தை, பாச்சலுடன் துரைத்தனத்தார்க் கேற்றவுப்புபாருலகில்ராஜர்வெல்லுமுப்புமாச்சே. 851

உப்பானவுப்பிதுதான்வீரமெத்தவுலகிலுள்ளவாதிகட்குகந்தவுப்பு, அப்பானசலமதிலேவளர்ந்தவுப்பு அதிலிருந்துபிறந்த மல்லோவெடியுப்பாச்சு, செப்பானசெம்புகளிம்பூரல்போக்குந்தேசத்திலிறந்ததொருவுப்புமாச்சு, ஒப்பானவுப்பிதுக்குவொன்றுமொவ்வா வுத்தமனேயிதுவோடும்வழியைக்கேளே. 852

கேளேதான்வுப்பதுவுங் கட்டிநின்றால் கெடியானவுப்பதுவுமெடுத்துமைந்தா, மாளவேநாகமொருபலமே தூக்குமகத்தானசூதமொருபலமேதூக்கு, சூளவேவீரமொருபலமேதூக்கு சத்தமுள்ளசாரமதுபலமேதூக்கு, மீளவேநாகரசமொன்றாய்ச்சேர்த்து மிகப்படவேதானுருக்கிசாய்த்திடாயே. 853

சாய்த்திடவே சரக்கெல்லாமொன்றாய்ச்சேர்த்து சாங்கமுடன்றானரைப்பாய்நாலுசாமம், மாயவேகாரசாரத்தினாலே மாண்டுமேசெயநீருமாகுப்பாரு, தோயவேசெயநீரைமதியுப்புக்கு தொகுப்புடனேசுறுக்குமிடக்கட்டிப்போகும், காயவேவுப்புக்கு கவசங்கேளு கவானவன்னமென்றபேதியாமே. 854

பேதியாம்வளையளென்றவுப்புமாகும் பேதமில்லை யெடைசரியாயெடுத்துக்கொண்டு, வாதியாமறுவகை செயநீர்தன்னால் மாட்டடாவெண்சாமரை பூத்தபோது, சோதியாமெழுகதுவுஞ் சொல்லப்போமோசூட்சமுடனுப்புக்குகவசஞ்செய்து, மேதியாங்கொம்பதனை சீவிமைந்தா மேன்மைபெறபொடியாக்கிசெப்பக்கேளே. 855

செப்பவென்றால்வறுவகைசெயநீர்தன்னால்செழிப்புடனேதானரைப்பாய்நாலுசாமம், ஒப்பமுடன்றானரைத்துக் கவஞ்செய்து வுத்தமனேரவிதனிலேகாயவைத்து சிலைசெய்து, தப்பறவே சட்டிதனில் மணலைக்கொட்டிச் சட்டமுடனடுமையம் வைத்துமைந்தா, மெப்புடனேமேலுமைந்தமணலைக்கொட்டி மேன்மைபெற சட்டிகொண்டு சிலைசெய்யே. 856

சிலையுடன்ரவிதனிலேகாயவைத்து சீர்பெறவேவாலுகையிலடுப்பிலேற்றி, காலையுடன்றானெரிப்பாய்சாமம்நாலுகடந்தபின்பு தீயாறிமற்றுநாள்தான், மாலையிலேயெடுத்துப்பாரென்னசொல்வேன் மகத்

ஆமேதான்வாலேயதுபோலேதோற்றும் அப்பனே வயததுவும் பண்பாய்க்காட்டும், நாமேதான்சொன்னபடிபற்பங்கொண்டால்நாட்டிலேயுன்னையொரு சித்தனென்பார், வேமேதான் பற்பதுவெள்ளியத்தில் விருப்பமுடன்றானுருக்கி குருவொன்றீய தேமேதான்மாற்றதுவும் யெட்டதாகும் தேசத்தில்சித்தர்செய்யும் வேதையாச்சே.

வேதையிலே தாம்பூரத்தில் வேதையப்பா வெகுகோடி வேதையிதுதாம்பரவேதை, பாதையாம் சித்தர்செய்யும் வேதைமாறகம்பாருலகில்கருவாளி செய்வான்பாரு, தீதையிலே சண்டாளத் துரோகியோற்குதி சைகட்டுமுறைகெட்டு தோராதொன்றும், ஆதமுடன்பற்பமென்ற பற்பந்தன்னை அனுபானயெண்ணைதனில் கலந்திட்டாயே.

கலந்தஎண்ணை பணயெடைதனந்திரசந்திகவனமுடன்றானருந்தவாலேயாவாய், பலமதிகமுண்டாகும் பாலர்க்கப்பாபாரினிலேராசாக்கள்காண்பாராகில், வலமுடனேயோடிவந்து ஆசிர்மித்து வரைகோடிதிரவியங்கள் மெத்தயீய்ந்து, நலமுடனே பற்பமதைக் கைக்கொள்ளுரர்கள்நாட்டிலேபற்பமது நவிலொண்ணாதே. 50

தங்கசெந்தூரம்.

ஒண்ணனதங்க மெற்றகாசுதன்னை வுத்தமனே களஞ்சியதுபக்ததாகும், கண்ணனரேக்கதுவும் கொண்டுவந்து கவனமுடன்மாசியென்றபத்திரிதன்னால், குண்ணனகாசமதுபொசித்துப்போட்டு குன்றியீடைசீனமதுவொக்கச்சேர்த்து, தண்ணன நாற்சாமமறைத்தபோது தாக்கானமெழுகுபோ லாகும்பாரே. 51

பாரேதான் மெழுகுதனைவட்டுசெய்து பண்பாகரவிதனிலேகாயவைத்து, நேரேதான்வோட்டிலிட்டுச்சீலேசெய்துநேர்பாகப்புடம்போடச்செந்தூரிக்கும், காரேதான் செந்தூரமெடுத்துப்பாரு கருப்பானசெந்தூரம் போலேகாணும், தீரேதான் பத்துமுறைபடியேபோடுதிறமானசெந்தூர மாகுந்தானே. 52

தானேதான் செந்தூரமெடுத்துமைந்தா தாரமுடன்கெந்தியதுகாலாய்க்கூட்டி, மானேதான் கட்டினதோர் சாரமொன்றுமார்க்கமுடன்யெட்டிலோர்பாகஞ்சேர்த்து, நாமேதான்சொன்னபடிசெயநீர்தன்னால்நலமாகத்தானரைப்பாய்நாலுசாமம், வேமேதானறுவகைசெயநீர்தன்னால் விருப்பமுடனரைத்துபில்லை விரைவாய்தட்டே 53

தட்டையிலேபில்லையது பணம்போலாகசாங்கமுடன் தட்டியல்லோகாயப்போடு, வட்டமென்ற வகல்தனிலேபரப்பிமைந்தா வளமு

டனேவகல்மூடிசீலைசெய், துமட்டமென்றகோழியதுபுடமதாகமதிப் புடனே வோட்டிலிடசிவப்புமாகும், திட்டமுடனிப்படியே மூன்று முறையப்பா சிறப்பாகப்புதிம்போடச் சிவக்குந்தானே. 54

சிவப்பானசெந்தூரம் பதனம்பண்ணு தேசத்தில்கிட்டாது சிவ யோகிக்கி, தவக்கியானியானுக்கால் யெல்லாஞ்சித்திதாரணியிலவன் போலசித்தனுண்டோ பவமுடையோர்க்கிந்நூல்லான்வாய்க்காதப்பா பாரினிமேலவிட்டகுறையானவற்கு, சிவன்செயலால்கிடைக்குமேயிந் நூலப்பா தேசத்தில் மற்றவர்க்குக்கிடையாதன்றே. 55

மிருத்துவரிஷிக்கு காலாங்கிக்குஞ் சாபம்.

தானனமுன்யுகத்தில் காலாங்கிக்கு தாக்கானமிருத்துவரிஷியி ன்சாபம், கோனனபொன்னகரம் போயிருந்துகோடித்தார்க்கண்ண பிரான்றன்னையப்பா,தேனனதிரேதாயினுகத்தில்தானும்தெளிவான சுத்தனுங்காலாங்கிவையா, பானன குருசுவாமி சாபத்தாலே பாலனு ங்காலங்கிசாபம்போச்சே. 56

போனபின்பு காலாங்குருவாஞ்சாமி பொன்னகரம்போயிருந்து பட்டமாச்சு,தானனவனுங்கருவூரார்கமலந்தாமும்தயவுடனேசீனபதி போயிருந்து, வானவனுங்காலாங்கி சீஷனென்னை வரவழைக்கயா பகத்தில் நினைத்தபோது, பானமுடனடியேனுங் குளிகைபூண்டுபற ந்திட்டேன் சீனபதிதேசந்தானே: 57

தேசமென்றால்தேசமதுபோயிருந்தேன் சிறப்பானகமலமுனித ன்னைக்கண்டேன், ஆசையுடஸ் அவர்பாதம்பணிந்தேனப்பா அப்ப வேகுருசாபம்நிவர்த்தியாச்சு, பூசையுடன்காலாங்கிநாயர்தம்மை பூசி த்தேன்திரேதாயி னுகத்திலப்பா, நேசமுடன் யெந்தனுக்குகலியுகத் தில்நேர்மையுடன் சாடமதுநிவர்த்தியாச்சே. 58

ஆனபின்புகலியுகத்தில் நூற்றுப்பத்தில்அன்புடனே குளிகை கொண்டுபறந்துயானும், வானவானுக்கொப்பானபோகரென்றுவைக த்தில்கீர்த்தியுடனபேருபெற்றேன், தேனனகாலாங்கி பாதஞ்சென் றுதெரிசித்து அவருடையவருளுங்கொண்டேன், கோனனயென்னை யர்குருவினாலே கோடியுகங்குவலயத்தில் வாழ்த்திட்டேனே. 59

மகவேவுக்குநான்கு பாகத்திலிக்கும்
அதிசயம்.

வாழ்கவே குளிகையதுபூண்டு கொண்டுவையகத்தில்சுற்றியெங் கும் பார்க்கவென்று, வீழாதகுளிகையுடன்மேருசென்றேன் விருப்

படுடன்நாற்றிசையும் காணும்போது, தாழ்கவே மேவுருக்கு வடபா கத்தில் தாக்கானமனிதரெல்லாம் தங்கவர்னம், சூழ்கவேவயததா தான் லட்சமாகும் முனையானதெய்வமது சத்தியாமே. 60

சத்தியாம் மேருவுக்கு கிழக்கேயப்பா சார்பான மணிதரல்லோ நீலவர்னம், நித்தியமாம்வயததுதான் ரண்டுலட்சம்நிலையான தெய்வ மதுவிஷ்ணுவாகும், புத்தியுடன் மேருவுக்குமேற்கேயப்பா புகழான மனிதரப்பா ரத்தவர்ணம், சுத்தியுடன் கோறுவதுகைலயாகும் சொரூபமென்ற போதமென்னும் நிலைநிற்பாரே. 61

நிற்பாரே வயததுதான் ரண்டுலட்சம் நித்தியமுஞ் சொரூப மென்ற நிலையுங்காண்பா, சிற்புடன்மேருவுக்கு தெற்கேயப்பா சிறப்பானமனிதரப்பா மைனவர்னம், கர்மமென்றவயததுதான் நூறெ ன்பார்கள் கலியுகத்தி லிருப்பதுவுமில்லைதானே, சொற்பமென்ற வயதுதனில் மாண்டு போவார்சுந்தரனே அக்கிரமங்கள் மிகவுண் டாமே. 62

உண்டானமனிதரப்பா கொடியசெய்கை வுற்பனமாமரியாதியில் லாமாண்பர், மிண்டானமுறைதப்புஞ் சண்டிமாண்பர்மீளாதகொடிய தொருபாவியாகும், சண்டாளமையல்கொண்டுதாறுமாருய்சடுதியிலே சடமழுந்து போவாரப்பா, பண்டானசூதுகளும்பொய்யுமாகும்பாங் கானமனிதரப்பா நடத்தைபாரே. 63

பாரேதான் சாத்திரங்கள் மெத்தவுண்டுபாங்கானபொய்ஞானி மெய்ஞானியுண்டு, சீரேதானுண்ணுவதுவனேகவர்னம் சிறப்பானகா ய்கறிகள் பாலுங்கொள்வர், நேரேதான் பழவர்க்கம் கொள்வாய்ப்பா நிறையான லாகிரிகளனந்தங்கொள்வார், வேரேதான்மனிதரப்பாமூ ன்றுபாகம் முன்சொன்னமனிதரப்பா பழமுண்பாரே. 64

வீரமெழுகு.

உண்பானவின்னமொரு மார்க்கங்கேளு ஒளிவாளவீரமதுகொ ச்சிவீரம், திண்பானசீனத்தின்வீரமப்பா திறமானவீரமது பலமொ ன்ருகு, பண்பானவீரத்தின் தயிலம்பாரு பாங்கான ஆனையென்றவி லாங்குதானும், நண்பான விலாங்கதனை தயிலமாக்கி நலமாககெந்தகத் தைவிட்டுதாக்கே. 65

தாக்கவேசேரென்றகெந்திதன்னை தயவாகத்தானரைப்பாய்நாலு சாமம்,நோக்கவேதானரைத்துப்பின்னுங்கேளுநுணுக்கமுடன்வழித்

தயில மிறக்கிப்பின்பு, தேக்கவேவீரமது சுறுக்குதாக்கு தெளி வுடனே வீரமதுகட்டேயாகும், பார்க்கவே மேற்கவசம் சொல்லக் கேளு பதிவாக துருசுடனே சிங்கியாமே. 66

சிங்கியென்ற மிருதாருசிங்கியப்பா செழிப்பான பூரமுடன் துத்தமாகும், இங்கிதமாம்சாரமுடன் காரமாகும் யெழிலான காந்தமுடன் குருந்தக்கல்லாம், தங்கமுடன்சவ்வாதுபுனுக்கு பூரம் தகமையுள்ளவபினியுடன்கெந்திதானும், அங்கமுள்ள லிங்கமுடன் சீனந்தானும் அப்பனே வகைவகைக்கு விராகனென்றே. 67

ஒன்றான யித்தனையும் சரியாய்க்கூட்டி வுத்தமனே தேன்விட்டு மெழுகதாக்கி, பன்றானமெழுகுபதம் தன்னிலாட்டிபதமுடனே மெழுகதனை யெடுத்துமைந்தா, நன்றானவீரத்துக்கங்கிபூட்டி நல மாகப்புடம் போடக் கட்டும்பாரு, அன்றானமெழுகதனை வைந்து பங்காக்கி அப்பனே வீரத்துக்கங்கிபூட்டே. 68

பூட்டியே யிப்படியேயைந்து தரமப்பாபுகழாகக்கலசத்தில்சீலை செய்துசீட்டமுடன் மணல்மறைவில்புடத்தைப்போடுநெடிதானவீர மதுகட்டும்பாரு, வாட்டமுடன் மேற்கவசம் தன்னைப்போக்கி வள முடனே யைந்தரம்பூசியேதான் பூட்டமென்றபுடந்தனிலே போட் டாயானால் புகழானவீரமது கட்டும்பாரே. 69

கட்டானவீரமதுமணியெடுத்து கண்ணானகண்மணியேகருத்தா ய்க்கேளு, மட்டானவுப்பதுவும் சேர்த்துப்பாரு மதிப்பானவெடியுப் புவளையலுப்பு தட்டானபாறையென்றவுப்புகூட்டிதளராதகல்லுப்பு சமனாய்சேர்த்து வட்டானசட்டிதனில்போட்டுமைந்தா வளமுடனே திருகுகள்ளிப்பாலைவூத்தே. 70

ஊத்தயிலே பாலதுவுமிகவும்பொங்கி வுத்தமனேசுண்டமட்டும் யெரிப்பாயப்பா நாத்தமுள்ள கள்ளியதுபாலுஞ்சுண்டிநலம்பெறவே கட்டியல்லோ சுண்டிருக்கும், ஏத்தமுள்ளமேல்சட்டி கொண்டுமூடி யெழிலாகச்சீலையதுமிகவுஞ்செய்துபோத்தமுடன்வாலுகையிலடுப்பி லேத்திப் பொங்கமுடன் தானெரிப்பாய்சாமமெட்டே. 71

எட்டானசாமமது யெரிக்குப்போது யெண்மகனே வுப்பதுவும் வுகிக்கிக்கட்டும் மட்டானவுப்பதுவும்கட்டியல்லோ மார்க்கமுடன் பற்பமதுபோலேகாணும், திட்டான வுப்பதுவும் பொடியதாக்கித்தி றலானசட்டிதனில்பாதிபோட்டு, கட்டானவீரமதை நடுவில்வைத் துக்கருத்துடனேமற்றபொடி மேலேபோடே. 72

போடேதான் சட்டிநீகொண்டுமூடி பொங்கமுடன் தானெரிப் பாய்மூன்றுநாளும், நீடேதான் யெரித்தபின்பு யெடுத்துப்பாரு நெ ற்றிசிவன்தானெரித்த பற்பமாகும், வாடாத பற்பமது புகலப்போ மோவளமையுள்ள பற்பமது பதனம்பண்ணு, தேடான செம்பெடுத் துப்பத்துக்கொன்று தெளிவுடனேதானுருக்கி கொடுத்திடாயே.

கொடுத்தவுடன் செம்பதுவமூறலேகி குணமாகும் ரவிதானும் கட்டிப்போகும், தடுக்காமல் வெள்ளிதனில் நாலுக்கொன்று சாங்க முடன்றானுருக்கிக் கொடுத்துப்பாரு, படுமுன்னே வெளியது பழுக் கும்பாருபாங்கானமாற்றதுவுமேழதாகும், தொடுகுறிபோல்நாலுக்கு ஒன்றுதங்கம் தோராமல்தான்கொடுத்து வுருக்கிடாயே. 74

உருக்குமுகந்தான்கொடுத்து வாரடித்துவுத்தமனே புடம்போ டப்பழுப்புமாகி, தடுக்கென்ற பொன்னதுவும் தங்கமாகிதாரணியில் சித்தர்செய்யும் வேதையாகும், குருக்குமுதல் வகைகவிதவேதைகா ணும்கோடானகோடி முறையிதுநாலாகும், பருக்கலென்ற சிவப்பு நிறம்கவலையப்பா பாங்குபெறபற்பமதைபிசறியூதே. 75

ஊதையிலே மூசைக்குள் ளிட்டுமைந்தாவுறுதியுடன்சில்லிட்டு சீலைசெய்து, தோதமுடன்குகைவைத்து ஊதும்போது துப்புறவாய் சுன்னமது புகலப்போமோ, நீதமுடன் சுன்னமதையனுபானத்தில் நிலைமையுடன் வெண்ணெய்தனில் கொண்டுபாரு, சாதமுடன் மண் டலந்தான் கொண்டுவந்தால் சார்பாகும் மேகவகை போகுந்தானே.

போகுமே மேகவகையிருத்தொன்றும் பொல்லாதநீரிழிவுகுன் மச்சூலை, ஏகுமேநீர்சொரிப்பு நீர்ப்பிணைப்பு யென்மகனே வாசனத் தின்கடுப்புதீரும், யாகமுடன்வனுபானந்தன்னிலிய பறக்குமடா நோயேது காந்தமேது, தாகமுடன் ஆஷ்ணங்களெல்லாம் போகும் சதாகாலம் தேகமது குளிர்ச்சியாமே. 77

குளிருமேதேகமது கற்றாணுகும்குடிகெடுக்கும் சயரோகமகன் றுபேகும், களிருடனேநரம்பு வலிசடலாம்விட்டு நடுங்கியேகானக த்தில் தானேபுக்கும், விளிருடனே கண்துலக்கமிகுதிகாட்டும் விரை வுடனேசுவாசமதுகீழேநோக்கும், களியுடனேயிருமலதுசடலம்விட் டுகண்ணுமேயெப்போது மணுகாதாமே. 78

தாமேதான் தேகமதுகற்றாணுகும் தனியானவாதமது கீழ்நோ க்காகும், காமேதான் சேத்துமங்கள் தொண்ணூற்றுகும் கடல்போ கும்தப்பாதுகருதிப்பாரு, வேமேதான்பத்தியங்கள் வொன்றுமில்லை

வெகுகோடிகாலமதுதேகம்போகா, நாமேதான்காலாங்கி நாதர் பாதம்நான் வணங்கி போகரிஷிநவின்றவாறே. 79

வாறான நூல்பார்த்து கால்கள்பார்த்துவளப்பமுடனடிமுடியுந் தானும்பார்த்து, கூறானகடைபார்த்துக்குறிப்பும்பார்த்து கோடான கோடிமுறை தானும்பார்த்து, சேறானகைபாகஞ் செய்யாகந்தான் செழிப்புடனேசெய்பவனேசித்தனாவான், நாறானபூவதுவில் மணஞ் சேர்ந்தார்ப்போல்நாட்டிமேலே செய்பவன்யோகியாமே. 80

லிங்கதாரசெந்தூரம்.

யோகமுடனின்னமொருமார்க்கம்பாரு, யொளிவீசும் தாரமுடன்லிங்கந்தானும், சாகமுடன் வாளையுடதயிலத்தாலே சட்டமுடன்தாளகத்தைவரைத்துமைந்தா, பாகமுடன் லிங்கத்தின்மேலேபூசி பக்குவமாய்ரவிதனிலேகாயவைத்து, தாகமென்றமுலைப் பாலைச்சுறுக்குதாக்கதகமையுடன் தான்கருகிவுதிருமாமே. 81

உதிர்ந்ததொருசரக்கதனை யெடுத்துமைந்தா ஓங்குபெறகல்வத்திலிட்டுமேதான், கதிர்ந்திடவே வாறவகைசெயநீர்தன்னால் கதிப்புடனே தானரைப்பாய் நாலுசாமம், சதிருடனேபில்லைபது தட்டியேதான் சாங்கமுடன்ரவிதனிலே காயவைத்து, முதிராமல் ஒட்டிலிட்டுச்சீலைசெய்து முசியாமற்புடம்போடச் சிவக்குந்தானே. 82

சிவப்பான செந்தூரம்யென்ன சொல்வேன் சிவசிவாவெள்ளி செம்பில் பத்துக்கொன்று, நலமுடனேவொன்றுதள்ளி ஊதிப்போடு நாதாக்கள் செய்யுமிது வேதைகாணும், தவமுடைய ஞானிகட்கு பெட்டுகாணும் தப்பாது லோபிகட்கு வாய்க்காதப்பா, பவநீக்கி யிருப்பவர்க்கு யிந்தபாகம் பலிக்குமே தப்பாதுபண்புளோர்க்கே.

லோகமாரணம் கூட்டுமுறைகொந்தம்

பண்பான காலாங்கிபாதந்தொட்டுப் பாடுகிறேன் மாணாக்கள் பிழைக்கவென்று, நண்பான தங்கமது களஞ்சிபத்தேயாகும் நலமானசெம்பதுவும்களஞ்சிரண்டு, திண்பானவெள்ளியது களஞ்சிரண்டு திறமுடனேநாகமது களஞ்சிகாலு, வண்பானவங்கமது குன்றியிரண்டு வாகாகத்தானுருக்கி யெடுத்துப்பாரே. 84

எடுக்கையிலேமாற்றதுவு மெட்டதாகும் யென்மக்காள்லோகத் துவாதிமாக்கள், சடுக்கமென்னும் பத்தியினாலறியமாட்டார் சட்டமுடன்வரைதீர்ந்து வார்த்தைசொல்வார், துடுக்கான வேதைமுகம் காணமாட்டார் துறைமுகங்காணமல்வெருமையாவர், படுக்காளியுடன் கூடிபதமுங்கெட்டுப் பாரினிலேயலைவார்கள் தாங்கள்தாமே.

நாய்போலவலேவார்கள் சண்டிமாண்பர் நாதாக்கள்கைமறப்பு வொன்றுங்காணர், பேய்போன்றபேயரல்லோவிணையக்கட்டுப் பிசகின்றிகெட்டவர்கள் கோடாகோடி, தாய்போலபஞ்சலோகந்தானிருக் கச்சதாகாலம் சீவனத்துக் குறைவுண்டாமோ, மாய்கையென்னுங் கதை நீக்கி மைந்தாபாரில் மன்னவன்போல் வாழுவது சித்தனமே.

சித்தனுமின்ன மொருமார்க்கங்கேளு சீர்பெறவேசெம்பதுவும் வொன்றேயாகும். புத்தியுள்ளசிஷயாகீபுகலவேண்டாம் புகழானவெள்ளியது மூன்றேயாகும், புத்தமுள்ளதங்கமது வாறேயாகும் சூட்சமுள்ள வெண்காரம்குன்றிரண்டு, மொத்தமுடன்குகையிலிட்டுத்தானுருக்கிமோசங்கள் வாராமல் சாய்த்திடாயே. 87

சாய்க்கவே பொன்னதுவுமெட்டதாகும்சரியான நிறையுடனே யூட்டங்காணும்,எய்க்காதுபுடத்துக்குவுறுதிதங்கபயெவராலுமிடைபாகங்காணமாட்டார், மாய்க்கவேநாதாக்கள் கூட்டுபாகம் நாமல்லோ மானிடர்க்குபட்சம்வைத்தேன், காய்க்கவேபொன்வேண்டுமானலைப் பாகருத்துடனேயிப்படியே செய்துபாரே. 88

பாரப்பா கூட்டுமுறை யின்னங்கேளு பாளமென்றதங்கமதுநாலேகாலாம், சீரப்பாசுத்தமுள செம்புதானும் சிறப்புடனேவொன்றறையுமரிக்கலாகும், கூறப்பாவெள்ளியது வரிக்கால்முக்கால் குறையாமலிடைபாகங்குணமாய்க்கொண்டு, வாரப்பா நாகமது குன்றிரண்டு வளமுடனே தானுருக்கியெடுத்துக் கொள்ளே. 89

கொள்ளவே மாற்றதுமெட்டறையுமாகும் கோளாறுநீங்கியல்லோமாற்றுகாணும், எள்ளளவும் பிசகின்றிபுடத்துக்கேகா யெழிலானபொன்னதுவும் பசுமைமெத்த, தள்ளவே வேண்டாங்கா ணிந்தபாகம்தாரணியில்கிடைப்பதுவுமரிதேயாகும், உள்ளபடிசொன்னேமேகாலாங்கிதம்மை வுறுதியுடன் நான்வணங்கிவுரைத்தேன்தானே.

தானனபஞ்சகர்த்தாளாடுங்கூத்து தாரணியிலின்னமுண்டுசாற்றக்கேளு, பாரானபசுதங்கம் வாறேகாலாம் பாங்கான செம்பதுவுமொன்றேமுக்கால், தேனனவெள்ளியது வரைக்காலாகும் தெளிவானநாகமது குன்றிமூன்று, மானனசரக்கெல்லாம்வொன்றாய்க்கூட்டி மாசிபெறகுகையிட்டு வுருக்கிடயே. 91

உருக்கியபின் றனெடுத்து வுடைத்துப்பாருவுத்தமனேபொன்னதுவோமாற்றுயெட்டு, பெருக்கமுள்ளவேலைக்கு நயமுமாகும்பொ

ன்காகமிதற்கீடு புகலப்போமோ, செருக்குடைய யித்தங்கம் பசுமை
யாகும்ஜெகதலத்தில் நாதாக்கள் செய்யும்வேதை, திருகனுடன்கை
மறைப்புமெத்தவேண்டும் தேசத்தில்கிட்டாதுயோகிக்காமே. 92

யோகியென்றால் சமுசாரிக்காகும் வதை யொருவரால்வுள்ளா
ளிகழல்காணார்கள், தேவியுடன்றானிருந்துவாழும்வித்தைதேசத்தில்
கிட்டாதுகர்மிகட்கு. ஆவியுடன்காமது வழிந்திட்டாலும் அப்ப
னேயொருவருக்கும் விள்ளவேண்டாம், தேவிகளோமெத்தவுண்டு
படுக்காளியப்பட்சமுடன்பேசிப்பார்தூரத்தள்ளே. 93

தள்ளுவது பூதலத்தில் மெத்தநன்று தருமவான் கிடைப்பதுவு
மரிதேயாகும், உள்ளபடியின்னமொருமார்க்கம்பாரு வுற்பனத்தை
யாராய்ந்துவுருக்கித்தீரு, சள்ளையென்றுவிடுகாதே மைந்தாபாரு சா
த்திரமும்பொய்யாது மெய்யேயாகு, கள்ளமின்றிசெம்பதுவுமிரண்
டேகாலாம் கருவான வெள்ளியதுவரைநாலாமே. 94

நாலானவெள்ளியது நாலரையுமாகும் நலமான செம்பொன்னு
மிரண்டேகாலாம், கோலானநாகமதுவொன்றேகாலாம்குறிப்புடனே
குகையிலிட்டுவருத்தித்தீரு, பாலானவெள்ளியது பசுமையாகிபழுப்
புடனேபொன்னதுவு மாற்றேழாகும், சூலானவர்னமது வுள்ளேநிற்
கும் சூட்சமுடன்வாரகுத்துப் புடத்தைப்போடே. 95

போட்டதுவும் பொன்னதுவுமி கதியாகி பொங்கமுடன்மாற்று
யர்வுகாணும்பாரு, நீட்டமுடனின்னமொரு கருமானங்கேள் நெடி
தானதங்கமது நாலேகாலாம், வாட்டமுடன் செம்பதுவுமொன்றே
காலாம்வளமான நாகமது முக்காணியாகும், தேட்டமுடன் வெள்ளி
யதுவரிக்கால்காலாய் தெளிவானவங்கமது குன்றியாமே. 96

குன்றியுடன்தானெடுத்து வொன்றாய்ச்சேர்த்துக்குறிப்புடனே
குகையிலிட்டு வுருக்கிப்பாரு, கண்றாணமாற்றதுவு மெட்டேயாகும்
தாக்கானபொன்னதுவும் நயப்புமாகும், மன்றான பொன்னதுவை
வாரடித்துப்பக்குவமாய்ப் புடம்போட பசுமைகாணும், வென்றானசி
த்தர் முனிரிஷிகள்பாகம் மேதினியிலதீதமென்ற வித்தைதானே.

தானென்ற வித்தையிதுயின்னஞ்சொல்வேன்சதாசிவமுமுமை
யவட்குச் சொன்னபாகம், வேனென்றதங்கமது வரிக்கால்ரண்டுவெ
ளுப்பான செம்பதுவுமுக்காலாகும், காமென்றகட்டியதோர் நாகம்
கால்தான் கருவானவெள்ளியது வொன்றேபாதி, யாமென்ற வெண்
காரங் குன்றிகாணும் பாகமுடன்குகையிலிட்டு வுருக்கிடாயே.

ஆனபின்புபொன்னது மச்சங்கொண்டு அன்புடனே வாரடித் துப்புடத்தைப்போடு, பானமென்றபொன்னதுவு மாற்றுகாணும்பா ங்கானவேதையிது சித்தர்வேதை, கானமென்றகருமானமின்னமொ ன்று கருத்துடனேசொல்கிதேன் மைந்தாகேளு, வாணமென்றதங்க மதுவொன்றுகூட்டி வளமாகசெம்பதுவுங் காலுகூட்டே. 99

கூட்டியேவெள்ளிபது வரிக்காலாகும் குணமானநாகமது வரிக் காலாகும், வாட்டமுடன்தானு நக்கி யெடுத்துப்பாரு வளமுடனே மாற்றதுவுமொன்பதாகும் நீட்டமுடன் வாரடித்துப் புடத்தைப் போடு செடிதாகமாற்றதுவுமேழதாகும், தேட்டமுடன்சித்தர்களாம் செய்யும்வேதை தேசத்தில் சிவயோகிக்காணுவானே. 100

அப்ரேக்குசெந்தூரம்

காணுவான்கருவாளிகான்பான்பாரு காசினியில்புத்தியுள்ளான் விதியுள்ளோர்க்கும், மாணவேயின்னமொருமார்க்கம்பாரு மகத்தான செந்தூரம்மகிமையப்பா, ஊணவேகிருஷ்ணபிரோகம்காணும் வுத்தம னேசேரதுவும்நாலதாகும், கானனவெண்ணையது செய்துகொண்டு க ருவாகமையின்மதை யெடுத்துக்கொள்ளே, 101

கொள்ளவேரீதமதுசேர்தான்ரண்டு கூரானவெடியுப்பு சேர்தா ன்பாதி, வில்லவேகெந்தியது சேர்தான்காலாம் வீரனவயச்சத்துசே ர்தான்காலாம், துள்ளவேமூன்றையுந்தான் வொக்கக்கூட்டி தோரா மல் குழிக்கல்லில்போடுமைந்தா, அள்ளவேஎருக்கன்பால்விட்டரை த்து அப்பனே பில்லையதுதட்டிடாயே 102

தட்டியேரவிதனிலேகாயவைத்து சாங்குமுடன் ஓட்டிலிட்டுச் சீலைசெய்து, மட்டமென்ற கெசபுடமேபோட்டுமல்லோமார்க்கமுட னுற்விட்டு யெடுத்துப்பாரு, திட்டமுள்ளசெந்தூரம் கறுப்பாய் கா ணும் திரும்பியேயிப்படியே பத்துமுறையோடு, வட்டமுடன் செந் தூரம் கரியோடாகு மார்க்கமுடன் சிவப்பதற்குமின்னம்பாரே.

பாரேதான்செந்தூரம்சிவப்பதற்கு பாசமுடனுறுவகைசெயரீர் தன்னால், நேரேதான்காரமதுயெட்டுசாமம் நேர்ப்புடனேதானரைப் பாய்வெண்ணெய்போலே, வேரேதான்பில்லையது தட்டிமைந்தா விப ரமுடன்ரவிதனிலே காயவைத்து, சீரேதான்வோட்டிலிட்டு சீலைசெ ய்து சிறப்பாகப்புடம்போடச் சிவக்குந்தானே. 104

தானனசெந்தூரம்நூறுபுடமாகும் தாக்கானவருணைதம் சொல்லப்போமோ, வேனுனசெந்தூரம் சத்துக்கொன்று விபரமுடன் தங்கமதுவொன்றசேர்த்து, காளுளவாறுவகை செயநீர்தன்னால் கருத்துடனேயில்லைதட்டிக்சாயவைத்து, மானனகோழியென்ற புடந்தான்போடு மாசற்றசெந்தூரம் புகலொணுதே. 105

புகலவேசெந்தூரம்பதனம்பண்ணு பொங்கமுடன்வெள்ளி செம்பில்பத்துக்கொன்று, நிகலவேதானுருக் ருருவொன்றியநிலையானமாற்றதுவுமெட்டதாகும், அகலவேசாலுக்கு வொன்றுதங்கம் அப்பனே கூட்டுமுறைதன்னில்சேர்த்து, தகலவேதானுருக்கி யெடுத்துப்பாரு தகைமையுடன் மாற்றதுவுமிகுதியாமே. 106

ஆமேதான்செந்தூரஞ் சோதித்துப்பார் அப்பனேபச்சைமண் பாண்டந்தன்னில், தாமேதான்சலம்விட்டு துவாரஞ்செய்து சட்டமுடன்செந்தூரம் குன்றிதானும், போமேதான்போட்டவுடன்பாண்டம்தூக்கு போக்கானதுவாரங்களடைத்துகாணும், நாமேதான்சொன்னபடிவரைதப்பாது நலமுள்ளசெந்தூரமதீதம்பாரே. 107

அதீதமாஞ்செந்தூரங்குன்றியுண்ணு அப்பனேமேகவகைபிருபதம்போம, கதீதமென்றமதும்மேக மொழிந்துபோகும் கடல்போகும் நீரிழிவுகாணுேதாடும், சதீதமென்ற செந்தூரமனுபானங்கள் சாற்றுகிறன்வலலாரைச்சூரணந்தான், பதிதமென்றவாவாரைச் சூரணந்தான் பட்சமுடனனுபான முண்ணுவீரே. 108

உண்ணயிலேதேனுகும் நெய்யுமாகு முத்தமனே பசுவெண்ணை தானுமாகும், நண்ணயிலேகிரதங்கள் லேகியங்கள் நலமானசூரணங்களனுபானந்தான், கொண்ணையுடன்பூவதுவுங் கிஷாயந்தன்னில் புகட்டம்வம்மேகங்கள்போகுமபாரு, திண்ணையிலேகியாழவகை தன்னிலீய தெறிக்குமடாமேகவகை திண்ணந்தானே. 109

திண்ணமுடன்காயமது யிறுகிக்காட்டும் திரிந்தாலும்சுவாசமது மேல்நோக்காது, வண்ணமுடன்சதாகாலந் தேகம்கற்றாண் வளமையுடன் யெப்போதும்வாழலாகும், அண் ணலெனும் பராபத்தையனுக்வேண்டும் யனுகாட்டால் காயுமில்லைபூவுமில்லை, சுண்ணமுடன் காலாங்கிதனைவணங்கி தாழ்மையுடன்பாடிவைத்தேன்பண்பாய்த்தானே

பண்பானகாண்டமது யென்னசொல்வேன்பாரினிலே நாதாக்கள்செய்யும்வேதை, கண்பானகர்மிக்குவாய்க்குமோசொல் கசடற்ற

மாண்பருக்கு வாய்க்குமல்லால், திண்பானவிதியாளி கருவாளியானு ல் திறமுடனேயறிந்துகொள்வான் புண்ணியவானும், நண்பானபோ கரிஷிசொன்னமார்க்கம் நாட்டிலேயாசேனுஞ் சொல்லார்தாமே.

தாம்பரசெந்தூரம்.

சொல்லவேதாம்பூரவேதை சொல்வேன் சுத்தமுடன்தாம்பூரத் துட்டுகாணும், வெல்லவேசேரதுதான் ரண்டதாகும் வெளியானகெ ந்தகமும்நாலதாகும், கொல்லவேதுளாக்கி யெடுத்துமைந்தா கோ ளாறுநேராமல் சொல்லக்கேளு, புல்லவேதளவாயஞ் சட்டிதன்னில் பொங்கமுடன்கெந்தகத்தைக் கீழேபோடே, 112

போடவேகெந்தகத்தைப்பாதிபோடு போக்கான கெந்தகத்தின் மேலேயப்பா, நாடவேவதின்மேலே துட்டைவைத்து நலமாகமேலுமந்தகெந்தியோடு, கூடவேமேல்சட்டிகொண்டுமூடி குமுறவேசீலையது வலுவாய்ச்செய்து, பாடவேவாலுகைப்பா மடுப்பிலப்பா பாங்குபெற த்தானெரிப்பாய்சாமமெட்டே. 113

எட்டானசாமமது யெரிக்கும்போது யென்மகனேதாம்பரமும் வெட்டையாகி, கட்டானவெட்டையது தொட்டியாகிகடுங்காரச்செ ம்பினது தொட்டியாச்சு, முட்டாளாயிருக்காமல் மைந்தாகேளு மு யலவேதாம்பரத்தை யெடுத்துமைந்தா, திட்டமுடன் கல்வம்திலிட் டுமைந்தாதிறமுடனே பொடியதுவாம் நொறுக்கிடாயே. 114

நொறுக்கியேசூதமது சமனுய்ச்சேர்த்து நோக்கமுடன்றுணரை ப்பாய்சாமம்நாலு, பறுகவேமைபோவே யரைப்பாயப்பா பாவகனே வில்லைத்ட்டிக்காயவைத்து, திறுகமுடன்வகலிலிட்டுசீலைசெயதுசிறப் புடனேகுழிதோண்டி மணலைக்கொட்டி, பறுகமுடன்நடுமத்தி வகலை வைத்துப் பாங்குடனே மேலுமந்தமணலைக்கொட்டே. 115

கொட்டவேதீமூட்டிபுடத்தைப்போடு பொலிவாகயெருவதுதா ன்மூப்பதாகும், சட்டமுடன்தியாறியெடுத்துப்பாரு சாங்கமுடன்க ளங்குபோலிருக்கும்பாரு, கட்டமுடனிப்படியே பழச்சார்விட்டுக்க துமையுடன்தானரைப்பாய் நாலுசாமம், வட்டமுடன் முன்சொன் னமார்க்கம்பாரு வகையுடனே யப்படியே பத்துபுடம்போடே.

பத்தானபுடமதுவும் தீர்ந்தபின்பு பாகமுடன்செந்தியதுகளஞ் சிரண்டு, புத்தானரசஞ்சேர்ந்த தாம்பரத்தில்பூட்டியேதானரைப்பா ய்பழச்சாற்றாலே, மூத்தமுடன் றுனரைப்பாய் நாலுசாமம் முக்கிய

மாய்பில்லேதட்டிகாயவைத்து, சித்தமுடன் ரவிதனிலேகாயவைத்து சீர்பெறவேவோட்டிவிட்டு சில்லுமூடே. 117

மூடவேவெளிப்புடமாய்போடுமைந்த மூகிழவேவாட்டியதுபத் ததாகும், சாடவேதீமூடி புடத்தைப்போடு காற்றில்லாவிடந்தனி லேம்பாடவேண்டும், காடவேதீயாறி யெடுத்துமைந்தா சாங்கமுடன் பின்னுமந்தபாகம்போல, கூடவேகெந்திவைத்தான் களஞ்சிரண்டு கூசாமல்தான்போட்டு அரைத்திடாயே. 118

அரைக்கையிலே பழச்சாற்றாலரைக்கவேண்டும் அப்பனேநாற் சாமமரைக்கவேண்டும், குறையாமல் முன்போலப் புடத்தைப்போடு குடிலமுடன்புடமதுவும் வன்பதாகும், நிறையானநிறமதுவு மங்கிரு ந்தால் நினைவாகவின்னமொரு வொன்பதப்பா கறைக்காணப் பாகம துபிசகிடாமல் கண்டிதமாய்ப்புடம்போடச் சிவக்குந்தானே. 119

தானானசெந்தூரம்பதனம்பண்ணு தகமைபெற வெள்ளிதனில் பத்துக்கொன்று, கோனானகுருவருளால் வணங்கியேதான் கொற்ற வனேதானுருக்கிகுருவொன்றீய, தேனானகருபோலயிருக்கும்பாருசெ ம்மையாம் வோட்டிவிட்டுவூதிப்போடு, பானானமாற்றதுவு மெட்ட தாகும் பான்மையுடன் பாடிவைத்தேன் போகர்தாமே. 120

போகருடவாக்கதுவும் பொய்யாதப்பா பூதலத்தில் வாதிகளோ காணப்போறார், சாகமுடனிம்மருந்து வியாதிபோக சாங்கமுடன் ச தாரூபவியாதிக்கெல்லாம், பாகமுடனனுபானம் கொண்டபோது ப றக்குமடாவியாதியெல்லாம் பண்பாய்த்தானும், வாகமுடன்தேகமது கற்றூணாகும் வல்லவுடமிறுகியது மேனியாமே. 421

மேனியாம்காந்தியது மிகவேயின்னும் மிக்கானநரைதிரையு மற் றுப்போகும், கானிமையாய் கண்ணிரண்டுங் குளிர்ந்துகாணும் கடுங் காலேக்கொப்பானசூரனுவாய், பானிமையாம்பருவமது சதாகாலந் தான் பாலிக்குமெப்போறுமாயுளுண்டாகும், கானிமையாய் காலாங் கிநாயர்பாதம் நண்ணியேசாற்றலுற்றேன் நவிலக்கேளே. 122

கேளேதான்யோகமுறை நடத்தவேண்டும் கெடியனஸ்தூலத் தைநிறுத்தவேண்டும், வீளேதான்போகாமல் வாசிபாரு விண்காலம் போனலேயோகம்பாழாம், தாளேதான் சிதாபாசம் நண்ணவேண்டும் சதாகாலம்சிற்பரத்தைப் பற்றவேண்டும், ஆளேதான் மனோன்மணி யைப்பணியவேண்டும் ஆத்தாளைப்பூசித்தால் வாழலாமே. 123

தாம்பரசெந்தூரம்.

வாழலாமின்னமொரு கருமானங்கேள் வகையுடனேநாதாக்கள் கைமறப்பு, நீழலாமெத்தவுண்டுநேர்மைபாரு நிலையானவாதவித்தை சூதுமல்ல, வாழவாம்வெகுகோடிசித்தர்வேதை மாண்பரோ வொரு போதுளவுசொல்வார், தாழலாம்பலநூலுபார்த்திட்டாலும் தாரணியில்யெனைப்போலபகராரன்றே, 124

அன்றான சாஸ்திரங்கள் யானும்பார்த்தேன் அடிமைப்போல் சொன்னவர்களாருமில்லை, குன்றானபர்வதம்போல் பாடிவைத்தார் கோடானகோடிநூலனேகமுண்டு, தான்றான நூலெல்லா மறைப்பே யாகும் தகைமையுடன்காண்பதுவு மெளிதேயாகும், பன்றானமாணிடர்கள் கட்டுகெட்டுப் பாரிலேமாண்டவர்கள் கோடிதாமே. 125

கோடியாம்தாம்பரத்தின் துட்டேயப்பா கோளாறுவாராமல் சுத்தித்தேதான், வாடியேதிரியாதேமகிபாகேளு வணக்கமுடன்தாம்பரந்தான்சேர்தாநாலு, கூடியேதாளகமும் சோதாவெட்டு குணமுடனேபொடியாக்கிசெப்பக்கேளு, நாடியேதளவாயாஞ் சட்டிதன்னில் நாதாக்கள்சொன்னபடி நாட்டிடாயே 126

நாட்டவென்றால் சட்டியிலேதாரம்பாதி நலமுடனேகீழ்போட்டுநவிலக்கேளு, வாட்டமுடன்துட்டுநடு மையம்வைத்து வகையுடனேமேலுமந்தப்பொடியைப்போட்டு, தேட்டமுடன்மேற்பட்டகொண்டுமூடி தெளிவுடனேசீலையது வலுவாய்செய்து, காட்டமென்றவாலுகையிலடுப்பிலேறிக் கனமுடனே யெண்சாமமெரித்திடாயே.

எரிக்கையிலேதுட்டதுதான்கடங்கமாகி யெழிலானவெட்டை யதுபோலாம்பாரு, நெருக்கமுடன்களங்குதனை யெடுத்துக்கொண்டு நெடிதானங்குக்குநேராசூதம், பருக்கமுடன்றான்சேர்த்துப் பகரக்கேளும் பாகம்போல்பழச்சாறுவிட்டுமைந்தா, செருக்கமுடன் குழியம்மிதன்னிலிட்டுச் சிதராமல்தானரைப்பாய் சாமமெட்டே. 128

எட்டாளசாமமதுயரைக்கும்போது யெழிலான வெட்டைபோலாகும்பாரு, கட்டானதாம்பரத்தைப் பில்லைதட்டு கருவாகரவிதனிலேகாயவைத்து, துட்டானதாம்பரத்தின் பில்லைதன்னைத் துறையுடனே வகல்தனிலேயிட்டுமைந்தா, சட்டமுடன் குழிதனிலேமணலைக்கொட்டி சாங்கமுடன்குழிநடுவில் பில்லைவையே. 129

வைக்கவேமேலுமந்த மணலைக்கொட்டி வளமாகத் தீமூட்டிபுடத்தைப்போடு, மெய்யக்கவேகோழியென்ற புடத்தைப்போடு மேன்

மைபெறத்தானெடுத்துப்பின்னுங்கேளு, சைக்கவேபத்துமுறை யிப்படியேபோடு சார்பாகச்செந்தூரங் கறுப்புகாணும், மொய்க்கவேசெந்தூரமெடுத்துக்கொண்டு மொழிபெறவே தாரமதுகளஞ்சிரண்டே.

ரண்டானதாரமுடன் களங்குசேர்த்து நெடிதானபழச்சாறுயிட்டுமைந்தா, திண்டானநார்சாம மரைத்தபோது திறமான மயினம்போலாகும்பாரு, உண்டானபில்லையது லகுவாச்செய்து வுத்தமனேரவிதனிலேகாயவைத்து, கண்டானவகலிலிட்டுச்சீலைசெய்து கனமுடனேபத்தெருவில்புடத்தைம்போடே. 131

போடவேசெந்தூரமேகவர்னம் பொங்கமுடன் றுனெடுத்துப்பார்க்கும்போது, நீடவேசெந்தூரந்தானெடுத்து நீட்சியுடஸ்பின்னுமரிதாரங்கூட்டு, கூடவேதான்போடடுப்பொடித்துமைந்தா குணமுடனேதானரைப்பாய்பழச்சாற்றுலே, வாடவேதானரைத்துப் பில்லைதட்டி வளமுடனேரவிதனிமேல காயப்போடே. 132

காய்ந்தபின்புமருந்ததனைப் புடமேபோடுக் கருமாகயிப்படியேவைந்துபத்துபோடு, சாய்ந்ததொரு ஷபாகம்செய்பாகந்தான் தட்டாமல்போட்டுமரச்சிவப்புகாணும், மாந்ததொருதாம்பரந்தான் சிவக்காவிட்டால் மறவாமல்பின்னுமஞ்சி பத்தேபோடு, தேய்ந்துமேசெந்தூரசென்னசொல்வேன் தேசத்தில்கிட்டாது சிவயோகிக்கே.

யோகமென்றல்பாகமெதை மறவாமற்றுன் யொளிவாகப்புடந்தோறும்தாரம் காலாம், பாகமுடன் களஞ்சிரண்டு போட்டரைத்துக் கருவாகப்புடம்போடச்செந்தூரிக்கும், சாகமுடன் செந்தூர மென்னசொல்?வன் சட்டமுடன்வெள்ளிதனில் பத்துக்கொன்று, தேகமுடன்தானுருக்கிகுருவொன்றீய வீரானசெந்தூரம் வேதையாமே.

வேதையாம்மார்க்கமதுயெட்டும்பாரு வேகமுடன் செந்தூரம் தேனிலுண்ண, பாதையாம்சூரணங்கள்லேகியங்கள் பலமானகிரதங் வெண்ணைதன்னில், தாதைமாம்தானருந்தவியாதிருபம் சண்ணுமே தாம்பரத்தின் செந்தூரத்தில், பேதையாம்தேகமது கற்றாணுகும் பொங்கமுடனிப் மருந்துகுருவுமாமே. 135

குருவானமருந்ததனைப் பதனம்பண்ணு குவலயத்தில்குஷ்டமுதல்ரோகிக்கப்பா, திருவானமருந்ததனை தின்றுவப்பா திறமுடனேமண்டலந்தான்கொண்டபோது, பருவானதேகடா கற்றாணுகிபாரினிலேவெகுகோடி காலம்வாழ்வாய், தருவானகாலரிஷி சித்தன்போல தாரணியில்நீயுமொரு சித்தனமே 136

சித்தானசித்தர்முனிசெய்யும்வேதை தேசத்திலோரேனுஞ் செய்யமாட்டார், பத்தியுடன்காலாங்கி நாயர்பாதம் பட்சம்வைத்துவடியேனுமுங்களுக்காயமுத்திபெற யடிவணங்கிசுவாமிதன்னை முடிவணங்கியிந்நூலைவெளியில்விட்டேன், புத்திவானுயிருந்தால் யெல்லாஞ் சித்தி பூதலத்தில்முழுமக்களறியார்தாமே. 137

தாமானசாத்திரங்கள் மிகவுஞ்சொல்லி தாரணியில் பித்தனைப் போல்பினத்திக்கொண்டு, பேமானியாகவல்லோதிரிந்துகொண்டு பேரானசாத்திரங்கள் பொய்யுமாக்கி, சாமானியவான்போல வாதுபேசி சதாகாலம்யோனியிடவாசையாலே, சாமானியசைதன்னியவாசையாலேகடைகெட்டு இடைகெட்டு கலங்கினரே. 138

கலங்கியேபேடிபோல் நாமங்கொண்டுகதிதனக்குயிடையூறுசெய்துகொண்டு, மலங்கியேதுப்புரவாயெல்லாந்தோற்று மானிலத்தில் மதிப்பற்றுமானங்கெட்டு, தவங்கெட்டுபதிகெட்டுபலமுங்கெட்டுதாறுமாறுகவேகஞ்சாகொண்டு, புலம்பியேமதுபானமிகுதியாகி பூதலத்தில் கெட்டலைந்தார்கோடிதாமே. 139

கோடியாமிருந்தவரைசானுமப்பா பூதலத்தில்குளிகைகொண்டு பறக்கும்போது, வாடியேயிருந்தவரை கண்டேன்கோடி வாய்பிறப்பைக்கண்டறிந்தேன் லக்கோயில்லை, நாடியேகாலாங்கிநாயர்பாதம்நான்தொழுதுபாடிவிட்டேன் பறைப்பையெல்லாம், தேடியேயலையாமல்மாணுக்கேளுதேசத்திஸ்சித்தனைப்போல் வாழ்குவாயே. 140

நாகவெள்ளி.

வாழ்கவேநாகமதுசேரைவாங்கி நலம்பெறவேயிலுப்பை நெய்யில்சுத்திசெய்து, மூழ்கவேகண்ணுடிக்கல்லினலே முயலவேதானரைத்துக்கங்கிபூட்டி, தாழ்கவேகோழியென்றபுடந்தானப்பா தப்பாது மூசைக்குள்நாகம்வைத்து ஏழ்கவேபொடிதனையே தூவிமைந்தா யெழிலாகவுருக்குபோல் சீலைசெய்யே. 141

செய்யவேசிலையதுகாய்ந்தபின்பு செப்பினேன்கோழியென்ற புடந்தானப்பா, பையவேபோட்டபின்பு யெடுத்துப்பாருபாங்கானநாகமதுமஞ்சளேகி, மெய்யவேகண்ணதுவு மிகவொடுங்கி மிக்கானநாகமதுவெளுமையாகும், பெய்யவேயிப்படியே பத்துமுறைபோடு பேறுனவெள்ளியதுபேசலாமே. 142

பேசலாம்சுக்கானின் கல்லையப்பா பெருமையுடன் சேரதுவும் தானெடுத்து, நாசமுளநாறுவகை செயநீர்தன்னல் நலம்பெறவே த

னரைப்பாய்நாலுசாமம், பாசமுடன் பில்லைகட்டிக்காயவைத்து பாக முடன் வாட்டிலிட்டுசீலைசெய்து, நேசமுடன்ரவிதனிலே காயவை த்து நிதமுடனேகெசபுடத்தில் போட்டிடாயே: 143

போடவேபற்பமதுயெனனசொல்வேன் பொலிலானதவளமது நிறம்போலாகும், கூடவேநாகத்துக்கங்கிபூட்டி குமுறவேமூசையில் கீழ்மேலிட்டு, வேடவேகுழிவெட்டிப்புடத்தைப்போ டுதெளிவாகும் நாகமது தெளிமையாகும், நாடவேபற்றமுறைமிப்படியேபோடு நல மானதுய்யானுக்கொப்பதாமே. 144

ஒப்பானவெள்ளியதுபத்துக்கொன்று ஒங்குபெற சுயவெள்ளி கூட்டியாடு, செப்பானபாத்திரங்களிதற்கீடல்ல சேனவிதவாபரண மிதனலாகும், உப்பானகாய்ப்புக்குவெளுமைகாட்டும் ஒகோகோ நா தாக்களதீதவித்தை, மெய்யானசாஸ்திரங்கள் வுளவுபார்த்து மேன் மையுடன்பாடிவைத்தேன் பண்பாய்தானே. 145

தானனசாத்திரத்தில்வினைகம்பேர்சுள் சட்டமுடன் பாவைத் தார்வேண்டுமாற்கம், மேவனனவெகுநூலில் வெள்ளிசொன்னார்வெளி யாகச்சொல்லவில்லை யிந்தபாகம், பானனகாலாங்கி தனைவணங்கிப் பாடினேன்சத்தகாண்டம் பண்பதாக, கோனனகுருவருளால்வடியே ன்தானும் குவலயத்தில் யிரைத்துவிட்டேன் மாந்தற்காமே. 146

ஆமேதானின்னமொருகருமானங்கேள் அப்பனேவெள்ளி என் றகாடிக்காரம், தாமேதான்துலாமதுவுமொன்றேயாகும்சார்பானவே ங்கையுடபாலலாட்டி, வேமேதான் சாமமதுவரைத்துமேதான்விரு ப்பமுடன்பில்லைதட்டிக் காயவைத்து, நாமேதான்சொன்னபடி வக வில்வைத்து நலம்பெறவேசீலைபது வலுவாய்ப்பண்ணே. 147

பண்ணியே கோழியென்றபுடத்தைப்போடு பாகமுடன்பற்பம துபகாப்போமோ, வண்ணமுடன் பற்பத்தைவெள்ளீயத்தில்வாகாக கொடுத்திடவேநீரைவாங்கும், திண்ணமுடன்பத்துக்குவொன்றுதா க்குதிரமானவெள்ளீயம் நீரைவாங்கு, வண்ணமுள்ள வெள்ளியது சொல்லப்போமே வளமையுடன்நாதாக்கள் கூத்துதானே. 148

கூத்தானகைபாகம்செய்பாகந்தான் குவலயத்தில் கோடியுண்டு யார்தான்காண்பார், மத்தானசாத்திரத்தில்மறைத்துவைத்தார்மார்க் கமுடநடியேனுந்தாள்பணிந்து,வேத்தாநகாலாங்கி நாயர்பாதம்விருப் பமுடன்போற்றியல்லோ தொழுதேன்யானும், சேர்த்தியுடன் பாடி வைத்தேன்போகர்யானும்நேர்மையுடன்மாணக்கள்பிழைக்கத்தாமே.

தானனமுனிவர்களில் சித்தர்தாமும் தயவாகப்பாடிவைத்தார் வெகுநூலப்பா, கோனனகமலரிஷிகள்தானும் கொட்டினார்கோடி முறை என்னைப்போல, தேனனசாத்திரத்தில்யென்னைப்போல தெளிவாகச்சொல்லவில்லை யாருமப்பா, வானனயென்னூலில் ஒன் றும்பொய்யா வளமையுடன்போகரிஷிவண்மைபாரே. 150

வண்மையாய்போகரிஷி மார்க்கம்பாரு வாகாகதன்னுடையநூல் கள்யாவும், உண்மையாம்சித்தருக்கும்ரிஷிகளுக்கும் ஒருபோதும் பொய்யாது மெய்யேயாகும், தண்மையாய்பாடிவைத்தேன் சத்த காண்டம் சதாகாலமானிடற்குவுறுதிநூலாம், திண்மையாய்குரு நூலாமேழாயிரந்தான் திரமாகவாய்த்ததுவேசீனத்தாற்கே. 151

சீனமென்றால் தேசமதுபுதுமைமெத்தசிறப்பான நூல்களெல் லாமங்கேயுண்டு, வானமுடன்தானிருக்குமதிசயங்கள் வாகான பூலோகமர்மமெல்லாம், ஞானமுடன்பாடிவைத்தார் கமல'தாமுமா நிலத்தில்பாடி வைத்தார்கோடாகோடி, தாளமதுயிருக்குமிடய்யா முங் கண்டோம்தராதலத்தில் லேமைபோலேகாண்பாருண்டோ.

போகர்வானத்துமீன்

உண்டானவெள்ளியதுபோக்குச்சொல்வேன் ஓகோகோநாதாக் கள் பரிசவேதை, பண்டானவெள்வங்கம்சேர்தானென்று பாள மென்றசுக்கான்நல்லச்சுன்னம்போடு, திண்டானகாடியென்ற சுண் ணம்போடு திறமாகாததானுருக்கியெடுத்துப்பாரு வண்டானவெள் வங்கம்நீரை வாங்கி வாகான வெட்டையதுவாகும்பாரே. 153

வெட்டையாம்சூதமதுவொக்கச்சேர்த்துவெடியுப்புசுண்ணமது நாலாய்ச்சேர்த்து, சட்டமுடன்தானுருக்கிஎடுத்துப்பாரு கசட்ற துய்யானும்வெள்ளியப்பா, மட்டமென்றவெள்ளியதுஒக்கச்சேர்த்து மதிப்புடனே சரியெடையாய்சேர்த்துப்பாரு, திட்டமுள்ளரூபாய் க்குசரியதாகும் திறமானவெள்ளியதுபோக்குத்தானே. 154

இரசசெந்தூரம்.

போக்கென்றுவிடுகாதே புண்ணியாகேள் புகலுகிறேன்சூத மென்ற செந்தூரத்தை, தீயென்றகெந்தகத்தின்தயிலமப்பா திற மானபாஷாணத்தயிலங்கூட்டி, காயென்ற கருஞ்சூரைத்தயிலஞ் சேர்த்துகருவாகத்தானரைப்பாய் சேரைசூதம், பேயென்றசுரைக் காயின் தயிலத்தாலே பிசகாமல்தானரைப்பாய்சாமமெட்டே. 155

எட்டானசாமமதுவரைத்தபோது என்மகனேசூதமதுமடிந்து போச்சு, கட்டானசூதமது மாண்டபோது காணலாம்கோடிவித்தைச் சூதத்தாலே, இட்டமுடன்சூதத்தையில்லை தட்டியெழிலான ரவிதனிலே காயவைத்து, மட்டானஒட்டிவிட்டிச்சீலைசெய்து மார்க்கமுடன்புடம் போட சிவக்குந்தானே 156

சிவப்பான செந்தூரம்பதனம்பண்ணு சிவசிவாவெள்ளிதனில் பத்துக்கொன்று, நயப்புடனே தானுருக்கிகொடுத்துப்பாருநலமான மாற்றதுவு மெட்டதாகும், பயமுடனே பத்துக்குஒன்று தங்கபாகமுடன் தானுருக்கி வாரடித்து, புவமுடனேபுடமதுவுமூன்றுபோட புண்ணியனே மாற்றதுவும்பசுமையாமே 157

பசுமையாந்தங்கமது யென்னசொல்வேன்பாரினிலேநாதாக்கள் செய்யும்வேதை, நிசமுடையபுண்ணியற்குவாய்க்குமல்லால் நிஷ்டூரப் பாவிகட்குவாய்க்குமோசொல், வசுவானபசுபதியோகியோர்க்கு வாய்த்தாலேகுரு பூசைக்கொவ்வும்வேதை, சிசுபாலற்கொப்பானசிவயோகிக்குசிறப்புடனே வாய்க்குமிது திண்ணந்தானே. 158

திரிகுளிகைசெந்தூரம்.

தானானதிரி குளிகைசொல்லக்கேளு சாற்றுகிறேன்ரசமுடனே தாரங்கெந்தி, கோனானகுருபரன்றன்னருளினாலே கூறுவேனுறு வகைசெயநீர் தன்னால், வேனானநாற்சாமமரைத்தபோது மிக்கான செயநீரால்சூதபாண்டு, பானானசறக்கிரண்டுமொன்றாய்க்கூடி பதமுடனே மெழுகது போலாகும்பாரே. 159

பாரேதான்மெழுகதனைவட்டுதட்டிபாகமுடன் ரவிதனிலேகாயவைத்து, சீரேதான்ஒட்டகலில்வைத்துமூடி சிறப்புடனேசில்லிட்டுச் சீலைசெய்து, நேரேதான்மணல்மறைவில் புடத்தைப்போடுநேர்ப்பாக வாறின பின்னெடுத்துப்பாரு, கூரேதான்செந்தூரயென்னசொல்வேன்கொடியதோர்மேகவன்னமாகுந்தானே. 160

வன்னமாஞ்செந்தூரமிப்படியே பத்து வளமுடனேபோட்டு வாவிபாரங்கேளு, சுன்னமென்ற கடுங்காரமிகவுமாகி சுடரொளியாங் காந்தியது மெத்தப்பற்றி, வின்னமில்லாகரடுகளுமில்லா மற்றுன் மிக்கானபூப்போலவுதிருங்கண்டீர்; சொன்னபடியின்னுமந்த செந்தூரத்தைச்சுகமுடனேதானரைத்துதங்கங்கூட்டே. 161

கூட்டையிலேபத்துக்கு ஒன்றுதங்கம்குணமாகத்தான்சேர்த்துவரைத்துமைந்தா, வாட்டமுடனுறுவகைசெயநீர் தன்னால்வளமாகத்

தானரைப்பாய்நாலுசாமம், நீட்டமுடன் ரவிதனிலேகாயவைத்து நினைவாகப்பின்னுமதைப்பொடியதாக்கி, தேட்டமுடன்காசியென்ற குப்பிதன்னைத் தெளிவாகச்சீலையதுவலுவாய்ச்செய்யே. 162

செய்யவேகுப்பியதுகாய்ந்தபின்பு திறமுடனேசரக்கெல்லாம் குப்பிக்கேற்றி, பையவேமாக்கல்லால் கொண்டுமூடி பாங்குபெற சீலையது வலுவாய்ச்செய்து, மெய்யுடனேதளவரையாஞ்சட்டிதன்னில் மேன்மையுடன் மணலதனைக்கொட்டிமைந்தா, உய்யவேகுப்பி நடுமையம் வைத்து உத்தமனேமேலுமந்தமணலைக்கொட்டே. 163

கொட்டையிலேகுப்பிவாய்த்தெரியமூடி குடிலமுடன்மேற்சட்டிக்கவிழ்த்துமைந்தா, திட்டமுடன்சீலையது வலுவாய்ச்செய்து திறமுடனேவாலுகையாமடுப்பிலேற்றி, சட்டமுடன் தானெரிப்பாய் எட்டுசாமம் சார்பாக வாறினபின்னெடுத்துப்பாரு, வெட்டவெளிக் காருடாவிடத்திலப்பா விருப்பமுடன்குப்பியைநீவைத்துப்போற்றே

போற்றவேமூன்றுநாளானபின்பு பொங்கமுடன் குப்பியை திறந்துபார்க்க, ஏற்றமுள்ளசெந்தூரமிகவும்பார்த்து யென்மகனே காந்தியது புகலப்போமோ, தேற்றமுடன் சீஷாவிற்பதனம்பண்ணு திறமுடைய செந்தூரமனுபானந்தான், கூற்றனுக்கிடையின்றிதேனிலுண்ணக் குடிலம்விட்டேகுமடாதிண்ணந்தானே. 165

திண்ணமாம் வெண்ணைதனில்கொள்ளலாகும் திறமானநெய்யிலும் கொள்ளலாகும், வண்ணமுள்ள சூரத்தில்கொள்ளலாகும் வாகான லேகியத்தில்கொள்ளலாகும், எண்ணமுடன் யெய்தவனுபானத்தாலும் எழிலுடனேமண்டலங்கள் கொள்ளலாகும், உண்ணயிமலசகல ரூபவியாதி யெல்லாம் வுத்தமனேதேகம்விட்டுச்சுண்ணும் தானே. 166

சுண்ணுமேமேகமென்றராஜனுக்கு சத்துருவாமிம்மருந்துசாற்றக்கேளு, குண்ணிவிடும்சிலவிஷயங்கள்யாவனைத்தும் குவலயத்தில் நிற்காதுபறந்தேயோடும், திண்ணமுடன் செந்தூரப்போக்கு சொல்வேன் திறமுடைய மக்களாயிருப்பாயானால், நண்ணமுடன் வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று நலமுடனேகொடுத்துருக்கமாற்றெட்டாமே. 167

மாற்றானவெள்ளிசெம்பையூதிப்போடு மகத்தானவெள்ளியது மாற்றுமாகி, தேற்றானபகமையதுயதிகங்கொண்டு தெளிவுடனே மாற்றதுவு மெட்டதாகும், சாற்றவேசிவயோகிசெய்யும் வேதைதாரணியிலாரேனுஞ் செய்யமாட்டார், போற்றவேபுத்தியுள்ளானுவானாகில் பொங்கமுடன் செய்துகொள்வான்வாதியாமே. 168

வாதியாய்சகலவிதவண்மையெல்லாம் வாகுடனேகண்டறிந்து வளமாய்ச்சொல்வேன், சாதியிலேயொருவனப்பா சன்மார்க்கன்ருன் தாரணியில் தானிருப்பான் ஒருவர்காணுர், மாதிமையாம்துஷ்டருடன்கூடமாட்டான் மானிலத்திலடக்கமுற்று வாழ்வானப்பா, சோதிமயங்காணுவான் சுந்தரன்ரான் சூட்சாதிமர்மத்தைவெளி விடானே. 169

விட்டானேயாமாணுல் தலைதெறிக்குப்வேதாந்தத்தாயவளுமுன் னேநிற்காள், தொட்டதொருவேலையெல்லாந்துகளாப்போகும் தொடருமேவினைதானும் துறத்திக்கொள்ளும், விட்டகுறைநேருமாணுல் தாமே யெய்தும் விண்ணுலகில்நாதாக்கள் செய்யும்வேதை, தடடியே பருபரியைத்தொழுதுபோற்றி தராதலத்தில்சித்தனுயப் பிறப்பாய் தானே. 170

தானுனநிஷ்டையிலே யிருந்துகொண்டு சதாநிஷ்டைருத்திர நிஷ்டைமாலிநிஷ்டை, கோணுனமயேஸ்பரியின்நிஷ்டைதானும்குறிப் பான பிர்மநிஷ்டைதானேடொக்க, வேனுகயிருந்துகொண்டு சதா காலந்தான் விருப்பமுடன் ரேசகபூரகமும்செய்து, மாணுக்கும் பகத் திலிருந்துகொண்டுமார்க்கமுடன் மூலமதையழுத்திப்பாரே. 171

அழுத்தியேகமலமதிலிருந்துகொண்டு அப்பனேபிரமத்தைக் காணலாகும், வழுத்தவேகுண்டலியில்மூலந்தாக்கி வாகுடனே பிர மத்தைநிஷ்டைகொள்ளு, தொழுகமாலினிடனிஷ்டையப்பா தோழு மல் வஷ்டாங்கம்செய்துக்கொண்டு, விழுகவேகும்பகத்தில் வாசி பூட்டி விஷ்ணுவை சதாகாலம் காணலாச்சே. 172

காணவென்றல் வஷ்டருத்திரத்தைக்கேளு கருவானபூரகத் தைக் கும்பகத்தில்மாட்டி, தோணவே வனுகதந்தில்வாசிபூட்டி தொழுது மேறுத்திரரைக்கண்டுபேசி, வீணவேசகலபாக்யமும் பெற்று விண்ணிலே வலதுகாலேதூக்கிமைந்தா, கோணவேபாதத் தை நிலத்திற்றுக்கி குப்புரவாய்கிழேநோக்கி, மாணவேவிசுத்தியிலே யிருந்துகொண்டு மாணிலத்தில் மகிபலேவாழாமே. 173

வாழலாமயேஸ்பரனு பாதங்கண்டுவகுப்புடனே நிஷ்டைவந்து மதிறமாய்த்தொட்டு வீழலாம்சதாசிவத்தின் நிஷ்டைதன்னைவிருப்ப முடன் கண்டறிந்துவிழல்போகாமல், தாழவேயோகதண்டைகையி லேந்தி தளமுடனேவிபூதிதன்னைத்தளமாய்ப்பூசி, மாழவேசதா சிவத்தை பணிந்துபோற்றி மயங்காமல்மனேன்மணியை தொழுது நில்லே. 174

நிற்கையிலே மனேன்மணியாளமூர்த்மீவாள்நிகருனவமூர்தமது கொண்டபோது, துற்கையுடன் காளிமுதல்நடுங்குவார்கள் துடியா

னதேகமதுகற்றாகுைம், சற்பனைகள்மிகடனே வதிகமாகி சதாகா லம்பூரணத்திலகித்து நின்று, உற்பணமாம்மதியமூர்த லேகியத்தை வுண்டுமல்லோசதாநிஷ்டைப்பணிகுவாயே. 175

மதியமூர்தலேகியம்.

பணியவேமதியமூர்தம் சாற்றக்கேளு பாங்கான கெஞ்சாவின் விரைநாற்சேரு, கணிதமுடன்சாதிக்காய் சாதிபத்திரிகருவான கிராம்புடனேடவாட்டியமொக்கு, தணியவேவபினியுடன் கசகசாவும் சாங்கமுடன் வகைக்குருவாருசேர்தான்பாதி, மணிபோலதான் வறுத்துச்சூரணித்துமயங்காமல் தான்செப்யும்வகையைக்கேளே. 176

கேட்கவேசர்க்கரையாய் பாகுதன்னில் கெணிதமுடன் சூரணத்தை கொட்டிக்கிண்டி, தாட்டிகமாய்நெய்தேனும் விட்டுக்கிண்டி சார்பாகக்கிளறியல்லோ குளிகைபண்ணி, வாட்டமுடனந்திசந்திதானருந்திவளமுடனேதீபவொளி கண்ணிற்றோற்றும், நாட்டமுடன் சித்தர்முனிரிஷிகள்தாமும் நானிலத்தில போகுவதுந்தெரியுமாமே.

தெரியுமாம்கேசரத்தில் போகுமாற்கம் தேசத்தில்விநோதவகை யாவுந்தோற்றும், அரியுடனேசிவன் முதலுங்காணலாகும் ஆகாயவதிசயங்கள்யெல்லாந்தோன்றும், பரியொளிபோல் கைலங்கிரிதண்ணிற்காணும்பாருலகில்நீயுமொருசித்தனுவாய், சரியுடனேகாலாங்கி நாயர்பாதம்பணிந்துமே போகரிஷிபாடினேனே. 178

பாடினேன்சத்தகாண்ட மேழாயிரந்தான் பாரிலுள்ளமானிடற்குபண்பாகத், தேடியேகிட்டாது மிகவாருய்ந்து தெளிவுடனே பாடிவைத்தேன்குறுநூலாக, கூடியேநல்லோரிடமுஞ்சார்ந்து குவலயத்தில்யெப்போதுமிருந்துவாழ்வாய், வாடியேயலையாதேவுண்மைகண்டு வளமுடனே யென்நூலைவணங்கிப்போற்றே. 179

வல்லாரைக்கற்பம்.

போற்றவேகற்பமொன்று புகலக்கேளு பொலிவானவல்லாரையார்காண்பார், ஆற்றவே வல்லாரைக்கற்பந்தானும் லவணிலேவுண்டவர்கள்மெத்தவுண்டு, நீற்றமுடன் கைபாகம் செய்பாகந்தான் நீனிலத்தில்கண்டவரும்யாருமில்லை, மாற்றமுடன்குருவருள்கள் பெறவேவேண்டும் பெறவிட்டால்பூவில்லை காயில்லைதாமே. 180

இரண்டாவது வல்லாரைக்கற்பம் கருபிண்ட மறிய.

தாமான பூரமதுஒன்றேயாகும் தாக்கானவெல்லமது ரண்டேயாகும், காமானஎருக்கன்பால் தன்னாலாட்டிக் கரிவாகமைபோலயூா

ட்டிமைந்தா, வேமானகற்வுடையமா துக்கிய வெளியாகுமைந்துமாத ங்கற்பந்தானும், சாமானமின்றிவல்லாரைதன்னில் சட்டமுடனிக் கருவைப்போட்டிடாயே. 181

போடவேகல்வமதில்யிட்டுமைந்தா பொங்கமுடன் தானரைப் பாய்நாலுசாமம், நீடவேதானரைத்துவானபின்பு நினைவாகப்பரணி தனில்டைத்துக்கொண்டு, கூடவேகுழிவெட்டிப்பூமிதன்னில் குடில முடன்றான்புதைத்துபின்புமேகேளு, ஆடவேமண்டலங்கள்சென்று தானால் அப்பவல்லோகாயாதி கற்பமாச்சே. 182

ஆச்சென்றவிடுகாதே மைந்தாகேளு அப்பனே மதியமுர்தங் கொண்டாயானால், மூச்சடங்கிதன்னிலையைக்காணலாகும் முயலான பூரணத்தைநண்ணலாகும், பேச்சென்றசத்திசிவங் காணலாகும் பேரான சிவபூசையறி லாகும், பாச்சென்றசத்திசிவங் காணலாகும் பராபரத்தின்சின்மயத்தின் பற்றநன்றே. 183

செங்கடுக்காய் லேகியம்.

நன்றான பேரொளியைக்காணலாகும் நாதாந்தத்திரவுகோல் காணலாகும், குன்றானவேதாந்தக்கற்பமெல்லாங் கோடிக்கு கோடி வரைகாணலாகும், தன்றானசெங்கடுக்காய் சேர்ந்தானப்பா தயவு டனே தானிடித்துச்சாற்றானீக்க, வென்றானபாகமிது பத்துமுறை தானும் விரும்பியேதானிடித்துச் சூரணங்கள்செய்யே. 184

செய்யவேசூரணத்தை எடுத்துமைந்தா தினம்போது காடியினு லரைத்துமேதான், பையவேகுன்றியிடையுண்டு வந்தால்காலனுக் கிடமேதுசாவுமேது, நொய்யவேதேகமதுகற்றாணும் நோக்காடு வாராது நுணுக்கமெத்த, மெய்யவேகாலாங்கிநாயர்பாதம் விருப்ப முடன்றான் பணிந்து விளம்பிட்டேனே. 185

விளம்பிட்டேன் கைபாகம் செம்பாகந்தான் வித்தியாசங்களது மிகவாராமல், குளம்பிட்டநூல்களெல்லாமிகவாராய்ந்து குறிப்புட னே கண்டறிந்தகலையுமாகும், தளம்பிட்டசதாநாலும் பார்த்தா லென்னசாங்கமுடன் காணுபவன் யோகவானும், அளம்பிட்ட யிதி காசவித்தையெல்லாம் அறிபவனேலோகத்தில்சித்தனுச்சே. 186

சித்தனுப்பிறந்தாலும் கீர்த்தியுண்டு தேசத்தில் வெகுபேர்கள் மெச்சுமாண்பன், பத்தனுப்பிறந்தாலும் பதவியுண்டு பாருலகில் தனுப்வாழலாகும், பித்தனுப்பிறந்தாலும் வொன்றுங்காணுன் பேசரிய மாட்டாதபுலவனுவன், எத்தனைதான் கற்றாலு மென்னலாபம் நீடுழி சமாதியிலே யிருக்கநன்றே. 187

காரிய பற்பம்.

நன்றானயின்னமொருமார்க்கம்பாரு நலமானகரிவங்கம்சேர்தா னப்பா, பன்றானதகடாக்கி செப்பக்கேளுபாங்கான ஆவாரைபஞ் சாங்கந்தான், குன்றான சரக்கதுவைக் குடுவைக்குள்ளேகுணமுட னே தான்போட்டு தகட்டை வைத்து, அன்றானபொடிமேலே தகடு வைத்து அப்பனே வதன்மேலே பொடியைப்போடே. 188

போடையிலேகீழ்மேலும் பொடியைப்போட்டுப்புகழாகத்தாள் போட்டுசீலைசெய்து, நீடவேகெசமான குழியைவெட்டிநினைவாகப்பு டம்போடக் கரிவங்கந்தான், கூடாதேவெந்ததுவும்கரடுமாகிகுடிலமு டன்பற்பமது சோளம்போலாம்,பாடவேயிப்படியேபத்து புடம்போ டுபாங்கானபற்மதுதவளமாச்சே. 189

ஆச்சப்பா பற்பத்தையெடுத்துக்கொண்டு அப்பனேபொரித்த ண்டஞ்சிற்றண்டந்தான், நீச்சப்பா சரியாகயெடுத்துக்கொண்டு நினை வாகவெண்கருவால் தன்னாட்டி, மாச்சலன்றி சிறுபில்லைபாகத்தட்டி மதிப்புடனேரவிதனிலே காயவைத்து, தீப்ச்சலென்றகயு யோட்டிலி ட்டுமைந்தாதிரமுடனேகோழியென்றபுடத்தைபோடே. 190

போடவே பற்மதுகாறமேறிப்புகழான வெண்மைநிறம்புகலப் போமே கூடவேபத்துமுறையிப்படியேபோடுகுணமானபற்பமதுகூற ப்போமே, நீடவேபற்பத்தையனுபானத்தில்நேர்மையுடன்றானருந்த மேகமெல்லாம்,ஓடவேகடல்போகுமென்றுசொல்லுவுத்தமனேபோக ரிஷி புகன்றவாற. 191

வாறானகயரோகம் சயரோகங்கள்வாகுடனேகிரந்திமுதல்காணு தோடுங்,கூறானபாண்டுடனேவீக்கம்போகும்பொல்லாதசயரோகம்கா மாலைபோகும், நேறானபவுத்திரங்கள் மூளைமூலங்கள் நெடிதான கிரந்தி முதல் சண்ணலாகும், சேறானவெள்ளையோடு சிலவிஷங்கள் சீறியே யோடுமடாதிண்ணந்தானே. 192

மாற்றுயர்வு வேதை.

திண்ணமாமின்னமொருபாகங்கேளு தெளிவாக கல்லுப்புபடி தானொன்று, வண்ணமுடன் புளியாரை சாற்றினாலேவளமையுடன் றானரைப்பாய் நாலுசாமம், கண்ணமுடன் பில்லைதட்டிக்காயவைத் துக்கருத்துடனே வோட்டிலிட்டுசீலைசெய்து, நண்ணமுடன் பத் தெருவில்புடத்தைப்போடுநாதாந்தத்தாயெனக்குச்சொன்னவாறே.

சொன்னபடி யப்படியேயரைத்துமைந்தா சுத்தமுடன்ரவியி லிட்டுக்காயவைத்து. நன்னயமாய் சீலைசெய்து புடத்தைப்போடு

நலம்பெறவேவைத்துபத்து, விப்படியேபோடுமுன்னுரைத்தபாகமது பிசகிடாமல் முனையானவுப்பதுவும் சிவக்குமட்டும், பனனவேபுடம் போடச் செந்தூரிக்கும் பாலகனைசெந்தூரம்பதனம் பண்ணே.

பண்ணியேசரக்கொன்றைப்பூவினாலே பாங்குடனேகெந்தகத் தையரைத்துமேதான், நண்ணமுடன் தானரைப்பாய்நாலுசாமம் நல முடனே வுண்டையதுபுன்னைக்காய்போம், தண்ணமுடன் தோண்டி யிட்டுதுவாரமிட்டு சட்டமுடன்சீலையதுவலுவாய்ச்செய்து எண்ணி யேநாறெருவில் குழித்தயிலமப்பா யெழிலாகவாங்கிடவே எண்ணை யாமே. 195

ஆமேதான்தயிலமதைசெப்பக்கேளு அப்பனேமேற்சொன்ன வுப்பைமைந்தா, தாமேதான் மட்டமென்றபொன்னுமேலே தகை மைபெற வாரடித்துப்பூசுபூசு, வேமேதான்செந்தூரத்தயிலத்தாட்டி விப்பமுடன் பூசியல்லோபுடத்தைப்போடு, நாமேதான்சொன்ன படி மாற்றுகாணும் நாதாக்கள் செய்கின்றவேதையாமே. 196

மாற்றுயர்வு.

வேதையிலேயின்னமொரு பாகங்கேளு மேன்மை பெறலிங்க மது கட்டிவாங்கி, போதையிலேநாகமொரு கட்டிவாங்கிபொலிவாக நாகத்தைச்சுத்திசெய்து, பாதையிலேசூதமிடை நாகஞ்சேருபாங் கானநாகமிடை வீரஞ்சேர்த்து, ஊதையிலேதானுருக்கி யெடுத்து மைந்தா வுத்தமனேசாரமிட்டு அரைத்திடாயே. 197

அரைக்கையிலேநாற்சாமம்செயநீராகும் அப்பனேவன்னீரை செப்பக்கேளு, முரையுடனேலிங்கமது சுறுக்குதாக்குமுனையான லிங்கமது கட்டிப்போகும், திரையுடனே பாகமதுபிசகாவண்ணம் செப்புகிறேன்நாகமதுதகடதாக்கி,வரைபோலலிங்கத்தைவுமிநீராலே வளமுடனே யெழைப்பாய்மைந்தாகேளே. 198

கேளேநீலிங்கத்தை தகட்டிற் பூசுகிருபையுடனே வோலையள வாகப்பூசு, பாயேதான்போகாமல் ரவியிற்போடுபாலகனே வெள்ளி என்றநேரக்கடித்து, தூளேதானாகாமல் தகட்டைவாங்கித் துப்புற வாய் நாகத்தின்தகட்டின்மேல்கீழ் சூளேதான்வைத்துமல்லோ சீலை செய்து துப்பரவாய் வைந்தெருவில்புடத்தைப்போடே. 199

போடவேநாகமதுவர்னமிஞ்சி போக்கானலிங்கத்தைக் கட்டிக் கொண்டு, கூடவேலிங்கமதுவோடாமற்றுன் குமுறவேவெள்ளி யென்றநேரக்கின்மேலே மூடவேவர்னமதுதனலாயேறி மோசமில்லை யாறுமாத்தாகும் பாரு காடவேரக்கதனை யெடுத்துமைந்தா நய முடனே தானுருக்கியெடுத்திடாயே 200

எடுத்துமேவாரடித்துப்புடத்தைப்போடு எழிலாகப்புடமதுவும் முன்போலாகும், தொடுத்துமேமுன்போலப் புடத்தைப்போடு துப் புரவாம் புடமதுவுமதிகமாகி, விடுத்துமேமாற்றதுவு மதிகங்காட்டு மிக்கானபொன்னதுவும் பசுமையாகி, அடுத்துமேநாலுக்கோர் தங்க ஞ்சேர்த்து அப்பனேவாரடித்து புடத்தைப்போடே. 201

புடமாறியெடுத்துப்பார் பொன்னேதங்கம் புஷ்பம்போல் குங் குமதுநிறமேயாகும், திடமானதங்கமது பிறப்பேயாகும் தேசத்தில் கிட்டாதுசிவ யோகிக்கு, சடமழியாக்கற்பமது வுண்டுகொண்டு சதா காலம் நிஷ்டையிலேயிருப்பாயப்பா, மடமானிறைசைதனை விட்டொ ழித்து மகிழ்ச்சியுடன் எப்போது வாழலாமே. 202

போகர்சீனபதியில் அஸ்வமில்லாமல் புகைரதம்ஓட்டியது.

வாழலாம்சித்தர் முனிரிஷிகள்மெச்ச வாகுடனேசீனபதி மாங் தற்கப்பா, நீழவேபூமிதனில் பரிகளில்லாநெடிதான ரதமதுதான் போவதற்கு, தாழவே சூஸ்திரங்கள் சொல்வேனப்பாகருவூரார்சித் தர்முனிகமலர்தாமும், சாழவேயொருவருஞ் சொன்னதில்லை சாங்க முடன்போகரிஷி சொன்னேன்பாரே. 203

பாரேதான் ராஜாதிராஜர்மெச்சப் பாரினிலேவஸ்வமில்லாவண் டியோட, நேரோதான் சக்கரமுமாதராகும் நெடிதான யிரிசியது மூன்றதாகும் கூரேதான்குறுக்கவ டம் எட்டதாகும்குறிப்புடனே வடிவட்டம்நாலதாகும், தேரேதான்யடிவட்டமூட்டிக்கொண்டு திற மானமேல்வட்டம் பூட்டக்கேளே. 204

பூட்டவேவிரிசியதுவிட்டங்கொண்டு புகழான கள்ளாணி யிரும் புமாட்டி, மாட் டியதோர் யிரும்புகுவளையமிட்டு மார்க்கமுடன்சுத்து புரம்கம்பிமாட்டி, நீட்டமுடன்நாற்சதுரமத்திவட்டம் நெடியதொ ருகுழலொன்று முனையில்வைத்து வாட்டமுடன் மத்தகஜம் தலை யுண்டாக்கிவளமுடனே தலைகுழையில் சில்லுபோடே. 205

சில்லுதனைஎடுததுமிகப் பூட்டிபார்க்கச் சிறக்காவே மறைகொ ண்டுதிருவல்பூட்டிப், பல்லுடனேசக்கரத்தில் திருவுபூண்டு பக்கமிரு புறமுமட்டும் குழைகள்விட்டு, மல்லுடனே மல்லணிந்து குழைசி போட்டு மல்லினதுமேற்புறத்தில் குழைகள்நிற்க, தெல்லுபோல் தகடதனைவுருளைசெய்து தேர்வட்டம்போலாகத் தெரியபூட்டே.

பூட்டுகையில்வில்லாணி கள்ளாணியப்பா பகழானநடுசட்டம் திருகுசட்டந்தானும், தாட்டிகமாய் கயிர்போலத்திருகு கம்பிமாட்டி

சட்டங்களில் மூன்றுவட்டபிறை போலுண்டாக்கி, நீட்டமுள்ள கெஜநூறிவண்டி ரதம்போலநெடிதானசட்டமதுவளவுடனேமாட்டு காட்டவேவகலமது கெஜமுப்பதாகும் கருணையுடனங்குலங்கள் வரைதப்பா மாட்டே. 207

தப்பாமல்மாட்டையிலே தேர்கொண்டசூட்சம் தாரணியில் போகுதற்குச்சட்டமுடன்கூட்டு, ஒப்பமுடன்காலில் ஒருபக்க மிக வாணிஓங்குபுகழாணிமேலே திருவல்மிகமாட்டி செப்பமுடனடி வாரக்குழை தனிலேசில்லு, சீராகத்தானமைந்துக் கழுத்துக்கட்டை மாட்டி, நெப்பமுடன்சிம்மாடுகட்டைதனில் மத்திநேராக திருவலது சொருவல்மிகப்பூணே. 208

பூணவேநெடுங்கம்பி யாறுவகைசட்டம் பூட்டியதோர் கம்பிகளி லாறுவகைக்குறுக்கு, தேராணவேமேற் புரமுமடிப்புரமுமப்பா துப் புறவாம் நடுக்குழலில் யிருபக்கமடைத்து, காணவேவாயுவென்ற காற்றதுவுமொடுங்கி கடையாணி சுழலாணி, சுள்ளாணி முடுக்கி மாணவே பின்பக்கம் சட்டிகுழல்வைத்து வதிப்புடனே கொப்பறை போல்வுருளை செய்யே. 209

செய்யவேகொப்பறையில் வக்கினியும்நிற்க சோரவேவப்புவென்றகொப்பறையின்பக்கம், உய்யவேசகலமதுவும் ஆவியோடொக்க வுற்பனமாய்வாவியது மேல்நோக்கிப்பாய, எய்யவேகணையாதேநெருப்பதனைமாட்ட, யெழிலானவுள்ளாவி கொண்டு, பையவேசலமிருக்குமிடந்தனிலே பாவிபறக்குமேமுன் குழலில்பாவிமிகப்போமே.

போகவேகைசுழலல் மறைதிருவலப்பா பொங்கமுடன் நீராவி தன்னில் மிகச்சார்ந்து, பாகமுடனக்கினியின் காற்றதுவு மொடிங்கி பறந்துமே பெருங்குழாதன்னில் மிகச்சார்ந்து, சாகமுடன்சூத்திரங்கள்கண்டுமிக திருப்பக்கர்ச்சனையா மாவியுடன்பறந்து மிகவோடும் தாகமெனும்பாணியினால் யாவிமுதலெல்லாம் தட்டொடுங்கி குழல் தனிலேதவித்துமிகப்போமே. 211

போமேதான்பஞ்சபூதமிதி லொடுக்கம்பாரு போக்கானவாயுதனில்தேயுமிகச்சார்ந்து, வேமேதான்தேயுவிலே வப்புமிகக்கலந்துவே சுமுடனுவிதனைவிளை விக்கும்பாரு, தாமேதான் பிரிதிவினில் வாகாசமொடுங்கி, தாரணியிலுள்ளடக்க பெட்டிமிகவாச்சு நாமேதான் சொன்னபடிபஞ்சகர்த்தாள் நாட்டினேன்தேவரதப்நாட்டினேனே.

நாட்டினேன் காதாக்கள் கண்டதில்லை நலமுடனே நூலாதிநூல்களெல்லாம், வாட்டமுடன்கண்டறிந்துவுளவுபார்த்து வளமுடனேசெய்துவைத்தேன் சீனந்தன்னில், தாட்டிகமாய்சீனபதிமூன்று காதம் தாரணியில் சுத்திவந்து விநோதஞ்செய்தேன், ஓட்டமுனி மையகிரியோரஞ் சென்றேன் ஒகோகோகாதாக்கள் ரிஷிகண்டேனே

கண்டேனேகோடிமுனிசித்தரப்பா கைலங்கிரிவாசரைப்போல் கோடாகோடி, தெண்டமுடனடியேனுங் காலாங்கிதம்மைத் தெளிமையுடனுனினைத்து சித்தர்தம்மை, கொண்டபடி செனங்களெல்லாமேத்திக்கொண்டு கோர்வையுடனாயிரமாம்ரதங்கள்மாட்டி, அண்டர் முனிராட்சதர்கள் கிடுகிடுக்க அவனியெல்லாஞ் சுத்திவந்தேனன் பாய்தானே. 214

போகர் உரோமபுரி கண்டது.

தானனரோமபுரி சுத்திவந்தேன் தாக்கான வெண்ணாயிரங்காதமப்பா, வேனனசித்ததர்களை யேற்றிக்கொண்டு வேகமுடன்தானடத்திவந்தேனப்பா, கோனனகுருசாமி காலாங்கிநாதர் கொற்றவனும் ரோமபுரிராசர்தானும், பானனசமாதி யிடயிடமுங்கண்டேன் பட்சமுடனவ்விடத்திலிறங்கினேனே. 215

இறங்கினேன் ராசரிடசமாதி கண்டேன் எழிலானயேசுவிறன் சீஷர்கண்டேன், சுறமுடனிம்மான்வேல்சமாதி கண்டேன்சுத்தனும் பரிசுத்தர்சமாதி கண்டேன், வரங்கொடுக்கு மிசுரவேல்சமாதி கண்டேன்வளமுடனேரோமபுரிதேசத்தார்கள், திறமுடனே ரோமபுரிக் கோட்டைக்குள்ளே போகுவதும்வருவதுங்கண்டேன்தானே.

கண்டேனே கோட்டைவழி சென்றபோது கடுங்காளையாயிரம் பேர்சூரரப்பா, தெண்டமுடன்யேசுவின்தன்பாதம்போற்றி தெளிவுடனே ஞானவுபதேசஞ்சொல்வார், பண்டிதங்களதி விசேடமனைத்து முண்டுபனிரண்டு சீஷவர்க்கச்சமாதியுண்டு, மண்டலத்தில் தானிருக்கும்யேசுதம்மை வணக்கமுடன் வரங்கேட்போர்கோடியாமே.

கோடிபேர் சமாதியில்லை தன்னைக்கண்டேன் கொற்றவனும்ரோமபுரிசமாதி யோரம், தேடியேபார்க்கவென்று போகும்போதுதேர்வேந்தராசரப்பா யிசுரவேலர், நாடியேதபசிகளாயிரம்பேர் நலமுடனே சமாதியதுலக்கோயில்லை, கூடியேபார்க்கையிலே விநோதமெத்தக் கூறவேமுடியாது திண்ணமாமே. 218

திண்ணமாம்எழுபத்து தேசங்கண்டேன் திடமுள்ளமாதாவின் தேசம்போனேன், வண்ணமுடன்யூதாவில் கோடானுகோடிவனந்தனிலேரிஷிகளப்பாசொல்லொண்ணாதே, என்னவேஏசுவின்றன் மகி

மைமெத்த எடுத்துரைத்தார் சீஷர்வற்கமனேகம்பேர்கள், சண்ணலு டன்மலையெல்லாஞ் சுத்திவந்தேன் சாங்கமுடன் யீசர்க்குசமாதி யுண்டே. 219

உண்டான சமாதியிடம்போயிருந்தேன் ஓகோகோ நாதாக்கள் சீஷவர்க்கம், கண்டேனே வெகுகோடி வதிசயங்கள் கலியுகத்தில் கண்டதில்லை இதுபோலப்பா, தண்டவனந்தான்தாண்டி சுத்திவந் தேன்சகலான சீனபதி மார்க்கத்தாரை, கொண்டுமல்லோ வவரவர் கள் தேசம்விட்டுக் கொப்பனவேதிரும்பிவந்தேன் சீனந்தானே.

போகர் எருசலேம்பட்டணம் கண்டது.

தானனமார்க்கமது யின்னஞ்சொல்வேன் தகமையுள்ள எருச லேம்நகரத்திற்கு, வேனனகாலாங்கி நாயர்பாதம் விருப்பமுடன் முன்வணங்கி யடியேன்யானும், பானனகுருபரனை வணங்கியானும் பார்க்கவேஎருசலோம் போகவென்று, மானனமாதாவைக் காணவெ ன்றுவணங்கினேனவர்பாதம் தொழுதிட்டேனே. 221

தொழுகையிலே வசீரிவாக்கியந்தான் தொடர்ந்துமேயவரிட த்தில்பிறந்ததாச்சு, எழுந்துமே புகைரதத்தை நடத்திக்கொண்டு ஏகினேன் எருசலேம்நகரத்திற்கு, செழுமையுடன் தேசமெல்லாம் சுத்திவந்து சீர்பெறவே தானிறங்கி யடியேன்தானும், பழுதுமிகநே ராமல் குளிகைபூண்டு பட்சமுடன்மலைமீதிற் சென்றேன் பாரே.

சென்றுமிகப் பார்க்கையிலே குகைகள்வுண்டு சிறந்தகெருகு கைத்ளிலெ மனுங்குமார்கள், குன்றின்மேல் ஃகாடானகோடி ஃபேர் கள்கொடுத்தபசி யம்கிருந்தார் லக்கோயில்லை, தன்முனகபியுடைய சீஷவர்க்கம் சார்பாக ஒருப்க்கம் தவமிருப்பார், பன்முனசீஷர்களு மனேகமுண்டு படைபொருத யென்மேல வந்தாதானே. 223

வந்தாரேகபியுடைய சீஷவர்க்கம் வளமையுடன் கோடிபேர் சூழ்ந்தாரப்பா, சுந்தரனேயாரென்று கேட்கலுற்றார் சுடரொளி போல் சொரூபமதை காணும்போது, எந்தனுக்கு பயங்கொண்டு நடுக்காலாகி என்மகனேகாலாங்கி சீஷனென்றேன், அந்தமுடன் எந்தனையும்பெரும்பாலாக வாதரித்துகோபமதை தணித்திட்டாரே.

தணிந்தபின்பு எந்தனையுமெங்கேவந்தாய் தயவுள்ளசிறுபாலா கூறுமென்ன, கணிதமுடனடியேனும் புகைரதங்கள் காசினியில் யாமேனு மதிசயிக்க, துணிவுடனேசித்தர்முனிரிஷிகள் தம்மைசுக முடனேதானேத்தி சீனந்தன்னில், அணியணியாய்க் கொண்டுசெ ன்று அனியெல்லாமவரவற்கு வதிசயத்தைக்காட்டினேனே. 225

காட்டிவந்தேன்சீனபதிதனிற் சென்றேன் கடவுளாமேசுவின் றன்காட்சிகண்டேன், வாட்டமுடன் பீமார்கள் சீஷவற்கம் வகையுடனேகாணவென்று திரும்பிச்சென்றேன், காட்டமுடன்புகைரதத்தை மாட்டிக்கொண்டு நலமுடனே யெருசலேமகாண வந்தேன், மாட்டிமையாய்குளிகையது பூண்டுகொண்டு மாநபியைக்காணவென்று வந்திட்டேனே. 226

வந்திட்டேநபிபாதங்காணவந்தேன் வாகானசீனவர்க்கர் என்னை நோக்கி, செந்தமுடனுபசாரணைமெத்தசெய்து தேவனிங்கேயில்லையென்றுவாக்குரைத்தார், எந்தனுக்கும்மனஸ்தாபம் மிகவுண்டாக்கியென்சாமிநபிதனையே காணவென்று, நொந்துமனந்தானிருக்க சீஷவர்க்கம் நோக்கமுற்று எந்தனுக்குவழிசொன்னாரே. 227

போகர்மக்காபுரிகண்டது

சொன்னவுட னடியேனுமடிவணங்கி துணையாக சீஷவர்க்கம் கூட்டிக்கொண்டு, நன்னயமாய் புகைரதத்தில்யேத்தியேதான் நாதாந்தநபிதனையைக் காணவென்று, மன்னர்மெய்ச்சுமக்காவாம்புரியைக் காணவகையுடனேநெடுந்தூரம் ரதந்திருப்பி, பன்னரகந்தனிலோரஞ்சென்றுயானும் பட்சமுடன்புகைரதத்தை நிறுத்தினேனே.

நிறுத்தினேன்னங்கிருந்தார் சேனைவர்க்கம் நிலையானபுகைரதத்தைக்கண்டபோது, திருத்தமுடன் மேயாடிவந்தார்கோடிபேர்கள் திரளானநபிக்கூட்ட மலுங்குவார்கள், பருத்தமலைதனையோரம் சமாதிபக்கம் பதுங்கியேகாத்திருப்பார் சமாதிதன்னில், வருத்தமுடனபிபாதங்காணவென்று வந்திட்டேன் என்றலுமே எனைப்பார்த்தாரே.

பார்த்துமே நபிபாதம்காணவென்றேன் பட்சமுடன்கோரிக்குட் சென்றேனப்பா, கீர்த்தியாம் நவரத்தினசமாதிக்குள்ளே நேர்மையுடனபியிருக்க சொன்னாரப்பா, தீர்த்தமுடன் ரொட்டியொன்று யீய்ந்தாரப்பா திறமுடையமலுமார்க ளாயிரம்பேர், காத்திருந்தேன் நெடுநேரமடியேன்தானும் கண்ணெதிரேரூபமது கண்டிலேனே.

கண்டிலேன்நபிநாயகந் தன்னைக்காணேன் காதலேவதரீரிவாக்குண்டாச்சு, அண்டர்முனிராட்சதர்கள் திடுக்கிட்டேங்க அவனியெல்லாந்தாநடுங்க சப்தமாச்சு, தொண்டாகமெல்லாங்கூடி யுத்தாலாவைதொழுதுமே பணிந்திட்டாரந்தநேரம், தெண்டனிடும்போதையிலே மலுங்குகூட்டத்துணையாகயானுமொரு மலுங்கானேனே. 231

மலுங்காகத்தானிருந்தேன வலதுகாலம் மானபியைக்காணவென்று எண்ணங்கொண்டேன், கலுங்கபத்திமுதலான சீஷவர்க்கம்

கரைகாணர்கோடிமன்னர் காணியீவார், பலுங்குடனே பனிரண்டு வாண்டுவாண்டு பாரினிமேலசமாதியின்றன் சத்தமுண்டு, பலுங்கை யுடசத்தமதுசதாகாலந்தான் பாலிக்குமென்றலும் பண்பதாமே.

பண்பான செய்தியல்லோகண்டறிந்தேன் பட்சமுடன்நபிநாயந் தன்னைக்காணேன் கண்பானசமாதியிலே மகிமைமெத்த காட்சியு டன்காணுவது மிகவுமாச்சு, நண்பானநபிக்கூட்டம் கோடிகாவல் நல மான சமாதியிமேல யிருப்பாரப்பா, திண்பானமுகம்மதுமார்க்கத்தார் கள் சிறப்புடனேகண்டேனே கோடிபேரே. 233

கோடியாம்யணியணியாய் பார்த்துவந்தேன் கூறவேபோகாது குவலயத்தில், தேடியேதிரிந்தாலு மக்காவைப்போல் செகத்திலே வதீதமுள்ள தேசமுண்டோ, நீடியேமகிமைகளுமநேகமுண்டு நீணி லத்தில் யான்சென்றேன்தேசமெல்லாம், பாடியேகுளிகையதுபூண்டு கொண்டு பாரெல்லாஞ்சுத்திவந்தேன் பண்பாய்தானே. 234

பக்கிரியாக்கோபைக்கண்டது

தானேதான்சீனபதியேகவென்று தாழ்ச்சியுடன்உத்தாரங் கேட் கும்போது, மானேதான்பக்கிரியாக்கோபுதானும் மகாதீட்சைபெறுக வென்று வணங்கிஎன்னை, தேனுனகாலாங்கிபாதங்காண தெளிவுட னே எந்தனுக்கு வரமுமீவாய், பானுனகமலமுனிதன்னைக்காணபட்ச முடனிருப்பிடமுஞ் செப்பிடீரே. 235

செப்பவென்றயாக்கோபு என்னைக்கேட்க தெளிவுடனே யானு மல்லோ விடையுஞ்சொல்லி, ஒப்பமுடன் புகைரதத்திலேற்றிக்கொ ண்டு உத்தமனேசீனபதி சென்றேன்யானும், கப்பலெனும்நீராவி மார்க்கமாகக்கடுந்தூரந்தீவுகளுஞ் சுத்திவந்து, மெப்புடனேசீனபதி கரையிலப்பா மேன்மையுட னிறங்கிவிட்டேன் பாலன்றனே. 236

பாலனும்யாக்கோபி சித்தர்தாமும் பட்சமுடன் கமலமுனிதன் னைக்காண, சீலமுடன்றுகோபசாரந்தன்னால் சிறப்புடனே சமாதியி டந் தன்னிற்சென்றூர், கோலமுனியானதொருகமலர்தாமும் குவல யத்தில்சமாதியிலே யிருந்தாரங்கே, ஞாலமுள்ளசித்தொளிவைக் காணவென்று மகிழ்ச்சியுடன்சமாதியிடம் நெருங்கினரே. 237

நெருங்கியேகமலரிட சமாதிகண்டார் நேர்மையுடன் யாக்கோபு வணங்கிநின்றூர், கருங்கல்லுக்குள்ளிருந்தசித்துதம்மைக் கண்ணாலே கண்டாராம்யாக்கோபப்பர், உருகவே யடிபணிந்து பக்கிரிதானும்

வுத்தமனார்வதமுனிபாதந்தொட்டு, தருகவேதாமெனக்குத் தயைசெ
ய்யென்று தாழ்மையுடன் கேட்டாராம் சித்தர்தாமே. 238

தாமெனமேயாக்கோபு கேட்கும்போது தயையுடனே கமலமு
னிசாற்றலுற்றார், பூமானம்யாக்கோபு மைந்தாகேளு புகழ்ச்சியுடன்
சொல்லுகிறேனுந்தமக்கு, நாமமுடன்தேசமெல்லாஞ் சுத்திவந்தீர்நா
தாக்கள்சித்த முனி ரிஷிகள்தம்மை, தாமமுடனவர்களிடம் வாது
பேசிசமர்த்துடனே வென்றுபந்தபாலாகேளே. 239

கமலர் யாகோபுக்கு புத்திகூறல்.

கேளப்பாவுலகத்தில் கொடியசித்தர் கோடானகோடியுண்டு யி
ருப்பாரப்பா, தன்மையாய்அவர்களிடம் பேசியல்லோ சாங்கமுடன்
வுளவுகளையறியவேண்டும், ஞானமுடனவர்களுக்குத் தொண்டுசெய்
து நளினமுடன் ஞானத்தைதெரியவேண்டும், வேளாமையாய் எதிர்
த்துமிகவாயாடாதே வீண்வார்த்தை தாமிழுத்து சபிப்பார்தாமே.

சபிப்பாரேபக்குவமாய் நடந்துகொள்ளு சதாகாலமவர்களிடம்
பூசித்தேதான், அபிமானம்தான்வரவே நடந்துகொள்ளு அப்போ
தேயுன்மீதில் கிருபைவைத்து, நபியுடையமகிமைதனைப் பற்றியே
தான்நாதாக்கள் மரியாதைசெய்வாரப்பா, கபிலமுனிகெடுங்காலமிங்
கேவந்தார் கண்டல்லோசித்தர்களுஞ் சபித்திட்டாரே. 241

இட்டாரேசித்தர்முனி ரிஷிகள்தாமு மிடையூறு பேசினதோர்
தர்க்கத்தாலே, கெட்டாரே கமலமுனிக்கல்லாய்ப் போனார் கொடியு
டனேசித்தர்களுஞ் சமைத்தாரங்கே, கிட்டிருந்துமரியாதியாவும்பெ
ற்றக்கிருபையுடன் மக்காவுக்கேகுமென்றார், சட்டமுனிமுதலானோ
ரிங்குவந்து சாங்கமுடனுபதேச மடைந்தார்பாரே. 242

பாரேதான் போகரிடதீரம்வேண்டும் பண்பானவிட்டகுறை நே
சம்வேண்டும், சீரேதான்காலாங்கி பட்சம்வேண்டும் சிறந்தமுனிபல
பேர்கள்கிருபைவேண்டும், நேரேதான்குளிகையது பூணவேண்டும் நீ
னிலத்தில் பெருமையதுகீர்த்திவேண்டும், மேரேதான்கண்ணபிரான
ருளும்வேண்டுமில்லாட்டான் வனியிலே வெல்லார்தாமே. 243

வெல்லார்க்களென்றசொல்லி யாசீர்மித்துவித விதமாய்வேண
தெல்லாந்தாமுரைத்து, சொல்லாதுமிகச்சொல்லி சுரூபஞ்சொல்லி
த்துரையுடனே முறையோடுகதையுஞ்சொல்லி, வல்லானகாலாங்கி
நாயர்பாதம் வணங்கியே எப்போதுமனதிலுன்னி, மெல்லவேயுந்தனி
டபதியைத்தேடி மேன்மையுடன்போகவென்று வரந்தந்தாரே.

தந்தவுடன் பக்கிரியாக்கோபுதானும் சார்புடனே தம்பதிக்குப் போனாரங்கே, அந்தமுடன்காலாங்கி தாள்வணங்கி அப்பனே சீனபதிவிட்டுயானும், விந்தமுடனதிசயங்காண வெளிப்பட்டேன்சீனபதி தன்னைவிட்டு, சொந்தமுடன் மேருவுக்கு கடைபாகத்தில் சூரியனார் தாமிருக்கும் மிடங்கண்டேனே. 245

போகர் சூரியவனம் பார்த்தது.

கண்டேனேவனந்தனிலே மகிமைமெத்தக் கண்டவர்கள்விண்டவர்களாருமில்லை, அண்டமுனி ராட்சதர்களரசுராள்கூட்டம் அணியணியாய்எதிர்வந்து சூழ்ந்துகொண்டார், தண்டவனந்தன்னிலேயான்குளிகைகொண்டு தரணியிலிறக்கினதைப் பார்த்தாரங்கே, கொண்டல்வண்ணனேகர்கள் கர்ச்சிப்பாலே கோடானகோடி வதிசயங் கண்டேனே. 246

அதிசயங்கள்மெத்தவுண்டு வங்கேதானும அப்பனே வசுராக்கள்கூட்டமப்பா, பதியைவிட்டுபதிதேடி வந்தவன்யார் பாதகனாயிருக்கிறானென்றுசொல்லி, துரிதமுடன் யென்தனிடகிட்டவந்து துப்புரவாயாரென்று வினவிக்கேட்க, கதிதமுள்ளபோகரிஷி யடியேன்தானுங்கலங்கியே திடுக்கிட்டு நின்றிட்டேனே. 247

நின்றேனே கிடுகிடுத்துபயந்துமேயங்கி நெடுமூச்சுதானெறிந்துபயமுமுற்று, குன்றருகேநின்றுவிட்டே னடியேன்தானும் கூச்சலுடனசுராக்கள்கிட்டியேதான், சென்றுமேயென்னைஎடுத்து விழுங்கவந்தார் சோருமல்யானுமல்லோ வார்த்தைபேசி, வென்றுமேகாலாங்கிநாயர்பாதம் விருப்பமுடன்முள்வணங்கி பணிந்திட்டேனே. 248

பணிந்தேனேஎந்தனுக்குப் பட்சம்வைத்துப் பாரிலுள்ளவிநோதமெல்லாங்காண்பித்தார்கள், துணிவுடனே சூரியனின்வனங்களெல்லாஞ் சுத்தியேவலசாரியாகவந்தேன், அணிபெறவே யாளியுடவனமுங்கண்டேன், கணிதமுடன்பூமிமுதலமுனையுங்கண்டேன் காலாங்கிநாதருட கடாட்சந்தானே. 249

போகர் தாதுலேகியம்

தானானவின்னமொருமாற்கம்பாரு தாக்கான தாதுபுஷ்டிகுளிகைகளும், வேனானபேரீச்சங்காய்தான்சேரு மிக்கானஊமத்தின் விரைதான்சேரு, பானைகஞ்சாவின்விரைதான்சேரு பாங்கான மாதுளையுன்விரைதான்சேரு, தேனானகொமட்டிவிரைசேர்தானப்பா தெவிவானவத்திவிரை சேர்தானென்றே.

ஒன்றானவிரையுடனேயத்திவித்து ஒளிவான ஆவின்றன் வித்து வாகும், நன்றானதுத்தியிடவித்துவாகும் நலமானசூரியிட வித்துவா கும், தன்றானவாவாரைவித்துவாகும் தாக்கானவெட்பாலைவித்துவா கும், பன்றானகார்போகவித்துவாகும் பாங்கானவாதுமையின்வித்து வாமே. 251

ஆமேதான்காரையுடவித்துவாகும் அப்பனேகொன்றையிடவி த்துவாகும், தாமேதான்புரசையிடவித்துவாகும் தயவானகொத்தம ல்லிவித்துவாகும், வேமேதான்நீர்முள்ளிவித்துவாகும் வியர்வானசூ ரையுடவித்துவாகும், காமேதான்பூனையிடவித்துவாகும் கறப்பான பாளையிடவித்துமாமே. 252

வித்தானவெள்ளரியின்வித்துமாகும் விதமானகாசிலியின் வித் துமாகும், சத்தானவரைக்கீரைவித்துமாகும் சார்பானகுலாமம்லி வி த்துமாகும், சுத்தானவாலையின்றன்வித்துமாகும் சுடரென்ற தாய்ப் பாகல்வித்துமாகும், சித்தானதேற்றானின் வித்துமாகும் சிறப்பான கருங்கொள்ளுவித்துமாமே. 253

தானானபூசனியின்வித்துமாகும் தனியானயெட்டியின்றன்வித் துமாகும், பானானமுருங்கையிடவித்துமாகும் பாகானமுள்ளங்கி வி த்துமாகும், கோனானவாசினிட வித்துமாகும் குணமான சோகியிட வித்துமாகும், தேனானதாமரையின்வித்துமாகும் தெளிவானவழிஞ் சியிடவித்துபாரே. 254

பாரேதான்சாரத்தின் பருப்புகூட்டி பாங்கான கசகசாதானுங் கூட்டி, நேரேதான்சாதிக்காய் சாதிபத்ரி நேர்பானவால்மிளகு சுக் கோட்டேலம், சாரேதான்கிரும்புடனே மிளகுகூட சார்பானலவங்க மென்றபட்டைதானும், வேர்பானபூமிசர்க்கரையின்மூலம் விரைவா னமருட்டியென்றன் மொக்குமாமே. 255

பிசினிவகை

மொக்கானகருவேலம் பிசினியாகும் முனைபானவெள்வேலம்பி சினியாகும், தாக்கானசாலன்றன் பிசினியாகும் தகையான முருங் கையுடபிசினியாகும், செக்கானமாங்கனியின் பிசினியாகும்சிறப்பா னவத்தியின்றன்பிசினியாகும், சுக்கானவிளக்கோலின் பிசினியாகும் சுகமானவாலன்பிசினியாமே. 256

பிசினுடனேகருங்காலிபிசினியாகும் பிசகில்லா பூதத்தின் பிசி னியாகும், நசிதமுள்ள குங்குமத்தின்பிசினியாகும் நலமானகாட்ட

த்திப்பிசினியாகும், உசிதமுள்ளபலாமரத்தின்பிசினியாகும் உத்தம னேவூஞ்சனுடபிசினியாகும், கசிதமுள்ளவிளாவினுட பிசினியாகும் கருவானகசகசாபிசினுங்காணே. 257

பூவகை.

காணவேபூவினிட மார்க்கம்பாரு கருவானமுருங்கையிட பூவு மாகும், தோணவேயாவாரைப்பூவுமாகும் துறையானதென்னம்பூசா மந்திப்பூ, மாணவேமல்லியிடபூவுமாகும் மகத்தானவிலாவினுட பூவு மாகும், சாணவே தாழையுடபூவுமாகும் சார்பான தாமரையின் பூ வுமாமே. 258

ஆமேதான்விலாமிச்சுபூவுமாகும் அப்பனேமாதுளையின்பூவுமா கும், மேவமேதான் வேம்பினிடபூவுமாகும் கடிதானசெவ்வல்லி பூவு மாகும், காமேதான்பூவகையின்ரசமுஞ்சொன்னேம் நலமான செம் பூரான்பூவுதாமே. 259

மூலவகை.

தாமானமூலவகைசாற்றக்கேளு தாக்கானதண்ணீர் மிட்டான் கிழங்குதானும், காமானபனையினிடமூலமாகும் கருவானகரும்பினி டமூலமாகும், சாமானசெந்தொட்டிவேரினேடு சார்பானகருந்துள சிவேருமாகும், வேமானயிம்பூராவேறுமாகும் மிக்கான செம்பாளை வேறுமாமே. 260

மாமிஷவகை

வேறானமாமிஷமாமடைக்கலந்தான் வேகமுள்ளஉடும்பு முயல் கலைதானுந்தும், வாறானமுட்பன்றி மயிலுமாகும் வாகான செம்புரவி வாண்குறியுமாகும், தாரானகாடைகவுதாரியாகும் துறைமேயும்கொ க்குடனேபுராவுமாகும், தாராவாம்பெட்டையுடன் செஞ்சேவல்தா னும் சாதாவாம்குறும்பாட்டு யிறைச்சிபாரே. 261

இறைச்சியாம்விலங்குடனே யித்தனையுங்கூட்டி எழிலாகவெயி லுலர்த்திச்சூரணித்து, முறையுடனே ஒவ்வொன்றில் சேர்தானப்பா முபற்சியுடன்தானெடுத்து சேர்க்கக்கேளு, குறையாமல்முன்சொன் னசரக்கையெல்லாம் கூட்டுமுறைதப்பாமல் ஒன்றாய்க்கூட்டி, நிறை யுடனேரசவகையுந் தப்பாவண்ணம் நினைவுடனே நெய்தேனிற் கிண் டிடாயே. 262

கிண்டையிலேசர்க்கரைபுஞ் சரியாய்ச்சேர்த்துக் கிருபையுடன் மெழுகுபதம்தனிலிரக்கி, பண்டிதமாய்நெய்தேனும் கூடக்கூட்டிப் பாகமுடன்தானிறக்கிகுளிகைசெய்து கண்டிதமாய்மண்டலந்தானந்

திசந்திக், கருவாகத்தின்றமல்லோ கூடும்போது வண்டினம்போல்க லவியதுமிகவுமாகி மங்கையருமானிலத்தில் நடுங்குவாரே. 263

நடுங்குவார்மாளிலத்தில் பெண்களெல்லாம் நாணுவார் புருஷா ளைக்கண்டபோது, கடுஞ்சோபமதிகமுடன் காதல்கொண்டுகர்ச்சனை யுமிகவுண்டாய்கதிப்புகொண்டு, விடுமானும்கலையுடனே கலந்தமான் போல் விடாய்பட்டு மன்மதன்போல்காதல்பூண்டு, தொடுமாதர் நா னகுவிதசாதியோரைத் தோறுமனுபவித்துப்பெயர்கொள்வீரே.

கொள்ளவென்றல்பத்தியங்களில்லையப்பா குணமுடனே வண் மையுள்ளபதார்த்தமெல்லாம், தள்ளவேபோகாது சதாகாலந்தான் தாரணியிலுண்டவற்குப்பலமேழானே,விள்ளவேயுண்டாகுங்குளிகை யப்பா விண்டலமுமண்டலமுமிடங்கொள்ளாது, உள்ளபடியிக்குளி கையார்தான்செய்தார் உத்தமனே கருவாளிசெய்வான்பாரே.

போகர் அஷ்டகிரி பர்வதங்கண்டது.

பாரப்பாவின்னமொரு மார்க்கம்பாரு பாங்கானமகமேருகிழக் கேயப்பா, நேருகத்தானிருக்கும்பர்வதந்தான் நேர்மையுள்ள வஷ்ட கிரியென்பார்சித்தர், சார்வாகயானுமல்லோ குளிகையிட்டு ஈட்டமு டன்சீனபதிவிட்டுயேகி, காரானகதிரோனின்வனமுந்தாண்டி கடின முடன்மலையோரம் சென்றேன்தானே. 266

சென்றேனேயடிவாரத்தருகிலப்பா திரளானகோடிமுனி சித்த ருண்டு, குன்றிநிடம்உட்சென்றேன்யானுமங்கே குறிப்பான குத்து க்கால்லொன்றுகண்டேன், பற்றியெனும்பெருச்சாளிவாகனத்தில் பாங் குடனேகணபதியும்வீற்றிருக்க, வென்றிடவேகுத்துக்கல் பிள்ளையா ரைவேண்டினேன் போகரிஷிவேண்டினேனே. 267

கணபதி சமாதிகண்டது.

வேண்டியேசிற்கையிலே கணபதிதானும் விருப்பமுடன் போக ரைதான் வளப்பங்கேட்டார், தாண்டியேவளமெல்லாந் தான்கடந்து தகமையுடன்வறுவதற்குநீதியுண்டோ, பூண்டமனதுறுதியினால் வந் தாய்நீயும் பூலோகமானிடனும் வரலாமோதான், மாண்டுமேபோவத ற்குசித்தர்தாமும் மன்னவனேதான்சபிப்பார் பெருமைபாரே.

பாரேதான்என்றலுமே கணபதிதானும் பாங்குடனே போகரி ஷிதிடுக்கிடடேங்கி, நேரேதான்கணபதியைச் சாஷ்டாங்கித்து நிலை மைபெறசுவாமிஎனக்கெதியேதென்ன,சாரவேஎன்மீதில்பட்சம்வை

த்துச்சாங்கமுடன்எந்தனுக்குஉபதேசித்து, சூரனுமிருக்குமிடங்கா
ணவென்று சுந்தரரும் வாக்களித்தார் சூட்சந்தானே. 269

சூட்சமுடனுபதேசமருளும்பெற்று சுடரொளியாம் பத்மாசூ
ரனையுங்காண, தாட்சியுடனிரண்டாங்கால்வரையுமேறி தண்மையுட
ன் முதற்கோபுரவாசல்நின்றேன், காட்சியுடன்சூரனது ஸ்தலமுங்க
ண்டேன் கைலாசசட்டமுனிசமாதிகண்டேன், மாட்சியுடன் கைலா
சமுனிதானங்கே மார்க்கமுடன் சமாதிநிலை யறிந்திட்டேனே.

அறிந்திட்டேன் சட்டமுனிபாதங்காண அவ்விடத்தில்சிலநே
ரம்நின்றேன்யானும், அறிந்திடவேசித்தர்முனி கோடாகோடி தகை
மையுடன் கொலுக்கூடமங்கிருந்தார், செறிந்திடவேயடியேனைக்கண்
டபோது சேனைதிரள்கூட்டமுடன் கிட்டவந்தார், புரிந்திடவே சிறு
பாலா எங்கேவந்தீர் புதுமையுடன் கேட்கலுற்றார் சித்தர்தாமே.

தாமானசித்தர்முனிகேட்கும்போது சாங்கமுடன் காலாங்கித
னைநினைந்து, வாமமுடன்குருசாமிகாலாங்கிதம்மை வளமையுடன்தா
னினைத்துதிக்கலுற்றேன், ஓமெனவேநாதாக்கள் கேள்விக்கல்லோ
உத்தமனுமடியேனுங் கால்நடுங்கி, சாமெனவேசினபதி தன்னில்யா
னும் சட்டமுடன்குளிகைகொண்டு வந்திட்டேனே. 272

வந்திட்டேனென்றவுமே சித்தர்தாமும்வணக்கமுடனிரண்டா
ங்கால் வரையிற்கொண்டு, முந்திட்டுமூலரிடபாதங்காணமுனையான
சமாதியிடம்நிற்கும்போது, கந்திட்டதேவரிஷிக் கொப்பாஞ்சித்தர்
கருவானதிருவாசர் படிகார்ப்பார்கள், தந்திட்டவாசலது திறக்கவெ
ன்றுதாட்சியுடன் தேவரிஷிவினவிட்டாரே. 273

வினவையிலே சமாதியதுதான்திறந்து வேகமுடன்வசரீரி வாக்
குண்டாச்சு, தினகரன்றன்னொளிபோலே வடிவங்கண்டேன் திகழா
னசட்டமுனிதன்னைக்கண்டேன், மனமுறிகிஎன்மீதில் கிருபைவை
த்து மாட்சியுடன்ஞானோபதேசஞ் சொன்னார், அனல்கண்டமெழுக
துபோல் நெஞ்சந்தானும் அப்பனே மனமுருகி வழுந்திட்டேனே.

வழுந்திட்டபோதையிலே சட்டர்தாமும் வகையுடனே வாக்க
ளித்தார் யடியேனுக்கு, தொழுதிட்டபாலாநீ சினந்தன்னில் தோற்
றமுடன்குளிகையது தலைவாய்பூண்டு, கழுகுடனேவல்லூறுபாந்தா
ற்போல கருணைபெறவெந்தனிடங் காணவந்தீர், தழுவியேசித்தரும்
மைகண்டுபேசி தாரணியிற் கல்லாகசபிப்பார்தானே. 275

தானனசித்தருடவுளவகாணிர் தாரணியில்ரிஷிமுனிவர் மர்ம்மங்கோடி, வேறைகநல்லவர்போல் நேசிப்பார்கள் விருதாவாய் வாதுமிகப்பேசியல்லோ, கோனகுருநிந்தை கூறுவார்கள் குடிகெடுக்குஞ்சித்தருண்டுகுவலயத்தில், தேனைவழுர்தமது யீவாரப்பா தெரியாமல்கருவழியாற்கொல்லுவாறே. 276

கொல்லுவாரவர்கள்பதி செல்லவேண்டாம் கொடிமுடியுஞ்சித்தரப்பாகோடியுண்டு, வெல்லவே சமாதியிடந்தானமைப்பார் விருதுமிகப்பேசியல்லோசாபமீவார், செல்லவேஞானத்தின் வழிகேட்பார்கள் சேறுனமுப்பூவின் மார்க்கங்கேட்பார், புல்லவேநாதத்தின் முறையுங்கேட்பார் புகழானவுறக்கினத்தின் கிடங்கேட்பாரே. 277

கேட்கையிலேதூரநின்று வர்த்தைகேளு கெடியானகும்பகத்திலிருந்துகொண்டு, நீட்டமுடன் வனகத்தை மேலேநோக்கி நெடுந்தூரங்காணிறுத்திவூணிப்பாரு, பூட்கமலலட்சுமியும் பொருந்தி நிற்பாள் புகழானவிசுத்தியிலே யேரிப்பாரு, தாட்கமலத் தாள்திறந்து போகம்பார்த்துச் சதாகாலந்தரணியி லகுவாய்வாழே. 278

வாழவென்றால் வெகுகோடிகாலம்வாழ்வாய் வாகானகற்பமது தெரிந்துக்கொண்டு, நீழவேகாயசித்தி மாயசித்தி நெடுங்காலம் தானநிந்துநிலைத்துவாழ, மாழவேபோகநிலையறியவேண்டும் மகத்தான விசுத்திதனை சுழுத்தியிலேமாட்டி, சாழவேசடாக்ஷரத்தை மேலேநோக்கு சதானந்தங்கணபதியை பூசிப்பாயே. 279

பூசிக்கக்கணபதியுங்கந்தன்தானும் புகழாகவாணியுடன்மனமுவந்து, நேசித்துவாலையுடன்நிருபிதனை நேர்மையுடன்கண்டறிந்து நிச்சயித்து, ஆசையுடன்பிர்மான லாகிரிதன்னில் அப்பனைவிசுத்தியிலிருந்துகொண்டு, காசையென்னும் பொன்னைசைதனைமறந்து காசினியில்சித்தனைப்போல் வாழலாமே. 280

சித்தானசித்தனைப்போல் வாழவென்றால் செகதலத்தி லின்னமுண்டுகாட்சியப்பா, கத்தானும்பிர்மாவின் பதியைக்காணபகருகிறேன்மூன்றுங்கால் வரைதானப்பா, முத்தமுடன்நீசென்று பார்த்துவந்தால் மோசமில்லையின்னம்வெகு கெவினியாவாய், சுத்தமுடன் கைலாசநாதர்தாமும் சூட்சமுடன்றுமுரைத்தார் திரும்பினேனே.

பிரமசமாதிகண்டது.

திரும்பியேகுளிகையது விண்டுகொண்டு தீரமுடனடியேனுமேலேசென்றேன், குரும்பானசித்தர்களாமநேகப்பேர்கள் கூடியேவெகுபேர்கள்வந்தாரப்பா, இரும்பானசித்தரப்பா யானும் கண்டேன்

எழிலாக எந்தனையுமாரென்றூர்கள், சுருப்புடனே காலாங்கிதனை ஊைந்து துரிதமுடன்போகரென்று வசனித்தேனே. 282

வசனித்தபோதையிலே வடியேன்மீது வாருடனே களிகூர்ந்து கூறலுற்றார், துசனித்து சமாதியிடம்கொண்டுசென்றார் தோற்றமுடன்பிரமாவின்வாசல்கண்டேன், நிசமுடனேகோட்டைக்குள் சுரங்கம்கண்டேன் நெடிதானசுரங்கத்தின்வழியைக்கண்டேன், புஜமுடையகிங்கிலியருயிரம்பேர் புனிதமுடன்கொலுவிருந்தார்ரிஷிகள்தாமே.

தாமானரிஷிமுன்னே சென்றேன்யானும் சதகோடிசூரியர்போல்சமாதிக்குள்ளே, பூமானும்பிரமாவு முள்ளிருந்துபிரியமுடன் எந்தனிடம்வார்த்தைசொன்னார், காமானமாகவல்லோவடியேன்தானும் கைகட்டிமுன்னின்று வார்த்தைசொன்னேன், தேவானபிரமாவுமெந்தனுக்கு தெளிவாகதானுரைத்தார் பிரமந்தானே. 284

பிரமனசாமியார் எந்தன்மீது பிரியமுடன் பட்சமுற்று கேட்கும்போது, திரமுடனேவடியேனுங்கால்நடுங்கித் தெளிவாக யானுரைத்தேன்கோடிவண்ணம், பரமானங்கண்டல்லோ குளிகைபூண்டு பட்சமுடன்தமதிடத்தில் வந்தேன்சாமி, சிரங்குவித்து நமஸ்கார மிகவுஞ்செய்து திடமுடனே உத்தாரங்கேட்டிட்டேனே. 285

கேட்டேனேபிரமாவு மனமுவந்து கிருபையுடன் எந்தனுக்கு வழியுஞ்சொன்னார், நோட்டமுடன்சீனபதி தேசத்தார்க்கு நுணுக்கமுள்ளவதீதமென்ற வித்தைதன்னை,தோட்டமுடன்வுளவுமுதல்எல்லாஞ்சொல்லி தேசத்தில்சித்துயென்ற மர்மந்தன்னை, காட்டியே விட்டதொரு வண்மைஎல்லாங்கண்டாரேயாமானால் சபிப்பார்காணே.

காணவேலோகமெல்லாஞ் சித்தாய்போகும் கைலாசங்காணுவதும்சூட்சமாகும், நாணவேநாதாக்கள் கைமறைப்பைநாட்டமுடன் கொட்டிவிட்டாய் கோடாகோடி, மாணவேகுளிகைபது பூண்டுகொண்டு மகத்தானதேசமெல்லாஞ் சுத்திவந்தீர், வேணவே விஷேதமென்றகருவியெல்லாம் வெட்டவெளியாழாகி வீணாய்ப்போச்சே.

போச்சென்றுவிடுகாதே புண்ணியாகேள் புகலுகிறேன்நாலாங்கால்வரைதானப்பா, மாச்சென்ற வியாசர்முனி சமாதியுண்டு மகாகோடிரிஷிகளெல்லா மங்கிருப்பார், ஆச்சரியமானதொரு மகிமையுண்டு அதிக்கப்பால் கிள்ளைவனந்தானுமுண்டு, பாச்சலென்றதபகோடிரிஷிகளப்பா பாரவனந்தனிலிருப்பார் சொல்லொண்ணாதே. 288

சொல்லவென்றால் நாவில்லைபாவுமில்லை சோதியுடல் மலைமீது தோற்றங்காணும், வெல்லவேசோதிரிஷி வியாசர்தானும் விநோதமுடனங்கிருப்பார் கொலுக்கூடந்தான், புல்லவேசித்தர்களின் கூட்டவர்க்கம் பூலோகமிடங்கொள்ளாததீதமெத்த, பல்லவே கொங்கணரின் கூட்டத்தார்கள் பகரவே முடியாதுபண்பதாமே. 289

பண்பானநாலுபக்கம் கோட்டைவாசல் பளிங்குமணிமண்டபங்களங்குண்டு, திண்பானதடாகங்கள் குகைகளுண்டு திடமான குண்ணுகளில் தவசிருப்பார் பண்பானதபசியிடம் யானுஞ் சென்றேன் கருத்துடனே சித்தரெலலா மெனைக்கண்டார்கள் வண்புடனே யடியேனும் தாள்பணிந்து வணக்கமுடன்குருவணக்க மோதிட்டேனே.

ஓதவேகாலாங்கிதனை யினைந்தேன் உத்தமனையடியேனும் வார்த்தைசொன்னேன், நீதமுடன்யானுரைத்தமொழியுங்கேட்டுநித்தில ங்கும் வியாசர்முனியாரென்றுரே, வேதமுநி நவின்றியம்தார்மொழியைக்கேட்டு வேகமுடன்காலாங்கிசீஷனென்றேன், போதமுடன் எந்தனுக்குவேதயாகும் புகட்டினார்வேதரிஷி புகலத்தானே. 291

புகலவேவேதத்தின் சூட்சாசூட்சம புகழானவஷ்டகர்மம் யாகமெல்லாம், நிகலவேயோகத்தின் மார்க்கந்தானும் நெடிதான குருபாதசேஷமந்திரம், சகலவேசூக்குமத்தின் சூட்சாசூட்சம் தசாங்கமுடன்மேலேறிநிற்கலாகும், அகலவே பரவொளிபைக்காணலாகும் அப்பனே கேசரத்திலிருக்கலாமே. 292

இருக்கலா மஞ்சாங்கால் வரைதானாகும் எழிலான கோட்டையதுருத்திரகோட்டை, பெருக்கமுடன் காறுகுகைகளுண்டுபேரூனசில்லாறுதீயாறுண்டு, சருக்கமெனும் நாதாக்கள்சங்கமுண்டுசாயுச்சியபதவியென்றுஞ் சொல்லலாகும், குருக்கதனில் ரசக்கிணறு கோடியுண்டு குருவானயீசுரன்றன் விந்துவாமே. 299

விந்தானரசமதுதான் பொங்கிப்பொங்கி விசையுடனேதீயாற்றில்பாயும்போது, தொந்தமுடன்காறுற்றிநேரமப்பா துறைமுகத்தில்சத்தியென்ற கெந்தியுண்டு, விந்துடனேசத்தியது சேர்ந்துகொண்டுவீராதி தீயாற்றினக்கினியாலே, சந்தமுடனுறவாகி சிவப்புமாகி சார்பாகசெந்தூரஞ் செனிக்குந்தானே. 294

செனித்ததொருசெந்தூரஞ் சொல்லப்போமோ திறமானசித்தர்முனிரிசிகள்காவல், பனித்தடங்கண்வேகமது வதிகம்கொண்டுபாரி

லேமுப்பூவைப்போலேபூர்த்து, தனியாகக்காரமுடன்வீறுகண்டு தாக்கானசெம்பினிடகோட்டைஎல்லாம் வனிகனைப்போல் பழுத்துமி சுவீறுகொண்டு, வாகானதங்கமதுபோலேகாணும் கனியானகோட்டையெல்லாந் தங்கமாகும் கதிரோன்போல்பிரகாசம்காணும்பாரே.

காணுமேநாதாக்கள் சித்துதாமும் காட்டினார்மகிமைகள் மெத்தவுண்டு, தோணவேவரைக்குள்ளே செல்லும்போது துறையான சமாதிமுகம் கண்டுசென்றேன், வேணவேருத்திரனார்சமாதிபக்கம்விட்டார்களெந்தனையு முனிவர்தானும், நாணமேவயடியேனும் காலாங்கி தம்மை நலமுடனேதான்பணிந்து நவின்றிட்டேனே. 296

நவின்றிட்டேன்ருத்திரர் சமாதிபக்கம் நயமுடனே தலைவாசல் நிற்கும்போது, துவின்றிட்டசமாதியதுதாள்திறக்க துலங்கவே ருத்திரனார்குருவைக்கண்டேன், புவின்றிட்ட திருமுகத்தைபார்க்கும்போ பொலிவானதே தியொளி மின்னல்போலாம் சுவின்றிட்ட தேகமது கூச்சலிட்டு கண்காணுசோதிதன்னில் சொக்கிப்போச்சே. 297

போகையிலேருத்திரனுங்கண்டுஎன்னைப் பொற்புடனே மனதிரங்கியெனையாரென்ன, சாகமுடன் காலாங்கிசீஷனென்றேன் சட்டமுடன் சொல்கையில்ருத்திரர்தாமும், பாசமுடனெந்தனுக்குவரமுமீய்ந்தார் ப சமுடன்வரம்பெற்று சித்தர்பககம், சோகமுடநிற்கையில்சித்தர்தாமும், சோதித்துமலைபோகச் சொன்னார்தாமே. 298

சொன்னவுடனடியேனுங் குளிகைபூண்டு சோதித்துமலைமீதில் சென்றபோது, அன்னமெனும்பட்சியைநான் கண்டேனங்கேஅன்புடனேவன்னமது கண்டபோது, நன்மையாஎந்தனுக்கு வன்னந்தானும்நலமுடனேருத்திரர் மகிமைதன்னை, பன்னயமாய்தாமுரைத்து எந்தன்தன்னைப்பட்சமுடன் முதுகேற்றிப் போகலாச்சே. 229

முதுகின்மேலெந்தனையு மேற்றிக்கொண்டு முனையான மலைமுகில்கொண்டுசெல்ல, கதும்புடனே யானுமங்கே யிறங்கினேன்யான்கதிரவனார்தோற்றமது காணவில்லை, உதும்பானவிருள்மூடி பனிகள்நிற்கும், வுயர்ந்தமலைசுற்றிலுமேசித்தரப்பா ததும்பலுடன்நிற்கிறதைக்கண்டேன்யானும் தாடகையாள் சமாதியது சொன்னார்தாமே.

தாடகையாள்சமாதி.

சொன்னரேதாடகையாள் சமாதிதன்னைசொரூபமென்றருக்குமத்தைக்காணவென்று, நன்னயமாயாறுங்கால் வரைதானப்பாநலமு

டனேயான்சென்று நிற்கும்போது, வன்னமதுவாய்திறந்து கூறிற்ற
ங்கேவளமையுடன் தாடகையின்மார்க்கந்தன்னை, பின்னமிலாதாது
ரைத்ததெந்தனுக்கு விகற்பமுடனுரைத்திடவே மயங்கினேனே.

மயங்கினேன் காலாங்கிதனைநினைந்தேன் மாற்கமுடன் ராவண
ன்றன்ரணக்களத்தில், தயங்கமுடன்தாடகையால் பங்கங்கெட்டுத்
தாரணியில்சமாதியது பூண்டபோது, தயங்கமுடனஷ்டகிரிபர்வதத்
தில்ரூபமுடன் தாடகையாள் சமாதிகண்டேன், பயங்கியே மேல்வ
ரையிற்சென்றுபோனேன் தாக்கானசித்தர்களைகண்டேன்யானே.

கண்டேனேபலகோடி ரிஷிகள்மார்க்கம் கருத்திலே தானினைந்து
பூசித்தேதான், மண்டலங்கள்சுற்றியல்லோ குளிகைகொண்டு மானி
லத்தில்வெகுகோடி வதிசயங்கள், மண்டலங்கள் விண்டலங்கள்முழு
துஞ்சுற்றி தாரணியில் குளிகைகொண்டு பறந்தேன்யானும், பண்
புடனேசமாதிபுரம் சுற்றிவந்தேன், பாரினிலேதாடகையாள் கதை
கேட்டேனே. 303

கேட்டவுடனேமூங்கால் வரைதானப்பா கெடியாகமேல்வரை
சென்றபோது, நீட்டமுடன் சடாயுவனமங்கேகண்டேன் நேரானவ
னமுகத்தில் வீரபத்திரன், வாட்டமுடன்சமாதியது தன்னைக்கண்
டேன்வளமானதாள்வாசல் பூட்டிருக்கும், கூட்டமெனும் ராட்சதர்
கள்பூதகூட்டம் பெருமையுடன்சமாதியிடம் நிற்பார்பாரே. 304

பார்க்கையிலேவீரபத்திரன் சமாதிதானும் பாங்குடனேவயிரக்
கல்பச்சைக்கல்லாம், தீர்க்கமுடன்சமாதியது திறக்கவென்றால் திற
ளானகாவலுடன் திறக்கவேண்டும், மூர்க்கமுடன்ராட்சதர்கள்முன்
னேநின்றுமுடிசாய்ந்து கரங்குவித்து வணங்கிநிற்பார், ஆர்க்கவே
போகாதுமுனிகளாலும் வஷ்டகிரிபர்வதத்தின் மகிமைதானே. 305

மகிமையுடனவீரபத்திரன் சமாதிதன்னில் மதிப்புடனே ஓங்கா
ரச்சத்தம்கேட்டேன், பகிரதனும்சிஷவர்க்கம் பக்கம்நின்றார்பரிவான
வீரபத்திரன் வார்த்தைசொல்வார், சகிதமுடனுத்தாரஞ் சொன்னா
ரங்கே சட்டமுனிபக்கமது சமாதியுண்டு, துவிதமுடன் எந்தனுக்கு
ஞானமார்க்கம் துப்புரவாய்போதித்தார்ரிஷிகள்தாமே. 306

தாமேதான்போதனைகள் யாவுங்கேட்டு சாங்கமுடன் எட்டாங்
கால் தன்னிற்சென்றேன், வேமேதான்மேல்வரைசென்றபோதுவியர்

வானருத்திரகாலன் தவசிருப்பான், தாமேதான் தவநிலையைக்கண்ட போது சாஸ்டாங்கம்தாள்பணிந்து கரங்குவித்து, நாமமுடகாலாங்கி தனைநினைந்து நாதரிஷிபதாம்புயத்தை நாடினேனே. 307

நாடினேன்ருத்திரகாலன் றன்னைத்தானும் நாட்டமுடன்கண் டல்லோ தெரிசித்தேதான், தேடியேயவர்பாதம்தொழுதுநின்று தீர முடன்காலனெதிர் நின்றேன்யானும், வாடியேநின்றவென்னைக் கால ன்தானுமதிப்புடனே சிறுபாலாயாரென்றார்கள், கூடியேபோகரிஷி யடியேன்தானும்குனிகையிட்டு வஷ்டகிரிகாணலாச்சே. 308

காணவேவஷ்டகிரி தன்னில்நின்றேன் கைலாசமிதற்கீடு சொல் லப்போமோ, நாணவேகாலனவன் சமாதிபக்கம் நாதாக்கள் கோடி பேர்தவசிருப்பார், வேணபடிவுபசார மதிகங்காட்டும் வெழிலான காவனிடவதீதமெத்த, மாணவேகாந்தமென்ற கோட்டையுண்டு மக ற்தானசித்தர்களோ சொல்லப்போமோ. 309

சொல்லவென்றால் காஞ்சனமாமலையிற்குள்ளே சுடரொளிபோல் சித்தொருவர் யிருப்பாரங்கே, நல்லதொருசமாதியது வஞ்சனக்கல் நலமானவஞ்சனத்தினுள்ளிருந்து, புல்லவேலோகத்தி னதிசயத்தைப் புகட்டுவார் முனிவர்க்கும் சித்தருக்கும், செல்லவே செந்தூரக்கா டொன்றுண்டு செகத்தினிலீசனன்றி காணார்தாமே. 310

காணவென்று லின்னம்வெகு வதிசயங்கள் கண்டேனேகல்லெ ன்ற வெள்ளைக்கல்லில், மாணவேவுள்ளிருக்கும் ரவைதானப்பா மண் டலத்தில்கண்டதில்லை மார்தரங்கே, தோணவேபிரகாசமானசோதி சுடரொளிபோல்வயிரக்கல் கூறப்போமோ, நீணவேநாதாக்கள்காண் பதல்லால் நீணிலத்திச் காமிகட்கு கிட்டாதன்றே. 311

அன்றானசடாயுவுட வனத்தில்கானும் அதிகாயன்சமாதியது யிருக்கக்கண்டேன், தன்றானசமாதிமுன்னே நின்றபோதுதயவுள்ள வதிகாயன் வாக்குரைத்தார், குன்றானமலைதேடி குகைகள்தேடி குளி கைகொண்டுமலையேறி வந்ததென்ன, நன்றாகஎன்னையுந்தான் கேட் டபோது நலமுடனேயானுரைத்த வண்மைகேளே. 312

கேட்டவுடனடியேனுங் கிருபையோடு கெவனமுடன்காலாங்கி நாதர்தம்மை, நீட்டமுடன்தானினைந்து கூறலுற்றேன் நெடுந்தூரம் ருத்திரனார்காலனுக்கு வாட்டமுடனஷ்டகிரிகாணவென்று வாகுட னேமலையேறி வந்தேனென்ன, மாட்டிமையாய்ருத்திரனார் யெந்த னுக்குமகிழ்ச்சியுடனுபதேசஞ் சொன்னார்தாமே. 313

சொன்னவுடன்குளிகையது பூண்டுகொண்டு சுற்றியேபார்த்து மங்கே யிருந்தபோது, மன்னனுமரிச்சந்திரன்பாட்டன்தானும் மகப தியான் கொனுக்கூடசமாதிதன்னை, பன்னவேபார்க்குகைக்கு வரு கிற்சென்றேன் பாராளுஞ்சமாதியிலே வாக்குண்டாச்சு, நன்னயமா எந்தனுக்கு ஞானோபதேசம் நவின்றிட்டார்ராஜமன்னர் நவின்றிட் டாரே. 314

போகர்மோடிவித்தை.

நவிலவேவினோதமென்ற வித்தைதானும் நாதாக்கள் செய்த தில்லை நாட்டிலேதான், புவியுடனேகாலாங்கி நாதர்பாதம் புகழ்ச்சி யுடன்தான்வணங்கி சாற்றலுற்றேன், பவிமதிசந்திரன்போல் காரந் தன்னைபக்குவமாய்தான்பொரித்து முட்டைபோல், குவியலுடன் தான்சிவிவளவதாக கொற்றவனே முட்டைபோ லெடுத்துக்கொ ள்ளே. 315

கொள்ளவேமுட்டைதனை யெடுத்துக்கொண்டு கோபாலாசொல் லுகிறேன் குறிப்பாய்கேளு, விள்ளவேவாயிரம்பேர் கூட்டத்தார்கள் விருப்பமுடன் முன்பார்த்து களிப்புற்றேங்க, மெல்லவேமணல்தனை பூமிதன்னில் மேன்மையுடன்கொட்டியே மேடைசெய்து, பள்ளம தாய்குறியொன்று நடுமையத்தில் பாங்குடனேதான் பரவலாகச் செய்யே. 316

செய்துமேசெனங்களெல்லாம் பார்த்துயேங்க சிறப்புடனேபொ ரிகாரமென்னுமுட்டை, கைதனிலேதானெடுத்து மைந்தாபாரு கரு வாகமுட்டைதனை எடுத்துக்கொண்டு, வெய்தமுடன் மந்திரங்கள் மிகவுங்கூறி வேதாந்ததாய்தனையே மனதிலுன்னி, பக்குவமாய் முட் டைதனைமணலிற்பரவி பட்சமுடன் சலந்தனைவிட்டிடாயே. 317

விட்டவுடன்முட்டையது கரைந்துபோகும் வேகமுடன்கார மது வொன்றுங்காணார், சட்டமுடன்மெய்யானமுட்டைதன்னைசார் பாக கூப்பிடுதூரமப்பா, தட்டாமல்மண்மறைவில் புதைத்துபோடு தாரணியில் ஒருவர்க்குந் தெரியவேண்டாம், திட்டமுடன்சிஷனைக் கொண்டெடுக்கச்சொல்லு தீரமுடன்றானெடுத்து தருவான்பாரே.

தருகையிலே சனங்களெல்லாமிகநடுங்கி தாரணியிலிவர்போல சித்தனுண்டோ, கருமானமிகவறிந்த சித்துதாமும் காசினியிலமாங் கிரிகனிவனென்பார்கள், உருதெரியாமையுடையராச யோகன்வுல கத்தில்சித்தனிவன் வசியராஜன், பெருமைபுகழ்படைத்தொரு தீர ருகும்பேருலகில்சித்தனைப்பேபா லுறுகாணுமே. 319

காணுமல்செனங்களெல்லா மிகத்தவிப்பார் கண்டவர்கள் விண்டவர்கள் யாருமில்லை, தோணுமல்கருவான முட்டைஎங்கேதோற்றமுடன்கண்டோமே கண்ணிற்காணும், வீணுகப்பேசியல்லோமாந்தரெல்லாம் விருதாவாய்தாறுமாருய் புத்திகெட்டு, நாணமுடனிறந்தேங்கி நடுக்கமுற்றுநாதாக்கள்மாயவலை சிக்கிஞரே. 320

சிக்கவேமுட்டைதனை யாருங்காணுச்சிறப்புடனே தானெடுத்து காண்பித்தேதான், தக்கவேமந்திரங்க ளொன்றுசொல்லிச் சார்புடனேகைமறைப்பு வதீதஞ்செய்வார், சொக்கவேமறைப்பெல்லாஞ் சூட்சமாகசூட்டினேன் மாந்தற்கு முறைத்தோம்யாமும், நிக்கவே லோகத்தில்மறைப்பு நிசமானவித்தைபோ லாகுந்தானே. 321

கெச்சக்காய் கோட்டையிடிப்பது

தாஞனகழற்சிக்காய் வாயிரந்தான் சதமுடனேயோகமதுபொடியைமைந்தா, வேஞனபொடிதனிலே மைபோலாட்டி விருப்பமுடன்பழச்சாற்ரு லரைத்துமைந்தா, கோஞனகுருபரனைத் தனைநினைந்து குமுறவேகழற்சிக்காய் மேலேபூசி, பாஞனரவிதனிலேகாயவைத்து பாங்குடனே கோட்டையது கட்டிடாயே. 322

கட்டவென்ருல் கழற்சிக்காய் கோட்டையாகும் கருவானகரார்தமது குச்சிக்கேற்றி, திட்டமுடன்குச்சிதன்ஞல் கோட்டைதன்னை திறமுடனேதானடிக்க கலைந்துபோகும், மட்டமென்றமண்மேலே ஓடிப்பாயுமகத்தானகழற்சிக்காய் கிட்டிக்காணும், பட்டவுடன்காந்தமதுதானிழுக்கு மகத்தானசித்துயிது வதீதந்தானே. 323

அதீதமென்றவித்தையது யாருங்காணுர் ஆச்சரியக்கொம்புக்குள்காந்தவித்தை, கதீதமென்றகாந்தத்தால்சகலசித்தும் கருவாகவாடுதற்கு காணியாகுப், ததீதமென்றகருவானிகாண்பார்பாரு சூட்சாதிசூட்சத்தைக்காணுன்மாடே. 324

மாடானமாடுகள்தான் சண்டிமாடு மானிலத்தில்காண்பதுவுமருமைமெத்த, கோடானகோடிமுனிரிஷிகள்வேதை குவலயத்தில் கூறவுந்தான்முடியாதப்பா, பாடானவின்னமொரு கருமானங்கேள்பாடுகிறேன்மாணுக்கள் பிழைக்கவென்று, நீடானமுட்டையது காற்றில்போகநீணிலத்தில் பறப்பதற்குவிஞேதங்கேளே. 325

## கோழிமுட்டை ஆகாயம்பறக்க

கேட்கவேவினைதமென்ற வித்தைசொல்வேன் கெவனமுடன் கருவாளியாலல்கேளு, நீட்கமுடன்முட்டைதனில் கதிர்சில்லாக்கி நீடானபனிசலத்தையதற்குள்தாக்கு, நாட்கமலசெந்தாழம் பூரசத் தைநளினமுடன்றானெடுத்து வுளுந்துசீலை, ஆட்கமுடன் வலுவகத் தானமைத்து அப்பனேரவிதனிமேல வைத்திடாயே. 326

வைக்கவேகதிரொளின்சுடரினாலே வாகானமுட்டைக்குள்ளிரு ந்தநீரும், மெய்க்கவே சுடர்கண்டபோதேயப்பா மேலெழும்பி முட் டையதுபறக்கும்பாரு, மொய்க்கவேபூமிவிட்டுப்பறக்கும்போது மே ன்மையுடன்மாந்தரெல்லாம் நடுங்குவார்கள், செய்க்கவ்வவாச்சரியமி ந்தப்போக்கு செகதலத்திலகிட்டாது சிவயோகிக்கே. 327

யோகியென்றால்ஞானத்தின்மகிமைவேண்டும் யோசனைகள்மிக வேண்டும்வாசிவேண்டும், போகமென்றமாய்கைதனை விட்டொழிக்க பொருமையுடன்சிவயோகம் காணவேண்டும், பாகமதுயெப்போதும் கைவிடாமல் பார்த்திபனேசெய்குபவன்யோகியாவான், சாமுடன் காலாங்கிதனைநினைந்து சாற்றினேன்போகரிஷி பண்பாய்த்தானே.

## முளைக்கீரை வித்தை.

பண்பானவித்தையது சாற்றக்கேளு பாரினிலேமானுக்கள் பி ழைக்கவென்று, கண்பானயீசலதுமரக்காலாகும் கருவானபுத்தீசல் தானெடுத்து, நண்பானபாளைக்குள்சில்லுபோட்டு நலமுடனே குழி த்தயிலமிறக்கிக்கொண்டு, திண்பானதயிலமதில் கீரைவித்தைதெளி வுடனேமுட்டைக்குள் ஊறப்போடே. 329

போட்டுமேமண்டலந்தான் சென்றபோது பெருமையுடன் றா னெடுத்துமைந்தாபாரு, வாட்டமுடன்சிஷவர்க்கமிகவழைத்துவாகு டனேபோசனங்களுண்பதற்கு, கூட்டமுடன்சித்தர்முனிநாதர்கூட் டம்குறிப்புடனே யாயிரம்பேர்சூழ்ந்திருக்க, வாட்டமுடன்மணலத னைக்கொட்டிமைந்தா படசமுடன்விரதனையே தெளித்திடாயே.

தெளிததவுடன்சலமதனை விடுமைந்தா தேற்றமுடன்யிருசா மப்பொழுதில்தானும், நெளித்துமேவிரையெல்லா முளைகிளம்பிக்கர் ப்புடனே சிறுசெடியாமங்குலந்தான், களிப்புடனேசித்தர்முனிரிஷி களுக்கு கண்கொள்ளாக்காட்சியுடன்கருவுமாகும், துளிர்ப்புடையகீ ரைவித்தைசொல்வார்தான் சுந்தரனே போகரிஷிசொல்லிட்டேனே.

இருஜவசியம்.

சொல்லவேவசியமொன்றுசொல்லக்கேளு சூரியின்றன்வடவே ருக்காப்புக்கட்டி, வெல்லவேமுட்பொலியுந்தான்கொடுத்து வேதாந் தத்தாய்தனேயேமனதினுன்னி, செல்லவேதலைப்பிள்ளை மஞ்சத்தானு ம்சிறப்பானகருங்கொன்றைவடவேர்தானும், கொல்லனுடமூலிதன் வடவேர்தானும கூருனபேய்மிரட்டி வடவேர்தாமே. 332

தாமானகருவாலிவடவேர்தானும் சார்ப்பானவெள்ளெருக்கன் வடவேர்தானும், கோமானகண்ணனிடவடவேர்தானும் குறிப்பான வழிஞ்சியிடவடவேர்தானும்,வாமானகாட்டத்திவடவேர்தானும் வா கானபிராயனிட வடவேர்தானும், தூமானகுமிழினிட வடவேர்தா னும் துப்புறவாய்மேனியிடவடவேர்தாமே. 333

வடவானவேறுடனேஒன்றாய்க்கூட்டி வளமையுடன்பெரும்பா ண்டந்தன்னிலிட்டு, குடவானபாலைக்கு துவாரமிட்டுக்கொப்பென வேவேறெல்லாம் பாண்டத்திட்டு, திடமானசீலையதுவலுவாய் செய் துதேற்றமுடன் குழித்தயிலம்வாங்கியேதான், தடமானதயிலமதை எடுத்துமைந்தா தாக்குடனேகலசத்தில் வைத்திடாயே. 334

அடைத்துமேதயிலமதையுரைக்கக்கேளு அப்பனே சுழல்கண் டுபூதவண்டு, படையானேகுழியானை மரவட்டைதானும் பாகமுடன் செவ்வட்டைமரவுணிதானப்பா, கடையானதம்பலமாம் பூச்சிதானு ம்கருவானவல்லூறுபிச்சுதானும், கடையானசெம்போத்து பிச்சுதா னும் சார்வானதேவாங்குபிச்சுதானே. 335

பிச்சானபச்சோணன்பிச்சுதானும் பீரானவார்த்தையுட பிச்சு தானும், மச்சானசாரையுடபிச்சுதானும் மகத்தானமயிலினுட பிச்சு தானும், கச்சானகரும்பூனே பிச்சுதானும் கருவானவௌவாலின் பிச் சுதானு, பச்சானபாம்பினிடபிச்சுதானும் பாங்கானவானையிடபிச்சு மாமே. 336

ஆமேதானித்தனையுமொன்றாய்க்கூட்டியப்பனே முன்சொன்ன தயிலத்தாட்டி, வேமேதான்கபாலமென்ற ஓட்டில்ப்பா விருப்பமுட ன்மைபிடித்துச்செப்பக்கேளு நாமேதான்சொன்னபடி மையின்மா ர்க்கம்தலமுடனே பரணைதனில்பதனம்பண்ணு, போமேதான்நிர்வா ணிபூசைசெய்து பொங்கமுடனுருவேற்றிபூசிப்பாயே. 337

பூசித்துமைதனையே எடுத்துமைந்தா புகட்சியுடன் லாடமதில் திலதத்திட்டி, நேசித்துராஜரிடஞ் சென்றுயானல் நேர்மையுடன்

நினைத்ததெல்லாம்வசியமாகும், காசினியிலுன்னைப்போல்சித்தனுண்டோ கைலாசம்காணியது வுனக்கேயாகும், வாசியுடன்யோகநிலைநின்றுகொண்டு மகிழ்ச்சியுடன்சதாநித்தம் வாழலாமே. 338

இலங்கைவேந்தன் குளிகை

வாழவேவின்னமொரு மார்க்கம்பாரு மகத்தான விலங்கைபுரிவேந்தனப்பா, நீழவேதான்செய்தகுளிகையப்பா நீணிலத்தில் மானிடர்க்குகூறலாச்சு, தாழவேசெம்மண்ணும் பூமிதன்னில் தயவுடனே சென்றுமல்லோ குழிதான்வெட்டி, ஆழவேகுழிதனிலே ஈச்சம்வெல்லம் அப்பனேவரவுவைக்கல் கலந்துபோடே. 339

போடவேயிராமுழுதும்சென்றபின்பு பொங்கமுடன்காலையில் பார்த்தபோது, நீடவேபூநாகம்சூழ்ந்திருக்கும் நெடிதான பூநாகமெடுத்துமைந்தா, வாடவேதிரியாமத பூநாகத்தை வாகுடனே தானெடுத்துமண்ணைப்போக்கி, கூடவேபுளிப்பென்றமோறுதன்னால் குணமான மண்ணையெல்லாம் போக்கிடாயே. 340

போக்கியபின்பூநாகமெடுத்துபாலா பொருமையுடன் கெந்தியதுசமனுச்சேர்த்து, நோக்கமுடன்வாறுவகை செயநீர்தன்னால்நொய்யவேதானரைப்பாய்நாலுசாமம், அக்கமுடன்பில்லையதுலகுவாய்ச்செய்து அப்பனேரவிதனிலேகாயவைத்து, ஊக்கமுடன்சில்லிட்டுச்சீலைசெய்து வுத்தமனேபுடம்போடக் கறுப்புமாமே. 341

கருப்பானமருந்துக்குநாலிலொன்றுகருத்துடனேகாரமதுபொரித்துப்போடு, தெருப்பானவச்சிரமாங்குகையில்வைத்து தெளிமையுடன் தானடைத்துசீலைசெய்து, நெருப்பானவச்சிரமாமுலையில்வைத்துநேர்மையுடன் மூனுநக்கிபெடுத்துப்பாரு, பொருப்பானரவியதுதான்புகலப்போமோ பொன்னவனேயுனக்கீடாருலகில்தானே.

தானவனேபூநாகசடசம்புதன்னால் தாரணியில்தீகமென்ற வித்தைசெய்வார், வானவனுஞ்செபவரியான்மாநிலத்தில்வளமையுடனிப்பாகம்யாருஞ்சொல்வார், ஆனதினாலுந்தனுக்கு கருவுசொன்னேன் அப்பனேன் கருவுளவுவெளிவிடாதே, பானமெனும்பரணையதுசெய்து பாலா பஞ்சமுடன்சூதமதை நிறையவூத்தே. 343

ஊத்தியபின்மேல்திருவங்கொண்டுமூடி வுத்தமனேசாதமதுவேகும்போது, தோத்தவேமத்தினடு சொருகிப்போடு சுந்தரனேயாறினபின்னெடுத்துப்பாரு, காத்திரமாம்பரணையதுதிருவல்தன்னைப்பக்

குவமாய்தானெடுக்கசூதந்தானும், மாத்தமென்றசத்துருவால் மடிந்துபின்னும் மாசற்றவெண்ணையது போலாய்பாரே. 344

பாரேதான்வெண்ணைதனையெடுத்துக்கொண்டு பாகமுடன் மத்தங்காய்வுள்ளழுத்தி, சாரமுடன்சுண்ணும்புச்சீலைசெய்துசட்டமுடன்நான்கெருவில்புடத்தைப்போடு, தீரமுடன்தானெடுத்துப் பார்க்கும்போது திறளானசூதமதுகற்போலாகும், காரமதுயின்னமுந்தானேறுதற்கு கருவாகச்சாரணையுமின்னமேற்றே. 345

ஏற்றவேயிப்படியேவஞ்சுபத்து வெழிலாகபுடம் போடக்கட்டிப்போகும், சீற்றமென்றமேற்கவசம்தன்னைநீக்கி சிறப்புடனேதானெடுக்கக்கல்லேயாகும், மாற்றமென்றசூதத்தின்கல்லேயாகும் மார்க்கமுடன்கல்லானகுளிகைதன்னை, கூற்றனென்னுமாதர்களைக்கூடுதற்குகொற்றவனே முறைசொல்லேன் குறைசொல்வேனே. 346

குறையானகுளிகைதனை யெடுத்துமைந்தா கோலமுடன் வாய்தனிலேயடைத்துக்கொண்டு, முறையானநாற்சாதிபெண்கள்தன்னை மூர்க்கமுடனணைந்திடிலோ கோடிபெண்கள், திறமானமையலதுநீங்கியேதான் தேசத்திலுனைக்கண்டால் நடுங்குவார்கள், சிறைநீக்கியணைவார்கள்மாதர்தாமும் சிறப்புடனே மன்மதன்போ லீலைசெய்யே.

செய்யவென்றால் ஸ்ரீலீலைகிருஷ்ணலீலை செகதலத்தில்யாராலுமுடியாதப்பா, மெய்யானகுளிகைதனைபதனம்பண்ணு மேதினியில் யாருக்கும் காட்டவேண்டாம், பொய்யாது எந்தனுடகுளிகைமார்க்கம் பூதலத்தில்பெண்களெல்லாம் நடுங்குவார்கள், மைபூண்டு குளிகையது வாயிலிட்டு மார்க்கமுடன் கெவிளியைப்போல் நீயாவாயே.

ஆகமென்றால் குளிகையதுசெய்யவேண்டும் அப்பனேகுளிகைக்குயின்னஞ்சொல்வேன், சாகமுடன்வெள்ளியென்றயீயந்தன்னைச் சட்டமுடன்சேரெடுத்துவுரிக்கித்தீரு, பாகமுடன்குளிகைதனையிட்டுப்பாரு பதிவானநீரையெல்லா முண்டுவல்லோ, வேகமுடன் மேல்தெரித்துகுளிகைதானும் விரைவுடனே தானெகிறி விழுகுந்தாமே

தாமானகுளிகைதனை பதனம்பண்ணு தயவுள்ளசிறுபாலா செப்பக்கேளு, சாமானமாகியல்லோ மகிழ்ந்திடாதே சற்பனைகளுபசாரமதிகங்கொண்டு, சீமானுப்பெயர்கொண்டு பூதலத்தில்யென்மகனே வெள்ளிதனைவிற்றுமாறி, பூமான்போல்பூதலத்தில்வாழ்ந்துகொண்டு புகழ்ச்சியுடன்யென்னுளும் பொருந்திடாயே. 350

குளிகைவேதைசெந்தூரம்

பொருந்தவேவின்னமொரு புதுமைகேளு பொலிவானகுளிகை தனையெடுத்துமைந்தா, திருந்தவேகூதமிடை கெந்திசேர்த்து திறமு டனேமனேசிலேயும் காலதாக, வருந்தவேதாளகமும் காலதாகும் வாகானவீரமது வரிக்காலாகும், குருந்தவே பொற்றலையின் சாற்று லாட்டிக் குழுறவேதானரைப்பாய் சாமம்நாலே. 351

நாலானசாமமது வரைத்தபோது நலமானமைனம்போ லாகும் பாரு, காலானரவிதனிலே காயப்போடு கருத்துடனே பொடியாகச் செய்துகொண்டு, வேலானகாசியென்ற குப்பிமைந்தா விபரமுடன் தான்வாங்கி செப்பக்கேளு, சீலானகுப்பிக்குச் சிலையேழு சிறப்புட னேதான்செய்து ரவியில்போடே. 352

போடவேகுப்பிதனை யெடுத்துமைந்தா புகழாக மருந்தையெல் லாம் குப்பிக்கேற்றி, நீடவேமரக்கல்லால்கொண்டுமூடி நினைவாகதள வாயாஞ் சட்டிதன்னில், நாடவேமணல்தனைக்கொட்டிபாலா நன்மை யுடன் குப்பிதனை நடுமையத்தில், சூடவேகுப்பிநடு மையம்வைத்து சூட்சமுடன் மணல்தனைமேலேகொட்டே. 353

கொட்டியே மேற்சட்டிக்கொண்டுமூடி கோலமுடன் சிலையது வலுவாய்ச்செய்து, திட்டமுடன்தானெரிப்பாய் யெட்டுசாமம் திக மூாகவாறினபின் திறந்துபாரு, சட்டமுடன் செந்தூரமென்னசொ ல்வேன் சார்பாக வருணன்போல் காந்தியுண்டாம், பட்டசெம்பு நாலுடனே வெள்ளியாறுப்தமாகத்தான் சேர்த்துவுருக்கிடாயே.

உருக்கியேவாரடித்துப் புடத்தைப்போடு வுத்தமனே செம்பது வுமகன்றுபோகும், செருக்கியேவெள்ளி எடைநாலத்தொன்று செம் மையுடன்ருன்சேர்த்து வுருக்கித்தீரு, யெருக்கமுடனிடைகண்டு யினமுங்கண்டு பேரானசேர்வைமுத லுளவுகண்டு, நெருக்கமுடன் மாற்றதுவுமேவலாகி நேர்மையுடன் பசுமையது வெட்டதாமே.

எட்டானபொன்னதுவு மதிகங்காட்டும் யெழிலான மின்ன மொரு கருமானங்கேள், திட்டமுடன் செந்தூரமனுபானத்தில் தீர முடன்ருனருந்தமண்டலந்தான், குட்டமென்றபதினெட்டுமகன்று போக்கும் கூருனமேகமது துள்ளியோடும், சட்டமுடன்கபரோகம் நீங்கிப்போகும் சாராதுயெந்நாளும் தளிர்ச்சியாமே. 356

தாளிராகும்தேகமது வன்னிமீறும்சதாகாலம் சைதன்னியமதிகங்காட்டும், குளிராதுதேகமது கனலோவீசும் குடியோடும் ரோகமெல்லாந் துலேந்துபோகும், நளிரானநரம்புவலி பிடரிநோயும்நாடாதுதிரேகம்விட்டு நளினமாகும், பளியானகாந்தியது மிகவேவீசும் பான்மையாம்தேகமது பொன்னுமாமே. 357

பொன்னனதேகமது காந்திமெத்தப் பொங்கமுடன் வாசியதுகீழ்நோக்காகும், மன்னவனே வஷ்டாங்கந்தன்னிற்சென்று மாணிலத்தில்நீயுமொருசித்தனுவாய், தென்பொதிகைசித்தனிமேலநீயொன்றுகதேசத்தில் சிவயோகி யாகவாழ்வாய், பன்னவேகாலாங்கி நாயர்பாதம்பணிந்துமேபோகரிஷி பாடினேனே. 358

குளவிகூண்டு மெழுகுவேதை

பாடியேயின்னமொரு மாற்கம்பாரு பாங்கானபுழுகென்றகுளவிதன்னை, நாடியேகானகத்தில்தேடும்போது நலமானகுளவிகளாம்விருட்சந்தன்னில், தேடியேபார்க்கையிலே மண்கூடாலே திரளானகூடுதான் கட்டிருக்கும், கூடியேமண்ணுக்குள் திறந்துபாரு குறிப்பானமெழுகதுவு முண்டாம்பாரே. 359

பாரேதான் மெழுகெடுத்து துருசுவெள்ளைப் பதமுடனேருன்சேர்த்து மெழுகதாக்கி, நேரேதான்ரவிதனிலே பத்துக்கொன்றுநேர்மையுடன்றனுருக்கிக் கொடுத்துப்பாரு, வேரேதான்கரியோட்டிஊதிப்பாபோடு வேகமுடன்செம்பதுவும்வர்னங்காணும், கூரேதான் மதிதனிலே நாலுக்கொன்று கொடுத்துருக்க மாற்றதுவு மாறதாம்ம.

ஆருனமாற்றதுவுஞ் சொல்லப்போமோ அப்பனேசித்தருடமகிமைகோடி, கூரானபொன்தனேயே செய்யுமார்க்கம் குறுக்குவழிநெடுக்குவழி கோடிக்கோடும், பேருனசாபத்தால் சபிப்பார்சித்தர்பேருலகில்வாதமது புகலப்போமோ, நேரானகல்லானேச் சுக்கான்கல்லாம் நேர்மையுடன்றனுறைப்போம் நுணுக்கந்தானே. 361

சுக்கான்பெருமை கண்ணடிக்காய்ச்சு

தானனசீனபதிசுக்கானப்பா தகைமையுள்ள சேரதுதான்பத்ததாகும், கோனனகொங்கணவர்வைத்தபாகம் கூறுவேன்மாணுக்கள்பிழைக்கவென்று, வேனனசுக்கானும்பூநீரோடே வேகமுடன் வேகவைத்து தெளிவிருத்து, பானனகாரமது கூடச்சேர்த்துப் பளிங்குபெறமண்கட்டி காய்ச்சிடாயே. 362

காய்ச்சியேமூதிரையுருக்கிக்கொண்டு கருவாககருவதனில் மெழுதுகட்டி, பாய்ச்சலுடன்பலவகைக்குக் காரமிட்டுப் பாங்குடனே வுருக்கையிலேகண்விட்டாடும், தேய்ச்சலுடன்பலகைபோல் கருதான்கட்டி செம்மியவுருக்கினமாய் வார்ப்பாயானால்,மாச்சலென்றபடிகம்போல் பாயும்பாரு மகத்தானகண்ணாடி யாகுந்தானே. 363

கண்ணாடிபிறக்குவகை யின்னஞ்சொல்வோம் கருத்துள்ளமாந்தர்களேகழறக்கேளும், சுண்ணமென்ன பூநீறால்விளையுமார்க்கம் சூட்சாதி சூட்சமப்பாசொல்லப்போமோ, வண்ணமுள்ளகண்ணாடி வர்ணம்சொல்வோம் மயங்காதேயிரும்பினிட மண்தானப்பா, திண்ணமுடன்பூநீரில் சேர்த்துருக்க புகழானகண்ணாடி வர்ணமாச்சே.

வர்ணமுடன்கண்ணாடி யனந்தமார்க்கம் வாகுடனேசெய்யலாம் கோடிவித்தை, வர்ணமுள்ளபாத்திரங்க ளிதனாலாகும் வளமானபுட்டிமுதல்குப்பிமார்க்கம், வர்ணமுள்ளவுளக்கொளிவுயிதனாலாகும் வாகானபீங்கான்க ளிதனாலாகும், வர்ணமுள்ளமணிவகைக ளிதனாலாகும் மார்க்கமுள்ளதிவாபரண மிதனால்தாமே. 365

சாமான்கண்ணாடி சன்னப்போக்கு

செய்தவற்குபூநீர்பேதவகை.

தசமானபூநீருவிபரஞ்சொல்வோம் தாக்கான மண்தனுக்குவலைதான்கட்டி, சாமானமானதொருசலத்தைவிட்டு சண்ணலுடன் தான்கரைத்துசாடிதன்னில், தேமமுடன்தெளிவிறுத்து மறுபாண்டத்தில் தெளியவேவடிகொண்டு காய்ச்சும்போது, சாமமென்ற வர்ணமதிகங்காட்டும் சார்பாகபின்னுமொரு பாண்டம்போடே. 366

போடவேபூநீரைமுன்போற்காய்ச்சிப் புகழாகத்தானிறக்கிஎடுத்துப்பாரு, நீடவேபூநீறும் வெளுப்புமாகி நிலையான வுருக்குக்குமுதற்றரந்தான், கூடவேவுருக்குக்குக்காலன்கூட்டி கொப்பெனவேஎடுத்துப்பார் தவளம்போலாம், சாடவேதவளத்தைப்பின்னும்பாண்டம் தகைமையுடன்றான்போட்டு காய்ச்சிடாயே. 367

காய்ச்சியேமுன்போல வடிதான்கொண்டு பாகமுடன் றான்காய்ச்சியெடுத்துப்பாரு, பாய்ச்சலுடன்பின்னுமோர்பாண்டமிட்டுமறுபடியுங்கனலேற்றிக் காச்சும்போது, பேச்சுலெனற நீச்சதுவுமட்டுமாகியெழிலான படிகப்போல்வர்ணமாகும், வாச்சலுடன்வர்ணமதுபேதாபேதம் வகுக்கலாம்வெகுகோடி வழிகளாமே. 368

வருக்கவென்ருலிதனுலே வெகுவிணேதம் வளமையுடன்செய்ய ளம்பூடிதன்னில், வருக்கலாம் பிரிதிவியில் பிரந்தவர்ணம் வாகுட னேசெய்யலாம் பூநீராலே, வருக்கலாம்வரும்பொன்மணி வாபரண ங்கள் வர்ணமுடன் செய்யலாம்கோடிபாதை, வருக்கலாம் மொளிவ டப்பூநீராலேவண்ணவண்ண விதங்களெல்லாம் நாட்டலாமே.

பீங்கான்பூநீர்விபரம்.

நாட்டலாம்சீனபதி நடுமையத்தில் நலமானபூநீருவிபரம்சொல் வோம், கோட்டமுடன்பூநீராமண்ணையப்பா நுணுக்கமுடன் ருனெ டுத்துக்காய்ச்சும்போது, தாட்டிகமா யுவர்மண்ணு சுண்ணும்பாலே தளிருடனேபிசைகிக்கு களிப்புண்டாகும், வாட்டமுடன்குயவனு் பாண்டமொய்யாய் வளமையுடன் தான்வருக்க வளமைகேளே.

கேட்கவென்ருல் பூநீருசுண்ணும்புதன்னை கெணிதமுடன்சக்க ரமாமாலைதன்னில், தீட்கமுடன்ருனரைப்பாய் மைபோலாக திறமு டனேகளிப்புபதமாகுமட்டும், வேட்கமலவாலையுட கற்ருேராங்கள் வெளிப்படையில் பொங்குகின்றகளிப்புதன்னுல் பூட்கமல சிவள்ளை யென்றபீங்காணுச்சு புகழானவடிவண்டல் மட்டியாச்சே. 371

ஆச்சென்றவிடுகாதேமைந்தாகேளு அன்புடனே பின்னுமந்த வாலைதன்னில், மாய்ச்சலுடன் வதற்கடியில்நிற்குமண்ணு மகத்தா னமட்டியென்றபீங்காணுகும், பாய்ச்சலுடன்வதற்கடியில்நிற்குமண் ணு பாங்கானமட்டியென்ற பீங்காணுமே. 372

ஆமேதானிந்தவண்ணமாலைக்குள்ளே அப்பனேபிரிவினைக ளா கும்பாரு, நாமேதான்சொன்னபடி பீங்கான்மாற்கம் நாட்டிலேசெய வார்கள்கோடிபாதை,வேமேதான்செய்தாலும் நாட்டுள்வேதை வேக வைத்தால் மண்ணதுவும்வெடியுண்டாகும், கோமானும் சாலியன்ற ன் வேதையென்பார் கொற்றவனே சீனபதிக் கொப்பதாமோ.

ஒப்பானவேதையிது மனந்தமுண்டு ஓகோகோநாதாக்கள்கண் டதில்லை, செப்பானவகலதனைப்போல் பாண்டங்கண்டார் செயலா னசாலியன்றன்பாண்டங்கண்டார், மெப்பானபாண்டமதுமண்பாண் டங்கள் மேவலுடன்செய்குவார் வதீதமாற்கம், துப்பானபாண்டங்க ள் மிகவுஞ்செய்வார் துறைமுகமுங்காணுரகள் சித்தர்பாரே 374

பாரேதான்ராசாக்கள்கண்டதில்லைபாரினிலேவெகுகோடி ருஜா ப்பா,சீரோதான்பாக்கியங்கள்பெற்றபென்ற தப்புடனேபலபணிகள்

பூண்டுமென்ன, நேரேதான்திருமுகமுங் கண்டதில்லை நீணிலத்தில் வசிகரத்தைப் பார்த்தோரில்லை, சேரானசெம்பதனை தாட தாக்கிச் சிறப்புடனே தான்துலக்கி முகம்பார்த்தாரே. 375

பார்த்தாரோராஜாதி ராசரெல்லாம் பளிங்குடனே திருமுகத்தைக் கண்டதில்லை, நேர்த்தியுடனேபணிதிபூண்டு நீணிலத்தில் திருமுகமங்கலாக, பூர்த்தியுடன் பிரகாசமானசோதிபூவுலகில்கண்டவருமொருவரில்லை, கார்த்தியுடன் மங்கலாய்முகத்தைக்கண்டார் காசினியில்ராசர்களும் சித்தர்காணே. 376

காணமல்போனார்கள் ராசரெல்லாம் காட்சியுடன்கண்காட்சிக் கண்டதில்லை, வீணாகத்தானலைந்தார் முனிவர்சித்தர் வெகுகோடிவமவித்தை செய்தாரப்பா, பூணாரம்பூண்பதற்கு பொன்னுஞ்செய்தார் பூதலத்திலழகுதனைப் பார்ப்பதற்கு, தோணமல்தானிருந்தார் சித்தரப்பா தொல்லுலகில் மறந்திட்டார் முனிவர்தாமே. 377

முனியானகாலாங்கிதாள்பணிந்து முயற்சியுடனடியேனுங்குளிகைபூண்டு, தனியாகயானுமல்லோ சீனஞ்சென்றேன் தகமையுடன் பூநீரைக்கண்டறிந்தேன், பணியானதேசமது சீனமார்க்கம்பான்மையுடனெத்தொழிலுஞ்செய்வதற்கு, தொனியானதேசமென்று நிட்சயித்து தொடங்கினேன்கண்ணாடி காய்ச்சவென்றே. 378

என்றுமேசித்தரெல்லா மனேகவித்தை எழிலாகச்செய்தார்கள் பூமிதன்னில், சென்றுமேயானுமல்லோ சீனந்தன்னில், சிறப்புடனே கண்ணாடிகாய்ச்சவென்று, குன்றுமலைகுகைதனிலேயாராய்ந்தேதான் கோடானகோடிவளம் கண்டாராய்ந்து, நின்றுமேசாத்திரத்தினளவு பார்த்து நிர்மித்தேன்கண்ணாடி மார்க்கந்தானே. 379

மார்க்கமுடன்கண்ணாடிக் காய்ச்சிவிட்டேன் மயங்காமல்பூநீரை கண்டறிந்தேன், தீர்த்தமுடன்வட்டவொளி நேமித்தேன்யான் திறமுடனேபளிங்குயென்ற வட்டஞ்செய்தேன், வார்க்கமுடன்கருக்கட்டிவுளவுசெய்தேன் வளமுடனேசூதமுட னுளவுகண்டேன், பார்க்கையிலேசூதமென்ற கிணறுகண்டேன் பாகமுடன்கண்ணாடிக் கேற்றலாச்சே. 380

ஆச்சென்றுவிடுகாமல் கண்ணாடிக்கு அப்பனேகாரமென்றுயிய நந்தன்னால், பூச்சென்றகடடிக்கு ரசத்தைதாக்கிப் புரட்டினேன்கண்ணாடிக்குள்ளேயப்பா, பேச்சென்றதிருமுகங் காணலாச்சு பேருனசுடரொளிபோல் முகமுங்கண்டேன், மாச்சலுடன் வட்டவொளி தன்னையானும் மயங்காமல்கண்டறிந்தேன் புனிதவானே. 381

புனிதமுடன்கண்ணடி முடித்தபோது புகழானசித்தர்முனி ராசரெல்லாம், கனிவுடனேகண்ணடிப்பார்த்தபோது கட்டமுகாயெ ந்தனையும் வரனழைத்து, நனியுடனேயெந்தனுக்குஉபசாரங்கள்நாட் டமுடன்செய்துவைத்து வாசீர்மித்து, முனிபோன்றரிஷிசித்தரெல்லா ந்தானு முயற்சியுடன்புத்திமா னென்றிட்டாரே. 382

புத்திமான்என்றுமே சந்தோஷித்து புகழ்ச்சியுடன்காலாங்கி சீஷனல்லோ, சத்தியமாயுன்னொருவன்செய்வான்மூனே தாரணியில் செய்வதற்கு புத்தியுண்டோ, வெற்றியுள்ளகுருவுகந்தசீஷன் உலக த்திலுனைப்போல ஒருவருண்டோ, பத்தியுடன்யெந்தனுக்கு உபசா ரங்கள் பலகாலும் பாலித்தார் பான்மையாமே. 383

பான்மையாமுபசாரம் பெற்றுயானும் பலபலவாமாச்சரியவித் தையெல்லாம், மேன்மையுடன் சீனபதியுலகத்தோற்கு மகிழ்ச்சியு டன்செய்துவைத்தேன்கோடிவித்தை, மாண்மையுடன்பூநீரைக்காண் பார்சித்த மார்க்கமுடன்துறைவழியுங் காணார்தாமும், காண்மை யுடகாலாங்கிகடாட்சத்தாலே கண்டறிந்தேன்கண்ணடி காய்ச்சத் தானே. 384

பளிங்குகற்பூரவைப்பு.

தானனக்கற்பூரவைப்புசொல்வேன் தாரணியில்சித்தர்முனிசெ ய்ததில்லை, பானனபழுப்புநிறக்கற்பூரந்தான் பாலித்தார்கோடிமுறை பாலித்தார்கள், மானனகற்பூரம்பளிங்குயானும் மார்க்கமுடன்செய் வதற்கு மன்னுகேளு, கோனனகுருவருளால் காலாங்கிதம்மைக் குறி ப்புடனேயான்வணங்கி கூறுவேனே. 385

கூறுவேன்வெள்ளையென்ற குக்கில்தானும் குறிப்புடனேபார மது வொன்றேயாகும், நீறுடையபூநீறும்பாரங்கல்தான் நெடிதான மதியப்பு பாருங்கல்தான், சேறுடையசீனபதி கண்ணம்கால்தான் சிறப்பானசீனமது பாருங்கால்தான், நாறுடைத்தாழையிடச்சாறு விட்டுநலமாகக்காச்சியெடு பதமாய்த்தானே. 386

பதமுடனேகாய்ச்சுகையில்கருப்பட்டைக் கருத்துடனேதயில மது கூடச்சேரு, நிதமுடனேகற்பூரத் தயிலந்தானும் நேர்ப்புடனே தாழைமல ருப்புகூட்டி, பேதமில்ல யேலரிசி தயிலந்தானும்பேருன பன்னீரும் விட்டுக்காய்ச்சி, பாதமுடன்கருப்பெட்டி யொன்றுசெ ய்து பாருடனேகாய்ச்சியதை விட்டிடாயே. 387

விட்டவுடன் மற்றுநாளெடுத்துப்பாரு வேகமுடன்பளிங்கென்ற கர்பூரந்தான், சட்டமுடன்பலகைபோல்கட்டியாகி சார்ப்புடனேதா

ன்திரண்டுயிருக்கும்பாரு; அட்டதிசைதான்புகழும்பூரமாச்சு ஆச்சரியம்நாதாக்கள் செய்வாருண்டோ, மட்டமென்றகற்பூரம்செய்வாரப்பா மானிலத்திற்சித்தர்முனி செய்வார்பாரே. 388

பாரப்பாகற்பூரமனேகமுண்டு பாங்குடனே செய்குபவர் கோடாகோடி, நேரப்பாசினபதிக்கற்பூரந்தான் நீனிலத்தில் செய்பவருமுலகிலுண்டோ, சேரப்பாவெருகோடி சித்தரப்பா செய்தார்கள்கற்பூரம்விந்தையதமாக, ஆரப்பாயெனைப்போலச் செய்ததில்லை அப்பனேயானுமல்லோமுறைசெய்தேனே. 389

ஆகாயத்தில் போகர்கூண்டுவித்தை,

செய்தேனேயின்னமொரு கருமானங்கேள் செயலானபிருங்குவித்தசெப்பக்கேளு, மெய்யானவித்தையதுசூட்சவித்தை மேல்போகும்வித்தையதுகூண்டுவித்தை, பொய்யானவித்தையிது சொல்லப்போமோ பூதகத்தில் கருவாளிகண்டுசெய்வான், வெயில்காணுமாகாஷவித்தையப்பா மேல் ?பாகும் கூண்டினிட வித்தைதானே. 390

தானாகவித்தையிது சொல்வேன்கேளும் தகைமையுள்ள இரும்பினிலேகாந்தஞ்சேர்த்து, பானாகத்தானுருக்கிகம்பியாக்கி பாலகனே சிறுகம்பிநூல்போலாக்கி, வேணாககூண்டுதான்வடிதான்பத்து விருப்பமுடன் நீளமதுவடிதான்பத்து, மானாகநாற்சதுர மாக்கியல்லோ மார்க்கமுடன் கம்பியால்கூண்டுகட்டே. 391

கட்டயிலேசுற்றிலும் தூணிருத்திக் கருததுடனேநடுக் கம்பிசதுரமிட்டு, தோட்டில்போல்தான்சமைத்து சுடர்கள்வைக்கச் சூட்சமுடன் கம்பிக்குள்ளேமாட்டி, சட்டமுடன்சுற்றிலும் நாற்பட்டாலே சாங்கமுடன்தானமைத்து கிளிப்போல்கட்டி, திட்டமுடனடிவாசல் தாள்திறந்துதீர்க்கமுடன் மேல்வாசல்மூடிப்போடே. 392

போட்டவுடன்கற்பூரத்தயிலத்தூட்டிப் பொங்கமுடன் விளக்கொளித்தான்வைத்துப்பாலா, நாட்டமுடன்கும்மட்டம்போல் சோடித்துநயமுடனே காற்றடங்கச்செய்துபின்னும், மூட்டமுடன் வாயுவதுஉள்ளேதங்கி முயர்ச்சியுடன் மேலெழும்பிப்போகும்பாரு,வாட்டமுடன்கூட்டமதுதான் ஆகாஷத்தில் வளமையுடன் போவதற்குத்திறமுண்டாச்சே. 393

உண்டானபோகையிலேகாற்றினாலே ஓகோகோசெல்லுமதுவாகாயத்தில், கண்டாலேமானிடர்கள்காணு போதுகைலாசம்மேருவரை செல்லும்பாரு,அண்டமுடனாகாசமேமலேநோக்கி அதற்கப்பால் போ

கும்வழிகாணூர்பாரு, விண்டலத்தின்வித்தையிது மாச்சரியமாகும் வெட்டவெளிவித்தையிது சூட்சம்பாரே. 394

சூட்சமாம்கூண்டுவித்தை துலேதூரமோடும் தொல்லுலகில் கருவாளிகாண்பான்பாரு, மாட்சியுடன்வாயுவினல் பிறந்தவித்தை மாநிலத்தில்மன்னவர்கள் மயங்கும்வித்தை, தாட்சியுடன்பாலரெல்லாம் மாடுவித்தை சாதாகாலமாடுதற்கு வினேதவித்தை, சூட்சியுடனிரக்காலமாடும்வித்தை மேன்மையுடன் போகரிஷி புகன்றிட்டேனே.

கெந்தருவித்தை சமுத்திரத்திலிறங்க.

இட்டேனேயின்னமொரு மார்க்கம்பாரு வெழிலான கெந்தருவவித்தையப்பா, சட்டையொன்றுயிரும்பாலேடுசெய்துகொண்டு சாங்கமுடன்தலைதனிலே குழையமைத்து, சட்டமு ன்சங்கலியால்கயிருண்டுகருத்துடனே மார்பதனில்தாளணிந்து, திட்டமுடன் கழுத்துமிக மூடல்செய்து தெளிவுடனே நாசிவழிக்குழைசெய்வாயே

குழைதனிலேவடகலைதென்கலைமாத்திக் குறிப்புடனேநாசிவழிகாற்றுசெல்ல, இழையுடனே திரிபோலயிருண்டாக்கி யெழிலானகயிருக்குள்துவாரமிட்டு, பிழையென்றும் நேராமல் கழுத்தைச்சுற்றிபிடரியிலேமுடிச்சியுடன் பின்னல்செய்து, நுழையாமல்சமமதுவும் திருவல்பூண்டு நுணுக்கமுடன்தேகமதில் பூண்டுகொள்ளே. 397

பூண்டுமேகாவடியிலிரும்புமாட்டிப் பொங்கமுடன் யிரும்புக்குண்டுவைத்து, நீண்டுமேதானுமல்லோ தாணிகட்டி நெடிதானவாரிதியில்மத்திபத்தில், தாண்டியேமரத்தினின்று குதிக்கும்போது தாழ்வாகத்தாரணியைக்காணலாகும், வேண்டியேராமுழுது முள்ளிருந்துவிறப்பமுடன் மேலேறி வருகலாமே. 398

வருகவென்முல்மேல்நிற்கும் சூட்சந்தன்னை வாகுடனேயோராள்தான் தூக்கிளுக்கால், பெருகலுடனசமுத்திரத்தை விட்டுமைந்தா பெருமையுடன் கறைவழியேகாணலாகும், துரிதமுடன்கடலுள்ளே சென்றுநீயும் துலையாதபொருள்களெல்லாம் காணலாகும், பருவமுடனிதிகாச வித்தையப்பா பாகமுடன்போகரிஷி பாலித்தேனே.

சமுத்திரத்தில் இராவணன் கோட்டைமுழுகினது.

பாலித்தேனின்னமொரு மார்கமப்பா பாருலகில் யாருந்தான் சொன்னதில்லை, சாலித்தகிரேதாயினுகத்திலப்பா சத்தசாகரம பொங்கிமேல்வழிந்து, வாலித்துகோட்டையது சலமேகொண்டுமண்மூடிசலமதுவுமிகவேகோர்த்து, பாலித்துதேசமல்லா முழுகிற்றென்று பாலித்தார்காலாங்கி யெனக்குத்தானே. 400

தானனகிராதாயி னுகத்திலப்பா சதகோடிசூரியருங்கண்டதில்லை, மேவனைராவணனார் கோட்டைக்குள்ளெவெளிகாணுகோட்டையது ஏழுசுத்து, கோனனையென்னையர் காலாங்கிநாயர் குளிகையிட்டுகோட்டைக்குள் சென்றாரங்கே, பானனகிரேதாயி னுகத்துசித்தர் பண்புடனே யிருந்தாரும்கோடிபேரே. 401

பேரானசித்தர்முனி ரிஷிகள்கோடி பேருலகில்யிருந்தாருமநேகம்பேர்கள், சீரானகோட்டைக்குள் சமாதிகண்டேன் சிறப்பான சமாதிமுன் ராட்சசகூட்டம், பாருனகிங்கிலியராயிரம்பேர்படைபொருதவென்மேலே வந்தபோது, நேரானகாலாங்கி நாயர்தாமும் நெறிமுறைமைவழுவாது நெறிசொன்னாரே. 402

சொன்னதொருகாலாங்கி நாதருக்கு சொரூபமென்ற சித்தரெல்லாமொன்றாய்க்கூடி, நன்னயமாயிராவணனார் கோட்டைக்குள்ளே நலம்பெரியவதிசயங்கள் யாவுஞ்சொன்னார், பன்னயமாய்சமாதியிடஞ்சென்றபோது பார்த்தார்கள்கோடிமுனி ரிஷிகள்தேவர், மன்னவனார்கோட்டைக்குள் வந்ததற்கு வாகுடனே தண்டனைகள் மிகுதியாச்சே. 403

ஆச்சதாம் காலாங்கிநாதருக்கு அப்போதேசாப மதுநேர்ந்துதங்கே, மாச்சனுடன்காலாங்கி நாதர்தாமுமகத்தான சொரூபமென்றகுருவைஎண்ணி, நேச்சனுடன்சாபமதை நிவர்த்திசெய்ய நேர்மையுடன்தன்மனதில் நினைத்தபோது, கூச்சலென்றசாபமது நிவர்த்தியாச்சு கொற்றவனே திரேதாயினுகத்தில்தானே. 404

தானனயுகத்திலப்பா காலாங்கிநாதர் தகைமையுடன் சாபமதைதீர்த்துக்கொண்டார், கோனனஎன்னையர் காலாங்கிநாதர்குவலயத்தில் கோடியுகம்குளிகைபூண்டார், தேனனரிஷிகளிட சாபத்தாலுந்தேரினார்ராவணனார் கோட்டைக்குள்ளே, மானனசமாதியிடம்கிட்டிப்போனார் மகத்தானதேவமுனி கண்டிட்டாரே. 405

கண்டவுடன்காலாங்கிநாதர்சாமி கருத்துடனேசமாதியிடம்சென்றபோது, அண்டமுனிராட்சதர்க ளசுரர்கள்கூட்டம் அணியணியாய்வுலாகொடுத்து நின்றாரங்கே, சண்டையிடும்ராவணனார் சமாதிகண்டார் சாங்கமுடன்ரிஷிகளெல்லா மங்கிருந்தார்,தெண்டமுடன் சமாதியிடம்சென்றபோதுதிரமுடனுளவைஎல்லாங்கேட்டிட்டாரே.

கேட்கையிலே சதகண்டராவணன்தான் நெடியானசமாதியதுகண்டிட்டாராம், நாட்டமுள்ளசமாதியது நடுமையத்தில்நலம்பெரியகோட்டைக்குமேற்புரந்தான், நீட்டமுடன்பன்னிருகாதமப்பா நிலை

யானசாமியுடகோட்டையாகும், வாட்டமுடன்சமாதியது கிட்டப் போனார் வாகுடனேசித்தர்முனி காவல்தானே. 407

இராவணன் நவரத்தினசமாதி.

காவலுடன்ரிஷிகூட்ட மசுராள்தானும் காவலனார்கோட்டைய துசமாதிமுன்னே, ஆவலுடன்காணவென்று போகும்போது அங்கு ள்ளராட்சதர்களசுராள்கூட்டம், ஏவலென்னும் கிங்கிலியராயிரம் பேர் எழிலானகோட்டைவழி தான்மறிப்பார், பாவலுடன் காலாங் கிவார்த்தைகூறி பதியோகயுபாயமது கண்டிட்டாரே. 408

காணவேசமாதியது மேற்புரத்தில் கனகமணிநவரத்தினசமாதி கண்டார், வேணவேவுபசாரமுடன் காலாங்கிநாதர் விடுபட்டுச் சமா தியிடஞ்சென்றாரங்கே, நாணமுடன்தலைகுனிந்து வார்த்தைகூறிநல ம்பெரியசமாதியிடஞ் சென்றிட்டாராம, பாணம்போலசரீரிவாக்கிய ந்தான் பாரினிலேசத்தமது கேட்கலாச்சே. 409

கேட்டவுடன்காலாங்கிநாதர்தாமும் கிருபையுடன் சமாதியிட ம்போகவஞ்சி, நாட்டமுடன் நடுமையம்கோட்டைக்குள்ளே நலமு டனே காலாங்கி யெருமூச்சிட்டு, தேட்டமுடனிராவணனார் பாதம் காண தேர்வேந்தேயெனக்கு குறைநேரலாச்சு, கோட்டமுடன்மன ங்குறைகள்நேர்ந்ததென்று கூறினார் காலாங்கி நாதர்தாமே. 410

தாமானகாலாங்கி நாதாசாமி தன்மையுடன் அவர்களிடம் பே சாமற்றான், நேமமுடன்காலாங்கிநாதர்தாமும் நெறியுடனேயங்கிரு ந்துமறுபக்கந்தான், போமெனவேதன்மனதி லடக்கிசாமி பொலிவு டனே கீழ்ப்புரமாம்திரும்பும்போது, தேமமுடன் கோட்டைக்குள் ரிஷிகள்கோடி தெளிமையுடன் கண்டாராம் கோடிபேரே. 411

கோடியாம்ரிஷிமுனிவர் கோடானகோடி கோமகனார் கோட் டைக்குள்வாசற்பக்கம், நீடியேசமாதியிடம நின்றிட்டாராம் நித்தி லங்குப் பூமகனார்சமாதிபக்கம், தேடியேபார்க்குகையில் சமாதிமுன் னே திகழானசித்தொருவரங்கிருந்தார், நாடியேயவரிடத்திற் கண்டு பேசி நயமுடனேராவணன்சேதி கேட்டிட்டாரே. 412

இராவணன்பாட்டன் துவாபரயுகத்துச்சங்கதி

கேட்கையிலேதுவாபரயுகத்திலப்பா கெடியான என்பாட்டன் ராவணற்கு, சூட்சமுடன்ரிஷிசாபம் நேர்ந்ததென்று சூட்சமுடன் எந்தனுக்கு சித்துசொன்னார், வேட்கமுடன் ரிஷியினிட சாபத்தா லேவேகமுடன்கோட்டையது யழியவென்றும், நீட்கமலசூர்ப்பனகி பங்கமாகி நீடாகிகோட்டையது யிடியென்றாரே. 413

இடியென்றசாபத்தால் இலங்கைதானும் யெழிலான பதிகள் முதல்எல்லாம்போய், நொடிக்குள்ளேவாரிதியு மிகவும்பொங்கி நோக்கமுடன்ராவணனார் தம்பியானோர், படிகடந்து சமாதிக்குப்போக நன்றாபட்சமுடன் பாரினிலேயிருக்கலாகா, குடிகொண்ட மயிலிராவணனாரொக்க கூட்டமுடன் சமாதிக்கு ஏகினாரே. 414

ஏகவேராமர்வெகு கோபத்தாலும் யெழிலானசிதையின்சாயத்தாலும், போகவேகோட்டைமுதல் யாவுங்கெட்டு பொன்னிலகுபதி தனக்குபோகமென்று, சாகமுடன்சமாதிக்குயிடமுந்தேடி சட்டமுடனிலங்கைபதி கடலோரத்தில், பாகமுடன்கோட்டையது நடுமையத்தில் சர்வரும்சமாதியது நின்றிட்டாரே. 415

நின்றதொருசமாதிமுத லெல்லாம்பார்த்து நேர்மையுடன் துதாபரத்துசேதிகேட்டு, தன்றனதுவரலாறு யாவுஞ்சொல்லி சட்டமுடனுபதேசம் பெற்றுமேதான், குன்றுமலைவாருதி யாரும்பார்த்து குவலயத்தில் காலாங்கிவந்துமல்லோ, சென்றுமேசமாதிக்குப் பருவமானார் சிறப்புடனேகாலாங்கி நாதர்தாமே. 416

நாதரும்சமாதிக்குப் போகுமுன்னே நலமுடனே யடியேனும் போகர்தாமும், பாதமுடனவர்பாதம் பணிந்துகொண்டு பாரினிலேயுபதேசம்பாவும்பெற்று, நீதமுடன்சீஷனில்நற்சீஷனாகி நிமையுடன்நாதனுடனருளும்பெற்று, போதமுடனுலகுதனில் குளிகைபூண்டுபுறப்பட்டுபோனேனே சீனந்தானே. 417

சீனபதிபெண்களுக்கு கற்பயெண்ணை.

தானானசீனபதிசென்றேன்பானும் தகைமையுடன் கருவெண்ணெய்சாற்றக்கேளும், வேனானசிற்றின மணக்கிணெண்ணெய் விரைவானவரிக்குமட்டி நதிக்குமட்டி, கோனானகழற்சிக்காய் முடக்கொத்தானும் கூறானவிரலினுடன் காட்டுள்ளிதானும், பானானபிரமியுடன்வறுதுகானும் பங்கானமூலியிடச் சாறுகூட்டே. 418

கூட்டவேயெண்ணையது பங்கொன்றாகும் குமுறவேசார்மூலிபங்கொன்றாகும், நீட்டமுடன் சரிநெறையாயெடுத்துக்கொண்டு நெடிதானபுங்கன்வேர் சங்கன்வேறும், வாட்டமுடன்கொடிவேலி பங்கம்பாளை வாகானகிளுவையுடவாகைதானும், மீட்டமுடன்கிளுவையதுசங்குதானும் நெடிதானதலைச்சுருளி காக்கணமே 419

காக்கமுடன்திருகுமரி வெள்ளைச்சாறை கருவானமூவகையின் வேறுங்கூட்டி, நோக்கமுடன்வகைக்குஒரு பலமதாக நுணுக்கமுட

ன்றுனிடித்துகூடப்போடு, தேக்கமுடன்கஸ்தூரிக்கள்ளிதானும் தே ர்ந்துமேதானெடுத்து பிழிந்தசாறு, தூக்கமுடன்வகைக்குவொருநா லதாக துப்புரவா எண்ணைதனில்கலந்திடாயே. 420

கலந்துமேவதிற்போடுகற்பங்கேளு கருவானதிப்பிலியும் கடுகு தானும், அலர்ந்தகடுக்காயுடனே கடுகுரோணி அப்பனேவால்மிளகு சிரந்தானும், மலர்ந்ததோர் வால்மிளகுகுரோசானிதானு மார்க்கமு டன்கருஞ்சீரம் கஸ்தூரிமஞ்சள், நிலர்ந்தமஞ்சள்தன்னுடனேவரத் தைகூட்டி நெடிதானசுக்குடனே சிறுநாகப்பூவே. 421

பூவானபிந்துப்புதிப்பிலிதானும் பொங்கமுடன் பெருங்காயஞ் சாதிக்காயாம், மாவானசாதிக்காய் சாபத்திரி மாற்கமுடன் சேங் கொட்டைதாளிசந்தானும், சேவானசிவதைநில வாசைவேறும் சிறப் பானகோறையிட கிழம்குதானும், காவானசுக்குடனே தான்றிக்கா யும் கருவானநெல்லியுடன் ஓமந்தானே. 322

ஓமமுடன்வாய்விளங்கம் விடையந்தானும் ஒப்பமுடன் மாசி யென்றகாயுங்கூட்டு, தாமமுடன்வகைக்குஒருபலமதாகத் தகைமை யுடன்றுனிடித்துகூடப்போடு, வாமமுடன் வடுப்பேற்றி எரிக்கும் போது வாகானவெண்காரம் விராகனென்று தூமமுடனிந்துப்பு வி ராகண்ரண்டு சுயமானகரியுப்பு விராகனென்றே. 423

ஒன்றுனயிவையெல்லாம் பொடித்துப்போட்டு வுத்தமனேமெ ழுகுபதந்தனிலிறக்கி, நன்றுனக்கலசத்தில் பதனம்பண்ணு நலமாக மண்டலஞ்சென்றெடுத்துகொண்டு, தன்றுனவீட்டுக்கு விலக்கமான தயவானமுதநாள்தான் மூன்றுநாளும், குன்றுமல்காலையிலோராண் டுகொள்ள குணமாகுமாறுவித சூலைபோமே. 424

போமேதான்கெற்பமென்றசூலைபோகும் பொல்லாதகெற்பத்தி ன்வாயுபோகும், தாமேதான்கெற்பத்தின் ரோகம்போகும் தளியான கெற்பத்தின் திரட்சிபோகும், வேமேதான் சூதகத்தின்வாயுபோகு ம்வெகுளாமல்குன்மத்தின் கட்டிபோகும் நாமேதான்சொன்னபடி பத்தியந்தான் நலமானவெள்ளாட்டுப் பால்தான்கூட்டே. 425

கூட்டவேநாலாம்நாள் வென்னீராலே குமுறவே ஸ்தானமது செய்யவேண்டும், நாட்டமுடனன்றுமுதல் நான்குநாளும் நலமாகவி ழுதிபிலைபாலுங்கூட்டி. வாட்டமுடன்றுனருந்தி வந்திசந்தி வாகாக யேழாநாள்யெண்ணைமுழ்க, நீட்டமுடன்மூன்றுசிறை யிப்படியே செய்ய நீணிலத்தில்கெற்பமது விளையும்பாரே. 426

பாரேதான்வானுக்குமிந்தபாகம் பட்சமுடன்முனருந்த ரோகம்பேரகும், சீரேதான்சிங்களுக்குவைந்துநாளும்திரமையுடன்மூன்றுமுறையுண்ணவேண்டும், கேரேதான்பத்தியமுமுன்போற்காரு நேருனமேகமதுகசரோகம்போல், வாரேதான்க்காலாங்கி நாயர்பாதம் வணங்கியேபோகரிஷிவரைந்திட்டேனே. 427

அறைந்திட்டேன்பலசருக்கடையாராய்ந்து அப்பனேமானிடர்கள்பிழைக்கவென்று, திரைந்திட்டேன் சூத்திரங்க ளுறுதிபார்த்துதெளிமையுடன் பலநூலும்பெருநூல்பார்த்து, குறைந்திட்ட சூட்சாதிசூட்சம்பார்த்து கூறினேன்சித்தர்நூலெல்லாம் பார்த்தேன், முறைந்திட்டேனிந்தவண்ணம் யாருஞ்சொல்லார் முயற்சியுடன்பாடிவைத்தேன் காண்டந்தானே. 428

தானனகாண்டத்தின் மூன்றுங்காண்டம் தகைமையுள்ளகருக்குருவுயாவுஞ்சொன்னேன், வேனனயென்னையர்காலாங்கிநாயர்விருப்பமுடனுபதேச மனேகஞ்சொன்னர், கோனனவுபதேசம் யாவும்கேட்டு கொட்டினேன்சத்தமென்ற காண்டமப்பா, பானனகாண்டமேழாயிரந்தான பாகமுடன் பாடிவைத்தேன்போகர்தாமே. 429

தாமேதான்மொழிந்திட்டாரனேகங்கோடி தகைமையுடன் கண்டறிந்தேன்சதாகாலந்தான், வேமேதான்சித்தர்முனிரிஷிகளப்பாவெனைப்போலயாருந்தான் சொல்லவில்லை, சாமமுடநூல்களெல்லாஞ்சாபஞ்சொன்னர் சாங்கமுடனுளவுகரு சொலலவில்லை, நாமமுடனடியேனும்விரித்துரைத்தேன் நலமாகசீனபதியுலகத்தோர்க்கே.

உலகானசீனபதிமாந்தரப்பா வுலகுமுதல்கருக்க ளெல்லாங்கண்டாரங்க, நிலவுபோல்சொல்லிவிட்டேன் மாந்தர்க்கப்பாநிட்சயங்களெல்லாந்தான் கண்டுகொண்டார், கல்வியுடனுமல்லோவுறவுகொண்டு காணுதகாட்சியெல்லா மங்கேகண்டேன், தலமதிகமானதொருசீனதேசம் தாரணியிலெவராலுஞ் சொல்லப்போமோ.

போகாதுவாதிசேடனிலுமாகப் பொங்கமுடன் சித்தரிலுமாகாதப்பா, வேகாதபிணம்போல வுழல்வாரப்பா விருதாவாய் நூல்சொல்லிமறைத்தாரங்கே, சாகாதகற்பமது வுறுதிச்சொன்னர்சாங்கமுடன் கற்பத்துக்குயிர்தானில்லை, ஆகாதசாஸ்திரங்க ளனைத்துஞ்சொல்லி அப்பனேசாபமது சொன்னர்காணே. 432

காணவேசாபமது சொன்னரங்கே சருவாக யெனைப்போலச்சொன்னரில்லை, தோணவேதோனுத பொருள்களெல்லாம் முறையு

டனேசொன்னேன்யானே, மாணவே யென்னூலைப் பார்த்தபேர்க்கு மறைப்புமுதல் திறைப்புமுதல் யாவுமில்லை, நாணவே சாத்திரங்கள் முறைதப்பாமல் நலமுடனே பாடிவைத்தேன் நன்மைபாரே. 433

போகர் கருலேகியக்கிருதம்.

பாரேதானின்னமொரு கருமானங்கேள் பாடுகிறேன் மாணுக் கன்பிழைக்கவென்று, நேரேதான் வரிக்குமட்டிசார்தாநாழி நேரான கள்ளிச்சாறுநாழி, வாரேதான்மாருலிங்குச்சாறுநாழி வாகான விழுதியிடச்சாறுகூட்டே. 434

கூட்டியேபழச்சாறுநாழிதானும் குணமானபசுநெய்யும்நாழிகூட்டு, நாட்டமுடனிதுவெல்லா மொன்றுய்க்கூட்டி வளமையுடன் தான்சேர்த்து மருந்துகேளு, நீட்டமுடன்திப்பிலியும் சுக்குதானும் நெடிதானவெள்ளுள்ளி யிலுப்பைபூவே. 435

பூவானசவர்க்காரமிந்துப்போடு புகழானநவாச்சாரம் கடுக்காய்தானும், காவானபெருங்காயம் வெண்காரந்தான் நலமானவாளுவை சீரந்தானும், பாவான ஓமமுடன் கடுகுரோணி பாங்கானவரப்பொடியும் கருப்புக்கட்டி, மாவானசாதிக்காய் கிராம்புதானு மகத்தான கடுக்காய்த்தான்றிக்காயே. 436

காயானநெல்லிக்காய்சுக்குதானும் கருவானமிளகுடனேகோஷ்டந்தானும், தாயானயேலமுடன்வளையலுப்பு தாக்கான வெடியுப்பு யெவச்சாரந்தான், மாயானயிந்துப்பு கல்லுப்போடு மகத்தான சவர்க்காரம்பலமதாகும்,தூயானயிதுவெல்லாம் சமனுய்க்கூட்டி துப்புறவாய் சீனியதுசரியாய்க்கூட்டே. 437

கூட்டியேவாலுகையி லடுப்பிலேற்றிக் குமுறவேசேறுபோலாகக்காய்ச்சி, நாட்டமுன் கலபமதில்பதனம்பண்ணு நலமுடனே யந்திசந்திகொண்டாயானல், வாட்டமுடன் கவுசையொடு குன்மம்பாண்டுவாகானதொண்டைமுதல் மல டுப்பூச்சி, காட்டகத்தேபோகுமென்றுபோகர்தானும் கருத்துடனே பாடிவைத்த கிரந்தந்தானே.

தானனகிரந்தமதுபட்சந்தானும்தயவுடனேகொண்டவற்குகெற்பமுண்டாம், கோனைவிஷபாண்டுசோகைபோகும் குடிகெடுக்கும் கெற்பமென்றரோகந்தீரும், மானைகைக்குடைச்சல் வாயுபோகுமகத்தானசூலைமுதல் ரோகம்போகும், தேனைவிப்புருதி மாலைதீரும் தெளிவானகைமுடக்கு போகுங்காணே. 439

காணவென்றால் யிடுப்புவலிசந்துவாதங்கல்வாதங்குடல்வாதம் காணுதோடும், நாணவேவயிற்றுவலி விம்மல்போகும் நரம்பெல்லாம் பிகுத்திருத்தல் களினமாகும், ஈணவேபிறவிச்சுபித்தம்போகும்எழி லானவாதமென்ற தென்பதும்போம், சீணவேவயிருளைவி பெருமூச் சேரும் சிறப்பானபத்தியந்தா னில்லையாமே. 440

ஆமேதான்மருந்துண்ணுங்காலந்தன்னில் அப்பனேவாயுவென் றபதார்த்தங்கள்ளு, போமேதாம்சீதளவாம்பண்டமாகா பொலிவான காரமுதல்மிகவுமாக, தாமேதானிச்சாபத்தியந்தான் காருசார்பாக மற்றதெல்லாமாகும்பாரு, நாமேதான்சொன்னபடி போகர்நூலுநா ட்டிலேபொய்க்காது களினமாமே. 441

ஊர்க்குருவிலோகியம்

களினமுடனின்னமொரு மார்க்கம்பாரு நாதாக்கள் சொன்ன தில்லைநாட்டுளோர்க்கு, களினமென்றவடைக்கலந்தா ஞ்னையாகும் கரு வானவாண்குருவிகொண்டுவந்து, மளினமுடன்ரோகமுதல்எல்லாம் நீக்கி மாசற்றகுடல்தலைகளெல்லாம்போக்கி, பளினமுடன்கருங்கோ ழிரத்தஞ்சேரில் பாகமுடன் தான்பொரித்து யெடுத்திடாயே.

எடுத்துமிகப்பார்க்கையிலே யென்னசொல்வேன் யெழிலான சோரியதுசுண்டியேதான், தொடுத்ததொருவடைக்கலமுமொன்றாய் ச்சேர்த்து துப்புரவாய்திரண்டுமல்லோ கரிபோலாக்கி, விடுத்ததொ ருமாமிசத்தையெடுத்துகொண்டு விபரமுடன்சொல்லுகிறேன் மைந் தாகேளு, கொடுத்திடவே லவணவகையற்பத்துதானும் கூறுவேன் பளிங்குடனேசெப்பக்கேளே. 443

செப்பவென்றால் இந்துப்புவராகன்ரண்டு தெளிவானகல்லுப்பு வராகன்ரண்டு, ஒப்பமுடன்வளையலுப்பு வராகன்ரண்டு ஒளியானம தியுப்புவராகன்ரண்டு, செப்பமுடன்சாரமது வராகன்ரண்டுநேரான வங்காரம்வருகன்ரண்டு, நொப்பமுடன் சவர்க்காரம் வராகன்ரண்டு குமுறவேயித்தனையும் பொடியாய்ச்செய்யே. 444

செய்யவென்றால்பொடிதனிலே சேர்க்கக்கேளுசெயலானசுக்கு டனேமிளகுகூட, பொய்யவே வோமமுடன்சீரந்தானும்பேரானகரி யபோளந்தானப்பா, மெய்யானபூரமென்ற பற்பந்தானும் மேலான ரசமென்றசெந்தூரந்தான், மையானபொடியாக்கி வொன்றாய்ச் சே ர்த்துமார்க்கமுடன்நெய்தேனுங் கூட்டிடாயே. 445

கூட்டையிலேசர்க்கரையு மொன்றாய்ச்சேர்த்து குணமாகத்தா ன்கிளறிபதனம்பண்ணு, நாட்டமுடன்லேகியத்தை மண்டலந்தான் நலமுடனேகொண்டுவர பலனக்கேளு, தீட்டமென்றநாளேயிலேவயி ர்நோய்போகும் திறமானகால்வீக்க மகோதரம்போம், வாட்டமுட ன் சூதத்தின்திரட்சிபோகும் வாகானகட்டிமுதல் சூலைபோமே.

சூலையுடன்வாயுவென்றதெண்பதும்போம் சூக்குமத்தின் நீரே ற்றமகன்றும்போகும், காலையிலேவாயூற லற்றுப்போகும் கதிப்புட னேகொதிப்புமுதல் காணுந்தோடும், மாலையிலேதான்காணு மண்டை க்குத்துமயக்கமுடன் றலையிடியுமாறிக்காணும், ஆலையிலேயகப்பட் டகரும்புபோல அகன்றுமே போகுமடா பிணிகள்தாமே. 447

பிணியானருதுகாலவியாதிரோகம் பேரானகெற்பத்தின் ரோக ம்போகும், அணியானருத்திரமாங்குடல்தான்மூட்டி அப்பனேவா யுமென்றகட்டிதானும், நணியானமகோதரமு மணுகாதப்பா நாடா துகுடல்வலியும்போகும்பாரு, கணியானசோரியது கட்டிப்போகும் காறனகெற்பநோய் போகுந்தானே. 448

தானேகேள்சூதகத்தின்வாயுதீரும் தாக்கானகசரோக மெல்லா ம்போகும், வேனேதான்திமிர்வாதம்குடலில்வாதம்மிக்கானபட்சமெ மென்றவாதம்போகும், கோணேதான்கெண்டையென்ற வாதம்போ கும் கொடிதானயிடுப்புவலிபோகும்பாரு. மானேதான்முழங்காலில் வாதம்போகு மகத்தானபாதமது வீக்கம்போமே. 449

வீக்கமதுயேகுமதுயென்னசொல்வேன் மிக்கானதேகமதுயிளை ப்புமெத்த, தூக்கமதுமதிகமுடன்சன்னலாகும் துடியான நரம்புமு தல்துடிப்புமெத்த, தாக்கமுடன்சூடதுதான் தலைமேற்கொண்டு ச தாகாலம்தலைவலியு மிகுதிகாட்டும், ஊக்கமுடன் தயிலமது சொல் வோம்பாரு வுத்தமனேபோகரிஷி உண்மைகாணே. 450

கெற்பச்சூட்டுக்குத்தயிலம்

உண்மையாமின்னமொரு மாற்கம்பாரு வுத்தமனே நாதாக்கள் சொன்னதில்லை, வண்மையுடன்தயிலமதுசாற்றக்கேளு வாகானயெ ண்ணெயதுசேர்தானப்பா, திண்ணமுடன்கையான்சாற் சேர்தானப் பாதினமானமுடக்கொத்தான் சேர்தான்பாதி, கண்ணமுடன்கருந் துளசிசேர்தானப்பா தலமானநெல்லிச்சார் சேர்தான்கூட்டே.

கூட்டவேதமூதாளைச்சார் தாளுழி குணமானவமூதலையின் சார்தாளுழி, நீட்டமுடன் பசளைச்சார்தாளுழிநெடிதானகுமரிச்சார் சார்தாளுழி, தேட்டமென்ற நீர்பூண்டு சார்தாளுழி தெளிவானகரந் தைச்சார் சார்தாளுழி, வாட்டமுடன் பசுவின்பால்நாழியாகும் வள மானகடைசரக்கு சாற்றக்கேளே. 453

கேளேதான் கற்பவகை சாற்றைக்கேளும் கெடியான வாலுழு வையரிசிதானும், தாளமுடன் நன்னாரிமுத்தக்காசு தாக்கான சரக மும் ஓமந்தானும், நீளமுடன் கார்போக மேலந்தானும் நிலையான கோஷ்டமுடன் மதுரந்தானும் பாளமுடன் வகிற்கட்டை செம்பூரா னும் பாங்கான சந்தனமுடன் வேதனமே. 454

தேவனும் பட்டையுடன் கருஞ்சீரந்தான் தேற்றானுமெட்டியுட ன்சித்தரத்தை, காவமென்ற வால்மிளகு சாதிக்காயும் கருவானபூப் பனையும் தண்ணீர்விட்டான், சாபமென்ற கரிமஞ்சள் சாபானவெள் ளை யென்றமிளகுகூட்டி, தூபமென்ற சாம்பிராணிசமனதாக துப்பு ரவாய் முக்கண்ணின் பாலாலாட்டே. 455

ஆட்டியேமெழுகுபதந் தன்னிற்காச்சி அப்பனே தான்வடித்து பதனம்பண்ணு, தாட்டிகமாய் சீசாவிலடைத்துமைந்தா தகைமையு டன் ஒருதிங்கானபின்பு, நாட்டமுடன்தயிலமதை பிரயோகித்தால் நாடாது கெற்பத்தின் சூலைபோகும், ஓட்டமுடன் கெற்பத்தின்வா யுபோகும் ஓகோபொய்யாது உண்மையாமே 456

உண்மையாம் தயிலமாம் உறுமெத்த வுத்தமனைபொறிச்சூடு விட்டேபோடும், திண்மையாம் பிடரிவலிசன்னி போகும் திறளான வேர்வையது துள்ளியோடும், வண்மையாம் கையெரிவுகாலெரிவுதா னுமகத்தானவாயுவென்ற தெண்பதுவும்போம், நண்மையாம் காந்த லதுமிகுறது நளினமுடன் போகரிஷி நவின்றவாறே. 457

கந்தகத்திறுவகம்.

வாறானவின்னமொரு மாற்கம்பாரு வளமையுடன் கெந்தகமும் சேர்தாளென்று, நேறானசீனமது சேர்தான்ரெட்டி நெடிதான பூநீறு சேர்தான்காலாம், பானை உப்பதுவும் சேர்தான்பாதி பளிங்கானவ ளையலென்றவுப்புத்தானும், தேறானயெவாச்சாரம் தான்காலாம் சிற ப்பானசரக்கெல்லாம் பொடியாய்ச்செய்யே. 458

செய்யவேவாலையென்றபானைக்குள்ளே சீருடனேசரக்கெல்லாம் போட்டரைத்து, பையவேசக்கரமாம் வாலைவைத்துப் பாகமுடன்தி றுவகத்தையிறக்கிப்பாரு, மெய்யவே மூன்று முறையிறந்த பாகமுயற்

ச்சியுடன்ருனிறக்கியெடுத்துக்கொண்டு, தூய்யநல்ல சீஷாவிலடைத் துக்கொண்டு துப்புரவால்கற்பரணை மூடிடாயே. 459

மூடவே திராவகத்தின் காரமப்பா மூவுலகம்தானெறிக்கும்கதி ரோன்போல சாடவே சரக்குக்கு காலனுகும் சாங்கமுடன் திராவக மோசுருக்குமெத்த, நீடவேதிராவகத்தை பதனம் பண்ணி நினைப்பு டனேயின்னமொருமாற்கம்பாரு, கூடவேகண்டருடதிராவசத்தைக் கூறுவேன் மாணுக்கள் பிழைக்கத்தானே. 460

துருசு திராவகம்.

தானுன துருசது தான்சேர்ந்தா ஞென்றுதாக்கான சீனமது சேர்தாஞென்று, வேனுன பூநீறுசேர்தான் பாதிவேகமுடன் கல்லுப் புசேர்தான்காலாம், கோனுன வெண்காரம் சேர்தான்காலாம் கொப் பெனவேவிவையெல்லாம் பொடியதாக்கி, மானுன எனதையர் குரு வையெண்ணிமாற்கமுடன்பானை தனில்கொட்டிடாயே. 461

கொட்டியேகுருசொன்னவளவாய்க் கூட்டிகுணமாகச்சக்கரமா ம்பானைதன்னில், திட்டமுடன்வாலைவைத்துச் சீலைசெய்து சிறப்புட னேயிருபக்கம் புனலும்வைத்து, சட்டமுடனடுப்பேற்றி எரிப்பாயா னல் சார்புடனே திராவகமுமிறங்கும்பாரு, நட்டமிலாதிராவகமு மெடுத்துப்பாரு நாதாக்கள் செய்யார்களதீதந்தானே. 462

அதீதமென்ற வித்தையிது வாலைவித்தை அவனியிலேசெய்யுவ துவரிமைகாணும், கதீதமென்ற திராவகத்தைப்பதனம் பண்ணுகரு வானசூதத்துக்குறுதிகாலன் நதீதமென்ற கண்டருடதிராவகத்தால் நாட்டிவே வெகுகோடி செய்வாரப்பா, பதீதமென்ற திராவகங்களி ன்ன சொல்வேன் பாகமுடன் போகரிஷிபயின்றவாறே. 463

சாரத்திராவகம்.

பயின்றதொரு வின்னமொமாற்கம்பாரு பாங்கான சாரமது சேர்தாஞென்று, நவின்றதொரு பூநீறுசேர்தான்பாதி நலமானசீன மதுசேர்தாஞென்று, துயின்றதொரு கல்லுப்பு சேர்தான்கால்தான் சுயமானவெண்காரம் சேர்தாஞென்று, அயின்றதொருசரக்கெல்லா மொன்ருய்க்கூட்டி அப்பனே கலசமென்ற பானைக்கேற்றே. 464

ஏற்றவே சக்கரமாம் வாலைவைத்து எழிலாகச்சீலையதுவலுவாய் செய்து, காற்றதுதான் போகாமல் அடுப்பிலேற்றிகரகமென்றபானை க்கு குழலும்வைத்து, போற்றமுடன் புனல்வழியேசலமும் போக பொங்கமுடன் தானெரிப்பாய் சாமநேரம், கூற்றனைப்போல் திராவ கமுமிறங்கும்பாரு கொடிதான வேதமது சொல்லொண்ணதே.

சொல்லவேசாவேது பாவுமேது சொற்பெரியதிராவகமும் கார மெத்த, வெல்லவேசாக்குக்கு மித்திரகாலன் வெகுகொடியன் வெகு நெடியன்சாரனப்பா, புல்லவேதிராவகத்தைபதனம்பண்ணு பொங்க முடன் சீஷாவில் விட்டுமைந்தா, மெல்லவேமேற்கல்லுகொண்டுமூடி மிக்கானதிராவகத்தைவுறுதிபண்ணே 466

வெடியுப்புதிராவகம்.

பண்ணவேயின்னமொரு மாற்கம்பாரு பாங்கானமதியுப்பு சேர் தாரொன்று, உண்ணவே சீனமதுயிருசேராகும் வுத்தமனேசாரமது கால்சேராகும், திண்ணமுடன் பூநீறுசேர்தான்பாதி தெளிவானகல் லுப்புசேர்தான் கால்தான், வண்ணமுடன் சரக்கெல்லாமொன்றாக் கூட்டிவளமாகத்தான் பொடித்து கலசமாட்டே. 467

ஆட்டியே வாலுகையைமேலேவைத்து அப்பனே சீலையதுவலு வாய்ச்செய்து, நீட்டியே திராவகமு மிறக்கிபாரு நிலையான திராவக மோகாந்தமெத்த, பூட்டகமாய்தானெடுத்துச்சீஷாவிற்குள் புகழாக த்தானடைத்து பதனம்பண்ணு, காட்டமுடன்திராகமோ நவிலப் போமோகாதாக்கள் செய்யார்கள் நன்மைபாரே. 468

பாஷாணத்திராவகம்

நன்மையுடன் வின்னமொரு மாற்கம்பாரு காதாக்கள்கண்டத் தில்லைசூளுக்குவேதை, உண்டையாயுறைக்குறேன் பாஷாணந்தான் வுத்தமனேசுங்கென்ற பாஷாணந்தான், திண்மையுடன் சேரதுதா னொன்றேயாகும் கதிப்பானவளையறுப்பு கால்தான்கூட்டே. 469

கூட்டவென்றால் கலுவத்திற் பொடியாய்ச்செய்து பொங்கமு டன்கலசமென்ற பாணைதன்னில், நீட்டமென்றபொடிதனையேபாண் டமிட்டு நேர்புடனே வாலுகையைமேலேவைத்து, தாட்டிகமாய்மூடி யதுவலுவாய்ச்செய்து சாங்கமுடன் திராவகத்தை யெறக்கிப்பாரு, நாட்டமுடன் திராவகத்தை பதனம்பண்ணுநலமாக சீஷாவிலடைத் திடாயே. 470

அடைத்துமேதிராவகமோகாரமெத்த அப்பனேதிராதகத்தால் லோகம்நீறும், புடைப்புடனேலோகத்துக் காலனாகும்புகழாகசத்து ருமித்துருதானாகும், படைப்புடனே திராவகத்தால் காரசாரம் பாக முடன்றான்மடியும் பண்போமெத்த, கடைப்புடனேயிதனாலேவயமு மாளும்கருவான திராவகமுமென்பார்தானே. 471

சங்கு அயத்திராவகம்.

தாமானவின்னமொரு கருமானங்கேள் தகைமையுடன்வயமது தான்சேர்தானென்று, காமானபாஷாணம் சரிதாககடி தானவயத் துடனே ஒக்கக்சேர்த்து, நாமான பூநீறு வகையதாகநலமான வளைய லுப்புக்காலதாக, பாமானசீனமது ரெட்டிப்பாக பாகமுடன்முன் போட்டுக்கலசமூடே 472

மூடலே வாலுகையை மேலேவைத்து முயற்சியுடன்சீலையது வலுவாய்ச்செய்து, தேடையிலே வடுப்பேற்றி எரிக்கும்போதுதெளி வாகதிராவகமுமிறங்கும்பாரு, நாடயிலே புனலாலேசலமுமோடிநல மான திராவகத்துக்குயிருமாச்சு, ஊடையிலேதிராவகத்தால் காரமெ த்தவுத்தமனே செந்தூரக் குருவுமாச்சே. 473

ஆச்சென்றுவிடுகாதே யின்னம்பாரு அப்பனே செந்தூரமிதனு லாகும், போச்சென்று போகாதேபுண்ணியாகேள் பொங்கமுடனின னமொரு பாகஞ்சொல்வேன், தீச்சென்றபாஷாணஞ் சகலத்துக்கும் தெளிவாகயிந்தமுறைசெய்யாலாகும், மூச்சப்பா சகலபுதபாஷாணத் தின்மூர்க்கமெல்லாஞ்சத்துருவால் முறிக்கலாச்சே. 474

சீரகத்திராவகம்.

முறிக்கலாம் பலகோடிவேதையாகும் மோசமில்லைதிராவகங்கள் காரமெத்த, தறிக்கலாமின்னமொருபாகங்கேளு, தாக்கானசீரகமும் சேர்தானப்பா, செரிக்கவேசலமதுதான்ரெட்டிப்பாகும் சிறப்புடனே பூநீறுகாலதாகும், நெறியுடனேபாண்டமெனும்கரகத்துள்ளே நேர்பு டனே சலத்தோடே கொட்டிடாயே. 475

கொட்டியேகரகத்தின்மேலேயப்பா குணமாகவாலைதனை மேலே வைத்து, திட்டமுடன் சீலையதுவலுவாய்ச்செய்து திறமுடனேயடுப் பேற்றியெரிப்பாயானால், நட்டமில்லாத்திருவகமுமிறங்கும்பாரு நல மானசீரகத்தின்வேகமெத்த, பட்டவுடன்பித்தம்நாற்பதுவும்போகு ம்பாங்கானசீரகத்தின் பண்புதாமே. 476

தாமானசீரகத்தின் தயிலந்தன்னை தயவுடனே மூன்றுமுறை யிப்படியே செய்ய, பாமானவாலுகையால்காத்மேறிபரிவுடனேபுகை யோடுகெடிதானும், காமானதயிலமது என்னசொல்வேன் காசினி யில்சித்தர்களுங் காணமாட்டார், பூமானும்காலாங்கிநாதர்பாதம்புக ழ்ச்சியுடன் பாடினேன் போகர்தானே. 477

ஓமத்தயிலம்.

தானனவின்னமொரு பாகம்பாருதயவுடனே சொல்லுகிறேன் மைந்தாகேளு, வேனுனஓமமது சேர்தானப்பா வேகமுடன்கொண்டு

வந்து பாண்டமிட்டு பானுனசலமதுவும் ரேட்டிப்பிட்டுபாங்குடனே பூநீறுகாலதாக, பானுனசலமதனை விட்டபின்பு மதிப்புடனே வாலு கையைமேலேவையே. 478

வைக்கவேசிலையதுவலுவாய்ச்செய்து வாகுடனே திராவகத்தை வாங்கிமைந்தா, மெய்க்கவே மூன்றுமுறை யிப்படியேசெய்து மேன்மையுடன் திராவகத்தை எடுத்துக்கொண்டு, மொய்க்கவே முன்சொன்னதிராவகமுமப்பா மோசமதுவாராமல்செப்பக்கேளு, பொய்க்காமல் சரியெடையா எடுத்துக்கொண்டு, பொன்னவனே வெள்ளுள்ளி சேர்தான் போடே. 479

பெருங்காய வைப்பு.

போடவேதிராவகத்திலாட்டுமைந்தா புகழான வெள்ளுள்ளிகை போலாகும், நீடவேபூண்டுக்குகாயமேரி நிலையான வெள்ளுள்ளிகாரமாச்சு, பாடவேசெம்மறியின் தோலாலப்பா பாகமுடன்தான்பொதிந்து தைத்துப்போடு, சாடவேமண்டலஞ் சென்றெடுத்துப்பாரு சரக்கான பெருங்காயங்காரமாச்சே. 480

காயமின்னமொருமாற்கம்பாரு கருவான காசியென்றகட்டியப்பா, நேயமுடன்சொல்லிகிறேன் யைந்தாகேளு நேர்புடனேவகிலத்தின் தூளுகூட்டி, பாயமுடன் பாக்கினிடகிஷாயந்தன்னுல்பாகமுடன்மூன்றுநாளாட்டிமைந்தா, தூயமுடன்ரவிதனிலே காயப்போடுதுப்புரவாம் காசியென்றகட்டியாச்சே. 481

இரும்புசாயம் ஆடைகளுக்குவரணம்.

கட்டியென்னும் ரத்தமென்றபாளமாச்சு காசினியிலாருந்தான் கண்டதில்லை, திட்டமுடன் சொல்லிவிட்டோம் சீனத்தாற்குதிறமுடனே கண்டறிந்தோர் புத்திவானும், சட்டமுடனின்னமொரு பாகம்சொல்வோம் சார்வானயிருப்பினிட சத்தைவாங்கு, வட்டமென்ற கொப்பறையில் துப்பைக்கொட்டி, வாகுடனேசெம்மரத்தின் தூள்தான்போடே. 482

போடையிலேசலமதுதான் பாண்டமிட்டுப் பொங்கமுடன்பட்சம்சென்றெடுத்துப்பாரு, கூடையிலேயிரண்டுமொன்ருய் சேர்ந்துகொண்டுகுணமானசிட்டம்போலிருக்கும்பாரு, நாட்டமுடனிரும்பென்றவாலைகுள்ளே நளினமுடன் தான்கொட்டி வரைத்திட்டேதான், சாடவே சீலைக்கட்டு காரமேற்றிச்சார்பாககரைகட்டி யோரந்தீதகே. 483

தீத்தையிலேபலபலவாம் ரூபம்காட்டும் சிவப்புமுதல் பஞ்சவர்னம்காணலாகும் தீத்தையிலேகாரங்களில்லாப்பக்கம் தெளிவானவர்னங்கள் காணலாகும், தீத்தமுடன்வரணங்களெழுதலாகும் திறமான

யிருப்பினிடகாரந்ததன்ஞல், சீத்தமுடன்செம்பினிட சத்துசேர்ந்து சிறப்பாகத்தாஞருக்கி யெடுத்திடாயே. 484

எடுத்துமே வயதினிடபாகம் போல வெழிலாகவகிலமாம் பட்டைத்தாளும், தொடுத்துமேசெம்பினிட சத்துசேர்த்து தோற்றமுடஞலைதனிலரைத்துக்கொண்டு, தடுத்துமேவயதினிட வர்னத்தாலும் தாக்கானசெம்பினிடவர்த்தாலும், அடுத்துமே சீலைகட்டுவர்னமாச்சு வப்பனே சீனபதிவுளவுதானே. 485

சீனபதீகாயிதபுகையாலை.

உளவானசீனபதிவேதைமாற்கம் வுத்தமனே வேடிக்கையின்னஞ்சொல்வோம், தலமானகாயிதம்சன்னமட்டும் தான்செய்யும் விபரங்கள்சாற்றக்கேளு, நடமானதடமதுவும் கெஜநூறுகும் நளினமுடனகலமதுகெசநூறுகும், மளமானசுற்றேரகிராதிக்கம்பி மாற்கமுடன்றனமைத்துவாலைபூட்டே. 486

பூட்டவென்றல்தலைபக்கம் கரும்பாலைபோலபுகழான குழியொன்றுதடாகமொன்று, நீட்டமுடன் தடாகத்தின்சுற்று வோரம் நிலையானவாய்க்கால்போல் குழையுண்டாக்கி, பூட்டமுடன் குழைதனிலேயாலைவைத்துப் பொங்கமுடண்தொட்டியென்ற கிணறுண்டாக்கி, வாட்டமுடன்தொட்டிக்குள் தூன்போல்கம்பி வகுப்புடனே தானமைத்து சக்கரமாட்டே. 487

சக்கரமுமாட்டியேவாலைதன்னைச் சாங்கமுடன் புகையென்ற வாலைதான்ஞல், தக்கபடிதிருப்பனுடன் கோணித்தன்னைச் சாந்தமுடன் தானரைத்துகுளத்துக்கேற்றி, ஒக்கவேதெளிவதனை மேலேநோக்கிவுவமைடன்போகவே, வழியுண்டாக்கி பக்கமுடன் தெளிவதனில் பூநீர்சேந்த்துசாமபுடனே தொட்டிதனில் கரைத்திடாயே.

கரைத்துமேமூன்றுநாள் சென்றபின்பு கருவாகதொட்டிதனில் சரக்கவைத்து, நிரைப்புடனே படல்கட்டிக் காயுதத்தை நேர்புடனேதானெடுக்கவண்ணம்பாரு, திரைப்புடனே வாலையென்றகையிலப்பாதிறமானபிரதமையொன்றிவுக்கும், முறைப்படியே கைதனிலேபடல்தானீயமுளையா மல்தொட்டி தனில்கலக்கிடாயே. 489

கலக்கையிலேவண்டலது படல்மேற்சார்ந்து கடினமுடன்சக்காத்தைச்சுத்திவந்து, நிலத்தினது மேடையிலேசட்டந்தன்னில்நிலைமையுடன்றனமைத்துமேலேவைக்கும், தலப்புடனேமறுவாலைதனிலிருந்துபுகழாகச் சீலையதுமுடிக்கொள்ளும், தலப்புடனேபின்னுகந்தபதுமைதாலும் தடாகத்தில்வண்டல்தனை யெடுக்குந்தானே.

எடுக்குமேசக்கரமாமாலைதன்னால் எழிலானவண்டலுடன சரக்கையெல்லாம், தொடுக்கவே மேற்படியில் கொண்டுசென்றுதுப்புரவாய்வாலையென்ற சட்டந்தன்னில், படுக்குமேபடல்தானும் விட்டபோது பாங்குடனேசிலையது மூடிக்கொள்ளும், அடுக்குமே யிப்படியே பலகாலுந்தான் ஆலையதுசுழன்றுமே யோடுந்தானே. 491

ஓடயிலேமுதற்றரந்தன்னில் வொளிவானகாகிதங்கள் சன்னமாகும், நீடமுடனிரண்டாங்காலாலைதன்னில் :நேர்புடனே தானடக்கும்வண்மைபாரு, சாடலுடன் பஞ்சியென்றவாலையுண்டு சட்டமுடன் முன்குழைபோலாணித்தூணும் வாடலுடன் குளமதனில் வண்டல்சேரும் வாகுடனேபஞசியென்றவண்டல்தானே. 492

வண்டலுடன்சுத்தித்த பூநீரப்பா வாகுடனேதான் சேர்த்து குழம்புபோலாம், அண்டமெனும் நட்சத்திரவொளிவுவீசும் அப்பனே வண்டல்தனைகலக்கிக்கொண்டு, தண்டமுடன் சக்கரவாலைதன்னைச்சாங்கமுடன் றன்திருப்பிரதமைதானும் கொண்டபடிபடல்சாத்தி வண்டல்தன்னைக் கொப்பனவேதானெடுக்கும் வண்மைபாரே. 493

பார்க்கையிலே படல்சாத்தி தானெடுத்துப் பாகமுடன்மேற்புறத்தில் கொண்டு சென்று தீர்க்கமுடன் சட்டமென்ற படலின்மேலே சீலைகொண்டு அப்பனே மேல்மூடியாலையாலே, நீக்கலதுபடலதனை மேலேசாத்தும் நெடிதானசக்கரத்திநேமைதானே. 494

காணயிலேசக்கரமாமாலைதன்னில் கருத்துடனேதான் முடுக்கச்சலமும்நீங்கி, நீணமுடன்கசுவலது நீங்கியேதான் நேரானகாயிதமும் சன்னயாச்சு, வேணபடிமூன்றுங்காலாதன்னில் வேகமுடன் திருப்பவுபாயங்கேளு, மாணவென்றசக்கரமுமாடி நிற்கும் மன்னவனேநடுக்குளமாங்குழிதான்பாரே. 495

குழியானசதுரமதுபள்ளத்துள்ளே கூரானநூணதுதான் நடுமையத்தில், வழியானசக்கரமாமாலை தன்னில் வகுப்பானபஞ்சினிடமஷ்டுதன்னால், முழியானபூநீறு மொக்கச்சேர்த்து முயலவே தான் மசிந்து குழிக்குள்தானும், கழியானமயணம் போலாகும் பாருகருத்துடனேறுனெடுக்கும் கருவைக்கேளே. 496

கருவானமேல் வட்டஞ் சக்கரத்தில் கடின்முடனுலையது வோடிப்பாயும், திருவானவண்டலதுமேலேதானும் தெளிவுடனே படல்போல சென்றுநிற்கும், குருவானநடுமைய சுக்கான்தானும்

கொப்பெனவேமேல் வட்டம்படல்தான்சாத்தும், தருவானவண்டல் மேல்படல் தான்மூடி சார்பாகசீலையது பாவிக்கொள்ளே. 497

கொள்ளயிலேசேல்சட்டம் நின்றமூடிக் கொப்பனவேபட லாலேயாலைசுற்றி மெள்ளவேசீலையதுமேலேமூடி மேன்மையுடன் சலமதனைவடியச்செய்யும் தள்ளயிலேசக்கரமாம் பலகையாலே சாங்க முடன்வாலையின்றன் திருப்பல்காணும், துள்ளியே திருப்பலதுநின்ற போது சூட்சத்தால்காயிதமுமெடுக்கலாமே 498

எடுக்கலாமவாலைவிட்டு எடுத்தபோது யெழிலானகாற்றதனில் காயப்போடு, தொடுக்கவேரவியென்ற வொளிதான்பட்டால் தோற்ற முடன் காயிதமும் வெளுப்புமெத்த, படுக்கமுடனிப்படியே யாலை தன்னால் பலபலவாம்காயிதங்களெடுக்கலாகும், கொடுக்கவே வாலை களுமனேகமுண்டு கொப்பெனவேயதன்கூறு சொல்லலொண் ணாதே. 499

சொல்லவேகஞ்சிதனைமேலேபூசி சுத்தமுடன் காயிதங்களெடு க்கலாகும், வெல்லவேகஞ்சியினால் வாலைதன்னில் மெருகுடனேசக் கரமாமுருளையுண்டு, புள்ளவேயுருளைக்குப் பஞ்சுபூட்டிப் பொங்க முடன் தோலாலேயாலையாகும், பங்கமில்லாக்காயிதத்தையாலைக்கிய பாகமுடன் பெருகுடனேதன்னும்பாரே. 500

தள்ளயிலேசக்கரமுமோடித்தானும் சாங்கமுடன் ருனெடுத்து வடுக்கும்பாரு, துள்ளியேபடல்தானும் மேலேயேற்றித் துப்புற வாயடிவாரற்தொட்டிக்குள்ளே, மெள்ளவேகொண்டு சென்று யடுக் கிப்பின்புமேற்புறத்தில் சட்டமென்ற வாலையப்பா கொடிதான வாலைக்கு கூறுண்டாமே. 501

கூறான வாலையிலேவோரமப்பா கொப்பனவே கட்டுவகைதரிக் கலாகும், தாரானகாயிதமுஞ்சுற்றோரந்தான் சாங்கமுடன் திருகி யல்லோ நிற்கும்பாரு, சேறான வாலையதுவோடிகொண்டு தெளிவான புகையுடனேவாடிநிற்கும், பாறானகட்டுவகைதறித்தபின்பு பாக முடன் கீழ்புறமாய்தள்ளலாச்சே. 502

ஆச்சென்றவாயது நிந்தித்தானும் அப்பனே லட்சமதுகோடிக் கோடும், காச்சலென்ற கடிதாசி செய்யும் நேர்மை காசினியில்சித்தர் முனிசெய்ததில்லை, மாய்ச்சனுடன் சீனபதியானுஞ் சென்று மார்க்க முடன்கருவானவேதையாவும், பாச்சனுடன் காலாங்கிநாதர் தம் மால் பாலித்தேன்வெகுகோடி வித்தைதானே. 503

வரணபேதகடிதாசிசெய்யும் விபரம்.

வித்தையாமின்னமொருபாகம்கேளு சேவடிக்கைவினைதமென்ற வித்தையப்பா, சுத்தமுடன் பஞ்சவர்னமைபினாலே சுருதியுடனாலே தனிமேலற்றிமைந்தா, பத்தமுடனாலேவாய்ப்படலின்மேமேலே பாங்குடனேபூசியல்லோவாலேக்குள்ளே, வெத்தியென்ற காகிதத்தை வாலேதன்னில் விருப்பமுடன்றான்கொடுத்து செப்பக்கேளே. 504

கேளேதான்காகிதம்படிந்தபின்பு கெடியான வன்னமென்றபேதிதன்னை, தாளவேதிராதகமாய் எடுத்துக்கொண்டு தகைமையுடன் சபுரியின்றன்மயிரினாலே, மீளவேகத்தையாய்க்கட்டிக்கொண்டு விருப்பமுடன்றான்றெளிக்க வரணம்பாயும், சாளவேகடிதமெலாம் வரணபேதம் சார்பாகக்காட்டியல்லோ பரவுந்தானே. 505

தானனவினேகவிதம்செய்யலாகும் தகையுடன் வரணமென்ற வாலேதன்னால், கோனனையென்னையர் காலாங்கிநாதர் கொட்டினார் லோகத்திலனந்த வேதை, பானுகையெனைப்போல வெளிபரங்கம் படினார்லோகத்து மாந்தற்கில்லே, தேனனவமுர்தம்போல் சத்தகாண்டம் திரட்டினேன் யேழாயிரமுண்மைபாரே. 506

சீனத்தார்க்கு வஸ்துபோதை.

உண்மையாமின்னமொருபாகம்கேளு வுத்தமனேவஸ்துவென்ற போதையப்பா, திண்மையாய்நெல்லிவேர் பனைவின்வேரும் திறமான மாதளையின்கெஞ்சாவேறும், கண்மையாம் நன்னாரியலரிவேறும் கருவானவாவாரைவேநுதானும், பண்மையாம் கிச்சிலியின்வேறு கூட்டி பாங்கானவேலனிட பட்டைகூட்டே. 507

கூட்டியேவெள்வேலன் பட்டைதானும் குணமான சரியெடையா எடுத்துக்கொண்டு, மாட்டியே பெரும்பாண்டம் தன்னிலிட்டும் மதிப்புடனே சலமதுவும்நிறம்பவிட்டு, வாட்டமுடன் பத்துநாளூறிப்பின் வகுப்புடனேசரக்கதனில் பனவெல்லந்தான், நீட்டமுடன் தான்போட்டுயடுப்பிலேற்றி நிலைமையுடன் திராவகமாயிறக்கக்கேளே.

இரக்கவென்றால்வாலேபது திராவகத்தை எழிலானபாண்டமதுயிறக்கிப்பாரு, சிறக்கவேதிராவகமும் காரமெத்த சீரானதிராவகமும்பதனம்பண்ணு, முறைக்கவேவஸ்துசுத்தி சரக்குதன்னை முய்யவேநாதாக்கள்செய்யமாட்டார், திறக்கவேபலநூலும்கண்டாறுப்ந்துதீரமுடன்பாடிவைத்தேன் மாந்தற்தாமே. 509

ஆமேதான்சரக்குசுத்தி கொண்டபோது அப்பனேவருளுண்டு ஞானமுண்டு, தாமேதான்நாதாக்கள் மனமுவந்து தயையுடனேவே ணதெல்லாமூவார்பாரு, போமேதான்புகழுண்டு செல்லமுண்டுபொ லிவானகருணையுடன் வரமுமுண்டு, வேமேதானெப்போது மனமுவ ந்து விருப்பமுடன்பட்சமது வைப்பார்பாரே. 510

தானனசதாநிலையைக் காணலாகும் தாக்கானசின்மயத்தை யறி யலாகும், வேனனவறுகோணவட்டதுள்ளே வேண்டியதோர்கருவிகர ணாதியெல்லாம், மானனவாராதாரத்திலுண்மை மாற்கமுடன்காணு தற்குமயக்கமில்லை, கோனனசிற்பரத்தை யடுக்கலாகும்கொற்றவனே தவநிலைவில் நிற்பதாமே 511

சற்பராஜன் மாத்திரை

நிற்பாரேயின்னமொரு மாற்கம்பாருநீயானமாணுக்கர் பிழை க்கவென்று, துற்பரவாய்குளிகையது சொல்லப்போமோ துடியான பாஷாணசற்பராசன், பற்றுணமாம் பாஷாணமொருவர்காணார்பாரு லகில்கண்டறிந்து பகுத்துறைப்பேன், சற்பமென்றகுளிகையது பெ ருமைமெத்த சர்வதுணரோகிகட்கும் புகட்டலாமே. 512

புகட்டலாம்சங்கென்ற பாஷாணந்தான் புகலவேகளஞ்சிஎடை எடுக்கலாகும், பகட்டுடையதாளகமுங் களஞ்சிரண்டு தகைமையுள் ளவீரமது களஞ்சியொன்று, மகட்டுடையதுரிசியது களஞ்சியொன் றுமாசற்றரசமதுவும் களஞ்சியொன்றே. 513

ஒன்றானசூதமுடன் துத்தங்கூட்டி வுத்தமனேசிங்கியதுகளஞ் சிமூன்று, பன்றானசெந்தகமும்களஞ்சியாறு பாங்கானலிங்கமதுகள ஞ்சிநாலு, கன்றானகெவுரியதுகளஞ்சியொன்று கருவானதீமுறுகள் களஞ்சியொன்று, தன்றானமனோசிலையும் களஞ்சியொனறு தாக்கா னசூடனுமே களஞ்சுயொன்றே. 514

களஞ்சியாம்காந்தமது களஞ்சிரண்டு கடிதானபொன்னிமிளைக ளஞ்சியொன்று, தனமுடையசூதசெந்தூரமொன்று தாக்கானவரப் பொடியுங்களஞ்சியொன்று, மளமானவயத்தொட்டிக்களஞ்சியொன் று மாற்கமுடன்செங்கந்தி களஞ்சிரெண்டு, பளமானகருக்கடல்கள ஞ்சிரண்டு பாங்கானசீனமதுகளஞ்சிநாலே. 515

நாலானகல்நாறு களஞ்சியெட்டு நலமானகல்மதம் களஞ்சியாறு பாலானசிலாசத்துக் களஞ்சிரண்டு பதிவானபவளமது களஞ்சியாறு

சேலானமுத்தமதுவும் களஞ்சிரண்டு செயலானசங்கதுவும்களஞ்சியா
று, கோலானமான்கொம்பு களஞ்சியெட்டு கூறானவகிற்சிலையுங் கள
ஞ்சிபத்தே. 516

பத்தானகடைசரக்குசாற்றக்கேளு பாங்கானசுக்கதுவும்களஞ்
சியெட்டு, முத்தானமிளகதுவும் களஞ்சியாறு முயலான பரங்கியது
களஞ்சியெட்டு, மத்தானலவங்கமதுகளஞ்சிநாலு மகத்தானசாதிக்
காய் களஞ்சிரண்டு, சித்தானரோசனையும்களஞ்சியாறுசிறப்பானவா
ல்மிளகுகளஞ்சிமூன்றே. 517

மூன்றானமிளகுடனே கருவாய்ப்பட்டை மூர்க்கமாய்கருஞ்சீர
ம்களஞ்சிரண்டு, தான்றான்பத்திரியுங் களஞ்சியொன்று தருவானதக்
கோலம்களஞ்சிரண்டு, கான்றானகார்கோலங்களஞ்சியொன்றுகருவா
னமாசிக்காய்களஞ்சிரண்டு, பான்றானதேசாவரம் களஞ்சியொன்று
பாகமுடன்வாய்விளங்க ரெண்டாய்ச்சேரே. 518

சேர்க்கையிலேலவசம்பதுவும் களஞ்சியொன்று செயலான சேங்
கொட்டைகளஞ்சியொன்று, மார்க்கமுடன்கடுக்காய்த்தோல் களஞ்
சிரண்டு மருவானகருஞ்சீரம் களஞ்சியொன்று தீர்க்கமுடன் நற்சீர
ங்களஞ்சியொன்று திடமானசிறுதேக்குகளஞ்சியொன்று ஏர்க்கவே
தாளகமுங்களஞ்சியெட்டு எழிலானமுந்திரி களஞ்சிரண்டே. 519

இரண்டானஎள்ளுடனேகளஞ்சிரண்டு இயலான ஓமமுடன்க
ளஞ்சிரண்டு, பண்டானகொள்ளுடனே களஞ்சியொன்று பாங்கான
வெட்டிவிரை களஞ்சியொன்று, குண்டானதேற்றான்விரை களஞ்சி
ரண்டுகொடிதானகொடிவேலி களஞ்சியொன்று, திண்டானவாலுழு
வை களஞ்சியொன்று திறமானசோம்பதுவும் களஞ்சிநாலே. 520

நாலுடனே திப்பிலியும்களஞ்சியொன்று நலமானகஸ்தூரிகளஞ்
சியொன்று, பாலுடனேகுங்குமப்பூ களஞ்சியொன்றுபாங்கானகோ
டியதுகளஞ்சிநாலு, சேலுடனேமுத்தமதுகளஞ்சிரெண்டுசெழிப்பா
னதான்றிக்காய்களஞ்சிநாலு, காலுடனேநெல்லியது களஞ்சிரண்டு
கருவான முள்ளளியதுகளஞ்சியாறே. 521

ஆறானசிவதையதுகளஞ்சிநாலு அப்பனேநன்னாரி களஞ்சிபத்
து, நேரானபற்பாடம்களஞ்சியாறு நேரானசிறுதேக்குகளஞ்சிரண்டு,
தாறானபற்படகம் ளஞ்சிரண்டு தளிரானசோரியதுகளஞ்சிரண்டு,
சேரானசெம்பூரான்களஞ்சிரண்டுசிறப்பானதேசாவின்வரமுந்தாநே

தானனவாமதுவும் களஞ்சிரண்டு தாக்கானமயிலிறகு களஞ்சி நாலு, வேனைவலம்புரியுங்களஞ்சியொன்று வியர்வானஏலமது களஞ்சிஎட்டு, பானைசாம்பிராணிகளஞ்சிநாலு பதமானரோகணியுங்களஞ்சியெட்டு, தாமானமகரப்பூகளஞ்சிரண்டு தகைமையுடன்குரோசாணிகளஞ்சிபத்தே. 523

பத்தானநாகப்பூகளஞ்சியொன்றுபாகமுடன்சித்தரத்தைக்களஞ்சியொன்று, சித்தானங்லைப்பனைங் களஞ்சியொன்று சிறப்பானபூகுசர்க்கரைதானென்று, புத்தானவட்டதிப்பிலிதானென்று புகழானவாய்விளங்கம் களஞ்சியொன்று, முத்தானவன்னமெனும்பேதிதானுமுயற்சியுடன் சாத்திரத்தின்பேதிதானே. 524

பேதியாம்மாமிஷமுங்களஞ்சியொன்று பேரானயிருமஞ்சள்மரமஞ்சள்தானும், வாதியாய்குன்றிமணிகளஞ்சியாறு வகுப்பான முட்டியுடன்பேராமுட்டி, சாதியாமதுரமுடனக்கிராகாரம் சாங்கமுடன்களஞ்சியதுரண்டதாகும், மேதியாம்நெருஞ்சியது ரண்டதாகும் மேலானகளஞ்சியது ரண்டதாமே. 525

தாமானவெள்ளுள்ளிகளஞ்சியாறு தாக்கானகசகசா களஞ்சிரண்டு, காமானசரக்கெல்வா மொன்றுய்க்கூட்டிக் கருவாகத்தானரைக்கவிபரங்கேளு, நாமானமூலிவகை புரைப்போம்பாராய் நாட்டிலேநாதாக்கள்சொன்னதில்லை, பாமானகையான்சார்சாமம்நாலு பாங்குடனேதானரைப்பாம் மைந்தாகேளே. 526

கேளேதான்நற்கையான்சாமம்நாலு கெடியானபொற்கையான்சாமம்நாலு, பாலேதான்போகாமல் யரைப்பாயப்பா பாகமுடன்குலாமல்லிசாற்றினாலே, தாளவேதக்காளிச்சாற்றினலே சாங்கமுடன்றனரைப்பாய்காலுசாமம், மாளவேபுளியாரை சாமம்நாலு மயங்காமல்தானரைப்பாய் மகிபாதானே. 527

தானேகேள்நீலியின்றன் சாமம்நாலுதகுவானவாதொண்டைச்சாமம்நாலு, மானேகேள்பொன்னுதரைச்சாமம்நாலு மார்க்கமுடன்பாற்சுரண்டிசாமம்நாலு, தேனேகேள்மலைத்தேனு சாமம்நாலுதெளிவானநீர்மிட்டான்சாமம்நாலு, வேனைகவுதும்பைச்சாமம்நாலு விருப்பமுடன் தானரைப்பாய் பண்பாய்தானே. 528

பண்பானதானிச்சார் சாமம்நாலுபாங்கான கற்றுழைச் சாமம்நாலு, தின்பானகொள்ளிலைச்சார் சாமம்நாலு திடமானயீருள்ளிச்சாமம்நாலு, நண்பானவரிக்குமட்டிச்சாமம்நாலு நலமான பேய்க்குமட்

ட்டிச்சாமம்நாலு, கண்பானகருப்பன்சார்சாமம்நாலு கதிரானமேனி
ச்சார்சாமம்நாலே 529

நாலானமுசுக்கைச்சார்சாமம்நாலு நலமானமாதுளையின்சாமம்
நாலு, காலானமுருங்கைப்பூசாமம்நாலு, கடிதானமுடக்கொத்தான்
சாமம்நாலு, தாலானமாந்துளிருசாமம்நாலு தாக்கானசெந்தோன்றி
சாமம்நாலு, நூலானவெந்தோன்றிச்சாமம்நாலு நுணுவுடனேசெம்
பருத்திச்சாமம்நாலே. 530

சாமந்தானரைக்கையிலேயின்னங்கேளு சாங்கமுடன்பழச்சா
ருலாறுசாமம், நேரமுடன்தானரைப்பாய் தேங்காய்ப்பாலால்நரா
னவாறுவகை செயநீதன்னால், தாமமுடன்பெண்சாமமறைத்தபோ
துதகைமையுள்ளசரக்கெல்லா மடிந்துமல்லோ, சாமமுடன்மெழுக
துவாய்மைபோலாகி சார்பானவெண்ணைபோலிருக்கும்பாரே. 531

பாரேதான்மெழுகெடுத்து பதனம்பண்ணு பாங்கான காயசித்
திமருந்தென்பார்பார், சீரேதான்மண்டலங்கள் கொண்டு சென்றால்
திறளானவியாதியதுவகும்பாரு, கூரேதான்சொன்னபடி வியாதிமா
ர்க்கம் கூறுவோமாணுக்கள்பிழைக்கவென்று, நேரேதான்மேகமென்
றதிருசதும்போய் நெடிதானகுஷ்டம்பதி னெட்டும்போமே. 532

போகுமேகரப்பன்பதினெட்டும்போகும் பொல்லாதகுன்மமது
எட்டும்போகும், ஏகுமவாயுவென்ற தெண்பதும்போம யெழிலாக
பித்தம்நாற்பதும்போகும், சாகுமேசேத்துமங்கள் தொண்ணூற்று
ருஞ்சார்வானகிரந்திபதி னெட்டும்போகும், வேகுமேசூலைபதினெட்
டும்போகும் வேவமுடனரையாப்புவெள்ளைபோமே. 533

வெள்ளையென்றரோகமது ராஜரோகம் வெளிகாணுமேகமதுச
கரோகம்போம், கிள்ளையென்றக்ஷயமதுவும் பதினெட்டும்போம் கீ
ழானபாண்டுமுதல் மகோதரம்போம், வள்ளையென்றகாமாலையாறும்
போகும் வாகானநீரிழிவு மதுமேகம்போம், கொள்ளைகொண்டவயிற்
றுவலிவிம்மல்போகும் கொடிதானசுரமுதலுமகன்றுபோமே. 534

அகன்றுபோம்சகலவிதநோய்கள்தானும் அப்பனேதேகமது வ
ன்னிமீறும், துகன்றதொருவனுபானமறிந்துகொண்டால் துடிப்புட
னேநரம்பெல்லாம் வலித்துக்காட்டும், புகன்றதொருதேகமது காந்தி
வீசும் புகழானகாயமதுயிறுகும்பாரு, நின்றதொருகாயாதி கற்பமெ
ன்பார் நீனிலத்தில்சித்தர்செய்யும் வேதையாமே. 535

வேதையாம்கோடிவழிவேதையுண்டு வேகமுடன்செய்பாகம்யாருஞ்செய்யார், பாதையாமிம்மருந்துவதீதமெத்த பாகமுடன் யான் முடித்தேனிந்தபாகம், தோதமுடன் சித்தர்முனிரிஷிகள்தானும்தோற்றமுடன் தான்முடித்தாரனந்தபாகம், காலமுடன்காலாங்கி நாதர் பாதம் கருத்துடனேயான்வணங்கி பாடினேனே. 536

நவநீதகற்பம்

பாடினேனின்னமொருபாகங்கேளு பாங்கானகோமேதம்புஷ்பராகம், தேடியேவப்ரேகம்பச்சைகெம்பு சிறப்பானவயிரமதுசங்குமுத்து, கூடியேபவளமதுநவதாதாகும் கொப்பெனவேயாறவகைசெயநீர்தன்னால், நீடியேசமனெடையாயெடுத்துக்கொண்டுநேர்மையுடன்றனரைப்பாய் சாமம்நாலே. 537

நாலானசாமமது வரைத்துமைந்தா நலமுடனேயில்லையது தட்டியேதான், கோலமுடன்ரவிதனிலேநாயவைத்துக் குறிப்பாக ஓட்டிவிட்டுச்சீலைசெய்து, ஞாலமுடன்சீலையதுகாந்தபின்பு நளினமுடன் கனயெருவிற்புடத்தைப்போடு, தாலமுடன்புடமாறி யெடுத்துப்பார்க்கத்தவளநிறபற்பமதுகாந்தியாச்சே. 538

ஆச்சென்றுவிடுகாதே மைந்தாகேளு அப்பனே சொற்னமென்றபற்பந்தானும், மாச்சலுடம்நாலுக்கோர் நவநீதவித்தைமாட்டடாவிரண்டுமொன்றாய்க் கல்வமிட்டு, காச்சலுடனறுவகை செயநீர்தன்னல்கருத்துடனே தானரைப்பாய்நாலுசாமம்,மூச்சடங்கத்தானரைத்துவில்லைதட்டி முயலவேரவிதனிலே காயப்போடே. 539

போடவேயில்லையதுகாயந்தபின்பு பொங்கமுடன் ஓட்டிவிட்டு சீலைசெய்து, நீடவேகோழியென்றபுடத்தைப்போடு நீணிலத்தில்லீயுமொருசித்தனுவாய், தேடவேகாயாதிகற்பபற்பம் தேர்ந்தாலும்யாருந்தான்சொல்லவில்லை, பாடவேபலநூலுங் கண்டாராய்ந்து பாலித்தேன் லோகத்துமாந்தர்க்காமே, 540

ஆமேதான்பற்பமுறை யாரும்சொல்லார் அப்பனேமானிடர்கள்பிழைக்கவென்று, நாமேதான்பலநூலுங்கண்டாராய்ந்து நளினமுடன்பாடிவைத்தேன் சத்தகாண்டம், போமேதான் வீணிலேமனம் செல்லாமல் பொங்கமுடனிப்பாகஞ் செய்தாயானல், மாமானகாயகற்பமிதுதானுகு மகத்தானபற்பமது நவிலொண்ணுதே. 541

ஒண்ணுதபற்பத்தைபணவிடைதானு முத்தமனேவெண்ணெய் தனில்கொண்டாயானல், நண்ணுதுநோயாதுரோகமேது நாடாதுகா

லனுமேநாடமாட்டான், தின்னுங்காயகற்பமிதற்கொவ்வாது திற
மையுடன்செய்துகொண்டோன்புத்திவானும், பண்ணவு முடியாது
பாரிலப்பா பாக்கியவான்செய்துகொள்ளும் வேதையாமே. 542

### சூரணங்களனுபானம்

வேதையிலேயின்னமொருபாகம்கேளு விருப்பமுடன்சூரணங்
களெதுவானாலும், தீதையிலேவனுபானந் தெரிந்துகொண்டால்தேக
மதுகற்றானுமாகும்பாரு, போதையிலேகாயாதிபத்பமாகும் பொங்
கமுடனுண்டவற்கு பலனுண்டாகும், பாதையிலேமேகமென்ற யிழி
வுபோகும் பாரினிலேநீயுமொரு சித்தனாமே. 543

### புட்டிக்குள்கோழிமுட்டை விடுகிறசாலம்

சித்தனாமின்னமொருமார்க்கம்பாரு சிறப்பானபெருஞ்சாதிகோ
ழியொன்று, முத்தலாய்கொண்டுவந்து வயமிட்டு முதன்மையாமு
ட்டைதனையெடுத்துமைந்தா, சுத்தமுள்ளபூரீராம் புட்டியென்றகு
ட்சமுடன் சின்னவாய்க்கொண்டதாக, வெத்தியுடன் புட்டிக்குள்
முட்டைபோக விருப்பமுடன் சொல்லுகிறேன் பண்பாய்க்கேளே.

பண்பானமுட்டைதனைச்செப்பக்கேளு பாகமுடன்காரமென்ற
காடிதன்னில், திண்புடனேமூன்றுநாள் முட்டைதன்னைத் திறமுட
னேயூறினபின்னெடுத்துப்பாரு, நண்பானமுட்டையது காரமேறிந
விலேவோடதுதான் சவ்வுபோலாகும், தண்பானமுட்டையதுதள
ர்ந்துபோகும் தாக்கடாபுட்டியென்ற சீஷாதானே. 545

தானானசின்னவாய்ச்சீஷாக்குள்ளே தள்ளடாமுட்டைதனை யு
ள்ளேபோகும், வேனானமுட்டையது சென்றபின்பு விருப்பமுடன்
பாணியென்றதண்ணீர்தானும்,கோனானபுட்டிக்குள்ரம்பவிட்டுகுறை
யாமல் சீஷாவைமூடிப்போடு, கோனானமுட்டையது கல்லுபோலாம்
தீவிரமாய் பாணிதனையூத்திடாயே. 546

ஊத்தியபின்புட்டிதனைமூடிபோடு உத்தமனேராசரிடம் சென்
றுநீயும், நேத்தியுடன்புட்டிதனை கைகொடப்பாநேரானபுட்டிதனைப்
பார்க்கும்போது, மாத்தலுடன்புட்டிக்குள் முட்டையப்பா மன்னவ
னேசென்றவழிவதிதவித்தை, காத்தலுடனாச்சரிய வித்தைதன்னைக்
கண்டிலோராசரெல்லாமயங்குவாரே. 547

மயங்குவார்வித்தையிதுமண்டலத்தில் மாற்றானுங் கண்டறியா ன்வினோதவித்தை, தயங்கியேசெய்தாலும் காணமாட்டார் தகமையு ள்ளகருவாளிகாண்பான்பாரு, புயங்கமுடன்தாரணியில் மற்றோரா லும் புகழ்ச்சியுடன்செய்யுவதுவருமையாகும், வயங்கமுடன் காலா ங்கிநாதர்பாதம் வாகுடனேதாள்பணிந்து பாடினேனே. 548

தங்கநிமிளை வேதை

பாடியேயின்னமொரு கருமானங்கேள் பாலகனேமாணுக்கன் பிழைக்கவென்று, தேடியேநிமிளையது தங்கமப்பாதெளிவானநிமிளை யதுகூறக்கேளு, வாடியேதிரியாதே மன்னுபாரு மகத்தான செம்புக் குத்தகட்டின்மேலே, நீடியேசூதவத மேனிச்சாற்றால் நேர்மையுடன் றானரைத்துப்பூசிடாயே. 549

பூசியேநிமிளைதனைப் பொடித்துக்கொண்டு பொன்னவனே கரி யோட்டில்துட்டுவைத்து, ஆசியேநிமிளைதனைசன்னமாக வப்பினைஇ ழ்மேலும்பொதிந்தபின்பு, காச்சிக்குச்சீலையதுவலுவாய்ச்செய்துகரு த்துடனே கவுதாரிபுடந்தான்போடு, மாசிபோல்வர்னமது மிகவுண் டாசிமன்னவனே தாம்பரமும்பழுக்கும்பாரே. 550

பாரேதான்தாம்பரமும் பொன்னுமாகும் பாங்கானநிமிளையது வரணமெத்த, சீரேதானுருக்கிப்பார் மாற்றெட்டாகும்சிறப்பானவர் ணமதுதாம்பரவேதை, வேறேதான்காணவுமே வதீதவேதை வேடிக் கைசிமிட்டுவித்தைவித்தைசித்தர், கூரேதான்சீனபதிமாற்கத் தார்க ள்குறிப்புடனேசெய்வார்கள் கோடிதானே. 551

கோடியாம்வேதையிது கோடாகோடி கொட்டினேன்மாணுக்க ன்பிழைக்கவென்று, நீடியேநிமிளைதனைக்காணமாட்டார் நிமிளையில் வரணமதையறியமாட்டார், மூடியேபித்தனைபோல்கல்லுமப்பாமுறு க்கலுடன் சிட்டம்போலிருக்கும்பாரு, தேடியேமலைந்தாலும்கிட்டா தப்பாகேசததில் வதீதமென்ற சிட்டம்பாரே. 552

சிட்டமுடன்கல்லதனை செந்தூரித்தால் சிவப்புடனேதங்கமது செந்தூரந்தான், கிட்டநிமிளையது வர்ணமெத்தகெடியானசெந்தூர ங்குன்றியுண்ணு, குட்டமென்றதேகமது பொன்போலாகும் குறை யாது வயதுதான்செவினியாய், மட்டமுடன்வெள்ளிசெம்பில் பத்து க்கொன்று மயங்காமல்கொடுத்திடவே மாற்றெட்டாமே 553

எட்டான மாற்றதுவுமதிகமாகி யெழிலான புடதநதுக்கு வுறுதி தங்கம், மாட்டானசங்கமது பசுமையாகு மகத்தான வேதையிதுசித் தர்வேதை, கட்டானகிமிளேயது கருவுவேதை காசினியிலாருந்தான் சொல்லமாட்டார், சட்டமுடன் தாலாங்கிதனேவணங்கி சார்புடனே போகரிஷி பாடினேனே. 554

பன்னியப்சா.

பாடவேமாற்றுயர்வு பகாக்கேளு பாங்கானதுருசதுவும்பலமோ வொன்று, நீடவேதுருசுக்கு சுண்ணும்பப்பா நிலையானசுண்ணமதைக் கவசம்செய்து, தேடவே மூன்றுநாள காய்ந்தபின்பு தெளிவுடனே காடையென்ற புடத்தைப்போடு, கூடவே கவசமதை பிரித்துபாரு கொற்றவ னே துருசதுவும்வெளுக்கும்பாரே. 555

பாரேதான் துருசதுவு மொன்றேயாகும் பாங்கான லிங்கமது வொன்றேயாகும், சீரேதான் சூதமது ஒன்றேயாகும் சிறப்பானகார மது ஒன்றேபாகும், நேரேதான் எலிக்காலின் தழையினாலே நேர்பு டனேதானரைப்பாய் நாலுசாமம், தீரேதான் சிமிழ்தனிலே பதனம் பண்ணு திறமாகமட்டமென்ற பொன்னிற்போடே. 556

போடவேமூன்றுபுடமுமிரோலே பொங்கமுடன்தாட்டின்மேல் லேசாய்பூசி, தேடவேபூங்காவி தன்னிற்போடு தெளிவாகமாற்றதுவு மொன்பதாகும், நீடவேயுருகிப்பார்மாற்றேகாது நிலையானபுடத்துக் குவலுத்ததங்கம், சாடவேமட்டமது பழுப்புமாகா சாங்கமுடன்பசு ம்பொன்னிற்போடக்கேளே. 557

கேளேதானிவ்வேதைசிடிகவேதை கெணிதமுடனுதாக்கள்செய் வேதை, கோளேதான்வாருது குருவின்மாற்கம் கூறுவேன் வின்ன மொருமாற்கம்பாரு, தானேதான்வுப்பினிட செந்தூரத்தைதாக்குட ன்செய்வதற்கு தகமைகேளு, வீணேதான்செந்தூரப் போக்குஞ்சித் வீணிலேசொல்லியல்லோ மறைத்தார்தாமே. 558

உப்புசெந்தூரவேதை.

தாமானவுப்பதுவுஞ்ரசர்தானென்று தாக்கானதுருசதுவும்சேர் தான்நாலாம், வாகானதும்பலென்ற பூண்டினாலே வகையுடனேதான ரைப்பாய்நாலுசாமம், காமானபில்லையது தட்டிமைந்தா கருவாககவி தனிலேகாயவைத்து, ஈாமானவோட்டிலிட்டுச்சீலைசெய்து நலமாகப் புடம்போடக்கட்டிப்போமே. 559

கட்டியதோ ருப்பதனை எடுத்துக்கொண்டு கருத்துடனே முன் போலமூலியாலே, திட்டமுடனரைப்பாய் நாலுசாமம் திறமாக ரவிதனிலேகாயவைத்து, சட்டமுடனோட்டிலிட்டுச்சீலைசெய்து சாங் கமுடன்கோழியென்ற புடத்தைப்போடு, சிட்டமென்றவுப்பதுவும் காரமேறி கிருபையுடன்றான்சிவக்கும் பான்மையாமே. 560

பான்மையாமிப்படியே வைந்துபத்து பாகமுடன் புடம்போட ச்சிவக்கும்பாரு, வான்மையுடன்கரிப்பில்லை கசுவுமில்லை வளமாக வுப் புக்குகாரமெத்த, தான்மையுடன்கரிதனிலேயுருகியாடும் தகமையு டன்மணிபோல ஒளிவுவீசும், கான்மையுடன் மணிதனையேவுமிரோ லேகருத்துடனே மட்டமென்றபொன்னிற்பூசே. 561

பூசவேகளஞ்சிக்குக்குன்றிதானும் பொலிவாகத் தானெடுத்துப் பூசிப்போடு, ஆசலுடன்பூங்காவிதன்னிற்குள்ளேவப்பனே புடம்போ டமாற்றுகாணும், கூசாமல்மூன்றுபுடம்போட்டாயானல்குறையாது சரிநிறையும் யேகாதப்பா, தாகமுடன் மூன்றுமுறைபோட்டபோது தப்பாதுவாணிக்குப்பத்துமாத்தே. 562

மாத்தானதங்கமது வாணித்தங்க மகத்தான தங்கமது வுருகிப் பாரு, கூத்தானகாச்சலுக்கு சுலாய்ப்புகாணும் குவலயத்தில் சித்தர் முனிசெய்யும்வேதை, சாத்தலுடன் கருவானிலாண்டான்பாரு சாங்க முடன் பின்னொருவர் காணுவாரோ, நீத்தலுடன்விட்டகுறை நேர்ந் தோன்காண்பான் நீனிலத்தில மற்றொருவர்காணாரமே. 563

ஆமேதான் செந்தூரங் குன்றியுண்ணு அப்பனே காயாதிகற்ப மாச்சு, தாமேதான்சமாதிக்கு யிடமுமில்லை தாக்கில்லை நோக்கில்லை தேகம்போகா, வாமேதான்வாசியதுகீழ்நோக்காகும் வளமானயோக த்திலிருக்கலாகும், போமேதான் தேகவதுகற்றாணுகும் போக்கான மேனியது சண்ணுதன்றே. 564

அயச்செந்தூரம்.

சண்ணுது யின்னமொரு பாகம்கேளு சார்வானலோகமதுசெந் தூரந்தான், பண்ணுதுபண்ணுவார் மாந்தரப்பா பாரினிலேசித்தர் கைமறைப்புகாணர், தண்ணமுடன் காலாங்கிநாதர்பாதம் தாக்குட னேயான்வணங்கி கூறலுற்றேன், வண்ணருடனயமதுவும் ராவிமைந் தா வளமையுடறான்செய்தவகைதான்கேள். 565

வகையான லோகமது சேர்தானப்பா வாகுடனேதானெடுத்து சாற்றக்கேளு, தொகையானசீனமென்ற காரந்தன்னல் துப்புரவாய்

தானரைத்து கழுவிப்போடு, தகையானபால்சண்டுசாமம்நாலு தாக்குடனே தானரைப்பாய் மைந்தாகேளு, பகையானபில்லேதன்னேரவி யிற்போடுபாகமுடன் ஓட்டிவிட்டுச் சீலேசெய்யே. 566

செய்யவே புடமதுதான் கோழியாகசெப்புகிறேன் மாணுக்கள் பிழைக்கவென்று, உய்யவே பத்துபுடமிப்படியேபோடு வுத்தமனே பின்னுலே சாற்றக்கேளு, பையவே சூதமென்ற ராஜாதன்னைப் பாகமுடன்சரிகாலால் சேர்த்துக்கொண்டு நையவேதானரைப்பாய் முன்மூலியாலே நயமுடனேபில்லேதட்டிக் காயப்போடே. 567

காய்ந்தபின்பு தானெடுத்து மாணுகேளு கருவாகதளவாயாஞ் சட்டிதன்னில், ஆய்ந்ததொருவுப்பதனை மைபோலாக்கி வப்பனேசட்டிதனில் கீழேபோட்டு, மாய்ந்தவுடன் பில்லேதன்னை நடுமையத்தில் மாற்கமுடன் தானமைத்துமன்னுபாரு, பாய்ந்தவுடன் மேலுமந்த வுப்பைக்கொட்டிபதமுடனே சீலேயது வலுவாய்ச்செய்யே. ()

செய்துமே வாலுகையிலடுப்பிலேற்றி செம்மெயுடன் தானெரிப்பாறுசாமம், பெய்துமே யாறினபின்னெடுத்துப்பாரு பேறுனசெந்தூரமுருக்கம்பூவாம், நைதுமேசெந்தூரமெடுத்துப்பாரு நாதாக்கள் முறையதுதான் சொல்லப்போமே, கொய்துமேசெந்தூரம் பதனம் பண்ணு கொப்பெனவே வேதைமுகம் செப்பக்கேளே. 569

செப்பவென்றால் செந்தூரம் வெள்ளியாறுசிவப்பான செம்பதுவும் செம்புநாலு, ஒப்பவேதங்கமது ஒன்றுகூட்டிவுவமையுடன்றுனுருக்கி குருவொன்றிய, மெப்பவேகரிபோல யிருக்கும்பாரு மேன்மையுடன் காரமிட்டு ஊதிப்போடு, அப்பவேபொன்னுமதுமாற்றுகாணுமப்பனே யெட்டறையுமாகுந்தானே. 570

அபரேக்செந்தூரம்.

அதிகமாமின்னமொரு கருமானங்கே அப்பனே மாணுக்கள் பிழைக்கவென்று, துதிதமுடன் நீதமது நவநீதந்தான் சுத்தமுடன் வெண்ணையதுயெடுத்துப்பாரு, கதிதமுள்ளவெண்ணையது சேர்தாஞென்று கருவாகவெடியுப்பு சேர்தாஞென்று, புதிதமுள்ள கெந்தியதுசேர்தாஞெறு புகழான எருக்கன்பால் தன்னுலாட்டே.

ஆட்டவே பனிரண்டு சாமந்தானுமப்பனே வெண்ணெய்போல் பில்லேதட்டி, மாட்டடாபில்லேயாது ரவியிற்போடுமயங்காதே மன்னவனே ஓட்டிவிட்டு, மூட்டடாசிலேயது வலுவாய்ச்செய்து மூர்க்க

முடன் கெஜமென்றபுடத்திற்போட்டு, தீட்டடா பின்னுமந்தளருக் கன்பாலால் திறமாகதானரைப்பாய் சாமம்நாலே. 572

நாலானசாமமது வரைத்தபோது நாயகனே பில்லையதுகாயவைத்து, தாலானரவிதனிலே காய்ந்தபின்பு தகைமையுடன்ஓட்டிலிட்டு சீலைசெய்து, மேலானபுடமதுவும்கெஜமேயாகும் முத்தமனேயாறின பின்னெடுத்துப்பாரு, பாலான பற்பம்போலிருக்கும்பாரு பாலகனே யிப்படியே பத்துபோடே. 573

போடையிலேதசபுடமுந்தீர்ந்தபின்பு பொங்கமுன்கார மென்றதும்பப்பூண்டு, தேடையிலே தானரைப்பாயாறு சாமம்தெளிவாக பில்லையது தட்டிமைந்தா, மேடையிலே ரவிதனிலே காயவைத்துமேன்மையுடன் ஓட்டிலிட்டுச்சீலைசெய்து, கூடையிலேபுடமதுதான் கெசமேயாகும் கொற்றவனேபுடமாறி யெடுத்துப்பாரே.

பாற்கையிலே பற்பமது சிவப்புகொஞ்சம் பார்த்திவனேயிதிற் பத்துபுடமும்போடு, சேர்க்கையிலே புடமதுவுந் தீர்ந்தபின்பு செயலானமூலியதுசொல்லக்கேளு, மூர்க்கமுடன்பொன்னுவாவரைதான் மூலியின்மையுடன் ருனரைப்பாய்எட்டுசாமம், தீர்க்கமுடன்ருனரைத்து பில்லைதட்டி திறளாகரவிதனிலே காயப்போடே.

காய்ந்தபின்பு ஓட்டிலிட்டிச் சீலைசெய்து கனமாகநூறெருவிற் புடத்தைப்போடு, மாய்ந்தபின்பு தீயாறியெடுத்துப்பாரு மன்னவனே செந்தூரம் வர்ணம்காணும் சாய்ந்தலுடன் யிப்படியேபத்துபோடு சார்பாகபுடமதுவுந் தீர்ந்தபின்பு, எய்தலுடனுதரமாம் வேங்கை தன்னுலொழிலாகதானரைப்பாய் சாமம்ரெண்டே.

ரண்டானசாமமது வரைத்தபோது எழிலான பில்லையதுதட்டிமைந்தா, திரண்டானரவிதனிலேகாயவைத்துதிறமாக ஒட்டிலிட்டுச் சீலைசெய்து, கண்டானபுதும் வராட்டிநூறு கவனமுடன் போட்டு வரசெந்தூரிக்கும், தண்டான புடமதும் பத்துபோடு தாக்கானசெந்தூரிக்கும், தண்டானபுடமதுவும் பத்துபோடு தாக்கான செந்தூரம் சிவப்புகாணே. 577

காணவேசெந்தூரமென்னசொல்வேன்கடிதானரசமதுதான்மடியுமட்டும், தோணவே புடமதுவும் செப்பக்கேளு துறையுடனேசாரமென்றசெயநீர் தன்னால், மாணவே தானரைப்பா யாறுசாமமமாற்கமுடன்பில்லைதட்டிகாயவைத்து, ஊணவே ஒட்டிலிட்டுச்சிலைசெய்து வுத்தமனே நூறெருவிற்புடந்தான்போடே. 578

போட்டவுடன் செந்தூரமருணன்போலாங்பொங்கமுடனிதிற் பத்துபுடந்தான்போடு, நீட்டமுடன் செந்தூரங்குற்றம் நீங்கநிலை யான சுல்லிதளையடைக்கும்பாரு, தாட்டிகமாய் பரிட்சிக்கவிபரங் கேளு தகைமையுடன் மண்பாண்டந்தன்னை வாங்கி, மாட்சிமையாய் பாண்டத்தில் துவாரமிட்டு மாட்டா தொட்டியென்ற பாண்டம் வையே. 579

வைக்கவே தொட்டியென்ற பாண்டந்தன்னில் மன்னமனேசில் லியென்ற பாண்டந்தன்னை, வைக்கவேசலம்விட்டு செந்தூரத்தை மயங்காமல் பணவிடைதான் பாண்டத்துள்ளே, வைக்கவே செந்தூ ரம் போட்டபோது வளமான துவாரமதுவடையுமபாரு, வைக்கவே செந்தூரம் பரிட்சைகாட்டி மாட்டடாரோகமென்ற பிழிவுதானே.

இனிவானநீரிழிவுமது மேகத்தான் யெழிலானமேகமது யிரு பத்தொன்றும், பழியாமலனுபான மெதிலுண்டாகும் பறக்குமடா ரோகமென்ற கசரோகம்போம், வழியானசெந்தூரம்பரிட்சைகாட்டு மயங்காமல் ராசரிடம் சென்றுநீயும், சுழியானசுழிமுனையும் வாசிப் பார்த்து சுந்தரனே வடகலையில் சென்றிடாயே. 581

சென்றுமேராசனிடஞ் சென்றுநீயும் சிறப்புடனே செந்தூரம் பரிட்சைகாட்டி, குன்றியதளவாகத் தான்கொடுத்து கொற்றவற்கு பத்தியமுமில்லாமலுன், வென்றுமே யவரிடத்தில் பிணிகள்தீர்த்து வேணவுபசாரமுடன் நிதியும்பெற்று, நன்றவுடன்சோடசோ வுபசா ரந்தன்னால் நாயகனே தண்டிகையுந் தருவார்பாரே. 582

தானேதான் சென்றவிடஞ் சிறப்புமுண்டு தாரணியில் மாந்த ரெல்லாம் பிரமைகொள்வார், வேனைசித்துமுனி ரிஷியென்பார்கள் வேதாந்த சித்தாந்த குருவென்பார்கள், கோனைதத்துவத்தில் கட ந்தஞானி கொற்றவர்க்கு வுகந்ததொரு மகத்துவேன்பார், தேனை மனோன்மணியும் கடாட்சிப்பாளே தேர்வேந்தராப ரெல்லாம் தியங் குவாரே. 583

தியங்குவாராசமுடி மன்னரெல்லாம் திறமையுடன் கைகண்ட பாண்டியன்தான், மயங்குவார் பூதலத்தில் ராசயோகன்மானிலத்தில் தன்வந்திரி யிவனென்பார்கள், தயங்கவேவகத்தியனவதாரன்தான் தாரணியில் யிவன்போல சித்தனுண்டோ, பயங்கமுடன் பலபலவா ய்ச் சொல்லிக்கொள்வார் பூதலத்தில் நீயுமொருசித்தனமே. 584

சித்தர்களுமுனைக்கண்டு பிரமிப்பார்கள் ;சிறப்புடனே வுந்தனு க்கு யின்னஞ்சொல்வார்,பத்தியுடன் ஞானவுபதேசஞ் சொல்வார்

பாகமுடன் கைமுறையு மனந்தஞ்சொல்வார், முத்திபெறும் வழி தனையே காட்டுவார்கள் முயலானசின்மயத்தி லிருந்துகொண்டு, சத்தியத்தை மறவால் தருமவானுல் தாரணியிலென்றுலுந் தழைப்பாய் தானே. 585

உப்புக் கட்டு.

தழைக்கவேயின்ன மொருகருமானங்கேள் தாரணியில் மானிடர்கள் செய்யமாட்டார், பிழைக்கவே வேண்டுதற்கு யின்னஞ்சொல்வோம் புகழானகல்லுப்பு சேர்தாஞென்று, முழைக்கவே குழுக்கல்லில் தன்னிலிட்டு முபற்சியுடன் தானரைக்க விபரங்கேளு,மழைக்களிலே பூர்க்குமந்தகாளான்தன்னை மாற்கமுடன் கொண்டுவந்து சலத்தை வாங்கே. 586

வாங்கியேசலமென்னுஞ் செயநீராலே வளமையுடன்ருனரைப்பாய் பத்துநாள்தான், தூங்கியேதிரியாதே மைந்தாபாரு துரையுடனே மைபோலவரைத்துமேதான், ஏங்கியேபோகாமல் பில்லைதட்டி எழிலாகரவிதனிலே காயவைத்து,ஒட்டியேஒட்டிலிட்டுச்சீலைசெய்து வுத்தமனே கோழியென்ற புடத்தைப்போடே. 587

புட்மதுதாறிய பின்னெடுத்துப்பாரு புகழானகல்லுப்புக்கட்டிப்போகும், திடமுடனே பின்னுமந்த செயநீராலே தீவிரமாயதான் ரைப்பாய் நாலுசாமம், தடமுடனேமைபோல யரைத்துபாலா சார்புடனே பில்லைதட்டி காயவைத்து, மடமுடனேவோட்டிலிட்டுச்சீலை செய்து மயங்காமல் முன்போல புடத்தைப்போடே. 588

போடவேபுடமது தாறிப்பின்பு பொங்கமுடன் றுனெடுத்து பார்க்கும்போது, நீடவேபற்மது யென்னசொல்வேன் நிலையானநீருக்குமனலுமேகா, கூடவேபின்னுமந்த செயநீராலே கூட்சமுடன் பத்துபுடந் தீர்ந்தாயானல்,தேடவேபற்பமது யென்னசொல்வேன் தேசத்தில் கிட்டாது சிவயோகிக்கே. 589

சிவயோசி பொய்த் தன்மை.

சிவயோகியென்றுலே மெத்தவுண்டு சிவன்தனையே கண்டவர் போல்வார்த்தை சொல்வார், தவயோகிபோல் ஒருவேஷம் பூண்டு சர்வகலையறிந்ததொரு ஞானிபோல், பவங்கண்டரிஷியென்று பெயருக்கொண்டு பாரினிலே பசப்பியல்லோ பொருள்தான்கொள்வார், சவம்போல மூச்சிதனை யடக்கிக்கொண்டு தாரணியில் பிர்மைக்கொள்ள நடப்பார்தாமே. 590

தாமானபற்பத்தை செய்யமாட்டார் தாக்கானசருக் குருவைக் காணமாட்டார், பேமானிபோல வெகுபேச்சிசொல்வார் பேச்சிக்கு

முன்பாகபாட்டு சொல்வார், சாமானிய புருஷனென்று வார்த்தைச் சொல்வார் சாற்றலுடன் தூஷணைகள் மிகவுஞ்சொல்லுவார் நாமான சாத்திரங்க ளதிகம்பேசி நாணியே தலைகுனிந்து நடுங்குவாரே.

நடுங்குவார் பற்பத்தின்னேர்மைகாணார் நாட்டிலேயாம் கயிடை வளமையப்பா, அடுங்கவேபற்பத்தை கண்டாராய்ந்து அப்பனேநா முரைத்தோ மவனியோர்க்கு, தடுக்கவேபற்பத்தை செம்பிலீய சண்ணுமே ஆகலென்ற நாற்றமபோகும், ஒடுங்கவேபத்துக்கு ஒன்றுதா னுமுத்தமனை குருதனையே தாக்கிடாயே, 592

தாக்கவேரவிதானுங் கட்டிப்போகும் தகையையுடன் செமபது வுமூறலேகி, நோக்கமுடன் செம்பதுவும் வரணங்காட்டும் நேராகவ சம்பு நிகர்வெள்ளிசேர்த்து, பாக்கவேவந்திடைக்குத் தங்கஞ்சேர்த் துப் பாண்மையுடன் தானுருக்கி யெடுப்பாயானால் தூக்கமுடன்மா ற்றதுவு மிகவுமாகி துப்புறவாய் தங்கமது காணும்பாரே. 593

காணவேபற்பத்தை யனுபானத்தில் பணிவிடைதான் மண்டல ங்கள் கொண்டுவந்தால், தோணவே குன்மமென்ற தெட்டும்போகும் தோற்றுதவாய்வென்ற தெண்பதும்போம் காணவே பாண்டுவகை யாறுந் தீரும்நாடாது சூலைபதினெட்டும்போகும், வேணவேமகோத ரம் பீலிகையும்போகும் விருப்பமுடன் வயிற்றுவலி விம்மல்போமே.

போமேதான் குடற்பிறட்டால் வாய்நீரூறல் குடல்வாத மனுர் வாதம் பட்சவாதம், ஏமேதான் கண்டவலிகவுசகட்டி வீக்கமுடன் நீரும்பல் விக்கல்போகும், தேமேதான் பித்தமென்றநாற்பதும்போம் திரளான மலட்டுவலி குடைச்சல்தீரும், நாமேதான் சொன்னபடி யுப்பின் மார்க்கம் நாதாக்கள் சொல்லவில்லை நாம்சொன்னோமே.

சொன்னோமே சித்தர்முனி சித்தர்தாமும் சூட்சாதி சூட்சம தைமறைத்துப் போட்டார், என்னைப்போலுப்பினிட மார்க்கந்தன் னைஎடுத்துரைத்தார் நாதாக்களாருமில்லை, தன்னைப்போல் வெகுளிய தாய் சொல்லிப்போட்டு தாறுமாறாகவல்மலா மறைத்துப்போட்டார் இன்னம்வெகு கைமமைப்பு கண்டுதேர்ந்து எடுத்துரைத்தே னுப்பி னிடமார்க்கந் தானே. 596

தானனவுப்புதன்னைக் கொண்டபோது தாக்கான்தேகமது கற் றுணநும், கோனனையெனதையர் காலாங்கிநாதர் குருபதத்தையான்

முடன் பரணைக்குள் பதனம்பண்ணு, கொல்லவே தங்கமது களஞ்சி யொன்று கூரானபதங்கமது சரிநேரொக்க, மெல்லவே மூசைதனி லடைத்துமைந்தா மேன்மையுடன் சில்லிட்டுச் சீலைசெய்யே. 603

செய்யவேசீலையது வலுவாய்செய்து செப்பமுடன் சரவுலையில் வைத்தூது, பையவேதியாரி எடுத்துப்பின்பு பக்குவமாய் மூசை தனை யுடைத்திப்பாரு, மெய்யானயேமமது செப்புமாகும் மேன்மை யுடன் செம்புதனையெடுத்துப்பாலா, துய்யவேபதினாலுக் கொன்று சேறு துப்புரவாய் மாற்றுறுகாணுந்தானே. 604

காணவென்றால் வாதவித்தைலகுவிலாச்சேசா கண்டவர்கள் விண் டவர்களாருமில்லை. தோணுதசாக்கெடுத்து ஊதியென்ன தொல்லுல கில் கேட்டவர்கள் கோடாகோடி,சாணை கைப்பொருள்போல்வாய் க்குமோசொல் சண்டாளதுரோகிகட்கு வாய்க்காதன்று, வீணைகத் தானலைந்து சுட்டுகெட்டு வீணிலேமடிந்தவர்கள் கோடியாமே. 605

லிங்கக்கட்டு.

கோடியாமின்னமொரு கருமானங்கேள் கொட்டினேன் வாத மென்றகட்டைதானு', தேடியேயலைந்தாலுங் கிட்டுமோசொல்தெளி வான லிங்கமதுகளஞ்சிபத்து, வாடியேதிரியாதே மன்னுகேளு வள மாகச் சொல்லுகிறேன் லிங்கப்போக்கு, நீடியேபாவையர் மூன்றுநா ளுசினைவாக முழுகிடவே யூறப்போடே. 606

போடேதான் மூன்றுநாள்சென்றபின்பு பொங்கமுடன்தானெ டுத்து தேனில்தானும், நீடவேமூன்றுநாளூறப்போடு அப்பனேலிங் கமது சுத்தியாச்சு, கூடவேலிங்கமதை வின்னுமப்பாகுமுறவே வெள் ளுள்ளிச் சாற்றினாலே, ஆடவேமூன்றுநா ளூறப்போடு அப்பனே லிங்கமது சுத்தியாச்சே. 607

ஆச்சென்று விடுகாதே மன்னுகேளு வப்பனலிங்கமதை டுயடு த்துக்கொண்டு, பாச்சலென்ற யெரிகாலன்பாலினாலே பாங்குபெற நாற்சாமஞ் சுறுக்குதாக்கு, காச்சலுடன் லிங்கமதுகட்டிப்போகும் கருவான லிங்கமதுவேதையாகும், பேச்சில்லைவவதைமுகம் யாருங் காணார் பேரானலிங்கத்தின் போக்குதானே. 608

போக்கான லிக்கத்துக் குறுதிசொல்வேன் பொலிவான வெள் ளியது யாறுமாறும், தாக்கானசெம்பதுவும் நாலுமாகும் தகைமை

யுடன்ருனுருக்கி குருவொன்றிய, தூக்கான சீரையுடனே ப ரங்கா ணும் துறைதுறையோடும் முறையோடும் ஆதிப்போடு, காப்பான வெள்ளியது நிற்கும்பாரு கனகமதுமாங்றதுவு மாறுமாமே. 609

ஆருனமாற்றதுவுமிகவுமாகி அப்பனேபுடததுக்கு வுறுதிதங் கம், வாருனவாரடித்து புடத்தைப்போட வளமையுடன் தங்கமது யிறங்கும்பாரு, கூருனதங்கமது யென்னசொல்வேன் சொற்றவனே சிவயோகி முறுதிகாண்பான், நேரானதங்கமது சிறவியென்பார் நேர் மையுடன் செய்பவனே வாதியாமே. 610

வாதியாமென்றதற்கு வகுப்புகேளு வாகானலிங்கமதை கொடு க்கக்கேளு, சோதியாமேனியது சுரமுங்கண்டால் துப்புரவாம் சன் னிமுதல் வாயுபோகும், பாதிமதிசடையணிந்த தம்பிரான்மேல் பத் தியுடன் சத்தியமாய் சொல்லிட்டேனே. 911

## பூரக்கட்டுவேதை.

சொல்லவே பூரமென்ற கட்டைதானும் சூட்சமுடன் தாமுறை ப்போமைந்தாகேளு, வெல்லவே பூரமது கொண்டுவந்து வேகமுடன் முலைப்பாலினூறப்போடு, கொல்லவேமூலியது கேளுமைந்தா கொடி தானவாடுதிண்ணு மூலிதானும், புல்லவேசுறுக்குதா னுனுசாமம் புகழுவேகான் கொடுக்க விபரங்கேளே. 612

கேளேதான் மற்ருநாள் பின்னுங்கேளு கெடியான யிண்டிலை யுஞ்சாமம்நாலு, தாளேதான்பிரட்டியதை சுறுக்குதாக்கு சாங்கமுட ன்கட்டியது யிறுகிக்காட்டும், பாளேதான்போகாமல் தைவேளைச் சார் பாகமுடன்பின்னுமது சாமம்நாலு, வீளேதான் சுறுக்கிடவே பின்னுங்கட்டும் வேதாந்தத்தா யினதுகடாட்சந்தானே. 613

தானுனபூரமது சாற்றக்கேளு தயையுடனே காரமென்ற படிகா ரந்தான், மானுனபூரத்துக்கிரட்டிமைந்தா மன்னவனே வாறுவகை செயநீர்தன்னல், பானுனவெண்ணெயதுபோலேயாக்கி பாலகனேபூ ரத்துக்கங்கிபூட்டி, கோனுனகவசமது வலுவாய்ச்செய்து கொற்றவ னேரவிதனிலே காயப்போடே. 614

போடவேசீலையது காய்ந்தபின்பு பொலிவாகப்பத்தெருவிற்புட த்தைப்போடு, நீடவே புடமதுவுமாறிப்பாரு நித்தமுடன் பூரமது பொருமிக்கட்டும், கூடவே கட்டிதனை யெடுத்துக்கொண்டு கோளாறு

நேராமல் சட்டிக்குள்ளே, நீடவேயுப்புதனை சட்டிக்குள்ளே நிறைய வேபாதி நடுமையம்வையே. 615

வைக்கவேயேனுமந்த வுப்பைக்கொட்டி மறவாமல் மேற்சட்டிக் கொண்டுமூடி, துப்புரவாய்சிலையது வலுவாய்ச்செய்து துடியானவானுகையி லெரிப்பாயப்பா, தப்பாமல்சாமமது எட்டுசாமம் சாங்கமுடன்றுணெரிப்பால் பான்மையாக, குப்புரவாயாறியபின் னெடுத்துப்பாரு குணமானபூரமது பற்பமாச்சே. 616

ஆச்சென்று விடுகாதேயன்பாய்கேளு அப்பனே வெள்ளியது ஏழுமாகும், மாச்சலென்ற செம்பதுமுன்றேயாகும் மகத்தானகுகை தனிலேயுருக்கியப்பா, காச்சலுடன் பத்துக்குலன்றுபூரம் கருவாகத்தானுருக்கி கொடுத்துபாற்க, பேச்சொன்று மில்லையப்பா பொன்னேயாகும் பொன்னவனே மாற்றதுவு மாகும்பாரே. 617

பாரேதான்கரியோட்டி லூதிப்போடு பாங்கானசெப்பதுவும் நீங்கியேதான், நேரேதான் வெள்ளியதுஎடைதானிற்கும் நேர்மையுடனிரண்டுக்கோ தங்கஞ்சேர்த்து, வேரேதான்வாரடித்து புடத்தைப்போடு வாகானதங்கமதுயுறங்கும்பாரு, சீரேதான் பிறப்பென்ற தங்கமப்பா தேசத்திற்கிட்டாது புண்ணியற்கே. 618

புண்ணியததாலிவ் வேதைவாய்க்குமல்லால் புகழானபூரமென்றபற்பந்தன்னை, திண்ணமுடனுறுமாற்று மாணிக்கமப்பா திறமாக மட்டமென்ற பொன்னுமாகும், வண்ணமுடன்தகடடித்து களஞ்சியப்பா வாகுடனே குன்றியதுவுமீராலே,வண்ணமுடன்தான்குழைத்து தடவிப்போடு தகைமையுடன் மாற்றதுவு முயருங்காணே.

காணவேபூரமது குன்றிதானும் கருவாகத்தானெடுத்து வனுபானத்தில், தோணவேகொண்டாக்கால்வாய்வுபோகும் தோற்றமுடன் மேகமென்ற திருபதும்போம், வேணவேசூலையொடு விம்மல்போகும் மிக்கானவயிறுவலி பொருமல்தீரும், சீனமுடன்வக்கினியாமந் தந்தீரும் சிறப்பான குன்மமுதல் சொரிகள்போமே. 620

போகுமேகசரோக மெல்லாம்போகும் பொல்லாத சயரோகமேகும்பாரு, ஏகுமேசில்விஷபாகமனைத்தும்போகும் யெழிலானபாண்டுமுதல் கசிவுபோகும், சாகுமேவீக்கமுதல் ரணங்கள்போகும் தாழ்வானரோகமுதல் மூலம்போகும், வேகுமேபுணிகளெல்லாஞ் சடலம்விட்டு வேகமுடன் தீருமென்று வரைந்திட்டானே. 621

## பஞ்சபூதசெந்தூரம்.

வறைந்திட்டேன் பஞ்சபூதம் சொல்லக்கேளு வகையானலோகமது வஞ்சுங்கூட்டி, துரைந்திட்டேன் தங்கமது ஒன்றேயாகும், துறையான வங்கமது வொன்றேயாகும், பரைந்திட்ட செம்பதுவுமொன்றேயாகும் பாலகனே யிரும்பதுவு மொன்றேயாகும், கறைந்திட்ட நாகமது நான்கேயாகும் கருவானலோகமது வஞ்சுங்கூட்டே.

கூட்டியேதானுருக்கி உடுத்துப்பாரு கூறுவேன்கிராசமது சாற்றகேளு, தாட்டிகமாயரிதாரம் களஞ்சியாறு தாக்குவாய்கிராசமது தன்னிலீவாம் வாட்டமுடன் மளங்கமது போலேயாகும் வாகானகளங்கமது சிவப்புசெய்ய, மாட்டிமையாய் சூதமென்றராஜா தன்னை மயங்காமல் கெந்தியது ஒக்கக்கூட்டே. 623

கூட்டியேசெந்தூரம் செய்யக்கேளும் குறிப்பான பாண்டமது கொண்டுவந்து, நாட்டமுடன் வப்புதனைக்கீழ்மேலிட்டு நளினமுடன் நடுமையம்காரமிட்டு, வாட்டமுடன்கெந்தியது மேலேபோட்டு வளமாக நடுமையம்சூதமிட்டு, தீட்டமுடன்மேலுமந்த வுப்பைக்கொட்டி திறமாக மேல்மூடி சீலேசெய்யே. 624

செய்யவேரவிதனிலே காயவைத்து சிறப்பாகவாலுகையி னடுப்பிலேத்தி, உய்யதேதீமூட்டு எட்டுசாம முத்தமனேதா னெரிப்பாம் மைந்தாகேளு, பையவேயாறின பின்னெடுத்துப்பாரு பாகமுடன் செந்தூரமாகுமப்பா, தொய்யவே செந்தூரங்க ளங்குபாதி துறையோடு முறையோடு மரைசுதிடாயே. 625

அரைக்கையிலேதுப்பையென்ற பூண்டினாலே அப்பனேகாற்சாமரைத்தபோது, நிரைக்கையிலே மனம்போலாகும்பாரு நேர்மையுடன் ரவிதனிலே காயவைத்து, திரக்கமுடன் கல்வத்திற்பொடியாய்ச்செய்து திறமுடனே காசியென்ற குப்பிதானுர், வரைக்கமுடன் குப்பிக்குச் சீலேயேழு வாகுடனே வாலேவிட்டுச் சீலேசெய்யே.

சீலேயதுசெய்துபின்பு பின்னுங்கேளு செழிப்புடனே மருந்தையெல்லாங்குப்பியிட்டு, வாலேயென்று மனோன்மணியை தியானங்கொண்டு மறவாமல்மாக்கல்லு கொண்டுமூடி, பாலேயுடன் சட்டிதனில மணல்தான்கொட்டி பாலகனேநடுமையம் குப்பிவைத்து, ஆலேயெள்ளும் வாலுகையிலடுப்பிலேற்றி வப்பனேயேழுநா ளெரித்திடாயே.

எரிக்கையிலேசெந்தூரமருணன்போலா மெழிலானமுருக்கன் பூநிறப்போலாகும், அரிக்கையுடன் செந்தூர மெடுத்துப்பாரு அப்பனே சீசாவிற்பதனம்பண்ணு, தரிக்கமுடன் வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று தயையுடனேதானுருக்கி குருவொன்றீய, பரிக்கமுடன்தானுக்கி வாங்கிக்கொள்ளு பாலகனேகரியாட்டி யூதிப்போடே.

ஊதிப்பார்மாற்றதுவு மாறுகாணு முத்தமனே தங்கமதுநாலுக்கொன்று, சாதியாங்குங்குமப்பூ தங்கமப்பா சார்புடனேதான் சேர்த்துவாரடித்து, வாதியாம்புடமதுவு மாற்றுகாணும் மகத்தானவேதையிதுவுறுதிதங்கம், பாதியாந்தங்கமது யிரண்டுக்கொன்று பாகமுடன்மாற்றுறசேர்த்துப்பாரே. 629

சேர்க்கையிலே மாற்றதுவுஞ் சிவந்தபொன்னும் தெரியானவர்ணமது வதிகங்காட்டும், பார்க்கையிலேபிறவியது பிரவிப்பொன்னால் பாரினிலைநாதாக்கள் ரிஷிகள்வேதை, தீர்க்கமுடன் கருவாளிச்செய்வான்பாரு தீரமுடன்மற்றொருவர் செய்வாரோதான், மார்க்கமுடன்காலாங்கிபாதம்போற்றி மன்னவனே பாடிவைத்தேன் போகர்தாமே. 630

தாமானபாகமதுபாருஞ்செய்பார் தாரணியில் புத்தியுள்ளான் செய்வான்கண்டீர், சாமானவாதவித்தை வதீதவித்தைசாங்கமுடன் யோகவான்காணும்வித்தை, வாமானஞானவான் சிவயோகிக்குவாகுடனே பலிக்குமல்லால் மற்றோர்க்கில்லை, தூமானமின்றிலார்க்குதவுமோசொல் துப்புரவாய்வித்தையது பலிக்காதாமே. 631

பலிக்காதுகாமிகட்கும் கர்மிகட்கும் பாங்குடனே பாவியென்ற சண்டாளர்க்கும், சொலிக்காதும்யகமென்ற வித்தையப்பா சூட்சாதிசூட்சத்தைக்காணமாட்டார், ஒலிக்கவேபூரணத்தைமனதிலுன்னியுத்தமனே யெந்நாளுஞ்சிவயோகம்பார், கெலிக்கவே பிராணாயந்தன்னிற்சென்று கெவனமுடன் குளிகைக்கு வழிதான்தேடே.

தேடவேகுளிகையது பூண்டுகொண்டு தேசத்தில் வித்தையெல்லாங்கண்டுபாரு, நாடவேயிம்மருந்தைமைந்தாபாரு நளினமுடன்நெய்தேனிற்கொண்டுவந்தால், ஊடவேமேகமென்ற திருமதும்போமுத்தமனேயீளையது காசம்போகும், பாடவேபாண்டுவகை யாறுந்தீரும் பாங்குடனேகுன்மமெட்டுந் தீரும்பாரே. 633

தீருமேபீலிகையும் கவுசிக்கட்டி தீங்குசெய்யுஞ்சூலையதுவிட்டுப்போகும், கூருடனேவாயுவென்ற தெண்பதும்போம் கொடிதானசயமுதலுமகன்றுபோகும், நேருமேமூலமுதல்பவுத்திரம்போம் நெடி

தான மந்தாரகாசம்போகும், பாருமேமேல்மூச்சு வாதம்போகும் பட்சமென்ற வாதமது கழன்றுபோமே 634

கழன்றுமேபோகுமது சிலேத்மந்தானும் கண்ணிலுள்ளவியாதியெல்லாங்கதிகெட்டோடும், கழன்றுமேதேகமதுகற்றாணுகும்தகைமையுடன்யெந்நாளு மிருக்கலாகும், பழன்றுமேசமாதிக்கு ளிருக்கலாகும் பாரினிலேயீயுமொரு சித்தனுவாய், அழன்றுமே போகாதே வீண்போகாதே அப்பனே தேகமதுகற்றாணுமே. 635

கல்லானதூணதுபோலாகும்பாரு கருவாகவின்னமொரு கருமானங்கேள், புல்லானவிருட்சமது சொல்லக்கேளும் புகலரிய மேருவுக்குவடபாகத்தில், கல்லானசித்தர்முனி வாசஞ்செய்யும் காடானகானென்ற குகைதானுண்டு, செல்லானபுத்துகளுமனேகமுண்டுசெயலானகாணுறு வோடையுண்டே, 636

சோதிவிருட்சங் கண்டது.

உண்டானவிருட்சமது மென்னசொல்வேன் உத்தமனே கானகத்துசோதியப்பா, திண்டானமரமதுதான் ரிஷிகள்சக்கம் திறனுடனேயம்மரமுமெத்தவுண்டு, செண்டானபுஷ்பமது நீலவன்னம் செகசோதிநீலமப்பா கூறப்போமோ, வண்டானவண்டுகள்தான் கூட்டம் பாரு மகத்தான மரத்தினிடமேலேதாமே. 637

தானுனவண்டதுவுங்கீதம்பாடும் தாக்கானகீதமது வோசைகாட்டும், கோனுனகுருநாதர்சித்தர்தாகும் குடியிருப்புயெந்நேரம் விருட்சந்தன்னில், தேனுனமுனிகூட்டமெத்தவுண்டு தெளிவான கானகத்தில்விருட்சந்தன்னை, பானுனபலரிஷியுங் கண்டுதேர்ந்து பாரினிலே சித்தர்களுக்குரைத்தார்தாமே. 638

உரைத்தாரேசித்தர்களுங்கண்டுதேர்ந்து உத்தமனேமுனிகளுக்குரைத்தார்தாமும், நிறைத்தாரேசோதியின்றன் மகிமையெல்லாம் நீனிலத்தில் கண்டறிந்துவுளவுசொன்னார், வரைத்துமேசித்தர்களுங் கண்டாருய்ந்துவளமுடனேமையொன்றுசெய்தார்பாரு, முறைப்படியேமையதனைசொல்லக்கேளுமுத்தமனே மாணுக்கள்பிழைக்கத்தானே

சோதிவிருட்ச மை

தானுனவின்னமொரு கருமானங்கேள் தயவுடனே சொல்லுகிறேன்மைந்தாபாரு, கோனுனகமலமுனி சொல்லவில்லை குவலத்தில்

சித்தர்களுமநேகஞ்சொன்னார், வேனைவென்னூல்போலாருஞ் சொல்வார் தேசத்தில்மானிடற்குதெளியாய்ச்சொன்னேன், யானைவிருட்சத்தின்பட்டைதானும் பாகமுடன்கொண்டுமே தயிலம்வாங்கே.

வாங்கவென்றால் தயிலமதுசொல்லக்கேளு வாகான மரவெட்டைசமனதாக, தூங்கியேதிரியாதே மன்னபொரு துறையோடுமுறையோடு செப்பக்கேளு, வாங்கியேகுழித்தயில மிறக்கிக்கொண்டு மார்க்கமுடன் ததிலரைக்கவிபரங்கேளு, ஏங்கியேபோகாமல் தயிலந்தன்னில் யென்மகனேபுழுகோடு உரமுங்கூட்டே. 641

கூட்டியேசூதமுடன் குழியானைக்கண்கொ காற்றவனேகரும்பூனை கண்ணுதானும், மாட்டியேதேவாங்கு கண்ணுங்கூட்டி மயங்காமல் சுழல்வண்டுதானுஞ்சேர்த்து, தாட்டிகமாய் கஸ்தூரிபூரந்தானும் தான்கலந்து தயிலமதிலரைப்பாயப்பா, வாட்டமுடன் றானரைக்கமை போலாகு மன்னவனே மைபோலேயாகும்பாரே, 642

பாரேதான்கையெடுத்து பதனம்பண்ணு பாகமுடன் போக்குவகைசொல்லக்கேளு, நேரேதான்மையதனைகுன்றிதானும் நேர்மையுடன்வுள்ளங்கை தன்னில்வைத்து, தீரேதான்மனோன்மணியை தியானித்தேதான் திறமுடனேமையனைப் பார்க்கும்போது, ஊரேதான்பூமிதளமுள்ளதெல்லா முத்தமனேகண்ணுக்கு தோற்றுந்தானே.

தோற்றமுடன்மையதனை பார்க்கும்போது தோன்றுமே பாதாளநிதிகளெல்லாம், வேற்றுமையாய் நாண்பிக்கும் நிதிகளப்பா வெவ்வேறாய்பிரிவுமுத லுளவுகாட்டும், போற்றமுடன்மையனை லலாடமீதில் பொங்கமுடன்றான் தீட்டிவருவாயானால், ஏற்றபொருளுந்தனுக்கு கண்ணிற்றோன்றுமென்மகனே புத்தியுள்ளான்செய்வான்தாமே

தாமானமையதனைலலாடம்பூண்டி தாரணியில்ராகரிடஞ்சென்றயானால், காமானமாகவல்லோ வுந்தனுக்கு கடாட்சித்துமரியாதை யாவுஞ்செய்து, வேமானமாகவல்லோ நிதியுந்தந்து விருப்பமுடன் சோடசோபசாரஞ்செய்து, தீமானமாகவல்லோ சதாகாலந்தான் திகழுடனேயேமனுக்குமுன்னிற்பாரே. 645

நிற்கையிலேவுந்தனுக்குவசியமாகி நேர்மையுடன் சரிபீடம்தான்கொடுப்பார், வற்கமுடன்கேட்டதெல்லாந் தான்கொடுத்து வாகுடனேநாடுவளம்பூமியீவார், துற்கைமுதல் காளிபலபிடாரியாவும்தும்

புரவாயுந்தனுக்கு நடுங்கும்பாரு, அற்பமென்றுநினையாதே மையின் வேகம் அப்பனேநாமுரைத்தோ முண்மையாரே. 646

இராக்காலம் ஆகாயத்தில் மண்டலங்காண்பது.

உண்மையாமின்னமொரு கருமானங்கேள் உத்தமனே சொல்லுகிறேன்மைந்தாகேளு, தன்மையாமையதனை எடுத்துக்கொண்டு தகைமையுடன் புருவத்தில்மைதான்தீட்டி, கண்மையுடன் வாகாஷம் பார்க்கும்போது கனிவாகவேழுமண்டலமுந் தோன்றும், பன்மையாமாகாஷவதிசயங்கள் பாங்குடனேமுன் தெரியும் பாருமேளார்க்கே.

பாரிலேவதிசயங்கள்காணலாகும் பரிதிமதிவருந்ததிகள் பார்க்கலாகும், சீருடனேசத்தலோகங்களெல்லாம் சிறப்புடனே கண்ணிற்குதோற்றுங்கண்டீர், தாருடனேயிதிகாசவித்தையெல்லாம் தாரணியிலென்னாளும் பார்க்கலாகும், கூருடனேகாலாங்கி நாதர்பாதம் குறிப்புடனேயான்வணங்கி கூறினேனே. 648

கூறினேன்பலநூலுங்கண்டாராய்ந்து கொப்பனேசுளுக்குமுதலுளவுபார்த்து, தேறினேன் கைபாகம் செய்பாகந்தான்தெளிவாகக் கண்டறிந்துயின்நூல்தன்னை, மாரியேபிழைப்பதற்கு வழியுஞ்சொன்னேன்மகத்தானவேதையிது துரையுஞ்சொன்னேன், மீறியேபோகாமல் விதியுஞ்சொன்னேன் மிக்கானகாண்ட மேழாயிரந்தனே.

தானனகாண்டமேழாயிரந்தான் தாக்கான கருக்குருங் காணலாகும், பானனமார்க்கமுத லறியலாகும் பாலகனே யின்னூல்போல் லாருஞ்சொல்லார், தேனனவின்னூல்தான் குருநூலாகும்தேர்ந்தெடுத்தேன் காண்டமதுசத்தகாண்டம், மானனமனேன்மணியாள்தேதேவிதானும் மகிழ்ச்சியுடன்மூள்கேட்டு மகிழ்ந்திட்டாளே. 650

சாதிலிங்கக்கட்டு செந்தூரவேதை.

மகிழ்ந்ததொரு சாதிலிங்கமின்னம்பாரு மகத்தானலிங்கமொருகட்டிவாங்கி, தகிழ்ந்ததொருகட்டிக்கு கடகங்கேளு தாக்கானதாளகமுஞ்சிலையும்கெந்தி, நெகிழ்ந்ததொரு யெரிகாலன் பாலாலாட்டி நேர்மையுடன் மூனரைப்பாயாறுசாமம், மகிழ்ந்துமேதானரைத்துக் கவசஞ்செய்து மார்க்கமுடன் சீலையதுவலுவாய்ச்செயசேய. 651

செய்யவேரவிதனிலேகாயவைத்து செம்மையுடன் கோருபதுப் புடமதாக, துய்யவேதீமூட்டிப்புடத்தைப்போடு துப்புரவாம் புடமதுதானாறிப்பின்பு, பையவேயெடுத்துப்பார் சாதிலிங்கம் பாகமுடன் கட்டியது வுருகிப்போகும், மெய்யுடனேகட்டியதுயெடுத்துமைந்தா மேன்மையுடன் செந்தூரஞ்செப்பக்கேளே. 652

கேளேதான்செந்தூரம் செயநீர்தன்னால் கெடியுடனே நாற்சா மம்சுறுக்குதாங்கு, வீனேதான்வீரமென்ற செயநீர்தன்னால் வேகமுடன்றான்கொடுக்க காரமேறி, தாளேதான்சட்டிதனில் மணல்தான் கொட்டி சாங்கமுடன் கட்டிதனைநடுவேவைத்து, மீளேதான் மேலுமந்தமணல்தான்கொட்டி விளங்கவேமேற்சட்டி கொண்டுமூடே.

மூடியேதானெரித்துயெட்டுசாமம் முனையானவாலுகையிலெடுத்துமைந்தா, நீடியேதீயாறியெடுத்துப்பாரு நேர்மையுடன்செந்தூரமென்னசொல்வேன், கூட்டியேசெந்தூரம் பதனம்பண்ணு கொற்றவனே வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று, வாடியேதிரியாதே மைந்தாகேளு மயங்காமல்கவயோட்டி ஊதிப்பாரே. 654

பார்க்கையிலே பொன்னதுவுமாற்றுகாணும் பாகமுடன்நாலுக்கோர்தங்கஞ்சேர்த்து, தீர்க்கமுடன்வாரடித்துப் புடத்தைப்போடு திறமானபொன்னதுவு மெட்டுமாகும், வார்க்கவேமறுபடியுமுருக்கியேதான் மறவாமல்செங்கல்லில் கம்பிசாய்த்து, ஆர்க்கவேதானெடுப்பாய்கம்பிதன்னை அப்பனேபிறவியது பொன்னுமாச்சே. 655

ஆச்சென்றுவிடுகாதே மைந்தாகேளு அப்பனே குன்றியிடைதேனிலுண்ண, மூர்ச்சன்றிவாசியது கீழ்நோக்கும் மூலமுதல்கபாலவரைவன்னிமீறும், காய்ச்சலுடன் சன்னிபதி மூன்றும்போகும் கடிதானவாயுவென்ற தெண்பதும்போம். காய்ச்சலுடன் பிறவீச்சுவுள்வீச்சேகும் நாடாதுநாவரட்சி நளினமாமே 656

நளினமாங்கவுசையொடு மேகம்போகும் நாட்பட்ட சுரமுதலும் நாடாதப்பா, நளினமுடன் முறைக்காய்ச்சல் கத்தியோடும் கபாலவலிமுகசன்னி காடேபோகும், பளினமதாயிப்பாகம் யாருஞ்சொல்லார் பாரினிலேசித்தர்களுமுனிவர்தாமும், மலினமுடன்பலநூலுங்கண்டாராய்ந்து மாற்கமுடன்பாடிவைத்தேன் காண்டமேழே.

ஏழானகாண்டமது பெருநூலாகும்யென்மகனேயின்நூல்போலாருஞ்சொல்லார். வாழானநூல்களெல்லாம் பார்த்துமென்ன பார்த்துமேவுள்ளுளவுமறிந்துமென்ன, தாழானபெருநூலேழாயிரத்தில் தாரணியிலுள்ளதொரு பொருள்களெல்லாம், நீழானநோயறிந்து கண்டாருய்ந்து நேர்மையுடன் பாடிவைத்தேன் பெருநூலாமே

லிங்கக்கட்டு.

பெருநூலாமின்னமொரு கருமானங்கேள் பெருமையுடன்மாணுக்கள் பிழைக்கவென்று, கருவானபிரமதண்டுச்சாறுவாங்கி கவன

முடன்ருனிடித்து பிழிந்துகொண்டு பருவானலிங்கமதுபலமும் பாக முடன் சுறுக்கதுதான் எட்டுசாமம், கருவானசட்டிதனில்கட்டிவை த்துசாங்கமுடன்சுறுக்கதுதான் தாக்கிப்பாரே. 659

தாக்கினபின்கட்டிதனை யெடுத்துப்பாரு தகமையுள்ள கட்டிய துயிறுகிக்காட்டும், நோக்கமுடன்கட்டிக்குபின்னுமந்த நுணுக்கமு ள்ளமூலிதனை கவசஞ்செய்து, பாக்கவேசீலையது வலுவாய்ச்செய்து பாகமுடன் ரவிதனிலேகாயவைத்து, நோக்கமன்றிதிரியாமல் மைந் தாகேளு சுந்தரனேமணல்மறைவில் புடத்தைப்போடே. 660

போடவேபுடமதுவுமாறிப்பாரு பொங்கமுடன்கட்டியதுவருக் குபோலாம், நீடவேகட்டிதனையதனப்பண்ணு, நீடானவெள்ளிசெம் பில் பத்துக்கொன்று, கூட்வேதருவதுதான் வருக்குதன்னில் ருமு றவேதான்கொடுத்து வூதிப்போடு, ஓடவேசெம்பதுவுமோடிப்போக வுத்தமனே கரியோட்டிலூதிப்போடே. 661

ஊதினபின்னெடுத்துப்பார் யென்னசொல்லேன் வுத்தமனே மாற்றதுவுமாறுகாணும், சாதியிலேபிறந்ததொரு பொன்னைப்போல சட்டமுடன்ருனிருக்கும் பசுமைமெத்த, வாதிகளோயிவ்வேதைகா ணப்போரூர் வையகத்தில் சித்தர்செய்யும்வேதையாச்சு, மாதிகளுயி ருந்தாலும்வேதைகாண்பான் மாநிலத்தில்விட்டகுறை வாய்க்கும் பாரே. 662

பாரேதான்சித்தர்களுக் குகந்தவேதை பாராளும்ராசர்களுமெ ச்சுவார்பார், சீரேதானிவ்வேதை சிடிகைவேதை சிறப்புடனேநாதா க்கள் கண்டவேதை, நேரேதான்நாலுக்கோர் தங்கஞ்சேர்த்து நேர் மையுடன் வாரடித்து புடத்தைப்போடு, கூரேதான்மாற்றதுவு மெ ட்டதாகும் குணமானபோகரிஷி கூறினேரே. 663

கூறவேமுடியாதுலிங்கப்போக்கு கொற்றவனே சன்னிசுரம் ச ன்னிவாதம், தீரவேவனுபானம்தன்னிலீய திசைகெட்டு யிசைகெட் டுதியங்கியோடும், மாறலென்னு முறைக்காய்ச்சல் மதிகெட்டோடு மயங்காதேமூன்றுநா ளருந்திப்பாரு, ஊரவேமேகமென்றநீருப்போ குமுத்தமனே சிவயோகம் வாய்க்குந்தானே. 664

தானனசிவயோகம் வாய்க்கும்போது தாழ்வானதேகமதுகற்றா ணுகும், வேணனமாசியது கீழ்நோக்காகும வேகமுடன் நரம்பெல் லாம்வலித்துகாட்டும், கோனனயெனதையாகாலாங்கிநாதர்குருபதத்

தைத்தான்வணங்கி சத்தகாண்டம், தேனனமொழிபோல தேர்ந் தெடுத்து தேவிபதமடிபணிந்து பாடினேனே. 665

கெந்தகத்தயிலம்.

பாடினேனின்னமொரு மார்க்கங்கேளு பாலகனே என்மக்கள் பிழைக்கவென்று, நீடியேபலநூலுஞ்சுளுக்கறிந்து நேர்மையுடன்யா முரைத்த்தயிலமப்பா, தேடியேபூவரசன்சேர்தாஞென்றுசிறப்பான கஞ்சாவின் விரைதானப்பா; வாடியேயலையாதே கிழங்குசொல்வேன் வளமானதாமரையின் கிழங்குதானே.

கிழங்கானவிரையுடனே கெந்திசேர்தான் கிளறியேகுழியம்மி தன்னிலிட்டு, பழங்கமுடன்தானிடித்து பாண்டமிட்டுப்பாகமுடன் பாண்டமதிற் சிலதுபோட்டு, தழங்கவேமேல்வாய்க்குச் சீலேசெய்து தகைமையுடன் குழித்தயிலமிறக்கிக்கொண்டு,வழங்கவேதயிலமதை பதனம்பண்ணு வளமையுடன்ரவிதனிலே தாக்குவாயே. 667

தாக்கவேதகடடித்துபூசிப்போடு தனியான செம்பதுக்குப்புட மேபோடு, நோக்கமுடன்செம்பதுவுமூரலேகி கெடிதானசெம்பதுவு மாற்றுகாணும், பார்க்கவேசெம்பதுவு மூன்றேயாகும் பாங்கான வெள்ளியது நான்கேயாகும், போக்கவேதானுருக்கி தகடடித்துப் பொங்கமுடன் ருன்போட மாற்றுமாமே. 668

மாற்ருனபொன்னதுவு மாறேயாகு மகத்தானதங்கமது மூன் றுக்கொன்று, நீற்ருனவிரண்டையுந்தான் ஒன்ருய்க்கூட்டிநிறையுட னே ருனுருக்கி மன்னுபாரு, கூற்ருனபொன்னதுவுமெட்டேயாகும் குணமானபசுந்தங்க மதிற்கிடாகும், தூற்ருனதயிலமது வேதிக்கும் பார்த்துறையானமுறையதுதா னதீதம்பாரே. 669

அதீதமாயித்தயிலங்கொண்டுபாரு அப்பனேகுஷ்டமது கடை கெட்டோடும், துதீதமுடன்மேகமென்றதிருபதும்போம், துலையாத கவுசையொடு பொருமல்போகும், வதீதமுடன்சூலையதுவிட்டேயோ டும்,வாகானகிரந்திமுதல் சிரங்குபோகும், கதீதமுடன்நரம்புவலி ரணங்கள்போகும், கண்ணொளிவுகாட்டுமது தயிலமாமே. 670

ஆமேதான்தயிலமது காயசித்தி அப்பனேதேகமதுகற்றாணு கும், காமேதான் காயாதிகற்பநூலைக் கவனமுடன்கண்டறிந்துபாட லுற்றேன், நாமேதான் சொன்னபடி சத்தகாண்டம் நாட்டோர்

பிழைக்கவென்று நவின்றிட்டேன்யான், வேமேதான் காலாங்கி பாதம்போற்றி விருப்பமுடன்பாடிவைத்தேன் காண்டமேழே. 671

ஏழானகாண்டமது யின்னங்கேளு யெழியான நடுக்காண்டம் நாலாங்காண்டம், பாழானதேகமதுக் குறுதிசொன்னேன்பாலகனே தத்துவமுமதிகஞ்சொன்னேன் நீழானவயித்தியமும் வாதஞ்சொன்னேன் நிலையானயோகத்துக் குறுதிசொன்னேன், தாழானசிவயோகமெளிதிற்சொன்னேன் தாரணியிலதிமென்ற வித்தைதானே. 672

அபினிசெம்புவேதை.

வித்தையாமின்னமொரு பாகம்கேளுவேடிக்கைசிமிட்டுவித்தைபோக்குசொல்வேன், சுத்தமுள்ளவபினியது பலந்தானொன்றுகயமானகெந்தகமும்பந்தானொன்று, துத்தமுடன்துருசதுவும்பலந்தானொன்று துடியானவீரமது பலந்தான்நாலு, கத்தபத்தின்ரேதனைவிட்டுயாட்டிக் கருத்துடனேவெழுகதுபோ லரைத்திடாயே. 673

அரைத்துமேசிமிழ்தனிலே பதனம்பண்ணு அப்பனேசெம்பதுதானெடுத்துக்கொண்டு, வரையுடனேசெம்புநிகர்மெழுகெடுத்துவளமாக தானுருக்கி கிராசமீவாய், குவறயாமல்செம்புருகிநிற்கும்போது குறிப்புடனேவரிசைபெறத் தன்னிலீவாய், நிறையுடனே செம்பதுவும் சுத்தியாச்சு நிலையானகளிம்பதுவு மேகலாச்சே. 674

ஆச்சென்றுவிடுகாதே யின்னங்கேளு அப்பனேசெம்பெடுத்து மூன்றுவெள்ளி, பாச்சவேசெம்பதுவுமொன்றேயாகும்பாலகனே தான்சேர்த்துவுருக்கிக்கொண்டு, மாச்சலென்றுயிடையாதேபின்னுமைந்தாமாற்கமுடன்தங்கமது ஒன்றுகூட்டி, பேச்சொன்றுந்தப்பாமல் வுருக்கிப்பாரு பேரானபொன்னதுவு மெழுமாமே. 675

ஏழானபொன்னதுவுமென்னசொல்வேன் என்மகனேவாரடித்துபுடத்தைப்போடு, ஆழானபொன்னதுவுமாற்றுமெத்த அப்பனே பிறவியது பொன்போலாகும், கூழானபொன்னதுவு மல்லகண்டீர் குணமான சித்தர்செய்யும்வேதையாச்சு, நீழானரிஷிமுனிவர்களுக்கு வேதைநேர்மையுடன் காண்பவனே சித்தனாமே. 676

சித்தனைப்பிறப்பதுவு மரிதேயாகும் சீருலகில் விட்டகுறை காணவேண்டும், பக்தியுடன் சிவசத்திஞானம்வேண்டும் பாருலகில் பெரியோர்கள் கிருபைவேண்டும், வெத்தியு டன் சின்மயத்தில்சொரு

பம் வேண்டும் வேதாந்தத்தாயினது வருளேவேண்டும், நித்திலங்கும் பதாம் புயத்தின் சூட்சங்காண நிலையான வாசிவழியறிவாய் தானே.

கெந்தகக் களங்கு.

தானனகெந்தகத்தின் மாற்றங்கேளு தயவானகெந்தகமும் களஞ்சியொன்று, வேனனதங்கமது களஞ்சியொன்று வெழிலானவேலனிட பிசினிதன்னல், பானனகெந்தகத்தின் மேலேயப்பா பாகமுடன்சுத்தியல்லோ வங்கிபூட்டி, தேனனதேனதுவுந் தானெடுத்து தெளிவுடனே காரமதை பொரித்துப்போடே. 678

போட்டுமே சாம்பிராணி பூரந்தானுங் பொங்கமுடன் களஞ்சியது செப்பக்கேளு, தாட்டிகமாய்தேனதிலே யரைத்துமைந்தா சாங்கமுடன் கெந்திக்குவங்கிபூட்டி, நோட்டமுடன் சுடராவி தீபந்தன்னில் நோக்கமுடன்ருன்கொளுத்தி யெடுத்துப்பாரு, வாட்டமுடன் கெந்தியது தங்கஞ்சேர்த்து வாகுடனே களங்கமது போலாம்பாரே.

பாரேதான்களங்கமது வுருக்கிப்பாரு பாகமுடன் பிரிதிவின்களங்குமாகும், சீரேதான்களங்கெடுத்து மன்னுகேளு, சிறப்பான வெள்ளிச்சம்பில் பத்துக்கொன்று,நேரேதான்ருனுருக்கி கொடுத்துப்பாரு நேரானமாற்றது மாறுகாணும், வேரேதான்கரியோட்டி யூதிப்போடு வெளுமையாம் பசும்பொன்போல் தோற்றுந்தானே. 680

தோற்றவேபின்னுமந்த பொன்னைத்தானும் தோராமல்வாரடித்துபுடத்தைப்போடு, மாற்றலென்ற திறைசவுடு களிம்புமேகி மன்னவனே பொன்னதுவும் பசுமைகாட்டும், நாற்றமென்ற செம்பதுவுங் கொஞ்சம் நிற்கும் நாயகனே புடத்துக்கு யேகாதப்பா, கூற்றனென்னும் வங்கமது கொடுத்துவூத கொற்றவனே சவளையது பசும்பொன்னுமே. 681

பொன்னனபொன்னுக்குச் சரிநோதங்கம் பூட்டடாயெடைக்கிடைதான் தங்கஞ்சேரு, மன்னுகேள்மாற்றதுவு மெட்டரையுமாகும் மகத்தான பொன்னதுவும், சிவப்புமெத்த, தென்பொதிகைதனிலவாழும் சித்தர்யாவும் தெளிந்துமே கெந்தகத்தின்மார்க்கங்கொண்டார், வின்னமில்லா பொன்னதுவும் சித்தர்வேதை விருப்பமுடன் பாடிவைத்தேன் காண்டமேழு. 682

வேதவியாசர் பாஷாணமெழுகு.

காண்டமாமின்னமொரு கருமானங்கேள் கருத்துடனே யாமுரைப்போ மாணுகேளே, தீண்டாதபாஷாணம் சேர்தான்வாங்கி திற

மானகொடிக்கள்ளிச் சார்தானப்பா, மாண்டுமேபாஷாண மெண்ணே போக மாற்கமுடன்சுருக்கதுவு மெட்டுசாமம், ஆண்டதுவும் நூறுவ யதானவேம்பு அப்பனேபட்டையது சீவிக்கொள்ளே. 683

கொள்ளவேபட்டையது தயிலம்வாங்கி கொப்பெனவே தயில மது சுறுக்குதாக்கு, விள்ளவேசுறுக்கதுவு மெட்டுசாமம் விருப்பமு டன்முன்கொடுத்து எடுத்துப்பாரு, மெள்ளவேகட்டியது புகையட ங்கி மேன்மையுடன் பாஷாணமிருகிக்காட்டும், தள்ளவே சிவனுரின் வேம்பதானும் சாங்கமுடன் சுருக்கிட்டு நீற்றிப்போடே. 684

நீற்றியபின்னுவியெல்லாம் வெளிபோகாமல் நேர்பாகச்சட்டியா ல்மூடிப்போடு, ஆற்றியபின் மருந்தெடுத்துக் காயப்போட்டு அப்ப னேமறுசீலைக் குள்ளேவைத்து, சாற்றியபின் முன்போல நீற்றுநீற்று சாதகமாய் பதினெருக்கால் நீற்றுநீற்று, மாற்றியபின்மருந்தெடுத்து அண்டோட்டிலிட்டு வளமாகமேல்மூடி சீலைசெயயே. 685

செய்திட்டுமைந்தெருவில் புடத்தைப்போடு திரமாகச்சவர்க்கா ரச்சுன்னமாகக், கொய்திட்டசித்தரெல்லாம் வழலைதன்னைக் குவிழ் ந்தபடி சொல்லாமல்மறைத்துப்போட்டார், உய்த்திட்டுப்பிள்ளைகள் தன்னைப்பார்த்து வுலகத்தோர் கரிகொள்ளகாகில்லாமல், எய்திட்டு ஏங்கியே வறுமைபூண்டு இறந்திறந்து போனவர்கள் கோடிதானே.

தானென்ற நூல்பார்த்துவுலகவாதி தனித்துமே மனம்புண்ணு ய்வெறுமையுற்று, வாவென்றவுலகத்தோர் சிரிக்கக்கேட்டுமருட்கொ ண்டபிசாசுபோல் வாயுலர்த்தி, ஊனென்ற சொத்துக்குமிட மில்லா மலுண்பாரை யுடுப்பாரை பார்த்துசங்கி, நானென்ற ஆணுவத்தால் கெட்டோமென்று நாய்போலதிரிந்து மண்ணுள் மாளுவாரே.

மாளாமலிருக்கவல்லோ வழலைதன்னை மறையாமல் சொல்லிவி ட்டேனேழாயிரத்துள்ளே, கோளானசீஷருக்கு நூலீயவேண்டாங் கொடுத்தாக்கால் ரவிகோடி நரகமெய்தும், தாளான என்னூலில் வழ லைதன்னைச் சாற்றினேனொருசொல்லுங் தவறில்லாமல், நாளானஅம் பரத்துக்கொப்பாய்ச்சொன்னேனு தாக்கள்பதமறியச் சொன்னேன் காணே. 688

காணப்பாபுடம்போட வழலைதன்னைக்கடுங்காரச்செயநீரில்தோ ய்த்துப்போடு, பூணப்பா ஏழுநாள் ரவியிற்போட்டுப் போரானசுன்ன

மென்றகுளிகையிலூது, தேணப்பா எடுத்துடனேபூப்போல் நிற்குந் தொடுகுறிபோல் சரக்கையெல்லாந் துடியாற்கொல்லும், வீணப்பா கெடுக்காதே என்னூலைப்பாரு வேதாந்தமாயிதைப் பூசிப்பாயே.

பூரச்சுன்னம்.

பூசித்துவழலையைத்தான் சுண்ணம்பண்ணு, புத்திகெட்டவாதிகளே மற்றொன்றுகா, நேசித்துவழலையினி லுப்பைக்கட்டு நிலைத்தபின்புபூரணத்தைச்சுன்னம்பண்ணு, ஆசிற்றுப்பூரத்தால் தாளகத்தைப்பண்ணு அதீதமாந்தாளகத்தநல் வங்கத்தைநீற்று, வாகித்து வாலைதனைப்பார்த்தாலாமோ வாதமென்னகொஞ்சத்திலாமோ சொல்லே.

சொல்லென்றவங்கத்தில் தூரிதெனைநீற்று தூரிசியினல் சிங்கிபண்ணுசூதங்கட்டு, மல்லென்றசூதத்தால் காயசித்தி மக்களேகெவனத்திலெட்டெட்டுஞ்சித்தி, அல்லென்ற கேழ்வியினல் வாதஞ்சுட்டு ஆற்றுமல்பொய்யென்று லென்னசொல்வேன், நில்லென்றுலெறிந்த கல்லும்நிற்குமோசொல் நிர்மூடவாதிகளே வழலைநீபாரே. 691

பாரென்றவழலையென்ற கன்னமொன்று பரிவாகச்சுன்னமொன்றுகூட்டியாட்டே, நேரென்றசலமாகுஞ் சலத்திநுள்ளேநேர்ப்பாகக்கற்பூரம்வாரியிட்டுக், காரென்றரவியில்வைத்துவுப்பாய்பண்ணிக் கடுகஜந்துகண்ணமதில் வைத்துஆற்ற, நூரெறமல்லிகைபூப்போலாஞ்சுன்னந் தூரிசானசாரயிடை சுன்னங்கூட்டே. 692

சாரநீர் வுப்புக்கட்டு.

சாரமிடசெயநீரும் வீரம்போட்டுதயங்காதகல்லுப்புச் சூடன்தானும், ஆரமிட்டவெடியுப்பு சீனக்காரம்ஐந்தையுந்தான் வகைக்குரண்டுபலமேகூட்டி, காரமிட்டசெயநீரு லரைத்துருட்டி கடுரவியிற் போட்டுவரதினந்தானேழு, தாரமிட்டசுண்ணும்புபோலேயாகுந்தயங்காதகுழம்புபோல் பண்ணிக்கொள்ளே. 693

பண்ணியதோர் குழம்புக்குள்பாறையுப்பு பலம்பததுநிறுத்தெடுத்துபாக்குபோல, ஒண்ணியதோர் குழம்புக்குள் பிசரிவாட்டஉற்றுநன்றுய்குழம்பையெல்லாம் பிரட்டிபோடு, கண்ணியதோர் தீயிற்குள்முதிமவாட்டி, நலமானவுவர்மண்ணும் கிளிஞ்சினீறும் கண்ணியதோரமுரிவிட்டுபிசைந்துகொண்டுகடுகவேகீழ்மேலுமடபோல்மூடே

மூடியேசட்டியிலேயிட்டுநன்றுய் முடிந்தபின்புஅன்பதெருவடுக்கிப்போடு, நாடியேகுளிர்ந்தபின்பு எடுத்துப்பாரு நலவான தங்கம்

போலிறுகிக்கட்டும், சூடியேகவசமெல்லாந் தள்ளிப்போட்டு துடியானகட்டுகொடி யிலையைவாங்கித், தேடியேபழச்சாறு விட்டரைத்து திறமாகக்கவசித்து புடத்தைப்போடே, 695

புடம்போட்டுவுப்புமணி பார்த்தால்மக்கள் பேருனமுத்துமணி போலக்காணும், விடம்போட்டசிவன்வந்து நிர்த்தஞ்செய்வார்வேதாந்தமாயியிங்கே யட்டசித்தியாவாள், தடம்போட்ட நிராதாரவெளியுஞ்சொல்வாள் சதாசித்தம்குருபதத்திற்சரணம்பண்ணி, வடம்போட்டுயுப்புபணிசெபித்தாலேயாமகத்தானசித்தியுமாமாட்டிப்பாரே.

## உப்புபாத்திரம.

மாட்டிப்பார்மெழுகாலே கிண்ணிபண்ணி மண்கட்டி மெழுகதனைதள்ளிப்போட்டு, ஊட்டிப்பாருப்புருக்கி யதிலேவார்த்து உத்தமனே உப்பினுடகிண்ணிதன்னில், தீட்டப்பாரடித்தூரில் சீலைசெய்து சிறப்பானவாலுகையின் மேலேவைத்து, வாட்டிப்பார்சூதமது சிறங்கைவிட்டு மயிற்கொன்றைச் சாற்றினால் சுருக்குப்போடே. 697

சுருக்கிடவேசூதமது வெண்ணெய்போலாந் துடியான சூடனுடதீயில்வாட், உருக்கிடவே காண்டிதனிலெண்ணெய்குத்தி யுருக்கமணிபோல்நின்றுடுங்கரியினுள்ளே, உருக்கிடவேசெம்மட்டில் தாழ்வடமாய்கோர்த்து உத்தமனே ஐந்தெழுத்து மெட்டெழுத்துமோதி நருகிடவேமனோன்மணித்தாய் முன்வந்துநிற்பாள் நாடினதெல்லாஞ் சொல்லிரட்சிப்பாளே. 698

ரட்சிக்கவுப்பைநன்றாய்க்கட்டியாடு நாதாந்தவழலைவைத்தான் முன்னேபண்ணு, பட்சிக்கச்சூதத்தைச் செந்தூரம்பண்ணு பார்க்கவேவேணுமென்றால் சாரணையைத்தீரு, குடிசிக்குள் வாயுவெல்லாமறுத்துத்தள்ளு குடிலமாம்நரகத்தில் வழலைவாங்கு, பிட்சையெடுத்துண்ணுமலிரும்பாட்டிப்பாரு பெண்மாயனாய் கைதனையறுத்துப்பின் பாய்நில்லே. 699

நிலதென்றால்வாழ்வுனக்கு நிற்குமோடா நேராகவழலையதுசிக்கினக்கால், அல்லென்றகுபேரனைப்போல் வாழ்வுண்டாகு மாதித்தனுள்ளளவுமுண்டுடுக்கலாகும் கல்லென்றகல்லுப்புகட்டிற்றானால்காரமாஞ்சூதத்தை கவ்விக்கொல்லும், மல்லென்றசூதத்தி லெட்டெட்டுஞ்சித்தி வாய்வீணராய்த்திரிந்தால் மண்ணாப்போமே. 700

போகாமலுப்பைமுந்திக்கட்டியுண்ணு பொய்யொன்றுஞ்சொல்லாதேபுகழாய்எண்ணே, ஏசாதேமனதுதன்னிலிச்சியாதே பெவ்வுயிருந்தன்னுயிர்போ லெண்ணிப்பாரு, வேகாததெதுஎன்று பாருபாரு

வெளிபோடே மனந்திருத்தியெண்ணிப்பாரு, பாகாமல் வாசியைத் தான்மூலத்திலுண்ணு பராபரியைப் பூசித்துப்பானபண்ணே

பானமென்றால் வெகுபிரிய மென்தாய்க்கப்பா பரிவானசத்தி யொடுபலகாரமன்னம், ஊனமில்லா புட்பமொடுவைத்துபூசிவுயர்ந்த மணிதாயார்க்கு ஊட்டிபின்பு, தானமென்ற குருவுக்கு வுடல்பொரு ளுமாவி தயவுடனே குருவுக்குத்தாரையூற்றி, வாவென்றமூலத்தில் வாசியைத்தான்மூட்டி சிவசிவாவென்று சொல்லி பாணம் பண்ணே.

பண்ணவேபோகமுனி ஏழாயிரங்கோர்வை பாடினேன்சித்தர்க் காமென்றுசொல்லி, திண்ணமுடன் வயித்தியத்தின் சார்புநூலேதிர ட்டிவைத்தேனிந்நூலுக்குறுதிமெத்த, வண்ணமுடன் செய்பாகம்ம றிந்துசெய்தால் வலுவானநோயகன்று புனிதனுவாய், எண்ணமுடன் காவியமாய்ச்சத்தகாண்டம் இயற்றினேனேழாயிரக் காண்டந்தான்.

லிங்கக்கட்டு.

தானனவின்னமொருகருமானங்கேள் தாக்கான லிங்கமதுபலந் தானப்பா, வேனுனகட்டியொரு லிங்கத்திற்கு வேகமுடன்முலப்பா லில்சுறுக்குசாமம், கோனனசங்கன்சார்பலங்கார்சாமம் குறிப்புட னேசுறுக்கிடவே கட்டிப்போகும், கானனமேற்போக்கு மின்னங் கேளுகருவானவழிஞ்சியிடதயிலம்வாங்கே. 703

வாங்கியேலிங்கமது சுறுக்குத்தாக்க வரிசைபெறலிங்கத்தின் சூதந்தானும், தேங்கியேயுள்ளடக்கிக்கட்டும் தெளிவானகெந்தி துபுகையடங்கும், ஒங்கியே லிங்கமது கட்டிற்றுனல் ஓகோகோநாதா க்களதிகம்மென்பார், ஏங்கியேதிரியாதே மன்னுபாரு எழிலான லிங் மதுயிறுகிப்போமே. 704

போமென்றுவிடுகாதே புகலக்கேளு புத்தியுள்ளபாலகனேயின் னஞ்சொல்வோம். தாமென்றமேதியின் பாலகற்றாழம்பால் தயவாக சமனிடையாயெடுததுக்கொண்டு, நாமென்ற லிங்கமதை சுறுக்குதா க்குநாயகனே லிங்கமது வுருக்குபோலாம், காமென்றலிங்கத்துக்க ங்கிசொல்வேன் கருவானதாம்பரத்திற் கலங்குசெய்யே. 705

செய்யவேகளங்குடனே சூதந்தானும் சிறப்பானசிங்கியுடன்தா ரங்கூட்டு, பையவே அரைப்பொடியுங் கூடச்சேர்த்துபாகமுடன்நிம் பழத்தின்சாற்றாலாட்டி, பெய்யவேசோடசாமம் பங்கதாக்கி பேரா னலிங்கத்தின்மேலேபூசி, துய்யவேரவிதனிலே காயவைத்து துப்புர வாய்சுண்ணும்பு சீலைமாட்டே. 706

மாட்டியே உமிப்புடமாம்தன்னிலிட்டு மயங்காதேமன்னவனே யெடுத்துப்பாரு, தாட்டிகமாய் சோடசமாய் புடந்தானப்பா சாங்க முடன்முன்சொன்னபடியேபோடு, நீட்டமுடன் லிங்கமது வுறுதிக் கட்டும் நெடுங்கம்பிலிங்கமதுவுறுகிப்பாயும், வாட்டமுடன் செந்தூ ரஞ்செய்தாயானல் வாகானவேதைமுகங்காணலாமே 707

காணலாம்சதகோடி சூரியன்போல் தாக்கானபிரகாசமானசோ தி, நீணவேலிங்கமது யென்னசொல்வேன் நிலையானகவனசு திகுளி கையென்பார், தோணவேமதியுடனேயேழுங்கூட்டி தோராமல்செம் பதுவு மூன்றுங்கூட்டி, பூணவேதங்கமது வொன்றுகூட்டிப் புண்ணி யனேமூசைதனிலுருகிட்டாயே. 708

உறக்குமுகந்தானறியார் மூடர்பாதி வுலகுதனில்மெத்தவுண்டு வுரைக்கக்கேளு, நெருக்கமுடன்லோகமது வுறுகும்போது நேர்புட னே குறுவென்றுதன்னைமீவாய், தெறக்கமுடன் கணவிட்டு ஆடும் போது தேரான்காரமதை பின்னுமீவாய், செறக்குடமே கரிபோலயிரு க்கும்பாரு செம்மைபெற வோட்டில்வைத்து வூதிப்போடே.

போடவேமூன்றுமுறைவூதிப்போடு பொன்னவனேபொன்போ லேமாற்றுகாணும், நீடவேமாற்றுலுகாணும்பாரு நிலைத்துதடாவாத வித்தைநிசமாச்சு, கூடவே தங்கமது ஒன்றுகூட்டி குறிப்பாகவாரடி த்துப்புடத்தைப்போடு, ஆடவேசிவனத்துக்கிடமேசென்று அப்பனே அருந்தவசில் நின்றிடாயே. 710

நிற்கையிலேவாணிவந்துநிர்த்தஞ் சொல்வாள்நிராமயத்தின்சோ தியது சொரூபந்தோன்றும், துற்கையென்னுங் காளிபவளொதுங்கி நிற்பாள், துரைராசசுந்தரன்போல் சித்தனுவாம் பற்குணன்போல் வீராதிவீரனுவாய், பாருலகில் வுன்னையொருரிஷியா மென்பார்அற் பமென்று நினையாமேதவருள்மைந்தாக்கேஅ அறுந்தவசுநிலைதனையே. நாடிக்கொள்ளே. 711

கொள்ளையிலேகுருவர்க்கஞ் சிழனென்பார் குவலயத்திலும்மகி மைகாணமாட்டார், தெள்ளுதமிழ்வடமொழியைப்பிரித்தாராய்ந்து திரட்டிவைத்த மாணுக்கனென்பார்கண்டீர், பள்ளிமயிலேறுஞ்சுப்ர மணியன்சுவாசம் பூரணந்தினிருகலைகள் அறிந்தாகன்றாய், பள்ளுதமி ழ்நாடகத்தைப்பற்றுன் பாருலகிலிருப்பவன் சித்தனுமே. 712

சித்தனுய்ப்பிறந்தாலும் பிறக்கவேண்டும் சின்மயத்தின்சுடரொ ளியைப்பற்றவேண்டும், பத்தனுயிருந்தாலுமென்னலாமம் பரியாகத்

மிழுதனையகற்றவேண்டும், முத்தமிழல் வல்லவரா யிருக்கவேண்டும் மூதுலகில்கீர்த்திதனை யடையவேண்டும், வித்தகனாகத்தியற்குச்சீட னாக விண்ணுலகிலிருப்பவனே யோகியாமே. 713

யோகமென்றால் யோகமதை நிறுத்தவேண்டும் யோகத்தினிரா மயத்தையரியவேண்டும், போகமெனுமாய்கைதனை யொழிக்கவேண் டும்போகமுடன் பேரின்பந்தேட வேண்டும், சாகமுடனிருப்பதற்கு கற்பம்வேண்டும்சட்டமுடன்சமாதிநிலை யறியவேண்டும், வேகமுடன் காயமதை நிறுத்தவேண்டும் வெட்டவெளியம் பரத்தையூனிப் பாரே. 714

பார்க்கையிலே ஞானமது வந்துறாது பாரினிலே பரிசனங்கள் கெட்டார்கோடி, தீர்க்கமுடன்போய்வேடங் கொண்டுமல்லோ திற முடனேயோகமதைக் கண்டோமென்பார், நாக்கமலபீடமதில் வீற் றிருக்கும் நாதாந்தமனோன்மணியைக் கண்டோமென்பர், ஏர்க்கமு டன்பொய்யாது மிகவும்பேசி எழிலானசாத்திரததை யரியார்தாமே

அறியாதமுழுமக்க ளனேகம்பேர்கள் அவனிதனில் கும்பகும் பலாக்ககூட்டி, நெறியானவழிதனையே கடந்து நித்தம் நேர்புடனே பதியழிந்துபோனார் கோடி, குறியான சாத்திரத்தை விட்டுவிட்டு குவலயத்தில் கெட்டவர்கள் கோடாகோடி, முறியனைப்போல்வாய் பினத்தல் மிகவும் பேசி மோசமுடன் பாலவழிக்கேகினாரே. 716

ஏகினாரென்றலுமே யாமறிந்து யெழிலுடனே காலாங்கி நாதர் தம்மை, பாகமுடன்றான்வணங்கி பணிந்துப்போற்றி பதாம்புயத்தை என்னாளும் மனதிலுன்னி, வேகமுடனடியேனும் பலநூல்பார்த்து வெளியான கருககுருவும் வுரைக்கயெண்ணி, போதமென்னும்பெரு நூலேழாயிரத்தில் பொங்கமுடன் பாடிவைத்தேன் கருக்கள்தானே

தானபெருநூலேழாயிரத்தில் தாக்கான காண்டமிது மூன் றாங்காண்டம், தேனானகுருமொழிகளனக்கமுண்டு தேசத்தில் பரி பாஷையனேகமுண்டு, மானானமறைப்புமுதலுளவுமெத்த மண்டத் தில் கண்டவரும்விண்டோரில்லை, கனானகாலாங்கி நாதர்தாமும் கனகமெனும் நவமணிபோல்கருதினாரே. 718

கருதினார்வடியேனுங் கண்டாராய்ந்து காசினியில் மானிடர் களறியவேண்டி, கருதியென்னும் பிரணவத்தை சீனத்தார்க்கு சூட்ச முடன் காட்டவென்று அடிபேன்தானும், பருதியெனுகுளிகை தனைப்பூண்டு கொண்டு பரந்தேனே சீனபதிக்கடலோரந்தான்உறுதி யுடனப்பதியிலிறங்கியானும் ஓகோகோவெகுகாலமிருந்திட்டேனே.

இருந்திட்டேன் கோடிவரை யுகாந்தகாலால் யெழிலான சூட சாதி வித்தையாவும், திருந்திடவே சீனபதி யுலகுள்ளோர்க்குதிட்ட முடன் கைமறைப்புயாவுஞ் சொன்னேன், பொருந்திடவே யவர் களிடஞ் சேர்ந்து யானும் போகித்தேன் வெகுகோடிகாலமப்பா, செருந்திடவேபோகமது செய்ததாலே சிறப்பானபோகனென்று பேருண்டாச்சே. 720

ஆச்சப்பா யென்னைப்போல் பெயருள்ளார்களப்பனே வைய கத்திலாருமில்லை, மாச்சலென்னும் நவகோடி ரிஷிகளுண்டு மாநிலத் தில்பதினெண்பேர் சித்தருண்டு, கூச்சலென்னும் திருமூலவாக்கத் தார்கள் கோடானகோடியே ரனந்தமுண்டு, மூச்சடங்கி மாண்ட சித்தர் கோடாகோடி முறைமையுடன் சமாதிகளில் கோடியாமே.

கோடியாஞ் சமாதிதனிலிருந்தோர்மெத்த கூறவேமுடியாது குவலயத்தில், தேடியேசமாதிநிலைகண்டாராய்ந்து தெரிசனைகளில் லாமல் மாண்டார்கோடி, நீடியேசாத்திரத்தைப் பாராமற்றான் நெறி தப்பிமாண்டவர்கள் கோடாகோடி, நாடியேகாலாங்கிநாதர் பாதம் நான்பெற்றேன் கோடிமுறை வுண்மைதானே. 722

தாமான ராஜரெல்லாம் தாரணியில்தலைமாறி நூலைப்பார்த்து சாமானகருக்களெல்லாங் காணாமற்றான் சார்பான நூல்படிக்கே வகையுங்கேட்டு, காமானதலையேடுங் கடையேடுந்தான் காணாமல் மதிகெட்டு மூப்பைவிட்டார், நாமானபடியாலே யுளவறிந்து நாதாக் கள் கைமறைப்பை தெளியிட்டேனே. 723

வெள்ளிசெந்தூரம்.

இட்டேனே யின்னமொரு மார்க்கங்கேளுயெழிலானமதிதனை யோராவிமைந்தா, சட்டமுடன்பலமதுதானிறுத்துக்கொண்டுசாங்க முடன் கெந்தியது காலதாக, கிட்டமென்றசிட்டமதுகாலுங்கூட்டி கவனமென்ற சூதமது சரியாய்ச்சேர்த்து திட்டமுடன்வேங்கையது தயிலத்தாட்டி திரத்துடனே நாற்சாமமரைத்திடாயே. 724

அரைத்துமே பில்லைதட்டி காயவைத்து அப்பனே யோட்டி விட்டுச்சிலைசெய்து திரைப்புடனே ரவிமுகத்தில் காயவைத்து திர முடன் மணல்மரைவிற் புடத்தைப்போடு முறைப்படியே மணலாரி யெடுத்துப்பாரு மூதண்டசெந்தூர மென்னசொல்வேன், குறையா மல் பத்துபுடமிப்படியேபோடு குறியான செந்தூரம் சிவப்புமாமே.

மேதான் செந்தூர மருணன்போலாம் அப்பனே புடம் போட சிவப்புமெத்த, வேமேதான் முறையோடு செய்தாயானால்விண்கொள்

ளாவேகமது வீரங்காட்டும், போமேதான்செந்தூரம் வெள்ளிசெம் பில்போக்கோடு முறையோடுங் கொடுத்துப்பாரு, நாமேதான்சொன் னபடி யோட்டில்வைத்து நலமாக வூதிடவேபசுமைதானே. 726

தானனபசுமையது யிடைதானிற்கும் தாக்கானசெம்பதுவு மற் றும்போகும், வேனனதங்கமது நாலுக்கொன்று விருப்பமுடன் வார டித்துப் புடத்தைப்போடு, தேனனபொன்னதுவு மாற்றெட்டாகும் தெளிவானபுடத்துக்கு உறுதிதங்கும், கோனனயெனதையர் காலா ங்கிநாதர் குருபரன்றன் முறைப்படியே கூறினேனே. 727

கூறினேன் வெள்ளியென்ற செந்தூரத்தைகுணமானதிரிகடுகு சூரணத்தில், மீறியேவனுபான மறிந்துகொள்ள மிக்கானரோகமெ ல்லா மகன்றுபோகும், சீறியேமேகமென்ற பிணிகள்போகும் சிவப் பான தேகமதுவண்டுபோலாம், மாறியேவாசியது கீழ்நோக்காகும்மக த்தானரோகமெல்லா மகன்றுபோமே. 728

அகன்போம்வாயுவென்ற வென்றவென்பதும்போம் அப்பனே காசரோகமகன்றுபோகும், தகன்றமேமேல்மூச்சுகாணுதோடும் தாக் கானவாய் வூரல்விட்டுப்போகும், புகன்றமேசில்விஷங்கள் காணுதோ டும் புகழுடனேமதிமயக்கம் பொருமியோடும், சகன்றமேபாண்டு வகைபோகும் போகும் சார்பானமேலிளைப்பு தீர்ந்துபோமே. 729

தாளகக்கட்டு.

போமேதாமின்னமொரு மார்க்கம்பாரு பொங்கமுடன் தாளக மும் பலமொன்றாகும், தாமேதான்துருசதுவும் பலமொன்றாகும்தாக் கான எருள்ளிச்சாற்றினாலே, வேமேதான்தானரைப்பாய் நாலுசாமம் விருப்பமுடன் மைபோலயாட்டிமைந்தா, நாமேதான்சொன்னபடி கலசம்செய்து நலமாகரவிதனிலே காயப்போடே. 730

போடவே சுண்ணும்புச்சிலேசெய்து பொங்கமுடன் கல்வமதி லிட்டுமைந்தா, நாடவேமேல்வாய்க்குச்சிலேயேழு நலமாகரவிதனிலே காயவைத்து கூடவேபத்தெருவிற் புடத்தைப்போடு கொற்றவனே புடமாறி எடுத்துப்பாரு, தேடவேதாளகமுங் கட்டிப்போகும் தெளி வான வங்கமது திரளுந்தானே. 731

தானனதாளகமும் வங்கமானல் தாக்கானகுருவுக்கு தற்காலந் தான், வேனனசெம்புக்கு நாலிலொன்று விருப்பமுடன்றான் கொடு த்து வூதிப்போடு, பானனசெம்பதுவுங் கட்டிப்போகும் பாங்கானவூ ரலது யேகும்பாரு, தேனனமன்னேன்பணியாள் சித்தரூபிசெம்புக்கு புடம்போட சுத்தியாமே. 732

சுத்தமாஞ்செப்புக்குவெள்ளிநாலு சுகமுடனேசெம்பதுவுமொ ன்றேயாகும், முத்தமுடன்தங்கமது வொன்றேயாகும் மூயலான மூசைதனிலுருக்கிப்பாரு, சித்தமுடன்வாரடித்துப் புடத்தைப்போ டு தெளிவானமாற்றதுவு மதிகங்காணும், பத்தமுடன் புடத்துக்கு வுறுதிதங்கம் பாலகனேசித்தர் செய்யும் வேதையாமே. 733

தாளகக்கட்டு.

வேதையாமின்னமொருபாகங்கேளு வேடிக்கை சிமிட்டிவித்தை வாதம் பாருபாதையாம், தாளமும்தலமொன்றாகும் பாங்கான துரிசியது பலமொன்றாகும், காதையாம்பேயத்திப்பால்தானப்பா பாலக னேபாலதுவை கட்டிக்கேற்றி சாதகமாரவிமுகத்தில் துவைத்துப் பாலா சாங்கமுடன்வுமிநீரா லரைத்திடாயே. 734

அரைக்கயிலே மெழுகதுபோலாகும்பாரு அப்பனே துரிசிக்கு க்கவசங்கட்டி, நிரைக்கையிலே மூன்றுபுடமிப்படியேபோடுநிலையான தாளகமு முருகிக்கட்டும், திணக்கவேதுரிசிக்குச் சரிநேரொக்க திற மான வீரமதுநேரதாக, முறைப்படியே வுமிநீராலரைத்து மைந்தா முன்போல புடம்போடக் கட்டிப்போமே. 735

கட்டியதோர் புடமதுவும் பத்தேபோடு கருவானதாளகமு மடி க்துகொல்லும், திட்டமுடன் தாளகத்தைக் கொடுக்குமார்க்கம் தீர் ங்கமுடன் செப்புகிறேன் மைந்தாகேளு, மட்டமுடன் பொன்னுகச் செய்வதற்கு மயங்காதே வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று, வட்ட முடன்றானுருக்கி குருவொன்றீய வாகுடனேகரிபோல யிருக்கும் பாரே. 736

பாரேதான் கரியோட்டிஊதிப்போடு பாகமதாய் செம்பதுவும் நீங்கியேதான், நீரேதான்வெள்ளியது மாற்றுகாணும் நிலையானபொ ன்னதுவுமாறுமாகும், சேரேதான்தங்கமது வொன்றுசேர்த்து சிறப் புடனே வாரடித்துப் புடத்தைப்போடு, கூறேதான்பொன்னதுவு மெட்டுமாகும் குணமான பிறவியது வாகுந்தானே. 737

தானனதங்கமது பசுமைகாணும் தாக்கானபொன்னதுவும் சிவ யோகிக்காம், வேனைபொன்னதுவும் ரிஷிகள்சித்தர் விருப்பமுடன் றன்செய்யும்தீதவித்தை, கோனைகாலாங்கிநாதர்பாதம் குறிப்புட னேயான் வணங்கியதீதங்கேட்டு, பானைமானிடர்கள் பிழைக்கவே ண்டிம் பாடினேன்சத்தகாண்டம் பண்பாய்த்தானே. 738

பண்பானபோகரிஷியடியேன்தானும் பாகமுடன்செய்துமல்லோ சுண்டாராய்ந்து,நண்பான சாத்திரத்தை விரித்தாராய்ந்து நண்பான

சிவயோக மிருதிநாட்டும், நாதாக்கள்வித்தையிது நவிலப்போமோக ண்பானவிதிபாணிகாண்பான்பாருகைலாசகாணியதுலபிக்குந்தாமே.

நாகக்கட்டு

தாமானமுன்னமொரு பாகங்கேளு தயவுடனே சொல்லுகிறே ன்தண்மையாக, காமானநாகமொரு பலந்தான்வாங்கு கருவான கு கையிலிட்டுவுருகிக்கொண்டு, பாமானசாரமதை பலந்தான்கொண்டு பதமுடனே கிரசாரமதுதன்னையீவாய்நாமேதான்சொன்னபடிநாகந் தானும்நயமுடனேகண்ணதுவு மடையுப்பாரே. 740

அடைவுடனேநாகமது தன்னையப்பா அப்பனேயில்லையது தக டதாக்கி, படையுடனேதாளகமும்சிந்திதானும் பதமுடனே சரியெ டையாயெடுத்துகொண்டு, தடையறவேவேம்பழத்தின் சாற்றாலாட்டி தாக்கானநாகத்துக்கங்கிபூசி, சடையுடனேரவிதனிலே காயவைத்து சாங்கமுடன் புடம்போடக்கட்டியாமே. 741

கட்டியாம்நாகமதை யெடுத்துக்கொண்டு கருவாகத்தானுருக்கி பின்னுங்கேளு, திட்டமுடன்வீரமதை நெறுக்கிக்கொண்டு திகழ் பெறவேகளஞ்சியது கிராசமீவாம், மட்டியென்றகண்ணடிபூரேப்பா மார்க்கமுடனிருகளஞ்சி பொடித்துக்கொண்டு சட்டமுடன்கிராசம துகொடுக்கும்போது சார்பானநாகமது சவளையாமே. 742

சவளையாம்நாகமது பின்னுமப்பாசாங்கமுடன் றானுருக்கிப் பி ன்னுங்கேளு, கவளமுடன்கிளியது களஞ்சிரண்டு கணக்காகத்தா னுருக்கிகிராசமீவாய், தவளவதுநாகமது யென்னசொல்வேன் தாக் கானமுழுக்கட்டு யென்னலாகும், பவளம்போலிருக்கியது வுருளை போலாம் பாங்கானநாகத்தின் பான்மையாமே. 743

பாண்மையாம்நாகமதைக்கொடுக்குமார்க்கம் பாகமுடன்சொல் லுகிறேன்பண்பதாக, மேன்மையாய்செம்பதுவைவ தகடதாக்கி மிக் கானசெம்புக்குகெந்திநாலு, மான்மையாய்பழச்சாற்றாலரைத்துமை போல்மயங்காமல் தகட்டுக்குப்பூசிபோடு, கான்மையுடன் கரியோட் டில்காய்ச்சிப்போடு களிம்பானசெம்பதுவும் கட்டிப்போமே. 744

போமேதான்செம்பதுவுமூறலேகி பொங்கமுடன் வரணமதுசி வப்புமெத்த, நாமேதான்சொன்னபடி நாகந்தன்னைநாட்டடா செம் புக்குநாலுக்கொன்று, வேமடாதானுருக்கி யெடுத்துப்பாருமிக்கான செம்பதுவுமாற்றுகாணும், தாமேதான்மாற்றதுவுமேழதாகும் தனி யாகசீனமதுபிடிக்குந்தானே. 745

தானேதான்தகடடித்துப் புடத்தைப்போட்டு தனியானசெம்ப
துவுமூட்டங்காணும், மானேகேள்திரைசவுடு களிம்போடுரல் மார்க்
சமுடன்சவளையதுயெல்லாம்போகும், தேனேதான்யினியதிகம்வூட்
டம்காய்ப்பு திகழானபுட நயப்புகாரகரப்பு. எனேதா னித்தனையும்
பொருந்திநிற்கும் யெழிலானபொன்னதுவுங் பிறவியாச்சே. 746

ஆச்சப்பாபிறவியதுஎன்னசொல்வேன் ஆச்சரியமாச்சரியம்வா
தவித்தை, மூச்சப்பாவிடுகாதேமற்றோருக்கு முயலான சித்தர்முனி
கண்டாரானால், எச்சப்பாயுந்தனுக்குயிடையூறுண்டா யென்மகனே
சாபமதுயெய்தும்பாரு, பேச்சப்பாவாராதுசிடிகைவேதை பேருலகி
ல்நீயுமொருசித்தனாமே.
747

சித்தனாம்சிவபூசைக்குறுதிதங்கம் சிறப்பான சமுசாறிக்கேற்ற
வேதை, முத்தமுடன்கருவாளிகான்பான்பாரு மோசமில்லைசாபமில்
லைமுனிவர்வேதை, நித்தமுமேபூசையதுநேமநிஷ்டை நிலையானதேச
த்தி லிருந்துகொண்டு, சத்தமுடன்சமுசாரதொல்லை விட்டு சராசர
த்தையொழிப்பவனே யோகியாமே.
748

துருசுகுரு.

ஆமேதானின்னமொருமார்க்கம்பாரு அப்பனேமாணாக்கள் பி
ழைக்கவென்று, வேமேதான்துருசதுவும் பலமொன்றாகும்வேகமுட
ன்முன்போலதானரைத்துப் புடத்தைப்போடு;நாமேதான்சொன்ன
படிகூட்டிக்கொண்டுநன்மையுடன் கப்பலாய்ப்பாலைதாக்கே.

தாக்கவேநாள்மூன்றுதப்பாமற்றான் தயவுடனே துருசுக்குபா
லையூட்டு, நோக்கமுடன்ரவிதனிகலகாயவைத்து நுணுக்கமுடன்பற்
பத்தையெடுத்துக்கொண்டு, தேக்கவேரசமதுவைசரியதாக திகழுட
னேநிம்பழத்தின்சாற்றாலாட்டி, தூக்கவேபில்லையது தட்டி மைந்தா
துப்புறவாய் ரவிதனிலேகாயப்போடே.
750

காயவேவோட்டிவிட்டுசீலைசெய்து களிவாகக்குக்குடமாம் புட
த்தைப்போடு, மாயாசமதுதான்மடிந்துகொன்று நயமுடனே கண்ட
மதுபற்பமாச்சு, தோயவேபின்னமந்த பழச்சாற்றாலாட்டி தோரும
ல்முன்போலப்பில்லைதட்டி,காயவேஓட்டிவிட்டுச்சீலைசெய்துதண்மை
யுடன்புடம்போடசுண்ணமாச்சே.
751

ஆச்சப்பாசுண்ணமது பென்னசொல்வேன் அப்பனேகண்கொள்
ளாவேதையாச்சு, மாச்சென்றசுண்ணமதை மதியிற்றாக்குமயங்காதே
பத்துக்குளொன்றுபோடு, பாச்சனுடன்வெள்ளிபது யெடுகாணு
ம்பாகமுடன்வாரடித்துப் புடத்தைப்போடு, காச்சனுடன்கலாய்ப்பு
க்துவுறுதிதங்கம் கருவாளிகண்டாலே யிடுவார்தாமோ. 752

## செம்புரேக்குவேதை.

தாமானவின்னமொருபாகங்கேளு தாக்கானசெம்பென்ற ரேக்குதானும், காமானவேஷங்கள் பூணுவோர்க்கு கருவானசீனபதிரேக்குதானும், வேமானமானதொரு காந்தஞ்சேர்த்து விருப்பமுடன் காரமது கூடச்சேர்த்து, பாமானவெள்ளியது சரிநேரொக்க சாதகமாய் தான்சேர்த்து வுருக்கிடாயே. 753

உருக்கவேசெம்பதுவும் ஒன்றுய்ச்சேர்த்து வுத்தமனே காந்தத்தின்சத்துசேர்த்து, பெருக்கமுடன் வெள்ளியது வறணமேரி பேரானமாற்றதுவு மிகவுமாகி, செருக்கமுடன்வாவியது கட்டிப்போகும் சிறப்பானவாணிக்கு வாறேகாலாம், சுருக்கமுடன்பத்துக்கு ரண்டு தங்கம் தாக்கவேமாற்றதுவு மேழதாமே. 754

ஏழானமாற்றதுவு மிகுதிகாட்டும் யெழிலானபொன்னதுவும் பசுமைமெத்த, காழானபிறவியது யென்னலாகுங் கருவானவேதையிது சித்தர்வேதை, நாழானநாதாக்கள் செய்யும்வேதை நலினமுடன்யாம் சொன்னோ மாண்பருக்கு, கூழானவேதையிது யல்லகண்டீர் கொற்றவனே போகரிஷி கூறினோமே. 755

கூறினோஞ்சீனபதி வேதைமார்க்கம் குவலயத்திலாரேனும் கண்டதுண்டோ, மாறினதோர்கருமான முளவுமார்க்கம் மகத்தான சுளுக்குமுதல்கருவுவேதை, தேறினதோர் கண்கண்டவேதையாவும் திரட்டினேன் பூதலத்தார்க்கென்றுசொல்லி, ஆறினங்கள் பிரவிமுதல் வைப்பெல்லாந்தான் அப்பனேயாமுறைத்தோம் வளமைபாரே.

## இரசவெண்ணெய்.

வளமையாமின்னமொருபாகங்கேளு மகத்தானநாதாக்கள் கூறவில்லை, இளமையாம்போகரிஷிபடியேன்றுனும் எழிலாகக்கூறுகிறேன்பற்பதாக, களமையாம் சூதமதுசேரொன்றுகும் நனமானகண்டாதுசேரொன்றுகும் தளமையாம் நிம்பழத்தின் சாற்றுலாட்டி தாழ்மையுடன் தானரைப்பாய் சாமமெட்டே. 757

எட்டானசாமமதுவரைக்கும்போது யென்மகனே சூதமதுமடிந்துமல்லோ, கட்டானசூதமது வெண்ணெய்போலாம் கசடானகண்டாரதுநீங்கியேதான், திட்டமுடன் வெண்ணெயது கல்வமிட்டுத் திறமாகத் தானரைப்பாய் தகரச்சாற்றுல், சட்டமுடன் எண்சாமம் வரைக்கும்போது சார்பானசூதமது வெண்ணெயாமே. 758

வெண்ணையாம்சூதமுடன் கருவூமத்தை விருப்பமுடன் பிசறி யரைக்கும்போது, கண்மையுடன்வெண்ணையது மடிந்துபோகும் கருவானராசனென்ற வெண்ணையாச்சி, திண்ணமுடன் சூதமதுவெணணையானல் திறமானலோகத்திலனந்தம்வேதை, கண்ணமுடன் செந்தூரம் பண்ணக்கேளும் கழலானவேதையது கோடியாமே. 759

கோடியாம்வேதையிலே செந்தூரங்கேள் குறிப்பானகெந்தியது வரைக்குப்பாதி, நாடியேசிலையதுவு மொன்றுக்குகால் நலமானவீரமதுவரிக்காலுக்கொன்று, தேடியேவாறுவகை செயநீர் தன்னால்தெளிவாக தானரைப்பாய் நாலுசாமம், வாடியேதிரியாதே மன்னுபாருமாற்கமுடன் ருனரைப்பாய் சாமம்நாலே. 760

நாலானசாமமது வரைக்கும்போது நாயகனேசூதமது மடிந்து சாகும், காலானரவிதனிலே வைத்துக்கனமாகப் பொடிபண்ணியெடுத்துக்கொண்டு, சாலானகுப்பிக்குச்சீலையேழு சார்பாகத்தான் செய்துவாயைவிட்டு, பாலானகுப்பிக்குள் மருந்தையிட்டுப் பாலகனேமாக்கல்லால் கொண்டுமூடே.. 761

மூடவேகுப்பிக்குச்சீலைசெய்து மூர்க்கமுடன்ருன்செய்து ரவியில்வைத்து, நாடவேதளவாயாஞ் சட்டிதன்னில் நலமுடனே பூமணக்கீழேகொட்டி, தேடவேசட்டி மையந்தன்னில் தெளிவாகக் குய்பிநத்மைபம்வைத்து, கூடவேமணலதனைமேலேகொட்டி குப்புறவாய் மேல்சட்டி சீலைசெய்யே. 762

செய்யவேவாலுகையா மடுப்பில்தானும் சிறப்பாகதீமூட்டியெரிப்பாயப்பா, பையவேஎண்சாம மெரித்தபோது பாலகனேசெந்தூரமருணன்போலாம், தொய்யவேசூதமது செந்தூரத்தால் தொடரலாம்கோடிமுறைவேதையாவும், செய்யவேசெந்தூரம் பதனம்பண்ணுசெய்பாகம் கைபாகமுறை விடாதே. 763

முறையோடுஞ் செய்தாக்கால் எல்லாஞ்சித்தி முறைதப்பிசெய்தாலோ எல்லாமோசம், கரையேறவேண்டுமானல் சூதம்பாரு கண்கெட்டவாதியானல் சூதந்தள்ளு, பறைபானசூதமது ராசபோசன் பாரினிலே சூதம்விட்டால் வாதம்போச்சு, நிறையோடு சாத்திரங்களுளவாராய்ந்து நிற்பவனே சித்தர்களி லொருவனுமே. 764

ஒருவனும்பேருள்ளான் ராசியுள்ளான் உலகத்திலல்லவற்கும் வாய்க்குமோசொல், பெருமையுடன் வீண்பேச்சு மெத்தபேசி பேருலகில் நாய்போல பினத்டவார்கள் அருமையது கண்டறியமாட்டா

ரப்பா, அப்பனேகரைகண்ட முனிதான்னென்பான், வெருமையாய் வாப்பினத்தல்மிகவும்பேசிவெகுகோடிமாண்டார்க மண்ணில்தானே.

தானனசெந்தூரம் கொடுக்குமர்க்கம் சாங்கமுடன் சொல்லுகிறேம் தன்மையாக, வேனனவெள்ளியது வாறதாகும் வேகமுடன் செம்பதுவுநாலதாகும், கோனனமூசைதனி லுருக்கிக்கொண்டு குருதனையேதான் கொடுத்துவூதிப்போடு, தேனனகரியோட்டி ஊதும் போது தெளிவான பசுப்பொன்னு யாகுந்தாமே. 766

தாமானபொன்னதுவி மாற்றுகும் தனியானதங்கமது நாலுக்கொன்று வாமானமென்றதொரு மட்டத்தோடு வகையானபாகமுடன்வாரடித்து, சாமானமானதொரு காவிக்கல்லில் சட்டமுடன் புடம்போட தங்கமாகும், வேனனவெனதையர்கா லாங்கிநாதர் விருப்பமுடன்யான்வணங்கி விரித்திட்டேனே 767

விரித்திட்டேன் குடவனிம்லபத்துக்கொன்றுவீரமுடன்தொடுத்திடவேமாற்றெட்டாகும்,செரித்திடவேமட்டமென்றபரிகள்மேலே சிறப்புடனே வுமிநீரால்செந்தூரத்தை, குரித்திடவேபொன்ற கட்டின்மேலேபூச பொங்கமுடன் மாற்றதுவும் பத்தேயாகும், முரித்திடவேசவளையது போலாம்பாரு முனையானமாற்றதுவு மதிதங்காணே.

காணவென்றால் செந்தூரங்குன்றியுண்ண காயாதிகற்பமதுவீறுமெத்த, தோணவேவனுபான மெதுவானாலும் துரையோடு முறையோடுங் கொண்டாயானல், நீணவேதேகமது கற்றாகும் நிலைத்ததடாதூலமது சாவேயில்லை, வாணவேநாதாக்கள் சொல்லவில்லைவையகத்தில் போகரிஷி வகுத்திட்டேனே. 769

வடிதிட்டேன் செந்தூரப்போக்குதானும் வளமுடனே மானுக்கள் பிழைக்கவென்று, தொகுத்திட்டே னின்னம்வெகு மனந்தங்கோடிதோராமல் நூலதனைகண்டாராய்ந்து, பகுத்திட்டேன் சூதமென்ற செந்தூரத்தைப் பலபலவாய் பாடிவைத்தார்சித்தரெல்லாம் பிகுத்திட்ட மானதொரு மூன்றுங்காண்டம் பிசகாமல்பாடி வைத்தேன் சத்தந்தானே. 770

சத்தமுடன் ஏழுவகைகாண்டஞ்சொன்னேன் சாகாமாமிந்நூலுக்கொருநூலில்லை, சித்தரெல்லா மொன்றுகக்கட்டியென்னை சிறப்புடனே மமதிலமைத்திட்டார்கள், சுத்தமுடன் யடியேனுந்தாள் வணங்கி துரைராஜர்காலாங்கிதனைநினைந்து, பத்தியுடன் வடியேனு மனதிலுன்னி பட்சமுடன் கூட்டமதிற் சென்றிட்டேனே. 771

### சித்தர்கள்போகரை அஞ்சலிகேட்குதல்.

சென்றேனேநாதாக்கள் முனிவர்பக்கல் சேனையுடன்ரிஷிகூட்ட மங்கிருந்தார், நின்றேனேநெடுநேரம் சித்தர்பக்கல்நினைத்துமே காலாங்கிதனைநினைக்க, பன்றானநாதாக்கள் முனிவர்சித்தர் பலபேருமெந்தனுக்குயாசீர்மித்தர், குன்றானரிஷிமுனிவ ரென்னைப்பார்த்து கூறுவாரஞ்சலிகள் கோடிதானே. 772

தானானபோகர்முனி சொல்லக்கேளும் சார்பானசாத்திரத்தினுளவுயாவுங், கோனானகாலாங்கி தன்பலத்தால் கொட்டினீர் வித்தை எல்லாம் வெளியாய்ப்போச்சு, மானானவித்தையெல்லா மிந்தமட்டு மறைப்புடனே வைத்தாலே மதிப்புண்டாகும், வேனானவித்தைகளை விருதாவாக விரைதிட்டால் லோகமெல்லாஞ் சித்தாய்ப்போமே. 773

போமென்றபடியாலேயினிமேலப்பா பொங்கமுடன் கருக்குருவைவெளிருடாதே, நாமொன்றுசொல்லுகிறேன் சித்தமாய்க்கேளு நாதாக்கள் சகலரும்பலநூல்சொன்னார் வாமென்று நூல்களுக்குச் சாபஞ்சொன்னார், வகையுடனே சாபமதை நிவர்த்திசெய்து, தாமொன்று செய்தவர்கள் கோடிலொன்று தக்கபடிசெய்தா ரனேகருமே.

அனேகராமாண்பர்கள் மெத்தக்கூடி அண்டரண்ட சராசரங்கள் திரட்டினார்போல், சினேகரால் சிறபாலர்யாவுமொக்க சிறப்புடனே கும்பல்கும்பலாகக்கூடி யனேகமுடன் சாததிரத்தைகண்டாராய்ந்து சண்டாளர்மருமத்தை வெளியிற்சொல்லி, முனேந்திரனைப்பாபத்துக்கேதுவாகி மூர்க்கமுடன் தவநிலையைக் கொடுத்தார்தாமே.

### கருக்கள் பாயவெட்டையீயம்.

காமானகரிவங்கம் சேர்தானென்று சாற்றுகிறேன் மாணாக்கள் பிழைக்கவென்று, வேமானமானதொரு சுருமாக்கல்லே வேகமுடன் கெந்தியது சமனாய்சேர்த்து, சாமானமானதொரு நிமிளையப்பா சட்டமுடன் கொண்டுவந்து பின்னுக்கேளு, பூமானமானதொரு படிகந்தன்னை புகழாகத்தானெடுத்து சரியாய்க்கூட்டே. 776

கூட்டையிலேபாஷாணம் சரிநேரொக்க குறிப்புடனே தானிடித்து பூநீர்சேர்த்து, நாட்டமுடன் கண்ணாடிவாலைதன்னில் நயமுடனே சரக்கெல்லாம் வாலையிட்டு, பாட்டமென்ற யடிப்பாளைக் குள்ளேபோட்டுப் பாகமுடன் திராவகத்தை யெறக்கிக்கொண்டு, நீட்டமுடன் நீவங்கமுருகும்போது நீதானதிராவகத்தை ஊத்திடாயே.

ஊத்தையிலே வங்கமது கட்டிப்போகும் வுத்தமனே நீர்வாங்கி வெட்டையாகும், கூத்தனென்னும் திராவகத்தால் வங்கந்தானும் குடியோடும் நீர்தானு மெகிறிப்போகும், சாத்தலென்னும் வுக்ரகம் செய்யலாகும் சார்பானகருக்களே பாச்சலாகும், நீத்தமுடன் கருத் தட்டுவார்க்கும்போது நிலையானவுருக்க ளெல்லாந்தோன்றும்பாரே.

## இரும்புவுருக்கு

பாரேதானின்னமொருகருமானங்கேள் பாசமுடன்மாணுக்கள் பிழைக்கவென்று, நேரேதான் இரும்பினிடமணலைவாரி நேர்புடனே மூசையிட்டு வுருக்கும்போது, சீரேதான்கண்விட்டு வாடும்போது சிறப்பான திராவகத்தைகுத்திப்பாரு, நேரேதான்யிரும்பதுவும் வே ட்டையைாகி நேர்புடனே கருவுருக்கள் பாயுந்தானே. 779

தானான வுத்திரண்டு பாயும்போது தனியான யிரும்பதுவும் சவளைபோலாம், தேனான யிரும்பதுவுஞ் சவளையாகும் தெளிவான வுருக்கினத்து வெட்டையாகும், மானானதங்கம்போல் கண்விட்டாடு ம்மாற்கமுடன்யிரும்பினிடவேதைமாற்கம், கானானதேசத்தார் சின த்தார்கள் கருவாளி யாகையினால் கண்டார்தாமே. 780

## தாதுவிர்த்தி தாம்பூலக் குளிகை.

காமான குளிகையொன்றுசொல்லக்கேளும் தாக்கான சாதிக் காய்கிராம்போடேலம், காமான மராட்டியமா மொக்கினோடு கரு வானயேலக்காய் லவங்கப்பட்டை, பாமானகுரோசானி யோமந்தா னும்பாங்கானபத்திரியுமிளகுதானும், வாமானமென்றதொருகச்சூர் தானும் வாகனபச்சை யென்ற பூரமாமே. 781

பூரமாங்கஸ்தூரி குங்குமப்பூபுகழான ரோசனையும் திப்பூண்ட ப்பா, காரமாங்குடோரியது சமனாய்க்கூட்டி கருவாகயெளநீரால ரைத்துமைபோல, தீரமாங்கடலைபோலுண்டைசெய்து திறமாகநிழ லுலர்த்திப்பதனம்பண்ணு, வீரமாமதன்ரதி தன்னோடொக்க விரு ப்பமுடன்றாம்பூலம் அருந்துவாயே. 782

அருந்துகையாலுன் மீதிலிச்சைகொண்டு அணையவேயெண்ண மதுமிகவுண்டாகி, திருக்கிவேபோகமது செய்திட்டாலும் தீராது மாதாமேலாசையப்பா, பொருந்தவேதேகமதுகரிப்பேயில்லை பொங் காது விந்ததுவுங்கட்டிப்போகும், முருந்தமுடன் றாம்பூளமருந்திப் பின்புகொற்றவனே யெளநீரையாண்டிடாயே. 783

உண்ணயிவேபித்தமது கீழ்நோக்காகும் வுகாரமென்ற மயக்க மதுமேமேறுது, திண்ணமுடன்கலவியது மன்மதன்போல் திகட் டாது மாதர்மேலாசை நீங்கா, உண்ணமதுமிகவாகு மெந்தநாளும் இளைக்காதுதேகமதுகற்றாணுகும், வண்ணமுடனிப்பாகம் யாருஞ் சொல்வார்வையகத்தோர் சித்தாடச் சொன்னதாமே. 784

பொன்மைகாகிதங்கள் ஓட்டம்.

தாமானமையொன்று சொல்லக்கேளும்சார்பானகாகிதத்தின் தங்கவர்ணம் காமானமஞ்சளென்ற கோபிதன்னால் கலரவிடுவிளாம் பிசினைச்சயனதாக, பூமான்போலோருருவட் யெழுதியப்பாபொங்க முடனவ்வுகுவில் தூவக்கேளு, வேமானமானதொருசரக்குசொல் வேன் வித்தகனேமேன்மையுடன் செய்துபாரே. 785

செய்யவே சாரமதுபலமொன்றுகும் சேர்மானங் கெந்தியொரு பலமொன்றுகும், துய்யவே சூதமதுபலமொன்றுகும் துப்புறவாம் வெண்வங்கம்பலமொன்றுகும், நையவேகாரமதுசீனக்காலாம் நாட் டமுடன் கல்வமதில் பொடித்துநன்றுய், பெய்யவேபொடியாக்கிகுப் பிக்கிட்டு யென்மகனே கல்லாலேசில்லுபோடே. 786

போடவே சீலையதுவனுவாய்ச்செய்து பொங்கமுடன்களவாயா ஞ்சட்டிதன்னில், கூடவேமணலதனை பாதிகொட்டி குப்புறவாய்புட் டிநடுமையம் வைத்து, மூடவேமணல்தனை மேலேகொட்டி மூக்கிய மாய் சட்டிகொண்டு மேலேமூடி, நீடவே சீலையதுவனுவாயச்செய்து நினைவாகரவிதனிலே காயப்போடே. 787

காய்ந்தபின்புவாலு கையாமேந்திரத்தில் கருவாகத தீமூட்டி யெட்டுசாமம், தேர்ந்திடவே தானெரிப்பாய் மைந்தாகேளுதோற்ற முடன்பதங்கமது யேறிநிற்கும், மாய்ந்திடவேசொர்ன மென்றபதங் கந்தானும் மகத்தான பதங்கத்தை யெடுத்துக்கொண்டு, வாய்ந்தி டவேமுன்சொன்னவரணந்தன்னில் மார்க்கமுடன் றுன்தேய்க்க சொலிப்புண்டாமே 788

சொலிக்கவே யெவ்வர்ணம் மாணுலுந்தன் சூச்சமுடன் முன் னெழுதிமேலேதூவு, பலிக்கவே பிசினியது பதங்கந்தன்னை பாகமு டன்தானிழுக்கும் பண்மைப்பாரு, ஒலிக்கவே ஜெகசோதி யென்ன சொல்வேனுத்தமனே ரூபலாவர்ணந்தோறும், செலிக்கவேபதங்க மதுசொர்னமென்பார் பேரானவெள்வங்கக்கூத்துதானே. 789

கூத்தானகாயிதங்கள்வரணபேதம்கூறுவேன்மாணுக்கள் பிழை க்கவென்று, நாத்தானவெள்வங்கம் சூதந்தானும் நாயகனேவரிதாக

மடல்துத்தந்தான், காந்தானலிங்கமுடன்செங்கால்பச்சை கருவாரு நாகமொடுகெந்திதானும், தூத்தானசாரமுடன் மதியும்போடு துடியானகண்டரோடு பேதியாமே. 790

பேதியாம்வரப்பொடியும்பச்சைகோபி பேரானதாரமுடன்சங் கால்பச்சை, சோதியாம்மித்தனையும்வரணபேதம் தோராத ரூபமது மதிகங்காட்டும், வாதியாம்கண்டறிவார் சரக்கின்பேதம் வகையுடனேமற்றவர்கள் காணமாட்டார், நீதியாமித்தனையு மாறுதாரம் நிலையானவரணத்துக்குறுதியாமே. 791

நேத்திரரோகத்தயிலம்

உறுதியாமின்னமொரு பாகம்பாரு வுண்மையா யுரைக்கிறோம் பண்பதாக, நிறுதியாய்நெல்லிக்காய்சார்தானுழி நீடானகையான்சார்சாருழி, பறுதியாமுகக்கைச்சார்நாழியாகும், பாங்கான வெள்ளர்சார்தானுழி துறுதியாம்யெள்ளெண்ணெய் படிதானென்றுதுடிப்புடனேயாவின்பால் படிதானென்றே. 792

ஒன்றானயெளநீருபடிதானென்று வுத்தமனேயிதிற் சேர்க்கும் மருந்துகேளு, பன்றானகற்றவகைகடுக்காய்தான்றிபாங்கானசிவதையுடன்நெல்லிதானும், வன்றானவிலாமிச்சுவெட்டிவேறு தாக்கான சந்தனமுமகிலுங்கூட்டி, குன்றானநன்னாரி கோரைதானும்குறிப்பான பச்சிலையுமொக்கச்சேரே. 793

சேர்க்கவேயதிமதுரம்தேவதாரம் சிறப்பானகச்சோலம் சீரங் கூட்டி, பார்க்கவேமுட்டியுடன்சாம்பிராணி பாகமுடன்யேலக்காய் கோஷ்டந்தானும், தீர்க்கமுடன்வலம்புரியுமிடம்புரியுமாகும் திறமானசீரகமுமொக்கக்கூட்டு, ஏர்க்கவேசடாமாஞ்சி பூலாதானும் யெழிலானதண்ணீர்மிட்டான் கிழங்குதானே. 794

கிழங்கானசறக்கெல்லாமொன்றாய்க்கூட்டி கெணிதமுடன் வகைவகைக்குப் பலந்தான்காலாம், தங்கானசரக்கெல்லாமொன்றாய்க் கூட்டித் தயவாகதேங்காய்பால் தன்னலாட்டி, வழங்கானயெண்ணைதல்கலக்கியப்பாவாகுடனே மெழுகுபதம்தன்னிற்காச்சிபழக்கமுடன்கணபதியைபோற்றியேதான் பாகமுடன்சிவப்பதாய்சாச்சிடாயே.

காச்சவேயெண்ணைதனை வடித்துக்கொண்டு கலங்காமல்சீஷாவிலடைத்துமைந்தா, பாய்ச்சலுடன் வாரத்திற் கிரண்டுமுறை பாலகனேமுழுகிவரப் பலனைக்கேளு, தீச்சலென்றபிடரிவலி சன்னிபாதம்

திகழானமயக்கமுதல் காணுதோடும், மாச்சலுடன் நேத்திரத்தின் ரோகம்போகும் மகத்தானவொருதலைநோய் யேகும்பாரே. 796

ஏகுமேகபாலவலிசன்னியாதம் யெழிலாவதலைகனப்பு யெல்லா மாறும், போகுமேமந்தாரகாசம்போகும் பொலிவான கண்கூச்சல்பு ழுவெட்டும்போம், சாருமேகண்ணில்நீர் வடிதலும்போம்சார்பானகு த்திருமல்சன்னதாகும், பாகுடனேயித்தயிலம் கொள்ளும்போது ப றக்குமடாநேத்திரநோயகலும்பாரே. 797

அகலுமேபத்தியமோயரையக்கேளு அப்பனேகரப்பனென்றப தார்த்தந்தள்ளு, நிகலவேபகல்நித்திரைக் கொள்ளலாகா நீடுழிநாள் வரைக்கும்போகமாகா; தாகவேசீதளமாம் பண்டமாகா தாக்கான புளிகையுமஞ்சுகமாகா, புகலவேகாலாங்கி நாயர்பாதம் புகழுடனேயா ன்வணங்கிபுகன்றிட்டேனே. 798

பகன்றிட்டேன்தயிலமது யென்னசொல்வேன்புகழானசந்தனு திபிதற்கொவ்வாது, தகன்றிடசாத்திரத்தி லநேகமுண்டு தக்கவே யாருந்தான்சொல்லவில்லை, அகன்றிடசாத்திரத்தி லனேகமுண்டு அப்பனேயான்சொன்னகவிபோல, பகன்றிடநாதாக்கள் முனிவர் தாமும் பாடினார்கோவைகளுமனந்தமுண்டே 799

உண்டானசாத்திரங் களனேகமுண்டு வுத்தமனே யென்போல யாருஞ்சொல்லார், திண்டானபோகழாராயிரந்தான் திரட்டினேன் சத்தககண்டத்திறமதாக. பண்டானசீனபதியுலகத்தாற்குப் பலபல வாயோதிவைத்தேன் பான்மையாக, சண்டானமானதொரு தேசத் தாற்குச் சாற்றினுல்பாவம்வருமென்னலாமே. 800

சுடாமணித்தயிலம்.

என்னலாமின்னமொரு கருமானங்கேள் யெழிலானதயிலமது மின்னஞ்சொல்வோம், பன்னவேசதாவேருமூலிதானும் பாகமுடன் சார்நாழிதானேயாகும், நன்னயமாய் நிலாமல்லிமூலிச்சாறும்நாட்டி லுள்ளபொன்முசுட்டைசார்தாநாழி, தன்னயமாய்சிறு செங்கழுநீர ப்பாதண்மையுடன்சார்நாழிதானுங்கூட்டே. 801

கூட்டவேதைவேளைச்சாறுநாழி குணமானபாவட்டைச் சாறு நாழி, நீட்டமுடன்தாமரைப்பூசாறுநாழி நேருனகொத்தான்சார்சா றுநாழி, பாட்டமுடன்முதியாகுச்சாறுநாழி பாங்கான குமரிச்சார் சாறுநாழி, வேட்டவென்றதைவேளைச்சாறுநாழி தேனுனமனேன்ம ணியாள் சாறுகூட்டே. 802

கூட்டியேநல்லெண்ணை படிதானென்று குணமானவாவின்பால் படிதானென்று, நாட்டமுடன்கடைசரக்கு சாற்றக்கேளு நலமான கிராம்புடனேயேலந்தானும், வாட்டமுடன்சாதிக்காய் சாதிபத்திரி வளமானகுரோசானி யோமந்தானும், நீட்டமுடன் தக்கோலம் பரங்கிப்பட்டை நேரானவால்மிளகு சுக்குதானே. 802

தானனசுக்குடனே கருவாய்ப்பட்டை சாதகமாய் கடுக்காயும் தான்றிமுத்தம், வேனனநெல்லிக்காய் மிளகுதானும் விருப்பமுடன் கொடிவேலி பட்டையப்பா, பானனபாற்சுறண்டி பட்டைதானும்பாங்கானவலம்புரியும் இடம்புரியுந்தானும், கோனன முசுட்டையுடன் தும்பைதானும் கூரானசெம்பூரான் பட்டைதாமே. 803

பட்டையுடன் கருஞ்சீரகம் கார்போகந்தான் கருவானகிச்சிலியும் பச்சிலையுந்தானும,திட்டமுடன் வகிற்கட்டை தேவதாரி திடமானசந்தனமும்பூலாவாகும், குட்டமருங்கவிப்பமலை தீண்டாப்பாளை குறிப்புடனேபட்டையொடு குறிஞ்சான்வேறும், நுட்பமுடன் விராலியிட பட்டைதானும் நுணுக்கமுடன் யாவாரைப் பட்டைதாமே.

தாமானபட்டையெல்லா மென்றதாக தாக்குடனே வகைவகைக்குகளஞ்சிரண்டு, சாமானமானதொருபற்பந்தானும் சாங்கமுடன்றுனெடுத்து தேங்காப்பாலில், தூமானமாகவல்லோ ஒன்றாய்க்கூட்டித்துப்புரவாய் தானரைப்பாய் மைபோலப்பா, நாமானநூல்வேதப்படிதான்பாரு நாயகனே மூலியிடக்கூடப்போடே. 805

போடவேதான் கலக்கியொன்றாய்தானும் பொங்கமுடன் தானெரிப்பாய் மெழுகதாக, நீடவேதீயாறிஎடுத்துப்பார்க்க நிலையான தயிலமது வென்னசொல்வேன், கூடவேபச்சையென்ற பூரந்தானும் குணமான சாம்பிராணிக் களஞ்சிகூட்டு, தேடவேகுங்குமப்பூ கஸ்தூரிதானும் தெளிவானரோசனையும் பொடித்துபோடே. 806

பொடியுடனே தான்போட்டுயாறவைத்துப் புண்ணியனேமுழுகிவரப்பலனைக்கேளு, நெடியுடனேதும்மலரும் சீதளம்போம்நெடிதானகபமுதலும் காணாதோடும், கொடிபோன்ற நேத்திரன் பாலம்போகும கொடிதானசுயரோக மகன்றுபோகும், துடியான கண்ணிமையிலூறல்போகும் தூக்கமுடன் சோம்பலது மகலும்பாரே.

பாரேதான்கண்ணோய்கள் தொண்ணூற்றாறும் பாங்கானயிமைத்தடிப்பு புள்ளிபோகும். நேரேதான்வாயுவெண்பதுவும் போகும்நெ

டிதான சேத்துமங்கள்கீழ்நோக்காகும்,கூரேதான்மயக்கமொடுவாந்தி போகும் குணமாகும்விக்கலொடு பொருமல்போகும்,தேரேதான்பீனசமுமெட்டுபோகும் தெளிவாகும் கண்ணிரண்டும் தெளிவாந்தாமே.

சூதவெண்ணை.

தாமானகருமான மின்னமொன்று சாற்றுகிறேன் மாணுக்கள் பிழைக்கவென்று, கோமானுக்கொப்பான சூதராசன் குறிப்பாகத் தானெடுத்து சேர்தானப்பா, நாமானகண்டாகு சேர்தான்ரெண்டு நலமான துமபைப்பூச்சாற்றிலே, சாமானசாமமொரு ரெண்டதாகசாங்கமுடன் தானரைப்பாய் சாகுமட்டே. 809

மாட்டானசூதமது மடிந்துசொல்லும் மாசற்றவெண்ணையது யாகவென்றால், திட்டமுடன் முமறியினுற் கழுவிப்போடு திரளான வெண்ணையது மைபோலாகும்,சட்டமுடன் வெண்ணைக்கு சப்தமில்லைசாதகமாய் கைதனிலே யெடுக்கலாகும், நட்டமில்லைபத்துக்குபொன்று தங்கம் நாதாக்கள் முறைப்படியே கூட்டிக்கொள்ளே. 810

கொள்ளவென்றால் யேமரசவெண்ணையாச்சுதோட்டான குறுக்குவழிமேவலாச்சு, எவ்வளவுகோளாறு நேராதப்பா யெழிலானசூதமதுமடிந்ததானல், விள்ளவேயெவராலு முடியாதப்பாவீணிலே சுட்டலைந்தார் கோடாகோடி, கொள்ளைகொள்ளப்போனவற்குஇந்தப்போக்கு குறுதிவழிகிடைத்தாலே சித்தனமே. 811

சித்தனய்ப்பிறந்தாலும் பிழைக்கவேண்டும் சீரானசாஸ்திரத்தையறியவேண்டும், சுத்தமுடன் தியானிபோலிருப்பான்மட்டைசுந்தரம்பேசியல்லோ மொழியுங்காணுன், நித்தமுடன்சிவயோக நிலையில்நின்று நிர்மூடப்பயல்களுக்கு வேதஞ்சொல்வான், கத்தனைப்போல் பிரமசிருஷ்டி செய்வேனென்பான காசினியில்கதைமுடிக்கும் கழுதையாமே. 812

ஆமேதான் புல்லறிவுவாளனுல் அப்பனே அப்பதத்தை மனதிலுன்னி, நாமேதான்சொன்னபடி ரிஷிகள்பக்கல் நலமுடனேசென்றுமல்லோ நயமும்பேசி, போமேதான் காலமுதல்வீண் போகாமல் பூவுலகில் புண்ணியனுயாவதற்கு, நேமமுடனஷ்டாங்க நிலையிற்சென்று நேர்புடனே குருபதத்தை மனதிலுன்னே. 813

உன்னியேநிற்கையிலே வாமிவந்து உத்தமனே யுந்தனுக்குவழியுஞ்சொல்வாள், கன்னியெனும் மயேஸ்வரியாள் நிற்கும்போது காவலனே கண்டுமன மயங்கவேண்டாம், பன்னவே யுந்தனுக்கு பிராண

முடன்வயித்தியத்தைக்காணூர்கோடி, பட்டலைந்துகெட்டவர்கள்பா டுபட்டுபதமிழந்துபோனவர்கள் கோடாடிகோடி, திட்டமுடன்சாஸ் திரத்தைப்பாருமற்றுன் திடங்குலைந்துநலிந்துபோனூர்தாமே.

போனூரேமூதுலகில்பெரியோர்யாவும் பொலிவான சாஸ்திரத் தைப்பொய்யென்றெண்ணி, ஏனோதான்மாநிலத்தில் சுட்டுக்கெட்டு யேனிதங்களாகவல்லோ மாண்டுபோனூர், நானேதான்கண்டமட்டுஞ் சாஸ்திரத்தை நன்குடனேயாருய்ந்து பலநூல்கண்டு,பானுமதிசுடர் போலேதிரட்டியல்லோ பாடிவைத்தேன் சததகாண்டம் பண்பாய் தானே. 195

பண்பானசாஸ்திரத்தைபாடிவைத்தேன் பாரினிலேமாண்பரெ ல்லாமறந்துபோனூர், தின்பானசீனபதி மார்க்கத்தோர்கள் திறமுட னேகண்டறிந்து யெடுத்துக்கொண்டார் நண்பானசாஸ்திரத்தைமெ ய்யென்றெண்ணி நயமுடனேபலம்விளையுமென்றுகந்து கண்பான நூற்கோர்வையாவுங்கண்டு காசினியில் மாந்தருக்கு காநதினேமே.

சேப்பிடுவித்தை

கருதலேவயின்னமொருகருமானங்கேள்காசினியில்மானிடர்கள் பிழைக்கவென்று. துருதமுடன்ஜாலமென்ற வித்தை சொல்வேன் தொல்லுலகில்செப்பிடுவித்தைகண்டீர், பருவமுடன் கன்னியென்ற பெண்ணைத்தானும் பாங்குடனேஜோடினைகள்மிகவேசெய்து, உருவ முடன்கைச்சிலைபாங்கையிலீந்துஉத்தமனேவாளுமொரு கையிலீயே.

ஈபவேலோகமென்றவாய்விஞலே யெழிலானபிரதமைகளொன் றுசெய்து, மெய்யுடனேரூபமதை தானமைத்து மேன்மையுடன்கா ந்தமென்றசத்தைதானும், கைதனிலேதாருக்கி சேர்வைகொண்டு கச டறவேயிரும்புக்குக்காரமேத்தி, பெய்யவேயிடைகண்டு யினமுங்க ண்டு பேரானகருக்குவவுந் தானுங்காணே. 198

காணவென்றுப்பிரதமைக்குவுயிரேயில்லை காசினியில்வாவென் றரூபமப்பா, தோணவேரூபமதுவார்த்தையில்லை தோற்றமுடன்பார் வையதுஒளியேயில்லை, மேணவேகண்ணுக்குவினோதவித்தை வேடிக் கைப்பார்த்தவர்க்குப் பகடியாகும், ஊணவேவடகரத்தில் பதுமை யேந்திவுத்தமனே யிடகரத்தில்வாளையீயே. 199

வாளுடனேகேடகமுங் கையிலேந்திவளமையுடனிடப் புறத்தி ல்மாளினுலே, தாளுடனே பூமிதனிலிருந்துகொண்டு தகமையுடன் கேடகத்தைப்பதுமைமீதில், மாளுவதுபோலாகவாளைவீசி வல்லுயி ரைவாங்குகின்றவீரனைப்போல், கோளுகளுநேராமல் குமரிதன்னுல் கொற்றவனைவாளுதனை சக்கரத்திலீயே. 200

சக்கரமாம் வாளுதனை கேடகத்திலேந்தி சட்டமுடன்முன்பின்னாய் பிரட்டியேதான், மிக்கவுடல் கீழ்விழவே வாளும்மேலேமேலான வாளுமது பதுமைகீழே, தொக்கவுடல் பதுமையது மேலேயாகும் தொல்லுலகில் வாளுமது கீழேயாகும், தக்கபடி செப்பிடுமாஞ்சாலந் தன்னில் சட்டமுடன் பதுமையது தோரொண்ணாதே. 201

தோர்க்காது பதுமையது வாளினாலே தொல்லுலகில் பதுமையது மேலே நோக்கும், பார்க்கவே லோகத்து மாந்தருக்கு பாங்கான செப்பிடு ஜெகஜாலந்தான், ஏர்க்கவே வதிசயத்தை மிகவேகாட்டும் யெழிலாகபிடிப்பார் மாந்தர்கண்டீர், மார்க்கமுடன் மாந்திரீகமென் பார்காணீர் யென்மகனே ஜாலமென்றவித்தைதானே. 202

வித்தானவித்தையிது ஜாலவித்தை மேதினியில் ஜெகஜாலவித்தையப்பா, சித்தானசித்தர்முனி ரிஷிகள்தாமும் சிறப்புடனே பூவுலகில்ஆடும்வித்தை, சுத்தானகோட்டையிது யின்னஞ்சொல்வேன் சுரூபமென்ற காந்தமது கோட்டையப்பா, குத்தான கல்லதுதான் நடுமையத்தில் கொற்றவனே சங்கிக ளணிபாய்மாட்டே 203

மாட்டையிலே நடுக்கம்பப்மீதிருந்து நடுவான குத்துக்கால்மீதிரங்கி, கோட்டையது வாசலது காந்தக்கோட்டை கொப்பெனவே நடுவாசல் வந்துநின்று, நீட்டமுடன் கன்னிகையில் வாள்கொடுத்து நீளமுடன் நெடுக்குவரை சுத்திவந்து, மூட்டமுடன் கேடகத்தை கோட்டைமீதில் முனைநடுவாம் மத்திபத்தில் முன்னேவையே.

வைத்துமே தலைகீழாய் சுத்திவந்து வளமுடனே குத்துக்கல் மீதிருந்து, குத்துடனே பிரதமையை கேடகத்தால் குறிப்புடனே நேர்பார்த்து பாரின்மீது, எத்தனுடன் கேடகத்தை கையிலேந்தி யெழிலான பிரதமையை மேலேவைத்து, சுத்திப கோட்டைவழி தான்கடந்து சூட்சமுடன் பிரதமையை கீழ்வையே. 205

கீழானபதிதனிலே பிரதமையும்நிற்க கீர்த்தியுடன் கேடகமுந் தழுவிவிளையாட, தாழான பூமிதனில் கேடகமுநின்றுசட்டமுடன் பிரதமையும் யெகிறிகுத்த, சாழான கோட்டைக்குள் சண்டையதிவேகம் சாங்கமுடன் பத்மயுகம் சரிமுறிதலாக, நீழான செகஜால வித்தையிதுதானுந் நீணிலத்தி லதிகமெனும்பதுமைவித்தைதானே.

பதுமையாங் கோட்டைக்குள் காவலதிகாரி பாங்குடனேயெதிர்நின்றுபேசும் படைதன்னை, புதுமையுடன் பிரதமைதா னெழுந்

துபுகழ்ச்சியுடன் கேடகத்தின் கீழிருந்து, கதுமையுடன் கேடகத் தைதலைமேல்கொண்டு களிவுடனே சதாகாலம் நடிக்கச்செய்யும்மது ரமுடன் யெசட்ணியால் பேசசெய்யும் மகாகோடி விநோதங்க ளின் னங்கேளே. 207

பிரதமையைக் கன்னிப்பெண் பிரம்பாலடித்தது.

கேட்கையிலேகன்னிகையாள் பிரம்பெடுத்து கிருபையுடன்வச னிக்கும் போதுமங்கே, நீட்கமுடன் பிரதமையும் வாய்திறந்து நிட் சயமாய்முன்னின்று பேசும்பாரு, வாட்கையுடன் கேடகத்தினுத்தங் கண்டுவளமையுடன் கைதொடுத்து வார்த்தைகூறும், வேட்கமுடன் குறளியின்றன் வசியத்தாலேவேடிக்கைவிநோதவித்தைபேசும்பாரே.

பேசுகையில் மாந்தரெல்லாம் பிரமைகொண்டு பேருலகில்செப் பிடுகைவித்தைபோல, வீசுதமிழ்க்கலிவாணர்முனிவர்தாமும்விண்ணு லகிலிம்முறைபோற் சொன்னதில்லை, காசுபணஞ் செலவழித்தோர் கோடியுண்டுகாசினியிலென்முறைபோற்செய்ததில்லை,மாசுமறையில் லாமல்போகர்தாமும் வசனித்தோம்மானிடர்கள்பிழைக்கவென்றே.

மகாகாயகற்பசெந்தூரம்

பிழைக்கவென்று யின்னமொரு கருமானங்கேள் பேரானசீன பதிமாந்தருக்கு, தழைக்கவே காயாதிகற்பஞ் சொன்னேன் தாரணி யில்திரேதாயினுகத்திலப்பா, முழக்கமுடன் காலாங்கி நாதர்தாமும் முனிவருக்கு தானுரைத்த காயகற்பம், வழக்கமது பிசகாமல்யானு மல்லோவசனித்தேன் கலியுகமாய் முதலிற்றானே. 210

தானான கலியுகத்தி லடியேன்றானும் தகமையுடன்குளிகையது பூண்டுகொண்டு, கோனான யெனதையர் காலாங்கிதம்மை குருபத த்தையெந்நாளு மனதிலுன்னி, தேனான சீனபதிமார்க்கஞ் சென்று தெளிவுடனே யானுரைத்தேமுறைமையோடு, வேனானவெளியரங்க மாகவல் லா விருப்பமுடன் பாடிவைத்தேன் போகர்தாமே.

தாமான சீனபதி மார்க்கத்தோர்கள்தாரணியிலிவ்வேதையதிக மென்று, பூமானும் யோகிகளும் ரிஷிகள்தாமும்பொங்கமுடன்செய் வதற்கு மனதிலுன்னி, காமானமாகவேதான் சத்துருவைக்கண்டு கவனமுடன்மித்திருவையொன்றாய்ச்சேர்த்து, நாமேதான்சொன்ன படிசோதித்தல்லோ நலமுடனே சீனத்தார் கண்டார்காணே.

காணவென்றால் வெகுகோடி காலந்தானும் கருவான நூலெல்லாமுளவுபார்த்து, தோணவே சரக்கெல்லாங் கண்டாராய்துதோற்றமுடன் சேர்தித்தார் மித்திருதன்னால், நாணவே குகைதோறும் சோதித்தல்லோ நலமுடனே சத்துருக்கள் மிகவாராய்ந்து, பூணவே யோரளமாய்ச் சத்தையெல்லாம் புகழுடனே தானெடுக்கும் விபரங் கேளே. 213

அயச்சத்து.

கேளேதான் அயத்தினுட சத்துசொல்வேன்கெவனமுடன் அயமதுதான் சேர்தானென்று, பளேதான் போகாம லோகந்தன்னை பக்குவமாய் பொடியாக யெடுத்துக்கொண்டு, கோளேதான்நேராமல்நிம் பழத்தால்கொற்றவனே நாற்சாமமறைத்தபோது, வீனேதான்களிம் பற்று வெளுக்கும்பாரு விருப்பமுடன் முறியினால் கழுவிப்போடே.

போடேதான் அயப்பொடிக்கிதிரட்டிமைந்தா பொங்கமுடன் சாரமது காரமாகும், நீடேதான் சீனமது கல்லுப்பாகும் நெடிதான சம்பழத்தின் சாற்றினாலே, கூடேதான் தானரைப்பாய் ரெண்டுசாமங்குமரவே சலமதனாற் கழுவிப்போடு, பாடவே அயமதுவும் சுத்தியாச்சு பாலகனே சத்தெடுக்க வகைபைத்தேடே. 215

வகையான காரமது பலம்பத்தாகும் வளமுடனேசெவ்வல்லிப் பூச்சாற்றாலே, தொகையுடனேபத்துநாளறைத்தபோதுதுறைபோடு வெண்கார மெழுகுமாகும், பகையான யெரிகாலன் பாலினாலேபாகமுடன் றனறைக்கவிவரங்கேளு, சிகையுடனேவரைப்பொடியுமொன்றேயாகும் சீரான காரமது நேர்தான் சேரே. 216

சேர்த்துமே யெரிகால பாலினாலேசிறப்புடனே தானறைப்பாய் நாலுசாமம், பார்த்துமே வச்சிரமாங் குகையில்தானும் பாங்குடனே தாமெடுத்து சீலைசெய்து, பூர்த்தியுடன் ரவிதனிலேகாயவைத்துபுகமாக சரவுலையில் வைத்தூதி, தீர்த்துமே வயமதுவு முருகில்லோ திறமான சத்ததுவு மாகுந்தானே. 217

தானனசத்துக்குபின்னங்கேளு தகமையுடன்வெங்காரங்கூடச் சேர்த்து, பானான முன்சொன்ன தத்தைதானும் பாகமுடன்தானறைப்பாய் யெரிகாலந்தான், தேனான தேனதுவுங் கூடச்சேர்த்து தெளிவாக முன்போலவறைப்பாயப்பா, கோனனயெனதையர்காலாங்கிநாதர் குருசொன்ன சொற்படியே செய்திடாயே. 218

செய்யவேவச்சிரமாங்குகையில்வைத்துசெம்மையுடன்ஓட்டை வைத்துச் சீலேசெய்து, பையவேரவிதனிலே காயவைத்து பான்மை யுடன் சாவுலேயில் வைத்துவூது, துய்யநலல்வயமதுவுங் களங்குமா கும்துப்புரவாய் மூசைதனையுடைத்துபாரு, பொய்யல்லாவயமதுவும் மணிபோல்நிற்கும் பொலிவான சத்தென்ற மணியைவாங்கே.

வாங்கியே மணியெடுத்து யலேயவேண்டாம் வளமுடனே மணி தனையே யுடைத்துப்பாரு, தூங்கியேதிரியாதே மாண்பாகேளுதுய்ய நல்லவயமதுவுஞ்சத்தேயாச்சு, ஓங்கியேமணிதனையேபதனம்பண்ணு வுத்தமனே யின்னமொருமார்க்கம்பாரு, ஏங்கியேநிற்காதேயின்னஞ் சொல்வேன் யெழிலான வப்ரேகசத்தைவாங்கே. 220

அப்ரேகசத்து.

சத்தான சத்ததுவு மின்னஞ்சொல்வேன் தாரணியில் நாதாக் கள் முனிவர்தாமும், சித்தான ரிஷிதேவர் சொன்னதில்லை சீர்பெற டவதொகுப்புடனே வடியேன்றானும், முத்தான நூலெல்லாம் கண் டாராய்ந்து மூதுலகில் கீர்த்தியுடன் சொன்னேன்யானும், புத்தான கிருஷ்ணதிரேகர் தன்னைபுகலுகியேன் மாணுக்கள்பிழைக்கவென்றே

பிழைக்கவே நவநீதஞ் சேர்தான்ரெண்டு பிழைமோசம்வாராம லெடுத்துக்கொண்டு, தழைக்கவே முன்சொன்ன காரமப்பாசாங்கமு டன் நாலுக்குவொருபாகந்தான், கழைக்கவேகுழிக்கல்லு தன்னிலி ட்டுகருவான தேனதனிலாட்டிமைந்தா, உழைக்கவே வச்சிரமாங்கு கையில்வைத்து உத்தமனே குகையில்வைத்து சீலேசெய்யே.

சீலேயென்றால்சீலேயதுகாரச்சீலே சீரானசுண்ணும்புச்சீலேயப்பா வேலேயெனும் ரவிதனிலே காயவைத்து விருப்பமுடன் சாவுலேயில் வைத்துவூது, காலேயது சாமமது தான்துவக்கி கருவுடனே சத்து தனையூதித்தீரு, மாலேயிலேமூசைதனையுடைத்துப்பாரு மன்னவனே சத்தென்ன வருணனுமே. 223

அருணனு மாதித்த னிதற்கொவ்வாது வப்பனே யப்ரேகசத்து மாச்சு, தருணமதுதப்பாமல் பின்னுங்கேளு தகைமையுடன்சத்து தனையெடுத்துக்கொண்டு, கருணையுடன் முன்சொன்னசத்துதானும் களிப்புடனே தானெடுத்துக் கல்வமிட்டு, வருணனுப்பு கரியுப்பு பொட்டிலுப்பு வகையுடனே தான்போட்டு வறைத்திடாயே.

அரைக்கையிலே யாறுவகை செயநீர்தன்னு லப்பனே தான
ரைப்பாய் நாலுசாமம், திரைக்கையிலே மெழுகுபதந் தன்னிலாட்டி
திறமையுடன் வச்சிரமாங் குகையில்வைத்து, குறைக்கையிலே சில்லி
விட்டுச் சீலைசெய்து கொற்றவனே ரவிதனிலே காயப்போடு, முறைப்
படியே ரவிதனிலே காயவைத்து முன்போலே சரவுலையிலேத்திடா
யே. 225

ஏத்தியே தீமூட்டி வுருக்கும்போது யெழிலான மூசையது
வழுகியேதான், நாத்தமுடன் நவநீதவாசம்வீசும் நலமான சாக்க
துவுமுருகிப் போச்சு, காத்திரமாம் குகைதனையே யுடைத்துப்பாரு
கருவான வப்ரேகசுத்துமாச்சு, சூத்திரமாமிப்பாகங் கண்டறிந்து
சுளுக்குடனேபாடிவைத்தேன் காண்டம்நான்கே. 226

நாலான காண்டமது யின்னங்கேளு நலமான சத்ததுவு முன்
போலேதான், காலானசூழிக்கல்லி லிட்டுமைந்தா கருத்துடனே
தேன்விட்டு யரைப்பாய்மேயும், பாலானவச்சிரமாங் குகையிலிட்டு
பாலகனேசீலையது வலுவாய்ச்செய்து, மேலான ரவிதனிலே காய
வைத்து மேன்மையுடன் தானெடுத்து செப்பக்கேளே. 227

செப்பவென்றால் சரவுலையில் வைத்தூது செம்மையுடன் நவ
நீதம் சத்துமாகும், ஒப்பில்லை யுனக்கிடு ஒருவருண்டோ வுத்தனே
நீயுமொரு சித்தனல்லோ, தப்பிதங்கள் வாராது சத்துதன்னால் தக
மையுடன் மூசைதனை யுடைத்துப்பாரு, மெப்புடனே சத்துமது
வெளியே வீசும் மேன்மையுட னிப்பாகம் பத்துமுறைதீரே. 228

தீரவென்றால் நவநீதசத்துமாகும் திறமையுடம் சத்துதனையெடு
த்துக்கொண்டு, காரமுடன் பூனீருசரியாய்ச் சேர்த்து கருத்துடனே
தேன்விட்டு யரைப்பாய்பின்னும், சாரமுடன் வச்சிரமாங் குகையில்
வைத்து பாலகனே சில்லிட்டு சீலைசெய்து, ஈரமதுபோவதற்கு ரவி
யில் வைத்து யென்மகனே காய்ந்தபின்பு யெடுத்துக்கொள்ளே.

கொள்ளவே சரவுலையில் வைத்தூது கொற்றவனே சத்தது
வை யென்னசொல்வேன், மெல்லவே மூசைதனை வுடைத்துப்பாரு
மேலான சத்ததுதா னென்னசொல்வேன், விள்ளவே சத்துதனை
யெடுத்துக்கொண்டு விருப்பமுடன் பீங்கானிற் பதனம்பண்ணு எவ்
வளவுங்குறையொன்று நேராதப்பா யெழிலான சத்தினுட வேகந்
தானே. 230

கெந்தகச்சத்து.

வேகமாமின்னமொரு கருமானங்கேள் விருப்பமுடன் கெந்தி
யென்ற சத்துசொல்வேன், பாகமாங் கெந்தியது சேர்தாநென்று
பாங்கானபூநாகஞ் சேர்தாநென்று, சாகமுடன் பூநாகம் மண்ணை

ப்போக்கி சட்டமுடன் யெரிகாலன்பாலாலாட்டு, மேகமென்ற வர்ணம் போலிருக்கும்பாரு மேன்மையுடன் காரமது காலாய்க்கூட்டி.

கூட்டியே தானரைப்பாய் நாலுசாமம் குமுறவே வச்சரமாங் குகையில்வைத்து, மாட்டியேசில்லிட்டுச் சீலைசெய்துமயங்காமல் ரவி தனிலே காயப்போடு, சூட்டியே வாலுகையா மேந்திரத்தில் சூட்சமுடன் நடுமையம் மூசைவைத்து, நாட்டமுடன் சத்துக்குத் துருத்திநாலு நயம்பெறவே யூதிடவே சத்துமாமே. 232

சத்தான மூசைதனை யுடைத்துப்பார்க்க சார்பான கெந்தியது சத்துமாகி, வித்தானபூநாகச் சத்தினாலே வீறான கெந்தியது சத்துமாச்சு, சுத்தான கெந்தியது சத்துமகீனால் சிந்தரனேவெகுகோடி வித்தையாடும், யுத்தான பூனாகந் தன்னிவப்பா பொன்னவகீன கெந்தியது சத்துமாச்சே. 233

ஆச்சென்று விடுகாதே யின்னங்கேளு வப்பனே காலாங்கி நாதர்வாக்கு, போச்சென்று வுலகத்தில் பொய்யாதப்பா பொலிவாக சித்தர் முனி ரிஷிகள்தாமும், நீச்சென்ற பூநாகம் மறந்தாரப்பா நீணிலத்தில் காலாங்கி தானாராய்ந்து, மாச்சனுட னிப்பாகஞ் சொன்னாரையா மண்டலத்தில் கண்டவர்க ளில்லைதானே. 234

தானான வேதமுனி ரிஷிகள்தாமும் தாரணியி லனேகவிதஞ் சொன்னாரையா, கோனான யெனதையர் காலாங்கிநாதர் குருசொன்னபடியளவா யானுஞ்சொன்னேன், பானான சத்துவகை சாத்திரத்தில் பாடினார் பலபேத வன்னமாக, தேனான யின்னூல்போ லாருஞ் சொல்லார் தெளிவாகப் பாடிவைத்தேன் காண்டம்நான்கே. 235

காண்டாமே மூாயிரத்தில் நடுக்காண்டந்தான் காசினியில்மாண்பர்கள் பிழைப்பதற்கு, தூண்டுகோல் போலலே யிந்நூல்தன்னை துறையோடு முறையோடுஞ் சொன்னேன்யானும், வேண்டியதோர் கருமான மின்னூல்தன்னில் விருப்பமுடன் பாடிவைத்தேன் நான்காங்காண்டம், ஆண்டகையா மெனதையர் காலாங்கிநாதர் அருளிருந்தால் பொருள் வாய்க்கு மன்பாய்த்தானே. 236

அன்பான கெந்தியது சத்துதன்னையப்பனே யாமுரைப்போமின்னுங்கேளு, தென்பான பிரிதிவியின் விளைவுமார்க்கம் தேசமுடன் செம்மண்ணும் பூனாகந்தான், முன்பாக முன்சொன்ன முறைபாற்சீறுனும் முக்கியமாய் கெந்தியிட சத்தைத்தானும், சன்பாக பூனாகஞ் சரியாச்சேர்த்து சட்டமுடன் தானரைப்பாய் சாமம் நாலே. 237

நாலான யெரிகாலன்பாலினாலே நயமுடனே தானரைக்கும் போது மங்கே, பாலானபாலதுவுங் கூடச்சேர்த்து பாகமுடன் சத்துதனை யுறவதாக்கி, சேலானசெம்பினுட சத்துதன்னால் செம்பை யென்ற பூனாகங்கெந்திசத்து, மாலான கந்தியது சத்துமார்க்கம் வை யகத்தி லாரெடுப்பார் வதிதந்தானே. 238

அதிகமாய் கெந்தியது சத்துதன்னை வப்பனே வச்சிறமாங் குகையில்வைத்து, கதிதமுள்ள மூசைதனி லடைத்துமைந்தா கவன முடன் சில்லுட்டுச் சீலைசெய்து, பதிதமுள்ளரவிதனிலே காயவைத்து பளிங்குபெற சரவுலையில் நடுமையத்தில், துதிதமுடன் கரி போட்டு வூதும்போது துடியான துரித்தியது நாலுமாட்டே. 239

மாட்டாநாற் சாமமுருக்கித்திரு மன்னவனே சத்தாரி யெடுத்துப்பாரு, நீட்டடாமூசைதனே யுடைத்துப்பாரு நிலையான கெந்தியது சத்துமாச்சு, கூட்டடா யிப்படியே பத்துமுறைதிரு குணமான பாகமிது சத்துபாகம், தீட்டடா கேந்தியுட சத்துதன்னை திறமுடன் பீங்கானிற் பதனம்பண்ணே. 240

நாகச்சத்து.

பண்ணவென்று லின்னமொரு பாகம்பாரு பாரினிலே நாதாக்கள் செய்ததில்லை, நண்ணமுடன் மானிடர்கள் பிழைக்க வென்று நயமுடனே காலாங்கிநாதர்பாதம், எண்ணமுடன் யான்வணங்கி பணிந்துபோற்று யென்மகனே யுங்களுக்காய்ச் சொன்னேன்பாரு வண்ணமுள்ள நாகமது சேர்தானென்று வளமையுடன் தானெடுத்து செப்பக்கேளே, 241

செப்பவென்றால் நாகமது சேர்தானென்று சிறப்பான சூதமது சேர்தானென்று, ஒப்பமுடன்காரமது சேர்நான்பாதி ஓகோகோ பூனீர் தான் சேர்தான்பாதி, செப்பமுடன் குழிக்கல்லி லொன்றாய்ப்போட்டு நேர்மையுடன் வாறுவகை செயநீர்தன்னால், தப்பிதங்கள்வாராமலரைப் பாய்மைந்தா தகமையுடன் றானரைப்பாய்சாமம் நாலே. 242

நாலானசாமமது வரைக்கும்போது நாயகனே நாகமது விந டங்கி, மாலானமயினமது போலேயாகும் மகத்தானதாளகமுங் கூடச்சேர்த்து சூலான நாகமது கற்பத்துள்ளே சூதமென்ற ராசாவுங் கூடச்சேர்த்து காலான கதிர்மேகந் தன்னைப்போல கண்ணுக்குத் தோன்றிடுமே மயினமாமே. 243

ஆமேதான் மயினமதை தானெடுத்து வப்பனேவச்சிரமாங் குகையில்வைத்து, தாமேதான் சில்லிட்டுச் சீலைசெய்துதகலமயுடன்

ரவிதனிலே காய்வைத்து, போமேதான் சரவுலையில் வைததுவூது பொங்கமுடன் துருத்தியது ரெண்டேயாகும், நாமேதான் சொன்னபடி நாகச்சத்து ராசாக்கள் கண்டதில்லை நளினந்தானே. 244

நளினமாஞ்சத்துதனை யெடுத்துப்பாரு நலமானநாகத்தின் சத்தேயாகும், பளினமுடன்சத்துதனை முன்போல்மைந்தா பாலகனே பின்னுமதைக் கல்வமிட்டு, குளிதமுடன் தாளகமுஞ் சூதம்சேர்த்து துகளறவேபூநீறுக் கூடச்சேர்த்து, மளினமுடன் வாறுவகை செயநீர்தன்னால் மார்க்கமுடன் றானரைப்பாய் மன்னுகேளே. 245

மன்னுநீ மயங்காதே யின்னுங்கேளு மதிப்புடனே தானரைப்பாய் நாலுசாமம், தென்னுநீ திறமுடனே மெழுகதாக்கித்தீரமுடன் வச்சிரமாங் குகையில்வைத்து, பொன்னுநீ சீலையது வலுவாய்ச் செய்து பொங்கமுடன் ரவிதனிலே காயவைத்து,என்னுநீ சொன்னபடி முன்போலப்பா யெழிலுடனே சரவுலையி லேத்திடாயே. 246

ஏத்தியேநடுமையம்தானிறுத்தி யெழிலுடனே சரவுலையையூதும்போது, சாத்திரத்திலுள்ளபடிதப்பாகாது தகைமையுடன் சத்ததுவும் யீயமாகும், கூத்தனுமே தானடுங்கும் வேதைமாற்கம் குவலயத்தில் ஒருவரால் கூறப்போமோ,நேத்தியுடன் சத்ததுவை யெடுத்துப்பாரு யென்னசொல்வேன் மக்களா யின்னுங்கேளே. 247

கேளேதான்நாகமது சத்துவாங்கி கெவனமுடன் முன்போல வறைப்பாய்நீயும், கோளேதான் வாராமல்குற்றம்நீங்கி கொற்றவனே நாகமது சத்துவாங்கி, பாளேதான் போகாமல் பின்னுங்கேளு பாகமுடன் முன்சொன்ன சரக்கையெல்லாம், தூளேதான் பொடிபண்ணி கல்வமிட்டு துப்புறவாய் செயநீரி லரைத்திடாயே. 248

அறைத்துமே யாறுவகை செயநீர்தன்னால் அப்பனேமயினம் போல் மெழுகதாக்கி, குறைத்துமே வச்சிரமாங் குகையில்வைத்து கொற்றவனே சில்லிட்டுச் சீலைசெய்து, திறைத்துமே ரவிதனிலே காயவைத்து தீரமுடன் வாலுகையா மேந்திரத்தில், முறைத்திடவே நடுமையந்தா னிருத்தி முசியாமல் கரியதனைக் கொட்டிடாயே.

கொட்டியே சததுதனை யூதும்போது குறிப்புடனே துருத்தியது ரெண்டதாகும், திட்டமுடன் நாற்சாம மூதித்தீரு திறமான குகைதனையே யுடைத்துப்பாரு, வட்டமென்ற பில்லையதாம் வுருகிநிற்கும் வளமான சத்ததுவுஞ் சொல்லப்போமோ, நட்டமில்லை நாகத்தின் சத்துதானும் நலமான தாரத்தீ னியமாமே. 350

ஆமேதான்நாகமது ஈயமானால் அப்பனேகோடான கோடிவித்தை, நாமேதான் சொன்னபடி யிந்தமார்க்கம் நலமுடனே பத்துமுறைசெய்யவேண்டும், தாமேதான் சத்தெடுத்துப்பதனம்பண்ணுசாங்கமுட யின்னமொரு கருமானங்கேள், வேமேதான்வங்கத்தின்சத்து சொல்வோம் விபரமுடன் மாணுக்கள் பிழைக்கவென்றே. 251

வங்கச்சத்து.

பிழைக்கவே வங்கமதுசேர்தானென்று பேரானசிங்கியது சேர்தானென்று, வழக்கமுடன்மனோசிலையுஞ்சேர்தான்பாதி வாகுடனே தானுருக்கிகல்வமிட்டு, பழக்கமுடன்தேனதுவைவிட்டுவாட்டிபளிங்குடனே வச்சிரமாங் குகையிலேந்தி, தழைத்திடவே சில்லிட்டு சீலைசெய்து தகமையுடன் ரவிதனிலே காயவையே. 252

காய்ந்தபின்பு வச்சிரமாங் குகைபைத்தானும் கனமுடனேசரவுலையில் வைத்துவூது, தீய்ந்திடவே குகையதுவு கழுகியேதான்திறமானவங்கமது வுருகிநிற்கும், பாய்ந்திடவே வங்கமது ளங்குமாகும் பாரினிலேசித்தர்செய்யும்வதையாச்சு, தோய்ந்திடவேதேதைமுகம் யாருங்காணர் தொல்லுலகில் கருவாளி காண்பான்பாரே. 253

பார்க்கவேவங்கமதை யெடுத்துக்கொண்டு பரிவாககல்வமதில் பொடியாய்ச்செய்து, தீர்க்கமுடன் முப்பூவுங்காலதாக திறமுடனே தேன்விட்டு யரைத்தாயானல், மார்க்கமுடன் மெழுகதுவும் வெண்ணைபோலாம் மயங்காமல்வச்சிரமாங் குகையில்வைத்து, ஏர்க்கவே மேல்மூடிசீலைசெய்து யெழிலாகரவிதனிலே காயவையே. 254

காயவேமூசைதனையெடுத்துக்கொண்டு கவனமுடன்சுண்ணம்புச்சீலைபின்னும், தோயவேயேழுசீலை பின்னுஞ்செய்து தோராமல்ரவிதனிலேகாயவைத்து, நேயமுடன் சரவுலையில் வைத்துவூது நேர்மையுடன்சத்ததுவும் மணியாய்ப்போகும், உபாயமுடன் மூசைதனையுடைத்துப்பாரு வுத்தமனேவெள்ளியென்ற மணிபோலாமே.

ஆமென்றமணியெடுத்து சொல்லக்கேளு வப்பனேசூதமதுநேரேயாகும், காமென்ற பாஷாணம்நேரேயாகும்கருவாகயிரண்டையுந் தான்வரைத்துமல்லோ, நாமென்றவங்கத்துக்கங்கிபூட்டி நாயகனே சுண்ணம்புச்சீலைசெய்து, தாமென்றரவிதனிலே காயவைத்து சட்டமுடன்குழல்தனிலேவுருக்கிடாயே. 256

உருக்கியே மூசைதனை யுடைத்துப்பாரு வுத்தமனேகளங்கமது யென்னசொல்வேன், நருக்கியே பின்னுமதை மூசையிட்டு நயமுடனேவுருக்கிப்பார்களங்குமாகும் பெருக்கியேகளங்கெடுத்துப் பின்னுங்கேளு பேரானயூசைதனையுருக்கப்பாரு, செருக்கமுடன்களங்துவு மென்னசொல்வேன் சிறப்பான போகரது யாகந்தானே. 257

தாம்பரச்சத்து.

பாகமாமின்னமொருகருமானங்கேள் பாலகனேமாணுக்கன் பிழைக்கவென்று, யூகமாம்தாம்பரத்தின் சத்துசொல்வேன் யுரப்பனமாலதின்சுத்தி பின்னுங்கேளு, நாகமென்றசிலவிஷத்தைநீக்குதற்கு நலமாகப்பூநீரில் சுத்திசெய்து, சாகமுடன்தாம்பரத்தைசுத்திசெய்ய சார்பானமுறையோடு கதைசொல்வேனே. 258

சொல்லவென்றால் தாம்பரமாங் கொடியகாலன் தொல்லுலகிலாலதுபோவதற்கு, வெல்லுகின்ற பூநீருசேர்தானென்று விளைதமுள்செம்பதுவுஞ்சேர்தான்ரெண்டு, கொல்லுகின்றவீரமது சேர்தான்காலாம் குணமானசீனமது சேர்தான்காலாம், புல்லுகின்றகருங்குன்றிசேர்தான் காலாம் புகழானசிற்றண்டஞ்சேர்தான்காலே.

காலானசரக்கெலா மொன்றாய்க்கூட்டி காட்சிபெறநல்லமதிலிட்டுமைந்தா, பாலானசெயநீராம்சாரநீராம் பக்குவமாய் தானரைப்பாய்சரக்கெல்லாம் மேலானசெரநீராம்சாமம்நாலு மேன்மையுடன் தானரைப்பாய்மைந்தாக்கேளு, கோலானமாத்திரைப்போல் செய்துகொண்டுகொற்றவனே நிம்பழத்தின் சாற்றலாட்டே 260

ஆட்டவென்றால்விதிசொல்வேன்மதியாய்க்கேளு வப்பனேசுத்தித்ததாம்பரத்தை, நீட்டமுடன்மருந்தையெல்லாம் தாம்பரத்தில் நீதியுடன் கீழ்மேலும்பூசிப்போடு, வாட்டமுடன்ரவிதனிலேகாய்ந்தபின்பு வகையுடனே வோட்டிலிட்டுசீலைசெய்து, தேட்டமுடன்கோழியென்ற புடத்தைப்போடு தெளிவாகபுடமாறி யெடுத்துப்பாரே.

பார்க்கையிலே செம்பதுவும் பொருமிகாட்டும் பதமதுதான்சரியாச்சுதாம்பரங்கள், தீர்க்கமுடன்பனைதனிலே யடித்தபோதுதிறமுடனேசெம்புக்குவதந்தான்போகும், மூர்க்கமென்ற வூரலதுயற்றுப்போச்சு முழுமக்கள்தாமடியார்செம்புவூரல், சேர்க்கையிலே யிந்தமுறைபத்து பாகம்செவ்வையுடன் புடம்போட்டு யெடுத்துப்பாரே.

எடுத்துமிகப்பார்க்கையிலே யென்னசொல்வேன் யெளிதமாஞ்செம்பதுவும்வத்தமேத்த, அடுத்துநின்றபேர்களுக்குமிந்தபாகறியாம

மற்செய்பவனேபுத்தியுள்ளான் தொடுத்தகுறிதன்முறைபோல்செய் யுமாசான்தோற்ருமல்கண்ணுக்குச் செய்வான்பாரு, கெடுத்துமேமு றைபோலசெய்துகாட்டிகெவனமுடன்வுட்கருவைகாட்டான்தானே.

தானுனதாம்பரத்தைஎடுத்துகொண்டு தண்மையுடன்குருசொ ன்னநேர்ப்பாகந்தான், கோனுனஎனதையர்காலாங்கிநாதர்குருசொ ன்னவாக் *துபோல்தாம்பரத்தை, மானுனதாம்பரத்தை சேர்ந்தான் கொண்டு மாட்டடாவச்சிரமாங் குகையிற்ருனும், வேனுனசெம்புநி ன்றுருகும்போது விருப்பமுடனதிற்போட சரக்குகேளே. 264

சரக்கென்ருல்வீரமனுவெள்ளையாகும் தாக்கானபாஷாணம்கெ வுரியாகும், திரக்கமுடன்காரமதுபூரமாகும்திகழானசூதமதுசரிநே ருரும், உரக்கமுடன்சரக்கெல்லாஞ்சரியாய்த்தூக்கி வுத்தமனேகல் வமதில்பொடியாய்ச்செய்து, இரக்கமுடன் தாம்பரத்துக் கிவைசேர் பாதி டுயழிலுடனேகிராசமது நினைவாய்போடே. 265

போடவேசெம்புருக்கிக்கிராசமீவாய் பொங்கமுடன்லகுவதாய் தாக்கிக்கொண்டு, நீடவேசெம்புதனையாற்ப்பின்பு நினைவாகமூசைத னையுடைத்துப்பாரு, கூடவேசெம்பதுவுங்களங்கமாகும் குணமான வூரலதுயற்றுப்போச்சு, வாடவேதிரியாதேவைந்தாகேளு வகுப்புட னேயிப்பாகஞ்செய்துபாரே. 266

பார்க்கையிலே செம்பதுவுங்களங்கமாகி பரிசுத்தகளங்கமது எ ன்னசொலவேன், தீர்க்கமுடன்களங்கதனை யெடுத்துக்கொண்டு தீர முடன்கல்வமதிலிட்டுமைந்தா, ஏர்க்கவேபொடிசெய்து மைபோலா க்கு யெழிலானதனில்வறைந்துமேதான், தீர்க்கமுடன் மூசைதனில டைத்துமைந்தா சிறப்புடனேசீலைசெய்து ரவியில்தாக்கே. 267

தாக்கவேமூசையதுகாய்ந்தபின்பு தகைமையுடன்சரவுலையில்வை த்துவூது, நோக்கமுடன்செம்பதுவும் ஊறலற்றுநொடிக்குள்ளே கள ங்கமென்றபேருமாச்சு, தூக்கவேசெம்பென்ற களங்குதானும்துரை யானவேதைமுகம் தன்னிற்ருேன்றும், வாக்கதுதான்தப்பாதுபோக ர்தாமும் வரமுடனேபாடிவைத்த வண்மையாமே. 268

## காயகற்பசெந்தூர சத்துவகை.

வண்மையாம்சத்தெல்லாஞ்சமனதாக வளமுடனே தானுருக்கி எடுத்துக்கொண்டு, தண்மையுடன்தங்கமது நாலுக்கொன்று தாக்க வேகளங்குடனே தங்கஞ்சேர்ந்து, திண்மையாம் களங்கதுவும் ஒளியு

விசும்தீர்க்கமுடன்களங்குக்கு யெட்டிலொன்று, உண்மையாம்கெந் தியதுகூட்டியேதான் உத்தமனேதானரைப்பாய் சாமம்நாலே.

பொற்றலை கையாந்தகரை.

நாலானசாமமதுவரைக்கும்போது நலமானசூமைதை யெட்டி லொன்று, வேலானபொற்றலையின் சாற்றுலாட்டிவிருப்பமுடன்பில் லையதுயதுலேசாய்தட்டி, மாலானரவிதனிலேகாயப்போடு மார்க்கமு டன்வோட்டிலிட்டுச்சீலைசெய்து, தாலானகெஜபுடத்தில் போட்டா யானல் தளிர்ச்சியுடன் வெந்ததுவும் கறுப்புமாமே. 270

கறுப்பானசெந்தூரந்தனையெடுத்து கருவாக்கையாளின்சாற்றி னலே, உறுப்பாகதானறைப்பாய்நாலுசாமம் வுத்தமனேமுன்போல பில்லைதட்டி, தெறுப்பானபில்லையதுகாய்ந்தபின்புதேற்றமுடன்வோ ட்டிலிட்டுச்சீலைசெய்து, குறுப்பானகெஜபுடத்தில்போட்டாயானல் கொற்றவனேசெந்தூரமாகுந்தானே. 271

தானனசெந்தூரஞ்சிவப்பதற்கு தண்மையுள்ளபுடமதுவுமைம் பதாகும், கோனனயெமதையர்காலாங்கிநாதர் குருசொன்னபடியா கபுடமேபோடு, மானனபுடமது மன்பதானல் மகத்தான செந்தூர ஞ்சிவப்புமெத்த, தேனனசெந்தூரந்தனையெடுத்து செப்புகிறேன்பி ன்னுமொரு பாகங்கேளே. 272

பொடிதலைமூலி

பாகம்போம்யெண்ணதே கெந்திதாரம்பகருமந்தசெந்தூரம்நா லுக்கொன்று, வேகமுடன்சரக்கதனை ஒன்ருய்ச்சேர்த்து விருப்பமு டன்சூதமதுயெட்டிலொன்று, சாகமுடன்சரக்கெல்லாமொன்ருய்ச் சேர்த்து சட்டமுடன்தானரைப்பாய்நாலுசாமம், நேசமுடன் பொ டுதலையின் சாற்றினலே நேர்ப்பாகதானரைத்து பில்லைதட்டே.

தட்டியேரவிதனிலேகாயவைத்து தகமையுடன்வோட்டிலிட்டு சீலைசெய்து, சட்டமுடன்கெஜபுடமாய் போட்டேயானல் சார்பான செந்தூரஞ்சிவப்புகாணும், நட்டமில்லாபுடமதுவுமைன்பதாகும்நய முடனேபாகமது தவறிடாமல், இட்டமுடன்புடம்போடச் செந்தூ ரிக்கும்யெழிலானசெந்தூரஞ் சொல்லொணதே. 274

சொல்லவென்ருல்நாவில்லைப்பாவுமில்லை சுந்தரளே சித்தர்செய் யுப்வேதையாச்சு, வெல்லவேசெந்தூரமார்க்கந்தன்னை விருப்பமுடன் காரம்துகொள்வதற்கு, புல்லவேயின்னமொருபாகங்கேளு புகழான

செந்தூரஞ்சிவப்புகாண, கொல்லவேவிலாரியின் தயிலத்தாலே கொ ற்றவனே தானரைப்பாய் சாமமெட்டே. 275

## விலாரிமூலி.

எட்டானசாமமதுவரைந்தபோது யெழிலானசெந்தூர மெழு குபோலாம், திட்டமுடன் தானரைத்துபில்லைதட்டி தீர்க்க முடன்ர விதனிலேகாயப் போடு, சூட்டமதுபிலையதாய்தட்டியேதான்குறிப் புடனேசீலைசெய்ய வகையைக்கேளு, வட்டமென்னவோட்டிவிட்டுச் சீலைசெய்து வளமைபெறகெஜபுடமாம் போட்டுத்தீரே. 276

தீரவென்றால்புரமாரியெடுத்துப்பாரு திறலானசெந்தூரஞ்சொ ல்லப்போமோ, சாரவேசெந்தூரந்தனையெடுத்து சாங்கமுடன் விரா லியிடதயிலத்தாலே, பாரமுடன் தானரைப்பாய்நாலுசாமம் பதராம ல்மெழுகதுபோலாகவேதான், நேரமுடன்பில்லையது லகுவாய்த்தட் டிநேர்புடனேரவிதனிலே காயப்போடே. 277

மோடவேவோட்டிவிட்டுச்சீலைசெய்து போங்கமுடன்கெசபுட மாம்போட்டுத்திரு, நீடவேயிப்படியே ஐந்துபத்து நினைவாகப்புடம் போடச்செந்தூரிக்கும், தேடவேசெந்தூரம் யெடுத்துப்பாருதேசிக னேகாரமதுகூரொண்ணாது, பாடவேயின்னம்வெகு மூலிசொல்வே ன்பாலகனே நீயறியாய் பண்பாய்தானே 278

## வல்லாரை மூலிகை

பண்பானமூலிகைதான்சொல்லக்கேளு பாரினிலேமெத்தவுண டுகாயகற்பம், திண்பானமூலிவல்லாரைகற்பம் திறமானமூலியதுசா ர்பிழிந்து, நண்பானசெந்தூரங்கல்வமிட்டு நயம்பெறவேமூலியிடசா ற்றாலாட்டி, வண்பாகயாற்சாம மறைத்தபோது வளமாகமெழுகது போலாகும்பாரே. 279

பாரேதான்மெழுகதனைபில்லைதட்டி பாகமுடன்ரவிதனிலே கா யப்போடு, சீரேதான்வோட்டிவிட்டுச்சீலைசெய்து சிறப்பான கெஜபு டந்தான்போட்டுத்திரு, நேரேதான்செந்தூரங்காரமேறி நெறியான காயகற்பகுருவுமாச்சு, தீரேதான்பின்னுமிந்தசெந்தூரத்தை தீர்க்க முடன்புடம்போடவகையைத்தேடே. 280

தேடயிலேசெந்தூரமைம்பதாகும்தேற்றமுடன்புடிமதுவுமதிக ங்கொண்டால், கூடயிலேசெந்தூரங்காரமேரிகுறிப்புடனேகாயாதிக் குறிதியாச்சு, நீடயிலேயிப்படியேதீர்ந்தாயானால்நீனிலத்தில்நீவுமொ

ருசித்தனுவாய், பாடயிலேயொருவருந்தான் சொல்லவில்லை பாரினி லேயின்னூல்போ லொருனூலுண்டோ. 281

புளியாரைமூலி

உண்டேதான்வையகத்தில் பலநூலுண்டுவுத்தமனேசாஸ்திரங் கள்கோடியுண்டு, கண்டேனேநானும்வெகு நூல்கள்தன்னைகவடமற் றநூலிதுதான்மெய்நூலாகும், திண்டானவேதமுனிநூல்கள்சொன் னார்திகழுடனேகாசினியிலனேகமுண்டு, கொண்டான கொண்டபடி வினைதஞ்சொன்னார் குவலயத்திலின்னூல்போ லில்லைதாமே.

தானானசெந்தூரஞ்சாற்றக்கேளு தகமையுடன்புளியாரைச்சா ற்றினாலே, பானானசெந்தூரமறைத்துமேதான் பதமுடனேயில்லைத ட்டிக்காயவைத்து, வேனானவோட்டிலிட்டுச்சீலைசெய்துவிருப்பமுட ன்கெஜபுடத்தில் போட்டையானால், கோனானகுருநாதர் சொன்ன வாக்கு குவலயத்தில்பொய்யாது மெய்யாய்பாரே. 283

பாரேதான்செந்தூரங்காரமேறி பாகமுடன்காயாதி கற்பமாகு ம், வேரேதான்வைத்துபத்துபுடமேபோடு நெறியானபு டமதுவுந்த ப்பாவண்ணம், கூரேதான்சொன்னபடிசெந்தூரிக்கும் கூர்பானகார மதுசொல்லப்போமோ, வேரேதானின்னமொரு மாற்கம்சொல்வோ ம்வேதாந்தத்தாயினது வருள்தான்காணே. 284

பொன்னாவரைமூலி.

காணவென்று லின்னமொருமாற்கம்பாரு கருவானசெந்தூரப் போக்குசொல்வேன், தோணவேசெந்தூரந்தன்னையெடுத்து துறையுட னேகல்வமதிலிட்டுமைந்தா, பூணவேபூநீரு முப்புச்சுண்ணம்புகழாக த்தான்போட்டுவெட்டிலொன்று, வேணவேபொன்னிறவாரையாலே விருப்பமுடன் தானறைப்பாய்சாமம்நாலே. 285

நாலானசாமமதுவறைத்தபேர்துயமுடனேவெண்ணையதுபோ லேயாகும், பாலகனேவெண்ணையதுயிதற்கொவ்வாது பாலகனேசித் தர்முகம்வேதையாச்சு, சேலானவனமூலிதன்னையப்பா செம்மையுட ன்தான்கூட்டியறைத்தபோது, மாலானசத்தெல்லாம் மடிந்துமேதா ன்மகத்தானசெந்தூரமுடியலாச்சே. 286

ஆச்சென்றுவிடுகாதேமைந்தாகேளு வப்பனேயில்லையது தட்டி யேதான், காச்சலென்றவிதனிலேகாயப்போடு கருவான ஒட்டிலிட் டுசீலைசெய்து, பாச்சலுடன்கெசபுடமாம்போட்டுதீரு பாலகனேயா

றியபின்னெடுத்துப்பாரு, மூச்சடங்கிப்புடமதுதான் வெந்துதானால் மோசமிகலிலவாராதன்றே. 287

வாராதுதோஷமது நேராதல்லோ வகுப்பானசெந்தூரமுறுதி காணும், நேரானசெந்தூரந்தனையெடுத்துநேரமையுடன் கல்வமதிலி ட்டுபின்னும், சேரானபொன்னினாவாரைமூலிசேரவேதான் விட்டுவ றைத்துமேதான், நீரானமைபோலறைத்துமல்லோ நிஷ்களமாய்ப்பி ல்லையது தட்டிப்போடே. 288

போடவேரவிதனிலே காயந்தபின்பு யொங்கமுடன்வோட்டிலி ட்டுச்சீலைசெய்து, நீடவேகெசபுடமாய்போட்டையானல் நீரானசெ ந்தூரமென்னசொல்வேன், கூடவேயிப்படியாய் ஐந்துபத்துகொற்ற வனேபுடமதுதான்தீர்ந்தாயானல், நாடவேசெந்தூர மென்னசொல் வேன், நாதாக்கள்கைமறைப்பு கண்டுபாரே. 289

பாரேதான்சித்தர்முனிரிஷிகள்தாமும் பாருலகில் செய்வதுதா ன்வதீதமார்க்கம், நேர்மையடன்பலநூலுங்கண்டாராய்ந்து சீரேதா ன்வனேகவிதகாயகற்பம் சிறப்புடனே தான்முடித்தார் லக்கோயில் லை, வேறேதான்வநேகநூல்யானுங்கண்டேன் வுற்பனத்தை யுளவறி ந்துசொல்லார்தாமே. 290

தாமானகருவெல்லாமறைத்துப்போட்டார் தகமையுடன் திரு மூலவர்க்கத்தார்கள், நாமேதான்சொன்னபடி நூலாராய்ந்துகாட்டி னுள்ளவளப்பமெலாங்கண்டார்பாதி, தேமேதான்காயாதி கற்பசாங் கம் தெளிவாகச்சொன்னவர்களொருவரில்லை, பூமானுங்காலாங்கிநா தர்தாமும் புகழுடனேபாடிவைத்தார் கோடியாமே. 291

கோடியாஞ்சித்தர்களிலொருவருண்டு கூறினார்பலபலவாய் கண் டாராய்ந்து, தேடியேமானிடர்கள்பிழைக்கவென்று தெளிவாகப்பா டிவைத்தார்சித்தர்தாமும், பாடியதோர்நூலெல்லாம்பழுதாராய்ந்து பாரினிலேபலபலவாம் பேதஞ்சொன்னார், நாடியேபோகரிஷிஅடியே ன்றானும் நயம்பெறவேயுலகமதில் நவின்றிட்டேனே. 292

நவின்றிட்டேனின்னமொரு கருமானங்கேள் நாட்டிலுள்ளமா னுக்கன்பிழைக்கவென்று, தவின்றிட்டசாத்திரங்கள்யுத்தாயுத்தம் தன்மைபெறவெகுசுளுவாயாராய்ந்தேதான், புவின்றிட்டேன் பொ ன்னினாமத்தைதன்னால் கருவாகதானறைப்பாய் சாமமெட்டே.

பொன்னூமத்தைமூலி

எட்டானசாமமது செந்தூரத்தையெழிலாகத் தானரைப்பாய் மைந்தாகேயும், நிட்டமுடன்மைபோலேதானரைத்து தீர்க்கமுடன் பில்லையதுலகுவாய்த்தட்டி, சட்டமுடன்ரவிதனிலேகாயவைத்து சாங்கமுடன்ஓட்டிலிட்டுச்சீலைசெயது, வட்டமென்றகுழிதனிலே யெருவடுக்கிவாகுடனே புடமதுவும்போடுபோடே. 294

போட்டவுடன்தீயாறியெடுத்துப்பாறு பொலிவானசெந்தூரம் என்னசொல்வேன், நீட்டமுடன்செந்தூரங்காரமேறிநீனிலத்தில்காயாதிகற்பமாச்சு, வாட்டமுடன்செந்தூமிந்தபாகம் வண்மையுடன் வைந்துபத்துபுடந்தான்போடு, தாட்டிகமாய்செந்தூரமருணன்போலாம் தாரணியிலொருவருந்தான் செய்யார்தானே. 295

தானானசெந்தூரமதீதவித்தை தாரணியிலொருவருந்தான் செய்ததில்லை, கோனானயெனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார்தம்பதியிலடியேன்சென்று, வேனானசாத்திரத்தினுளவுபார்த்து சேவகமுடன்சீனபதிசென்றயானும், பானானகுளிகைதனைபூட்டுகொண்டுபறந்திட்டேன்சீனபதிதேசங்காணே. 296

காணவேசீனபதிசென்றேன்யானும் கமலமுனிசீர்பாதங்கண்டு போற்றி, வேணவுபசாரமதுமிகவுஞ்செய்து வெற்றியுடன் குளிகையதுபூண்டுகொண்டு, பாணமதுபோலெழும்பி வடியேன்றானும்பக்கலென்றசமாதியதுநின்றேன்யானும், நாணவேதலைகுனிந்து நின்றபோது நாதராங்கமலமுனி விடைசொன்னாரே. 297

விடையொன்றுசொல்லுகையிலடியேன்றானும் விருப்பமுடன் வுத்தாரஞ்சொல்லலுற்றேன், தடையில்லாவாக்கதுவுங் கமலர்தாமும்தாட்சியுடனெந்தனுக்கு வுரைத்ததாலே, மடைபோன்றசெந்தூரகாயகற்பமகதேவர் மகிட்சியுடன்செய்யலுற்றார், இடையூறுவாருமல்யெந்தனுக்குயெழிலானவாக்கதுவுங் கொடுவென்றேனே. 298

கொடுவென்றுகேட்கையிலேசித்துதாமும் கொப்பெனவேயெந்தனுக்குச்சாபந்தீர்ந்து, படுமுன்னேசரக்கெல்லாங்கட்டிப்போகபாரினிலேகாயாதிகர்ப்பந்தானும், தொடுகுறிபோ லெந்தனுக்கு வுளவுஞ்சொல்லிதோஷமதுபோவதற்குமுறையுஞ்சொல்லி, விடுவகனும்பிணிநீங்கக்காயகற்பம் விருப்பமுடன்வாக்களித்தார் முறையுந்தானே.

தானனகமலமுனிநாதர்தாமும் தகமையுடனெந்தனுக்கு வாக்களித்தார், கோனன காலாங்கிநாதர்பாதம் கும்பிட்டுவடியேனுந் தாள்பணிந்து, தேனனசாத்திரத்தைக்கண்டாராய்ந்து திரட்டிவைத்தேன் போகரேழாயிரந்தான், பானனகாலாங்கிதனைநினைந்து பாடிவைத்தேன் சத்தகாண்டம் பண்பாய்த்தானே. 300

செந்தூரப்பெருமை ரோகநிதானம்.

தானேதான் செந்தூரப்பெருமைதன்னை சாத்துகிறேன் மானுக்கன்பிழைக்கவென்று, மானேகேள் வனுபான மினமறிந்துமயங்காமல் மானிடர்கள்கொள்வதற்கு, தேனேதான் பசும்வெண்ணெ நெய்யுமாகும் தேற்றமுடன் பாலாகுஞ்சூரணந்தான், ஊனனலேகியங்கள் கிரதமாகும் வுத்தமனேயிஞ்சிரசம் முலைப்பாலாமே. 301

ஆமேதான் சக்கரையுமெழுகுமாகும் அப்பனேயிந்தவித வனுபானங்கள், நாமேதான் சொன்னபடி சிகிச்சைசெய்தால் நாடாது தேகம்வலு பிணிகள்போகும், போமேதான் பொல்லாத நோய்கள் போகும பொலிவான ரோகத்தின் மார்க்கஞ் சொல்வேன், வேமேதான் பிணிக்குறிப்புவுளவுசொல்வேன் வேகமுடன் காயாதிகற்பங்கேளே. 302

தீரும் வியாதி.

கேளேதான் வாயுவென்ற தெண்பதும்போம் கெடியானபித்தமது நாற்பதும்போம், நாளேதான்கிரந்திபதினெட்டும்போகும் நாடாது ஜன்னிபதின்மூன்றும்போகும், பாளேதான் பாண்டுவகையாறுந்தீரும் பாலகனே மூலமிருபதுவும்போகும், வீளேதான் அதிசாரரோகம்போகும் வீரானகிராணியென்றதாறும்போமே. 303

ஆரானவாதமென்றரோகம்போகும் அப்பனே சிலேத்தமது தொண்ணூற்றாறும், காரான கொடியரோகம் பதினெட்டும்போம் கருவான காசமென்றரோகமெட்டும், வேறானவுளமாந்தை ரோகம் போகும் விருப்பமுடன் பிரமியங்களனைத்தும்போகும், கூறானமேகமென்ற யிருபத்தொன்றும் கொற்றவனே சடலம்விட்டு யேகும் பாரே. 304

பாரேதான்குட்டமது பதினெட்டும்போம் பாங்கான சோகையென்ற ரோகம்போகும், நேரேதான் மகோதரங்களெட்டும்போகும் கெடிதான விஷபாகமாறும்போகும், சேரேதான் சூலைபதினெட்டும் போகும் செழிப்பானகுன்மமென்ற தெட்டும்போகும் நேரேதான் பெரும்பாடு ரோகம்போகும் மேலானகல்லடைப்பு வாரும்போமே.

போமேதான் விப்புரிதி ரோகம்போகும் பொலிவானகரப்பன் பதினெட்டும்போகும், வேமேதான் பவுத்திரங்களனைத்தும்போகும் விருப்பமுடன் நேத்திரநோய்தொண்ணூற்ருறும்,நாமேதான்சொன் னபடி வதிரோகங்கள் நாட்டிலுள்ள வதிசூரியெல்லாம்போகும், தாமேதான் பீநிசங்களெட்டும்போகும், தாக்கான சிரசிநோ யனைத் தும்போமே. 306

சிரமானநோயுடனே யின்னஞ்சொல்வோம் சீரானதாகமென்ற ரோகம்போகும், வரமானவிக்கல்வலிரோகம்போகும் வகையான சுவாசமென்ற ரோகம்நீங்கும், உரமான வாந்தியென்ற ரோகம் போகும் வுத்தமனே மார்புநோய்தனைவிட்டேங்கும், பரமானகம்ம லென்ற ரோகம்போகும் பார்த்திபனே சகலவிஷ ரோகம்போமே.

போமென்றவிடுகாதே யின்னஞ் சொல்வோம் பொலிவான வாண்குறியின் ரோகம்போகும், தாமெனவே பெண்குறியின் ரோ கம்போகும் தாக்கான மருந்துவகை வீரும்போகும், நாமெனவே மலட்டுவலிரோகம்போகும் நாடாது கசரோகமெல்லாம்நீங்கும், வே மெனவே காயாதிகற்பமார்க்கம் விருப்பமுடன்செய்கின்ற வீரந்தா னே. 308

வீரமாஞ் சிலவிஷங்களற்றுப்போகும் வேகமென்ற பிளவை யென்னுங்கட்டிப்போகும் சாரமாம் ரத்தவிஷமற்றுப்போகும் சதா காலம் மேலிளைப்பு தேர்ந்துபோகும், தூரமாங்காதவழிநடக்கலா கும் நடந்தாலும் வாசியது கீழ்நோக்கும், பாரமாந்தேகமது நற்றா ணுகும் பாரினிலே வெகுகால மிருக்கலாமே. 309

இருக்கலாங் கோடியுககற்பகாலம் யிருந்தாலும நரைதிரையும் ஒன்றுமில்லை, சுருக்கமுடன் மேனியது தளர்ந்திடாது தளர்ந்தாலும் நரம்புக்குவலுவுமுண்டு, பெருக்கமுடன்காயாதிகற்பகாலம் பேருல கில் நீயுமொருசித்தனுவாய், உருக்கமுடன் செந்தூரங்கொண்ட பேர்க்கு வுலகத்தில் வயதுகணக்கில்லைதானே. 310

கணக்கில்லை காலன்வந்தணுகமாட்டான் காசினியில் வெகு காலம் மிருக்கலாகும், பிணமாகிமூச்சடங்கியிருந்திட்டாலும் பேரு லகிலுன்னை யொருசித்தனென்பார், க்ஷணநேரம்வாசியைநீ நடத் திட்டாலும் சதாசிவன்தான் நீயென்றுசொல்லுவார்கள், மணமுட னேபூமிதனில் வாழலாகும் மண்ணுலகில் வேந்தரெல்லாம் நடுங்கு வாரே. 311

நடுங்குவார்வுனைக்கண்ட சீஷவர்க்கம் நாடோறும் வுந்தனுக்குப் பணியேசெய்து, ஒடுங்கியேயுந்தனிடபக்கஞ்சென்று வுபசாரவார்த் தைகளுமதிதம்பேசி, கொடுந்தவசியானதொருயுந்தனுக்கு கோபமது

வாராமல் முன்னேநின்று, படுந்துயரமிகவாகி மனதிலெண்ணிபட்ச முடன் சதாநித்தஞ்சேவிப்பாரே. 312

சேவிப்பார்தவநிலையிலொடுங்கி நின்று சேர்வையுடன் காட்சி தனைக்காணவென்று, கோவிப்புவாராமல் குருவைத்தானும் கொற்ற வனுமென்னளும்பணிந்துநின்று தாவிப்பாம் சோடசோபசாரத் தோடு தண்மையுட னேவலுக்கு முதலாய்நின்று, சாவிப்புவாராமல் புனிதவானய் சதகோடிகாலம் வரைபணிசெய்வாரே. 313

பணியானநீயுமொருசித்தனைப்போல் பாலகனே யென்னளு மிருப்பதற்கு, அணியானசிவயோகந்தன்னிற்சென்று ஆத்தாளை சதாநித்தம் பூசித்தேதான், துணிவோடு சமாதிநிலைநின்றுகொண்சி துப்புறவாய் மேல்மூச்சுதனையடக்கி, மணியானபூரகத்தைமேலே நோக்கி மார்க்கமுடன் லனுகதத்தைப் பூட்டிப்பாரே. 314

பூட்டிமிகப்பார்க்கையிலே பொலிவுதோன்றும் பொங்கமுடன் கழுத்திதனைமேலிறுத்தி, ஆட்டுமந்தை தனிவோனைப்புகுந்தாப் போலவப்பீன யஷ்டாங்கந் தன்னிற்சென்று கூட்டுமுறைவகை யறிந்து சிவயோகிதானும் குணமுடனேயங்கசித்திபெற்றுக்கொண்டு பாட்டுநயமறிந்துமல்லோபாரின்மீது பாரமுடன்தவசிருத்தல் மெத் தநன்றே. 315

நன்றானயோகமதை யறியவேண்டும் நாயகனே யென்னளும் பூசைவேண்டும், குன்றானமாய்கைதனையறக்கவேண்டும் கொடிதான பொருளாசை நீக்கவேண்டும், பன்றானசாததிரததைப் பலவும்பார் த்து பாரினிலே கோளாறுயறியவேண்டும், சென்றாலும்ராசரிடஞ் செல்லவேண்டும் செயலானபாக்கியத்தை நீக்கநன்றே. 316

நீக்கவே பொருளாசை யவர்க்குச்சொல்லி நிதியெலாந்தானழி க்க மதியுஞ்சொல்லி, போக்கவேகர்மானுபவத்தை நீக்கிபொங்கமு டன் யென்னளும் ஞானமோதி, வாக்கதுவும்பிசகாமல் வறியோரு க்கு வண்மையுடன் தானமது செய்யச்சொல்லி நோக்கமுட னவா வர்க்குத்தக்கபாகம் நுண்மையுடன் கொடுப்பதுவே தருமமாமே.

காயாதிகற்பமுண்டவர்கள் அஷ்டசித்திபெற.

தருமமாங் காயாதிகற்பமுண்டோர் சதாகாலஞ்சாயுச்சியம் பெறுவதாகும், கருமமாம்வஷ்டானபீடைதானும் காசினியில் வெ றுப்பதுவே யோகமார்க்கம், கருமமுடன்காயமதுபூமிதன்னில் சட்ட முடனிருந்தாலுங்கரிப்பேறுது, மகுமமுடன் சித்தாதிசித்தரெல் லாம் மானிலத்தில் யிப்படியே வழங்கினரே. 318

வழக்கமுடன் தானிருந்தார் சித்தாசித்து வையகத்தில்காயாதி கற்பமுண்டு, பழக்கமதுமிகவாகி பாரினிற்குள் பதிங்கிருந்தார் வெகு கோடி காலந்தானும் முழக்கமுடன் ஆண்டுக்கோர்கோஷ்டிகாட்டும், மூதுலகில் கண்டவர்கள் பிரமிப்பார்கள் பழக்கமுடன் சீஷவர்க்கம் யிதுவேபாகந்தாரணியில்வெகுசித்து ஆடினாரே. 319

சீஷர்கள் ஆசானுக்கு அஞ்சலிசெய்தது.

ஆடினார்சித்தர் முனிரிஷியைப்போல அவனிதனில்கோடிமனு தவசியோர்கள், தேடியே சமாதியிடநிலையைக்கண்டு தேற்றமுடன் பெரியோரையடுத்துமேதான், கூடியேகும் பல்கும்பலாய்ச்சேர்ந்து குருவான தவநிலையைக்காணவென்று நாடியே சொரூபமென்ற நிலையைக்காண நலமுடனேகாத்திருந்தா ரநேகம்பேரே. 320

போரானவழிதனிலே வதிதம்பூண்டு பேருலகில்நீயுமொருசித்த னைப்போல், தூரானகெட்டவழி செல்லாமற்றான் துரைராஜ் சுந்த ரன்போலிருந்துகொண்டு, வாரானசாத்திரத்தின் வண்மைபார்த்து வண்மையுடன் வாதமதையறிந்துகொண்டு, தேரானயோகமதை நிலைநிறுத்தி தேற்றமுடன்யோகநிலைத்திடமூம்தேடே. 321

தேடையிலே விட்டகுறை நேர்ந்துதானால் தெளிவுடனேயுந் தனுக்கு லபிக்கும்பாரு, கூடயிலேவாசான்தான்னில்லாவிட்டால் கொற்றவனே காயாதிகற்பம்போதும், பாடையிலேசென்றாலும் திரேகம்போமோ பாரினிலே தெரியாமலிருந்தோர்கோடி, நீடையி லே காயாதி செந்தூரந்தான் நிலைத்துதடாதேகமது கற்றாணுச்சே.

கற்றாணும் பொற்றாணுங்கருங்கல்லாகும் காசினியில்காயாதி கற்பமாச்சு, நற்றாணுங்காயாதி செந்தூரந்தான்நாயகனே முக்கோடி தவஞ்செய்தாலும், சற்குணனும்வீராதிவீரன்போலும் பாரினிலே சதகோடி சூரியன்போல், துற்குணங்கள் தானகன்று சித்தனுவாய் துரைராஜ சிவயோகி நீயோவாயே. 323

ஆகையிலே செந்தூர முண்டைபேர்க்கு அவனிதனில் நரையில்லை திரையுமில்லை, சாகையிலேசேத்துமங்கனணுகிடாதே செத்தாலும் ஆவியதுவெளிபோகாது, போகையிலேதவஞ்செயினும் சிரசுக்குள்ளே பொங்கமுடன் தான்வசித்துக் கற்பகாலம், வேகையிலே தீயதனில் வெந்திட்டாலும் வெகுசுறுக்காய் தேகமது துள்ளும் பாரே. 324

பாரேதான்தேகமதுதுள்ளும்போதுபாரினிலேஜெகஜாலவித்தை யென்பார், நேரேதான்சவமுகத்தில்நிற்கும்போது நெருப்பானதணல

துவுமவிந்துபோகும், கூரானமானிடர்கள் சொல்வதென்றால் குவல யத்தேஜெகஜாலவித்தையென்பார், தூரேதான்மசானமதி லிருந்து கொண்டு துப்புறவாய்சவமதனைபழிசொல்வாரே. 325

பழிபானசெந்தூரங்காயகற்பம் பாருலகிலுண்டவர்க்குக்காயம் போகா, வழியானசெந்தூரம் யார்தான்செய்வார் வண்மையுள்ளசிவ யோகிதானேசெய்வான், மொழிவானகருவாளியானமாந்தர்மோசமி ன்றிகாசுதனை செலவுசெய்து, கழியானசெந்தூரப் போக்குதன்னை கனமுடனே செய்பவனேபுனிதனாமே. 326

புனிதனாம்பின்னமொருமார்க்கம்பாரு புகழானசெந்தூரஞ்செ ப்பக்கேளும், வனிதமுடண்வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று வாகு டனேதானுருக்கிகுருவொன்றீய, கனிவானகரியோட்டிஊதிப்போடு கருவானசெம்பதுவுங்கொஞ்சம்நீங்கி, தனியானவெள்ளியதுவாரண மேறி தகமையுடன்பொன்னென்றமாற்றுமாச்சே. 327

ஆச்சப்பாகுடவனிலே பத்துக்கொன்று அப்பனே பாய்ச்சிட வேமாற்றெட்டாகும், மாச்சப்பாசெம்புதனில்பத்துக்கொன்றுபாங் குபெறமாற்றதுவுமெட்டதாகும், பேச்சப்பாபிசகொன்று மில்லைதா னும்பேறானதங்கமது பத்துக்கொன்று, மூச்சப்பாவிடுகாம னுருக்கி யேதான் முதன்மையுடன்தானெடுக்கக் கலங்குமாமே. 328

களங்கானதங்கமதையெடுத்துக்கொண்டு கருணையுடன் வெள் ளிதனில்பத்துக்கொன்று, விளங்கவேதானுருக்கி எடுத்துக்கொண்டு வேகமுடன்வாரடித்துப்புடத்தைப்போடு, அளங்கமுடன் தங்கமது விளையும்பாரு அப்பனேசிவத்துக்குவுருக்கிதங்கம், நளங்கமுட சிவ ராஜயோகஞ்சென்று நாட்டிலேதாமிருந்தார் கோடியாமே. 329

கோடியாந்தவகோடி ரிஷிகள்கோடி குவலயததில் சத்துவகைய றியாமற்றான், கோடியேசுட்டலைந்து கெட்டார்கோடிதெரிசனங்கள் காணமல்மாண்டார்கோடி, வாடியேமனந்தளந்துவழிகாணமல் வகை கெட்டுநூல்பார்த்து மறந்தார்கோடி, கூடியேயொருவரிடம்முறைக ள்கேட்டு கூர்மையுடன்பாராமல் கெட்டார்தாமே. 330

கொங்கணவர்காயகற்பம்

தாமானயின்னமொருகனமானங்கேள் தகமையுள்ள சித்தர்மு னிகொங்கணவரப்பா, சாமான்யமானதொருசாத்திரத்தைசதுரான சங்கமதிற்கொண்டுசென்று, பூமான்கள்சித்துவகையிருக்குங்கூட்ட ம்புகழ்ச்சியுடன்வழிபாடு சென்றமங்கே,சாமான்யமானதொருகொ ங்கணவர்தாமும் மதிப்புட னேசபைநடுவே சென்றிட்டாரே.

சென்றிட்டகொங்கணவர்சித்தர்தாமும் சிறப்புடனே சித்தர்மு னிதம்மைக்கண்டு' வென்றிட்டசாத்திரத்தைவாதுபேசி விருப்பமு டன்சத்துவகைமிகவும்பேசி, கன்றிட்டகுருங்குருவைதெரிந்துக்கொ ண்டுகருத்துடனேகுருமுடிக்க மனதிலெண்ணி, பன்றிட்டசாத்திர த்தைத்தோஷஞ்சொல்ல பகரினிலேசத்துவகை முடித்தாராகாணே.

காணவேபத்துவகையெடுக்குமார்க்கம் நடந்ததோர்ஞானிமுதல் சித்தர்தாமும், தோணவேபாஷாணம் முப்பத்திரண்டும் துறையோடு ம்முறையோடுஞ்செப்பக்கேளு, பூணவேவகைவகைக்குப் பலமதாக புகழுடனேதேனதனில்நாலுசாமம், வேணவேதானரைப்பாய் மைந் தாகேளு விருப்பமுடன் வெண்ணையது போலேயாட்டே. 333

ஆட்டியேரவிதனிலேகாயவைத்து அப்பனேமூசைதனிலடைத் துமைந்தா, பூட்டியேவாலுகையாமேந்திரத்தில் புகழாகதா னறைப் பாய்மைபோலாக, நாட்டியேமூசைதனிலடைத்துமைந்தாகலம்பெற வேசில்லிட்டுசீலைசெய்து, நீட்டமுடன்சரவுலையில் வைத்தூதுநேரு னசரக்கெல்லாம் புகைந்துபோமே. 334

போகுமே சரக்கெல்லாஞ்சத்தேயாகி பொங்கமுடன் யீயமது போலேயாகும், சாகுமேபாஷாணம்புகைந்துமல்லோசத்துபோல் சத் தாகிகளங்கமாகி, வேகுமேசரவுலையில் புகைஉண்டாகி வேகமுடன் அஞ்சனத்தின்கல்போலாகும், பாகுடனேவுருக்கியதோர்மூசைதன் ளைபதமுடனேதானெடுத்து வுடைத்துபாரே. 335

பாரேதான்பாஷாணஞ் சரக்குசேர்த்து பாகமுடன்தானுருகிக ரியாய்நிற்கும், நேரேதான்பூஞகம்மண்ணைப்போக்கி நேர்மையுடன்ச த்துக்குநேர்சேராக, கூரேதான்வினயமுடனென்றாய்ச்சேர்த்து கொ ற்றவனேகல்வவதிலிட்டுப்பின்பு, வேறேவான் உவின்நெய் தன்னலா ட்டிவேகமுடன் மூசைதனிலடைத்திடாயே. 336

அடைக்கவென்றால்வச்சிரமாங்குகையில்வைத்து அப்பனே சி ல்லிட்டுசீலைசெய்து, தடையறவேரவிதனிலேகாயவைத்து சாங்கமு டன்சரவுலையில்வைத்தூது, மடைபோன்றதீயதனுல் வெந்துசத்தா ய்மார்க்கமுடன்னீயம்போல் வுருகிநிற்கும், . இடைநடுவே களங்கம தையெடுத்துக்கொண்டு யெழிலானதங்கமது நேர்தான் கூட்டே.

கூட்டியேதானுக்கியெடுத்துக்கொண்டு கொற்றவனேகல்வமதிலி ட்டுமைந்தா,தாட்டிகமாம்பொற்றலையின்சாற்றிஞலேதண்மையுடன்

தானரைப்பாய் நாலுசாமம், நீட்டமுடன் தானறைத்துபில்லைதட்டி நேர்புடனே ரவிதனிலேகாயவைத்து, வாட்டமுடன்வோட்டிலிட்டு சீலைசெய்து வளமையுடன்யரவுலையிலேற்றிடாயே. 338

ஏற்றியேவுருக்குமுகம் தன்னிலேதான் யென்மகனே துருத்தியதுநாலதாகும், போற்றியே வாலம்பிகை தனைநினைந்து பொங்கமுடன்மூசைதனை நெருப்பிலிட்டு, தூற்றியேகரியதனை மேலேகொட்டித்துப்புரவாமூசையதுயமூகுமட்டும், நாற்றிசையும்தீபரக்க வூது வூது நாயகனே சத்தெல்லா முத்துமாமே. 339

முத்தான சத்ததுவுஞ் சொல்லப்போமோமூதுலகில்யாரேனுங் கண்டதுண்டோ, சித்தான முனிரிஷிகள் செய்யும்வேதைதேசத்தில் மற்றவரால்செய்யப்போமோவித்தானகளங்கமதுகாயகற்பம்விண்ணுலகில்கருவாளிசெய்வான்பாரு, சத்தானசத்துதனையெடுத்துமைந்தா சார்புடனே மூவசதனை யுடைத்துப்பாரே. 340

உடைத்துமிகப்பார்க்கையிலே என்னசொல்வேன் ஒகோகோநாதாக்கள் ரிஷிகள், வேதைபுடைத்துமே சத்துகளை தானெடுத்து புகமூாககல்வமதிலிட்டுமைந்தா, படைப்புடன வீரமென்ற செயநீர்தன்னுல்களிப்புடனே தானரைப்பாய்சாமம்நாலு, படைப்புடனேபில்லை தட்டி காயவைத்து பாங்குபெறவோட்டிலிட்டுச் சீலைசெய்யே.

சீலையென்றால் யேழுசீலைவலுவாய்ச்செய்துசிறப்புடனேசெம்மண்ணைமேலேபூசி, க லைதனில்கெஜபுடத்திில்போட்டுமல்லோகருவாக மூன்றுநாள்பொறுத்தபின்பு மாலையென்னும்மூன்றுநாள்மாலையப்பா மயங்காமல் தானெடுப்பாய் மைந்தாநீயும், வாலையென்னும் திரிபுரையாம் புவனைவாலை தண்மையுட தானினைத்து யெடுத்திடாயே.

எடுத்துமிகப்பார்க்கையிலேயென்னசொல்வேன்யெழிலானசெந்தூரமெத்தமெத்த, அடுத்துநின்றபேர்களைநீதூரத்தள்ளி அப்பனே செந்தூரமெடுத்துக்கொண்டு, தொடுத்தகுறிதப்பாமல் பின்னுங்கேளு தோராமல்கல்வமதிலிட்டுமைந்தா, கொடுத்துமேமுன்சொன்னசெயநீர்தன்னுல் கொப்பெனவே தானறைப்பாய் சாமம்மெட்டே. 343

எட்டானசாமமது வரைக்கும்போதுயெழிலானவெண்ணையது போலேயாகும், கட்டானசூதமதுநாலாய்ச்சேர்த்துகருவாகதானரைப்பாய் சாமம்ரெண்டு, மட்டானபில்லையது சிறுகத்தட்டி மதிப்பான ரவிதனிலே காயவைத்து, தட்டான பதிதனிலே குழிதான் வெட்டி தகமையுடன் புடம்போட வமிசைகேளே. 344

வரிசையென்றால் வரிசையது செப்பக்கேளும் வாகுடனேகுழி
னிலேமணல்தான்கொட்டி, சரியான மண்மேலே வுப்பைக்கொட்டி
சார்பாகபில்லைதனைமேலேவைத்து, பரிவுடனேமேலுமந்த வுப்பைக்
கொட்டிபண்புடனே மணல்தனை மேல்பரப்பி, குறியான குறிப்பது
போல் வுமிதான்கொட்டிகொற்றவனேமேல்தனிலேயெருவுபோடே

போட்டவுடன் தீமூட்டிப் புடந்தான்போடு பொன்னவனே
மூன்றுநாளாறுமட்டும், தாட்டிகமாய்தனையெடுத்து பார்க்கும்போது
சட்டமுடன்செந்தூரமருணன்போலாம், மாட்டிமையாய் யிந்தமு
றை ஐந்துபத்து மயங்காமல் தான்போட வரிசைக்கேளு, பாட்டின
துமுறையேனும் பொய்யுமாகா பாரினிலேகொங்கணவர் பாகமாமே.

பாகமாங்கொங்கணவர்பாகந்தானும் பாரினிலேயாரேனுஞ்செய்
ததுண்டோ, கோபமாய்முனிசொன்னவாக்குபொய்யோ கொற்றவ
னேகொங்கணவர்வார்த்தைபொய்யோ, ஏகவழித்தனைக்கடந்தஞான
வசித்து யேற்றமுடன்மானிடர்கள் பிழைக்கவென்று, சாதகமுடன்
செய்துவைத்தார்யிந்தபாகம்சட்டமுடன் கொங்கணவர்நாதர்தாமே.

தானான செந்தூரமென்னசொல்வேன் தாரணியில்மாமுனிவர்
ரிஷிகள்தாமும், தேனான பாகமிதுகைபாகந்தான் தேற்றமுடனாராய்
ந்துகேள்விகேட்டு, கோனானயெதையர்காலாங்கிநாதர் சொன்னவள
வளவாக்குணமுங்கண்டு பானானசெந்தூரப்பாகங்கண்டு பாரினிலே
சந்தேக நீங்கினாரே. 348

நீங்கினார் கொங்கணவர் கைபாகத்தில் நீடாழிகாலம்வரைநுணு
க்கம்பார்த்து, தூங்கியேதிரியாமல் சித்துதாமும் துறையோடு முறை
யோடுஞ் செய்துகொண்டார், ஓங்கியேபாகமது கைவிடாமல் வுத்த
மனேசெய்துமல்லோ குளிகைபூண்டு, ஏங்கியேபோகாமல் மைந்தா
நீயும் யெழிலுடனே யிப்பாகஞ் செய்திடாயே. 349

செய்யவென்றால் வெகுகோடி மாந்தர்தாமும் செம்மையுடன்
செய்துமல்லோ முறைதான்காணார், பையவேகருவாளிசெய்வான்பா
ரு பாரினிலே மற்றவரே காணார்காணார், நைடவருங்கோபத்தார்செய்
யமாட்டார் நாட்டிலுள்ள சாத்மீகர்செல்வார்பாரு, துய்யவேவாத
வித்தைசெய்வோர்தாமும் துப்புரவாய்செய்வதுவும் திண்ணமாமே.

போகர் சீனபதியில் நவவிதவர்ணஞ் செய்தது.

திண்ணமா மின்னமொரு கருமானங்கேள் திகழான வாணமெ ன்றபோக்குசொல்வோம், வண்ணமுடன்பஞ்சவர்ண விதங்கள்சொ ல்வோம் வகுப்புடனேயதிற்பிறந்த வர்ணநான்காம், நண்ணமுடன் வாயுவென்ற யிருப்புதன்னில் நலமானவர்ணமது ரூபபேதம் கண்ண பிரான் வர்ணமதுபோலேயாகும் காசினியில் சித்தர்செயும் வேதை யாச்சே. 351

வேதையிலேயின்னமொரு போக்கைக்கேளும் வீருனசிறியகண் ணுகந்தானு, தீதையிலேதானுருக்கி மதியுப்போடு திகழானகளங்கு போனுருகும்பாரு, போகமுடன்சூதமதைக் கூடச்சேர்த்து பொங்க முடன் தானரைப்பாய் நாலுசாமம், நாகமுடன் சாரமென்ற செய நீர்தன்னல் நளினமுடன் தானரைத்து செப்பக்கேளே. 352

செப்பவென்றால் வளையலுப்பு கூடச்சேர்த்து சிறப்புடனே நிம் பழச்சார்தானுமிட்டு, ஒப்பமுடன்வெண்ணீரில் கலக்கிக்கொண்டு வோங்குபெற செம்பென்ற கட்டைதானும், நெப்பமுடன் தகடடி த்து சலத்திற்போடே நேரானவர்ணமது மேலேதாவி, துப்பரவா வொளிவீசுந்தகட்டின்மேலே சூரியன்போல்தங்கமென்றவர்ணமாமே

ஆமேதான் வர்ணமொடு சிவப்புபச்சை அப்பனே கிலமென்ற கறுப்புகாணும், தாமேதான்ரசமதனைக் கூடச்சேர்த்து தன்மையுட ன்சீசாவிலடைத்துமைந்தா, வேமேதான்தகடதனை தோய்க்கும்போ து விதமான சஞ்சாயவர்ணங்காணும், நாமேதான்சொன்னபடி ரூபா வர்ணம் நயமுடனேதகடதனி லேறும்பாரே. 354

பாரேதான்யிரும்புக்கு யிந்தமார்க்கம் பாகமுடன் செய்துவந் தால் பண்பதாகும், நேரேதான்வங்கமது தகடடித்து நேரானமுன் சொன்ன சரக்கிலேதான், வாரேதான் வங்கமதை யுருக்கியேதான் வளமுடனே காய்ச்சியல்லோ தோய்ச்சிப்பாரு, கூரேதான்துரிசியிட காரத்தாலே கொற்றவனே பலபேதம் விளையுந்தானே. 355

விளையுமே சகலவிதரூபாபேதம் வேகமுடன்தோன்றுவது யுண் மைபாரு, களையுடனே சூதத்தால் யெல்லாந்தோற்றும் காமரூபவடி வமெல்லா மிதிலேதோன்றும், தளைவுடனே தாளகத்தின் புகையினு லே தகமையுள்ள கெந்தியது காரத்தாலும், சுளையுடனே புத்தது போல் புகையெழும்பி சொரணமென்னுவேகமென்ற வர்ணமாமே.

கருவங்கபற்பம்.

வரணமாயின்னமொரு போக்குச்சொல்வேன் வாகான கருவங்கபற்பங்கேளு, கரணமாங் கருவங்கஞ்சேர்தாறென்று தகமையுடன் தகடடித்து செய்யக்கேளு, பூரணமாங் கருங்காலி கிழங்குதன்னை முதன்மையடன் தானறைத்து மூசைசெய்து, திரணமாங்குகைக்குள்ளே தகடைவைத்து தீர்க்கமுடன் முன்சொன்ன முப்புபோடே.

போட்டுமே சில்லெட்டுச் சீலைசெய்து பொங்கமுடன் ரவிதனிலே காயவைத்து, காட்டென்ற யெருவதனை கெஜமதாக்கி கருவாகக்குழி வெட்டிப்புடத்தைப்போடு, மூட்டென்ற புடமாறி மூன்றுநாள்தான் முக்கியமாய் திருவாணிபூசைசெய்து, தாட்டிகமாய்ப் புடந்தனையே திறந்துபாரு தளுக்கற்றகருவங்க பற்பமாமே. 358

ஆமேதான்பற்பமதை யெடுத்துக்கொண்டு அப்பனே சிற்றண்டம் சௌவுபோக்கி, தாமேதான்பற்பமெடை சரியாய்தூக்கி தகைமையுள்ள சிற்றண்டங்கூடச்சேர்த்து, போமேதான் வெண்கருவால் மிகவேயாட்டி பொங்கமுடன் தானறைப்பாய் நாலுசாமம், நாமேதான் சொன்னபடி பில்லைதட்டி நலமாகரவிதனிலே காயவையே.

வைத்ததொருபில்லைதனை யோட்டிலிட்டு வண்மையுடன் சீலையது வலுவாய்ச்செய்து, நைத்ததொரு குழிதனிலே புடமேபோடு நலமான கெஜபுடத்தில் வெந்துநீறும், தைத்ததொரு புடமாறி யெடுத்துப்பாரு தளர்ச்சியுள்ளபற்பமது சொல்லப்போமோ, மெத்திடவே பற்பமதைப் பதனம்பண்ணு மேதினியில் சித்தர்செயும் வேதையாச்சே. 360

ஆச்சென்றுவிடுகாதே யின்னங்கேளு அருமையுள்ள பாலகனே பின்னுஞ்சொல்வேன், மாச்சலென்ற கற்பமதைவனுபானத்தில் மாக்கமுடன் பணவிடைதான் கொண்டபோது, மேச்சலென்ற மேகமதயிருபத்தொன்று மேதினியில்கண் காணாதோடும்பாரு, வீச்சலென்று பிரவீச்சு சன்னிபோகும் வீரமுடன்தாதுவிர்த்தி யதிகமாமே.

அதிகமாங் குன்றமென்ற தெட்டும்போகும் ஆண்மையுடன் குறிநோய்களனைத்தும்போகும், சதிரான குஷ்டமது பதினெட்டும்போம் சட்டமுடன் நீரிழிவுமாறும்போகும், மதிமேகமென்றதொரு ரோகம்போகும் மாசற்றதேகமது வன்னிநீரும், துதியுடனே தாரணியில் சதாகாலந்தான் துப்புரவாய்யோகநிலை சமாதிதேடே. 362

தேடையிலேசமாதிநிலை தன்னைக்கண்டு தெளிவாக கேள்விகளில்னேமங்கேட்டு, கூடயிலேசிவயோக நிலையினின்று குணமான வழி

பாடுதனையெடுத்து, மாடையிலே சினமென்ற கோபந்தள்ள மதிப்பு டனே தாரணியிலிருந்துகொண்டு, நீடையிலேகரிவங்கபற்பந்தன்னை நீனிலத்திலுண்பவனே சித்தனமே. 363

சித்தனைப்பிரந்தாலும் மதிகள்வேண்டும்சீறலென்ற சினமதுவை த்தள்ளவேண்டும், பத்தியுடன் பாதாம்புயத்தை யெந்தனாளும் பட் சமுடன் மனந்தனிலே நினைக்கவேண்டும், நித்தியமும் பரவெளியில் நிற்கவேண்டும் நீடாழியுலகாசை யொழிக்கவேண்டும்,முத்தியுடனஷ் ட மாசித்திதன்னை மூவுலகில் பெறுபவனே யோகியாமே. 364

வெள்வங்க பற்பம்.

யோகமென்றால் போகமதைத் தள்ளவேண்டும் யொருவருடன் வீண்வார்த்தைக் கூறலாகா,போகமதை நீக்கிவிட்டு பூமிதன்னில்புக ழாகவாசியோகந் தன்னிற்சென்று,தாகமுடன் கானப்பால் தன்னைக் கொண்டு சதாகாலம் நிஷ்டையிலே யனுமானித்து,வேகமுடன் விட் டகுறைவந்தபோது வெறுப்பன்றி பொறுப்பனுடன் மீள்வீர்தாமே.

மீளுவதுயின்னமொரு கருமானங்கேள் மிக்கானவெள்வங்கபற் பஞ்சொல்வேன்,தானுமையாய் வெள்வங்கஞ்சேர்தானென்று தகமை யுடன் சவுட்டுப்புச்சேர்தான்பாதி, கோளகற்றி தகடடித்து மேலே பூசிகொற்றவனே யாவாரைபஞ்சாங்கத்தில், மாறுறையாய் வெள்வ ங்கம் நீற்றுதற்கு மானிலத்திற் பஞ்சாங்கப் புடத்தைப்போடே.

போடவேவெள்வங்கம் பொருமினிற்கும் பொலிவான சோளம துபோலேயாகும், நீடவேசோளமென்ற பொரியெடுத்து நீட்சியுட கல்வமதிலிட்டுமைந்தா, கூடவேயாறுவகை செயநீர்தன்னால் கொற்ற வனே தானரைப்பாய் சாமம்நாலு, சாடவேமைபோலே வெண்ணை யாக்கிச் சட்டமுடன் தானரைத்து பில்லைதட்டே. 367

தட்டியேரவிதனிலே காயவைத்து சதுராகவோட்டிலிட்டுச்சீலை செய்து,திட்டமுடன் குழிவெட்டிப் புடத்தைப்போடு திரமானபுட மதுதான் கெஜமேயாகும்,மட்டமென்ற புடமதுவும் ஒன்றேயாகும் மறவாமல்மூன்றுனள் பொறுத்தபின்பு,சட்டமுடன் தானெடுத்துப் பார்க்கும்போது தவளநிறம்போலாக யிருக்கும்பாரே. 368

பாரேதான்பற்பமதை தனையெடுத்து பாகமுடன்கல்வமதிலிட் டுப்பின்பு, நேரேதான்கிளி மூக் கிழங்குதன்னை நேர்புடனே சாபி ழிந்து சொல்லக்கேளு,சீறேதான்வெள்வங்க பற்பந்தன்னை சிறப்புட

னேதானரைப்பாய் நாலுசாமம், கூரேதான்வெண்ணெயது போலே மைந்தா குறிப்பாகதானரைத்து பில்லைதட்டே. 369

பில்லையென்றால் பில்லையது காசதாகபெறுமையுடன் தட்டியல் லோரவியில்போடு, கல்லுபோல் தானுலர்த்தி யெடுத்துக் கொண்டு கருதாகவோட்டிலிட்டுச்சீலைசெய்து, அல்லன்றி கெஜபுடத்தில்போ ட்டாயானால அப்பனேபற்பமது தவளம்போலாம், வெல்லவேபற்பம தை யெடுத்துக்கொண்டுவிருப்பமுடன் கிழங்குச்சார்தன்னாலாட்டே

கிழங்கென்றால் கிழங்கதுவுங் கொல்லன்கோவை கெடியானசா றதனை பிழிந்துகொண்டு, பழக்கமுடன் தானரைத்து பில்லைதட்டி பாகமுடன் ரவிதனிலே காயவைத்து, மழுங்கவே வோட்டிலிட்டுச்சீ லைசெய்து புகழாககெஜபுடத்தில் போட்டாயானால்,விழங்கவே பற்ப நிறங்கொச்குபோலாம் விண்ணுலகில் செய்பவரும் அருமைதானே

அருமையாம்பற்பமதை யெடுத்துக்கொண்டு அப்பனே சிமிழ்த னிலே பதனம்பண்ணு,பெறுமையுடன் பணவிடைதான் சாக்கரையி ற்கொள்ள பேரானநவமூலமொன்பதும்போம், சிறுமைபடச் செய ரோகமெல்லாம்போகும், சேர்மான மானதொரு கசரோகம்போம், ஒருமையுடன்தேகமது கற்றாணுகும் வுத்தமனேயுனக்கீடு சொல்வா ருண்டோ. 372

உண்டோதான் வையகத்தில் வுனக்கீடுண்டோ வுத்தமனேரா ராஜபதியுநீதான், கண்டபடி பலபலவாஞ்சாத்திரத்தை கருத்திலே சற்றேனும் நினையாமற்றான்,விண்டபொருளொன்றிருக்க வொன்றை கொண்டு விட்டகுறை தொட்டகுறை யில்லையென்று, சண்டியென் னும் மானிடரைப்போலேநீயும் சதாசாலமிருப்பதுநன் கல்லதாமே.

நன்கல்லாசாத்திரத்தைத் தாறுமாறாய் நலமுடனேபாராமற்கெ ட்டலைந்து, புன்கவிகளொன்றிருக்க வொன்றைப்பார்த்து புராதனத் தின்பொருளறியார் மட்டிமாண்பர்,வன்கொடுமை செய்பவரோடிண ங்கிச்சென்று வாதாடிபலகாலும் வார்த்தைபேசி, தென்பொதிகைத னிலிருக்கும் சித்தர்நூலைத் தெளிவாகப்பாராத மட்டிமாடே. 374

மாடானமாடிதுதான் சென்மமாடு மானிலத்தில் நூலறியாமட் டிமாடு, கூடானகூடறியுஞ்சண்டிமாடு குவலயத்தில் மெத்தவுண்டு கூறப்போமோ, தேடான பாக்கியமு மிங்கிருக்க தேசத்தில் சுட்ட லைந்தோர் கோடாகோடி, பாடானவழியறிந்து காணுமற்றான் பாரி னிலே விட்டகுறைக்காளாவாரே. 375

சூதச்செந்தூரம்

ஆவாரேயின்னமொரு கருமானங்கேள் அப்பனேசூதமென்ற றுசன்தன்னை, சாவானகள்ளியென்றமரத்தில்தானும் சட்டமுடன் தான்குழடந்துசொல்லக்கேளும், பூவானசூதமதைவதனில்விட்டுது ப்புறவாய்யதின்நூலேமேலேகொட்டி, நாவானசீலையதுவலுவாய்ச்செ ய்து நலமாகவாதுதிங்கள் கழித்துப்பாரே. 375

பார்க்கையிலேசூதமதுகாரமேறி பாலகனே வெண்ணையதுபோ லேயாகும், தீர்க்கமுடன்வெண்ணைதனை யெடுத்துக்கொண்டு திறமு டனேகல்வமதிலிட்டுக்கேளு, ஏர்க்கவேமுன்சொன்ன முப்பூதானும் யெழிலாகக்களஞ்சியது கூடப்போட்டு, நீக்கவேசூதமென்ற வெண் ணைதன்னில் நிலையானதுருசுபலந் தன்னைப்போடே. 376

போடவேபற்பமதுகூடச்சேர்த்துப் பொங்கமுடன் கெந்தியெ ன்றசெயநீர்தன்னால், நீடவேதானரைப்பாய்சாமம்நாலு நீட்கமுடன் வெண்ணையதுபோலேமைந்தா, கூடவேபில்லையதுதெல்லுபோலே குு ணமாகத்தான்செய்து ரவியில்வைத்து, தேடவேவோட்டிலிட்டுச் சீ லைசெய்து தெளிவுடனேபுடம்போட பற்பமாமே. 377

பற்பமாங்கெசபுடத்தில் நீறும்பாருபாலகனே சிமில்தனிலேபத னம்பண்ணு, அற்பமென்றுவிடுகாதே புண்யவானே வன்புடனேவெ ண்ணைதனில்குன்றியுண்ண, கெற்பமேரோகமதி லிருக்கும்நோய்கள குலையோடே போகுமடாபின்னுங்கேளு, துற்பலதனை நீக்கியல்லோ வலுவைக்காட்டும் துடியானபற்பத்தின் நேர்மைதானே. 378

நேர்மையாம்மேகமென்றரோகம்போகும் மேனியது பளபளக் கும்சிவந்துகாட்டும், கூர்மையாம்கபரோகம் சில்விஷங்கள் கொடிதா னவயிற்றுவலிமேலிளைப்பு, தீர்மையாம்பௌத்திரமாம் மூளைமூலங்க ள்தீமைசெய்யுங்கண்டத்தின்மாலைபோகும், வார்மையுடன்கைன்ஞெ சைகன்னக்குத்து தனமானகிரந்திமுத லற்றுப்போமே. 279

அற்றுமேபீசமதினின்றரோகம் அப்பனேகால்வீக்கம்கைவீக்க ம்போம், மூற்றுமேகரம்புகளும்முறுக்குமீறி முனையானதாதுவிர்த்தி யதிகமாகும், பற்றுதுயரையாப்புகொறுக்குமூலம் படருமேதாமரை யுமற்றுப்போகும், வற்றுமேதேகமது வலுத்துகாட்டும் வண்மையுட ன்மேனியதுமின்னுந்தானே. 380

மேகரோகத் தயிலம்

தானனையின்னமொருசூட்சஞ்சொல்வேன் தகமையுடன்மானி டாகேள்பிழைக்கவென்று, கோனனையெனதையர்காலாங்கிநாதர் குரு

பாம்பாட்டி சித்தர் உற்பவம்.

சொல்லவேயின்னமொருமார்க்கங்கேளுசொரூபமென்றபாம்பாட்டிசித்தனப்பா, வெல்லவேவெகுகாலம்வனந்திரத்தில்விநோதமுடன்சித்துமிகவாடிருந்தார், கொல்லவேஅரவங்கள்தான்பிடித்துகொற்றவனார் சமுகமது சென்றேயேகி, வெல்லவே அரவமதையாட்டியேதான் மேன்மையுடன் பரிசுமிகப் பெற்றார்தாமே. 575

பெற்றாரேசிலகாலம்மலைகள்மீதுபேருலகில்கீர்த்தியுடன் வாழ்ந்திருந்தார், புற்றருகில்சென்றுமல்லோசித்தர்தாமும்புனிதமுள்ளநவரத்தினபாம்புதன்னை, வெற்றியுடன்தான்பிடிக்கப்போகும்போதுவேதாந்தச்சட்டமுனியங்கிருந்தார், கற்றியேபாம்பாட்டிசித்தாதாமும் சொரூபமுள்ள சித்தரைக் கண்டார்தாமே. 576

கண்டாரேகைலாசசட்டர்தன்னைகருத்தினிலேயவர்பாதந் தொழுகவென்று,தென்டமுடன்அடிபணிந்துசிரங்குவித்துதெளிவுடனேயஞ்சலிகள்மிகவுஞ்செய்து,பண்டுடனேகாயாதிவர்க்கங்கொண்டுபாங்கானபாலுடனேபழமுங்கொண்டு, தண்டுளபமாலையணி துளசிகொண்டு சர்ப்பனையாயர்ச்சித்து தமை கண்டார்தாமே. 577

தாமானநாதாந்தசித்துதம்மை தகமையுடன்பாம்பாட்டிக் கண்டபோது, நாமானகைலாசசட் டநாதர்நலமுடனேபாம்பாட்டித்தனை நோக்கி,பூமானமானதொருசித்தைக்கேளும்புகழுடனேகாட்டகத்திலிருந்தீர்காலாம், காமான கடியதொருவிஷத்தைத்தானும் கருமானமில்லாமல் கற்றீர்தாமே. 578

கற்றீரேயுககோடிகாலந்தானும் கருத்தினிலே பொய் மெய்கள் காணுமற்றான்,பெற்றீரேகாட்டகத்தில்திரிந்துகொண்டுபேரானபாம்புகளைமடக்கியாட்டி,சுற்றிலுமேஞானோபதேசப்பாலைசொரூபமுடன் சித்துதமைக்காணுமற்றான், பற்றரவே சமுசாரவாழ்க்கைதன்னில் பாருலகில் சிலகாலமிருந்திட்டீரே. 579

இருந்துமேஞானவாளுகவேதான்யெழிலானவுபதேசந் தன்னை நோக்கா, பொருந்துமேவுபதேசம்பெற்றீரானால் பூதலத்தில் வெகு காலமிருக்கலாகும், அருந்தியே ஞானப்பால் தானுமுண்டு வப்பனே வுபதேசம்பெற்றுக்கொள்ள, வருந்தியேகைலாசசட் டநாதர்திறமுட னேவாக்களித்தார் பாம்பாட்டிக்கே. 580

ஆட்டவென்றால்சித்தருமே ஞானம்பெற்று அவனியிலேவெகு காலமிருப்பாரப்பா, கூட்டமுடன்பாம்பாட்டிசித்தர்தாமும் குவலய த்தில்மாந்தரிருசீஷனுகி, நாட்டமுடன்தாமறிந்தஞானமெல்லாம் ந ன்மையுடன்சீஷருக்கு வுபதேசித்தார், வாட்டமுடன்சீஷருக்குவுப தேசித்து வாகாகச்சமாதியிலே யடைந்தார்பாரே. 581

பாரேதான்சமாதியிலேயடைந்தபின்பு பாலகனேசிலகாலமங்கி ருந்து, நேரேதான்திருஷ்டாந்திர மிகவுங்காட்டிநேர்மையுடன்கற்ப காலமிருப்பேனென்றுய், ஊரேதான்குடிப்படைகளெல்லாருந்தான் வுத்தமர்க்குதொண்டுமிகவதிகஞ்செய்து, சீரேதான் சமாதியிடம் பூ சைமார்க்கம் தெளிவாகச்செய்தார்கள் கோடியாமே. 582

கோடியாம்பின்னமொருமார்க்கங்கேளு கூறுகிறேன்பாம்பாட் டிமகிமைதன்னை, நீடியேபாம்பாட்டிநாதர்தானும் நெடுங்காலஞ்சமா தியிலேயிருந்துபின்னும், நாடியேபூமிதனில்வெளியில்வந்து நாதாந்த க்கூத்துகளுமிகவுமாடி, தேடியேவரைகோடி காலமப்பாதேசத்தி லி ருந்தாரேசித்துதாமே. 583

தாமானபாம்பாட்டி சித்தர்தாமும்தாரணியில்சாகாம லிருந்தா ரோதான், நாமேதானறிந்தவரை யின்னஞ்சொல்வோம்நாதாந்தசித் ததுவும்மடிந்துபோனுர், போமேதான்சித்ததுவும் தேகந்தன்னைபொ ங்கமுடன்சிலகாலங் மண்ணிற்சென்று, தூமானமாகவேதான்வெளி யில்வந்து துப்புறவாயதேகமதை மறந்திட்டாரே. 584

மறந்திட்டார்தேகமது நிலைநில்லாது மண்டலத்திலாரேனு மிரு ந்ததில்லை, துறந்திட்டார்நாதர்முனிசித்துதாமும் துறையான வுலகு தனில்மாண்டுபோனுர், யுறந்திட்டசித்தர்முனிரிஷிகள்யாவும் பேரு லகில்மடிந்துமல்லோ மண்ணுய்ப்போனுர், இறந்துமேலோகமெல்லா ம்மடிந்தார்கண்டீர் யெழிலாகயிருந்தவர்க ளில்லைகாணே. 585

சுப்பிரமணியருற்பவம்.

தானுனவின்னமொரு கருமானங்கேள் தாரணியில்மானிடர்க ளறியவென்று, கோனுனயெனதையர் காலாங்கிநாதா கொற்றவனுர் குருவினது கடாட்சத்தாலே, தேனுனவடிவேலர்சுப்பராயர் தேசத் திற்பிறந்ததோர் வண்மையாவும், பானுனசாத்திராயுத்தம்பார்த்துப கருகிறேன்மாணுக்கன் பிழைக்கவென்று. 586

பிழைக்கவேவடிவேலர் தம்மைத்தானும் பேறுனவுலகில் தேவனென்றும், வழக்கமுடன்சாத்திரங்கள் யிதிகாசங்கள் வளமாகப்பாடிவைத்தார்வினயம்பாவும், முழக்கமுடன்வடிவேலர் முருகன்தானும்முற்பிறப்பில்பஞ்சதாக்கியனுக, தழக்கமுடன்பிறந்ததாய் சாத்திரங்கள் தாரணியில்கவிவாணர் கட்டினாரே. 587

கட்டினார்வடிவேலர்முருகன்றானும் காசினியிலாறுமுகசொரூபமாதி, திட்டமுடன்பள்ளியிலேயோதும்போது தீரமுட னரிநமோவென்றகூறி, இட்டமுடன்சொல்லெனவே பிரமன்றானும்யெழிலானவடிவேலர்சொல்வேனென்றார், சட்டமுடன் அரிக்குத்தாத்பரியஞ் சொன்னால் சாங்கமுடன் யானுரைப்பேன் சத்தியவானே. 588

சத்தியமாய்ச்சொல்லுகையில் இந்திரன்றானும் சந்தோஷமாகவல்லோ தாமழைத்து, வெத்தியுடனசுரர்களைத்தான்செயிக்கவிருப்பமுடன்தானழைத்து சென்றபோது, புத்தியுடன்பகவானை நமஸ்கரித்துபுகழாகவரக்கர்களைச்சங்கரித்து, நித்தியமுஞ் சூரசங்காரனுகநீணிலத்தில்வெகுகால மிருந்திட்டாரே. 589

இருந்திட்டார்வள்ளிதனை சிறையெடுத்து யெழிலாகவவனிதனில்யிருந்தாரென்று, பொருந்தவேவுலகுதனில் சுவாமியாக பொங்கமுடன்வீற்றிருந்தார் சதாகாலந்தான், வருந்தியேகோடிமனுபேர்களெல்லாம் வையகத்தில்மகாதேவனென்றுசொல்லி, திருந்தியேநமஸ்கரித்துதலைகுனிந்து திகழுடனேகோடியுகமிருந்தார்தாமே.

தாமானசாத்திரங்கள் சொன்னதெல்லாம் தகமையுடன்பொய்யாச்சுபொன்னுலோகம், நாமேதான்சொன்னபடி வடிவேலர்தானும் நாட்டிலேயிருந்தாரோ யில்லைகண்டீர், லேமேதான்பூலோகம்தன்னைவிட்டுவிடுபட்டுத்தேகமது மண்ணாய்ப்போச்சு, போமேதான்மண்கூறுமண்ணாய்ப்போச்சு பூவுலகிலிருந்தாரும் காணோம்பாரே. 591

கெந்தகத்தயிலம்.

உண்டாகுங்கெந்தகத்தயிலவகைகேளு வுன்னியஞானியண்டம்பத்துதானெடுத்து, மிரண்டாதிவெள்ளாற்றிலிட்டாவியென்றவெண்கருவைநீக்கிமஞ்சள் சருவாகயெடுத்து, தீண்டாதசட்டியிலேயிட்டடுப்பிலேற்றித்தணிவாகயெரிமூட்டி தாவியினாலிருக்கப், பண்டாதியருளாலேவருந்தயிலந்தன்னை, பண்பாகவெடுக்கபின்னை கெந்தகத்தை வாங்கே. 592

கெந்தகத்தில்மூன்றுபங்கில்பசுவின்பாலில்கெந்தகம்விட மூன் போலசுத்திசெய்தெடுத்து, துஞ்சாமதைபொடியாக்கி சீலைதனில்பரப் பிதிரியாகத்திரித்து அண்டத்தயிலத்தைவைத்து, பந்தமாயளல்முட் டிதலைகீழாய்பிடித்து பாத்திரத்தைகீழ்வைத்துப், பாங்காகயேந்திவ ந்துசேர்த்து தயிலத்தைபொன்றிலேயடைத்தால் வாகாகப்பின்னுமதி தில்வகைபகருவாமே. 593

கருவாகயிந்தவகைப்பார்த் தெடுத்தபேர்களகங்கார நிறத்துட னேமாற்றுகுறைந் திருந்துதானல், வுருவாகவேயிந்தத் தயிலமதில் பொன்னைவுள்ளாக்கியெடுத்துவைத்து ஒருதிரந்தானுக்கத், திருவா கநிறம்பசுமையாகமாத்தேறும், செப்பிலேனும்பின்னுமதில்செப்பவகை கேளுதுருவான சொரிசிரங்குநோயாளர் தனக்குதுளசியிலைத்தனில் கொடுத்துதொகுத்துபோரே. 594

தொகுத்துபார்க்கவென்றல் வங்கவகைதனிலே சித்தியுள்ள செந்தூரம்சொல்வேன்கேளு, வகுத்தபடிவருஷம் நூத்திருபதுவுஞ் சென்றுவளமாகநிற்குமந்த வேம்பிடபழத்தை, வெகுத்தமுடன்கொ ண்டுவந்துபிடித்ததில்சாரெடுத்து வெறுப்பில்லாதே விரும்பிவைத்து க்கொண்டு, பகுத்தநிலேபின்னமொரு பாத்திரத்தில்வாங்கி பாங்கா ககருத்தவங்கமுருக்கியிதில்சாயே. 595

வுருக்கியந்தவங்கத்தைஏழ வேழுவட்டம் ஒன்றுனசாத்திலே வு ரைத்தபின்புயெடுத்து, தருக்கிசைந்தவோட்டில்வைத்து தாளகமு ங்கூட்டி தனித்தடுப்பிலேத்தியே நாயுருவிக்கப்பால், நெருக்கியதை வறுததுவங்கம்நீறுக்கிப்பின்பு நீள்குமரிச்சாற்றிலே,யொருசமமரை த்துதிரிக்கிசைந்த குகைக்குளிட்டு யெருவில்வைத்து சேவலின்புட மாகநாலிலிடலாமே. 596

சேவலின்புடமாகத்திதினமும்ரெண்டுவட்டந்திறமாகச் சாற்றி லரைத்திருவதுநாளையிலே, யேவலுருபுடம்நாற்பத்தொண்ணுகுறை யாமல்யிடவேசெந்தூரம்முருக்கம்பூநிறமாம், ஆவலுறுவெள்ளிதனை யொருகளஞ்சியுருகி அதுதெளிவில்பணவிடைசெந்தூரமதை, கொ டுக்கநீவலுமையாக மாற்றேமழரையுங்காணும் நிமலனர் திருவாணைநி சங்கவரையிதுவே. 597

இதுதளிலுஞ்சுறுக்கான இன்னமொருவகைகேளு இன்னிலத் திலாதிமருந்தாவரையின்பட்டை, சதிராககொண்டுவந்து வுணத்தி

ஒருபாளை தனிலிட்டு, பாதாளஅஞ்சனத்தில்தயிலமதுவாங்கி யிறக்கி யதையிம்மிவைத்துக்கொண்டு, மேலானகோழிமுட்டை வெண்கருவையதிலே, மதுவாகவுரைத்ததையுமாட்டிரேகித் துவசமாகச் செய்தபின்பு அருதாரம்வாங்கே. 598

தாளசெந்தூரம்.

வாங்கியந்தஅரிதாரக்கட்டினில்தயிலம்வாகாகவேயுரைத்துவெய்யிலிலேவைத்தால், பாங்கானசெந்தூரமாகு மதையெடுத்துப் பசுமையாயறவைத்த, வெள்ளியொருகளச்சியேங்கவே யுருக்கியதில் பணவிடைசெந்தூரம், யேற்கையாய்கொடுக்க மாற்றேழு குறையாது நீங்காதே சூதமுனியுரைத்தவகையெல்லாம் நிசமாகுங் கண்டறிந்து தேறிநீபாரே. 599

அனுமார்உற்பவம்

பாரேதானின்னமொகு கருமானங்கேள் பாலகனே யருண்மைந்தாசொல்வேனப்பா, நேரேதான் அனுமாரினுற்பவத்தைநேரானமாணுக்கனறியவென்று, சீரேதான்வாய்விண்ட தனயனென்றும் சிறப்பானநூலெல்லாஞ்சொன்னார்கண்டீர், கூரேதான்கவிவாண ரெல்லாங்கூடிகுவலயத்தில் கட்டுரைதானுரைத்தார்தானே. 600

உரைத்தாரேமுன்னோர்சொல் நூல்களெல்லாம்வுத்தமர்கள்பாடிவிட்டார் அநுமாரைத்தான், நிரைத்தாரேதேவனென்றும் கர்த்தனென்றும்நிலையான யிதிகாசபுராணமெல்லாம், பரைத்தாரேசிரஞ்சீவிப்பட்டமென்றும் பாருலகில்வரம்பெற்ற ஆஞ்சனென்றும், வரைத்தாரே மிருகமென்றகூட்டந்தன்னை வலுவானமிருகமென்றும் வசனித்தாரே. 601

வசனித்தார்மிருகமென்ற அனுமார்தானும்வண்மையுள்ளவானரமாங்கூட்டந்தன்னில், புசவீரபராக்கிரமவீரனானபுனிதமுள்ள ஆஞ்சநேயஜாதிகண்டீர், சதகோடிவானரமாய் ஆஞ்சநேயன்தாரணியில்தேவனுயிருப்பானானால், குசமுடைய ஸ்ரீராமர்பக்கல்னின்றுகுவலயத்தில்மிகயுத்தஞ் செய்தார்தானே. 602

தானான ஸ்ரீராமர்க்குதவியாக தாரணியில்வெகுயுத்தஞ்செய்துமென்ன, கோனான ஸ்ரீராமர்மாண்டுபோனார் குவலயத்தில் வானரங்களெல்லாம்மாண்டார், பானானபாருலகிலாஞ்சனேபர்படைகூட்டந்தன்னுடனேமண்ணுய்ப்போனார், தேனானயெனதையர் காலாங்கிநாதர்தெளிவுடனேயெந்தனுக்கு வுரைத்தார்தாமே. 603

வுரைத்தாரேகாலாங்கிசொற்படிக்கிவுத்தமனேயடியேனுந்நாள் வணங்கி, வரைக்கமலம்பதாம்புயத்தைக்கரத்தில்தொட்டு வாகுடனே

யானுரைப்பேனின்னங்கேளீர், முறைக்கவேறுமருடனாஞ்சநேயர்மூது லகில்யிறந்ததொருகதைமெய்யாச்சு, திரைக்கவேயுலகுதனிலிருந்தா ருர்தான் திரளுடனே மண்கூருய்ப் போனூர்தாமே. 604

போனூரேசாஸ்திரங்கள்புராணந்தன்னில்புகழானவனுமாரைக் கற்பகாலம், வானோர்கள்முதலானபேர்களெல்லாம்வையகத்தில்சிரஞ் சீவிப்பட்டம்பெற்றோன் ஏனோதான்வீணுகமாண்டானென் றுமெழி லானவார்த்தைதன்னைநம்பாமற்றுன், கானதேவர்முனிரிஷிகூட்ட ங்கள் கட்டுரைத்தவாக்கியமும் பொய்யாப்போச்சே. 605

பொய்யாகப்பிடாரனவன்பாம்புதன்னை பொங்கமுடன் ஆட்டி வைத்தகதையைப்போல, மெய்யாக ஸ்ரீராமர் அனுமார்தன்னைமேன் மையுடன்கைப்பழக்கஞ்செய்திருப்பார், கையுடனே ஆயுதங்கள்தடி கொடுத்துகாசினியில்யுத்தமதுபழக்கஞ்செய்து,பையவேவாநரத்தை வசமதாக்கி பாருலகில் பழக்கமது செய்தார்காணே. 606

காணவேயுலகமதில்யிருந்தோருண்டு காசினியி லொருவருந்தா னிருந்ததில்லை, பூணவேபூதத்தில்பொய்யேவாழ்வு புகழானமெய்வா ழ்வுயாதொன்றில்லை, தோணவேதொல்லுலகிலெல்லாமாண்டார்தோ ற்றமுடன்தேகமதுமண்ணுய்ப்போச்சு, வேணவேகாயாதிகற்பங்கொ ண்டும் விண்ணுலகில் மடிந்ததுவும் மெய்யுமாச்சே. 607

ஆச்சப்பா காணவென்றுலொன்றுமில்லை அப்பனே கோடான கோடிசெம்பொன், மூச்சப்பாதேகமதை வருந்தியல்லோமுனையான கோடிபொருள்படைத்துமென்ன, பேச்சப்பாபேசுமுன்னேவாசியோ கம்போனமகத்துவங்கள்கொன்டுமென்ன,பாச்சலுடன்கூடுவிட்டுக் கூடுபாய்ந்து பாருலகிலிருந்தாலும் வொன்றுங்காணே. 608

ஒன்றுமேகாணுமலுடலாவிதன்னை வொழுக்கமுடன் கருவிகா ணுதியெல்லாம், சென்றுமேநவத்துவாரங்களெல்லாம்சேகரமாய்த்தா னடைத்துயிருந்துமென்ன, கன்றுதான்பால்தேடித்தாயைக் கண்ட கதையைப்போல்வாச்சுதுபாருள்வாழ்வு, வென்றுமேயுபவாசமிருந்து மென்னவேதாந்தகற்பமதைக் கொண்டார்பாரே. 609

கொண்டுமேகாயாதிகற்பந்தன்னைகுவலயத்தில்கோடிவரையுண் டுமென்ன,பண்டானமேனியதுபாழாய்ப்போகும்பாருலகிலுயிர்தன்னை யேகாண்பதில்லை,அண்டர்முநிராட்சதர்களெவரானுலும் அவனிதனி லிருந்தவரும்மெய்யோசொல்வீர், கண்டபடிசாஸ்திரங்கள்மெய்போ ல்கூறி காசினியிலொருவருந்தானில்லைதானே. 610

சிவவாக்கியருற்பவம்.

யில்லையேயின்னமொருமார்க்கங்கேளு வெழிலானசீனபதிப்பக் கந்தன்னில், கொள்ளவேகோடானகோடி சூழ்ந்தகொடுத்தவசிதில்லை வனம்அங்கொன்றுண்டு, எல்லைகர்சுற்றிலுமேகாணார்தாமும் வெழி லான வோடைகளும்நதிகளுண்டு, புல்லமேவஐராவதங்கள்போல புக ழானமலையுண்டு குகைகளுண்டே. 611

உண்டானமல்லிகார்ச்சனையொன்றுண்டு வுத்தமனேரிஷிக்கூட் டம்முனிவர்சித்தர், திண்டானகாறுமத்பத்தில் திறளானவாய்க் கால்மண்டபந்தான், வண்டுடனேகூட்டங்கள்கலந்துமெத்தவாகான மண்டபத்தைசுற்றியேதான், திண்டுபோல்தூளிகளுமோடிவந்துதிர ளானகூட்டமதைசேர்க்கொண்ணுதே. 612

ஒண்ணுதுரிஷிகூட்டம்முனிகள்கூட்டம்வுத்தமனர் சிவவாக்கிய சித்தர்பக்கல், கண்ணவிந்தயோர்களுக்கோருண்டல்போல கைக்குதவி யாய்யிருந்தார்சித்தரெல்லாம், நண்ணமுடன் ஆயக்கால்பக்கம்நின்று நளினமுடன்சிவவாக்கியசித்தருக்கு, வண்ணமுடன்சோடசவுபசார மெத்த வாகுடனேசெய்துமல்லோ யிருந்தார்பாரே. 613

இருந்தாரேவெகுகோடிகாலமப்பாவெழிலாகச்சிவவாக்கிய சித் துதாமும், பொருந்தமுடன் சீஷவர்க்கமார்க்கத்தோர்க்கு பொங்க முடன்முனுரைத்தவதிசயங்கேள், திருந்தமுடன்தேகமதுகற்றாணு கும்தெளிவானசித்தர்முனிகேளுமென்று, குருந்தமாம்தன்னருகில் பக்கல்சென்று கூறினார்வுபதேசங்கூறினரே. 614

கூறினர்சிலகாலஞ்சமாதிதன்னில்குவலயத்தையாங்மறந்து யிரு ப்பேனென்று,தேறியதோர்சித்தர்முநிரிஷிகளுக்குதேற்றமுடன்கூறி யதோர்வண்ணங்கேளீர், பீறியதோர்மூன்றுயுகம் யிருப்பேனென்று மேன்மையுடன்தானுரைத்துசமாதிதன்னில், சீறியேதானிருந்துசித் தர்தாமும் சிறப்புடனேதாமிருந்தார் கோடியாமே. 615

கோடியாம்பிருகோடிவெகுநாள்காலம் கொற்றவனர்சமாதிதனி லிருந்ததுண்டு, நீடியே சிலகாலமிருந்துமேதான்நீதியுடன்பூமிதனில் எழுந்ததுண்டு, தேடியேஅநேகம்பேர்சித்துதாமும்தெளிவானசிவவா க்கியசித்துதம்மை,கூடியேகூட்டமிட்டுவதிகஞ்சொல்லிகுவலயத்தில் சித்தரெல்லாம் மதிப்பிட்டாரே. 616

மதிக்கவே சிவவாக்கிய சித்துதாமும் மார்க்கமுட மண்மீதிலெ
ழுந்தபின்பு, துதிக்கவே பலபேரும் அஞ்சலித்து துறையுடனேமூன்
றுமுறை சமாதிசென்று, கதிக்கவேயவர்மனது துடிக்கக்கூறி காசி
னியில் சமாதிதன்னில் பின்னுஞ்சென்றார், பதிக்கவேசிலகாலஞ்சமா
திருந்து பட்சமுடன் பின்னுமல்லோ யெழுந்தார்பாரே. 617

பாரேதான் சிவவாக்கிய சித்துதாமும் பாருலகில் சித்தனைப்
பிறந்துமென்ன, சீரேதான் சமாதிதனில்போயுமென்ன சிறப்புடனே
யங்கிருந்துவந்துமென்ன, நேரேதான் காயாதி கற்பங்கொண்டு நேர்
மையுடன் பூவுலகிலிருந்துமென்ன, தீரேதான் சித்தர்முனி கூட்டம்
யாவும் திறமான சித்தனென்று சொன்னார்பாரே. 6'8

சொன்னாரே சிவவாக்கியர் வல்லபம்போல் தொல்லுலகிலாரே
னுமிருந்ததுண்டோ, மன்னுமேகேள் சிவவாக்கிய சித்துதம்மை மானில
த்தில் மதிப்பார் ரிஷிகள்தாமும், பன்னவேசிவவாக்கிய நாதர்தம்மை
பட்சமுட னஞ்சலிகள் மிகவும்செய்தார், என்னவே நாதாந்த சித்து
தாமும் எழிலானபூமிதன்னில் பிறந்தார்பாரே. 619

இறந்தாரே கற்பாதிகற்பங்கொண்ட யெழிலான சித்துமுனி
நாதர்தாமும், மறந்தாரேதன்தேக மண்ணிலப்பா மானிலத்திலவர்
தேகம் மண்ணுய்ப்போச்சு, துறந்தாரே சகலகலைக்கியான மெல்லாம்
துப்புரவாய்த்தானறிந்து மாண்டார்தாமும், சிறந்ததொரு சிவவாக்கி
யதேகந்தானும் சீரழிந்து மண்தனிலே மக்கலாச்சே. 620

ஆச்சுதப்பா தேகமது மண்ணுய்ப்போச்சு, அவனியிலே யிருந்
தவர்களாருமில்லை, பாச்சலுடன் பிரிதிவுதான் மண்ணுய்ப்போச்சு,
பாங்கானதேகமது நிலைநில்லாது, மாச்சலென்ற வாழ்வதுவு மிவ்வள
வேயாச்சு மானிலத்தில் வாத்துமமும் பிரிந்துபோச்சு, ஏச்சலென்ற
பிரிதிவா மண்கூருச்சு யெல்லாரு மிப்படியே போகலாச்சே. 621

பூகிமுனிவர் உற்பவம்.

போகலாமின்னமொரு மார்க்கம்பாரு பூதலத்தில் வதிசயங்களி
ன்னஞ்சொல்வேன், வேகமுடன் சித்தர்களில் ஒருவனப்பா வுலகுத
னிலிருந்தாரே பூகிதாமும், சோகமுடன் சமுசாரவாழ்க்கைதன்னில்
செருக்குடனே வெகுகால மிருந்தாரப்பா, சாகமுடன் சமதக்கினி
முனிவருக்கும் சார்பானதிரணக்கிய முனிவர்தாமே. 622

தாமானமுனிவருக்கு குருவேயாகும் தண்மையுள்ளகுருவினது
கீர்த்திதன்னை, கோமானுங் காலாங்கி நாதர்தாமும் கொப்பெனவே

யடியேனுக் குரைத்ததுண்டு, நாமானமாகவல்லோ வறிந்தமட்டும் நாதாக்கள் வரலாறை நாமுரைப்போம், தீமானமில்லாமல் யடியேன் ருனும் திறமுடனே சொல்லுகிறேன் பண்பாய்க்கேளே. 623

பண்பான யூகிமுனி யென்போர்தாமும் பாருலகில் தட்சணப் பிரவேசத்தில், மண்பான மலைவளம் சுத்தும்போது கண்டாரே வரா ககிரியென்றமேரு, திண்பான மலைவளத்தை சுற்றியேதான் தீரமுட ன்நடுமத்தி காடதன்னில், வன்பானகுத்துக்கல் கண்டாரங்கே வாகு டனேவதிசயமொன் றிருக்கலாச்சே. 624

இருந்ததொரு வதிசயத்தைக் கண்டாரப்பா யெழிலான யூகி முனிசித்தர்தாமும், பொருந்தவே மலையோரம் சமாதிகண்டு பொங் கமுடன்ருனிருக்கும் காவந்தன்னில், திருந்தமுடன் சமாதிபுரம்சத் தம்கேட்டுத் திடுக்கிட்டு மெய்மறந்து நிற்கும்போது, அருந்துதிபோ ல் சோதியொன்று காணலாச்சு அப்போது சித்தொளிவைக் கண் டார் பாரே. 625

கண்டாரே சித்தொளிவைக் கண்போது கண்காணு சோதிமய மென்னசொல்வோம், அண்டசராசரங்களெல்லாம் கிடுகிடுத்து அங் ஙனமே வொளிதனிலே மயங்கிபோனூர், தெண்டமுடன் கண்திறந் துபார்க்குபோது தெளிவான ஸ்ரீசம்பாரனையுமப்பா, பாண்டுமிகப் பிரகாயந்தான் பாரினிலே தோற்றமது காணலாச்சே. 626

காணவே யூகிமுனி சித்துபாலன் கண்டாரே ஸ்ரீசம்பாரனையர் தன்னை, தோணவே யவர்பாதந் தொட்டுமேதான் தொல்லுலகில் கீர் த்தியுட னடிபணிந்து, வேணதொரு வரமெனக்குத் தருகவென்று விருப்பமுட னஞ்சலிகள் செய்துகொண்டார், பூணவேரிஷியாரு முனியாருக்குப் புகழாக ஞானோபதேசஞ் செய்தார்பாரே. 627

பாரேதான் ஞானோபதேசம்பெற்றுப்பாலகனும் சமாதிக்குமுன் னதாக, கூரேதான் சிலகாலமிருக்கவென்று கொற்றவனும் வுறுதிய துமிகவுமாகி, தேரேதான்லட்சணங்கள் விதியேற்பாடு தெளிவான முறையோடு சமாதிக்கேக, நேரேதான்யூகி முனிசித்துதாமும் நெடு ங்கால சமாதிதனி லிருந்தார்தாமே. 628

யூகிமுனி திருவடாந்தம்.

இருக்கவே யூகிமுனி சிலதுகாலம் யெண்ணமுற்றுச் சமாதிக்கு ப்போகும்போது, உருக்கவென்ற கல்லின்மேல் வரைந்தரூபம் வுத்த மனே சொல்லுகிறேன் மைந்தாகேளு, பொருக்கவே சிலகாலம் சமா திருந்து புவிமீதில்வரும்போது வடையாளந்தான், கருக்கலாய்ப்பாலி ரவு மிரண்டுமொன்ருய்ப் பாருலகமிருக்குமென்று யெழுதலாச்சே.

எழுதவேசிஷவர்க்கந்தன்னைக்கேட்டு யேற்றமுடன் சமாதிதனி லருகிருந்தார், தொழுதுமேசிலகாலமிருந்தாரங்கே தோற்றமுடன்ச ப்தமதுகேட்கலாச்சு, பழுதுபடாதேகமதுயென்னசொல்வேன் பாரி னிலேவெகுகாலமிருந்துமேதான், விழுதுபோல்ரோமங்கள்மிகவளர் ந்துவிருப்பமுடன்மேதினியில் வந்தார்காணே. 630

காணவேவதிசயங்கள் சொல்லியேதான்காசினியில் வெளிப்பட் டார்யூகிமாமும், பூணவேகாயகற்ப முண்டுமல்லோபுகழாச்சமாதித னிலிருந்துவந்தார், வேணபடியுபசாரமதிகமாகி மேதினியில் தாமிரு ந்தார்கோடிகாலம், தோணவே கூடுவிட்டு கூடுபாய்ந்தார் தோறுமல் தேகமதுவேறுய்த்தானே. 631

வேறுகத்தானிருந்தவண்மைசொல்வேன் வேண்டியே கைவேறு ய்க்கால்கள்வேறுய், நேறுகவுடல்வேறுப்தலையும்வேறுய் நேர்மையுட ன்பூமிதனிலிருந்துசித்து, சீராகலோகமதில்வநேகங்கூத்துகள் சிறப் புடனேயாடினதுமெத்தவுண்டு, பாராமல்கேட்டவரும் பார்த்தோரு ண்டுபாரினிலேவதிசயங்கள் மெத்ததானே. 632

தானுனவதிசயங்கள் சாற்றக்கேளும் தகமையுள்ள குருபரனுர் வித்தைதேடி,தேனுன நூல்கள்முதல்யாவுந்தேர்ந்துதெளிவறவேயோ கமுதலுளவுகற்று, கோனுயெளதையர் காலாங்கிநாதர்குருபரனுரு ளுடனே பாஷங்கொண்டார், வேனுனவெகுசித்துசொரூபசித்துவெ ளியானநாதவொளி வதீதமாமே. 633

அதீதமாம்வதிசயங்கள் மெத்தசெய்து அவனியிலெயிருந்தவர் கள்வுண்டோசொல்லும், தீதமுடன்மண்கூறுப்ப்போனுரப்பா துரை ராஜர்வுலகுதனிலிருந்ததுண்டோ, கதீதமுள்ளதேகமதுநிலைநில்லாது காசினியில்யாரேனு மிருப்பாருண்டோ, பதீதமுள்ள பொய்வாழ்வு யென்னலாம் பாரினிலேயெல்லா மிப்படியேபாரே. 634

பார்க்கையிலேதேகமது நிலைநில்லாது பார்லோக மெல்லாமிப்ப டிதானுகும், தீர்க்கமுடன்தேகத்தைநம்பியல்லோ திறமைகெட்டுமா ண்டவர்கள்கோடாகோடி, ஊக்கமுடன்சித்துதமைக் கடவுளென்று வுத்தமர்கள்கோடித்தார்பலருமப்பா, நோக்கமலம்வீற்றிருக்கும் வா ணிபாதம்நேர்மையுடன் பாடிவைத்தக் காண்டமாமே. 635

காண்டமாமின் னூல்தான் சத்தகாண்டம் கருவானசித்தருடம
ரபுமார்க்கம், ஆண்டவனார்நாதாந்தசித்தனென்றும் வவனிமிமேலபொ
ய்ஞானிமெய்ஞானியென்றும், தூண்டுமேயகருவிகாணாதியென்றும் து
ரையானசமாதியிடபீடந்தானும் வேண்டியேசித்தருட சொரூபம்யா
வும்வினையமுடன்பாடினதோர் காண்டமாமே. 636

காண்டமிக்காண்டம் நான்காம்காண்டம் காசினியிலிருந்ததொ
ருசித்துதாமும், வேண்டியதோரற்புதங்கள் மகிமையாவும் மேன்மை
யுடன்பாடிவைத்தேன்யிக்காண்டத்துள், தாண்டவம்போல்யின்னம்
வெகுசித்துமார்க்கம் சாற்றுகிறேன்காலாங்கிநாதாதம்மால், மாண்ட
தோர்மானிடர்கள்சித்துதாமு மார்க்கமுடனறியலாமிதற்குள்தானே.

புலிப்பாணி உற்பவம்.

மானாவின்னமொருமார்க்கம்பாருதண்மையுள்ள என்சீஷனொ
ருவனப்பா, தேனானபுலிப்பாணியென்னுஞ்சித்தன் தேசத்தில்வேங்
கையைவாகனமதாக்கி, கோனானவெனதையர் காலாங்கிநாதர் கொற்
றவனார்தன்னிடத்தில் சென்றுமேதான், மானாவுபதேசம்பெற்றுக்
கொண்டு மானிலத்தில்செய்ததொரு வண்மைபாரே. 638

வண்மையுடன்வெகுகாலம் லோகந்தன்னில் வளமையுடன் வே
ங்கையின்மேலேறிக்கொண்டு, திண்மையுடன்வலசாரியா யிடைசாரி
யாகதிறமுடனேசுத்திவந்த சித்தனப்பா, கண்மையாய்சிலகாலம்வுப
தேசம்பெற்றுக்காலாங்கிநாதருடகிருபையாலே,உண்மையாய்சமாதி
க்குயேகவென்று வுத்தமனும் மனவுறுதிகொண்டான்காணே.

காணவேகாடுமலை சுத்திவந்து கடிதானசிக்கிந்தா மலையிலோரம்
பூணவேசமாதிக்குநிடமுந்தேட புண்ணியனார்போகுமந்தகாலந் தன்
னில், வேணபடிசித்துவொருசமாதிகண்டார் விருப்பமுடன்சமாதிக்
குவருகேசென்று, சாணளவுதூரமதுநிற்கும்போது சப்தமொன்று
கேட்கலுற்றார்சித்துபாரே. 640

பாரேதான்சித்தொளிவு சப்தம்கேட்டுப் பாருலகில்மெத்தமதி
சயந்தானப்பா, நேரேதான்சமாதிக்கு முன்னேநிற்க நேருனசமாதி
யதுதிறந்துமங்கே, சீரேதான்நாதாந்தசித்துதாமும்சிறப்புடனேவெ
ளிப்பட்டார்சோதியாக, கூரேடான்யவர்தன்னைக்கண்டபோது கொ
ற்றவனார்திடுக்கிட்டுப் பயந்திட்டாரே. 641

பயந்திட்ட புலிப்பாணி முனிவர் தாமும் பாரினிலேசித்தொளி வைக்கண்டபோது, நயந்திட்ட நமஸ்காரவஞ்சலிகள்செய்து நலமு டனே சித்தர்தாமும் முன்னெதிரே நின்று, சயந்திட்டமனதோடுவுப தேசங்கள் சாங்கமுடன் பெறுவதற்கு மனதிலெண்ணி, வயங்கவே சித்தருகில்வந்துநின்று வண்மையுடன் கேள்விக்கு முன்னின்றாரே.

முன்னின்ற புலிப்பாணி தம்மைநோக்கி முன்யுகத்தில் சமாதி யதிலிருந்தசித்து, தன்முகமாம்நின்றதொரு புலிப்பாணிதம்மை தக மையுடன் சித்துமுனி யாரென்றென்ன, சொன்னமொழிகள் தனை யேகேட்ட பாணிசொரூபமென்ற சித்துக்குக்கூறலுற்றார், மன்னவ னார் முன்னாளில்விறந்தசித்து கைலாசபோகரிஷி சீஷனானே. 643

நானேதான் போகரிஷிசீஷனென்றால் நன்மையுடன்சித்துமுனி மனதுவந்து, தானேதான் புலிப்பாணிதம்மைநோக்கி சட்டமுடன் திருவாக்குக் கூறலுற்றார், வானோர்கள் துதிக்குமந்த போகர்தன்னி ன்வளமான சீஷனென்று சொன்னதாலே, ஞானோபதேசமது செய் வேனென்று வண்மையுடன் தாமுரைத்தார் சித்துதாமே. 644

தாமான சித்தொளிவு நாதர்தாமும் தண்மையுடன் புலிப்பாணி நாதருக்கு, நாமேதான் சொன்னபடி வுபசாரங்கள் நலமுடனேசெய் துமல்லோ ஆசீர்மித்து, போமேதான் முன்யுகத்தில் பிரம்மாவுக்கும் பொங்கமுடன் வரசனுக்கு நடந்தசாபம், வேமேதான் மேதினியிலெல் ல்லாருந்தான் வெழிலாகக்கண்டிருப்பார் முனிவர்தாமே. 645

புலிப்பாணிக்குச் சாபந்தீர்த்தது.

தானானசாபமது தீர்வதற்கு தனியானரிஷியொருவ ரங்கிருந் தார், கோனானபிரமருக்கு தேவேந்திரபட்டம் கொடுத்துமே சாபம தைதீர்த்துவிட்டார், பானானபராபரியா ளாசீர்மத்தால் பாருலகில் நீருமென்னைக் கண்டீரிங்கே, கோனானவுன்பாட்டன் காலாங்கிநாதர் கொற்றவனார் பேருரைத்தீர் புண்ணியவானே. 646

புண்ணியனே பேர்சொன்னபடியாலப்பா பூதலத்திலுந்தனுக்கு வேங்கைசாபம், திண்ணமுடன் தீர்த்துமல்லோ யுந்தனுக்கு தீரமுட னுபதேசஞ் செய்வேனென்றார், வண்ணமுடனுபதேசம் பெற்றுமல் லோவானுலகில் யெமனுக்கு யிடமில்லாமல், கண்ணபிரான் தன்னைப் போல் வாழும்பெற்று காசினியில் வெகுகால மிருவென்றாரே.

இருவென்றபோதையிலே புலிப்பாணிதாமும்யெழிலானசித்துவுக்கு வணக்கஞ்செய்து, திருதலுடன்முன்னின்றுவாய்புதைத்துதீர்மையுடன் குருவணக்கம் மிகவுஞ்செய்து, பொருதவே வரமெனக்கு வேண்டுமென்ன பொங்கமுடன் சித்ததுவுங்கொடுத்தாரங்கே,வருதலுடன் புலிப்பாணிமுனிவர்தாமு வல்லமைகள்மிகவாகிவந்திட்டாரே

வந்திட்டபோதையிலே முனிவர்தாமும் வாகுடனே யுலகுதனில் வதிசயங்கள், தந்திட்டார் லோகத்து மாந்தருக்கு தாரணியில் வெகுகோடி சித்துசெய்தார், முந்திட்ட சாஸ்திரத்தில் சொல்லாதெல்லாம் முனையாகப் பாடிவைத்தா ரின்னூலுக்குள், தொந்திட்டமானதொரு வித்தைமார்க்கம் தொழிலெல்லா மிப்புவியி லாடலாச்சே.

ஆடினார் கோடான கோடிவித்தை அப்பனேயிப்புவியிலாடலாச்சு, கோடானகோடியுகம் யிருக்கவென்று கொப்பெனவே காயாதி கற்பங்கொண்டார், காடாண்மையாகவேதான் சித்துதாமும் தாரணியில் வெகுகோடி ஜாலஞ்செய்தார், கூடானகூடுவிட்டு பாய்ந்துமேதான் குவலயத்தில் சித்துமுனி யில்லைதானே. 650

இல்லையே சித்துமுனி பாலன்றானும் யெழிலான மண்ணுக்கு யிறையேயானார், அல்லல்மிக பட்டுமல்லோவவனிதன்னில் அப்பனே யவருமல்லோ மாண்டுபோனார், கல்லானதேகமது யென்றிருந்தார் காசினியிலவர்தேகம் மண்ணாய்ப்போச்சு, புல்லானபுல்லோடே புழுதியாகி பூதலத்தில் புலிப்பாணி மாண்டார்பாரே. 651

பாரேதான் வுலகமதில் சித்துயாவும் பாங்காகக் கற்றறிந்துயிருந்துமென்ன, நேரானசிவயோகந் தன்னின்று நிஷ்டையிலே தானிருந்து பலனுமென்ன,கூரானகுறிப்பறிந்து குவலயத்தில் கொற்றவனே காயகற்பங் கொண்டுமென்ன, வீரானதேகமது விழலாய்ப்போச்சு விருத்தமுட னிப்படியே மாண்டார் தானே. 652

கொங்கணவ ருற்பவம்.

மாண்டாரே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் மகத்தான சித்தொளியின் வண்மைகேளும், தாண்டவம்போல் கொங்கணவசித்துதாமுந் தாரணியிலொருமுனிவ ரிருந்தாரப்பா, ஆண்டகையாமெனதையர் காலாங்கிநாதர் அவனியிலே சித்தொருவ ரிருந்தாருண்டு, பூண்ட மனதுறுதியினால் சித்துதாமும் பொங்கமுடன் வெகுகால மிருந்தார் தாமே. 653

தாமான கொங்கணவமுனிவர்தாமும் தாரணியில் சிலநூல்கள் செய்தாரென்றும், நாமான கொங்கணவர் முக்காண்டமப்பா நாட்டி

னிலே செய்துவைத்த தண்மைதன்னை பாமானமாகவல்லோ பாடி வைத்த பளிங்கான காண்டமென்னுஞ் சாஸ்திரத்தை, பூமான்களெ ல்லவரும் பாராமற்றான் புகழாக சாஸ்திரததில் மறைப்பென்றாரே.

மறைந்தாரே கொங்கணவர் சாஸ்திரத்தை மார்க்கமுடன் கரு வெல்லாந் தெரியாமற்றான், திறைப்புடனே கொங்கணவர் காண்டந் தன்னை தீராதசங்கை பிரமாண்டமென்றார், முறைப்படியே முழுமக் கள் பாராமற்றான் முனிசொன்ன நூலதனை சங்கையெனறார், குறை யகற்றி வுட்கருவையறிவதற்கு குவலயத்தில் யுத்தியில்லா மதிபோ னாரே. 655

போனாரே வெகுகோடி மாந்தர்தாமும் பொங்கமுடன் கொங்க ணவர் நூல்கள்தன்னில், ஆனாரே கருவிகாணுதியெல்லாம் அப்பனே மறைத்துவைததா ரென்றுசொல்லி, ஏனோதான் மதிமோசந்தானு மாகி எழிலானசாஸ்திரத்தில் குற்றஞ்சொன்னார், மானேகேள் மதி கெட்டு யிப்படியே நூலில் மகாதோஷஞ்சொன்னாரே மாந்தர்காணே.

காணவே கொங்கணவசித்துதாமும் கருவானமுக்காண்டம்பாடி க்கொண்டு, நாணவே நாதாக்கள் முனிவர்தாமும் நாணிலத்தில் நடுக் கமுடன் திடுக்கிட்டேங்க, வேணபடி நூலுக்குப் பலமுங்கட்டி வேக முடன் கொண்டுமல்லோ வருகும்போது, தோணவே மகாமேருதன் னிற்பக்கம் தொடர்ந்தாரே கொங்கணவ முனிவர்தானே. 657

தானான கொங்கணவ முனிவர்தாமும் தாக்கானமேருவிடந்தன் னிற்சென்று, மானானமலைபக்கல் குகையிற்சென்று மயக்கமுடன் சமாதிக்கி யிடமுந்தேட, பானானபரமமுனி மனதிலெண்ணி பட்ச முடன் சமாதிதனிலிறங்கவென்று, கோனான கொங்கணரும் யெண் ணியல்லோ கொப்பெனவே பாறையின்மேல் படுத்தார்தானே.

படுத்துமே பாறையின்மேல் நித்திரைசங்கம் பரிவாகப்பராபரி யை நினைந்துகொண்டு, அடுத்துமே சுழுத்தியிலே சொப்பனமுங்கொ ண்டு ஆண்டவனார் தேகமதை மறந்துவிட்டு, தொடுத்துமே பூரணத் தை மனதிலுன்னி தோற்றாமல் வாசியோகஞ்செய்துகொண்டு, விடுத் துமே நித்திரைகள் நீங்கியேதான் விருத்தமுடன் கண்விழித்துப்பா ர்த்தானே. 659

கௌதமரிஷியைக் கண்டது.

பார்க்கையிலே பலபலவாந் தோற்றங்காணும் பாரினிலே வதிச யங்கள் மிகவாய்த்தோற்றம், ஏர்க்கையிலே குன்றருகே சப்தங்கா ணும் யெழிலான வாத்தியங்கள் மிகவேகேட்கும், தீர்க்கமுடன்தேவ

தாகோஷ்டந்தானும், தீரமுடன் செவிதனிலே கேட்கும்பாரு ஆர்க் கவே கொங்கணரு மிகவேகேட்டு அப்பனே மதிமயங்கிநின்றார்பாரே

நின்றாரே குன்றருகே மலையினோரம் நீடானசுனையுண்டு வுதக முண்டு, குன்றானமலையோரங் குத்துக்கல்லுண்டு கூரானமண்டபமு மங்கொன்றுண்டு, வன்றானகாறுறு தீர்த்தமுண்டு வகையான புலியு றங்கும் விடுதியுண்டு, தன்றானதடாகமது யிருக்கும்பாரு தண்மையு ள்ள சமாதியொன்று கண்டார்பாரே. 661

பார்த்துமே கொங்கணவர் முனிவர்தாமும் பரிவுடனே சமாதி யிட மருகிற்சென்றார், தீர்த்தமுடன் தடாகமது மூழ்கியேதான் திருப்பணிக்கி புட்பமது கையிலேந்தி, நார்க்கமலப்பட்டுடுத்தி வினை யம்பூண்டு நமஸ்கார மஞ்சலிகள் மிகவுஞ்செய்து,ஏர்க்கமுடன் சமா திக்கி முன்னேநின்று யெழிலான கொங்கணரு மர்ச்சிப்பாரே. 662

அர்ச்சித்து கொங்கணவ முனிவர்தாமும் அட்டாங்கப் பூசை யது மிகவுஞ்செய்து, உர்ச்சிதமாய் சிரங்குனிந்து கரங்குவித்து வுற் பனமாம் வட்சரத்தை யோதும்போது, தர்ப்பரனார் கௌதம ரிஷி யார்தாமும் தண்மையுடன் வுள்ளிருந்து சமாதிதானும், கற்பதிந்த பாறையது வெடிக்கவேதான் கைலாச கவுதமரும் வெளிவந்தாரே.

வந்தாரே சோதிரிஷிபோலேயப்பா மகத்தான கௌதமரிஷியா ர்தாமும், சொந்தமுடன் கொங்கணரைச்சீஷனென்று சோர்ந்துமே மனதுவந்து பட்சம்வைத்து, எந்தவிதந் தனிலப்பாயிந்தநாடு யெழி லான காவணத்தே வந்ததென்ன, அந்தமுடனெந்தனுக்குச் சொல் லுமென்று அபயாஸ்தம் தான்கொடுத்தார் ரிஷியார்தாமே. 664

கௌதமர் கொங்கணவர் வரலாறுகூறல்.

கொடுத்தாரே வபயமது தந்தபின்பு கொப்பெனவே கொங்கண ருங்கூறலுற்றார், அடுத்தேனேசமாதியிடம் அடியேன்றானும் அய்ய னே பள்ளிகொண்ட பாறைமீதில், படுத்தேனே நடுச்சாம வேளைதன் னில் பராபரியைத் தானினைந்து யேங்கும்போது, எடுத்ததொருகோ ஷ்டங்கள் வாத்தியங்கள் யெழிலாகச் செவிதனக்குக் கேட்கலாச்சே

கேட்டயுடனடியேனுங்கிடுகிடுத்து கிருபையுடன் சமாதியுடன ருகில்வந்து, நீட்டமுடன் சமாதிதனிலிறங்கவென்று நீதியுடன்தடா கமதில் மூழ்கியேதான், வாட்டமுடன் புட்பமலர்தானெடுத்துவளம்

பெறவே சமாதியிடம் வந்தேன்யானும், தேட்டமுடன் மனோன்ம ணியைத்தானினைந்து தெளிவாக வட்சரத்தை யோதினேனே.

ஓதவேசமாதியின்மேல் பாறைதானும் வுத்தமரே வெடிக்கவல் லோ தம்மைக்கண்டேன், போதமுள்ள ரிஷியாரே யடியேனுக்கு பொங்கமுடன் காட்சிதர வேண்டுமென்று, நீதமுடன் கௌதமரிஷி யர்தாமும் நீதியுள்ளகொங்கணர் பாலனுக்கு, வேதமுதலாகமங் கள் விரிநூல்யாவும் விருப்பமுடன் போதித்தார் ரிஷியார் தாமே.

தாமான கௌதமனார் ரிஷியார்தாமும் சாங்கமுடன்கொங்கண ர்க்குக் கூறல்வண்ணம், கோமானும் ராஜாதி ராஜர்தாமும் குவலயத் தில் கோடியே ரிருந்தாரப்பா, பூமான்களெத்தனையோ ஞானங்கற்று பொன்னுலகு நாட்டுக்குப் போனாரையா, சாமான்னியமான தொரு கொங்கணரே சமாதிக்குட் சென்றாலும் ஒன்றுங்காணே. 668

காணவே யுலகுதனில் கற்பங்கொண்டு கைலாசமேருவுக்கு மிட மில்லாமல், பூணவேஞானசாகரத்தைப்பூண்டு பூவுலகுதன்னிலேயிரு ந்துமென்ன, வேணபடிகற்பமுறை யுண்டுநீரும் வேதாந்தமனோன்ம ணியை கண்டுமென்ன, தோணவே சமுசாரத்தொல்லைவிட்டு தோரா மல் சமாதியிலே வொன்றுங்காணே. 669

ஒன்றுமே யில்லையப்பா யுலகுதன்னில் உயிரோடே சமாதியி லேயிறங்கியென்ன, கன்றுதான் தாய்தேடுங் கதைபைப்போல காசி னியிலவரவர்கள் சமாதிதேடி, தென்றிசையில் நதிமலையி லனேகஞ் சித்தர் சீருடனே யிப்படியே சமாதிகொண்டார், வென்றிடவேகொ ங்கணரு நீருமிங்கே வேகமுடன் சமாதிக்கி வந்திட்டீரே. 670

வந்திட்ட சித்தருக்கு வுபதேசங்கள் வளமையுடன் தாமுரை த்தார் ரிஷியார் தாமும், தந்திட்டஞானுபதேசத்தோடு தாரணியி ல் சமாதிக்குயிடமுந்தந்தார், நொந்திட்ட கொங்கணரும் விடையும் பெற்று நோக்கமுடன் சமாதிக்குப்போகும்போது, முந்திட்டரிஷியா ருங்கூறும் வண்ணம் முதன்மையாய்க் கொங்கணருங் களிகொண் டாரே. 671

களிகொண்ட கொங்கணனார் முனிவர்தாமும் கௌதமனார்ரிஷி யிடத்தில சாபநீங்கி, யளிதனையே நிவர்த்திசெய்து முனிவர்தாமும் பட்சமுடன் சமாதிக்குச் சென்றபோது, வளியுடனே கவுதமனார் ரிஷியார்தாமும் வாக்குரைத்தார் சிலகாலமிருக்கவென்று, துளியுட னேமழைமாரி பொழிந்துமேதான் துப்புறவாய்ச்சமாதியது மூடலா ச்சே. 672

ஆச்சப்பா சமாதியது மூடிக்கொண்டு அங்ஙனவே கொங்கண ருமுனிவர்தாமும், மூச்சடங்கி சிலகாலமிருந்தாரங்கே மூதுலகோர் தானடுங்க வந்தார்பின்னும், பேச்சடங்கிப்பனிரெண்டு வருடகாலம் பேசாமல்தானிருந்த சித்துவப்பா, மாச்சலுடன் மாதியதுதான்வெ டித்து மார்க்கமுடன் கொங்கணரும் வந்தார்பாரே 673

கொங்கணவர் சமாதியிலிருந்துவந்தது.

பாரேதான் கொங்கணவர் முனிவர்தாமும் பாரினிலேவந்துமல் லோ யாகஞ்செய்தார், நேரேதான் யாகமது செய்யும்போதுநேரான கவுதமனுர் ரிஷியார்தாமும், சீரேதான் யாகமதுக் கெதிரேநின்று செப்புவார் கொங்கணர்க்கு வுபதேசங்கள், தீரேதான் கொங்கணவர் தன்னைப்பார்த்து தீரமுடன் சாபமது செப்புவாரே. 674

கௌதமர் கொங்கணர்க்கு சாபங்கொடுத்தது.

செப்புவார் கொங்கணவர் முனிவர்தன்னை தீரமுடன் யாகமது செய்ததாலே, எப்படிநீயாகமது செய்யலாகும்யென்போலே ரிஷியா ருஞ்செய்யும்யாகம், ஒப்புடனேயாகமது செய்வதற்கு யுத்தமனே நீர்கொண்ட யுறுதியென்ன, தப்பானயாகமதுசெய்ததாலே தாரணி யிலுந்தனுக்கு சாபமாச்சே. 675

ஆச்சப்பாசாபமது பெற்றுக்கொண்டு அப்பனே தில்லைவனம் போகவென்று, பாச்சலுடன் கொங்கணனுர் முனிவர்தாமும் பரம ரிஷியாரிடஞ் சாபம்பெற்று, வாச்சுவந்தானழிந்து வனமேயேகி வந் துவிட்டார் தில்லைவனம் நாட்டகததை, பாச்சலுடன் சிலகாலமங்கி ருந்து மானிலத்தில் கொங்கணரும் ரிஷியானுரே. 676

ஆனுரே கொங்கணனுர் முனிவர்தாமும் அங்ஙனவே ரிஷிபோ லேயிருந்துகொண்டு, போனுரே தவயோக நிலையில்நின்று பொங்கமு டன் யாகமது செய்யும்போது, ஞானோபதேசமது பெற்றிருக்குமநல மான சித்தொருவ ரங்கிருந்தார், தேனுடுதினைமாவும் பொசித்திரு ந்து தீரமுடன் யாகமதுக் கெதிர்நின்றுரே. 677

எதிர்நின்ற கொங்கணவர் தன்னைப்பார்த்து யெழிலானரிஷியா ருங்கூறலுற்றுர், சதுருடனே யாகத்தைப்பார்த்துமேதான் சட்டமு டன் ரிஷியாருஞ் சொன்னதென்றுல், கதிரோன்போல்யாகமதுசெய் யுந்தீராகனமான கொங்கணரே கேளுமென்றுர், மதிபோன்றயாகம து செய்வதென்ன மன்னவனே யெந்தனுக்கு வுரையென்றுரே.

கொங்கணருக்குப்பராகரிஷிசாபந்தீர்ந்தது.

உறையென்றபோதையிலேமுனிவர்தாமும் ஓகோகோநாதாங்த சித்துயென்று, சிறையிட்டசாபமது தீர்க்கவென்று சித்தொளிவுவங் தாரோயென்றுசொல்லி, முறையிட்டுஅவரிடத்தில் குறைகள்சொல் லிமுத்திபெரும் வழிதனையேயடையவென்றும், குறையிட்டு கேட்ப தற்குமனதிலெண்ணி கொப்பெனவேகொங்கணரும் கூறுவாரே.

கூறுவார்கோங்கணரும் வார்த்தைசொல்வார் கோடிசூரியப்பிர காசமானதேவர், மாறுடையவெங்தனுக்குச் சாபம்நேர்ந்து மானிலத் தில்கௌதமனார் ரிஷிபார்தம்மால், வேறுவினையாகவல்லோவடியேனு க்கு வேகமுடன்சாபமது நேர்ந்ததாலே, தூறில்லாருந்தனுட வாசிர் மத்தில்துப்புறவாயாகமது செயவங்தேனே. 680

செய்யவேதங்தேனன்சுவாமிநாதா ஜெகதலத்தி லுங்தனுடகீர்த் திகண்டு, எய்யதொருசமாதிபுரம்யாகஞ்செய்தேன் வுத்தமனே எந்த னுக்குகிருபைசெய்து, பெய்யவேமழையதனைவருட்சித்தேதான் பே ருனவுலகுதனில்கீர்த்தியோங்க, துய்யதொருகிருபையாலுங்தனுக்கு துரையாஜசுந்தரனே ஈரமீவாயே 681

வரமெனக்குகொடுத்தல்லோ புண்ணியவானே வாகுடனே ஞா னுபதேசம்செய்து, புரம்விட்டுஎந்தனிடபதிபோகத்தான்பொங்கமு டன்வாழ்த்துதல்கூறுமென்ன, கரமெடுத்துகைபிடித்துகொங்கணர் க்குகர்த்தாவாம்ரிஷியாரும்விடைகொடுத்து, த்ரமுடனே யனுப்பிவி ட்டார்சாபந்தீர்ந்து சாங்கமுடன் கொங்கணரும் வந்திட்டாரே.

வந்திட்டகொங்கணரைக் கௌதமரும்பார்த்து வண்மையுடனி ரண்டாவதுயாகஞ்செய்து, தந்திட்டவரமதுவும்பெற்றுவந்த தகமை யுள்ளகொங்கணர்க்குபின்னுஞ்சொல்வார், முந்திட்டசமாதிபது சில துகாலம்முதன்மையுடன்ருமிகுந்தீர் மைந்தாநீயும் பந்திட்டமாகவல் லோவுலகுதன்னில்பரிவுடனே சிலகாலமிருவென்றாரே. 683

என்றுமேகோடானவற்புதங்கள் எழிலாகக்கற்பித்தார்கொங்க ணற்கு, வென்றிடவேசித்தர்முனி காணுப்போக்கு வேணதொருவதி சயங்களையாவுஞ்சொல்லி, துன்றிடவேபிராணயகற்பந்தன்னை துறை யோடுமுறையோடுஞ் சொல்லிப்பின்பு, நன்றுடனே தேகமதைப் போக்கடிக்க நல்லவழியுபாயமது வருள்செய்தாரே. 684

செய்யவேகொங்கணருமுனிவர்தாமும் செயலானபாக்கியமுமா சையற்று, பையவேவுலகமதில்கற்பகோடிகாலம் பண்புடன்தானிருங்

தானுமென்னலாபம், மெய்யதுவுந்தானழிந்நு போகுமல்லால் மேதினியில்யாதொன்றுங்கண்டதில்லை, எய்யவேதேகமதுநில்லாது யென்றுநிலையவேசமாதிக்கு யிறங்கிட்டாரே, 685

இறங்கியேபோம்போது மநேகசீஷர்யெழிலான கூட்டமது நிற்கும்போது, உறங்கியேதானிருந்துபாசமற்று வுத்தமருங்கண்மூடி லகித்துக்கொண்டு, திறமுடனேதன்னறிவுயிருக்கும்போது தீரமுடன்விசாரணைக்குச்சரியதாக, குறிக்குடையமனமதுவுங்கியாபகத்தில்குறிப்புடனேசொக்கியல்லோ குழிசென்றாரே. 686

சென்றாரேயோர்கடிகைதன்னில்நேரம் செம்மையுடன்கொங்கணருமறையும்போது, நன்றானசீஷவர்க்கமாயிரம்பேர் நலமுடனேகிட்டிருந்து வேதஞ்சொனனார், வென்றிடவேதேகமது மண்ணால்மூடி மேன்மையுடன் கற்பாறைகொண்டுசாத்தி, இன்றுமுதல் வோராண்டு பூசைமார்க்கம் யருளுடனே நடத்தவென்ன முடிவுமாச்சே.

ஆச்சப்பாசப்தமது சொன்னார்பாரு அப்பனேமுப்பது வாண்டுபின்பு, பேச்சப்பாயாருக்குஞ்சொல்லவேண்டாம் பேராளசமாதியைதிறந்துபாரு, மூச்சப்பாயிருந்தாக்கால் பின்னும்யானும் மூறுலகில்நான்வருவேன்யென்றுசொல்லி, வச்சப்பாமூச்சடங்கிப்போ பானுந்தான்யெழிலான சமாதியது மூடென்றாரே. 688

மூடியேகொங்கணரு மாண்டாரென்று மூதுலகில்பேராகிம்பேரின்பத்தில், கூடியேகூட்டுமிட்டுப் பேசிக்கொண்டு பேருலகில் நகைசெய்வாரிந்தவாழ்வு, தேடியேபேரின்பநிலையும்பொய்யே தெளிவானதொன்றுமில்லைவையகத்தில், நாடியேபார்த்தாக்கா லெல்லாம்பொய்யே நாதாக்கள்வாழ்வதுமிப் படிதானாச்சே. 689

இப்படிதானுலகெல்லாம்பொய்வாழ்வப்பா யெழிலுடனேயிருந்தவர்களாருமில்லை, எப்படிதானம்புவது தேகந்தன்னை யெழிலாகமாண்டார்கள் வையகத்தில், செப்பவேதேகமது மண்ணாய்ப்போச்சு தேசமதிலிருந்தவர்களாருமில்லை, ஒப்புடனேயாம்கண்டவரைக்குஞ்சொன்னோம் வுத்தமனேகாலாங்கி கடாட்சந்தானே. 690

தானானகாலாங்கிசொன்னமார்க்கம் தாரணியில் மெய்யல்லால்பொய்பொன்றில்லை, வேனானயெனதையர் கூறும்வார்த்தை மேதினியில்யாவருக்குஞ் சத்தியந்தான், பானுனபராபரியைமனதிலெண்ணி பாடினேன் போகரேழாயிரந்தான், தேனானயிந்நூல்தான்நாலாங்காண்டம் தெளிவுடனேசெப்பிவைத்தேன் மாந்தர்தாமே. 691

ஆமேதானின்னமொருமார்க்கம்பாரு அப்பநேயாம்கன்டவரைக் குஞ்சொல்வோம், போமேதான்சித்தர்முனி ரிஷிகள்யாவும்பொங்க முடன்சாஸ்திரங்கள்கட்டிவைத்தார், வேமேதாங்வெசு நூலின்கருவும் வெளிப்படையாய்ச்சொல்லவில்லையின் நூல்போல,நாமேதான்கண்ட மட்டுஞ்சொல்லிவிட்டோம்நாதாந்தசித்தொளியினருமைபாரே. 692

பாரேதான்கபிலமுநிசித்துதாமும்பாருலகில்வெகுகாலமிருந்தா ரென்று, நேரேதான்கவிவாணர்கட்டுவாக்கியம் நேர்மையுடன்கட்டி வைத்தார்வெகுநூல்தன்னில், சீரேதான்காயாதிகற்பமுண்டு சிலகா லம்பூமிதனிலிருந்தாரென்று, கூரேதான்சாஸ்திரங்கள்சொன்னமார் க்கம் குவலயத்தில்மெய்யாகவுறுதிகாணே. 693

காணவேகபிலமுநிசித்துதாமும் காநகத்தில்சமாதியதுபூண்டுமே தான்,வேணதொருசீஷவர்க்கந்தன்னோடொக்கவிருப்பமுடன்கூட்ட மதாய்க்கூடிக்கொண்டு, நாணவேஞானோபதேசந்தன்னைநாதாந்தசித் தொளிவுகபிலர்தாமும், பூணவேயுபதேசஞ்செய்யும்போதுபொன்ன டிக்குத்தெண்டனிட்டார்கோடியாமே. 694

கோடியாஞ்சீஷவர்க்கம்கபிலருக்குகொப்பனவேயஞ்சலிகள்மிக வுஞ்செய்து, நீடியேசீஷவர்க்கம்விடையும்பெற்று நிலையானசமாதி யிடமருகிற்சென்று, கூடியேகருவிகரணதியெல்லாம் குறிப்புடனே தானடக்கிகலைதான்மாறி,வாடியேமுகந்தளர்ந்துமனதுவாராய்மயக்க முடன்கபிலருந்தான்குழிசென்றாரே. 695

சென்றாரேகபிலமுனிசித்துதாமும் செம்மையுடன் சமாதிதனி லிறங்கியேதான்,நின்றமேமூச்சதனைவுள்ளடக்கிநிலையானபடுபள்ளந் தன்னிற்சென்றுவென்றிடவேதாம்படுத்தார்பள்ளமீதில் மேதினியில் பாறைதனைமூடச்சொல்லி, இன்றுமுதல்யிருபத்து ஆண்டுரெண்டும் யெழிலாகச்சமாதிக்குப்பூசைபாரே. 696

கார்க்கவேசீஷவர்க்கமெல்லோருக்குக் கருத்துடனேதாமுறைத் தார்கபிலர்தாமும், நீர்க்கமுடன்சீஷவர்க்கக்கூட்டத்தார்கள்திகழுட னேகுருவினதுவாக்குபோல, பார்க்கவேசமாதியதுபூசைதானும்பாரு லகில்செய்துவந்தார் ஆண்டுமட்டும், ஏர்க்கமுடன்ரெண்டுபத்துவா ண்டுபோக யெழிலாகசமாதியிடஞ்சூழ்ந்திட்டாரே. 697

சூழவேசமதிக்குகெடுவுமாகிசுந்தரமாஞ்சீஷவர்க்கமாயிரம்பேர்; தாழவேசமாதியிடபக்கல்நின்றுசட்டமுடசிவபூசைச்செய்யும்போது,

நீழவேகற்பாறைதான்வெடித்து நேரானகபிலமுனி சித்துதாமும், ஆழவேசொரூபமுடன்கபிலர்தாமும்அங்ஙனவேவெளியான வதிதம் பாரே. 698

பாரேதான்கபிலமுனிசித்துதாமும்பண்புடனேவதிசயங்கலெல் லாங்கன்டு,தீரேதான்செகதலத்தில்மாந்தர்தம்மைதீர்க்கமுடன்தான் பார்த்துக்கூறலுற்றாற், தேரேதான்காயாதிகற்பங்கொண்டுதெளிவுட னேபூமிதனிலிருந்தார்சித்து, நேரேதான்கோடிவரையிருந்துமென்ன நேர்மையுள்ள தேகமது மண்ணாய்ப்போமே. 699

மண்ணானதேகமதுமரிக்காமற்றாங்மாநிலத்தில்சிலகாலமிருந்தார் சித்து, நண்ணவுடன்வூர்வணத்தைச்சற்றவல்லோநாதாந்தரிஷியாரும் வனமேபோனார், விண்ணமுடன் தட்சணயாகங்கள்செய்துவீரமுடன் காவனதேவந்துநின்று, குண்ணனமலேதேடிகுகைகள்தேடி குருபர னார்ரிஷியொருவர்தனைக்கண்டாரே. 700

கண்டாரேகபிலமுனிசித்துதாமும்காட்டகத்தேகுருபரனார்தம் மைத்தானும்,தெண்டமுடன் அஞ்சலிகள்மிகவுஞ்செய்துதேவாதிதே வனேயென்றுசொல்லி,கொண்டனைத்துமவர்பாதந் தொட்டுமேதான் கொப்பெனவேயென்றனுக்குவுபதேசங்கள், அண்டிவந்தயெந்தனை யும்வாதரித்து அய்யனேகெதியென்றுவணங்கிட்டாரே. 701

வணங்கியதோரெந்தனுக் குருபரனார்தாமும்வாகுடனேவபயஸ் தந்தான்கொடுத்து, இணங்கவேயெந்தனதுயாகந்தன்னில்யெழிலுட னே நீரிருந்துநடத்திவந்தால், குணங்குடியார்மஸ்தானின்சாகிபோல குவலயத்திலுந்தனுக்குவரமுந்தந்து, மணமுடனேவாக்களித்து ரிஷி யார்தாமும் வகுப்புடனேயுபதேசஞ்செய்தார்தாமே. 702

தாமானவுபதேசஞ்செய்துமல்லோசதாகோடிகாலமதுயிருப்பத ற்குபூமானசித்தொளிவர்முனிவர்தாமும்பூதலத்தில்வெகுகாலங் கற் பமுண்டு, காமானஞானோபதேசமெல்லாம் கருத்துடனே யெந்நாளு முறதிகொண்டு, வமானமாகவேதான் விரும்பிகித்து விவரமுடன் போதித்தார் முனிவருக்கே. 703

குருபாரிஷியாகம்.

முனியானகபிலமுநிசித்துதாமும்முனையாக குருபரனார்ரிஷியார் பக்கல்,கனிவுடனேதாமிருந்தார்சிலதுகாலம்காணுதகாட்சியெல்லாங் கண்ணிற்கண்டார், பனிமதிசூழ்சடைபூண்டரிஷியார்தாமும்பாரினி லேயாகமதுசெய்யும்போது, தொனிவுடனே சாமரங்கள்வாத்தியங் கள் தொல்லுலகில்வனந்தமதைக்கண்டோம்தானே. 704

தானனவதிசயங்கள்மெத்தவுண்டு தாக்கானகுருபரனர் தன்ற
ன்பக்கல், பானனரிஷிமுனிவர் கூட்டத்தார்கள் பண்புடனேரிஷியி
னிடபக்கல்தன்னில், தேனனசாஸ்திரத்தில் சொன்னநீதி தெளிவா
கச்சொல்லிவிட்டேன்மாந்தர்க்காக, பானனபரூபரியை மனதிலெண்
ணிபாடிவைத்தேன் பண்புள்ளநீதியாமே. 705

நீதியாம்பின்னூல்போல் யாருஞ்சொல்வார் நீணிலத்தில்யாம்க
ண்டவரைக்குஞ்சொல்வோம், சோதியுடன்ரிஷியாருஞ்சமாதிபோக
தோற்றமுடன்யாகமதுசெய்யும்போது, வாதியாங்கமலமுனி சித்து
தாமும்வளமையுடன்தாமிருந்து வரமுங்கேட்டு, ஆதியாங்குருபரனு
ர்வாக்குபோல அங்ஙனமே சிலகாலமிருந்தார்தானே. 706

இருந்தாரேகமலமுனிசித்துதாமும் யெழிலாகரிஷியினிட மிரு
க்கும்போது, பொருந்தவேரிஷியாரும் வன்புகூர்ந்து பொங்கமுடச
மாதிக்குயிடமுஞ்சொல்லி, குருந்தமுடனுபதேசம்யாவுங்கூர்ந்து கு
வலயத்தில்சிலகாலங்காட்சிகாண, வருந்தியேகுருபரனுர்யாகவானும்
வரமதுவுங்கொடுத்தாரே புண்ணியவானே. 707

புண்ணியனுஞ்சிலகாலமங்கிருந்து பொங்கமுடன்யாகமதுமுடி
ந்தபின்பு, திண்ணமுடன்சமாதிக்குபோகவென்று திட்டமுடன்வர
மதுவுங்கொடுத்தபின்பு, வண்ணமுடன் கபிலமுனிசித்துதாமும்வள
முடனேபின்னுமே சமாதிக்கேக, எண்ணமுடன் தன்மனதில்நினைக்
கும்போது யெழிலானசித்துமுனி கூறுவாரே. 708

கூறுவார்வையகந்தனிலிருந்து கொத்தவனேபலனென்றுமில்லை
யப்பா, தேறுவார்மானிலத்தில் சிவயோகப் பூண்டுதிறமுடனேகருவி
கரணுதியெல்லாம், மீறுவார்தாமதிகம் பெற்றுக்கொண்டு மிக்கானச
மாதிக்குப்போய்தானென்ன, ஆறுவார்யிறவியால்யென்னலாபம்வப்
பனேயென்றிலை கண்டிலேனே. 709

கண்டிலேன்சமாதிக்குப் போய்தானென்ன காலனுக்குவுட்படு
வதுண்மையாகும், வண்டினம்மதுவையுண்டு செனனமாண்டுவையக
த்திலிருப்பதினுலாபமென்ன, தண்டகத்துமுனிவ ரெல்லாமாண்டு
போனுர் தாரணியிலொருவருந்தானில்லைகண்டீர், பண்டிதங்கள்சொ
ன்னபடியாதொன்றில்லைபாரினிலேயெப்போதும்பொய்வாழ்வாச்சே

ஆச்சப்பாபொய்யானவாழ்வைநம்பி அப்பனேசமாதிக்குப்போ
கவேண்டாம்,மூச்சப்பாக்ஷணநேரம் வாழ்வதாகும்மூதுலகில்யாதொ

ன் றும்வருவதில்லை, ஏச்சப்பாவுலகத்தார்க்கேச்சேயாகும் யெழிலா னசடலமதுநிலைதானில்லை, பாச்சலுடன்வாழ்வனைத்துமிப்படியேயா கும் பாங்குடனேசமாதிக்குப் போகாநன்றே. 711

நன்றானவாழ்வல்லவென்றுசொல்லி நாதாந்தசித்துபரம்சொன் னபோது, குன்றியேகபிலமுனிதாமுங்கேட்டு கொப்பெனவேமறுவி டையுங்கூறலுற்றார், வென்றிடவேகபிலமுனிவிடையுங்கேட்டுவிருப் பமுடன்சீஷவர்க்கந்தனையழைத்து, தென்றிசைக்குச் சிலகாலம்யா னும்சென்று செவ்வையுடன் கொஞ்நாள் சமாதிபூணே. 712

பூணவேயெந்தனுக்குவிருப்பமுண்டு புகழாகயெந்தனிடபக்கல் நீங்கல், தோணவேயெல்லாருங் கிட்டிருந்து குறையோடு சமாதிக்கு வருகவென்று, வேணபடிவார்த்தையதை மிகவும்பேசி விடைபெற்று தென்துரைவந்துமேதா, வாணனுடன் மலையோரக் குகைகள் கண்டு வளமுடனேசிலகால மிருந்தார்தாமே. 713

இருந்தாசிரசமாதிக்குசிலதுகாலம் யெழிலாகத் தானிருக்கும் வேளைதன்னில், பொருந்தமுடன்சமாதியது யிடமுங்கண்டு பொங்க முடன்சமாதியது குழிதான்வெட்டி, குருந்தமரமொன்றுவங்கேவை க்கச்செய்தார் கொற்றவர்களப்படியே செய்துவைத்தார், வருந்தியே தவசுடனேபூண வாகுடனேகபிலரங்கே நினைத்தார்தாமே. 714

கபிலர்சமாதிக்குப்போகும்போது வதிசயங்கள்.

நினைக்கவேகபிலமுனிசித்தர்தாமும் நீடாழிகாலம்வரை சமாதி பூண்டு, புனைப்புடனேசீஷர்களைத்தாமழைத்து புகழுடனேகூறலுற் றார்வண்ணங்கேளீர், தினைப்புடனேமுப்பத்து மூன்றுவாண்டு தீரமு டனிருப்பதற்குயெண்ணங்கொண்டு, சுனைப்புடனேவாக்கதுவுங்கூற லுற்றார் சீரானகபிலமுனிசித்துதாமே. 715

சித்தானகபிலமுனிசொன்னவாக்குச் சிறப்புடனேசமாதிக்குச் சென்றபின்பு, முத்தானவதிசயங்களென்னவென்றால்மூதுலகில்யா ன்வரும்வேளைதன்னில், பத்தியுடன்பாறைமேல் யெழுதும்பண்ணம் பாரினிலேயிருளதுவுமிகவுண்டாகி, சுத்தியேசூரியனுய்க் கண்மறைந் துதிப்புறவாய்மூன்றுநா ளிருக்கும்பாரே. 716

பாரேதான்யிருளதுவுமிகவுமாகி பாரினிலேசத்தவொலி மிஞ்ச லாகி, நேரேதான்வானுலகு தன்னிற்றோற்றும் நேரானதேவரெல்லா ங்காணலாகும், சீரேதான்கிருஸ்துவிடநாளைப்போலத் தேசமெல்லா ம்விருளாகிவதீதங்காட்டும, ஊரேதான்காண்பதுவு மில்லையப்பா வுத் தாரப்படியாக நடக்குந்தானே. 717

தானான சமாதிக்கும்பின் னலப்பாபட்சமுடன் தூதாட்கள் நாலு பேர்கள், கோனான குருசொன்னவாக்குபோலகொற்றவர்கள்யெந்தது க்குமுன்னதாக, பானான பருபரத்தினுத்தாரந்தான்பதமுடனே முன்னிற்பார்தேவர்வாக்கு, தேனான மனோன்மணியாள்சித்தரூபி தேற்றமுடன் யெதிர் நிற்பாள் திண்ணமாமே. 718

திண்ணமுடன் சமாதியது வெடித்தபின்பு திறமுடனேயடியேனும்வெளியில்வந்து, வண்ணமுடன்வதிசயங்கள்மிகவுண்டாகும்வாகுடனேசிலகாலமிருந்துமேதான், நண்ணமுடன்வரும்போது லோகமெல்லாம்நளினமுடன்வதிசயங்கள் தானடக்கும், குன்னமுடன்நமனுருமென்னைவந்து கூப்பிட்டுப்போவாரென்றுரைத்தார்தாமே. 719

என்றபடிதாமுரைதத வண்ணம்போல யெழிலாகத்தானடந்து சிலதுகாலம், வென்றிட வேகபிலமுனிசித்துதாமும் வேகமுடன் மண்ணுக்கேயிறையுமானார், தென்றிசையில்சதுரகிரிபக்கலாகத்தேற்றமுடன்சமாதிக்குயிடமுங்கண்டு, அன்றிடமாம்சமாதியதுமிகவும்பூண்டு அங்ஙனவேமண்ணுகப்போனார்தாமே. 720

தாமானவாழ்வதுவும் பொய்யுமாகும் தாரணியிலிருந்ததொரு சித்துமில்லை, நாமானசொன்னதொரு மார்க்கம்போகும் நாடெல்லா மிப்படியேபொய்யேவாழ்வு, தாமான வாழ்வுக்குவெகு கோடிகாலம் தகைமையுடனுசையதுமிகவுமாகி, பூமான்கள்யெல்லவருமண்ணுய்ப் போனார் பூதலத்தில் வாழ்வெல்லாமிப்படிதானச்சே. 721

ஆச்சப்பாவாழ்வெல்லாம்பொய்யேயல்லாமல் அப்பனேயாதொன்றுமில்லைகண்டீர், மூச்சப்பாபோய்விடும்கடிகைதன்னில் முதலான பாக்கியமுமொழிந்துபோகும், ஏச்சப்பாதேகமது யிருந்தாலுந்தான் யெப்படியும்லாபமென்ன வொன்றுமில்லை, கூச்சமன்றிதேகத்தை மறைந்தாயானல்குவலயத்தில்மெய்யானசித்தென்பாரே. 722

மச்சமுனி உற்பவம்.

சித்தனுமின்னமொருமார்க்கம்பாருசீரானயென்மகனே சொல்லக்கேளு, சுத்தமுடன்மச்சமென்றமுனிவர்தாமுஞ்சொரூபராமென்றொருவர்சித்துவுண்டு, புத்தியுள்ளசித்தனப்பாமச்சர்தாமும்புகழாக சமாதிக்கியிடமுங்காண, முத்தியுடன்பெறுவதற்குகாவணத்தைநோக்கிமுயன்றுமேவராககிரி வந்திட்டாரே. 723

வந்திட்டபோதுமலலோசித்துதாமும்வளமுடனேவராககிரிதன்னைக்கண்டு, பந்திட்டமாகவல்லோசமாதிபூணபாங்குடனேசீஷவர்க்கமநேகம்பேர்கள், தந்திட்டமாகவல்லோகூட்டங்கூடித்தமதடியார்வ

சீர்மம்விட்டுவந்து முந்திட்டுக்குழியது மிகவாய்ச்செய்து மூதுலகில் யோகமது நீந்திட்டாரே. 724

நீங்கியேசமாதியதுபோகவென் றுநீணிலத்தில்மச்சமுநிரிஷியார் தானும், நோக்கமுடன்குழிதோண்டவிடையுந்தந்து நுணுக்கமுடன் சீஷருக்குவுபதேசித்து, நார்க்கமலம்வீற்றிருக்கும்மனோன்மணியாள் தம்மை நயமுடனே காணுதற்குயெண்ணங்கொண்டு, தூக்கமுடன் சிவயோகந்தன்னில்நின் றுசத்தமுடன்குழிதனிலேபடுத்தார்தாமே.

படுத்தாரேமச்சமுனிரிஷிபார்தாமும் பாருலகில்சீஷரெல்லாந் திடுக்கிட்டேங்க,தொடுத்தாரேரசகபூரணத்தைதானும்தோற்றமுடங் லாகிரியிலகித்துக்கொண்டு, விடுத்தாரேகாவிகஷாயந்தன்னைவிட்டெ றிந்தார் மேதினியில்பலரும்பார்க்க, கொடுத்தாரே யிதிகாசபுராண மெல்லாம் கொற்றவனார் சீஷருடன் கொடுத்தார்தாமே. 726

தாமான சாஸ்திரத்தைக் கொடுத்துவிட்டுத்தகமையுடன்சித்த ரவர்கண்ணைமூடி, பாமானபருபரியை மனதிலுண்ணிப் பாகமுடன் கையிரண்டுமேந்திக்கொண்டு, சீருனலோகமதுவாழ்வுமறந்துசிறப்பு டனேசின்மயத்திலிருந்துகொண்டு,கோமானசீஷவர்க்கந்தனையழைத் துக்கொப்பெனவேதாமுரைத்தார்வதீதந்தானே. 727

தானானவதீதமதுபென்னவென்றால்சாற்றினார்சீஷவர்க்கம்யெல் லோருக்கும், தேனானமொழியதுவுமென்னவென்றால்தெளிந்த நல்ல சீஷர்களேவெந்தனுக்குகோனாகுருசொன்னபடியாகத்தாங்குறிப்பு டனேபாறையதுமேலேமூடி, பரனாயீஸ்பரியாள் கடாட்சத்தாலே பாரினிலேகீர்த்தியதுபிறப்பிப்பீரே. 728

பிறக்கவேகாயமதுசமாதிபூண்டு பேருலகில்பேரின்பந் தன்னைக் கொண்டுஇறங்கிறன்சமாதியதுதன்னிலப்பா யெழிலான தேகமது மூச்சடங்கிஉறக்கமுடன்படுத்திடவேமச்சர்தாமும்வுத்தமர்கள் கற் றைகொண்டுமூடி,திறக்கவேபனிரெண்டுவாண்டுதானும்தீர்க்கமுடன் கட்டளைகள் பிறக்கலாச்சே. 729

ஆச்சப்பாபனிரண்டுங்கடந்தும்போச்சு அப்பனேமச்சமுனிசித் துதாமும், மூச்சடங்கியிருந்தாரேசித்துதாமும்மூதுலகில்வருவதற்கு நாளுமாச்சே, பாச்சலுடன்மச்சமுனி ரிஷிபார்தாமும் பாங்குடனே வருவதற்குமுன்னதாக, மாச்சலுடன்சீஷவர்க்கமாயிரம்பேர்மதிப்பு டனே சமாதிக்கு வந்திட்டாரே. 730

வந்ததுவும்சமாதியதுவெடித்துமேதான் வாகுடனே பிரசன்ன சொரூபனாக, அந்தமுடன் மச்சமுனிசித்துதாமும்அவனியிலேவந்த வுடன் சீஷவர்க்கம், சொந்தமுடன்ஆயிரம்பேருமுடிவந்து சொரூப

மென்றசித்தொளிவைக்கண்டபோது,பந்தமுடன்மச்சமுனிரிஷியார் தாமும் பாருலகி லநேகவித வளஞ்சொன்னரே 731

சொன்னரேபலபலவாம்சித்துதாமும்தோற்றமுடன்சிஷவர்க்க மநேகமாக, பன்னியே நாதாந்த சித்துதாமும் பாருலகிலதிசயங்கள் கூறும்வண்ணம், உன்னவேவாதிசேடனிலுமாகாவுலகத்தில்கண்டறி யவாகுமோசொல், மன்னவர்கள் முதலானேரிப்படியேவாழ்வுமானி லத்தில்யாரேனு மிப்படிதான்பாரே. 732

பாரேதான்மச்சமுனிசித்துதாமும்பாருலகிலிருந்தாரோமண்ணு ய்ப்போனர், நேரேதான்சித்தொளிவுசிலதுகாலம்நேர்மையுடன் பூமி தனிலிருப்பதுண்டு, சீரேதான்சிலகாலமிருந்துசென்று சிறப்புடனே மேதினிக்குவருவதுண்டு, வேரேதான்தேகமதுயிறப்புமுண்டோவித் தகனே நிட்சயந்தானில்லைதானே. 733

தானேதாங்வாக்கியங்கள்கட்டுமொழியுண்டுதரணியில்யெல்லா நூல்பொய்யுமாகும்,தேனனையெனதையர்காலாங்கிநாதர்திகழுடனே யெந்தனுக்குச்சொன்னநீதி,பானனமுறைப்படியேசாத்திரம்பார்வை யிட்டு செனனமதுபொய்யென்றெண்ணி, மானகானிலத்தில்குளி கைபூண்டு மார்க்கமுடன் சீனபதி போனேன்பாரே. 734

பார்த்தேனேசீனபதிதன்னின்மார்க்கம் பாங்குடனேயவ்விடத் தில் சித்துதாமும், தீர்க்கமுடன்நதிமலைகள் சித்துவாடி சென்றுமே சீனபதிகடலோரந்தான், ஏர்க்கவேசமாதியது பூண்டுகொண்டுயெழி லாகத்தாமிருந்தார்வனேகம்பேர்கள், மூர்க்கமுடன்ரிஷிதேவர்தேகந் தன்னை மூதுலகில்விட்டுமல்லோசவமானரே. 735

சவமாகிப்பிணமாகிமண்ணிற்றனும்சட்டமுடன்சிலகால மிருந் துமேதான், தவமொழிந்துகாயாதிகற்பமுண்டுசெங்கமுடன்பூவுலகிலி ருந்துகொண்டு, பவமகற்றியெந்நாளும் வுறுதிபூண்டுபாரினிலேசித்த ரைப்போல் நியமர்பூண்டு, நிதமுடனேபவமகற்றிதேகந்தன்னை நிட் டயமாய்மறந்திட்டார் சிலதுபேரே. 736

போரானவாழ்வதுவும்பொய்யேவாழ்வுபாருலகில்பொய்யல்லால் மெய்யொன்றில்லை, நேருனசாஸ்திரமுமிப்படியேயாச்சு நிட்சயங்க ளொன்றில்லைபூலோகத்தில், கூரான மண்ணுக்குமெல்லாம்போவார் கொற்றவர்களாருந்தானில்லையப்பா, தாருனசாத்திரங்கள்பொய்யல் லாதுதாரணியிலிருப்பார்களில்லையாமே. 737

சட்டமுனிவுற்பவம்

ஆமேதா னின்னமொருமார்க்கஞ் சொல்வேன் அப்பனேசட்ட முனியென்றசித்து, தாமேதா ஞெருவரப்பா சித்துதாமும் தாரணி

யில்வெகுகாலமிருந்தாரப்பா, போமேதான்காவணத்தே வெகுகாலந் தான்பொங்கமுடன்தானிருந்தார்தவத்தில்யாகம்,நாமேதான்சொன் னபடிகற்பமுண்டுசாதாந்தசித்தொளிவுமிருந்தார்தாமே. 738

தாமானசித்தொளிவுசிலதுகாலம்தாரணியில்சமுசாரவாழ்க்கை யற்று,காமானமானதொருகற்பமுண்டுகாயத்தையெந்நாளும்நிறுத்த வென்று,வேமானமின்றியேதான்சமாதிபூணவேகமுடன்கானகத்தை சென்றுதாமும், பூமானுலோகமதிலிருக்கலாகாபுகழ்பெறவேசமாதி க்கு யிடங்கொண்டாரே. 739

கொண்டதொருயிடமேதுயென்னவென்றால் நெடுந்தூரங்காசி க்குமேற்கேயப்பா, அண்டமெனுஞ்சூரியருங்காணுக்காடுஅவ்விடமா ம்டாகினியாளிருக்குங்காடு,தொண்டருடன்சீஷர்களாயிரம்பேர்தொ டர்ந்துமேபின்வரத்தானடந்தார், தண்டுளபமாலையணிபாத்திரங்கள் சட்டமுள்ளகமண்டலமும் செயகண்டியாமே. 740

செயமுடனேவீரமணிவீரசங்கு செம்மையுடன்கமண்டலமுந் திருவோடுதாமும், பயமில்லாக்குளிகையது கையிலேந்தி பாரினிலே தானடந்தார்கூட்டத்தோடு, தயவுடனேசீஷவர்க்க மநேகம்பேர்கள் தாரணியில்பின்றுடந்து தயவாய்சென்று வயலுடனேகுன்றொன்று யிருக்கப்பார்த்து வளமுடையசுனையென்றுதங்கிட்டாரே. 741

தங்கியேகுகையாறுநதியுங்கண்டு தகைமையுடன்குன்றருகேவ ந்துசென்று,மங்கியேமனம்வாடிசித்துதாமும்மார்க்கமுடன்சமாதிக்கு யெடமுங்கொண்டு, அங்கமுடனிவ்வூறுநல்லவூறும் அத்வானகானக மாம்சித்துதாமும், ருங்கமுடன்சீஷர்களைத்தாமழைத்துதுறையான குழியதுவுந்தோண்டென்றாரே. 742

தோண்டியேசமாதியதுகட்டுமென்றார்தொல்லுலகில் ஆசையது விட்டேனென்றார், வேண்டியதோருடைமானமறந்தேனென்றார்வேக முடன்மனைவியைத்துறந்தேனென்றார், தூண்டியதோர்மண்ணாசை யற்றேனென்றார்துணையானசோதரருமிழந்தேனென்றார்பூண்டிருந்த வாபரணமிட்டேனென்றார் பூதலத்தில்தனையர்களைமறந்திட்டேனே.

மறந்தேனேவையகத்துவாசையெல்லாம் மார்க்கமுடன்றுனிழ ந்துமன்னிற்சாய,துறந்தேனேகாவிகாஷாயந்தன்னை துப்புறவாய்விட் டெறிந்தேன்மண்ணின்மேலே, கறந்ததொருபால்போலவாசையற்று கயிலாசங்காணுகிறயிடமுங்கண்டு, பறந்திடவேயெண்ணமது கொ ண்டுமல்லோ பட்சமுடன்சமாதிக்குப்போறேன்றனே. 744

தானேதான் சமாதியிலே சென்றபின்பு தகமையுள்ள சட்டமு
னிநாதற்தாமும், கோனானதமதையர் தட்சணாபன் குருபரனே ந்தர
ணினைந்து மனதிலுன்னி, வேறானயெனதையர்சாமிநாதர்விட்டேனே
விண்ணுலகி லாசையெல்லாம், போனேனேசமாதி யிடவந்தரங்கப்
பொன்னுலகு நாட்டுக்குச்சென்றேன் நானே. 745

சட்டமுனிநாதரிடம் அசரீரிவாக்கு பிறந்தது.

சென்றாரும் சட்டமுனி ரிஷியார்தாமும் சிறப்புடனே சமாதி
தனிலிருக்கும்போது, நின்றதொருசீஷவர்க்க மாயிரம்பேர் நிலையான
சமாதிதனில் பாதுகார்கக, வென்றிடவே அசரீரிவாக்குதானும் விரு
ப்பமுடன் சீஷவர்க்கங்கேட்கலாச்சு, இன்றுமுதல் முப்பத்திரண்டு
வாண்டு முனிவரும் யிருக்கவென்ற வாக்குண்டாச்சே. 746

ஆச்சப்பாசித்துமுனி சொரூபர்தாமும் அங்கனவே சீஷர்கட்கு
வாக்குரைத்தார், மூச்சப்பாதேகமது வடங்கிப்போச்சு மூதுலகங்கா
ண்பதற்கு வெகுநாட்செல்லும், போச்சப்பாதேகமது வொடுங்கிப்
போச்சு பேரானசடலமது மண்ணுள்ளாச்சு, ஏச்சப்பா தேகமது
வழியாசென்று வெழிலுடனே சப்தமது பிறக்கலாச்சே. 747

பிறந்ததொரு சப்தமதைச் சீஷவர்க்கம் பேரானவாயிரம்பேர்
கேட்டபின்பு, இறந்ததொரு சட்டமுனிமடிவதில்லை யினிதிரும்பி
வருவதற்குஐயமில்லை, திறமுடனேசமதையர் சட்டநாதர் தீரமுடன்
பூவுலகில் வருவாரென்று, உறமுடனே மாணாக்காயிரம்பேர் வுற்ற
தொரு சமாதியிடங் காத்தார்பாரே. 748

பாரேதான் சமாதியிடங் காத்தபோது பாருலகில் நெடுங்கால
ந்தானுமாச்சு, சீரேதான்சித்தனாருங் காலமாச்சு சீரானவாயிரம்பே
ர்சீஷவர்க்கம், ஊரோடுகூடியல்லோ கும்பலாகவுத்தமர்கள் சீஷவர்க்
கஞ்சமாதிசென்று, தேரானசமாதியிடம் நின்றுகொண்டு தோற்றமு
டன் வேதங்களோதுவாரே. 749

ஓதவேசமாதியிடங் கெடுவுமாச்சு வுத்தமர்கள் வேதபாராயண
ங்கள், நீதமுடன் அர்ச்சனைகள் சமாதிபூசை நித்திலங்கும் பூமுடி
யாரோதும்போது, வேதமுடன் கைலாச சட்டநாதர் வேதாந்த சித்
தொனிவின் சமாதிதானும், நீதமுடன்பாறையது வெடித்தபோது
திரளுடனே புறப்பட்டார் சித்துதாமே. 750

சித்தான சட்டமுனிநாதர் தாமும் செகசோதி காயமதுவுலகிற்
றன்ன, பத்தியுடன் ..காயாதிகற்பங்கொண்ட பாங்கான தேகமது

ஜோதிமின்ன வெத்தியுடன் மேதினியில் வந்துதாமும் விருப்பமுட ன்சீஷர்களையாசீர்மித்து, புத்தியது மிகவாகச் சீஷருக்கு போதித் தார் சட்டமுனிநாதர் தாமே. 751

போதித்தவசரீரிவாக்கு தன்னைப்பொங்கமுடன் தான்கேட்டுத் தாள்பணிந்து, ஆதித்தன்போலுதித்த சித்துதம்மைவடியார்கள் கூட் டமெல்லாஞ் சிறந்துனிந்து, சோதித்த சட்டமுனிநாதர் தம்மைசொ ரூபமுடன் முன்னின்று வினயந்கேட்க, பேதித்தகைலாசநாதர் தா மும் பேரானசீஷருக்கு வுரைப்பார்தானே. 752

தானேதான்சீஷவர்க் கந்தனையழைத்து தகமையுள்ளமேல காவ திசயங்களெல்லாம், மானேதான்யான் கண்டவரைக்குஞ் சொல்வே ன்மகத்தான வாழ்வதுவும் பொய்யேவாழ்வு, தேனானசீஷர்களே யின் னஞ்சொல்வேன் தேகமதுவுலகுதனில் நிலைநில்லாது, போனவர்கள் மண்தனிலே மடிந்தபேர்கள்பொங்கமுடன்பூமிதனில் வருவார்தாமே

வருவாரேகாயாதிகற்பங் கொண்டவரமுடைய ரிஷிபாரும் வரு வாருண்டோ, குருவானயெனதையர் கடாட்சத்தாலேகொற்றவனே யுபதேசம் பெற்றேன்யானும், அருளானவுபதேசங் கொண்டதாலே அவனியிலே மறுபடியும் வந்தேனென்று, திருவானமனோன்மணியா ள் கடாட்சம்பெற்று திரும்பிவந்தேன் மாணுக்களென்றிட்டாரே.

என்றுமேசட்டமுனி நாதர்தாமும்யெழிலாகத் தாமுரைப்பார் சீஷருக்கு, தென்றிசைக்குச் சிலகாலம்போரேனென்று தேர்வேந்த சீஷருக்கு விடையுஞ்சொல்ல, நன்றதென்றுசீஷ வர்க்கமாயிரம்பேர் நலமுடனேயாம்கூட வருவோமென்று, அன்றலுடன் பின்றொடர்ந் தார் மாய்கைவிட்டு அடர்ந்துமே பின்றொடர்ந்தார் சீஷர்தாமே.

சட்டமுனிநாதர் பொதிகைசாற்பில் சமாதியடைந்தது.

தொடர்ந்துமே காவணத்தைவிட்டு நீங்கிதோற்றமுடன் பொதி கைக்குச் செல்லும்போது, அடர்ந்ததொருகானுறு மலைகள்தாண்டி ஐயமுடன்பின் றொடர்ந்தாராயிரம்பேர், கடந்துமே மலை குகைகள் விட்டுநீங்கி கடிதானபொதிகை மலைச்சார்பிற் சென்று, நடந்துமே கைலாச சட்டநாதர் நாதாந்தக்கூட்டமுட னமர்ந்திட்டாரே.

இட்டாரேசட்டமுனி நாதர்தாமும் யெழிலான குகையோரந் தன்னிற்சென்று,பட்டமரமொன்ற தனைக்கண்டாரங்கேகண்டதுவும் பட்டமரந்துளிருண்டாகி, சட்டமுடனின்றுடு சமாதிபூண சாங்க

முடன்மலையோரமிதுதானென்று, வெட்டவெளிதனில் நின்றுமயங் கும்போது வேதாந்தகுருபாமும் வந்திட்டாரே. 757

சட்டமுனிநாதா வேதாந்தரிஷியைக்கண்டது.

வந்திட்டவேதாந்தரிஷியார்தம்மை வாகுடனேசட்டமுனியாரு ங்கண்டு, நொந்திட்டமனதுடனே வியனங்கொண்டுநுணுக்கமுடன் சித்தொளிவைக்கண்ணிற்கண்டு, அந்தமுடனென்சாமிகுருவேயென் றுவடிபணிந்துகைலாசசட்டநாதர், சிந்தனையுமிகத்தளர்ந்து மெய்ம றந்துசீர்பாதந்தொட்டுமல்லோ பணிந்திட்டாரே. 758

பணிந்திட்டகைலாசசட்டர்தம்மைபரமகுருவேதாந்தசித்துதா மும், தணிவுடனேவார்த்தையதுமிகவுஞ்சொல்லி வளமையுடன்சில காலமிருக்கவென்று, அணியணியாய்சீஷவர்க்கம் பக்கல்நிற்க அங்ங னவேசட்டமுனிநாதர்தாமும், துணிவுடனேவுபதேசமிகவுஞ்சொல் லிதுப்புறவாய்சமாதிக்கு யிடந்தந்தாரே. 759

தந்தாரேவேதாந்தரிஷியார்தாமும் தகமையுடன்சட்டமுனிநாத ருக்கு, வந்துமேவுபதேசமிகவுஞ்சொல்லி வளமையுடன் சிலகாலமி ருந்தபின்பு, சொந்தமுடன்தன்பக்கல் சமாதிபூணசுத்தமுடன் சட் டமுனிக்குபதேசித்து, இந்தவுலகினிலிருக்க நீதியில்லை யென்றுமே வேதரிஷிமறைந்திட்டாரே. 760

மறைந்துமேபோகையிலே விருட்சந்தானும் மறுபடியும் துளிர துவுமொடிங்கியேதான், குறைந்துமே பச்சைமரம்பட்டுப்போச்சுகு வலயத்தில்பேராச்சு மகிமைதானும், நிறைந்துமே சமாதியது மூட லாச்சு திண்மையுள்ளசட்டமுனி மயங்கிநின்று, முறைந்துமேவிசன மதுமிகவாயக்கொண்டு முடிவணங்கிசமாதிதனைப் பணிந்திட்டாரே.

பணிந்துமேசிலகாலஞ்சென்றபின்பு பாரினிமேலசட்டமுனிநாத ர்தாமும், துணிந்துமேசமாதிக்குப் பின்னுஞ்செல்லதுறையானசீஷவ ர்க்கந்தனையழைத்து, அணியணியாய்யென்முன்னே சுற்றிருங்கள் வப்பனேவதிசயங்கள் பிறக்கலாகும், மணிபோன்றவோசையது கே ட்கும்பாரு மகத்தானசமாதியிட பீடந்தானே. 762

சட்டமுனிசமாதியின் சிலம்போசைக் கேட்பது.

தானனசமாதியிடபீடந்தன்னில் தண்மையுள்ளசீஷவர்க்கமாயி ரம்பேர், தேனனமணிபோலேசீஷவர்க்கந் தெளிவாக முன்னிற்கவே ண்டுமென்பார், மானன வையகத்தில் வதிசயங்கள் மார்க்கமுடன்

நான்காண்பீர்வதிதமெத்த, பானுனபராபரியாள் கண்ணிற்றோற்றம் பாருலகிலிருந்துவந்து மூடிப்போமே. 763

மூடிப்போம்பகல்தனிலேபரிதிகாணார் மூவேழுமண்டலமு மிருளாய்ப்போகும், நாடியேசித்தர்முனி நடுங்குவார்கள்நாதாந்தசித்தொளிவுசொரூபங்காணார், கூடியேகூட்டமிட்டுவார்த்தைபேசி குவலயத்திலிவர்போல சித்துண்டோசொல், வாடியேமதிகலங்கமனமும்பொங்கிவையகத்தில் மதிமயங்கிநிற்பார்தாமே. 764

சட்டமுனிநாதர் மறுபடியுஞ் சமாதிக்குப் போகம்.

நிற்பாரேசமாதியிடநடுமையத்தில் நிலையானதேகமதைதானிறுத்தி, கற்போன்றகாயத்தை மூச்சடக்கி காசினியிலெல்லவரும்பிரமித்தேங்க, தற்பரமாஞ்சொரூபமதையுள்ளடக்கித் தாரணியில்சமாதிக்குள்தானிறங்கி, சிற்பரனைத்தியானித்து மனதிலேதான் சின்மயத்திலிருந்துகொண்டு செபித்திட்டாரே. 765

இருந்தாரேமூச்சடங்கிமூன்றுநாளும் எழிலானசிவானந்தவமுர்தம்பூண்டு, பொருந்தியேகாயமதை மண்ணிற்சாய்ந்து பொங்கமுடன்மேற்பதவிபெறவேயெண்ணி, வருந்தியேசீஷர்களைத்தாமழைத்து வசனித்தாருபதேசமனேகங்கோடி, திருந்தியேதாமுறைதப்பாறைமூட திகழானபுத்திமதியோதிட்டாரே. 766

ஓதவேசீஷவர்க்கமாயிரம்பேர் ஓகோகோநாதாந்தசித்துதாமும் நீதமுடன்பின்னுமவர்சமாதிபூண்டு நீனிலத்தில் மண்ணோடே காயந்தன்னை, தோடமுடன்வுள்ளக்கியிருப்பதற்கு தொல்லுலகில் பாசமதைச்சுட்டறுத்து, வேதமுனிவேதாந்தவாக்குபோல வீரமுடன்தாமறைந்தார்சித்துதாமே. 767

சித்தானசட்டமுனிநாதர்தாமும் சிறப்புடனேமண்ணதனில் மறைந்தபோது, புத்தானமண்ணதுவும் மூடியல்லோ பொங்கமுடன் தான்சமைந்துவளர்ந்திருக்கும், முத்தானபூசையது மிகநடக்கும் பூதுலகில்சட்டமுனிசமாதியென்றும், நித்தமுடன்பூசையதுமிக நடக்கும் நேர்மையுடனதிசயங்கள் காணலாமே. 768

காணலாமசரீரிவாக்குண்டாச்சு காசினியில்பதினாறு வருடமட்டும், பூணலாஞ்சமாதிதனிலிருப்பேனென்றும் புகழானவாக்கியமுங்

கேட்கலாச்சு. தோணவேதிரிகாலபூசைமாற்கம் தொல்லுலகில்சீடவ
ர்க்கஞ்செய்வார்பாரு, வேணவேகீதங்கள்வாத்தியங்கள் விருப்பமுட
ன்யெய்பவர்களனந்தமாமே. 769

அனந்தமாம்மாவாசைபருவந்தன்னில் வப்பனையாண்டுக்கு ஓ
ருளைப்பா, அனந்தமாஞ்சிலம்பொலியி ளுசைகேட்கும் வப்பனே
நடுச்சாமவேளைதன்னில், அனந்தமாம்வேதமுறை கோஷ்டந்தானு
மவனியெலாங்கிடுகிடுத்துவதரலுண்டாம், அனந்தமாஞ்சமாதியதுசு
மூலுண்டாகும் வப்பனேகோஷ்டமது மிகவுண்டாமே. 770

உண்டாகுமிவ்வளவுமகிமைதானும் வுத்தமனேசட்டமுனி சமா
திதன்னில், திண்டானவதிசயங்கள் சொல்லப்போமோதிகவானசமா
திக்குவுள்ளதாக, நண்புடனேவதிசயங்கள் மிகநடக்கும்நாதாந்தசித்
தொளிவின்மகிமையப்பா, கண்பானசித்துமுனி சட்டநாதர் காசினி
யில்வருவதற்கு நாளுமாச்சே. 771

ஆச்சப்பாசட்டமுனி வருகுங்காலம் வப்பனேபதினறுவாண்டு
மாச்சு, பேச்சப்பாசொன்னபடி திருஷ்டாந்திரங்கள் பேருலகில்நட
ந்துவரக்கண்டார்தாமும், முச்சடங்கிப்போனதொரு தேகந்தானும்
முன்போல்வருவதற்குநாளுமாகி, பாச்சலுடன்சட்டமுனி நாதர்தா
மும்பாறையென்றபுத்ததுவும் வெடிக்கலாச்சே. 772

வெடித்தபின்புகைலாசசட்டநாதர் மேன்மையுடன்மேதினியில்
வந்தாரங்கே, நடிக்கவேநாதாந்தக்கூட்டத்தார்கள் நன்மையுடன் கி
ட்டிவைத்துநமஸ்கரித்து, துடிப்புடனேகைலாசசட்டர்தம்மை தொ
ழுதிரங்கிதெண்டனிட்டுவணக்கங்கூற, எடிப்பிடிவோன் முரசோடு
வாத்தியங்கள்கருத்துடனே தானகைத்துத் தொழுதிட்டாரே.

தொழுதுமேசீடவர்க்கமாயிரம்பேர் தோருமல் மணிவிடைக்கு
முன்னேநின்று, பழுதுபடாத்திருமேனி தன்னைப்பார்த்து பட்சமு
முடன்தானுறைத்தார்சீடரெல்லாம், வழுவுவதும்சேராத மேனிதன்
னைவளமுடனே தான்பார்த்து பிரமைகொண்டு, புழுகுடனேவாசனை
கள் கையிலேந்தி பொன்னடிக்குவர்ச்சனைகள் செய்திட்டாரே.

சட்டமுனிவர் சீடர்களுக்கு புத்திகூறல்.

செய்யவேசீடவர்கமாயிரம்பேர் சிறப்பானகெதியெமக்குயென்
னவென்று, பையவேதொழுதிறங்கிகேட்கும்போதுபட்சமுள்ளகை
லாசர்கூறலுற்றார், மெய்யானதேகமதை நம்பவேண்டாம் மேதினியி

லிருந்தானும்லாபமென்ன, துய்யசெம்பொன் கோடிமிக வைத்திட்டாலும் துப்புலவாய்வொன்றுவராக காணேன்பாரே. 775

பாரப்பாமானிலத்திலிருந்துமென்ன பாங்குடனே மாளிகைதான்கட்டியென்ன, நேரப்பாவுலகுதனையாண்டுமென்ன நேர்மையுடன் சிவயோகஞ்செய்துமென்ன, சூரபபாபலநூலுங்கற்றுமென்னகொற்றவனும்மதியூகியானாலென்ன, மேவேரதான்காயாதி கற்பங்கொண்டு விருப்பமுடன் யிருந்தென்னலாபங்காணே. 776

காணேனேலாபமொன்றும்பார்த்ததில்லை காசினியிலாசைக்கோளவுமில்லை, பூணாரம்பூண்டென்னகாயத்துக்கு புகழானதேகமது நிலைநில்லாது, வீணனவுலகுதனிலாசைகொண்டு விருப்பமுடன்கெட்டவர்கள் கோடாகோடி, தோணுதகருவெல்லாந் தோன்வச்செய்து தொல்லுலகிலிறந்தவர்கள் கோடியாமே. 777

கோடியாம்யுகாந்தவரை காலமப்பா கொற்றவனே யிருந்தாலுமொன்றுமில்லை, நாடியேபரபரத்தை நன்னலொப்பாம்நலமுடனே பாரினிலேயிருந்துகொண்டு, தேடியேநாள்வருகுங்காலமட்டும் தேசமதில்பவக்கடலைநீக்கியேதான் வோடியேபலவழியிற் சென்றுநீதான் வுத்தமனேபுனிதனுயிருந்துகொள்ளே. 778

கொள்ளவேரன்னிலையிலிருந்துகொண்டு கொடும்பாசந்தனையகற்றிக், குவலயத்தில் விள்ளவேபாசமென்றகயத்தைநீக்கி வேதாந்த நுட்பத்தின்செயலுங்கண்டு, மெள்ளவேகும்பகத்தி லிருந்துகொண்டுமேலானசிவயோகந் தன்னிற்சென்று, வுள்ளபடியாத்தும்கந்தனுகி வுலகுதனில் சிலகாலமிருந்திடாயே. 779

இருந்தாலுந்தேகமதுநிலைநில்லாது எழிலானகாயமதுமண்ணுப்போகும், குருந்தவேகாயாதிகொண்டிட்டாலும்கொப்பெனவேமண்ணோடேமண்ணுப்போகும், பொருந்தவேகானிருந்தேன்கோடிகாலம் பொங்கமுடன்காட்சிகளு மனேகங் கண்டேன், வருந்தியேபருபரத்தைமனதிலுன்னி வாகுடனேகாண்பதுவே மோட்சந்தானே.

தானனமோட்சவழிக்கிடமேதேடிசதாகாலமிருப்பதுவேசாயுச்சியந்தான், கோனனஎனதையர்சொற்படிக்கி கொற்றவனே யிரண்டுமுறைசமாதிகண்டேன், தேனனசீடர்களே நீங்களுந்தான் தெரிந்திரு

ந்துபவக்கடலைச்சாரவேண்டாம், மானைவையகத்தில்சிலநாள்தங்கி
மார்க்கமென்னும்மோட்சவழிசேருவீரே. 781

சேருவீரென்றலுமேசட்டநாதர் செம்மலுடன் பூலோகவாசை
விட்டு,பாருள்ளோமறுபடியுஞ்சமாதிக்கேக பட்சமுடன் சீஷருக்குத்
தாமுறைத்து, சீருடனேசமாதிக்குள்பிரவேசமாகிசிறப்புடனேசமா
திதனைமூடுமென்று,தூருடனேசமாதியதுதிறக்கவேண்டாம் துப்புற
வாய்த்தேகமது மண்ணாய்ப்போமே. 782

போமேதான்சடலமதுமண்ணாய்ப்போகும்பொங்கமுடன் திறக்
காமலென்றுசொல்லிஏதுமேசட்டரிடவாக்குதப்பியெழிலானசமாதி
யதுதிறக்கவேண்டாம், ஆகுமேதேகமது வழிந்துபோகும் வப்பனே
யான்வருகமாட்டேனென்றார், சாகுமேதேகமது சதாகாலந்தான்
சட்டமுடனிருந்தாலும்பலங்காணேனே. 783

காணேனேகாயாதிகற்பந்தன்னை கருவாகயான்கொண்டபடியி
னாலே, வீணாகதேகமது வழியாதப்பா மேதினியில்வெகுகாலமிருக்க
லாகும், பூணாதசமாதியதுமூடியல்லோபொங்கமுடன் சதாகாலமிரு
க்கவேண்டும், தோணாதுவுலகமதுமுடிவுகாலம்தோற்றமுடன் வருகு
வதும் வுண்மையாமே 784

கமலமுனிஉற்பவம்

உண்மையாயின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் வுத்தமனேரமா
ணுக்கறியவென்று,வன்மையாங்கமலரென்றமுனிவரப்பாவரைகோ
டிவெகுகாலமிருந்தசித்து, நண்மையாந்திரைகடல்களேழுஞ்சுத்திநா
ட்டலுள்ளவளப்பமெல்லாங்கண்டாருய்ந்து, தண்மையுடன்சீனபதி
தந்துமல்லோ தாக்கானபதிதேடியமர்ந்திட்டாரே. 785

அமர்ந்தாரேஅலைகடலிலோரமப்பா அங்குள்ளகற்பாறைத்தன்
லேதான்,சுமர்ந்திடவேபிரதமையாமொன்றுதானும்சுசீலமுடன்மலை
தனையேசுமந்துகொண்டு, தமர்ந்திடவேமலைதனிலே குகைதானுண்டு
தடாகமுண்டுகானுறைவதிலையுண்டு, கமர்ந்திடவேகமலமுனிசித்துதா
மும்கருவாகசுனையோரமிருந்திட்டாரே. 786

இருக்கவேகமலமுனிசித்துதாமும் யெழிலான சிவயோகந்தன்
னில்நிற்க, வருகவேமலைதனிலேசீஷவர்க்கம்வளமாகநூறுபேர்கூடிரு
ந்தார், பொருக்கவே கமலமுனிவருகிற்சென்று பொங்கமுடன்சாஷ்
டாங்கசரணஞ்செய்தார், தருக்கவேகமலமுனிசித்துதாமும் தயவுட
னேயாரென்றகேட்டார்தாமே. 787

கேட்டதொருவிடைதனக்குவுத்தாரமென்றார் கெவன்முடன் கமலமுனிசொன்னதற்கு,மீட்டமுடன்சீஷர்கம்நூறுபேரும்நேர்மை யுடன்குருதனக்குக்கூறலுற்றார்,தாட்டிகமாய்மலைதனிலேவந்தசித்து தாரணியிலபுரூபசித்துவென்று, நாட்டமுடன்நாங்களெல்லாந் தம் மைக்கண்டு நலமுடனேசுகம்பெறவே வந்திட்டோமே. 788

வந்தோமேசித்தொளிவின்பதாம்புயத்தைவாகுடனேகண்டுதெரி சிப்பதற்கு, அந்தமுடன் வந்தொருயெங்களைத்தான் வாதரிக்கவே ண்டுமென்று வடிபணிந்து, யெந்தவிதந்தன்னிலே தானெங்களுக்கு யெழிலானவுபதேசஞ்செய்வீரென்று, மூந்தவே குகைதேடிவந்தோ மையா முன்னின்றுகார்க்கவென வகுத்திட்டாரே. 789

வகுத்திட்டசீஷருக்குக் கமலர்தாமும்வளம்பெறவே ஞானோப தேசஞ்சொல்வார், தொகுத்திட்டமலைதனிலேயிருந்துகொண்டுதோ ற்றமுடன்சமாதிக்குயிடமுஞ்சொல்லி,பகுத்திட்டமாகவேதாங்சமா திபூண்டுபட்சமுடன்தாமுறைத்தார்சீஷருக்கு, விகுத்திட்டமாகவல் லோகமலர்தாமும் பேருன்சமாதியிடம்நின்றார்பாரே. 790

சீஷருக்குகமலமுனி புத்திகூறல்.

பாரேதான் சீஷவர்க்கந்தனையழைத்துபாங்குடனேகமல முனி கூறும்வண்ணம், நேரேதான்தேகமதைமறந்தேனப்பாநேர்மையுடன் பாசபந்தமற்றேனென்றார், சீருடனேவுயிர்த்தோமுனிமுந்தேனென் றார்சிறப்பானசீஷவர்க்கமறந்தேனென்றார், திரேதான்பாருலகுமறந் தேனென்றார் தீரமுடன்மூவாசையற்றேன்தானே. 791

கமமுனிசமாதிக்குயேகும்போதுபுஜண்டரை நினைத்தல்.

தானானபேரின்பநிலையில்நின்றுசார்பானசித்தின்ப நிலைமறந்தே ன், தேனானயெனதையர் புஜண்டரப்பாகுருவினதுவாக்கு பிசகாது வண்ணம், பானுமனேன்மணியைமனதிலுண்ணிபாருலகில் வாக்கு முறைகூறலுற்றார், தேனானவென்குருவேபுஜண்டநாதர்தேற்றமுடந் சமாதிக்குப் போரென்றானே. 792

போகின்றேன்னை யகத்தையான்மறந்துபொங்கமுடன் சமாதி தனிலிறங்கவேதான், சாகின்றசமாதியதுவடியேன்றானுஞ்சட்டமுட ன்சிலகாலமிருப்பதற்கு, நோகின்றேன்யெனதையர் புஜண்டநாதர் நோக்கமுடன்னடியேனுஞ்சமாதிபூணயாகின்றவடியேனும்நினைக்குந் காலம்பட்சமுடனுதரிக்கவேண்டும்பாரே. 713

வேண்டியே கமலமுனிசித்துதாமும் வேதாந்த புஜண்டரைத் தான் நினைந்துமல்லோ, கூண்டுடனேகாயமது வழியாமற்றுன் கொப் பெனவே சமாதிதனி லிறங்கும்போது தூண்டியேசீஷர்களைத் தாம ழைத்து துப்புறவாய் கூறலுற்றார் கமலர்தாமும், மாண்டுமேசீனபதி தன்னிலப்பா மகத்தான சமாதிதனி லிறங்கிட்டேனே. 794

இட்டேனே நெடுங்கால மிருபதாண்டு யெழிலான சமாதிதனி லிருப்பேனென்று, சட்டமுடன் சரீரவாக்குண்டாச்சு சதானந்தசீ ஷரெல்லாங் காதிற்கேட்டார், திட்டமுடன் யிருபதுவாண்டு பின்பு தீரமுடன் மேதினியில் வருவேனென்று, கட்டானவாக்கியமும் பிற க்கலாச்சு கருவானசீஷரெல்லாம் பயந்திட்டாரே. 795

பயந்திட்டு நடுநடுங்கி நிற்கும்போது பாருலகில் சப்தமது பின் னுமாச்சு, நயந்திடவே குனிதனிலே பாறைதன்னை நயமுடனே மூடு வென்று வாக்குண்டாச்சு, தயவுடனே சீஷரெல்லா மௌனங்கொ ண்டு தாரணியிலினி சும்மாயிருக்கலாகா, வியந்துமே கற்பாறைதனை யெடுத்து விருப்பமுடன் சமாதியது மூடிட்டாரே. 796

மூடியேநிற்குமந்தக் காலந்தன்னில் முசியாமல் கமலமுனி சித் துதாமும், நாடியேசீஷவர்க்கம் யாவுங்கேட்க நளினமுடன் அசரீர வாக்குரைப்பார், தேடியேசமாதிதனி லிருபதாண்டு தேற்றமுடன் யானிருந்து வருகும்போது, வாடியதோர் பயிரெல்லாஞ் செழித்திரு க்கும் வளமையுடன் பட்சிமுதல் பேசும்பாரே. 797

பேசுமே மிருகமெல்லாஞ் ஞானங்கூறும் பேரான மலைதனிலே சோதிகாணும், ஏசுவின்றன் சீஷரெல்லா மெதிர்நிற்பார்கள் யெழி லான குருடரெல்லாங் கண்திறப்பார், மாசில்லாநிலவதுவும் சூரியன் போல் மானிலததி லூமையவன் பேசுவான்பார், தேசுபுகழ்சப்பாணி நடப்பான் பாருதேசத்தில் மகிமையது மிகவுண்டாமே. 798

உண்டானவதிசயங்களின்னங்கேளு வுத்தமனேதாடக்கும் மகி மைகோடி, கண்டாலும்லோகமது யிருளடைந்து கதிரோனுங்கண்ம றைந்து நிற்பான்பாரு, அண்டமுட நட்சத்திரமதிரல்காணும் அவ னியெலாங் கிடுகிடுதது யிடியுமுண்டாம், கொண்டல்வண்ண மேக மது கர்ச்சிக்கும்பார் குவலயத்தில் தேவர்முனி காணலாமே. 799

காணலாம் தேவாதிதேவர்தானும் காசினியில் கண்ணுக்குத தோற்றுவார்பார், வேணபடிராட்சத பூதங்களெல்லாம் வேடிக்கையா

கவல்லோகிதம்பாடும், தோணவேபலபலவாந் தெய்வம்யாவும் தொல் லுலகில் கண்ணுக்குத் தோற்றலாகும், வேணபடிவதிசயங்கள் மிக வாய்க்காணும் விண்ணுலகு தத்தளிக்குஞ் சேடணுமே. 800

சேடணும்ஆதியென்ற சேடந்தானும் திடுக்கிட்டு மெய்மறந்து மனந்தளர்ந்து, கூடலுடன் கமலமுனிகுவலயத்தில் கொப்பெனவே வருவதற்குநாளுமாச்சு, தேடவேசீஷாதி சீஷரெல்லாம் திடுக்கிட்டு மெய்மறந்து சமாதிபக்கல், நாடவேசமாதியது முன்னேநிற்க நலமா னபாறையது வெடிக்கலாச்சே. 801

வெடித்தபின்பு கமலமுனிசித்துதாமும் விருப்பமுடன் புஜண் டரைத்தான் மனதிலெண்ணி, அடிப்படையி லிருந்துமல்லோ சித் துதாமும் அவனியிலே பாறையது வெடித்தபின்பு, நடிப்புடனேசெ கசோதி மின்னல்போல நாதாந்தசித்தொளிவும் வெளியில்வந்து, துடி ப்புடனே சீஷவர்க்கந் தன்னைக்கண்டு தீர்க்கமுடன் தாமுரைத்தார தீதமாமே. 802

அதிகமாங் கமலமுனி சித்துதாமும் வன்பாக சீஷவர்க்கந் தன் னைநோக்கி, பதீதமுள்ள வதிசயங்கள் சொன்னதெல்லாம் பாருலகில் நடந்ததுண்டோசீஷமாரே, கதீதமுடன் மெய்யாச்சுயெந்தநாதர் கா சினியில் யாவற்றுங் கண்டோம்நாங்கள், பதீதமுடன் குருசொன்ன வாக்குபோல பூவுலகில் நடந்தேறிப் போச்சென்றாரே. 803

போச்சென்று சொல்லுகையில் புனிதனூர்புகழானபுஜண்டரை த்தான் நினைத்துமல்லோ,மாச்சலுடன் சிலகாலம்பூமிதன்னில் மகாக ற்பமுண்டுமல்லோ வாசிபூண்டு, ஏச்சலில்லா வையகத்தில் சித்துதா மும் வெழிலாக சிலகாலமிருந்தாரங்கே, பாச்சலுடன் மறுபடியுஞ் சமாதிக்கேக பாங்குடனே புஜண்டரைத்தான் நினைத்தார்தானே.

தானனகமலமுனி நினைத்தபோது தகமையுள்ள புஜண்டரிஷித் தாமுங்கேட்டு. பானை கமலமுனிநாதருக்கு பாங்குடனே யசரீரி வாக்குதந்தார், கோனையெனதையர் காலாங்கிநாதர் கொற்றவனே துவாபரயுகத்திலப்பா, தேனனசீனபதி சமாதிதன்னில் தெரிசினைக ள்தான் கொடுத்து லடங்கினாரே 805

அடங்கியே சமாதிதனி லொடுக்கமாகி அவனிதனிலாசை தனை விட்டொழித்து, தடங்கண்டு சீனபதிசமாதிபூண்டு தாரணியிலிருக் குமந்த காலந்தன்னில், உடன்கொண்டு யெந்தனையுஞ் சமாதிக்கேக

வுத்தமனூர் தாமுறைத்தா ரெந்தனுக்கு, படமுடனே யவர்பக்கல் யானுஞ்சென்று பாரினிலே வாசையெல்லா மறந்திட்டேனே.

மறந்திட்டேன் லோகாசைத்தனைவெறுத்து மார்க்கமுடனவர் பக்கல்சமாதிபூண்டேன், சுறந்திட்டார் ஞானோபதேசமெல்லாம் தீர்க்கமுடன் யான்கேட்டு சமாதிகொண்டேன், குறந்திட்டதேகமது நிலைநில்லாது கொப்பெனவே சீஷவர்க்கரீயுமப்பா, பறந்திட்ட பூமிதனைவிட்டொழித்து பாங்குடனே சமாதியிடஞ் சேருவீரே. 807

சேரவென்று சொல்லுகையில் புஜண்டர்தாமும் சிறப்புடனே கமலமுனிகூறலுற்றார், தீரமுடன் வுலகுதனில் பதினாறுண்டு திறமுடனே யானிருந்து வருவேனென்று, கூறவேகமலமுனி சித்துதாமும் கொப்பெனவே தானுறைக்க சீஷரெல்லாம், பாரமுடன் சித்தொளிவில் பக்கம்நின்று பாங்குடனே வெகுகாலம் பணிசெய்தாரே.

கமலமுனி இரண்டாவது சமாதிக்கு ஏகல்.

செய்தாரே கமலமுனிரிஷியாருக்கு சிறப்புடனே பணிவிடைகள் மிகவுஞ்செய்து, மெய்யானசீஷவர்க்கங்கூடிருந்து மேதினியில் சித்தொளிக்குப் பணிகள்செய்து, பையவே பதினாறுவாண்மட்டும் பாருலகில் கூடிருந்தார் சீஷர்தாமும், மெய்யாகதேகமது வருந்தியே தான் மேதினியில் வெகுகாலம் கார்த்தார்தாமே. 809

கார்த்தாரே சீஷவர்க்கமனந்தம்பேரும் காசினியில் சித்தொளிவுநாதருக்கு, பூர்த்தியாய்ப் பதினாறுவாண்டுமாச்சு பொங்கமுடன்சீஷர்களைத்தாமழைத்து, நேர்த்தியுடன் சமாதிக்குச் செல்வதற்கு நேர்மையுடன்காலமது நெருங்கிப்போச்சு, சாத்திரத்திலுள்ளபடி தப்பாவண்ணம் தகமையுடன் போகுகின்றேன் வண்மைபாரே. 810

பாரேதான்சமாதியிடஞ் சென்றாரப்பா பான்மையுடன் குழிதனிலேயிறங்கிநின்று, நேரேதான் கும்பகத்திலிருந்துகொண்டு நேர்மையுடன் கண்ணிரண்டும் மூடியல்லோ, சீரேதான்கரங்குவித்துதலைநிமிர்ந்து சிறப்பானநாதாந்த சித்துதாமும், கூரவேகற்பாறைத்தனையெடுத்து குறிப்புடனே சமாதிதனை மூடிட்டாரே. 811

கமலமுனி சீஷர்களுக்கு அசரீரிவாக்குகூறல்.

மூடிட்ட சமாதிதனிலதிசயங்கள் மூதுலகில்கேட்பதற்கு வளமைசொல்வார், நாடிட்டநான் வருகும்நாளைதன்னில் நலமானவதிசயங்கள் மிகநடக்கும், பாடிட்ட பார்லோகமிருண்டுபோகும் பகலிரவு

பகலாகத்தோற்றும்பாரு, கூடிட்டமிருகமெல்லாம் ஞானம்பேசும் குறிப்பான பட்சிகள்தான் பேசும்பாரே. 812

பேசுகையில் கமலமுனிவருவாரென்று பேரானபட்சிகளும் மிக வேகூறும், வீசுபுகழ்தேவரெல்லாம் புட்பமாரி மேதினியில் பொழிவதுபோல் தோன்றும்பாரு, மாசுடைய ஞானமதுசோதிவீசும் மகத்தான நட்சத்திரமதிரும்பாரு, ஏசுடைய சீஷவர்க்கமானபேர்கள் யெழிலான சமாதிமுன்னே நிற்பார்பாரே. 813

பாரேதான்சீஷவர்க்கம் நிற்கும்போது பாங்கானகுருடனவன் கண்திறப்பான், நேரேதான் மனக்கண்ணுயவனுக்குண்டாய் நீணிலத்தில் நடப்பதெல்லா முன்னேசொல்வான், சீரேதான் சப்பாணிவூமைதானும் சிறப்பானரூபமதை மாற்றிக்கொள்வார், வேரேதன் சப்பாணிவூமையாவான் வீரானவூமையவன் சப்பாணியாமே. 814

ஆமேதான் யினனம்வெகு வதிசயங்கள் அப்பனேதானடக்குமறிந்துபாரு, நாமேதான்சொன்னபடி பிரளயங்காணும் நலமானராசாதிராசரெல்லாம், போமேதான் பிரளயத்தில்மாண்டுபோவார்பொங்கமுடன் வாரிதியும் வற்றிப்போகும், தாமேதானசுராக்கள் கூட்டந்தானும் தாரணியில் சமாதியிடங் காண்பார்பாரே. 815

காண்பாரே லோகவதிசயங்களெல்லாங் காசினியில்வெகுகோடி சித்துவித்தை, வீண்பாககுருவில்லா சீஷன்முன்னே வித்தையென்னுங் கவிதனையே கற்றாற்போல, மாண்பமைந்த வதிசயங்களெல்லாந் தோன்றும் மானிலத்திலசரீரவாக்குதோன்றும் ஆண்மையுள்ள சீஷரெல்லாங் காதாற்கேட்டு வவனியிலே தானடுங்கி மயங்குவாரே.

மயங்கியே நிற்கையிலே யசரீரிவாக்கு மானிலத்திலதிகம்தாய்க் கேட்கலாகும், தியங்கியே சப்தமதுவடங்கிப்போச்சு திறளானகூட்டத்தார் சிலதுகாலம், புயங்கமுடனங்கிருந்தார் சீஷவர்க்கம் புகழானசித்தொளிவு வருகுமட்டும், தயங்கியே கார்த்திருந்தார் சமாதிதன்னில் தாரணியில் சித்துவரும் நாளுமாச்சே. 817

ஆச்சப்பா சித்துவரும் காலமாச்சு அங்கிருந்த சீஷரெல்லாஞ் சமாதிமுன்னே, மூச்சடங்கி போனதொரு சித்துதாமும் மூதுலகில் வருகின்ற நாளுமாச்சு, பாச்சலுடன் மனதில்நினைக்கும்போதுபளிச்சென்று பாறையது வெடித்துதங்கே, கூச்சலுடன்தேவதா கோஷ்டந்தானும் கொப்பெனவே சீஷருக்கு கேட்கலாச்சே. 818

கேட்டுமேசித்தொளிவை வெளியிற்கானகவனமுடன் சீஷமெல்லாம் பயந்துயேங்கி, நீட்டமுடன்மேதினியில்வந்தபோது நேர்மையுடன்சீஷவர்க்கந்தாள்பனிந்து, கோட்டமுடன்சித்தொளிவைச்சூழ்ந்துகொண்டுகொப்பெனவேயாசீர்மம்மிகவுஞ்செய்ய, தேட்டமுடன் கமலமுனிசித்துதாமுந்தேற்றலுடன் ஞானமோதுவாரே. 819

ஓதியேசீஷவர்க்கந்தன்னைக்கேட்டார்வுத்தமரேவதிசயங்கள்நடந்ததென்ன, நீதமுடனசரீரவாக்குவண்ணம்நிலைதப்பிப்போகாமல்நடந்ததுண்டோ, வேதமொழிதப்பாதுயானுரைத்தேன் மேதினியிலதிசயங்களுள்ளதெல்லாம்,சோதனையின்பிரகாரஞ்சூட்சாதாரம்சொரூபமாகத்தானறிந்து சொன்னேன்பாரே. 820

பாரேதான்கமலமுனிசொன்னவாக்குப் பாரினிலேமெய்யல்லால் பொய்யொன்றில்லை, சீரேதான்சொன்னபடிநடக்கலாச்சு சிறப்பானவுபதேசம்மெய்யுமாச்சு, நேரேதான்வேதமுறைதப்பாவண்ணம் நேர்மையுடஞானம்பெறுவதற்கு, தேரேதான்நாளாச்சுயென்றுசொல்லிதெளிவுடனேகமலமுனியுரைத்தார்தாமே. 821

தாமானசீஷவர்க்கந்தன்னைப்பார்த்துதகமையுடன் ஞானமுஞ்சொல்லும்போது,பூமானுஞ்சீஷவர்க்கமனைத்தும்பார்த்து பூவுலகிலதிசயங்களெல்லாந்தேர்ந்து, நாமானகபிலமுனிசொன்னவாக்கு நளினமுடன்நடந்தேறிப்போச்சுதென்று, ஆமெனவேசீஷவர்க்கமொன்றாய்க்கூடி அடிவணங்கிமுடிவணங்கித் தொழுதிட்டாரே. 822

இட்டதொருகமலமுனிசொன்னவாக்குயெழிலுடனேபின்னும் யான்சமாதிபூண, சட்டமுடன்தாரணியில்நிற்கேனென்றும்சாங்கமுடன்தாமுரைத்தார்கமலர்தாமும், திட்டமுடன்சமாதிக்குப் போரேனென்றும்திறமுடன்கோடிவரையிருப்பேனென்றும், வட்டமுடன் காயாதிகொண்டதாலேவாகானதேகமதுவழியாதன்றே. 823

அன்றானகாயாதிகற்பந்தன்னால் அழியாததந்தேகமழியாதென்றும், குன்றானமலைபோலேயிருப்பேனென்றுங் குவலயத்திலின்னம்வெகுவதிசயங்கள், வென்றிடவேசமாதிதனிலிருப்பேனென்று வீரமுடன்தாமுறைத்தார் சீஷருக்கு, சென்றிடவே யினிதிரும்பிவருவதில்லை சேர்வையது வுலகுநாள் முடிவுமாச்சே. 824

ஆச்சப்பாவுலகுதன்னில்முடிவுகாலம் அவனியிலேயாவரையுங் காணலாகும், பேச்சப்பாயிறந்தவர்கள் வருவதில்லை போரான வுலகுதனில்மொழிபொய்யாகும், மூச்சடங்கிப்போனதொருதேகந்தானும்

மூதுலகில்மறுபடியும்வருவதுண்டோ, பாச்சனுடன்தேகமது முடிவு காலம்பாரினிலேயாவரையுங்காணலாமே. 825

காணலாமென்றனுமே கமலர்தாமுங் காசினியில் தாமுறைத்து சமாதிபூண்டார்,தோணவேதொல்லுலகைத்தான்மறந்துதுறையோடு ம்முறையோடுஞ்சமாதிபூண்டுவேணவேயிதிகாசபுராணகற்பை விருப் பமுடன்தாமறிந்தசித்துவாமும், பூணவேமிகவறிந்துசீஷருக்கு புத்தி மதிசொல்லியல்லோ மறைந்திட்டாரே 826

மறைத்தாரேசீனபதிக்கடலோரந்தான்மகத்தானகமலமுனி நாதர்தாமும்,இருந்தாரேபுஜண்டருடசமாதிபக்கலயெழிலான கடலோ ரந்தன்னிலப்பா, துறந்துமேசீஷவர்க்கந்தனைப்பிரிந்துதொல்லுலகில் சமுசார வாழ்க்கையற்று, திறமுடனேசமாதிதனிலிறங்கியேதான் தீரமுடன் பூமிலயிக்கியமானாரே. 827

காலாங்கி நாதருற்பவம்.

ஆனாரே காலாங்கிநாதரப்பா அப்பனேசமாதியது சொல்வேன் பாரு, தேனமிர்தமுண்டுமல்லோ பூமிதன்னில்தெளிவுடனேசிலகால மிருந்தார்தாமும், கோனனையனதையர்சாமிதானும் குவலயத்திலதி சயங்கள்மிகவும்பார்த்து, பானனசாத்திரத்தின்படியாகத்தான்பதன முடன்சமாதிக்கு நண்ணினாரே. 828

நண்ணவேலோகமெல்லாஞ்சுத்திவந்து நலமானகானுறுமலைகள் தாண்டி, குண்ணதனில்வெகுபேர்கள் சித்துத்மைக் குறிப்புடனே கண்டுமல்லோமிகவாதித்து,எண்ணமுடன்சீனபதிக்கடலோரந்தான் யெழிலாகச்சமாதியதுமிகவேபூண, வண்ணமுடன்நாதாந்த சித்துதா மும்வளமையுடன்சமாதியிடம் வந்திட்டாரே 829

வந்திட்டகாலாங்கிநாதர்தாமும்வண்மையுடன்சமாதிக்குப்போ றேனென்று, நொந்திட்டதன்மனதுவுறுதிகொண்டு நொடிக்குள்ளே சமாதிக்குப்போறேனென்று வெந்திட்டதன்மனதுகருகிவேறும் வே தாந்தசற்குருவைமனதிலெண்ணி, அந்தமுடன்வவனிதனிலாசையற் றேன் அன்பானதோழனைத்தான் மறந்திட்டாரே. 830

மறந்திட்டகாலாங்கி போகர்தம்மைமாற்முடன் றுனழைத்துக் கூறலுற்றார், சிறந்திடவேசமாதிக்குப்போரேனப்பாசீருள்ளகாயாதி கற்பங்கொண்டு, திறமுடனேவையகத்திலிருந்துமென்னதீர்க்கமுடன்

தேகமதுநிலைநில்லாது, அறந்தழைக்கயெப்போதும்புனிதனுவாய் அவனியிலேவாக்குறைத்தார் காலந்தானே. 831

தானனலாகாங்கிநாதர்தாமும் தாரணியில் வெகுகோடிகாலமப்பா, தேனனகற்பமதுவுண்டுமல்லோ தேசத்தில் வெகுகாலமிருந்தசித்து, ஊனனசடலமதுவெறுத்தசித்து வுலகுதனில் மாய்கைதனைத் தீண்டாசித்து, கோனனயெனதையர் காலாங்கிசித்து கொற்றவனர் கதையுரைப்பேன் பண்பாய்த்தானே. 832

பண்பானகாலாங்கிநாதர்தாமும்பாருலகில்மூவாசையற்றசித்து தண்மையுடன் சினமதுவுமில்லாச்சித்து, தாரணியில்வேதமதைத்துவிந்தசித்து, வண்பானவையகத்தோர் துதிக்குஞ்சித்துவளமையுடன் சீனபதியமருஞ்சித்து, பண்பானசாத்திரங்கள்யாவுங்கண்டுகரைகண்டகாலாங்கிசித்துதாமே. 833

சித்தானகாலாங்கியென்றசித்துதிறமுடையகாயாதிகற்பங்கொண்டு, முத்தானகூடுவிட்டுக்கூடுபாய்ந்து முனையாகநன்மறையுஞ் சித்துதாமும், சத்தானசாகாமுங்கரைகண்டசித்து சாங்கமுடன்சமாதிக்குச்செல்லுஞ்சித்து, கததனென்றுங் கைலங்கிரிநாதர்தம்மை காட்சியுடன்கண்டதொருசித்துதாமே. 834

தாமானராஜாங்கசித்துவப்பா தாரணியில்யாரேனும் பணியுஞ்சித்து, சமானமானதொருசித்துதானும் சதாகாலம்வையகத்திலிருந்தசித்து, கோமான்கள்கொண்டாடுஞ் சித்துவப்பாகுவலயத்தில்ரிஷிகள்முதல்போற்றுஞ்சித்து, நாமானகண்டமட்டும் சொல்வோம்பாரீர் நாதாக்கள்பிழைக்கவென்று நவிலத்தானே. 835

போகருக்கு காலாங்கி புத்திகூறல்

நவிலவேபோகரென்றயெந்தனைத்தான் நாதாந்தசித்தொளிவைத்தானழைத்து, புவிலமுடன்சித்தொளிவு சொன்னநீதிபுகழுடனே வண்ணமுடன்யானுரைப்பேன், கவிலமதாய்காசினியிலாசைவிட்டுக் கர்த்தரிடபதிதேடிபோறேனப்பா, தவிலமுடன்யெப்போதும் புத்திமானய் தாரணியில்யெந்தன்பேர் கொள்ளென்றாரே. 836

கொள்ளவேசன்மார்க்கப்புத்திவேண்டுங் குவலயத்தில்மதிப்புள்ளசீஷனக, எள்ளளவும்பிசகின்றி நடக்காவண்ணம் யெழிலான சீஷனுக்குகந்தவானய், கள்ளமின்றிபொய்சூது கபடுதந்திரங்காசினியிலற்றதொருபூமானக, விள்ளவேயாவருக்குமன்பனக மேதினியிலிருப்பதுவேபுத்தியாமே. 837

புத்தியுடன்றானிருந்துச்சாயுச்சியகாலம் புகழாகதாரணியில்கீர்த்திபெற்று, சத்தியத்துக்கோர்நாளுந்தவறில்லாமல் சட்டமுடன்மேதினியிலிருந்துகொண்டு, நித்தியமுஞ்சதாகாலம் குருவைப் போற்றி நீதியுடனிட்டையிலேதானிருந்து, முத்தியுடன்நாற்பதவி பெறவே வேண்டுமூதுலகிலிருக்கவென வறைந்திட்டாரே. 838

அறையவேகாலாங்கிதானுரைத்த அன்பானவார்த்தைக்கு வடியேன்றானும், குறைகளுந்தான்நேராமலடியேன்றானும் குற்றமறநடப்பேனானென்றுசொல்லி, திறையகத்தியவர்பாதம்தொழுதுபோற்றி சிந்தனையாம்மெய்மறந்து நமஸ்கரித்து, முறையோடுசோடசவுபசாரத்தோடு முடிவணங்கிதொழுதிட்டேன் காலர்தாமே. 839

காலராயென்மீதில்பட்சம்வைத்துக் கவனமுடனடப்பதத்துமிகவாய்க்கூறி, பாலமுடன்நேசர்கள்மிகக்கொள்ளாதே பாரினிலே கர்மிகளும்பாவியுண்டு, கோலமுடன்நல்லவர்போலிருப்பாரப்பா பொங்கமுடனவர்களைத்தான் நம்பவேண்டாம், சீலமுடன்யாருக்கு நண்பனாகச்சிறப்புடனேவாழ்கவென்று வரந்தந்தாரே. 840

வரமுடனேதான்கொடுத்துக்காலாங்கிநாதர் வண்மையுடன் சமாதிக்குப்போகவென்று, கரமெடுத்துக்கண்ணதனில்வொத்திக்கொண்டுகருத்துடனேகாலாங்கிநாதர்தாமும், சிரங்குனிந்து தண்ணீருந்தான்கலக்கிசிறப்புடனேயெந்தனுக்குப்புத்திகூறி,மரம்போலத்தானிருந்துகாலாங்கிநாதர் மயக்கமுன்விடைகொடுத்தாரெனக்குத்தானே.

தானேதான்மனந்தளர்ந்துவடியேன்றானும்தகமையுடன் மறுபடியுங்கூறலுற்றார், தேனானையென்சீஷர்போகநாதா தேற்றமுடன்வுந்தனுக்குப்பின்னுஞ்சொல்வேன், மானானவையகத்தில்கோடிசித்துமகத்தானநாதாக்களிருப்பார்பாரு, பானானமனோன்மணியாள்பாதம்பெற்றபட்சமுள்ள சித்துகளுமிருப்பார்தாமே. 842

இருப்பாரேகுவலயத்தில்கோடிசித்து யெதிர்த்துமிகப்பேசாதே எந்தன்சீஷா, பொருப்புடனேயவர்களுக்குப்பணிவாய்நில்லுபொங்கமுடனவர்களுமேவணக்கஞ்சொல்லி, தருப்புடனேயுந்தனுக்கு வுபதேசங்கள் சாத்துவார் வபிமானந்தன்னதான, விருப்புடனே சாபமது சொல்வாரானால் வீரமுடன் யெந்தனையும் நினைத்திடாயே.

நினைக்கையிலேசாபமது சுவர்ந்துபோகும் நீனிலத்திலுந்தனையுமதிப்புகொண்டு, பனைப்புடனேகாலாங்கிசீஷனென்று பட்சம்வைத்துஞானோபம்பின்னுஞ்சொல்வார், தினையளவுகோபமது வாராதப்பா திறமையுடன்நீயுமொருசித்தனாவாய், மனையுடனேசமுசார வாழ்க்கையற்று மானிலத்தில்வாழ்கவென்று வசனித்தாரே. 844

வசனித்தசொற்கேட்டு வடியேன்றானும்வையகத்தில்வெகுகோடிசித்துவாடி, தசமுடனேபத்துயுகமிருக்கவென்றுதாரணியில்காலாங்கிதம்மிடத்தில்,நிசமானகுளிகையதுபெற்றுக்கொண்டுநேர்மையுடன்வுபதேசமிகவுங்கேட்டு, குசமுடனேயட்டதிசை சொல்லவென்று கொப்பெனவேவுபதேசம்பெற்றேன்பாரே. 844

போகர்சீடனாகிய புலிப்பாணிக்குக்கூறல்.

பாரப்பாபுலிப்பாணிமைந்தாகேளுபாங்குடனே காலாங்கிநாதர்தாமும், நேருடனேசமாதிக்குச்சென்றபோதுநேர்மையுடன் வுபதேசம்பின்னுஞ்சொல்வார்,சீருடனேயெந்தன்மேல்பட்சம்வைத்துசீவியகாலமதுவுள்ளமட்டும், பாருடனே எந்தனையுஞ்சித்தர்தாமும் பட்சமுடன்கார்க்கவென்று பதஞ்சொல்வாரே. 845

காலாங்கிநாதர் சமாதியிலிருந்து மறுபடியும் போகருக்குபுத்திகூறல்.

சொல்வாரேயெந்தனதுபோகநாதா தொல்லுலகில் ரிஷிமுனிவரனேகருண்டு,வெல்லவேயவர்களிடமவாய்பேசாதே வீணாகசித்தர்முனிகருமியுண்டு, நல்லவர்போலுந்தனிடம்வுறவுபேசிநாதாந்தசித்தொளிவுநான்தானென்று, கொல்லவேமனந்தனிலேவினயம்பேசி கூடிருந்துவுந்தனுக்கு வினைசெய்வாரே. 846

வினையானநல்வினையுமுனக்கிருக்க விட்டகுறைதீவினைக்கியாளதாக்கி,தினையளவுபொன்னதுமுனக்குக்கூறார் தீங்கினையேவிளைவிப்பார்கருமிமாண்பர், சினங்கொண்டுவலியவேவாதுபேசிசீரானவுபதேசங்கிடைப்பதற்கு, மனங்கொண்டுதொடருவாருந்தன்பக்கல் மர்மத்தைக்காட்டாதேமன்னாகேளே. 847

காட்டாதேநாநில்லாக்காலமாச்சுகண்மணியேகலியுகமும்பிறக்கலாச்சு, வாட்டமுடன்வாதனக்குயிதவுரைத்து வாகுடனேநல்லவன்போலிருந்துகொண்டு, தேட்டமுடன் சிவயோகந்தன்னிற்சென்று தெளிவானசித்தர்முனிதம்மைக்கண்டு, நாட்டமுடனவர்பாதந்தொழுதுபோற்றி நலம்பெறவே பூமிதனிலிருப்பாய்தானே. 848

தானானயெந்தனிடபோகநாதாதன்மையுள்ளகண்மணியே யின்னஞ்சொல்வேன், தேனானதெள்ளமுர்தசிவராஜயோகாதெளிவாநசிநபதிக்கரசுள்ளதீரா,பானானமனோன்மணியாள்குகந்தநற்பாலாபாருலகில்சித்தர்மெச்சும் பண்புடையதேகா, மானானவையகத்தில்யெனக்குகந்தசீஷாமாட்சியுடன்நானுரைப்பேன்யின்னமிகக்கேளே. 849

கேளேதான்சீனபதிமார்க்கந்தன்னில்கெவனமுடன்குளிகையதுகொண்டுமேயும், நாளடா கோட்டையதுக்காவல்தாண்டி நலமுடனே

தான்போகும்வழியிலப்பா, கேளடாசித்தர்முநியதிககூட்டம்கும்பல் கும்பலாகவல்லோ கூடிருப்பார், வீளடாகுளிகை கொண்டுபோகும் போது விண்ணுலகுசித்தனென்றுசபிப்பார்பாரே. 850

பாரான சித்தர்முனிசபிப்பாரப்பாபாரினிலேமகிமையுள்ளசித்த ருண்டு,தீரமுடனெந்தனையும்பாருமற்றுன்தீர்க்கமுடன்சபிப்பதற்கு வருவாரப்பா, கோரமுடன்ரிஷிமுனிவர்வந்தபோதும்கோபத்தையடக் கியல்லோ யிதையுஞ்சொல்லி, சோரமதுவுன்பேரில்நேராமற்றுன் சொற்சோர்வுநேராமல்துணிவாய்நில்லே. 851

நிற்கையிலே சிததமுனியாரென்றுமேலேநீதியுள்ள காயுரங்கிசீஷ னென்று,சொற்பமுள்ளபோகரிஷிநான்தானென்றுசூட்சமுடந் தலை குனிந்துவணக்கஞ்சொல்லி, அற்பமுள்ளயெந்தனையும்வாதரிக்கஆண் டவனேயுன்னைவிட குருதானுண்டோ, துப்புறவாயவர்பாதந்தொழு திட்டாக்கால் தொல்லுலகில் வெகுகாலமிருக்கலாமே. 852

இருக்கலாம்கோடிவரையிருக்கலாகும்யெழிலானகண்ணியனே போகநாதா,பொருக்கவேளந்தனுக்கு ஞானேபதேசம் பொருண்மையு டன்கொடுக்கவென்றவரமுங்கேளுஅருக்கனையென்தேவர்காலாங்கி நாதர்அவர்தானேநீயென்றுதான்பணிந்து, பெருக்கமுடன்கரங்குவி த்து பதம்பணிந்து பேரானவுபதேசஞ் செய்குவீரே. 853

செய்யவென்று கேட்கையிலே யோகநாதா சேர்வைதரயுந்தன் மேல்கிருபைவைத்து, வுய்யதொருகருவிகாணுதியெல்லாமுத்தமனே யுந்தனுக்குத்தத்தஞ்செய்வார், மைவிழியார்தனஆசையகற்றியேதாங் மானிலத்தில்சமுசாரவாழ்க்கையற்று, பெய்யவேயுந்தனுக்கு மனது வந்து பேரானவுபதேசம் போதித்தாரே. 854

போகர்இமயகிரிக்குப் பேர்வாராஞல்காலாங்கி நாதர்சமாதியில் சொன்னபுத்தி.

போதிப்பார்காலாங்கிநாதர்தாமும் பொன்னனகண்மணியேபுக லக்கேளு,ஆதித்ததன்போலுதித்தபோகநாதாவன்புடையசீனேயின் னங்கேளு, சோதியென்னும் மகமேருபர்வதத்தில் சுந்தரா குளிகை கொண்டு போகும்போது, பாதிமதிசடையணிந்த தம்பிரான்போல் பாலகனே வேடமதுபூணுவாயே. 855

பூணுவாய்குளிகையது மிகவேபூண்டு புகழுடனேமேருகிரிதன் னிற்சென்று, காணுதற்குரியுமங்கேபோவாயானல்கனமானசித்தொ ளிவுயனேகமுண்டு, வேணவுபசாரமமுமிகவறிந்து வேகமுடன் குளி கைகொண்டுசொல்லும்போது, மூணுயேழுவரைதனையேகாணவென் றுமுனையாகப்போம்போது வரிசைகேளே. 856

வரிசையுடன்ஒவ்வொருவரைகள்தோறும் வண்மையுள்ளசித்த
ர்முனிரிஷிகள்கூட்டம், பரிவுடனேயாரென்றுகேட்பாரப் பாபாலக
னேயுந்தனையுமெங்கேவந்தா, சரியானபித்தனைபோல்குளிகைகொண்
டுசட்டமுடன்மேருதனில் வந்தானென்று, மரியாதைத்தனையுமாறி
வம்புமீறி மகமேரில்வந்தவனீயாரென்பாரே, 857

ஆரென்றுகேட்டுமல்லோ யுனையிரட்டி வப்பனே கண்மணியே
போகநாதா, பேரென்னவென்றுரைத்துயுன்னைகேட்டு போரானமலை
தனிலேவந்தவன்யார், ஊரென்னபதியென்னயவர்தானப்பா வுத்தம
னேகுளிகைகொண்டுவந்ததென்ன, நீரென்னவலுவல்கொண்டு யிங்
குவந்தீர்நிட்சயமாய்ச் சொல்லுமெனவினவுவாரே. 858

வினவியேகேட்கையிலேபோகநாதா விருப்பமுடன்மனதுவந்து
சொல்லக்கேளும், தினகரன்றன்னொளிவீசுள் காலாங்கிநாதர் திகழ்
வேந்தசத்தொளிவின்சீஷனென்று மனதுவந்து நீர்தானேசொல்வீ
ரானால் மன்னவனேயுன்மீதிற்கிருபைவைத்து, சினமதுவைவிட்டொ
ழித்து சித்தர்தாமும் சிறப்புடனேயுந்தனுக்குவிதிசொல்வாரே.

விதியானவுபதேசஞ்சொல்லுவார்கள் விண்ணுலகுவதிசயங்கள்
மிகவுரைப்பார், மதிப்போன்றயெந்தனிடபோகநாதர் வையகத்தில்
நீர்காணும்புத்திமானாய், துதியுடயுனகாலாங்கிசீஷனென்று துப்புற
வாய்நீரைத்தபோதேயப்பா, கதிபெறவேயுந்தனுக்குயாவுஞ்சொல்லி
கருவானபோகரென்றுகருதுவாரே. 860

கருதவேகுளிகைகொண்டுபோகநாதர், கடலேழுஞ்சுத்திவருங்
காலந்தன்னில், நிருதமுள்ளரிஷிக்கூட்டங்காணும்போது நித்திலங்
கும்பூமுடியா சொல்வேன்கேளு, விருதுடையகுளிகைதனைப் பயர்த்
தபோது விண்ணுலகுசித்தனென்றுமனதிலெண்ணி, துரிதமுடன்கு
ளிகைதனைப்பறிப்பதற்கு சூதுமுறைசெய்வார்கள்சித்துதானே.

சித்தானமுனிவருடசூதுபார்த்து சீருள்ளகண்ணிமணியேபோ
கநாதா, பத்தியுடனெந்தனையும் நினைத்தபோது பட்சமுடனுந்தனுக்
குமுதலாய்நின்று, வெத்தியுடன்மேதினியில் வாள்வதற்குவேதாந்த
த்தானதுகாடாட்சத்தாலே, சத்தியமாய்பாதுகாப்பே னென்றுசொ
ல்லிசமாதிக்குள் சத்தியங்கள்கூறினாரே. 862

இராமதேவரென்னும் யாக்கோபு உற்பவம்.

கூறவேயின்னமொருமார்க்கஞ்சொல்வேன் குவலயத்திலெந்தன
துகுருவாநாதர், தேறவேகாலாங்கிநாதர்தாமும் தெளிவுடனேயெந்த
னுககுவுரைத்தவண்ணம், மாறவேராமரென்னும்பெயர்தான்கொண்
டமகத்தானயாக்ரகாபுசித்துதாமும், ஆறவேசிலகாலம் பூமிதன்னில்
அனேகவண்ணமதிசயங்கள் செய்திட்டாரே. 863

செய்திட்டாரென்றனுமேயெனக்குரைத்த தெளிவானவதிசயத்தைச்சொல்வேன்பாரீர், வையகத்தில் வேங்கைதனில் வீற்றிருக்கும்வளமானபுலிப்பாணிசித்தேகேளும், துய்யநல்லயாக்கோபுரிஷியார் தாமும் துன்பசாகரமென்னும் மாய்கைதன்னை, பையவேவிட்டொழித்துப்பாருமப்பா பாங்குடனேமக்காவுக்கேகினாரே. 864

பாக்கோபுமக்காபுரியில் சமாதியடைந்தன

ஏகினார்யாக்கோபுமுனிவர்தாமும்யெழிலானமக்காபுரித்தன்னைக்கண்டார், யூகிகாமதிமந்திரியோகவானும் வுத்தமனாரங்கொருவர்தாமிருந்தார், யோகியாஞ்சின்மயத்தில்சேர்ந்தசித்து யொளிவானரிஷியொருவரங்கிருந்தார், சாகினியாம்யாக்கோபுநாதர்தாமும்சட்டமுடன்யுபதேசஞ்செய்தார்பாரே. 865

பாருனயாக்கோபுநாதர்தாமும் பண்புடனேசித்தொருக்குவுபதேசித்து, நேருனதனக்குகந்தசீஷனுக்கி நேர்மையுடன் தான்கற்ற கல்வியெல்லாம், சீரானசித்துமுனியுஷியாருக்கு சிறப்புடனேவையகத்துமார்க்கமெல்லாம், நூரானமந்திரமாம்ஞானவர்க்கம்துறையோடும்முறையோடேமோதினாரே. 866

ஓதியேசிலகாலமங்கிருந்துவுத்தமனார் யாக்கோபுமுனிவர்தாமும், நீதியுடன்சமாதிக்குப்போகவெண்ணி நித்திலங்குஞ்சீடனைத்தான் மனதுநோக்கி, சாதியுடன்மறப்புள்ளோ ரெல்லாம்தம்மை சட்டமுடன்தான்மறந்து சமாதிக்கேக, சோதியுடபரவொளியைக்காணவென்று சுத்தமுடன்மனந்தனிலே யெண்ணினாரே. 867

எண்ணியேதனக் குகந்தசீடனுக்கு எழிலாகத் தாமுரைப்பார் யாக்கோபாரும், தண்ணமுடன் சமுசாரவாழ்க்கையற்றேன் தகமையுள்ளமைந்தர்களையான்மறந்து, நண்ணியே இல்லறத்தைத் துறந்துமல்லோ நாதாந்தப்பேரொளியைக் காண்பதற்கு, வண்ணமுடன் சமாதிதனிலிறங்கவென்று வையகத்துவாசையெல்லா மறந்திட்டாரே.

மறந்தாரேபூலோகவாசையெல்லாம் மார்க்கமுடன் சின்மயத்தினொளிவுகான, துறந்தாரேமூவாசையற்றேனென்றார் துறவிக்குவேந்தரெல்லாந்துரும்பேயென்பார், சிறந்ததொருவஷ்டபாக்கிய மறந்தேன்செயலானநீதிகளெல்லாம் விட்டொழிந்தேன், இரந்தாரேதேகத்தைவிட்டொழித்து யெழிலானசமாதிதனிலிறங்கிட்டாரே.

இரங்கியேசமாதிதனிலிருந்துகொண்டு யெழிலாகச் சீஷனுக்குவதிதஞ்சொல்வார், சுரங்கமென்றகுழிதனிலேபோரேனப்பா கருதிபொருள்கருவிகரணதியெல்லாம், வாங்கமுடன்வுள்ளடக்கிமனதிரு

திவையகததின் வாழ்க்கையெலாம் தனையகற்று உரங்களுடன் பத்தாண்டு யிருப்பேனென்று வுத்தமனேயாக்கோபுகூறினார். 870

கூறினர் சமாதிதனிலிருந்துகொண்டு கொற்றவனே யென்சிஷர்குருவாயெண்ணி, மாறிடவேகற்பாறைத் தன்னைமூடி மகத்தான சமாதிக்குப் பூசைமார்க்கம், தேறிடவேதினந்தோறும் ச்சித்தேதான் திறமுடனே நான்வருருங்காலந்தன்னில், வேறிடவேயெந்தனிடஞ் சமாதிமுன்னே விருப்பமுடன் காத்திருந்து காண்பீர்தானே.

தானேதான் நான்வருருங்காலந்தன்னில் தகமையுள்ள வதிசயங்கள்மிகநடக்கும், போனவுடன் மக்காவிலதிசயங்கள் பொங்கமுடன் நாவினாற்சொல்லொண்ணாது, தேனமிர்தமானதொரு மழைதான் பேயும் தேசமெல்லாந்தேனுறு வோடும்பாரு, மானமிர்தமானதொரு வுத்தாரைவின் மார்க்கமுள்ளசமாதியது வெடிக்கும்பாரே. 872

நபியின் சமாதியிடம் வாக்குபிறந்தது.

வெடித்தபின்பு வசரீரிவாக்குண்டாகும் வேதாந்தயாக்கோபுவருவரென்று, மடிந்துவரும் மாந்தரெல்லாங் கடைசிநாளில் வையகத்தில் நாதாந்தநபியாருக்கு, துடியான குற்றமதைக் கேள்விகேட்டு துப்புறவாம் நாதாந்த நபியாருக்கு, முடியரசர் முதலானோர் முனிவர்தாமும் முன்னின்று கேள்விக்கு விடைசொல்வாரே. 873

விடையானவார்த்தைக்கு வுறுதிசொல்லி மேன்மையுடன் பதவிக்கு யிடமுந்தேடி, தடையறவே குற்றத்திற்காளதாகிதரணிதனில் வெகுபாவந் தலைமேற்கொண்டு, கடையானநாளதனில் பாவத்துக்காளாய்ப் பாருலகில்படுநரகம் வாய்க்கும்பாறு, குடையான கர்ணனையிருந்திட்டாலுங் குவலயத்தில் பாவத்துக் குறுதியாமே. 874

உறுதியா மின்னம்வெகு வதிசயங்கள் வுத்தமனே சொல்லுகிறேனன்பாய்க்கேளும், குருடமுடன் வக்கினியாம் மாருபெய்யுங் குன்றின்மேல்காடெல்லா மெரிந்துகொல்லும், சொரூபமுள்ள சித்தர்முனி ரிஷிகள்பேரில் சொர்னமழை பெய்வதும் மகிமையாகும், அருமையுடன் தானியங்களெல்லாந்தங்கம் வப்பனேபொன்போலே வீசும்பாரே. 875

பொன்னான மழைமாரிப் பொழியும்போது பொங்கமுடன் பூமிக்குள்ளிடியுண்டாகும், சின்னமுடன் சமாதிதனில் கோஷடந்தானும் திறமுடனே பூமிதனில்கேட்கும்பாரு, மன்னவர்கள் ராசாதிராசரெல்லாம் மாநிலத்தில் திசைமாறிப்போவார்கண்டீர், துன்னவே சூரியாள் சந்திராளும் துறைகாணார் திசைதனிலே நிற்பார்தாமே.

நிற்பாரேவருந்துதிகளதிரங்காணும் நீணிலத்தில் மிருகமெல்லாம்ஞானங்கூறும், அற்பமென்றுநினையாதே லவனிதன்னில் ஆண்டவனர் நபுனுயன்கிருபைதன்னால், சொற்பெரிய சமாதிதனில் புதுதுண்டாகும் சொர்ணமென்ற வைந்துதலைநாகமப்பா, கற்பாறைமேலிருந்து ஞானஞ்சொல்லும் காசினியில யாககோபுவருனுளாச்சே.

யாக்கோபுவருவாரென்று ஐந்துதலைநாகங்கூறினது.

ஆச்சென்று கூறுமப்பா நாகந்தானும் வவனியிலே யாக்கோபு வருவாரென்று, மூச்சடங்கி போனதொரு சித்துதாமும் மூதுலகில் வரப்போரா ரென்றுசொல்லி, பாச்சனுடன் நாகமது பரிந்துகூறும் பாருலகில் பார்த்தவர்கள் பிரம்மைகொள்வார், கூச்சனுடன் நபிக்கூட்டமார்களப்பா கொற்றவனே சமாதியிடம் வருவார்பாரே. 878

பாரேதான் பார்லோகந் தத்தளிக்கும் பாங்கானசமாதியது வெடித்துதங்கே, நேரேதான் யாக்கோபு முனிவர்தானும் நேர்மையுடன் செகசோதி போலேவந்தார், சீரேதான் அல்லாவுத்தாலா வென்று சிறப்புடனே வாய்தனிலே கூறிக்கொண்டு, சேரேதான் வையகத்தில் வந்தாரப்பா சிறப்பான யாக்கோபு முனிவர்தானே. 879

முனியான யாக்கோபுசித்துதாமும் மூதுலகில்சமாதிவிட்டு வருகும்போது, கனியான நவக்கனிகளொன்பதோடுங் கடிதானரொட்டியொன்றுகையிலீய்ந்தார், தொனியான வாத்தியங்க ளோடுதானும் தோற்றமுடன் வையகத்தில் வருகும்போது, தனியானசீஷனவர் தன்னைப்பார்த்து தண்மையுடன் ஞானமோதுவாரே. 880

ஓதுவார்யாக்கோபு முனிவர்தாமும் ஓங்காரோ நாதாந்தசீஷருக்கு, நீதமுடன் ஞானோபதேசந்தன்னை நேர்மையுடன் தானுரைத்து புத்திகூறி, போலமுடன் சீடர்முகந்தன்னைநோக்கி பொங்கமுடன் யாக்கோபு கேட்கலுற்றார், சாதமுடன் சமாதிக்குச் சென்றபோது தாரணியிலதிசயங்க ளென்னென்றாரே. 881

என்றுமே யாக்கோபு சொன்னதற்கு யெழிலாகச் சீஷனவர் தானுரைத்தார், குன்றான யென்தேவர் குருவேநாதா குவலயத்தை விட்டுமல்லோ சமாதிதன்னில், அன்றுதான்போனவுட னவனிதன்னில் அனேகமாய்கூட்டமது மிகவாய்க்கூடி, இன்றுதான்யாக்கோபு சமாதிசென்றார் யினிதிரும்பி வருவதில்லை யென்றிட்டாரே.

யாககோபுசமாதியிலிருந்து வந்தவுடன் பூலோகத்தில் நடந்த அதிசயமென்னவென்று சீடனைவினவல்.

இட்டாரே வெகுமாண்பர் கும்பல்கூடியெழிலாக வேளிதங்கள் மிகவுஞ்சொன்னார், திட்டமுடன் யாக்கோபு சமாதிசென்றுதிரும்பி

வருங்காலமது வில்லையென்றார், பட்டதொரு தேகமது மண்ணாய்ப் போச்சு, பாரினிலேயாக்கோபு மடிந்துபோனார், சட்டமுடன் யாக்கோபுமடிந்தாரென்று தாரணியில்பெருங்கூச்சல்மிகுதியாச்சே

ஆச்சப்பாவென்தேவாசாமிநாதா அவனிதனிலடியேனுங்கேட்டிருந்தேன், பேச்சடங்கிப்போனதொருயாக்கோவிதானும் பேருலகில்வருவதுவும்பொய்யேயாகும், கூச்சலுடன்வெகுமான் பர்கும்பல்கூடி குவலயத்தில்வேகமுடன் வார்த்தைசொன்னார், ஏச்சாகக்கூறினதோர்மொழிகட்கெல்லாம் யெதிராகயானென்றும்பேசேன்பாரே.

பாரேதான்வெகுகாலஞ் சமாதிபக்கல் பாரினிலேவருவாரும் போவாருண்டு, நேரேகான் அவர்களிடம் வார்த்தைபேசேன் நேர்மையுடன்சமாதியிடம் பள்ளிகொள்வேன், கூரேதான்சமாதியிடமிருந்துகொண்டு கொப்பெனவேதேவர்வருங்காலமட்டும், ஊரேதான்போகாமல்காத்திருந்து உறுதியுடன்சேர்வையதுகண்டிட்டேனே.

கண்டிட்டேன்யென்தேவா குருவேயென்ன கருவானயாக்கோபுமனதுவந்து, பண்டிதங்கள்கொண்டதொரு சிடனுக்கு பட்சமுடன்தானுரைப்பார் தரணிமீதில், வண்டதுவும்மதுதனையே கவிழ்ந்தாப்போறும் மானபியாம்கோபு முனிவர்தாமும், தண்டுடலமானதொருதேகந்தானும் காரணியிலிருந்தென்னபலனுண்டாச்சே.

ஆச்சப்பாதேகமதுநிலைநில்லாது வப்பனேலோகமெல்லாம்பொயேவாழு, மூச்சடங்கிசமாதி தனிலிருந்துமென்ன மூதலகில்பெருண்டாய்வாழ்ந்துமென்ன, பாச்சலுடன்சிடர்களுமாயிரம்பேர் பக்கமதில்தேகமதைக்காத்துமென்ன, பாச்சலுடன் மகாகோடி நிதிகளெல்லாம்மானிலத்தில்யான்தேடி வொன்றுங்காணேன் 887

காணேனேதேகமது காயகற்பங்கருவாக யான்கொண்டுபலனுமில்லை, தோணவேநாலுயுகமிருந்துமென்ன தொல்லுலகையொருகுடையிலாண்டுமென்ன, வேணவேலாபமது வொன்றுங்காணேன் விண்ணுலகுகாணுவது மெத்தநன்று, பூணவேசமாதிகொள்வேனென்று புகழுடனேசிடனுக்கு வுரைத்தார்தானே. 888

யாக்கோபு இரண்டாவது சமாதிக்கு ஏகல்

தானனசிடனுக்குப்பின்னுஞ்சொல்வா தன்மையுள்ளயாக்கேநபுமுனிவர்தாமும், கோனனகபிநாயகன் சொன்னவாக்குகொப்பெனவேகுவலயத்தில்பொய்யாவண்ணம், பானனமனோன்மணியாள்கடாட்சத்தாலே பாரினிலேசமாதிக்குப்பின்னுஞ்சொல்வன், தேனனகண்மணியேசிடாபாலா தேகமதைநம்பவில்லையென்றார்தாமே

தாமேதான்யாக்கோபு சித்துதாமும் சட்டமுடன்சமாதியிடம் பக்கல்வந்து, போமேதான்முன்சென்ற சமாதிதன்னில் பொங்க

முடன் அடைவதற்கு முனிவர்தாமும், நேமமுடன் குழிதனிலே யிரங்கிநின்று நிட்டையென்னுஞ் சதாசிவத்தை மனதிலெண்ணி, தாமமுடன் அல்லாவுத்தவாலாவை சாங்கமுடன்மனந்தனிலே எண்ணினாரே. 890

எண்ணியேயாக்கோபு முனிவர்தாமும் பெழிலானசீஷனைத்தாமழைத்து, வண்ணமுடன் வையகத்தைத் தான்மறந்து வாகுடனே சீஷனுக்குவுரைத்தார்தாமும், கண்ணான கண்மணியே சீஷபாலாகாசினியையன்மறந்தேன் பாறைதன்னை, திண்ணமுடன் மூடியல்லோ சமாதிதன்னைதீர்க்கமுடன்கார்த்திருக்க வென்றிட்டாரே. 891

அசரீரி வாக்குகூறல்.

என்றதொருயாக்கோபுமுநிவர்தாமும்பெழிலானவார்த்தையது சொல்லக்கேட்டு, நன்றாடனேசீஷனவர்பாறைதன்னை நலமாக மூடியல்லோ பக்கல்நின்றார், குன்றானயாக்கோபுவாக்குதத்தம் கூறுவார் சீஷனுக்குவாசிர்தம்மை, வென்றிடவேரிஷியாரும்மனதுவந்துவிருப்பமுடன் முப்பத்து வாண்டுதானே. 892

ஆண்டானமுப்பதுவருஷகாலம் வப்பனேசமாதிதனிலிருப்பேனென்றம்,மாண்டுமேதேகமது மண்ணிற்சென்று மறுபடியுஞ்சமாதிட்டுவருவேனென்று, கூண்டுவிட்டுக்கூண்டடைந்த கதையைப்போல கொப்பெனவேமேதினியில் வருவேனென்று, ஆண்டகையாந்தனை நினைந்து முனிவர்தாமும் வன்புடனே தாமுறைத்தார் வாக்குதானே

வாக்கானவாக்கதுவுங்கூறியல்லோவையகத்தில் யாக்கோபுயின்னுஞ்சொல்வார், தாக்கானசமாதிதனிலிருந்துமேதான் தண்மையுள்ள சிஷனுக்குப்பின்னுஞ்சொல்வார், நோக்கமுடன் சமாதிமுன்சென்ற போதுநெடிதானகபடுரைததசிஷவர்க்கம் ஆக்கமுடன் தாமுறைத்த சீஷரெல்லாம் அவனிதனில்குருடாக்க காண்பீர்தாமே. 8·4

யாக்கோபு சாபத்தால் சீஷர் குருடானது

காணவேயின்னம்வெகு வதிசயங்கள் கலியுகத்து மாண்பருக்கு மகிமைசொல்வேன், பூணவே யான்வருங்காலந்தன்னில்புகமுடனே வந்தரங்கம்வெளிச்சங்காணும்,நாணவேநாதாக்கள்முனிவர்தாமும்நடுக்கமுடன்நபிதமக்கு வஞ்சியல்லோ, தோணவேயர்ச்சனைகள்மிகவுஞ் செய்து தோற்றமுடன்சமாதிக்கு முன்னிற்பாரே. 895

முன்னின்றயாக்கோபுவருவதெப்போ மூதுலகில்சாபமதுதவிர்ப்பதெப்போ, மன்னவர்கள்மாண்பரிடம்வினையைநீக்கி மானிலத்தில் வரங்கொடுக்கும் காலமெப்போசொன்னதொருவாக்குமொழிபிசகா வண்ணம்தொல்லுலகில்மகிமையதைக்காண்பதெப்போ, நன்மையாய் நாதாந்தமுனிவர்தாமும் நயமுடனேயாக்கோபைத் துதித்திட்டாரே.

துதித்ததொரு சித்தரெல்லா மெச்சவேதான் துரைராஜசந்திர
ரும் யாக்கோபாரும், மதித்திடவே சமாதினிலிருந்துமேதான் மார்க்
கமுடன் செகசோதிபிரகாசம்போல், கதிப்புடனே சமாதிவிட்டு
யேகியேதான்கனமானயாக்கோபுமுனிவர்தாமும்விதிப்படியேவாக்கு
றைகள்பொய்யாவண்ணம் விருப்பமுடன் நிறைவேற்றவந்திட்டாரே.

வந்ததொரு யாக்கோபு முனிவர்தாமும் வாகுடனே பகடுறைத்
தமாந்தரெல்லாம்,சிந்தனையாய் மனங்கலங்கி மெய்நடுங்கி சிற்பரனார்
யாக்கோபு வந்தாரென்று, தந்தமக்குள் பயந்துமல்லோ ஒடுக்கமாகி
தாரணியிலவ மயங்கிநிற்கும்போது, சிந்தனையாய்வந்ததொரு சாப
த்தாலே நீணிலத்தி லெல்லவருங் குருடானாரே. 898

குருடாராய்ப் போனவர்கள் சிலதுமாண்பர் குவலயத்தி லழிந்த
வர்கள் சிலதுமாண்பர், திருடராயொளித்தவர்கள் சிலதுமாண்பர்
தீர்க்கமுடன் வாய்குளறி சிலதுமாண்பர், இருளதனில் கண்ணொளி
வுமயங்கியேதான் யிராக்காலந் தெரியாமற்போனபேர்கள், வருடமா
ம்வெகுகால மிக்கோலந்தான் வதைபட்டு வழிந்தாரே கோடிபாரே.

கோடியாஞ்சிலபேர்கள் ஞானவான்கள் குவலயத்தில் வெகுநா
ளாய்ப்பேருண்டாக, நாடியே சமாதியிடங்கிட்டிருந்து நாதாந்தப்பே
ரொளியின் சமாதிமுன்னே, கூடியேவெகுகால மிருந்தாரங்கே கொ
ற்றவர்கள் சமாதியிடந்தன்னிலேதான், வாடியே காத்திருந்த சித்
தர்தாமும் வண்மையுடனுபதேசம் பெற்றார்தானே. 900

தானானயாக்கோபு முனிவர்தாமும் தகமையுடனுபதேசம் பின்
னுஞ்சொல்வார், கோனானகுருதனையே மனதிலெண்ணி கொப்பென
வே தாமுரைப்பார் பின்னுஞ்சொல்வோம, வேனானரிஷிமுனிவர்சித்
தருக்கு மேதினியி லுபதேசஞ்செய்துமேதான், தேனானயாக்கோபு
முனிவர்தாமும் தீர்க்கமுடன் முடிவுதன்னைக் கூறுவாரே 901

யாக்கோபுகடைசி சமாதி.

கூறுவார்யக்கோபுசித்ததாமும் குவலயத்தில் தேகமதுயிருந்து
மென்ன, மாறுபடுபேதனங்கள் செய்துமென்ன மகத்தான வசியமு
தல் கற்றுமென்ன, நீறுபுகழ்மோகனங்க ளறிந்துமென்ன நீணிலத்
தில் வாதமதுசெய்துமென்ன, தூறுடையவஷ்டமாசித்தை துறை
முதலுங்கற்றென்ன வொன்றுங்காணே. 902

காணவே பிரபஞ்சவாழ்க்கையற்று காசினியிலிருந்தாலு மொன்
றுமில்லை,பூணவே நவகோடி திரவியங்கள் பூவுலகில்தேடியென்னலாப
மில்லை,நாணமுடன்வுலகுதனில் வாழ்ந்துமென்ன நாதாந்தப்பேரொ

ளியைக் கண்டுமென்ன, வேணபடியுலகெமெலாம் ஒருகுடைக்கீழ் வுத்தமனே யாண்டாலும் ஒன்றாங்காணே, 903

ஒன்றான தேகமது பொய்யேவாழ்வு ஓகோகோ நாதாக்களாரிருந்தார், குன்றானகல்லதுபோல் தேகந்தானும் குவலயத்திலிருந்தாலுமொன்றுமில்லை, தன்றானதேகமது யிரும்பானாலும் தாரணியில் நில்லாது மெய்யேயாகும், சென்றாலுங்காயமது போவதுண்மை சடமழிந்து போகுவதும் வுண்மைதானே. 904

உண்மையாம் யாக்கோபுமுனிவர்தாமும்வுலகத்திலிருந்ததுவும் போதுமென்று, நன்மையாஞ் சிஷவர்க்கமானபேர்க்குநாதாந்த யாக்கோபு முனிவர்தாமும், வண்மையாம் லோகமதை மறந்தேனப்பா வாகுடனே சமாதிக்குப் பின்னுஞ்செல்வேன், எண்ணமுடன் சிஷருக்கு வாக்குரைத்து யெழிலாக சமாதிக்குப் போவார்தாமே

போகவே யாக்கோபுமுனிவர்தாமும் பொங்கமுடன் சமாதிக்குச்செல்வேனென்றும், வாகடங்கள் விதிமுறைப்போல் தப்பாவண்ணம வளமுடனே தானறிந்த சித்துதாமும், வேகமுடன் சமாதிதனிலிறங்கியேதான் வேதாந்த சித்தொளிவு சொரூபந்தம்மை யோகமுடன் தானிருந்து முனிவர்தாமும் வுத்தமர்க்கு வசரீரியுரைத்தார்பாரே

பாரேதான் யாக்கோபுசித்துதானும் பாருலகிலிதுவரையி லிருந்தகாலம், நேரேதான் சுகமறிந்த தேகந்தன்னை நேர்மையுடன் பிரிதிவினில் சேர்ப்பதற்கு, வீரேதான் விண்ணுலகவாசையற்று வேதாந்த யாக்கோபுசித்தருக்கு, சீரேதான் யுகமுடிவுகாலமாச்சு சிறப்பானதேகமது மண்ணாய்ப் போமே. 907

மண்ணாகிப்போனாலுங்காயகற்பம் மகத்தான தேகமது வழியும்பாரு, திண்ணமுடன் நபிதானுமுடிவுநாளில் தீர்க்கமுடன் கேழ்வியது கேட்கும்போது, எண்ணமதில் யாக்கோபுமுனிவர்தாமும் யெழிலாகவந் தும்மைக்காண்பேனென்று, நிண்ணயமாய் வாக்குரைத்தார் சித்துதாமும் நீடாழியுலகத்தின் நேர்மைதானே. 908

புலஸ்தியருற்பவம்.

நேர்மையா மின்னமொரு மார்க்கங்கேளு நேரான வகஸ்தியனார்க்குகந்தசிஷன், பார்மனதாய் யுலகுதனில் பெயர்வகுத்த பண்பான சிவராஜயோகியென்பார், தீர்மையுள்ள புலஸ்தியராமென்றசித்துதிகழான சமாதிதனை சொல்வோம்பாரு, வார்மையுடன் சீனபதி மேற்கேயப்பா வளமான தென்பொதிகை சாரபுமாச்சே. 909

ஆச்சப்பா புலிப்பாணிப்பாலாகேளு வன்பானயெனதையர் காலாங்கிதானும், மூசசடங்கிச்சீனபதியிருந்தபோதுமூதுலகில்வளமை

யெல்லாஞ்சொன்னார்முன்பு, பாச்சலுடன்பொதிகைமலைச்சார்புதன்னில்பாங்கானகடலோரம்பூமிவட்டம், கூச்சலுடன்சித்தர்முனிரிஷிகளோடு குவலயத்தில்சமாதிக்கு வந்தார்தானே. 910

வந்தாரேசீஷனார்தெறையரொடு வளமாக சீனபதிக்கடலோரந்தான், அந்தமுடன்பொதிகைமலைக்குண்ணின்பக்கம் வகஸ்தியனார் சீஷனதுபாலன்றானும், சொந்தமுடன்சமாதிதனிலிரங்கவென்றுசுத்தமுள்ள புலஸ்தியருங்கூறலுற்றார், வந்தவழிபோவதுவே யுண்மையென்று வளமுடனேசமாதியிடந்தேடினாரே. 911

தேடியெசமாதியிடமருகிற்சென்றுதிறளானசிஷவர்க்ககூட்டத்தொடு, நாடியெ சமுசாரவாழ்க்கையற்று நாதாந்தப் பேரொளியைக் கண்டுதேர்ந்து, கூடியேகுவலயத்தில்நேர்மையெல்லாங்கொற்றவனார் தான்வெறுத்துசமாதிக்கேக, நீடியெபுலஸ்தியருஞ்சிஷர்தம்மைநீட்சியுடன் தாழைத்து கூறுவாரே. 912

கூறுவார்வாய்திறந்துசிஷவர்க்கம்குவலயத்தின் மகிமையெல்லாங்கண்டாராய்ந்தேன், சிருடனேசிற்றின்பவாழ்க்கையற்றுசிரானபேரின்பநிலையைக்காண, நேருடனேவுலகுதனையான்மறந்துநேர்மையுடன்காயமதைநிலைநிறுத்தி, பாருள்ளே சமாதிதனிலிருப்பேனென்றுபட்சமுடன் சிஷருக்குவுரைத்தார்பாரே. 913

புலஸ்தியர் சமாதிக்குபோகும்போது தேரையருக்குப்
புன்சொல்கூறல்.

பாரேதான் தேரையர்மைந்தாகேளுபாரினிலேசமாதிக்குப்போரேன்யானும், சீரேதான்யிருபத்துவாண்டுதானும்சிறப்புடனேசமாதிதனிலிருப்பேனென்று, நேரேதான்சமாதிதனிலிருந்துகொண்டு நேர்மையுடனசரீரிவாக்குசொல்வேன், தீரேதான் யான்வருகுங்காலமட்டும் தீர்க்கமுடன் சமாதியிடமிருந்திடாயே. 914

இருந்துமேசமாதியதுபூசைகொண்டு யெழிலாகநாங்வருகுநாளுமட்டும், திருந்ததேயென்சீஷா பிராணநாதாதெருள்கலையில்தேர்ந்ததொருசித்துபாலா, பொருந்தவேவுபதேசம் மிகவுங்கேட்டு பொங்கமுடன்சமாதிதனிலிருந்துகொண்டு, வருந்தவேநான்வருகும்நாளையெண்ணி வளமுடனேநீநினைத்து நிற்பீர்தானே. 915

தானான யென்சீஷாயின்னங்கேளுதகமையுள்ளசித்தர்முனியும்மைக்கண்டு, கோனான வுன்குருவுயெங்கென்றக்கால் கொற்றவனே சமாதியிடஞ்சென்றாரென்று, தேனானபுலஷ்தியரும்வருநாள்மட்டும் தேர்வேந்தசித்தருக்குப் பணிதிபூண்டு, மானான மனோன்மணியைத் தொழுதுபோற்றி மலையோரஞ்சமாதியிட மிருக்கின்றேனே. 916

இருக்குறேனென்றுரைத்துயிதவுசொன்ணல்யெழிலானசித்தர் முனிபகடுரைப்பார், வெருக்கவே புலஸ்தியருமடிந்தாரென்று விண்ணுலகில்மறுபடியுந்திரும்பாரென்று, பெருக்கமுடன்வகடுமிகக்கூறுவார்கள்பேரானகர்மியென்றசித்துதானும், உருக்கமுடன்நீயுரைக்கும் போதேயப்பா வுத்தமர்கள்பழிகூறுசொல்லுவாரே. 917

சொல்லுவாரவர்களிடம்வாய்பேசாதேசுந்தரனேசிவராஜயோகிபாலா, வெல்லுவாருந்தனிடஞ்சூதுபேசி வேகமுடன் கொள்வதற்கு மனமுங்கொள்வார், புல்லுவார்தூரானவார்த்தைகூறிபுகழானவுச்சிதங்கள்மிகவுஞ்சொல்லி, அல்லலுடனுந்தனிடஞ்சூதுபேசி வப்பனை வதைசெய்ய வெண்ணுவாரே. 918

எண்ணுவார்நீதறையர்யெந்தன்சீஷா யெழிலான கண்மணியெயின்னஞ்சொல்வேன்,திண்ணமுடன்ஞானமதைக்கேட்பார்போலதீர்க்கமுடன் ஞானோபதேசந்தன்னை, வண்ணமுடன் கரைகண்டசித்து போலேவாரானயெழுத்துக்கள்மாராட்டஞ்சொல்லி, நண்ணமுடன் செகஜோதிசொரூபங்காணநானுரைப்பேன்விதியதனைமகிழெனபாரே

என்பாரேபொய்சூதுகபடுதந்திர மெழிலானவுன்குருவைதூறுபேசி, வன்பானவார்த்தைகளுமிகவுரைத்துவளமானசமாதிக்குயிடர்கள்தேடி, இன்பமுடன்மெய்போலேபொய்யுங்கூறி யெழிலாகவுந்தனுக்குப்புகட்சிசொல்வார்,தென்பாகமகிழாதேசீஷபாலாநேர்மையுடனெப்போது புகழ்வாய்நில்லே. 920

புலஸ்தியர்சமாதியிலிருந்து வருகும்போதுவதிசயங்கள்

நிற்கையிலேபுலஸ்தியராமுனிவர்தாமும்நீடானசமாதிதனிலிருந்துகொண்டு,அற்புதங்கள்மிகவுரைப்பார்சீஷருக்குவன்பானமகிமைகளுமெத்தவுண்டு,தற்பரனார்புலஸ்தியரும்வருகும்போதுதாரணிலதிசயங்கள்மிகநடக்கும், கற்பாறையானதொருபொதிகைதானும்கடல் தனிலே யதிரலுடன்யரையும்பாரே. 921

அதிருமேநாங்வருகுங்காலந்தன்னிலாகாயகோடையிடிபோலே சத்தம், சதிரானபொதிகைமலைச்சுழலுண்டாகும் சப்தரிஷிதவமுனிகள்நடுங்குவார்கள், மதிலோடகோட்டைமுதல்அலங்கம்யாவும்மாறிபேதலைகீழாய்கவிந்துபோகும், உதிருமேவானத்து மீன்களெல்லாம் வுத்தமனேவதிரலதுகாணும்பாரே. 922

பாரேதான்சத்தசாகரமும்பொங்கும்பாரினிலேதேர்வேந்தராஜரெல்லாம், நேரேதாங்போர்முகத்தில்நிற்பார்பாருநேர்மையுடந்திசைமாறிதேவரெல்லாம், வேரேதானரவர்கள் பதிகள்கெட்டு மேதினியிலரசுநிலையாள்வார்பாரு, கூரேதான்வாக்கதுவும்பொய்யாதப்பாகுணமானதேரரிஷிசொல்லக்கேளே. 923

புலஸ்தியர்சமாதியிலிருந்து வருதல்

சொல்லவேதேரமுனிசித்துகேளும் சுகமானபுலஸ்தியரும் வருநாளாச்சு, புல்லவேசமாதியதுதிறப்பதற்கு புகழானபுலஸ்தியரும்வருநாளாச்சு, வெல்லவேமேதினியில் சித்துதாமும் வேதாந்தஞானப்பிரகாசத்தோடு, நல்லதொருசமாதிதனில்பாரைதானும் நலமுடனே தான்வெடித்து வருகலாச்சே. 924

வருகவேசித்துவரும்நாளுமாகி வாகுடனேபுலஸ்தியரும் வந்துமேதான், பெருகவேபுகஸ்தியரும் வந்தபோது பேருனதேரைய முனிவர்தானும், திருதனுடன்புலவ தியரைக்கண்டபோது தீர்க்கமுடநமஸ்காரமஞ்சலித்து, தருகவெனவாசீர்கங் கொண்டணேத்துதக்கபடிமனுமுறைகள் கேட்டிட்டாரே. 925

கேட்டவுடன்புலஸ்தியரு மகிழ்ந்துமேதான் கெடியானவார்த்தையதுமிகவுங்கூறி, நீட்டமுடன்லோகவதிசயங்களெல்லாம்நேர்மையுடன்தானுரைத்தார் சீஷனுக்கு, வாட்டமுடன்பூலோகவதிசயங்கயள்ளமையுடன்போச்சுதென்று மனதிலுன்னி, தாட்டிகமாய்த் தேவைமுனிவர்தாமும் தமியேனைக்காக்கவென்று பணிந்திட்டாரே.

பணிந்துமேதேரையசித்துதாமும் பாங்குடனேகுருபதத்தைத்தாள்பணிந்து, துணிவுடனேசொன்னதொரு மொழிகளெல்லாந்துரைராஜசுந்திரனேநடந்துபோச்சு, அணியணியாய் சமாதியிடபக்கம்வந்து வன்புடனேகாத்திருந்தார் சீடவர்க்கம், கனிவுடனே செகஜோதிவருநாளாச்சு கர்த்தனேபதிவைவிட்டு யேகினாரே. 927

ஏகவேயதிசயங்களெல்லாங்கண்டு யெழிலானபரமகுரு சித்துதாமும், போகருடகுருவர்க்கங் காலாங்கிநாதர் பொங்கமுடன்செய்ததொருவதிசயம்போல், வேகமுடனகஸ்தியனார்சீடர்தாமும் வேதாந்தப்புலஸ்தியனார்செய்தார்கண்டீர், சாகமுடன்சித்தரெல்லா பிரமித்தேங்கி சட்டமுடனவர்பதிக்குப் போனார்தாமே. 928

போனாரேசித்தர்கள்தாஞ்சென்றபின்புபொங்கமுடன்தேரையமுனிவருக்குத், தேனானபுலஸ்தியரும் பின்னுஞ்சொல்வார்தெளிவானஎன்சீடாமைந்தாகேளு,கோனானகுவலயத்திலிருந்துமென்னகொப்பெனவேதேகமதுநிற்பதில்லை, மானானவையகத்தினசைவிட்டேன் மன்னவனேசமாதிக்குப்போறேன்தானே. 929

புலஸ்தியர் இரண்டாவது சமாதிக்கேகல்

போகின்றேன்தேரைமுனிசித்துகேளும் பொங்கமுடன்வையகத்தையான்மறந்தேன், சாகின்றசடலமது யிருந்துமென்னசதாகாலநேமநிஷ்டைக்கொண்டுமென்ன, தாகின்ற பொன்மணியின் சோதி

போலுஞ்சதாகாலமெப்போதுந் துலங்கவேண்டும், வேகின்றநெஞ்ச
மதையிதங்கவைத்து வேகமுடன் சதானித்தம் பணியநன்றே.

பணியவேபதாம்புயத்தை நண்ணவேண்டும் பாங்கானமோட்ச
மதைக்கருதவேண்டும், அணியமேமறுபடியுஞ்சமாதிக்காக|வப்பனே
யான்கொண்டவுறுதிதன்னை, துணிவுடனேஎன்சீஷா சித்துபாலாது
ணையாகநீயிருந்துசெல்லுமட்டும், கணிவுடனேவுபதேசம்பெற்றமல்
லோ காசினியிலிருப்பனே சித்துவாமே. 931

சித்தானசித்துமுனி தேரையாகேள் சிறப்புடனே சமாதிக்குப்
போறேனப்பா, புத்தானமண்மீதில் வருவதில்லை புகழானதேகமதை
தமறந்துவிட்டேன், சத்தமதுதானடங்கி மண்ணாய்ப்போறேன்சாகி
ன்றதேகமது விழலாய்ப்போச்சு, பத்தியுடனுலகுவரைமுடிவுநாளில்
பாலகனேயெந்தனையுங் காணலாமே. 932

தன்வந்திரி உற்பவம்.

காணலாமின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் காசினியில்தன்வ
ந்திரியென்றசித்து, நீணவேகிரேதாயினுகத்திலப்பா நீடாளவிஷ்ணு
வவதாரங்கொண்ட, பூணவேதன்வந்திரியானசித்து புகழான மகாவி
ஷ்ணுவவதாரத்தால், வேணவேமேதினியில் சித்துமாகிவேதாந்ததன்
வந்திரியென்னலாச்சே. 933

என்னவேதன்வந்திரியென்றசித்து யெழிலானகாயாதி கற்பங்
கொண்டு, தென்பொதிகைதனிற்சென்று மேறுதன்னில் தேற்றமுட
னகத்தியனார் தன்னைக்கண்டு, வண்பானசாத்திரங்க ளுள்ளாராய்ந்து
அவர்கள்மீதில்சட்சம்வைத்து வன்புகூர்ந்து, சொன்னமொழிதப்பா
மல் நயங்கள்பேசி சூட்சாதிசூட்சமெல்லாமறிந்தார்தானே 934

அறியவேரகத்தியனார் செய்தநூலாம் அகண்டமெனும் பெருங்
கடலுக்கொப்பமதாகும், முறியாமல்தன்வந்திரிசெய்தநூலை மூன்றல
ட்சங்கிரந்தமென வகுக்கலாகும், சரியொத்தநூல்களுமே பாடிவை
த்தார் சரியாகவகத்தியரு மதுபோற்சொன்னார், தெரியவேலோகாதி
மாண்பருக்கு தோற்றமுடன் பாடிவைத்தார் நூல்கள்தாமே.

பாடிவைத்தமூன்றலட்சங்கிரந்தந்தன்னை பாரினிலேவெகுகோ
டிசித்தர்தாமும், நாடியேமிகப்பார்த்துக் கண்டாராய்ந்துநலமுடனே
பதினெண்பேர் சித்தரெல்லாம், கூடியேவெகுநூல்கள் செய்தார்பா
ருகுவலயத்திலெவராலுஞ் சொல்லப்போமோ, தேடியேதன்வந்திரி
பகவானாரும் தீர்க்கமுடன் சமாதிக்கியெண்ணினாரே | 936

எண்ணினார்காயாதி கற்பங்கொண்டு யெழிலாகத் தாமிருந்தார்
வுலகுதன்னில், நண்ணமுடன்சீஷவர்க்க மனேகம்பேர்கள் நாடினார்

தன்வந்திரிபகவான்றன்னே, வண்ணமுடன் வெகுகால மிருந்தசித்து வளவையுடன் சதுருதிமார்க்கமெல்லாம், கண்ணபிரான் தானறிந்த சொரூபசித்து காசினியிலவர்போலுஞ்சொல்லப்போமோ. 937

தன்வர்திரிசீஷர்களுக்கு யோகமார்க்கங்கூறல்.

சொல்லவேசீடருக்கு ஞானமார்க்கம் செப்பினர்சரிகைகிரியோகமெல்லாம், வெல்லவேவிடகம்பம் பிரிதிமார்க்கம் வேதாந்தஆகடியம்சௌபாக்கியந்தான், புல்லவேசோபளமா மதிசண்டமார்க்கம் புகமானசுககர்மம்திரிதிபாதை, மெல்லவேசூலமொடு கண்டபத்திரம் மேதினியில்நேர்மையுடன் யிரைத்தார்பாரே. 938

பாரேதான்விருத்தியுடன்துருபம்யாவும் பாங்கான வியாகாதம் அரிஷ்ணவேதம், சீரேதான்வச்சிரமாஞ்சித்தியோகம் சிறப்பானவிதிபாகமனந்தங்கோடி, நேரேதான்விரியாகம்பதிகம்யாவும் நேர்மையுடன்சிவகண்டஞ்சித்தபோதம், தீரேதான்யாத்திரங்கள் சுவானகர்மம் சித்தமுடன் சிவசுப்பிரம் பிரம்மந்தானே. 939

தானைபிரம்மமொடுவயிந்திரபேதம் தாக்கானவைகிருது பொக்கத்தானும், பானையோகமது யிருபத்தேழும் பாகமுடன் பாலித்தார்சீடருக்கு, கோனான தன்வந்திரி பகவான்றானும் குவலயத்திச்சீடர்மேல்பட்சம்வைத்து, தேனையோகமென்றமாற்கந்தன்னை தெளிவுடனேதாமுறைத்தார் மந்திரியாமே. 940

ஆமேதான்பலமுடனே பாலவமுந்தானும் வப்பனே கௌலமுடன்கைதுலையுமாகும், வேமேதான்காசியடன்வணசிவமுமாகும் வெட்டவெளிபத்திரையாம் சகுனியிடமாகும், தாமேதான் சதுடாதம் நாகவமுமாகும் தாக்கானகிமஸ்துவுடன் கரணமாகும், போமேதான் கரணமதுபதினொன்றாகும் பேர்கான்போகத்துக் குருதியாச்சே.

சீஷர்களுக்கு ராசிகூறல்

ஆச்சப்பாயிராசியது சொல்வேன்பாரு வப்பனே மேடமுடன் ரிஷபமாகும், மாச்சலுடன்மிதுனமதுகடகந்தானும் மகத்தானசிங்கமதுகன்னியாகும், வீச்சப்பாதுலாவுடனேவிருச்சிகந்தான் விரைவானதனுசுடன்மகரமாகும், பாச்சலுடன்கும்பமது மீனமாகும்பாங்கானராசியது பனிரெண்டுமாமே. 942

ரெண்டுடனேதுலபாருசிமெத்தநன்று யெழிலுடனேகன்னிசிங்கமிருந்தால்நன்று, பண்டானசாத்திரங்கள்யாவுமல்லோ பாங்குடனே கண்டறிந்துசித்துயோகன், கண்டாலும்விடுவார்கள்சித்துதான் காசி

ணியில்தன்னோடே சேர்த்துக்கொள்வார், உண்டான பொருளல்லா மவர்க்கேயோதி வுத்தமனேசிடர்களாய்ச் செய்வார்தானே. 943

செய்தாரேதன்வந்திரி பகவான்றானும் செயலான பாக்கியமும் நூலுந்தந்தார், உய்யவேசிஷமார்க்கங்கண்டாய்ந்து வுத்தமனேதேடின தோராயிரம்பேர், கையவேசிஷவர்க்கமாயிரம்பேர் நலமுடனே விட்டகுறையுள்ளபேர்கள், துப்பவே தேடுத்தோ ரிவர்களாகும்து மைராசசுந்தரனே சொல்வேன்பாரே. 944

பார்க்கவேயெனதையர் காலாங்கிநாதர்பட்சமுடனெந்தனுக்கு விரைத்தசேதி, தீர்க்கமுடன்யானுமல்லோ குளிகைகொண்டு தேசாதிதேசமெல்லாந்தான் திரிந்து, ஏர்க்கமுடன்லோகலதிசயத்தையெல்லாமெழிலாகத்தான்பார்த்து கண்டாராய்ந்து, மாக்கமுடன்பாடிவைத்தசத்தகாண்டம் மகத்தானநடுக்காண்டமிதுதானாமே 945

தன்வந்திரி சமாதிக்கேகல்

நடுவானகாண்டமதுயேழாயிரந்தான் நலமானகாவியத்துக்கிணைவேருண்டோ, வடுவானதன்வந்திரி பகவான்றானும் மார்க்கமுடன் சமாதிக்குயேகவெண்ணி, அடுமையாமானதொருசீடவர்க்கம் வன்புடனேதானகைத்தார் வதீதமார்க்கம், படுகுழியில்சமாதிதனில் செல்லவென்றுபண்புடனேதாமுறைத்தார் பகவான்றானே. 949

சமாதியிடம் சீடர்களுக்கு புத்திகூறல்

தானான தன்வந்திரிபகவான்றானும் தண்மையுடன்சிஷருக்குத் தாமுறைப்பார், தேனானகண்மணியேசிஷவர்க்கம் தெளிவுடனேயெல்லவருங்கேட்டிருங்கள், பானனையாரின்பமிசையாசைவிட்டேன்பாங்கானசமுசார வாழ்க்கையற்றேன், மானனமனேன்மணியைமனதிலெண்ணிவையகத்திலாசையெல்லா மறந்திட்டேனே. 947

மறந்திட்டேன் காயாதிகற்பங்கொண்டு மானிலத்தில் சிலகாலமிருக்கவென்று, துறந்திட்டேன்சமாதிக்குச் சிலதுகாலம் தொல்லுவகையான்மறந்துமண்ணிற்சென்று, கறந்திட்டபாலதுபோல் வடிவமாகிகாசினியில்மறுபடியும் வருவேனென்று உறமுடனே ஞானோபதேசந்தன்னை வுண்மையுடன்போதித்தார் சீடர்தாமே. 948

போதித்தநாள்முதலாய் பகவான்றானும் பொங்கமுடன்மேருகிரிதன்னிற்சென்று, ஆதித்தன்காணாதவதீதநாடு அங்ஙனவேசென்றாரும்பசவாள்றானும், சாதித்துமனதுறுதிகொண்டுமல்லோ சட்டமுடன்சிடவர்க்கங் கூட்டத்தோடு, பாதிமதிசடையணிந்த தம்பிரான்போல் பதிதனக்கேகினார் பகவான்றானே. 949

ஏகவேபொதிகைமலைக் கடலோரந்தான் பெழிலான தீவுதனில் சமாதிதன்னை, பாகமுடன் படுகுழிகள் வெட்டினார்பார்பாங்குடனே நீரோடும் பாங்குமட்டும், ஏகமுடன் சமாதிபது கட்டினார்கள் யெழிலான தன்வந்திரிபகவானுக்கு, சாகமுடன் குழிதனிலே யிரங்கினாரம் சட்டமுடன் திறைகொண்டு மூடினாரே. 950

தன்வந்திரிபகவான் சமாதியிலிருந்து சீஷர்களுக்கு வசரீரிவாக்குகூறல்.

மூடினார்சீஷவர்க்க மாயிரம்பேர் மூதலரைக்காணாமல் மறைந்தார்சித்து, நாடியேசீஷரெல்லாஞ் சமாதிபக்கல் நலமுடனே காத்திருந்தார் குபபலாக, வாடியேசீஷரெல்லா மிருக்கும்போது மகத்தான தன்வந்திரி பகவான்றானும், தேடியேசீஷருக்குச்சொல்லார் பாருதெளிவுடனே கேட்டிருங்கள் மாணுக்காளே. 951

கேட்கவே தன் வந்திரிபகவான்றானும் கிருபையுடன் சீஷருக்குங்கூறினார்பார், நீட்கமுடன்வறுபதுவாண்டுமட்டும் நிலையான சமாதிதனிலிருப்பேனென்றும், வேட்கமுடன்சரீரி வாக்குதானும் வீரமுடன் கூறினார்பகவான்றானும், திட்கமுடன் சீஷவர்க்கங் கேட்டிருந்தார் திறைகோடி வறைகோடி காலமாச்சே. 952

ஆச்சப்பாயான் யான்வருகுங்காலந்தன்னில் அவனிதனிலதிசயங்கள் மிகநடக்கும், மூச்சடங்கிப்போன தொருதேசந்தானும் மூதலகில் வருவதற்கு முன்னதாக, ஏச்சலுடன் வதிசயங்கள் மிகநடக்கும் யெழிலான பொதிகைமலை சார்புதன்னில், கூச்சலுடன்தேவாதிரிஷிகளெல்லாங் கொற்றவனர் வருங்காலந் தானுமாச்சே. 953

தானுமேரிஷிக்கூட்ட முனிவர்தானும் தன்வந்திரி பகவானும் வருநாளாச்சு, வானுலகுதேவரெல்லாம் வருந்தியல்லோ வருணமழைப்புஷ்பமது பொழிந்தாரங்கே, தானுலகுராஜதிராஜரெல்லாங் காணிக்கை கொண்டுவந்து பகவானுக்கு, தேனமுதுகனிவுடனே புட்பதீபம்தேர்வேந்த பகவானுக்கொடு சென்றாரே. 954

தன்வந்திரி சமாதியை அகத்தியர் காணவந்தது.

சென்றாரே சமாதியிட பக்கந்தன்னில் சிறப்புடனே சித்தர்முனிநிற்கும்போது, குன்றானபொதிகைமலைக் கும்பயோனி குவலயத்திலதிசயத்தைப் பார்க்கவெண்ணி, தென்திசையில் மலையைவிட்டு பகவன்றன்னை தேற்றமுடன் காண்பதற்கு முனிவர்தாமும்,வென்றிடவே சமாதியிட பக்கந்தன்னில் வேதாந்த சித்தொளிவும் வந்திட்டாரே. 955

வந்ததொரு சேதி தன்னைநந்திகேட்டு வண்மையுடன் தன்வந்திரிபகவான்றன்னை, சிந்தையிலே நற்சீடனென்றறிந்து சீமானபகவானைக்காணவென்று, பந்தமுடனைநற்சீடனென்று சொல்லி பாரினிலே கண்டு நெடுநேரமாச்சு, அந்தமுடன் சமாதிவிட்டு வருதலுக்கு வன்பானநந்தீசர் வந்திட்டாரே. 956

தன்வந்திரிசமாதியை நந்தீசர்காண வருதல்.

இட்டாரேநந்தீசர் முனிவர்தாமும் யெழிலானசமாதியிட பக்கந்தன்னில், விட்டகுறை யிருந்ததினால் பின்னுங்காண விருப்பமுன்னவருவதற்கு வந்தாரல்லோ, பட்டதொரு தன்வந்திரி பகவான்றடனைபட்சமுடன் காணுகைக்கு நந்திதாமும், கிட்டியேசமாதியிட வலபக்கந்தான் கிருபையுடன் காண்பதற்கு நின்றார்பாரே. 957

தன்வந்திரியைக்காண அசுவனியும் விசுவனியும் வருதல்.

பாரேதான் அசுவனியாம் விசுவனியாந்தேவர் பட்சமுடன்தன் வந்திரிபகவான்றன்னை, நேரேதான் சமாதியிடங்காணவென்று நேர்மையுடன் சென்றாராம் சமாதிபக்கல், கூரேதான் சித்துவரும் நாளுமாச்சு குவலயத்தில் சித்தரெல்லாம் கும்பாய்நிற்க, சீரேதான்புவிமீதிலதிசயங்கள் சிறப்புடனே தானடக்கும் மகிமைதானே. 958

தானனவறுபது வாண்டுதன்னில் தாக்கான சமாதியின் பக்கல் தன்னில், மானனகுருடர் முதல்சப்பாணிதானும் மகத்தான வூமைமுதல் பேசுவானபார், தேனனிதன்வந்திரி பகவான்றானும் தேற்றமுடன் சமாதிவிட்டு வெளியேவந்தார், பானனபகவானும் பாரின்மீதில் பரமவொளி சொரூபராய் வந்திட்டாரே. 959

வந்தாரே பகவானும் பூவிமீதில் வண்மையுடன் சீடவர்க்கந்தனைக்கண்டு, சிந்தனையாய் சீடவர்க்கம் தன்னைநோககி சிறப்புடனே வுபதேசம் மிகவாய்ச்செய்து, தந்தமக்குவரமதுவும் பகவான்றானும் தண்மையுடன் தான்கொடுத்து வாசிர்மித்து, வந்தனையாய்வுலகினுடமகிமைதன்னை வாகுடனே தான்கேட்டார் பகவான்றனே. 960

தானேதான் கேட்கையிலே சீஷவர்க்கம் தகமையுடனுத்தாரங் கூறுகின்றார், தேனன தெள்ளமுர்தம் யெந்தன்கோவே தேற்றமுடனாமுரைப்போம் பகவானுக்கு, பானனகுருடர் சப்பாணியாரும் பாங்குடனே கண்திறந்து நடக்கலாச்சு, வேனனயுலகுதனில் தங்கள்வார்த்தை வேணபடி யதிசயங்கள் கண்டோம் தாமே. 961

கண்டோமேயென் றலுமே சீஷர்தாமும் கருத்துடனே தாமுறை ப்பார் பகவான்றனும், அண்டமுலகளந்ததொரு ஆதிபாலன் அல்ல வருங்கேட்டிருக்கத் தாமுறைப்பார், விண்ணுலகிலிருந்து மென்ன சீஷமாரே விநோதவகைமகிமை யெல்லாங்கண்டுமென்ன, சண்டமா ருதமானகாயகற்பம்,சட்டமுடன்கொண்டென்னவொன்றுங்காணே

காணவேகாயாதிக் கொண்டுமென்ன கலியுகத்தில் கோடிவரை யிருந்துமென்ன, வேணபடிவேதநூல் செய்துமென்ன விட்டகுறை யிருந்தென்னவேபாயுமென்ன, பூணவேசமுசாரவாழ்க்கையற்று பூவு லகிலிருந்தென்ன மடிந்துமென்ன, தோணவே சின்மயத்தைக் கட ந்து மென்னதொல்லை யெல்லாமற்றாலு மொன்றுங்காணே. 963

ஒன்றானதேகமது பொய்யேவாழ்வு வுத்தமனேலோகத்திலொ ன்றுமில்லை, பன்றானபொய்களவுயாவுமுண்டு பாரினில் விசுவாசமரு ளுமில்லை,குன்றான விசுவாசமருள் கொண்டாலும் குவலயத்திலொ ன்றுமிலை பாழுபாழே, தன்றானவையகத்து வாழ்க்கையெல்லாந் தா ரணியில் இப்படியே மேவலாச்சே. 964

தன்வந்திரி மறுபடியுஞ் சமாதிக்கேகல்.

ஆச்சப்பாசீஷவர்க்கஞ் சொல்லக்கேளும் வப்பனே பின்னுமல் லோசமாதிசொல்வேன், மூச்சடங்கிசமாதிதனில் யிருப்பேனென்று ம்மூதுலகில் மறுபடியும் வருவதில்லை, மாச்சலுடன்வுலோகமதுமுடி வுகாலம் மகிட்சியுடன் சீஷர்களைக்காணலாகும், வாச்சுதேவிட்டகு றைநேருமானால் வளமான சீஷரெல்லாங் காண்பேன்பாரே. 965

பாரேதான் யென்றலுமே பகவான்றானும் பாரின்மிசை யாசை தது விட்டொழித்து, நேரேதான்சமாதிக்குச் சென்றாங்கே நேர் மையுடன் பகவானும் மண்ணிற்சென்று, போரேன்யான பொன்னு லகப் பதியைத்தேடி பொங்கமுடன் யெந்தனதுவாசையற்று, சீராக தானிருங்கள் சீஷவர்க்கமசிற்பானாற் பதிம்பாரே னென்றார்தாமே.

சுந்தரானந்த ருற்பவம்.

தாமானயின்ன மொருசூட்சங்கேளு தகமையுள்ள சுந்தரானந் தசித்து, காமானசித்தினுட பெருமைசொல்வேன் காசினியிலிவர் போலுஞ் சி துவுண்டோ, வேமானமானதொரு சித்துதாமும் வெகு கோடி காலம்வரைதாமிருந்தார், நாமானமென்றதொரு காயகற்பம் நாதாந்தசித்துமுனி கொண்டார்தாமே. 967

கொண்டதொரு சுந்தரானந்தர்தாமுங்குவலயத்தில் வெகுமாண் பர்சித்தருக்கு, அண்டமுடியானதொரு சாத்திரங்கள் வனேகமாய்க்

கற்பித்தார் சித்தர்தாமும், கண்டறிந்த சித்துவர்க்க மாயிரம்பேர்கரு வாளிக்கூடிருந்தார் சித்துதாமும், தொண்டரெனும் சித்துமுனி சீஷ வர்க்கம் துரைராசசுந்தரனைச் சூழ்ந்தார்பாரே. 968

பாரேதான் சுந்தராநந்தசித்து பாரினிலே யிருந்தசுகம்போது மென்று, நேரேதான்வடக்குமுகந்தன்னிலப்பா நெடுந்தூரமானவயி ராவதந்தான், சீரோதான் யெண்ணூறுகாதமப்பா சிறப்பான வயிரா வதமலைதானுகும், ஆறொன்று மலையோரந்தன்னிலுண்டு வழகான மண்டபந்தா னிருக்குந்தானே. 969

தானானமண்டபந்தான் லட்சங்காலாம் தாக்கானவாய்க்கால் நடு மையத்தில், கோனானயென தையர்காலாங்கி நாதர்கொற்றவனுர்சொ ற்படிக்கிக் கண்டேன்யானும், தேனானமனோன்மணியாள் கடாட்சத் தாலே தேசமெல்லாஞ்சுத்திவந்த சொரூபசித்து,வானான வையகத்தி லிருந்தசித்து வளமுடனே காலாங்கி யென்னும்பாரே. 970

பேரானசுந்தராநந்தசித்து பெருமையுடன் வுலகுதனில்வாழ்ந் தசித்து, சீரானசுந்தராநாதர்தாமும் சிறப்புடனே சமாதிக்குச்செல் லவெண்ணி, கூரான சீஷவர்க்கக்கூட்டத்தோடு கொடிமுடி கைலா சர்போலேதானும், சேரானவருங்கடலைத் தேடியல்லோ சேனையுடன் வந்தாரே சித்துகாணே. 971

சித்தானசொரூபமென்ற சித்துதாமும் செழுமையுடன் சிலகா லமிருந்துமேதான், மூததானபவக்கடலை யொழித்துமல்லோ மூதல கில் சமாதிக்குப்போகவென்று, பத்தியாய்ச்சீஷருடன் பரமநாதபா ருலகுவாசல்தனை விட்டொழித்து, நித்தியமுதானதொரு கடவுடன் னைநிட்களமாய்த் தானினைந்து துதித்திட்டாரே. 972

துதித்துமே அயிராவதத்தின் பக்கல் துறையானவாற்றோ ரந் தன்னிற்சென்று, மதிப்பான சங்கநிதிபதுமநிதிதன்னை மாற்கமுடன் கண்டல்லோசித்துதாமும், விதிப்படியே சமாதிககு யிடமுந்தேடி விருப்பமுடன் தானமைத்து சீஷர்தம்மை ததியானமாண்பர்களே பின்னுங்கேளும் தண்மையுடன் சமாதிக்குச் சொல்வேன்பாரே.

பாரப்பாசமாதிதனிலிரங்கியல்லோ பத்தாண்டுவரை முடியிலி ருப்பேனென்றும் சீரப்பாசிலகாலஞ்சென்றபின்பு சிறப்புடனே வை யகத்தில் வருவேனென்றும் காரப்பா சமாதியிடம் வீற்றிருங்கள் காசினியில்வெகு கோடிவதிசயங்கள் நேரப்பாவதிசயங்கள் காணப் போரீர் நேரமையுடன் சித்தனது வுரைபொய்யாதே. 974

சீஷனுகிய டமாரநந்தர் புத்திகூறல்.

பொய்யான வுலகத்தில்மாந்தரப்பா பொங்கமுடன் கருமிகளு மெத்தவுண்டு, மெய்யாகவவர்களிடம் வாய்பேசாதே வேதாந்தநுட்ப மதைக் காட்டவேண்டாம், துய்யதொரு காயாதிகற்பந்தன்னை சூட் சத்துதுறையதனைக்கூறவேண்டாம், வையவேவுறவுகண்டு விடையுங் கேட்பார்பகராதே ஒருக்காலுமகிழ்ந்திடாதே. 975

மகிழவேயுந்தனுக்கு யிதவுசொல்லி மாராட்டமாகவல்லோ கும் பல்கூடி, நெகிழவேஞானத்துக்குறுதிகேட்டார்நெடிதானபாலமூர்த போதையுண்டு, மகிழவே தடுமாட்டமிகவேகூறி த்ருக்கமது செய்து மல்லோ கருவிகேட்பார், அகிழவேகருவதனை உன்னைக்கொல்லவப்ப னே கபடுதந்திரஞ் செய்வார்பாரே. 976

பாரேதான்முழுமக்கள்கருமியோடு பகராதேவுன்னுக்குள் மரு மவித்தை, தீரமுடன்சிவயோகநிலையிற்சென்றுதீர்க்கமுடன்சதாநித் தம்பருவமாகி, நேரேதான் தீவழியை விட்டுநீங்கி நேர்மையுடன் நல் வழிக்கியாளதாகி, கூரேதான் குவலயத்திலடக்கங்கொண்டு கொற்ற வனேவாழ்குவது புத்தியாமே. 977

புத்தியாமின்னம்வெ குமார்க்கஞ்சொல்லவேங்புகழாக கண்ணிமை யேபுகலக்கேளும், சத்தியத்துக்கொருநாளுங் குறைவராது தாரணி யில்சீயுமொரு சித்தனுவாய், வெத்தியுண்டுவிசுவாசமருளுமுண்டுவே தாந்தப்பெருங்கடலைவெல்லலாகும்,எத்திசையுமுந்தனையேபுகழ்வார் பாரு யெழிலானசீஷவர்க்கமுதலவனுமே. 978

ஆமேதான்அறிவுள்ள டமருநந்தர்வவனியிமேலீயுமொரு புத்தி வானுய். தாமேதான்யான்வருங்காலமட்டும்தண்மையுடன்சமாதியிட பக்கல்நின்று,நாமேதான்சொன்னபடிவிதியின்மார்க்கம்நாட்டமுடந் தானிருந்து பக்திகொண்டு, போமேதான்வீண்காலங்கழியாமற்றுன் பொங்கமுடன்சமாதியிடம் நிர்பீர்தாமே. 979

டமாரநந்தருக்கு சுந்தருநந்தர் சமாதியில் அசரீரிகூறல்.

நிற்கவேசுந்தராநந்தர்தாமும் நெடிதானவசரீரிவாக்குசொல்வார் விற்பனமாங்கொண்டதொரு சீஷர்தாமும் விண்ணுலகிலெல்லவருங் கேட்டிருங்கள்,சொற்படியேதானடக்குஞ்சுந்தரன்சொல்தொல்லுல கில்பொய்யாதுமெய்யேயாகும், கற்புதைத்தப்பாறையதுவெடிக்கும் போது கைலாசசுந்தரரும் வருவன்றுனே. 980

தானுனசுந்தரரும் வருகும்போது தாரணியில்வெகுகோடி வதி சயங்கள், பானுனபராபரியும் முன்னேநிற்பாள்பாருலகந்தத்தளிக்கு

ஞ்சோதிகாணும், மானான வையகங்களிருண்டுபோகும் மகத்தான நாதாக்களநடுங்குவார்கள், கூனனமொண்டிசப்பாணியெல்லாம்குறை நீங்கிப்பிணிநீங்கி யெதிர்நிற்பாரே. 981

எதிரான சூரியனும்மங்கிநிற்பான் யெழுகடலுந் திசைமாறிப் பொங்கிநிற்கும், சதிராநநாலுயுகவதிசயங்கள்சார்புடனேயெக்காலங் காணலாகும், மதிபோன்றசந்திரனும் யெதிரேநிற்பான்மாசற்றவருந் துதியும்நடுங்கும்பாரு, துதியாநவஞ்சலிகள்மிகசெய்வார்தொல்லு லகந்தத்தளிக்கக் காணலாமே. 982

காணலாங்கைலாச மேருதானுங்கண்ணுக்குத்தோற்றமேகடின மில்லை, வேணபடியுபசாரமிகநடக்கும் மேதினியில்சுந்தரனார் வாக்கு பொய்யா, தோணவேயித்தியாதிவதிசயங்கள் தொல்லுலகில்தானடக் குஞ்சத்தியசத்தியம், நீணவேயெந்தனதுசமாதிபாறை நெடியதொரு வதிசயங்களின்னங்கேளே. 983

கேளப்பாயான்வருகுங்காலந்தன்னிக்கெனிதமுடன்பாறையது மீதிலப்பாநாலப்பா, வருகுநாலெழுதலாகும்நாதாக்கல்புத்தியுள்ளோ ர்காணுவீர்கள், ஆளப்பாவாசகத்தைக்கண்டபோது வப்பனேசமாதி யுள்சிலம்பினோசை,வீளப்பாசெவிதனிலேகேட்கும்பாருவிட்டகுறை யிருந்தோர்க்கு லபிக்குந்தானே. 984

தானேகேள்சித்துவரும்நாளுமாச்சு தாரணியில்வெகுகோடிமகி மைமெத்த, மானேகேள்சொரூபமென்றசித்துதாமும் மகத்தானநவ கோடி ரிஷிகள்முன்னே, கானமுடன்சமாதிவிட்டு வெளியேவந்தார் கைலாயமேருகிரிசொரூபம்போலே, பானமிர்தமுண்டுமல்லோபாரின் மீது பட்சமுடன்சித்தொளியைக் கண்டிட்டாரே. 985

கண்டவுடன்சீஷவர்க்கமொன்றாய்க்கூடி கருத்துடனேவஞ்சலி கள்மிகவுஞ்செய்து, தெண்டமுடன்சாஷ்டாங்கமிகவும்பூண்டுதேற்ற முடன்ஞானோபதேசம்பெற்று,பண்புடனேநவகனியுமமுர்தந்தானும் பட்சமுடன்சித்துவுக்குக்கொண்டுசென்று, விண்டதொருவுபதேசம் பெற்றுக்கொண்டு வுத்தமர்கள்தாமிருந்தாருண்மைபாரே 986

உண்மையாமிப்படிதாநிருக்கும்போது ஒகோகோநாதாந்தசித்து தாமும், வண்மையுடன்வையகத்தில்வந்துமல்லோமககோடிவற்புதங் கள்செய்தார்பாரு,தண்மையாய்தானுரைத்தவாக்குயாவும்தாரணியில் நிறைவேறிப்போச்சதல்லோ, நன்மைபெறச்சீஷவர்க்கங் காணலாச்சு நாடனைத்தும் சுந்தரனார்கீர்த்தியுண்டோ. 987

உண்டானகீர்த்தியதுமிகவுமாகி வுண்மையுடன் கிரியைமுதல் வசரீர்தானும், தொண்டர்கட்குத்தாமுரைத்தவாக்குபோலதொல்லு லகில்வதிசயங்கள்மிகவுமாகி, மண்டலத்தில்நாதாக்கள் சித்துதாமும் மதித்தாரே சுந்தரரைமதித்தார்பாரு, கண்டமுடிமாண்பரெல்லாந் தலைகுனிந்து கைலாசசுந்தரரைத்துதித்தார்பாரே. 988

சுந்தரானந்தர்மறுபடியும் சமாதிக்கேகல்.

பாரேதான்யின்னமொருமார்க்கஞ்சொல்வேன் பண்பானசுந்தரானந் தர்தானும், நேரேதான்நெடுங்காலம்வையகத்தில்நேர்மையுடன்தாமி ருந்தார்சீஷரோடு, சேரேதான்சிலகாலஞ்சென்றபின்பு சிறப்புடனே பூலோகவாழ்வுதன்னை, கூரேதான்பொய்யென்று மனதிலெண்ணி கொப்பெனவே சமாதிசெல்வேனென்றிட்டாறே. 989

இட்டாரேசுந்தரானந்தர்தாமும்யெழிலாகச் சமாதிக்குச்செல்ல வென்று, திட்டமுடன்மறுபடியுஞ்சமாதிக்கேகதீரமுடன்சீஷருக்கு விடையுஞ்சொல்லி,சட்டமுடன்சமாதிக்குப்போறனப்பாதாரணியில் சதாகாலம் நீங்களெல்லாம்,கிட்டிருந்துநான்வருகுங்காலமட்டும் கிரு பையுடனெதிர்பார்த்து நிற்பீர்தாமே. 990

நிற்பீரேசிலகாலஞ்சமாதிபக்கல் நீடூழிகாலம்வரைமுடிவுபட்டும் வற்பமென்றவாழ்வதனை மெய்யென்றெண்ணிவவனியிலேமதிமயங்கி நிற்கவேண்டாம், சொற்படியேசமாதிவிட்டுவருவேனானால் சுந்தரனே யென்றனருந்துதித்துக்கொள்ளும், அற்பசுகதேகமேதுவழிந்துபோ னால் ஆண்டவன்முன் கடைசிவரைக்காணலாமே. 991

காணலாம்வுலகமது முடிவுதன்னில் கைலாசநாதரிடம் நிற்பெங் யாறும்,தோணவேயெந்தனையுங்காணலாகும்தொல்லுலகுமுடிவுவரை நாளிலப்பா, வெணபடிநீதிமனுமுறைகள்யாவும் விருப்பமுடன்தான டக்குந்தேவர்பக்கல், நீணவேசிடவர்க்கமனைத்துமேதான்நீடூழிமுடிவு தனில்காணலாமே. 992

ஆமேதான்வுலகுதனில்யிருந்துமென்னவப்பனே தேகமதைமற ந்துவிட்டேன், நாமேதான்பாசமதைத்துறந்துவிட்டேன்நாட்டினிலே நாதாக்களாசைவிட்டேன், போமேதான்வுலகத்திலிருந்தாலுந்தான் பொன்னுலகுமெப்போதுங்காணிபாகும், தாமேதான்தேகமதுபொய் யேவாழ்வுசதாநித்தம் மோட்சமென்றவீடுதானே. 993

தானானலோகமதில்யெல்லாம்பொய்யே சட்டமுடனிருந்தவர்க ளாருமில்லை,கோனானகுருசொன்னநாலும்பொய்யேகுவலயமுமொரு

காலமழிந்துபோகும், தேனனசத்தசாகரமுமம்பா திறைமேடுவரை காணாதாகிப்போகும், பானனவுலகமது வழிந்துபோகும் பாருலகை கண்டவர்களில்லைதானே. 994

இல்லையோநாதாக்கள் சித்துதாமும் யெழிலுடனேயெல்லவருமாண்டாரப்பா, தொல்லையெனும் பிறவியதுயறற்றுப்போச்சு தோற்றமில்லைவண்டசராசரங்களெல்லாம், வல்லதொருவாத்மாவும்காணப்போகா மகத்தானலோகத்து மார்க்கமப்பா, சொல்லவென்றால் நாவில்லைப்பாவுமில்லை தொல்லுலகை மறந்தவனே சித்தனாமே. 995

போகர் திக்குவதிசயம்

சித்தனாய்ப்பிறந்துமே பாலன்றானும் சிறப்புடனேகாலாங்கிகிருபைதன்னால், சுத்தமுடன்கிழக்கு தென்கிழக்குதானும் சூட்சமுடன்தென்மேற்குதெற்குதானும், பக்தியுடன்மேற்கு வடமேற்குதானும்பாங்கானவடகிழக்குதானும், வெத்தியுடன்சுத்திவந்தேன்குளிகைதன்னால் வேதாந்தத்தாயினது தொளிகண்டேன் 996

கண்டதொருகுளிகைதன்னால் கைலையெல்லாங்காசினியோர்தான்புகழுசுத்திவந்தேன், அண்டமுடனதிசயங்கள் யெல்லாம்பார்த்துவப்பனேகாலாங்கி கடாட்சத்தாலே, விண்டிடவேலோகாதிவதிசயங்கள்விருப்பமுடன் பாடிவைத்தேன் சத்தகாண்டம், சண்டமாருதம்போலவேழாயிரந்தான் சாற்றினேன் லோகத்துமாண்பருக்கே.

மாண்பானபெருநா லேழாயிரந்தான் மகத்தான நூலிதுதானாலாங்காண்டம். காண்பானசத்தகாண்டந்தன்னிலேதான்கருவிகரணாதியெல்லாந்திரட்டிவைத்தேன், நீண்பானகாண்டமது யேழுக்குள்ளே நினைத்ததொருபொருள்களெல்லாங்காணலாகும், தாண்பாணசீனபதியுலகத்தார்க்கு தகமையுடன்செப்பினதோர் நூலிதாமே.

நூலான நூலிதுதான் நாலாங்காண்டம் நுணுக்கமுடன் பாடிவைத்தசத்தகாண்டம், பாலான நூலதுபோல் யாருஞ்சொல்லார் பாலகனேவாயிரத்துக் கொருகாண்டந்தான், சேலானகாண்டமது யேழுமாகும் சிறப்பானகாவியமேழாயிரந்தான், மாலான குருநூலாம் பொருநூலாகும் மகத்தானகாண்டமது நான்குமுற்றே. 999

போகர் சத்தகாண்டம்-7000.

4-வது காண்டம் முற்றிற்று.

உ

கடவுள்துணை.

மஹாமகத்துவம்பொருந்திய

# போக முனிவர்

திருவாய்மலர்ந்தருளிய

# சத்த காண்டம்-எசு.

## ஐந்தாவது, காண்டம்

காப்பு.

ஆதியென்றசத்திபரா பரமேகாப்பு
அகிலமெலாம்பேர்படைத்த வுமையாள்காப்பு
நீதியெனும்பரஞ்சோதி சுடரேகாப்பு
நீடாழியுலகனைத்துங் கொண்டோன்காப்பு
பாதிமதிசடையணிந்த பரமன்காப்பு
பாதாளந்தனில்வாழுஞ் சேடன்காப்பு
சோதியெனுங்காலாங்கி பாதங்காப்பு
சுத்தமுடன்தாள்பணிந்தேன் பாதங்காப்பே. 1

பணிந்தேனேகாலாங்கிநாயர்பாதம் பாங்கானதிருவடிக்கி நமஸ்கரித்தேன், துணிந்தேனேகாண்டமது யேழுஞ்சொன்னேன் துறைபானவாயிரத்துக்கொருகாண்டந்தான், மணிபோன்ற போகரேழாயிரந்தான் மகத்தானநூலிதுகாண்பெருநூலப்பா, கணிதமுடன்காண்டமிதுவைந்துமாகுங் காசினியில் வெகுமதியையறியலாமே.

அறியவேயைந்தாவதானகாண்டம் வவனிதனிலதிசயங்களிதிலசக்கம், குறியானகாண்டமது வைந்துக்குள்ளே குவலயத்தில் மலைகுகைகள்சாகரங்கள், தெரியாதகாணுறுகுன்றுதானும் தெளிவானசத்தநதியிலடக்கம், சரியானசீனபதிமார்க்கமெல்லாஞ்சட்டமுடன் கூறுவேன் போகர்தானே. 3

தானைகாண்டபது வைத்துக்குள்ளே சாகரத்தின் பெருமை யெல்லாஞ்சாற்றலாகுங், கோனையெனதைய்யர் காலாங்கிநாதர் குரு பாதந்தனைவணங்கியாவுஞ்சொல்வேன், பானைமனோமணியாள்முன் னேநிற்கபாடிவைத்தேன் போகரேழாயிரந்தான், மானைநாதாக்க ளென்பேரிற்றான் மனங்கோபங்கொள்ளாமல் மன்னிப்பீரே. 4

சத்தசாகரப்பெருமை.

கொள்ளவேபிரிதிவென்றபூமிதானுங் குவலயத்தில்நான்கிலோர் பங்குமாகும், விள்ளவேசத்தசாகரமுமப்பா மிக்கான மூன்றுபங்கெ ன்னலாகும், உள்ளவேகாலாங்கிகிருபையாலே உத்தமனாடியேனுங் குளிகைபூண்டு, தெள்ளமிர்தமானதொரு சாகரந்தான்தேற்றமுடன் திருப்பாலின்கடலுமாமே. 5

கடலானயேழுவரைகோடிமட்டும் காசினியில்குளிகைகொண்டு சுத்திவந்தேன், மடலானசீனபதிக்கடலும்விட்டு மகத்தானதிருப்பா லின்கடலுங்கண்டேன், அடலாகவஷ்டதிசை சுத்திவந்தேன் அப்ப னேமற்றசாகரமுங்கண்டேன், திடலானநெய்க்கடலும் யானுங்கண் டேன்தீர்க்கமுடனுவர்கடலுங் கண்டேன்தானே. 6

கண்டேனேயுவர்கடலைக் கடந்தபின்பு கடிதானதயிர்க்கடலையா னுங்கண்டேன், விண்டேனேமதுபானக்கடலுங்கண்டேன் விரிவான கறுப்பன் சாகரமுங்கண்டேன், அண்டமெலாந்தான்புகழும் நன்னீ ரான வழகானசாகரமுங்கண்ணிற்கண்டேன், தண்டுளவ மாலையணி கிருஷ்ணன்கொண்ட சாகரமாம்மத்திபத்திலிறங்கினேனே. 7

இறங்கினேன்கிருஷ்ணனவர்பள்ளிகொண்ட யெழிலானகடலி னதுநடுமையத்தில், அறங்குடையஆலிலையை கண்டேனங்கே வப்ப னேகுளிகைகொண்டுவதின்மேல்நின்சீலன், திறமுடையகுளிகையது வலுவினாலேதீர்க்கமுடன் சென்றேறிவந்தேனப்பா, சிறகில்லாப்பட் சியதுபோலவேயானும் கீர்த்தியுடன் குளிகையினாலபறந்திட்டேனே.

இட்டேனேசத்த சாகரமுங்கண்டேன் எழிலானசத்ததீவுகளு ங்கண்டேன், திட்டமுடன்சம்புவென்றதீவுங்கண்டேன் திகழான பி பிலட்சமார்தீவுகண்டேன், சட்டமுடன் செத்தீவுயானுங்கண்டேன் சார்பானகிரவுஞ்சத்தீவுகண்டேன், வட்டமாஞ்சாகரத்தின் தீவுகண் டேன்மளமான சான்மலியுங்கண்டேன்பாரே. 9

பாரேதான்சான்மலிக தீவுகண்டேன் பாங்காளபுஷ்கரத் தீவுகண்டேன், நேரேதான்சத்ததீவுகளுங்கண்டேன் நேரானகுளிகையது பூண்டுக்கொடுன்டு, சீரேறாண்காலாங்கி புஜபலத்தால் சிறப்புடனே லோகமெல்லாஞ்சுத்திவந்தேன், கூரேதான்சீனபதியானுஞ்சென்றேன் குவலயத்திலிதுபோல ஒன்றுங்காணே. 10

போகர் சத்தரிஷியைக்கண்டது.

காணேனே சீனபதி தேசம்போலே திண்டதில்லை ஒருதேசம்யானுமப்பா, பாலமுடன்சீனபதிகடலோரத்தில் பண்பானமலையொன்றுகுகைதானுண்டு, வாணர்முதல்வந்திறங்கும் பொய்கையுண்டு வளமானமண்டபந்தானங்கொன்றுண்டு, தோணவேகுளிகையது பூண்டுகொண்டு தொல்லுலகை யான்மறந்து செல்றேன்பாரே. 11

சென்றேனேமலையிட்டுமண்டபத்தில் சேனநெடுக்காதவழிபோனேன்யானும், நின்றதொருரிடிமலையா மங்கொன்றுண்டு நிலையான சப்தரிஷிமலைதானுகும், குன்றானமலையோரங் குளிகைகொண்டுகொற்றவனார் காலாங்கிதனைநினைந்து, தென்றிசையில் பொதிகைமுனிக்கார்த்றாப்போல தேர்வேங்கேயெந்தனையுங்காரென்றாரே. 12

காரென்றுசொல்லுகையில் காலாங்கிதம்மை கருத்திலே தானினைந்துநமஸ்கரித்து, ஆரென்றுநினையாமலையர்பாதம் வப்பனேவணங்கினேன்கார்க்கவென்று, பாரென்னைக்காத்தருளவேண்டுமென்றுபட்சமுடனுதரிக்கமனதுவந்து, சீரென்றநாமமது பேர்விளங்கசிறப்புடனேயான்தொழுதேன் போகர்தாமே. 13

தாமானஅதிசயங்க ளின்னுஞ்சொல்வேன் தாக்கானமலைதனிலேரிஷிகளப்பா, கோமான்கள்தாமறியார் ரிஷியார்தம்மை குவலயத்தில்சத்தரிஷ் யானுங்கண்டேன், நாமானவசியென்றரிஷியார்தாமும் நலமானமுதல்வரையிலிருந்தாரப்பா, வேமானமாகவல்லோ அத்திரியார்தாமும் வேகமுடன் இரண்டாங்கால் வரைமீதுண்டே.

உண்டானஅங்கீசயரிஷியார்தாமும் வுத்தமனே மூன்றாங்கால் வரையிலப்பா, திண்டானதவபதியிலிருந்துகொண்டு திறமானயோகநிஷ்டைசெய்வாரப்பா, கண்டேனே நாலாங்காலுவரையிலப்பா கன

மானபுலஸ்திமரைக்கண்டேன்யானும், ஐண்டமாருதம்போல வைந்
தாங்காலாம் சங்கதிதிமேல்வரையி லிருப்பார்பாரே. 15

பாரேதான்புலகனுரிஷியார்தாமும் பான்மையுடன் மேல்வரை
யுலிருப்பாரங்கே, நேரேதான் ஆறுங்கால்வரைமேலப்பா நேர்மையு
டன்பிறகுமகாரிஷிதானுண்டு, சீரேதானேமூங்கால் வரைமேலப்பா
சிறப்பான வரிஷடருங்கண்டேன்யானுந், தீரேதான்சப்தமகா ரிசிக
ள்தம்மை தீர்க்கமுடன் மலையதனில் கண்டேன்தாமே. 16

தானுனசப்தரிஷியேழுபேர்கள் தாக்கானமலைதனிலே தவசிருக்
கும், கோனுனகுகைகளையே கண்டேன்யானும் கொற்றவர்களாசீர்ம
மெல்லாங்கண்டேன், தேனுனரிஷிகளுல், சேர்வையான தீர்க்கமுட
னேழுவகைகுளிகைபூண்டு, மானுனமனேன்மணியாள்கிருபையாலே
மலைமீதில்யேழிவரை வென்றேன்காமே. 17

காணவேரிஷிகளிடஞ் சென்றேன்யானுங் காலாங்கிநாதருட கி
ருபையாலே, பூணவேஞானோபதேசம்பெற்றேன் பொங்கமுடன்கரு
விகரணதியெல்லாம், தோணவேயெந்தனுக்கு வுபதேசங்கள் துரை
ருசசுந்தரனர்சொன்னாரங்கே, வேணவேசகலகலை கியானமெல்லாம்
விருப்பமுடள்பிழைக்கவென்று கொடுத்திட்டாரே. 18

கொடுத்தாரேபூவுலகில் பிழைக்கவென்று குவலயத்தி லென்மீ
தில்பட்சம்வைத்து, அடுத்ததொருகுளிகைக்கு வுறுதிசொல்லி அப்
பனேசாரசனைகள் மிகவுங்கூறி, வுடுத்துமே யெந்தனையும் மலைவிட்
டேகி வேதாந்தசித்திமுனி ரிஷிகளெல்லாம், ஒடுக்கம்வரபுத்தியதுமி
கவுங்கூற ஒகோகோ சப்தரிஷிபோவென்றாரே. 19

என்றுரேசப்தரிஷி உரையும்பெற்று யெழிலானகாலாங்கி கிரு
பையாலே, சென்றேனேகுளிகையது மிகவும்பூண்டுசீனபதிக்குள்ளா
கவந்தேன்யானும், நின்றேனேயெனதையர் காலாங்கிநாதர் நிலையா
னசமாயிடஞ்சேர்வைசெய்தேன், குன்றுனமலைதனிலேயேறியல்லோ
கொப்பெனவேகமலமுனிகண்டேன்தாமே. 20

தாமேதான்கமலமுனிசமாதிபக்கல் தண்மையுடன் யான்சென்
றுசேர்வைசெய்தேன், வேடமதான்சீனபதிக் கோட்டைக்குள்ளே,
வேகமுடன்குளிகைகொண்டு யிரங்கினேன்யான், போமேதான் சீனப
திப்பெண்களெல்லாம் போகமுடனெந்தனையு மணையவல்லோ நாமே
தான்நினைத்தபடி பெண்களெல்லாம் நாட்டமுடன் மோகித்துவணை
ந்தார்பாரே. 21

சீனபதியில் சப்தரிஷிகளைப்போல் போகருக்கு

புத்திரருண்டாதல்.

பாரேதான்நினைத்ததொருகல்விதன்னால்பாங்கானசப்தரிஷிபோ லேயப்பா, நேரேதான்நினைத்தவண்ணம் ரிசிகள்போலநேர்மையுடன் தான்பிரிந்தாரிஷிகளப்பா, சீரேதானவர்கொடுத்தவரத்தினாலேசிறப் பானசப்தரிஷிபிறந்தாரங்கே, கூரேதான்தேவரிஷி யென்னலாகுங் குவலயத்தில் அரசரைப்போல் பிறந்தார்தாமே. 22

பிறந்தாரேசீனபதிவரசுசெய்ய பேரானசப்தரிஷி யரசரப்பா, துறந்ததொருஞானிகள்போல் அரசரப்பாதுப்புறவாய்ச் சீனபதியா ண்டதுண்டு, மறந்தாரேவெகுகாலமிருந்துமல்லோ வையகத்தில் வா ழ்க்கைதனைவிட்டுநீங்கி, கறந்ததொருபால்போலேஞானபூண்டு கா சினியில்வெகுகால மிருப்பார்பாரே. 23

இருந்தாரேகோடிவரையுகாந்தகாலம யெழிலான சீனபதிக்கே ட்டைதன்னை, பொருந்ததே யரசாட்சிநடத்தியேதான் பொன்கமு டன்காயாதிகற்பங்கொண்டு, திருந்தவேசமாதிதனி லிரங்கியல்லோ திட்டமுடனதாமிருந்தார் சிததுதாமும், வருந்தவே கோட்டையது யேதுசுத்து வாகாகத்தலைவாசலேழுலானே. 24

ஏழான தலைவாசலொவ்வோசித்து யிரங்கியேசமாதியது பூண் டுகொண்டார், தாழான திருவாசலொவ்வோர்பக்கம் தண்மையுடன் சமாதியதுபெருமைமெத்த, வீழாமல்தேகமது வழியாமற்றுன்வீரா னகோட்டையதுவாசல்முன்னே, சாழானசமாதியதுயேழுங்கண்டே ன்சட்டமுடன் சிஷவர்க்கம் நெருங்கினேனே. 25

நெருங்கவேவெகுகோடி மாண்பாரப்பா நேராகயெந்தன் முன் வந்துநின்று, குருங்கையென்றகாமதனைத்தானெடுத்து கொப்பென வேமுடிமீதில்சுமந்துகொண்டு, தருங்கவேவாசீர்மம்மிகவுஞ்செய்துச ட்டமுடனெந்தனையுங்கேள்விகேட்டு, வருந்தியேயிக்காலமெங்கேசெ ன்றீர் வண்மையுடன் வந்ததுவும்புதுமையாச்சே. 26

ஆச்சென்றபுதுமையது மிகவுறைத்து வப்பனேயென்தேவாயி க்காலந்தான், போச்சென்றுதேகமது மனதிலெண்ணி பொங்கமுட ன்வந்ததுவும் புதுமையாச்சு, பாச்சலுடன் காயாதிகற்பங்கொண்ட பாங்கானதேகமதுயென்றசொல்லி வீச்சலுடன்காலாங்கி கிருபை யாலே விதித்துதேகாணவல்லோவென்றிட்டாரே. 27

இட்டாரேவெகுமாண்பர்கும்பல்கூடி யெழிலாக யெந்தனிடம் வந்தாரப்பா, சட்டமுடன்யான்கண்டவதிசயங்கள்சார்புடனேயானுரைத்தேன்போலமெல்லாம், கிட்டமுடன்மாண்பரெலா மதிசயித்து தீரமுடன்வீற்றிருந்தார் சீனந்தன்னில், பட்டமுள்ள அரசருடசமாதிவிட்டுபாங்குடனேகுளிகைகொண்டு புறப்பட்டேனே. 28

புறப்பட்டேன்சீனபதிக் கடலோரந்தான் புகழான வதிசயங்களெல்லாம்பார்த்து, திறக்கவேவடக்குமுகந்திருப்பால்தன்னில்தீறமுடன்குளிகைகொண்டுசென்றேன்யானும், நிறமாறித்தானிருக்குமாண்பரல்லோ நீடானலசுவத்தின் முகத்தைப்போல, உறமானமாண்பர்களைக்கண்டேனப்பா வுத்தமனேசெகத்றக்குள் ளிருப்பார்தாநே.

இருப்பாரேமலைமீதும்டாரைமீதும் பெழிலானவட்டமதில்யிறங்கினேன்யான், விருப்பமதுகுளிகையுடன் பூண்டுகொண்டுவீரமுடனவர்களிடஞ்சென்றபோது, பொறப்பான மலையொன்று குகைதானுண்டு பொங்கமுடனயிராவதமென்னலாகும், குருப்பான யேழுவரைவுயரங்காணும் குணமானமலையொன்று கண்டேன்தானே. 30

சத்தகன்னிகளைக்கண்டது.

கண்டேனேயென்வனதில்சந்தேகத்தால் கதனமுடன் குளிகைகொண்டுசென்றேன்யானும், அண்டவொண்ணாப்பாரையதுமேலேயுண்டுகவலயதுயோசனைதான் சொல்லப்போமே, தொண்டர்முனி சித்தர்களுமநேகமுண்டு தோற்றமுட னெந்தனுக்குக் கண்ணிற்றோற, சண்டமாருதம்போலயென்னைக்கண்டார் சட்டமுடனுனென்று கேட்டார்தாமே. 31

கேட்டாரேசித்துமுனியெந்தனுக்காய் கிருபைவுடன் யாரென்றுகேட்கும்போது, தாட்டிகமாய்குளிகைகொண்டுவந்தவர்யார் தண்மையுள்ளசிறபாலாவென்றபோது, நீட்டமுடன்காலாங்கி சீஷனென்றேன் நீடானசித்துமுனிரிஷிகளெல்லாம், வாட்டமுடனெந்தனையும்வாசீர்மித்து வளமுடனே நேசஞ்செய்தார்பாரே. 32

பாரேதான்யானுமல்லோசிலதுகாலம்பாண்மையுடனங்கிருந்தேன்சித்தர்பக்கல், நேரேதான்வடகோடிகானகத்தில் சோலைதோப்புண்டுகுளமுமுண்டு, ஊரேதானென்றறிந்து வுளவறிந்து வுத்தமனே யாசிரமங்காணுதென்றேன், பேரென்னவூரென்ன பதிதானென்றேன்பேரான சத்தகன்னிபதியென்றாரே. 33

பதியென்று சொல்லுகையிலடியேன்றானும் பட்சமுனென்மீ
தில்கிருபைவைத்து, துதிபுரியும்சத்தகன்னி ஆசிர்மந்தான்துப்புரவா
யவ்விடத்திற் செல்லொணாது, மதிபோன்றசத்தகன்னியிருக்குந்தா
னம்மகத்தான தேவதாவாசிர்மந்தான், கதிபெறவே சென்றவர்க்கு
யெல்லாமுண்டுகாசினியில் போவார்தாளில்லைதானே 34

இல்லையென்றபோனாலுங் கன்னிமார்கள்யெழிலானமாண்பர்க
ளைசபிப்பாரப்பா, கொல்லவேயமனுக்கு யுறுதியாகும் கோபத்தால்
சாபமதுவாய்க்கும்பாரு, புல்லவேயவ்விடத்திற் செல்லவேண்டாம்
புகழானசத்தகன்னிமார்களப்பா, எல்லைவிட்டுப்போகாதேயெந்தன்
பாலாயெடுத்துரைததா ரெந்தனுக்குமிகுதியாச்சே. 35

ஆச்சென்றபோகாமலடி. யேன்றானும் வண்புடனேமறுபடியுங்
கேள்விகேட்டு பாச்சலுடன் குளிகையது போட்டுக்கொண்டு பா
ங்கிமார்சத்தகன்னியேழுபேரை, மூச்சடங்கிபோனதொரு தேகம்
போல்மொய்க்குழல்மார்தங்கள் முன்னடியேன்நின்று, எச்சியேயவ
ளிடங்கண்டுபேசியெழிலாகயான் வருவேனென்றிட்டேனே. 36

என்றேனேசிறுபாலன் சொன்னவார்த்தையெழிலானதவமுனி
கள்ரிஷிகள்கேட்டு, நின்றதொருநெடுமூச்சுதானறிந்து நேர்மையுட
னெந்தனுக்குயிதவுகூறி குன்றின்மேல்செல்வதற்கு வினயஞ்சொல்
லிகொப்பெனவெயாகீர்மம்மிகவுங்கூறி, வென்றிடவே யடியேனைய
னுப்பினார்கள்விடுபட்டுக் குளிகைகொண்டு போனேன்ஓனே 37

போனேனேயாசிர்மந்தன்னிலேதான் பொங்கமுடன்காவணத்
தையிறக்கினேன்யான், சோலைபோல் சுனையருகேயிறங்கி நின்றேன்
சொர்னமென்றசத்தகன்னிமார்கள்கண்டார், ஃதனைதான்அகலிகை
யாசிர்மந்தான் திகழானமுதற்பீடம்முதற்காவணந்தான், மனேதா
ன்திரௌபதியாம்ரெண்டாம்பீடம்மகத்தானசீதையதுபீடந்தானே.

சீதையாம்பீடமது மூன்றும்பீடம்சிறப்பானதாரையாம் நான்
காம் பீடம், வேதையாம்பண்டோதரி ஐந்தாம்பீடம் மிக்கானசாமா
லியாறும்பீடம், பாதையாம்காந்திரௌதாசிறமாலியாகும்பாங்கான
சத்தகன்னியேழுபே கள், கோதையாம் தேவகன்னியேழுபேர்கள்
குளிகைகொண்டியானுமங்கே கண்டிட்டேனே. 39

பஞ்சவர்களை சத்தகன்னி விசாரித்தல்.

கண்டேனேயவர்களிடம் வார்த்தைபேசி கலியுகத்துவதிசயங்க ளெல்லாங்கேட்டேன், கொண்டல்வண்ணநச்சுதனார்செய்திகேட்டே ன்கோடானகோடிபெண்கள் முறைமைசொன்ன, விண்டபடிவார்த் தையதுமிகவுமங்கேவேதாங்கத்தாயினதுவருளும்பெற்று தொண்ட னெனுமைத்துனர்களைந்துபேரும் சுகமுடனே கேட்டுமல்லோ விச ரித்தாரே. 40

கேட்டுமேகலியுகச்சேதிதன்னை கீர்த்தியுள்ளபஞ்சபாண்டவர் கள்தம்மை, வாட்டமுடன்கலியுக முதலில்தன்னில் வளமாகயெவ்வி தத்தில்மடித்தாரென்று, நீட்டமுடனெந்தனையுங் கேட்கும் போது நீடுழிகோடிவரையிருந்தாரங்கே, காட்டமதுகலியுக முதலிலப்பாக ண்காணுமண்மேலேபோனார்தாமே. 41

போனதொருசெய்திதன்னை யானுரைத்தேன் பொங்கமுடன் யெந்தன்மேல்பட்சம்வைத்து, தானமொடுசித்தர்முனிரிஷியார் தம் மால்தாரணியில் சபாமதுநேரிட்டாலுந், தீனமோடுசாபமது சொல் லாமற்றான் தீர்க்கமுடனெந்தனுக்குவரந்தந்தாரே. 42

தந்தாரேசபமதுநீக்கியல்லோ தாரணியில் சத்தகன்னிமார்கள் தானும், அந்தமுடனெந்தனுக்கு வாசீர்மித்துவவனியெல்லாஞ்செல் வதற்கு அதிதஞ்சொல்லி, சொந்தமுடனுபதேசமிகவுங்கூறி சூட் சாதிசூட்சமெல்லந் தெளிவுரைத்து, யெந்தனுக்குமாற்றமென்றமை கொடுத்துயெழிலாகச்சீனபதி போமென்றாரே. 43

என்றவிடன்காலாங்கி நாதர்தம்மையெழிலாகத் தாளிணைந்து சீனம்போக சென்றுமேகுளிகைகொண்டு வடியென்றானும் சிறப்பு டனேசீனபதிவந்தேன்யானும், மூன்றுமேதானடந்தசேதியெல்லாம் முனையானசீனபதிமாண்பருக்கு, நன்றாகத்தானுரைத்தேநடியேன்றா னும் நலமுடனேமனக்களிப்பு கொண்டார்பாரே. 44

சத்தகன்னிசங்கதியைசீனத்தார்க்குகூறல்.

பாரேதான்சத்த கன்னிமார்கள்நேர்மை பாங்குடனேதானுரை த்தேன்சீனத்தார்க்கு, நேரேதானெந்தனுக்கு உறுதிசொல்லி நேர் மையுடன்சாமதை தவிர்த்தாரென்றே, ஊரேதான் போகவென்று விடையுந்தந்து வுத்தமர்க்குவாதிபந்த முடிவுசொல்லி, பேரேதான் வாழ்கவென்று யெந்தநாளும் பெருமையுடன்யிருக்க வென்றுவரந் தந்தாரே. 45

### தயிர்கடலுக்கு வடகோடி.

தந்தாரேசீனபதி விட்டுவந்நேதன் தகமையுள்ள குளிகையது பூண்டுகொண்டு, வந்தேனேதயிர்கடலுக்கப்பாலப்பா வாகானவட கோடி கானகத்தில், சொந்தமுடன் யானுமல்லோ சென்றேனங்கே சுத்தமுள்ள வாசிரமங்கண்டேயானும், அந்தமுடனாசிரமம் நடுமைய த்தில் அழகானவாயக்கால் கூடந்தானே. 46

தானனகூடமது சித்ரகூடம் தன்மையுள்ள சித்தர்களும் மறி யானுடு, கோனனையெனதைய' காலாங்கிநாதர் கொற்றவனாரெந்தனு க்கு வுரைத்தநீதி, மானனவடகோடி கானகத்தில் வளமானவாயக் கால் மண்டபந்தான், தேனனமனோன்மணி யாளிருக்கும் ஸ்தானம் தேவியென்றகூடமது விசித்திரமாமே. 47

ஆமேதான் ஆயக்கால் மண்டபத்தில் அன்டவொண்ணு தேவரி ஷிக்கூட்டமப்பா, தாமேதான் காலாங்கிசொன்னவாக்கு தாரணியில் மெய்யான வார்த்தைகொண்டு, போமெனவே வடகோடிகானகத்தில் பொங்கமுடன் குளிகையது பூண்டுகொண்டு, வேமெனவே யாசிரம ந்தன்னிற் சென்றேன் வேதாந்ததாயினது யிடங்கண்டேனே.

### போகாவடகோடி கானகத்தில் மனோன்மணியைத் தெரிசித்தது.

கண்டேனேமனோன்மணியாள் வீற்றிருக்கும் கடிதானவாசிரம ந்தன்னைக்கண்டேன், அண்டவொண்ணாச்சேனையது ரிஷிகள்கூட்டம் அங்ஙனமேயான் கண்டுபயமுங்கொண்டு, தொண்டரெனும் ரிஷிமு னிவர் சித்தர்தாமும் தோற்றமுடனாசிரமந்தன்னைச்சுற்றி, கொண்ட ல்வண்ணனச்சுதனும் முன்னேநிற்க கோடானகோ டிவரைபார்த்தி ட்டேனே. 49

பார்த்தேனே மனோன்மணியாளாசிரமத்தில்பல கோடி நவகோடி ரிஷியார்தாமும், கார்த்துமே சதாகாலஞ்சூழ்ந்திருக்க கண்மணிநவர த்தினவாசிரமத்தில்,தீர்த்தமுடன் தடாகமென்ற பொய்கைதன்னில் திகழானமனுக் கூட்டமனேகம்பேர்கள், சார்த்தகையாழ்வார் பன்னீ ராயிரந்தான் சட்டமுடன் தவசிருக்கக் கண்டேன்தானே. 50

### மனோன்மணியான் தாமரைப் பொய்கை.

கண்டேனே மனோன்மணியாள் பொய்கைதன்னை காசினியில் மற்றெவரால் காணப்போமோ, தொண்டனெனும் ஆள்வார்கள்பொ ய்கைதன்னில் தேற்றமுடன் காவலதுபூண்டுநிற்பார், வண்டுழலாள் மனோன்மணியாள் நிர்த்தஞ்செய்வாள் வசந்தமளிமண்டபத்தின்பொ

ய்கைதன்னில், தெண்டமுடி னடியார்கள் கூட்டமெல்லாந் தெரிசிப் பார்மனோன்மணியை தெரிசிப்பாரே. 51

பாரேதான்படியேனுங் குளிகைகொண்டுபட்சமுடன் சிஷவர்க் கந் தன்னைக்கண்டேன், நேரேதானுசிரமந் தன்னைச்சுற்றி நேர்மையு டன் கார்த்திருக்கும் ரிஷிபார்பக்கல், சீரேதான்குளிகையது பூண்டு கொண்டு சிறப்புடனே பொய்கைதனில் நடுமையத்தில், கூரேதான் நீராழிமண்டபத்தில் கொப்பெனவே யிறங்கிவிட்டேன் பண்பாய்த் தானே. 52

பண்புடனே ரிஷிமுனிவரென்னைக்கண்டு பதிரியேயோடிவந்து யாரென்றார்கள், திண்பானகாலாங்கி நாதர்தம்மை திடுக்கிட்டு மன ந்தனிலேதானினைந்து, நண்பாக காலங்கி சீடனென்றேன் நாதாக்கள் சித்தொளிவு நடுங்கினார்கள், கண்பானமனோன்மணியைக் காணவெ ன்று காசினியில் குளிகைகொண்டு வந்திட்டேனே. 53

வந்திட்டேனென்றவுமே ரிஷிபார்தாமும் வணக்கமுடனெந்த னுக்கு வாசீர்மித்து, தந்திட்டார் மனோன்மணியைக் காணவென்று தகமையுட னிடமதுவுங் காண்பித்தார்கள், அந்தமுடனெந்தனையும ழைத்துக்கொண்டு வன்பானவாசிர்மந் தன்னின்முன்னே, சொந்த முடனென்னை நிறுத்திவுளவுசொன்னார் சூட்சமுடன் தான்கண்டு திரு ம்பினேனே. 54

போகர்மனோன்மணியைக் கண்டதை சீடர்க்குரைத்தல்.

திரும்பியேமனோன்மணியைக்காணவென்று நலகாலமங்கிருந்து வுளவுகண்டேன், அரும்பொன்மணி நவரத்தினவாசிரமத்தில் அழ கானமனோன்மணியாள் பீடங்கண்டேன், சுரும்புடைய பூந்துடை யாள் சொரூபங்கண்டேன், தோற்றமுடன் கண்ணிற்குத்தோற்றலா ச்சு கரும்பெனவுந் தேன்மாரி யொழியக்கண்டேன் கைலங்கிரிப்போ லிருக்கும் பொய்கையாமே. 55

ஆமேதான் பொயகையிடங்கிட்டிநின்றேன் வப்பனேமனோன்ம ணியைக்கண்டதில்லை, தாமேதான்மனோன்மணியாள் ரூபம்போல தாசொரூபமானதொரு ஜோதிகண்டேன், போமேதான் பொன்னு னவற்சிர்மத்தைப் பொங்கமுடன் நெடுந்தூரங் கண்டேன்யானும், தேமேதானவச்சித்திர பொய்கையப்பா, தெளிவானமண்டபத்தைப் பார்த்தேன்பாரே. 56

பார்த்தேனேநீராழிமண்டபத்தைப் பளிங்கானபன்னகச் சாலை கண்டேன், தீர்த்தமுடன் பூஞ்சோலைத் தன்னைக்கண்டேன் கதிழான

ன்னம்பலந்தன்னைக் கண்டேன்,சேர்த்துமே ரிஷிகோடி முனிவர்தம் மை சேனைமுதல் நவகோடிசித்தர்கண்டேன்,சார்த்தகிரியாழ்வார்கள் கணக்கோயில்லை சட்டமுடன்வடகோடி மகிமைதானே. 57

தானனையின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் தகமையுள்ள புலிப்பாணி சொல்லக்கேளும், கோனனையெனதையர் காலாங்கிநாதர்குவலயத்தில் வெகுகாலமிருந்தாரப்பா, தேனனமனோன்மணியாள் காமரூபி தேவிதனையொருநாளுங்கண்டதில்லை, பானனைபராபரியாள் சோதியல்லால் பாங்கியரை வொருநாளுங் காணேன்தானே. 58

காணேனேயென்று சொல்லிக்காலாங்கிநாதர் கனமாகயெந்தனுக்குச் சொன்னதுண்டு, வேணபடி வெகுகாலங்காத்திருந்தார் வேதாந்தத்தாயினது வருளைக்காண, மாணவேவரைகோடி காலமப்பாவையகத்தில் மனோன்மணியாள் சொரூபங்காண, நீணவேகாயாதி கற்பங்கொண்டு நெடுங்காலந்தாமிருந்தார் தவசியாமே. 59

தவசுடனே சின்மயத்திலிருந்துகொண்டு தாரணியில்மதியமூர்தம் வெகுவாய்ப்பூண்டு, பவமகற்றிசமாதிதனில் கோடிகாலம் சட்டமுடன் தாமிருந்தார் நாதர்தாமும், சிவக்கடலைக்காணுதற்கு வெகுவாயெண்ணி தீரமுடன்சமாதிதனிலிருந்தாரப்பா, அவமுடனேசமாதிவிட்டு யேகியுந்தான் வவனிதனில்மனோன்மணியைக்காணார்பாரே.

பாரேதானின்னமொரு மார்க்கங்கேளு பாருலகில் வெகுகோடிசித்தருண்டு,நேரேதான் மனோன்மணியைக் கண்டதில்லை நேர்மையுடன் சோதியென்றவொளிவுகண்டார், வீரேதான் சொரூபநிலைக் கண்டபோதே விருப்பமுடன் சோதிமயந் தன்னிற்றோன்றி, கூரேதான் மனோன்மணியை நினைத்தவண்ணங் கொப்பெனவே தரிசனைப்போல் தோற்றலாச்சே. 61

போகர்தனகோட்டியென்னும் ராமேசுவரத்தைக்கண்டது.

தோற்றமுடன் புலிப்பாணிமைந்தாகேளு தொல்லுலகைசுத்திவந்து குளிகைகொண்டேன், காற்றில்லா ராமேசுவரந் தானென்னுங்கனமானதனக் கோட்டிக்கடலைக்கண்டேன், மேற்றிசைக்குக் கீழ்பாகங்கடலோரந்தான் மேலான தெப்பொதிகை சமீபமப்பா, நாற்றமுள்ள சங்கதுவும் பிறக்கும்ஸ்தானம் நடுக்கடலாந் திட்டொன்றுகண்டேன்பாரே. 62

கண்டேனே நடுக்கடலாம் மத்திபத்தின் கனமான பாறையொன்று கட்டொன்றுண்டு,தண்டுளவமாலையணிகிருஷ்ணரூபன் தகமையுள்ள மண்டபந்தானங்கொன்றுண்டு,கொண்டல்வண்ணன் ஸ்ரீராமர்

சீதாதேவி குடியிருப்புவாசிரமந் தன்னைக்கண்டேன், வெண்டாமரைப்பொய்கையுண்டு ஸ்தலமுமுண்டு மேன்மையுள்ள குகையதுவும் பார்த்திட்டேனே. 63

பார்த்தேனே சீதையென்னும் பெண்ணணங்கைபண்பான வச்சிரமாங்கல்லினாலே, நேர்த்தியுடன் கைச்சிலையா யமைத்துமேதான் நேரானமுகவையென்னுஞ்சாகரத்தில், பூர்த்தியாய்ச் சேதுபதிஸ்நானஞ்செய்வோர் புகழானராமருடதேவிதன்னை, தீர்த்தமுடன் சீதாவின் பிராட்டியாரை தினக்கிரமவலங்காரஞ் செய்வார்தாமே. 64

செய்வாரே ராமலிங்கம் பூசைசெய்து ஸ்ரீராமர்பிராட்டியார் ரூபங்காண, உய்யவேவோடமது தன்னிற்சென்று வுத்தமனார் ராமர் தேவிதன்னை, துய்யமுனி சித்தனவாரிஷிகளெல்லாம் சுத்தமுடன் வோடமதிற்சென்றுமேதான்,பையவேவிக்கிரகம் பூசைசெய்ய பட்சமுடன்போவாரும் வருவார்தாமே. 65

தனக்கோட்டிக்கி இடபாகம்.

தாமானயின்னமொரு மார்க்கங்கேளு தாக்கான தனக்கோட்டியிடபாகத்தில், வேமானமென்றதொரு வாசிர்மந்தான் மிக்கானகாடுள்ளே குகைதானுண்டு, கோமானுக்கொப்பான ரிஷியார்தாமும் குருவானசாமியென்ற சித்துவுண்டு, நாமானமாகவல்லோ குளிகைபூண்டு நன்மையுடன் சென்றேனே வனந்தானுள்ளே. 66

போகர் குருபர்னமகாரிஷியைக்கண்டது.

உள்ளான வாசிர்மந்தன்னிற்சென்றேன் ஓகோகோ நாதாக்கள் சித்தருண்டு, கள்ளரென்ற சித்தரப்பாகணக்கோயில்லை காசினியிலவர் பெருமைமெத்தவுண்டு தெள்ளமுர்தமானதொரு சித்துமுன்னே சிறப்புடனே குளிகைகொண்டு யானுஞ்சென்றேன், மெள்ளவே சித்தர்முனிக்கண்டபோது மேதினியில்யாரென்று யெனைக்கேட்பாரே.

கேட்டவுடன் சித்தர்கட்கு விடையுஞ்சொன்னேன் கெடியான காலாங்கி சீடனென்றேன், நீட்டமுடன் தனக்கோட்டிக் காணவந்தேன் நீதியுடன் சீதையென்னுந் தேவிகண்டேன், வாட்டமுடனிடப்பாகங் குளிகைகொண்டேன், வரகான வாசிர்மமிங்கே கண்டேன் நாட்டமுடன் குளிகைகொண்டு யிறங்கியல்லோ நாதாந்தசித்தெளிவைக்கண்டேனே. 68

கண்டவுடன்ரிஷிக்கூட்டமுனிவர்தாமும் கருத்துடனேயெந்தனுக்குவுறுதிசொல்லி,அண்டமுடன் ஆகாயரிஷிகள்தேவர்வப்பனேஅதி

சயங்கள்தாமுறைத்து, மண்டலங்கள் தான்புகழும் ரிஷியார்தம்மை வாட்டமுடனயகன்கண்டேன்போகர்தானும், தண்டமிழ்சூழ்சித்தர் முனிரிஷிகள்கூட்டம்தன்மையுடனெந்தனுக்குவிதிசொன்னரே 69

விதியானவாசகத்தை யானுங்கேட்டு விருப்பமுடன் குளிகை கொண்டுவாசிர்மத்தில், பதியானகுருபர்னரிஷியார்தம்மை பட்சமுடன்காணுதற்கு வருகிற்சென்றேன், ததியான ரிஷிப்பக்கஞ்சென்றபோது தகமையுள்ளரிஷியாருமென்னைப்பார்த்து, மதிபோன்ற திருமுகத்தைநோக்கியல்லோ மார்க்கமுடன் வார்த்தையது சொன்னார் பாரே. 70

சொன்னாரேகுருபர்னரிஷியார்தாமும் தோற்றமுடன் சிறுபாலாயெங்கேவந்தீர், மன்னவனே குளிகைகொண்டு வந்ததென்ன மாராட்டமாகவல்லோவந்தாயப்பா, வன்னநெடுங்கோபமுள்ளசித்தர்தாமும்வளமுடனேயுந்தனையுஞ்சபிப்பாரப்பா, இன்னநெடுங்காலமிலாதிந்தகாலம் யிறைபவனேயேன்வந்தீரென்றிட்டாரே. 71

இட்டாரே குருபர்னரிஷியார்தாமும் யெழிலானபோகர்முகந்தன்னைப்பார்த்து, பட்டமாந் துளுத்ததுபோல் பாலகீயும் பட்சமுடன்வந்ததினாலுந்தனுக்கு, சட்டமுடன் வரந்தருவேனென்றுசொல்லி சாங்கமுடனெனக்குரைத்தார்ரிஷியார்தாமும், அட்டதிசைப்புகழுவல்லோவரங்கள்பெற்றுவாசிர்மந்தான்கடந்துவந்திட்டேனே. 72

சம்புமகாரிஷியைக்கண்டது.

வந்திட்டேன் தனககோட்டிக் கடலோரந்தான் வாகானசம்புவென்றசங்னகக்கண்டேன் பந்திட்டமாகவல்லோ கடலோரந்தான் பாரினிலேகுளிகைகொண்டு செல்லும்போது, முந்திட்டகுருபர்னர் செய்தியெல்லாம்முனையானசம்புவென்றசங்கர்தானும், தொந்திட்டமாகவல்லோசம்புதானும் தொன்மையுடன் தானுரைக்கக் கேட்டிட்டேனே. 73

போகர் முத்தாசிர்மங்கண்டது.

கேட்டேனே முத்தினாசிர்மந்தானுங் கெடியான சாகரத்தைக் கிட்டிவந்தேன், நீட்டமுடன் முத்துரையுங்கடல்தானப்பா நீடாழி சாகரமுமளவுமெத்த, தேட்டமுடனணியென்றமுத்துதானும்தெளிவானகடல்தனிலேவிளையுஞ்சிப்பி, நாட்டமுடன் சித்தர் முனி ரிஷியார்தாமும் நவிலவேதானிருக்குங் கடல்தானமே. 74

கடலானநடுமையம்பாறைமீதில் கனமானசம்புமகா ரிஷியார்சீர்பம், அடலானவாய்க்கால்மண்டபந்தான் அழகான்கள்ளழகர்கோட்டைதானும், மிடலானதேவதா ஸ்தலமுமுண்டு மிக்கானவடிவேலர்

கோயிலுண்டு, குடதிசையாம்பக்கமதில்பொய்கையுண்டு குறிப்பான சம்புமகாபதிதானுமே. 75

பதியான்பாறையின்மேல்மகிமைமெத்த பாங்கான கோட்டையதுகள்ளர்கோட்டை, மதிபோன்ற சம்புமகாரிடியார்தாமும் மகத்தானவாசிர்மஞ் சொல்லப்போமே, துதியுடனே மாண்பரெல்லாங் கோடாகோடி, துப்புறவாய்தெரிசித்து வருவார்போவார், கதிபெறவேவடிவேலர் கோயில்காணகாசினியில்வெகுகோடிவருவார்தானே.

வருவாரேயாசிர்மந்தன்னிற்சென்று வரமுடனேவெகுபேர்கள் கோடிமாண்பர், மருவானமுல்லையிருவாட்சியோடு மகத்தான நமஸ்காரமஞ்சலித்து, குருவானசம்புமகா ரிடியைத்தானும் கோடிப்பார் திரிகாலபூசைமார்க்கம், உருவானவடிவேலர்தம்மைக்காணவுகந்துமே தான்போவார் கோயில்தாமே. 77

தாமானவாசிர்மந்தன்னைவிட்டு தாக்கானவடிவேலர்கோயில்பக்கல், போமேதான்வெகுகோடி மாண்பரப்பாபொங்கமுட னர்ச்சனைகள்மிகவுஞ்செய்வார், பூமேவும்பன்னகச்சாலைதன்னில்புகழானபுட்பமதுமிகப்பறிப்பார், தேமேவும் நவதாதுகனிகளோடுதெளிவாகதானைழைத்துப் பூசிப்பாரே. 78

பூசிக்குங்கிரியைதனை யானுங்கண்டேன் பொங்கமுடன் தனக்கோட்டியானும்வந்தேன், நேசித்து சம்புமகாரிடியார்தம்மாம் நேசமுடன்பின்னும் யான்சென்றுவந்தேன், ஆசித்து ஆசிர்மந்தன்னில்வந்து யடியேனுந்தலைவணங்கி முடிவணங்கி, வாசித்துப்பிரணவத்தையோதியேதான்வணக்கமுடன்பின்னும்யான் தொழுதிட்டேனே.

சம்புமகாரிடிபோகருக்குவுபதேசங்கூறல்.

தொழுதேனே ரிடியாரின்சீர்பாதந்தான் தோத்திரங்கள் மிகச்செய்துகரங்குவித்து, பழுதுருசாபமதுநேரியாமல் பாலகனையெந்தனையுங்காக்கவென்று, அழுதுமேவடியேனும் முடிவணங்கி வன்புடனேகாலாங்கித்தனைநினைத்து, தெழுகாமல்தான்பணிந்தே னடியேனுனும் நேர்மையுடன்வரமெனக்குக் கொடுத்தார்பாரே. 80

பாரேதான் குளிகையதுபூண்டுகொண்டு பாயுனிலே சம்புவரம் பெற்றுவந்தேன், நேரேதான்முத்துறையும் நாடுங்கண்டேன் நெடிதான ஆழியதுயானுங்கண்டேன், சீரேதான் சிப்பிலுறை முத்துதானும்சிறப்பானகடலதுவும்பார்த்துவந்தேன், ஊரேதான் குருபரன ரிடியாசிர்மம் வுத்தமனேயான்கண்ட வளஞ்சொல்வேனே. 81

வளமான மார்க்கமதுபின்னங்கேளு வண்மையுள்ள தனக்கோட்டிவடபாகத்தில், தளமானபதியென்று பாறைகண்டேன் தண்மையுள்ளசம்புமகாரிடியைக் கண்டேன், குளமானபொய்கையது சித்தர் வாழ்க்கை, குவலயத்திலதற்கீடுயாதொன்றில்லை, டளமானநவகனியும்நவதான்யத்தோடு பாறையதில்தான்விளையும் பாண்டிநாடே.

நாடானபாண்டிவளநாட்டைக்கண்டேன் நவகோடிரிஷிமுனிவராசீர்தந்தான், காடாதவமுனிகளுறையும்நாடு காசினியில்மாண்பர்கள்தானறியாறுடு, கோடானகோடியிலே யொருவனப்பா குறையாளவிட்டகுறையிருக்குமானால், தடாண்மைக்கொண்டதொரு தலமுங்காண்பார் தாரணியிலவனுமொரு சித்தனாமே. 83

சித்தனைப்பிறந்தாலு மென்னலாபம் சீரானவிட்டகுறையிருக்கவேண்டுங், கத்தனதுபதவிதனைப் பிறவேவேண்டும் காசினியில்விதியாளிப்பெருவானப்பா, சுத்தமுடன்ஞானேபதேசர்தன்னைசூட்சாதிசூட்சமதை யறியவேண்டும், பித்தனைப்போலிருக்காமல் பேரின்பத்தில்பேருலகில்வாழ்பவனே யோகியாமே. 84

யோகமென்றால்யோகமது சொல்லொண்ணாது யொளிவானபிரகாசமனசோதி, பாகமுடன்சின்மயத்தினிலேயில்நின்று பட்சமுடன்சதாகால மர்சசித்தேதான் சோகமது வாராமல் சமாதிதன்னில் தொல்லுலகில் மாய்கையதுவாசையற்று வேகமுடன் மனோன்மணிமைமனதிலுன்னி வெட்டவெளியம்பரத்தேநிற்பீர்தாமே. 85

நிற்பீரேநிலை தனிமேல்நின்றுகொண்டு நீடானபிரளவத்தை யுச்சரித்து கற்பதித்ததூணதுபோ லெந்தநாளுங் கலங்காமல் சமாதிதனில் நின்றுகொண்டு சொற்படியே குருவினது மொழியுகேட்டு தோராமல் ஞானமதுபூண்டுகொண்டு பற்பலபேதத்தின் பேதாபேதம் பாரினிமேல்சொல்லாதபான்மையாமே. 86

பான்மையென்ற சதாநிலையில் நின்றுகொண்டுபட்சமுடன்யோகமதை நிலைநிறுத்தி ஆண்மாவுக்கொருநாளு மழிவுமில்லை வலனிதனில் நீயுமொரு சித்தனைப்போல மேன்மையுடன்தானிருந்துவையகத்தில்மெய்யான மழியறிந்த பதவிகண்டு மான்மையென்றமோட்ச வழிக்காளதாகி மகிதலத்திலிருப்பவனேபுத்திவானே. 87

புத்தியென்றால் வாதமதுக் காண்பதற்கு புகழானயோகமதை நிறுத்துதற்கும் நித்தியமும் வசியையுள்ளடக்கி நிகழான சுவாசமதை மேல்நோக்காமல் சத்தியென்ற சொரூபமதைக் கண்ணிக்

கண்டுசதாகாலம்கர்மவினைதனையகற்றி முத்திபெறவழிபாடு செய்னு கொண்டு மூதுலகிலிருப்பனே தர்மவானே. 88

தர்மமாமின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் தாரணியில்காலாங்கிகடாட்சத்தாலே, கர்மமென்றபவக்கடலைவிட்டகற்றிகருவிகரணுதியுடன் தொந்தம்பார்த்து, வர்மமுடன்நடப்பவனை புத்திவானும் வரைகடந்துயிருப்பவனை கழுதைமாண்பன் தர்மவினை விட்டகற்றித்தாரணிதன்னில் சட்டமுடன்பேருண்டாய் வாழ்குவீரே. 89

தனக்கோட்டியில் அலையில்லாமயிருப்பதைப்பற்றி பற்றியோர் புலிப்பாணிக்குக் கூறல்.

வாழ்கவேயின்னமொரு மகிமைகேளும் வாகானதனக்கோட்டி கடலிலப்பா, தாழ்கவேலலைகடலில் சத்தந்தானும் தண்மையுடன் நின்றதொருவளப்பஞ்சொல்வேன், மாழ்கியதோர் கடல்தனில்பாறை மீதில்மகத்தானகுருபர்ன ரிஷிபார்தாமும், வேழ்வியுடனுசீர்மந்தனை நடத்திவிருப்பமுடன் தானடத்துங்காலந்தானே. 90

சீதாதேவியாகங்காணவந்தது.

தானனயாகமது நடத்தும்போது தாக்கானதங்கையென்றபதியில்வாழும், தேனனமாதுமையாள் சீதாதேவிதென்னிலங்கைப்பதியைவிட்டு வாசிர்மத்தில் கோனுகுருபர்னர் வேழ்வியாகம் கோதையருந்தான்பார்க்க வந்தபோது பனுனதனக்கோட்டி கடலில்தானும் பாரமுடன் சத்தமது கேழ்க்கலாச்சே. 91

கேழ்க்கவென்றுலின்ன மொருமார்க்கங்கேளு: கெடியானபற்பமென்ற மனையில்தனும் வேழ்க்கமுடன் காற்றேறுசைத்தன்னினுலே வேகமுடன்அலைனையும்வீச்சலாச்சு சூழ்க்கமுடன்சப்தமதைமாது கேட்டுசுத்தமுள்ள யாசிர்மம்பாகந்தன்னில் தாழ்க்கமல நவரத்தின கசிதந்தன்னில் தவிக்கவொட்டசாப்தமதை கண்டார்தாமே. 92

சீதைசாபத்தால்கடலின் அலைநின்றது

கண்டதொருஅலைகடலின்சப்தந்தன்னைகாரிழையாள் ஸ்ரீராமர் தேவியப்பா, கொண்டல்வண்ணச்சுதனைத்தனை நினைந்துகொடுத்ததொருசாபத்தாதலையும்போச்சு விண்டபடி கற்பகத்தருவுக்கப்பா மேதினியில்சப்தமது யில்லைகண்டீர் தண்டலெனும்பனைமரமுமசைவுமில்லை தாரணியில் தனக்கோட்டிமார்க்கந்தாமே. 93

மார்க்கமுடன் தென்றிசையில் கடலில்தானுமகத்தான ஸ்ரீராமர்தேவிதன்னுல்வர்க்கவே கடலோசை நின்றுபோச்சு பெழிலான தனக்கோட்டி மகிமையப்பா தீர்க்கமுடன் சம்புமகா ரிஷிபலத்தால்

னசங்கதுவும் பிரக்கலாச்சு, வர்க்கமுடன் திரிச்சந்து தன்னிலேலே வாகாமா கோட்டையது கட்டலாச்சே. 94

போகர்திருச்சங்கு கோட்டையைக் கண்டது.

ஆச்சென்று போகாமலின்னஞ் சொல்வேன் அப்பனே புலிப் பாணிமைந்தாகேளு, மாச்சலென்ற தனக்கோட்டிகீழ் பாகத்தில்மக த்தான திருச்சங்கு கோட்டையுண்டு, நீச்சுடனேகடல்தனில் பிறந்த சங்கு நிலைகோடிசங்கதனை யெடுத்துமல்லோ, வீச்சுடனே கர்தவழி க்கோட்டைதானும் விருப்புடன் கட்டிருக்கக் கண்டேன்பாரே. 95

கண்டேனேதனக்கோட்டி கடல்மையத்தில் கனமானதிருச்சங் குயாழிகோட்டை, அண்டர்முதல்தேவாதி ரிஷிகளெல்லாம் வன்பு டனே வந்திருக்குங் கேட்டையப்பா, தண்டுளகிருஷ்ணவதாரந்தானு ம் தகமையுள்ள வாசீர்மமொருபக்கந்தான், கொண்டல் வண்ணனாசி ர்மமதற்குப்பின்னால் குறிப்பான யேழுகத்து கோட்டைபாரே. 96

பாரேதான்வழுசத்து கோட்டையப்பா பாங்கான ஆணிமுத்து மதில்தானாகும், நேரப்பா ஆணிமுத்து தன்னிலேலே நிலையானகோட் டையது கட்டிருக்கும், சீரேதான்யேழுசத்து கோட்டைக்குள்ளே சிறப்பான பிரிங்கிமகா ரிஷிபாசிர்மம், கூரேதான் மாண்பர்களுங்கா ணப்போமோ குவலயத்தில் தனக்கோட்டி மகிமைதானே. 97

தானானயேழுசத்துக் கோட்டைக்குள்ளே தவகோடி ரிஷிகளு மேசூழ்ந்திருப்பார், மானானமதில் தனிலே சித்துமாண்பர் மகாதவசி வீற்றிருப்பார் கோட்டைதன்னில், மோனானவாசிர்மந் தன்னில்தா னும் மகத்தானமுத்து சிம்மாதினந்தான், கோனான பிரிங்கிமகாரிஷி யார்தாமுங் கொற்றவனார் வீற்றிருக்கும் பதிதானச்சே. 98

ஆச்சப்பாகுளிகையது பூண்டுகொண்டேன் வப்பனே வாசிர்மந் தன்னிற்சென்றேன், கூச்சலுடன் ரிஷிமுனிவர் சித்தர்கூட்டம் கூற வொண்ணகோஷ்டமது சொல்லப்போமோ, பேச்சரியா மாண்பகர் களோ காணப்போரார் பேரானபிரிங்கி முத்துரிஷிபாசிர்மம், மாச்ச லுடன் காண்பதற்கு முடியாதப்பா மகத்தான சித்தாது கோட்டை யாச்சே. 99

கோட்டையாந் திருச்சங்கு கோட்டையப்பாகுறிப்பான ஆணி முத்து கோட்டைதன்னை, நீட்டமுடன் கோட்டைதனை யறியமாட் டார் நீடானசாகரத்தில் செல்லமாட்டார், வாட்டமுடன் குளிகை

கொண்டு காலாங்கிநாதர் வகுப்பான மகிமையினால் கண்டேன்பாரு தேட்டமுடன் எனதையர் சொன்னவாக்கு தெளிவான சொற்படி யேகாணலாச்சு. 100

காணவேகலியுகத்து முன்னேயப்பா காலாங்கிநாதர் சொன்ன திருவாக்குத்தான், தோணவே யெந்தனுக்கு யிப்போதல்லோ தோற் றமுடன் யெந்தனுக்குக் காணலாச்சு, வாணர்முதல் சொன்னதொரு கோர்வையெல்லாம் வளமாகயிவ்வண்ணஞ் சொன்னதில்லை பூணவே குளிகையது பூண்டிகொண்டு புகழானகோட்டைதனைப் பார்த்திட் டேனே. 101

பார்த்தேனே பிரிங்கிமகாரிஷியார்தன்னை பட்சமுடனடியேனு மஞ்சலித்து, தீர்த்தமுடன்சோடசோபசாரத்தோடு திக்காதிபிரிங்கி மகாரிஷியார் முன்னே, சேர்த்துமே கரங்குவித்து சிரமேல்வைத்து சிறப்புடனேதாள்பணிந்து வஞ்சலித்தேன்,பூர்த்தியுடன்மனதுவந்து சாமிபாதம் பொன்னடியை மறக்காலுந் தொழுதிட்டேனே. 102

தொழுதுமே முக்காலும் பணிந்துமேதான் தொல்லுலகையான் மறந்து துதித்தேனப்பா, பழுதுபடாத் திருமேனிக்காவலாரே பாரு லகில்பள்ளி கொண்டஐயனாரை, முழுதுமேயாழியது கோட்டைசு த்தி மோனமுடன் குளிகைகொண்டு நிற்கும்போது, வழுவாகயாசீ ர்மமங்கே கண்டேன் வண்மையுள்ள கிருஷ்ணருசிர்மந்தானே. 103

கிருஷ்ணாசிர்மங்கண்டது.

தானனதுவாரகையாம் புருடனப்பா தாக்கானகிருஷ்ணரவரா சிர்மந்தான், தேனனதிருச்சங்கு கோட்டைக்குள்ளே தெரிசித்தேன் முத்தினாசிரமம்பின்னால், வானனபிரிங்கிமகாரிஷியார்பக்கம் வகுப்பா னவாணிமுத்துக் கோட்டையோரம், மானனமகதேவனாசிர்மந்தான் வையகத்தில் பார்த்தவர்க ளில்லைதானே. 104

இல்லையே யொருவருந்தான் கண்டதில்லை யெழிலான பிரிங்கி ரிஷிக்கோட்டைகண்டேன், புல்லவேயடியேனைப் பார்த்தபோது புக ழான சிறுபாலா வென்றுசொல்லி, வல்லதொரு காலாங்கி சீடபாலா வாகான போகரென்று தானழைத்து, சல்லாபங் கொண்டல்லோ யென்னைப்பார்த்து சட்டமுடன் யாரென்று மதிப்பிட்டார். 105

மதித்துமேயெந்தனையுங் கேட்டபோது மகத்தான காலங்கிச் சீடனென்றே, துதிப்புடனே யெந்தனையுமாசீர்மித்து துப்புறவாய் பட்சமது கொண்டுயென்னை, கதிரோன்கள்காணாத யாழிகோட்டை கருவுடனேயுளவறிந்து குளிகைகொண்டு, விதிப்படியே விட்டகுறை யிருந்ததாலே விருப்பமுடனுந்தனையுங் காணலாச்சே. 106

காணுதற்குகாலம்வந்து சேர்ந்துதென்று காலாங்கிநாதர்துகிருபையாலே, வேனபடிபலாபலத்தின் மகிமையாலே விளையமுடன் கோட்டையது கண்டாயென்று, கோணமல் மனதுவந்து பென்னைப் பார்த்து கொற்றவனே காலாங்கிசிடாயென்று, நீணவேபிரிங்கி மகாரிஷியார்தாமும் நீட்சியுடன் சந்தோஷங் கொண்டார்தாமே 107

போகர் ஆணிமுத்து விளையுந்துறையைக்கண்டது.

தாமானபிரிங்கிமகா ரிஷியைத்தானும் தகமையடன் கண்டுவந்துவுறவுபேசி, ஆமானமானதொருஆணிமுத்து அலைகடலில் விளைகின்றவதிதங்கேட்டேன், நாமானவார்த்தைக்கி வன்பர்தாமும் நாதாதுகாலாங்கி கிருபையாலே, ஏமாந்துமுத்துரையும் வளமைசொன்னார்யெழிலானமுத்து வளங்கண்டிட்டேனே. 108

கண்டேனே முத்துறையும்நாடுங் கண்டேன்கருவான ஆணிமுத்து தானுங்கண்டேன், கொண்டேனே வெகுதூரங் குளிகைகொண்டு கொப்பெனவே முத்துறையும் பதியுங்கண்டேன், விண்டிட்ட குளிகைபது பலத்தினாலவீரான ஆழிவரைசுத்திகண்டேன், உண்டதொரு குண்ணளவு முத்துகண்டேன் வுகமையுள்ள சிப்பிமுத்து கண்டேன்பாரே. 109

பார்த்தேனே மலைமலையாய் முத்துதன்னைபாங்கான ஆழிக்குளனேகங்கண்டேன், நேர்த்தியுடன் முத்தெடுக்கும் பதமுங்கண்டேன் நேமையுடனுளவு தனையறிந்துகொண்டு, சேர்த்துமே ஆணிமுத்து கையிலேந்தி சிறப்புடனே சீனபதியானுஞ் சென்றேன், பூர்த்தியுடன் குளிகைதனை விட்டிறங்கிபுகழாகச் சமாதியிடமிறங்கினேனே.

சீனபதியில் காலாங்கி சமாதியைக்கண்டுபோகர் அஞ்சலித்தல்.

இறங்கியேகாலாங்கி நாதந்தம்மை யெழிலானசமாதிதனை தெரிசித்தேன்யான், திறமானகாலாங்கி நாதர்தானும் தீரமுடன்யான்வந்தசெய்திகண்டு, வரமுடனே யெந்தனுக்கு வசீராகவாக்களித்தார் யெந்தனது குருபரன்றான்கரங்கு வித்துமுடிவணங்கி யடியேன்றானும் கர்த்தாவைத் தெண்டனிட்டுப் பணிந்திட்டேனே. 111

சீனத்தார்க்கு தீவைபோகர் கூறல்.

பணிந்தேனே காலாங்கி நாயர்பாதம் பட்சமுடன் தெண்டனிட்டுப் பதியிற்சென்றேன், அணியணியாய் சீனபதிமாண்பரெல்லாவன்புடனே செனைவந்து கண்டாரப்பா, துணிவுடனேகொணடு வந்தமுத்தையெல்லாம் துப்புறவேசீனத்தார்க் கறியச்சொல்லி, மணியானமுத்துறையுங் கடலையானும் மாண்பர்களே கண்டுவந்தே னென்றிட்டேனே. 112

இட்டேனே முத்திருக்குப்பதியுஞ் சொன்னேன் யெழிலான திருச்சங்குகோட்டை சொன்னேன், வட்டமுடன் திருச்சக்கோட்டைபக்கல் வாகானகிருஷ்ண வாசீர்மஞ்சொன்னேன், பட்டணங்கள் சீனபதிமார்க்கமெல்லாம் பட்சமுடன் யான்வந்து சேதிகணடு, திட்டமுடன்மான்பரெல்லா மெந்தனுக்குதீரமுட ஞசீர்மஞ் சொன்னர் பாரே. 113

பார்க்கவேயெந்தனுக்குப் பணிந்துமேதான்பட்சமுடன் முத்திருக்குந்தீவுதன்னை, தீர்க்கமுடபோகவென்று வடையாளங்கள் தீரமுடன்கேட்டார்கள் மாண்பரெல்லாம், ஏர்க்கவேயாழி யென்னுங்கடலிலப்பாயெழிலான முத்தெடுக்கப்போகாதப்பா, மார்க்கமுடன் குளிகையது பூண்டுகொண்டு மகத்தானமுத்தெடுக்க வேண்டும்பாரே

சீனபதியார் நீராவிக்கப்பலால் முத்துக்கடலகண்டது.

பாரேதான்குளிகையது யில்லாவிட்டால் பாங்கானநீராவிக்கப்பல்வேண்டும், நேரேதான் நீராவிக்கப்பல்தன்னில் நேர்மையுடன் நிர்மித்துநீங்க்ளெல்லாம், ஊரேதான் நீராவிகப்பல்கொண்டு வுத்தமனே முத்தாழிகாணவேண்டும், சேரேதானுழிதடம் நடக்கும்போது சீரானயுக்தியது வேண்டுந்தானே. 115

தானனதனக்கோட்டி வடபாகத்தில் தார்கான முத்தாழிதீவுமுண்டு, சீதனனசித்தர்முனி கண்டதில்லை தேவதா ரிஷிகளெல்லாங் காணுமாழி, பானனபராபரியாள்வாசஞ் செய்யும்பாங்கான முத்துறையுந்தீவுமாச்சு, மானனமண்டலத்தில் யாருங்காணர் மகத்தான முத்துரையுந் தீவுமாச்சே. 116

ஆச்சப்பா தீவுவழிசெல்லும்போது வப்பனே கடல்தனிலேடக்கமுண்டு, நீச்சுடைய கடல்தனிலே போகும்போது நீடானமலைப்பாறைக் குண்ணுமுண்டு வீச்சுடனே நீராவிமாக்கலந்தான் வீறுடனே யாழிதனிற்சொல்லும்போது, மாச்சலென்ற மலைவளத்தாரிட ருண்டாகும் மகத்தான மாக்கலமு முடைந்துபோமே. 177

போகர் மரக்கண்ணுடி சொன்னது.

போமேதாநீராகவிக் கப்பல்தானும் பொங்கமுடன் கடல்தனிலேசெல்லும்போது, நாமேதான் கண்ணுடிக்கைபிடித்து நலமுடனே யாழிதம் பார்க்கும்போது, வேமேதான் கண்ணுடிக் கைபிடிதது விடிப்பமுடன் கப்பல்முனைத் தனிலிருந்து, தாமேதான் கண்ணுதன்னையப்பா தாரணியில் ஆழிதனைக் காணுவாயே. 118

காணுகையிலுந்தனுக்குப் புத்திமானே கடலிலுள்ளமர்மமெல்லாங்கண்ணிற்றோற்றும், தோணுமேமலைப்பாறைக் கல்களெல்லாம் தோற்றுமேயுந்தன்கண்ணுடியாலே, பூணவேவழிதடத்தைக் கண்டுமல்லோ புகழானமலைப்பாறை யொதுங்கிபேதான், நீணவே நெசிந்தூரஞ்செல்லலாகும் நீராவிக்கண்ணுடிக்கப்பல்தானே. 119

தானானநீராவிக்கப்பல்கொண்டு தகமையுள்ள வாணிமுத்துமெடுக்கலாகும், தேனான ஆணியென்றமுத்தைதானும் தெளிவாகக்கடல்தனிலேயெடுக்கலாகும், கோனானகுருசொன்ன வாக்குதானுங்குறையாமலாழிதனில் நடத்தினக்கால், பானானபாதாள முத்தையெல்லாம்பாங்குடனேயெடுப்பதற்கு துரையுமாச்சே. 120

துறையானதுறைவழியே கண்டபோது துப்புறவாய்ச்சனகமெல்லாங்கைக்குள்ளாச்சு, மறைவானபொருளெல்லாங் கண்ணிற்றோற்றும் மகத்தானநிதிகளெல்லாமெடுக்கலாகும், திறைகடலில்நீராவிக் கப்பல்தன்னால் திரளானகளஞ்சியத்தைக்காணலாகும், குறையாமல் செல்வமது யென்னாளுந்தான் கொற்றவனே யுந்தனுக்கு வாய்க்கும்பாரே. 121

வாய்க்குமேமகமேருபருவதந்தான் ஜீவாகானகுகைபாவிப்பர்வதந்தான், தீய்க்கவேதீவுகளுங்காணலாகும் திறைகோடிகடல்தனை சுற்றலாகும், வேய்ப்பானபதிதனிலே மகிமையெல்லாம் வேகமுடன்மரக்கலத்தால்காணலாகும், காய்க்கவேசீனபதி யுலகத்தார்க்குசட்டமுடன் தானமைத்தநூலிதாமே. 122

நூலான போகரேழாயிரந்தான் னுணுக்கமுள்ள பொருளெல்லாமிதிலேதோயும், பாலானசாத்திரந்தான் சத்தகாண்டம்பாலகனேயிக்காண்டமைந்தாங்காண்டம், மேலானகாண்டமிதுயேழுக்குள்ளே மேதினியில் கருவிகரணாதியெல்லாம், மாதானசத்தசாகரமடக்கம்மகத்தானபோகர்நூல் பெருநூலாமே. 123

அகஸ்தியர்பன்னீராயிரத்தை போகர்சிறப்பித்தது

பெருநூலாம்போகரேழாயிரந்தான் பெருக்கமுடன்பாடிவைத்தேன்சீனததார்க்கு, விருநூலாமடியேனுஞ்சொன்னமார்க்கம் விருப்பமுடனகஸ்தியருமொருநூல்செய்தார், குருநூல்காவியம்பன்னீராயிரந்தான் கும்பமுனிபாடிவைத்தார்காண்டமப்பா, திருநூலாங்காண்டமதுபனிரெண்டுமாகும் திறமானவாருயுறுவேதந்தானே.

போகர்பச்சைமலைக்கண்டது.

வேதமாம்யின்னமொருமார்க்கங்கேளு விருப்பமுடன் புலிப்பாணிமைந்தாநீயும், நீதமுடன்குளிகையது பூண்டுகொண்டு நீதியுடன்

சேனபதிவிட்டுயானும், போதமுடன்வடகோடிகானகததை பொங்க முடன் திரும்பிவந்தேனடியேன்றானுங், காதமெனுங்கடலாருதன்னி லப்பா கவனமுடன்குளிகைகொண்டு சென்றேன்பாரே. 125

பாரேதான்வடகோடியாழிதன்னில் பாங்குடனேகுளிகைகொண்டியானுஞ்சென்றேன், நேரேதான்குளிகைகொண்டு செல்லும்போது நேர்மையுடனுசிர்மமொன்றுகண்டேன், ஊரதுபோல்கடலாழி நடுமையத்தில் ஓங்காகோதீவதுதான் கண்டேனப்பா,சேரேதான்குளிகையதுசென்றுயானும் சேர்ந்தேனேதீவுதனில் கிட்டினேனே.

கிட்டவேதீவுதனில்செல்லும்போது கெடியானதேவதாமலை ஒன்றுண்டு, முட்டவேபாசிபோலிந்தப்பா மூதுலகில் மலையென்று நினைந்துக்கொண்டேன், வட்டமுள்ளபாறைதனை சோதித்தேன்யான் வளமானபச்சையென்ற மலைதானப்பா, திட்டமுடன் கண்டறிந்தேன்பச்சையப்பா திடமானபச்சைமலை பார்த்திட்டேனே. 127

பார்த்தேனேமலையினிட மகிமைமெத்தபாருலகில்சித்தர்முனிகண்டதில்லை, தீர்த்தமுடன்மலைமீதில்சுனைதானுண்டு திறமானபச்சையென்றநிறத்தைப்போல, கார்த்துமே காவலுடன்,வெகுகோடிசித்தர்கதிகாணுமலைதனிலே யிருப்பாரங்கே, பூர்த்தியாயவர்களிடஞ் சென்றேன்யானும் புகழாகவடிபணிந்து தொழுதிட்டேனே. 128

தொழுதேனேசித்தர்வர்க்கந் தன்னைக்கண்டேன் தோற்றமுடன்குளிகைகொண்டுபக்கல்சென்றேன், பழுதுபடாமேனியதைப்பார்க்கும்போதுபச்சையென்றதிருமேனி யென்னலாகும், கழுமுடனேயிமாய்யட்சியெல்லாமப்பா காணுகைக்குப்பச்சைநிறமென்னலாமே.

என்னவேயென்தேகம் பச்சையப்பா எழிலானஜல மெல்லாம் பச்சையப்பா, துன்னவேமண்டலமும்பச்சையப்பா துறையானபூமிமுதல்பச்சையப்பா, பன்னவேபார்லோகம் பச்சையப்பாபாங்கானவிருட்சமுதல்பச்சையப்பா, சொன்னதொருமார்க்கமெல்லாம் பச்சையப்பா சுடரொளியையென்சொல்வேன் போகர்தாமே. 130

பச்சைமலைசித்தர் போகரைக் கேழ்விகேட்டது.

தானானமலைவளத்தைக்கண்டேன்யானும் தகமையுள்ளசித்தர்களோசொல்லொண்ணாது, கோனான சித்தரென்னைக்கண்டபோது குவ

லயத்துமணிதரப்பாகுளிகைகொண்டு, ஏனோதானிம்மனையில்வந்தீரெ ன்றார் யெழிலானசித்தரொனைக்கேட்டபோது, நானேதான்காலாங்கி சீடனென்றேன் நாதாக்கள்காண வல்லோவந்திட்டாரே. 131

வந்தேனேகுருவினதுபாதாம்புயத்தைவணக்கமுடன்கானுதற் குகுளிகைகொண்டேன், அந்தமுடன்பச்சையென்றமலையைக்காண அன்புடனேயானுமல்லோ வந்தேனென்றேன், சொந்தமுடன்யானு ரைகரும்வார்த்தைகேட்டு சுந்தரனார்சித்தர்முனிரிஷிகள்யாவும்,எந்த ன்மேல்பட்சமதுமிகவும்வைத்து எழிலாககூறலுற்றார் சித்தர்தாமே.

சிந்தானசித்துமுனிரிஷிதானப்பா சிறப்புடனே யெந்தனையும் பார்த்துமேதான், பத்தியுடன்காலாங்கி பாதம்போற்றி பாலகனே யிம்மலையில்வந்ததாலே, வெத்திபெறயெந்தனையுஞ்சபிக்கவந்தவேதா ந்தசித்தரெல்லாமனமிதங்கி, சுத்திபுடகிதிகாசப்புராணமெல்லாம்கூ ட்சாதிகூட்சமுடன் சொன்னார்பாரே. 133

சொன்னாரேயெந்தனுக்குவேகஞானம் சொரூபமென்றசுடரொ ளியைக்காணவென்று, மன்னாகேள்காலாங்கிபோகநாதர் மகிமையுள் ளவாசீரமதிங்கொன்றுண்டு, தென்பாறைபச்சைமென்ற மீதிலப்பா தேர்வேந்தராரியாருமொருவருண்டு,முன்னேதான்பெரியோர்கள்சொ ன்னாப்போல மோனமென்றஞானகுரு சித்துவுண்டே. 134

மோனமகாரிஷியைக்கண்டது.

உண்டானசித்துமகாரிடியாற்தாமும் ஓகோகோநாதாக்கள்வாசீ ர்மந்தான், கண்டேனேபச்சையென்ற மலையின்மீதிலிகாவலர்களாயி ரம்பேர்சூழ்ந்திருக்க, திண்டானவாசீர்மங்கிண்டியேதான்தீரமுடன் குளிகைதனைபூண்டுகொண்டு, அண்டமதில்தான்பரந்துமேலேநின்று வப்பனேகுளிகைகொண்டு யிறங்கினேனே. 135

யிறங்கியேமோனகுருபெதிர்முன்பாகயெழிலாகக்குளிகைகொ ண்டுநினறேனங்கே, திறமுடையசித்தர்களோவாயிரம்பேர் தீரமுட னெந்தனையேசிங்கவந்தகர், நிற்மானபச்சையென்ற சித்துதாமுஞ்சீறு க்கியெந்தனையுஞ்சபிக்கவந்தார், மாய்போலேநின்றுவிட்டேன்போகர் யானும் மார்க்கமுடன்தாள்பணிந்துதெரிசித்தேனே. 136

தெரிசித்தேன்மோனமகாரிஷியைத்தானும் திரமுடன்வடகோ டிகானகத்தில், பரிசித்துரிசியாரும்பச்சைமீதில் பாங்குடனேவீற்றி ருந்தவாசீர்மந்தான், வரிசையுடன்மோனமகாரிஷியாசீர்மம்வண்மை

தனைக்காணவென்று வந்தேன்யானும், குரிகையென்றமோனகுருவா சீர்மத்தை குறிப்புடனேயான்கண்டு வணங்கினேனே. 137

மோனகுருபோகருக்கு வுபதேசங்கூறல்,

வணங்கவேரிஷிபாரு மென்னைப்பார்த்து வாகுடனே யாரப்பா வென்றுகேட்க, இணங்கவேகாலாங்கிசீடனென்றேனெழிலானமோனகுருரிடியாசீர்மம், சுணங்கமதுவாறுமலடியேன்றன்னை சூட்சமுடன்தன்னறுகில்வரவழைத்து, மணமுடனேயெந்தனுக்குஞானோபதேசம்மார்க்கமுடன் வரமதுவுங்கொடுத்தார்பாரே. 138

பாரேதான்வெகுகோடிகாலமப்பா பட்சமுடன் பச்சையென்றமலைதான்மீதில், நேரேதானக்கினியும் நவதாதோடுநேர்மையுடன்தானறிந்துயிருந்தேனங்கே, சீரேதான்சிலகாலஞ்சென்றபின் புதிகமுடனேமோனமகாரிடியையானும், சாரமுடன்ஞானோபதேசம்பெற்று சட்டமுடன்சீனபதியேகினேனே. 139

போகர் சீனபதிக்குவந்தது,

ஏகவேசீனபதிப்போகவென்று யெழிலானகுளிகைதனைப் பூண்டுகொண்டு, வேகமுடன்சீனபதிவந்தேன்யானும் வெட்டவெளிஆகாயங்கோட்டைதன்னில், சாகமுடன்குளிகைவிட்டுயிறங்கியேதான் சட்டமுடன்மாண்பரெல்லாங்கணடேன்யானும் சோகமுடன் சீடவர்க்கங்கண்டபோது சுத்தியெனைவந்துமல்லோ சூழ்ந்தார்பாரே.

சூழ்ந்தாரேயெனையுஞ்சீடவர்க்கம் சூட்சாதியானதொருமார்க்கமெல்லாம், தாழ்ந்துமேயெந்தனையுங் கேட்கும்போதுசட்டமுடன் யானுரைத்தேன்பச்சைதன்னை, ஆழ்ந்ததொருகடல்தனிலே மலைதான்ண்டுஅப்பனேவடகோடி யாழிதன்னில், வாழ்ந்துமேபச்சமலை தனுனிலப்பா வாகுடனேவெகுகாலமிருந்தேன்பாரே. 141

ஆகாயமார்க்கமாய் கூண்டுகூட்டிக்கொண்டுயிறங்கி பச்சையெடுக்கும்விதி.

யிருந்தேனேயின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் எழிலானமாண்பர்களேகேளும்கேளும், திருத்தமுடன் வடகோடி யாழிதன்னில் தீரமுடன்பச்சையதுயெடுக்கவென்றால், பொருந்தவேசீறுவிக்கப்பல்தானும் போகாதுகடலுக்குதடந்தானில்லை, வருந்தியேசுழலதுவுமெத்தவுண்டு வாகானபட்சிமுதல் மடிந்துபோமே. 142

மடியுமேகடலுக்குமேற்பாகத் நல்வளமுடனே ஆகாயம்பறக்கும் பட்சி,துடியுமே தான்பறந்துசுழலுமாழி துப்பறவாய்ச் சலமதிலேவிழுகும்பாரு, அடியில்கற்பாறைதனிமெத்தவுண்டு அலைகடலில்தடம

துவுங்காணப்போமோ, நொடியானவாகாயக் கூண்டுதன்னில் நோக்க
முடன் தீவுக்குச் செல்லலாமே. 143

செல்லலாம் யானுரைத்த கூண்டிலுலே சிறப்புடனே தீவுக்குப்
போகலாகும், வெல்லவே ஆகாயமார்க்கந் தன்னில் விருப்பமுடன்
கூண்டைவிட்டு யிறங்கிபல்லோ, புல்லவே யான்சொன்ன வாசிர்மத்
தில் புகழான வடகோடி கடலில்தானும், நல்லதொரு பச்சையென்
றமலைக்கண்டு நலமுடனே யிறங்கியல்லோ பெடுக்கலாமே

எடுக்கலாம் பச்சையென்ற களஞ்சியத்தை யெழிலான வட
கோடியாருதன்னில், தொடுக்கவே கூண்டுவழிமார்க்கமாக தோராம
ல்பச்சைதனை யெடுக்கவேண்டும், விடுக்கவேயாகாயந் தனிலெழும்பி
விடுபட்டுச் சுழலதனைத் தாண்டியேதான், ஒடுக்கமுடன் சீனபதிக்கோ
ட்டைக்குள்ளே யுத்தமனே யிறங்கவென்று உரைத்திட்டேனே.

தனக்கோட்டிக்கு வடபாகத்தில் கெம்புவிளையும்

ஆற்றைக்கண்டது.

உரைத்தேனே யின்னமொரு மார்க்கங்கேளு வுகமையுள்ளபுலி
ப்பாணி மைந்தாசொல்வேன், நிரைப்படியே யெனதையர் காலாங்கி
நாதர் நேராகயெந்தனுக்குச் சொன்னமார்க்கம், திரையானவடகோ
டி யாழிதன்னில் தீர்க்கமுடனாசிர்மமங் கொன்றுண்டு, வடகோடிகா
னகந்தான் சொல்லொணாது வாகானகுளிகைகொண்டு சென்றேன்
பாரே. 146

பாரேதானாழி தடகும்யான்கடந்தேன் பாங்கானவாசிர்மந் தன்
னிற்செல்ல, நேரேதான் குளிகையது கொண்டுமல்லோ நேரானவட
கோடி கானகத்தில், தீரேதான்குளிகை கொண்டுமல்லோ நேரானவ
டகோடி கானகத்தில், ஊரேதானொன்றில்லைக் கடல்தானப்பா வுத்த
மனே யாசிர்மம் நதியாருண்டே. 147

உண்டானவாசிர்மந் தன்னிற்சென்று ஓகோகோநாதாக்கள்பெ
ருமைதன்னை, கண்டேனே வடகோடியாசிர்மத்தில் கனமான சித்து
முனிரிஷிகள்யாவும், தொண்டருடன் வாசிர்மந்தன்னைச்சுற்றி சொ
ரூபமென்ற சித்தொளிவு சொல்லொண்ணாது, அண்டர்முனிராட்சத
ர்கள் காணாவே வப்பனே குளிகைகொண்டு சென்றேன தானே.

தானனகுருபதத்தைக் காணவென்றுதாக்கான மனோன்மணி
யாளருளும்பெற்று, கோனனபெனதையர் காலாங்கிநாதர் கொற்ற
வனார் குழிமொழிசொற்படிக்கி, தேனனகுளிகைகொண்டு சென்று

மல்லோ தெளிவுடனே யாசிரமந்தன்னில்நின்றேன், பானுகம்பிளி யாஞ் சித்தர்தாமும் பாற்கடலிலெந்தனையும் பார்த்திட்டாரே. 149

போகர் கம்பிளிசித்தரைக் கண்டது.

பார்த்தாரே நடுக்கடலாசிரமத்தில் பாங்கானசித்துமுனி ரிஷிக ளெல்லாம், வேர்த்துமுகமாயிருக்க யானுங்கண்டேன் வீரானதேக மெல்லாம் ரோமமப்பா, கீர்த்தியுள்ள சித்தரப்பா வையகத்தில சிறப் பானலோகமதிற் கண்டதில்லை, பூர்த்தியாமகிமையது சொல்லொன் ணாது பொன்னுலகு சித்தரென்று செப்பலாமே. 150

செப்பவென்று லவர்களிடங் கிட்டிநின்றேன் செங்கதிரோன் போல்வீசும் சடலமப்பா, ஒப்பவேவிதேகமது ரோமந்தானும் உத்தம னே காடியென்றே செப்பலாகும், இப்புவியிலா ரேனுங்கண்டதில் லை எழிலான காடிமயிர்சித்தரப்பா, அப்பதியிலாசிரமம் யாருங்கா ணார் அலைகடலில் வழிகாணார் மாண்பர்தாமே. 151

மாண்பானவையகத்தில் யானுமல்லோ வளமுடனே குளிகை கொண்டு சென்றேனப்பா, வீண்போகாக்காலமது யான்கடந்துவிரு ப்பமுட னட்டதிசைகாணவென்று, காண்பான வடகோடித்தாண்டி யல்லோ கைலைபதிக்கொப்பான தீவுகன்னில், ஆண்மையுடன்சென்று மல்லோ சித்துதம்மை வன்புடனேயான்கண்டவளஞ்சொன்னேனே.

சொல்லவேயாசிரமந்தன்னினின்று சுடரான சித்தர்முனி தன் னைக்கண்டு, வல்லதொருரோமமுள்ள சித்தரப்பா வண்மையுடனெந் தனையாரென்றுகேட்க, புல்லறிவானதொரு வடியேன்றானும் புகழு டனே காலாங்கிச் சீஷனென்றேன், மெல்லவே யெந்தனையும் மாசீர் மித்து மேன்மையுடன் பட்சமது கொண்டார் தாமே. 153

கொண்டாரே காலாங்கிபேருரைக்க கொப்பெனவே ரோமமெ ன்ற காடிசித்து, சண்டமாருதம்போலக் கோபங்கொண்ட சகலரு மேயென்பேரிலாசீர்மித்து, கண்டுமே யுபதேசஞ்செய்வதற்கு கருத் திலே மனதுவந்து யடியேனுக்கு, விண்டதொரு ஞானோபதேசமெல் லாம் விருப்பமுடன் போதித்தார் சித்தர்தாமே. 154

சித்தானசித்துமுனி ரிஷிதானப்பா சிறப்புடனே யெந்தனுக்கு யாமஞ்சொல்லி, முத்தானவாசிரமம் பெருமைசொல்லி மூதுலகில் மகிமையெல்லாந்தானுரைத்து, எத்தலமுங்கண்டுவந்த சிறபாலோ

கள்யெழிலான வாசீர்மம்மகிமை யெல்லாம், சுத்தமுடனுந்தமக்கு யாமுரைத்தோம் சூட்சாதிசூட்சமெல்லா மறிந்துகொள்ளே. 155

போகர் கெம்புநதி கேட்டது.

கொள்ளவென்று சொல்லுகையிலடி யென்றனும் கொப்பன வேகெம்புநதியெங்கேயென்றேன், விள்ளவே யெந்தனுக்குச் சொன் னாரப்பா விருப்பமுடன் வடகோடி கானகத்தில், அள்ளவே வயோ த்திகர் மேற்பாகத்தில் அழகான கெம்புநதியென்றுரைத்தார், மெ ல்லவேகெம்பு நதிக்காணவென்று மேன்மையுடன் குளிகைகொண்டு விடைபெற்றேனே. 156

பெற்றேனே சித்தரிடம் விடைகள் பெற்றுபேரான குளிகைத னைப் பூண்டுகொண்டு சுற்றமுடன் அயோத்திகர் தன்னைநோக்கி சூட்சமுடன் மேற்பாகந்தன்னிற் சென்றேன், வுற்றதொரு குளிகை கொண்டு மேற்பாகத்தில் ஓங்காரே நாதாக்களிருக்கும் ஸ்தானம், வெற்றியுடன் காலாங்கி தனைநினைந்து விருதுடனே வடியேனுவிரங் கியேனே. 157

இறங்கினேன் வயோத்திகர் மேற்பாகத்தில் யெழிலான கெம் பாறு நடுமையத்தில் திறமுடைய கெம்புகல் மண்டபந்தான் தெளி வானபதியென்று குகைதானுண்டு, நிறமானவெம்பென்ற சித்தர்தா னும் நீலவர்ணன் முகப்போலே சித்தொன்றுண்டு, உறமானமண்டப த்தில் தவசியாரும் வுற்பனமாய்த் தானிருக்கக் கண்டிட்டேனே.

கண்டிட்டேன் குளிகையது பூண்டுகொண்டு கடிதானகெம்பா றுநடுமையத்தில், தண்டுளமாலையணி கிருஷ்ணன்போலே தவமுடை யசித்தொருவாரங்கேயுண்டு மண்டலுகர் தானறியாதீவுதானும் மகத் தான கெம்பரனுமண்டபந்தான், அண்டமெல்லாம் தான்புகழும் நதி தானப்பா வப்பனே கெம்பாரு பார்த்திட்டேனே. 159

பார்த்தேனே ரிஷியாரையடியென்றனும் பட்சமுடன் பக்கல் தனில்யானுஞ் சொன்னேன், தீர்த்தமுடன் கொங்காநதிபானத்தோ டுதிறமுடனே வஞ்சலிகள் மிகவுஞ்செய்தேன், சேர்ந்ததுமே யெந்த னையுங் கொண்டணைத்து சிறுபாலாயெங்கு வந்தீரென்றுரைத்தார் ஏர்க்கவே யெந்தன்மேல் பட்சம்வைத்து யெழிலான வாசீர்மஞ்சொ ன்னார் பாரே. 160

சொன்னவுடம் அடியேனுங்கால்நடுங்கி சித்தமுடன் தலைகுனி ந்து சாஷ்டாங்கித்தேன், நன்னயமாய் காலங்கி நாதர்தம்மால் நாடி வந்தேனுசீர்மந் தன்னையென்றே, வுன்னிதமாய்க் கெம்புநதிகாண

வென்று உகந்ததொருகுளிகை தனைக்கொண்டுவந்து பன்னவேயாசிர்மங் கிட்டிவந்தேன் பட்சமுடனெந்தனக்கு வருள்செய்வீரே. 161

அருளென்றுசொல்லுகையில் வடியேன்மீது வன்புடனே கிருபையது மிகப்புரிந்து, தெருள்கலையிற் றெள்ளமுதே தேனேமானே தெவிட்டாத கண்மணியே போகர்பாலா, இருளகற்றுஞ் செந்தேனே சிங்கவேறே யெழிலான குணக்குன்றே யோகவானே, பொருளான ஞானோபதேசங்கேட்கும் பொன்னவனே யுந்தனுக்கு வருள்சொல்வேனே. 162

சொல்வேனே ஞானோபதேசந்தன்னை சூட்சாதிசூட்சமதையுனக்குரைப்பேன், வல்லதொரு காலாங்கிநாதாபாலா வளமையெல்லாமுந்தனுக்கு யோதுவேன்யான், வெல்லவே ஞானோபதேசமெல்லாம் விருப்பமுடனே னக்களிப்பேனென்றுசொல்லி, புல்லவேபூதலத்தின் மகிமையெல்லாம் புகழ்ச்சியுட னெந்தனுக்கு ஓதுவாரே. 163

கெம்புரிடியோகருக்கும் ஞானோபஞ்சொல்லி

கெம்புவிளைவு காட்டியது.

ஓதுவார்கெம்பாரு நதியுஞ்சொன்னார் ஓகோகோநாதக்கள் கண்டதில்லை, வாதுரைத்த யெந்தனுக்கு ரிஷியார்தாமும் வண்மையுள்ள ஞானோபமுரைத்தாரப்பா, மாதுமனோன்மணியாளின் கிருபையாலே மகத்தான மகிமைகளுஞ் சொன்னாரப்பா, சேதுபந்த மானதொரு கடலி னேர்மைசெப்பினா ரெந்தனுக்குச் செப்பினாரே. 164

செப்பினார் கெம்புதனை யெடுக்கவல்லோ சேதுபந்தம் வயோத்திகரு மேற்கேயப்பா, ஒப்பவேகெம்பாறு வடமுகத்தில் ஓங்கியதோர்வோடையொன்று குகைதானுண்டு, வெப்புடனேவடகோடி யாற்றையப்பா விண்ணுலகில் கண்டவர்களாருமில்லை, நெப்பமுடன் யெந்தனுக்கு வுளவுசொல்லி நேர்மையுடன் வோடைதனை காண்பித்தாரே

காண்பித்தார் வயோத்திகர் வோடைதன்னில் கனமான கெம்பினது அருவிகண்டேன், ஆண்பானகெம்பினது அருமைதன்னைவப்பனே நாதாக்கள் சொல்வாரோசொல், தூண்போலே கல்லதுதான யிருக்கும்பாரு திடியானகெம்பினது வோடைதன்னை, சாண்போலே பாறையது மிகவிருக்கும் காண்பான சிறுகல்லு பொடியுமாமே. 166

பொடியான கல்லதுதான் மணல்தானப்பா பொங்கமுடன் கழச்சிக்காய்ப்போலிருக்கும் திடியானகெம்புதனை யெடுப்பாரப்பா தூண்போன்றகெம்புதனை யெடுக்கமாட்டார், படியான ஓடைக்குள்

சித்தர்காவல்பாங்கான மேற்புறத்தேசெல்லலாகா, அடிபோன்ற காறுவதிலேயுண்டு அற்புதமாமருவியென்ற வாழியாமே. 167

ஆழியாம்மேலருவில் தன்னிலப்பா வப்பனே கழற்சிக்காய்பளவுபோலும், நாழியால்தான்கொண்டு செம்பழுக்கும்நாயகனேபொடிமணலாமருவிபாயும், ரீழியுடன்கீழருவில் தூண்போல்கெம்பு சீடானமலேபோலேயிருக்கு பாரு, தாழினிடமிலேகின்ற கெம்புமார்க்கம் தகமையுடன் வெகுபேர்கள்காணூர்தாமே. 168

காணூரேகெம்பினுடவாட்டின்மார்க்கம் காசினியில்காலாங்கி கிருபையாலே, தோணுதகருவிகரணுதியெல்லாம் தோற்றமுடனெந்தனுக்குக்காண்பித்தார்பார், பூணுதநுறைமுதலுங்காணுருந்தான் பொங்கமுடன்கெம்பினதுவருவிதானும், மாணமுதும்கெம்பினிட தீவுதன்னைமார்க்கமுடன்கண்டுவந்தேன் தேசமாமே. 169

போகர்சீனபதிக்குவந்து கெம்புவிலைகூறல்

தேசமாமின்னமொருமார்க்கஞ்சொல்வேன் சிறப்பானசீனபதிவுலகத்தார்க்கு, மோசமதுதெரியாத மாண்பரப்பா மூதுலகில்சீனபதியாரைப்போல, பாலமுடன்மெய்யென்று நப்புமாண்பர்பாருலகில் சீனபதியுலகமப்பா, நாசமுள்ளமற்றதோர் தேசமெல்லாம் நலமான கருமிகள்தானென்னலாமே. 170

என்னவேசீனபதி யுலகத்தோர்க்குபெழிலானகபடுகளுஞ்சூதுதானும், பன்னவேபழிபாவம் தெரியாதப்பாபாருலகி லம்மாண்பர் போலேயுண்டோ, துன்னவேயாம்கண்ட மார்க்கந்தன்னை துப்புறவாய்சீனபதிவுலகத்தாற்கு, முன்னவேகாலாங்கிசொன்னுப்போல முயற்சிவுடன்தானுரைப்பேன் பதியுள்ளோர்க்கே. 171

பதியானசீனபதிமாண்பரேகேள், பாருலகில்கடலேழுஞ் சுத்திவந்தேன், நிதியானநவகோடி திரவியங்கள் நேர்மையுடன் தானிருக்கும்தவமுங்கண்டேன், துதியானசித்தாமுனிரிடிகள்தாமும்சூழ்ந்திருக்குங்கெம்பினுடநதியுங்கண்டேன், மதியாததவசுமுனி சித்தாசிரமம் மார்க்கமுடன்கண்டுவந்தேன் மகிமைபாரே 172

பாரேதான் கெம்பாறு நதியுங்கண்டேன் பாங்கானவோடைமுதல யருவிகண்டேன், நேரேதான் காநாறுயாழிகண்டேன் நேரான

கெம்புத்தூண் பாறைகண்டேன், சாரேதான்மேலருவி வுள்ளருவி கண்டேன் சாங்கமுடகெம்பினுட மண்டபந்தான், நீரேதான் வட கோடி மேற்பாகத்தில் நீரமுள்ளசித்தர்கள்தான் காவலுண்டே. 173

காவலாங்காஞறுபதியிலப்பா கார்த்திருப்பார் வெகுகோடிசித் தாங்கே, ஆவலுடன்கெம்பெடுக்கப் போகும்போது வப்பனே யவர் கருணை மிகவேவேண்டும், யேவலுடனவர்பணிக்கு முன்னேநின்று யெழிலானகெம்பதனை யெடுக்கலாகும், கோபமதுவாராமல்குருவின் முன்னே கொப்பெனவே யாசீர்மங்கொள்வீர்தாமே. 174

கொள்ளவேயாசீர்மங் கொண்டபோது கொற்றவனே யுந்தமக் குத்தடமுஞ்சொல்வார், விள்ளவேநிதியிருக்குமிடமுஞ்சொல்லி விரு ப்பமுடன்கெம்பினுட நாடுஞ்சொல்லி, உள்ளதொருவுடல்பொருள் களாவியோடு உத்தமனே உந்தனுக்குத்தத்தமீய்ந்து, கள்ளமின்றி மனதுவரநடக்கவென்றுகடாட்சமுடனருள்வளஞ் சொல்வார்பாரே.

சொன்னதொரு விதிமுறைகளனைத்துங்கூறி சுத்தமுடன் ஞா னோபதேசமோதி, நன்னயமாய் வையகத்தில்வாழ்கவென்று நாதாந் தக்கண்மணியி னருளைபெற்று, என்னுளுஞ் சித்தருக்கு முத்தனுக யெழிலாக யிருக்கவென்றுவாசீர்மித்து, பன்னவேபரப்பிரமம் சோதி தன்னை பகட்டுவார்யுந்தமக்குப் பண்பாய்த்தானே. 176

போகர் யானைமலைகண்டது.

தானுனபின்னமொரு மார்க்கங்கேளு தகமையுள்ளபுலிப்பாணி மைந்தாசொல்வேன், தேனுனதென்மதுரை வடமேற்கப்பா தெளி வானயானமலை யென்றொன்றுண்டு, கோனுனயெனதையர் காலாங்கி நாதர் கொற்றவனு ரெந்தனுக்குச் சொன்னமார்க்கம், பானுனகுரு சொன்னமொழிப்படிக்கிப்பாலகனே குளிகையதுகொண்டேன்பாரே

கொண்டேனே குளிகையதுயானுங்கொண்டு கூரானயானைமலை க்காண்பதற்கு, அண்டமுடனுகாயம் தன்பறந்து அழகானயானை மலைமீதிற்சென்றேன், கண்டேனேவுச்சிதனில் மண்டபந்தான் கா லானகாலமதுமூன்றுயோகம், உண்டானசித்தரப்பா யங்கேயுண்டு வுத்தமனே கல்லடியாஞ்சித்தாராமே. 178

கல்லானசித்தரப்பா பனேகமாண்பர்காசியினிலிருந்துவந்து மா லை மேற்சென்றோம், வல்லானயானைமலையுச்சிதன்னில் வளமுடனே

ஆயக்கால்மண்டபத்தில், கொல்லரெனுஞ்சீஷர்களா மாயிரம்பேர் கூட்டமிட்டுவந்திருக்கக் கண்டேன்யானும், வெல்லவேபோகாது சித்தர் தம்மை வேகமுடன்தான் சபிப்பாரு றுதியாமே 179

உறுதியாமோனநிலை கொண்டசித்து மூதுலகில்பார்த்தவர்களாருமில்லை, மருமமாம்வதீதமுதல் மகிமைகோடி வண்மையுள்ள சித்தர்களுமங்கேயுண்டு, நறுமணங்கள் கொண்டதொருசித்துதமை நவிலவேமுடியாது மலைமேலப்பா, குறுமுனியாமகஸ்த்தியர்க்கு நேரதான கொற்றவர்களங்கிருக்கக் கண்டேன்தானே. 180

தும்புருமகாரிஷியாசிரமம்.

தானான ஆயக்கால்மண்டபத்தில் தமமையுள்ளகல்லடியாஞ் சித்தரப்பா, கோனானமண்டபத்தில் சமாதியுண்டு கோமானாம் தும்புரிஷிபார்தாமும், பானனபளிங்குமா மண்டபந்தான் பாங்கானமலைமீதில் யிருக்கும்பாரு, தேனனரிடிமுனிவர் சித்தர்தாமும் தேற்றமுடன்கொலுக்கூடம் காப்பார்தாமே. 181

கொலுவனமண்டபத்தில் டியேன்றானும்கொப்பெனவே குளிகைகொண்டு யிறங்கியல்லோ, வலுவானகல்லடியான் சித்தர்முன்னே வளப்பமுடன்குளிகைவிட்டு யிறங்கிநின்றேன், மெலுவானவார்த்தையதுமிகவும்பேச மேன்மையுடனென்மனதி லெண்ணங்கொண்டு, அலுவானசமாதிபக்கல், நின்றேன்யானும் அங்கெனவேகண்டாரே முனிவர்தாமே. 182

முனியானசித்தர்முனிரிஷிகள்தாமும் மூர்க்கமுடனென்மீதிற் சினமுங்கொண்டு, தொனியானவார்த்தையதுசீறலாகி தோற்றமுடனெந்தனையுஞ் சபிக்கவென்று, பணிபோன்றமலைமீதில் யிருந்துமல்லோ பாங்குடனேபுறப்பட்ட ராயிரம்பேர், கனிவுடனேயவர்களையான் கண்டபோது கால்விழுந்துசாஷ்டாங்கஞ் செய்திட்டேனே.

இட்டேனேசித்தர்முனிரிஷிகளுக்குயெழிலுடனேயடிவணங்கி தெண்டனிட்டேன், கிட்டிநின்றயெதன்மேல் கிருபைவைத்துகீர்த்தியுடன்யாரப்பா வென்றுகேட்க, திட்டமுடன்காலாங்கிநாதர்தம்மை திறமுடனே மனந்தனிலே நினைந்துகொண்டு, வட்டமுடன் குளிகைகொண்டசீஷன் யானும்வாகுடனே மலைதேடிவந்தேன்பாரே

பார்த்தேனேயானை மலைக்காணவென்று பாங்கானகுளிகைகொண்டுயிறங்கினேன்யான், தீர்த்தமுடன்காசிபதி சென்றுயானும் திகமூானகாசிலிங்க தீர்த்தங்கொண்டு, ஆசையுடன்பூசைநைவேத்தியங்கள் வன்புடனே பதாம்புயத்தை யார்ச்சிப்பேன்யான், சேர்த்துமே கரங்குவித்து வுரைத்தபோது சிறப்பானரிஷியாருமகிழ்ந்திட்டாரே.

மகிழ்ந்திட்டசித்தரென்னை யாசீர்மிக்கமகிழ்ச்சியுடனவர் பாதமஞ்சலித்தேன், நெகழ்ந்திட்டரிடியாரும் யென்னைப்பார்த்து நேர்மையுடன்மலைமீதில் வரலாமோசொல், தவிழ்ந்திடடசிறுபாலாயென்னையிப்போ தன்மையுடன் தெரிசிப்பேனென்றுரைத்து, மகிழ்ந்திடவே ஞானோபதேசஞ்சொல்லி சட்டமுடன் மலைவளத்தைச் சொன்னார்பாரே. 186

பாரப்பாகாலாங்கி நாதர்பாலா பட்சமுடன்மலைவளத்தையானுரைப்பேன், ஆரப்பாயென்னைப்போல செல்லப்போரார் வப்பனேயானுனக்கு வுறுதிசொல்வேன், சீரப்பாயெந்தனது போகநாதாசிறப்புடனே யானைமலைதீமைகேளும், நேரப்பாமலைதனிலே வதீதமெத்த நேர்மையுடன்யாம்கண்டவரை சொல்வேனே. 187

தும்புரிஷிபோகருக்கு யானைமகிமைகூறல்.

சொல்லவென்றால் நாவில்லைப்பாவுமில்லை துரைராஜ சுந்தரனே சொல்வேன்கேளும், வெல்லவேயானைமலை யடிவாரத்தில்மோன்மையுடன் சுனையொன்று குகைதானுண்டு, புல்லவேசுனையருகில் போகும்போதுபுகழான கல்லடியாள்சித்தரப்பா, மல்லர்கள் போல்நூறுபேர் கொலுவிருப்பார் மகத்தானசுனையருகே காவலுண்டே. 188

உண்டானகாவலுக்குள்ளதிசயங்கள் வுத்தமனேசொல்லவென்றால்முடியாதப்பா, திண்டானகாத்தவ ருயனப்பா திகமூானசுனையினது படிதளத்தில், சண்டமென்றவாயுதப் பாணியோடு சக்காரமும் வளைதடியுங் கைபிடித்து, துண்டரிகமானதொரு வீரியன்றான் துப்புரவாய்க்காவலது யிருப்பான்காணே. 189

காணவேகுளிகைகொண்டுசெல்லும் போதுகண்மணியேயுன்னையவர் வழிமரிப்பார், பூணவேகார்த்தவனர் வீரியன்றான் புகமூானவாயுதபாணியாக, வேண்வேயுத்தமது, செய்யவென்று விருப்பமுடன் வருவாரைக்கண்டபோது ஆணவங்கள நிகரித்துயுன்னைக்கொல்லவப்பனே வருவாரேயுண்மைதானே. 190

துப்புரிஷி போகருக்கு தந்திரமுறைத்தல்.

உண்மையாமின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் வுத்தமனே குகைக்குள்ளே செல்வதற்கு, நன்மையுடன்பிரணவமாஞ் சக்கரந் தான் நலமுடனேயான் கொடுத்தேன்யுந்தனுக்கு, கன்மையமாஞ் சக்கரத்தைக்கைபிடித்து கவனமென்ற குளிகைகொண்டு, செல்வா யானால்வண்மையுடன் யுந்தனுக் குவசியமாவார் வளமுடனே நாதாந்த சித்துதாமே. 191

சித்தானசித்துமுனி தன்னைக்கண்டுசிறப்புடனே குகைதனிலே சென்றேன்யானும், சுத்தமுடன்காத்தவரு ரெங்கனைத்தான் சூர ருடனெனைவ வதைக்கத் துணிந்தார்பாரு, பத்தியுடனவர்பக்கல் யன்றுகொண்டுபட்சமுடன் பிரணவமாஞ்சக்கரத்தை, வெத்திபெற வுச்சாடம் செய்தபோது வீரபத்திரன் கைவசமு மானார்தாமே.

போகர்பத்மாசூரனைக்கண்டது.

ஆனோரடியாருமெந்தனுக்கு வன்புடனே கைவசமு மானார் தாமும் போனேனே குகைகடந்து சென்றேன்யானும்பொங்கமுடன் வீரபத்திரன் றனைக்கடந்தேன், வானோர்கள்தான்புகழும்பத்மா சூரன் வண்மையுள்ளகுகை தனையேகண்டேன்யானும், ஞானமதே சமது கூறிக்கொண்டு கயம்படவேசமாதி தனிலிருந்திட்டாரே.

இருந்தாரே பத்சூரனையுங்கண்டேன்யெழிலான சூரனவர்பக் கல் தன்னில் பொருந்தவேதாருசாரிஷிகள்தானும் பொங்கமுடன் கொலுவிருந்தார் குகைதானுள்ளே, திருந்தமுடன்குளிகையது கொண்டுயானும் தீரமுடன்சூரனது பக்கல்சென்றேன், குளந்தமலை சோலையது குகைதானுள்ளே குருபத்மா சூரனையுங் கண்டேன் தாமே. 194

தாமானசூரனையுங் கண்டபோது தகமையுடனெந்தனையு மா ரென்றேதான், கோமான்போல் வீற்றிருக்குஞ்சூரன்றானும் கோல முடனெந்தனையுமுருட்டிப்பார்த்து, நேமமுடன் சிறுபாலாயாரென் றேதான் நேர்மையுடனிவ்விடத்தில், வந்ததென்ன பூமானேயென்று சொல்லி யென்னைகேழ்க்க பொங்கமுடனடி யேனுங்கூறினேனே.

கூறினேன்காலாங்கி நாதரையாகொற்றவனும் நற்சீஷனென்று ரைத்தேன் மாறிடவேசூரனவன் மகிழ்ந்துமல்லோமகிமையெல்லாந் தானுரைத்தாரெந்தனுக்கு, கோறிவந்தவினையங்கைகூடலாச்சே குவ லயத்திலதிசயங்கள் தாமுரைத்தார், வேறிடமாம்மலை குகைகள் யாவுஞ்சொல்லிவிருப்பமுட னெந்தனுக்கு விடைதந்தாரே. 196

தந்தாரேயின்னமொரு மார்க்கங்கேளுதகமையுள்ள புலிப் பாணிமைந்தா சொல்வேன், அந்தமுள்ளவகஸ்தியர்க்குவுகந்தசீஷன் அறிவுள்ளகண்மணியாம்தேறைதானும், சொந்தமுடன்வெகுகாலம் அகஸ்தியர்தானும்தோற்றமுடனற் சீஷனென்றுசொல்லி, விந்தை யுள்ளவசதியங்கள் வையகத்தில் விருப்பமுடன் கண்டவரை சொன் னார்பாரே. 197

பாரேதான்கண்டவரை மார்க்கமெல்லாம்பாங்குடனே தாமு ரைத்தார் தேறையர்க்கு, நேரேதான்சங்கத்தார்கூட்டமப்பாநேரான சித்தர் முனிரிஷி வர்க்கத்தில் சீரேதான்சமால்தனிமூனியார் சீஷன் சிறப்பானதிரணக்கிய முனிவருக்கு, நீரேதான்மூளைதனில் தலை நோக்காடு நேர்மையுடன்வந்துமல்லோ வருத்தலாச்சே. 198

வருத்தமுடன்மூளைதனில் பத்தின்றவாகர்ன தலைநோக்கை யென்ன சொல்வோம், பொருத்தமுடன் நோய்களிலே வருந்தியல் லோபொலிவான துன்பமதுமேலதாகி, திருத்தமுடன்நோயதனைத் தீர்ப்பதற்கு திறமான வகஸ்தியரை அழைக்கச்சொல்ல, அருத்த மதுதானறிந்ததாகும்பயோனி அறிந்தாரே ஞான மென்றதிருஷ்டி யாலே. 199

சங்கப்புலவருக்கு அகஸ்தியர் பண்டிதஞ்செய்தது.

ஆமேதான்வகஸ்தியரு முன்னேசெல்லவன் பானதேறையர் பின்னேசெல்ல, தாமேதான் அகஸ்தியனார் வுத்தாரந்தான் தகமை யுள்ள மருந்துவகைஆயுதங்கள், போமேதான்தேறைய முனிவர்தா மும் பொங்கமுடன் அடப்பமது கொண்டுயேந்தி, நாமேதான் சொன்னபடியகஸ்தியனார் பின்வன்பாகவழி நடந்தார்தேறையாமே.

தேறையென்றமுனியான சித்தர்தாமும் தெளிமையுடனவகஸ் தியனார் வுடன்சென்றேபின், பாரையென்றமலைமீதில் தானிருக்கும் பான்மையுள்ள சங்கத்தர் கூட்டந்தன்னில், ஆறையாஞ்சமுகமது முன்னேநின்று வகஸ்தியரும் சீஷனுடன்ப்பாயிருக்க, கூறையென்ற சங்கத்துபுலவரெல்லாம் சூட்சமுடனகஸ்தியர்க்கு வுரைத்திட்டா ரே. 201

இட்டாரேசங்கத்துப்புலவ ரெல்லாம்யெழிலான திரணக்கிய முனிவர் நோயை, சட்டமுடன்தசவருடகாலமையா தலைவலியும் சன்னி முதலதிகமுண்டு, தொட்டதொருபண்டி தங்கள்மெத்த வுண்டு துரைராஜசுந்தரர்க்கு லக்கோயில்லை, திட்டமுடன் தங்களது பண்டிதங்கள் திறமுடனேசெய்வதற்கு வறிந்திட்டாரே. 202

அகஸ்தியர் ஞானதிருஷ்டியினால் சிரசில் தேரையிருக்குதென்று கூறல்.

வருந்தவேயகஸ்தியர் முனிவர்தாமும் வல்லமையால பண்டி தங்கள் மிகவுரைப்பார், பொருந்தியே தேரையது மூளைதன்னை பொலிவான நாசிவழி தன்னிற்சென்று, வருந்தியே மூளைதன்னைப் பற்றியல்லோ வாகுடனே தேரையதுபொருந்திநிற்க,மருந்தியசிவன் றல்லோ மனதிலுன்னி மகத்தான வசுத்திபரும் கவனித்தாரே.

கவனிக்கும் வேளையிலே கத்திகொண்டுகருத்துடனே மூளை தனைக்கீறிப்பார்க்க, மவுனமென் றமூளைதனில் தேரைதானும்மார்க்க முடன் கவ்வியல்லோ கொண்டுநிற்க, புவனமென்றகுறடாவில் லெ டுக்கப் போனார்புகழான தேரையர் முனிவர்தானும், கவனமென்ற பாணியினால் எடுக்கதந்திரம் சாற்றினாற்தேரையர் சாற்றினாரே.

அகத்தியர்க்குத்தேரையர் தந்திரஞ் சொன்னதினால்

தேரையனென்றுபேர்பெற்றது.

சாற்றவே மண்பாண்டம் தன்னில்தானும் தண்மையுள்ளசல மதனை நிறையவிட்டு, ஆற்றலுடன் தேரைமுன்னெதிரேகாட்ட அங்ஙனவே மூளைவிட்டுகுதிக்கலாச்சே, நாற்றிசையும் மேவுபுகழ் அகஸ்தியனார்தாமும் நலலறிவ கண்டுமல்லோ மனதுவந்து, போற்றி யே யென்சிஷா போன்னரங்கா பொலிவான தெள்ளமூர்த தங்க மாமே. 205

சிங்கமாம்சித்தர்முனிமெச்சும்பாலா சிவயோகாவருள் பாலா தேகாமோகாதுங்கமே மெய்ப்பொருளே ஞானதீபாசுடர்மணியே கதிரொளியேசூட்சபாதர், தங்கமே சடாட்சரத்தின் மோனவானே தபாபரமேதயாநிதியே சாருந்தீபா, புங்கிசித்தியெட்டுரிய போக வானே புகழான மகமேரேயென்றார்தாமே. 206

என்றூரேவகஸ்தியரும் மெச்சியல்லோ யெழிலானதேரைய முனிவருக்கு நன்றான பொருளெல்லாம் மிகவுரைத்து நலம்பெற வேஞானஞ்செய்தா ரங்கே, குன்றானமலைதனிலே யிருச்குமூலி குவலயத்திலிலந்தவுரையெழுப்பு மூலி, வென்றிடவே மூலிதனைத் தேரையருக்கு விருப்பமுடன் ஞானஞ்செய்தார்பாரே. 207

பாரேதான்பொன்மூலி யுளவுஞ்சொல்லி பகங்கானபொன் விளையும் நாடுஞ்சொல்லி, நேரேதான்கருவிகாணுதி யெல்லாம் நேர் மையுடன் தேரையர் முனிவர்தானு, சீரேதான் கற்றறிந்துக் கொண்ட பின்பு சிறப்புடனே யிறுமாப்புயதிகமாகி, வேரேதான்

அகஸ்தியரை விட்டு நீங்கி விருப்பமுடன், மலைவளத்தைச் சென்றார் தானே. 208

தேரையர் வாரணவாசிமலையிற்சென்றது.

தானானவாரணமாம் மலையைக்கண்டு தண்மையுடன் தேரைய முனிவர்தாமும், கோனானவகத்தியரைவிட்டுநீங்கி குருமொழியைத் தான்கடந்தசித்துதாமும், தேனானவித்தையெல்லாமறிந்துகொண்டு, தேற்கமுடன் லோகமெல்லாஞ்சித்து செய்ய, மானானகாசி யென்ற மலைவாரத்தில் மார்க்கமுடன் தான் சென்றார் முனிவர்தாமே.

தேரையர் சீஷருக்குபதேசித்தல்.

முனியானதேரைய சித்துதாமும் மூர்க்கமுடன்தனக்கிசைந்த சீஷர் தம்மை, தனியாக ஞானோபதேசஞ்செய்துமல்லோ தகமையுடன் மூலியெல்லாங், காண்பித்தாராங், கனியானதேரையமுனிவர்தாமும் நலமானபொன்விளையும் மூலியெல்லாம், பனியானமலைமேலே பூசியேதான் பழுக்கவேதுருத்திகொண்டு ஊதினாரே. 210

ஊதவேமலையெல்லாம் தங்கமாச்சு வுத்தமனே வதிலிருந்தகவசிமார்கள் மாதவங்கள் செய்கின்ற ரிஷிகள்தாமும் மகத்தானவைடவாக்கினியனல்கொள்ளாமல், காதவங்கள் மிகவாகிரிஷியார்தாமும் கைலங்கிரிமலைதானும் விடங்கொள்ளாமல், பாதவத்தில் மிகுந்ததொருவகத்தியர்முன்னே பொங்கமுடன்முறைய முதுசெய்திட்டாரே.

முறையானசித்துமுனி ரிஷிகள்தாமும் மூர்க்கமுடனோடிவந்து அகஸ்தியனார்முன்னே, சிறைமீண்டசிததனும் தேரைதானும்தேற்றமுடன்மலையடி வாரந்தனில், திறையானதீமூட்டி துருத்திகொண்டு திறமுடனே மலைதனை யேதீயால்தாக்க, குறையான் சித்தாமுனிரிஷிகள் தாமும் குடியிருக்கயெங்களுக்கு யிடமில்லைதாமே. 212

தாமானதேரைமுனி சித்துதம்மால் தரணியெல்லால்சித்துமயமாகிப்போகும், சாமானமலைகளெல்லாந்தங்கமானால்தாரணியிலொருவருக்கோர்மதிப்போருண்டோ, மோமான்கள் குருவேது சீஷரேது குவலயத்திலொருவருந்தான் யில்லைகண்டீர், நாமானவாகவல்லோ கூறிவிட்டோம்நாதாந்த சித்தொளி வைக்காப்பீர்தாமே. 213

காக்கவென்றுசொல்லியல்லோ கரங்குவித்துகைலாசவகத்தியற்குயிதவுகூறி, ஆக்குவதுஅழிப்பதுவுமும்மாலாகும் வப்பனேகடாட்

சமதுசெய்யவென்ன நோக்கமது கொண்டுமல்லோ அகஸ்த்தியர்தா மும் நொடிக்குள்ளேசினமதுவு மதிகமாகி, தூக்கியே தேரையபிக்த்து தம்மை துப்புறவாய்க்கிழித்தெரிந்துபோட்டிட்டாரே. 214

போட்டாரேயகஸ்தியனார்சித்துதம்மைபொங்கமுடன்தம்பதிக் குப்போனரைப்பா, நீட்டமுடன் அகஸ்தியரும்போனபின்பு நேரான தேரையசிஷரங்கே கூட்டமுடன்வந்திருந்து மூலிதன்னால்கொப்பெ னவே யெழுப்பிவிட்டார்சித்து தம்மை, வாட்டமுடன்மறுபடியுஞ் சித்துதாமும் வளமையுடன் முன்போல யூதினாரே. 215

ஊதினார்தேரையமுனிவர்தாமும் ஓகோகோநாதாக்கள் பின்னு மல்லோ, சாதிகெட்டபையலவன்பின்னும்வந்து சட்டமுடன்துருத் திகொண்டு ஊதுகிறார்பார். பாதிமதிசடையணிந்ததம்பிரான்போல் பட்சமுடன்தாமுரைப்பார் அகஸ்தியாதாமும் நீதிமுறையில்லையோ தான் சித்தருக்குநிஷ்டூரந்த னதிகம் வுரைத்தார்பாரே. 216

அகஸ்தியர்தேறையரை சமாதானப்படுத்தல்.

பாரேதான்சித்தர்களுமுறைக்கும்போது பான்மையுடனகத்தி யனார்சித்துதாமும், சீரேதான்தேரையமுனிவர்தம்மை சிறப்புடனே செய்வதற்குநீதியுண்டோ, நேரேதான்முக்காலில்கண்டுமேதான் நேர் மையுடன் தனலதனைநிறுத்தவென்று, கூறேதான் விண்ணப்பம் மொழியனைத்தும் குறிப்புடனே கேட்டாரே முனிவர்தாமே. 217

முனியானவகஸ்தியனார் முனிவர்தாமும் முறையோடுங்குறை யோடும் கேட்டசிஷன், தனியானதேரைய சித்துதாமும் தகமை யுடன் சமாதிக்குப் போகுமார்க்கம், பணியானநற்மதாமலையின்மீது பான்மையுடன்தேறையமுனிவர்தானும், தனியானசமாதிக்கு யேக வென்றுநாட்டமுடன்தேறையர்வெளிப்பட்டாரே. 218

பட்டாரேதேறையமுனிவர்தானும் பாருலகில் சமுசாரவாழ்க் கையற்று, விட்டகுறையிருந்ததொரு நேர்மையாலே விருப்பமுடன் வுலகத்தில்வாசைவிட்டு, சட்டமுடன்சிஷர்களைத்தாமழைத்து சதா காலம் வுலுகுதனிலிருந்துமென்ன, திட்டமுடன்குருவணக்கங்கொ ண்டுமென்ன திறளானவுபமேலதமொன்றுங்காணே. 219

காணேனே வுபதேசம்வொன்றுமில்லை காசினியிலிருந்தாலும் பலனும்மில்லை, பூணவேவரைகோடிமகிமைவித்தை புகழாகக்கற்றாலு

மொன்றுமில்லை, வேணபடியிதிகாசப்புராணவேதம்வெட்கமுடனுய றுவேந்தானும், தோணவேகண்டாலுமொன்றுமில்லைபுறவாய்சமாதிக் குப்போகநன்றே. 220

நன்றானசமாதிக்குப் போறேனப்பா நலமுடனே நீங்களெல்லா மனதுவந்து, குன்றானநறமதாமலையைநாடி கொற்றவரேவருகவென் றுவிடையுந்தந்தார், வென்றிடவேதேரையசித்துதாமும் வீரமுடன் நறமதாமலையைத்தேடி, சென்றாரேமலையடிவாரந்தன்னில் சிறப்புட னேதானமர்ந்தார் முனிவர்தாமே. 221

முனியானசித்துரிஷிசொரூபர்தாமும் மூதுலகிலாசையது விட் டகன்று, பனிபோன்றநாடுவளஞ் சென்றேயேகி பாங்கானமலைவளத் தையடுத்தசித்து, சனிபிடித்தகதையைப் போல்சொரூபர்தாமும் சாங்கமுடன்மனதுமிகத்தான்தளர்ந்து, நளியானசமாதிக்குச்செல்ல வென்று நாட்டமுடன்சித்தரவர் நின்றிட்டாரே. 222

நின்றாரேசித்துமுனிசொரூபர்தானும் நிலையானசமாதியதுகுழி தான்வெட்டி, தென்றலுடன்வாயுவதுவுட்சொல்லாமல் திறமான கல்தரையுந்தானமைத்து, சன்னமதால்ஒருபக்கந்துவாரமிட்டு சட் டமுடன் சமாதிக்குயிடமுந்தேடி, பன்னவேரிஷியாரு முன்னே நின்று பாருலகில்சீஷருக்குமதிசொல்வாரே. 223

மதியானசீஷவர்க்கமெந்தன்பாலாமகத்தான லோகமதுவதிசய ங்கள், பதியானபாருலகில்சொல்லொண்ணாது பட்சமுடன்தேரைய முனிவர்தாமும், விதியானவிதிப்படியேசீஷருக்கு விருப்பமுடன்தா முரைப்பார்சித்தர்தாமும், துதியுடனேசீஷர்களும்வஞ்சலித்து தோ ற்றமுடன்யெதிராகநின்றார்பாரே. 224

பாரேதான்சீஷவர்க்கம்நிற்கும்போது பாலகனேயேன் தோழா பாக்கியவானே, நேரேதான்கல்லறைகுளிறங்குவேன்யான் நேரான கற்பாறைமேலேமூடி, கிரேதான்சமாதியதுபூண்டபோது சிறப்புட னேபால்பழமுந்தருகவென்று, நீரேதான்மண்டலங்கடந்தபின்பு நீட் சியுடனவ்வழியைமூடிப்போடே. 225

தேரையரிடம் அசரீரிவாக்கு பிறந்தது.

போடவே கற்பாறைமூடிப்பின்பு பொங்கமுடன்சமாதியுடன் நிற்கவேண்டும், நீடவேநான்வருகுங்காலந்தன்னில் நிலையானபாறை தனிலெழுத்துதோன்றும், கூடவேவாண்டுவது பத்துக்குள்ளே கொப்பனமேயான் வருகுங்காலம்தன்னில், சாடவேநற்மதாமலை தானப்பா சட்டமுடன் தங்கநிறமாகும்பாரே. 226

தங்கமாமதிலிருக்குஞ் சித்தரெல்லாம் சட்டமுடன்மலையை விட்டுக்கீழிறங்கி, அங்கமுடனஞ்சலிகள்மிகவுஞ்செய்து வன்புடனேசமாதியிடம்வந்துநிற்பார், புங்கசித்தியெட்டுமாது பூண்டுகொண்டு புகழானயோகமென்றஞானங்கொண்டு, சங்கமென்றஞானோபதேசத் தோடும் சார்புடனேசமாதியிடம்நிற்பார்பாரே. 227

பார்க்கவென்றாலின்னம்வெகுவதிசயங்கள் பாருலகில்தானடக் கும்மகிமை சொல்வேன், தீர்க்கமுடன்வடகோடியாருதானும் திக ழுடனேதென்றிசையிருந்துமல்லோ, மூர்க்கமுடன்வடகோடிகான கத்தில் முத்தமுடன் கான்பாயு மென்றுசொன்னார், எர்க்கவேகா ணுறுகதிகளெல்லாம்யெழிலுடனேயிப்படியே நடக்குந்தானே. 228

தானானசித்துமுனிரிஷிகளெல்லாம் தன்மையுடன்சமாதியுட பக்கல்வந்து, கோனானயெனதையர் அகஸ்தியர்தம்மை கொற்றவ னார்குருபதத்தைதாம் நினைந்து, தேனானசித்தர் முனிவருவதற்கோ தேசமெல்லாங்கண்டு மனங்களிப்ப தெப்போ, பானானசமாதியது பாரைதானும் பாருலகில்வெடிப்பதெப்போவென்றிட்டாரே. 229

இட்டதொருகாலமது சென்றபின் புயெழிலானசித்துவரும் நாளுமாச்சு, சட்டமுடன் மலைகளெல்லாந்தங்கமாச்சு சார்பானபா றையின்மேல்எழுத்துண்டாச்சு, குஷ்டமுடன்நோயுள்ளபிணிபோ ரெல்லாங் குறைநோயுந்தீர்ந்துமல்லோகுசலமானார். திட்டமுடன் சீஷவர்க்கமானோரெல்லாஞ் சிறப்புடனே சமாதியிடம்யிருந்தார் பாரே. 230

தேறையர் சமாதிவிட்டு வந்தது.

இருந்தாரேதசமாண்டுபத்துமாச்சு யொழிலானசித்து வருங் காலமாச்சு பொருந்தவேசமாதியதுவெடித்துமல்லோபொங்கமுடன் தேறையகித்துதாமும், அருந்தவமுந்தான்தீர்ந்துவவனிமேலே வன் புடனேவெளியானார் சித்தர்தாமும், வருந்தியேசீஷரென்ற மாண்ப ரெல்லாம் வண்மையுடனவர்பாதம்தொழுதிட்டாரோ. 231

தொழுதாரே தேறைய சித்துதம்மை தொல்லுலகை விட்ட தொரு மாண்பரெல்லாம், பழுதுபடத்திரு மேனிக்காயந்தன்னை பண்புடனே தான் களித்துவஞ்சலித்து, அழுதுமேயவர்பாதம் பின்

வணங்கி ஐயனே நாதாந்தசித்துரூபே, வழுவாது பொய்யுரையாக் காவலோனே வணங்கியே நமஸ்கரித்துப்பணிந்திட்டாரே. 232

பணிந்திட்டாமாண்பரெல்லாம் முகம்மலர்ந்து பரமவொளிநா தாந்தசித்துரூபே, கணிந்திட்டவசரீரிவாக்குபோலே கர்த்தனேவர்ப் புதங்கள் முடிந்ததாச்சு, துணிந்திடவேவாக்கதுவும் பொய்யென் றில்லை துப்புறவாய்வையகத்தில் மெய்யேயாச்சு, தணிந்திடவேசீஷ வர்க்கம் மனதுவந்து சட்டமுடனுகூமஞ்செய்வீர்தாமே 233

தேறையா மறுபடியுஞ் சமாசிக்குப்போய்

இருபதாண்டுபோனால் வருவேனென்று சீஷர்களுக்குவுரைப்பதும்

சொற்பனங்கூறுவதும்.

தாமானயின்னமொரு மார்க்கங்கேளும் தகமையுள்ளசீஷவர்க்க மானபாரே, கோமானமெனதையர் அகஸ்தியனார்தம்மை கொற்ற வனார்தமமை விட்டுயான்பிரிந்து சாமானமுள்ளதொருநூனபேதே சம் சட்டமுடன்யானறிந்து பிரிந்துவிட்டேன், நாமானமாகவல் லோசமாதிகொண்டு நாயகனேபத்தாண்டு யிருந்திட்டேனே. 234

இருந்தேனே பின்னும்வந்துயானுங்கண்டேன் யெழிலான சீஷவர்க்கமென்னசொல்வேன் பொருந்தவேசொற்பனமும் யானுங் கண்டேன் பொங்கமுடன்மருபடியுஞ்சமாதிக்கேக, வருந்தியேபரா பரத்தின்செயலினாலே, வண்மையுள்ள சொற்பனமும் மெய்யோயா னும் திருந்தியேயான்கண்ட சொற்பனத்தில் திறமாகநடப்பதுவும் வுண்மையாமே. 235

உண்மையாம்சொற்பனமும் கண்டேனப்பா ஓசோகோநாதாக் களுந்தசிஷர், வண்மையாம்சமாதிக்குப்போனப்போலும் வடப்புட னேயிருபதுவாணடிரும்பவென்றும், கண்மையாம்மனோன்மணியாள் கடாட்சத்தாலோ கண்டேனே சொற்பனங்களுண்மையாக, திண் மையாஞ்சமாதிக்குப்போனற்போலும் திறமானவதிசயங்கள் பார்த் திட்டேனே. 236

பார்த்தேனேசமாதிக்குச் செல்லும்போது பாங்கானவெகுகா ஞ்சென்றசித்து, நேர்த்தியுடன் பூமிதனிற்சமாதியூண சேர்மை யுடன் சிஷர்களுமொன்றுய்க்கூட்டி, பூர்த்தியுடன் குவிதோண்ட போனபோதுபுகழான சித்தொருவகருந்தாப்போலும், பா த்திட வேபிரகாசமானஜோதி மகத்தானசித்தொருவர்கண்டேன்தானே.

தானனசொற்பனங்கள் கண்டேனப்பா தண்மையுள்ள சிஷர் களே யென்னசொல்வேன, கோனனையெனதையர் அகஸ்தியர்போல்

தொற்றவனுர்சித்தொருவர் கண்டெனங்கே, தேனுட்மனேன் பணி யாள் கடாட்சத்தாலே, தெளிவுடனே கண்விழித்துப் பார்க்கும் போதுமானுன சொற்பனத்தில் கண்டாப்போல மன்னவனை கண் விழிக்கிலொன்றுங்காணே. 238

காணேனே சொற்பனத்தில் சித்துதாமும் கைலாசநாதருட சோதிப்போதான், ஆணவேயினவதுதான் கினவுமாச்சோ பொங்கு முன் சொற்பனமும் மெய்யோபொய்யோ, தோணவேயெந்தனுக்கு ஒன்றுங்காணே துரைராஜசுந்தரனே மகிமையேதோ, மாணவேமறு படியுஞ்சித்துதாமும் மகத்தானசமாதிக்கு யேகினரே. 239

தேறையர் சமாதிககுயேகுதல்.

ஏகினர் சீஷவர்க்க மனேகம்பேர்கள் பெழிலான கூட்டமுடன் யேகியல்லோ, சாகமுடன்நற்மதாமலைக்குமேற்கே சட்டமுடன்சமா திக்குச்சென்றுமல்லோ, வேகமுடன்சமாதியது தோண்டும்போது மேன்மையுள்ள சித்தொருவாங்கிருந்தார், போகமுடன் சித்தொரு வர் தன்னைக்கண்டார் யொளியானபிரகாசந் தோன்றலாச்சே. 240

ஆச்சப்பாபுலிப்பாணியின்னங்கேளுவப்பனேதேறையர்சென்ற போது, மூச்சடங்கி வெகுகாலஞ்சென்றசித்து மூதுலகைக்கடந்த தொருசித்துமாச்சு, மாச்சலுடன் பூமிதனிலோராள்மட்டம் மண்ண தனைவாரியல்லோ கண்டபோது, பாச்சலுடன்பூமிதனில் நிலங்களெ ல்லாம் பாதாளநீர்மட்டும் வுருகலாச்சே. 241

உருகவேநீர்மட்டம்நிலங்களெல்லா ஆடுருகத்தான் பாய்ந்துவே ர்கள்போல, பெருகவேசடைமுடியுந் தம்பிரான்போல்போரானசமா திதனி லிருந்தார்தாமும், வருகலுடன்கண்மூடி சித்துதாமும் வண் மையுடன் சமாதிதனி லிருக்கக்கண்டார், சருகலுடன் ரிஷியாரும் பூமிதன்னில் சட்டமுடன் தானிருக்கக் கண்டார்பாரே. 242

பாரேதான்தேறைய முனிவர்தாமும் பண்மையுடன் சமாதி தனிலிருந்துகொண்டு, தீரமுடன்தேரையமுனிவர்தம்மை திறமுட னேயாரென்றுகேட்கும்போது, சேரேதான் சித்துமுனிரிஷியைப் பார்த்து சிறப்புடனே தாமுரைப்பார் முனிவர்தாமும், நேரேதான் அகஸ்தியனுர்சீஷனென்ருர் நேர்மையுடன் தேறையமுனிவர்தானே.

தானுனமேறைய முனிவர்தானும் தகமையுடன் ரிஷிபார்க்குவி டையுஞ்சொன்னுர், கோனுனகும்பமுனி கடாட்சத்தாலே குவலயத்

தில் வெகுகோடிமகிமைதன்னை, தேனன மனோன்மணியா ளருளினாலே தேசமதி லதிதமிகக்கண்டேன் யானும், மோனனதேரையமுனிவர்தானும் மோதவேயடிபணிந்து துதித்திட்டாரே. 244

துதித்தாரே தேரையர் முனிவர்தானும் துப்புறவாய் யடிவணங்கிதெண்டனிட்டு, கதிப்புடனேகாயகற்பங்கொண்டுயானுங் காசினியில்வெகுகோடிகாலந்தானும், மதிப்புடனேசமாதிமுகஞ் சென்றுயானும் மகதேவர் தசவருஷம் யிருந்தேன்யானும், விதிப்பயன மமைப்பின்படிபின்னுமல்லோ வேதாந்ததாயினது வருள்பெற்றேனே. ()

பெற்றேனேமறுபடியுஞ் சமாதியேக பெருமையுடன் யிருபதுவாண்டுமட்டும், கற்பறிந்தேன் ஞானோபதேசங்கேட்டு காதினியிலாசையற்றுசமாதிபூண, சிற்றறிவுவுடையதொரு பாலன்யானும் சீராகசமாதிக்குப்பாத்திரனாவாய், குற்றமில்லாவரைகடந்து யடியேன்யானும் குருபதத்தைநாடியல்லோவந்திட்டேனே. 246

தேரையரிஷியாருங்கு வாலாறுகூறல்.

வந்தேனேசீனவர்ங்கந் தன்னோடொக்க வகையானநற்மதாமலைைத்தேடி, அந்தமுடன்சமாதிக்குயிடமுங்கண்டார் வன்பான சீஷவர்க்கமானபேர்கள், சொந்தமதாய்க்குழிதோண்டுஞ் சமாதிதன்னைகந்தாரே தாயிருக்கக்கண்டேன்யானும், முந்தவேயான்கண்டசொற்பனம்போல் முடிந்துதே விட்டகுறைவாய்க்கலாச்சே. 247

ஆச்சென்றுதேரைய சித்துதாமும் வன்பாக ரிஷியார்க்குத்தாமுரைக்க, மூச்சடங்கி சிலகாலமெந்தன்பக்கல் முடிவானவாண்டுவருமுடிவுமட்டும், வீச்சுடனேசமாதியது யிருக்கவென்று விருப்பமுடன் ரிஷியாரும் வாக்களித்தார், பாச்சலென்ற சுவாசமதுதானடக்கி பட்சமுடன் தானிருக்கவரந்தாரே. 248

வரமுடனே தான்கொடுத்து ரிஷியார்தாமும் வண்மையுடனசீர்மஞ்சொன்னாரங்கே, சரமுடையவார்த்தையென்ற மொழிக்கித்தானும் தப்பாமல் சமாதிக்குட்சென்றாரங்கே, திறமுடைய தேரையர் சித்துதாமும் தீர்க்கமுடன் சீஷருக்கு வோதலுற்றார், குறமுடைய ரிஷியாருஞ் சீஷருக்குகூறுவார் அதிசயங்கள்மிகவாய்த்தானே

தானேதான்சமாதியதுபூண்டபோது தகமையுள்ளவசரீரிவாக்குண்டாம், மானேதான்சீடவர்க்கம் மாண்பாகேள மகிழ்ச்சியுடன் சமாதிதனிலிருக்கும்போது, தேனேதான் சிவயோகநிலையினின்று

தேற்றமுடன் மேதினியில்வருவதற்கு, மானேதான்வதிசயங்கள்மிக நடக்கும் மகத்தானசமாதியிடம்பக்கல்நில்லே. 250

தேறையர்சீடருக்கு சொற்பனஞ்சாதித்தல்.

நிற்கையிலேமனோன்மணியாள்கிருபையாலே நீடானவசரீரிகேட்கும்பாரு, அற்பமென்றுநினையாதேவன்பாகேளு லயனியிலேனுன் வருகுங்காலந்தன்னில், சிற்பான்போலுந்தனக்கு சொற்பனங்கள் சீராகத்தானடக்கும் வருள்மைந்தாகேள், உற்பமுடன்சொற்பனத்தில்நான்வந்தாற்போல் வுத்தமனேவதிசயங்கள்நடக்குந்தானே. 251

தானனலோகமதுயிருண்டுபோகும் தாக்கானகடலதுதான்பொங்கும்பாரு, மோனனநாதாக்களிறந்தபேர்கள் மோனமென்றசமாதியதுவொளிக்கும்பாரு, தேனனமனோன்மணியாள் கடாட்சத்தாலே தெளிவாகக் கண்ணின்முன்நிற்பார்பாரு, பானனநாலுயுகவதிசயங்கள் பட்சமுடன்தாமுறைப்பார்சித்தர்தாமே. 252

சித்தானதேறையர்முனிவாதானும் சிறப்புடனேகூறனுற்றாரிந்தவண்ணம், பத்தானரிஷிசாருஞ்சமாதிவிட்டு பட்சமுடன்தானடக்கவழியுஞ்சொல்வார், முத்தானதேகமதையுலகிற்காண முனியானதேறையர்சமாதிதானும், புத்தானபாறையதுதான்வெடித்து புகழாகச்சமாதிவிட்டு வெளிவந்தாரே. 253

தேதையர்சமாதிவிட்டுவந்து சீடர்களுக்குக்கூறல்.

வெளியாகசித்துமுனிவந்தபோது வெற்றிபெறசீடருக்குத்தாமுரைப்பார், தெளிவானசாஸ்திரங்கள் கற்றுமென்ன தேகாதிகாயகற்பங்கொண்டுமென்ன, பளியானதேகமதைவையகத்தில் பட்சமுடன் காப்பாற்றிநிறுத்தியென்ன, குளியானசமாதியிடஞ் சென்றுமென்ன குவலயத்திலிருந்தாலும் மொன்றுங்காணே. 254

காணேனேபஞ்சபூதத்திறைசை கடிதானதேகமது நிலைநில்லாது, பூணவேவரைகோடியிருந்துமென்ன பூவுலகில்சடலமதுவழிந்துபோகும், தோணவேயில்லாவேபிடுகாடாகுந் துப்புறவாய்ச்சொந்தநகர்புறங்காடாகும், மாணவேவைகத்திறைசையெல்லாம் மறப்பதுவேவண்மையுள்ளவதிதமாமே. 255

அதிதமாங்காயமதுநிலைநில்லாது வலனியிலேயிருந்தவர்களாருமில்லை, பதிதமாம்லோகத்தின்வாழ்க்கையெல்லாம் பாங்கானபொய்வாழ்வுமெய்யேயல்லதுதிதமுடன் லோகமத்தில்யிருந்தோரில்லைதுப்

புறவாய்ச்சடலமதுவழியும்பாரு, நதிதமுடன் தேறையமுனிவர்தா
னும் நயமுடனேகாமுரைத்தார்வுண்மையாரே. 256

போகர்புலிப்பாணிக்குச்சொல்வது.

பாரப்பா புலிப்பாணிமைந்தாகேளுபகருகிறேன் தேறையசித்து
தம்மை, ஆரப்பாவுலகுதனில்தேறைபோலும் வப்பனேவதிசயங்கள்
மகிமைகொண்டோர், நேரப்பாவுலகுதனிலிருந்தசித்து நேர்மையுட
ன்கண்டவரிலிவர்பாலுண்டோ, தீரப்பாகாயாதிக்கொண்டசித்துதிற
முடையதங்கமென்றசித்துவாமே. 257

தங்கமாஞ்சித்தர்களிலிவர்க்கிடுண்டோ தாரணியில்காயாதிகொ
ண்டசித்து, புங்கமாஞ்சித்திவெட்டுகொண்டசித்து புகழான்மூலிவ
கையறிந்தசித்து, துங்கமாமாணடவரைசெழுப்புஞ்சித்து துரைகோ
டிவரைகோடியறிந்தசித்து, சிங்கமாம்பதிணென் பேர்சித்துதன்னில்
சீடரூமகஸ்தியர்க்குவுக்கத்சித்தே. 258

சித்தானதேறையர் முனிவர்தாமுஞ்சீரானவுலகு தனிலிருந்தா
ரேதான், முத்தானதேகமதைமறந்தாரேதான் மூதுலகவாசைதனே
விட்டார்பாரு, பத்தானபரமரிஷியெவாரனுலும்பாருலகிலிருந்தவர்
களாருமில்லை, சுத்தமுடன்சைதன்னியவாசைவிட்டு சுகமுடனே தவ
நிலையிலிருக்கநன்றே. 259

நன்றான தவநிலையிலிருந்துகொண்டு நாதாக்களென்றல்லோபெ
யருங்கொண்டு, குன்றானதேகமதுகுகைகள்தேடி கூறுபிலந்தனிலொ
ளித்துமுனிவரெல்லாம், வென்றிடவேவெட்ட வெளிதன்னிற்சென்
றவிருப்பமுடன்சமாதியது பூண்டுமல்லோ, மன்றிடவேபாரினிலே
பின்னும்யேதிய பாராமரிந்துகாயமதையொமித்திட்டாரே. 260

ஒழித்தாரேசித்தரெல்லாமிந்தமார்க்கம் ஓகோகோநாதாக்களெ
ல்லாருந்தான், வழியுடனேவையகத்தைத்தான்மறந்து வல்லானவுயி
ர்தனையே போக்கடித்தார், பழியுடனேகல்லானதேகந்தன்னை பான்
மைபெறபாரினிலே யொழித்துப்போட்டார், அழியானவையகத்தி
லொருவருந்தான் வப்பனேவைகத்திலைகாணே. 261

தானானதத்துவங் ளகதிகஞ்சொல்லி தட்டழிந்துப்போகுமிந்த
காயமப்பா, கானைகுருவென்றசொன்னசித்தும் குவலயத்தைத்தா
ன்மறந்துசென்றாரப்பா, தேனானமனோன்மணியாள்வரமும் பெற்று
தேசத்திலிருந்தசித்தும் போனாரப்பா, பானானபாமருடபாதங்காண
பாருலகிலெல்லோரும்பிறந்தார்தாமே. 262

பிறந்தவருமொருகாலமிருந்ததுண்டோ பேருலகில்வாக்கியமு ம்மெய்யோபொய்யோ, இறந்தவர்களொருகாலம் புரந்ததுண்டோ பெழிலானருலகுதனில் மெய்யோபொய்யோ திரந்தரமாய்த்தேசம தில்யெவராலும் தீர்க்கமுடன்சாகாமலிருப்பேனென்று, அறமெ ன்றமெய்ப்பொருளைக் கண்டாராய்ந்து வப்பனையந்தநிலைகண்டுபோ ற்றே. 263

ரோமரிஷியாருற்பவம்.

போற்றவேயின்ன மொருகருமானங்கேள் புகழான புலிப் பாணிமைந்தாபாரு, ஏற்றவேயுதிணெண் பேர்சித்தர்தன்னில்யெழி லானரோர்மரிஷியென்னுஞ்சித்து, நாற்றிசையுமெச்சிதக்கு யோகவா னும் நலமானரோமபுரியென்னும்நாடு, மேற்புறமாம் வடகோடிகான கத்தில் மேனியில்தான்புறந்தசித்துதாமே. 264

தானனசித்தர்முனிவெகுகாலந்தான் தண்மையுடன் ரோமபுரி பதியிலப்பா, தேனனசெங்கழுனிதீர்த்தந்தன்னில்சிறப்புடனே வெ குகாலமிருந்தாரங்கே, மானனரிஷியாரும் மலைமீதிற்றான் மகத்தான வாதவித்தைசெய்வதற்கு, ஆனனபட்சியின்றன்வாதவித்தை வுத்தம னே செய்தாரே கோடியாமே 265

ரோமரிஷிகெந்தகச் செம்புவேதை.

கோடியாஞ்சாதியென்றசேவல்தானும் கொற்றவனும்ரோமரிஷி கானகத்தின், தேடியேபெருஞ்சாதிசேவல்தன்னை தெளிவுடனே கண் டல்லோவாராய்ந்தேதான், நீடியேகெந்தகமும்பலந்தான்பத்து நேர் மையுடன்பருங்குருவையரிசிநேராம், சூடியேகுழிக்கல்லில்தன்னிலி ட்டுத் துப்புறவாய்த்தானரைப்பாய்சாமம்நாலே. 266

நாலானசாமமதுமேதிப்பாலால் நலம்பெறவேதானரைப்பாய்நா லுசாமம், சீலமுடன்மரவதனைத்திரட்டியேதான் சிறப்பானசேவலு க்குஉணவுயீய, கோலமுடன்சேவலதுவுண்டபின்பு கொற்றவனே குகைக்குள்ளே யடைத்துமேதான், பாலமுர்தமுண்டபின்பு பட்சி தன்னை பான்மையுடன் தானமைத்தாரகுகையினுள்ளே. 267

உள்ளானகுகைதனிலே நாளாவட்டம் வுத்தமனே சேவலுக்கு உணவுதந்து, எள்ளவுமெச்சமதுவெளியோகாமல் யெழிலாகத் தான்சேர்த்துகாயப்போடு, தெள்ளமிர்தமானதொருகாரமிட்டுதெளி வாக மூசையிட்டுச்சீலைசெய்து, கள்ளமின்றிரவிதனிலே காயவைத்து கலங்காமல்மூசைதனை வூதிடாயே. 268

ஊதவென்றால்சரவுலையில்வைத்து ஊதுவுத்தமனைதீயாரியெடுத்துப்பாரு, நீதமுடன்மூசைதனையுடைத்துப்பார்க்க நிலைத்துதடா கெந்தியென்றசெம்புமாச்சு, தோதமுடன்செம்புதனை யெடுத்துக் கொண்டு தோராமலமறுபடியும்பொடித்துமேதான், சாதமுடன்கெந்தியதுபொடியைச்சேர்த்துசட்டமுடன்சேவலுக்குகொடுத்திடாயே.

கொடுக்கவென்றால்சேவலுக்கு முன்போற்செய்து குகைதனிலேதானெடுத்துயெச்சந்தன்னை, தடுக்காமல்மின்போலே வுருக்கித்திருசட்டமுடன்செம்பதுவுந் தங்கச்செம்பாம், வடுவானசெப்பதுவும்யெடுத்துக்கொண்டு வண்மையுள்ளமதிதனிலேபத்துக்கொன்று, நடுவானமூசைதனையுருக்கிக்கொண்டு நன்மையுடன் கொதித்திடவேமாத்தெட்டாமே. 270

ஸ்ரீராமாதங்ககாசி.

எட்டானமாற்றதுவுந்தங்கம் யெழிலான ஸ்ரீராமர்காசியப்பா, மட்டானதங்கமதுமதிப்புமெத்த மகிதலத்தில்மகிமையது மகிழப் போமோ, திட்டமுடன்கெந்தியென்றதங்கச்செம்பாம் சிவராஜயோகியவடசெய்வான்பாருசட்டமுடன் விதியாளிசெய்வானல்லால்சாங்கமுடன்மற்றவருஞ்செய்யார்தாமே. 271

செய்பாராமற்றொருவராளுலுந்தான் செம்மையுடன்கைபாகுஞ் செய்பாகந்தான், எய்யாதுகெந்திஞடசெம்புமார்க்கம் யெடுக்கவுமே பாகமதுகாணப்போமோ, மையானகெந்தியதுசெம்பேயானல் மகத்தானவேதையிதுகோடிக்கோடும், துய்யதொருமதிதானும் பழுத்த தங்கம் துப்புறவாய்ப்பின்னுமந்த மதியில்தாக்கே. 272

தாக்கவேபத்துக்குவொன்றுதங்கம்தண்மையுடன்வுருக்கிப்பார் மாற்றேயாகும், நோக்கமுடன்கெந்தியென்ற செம்புதன்னை நோன்மையுடன் ஆறுமாற்றாணிமேலே, நூக்கமுடன்பத்துக்கு வொன்று தாக்க துடியானமாற்றதுவும்பத்தேயாகும், வாக்கதும்பொய்யாதுரோமர்வேதைவண்மையுள்ள செந்தியென்றசெம்புதானே. 273

சேவல்கற்பம்.

தானான சேவலென்றமாமிசத்தைத் தகமையுடன்ரோமத்தைப் போக்கிநன்றாய், தேனானகுடல் போக்கியெலும்புபோக்கி தெளிவற வேவறுசுவையாந்தன்னோடொக்க, பானகபதமேத்தி சமைத்து மல் லோபாங்குபெற மாமிஷத்தையுண்டபோதுமானனதேகமது காயகற்பம் மகத்தானசாரமது யேதலாச்சே. 274

ஏறவென்றால்மண்டலந்தான் யிப்படியேகொண்டால் யெழிலானதேகமதுகற்றாகும், சீரலென்றசுவாசமதுகீழ்நோக்காகுஞ்சிறப்பானதேககதுகாந்திவீசும், பீக்கலென்றசுரோணிதந்தான் கட்டிப்போகும் பேரானகாதுவிர்த்தியதிகமாகும், கூறவேமுடியாதுசேவல்கற்பம குவலயத்தில்ரோமரிஷி மார்க்கர்தானே. 275

மயில்கற்பம்.

மார்க்கமாமின்னமொருவயணஞ் சொல்வேன் மகத்தானரோமரிஷிமகிமைபாரு, தீர்க்கமுடன்கந்தாதுவாகனந்தான் திறமானபுள்ளிமயிற்பட்சியாகும், சேர்க்கவேகெந்தியதுதாளந்தானும் சிறப்பானசூதமதுதன்னோடொக்க, ஏர்க்கவேசாரக்கதுவுஞ்சமனதாக யெழிலானகந்குருவையரிசிகூட்டே. 276

கூட்டவே சரக்குக்குரெட்டியப்பா கொற்றவனேயரிசியதுரெண்டதாகும், நீட்டவேமூன்றையுந்தானொன்றாய்க்கூட்டி நீதியுடன்குழிக்கல்லில்பொடியதாக்கி, தாட்டிகமாய்ச் சலமதனிற்பிசைந்துகொண்டு சட்டமுடனமயிலுக்குத் தாக்கிபாரு, வட்டமுடன்மண்டலமுந்தாக்கியேதான் மகத்தானவயச்சமதையொன்றாய்ச்சேரே. 277

சேர்க்கவேரோமமது வுதிர்ந்துபோகும் செம்மையுடன்மயிலதுவுங்காரமேறி, தீர்க்கமுடன்காயாதிகற்பமாகி திரமானமயிலினதுரோமம்போகும், ஏற்கவேஆறுண்டுசென்றபின்பு யெழிலானரோமமதுவிளையும்பாரு, மூர்க்கமென்றமயிலுக்கு ரோமமாகி முன்போலேவாலுக்குயேதுவாமே. 278

ஏதுவாங்காரர் மேகந்தன்னைக்கண்டு யெழிலாகமயிலாடிவுறவுசெய்யும், சாதுடனேமயில்தனைப்பிடித்துவந்து சட்டமுடன்ரோமரிஷிமுனியார்தாமும், தீக்கற்றிமாமிஷத்தையெடுத்துக்கொண்டு திறமுடனேவறுசுவையாந்தன்னோடொக்க, முதுறவேவகைபாகஞ்செய்துகொண்டு மூப்பகலமண்டலந்தான்கொண்டார்பாரே. 279

பாரேதான்ருசிபாகம்அறிந்தசித்து பாருலகில்வெகுகாலமிருந்தாரப்பா, சீரேதன்மாமிஷத்தைகண்டபோது சிறப்பானரோமரிஷிமுனியார்தாமும், தீரேதான்தேகமதுகற்றாகி திரைநிறையுமற்றுமல்லோபுனிதனானார், மேரேதான்வேருவென்றசித்தனாகி மேதினியில்வெகுகாலமிருந்தார்காணே. 280

காணவேதேகமதுசட்டைதள்ளி காசினியில்வெகுகாலமிருந்த சித்து, தோணவேயுகாந்தவரைக்கண்ட சித்து கொல்லுலகிலாசைத னைத்துறந்தசித்து, பூணவேகைலங்கிரிவாழுசித்து புகழானரோமரி ஷிவேணபடி மயிற்கற்பம்கொண்டேசித்து மேதினியில்சுயரூப சித்து தானே. 281

மயில்யெச்சக்களங்குவேதை.

தானையின்னமொரு மார்க்கங்கேளு தகமையுள்ளபுலிப்பாணி மைந்தாபாரு, கோனைஎனதையர் காலாங்கிநாதர் கொற்றவனுரெங் தனுக்குச்சொன்னநீதி, மானைரோமரிஷியுண்டகற்பம் மகத்தானம யிலினதுயெச்சமப்பா, வூனைவுடல்தனிலேவந்தயெச்சம்வுத்தமனே ரோமரிஷிபாகங்கேளே. 282

கேளேதான்யெச்சமதைக்காரமிட்டுகிருபையுடன்மூசைதனில டைத்துமல்லா, தோளேதான்வாராமல்வுலையில்வைத்து தொற்றவ னேவச்சிரமாங்குகைபைத்தானும், பாளேதான்போகாமல் பதுங்க வூதி பக்குவமாய்த்தானெடுத்தார்களங்குமாச்சு, தூளேதான்களங்க மதுநாலுக்கொன்று துப்புரமாய்க்காந்தமதுசேர்த்திட்டாரே. 283

இட்டாரேதங்கமதுபத்துக்கொன்று யெழிலாகக்குழிக்கல்லில் பொடியதாக்கி, சட்டமுடன்கையாணன்சாற்றினாலே தானரைப் பாய்சாற்சாமமானபின்பு, திட்டமுடன்ரவிதனிலேகாயவைத்து திட மானகாசியென்றகுப்பிக்கேற்றி, வட்டமுடன்மரக்கல்லால்கொண்டு மூடி வண்மையுடன் சீலையதுசெய்தார்தாமே. 284

செய்தாரேகாசியென்றவகுப்பிதன்னை செம்மையுடன்தளவா யாம்பாண்டந்தன்னில், பையவேமணலதனைக்கொட்டுமைந்தா பாங் குபெறநடுமையங்குப்பிதன்னை, பெய்யவேகுப்பிமேல்மணலைக்கொட் டிபேரானமேற்பாண்டந்தன்னைமூடி, துய்யவேவாலுகையாமேந்திர த்தில் துப்புரவாய்சாற்சாமமெறித்திட்டாரே. 285

எரிக்கவேசெந்தூரமென்ன சொல்வேன்யெழிலான சாற்சாம மானபின்பு, சொரிக்கவேமணலதுவுஞ்சிவந்துமெத்த சுத்தமுடன் செந்தூரங்காந்தியாச்சி, பரியானசெந்தூரமென்னசொல்வேன்பாரு லகில் சித்தர்முனிசெய்வாரோதான், சரியான வேதையிதுரோமர் வேதைசட்டமுடன் முடித்தாரேசித்துமாமே. 286

சித்தானரோமரிஷி செந்தூரத்தைதிறமுடனேகுப்பியது திறந் துபார்க்க, சத்தானசரக்கெல்லாமொன்றாய்ச்சேர்த்துச் சங்கமுடன்

செந்தூரம்நாவோயில்லே, சுத்தமுடன் மனோன்மணியைத் துதித்து
மேதான் சுகமுடனே செந்தூர மெடுத்தார்பாரே. 287

எடுத்ததுமேசெந்தூரம் மைந்தாகேளுயெழிலான வெள்ளிசெம்
பில் பத்துகொன்று, கொடுத்துமே தானுருக்கியெடுத்துக் கொண்டு
கொற்றவனே யோட்டில்வைத்துவூதும்போது, படுத்ததொருமாற்ற
துவு மென்னசொல்வேன் பாலகனே வயததுவும்யெட்டதாகும், அடு
த்துமேதங்கமது நாலுக்கொன்றுவப்பனே புடம்போடதங்கமாச்சே.

தங்கமென்றால் சுயத்தங்கம் பிரிதிலாச்சுதாரணியில் சமுசாரிக்
கானவேதை, பங்கமது வொருக்காலும்நேராதப்பா பண்பானமாண்
பர்களுக்கானவேதை, புங்கசித்து யெட்டுவகை யடையலாகும் புக
ழானரோமரிஷிவேதைதானும், வஙசத்துக்கொருநாளும் யிடையா
தப்பா வர்னமென்ற செந்தூரவேதையாமே. 289

செந்தூரமுண்ண.

வேதையின்னமொருபோக்கு கேளுவீரன செந்தூரமென்ன
சொல்வேன், பாதையாம் நெய்தேனிற்குன்றிதானும் பாலகனேமண்
டலந்தான் கொண்டாயானால், தீதகன்றுதேகமது கற்றூணுகும் திற
மான சட்டையதுதள்ளும்பாரு, மீதலத்திலுண்டவருஞ் சித்தனுவார்
புகழான செந்தூரக்களக்குதானே. 290

தானனசெந்தூரமுண்டுமெல்லோ தன்மையுடன் சமாதிக்குப்
போகவென்று, கோனனகுருசொன்ன வாக்குதம்மை குறையாமல்
தன்மனதில்தான்நினைந்து, பானனசமாதிக்குயிடமுந்தேடி பட்ச
முடன் சீஷர்களைத்தானழைத்து, மானனடில்லிக்கு மேற்கோரப்பா
மகத்தான சமாதிக்கு யிடங்கண்டாரே. 291

ரோமரிஷி டில்லிக்கு மேற்பாகத்தில் சமாதியடைதல்.

கண்டாரே டில்லிக்கு மேற்கேயப்பா கனமான ரோமரிஷிமுனி
வர்தானும், அண்டர்முனி யறியாதவனுந்தரத்தில் அங்ஙனவே சமா
திக்குயிடமுங்கண்டு, தொண்டரெனுஞ் சீஷவர்க்கமானபேரைதுரை
ராஜசுந்தரனர் தாமழைத்து, விண்டிடவே சமாதியதுதோண்டுதற்கு
விருப்பமுடன் வுத்தாஞ்செய்தோர்பாரே. 292

பாரேதான் சீஷவர்ககமாண்பரோடு பாங்குடனே சமாதியதி
லிரங்கவென்று, நேரேதான் சீஷர்முகந்தன்னைநோக்கி நேர்மையுடன்

தாமுரைப்பார் ரிஷியார்தாமும், கூரேதான்சமாதிக்குபோறேனப்பா கொற்றவனே யிருபதுவரண்டுமட்டும், சீரேதான் வையகத்தையான் மறைந்து சிறப்புடனேயிருப்பே னென்றுரைத்தார்தாமே. 293

தரமான சமாதிக்குப்போகுமுன்னே தகமையுடன்ரிஷியாருந் தாமுரைப்பார், சமானமானதொரு சீஷர்தம்மை தண்மையுடன்பக் கலிற்றுமழைத்து, கோமானும் ராஜாதிராசர்தம்மால் கொற்றவனு யிடையூறுயெது நேர்ந்தாலும், நாமானசொற்படியே யென்னைத்தா னும் நலமான சமாதியதுதிறக்கொண்ணுதே. 294

அதிசயங்காண்பது.

ஒண்ணுது சமாதிவிட்டு வருகும்போதுவுத்தமனே சந்தனமும் மவரும்பாரு, நண்ணுதுதேவதாபுடபந்தானும் நண்மையுடன் சமாதி சுத்திப் பூர்த்திருக்கும், திண்ணமுடன் பாரிசாதபுட்பமப்பாதிகமான நாடெல்லாம் பூர்த்திருக்கு, எண்ணமுடன் சித்தாதி சித்தரெல் லாம் யெழிலான சொற்பனமுங் காண்பார்தானே. 295

தானனசொற்பனங்களதிகங்காணபார்தகமையுள்ள புலிப்பாணி மைந்தாபாரு, பானமிருகமெல்லாம் பாஷைபேசும் பட்சிகளும்பரி பாஷை மிகவுங்கூறும், தேனனமனோன்மணியாள் கடாட்சத்தாலே தேசமெல்லாம் இருள்வந்துமூடிக்கொள்ளும், பானபரிதிமதிகாண மாட்டார் பாலகனே சமாதியதுவெடிக்கும்பாரே. 296

வெடிக்குமே சமாதிதனிலசரீருண்டாம் வேகமுடன்சித்துவருங் காலமாச்சு, துடிக்கவேசீஷாதிவர்க்கமெல்லாம் துறையோடும் முறை யோடுஞ்சென்றாரங்கே, நடிக்கவேசித்தாதிசித்தரெல்லாம்நலமுடனே ரோமரிஷிவந்தாரங்கே, முடிக்கவே சீஷன்முகந்தன்னைநோக்குமூனே யாகக்கேட்கலுற்றார் ரிடியார்தாமே. 297

தாமேதான்கேட்கையிலே சீஷர்தாமும்தண்மையுடன்தாமுரை ப்பார்ரிஷியாருக்கு, போமேதான்சமாதிதனில்சென்றபோதுபொங்க முடன் தாமுரைததவர்க்கமெல்லாம், வேமேதான்மேதினியில்செய்ய லாச்சு விருப்பமுடன்மகிமையெல்லாம் நடக்கலாச்சு, ஆமேதான்தா முரைத்தவர்க்கயெல்லாம் ஐயனே மெய்யாச்சியென்றிட்டாரே. 298

என்றிட்ட போதையிலேரிஷியார்தாமும் யெழிலானதேக மதைநம்பொண்ணுது, சன்றிட்டமாகவல்லோ சமாதிக்கேக் சட்ட முடன் ரோமரிஷிமுன்வரதானும், வென்றிடவேசீஷர்களைமிகவிரும் பிவிருப்பமுடன் சமாதிக்குயேகலாகி, சென்றிடவேபூலோகமாய் கையற்று சிறப்புடனே சமாதிக்குயேகினரே. 299

மறுபடியும் ரோமரிஷிசமாதிக்கு ஏகுதல்.

ஏகவேரோமரிஷி முனியார்தாமும் யெழிலானசமாதிக்குச்செல் வேனென்று, சாகாமல்வையகத்திலிருந்துமென்ன சட்டமுடன்காய கற்பங்கொண்டுமென்ன, வேமமுடன்சின்மயத்தி லிருந்துகொண்டு விருப்பமுடன் வாசியோகஞ்செய்துமென்ன, யோகமதுசெய்து மல் லோ கோடிகாலம் யொன்றையுந்தான் காண்பதில்லை தேகவாழ்வே.

வாழ்கவென்றுலோகமதி லொன்றுமில்லை வையகத்தோர் வாழ் வெல்லா மிந்தவண்ணம், மூழ்கியேபோனார்கள் கோடிமன்னர்மூதுல கிலிருந்தவர்களாருமில்லை, மாழ்கியேநன்னிலையில் நில்லாமற்றான்மதி கெட்டுப்போனவர்கள் கோடியுண்டு, பாழ்கியேலோகமதின் வாசை விட்டேன் கைலாயமெந்தனுக்கு காணியாச்சே. 301

ஆச்சப்பா சீஷவர்க்கஞ் சொல்லக்கேளுவப்பனே சமாதிக்குசெ ன்றபோது மூச்சடங்கிப் போனதொரும்தகந்தானும் முதுலகில்மறு படியும் வந்துமென்ன, மாச்சலுடன் வையகத்தை யான்மறந்துவண் ணதனில்தேகமதையொழிப்பேனென்றும், பாச்சலுடன்சமாதிக்குப் போறேனென்றும் பான்மையுடன் ரிஷியாருமிரங்கினாரே. 302

இறங்கவே சீஷவர்க்கமெல்லோருந்தான் யொழிலாகப் பாறை கொண்டுமூடினார்கள், உறங்கவேமண்ணுதனில் ரிடியார்தாமும்வுத்த மனார் தேகமதைமேவலாக்கி, மரந்தாரேதேகமதை சொரூபாதாமும் மானிலத்தில் விட்டொழித்து மண்ணிற்சாயந்தார் திறமுடனேசீஷ ரெல்லா மாசீர்வாதம் செம்பினார்துரைராச வேந்தருக்கே. 303

வேந்தாராம் புலிப்பாணிமைந்தாகேளு விருப்பமுடன்சொல்லு கிறேன் ரிடியார்தம்மை, சாந்தமுடனுலகுதனி லாரிருந்தார் சட்ட முடன் தேகத்தை மறந்தார்சித்தர், பேர்ந்தமுடன்வுலகுதனி லாரு மில்லை பொன்னுலகம் பதிபோனார்மாண்பரெல்லாம், நீத்தவேபொய் யான வாழ்வைநம்பி நீனிலத்தில்வெகுகோடி கெட்டார்தாமே. 304

கெட்டாரேமாண்பரெல்லாம் யுககோடிகாலம் கெவனமுடன் நாதாக்கள் தெய்வமென்பார், பட்டாரே பாருலகில் மனிததெய்வம் பாரினிலே மனிதரேதெய்வமானால், இட்டமொடுயின்னதொருதெய் வமென்னயெழிலான பூலோகவாழ்க்கையாவும், சட்டமுடனிப்படி யேயிருக்குதல்லால் தாரணியிலொன்றுந்தான் காணும்பாரே. 305

கடுவெளிசித்தருற்பவம்.

பாரேதானின்னமொரு மார்க்கங்கேளு பாங்கான புலிப்பாணி மைந்தாபாரு, நேரேதானெனதையர் காலாங்கிநாதர் நேர்மையுடனெந்தனுக்குவுரைத்தநீதி, சீரேதான்குளிகைகொண்டு யடியேன்றுனும் சிறப்புடனே அஷ்டதிசைசுத்தியல்லோ, வீரேதான்வடக்குமுகம்போகும்போது வீறுனகடுவெளியைக் கண்டேன்தானே. 306

கண்டேனேகானகத்தில் மார்க்கந்தன்னை கடுவெளியா மென்றதொரு சித்துகண்டேன், அண்டியே யானுமல்லோ வருகிற்சென்றேன் அங்கனவேயாரென்றுஎன்னைக்கேட்க, விண்டதொருகடுவெளியாஞ்சித்தருக்கு விருப்பமுடன்காலாங்கி சீஷனென்றேன் பண்டிதங்கள்மிகக்கேட்டு என்னையல்லோ பட்சமுடனுசிர்மஞ்செய்தார்காணே.

காணவேகடுவெளியாஞ் சித்துதம்மை கனமுடனே யடியேனும் வணங்கியல்லோ, பூணவேகாட்டகத்தைக்காணவந்தேன் புனிதமுள்ளரிஷிபாரேவிண்ணப்பங்கேள், தோணவேபவளமென்ற காட்டகத்தைதொல்லுகையான்பார்க்க வேண்டுமென்றேன், நீணவேயடியேனுங் கேட்கும்போது நீதியுடனெந்தனுக்கு வுரைத்தார்தாமே.

போகர் பவளம்விளையுங் காட்டைக்கண்டது.

உரைத்தாரே கடுவெளியார் சித்துதாமும் ஒகோகோயிவனுரேநாதனென்று, வரையானமுறைப்படியே சித்துதாமும் வடகோடிகானகத்தைச்செல்லநன்னி, திரைபோன்றகாலுக்கு வடக்கேயப்பா தீவாந்திரமானதொரு காடொன்றுண்டு, கரையானவழிதனையே கண்டதில்லை காசினியிலதிதமப்பா சொல்லொண்ணாதே. 309

ஒண்ணாதுயென்றல்லோ சித்துதாமும் ஒகோகோநாதாக்க ளறியாக்காடு, குண்ணனமலைபதுவுங்கூறப்போமோ, கூறுனகதண்டுகளுமதிலேயுண்டு, எண்ணவேயாராலுமுடியாதப்பா யெழிலான சிங்கத்தின் தலையைப்போல, அண்ணாந்துபார்த்தவரை யங்கேகொல்லும் அத்வானவடகோடி மலைதானுச்சே. 310

ஆச்சப்பாமத்தகசந் தன்னைப்போல அழகானகதண்டுகளு மங்கேயுண்டு, பேச்சப்பாபேசுமுன்னே சிகரம்போகும் பேரானகதண்டுகளுமங்கேயுண்டு, மூச்சடங்கமேல்விழுகுங் கதண்டுதானும்முனையானகுதிரையின்சிரசிபோலாம், கூச்சலுடன்தானிருக்கும் வனந்தானப்பா குவலயத்தில் கண்டவர்களில்லைதானே. 311

கதண்டுமகாரிஷிவனம்.

தானனகாலாங்கிசீஷவர்கேளும் தண்மையுள்ள கதண்டுமகாரி ஷிதானப்பா, கோனையென்பாட்ட ரிஷிதானுதுப் தொற்றவனே க தண்டுமகாரிடியாசிர்மம், தேனனகாட்டகத்தைச்சென்றுபானல் தெ ளிவுடனேயுந்தனுக்கு வுளவுசொல்வார, மானனரிடிமகாதேவர் தன் னல் மானிலத்தில்பவளமதைக்காணலாமே. 312

காணலாமென்றுகடுவெளியார்தாமும் கருத்துடனேயெந்தனுக் குச்சொன்னரங்கே, பூணவேயவர்பாதர் பின்னும்யானும் பொங்கமு டன்தொழுதிட்டேன் ரிஷியார்தாமும், நீணவேயெந்தனுக்கு யாசீர் மித்து நீதியுடனெந்தனையு மழைத்துமல்லோ, வேணபடியெந்தனுக் குயுதவிசொல்லி விருப்பமுடன் காட்டகத்தைச் சென்றார்பாரே.

கடுவெளிசித்து போகரைக்கண்டு மகாரிஷியினிடம்

அழைத்துக்கொண்டு போகுதல்.

பாரேதான்கதண்டுமகாரிடியார்பக்கல் பதிவுடனேயெந்தனையுங் கொண்டுசென்றார், நேரேதான்கடுவெளியார் சித்துதாமும்நேர்மையு டன்யெந்தனுக்குயிதவுகூறி, சீருடனேகாலாங்கு சீஷனென்றுசெப் பினார்யென்மீதிற்கிருபைவைத்து, நீரேதானிவர்தமக்கு வாசிர்மித்து நீட்டமுடன் வரந்தருகவென்றிட்டாரே. 314

வென்றிட்டபோதையிலே ரிஷியார்தாமும் விருப்பமுடன் வுப தேசஞ்செய்யவென்று, சென்றிடவேதம்பக்கலழைத்துமல்லோசிறப் பானகாலாங்கிசீஷனென்று, என்றிடவேயிவர்தமக்கு பவழக்காட் டை யெழிலாகக்காணுதற்கு வரமுமீய, சென்றுமேதமதிடமும் வந் தாரையா சிறப்பானபோகரிஷி யிவர்தானச்சே. 315

ஆச்சையாயென்குருவேசாமிநாதா வன்புடனே தன்பாதங்கா ணவந்தோம், மாச்சனுடன்சீனபதிவிட்டுமல்லோ மகத்தானபோகரி டிவந்தாரையா, பேச்சரியாபோகரிடி நாதருக்குப்போானவுபதேசஞ் செய்யவேண்டும், ஆச்சரியமானதொரு பவழக்காட்டையவர்தமக்கு யின்பமுடன் அளிப்பீர்தானே 316

கதண்டுமகாரிஷி போகருக்கு பவழக்காட்டைத்தெரிவிப்பது.

தாமென்றபுலிப்பாணியின்னங்கேளு தகமையுள்ளகதண்டுமகா ரிடியார்தாமும், ஆமெனவேகாலாங்கிநாதர்தம்மால் வன்புடனேயெ ந்தன்மேல்கடாட்சம்வைத்து, ஏமெனவே யாசீர்வாதங்கள் சொல்லி

எழிலானகாட்டகத்தையெந்தனுக்கு, போமெனவேவிடைதந்துவுள வுஞ்சொல்லி பெரங்கமுடன் வரந்தந்தார் ரிஷியார்பாரே. 317

பாரேதான்காலாங்கிசீஷர்கேளு பாங்குடனே சொல்லுகிறேனு ந்தமக்கு, சேரேதானிவ்வனத்துக்கிழக்கேயப்பா செயலான பவளத் தின்காட்டகந்தான், நேரேதான்காறுறுகுகையுமுண்டு நீடானவாரி தியாங்கடலோரந்தான், கூறுனபவளமதுயென்னசொல்வேன் கொ ற்றவனே யாருந்தான்போகொண்ணாதே. 318

ஒண்ணாதுநாட்டகத்தில் தண்டுதானும் வுத்தமனே யுந்தனையுங் கொல்லும்பாரு, அண்ணாந்துபார்த்தாக்கால் சிரசும்போகும்வப்பனே அவ்வனத்தேசொல்லொண்ணாது, மண்ணாளுங்ராஜாதிராசரெல்லாம் மகாவனத்தைவந்துமல்லோ மடிந்துபோனார், குண்ணனமலைதனையே கண்டபோது கொற்றவனேகுலைநடுங்கி யிறந்தார்தாமே: 319

இறந்தாரேலோகத்துமாண்பரெல்லாம் யெழிலான காட்டகத் தைச்சென்றுமல்லோ, மறந்தாரேமேதகாதிமேதகந்தன்னை வையகத்தில் சோடியுண்டு லக்கோயில்லை, துறந்ததொருகுரானிகளு மாய்ந்துபோ னார் துப்புறவாய்த்திரும்பிவந்தோருறுமில்லை, சிறந்ததொருகானகத் தேசென்றுபானால் சீரானபாலகனே மடிவாய்பாரே. 320

பாரப்பாயுந்தனையுங்கதண்டுதானும் பார்த்தாலே யுன்தலையைக் கொண்டுபோகும், ஊரப்பாஅதிலொருவர்போனதில்லை வுத்தமனே சிலநாளிங்கிருந்தாயானால், சேரப்பாஅமாவாசைபட்சந்தன்னில் சிற ப்பானகதண்டுளெல்லாங்கூடி, ஆரப்பா ருபதேசங்கேட்க வப்பனே வருமென்றுசொல்லிட்டாரே. 321

சொல்லவேபோகரிடிமுனிவர்தானும் சொற்றவறு வண்ணமது யிருக்கவென்று, புல்லவேசிலநாளங்கிருந்தேன்யானும் புகழான கத ண்டுமகாரிடியார்பக்கல், வல்லதொருகதண்டுகளாம் கூட்டம்கூடி வ ண்மையுடன் ஞானோபதேசங்கேட்டு, செல்லவேகானகத்தைப்போ குஞ்சேதி செம்மலுடன்யான்கண்டு நின்றிட்டேனே. 322

நின்றேனேநெடுநேரங்கால்நடுங்க நேர்மையுடன் கதண்டுமகாரி டியார்தாமும், குன்றுனமலைதனிலே யிருக்கும்வண்டைகொப்பென வேதாமழைத்து வினையஞ்சொல்வார், பன்றுனபாலனிவன்யாரென் றக்கால் பாருலகில் காலாங்கிசீஷனப்பா, தென்றிசையில் மலைகளெ ல்லாந்தான்கடந்து திக்குசெயம்பெற்றுவந்த பாலன்றனே. 323

தானானபாலனுக்குகடுவெளிபார்தாமும் தயவுடனேயெந்தனுக் குநியமஞ்செய்தார், தேனான துதண்டுகளே யுந்தமக்கு தேற்றமுடன் யானுமல்லோநியமஞ்செய்தேன், கோனான காலாங்கி நாதர்போரால் கொற்றவனார் போகரிஷிநாதருக்கு, பானானபவளமென்ற காட்டை யல்லோ பார்ப்பதற்கு யிடமருளுமென்பார்தாமே 324

கதண்டுகள் போகருக்கு அஞ்சலிசெய்தது

என்று ரேகதண்டு மகாரிஷியார்தாமும் யெழிலானபோகரிஷி நாதருக்கு, குன்றானமலைபோலே கதண்டுவெல்லாம் கொப்பெனவே போகரிஷிநாதருக்கு, நின்றுமேயஞ்சலிகள் மிகவுஞ்செய்து நீதியுள் ளகாலாங்கிசீஷருக்கு, சென்றுமேகானமைத்து வனாந்திரத்தில்செம் மலுடனாசனங்கள் கொடுக்கலாச்சே. 325

அச்சப்பாயடியேனுங் காட்டகத்தே வன்புடனே யெந்தனையுங் கொண்டுசென்று, மாச்சலுடன்கதண்டுகளு மொன்றாய்க்கூடி மார்க் கமுடன்பவழக்காலாசிரமத்தில், வீச்சுடனே சிம்மாதனம் ஏற்றி யெ ன்னைவிருப்பமுடன் சங்கீதம்பாடலாச்சு, ஆச்சரியமானதொருபவள பீடம் வன்புடனே யெந்தனுக்குத் தருதலாச்சே. 326

தந்துமேவடகோடிகானகத்தில் தண்மையுடன்பவளமென்றகா ட்டையெல்லாம், சொந்தமுடனெந்தனுக்குவுளவுசொல்லிசுத்தமுன் சினபதிபிழைக்கவென்று, அந்தமுடன் யெந்தனுக்குச் சொல்லியல் லோ வப்பனேயடிவணங்கி தெண்டனிட்டு, வந்ததொருபாலனுக்கு யதிதஞ்சொல்ல வண்மையெல்லாமடியேனுங் கண்டிட்டேனே.

கண்டேனேவளமான புதுமையெல்லாங் காட்டகத்தைச்சுததி யல்லோயானுங்கண்டேன், அண்டர்முனிராட்சதர்களிருக்கும் நாடு வழகானபவளமென்றநாடேயாகும், கொண்டலிடிமேகமது யெழும் பும்நாடு கொற்றவர்கள் தாமறியா பவளநாடு, தண்டகாரணியமது சொல்லப்போமோ தாரணியில்கண்டவர்களில்லைதானே. 328

கதண்டுமகாராஜன் கோட்டைகண்டது.

தானானகோட்டையது யென்னசொல்வேன் தண்மையுள்ளகத ண்டுமகாரிஷியின்கோட்டை, பானானகோட்டைக்குள் சுரங்கமுண்டு பக்கமெல்லாம் பவழத்தால்தானுமுண்டு, தேனானமன்னன் மணியா ள் பீடம்போலதேற்றமுடன் சித்தரமாம்மண்டபந்தான் கோனானக தண்டுமகாரிஷியின்பாட்டன் கொற்றவனாராசிரமந்தனைக்கண்டேனே

கண்டேனேயடியேனும்ரிஷிபார்தம்மை கனமுடனே காணுதற் குபாலன்றானும், தெண்டமுடன்ரிஷிபாரும் யென்னைக்கண்டு தெளி மையுடன்யாரென்று கேட்கலுற்றார், அண்டியேகுருபாதந்தனைவண ங்கி னப்பனேயாதரிக்கவேண்டும்பாரு சண்டமாருதம்போலே ரிஷி யார்பாதம் தலைவணங்கி நடுநடுங்கிப்பணிந்திட்டேனே. 330

பணிந்துமேநிக்கையிலேசீஷவர்க்கம்படைமீறியென்மேலோமேர்போருந்த, அணியணியாய்த்திரள் கூட்டமதிகமாகி அங்ஙனவே கொல்லுதற்குயெண்ணங்கொண்டு, துணிவுடனே சகிப்பதற்கு கிட்டேநேர்ந்து துப்புறவாய்யென்மேலே வினையுங்கொண்டு, மணியான யோகீஸ்வரன்முதலோர்தானும் மார்க்கமுடனெந்தனையுஞ்சூழ்ந்தார் பாரே. 331

பாரப்பா சீஷவர்க்கஞ்சொன்னபோது பாருலகில்யானுமல்லோ திடுக்கிட்டேங்கி, தேரப்பாரதம்போலநின்றுவிட்டேன்தெளிமையிடயவர்பாதம் தொழுதேன்யானும், காரப்பாயென்றுரைத்துக்கரமெடுத்துகாத்தாவே ரட்சிக்கவேண்டுமென்றேன். ஆரப்பாகாலாங்கிசீஷர் தன்னால் வப்பனேயுந்தனையும் மதித்தோம்பாரே. 332

மதித்தோமே காலாங்கி கடாட்சத்தாலே மகதேவரெங்களுக்கு குருவுமாச்சு, விதிப்படியேயவர்களிந்த வச்சலித்தேன் வீரானசீஷரெல்லாமன்னித்தார்கள், துதிப்புடையபாலனென்று யென்னைத்தானுந்துரைராஜகாலாங்கிசீஷனென்று, மதிபோன்றமனந்தனிலேயுன்னியல்லோ மார்க்கமுடன் சினமதுவை நீக்கினாரே. 333

சீஷர் போகரைமன்னிப்பது.

நீக்கியேயெந்தமேல்பட்சம்வைத்து நீதியுடன்யாதரிக்கவேண்டுமென்று, நோக்கமுடன்போகரிஷி முனிவர்தாமும் கொடியான பவமகற்றிகார்க்கவேணும், வாகுடனேயெந்தனுக்குவரமுந்தந்து, வண்மையுடன்பாதுகாத்தருளென்றார்பார், நாக்கமலம் வீற்றிருக்கும் மனோன்மணியாள்பாதம் நன்மையுடன்வணங்கியல்லோ பணிந்திட்டேனே. 334

பணிந்துமிகநிற்கையிலே சீஷர்தாமும்பாங்குடனே யென்றன்மேல்பட்சம்வைத்து, அணிந்தவொருபவளமென்ற வாரந்தன்னைவப்பனே யென்கழுத்திற்சாற்றினார்கள், துணிந்துமேயடியேனுந்தாள்பணிந்து துப்புறவாய்யானுமல்லோ வஞ்சலித்தேன், கணிந்துமேபவளத்தின்வுளவுசொல்லி கருவானவாரிதியைக்காண்பித்தாரே. 335

கண்டேனே சத்தசாகரமுங்கண்டேன் கனமானபவளமென்ற கடல்தானப்பா, விண்டேனேநாதாக்கள் கைமறைப்பு வேதாந்தத்தாயினது கடல்மறைப்பு, உண்டானமகிமையெல்லாம் யானுங்கண்டேன் ஓகோகோநாதாக்கள்சூட்சங்கண்டேன், திண்டானபவழத்தின் விளைவுகண்டு தீரமுடன்சீனபதியேகினேனே. 336

ஏகவேயடியோனுங்காட்டைவிட்டு யெழிலானசீனபதிபோறேனென்றேன், சோகமுடனெந்தனுக்கு வெகுமானங்கள்தொல்லுலகில்தான்கொடுத்தார்சீஷவர்க்கம், வேகமாம்பவள சிம்மாதினங்கள் விருப்பமுடனெந்தனுக்குயாவுந்தந்து போகரென்ற போதனையே மெச்சவேதான் போவென்றார்சீனபதி வந்திட்டேனே. 337

வந்தேனே காலாங்கிருபையாலே வளமுடைய கதண்டுமகாரி ஷியாசீர்மம், அந்தமுடன்கண்டல்லோயடியேன்தானும் அடைவான பவளமென்றகடலைத்தாண்டி, சொந்தமுள்ள சீனபதிதேசத்துக்கு துப்புரவாய்வந்தல்லோபெண்களுக்கு, விந்தையதுதானுரைத்தேன்வெகுசதாக மேதினியிலென்னைமெச்சி யணைந்திட்டாரே. 338

போகர்சீனபதிபெண்களுக்குபவளமாலைதரித்தல்.

அணைந்துமேசீனபதிபெண்களுக்கு அழகாகபவளமென்றமாலை தன்னை, மணங்கமழும் மார்பதனிற்பதக்கமாலை மார்க்கமுடன்தான் கொடுத்தார்பரிசனந்தான், இணக்கமுடன்பவளமென்றகடல்தானப்பா யெழிலானகாட்டகத்தைத் தாமுரைத்து, கணக்கமதுவாராமல் சீனத்தார்க்கு சூட்சமதைவெளியிட்டார் போகர்தாமே. 339

போகர்பவளம்விளைகிறவதிசயத்தைசீனத்தார்க்குகூறல்.

தாமாமனயின்னமொருகருமானந்தான்தகமையுள்ள சீனபதியுலகத்தார்க்கு, போமெனவேகண்டுவந்த வதிசயத்தைப் பொங்கமுடன்தாமுரைத்தார் போகர்தாமும், நாமெனவே யெழுகடலுஞ்சுத்திவந்தேன் நாதாக்கள்மகிமைதனையானுங்கண்டேன், நேமெனவேடில்லிக்குடபாகத்தில் நேர்மையுடனுசீர்மந்தன்னைக்கண்டேனே. 340

கண்டேனே நாதாக்கள்கண்டதில்லை காலாங்கிநாதருட கிருபையாலே, அண்டர்முனிராட்சதருங்கண்டதில்லை யவ்வனத்தேமாண்பர்களும் போனதில்லை, தொண்டுசெய்துயடியேனும்வெகுகாலந்தான் தோற்றமுடன் தேசமெல்லாஞ் சுத்திவந்தேன், விண்டவர்கள்யாரேனுங்கண்டதில்லை வீரானகடுவெளியார் வனந்தானுமே. 341

வனமானகடுவெளியார்நாடுகண்டேன் வண்மையுள்ள சித்தொளிவைக்கண்டேன்யானும், தினகரனுங்காணாத வாசீர்மந்தான் திகழான கடுவெளியார்சித்துநாடு, கிண்ணிடனே மேகமது தங்கும்நாடுபுகழா திருப்பாலின்கடலோரந்தான், மனமுடையசித்து மகாரிடிகள் நாடு மகத்தானகடுவெளியார் சித்துநாடே. 342

நாடானகடுவெளியார்சித்துநாடு நலமுடநேகுளிகையதுகொண்டுயானும், காடானவாசீர்மந் தன்னைக்கண்டேன் கடுவெளியார்வுபதேசம்யானும்பெற்றேன் தாடண்மையுள்ள தொரு பலமுங்கொண்டேன் தாக்கானரிடியினுட பலத்தினாலே, கேடானகோடிவடகானகத்தில் கொப்பெனவேயாசீர்மம் பாரத்திட்டேனே. 343

பார்த்தேனேபவளமென்ற கடலோரத்தை பாங்குடனே யான்
கண்டுவசதியித்தேன், தீர்த்தமுடன் கானாறுகுகைதான்சென்று திர
ளானபவளமென்ற காட்டைக்காண, நேர்த்தியுடன்கடுவெளியாரெ
ந்தன்மீதுகோமையுடனதிசயித்துசொன்னசொல்லை,பூர்த்தியாய்க்கடு
வெளிபார்பட்சம்வைத்து புகழாகயெந்தனுக்கு விடைசொன்னாரே.

சொன்னாரேயெந்தனையுந்தானழைத்து சுத்தமுடன் சதண்டும
காரிஷியாருக்கு, மன்னானகாலாங்கிநாதர்தன்னை மகத்தானசீடனிவ
ர்போகரென்று, முன்னோர்கள்ரிஷிமுனிவர்துதிக்கும்போகர் மூதுல
கில்கீர்த்திபெற்றான்சீடனென்று, பன்னியேபலகாலும் பட்சம்வை
த்து பாங்குபெறவுத்தாரஞ் சொன்னார்தாமே. 345

சொன்னாரேகதண்டுமகாரிடியாருக்குத்தோற்றமுடனெந்தனுக்கு
அடவிதன்னை, பொன்னானபவளமது விளையுமார்க்கம் பொங்கமுட
னெந்தனுக்குஅருளவென்று, மன்னவனாங்கதண்டுமகா ரிடியாருக்கு
மார்க்கமுடனுறுதிமனங்கொள்வதற்கு, வின்னமதுவாராமல் யெந்த
ன்மீதில் விருப்பமுடன்பட்சமது விடைதந்தாரே. 346

தந்தாரேகதண்டுமகாரிடியார்தாமும் தாரணியில் காலாங்கிசீட
னென்று, எந்தன்மேல்கிருபையது மனதுவந்து எழிலான பவளமெ
ன்றகானகத்தை, அந்தமுடனெந்தனுக்குத் தெரியவேதான்வண்புள்
ளகதண்டுகளைதாமழைத்து, இன்பமுடன் காண்பிக்கச் சொல்லியே
தானிளிமையுடனுத்தாரஞ் செய்தார்பாரே. 347

பாரேதான்வுத்தாரஞ்செய்தபின்பு பாங்கானகானகத்தில் கத
ண்டுதானும், நேரேதான்வடகோடிகானகத்தில் நேர்மையுடன்கதண்
டுகளும்காணலாச்சு, சீரேதான்யானையின்தலைகள்போலே சிறியதோ
ர்கதண்டுகளைக்கண்டேன்யானும், வீரேதான்கதண்டுகட்கு மெத்தவு
ண்டு விண்ணிலிடங்கொள்ளாது பயந்திட்டேனே. 348

இட்டேனேயானையது தலைகள்போலே யெழிலானகதண்டுகளு
மெத்தவுண்டு, பட்டதொருசிங்கத்தின் தலைகள்போலே பாங்கானக
தண்டுகளுமெத்தவுண்டு, துட்டமுள்ளகுதிரையது தலைகள்போலே
தூரானகதண்டுகளையானுங்கண்டேன், விட்டகுறையிருந்ததினாலெ
ந்தனுக்கு வினையதுவுந்தொடராமல் வந்திட்டேனே. 349

வந்தேனேகதண்டுமகாரிடியார்பககல் வடக்குமுகம் பின்புறமா
ய்நின்றுகொண்டேன், சொந்தமுடனவர்பாதம் தொழுதுயானுந்து
ரைருசர்பக்கமதில்நின்றுகொண்டு, அந்தமுடன்கரங்குவித்து வஞ்ச

லித்துவண்புடனே தொழுதுபணிநிற்கும்போது, விந்தையுடன் கத
ண்டுமகாரிடியார்தாமும் விருப்பமுடனெந்தனுக்கு வழிசொன்னாரே

வழியானகதண்டுகளுமெந்தன்மீதில் வண்மையுடன் மனதுவந்
துயெந்தனைத்தான், பழியதுவும்நேராமல் யெந்தன்மீதில் பட்சமுட
ன்கதண்டுரிடிவனுமையாலே, குழியானகுண்ணுக்கல் காளூர்தம்மில்
கொற்றவனே யெனையழைத்துப்போகலாச்சு, அழியாத வாசனங்க
ளெந்தனுக்கு வன்புடனேதான்கொடுத்தார் பணியலாச்சே.

பணியவேபவளமென்றவாசிர்மத்தில் பாங்குடனே யடியேனும்
வீற்றிருந்தேன், துணிவுடனேகதண்டுமகா கூட்டத்தோடு துப்புர
வாய்யெந்தனுக்குவாசீர்மித்து, அணியணியாய்க்கதண்டுகளுங் கூட்
டங்கூடி அங்ஙனவேயெந்தனுக்கு வதிதஞ்சொல்லி, மணியான பவ
ளமென்றமாலைதன்னை மார்க்கமுடனெந்தனுக்கு கொடுக்கலாச்சே.

கொடுக்கவேயடியேனும்பவளம்பூண்டு கொப்பெனவே குளிகை
யதுபூண்டுகொண்டு, விடுபட்டுசீனபதிவந்தேன்யானும் விட்டகுறை
யிருந்ததொருவனுமையாலே, தொடுகுறிபோல் பவளமென்றகாட்ட
கத்தைதொல்லுலகில் வாரிதியைக் கண்டுவந்தேன், கடுவெளியாஞ்
சித்தருடகடாட்சத்தாலே கனமுடனே சீனபதிவந்திட்டேனே.

வந்தேனேசீனபதிமான்பரேகேள் வகுப்பானபவளமென்ற கா
ட்டகத்தை, அந்தமுடன்யான்கண்டு பவளம்பூண்டு யன்புடனேயுந்
தனுக்காய் வுபதேசிக்க, சொந்தமுடனென்னுளுமனுவுபூண்டு சுத்த
முடன்நீங்களெல்லாந்தேறுதற்கு விந்தைகளேயுங்களுக்குக் கூறவந்
தேன் விருப்பமுடன்கண்டுகொள்ளு மென்றிட்டாரே. 354

கடுவெளிசித்தர் சமாதிக்குப் போகுதல்.

என்றிட்டபோகர்முனிரிடியார்தாமும் யெழிலானசீனபதிவிட்
டுமல்லோ, குன்றிட்டகுளிகையதைப் பூண்டுகொண்டு கொப்பென
வேவடகோடியரசிர்மத்தில், தன்றிட்டமாகவல்லோ தரணிமீதுசாங்
கமுடன்குளிகைகொண்டு யிறங்கினேன்யான், சென்றிட்டுவடகோ
டிகானகத்தில் சேனையுடன் சீடவர்க்க மெழுந்திட்டாரே. 355

எழுந்தாரேகடுவெளியார்சித்தர்தாமும் யெழிலான சமாதிக்கு
யேகவென்று, அழுந்திபூமிதன்னில்வெகுகாலந்தான் அடக்கமதா
ய்தானிருக்கயெண்ணங்கொண்டு, பழுதுபடாத்திருமேனிபோகாதம்
மைபட்சமுடன் தாமழைத்து சித்துதாமும், வழுதுணையாய்வெகுகா
லமிருக்கவென்று வண்ணமுடன்வரம்துவுங் கொடுத்தார் தானே.

கடுவெளியார் போகருக்கு புத்திகூறி சீடரை
அழைத்துக்கொண்டு சமாதிக்கேகல்.

கொடுத்துமேகாலாங்கிசீடருக்கு கொப்பெனவே புத்திமதியதி கஞ்சொல்லி, அடுத்துமேகண்மணியே போகநாதா அவனியெலாங் குளிகைகொண்டு சுத்திவந்தாய், தொடுத்ததொருபூமிவளமனேகமு ண்டு தொல்லுலகில் கானகத்தில் சபிக்குஞ்சித்து, ஓடுக்கமுடன்தா ன்சபிப்பார்போகநாதா ஓகோகோ நாதாக்களதிதங்காணே 357

காணவேசமாதிக்குப்போறேனப்பா காசினியிலார்பகையுங்கொ ள்ளவேண்டாம், வீணவேசித்துமகா கோடியுண்டு விருதுடனே மடி பிடித்துசண்டைசெய்வார், மாணமருங்கல்வியுள்ளோர் போலேபேசி மகத்தானநாதவெளி சித்தன்போலே, நீணவேயுந்தனிடங் காங்கள் வைத்து நீடோனயுலகமதில் செய்வார்பாரே. 358

பார்க்கையிலேநல்லவர்போல் பொல்லாரப்பா பாருலகில் சித்த ருண்டுரிடியுமுண்டு, ஏர்க்கவேநல்லாவின் படத்தைப்போலே யெழி றானநாதாக்கள்முனிவருண்டு, பூர்க்கவேபடமதனில் விடத்தைக்கா ணூர் புகழானபடமது மழகாய்த்தோற்றும், ஏர்க்கவே கதைபோல முடியுமப்பா யெழிலானசித்தர்களை நம்பொண்ணுதே. 359

ஒண்ணுதுவுலகிலுள்ளசித்தரப்பா ஓகோகோதர்மிகளுங் கருமி யுண்டு, எண்ணவேமுடியாது பெவருலுந்தான் யெழிலானசித்தர்மு னிமர்மமப்பா, கண்ணபிராணெருநாளுஞ் சிக்கிக்கொண்டு காசினியி லவர்வலைவைசீக்கிக்கொள்வார், நண்ணவேயெப்போதும் போகநாதா நண்புடனே தர்க்கிட்டு வாழ்குவீரே 360

வாழ்கவென்றுலோகமெல்லாங் குளிகைகொண்டு வளமுடனே சத்தசாகரமுங்கண்டேன், தாழ்கவேஅஷ்டதிசைதானுங்கண்டேர்தா க்கானமலையாறு குகைகள்கண்டேன், மூழ்கியதோர்பிரளயங்களெல் லாங்கண்டேன்மூதுலகவையகத்தின்வாழ்க்கைகண்டேன், மாழ்கியே போகாமல்சிலதுகாலம் மாற்கமுடனிருங்கவென்று வரந்தந்தாரே.

தந்தாரேசமாதிக்குப்போரேனப்பா தண்மையுடன்சிலகாலமிரு ந்துயானும், அந்தமுடன்வுலகுதனில்வருகும்போது வப்பனே யுந்த னையுங்காண்பேனென்று, சிந்தனையிலவர்மீது பட்சம்வைத்து சிறப்பு டனேவிடையதுவும்பெற்றுக்கொண்டு, சொந்தமுடன் சீடர்பதிக்கூ ட்டத்தோடு சுத்தமுடன் சமாதிக்கி ஏகினரே. 362

கடுவெளியார் சீடரோடு சமாதிக்கேகல்.

ஏகவேசீடவர்க்கந்தனையழைத்து எழிலானகாட்டகத்தைச் செ ன்றயானும், சங்கமுடன்சமாதிக்கியிடமுந்தேடி சட்டமுடன்குழிய

துவுந்தோண்டியேதான், வேகமுடன் ஓராலின் பட்டங்கீழேயிருப்ப முடன்கல்லரைகழுண்டுசெய்து, தாகமுடன்பாலமுர்தமுண்பதற்கு சட்டமுடன்தானுமைய வழிவைத்தாரே. 363

வழியானசமாதிக்குதிட்டவகூறி வண்மையுடன்கடுவெளியார்சீடருக்கு, பழிபாவந்தனைநீக்கிசித்துதாமும் பட்சமுடன்வுபதேசஞ்செய்தாரங்கே குழியானசமாதிக்கிபோகும் போதுகொப்பனவேயெந்தனுக்குமண்டலந்தான், வழியோடேபால்பழமும்யெனக்குத்தந்து வண்மையுடன்சமாதிதனை மூடிப்போடே. 364

போடேதான் மண்ணதனைமேலேமூடிபொங்கமுடன்கல்லாலே சமாதிகட்டி, நீடேதானிருபதுவாண்டுமட்டும் நிலையாகசமாதியிடங்கார்த்திருந்து, தேடவேசமாதியது வெடிக்கும்போதுதேற்றமுடனே வனுக்குமுன்னேணின்று, பாடவேயுபதேசம் மிகவும் பெற்றுபாரினிலேவெகுநாளாய் வாழ்குவோ. 365

கடுவெளிசித்து சமாதிமகிமை.

வாழ்கவென்றால் சமாதிக்குட்சென்ற பின்புவையகத்திலதிசயங்கள்மிகநடக்கும், தாழ்கவேசத்துருசங்காரரெல்லாம் தாழ்மையுடன்நீதிவழிநடப்பார்பாரு, மீழ்கவேமிருகமெல்லாம் பாஷைபேசமிகதான பட்சியதுவேதங்கூறும், ஆழ்கவே கடலதுவுந்திசை மாறிப்போம்வப்பனேவதிசயங்கள் மெத்தவுண்டே. 366

உண்டானசத்துருக்கள் வணங்குவார்கள் ஓகோகோ நாதாக்களெல்லாங்கூடி, திண்டானசித்துவருங்காலமாச்சு திகழானசமாதிவிட்டுயேகவென்று, அண்டமதுகிடுகிடுக்க ரிடிகளெல்லாம்வன்புடனென்னேவனுக்குமுன்னேநிற்பார், வண்டினங்கள்கவிபாடுஞ்சமாதிமுன்னேவருங்காலமாச்சுதென்று நினைத்துக்கொள்ளே. 367

கொள்ளவே கெர்ப்பமதுகுள்ளிருக்கும் கூறுனசிசுபாலன்வார்த்தைகூறும், விள்ளவேபரிதிமதிதிசைமாறிப்போம் வீரானகோட்களுமதிரும்பாரு, துள்ளவே ஆதிசேடன்பூமிதன்னில் துடிப்புடனே தோள்மாற்றி நடுங்கச்செய்வான் அள்ளவேயண்டமது வதிரும்பாரு ஆகாயநட்சத்திரமுதிரும்பாரே. 368

பாரேதான் சமாதியதுசுழலும்பாரு பாங்கானசமாதிக்குள்ளசீருண்டாம், நேரேதான்தெற்குமுக மதிசயங்கள்நெருப்பானதேன்மாரிமிகவேபெய்யும் சேரேதான்மேற்கு முகந்தன்னிலப்பா சிறப்பானமண்மாரி மிகவேபெய்யும் கூரேதான் சந்தனமுமலரும்பாரு குறிப்பான செங்கழுநீர்பூர்க்குந்தானே. 369

தானைபாரிசாதம்மலரும்பாரு தாக்கானதேவதாபுட்பந்தானும் மானைமலைதனிலேபூர்க்கும்பாரு, மகத்தானகாடெல்லாமணமே வீசும், தேனைகதண்டுகளுங்கூண்டைவிட்டு, தேன்பொசிக்கக்காட்டகத்தைச்செல்லும்பாரு, கோனை அரசர்களுந்தேனையுண்ணகுவலயத்திலொருவருந்தான்பயப்படாரே. 370

பயமேதுவுலகுதனிலொன்றுமில்லை பாங்கான புலிபசுவுமொன்றாய்க்கூடி, நயமுடனேவோர்த்துறையில் நீர்குடிக்கும் கண்பானசற்பமதுசீரிதானும் செயமுடனேவோர்கூண்டில் விளையாடும்பார் செப்பிடவேகெருடனும் பாம்புதானும், தயம்பிடவே கூடிவிளையாடிருக்கும் தாரணிபிலதிசயங்கள் காணும்பாரே. 371

பார்க்கையிலேகுருடனவன் கண்திறப்பான்பாங்கானசெவிடனுக்குசத்தங்கேட்கும் தீர்க்கமுடன்ஊமையனும் வார்த்தைசொல்வாளதிறமானசப்பாணி நடப்பான்பாரு ஏற்கவேயித்தாதிமகிமையெல்லாம்யெழிலாகத் தானடக்கும்வருங்காலத்தில், ஆர்க்கவே போகருக்கு சொன்னவாக்குனப்பனே யுலகுதனில்நடக்குந்தானே. 372

தானாகவதியங்கள்மிகநடக்கும் தாக்கானசமாதி விட்டுவருகும் போதுபரனைபாரையதுவெடிக்கும்பாருபளிங்கானசொரூபமென்ற சோதிகாணிம், தேனைவருஷமதுமுகுவதாகும் தேவிமனோன்மணியாளின்கடாட்சத்தாலே, வேனைசமாதிவிட்டு வெளியில்யானும் விருப்பமுடன் வருவேனென்றியும்பினாரே. 373

கடுவெளிசித்தர் சமாதிவிட்டுவந்தது.

என்னவேகடுவெளியார் சித்துதாமும்யெழிவான கெடுவதுஞ்சென்றமேதான், பன்னவேசித்துவருங்காலமாச்சு பாங்கானசீடரெல்லாம்வந்திருந்தார், முன்னமேதாமுரைத்தவாக்கதெல்லாம் மூதுலகில்நிறைவேறநாளுமாச்சு, சொன்னதொருகாலமது முடிவுமாச்சு சுந்தரனார்சமாதியது வெடிக்கலாச்சே. 374

ஆச்சப்பாசமாதியது வெடிக்கலாச்சு ஆகாகாநாதாந்தவொளிவுதானும், பேச்சடங்கிப்போனதொரு தேகந்தானும்போரானமண்ணுலகில்பிறவியாச்சு, மூச்சடங்கிவெகுகாலமிருந்த சித்துமுதுலகைக்காண்பதற்குவந்தாரல்லோ, மாச்சலுடன்தேகமது தங்கம்போலாம்மகத்தாளரிடியாரைக் கண்டிட்டாரே. 375

கண்டாரேசீடர்களாங்கூட்டவர்க்கம்கனமானகடுவெளியார்சித்துதம்மை, அண்டாதசேனைமுடிமாண்பரெல்லாம்வன்பான சித்தொளியைக்கண்டுமேதான், தெண்டமுடனடிபணிந்து வஞ்சலித்துதெளி

வான நாதவெளிசித்துதம்மை, பண்டுளபசெங்கழுனி மாலைதன்னை பட்சமுடன்தான்போட்டு தொழுதிட்டாரே. 376

இட்டாரேபதாம்புயத்தைப் பணிந்துமேதான் யெழிலானசீடவர்க்கங் கூட்டத்தோடு, கட்டுடனேயவர் முகத்தைத்தானும்பார்த்து களிப்புடனே யவர்பக்கல் நிற்கும்போது, சட்டமுடன்கடுவெளியார் சத்து தாமும்சாங்கமுடன் சீடருக்குவுபதேசங்கள், விட்டகுறைதப்பாமல் சீடருக்கு விருப்பமுடன் வுபதேசஞ்செய்திட்டாரே. 377

செய்தாரே சீடருக்கு வுபதேசந்தள் செம்மலுடன் கடுவெளியார் சித்துதாமும், வையவேசமாதிவிட்டுவெளியேவந்து பாங்குடனேவாசிர்மந்தன்னிற் சென்று, வெய்யவேகதண்டு மகாரிடியார்தம்மைசிலதுகாலம் மேன்மையுடனிருக்கவென்று வந்திட்டேனே. 378

வந்தேனேயின்னமொரு யுகமிருந்துவளமையுடன் சமாதிக்குப் போவேனென்றும், அந்தமுடன்கதண்டுமாரிடியாருக்குவன்புடனே வாங்கதுவுமிகவுங்கூறி, முந்தினதோர்காலாங்கிசீடர்தம்மை மூதலகில் காண்பதற்கு யெண்ணங்கொண்டு சிந்தனையில்தானினைத்து சித்துதாமும் திட்டமுடன்போகர் தம்மைகேட்டிட்டாரே. 379

கடுவெளிசித்து சமாதிவிட்டு வந்தபிறகு போகரைகேட்பது.

கேட்டாரே சமாதிக்குமுன்னேயப்பா கிருபையுடன் சித்தொருவர் வந்தாரெங்கே, நீட்டமுடன் காலாங்கிசீடரென்று நிலையான குளிகையதுபூண்டுகொண்டு, வாட்டமுடனென்றன்முன்வாட்பேசி வளமான பவளமென்றமாலைபூண்டு, ஓட்டமுடன் சீனபதிபோன சித்து வுத்தமனே காணவென்று கேட்டிட்டாரே. 380

கடுவெளியார்பூர்வக்கியானத்தால் நினைக்கும்போது
போகநாதர் குளிகைபூண்டு யிறங்கினது.

கேட்கையிலேகடுவெளியார் சித்துதானும் கெவனமுடன்பூர்வீக்கியானத்தாலே, வேட்கமுடன் காலாங்கி சீடனல்லோவெளிப்பட்டார்க் குளிகைகொண்டு சீனம், விட்டுவாட்கமலவாஉத்தில்வீற்றிருக்கும்வண்மையுள்ள கடுவெளியார் சித்துமுன்னில்ஆட்படைகளில்லாமல் ரிடியார்தாமும் அவனிதனில் குளிகைகொண்டு யிறங்கினாரே.

இறங்கேயேகுளிகைவிட்டு சித்துதாமும் யெழிலான கடுவெளியார்முன்னேவந்து, திறமுடனே போகரிடிமுனிவர்தாமும் தீர்க்கமுடன் கடுவெளியார் சஞ்சலித்து, அறமுடைய தானமது மிகவும்

பூண்டு வன்புடனே கடுவெளியார் சித்தருக்கு, வுறமுடனே யணக்க மதுமிகவும் பூண்டுவுத்தமனார்போகரிடி பணிந்திட்டாரே. 382

பணியவே கடுவெளியார்சித்தருக்கு பட்சமுடனஞ்சலிகள் மிக வுஞ்செய்து, துணிவுடனேபோகரிடி முனிவர்தாமும் துப்புறவாய்க் கடுவெளியார் தம்மைக்காண, அணியானவாசீர் மந்தான் கொடுத்து வன்புடனேபக்கமது, சேர்வைகொண்டுயணியானகண்மணியேபோக நாதாமண்டலத்தில் மங்களாவென்றிட்டாரே. 383

என்றிடவேபோகமுனி ரிடியார்தாமும் யெழிலானமங்களாகர மேயென்று சென்றிடவே, பவளமதுபடியேன் பூண்டுசேனைபதிதிரள் கூட்டஞ், சீனஞ்சென்றேன் வென்றிடவேசீனபதி மார்க்கத்தாருக் கு விருப்பமுடன், பவளமென்ற காடுரைத்தேன் இன்றுமுதல் தங் களது வாசீர்மத்தால் யெழிலானசீனபதிசகலென்றாரே. 384

என்றுமே போகரிடிமுனிவர்தாமும் பெழிலான வதிசயங்கள் மிகவுங்கூறி, குன்றின் மேற்சந்திரனுதுவலயத்தில் குத்தெழுந்தபா வனைபோல் கூறலாகி, அன்றுமேகடு வெளியார்சித்தருக்கு வன்புட னே வார்த்தையது மிகவுங்கூறி, இன்பமுடன்தானிருந்தார் ரிடியார் தாமும் யெழிலான கடுவெளியார் துன்னேதானே. 385

கடுவெளிசித்து போகருக்கும் சீடருக்கும்

சமாதிக்குப் போடுரனென் றுரைத்தல்.

தானனபோகரிடி நாதாகேளும் தாரணியிலிருப்பதிற்பலனெ ன்றில்லை, தேனனமனோமணியாள்கிருபையாலே தேற்றமுடனுகா ந்தவரையதிசயங்கள், கோனனகுருசொன்ன வாக்கியம்போல்குவல யத்தி லனேகவிந்தை யானுங்கண்டேன், பானன பாருலகிலிருந்து மெ ன்னபாரைவிட்டு நீங்குவது நலமென்றாரே. 386

நலமானவார்த்தையது மிகவுங்கூறிநன்மையுடன் கடுவெளியார் சித்து தாமும், பலமானதேகமதை நம்பொண்ணுது பாரினிலே யிரு ந்தவர்களாருமில்லை, குலமான பதியைவிட்டு சிலதுகாலம் கொற்றவ னே சாதிதனிலிருப்பேனென்று, தலமுடனேகடுவெளியார் சித்து தாமும் சட்டமுடன் போகரிடிக்குரைத்திட்டாரே. 387

உரைக்கவே சமாதிசென்று வருகுமட்டும் உத்தமனேநீயுமல் லோ வன்புகூர்ந்து, திரைக்கவேசமாதிவிட்டு வருகும்போது தீர்க்க முடனுந்தனையுங் காணலாகும், குறையகற்றியுந்தனுக்குவாசிர்மங்கள் குறையாமல் மனதுவந்து, கூறுவேன்யான்வரையாது வாக்கதுவும் பொய்யாமற்றுன் வண்மையுடன்வுந்தனுக்கு போதிப்பேனே. 388

போகித்துக்கடுவெளியார்சித்துதாமும் பொங்கமுடன் சீடருக்குத்தாமுரைத்து, ஆதித்தன்வந்துதிக்கும் வேளைதன்னில்வன்பான சமாதியிடபக்கல்சென்று, வாதித்துசீடருடன்விடையும்பெற்றுவளமானகுழிதனிலேயிறங்கியல்லோ, பேதித்துபாறைதன்னை சீடருக்கு பிரியமுடன்மூடவென்று விடைதந்தாரே. 389

தந்தாரேசித்துமகாரிஷிபார்தாமும் தகமையுடன் சீடவர்க்கமானபேர்க்கு, விந்தைதனைமிகவுரைத்து சித்துதாமும் விருப்பமுடன் சீடருக்குவதிதஞ்சொல்லி, அந்தமுடன்நான்வருகுங்காலந்தன்னில் அதிசயங்கள்மிகநடக்கு மென்றுசொல்லி, சிந்தனையாய்த்தாமுரைத்துமண்ணிற்சென்று சிறப்பானவசரீரி கூறுவாரே. 390

கூறுவார்சித்துமகாசிஷியார்தாமும் குணமான சித்தர்வர்க்கமானபேர்க்கு, மாறுடையதேகமதுவருகும்போது மகத்தான வையகத்திலிடியுண்டாகும், வீறுடையமேகமதுதிரண்டுமேதான் வீரானமாரியதுயில்லாமற்றான், ஆறுதலம்தான்முழுகில் வதிதம்பாரு அவனியெல்லாமிடியென்றசத்தமாமே. 391

சத்தமாங்கோடையிடிபோலேகாணும் தகமையுள்ள நீரிடியும் நெருப்பிடியுங்காணும், நித்தமுமிடிமுக்கமதிகமாகும் நீடாழியுலகமெல்லாந்தத்தளிக்கும், வத்தியேசமுத்திரமும் சலமுங்காணும் வாரிதியுந்திசைமாறிநடுங்கும்பாரு, புத்தியுள்ளசீடர்களே மகிமைதோன்றும் புகழானசித்துவரும் நாளுமாச்சே. 392

நாளானகாலமதிலதிசமங்கள் நாடெல்லாஞ்சென்னல்கள்விளையும்பாரு, காடானபூண்டதுவும்பூர்க்கும்பாரு தருவானமூலிகைகள் கண்ணிற்றோற்றும், மாளாதமாண்பரெல்லாஞ் சிவயோகங்கள் மானிலத்தில்மிகப்பேசிவளமைசொல்லார், தூளானகாயகற்ப மூலிதானும் துப்புறவாய்கண்ணிற்குத் தோன்றும்பாரே. 393

பாரேதானதிசயங்கள்மிகநடக்கும் பாரினிலேசித்துவருங்காலந்தன்னில், நேரேதான்மேற்குமுகந் தன்னிலப்பா நிலையான சூரியனுமுதயமாவான், சேரேதானருந்துதிகள்யாவுந்தானும் செங்கையால் தான்தொடவேகிட்டிருக்கும், ஊரேதான்குடிபடைகள் யாவுந்தானும்வுத்தமர்களெந்தனையும் நினைப்பார்தானே. 394

நினைக்கையிலேயான்வருகுங்காலந்தன்னில்நீதியுடன்சமாதியதுவெடிக்கும்பாரு, புனைமேவுஞ்சமாதியதுவெடிக்கும்போது புகழானசெகசோதிதோற்றும்பாரு, வினைபோன்றசடலமது வெளியேயாகி வி

ருப்பமுடன்சித்துமுனிவந்துமேதான்,முனையானமூதுலகோர்நடுநடுங்க வுத்தமரும் வெளிதனிலேவந்திட்டாரே. 395

இட்டாரேசித்துமுனிவந்தபோது வெழிலானசீடவர்க்கங் கூட்டங்கூடி, திட்டமுடன்அவர்பாதந் தொழுதிட்டார்கள் சிறப்பான மாண்பரெல்லாம்வணங்கினின்றார், சட்டமுடன்சித்துமுனிசொன்ன வாக்கு தாரணியில்மெய்யாச்சு பார்க்கும்போது, வட்டமுடன் கடுவெளியார்சித்துதாமும் வண்மையுடன்லோக வதிசயங்கேட்டாரே.

கேட்டாரேலோகத்தின் புதுமையெல்லாங் கிருபையுடன் சீடவர்க்கந்தன்னைநோக்கி, நீட்டமுடன்சமாதிக்குயேகுமுன்னேநீதியுள்ளசிறுபாலன்போகநாதன், வாட்டமாங்காலாங்கி சீடனப்பா வளமானபோகரிஷிநாதன்றானும், ஆட்டமுடன்குளிகையது பூண்டுகொண்டுவன்புடனே வந்தசித்தெங்கென்றாரே. 397

எங்கென்றுகேட்கையிலேபோகநாதன் வெழிலானகுளிகையது பூண்டுகொண்டு, அங்ஙனவேசித்துவனம் நினைக்கும்போது அழகான போகர்முனிவந்திட்டாரும், புங்கமுடன் சித்துமுனிரிஷியார்தாமும் புகழானபோகரிஷிநாதருக்கு, துங்கமுடன் ஆசீர்மம் மிகவுஞ்செய்து துப்புரவாய்போகருக்கு வளஞ்சொன்னாரே. 398

சொன்னாரேகண்மணியே போகநாதா துறைகோடிவரைகோடி காலமப்பா, மன்னனபருவதமேயுன்னைக்கண்டு மார்க்கமுடன்முப்பதுவாண்டுமாச்சு, தென்னாகேள் சீனபதிக்குடையவேந்தே சிறப்பாக வுன்னையான்கண்டபோதே, முன்னோராங்காலாங்கி நாதசித்துமொழிந்தவொருவார்த்தை யெதிரில்லைதானே. 399

டில்லிக்குதென்கிழக்கு ஜெயமுனிவுற்பவம்.

தானனயின்னமொரு வயணங்கேளு, தகமையுள்ள டில்லிக்கு தென்கிழக்கே, கோனனை அளகாபுரியென்னுமூரும் குரிப்பான பதியொன்றுகுண்ணுமுண்டு, தேனனமனோன்மணியாள் கடாட்சத்தாலேதோற்றமுடன் புலிப்பாணிமைந்தாகேளு, பானனகாலாங்கிகிருபையாலே பாலகனே குளிகைகொண்டு சென்றேன்பாரே.

பாரேதான்குளிகைகொண்டு செல்லும்போது பாங்கானவழிதடமுமனேகங்கண்டேன், நேரேதான்டில்லிக்கு தென்கிழக்கே நேர்மையுடன்குளிகைகொண்டு யிறங்கினேன்யான், சீரேதானவ்விடத்திலுள்ளமாண்பர் சிறப்புடனேயென்னைவந்து கண்டாரங்கே ஊரேதான்குருப்படைகள்யாவுங்கண்டு வுத்தமர்களெந்தனுக்கு துதிசொன்னாரே. 401

துதித்துமேயெந்தனிடபக்கல்வந்து துறையோடு முறையோடு மஞ்சலித்து, மதிப்புடனேயெந்தனையும்யாரென்றார்கள் மகத்தான மாண்பரெல்லாங்கூட்டங்கூடி, பதியானமானகரம்வதிசயங்கள் பாரினிலேயிதுவரையில்கண்டதில்லை, ததிதாகத்தோற்றுகுது யென்று மல்லோ புத்தியுடன்மாண்பரெல்லாமயங்கினாரே. 402

போகரைக்கண்டமாண்பர்கள்செயமுனி சீடருக்குரைத்தல்.

மயங்கியேமாண்பரெல்லாங்கூட்டங்கூடி மகத்தானசெயமுனி யாசீடர்பக்கல், தயங்கியேசீடர்களைத்தானும் பார்த்துதாரணியில் புதுமையிதுயாங்கள்கண்டோம், நயம்படனே சீனபதிதேசம்விட்டு நலமானகாலாங்கிசீடன்றானும், செயமுடனேகுளிகைகொண்டு யிங்குவந்தார் சீரானமகத்துவங்கள் சொல்லொண்ணாதே. 403

ஒண்ணாதுசீடவர்கமானபேர்கள் ஓகோகோநாதாக்கள்யாரோ வென்று, நண்ணியேதன்மனதில்தானடக்கி யேகாந்தசித்தொளிவைக்காணவென்று, எண்ணியேசீடவர்க்கமாயிரம்பேர் நலமுடனேயெந்தனையுங்காணவென்று, வண்ணமுடன்யெந்தனையா ரென்றுகேட்க வண்மையுடன்காலாங்கிசீடனென்றேன். 404

யென்றேனேயடியேனுஞ்சொல்லும்போது யெழிலானசீடவர்க்கமெந்தனுக் , வென்றிடவேகாலாங்கிசீடர்களும் வீரானகானகத்தில்வரலாமோசொல், குன்றானமலையுண்டுகுகைதானுண்டு குவலயத்தில்மாமுனிவர்கண்டதில்லை, இன்றுநீவந்ததினாலுந்தனுக்கு யெழிலானசாபமதுமெய்தும்பாரே. 405

எய்யுமேசாபம்வருமென்றுமல்லோ யெழிலானசீடவர்க்கங்கூறும்போது, பையவேயெந்தனுக்குபயமுமாகி பாரமுடன்கைசோர்ந்துமெய்யுஞ்சோர்ந்து, நையவேயடியேனு சீடர்தம்மை நடுக்கமுடன்யானுமல்லோவஞ்சலித்து, துய்யவேகாலாங்கி சீடனென்றேன் துரைராசரெந்தனையும் மன்னித்தாரே. 406

மன்னித்துயெந்தனுக்குசாபந்தன்னை மதிப்புடனேஜெயமுனியார்பக்கல்சென்று, கன்னியமாய்செயமுனியாதன்னைநோக்கி கர்த்தாவாம்சிததுமுனியடிபணிந்து, இன்னிலத்தில்சீனபதி மனிதன்றானும் யெழிலானகுளிகையதுகூண்டுகொண்டு, துன்னிலங்கண்ணாம் போகநாதன் துப்புறவாய்க்காணவல்லோவந்திட்டாரே. 407

போகர் செயமுனியைக்கண்டது.

வந்தாரேபோகரிஷியென்றுதாமும் வளமாகத்தாமுரைத்தார் சீடவர்க்கம், அந்தமுடன்செயமுனிக்குக்கூறும்போது வன்புள்ளசெ

யமுனி பாரிஷிபார்தாமும், சொந்தமுடன்ரிஷியாருமன்புகூர்ந்து சுத்தமுடனெந்தனையும்வரவழைத்து, சிந்தனையாய்காலாங்கிசீடர்கேளு சிற்பரனேவந்ததினுல்குற்றமாச்சே. 408

ஆச்சப்பாபோகமுனிசொல்லக்கேளும் அன்பானயென்வார்த்தையுந்தனுக்கு, பாச்சலுடன்சீனபதிவிட்டுமல்லோ பாருலகில்வந்ததொருவதிசயங்கள், மாச்சலுடன்யென்னவதிசயங்கள்காண மன்னவனேயேன்வந்தாயென்றுகேட்க, நீச்சமுடனடியேனுமிகநடுங்கிநிஷ்மளமாய்த்தானுரைத்தேனுண்மைதானே. 409

உண்மையாயடியேனுமுரைத்தபோது உத்தமனார்செயமுனியாரெந்தனுக்கு, நண்மைபெறவுபதேசமிகவுஞ்செய்து தீரமுடன்சகலகலைக்கியானமெல்லாம், வண்மையுடனெந்தனுக்கு வுபதேசித்து வகை மானம் தொகைமானஞ் சொல்லிட்டாரே. 410

சொல்லவேயடியேனுமனதுவந்து துப்புரவாஞ்ஞானந்தனைமறந்து, வெல்லவேமெய்ஞ்ஞானமுட்புகுந்து மேதினியில்யானுமொருசித்தனுகி, சல்லியங்கள்சாத்திரமுமிகவுங்கற்று தாரணியில்கருவாளியானுமாகி, தெள்ளியமாம்வித்தைதனில்முதல்வனுகி தேசத்தில் வஞ்சனமாஞ்சித்தானேனே. 411

போகர்சல்லியவித்தைசெய்து.

சித்தானேசிலகாலஞ்சென்றயானும் செயமுனியார்பாதாரவிந்தத்தாலே, சத்தானலோகமதிலிருக்குந்தானம் தகமையுள்ளநிதிகளெல்லாந்தானெடுக்க, எத்தனங்கள்மிகச்செய்துபுனிதவானுய்யெழிலானசாத்திரத்தைக்கையிலேந்தி, முத்தானயுலகமெல்லாமிகமதிக்க வுத்தமனேதிரிந்தேனே போகர்தானே. 412

போகரென்றுசொல்லவென்றுல்லோகந்தன்னில்பொங்கமுடன் கண்டவர்கள்தானடுங்க, யோகமுடன்திக்கெல்லாந்திரண்டுமல்லோ யெந்தனையுங்காணுதற்குவெகுஜனங்கள், சாங்கமுடன்கண்டல்லோ யடியேனுக்கு சட்டமுடன்சோடசோபசாரஞ்செய்து, வேகமுடன்நிதியெடுக்கயெந்தனைத்தான் மேதினியிலழைத்தவர்கள் கோடியாமே.

கோடியாம்நிதியெடுக்கயென்னைத்தானும் கொற்றவர்கள்கூட்டியல்லோதேசந்தன்னில், நீடியேதிரவியங்கள்கண்டெடுக்க நிட்களமாய்வுறுதிமிகப்பாடுசெய்து, நாடியேசாத்திரத்திலுளவுபார்த்து நாதாந்தசித்தொளிவைமனதிலுன்னி, வாடியேதிரியாம லடியேன்றானும் வண்மையுடனெடுக்கலுற்றேன்நிதிகள்தானே. 414

காணானநிதிகளதுயெடுக்கவென்ன தட்சணமும்மலைபமுனிபாசீர்மத்தில், கேனானகுருக்கள்முதல்சித்துபாவும்கூட்டியேயென்னையழைத்துக்கொண்டுசென்றார், மானானமனோன்மணியாள் கிருபையாலேமகத்தானநிதியெடுக்க சென்றேனங்கே, தேனானதென்மலைபாங் கடலோரத்தில் தேற்றமுடன்யான்சென்றேன் பதிதானுண்டே.

உண்டானபொதிகைமலைதன்னிலப்பா வுத்தமனேசல்லியசாத்திரத்தின்மார்க்கம், கண்டுமேயடியேனும் மிகவாராய்ந்து கருத்துடனேதானெடுத்தேன்கோடியுண்டாம், வண்டமிழ்சொல்வங்கத்தார்கூட்டங்கூடி வளமானநிதிகளெல்லாமெனக்குப்பாதி, கொண்டுபோமென்றெனக்குவிடைகள்தந்தார் கொற்றவர்கள் சங்கத்தார் புலவர்தாமே.

தாமானநிதிகளெல்லமடியேன்றானுந் தண்மையுடன்ஜெபமுனியார்பக்கலாக, பூமானும்ரிஷியின் மகாதேவர்பக்கம் பொங்கமுடன்கொண்டல்லோயொப்பிவைத்தேன், சாமானமாதவொரு திரவியத்தைசட்டமுடன்யெந்தனுக்காய் கொடுத்துவிட்டார், ஆமானமாகவேதானடியேன்றானும் வண்புடனேசீனபதிக் கொடுசென்றேனே.

சென்றேனேதிரவியங்களனைத்துமல்லோ சிறப்புடனே யானுமல்லோசீனத்தார்க்கு, துன்றானதிரவியங்கள் செம்பொன்னெல்லாம் கொட்டினேன்மலைபோலேதங்கமப்பா, என்றன்மேல்பட்சம்வைத்து நிதிகள்தம்மை யெழிலாகதான்கேட்டார் சீனத்தார்கள், வென்றிடவேஜயமுனியாரைக்கண்டேன் வேதாந்தரிஷியாருமருள்செய்தாரே.

அருளானமகிமையதுமெத்தவுண்டு வண்பானசீனபதிமார்க்கத்தோரே, பொருளானதிரவியங்கள்யெடுப்பதற்கு பொங்கமுடன் வித்தைமிகக்கற்றுவந்தேன், தெருளானதேசமெல்லாந் திரிந்துமேதான்தேற்றமுடன் தென்பொதிகைகொண்டுசென்றார், இருளானகாட்டடயதையான்கடந்து யெழிலானதென்பொதிகைகண்டிட்டேனே.

கண்டேனேபொதிகைமலைக் கடலோரந்தான் காறுறுவோடைமுதல்தான்கடந்து, அண்டமுனிருட்சதர்கள் காணாடு அழகானதென்பொதிகைசாரலப்பா, தண்டலங்கள்தாமறியார் கடலோரந்தான்தகமையுள்ளசாரலது கொண்டுசென்றார், விண்டலமுமறியாத குண்ணுவப்பா வீராறுசுனையருகில் சென்றேன்பாரே. 420

பாரேதான்சல்லியத்தின் சாத்திரந்தான்பாங்கானகணிதமென்றபடிதானப்பா, நேரேதான் பாதனங் கிழக்குத்தன்னில் நேர்மையு

டன் வஞ்சனத்தைப்பார்க்கும்போது, சிரேதான் திரவியங்கள்கிடார வைப்புசிறப்பானமலைதனிலே கோடியுண்டு, கூரேதான் வைப்பதனை ச்சல்லியத்தால் கொற்றவனே பெடுத்தேதனேகோடியாமே. 421

கோடியென்றபொன்னையெல்லா முந்தக்மகாய் கொப்பெனவே கொடுவந்தேன்யென்றுரைத்தேன், வாடியேதிரியாமல் மனம்விடா மல்மகிதலத்திலுங்களுக்கு குறைவுநேரா, நீடியேயுகாந்தவரை செல்வந்தாலும் நீட்சியுடன்குறையாமல் செய்துவைத்தேன், ஆடியேவகஸ்தியனார் மலையிலப்பா வன்பானதிறவியத்தின் மகிமைதானே.

போகர் சொர்னகிரிநிதிகண்டது.

மகிமையாமின்னமொரு மாற்கஞ்சொல்வேன் மகத்தான நிதியனைத்துங்கோடியுண்டு, அகிலமெலாந்தானெடுத்துவப்பாகேளும் வன்புடனேயுங்களுக்காயளிப்பேனென்றேன், சகலமுடன்மாண்பர்களும்வினயங்கேட்டு சட்டமுடன்சாத்திரத்தைக்கேட்கலுற்றார், விகிதமுடன்சாபமதுநிவர்த்திசெய்து வெத்தியுடன் யான்கொடுப்பே னென்றிட்டேனே. 423

இட்டேனேசீனபதியுலகத்தோற்கு யெழிலான திரவியத்தின் பெருமைசொன்னேன், சட்டமுடன்சாத்திரத்தையிதவுகேட்டு சாங்கமுடன்சாபமதை நிவர்த்திசெய்து, வட்டமுடன்யான்றருவேனெள்றுரைத்துமளமானவுறுதிமொழி மிகவுங்கூறி, திட்டமுடன்சொர்னகிரிமேரு—சென்றேன் தீரமுடன்சீனவர்க்கங் காட்டினேனே.

கண்டேனேசீனவர்க்கமாயிரம்பேர் கருவானமாண்பர்களுக்கெந்தனைத்தான், கெண்டமுடன்வஞ்சலிகள்மிகவுஞ்செய்து தோற்றமுடன்யாரென்றுகேட்கலுற்றார், உண்டானசாத்திரத்திலுண்மைசொன்னேன் உத்தமர்கள்யெந்தனையு மெச்சியேதான், கொண்டணைத்து சொர்னகிரிசித்தர்பக்கம் கொப்பெனவே கொண்டுபோய் விட்டார் காணே. 425

காணவேயடியேனைசித்துதாமும் கனமுடனே யெந்தன்மேல்பட்சம்வைத்து, கூணவேயாசீர்மந்தான்கொடுத்து பொங்கமுடனெந்தனையுமாறென்றென்ன, காணவேயடியேனுஞ்சினம்விட்டு நலமுடனேசொர்ணகிரிவந்தேனென்றேன், பாணமுள்ளகாலாங்கி சீடனென்றேன்கைதொழுதுமெய்வணங்கி கலங்கினேனே. 426

கலங்கியேநிற்கையிலேரிடியார்தாமுங் கருணையுடன் எந்தனுக்குவாசீர்மங்கள், துலங்கவேதான்கொடுத்தார் எந்தனுக்குதுப்புரவா

யடியேனுமீதிருந்து, விலங்கவேசல்லியமாஞ்சாத்திரத்தை விருப்பமு டன்யானுரைத்தேன் ரிடியாருக்கு, நலமுடனே சல்லியங்கள்கூறும் போது நாதாந்தசித்தொளிவும் மதித்தார்பாரே. 427

மதிப்புடனேரிடியாருஞ் சொல்லும்போது மார்க்கமுடனடியே னுறைத்தேனங்கே, பதியானபதிவிட்டு திரவியங்கள் பட்சமுடனிவ் விடத்தில்வந்தேன்யானும், நிதியானதிரவியங்கள் கோடாகோடிநீட் சியுடனெடுப்பதற்கையமில்லை, விதியானமுறைபடியே சாத்திரத்தை விருப்பமுடன் பேதித்து யெடுப்பேன்தானே. 428

போகர் சொர்ணகிரியில் நிதியெடுத்தது.

எடுப்பேனென் றுரைக்கையிலே ரிடியார்தாமும் யெந்தனுக்கு விடைதந்தாருண்மையாக, ஒடுக்கமுடன்யானுமல்லோ சல்லியத்தை வுத்தரித்தேன்சொர்ணகிரிமலையிலப்பா, அடுத்துமேஅஞ்சனத்தைப் போடும்போது அதாளபாதாளபூதமெல்லா தடுத்துமேபூதமெல்லாங் கிடாரந்தன்னை தட்டழிந்து கெடுப்பதற்கு யெண்ணமாச்சே 429

எண்ணங்கள் மிகக்கொண்டு பூதமெல்லாம்யெழிலான லனுமா ரையடித்துத்தள்ளும், குண்ணருமேகிடாரத்தைசுத்தியல்லோ கூற வேமுடியாது பூதங்காவல், அண்ணமுடன்சல்லியங்கள்பார்க்கும் போது அஞ்சனமேதவியின்றன்பூசையாலே, திண்ணமுடனெடுப்பத ற்குதயிரியங்கள் திறமானசல்லியத்தில் செப்பலாச்சே. 430

செப்பவே சல்லியங்கள்கூறும்போது செம்மையுடன் பின்னும் யான்வுச்சரித்தேன் வப்பாலேபூதமெல்லாம் நடுநடுங்கி அம்மலையை விட்டுமல்லோ, யேகலாச்சு ஒப்பவேயெந்தனுக்குநிதிகளெல்லாஓகோ கோபூதங்கள்கொடுக்கலாச்சு, தப்பிதங்கள் நேராமல்நிதியனைத்தும் நிரங்கமுடன்ரிடியாருக் கொப்பித்தேனே. 431

ஒப்பித்தேன் வரைகோடிதங்கக்காசு ஓகோகோராமருடவைப்பு வல்லோ இப்புவியில் ராமருடவராகனப்பா யெவர்காண்பர்விதியாளி கண்டேனல்லோ, செப்பிடவே சிவராசரிடியார்தாமும்திரளானநிதி யனைத்துங்கண்ணுற்கண்டு ஒப்புறவேயெந்தனுக்குபாதிதந்தார்வுத்த மனார் ரிடியாருமுண்மைபாரே. 432

பாரேதான்புலிப்பாணி மைந்தாகேளுபட்சமுடனெந்தனுக்குரி டியார்தாமும், நேரேதானிடைபாதியெனக்குத்தந்தார்நேர்மையுடன் திரவியங்களனைத்துமல்லோ, மீதரேதான் செம்பொன்னின்வராகந்

தன்னைதேற்றமுட னெந்தனுக்குத்தகமைகூர்ந்து, ஊரேதான்கொடும்போகயெனக்குச்சித்து வுத்தமனுர்வுத்தாரந் தந்திட்டாரே.

தந்தவுடனடியேனும்நிதிகளெல்லாம் தண்மையுடன் சீனபதிக்கொண்டுசென்றேன், சொந்தமுடன்சீனபதிமாண்பருக்கு சொர்னமென்றநிதியனைத்துங்கொடுத்தேன்யானும், வந்ததொருமாண்பரெல்லாம் நிதியைக்கண்டு, வளமுடனேயெந்தனையும்விசாரித்தார்கள் இந்ததொருதிரவியத்தின் பெருமைதன்னை எவராலுஞ்சொல்லநாவில்லைதானே. 434

தானனதிரவியத்தின் பெருமைதன்னை தாரணியில்வெகுமாண்பர்கண்டதில்லை, தேனனமனோன்மணிய ள் கடாட்சத்தாலே தேடிவைத்தநிதிகளெல்லாங் கண்டாறாய்ந்தேன், மானனவுலகுதனில் சல்லியத்தின்ரெங்கான சாத்திரத்தைக் கண்டாறாய்ந்தேன்,மானனசீனபதிமாற்கத்தோர்க்கு மகத்தானதிரவியங்கள் கொடுத்திட்டேனே.

இட்டனேவெகுகோடி திரவியங்கள் எழிலானசீனபதிமாண்பருக்கு, திட்டமுடன்யான்கொடுத்தேன் கோடாகோடி தீரமுடன் சீனத்துப்பெண்களுக்கு, சட்டமுடன்சீனத்துப்பெண்களுக்கு சாங்கமுடன்யான்கொடுத்தநிதியினாலே, பட்டமுடன் நிதியதுவும் வந்தவாறு பட்சமுடனெந்தனைக்கேட்டார்பாரே 436

கேட்டதொருபெண்களுக்குயானுமல்லோ கிருபையுடன்மனங்களித்துச்சொன்னேன்யானும், வாட்டமுடன்குளிகைகொண்டுலோகஞ்சுத்திவண்மையுடன் வெகுமலைகள் கண்டாறாய்ந்து, நீட்டமுடன்நிதியினுடவாசீர்மங்கள் நீட்சியுடன்யான்சென்று தொண்டுசெய்து நாட்டமுடனவர்பணிக்கு முன்னேநின்று நலமானவாசீர்மம் பெற்றேன்தானே. 437

தானனவாசிர்மம்பெற்றுமேதான் தகமையுள்ளசல்லியமாஞ்சாத்திரத்தை, கோனனயெனதையர் காலாங்கிநாதர்கொற்றவனார்தன் பாதகடாட்சத்தாலும், தேனனமனோன்மணியாள் கிருபையாலும் தேர்ந்தெடுத்தேன் சல்லியமாங்கோர்வைநூலை, பானனவையகத்தில் நூலைக் காண்டு பார்த்தேனே மலைமுதலும் வளங்கள்தாமே.

வளமானமலைதோறும்யானுஞ்சென்றுவண்மையுடன் நிதிகளெல்லாங்கண்டெடுத்தேன்,தளமுடனேசொர்னமென்றகிரியில்யானும் சட்டமுடன்சல்லியமாஞ்சாத்திரத்தில்,அவ்வுடனேமையதனைத்தீட்டியேதான்வன்புடனே ராமர்வைத்தவைப்புதன்னை, களவுடனேபூதமதை யகற்றிப்போட்டு காசினியில்திரவியங்கள் பெற்றேன்பாரே.

பாரேதான்ராமருடவராகந்தன்னை பாங்கானமுத்திரையோடெ டுத்தேன்யானும், நேரேதான்ராமருடவடையாளங்கள் நெடிதானமு த்திரையாந்தங்கக்காசு, சீரேதான்கிடாரவைப்புகண்டெடுத்துசிறப்பு டனேயங்களுக்காய்கொண்டுவந்தேன், வேரேதான்மற்றோராலெடுக் கப்போமோ விருப்பமுடன்நான்கண்டேனுண்மைதானே. 440

ஸ்ரீராமர்முத்திரைவராகனைக்கண்டு சீனத்தார் தங்கக்காசு செய்தது.

தானான ராமருடவராகந்தன்னை தகமையுள்ளசீனபதிதேசத்தார் கள், மானானசெம்பொன்னின் காசிதன்னை மகத்தான முத்திரையும் தளமுங்கண்டு, தேனானதென்பொதிகைசாரல்தன்னில்சிறப்புடனே தானெடுத்ததங்கக்காசு, கோனானபெனதையர்காலாங்கிநாதர் குறிப் புடனேசொன்னதொருகாசுமாமே. 441

காசானசெம்பொன்னின் தங்கக்காசு சருவாகக்கண்டல்லோசீ னத்தார்கள், நேசமுடன்ராமருடவராகன்போலும் நேர்மையுடன்ரா ஜாதிராஜன்போலும், பாசமுடன்பரங்கியென்றதங்கக்காசுபலபலவா ந்தேசமதில்செய்யலாச்சு மாசில்லாதங்கமதுதசமற்றுகமன்னவராஞ் சீனபதியமைந்திட்டாரே. 442

அமைத்தாரேபலபலவாம்வர்ணமாகும் வப்பனேசீனபதிமார்க் கத்தோர்கள், சமைத்தாரேமதியாலேகாசுதன்னை சட்டமுடன்தான மைத்தார்வித்தைதங்கோடி, இமையமல்ரூபமதைத்தானழைத்துயெழி லானராஜபதிமாண்பருக்கு, சுவைபோலுந்தங்கமென்றகாசுதன்னைகூ ட்டினூர்நாவில்லைசொல்லொண்ணாதே. 443

ஜெயமுனிசமாதிக்குயேகல்

ஒண்ணாதுயின்னமொருமார்க்கஞ்சொல்வேன் ஓகோநாதாக்கள் மருத்துவந்தான், எண்ணாதுபுலிப்பாணிமைந்தாகேளுயெழிலானகா லாங்சொன்னநீதி, திண்ணமுடன்தேசமலாஞ்சுத்தியல்லோதேற்றமு டன்ஜெயமுனியைக்கண்டேன்யானும், வண்ணமுடன்வெகுகாலமிரு ந்தசித்து மார்கமுடன்சமாதிதனைக்காண்பேன்பாரே. 444

காணவேபோகருஞ்சொல்லும்போது கருவானஜெயமுனியார் சீஷவர்க்கம், பூணவேஜெயமுனியார்சித்துதாமும் புகழானசீடவர்க் கந்தனையழைத்து, தோணவேயெந்தனுக்குசமாதிதானும் துபபுரவா ய்யாநடையமனமுங்கொண்டேன், நீணவேகாசினியிலாசையற்றேன் நிட்களமாய்சமாதிசெல்வேனென்றிட்டாரே. 445

இட்டாரேசெயமுனியார்சித்துதாமும்யெழிலானவடகோடிகா னகத்தில், திட்டமுடன்தென்பொதிகைச்சாரல்தன்னில் திகழுட னே சமாதிக்குயிடமுந்தேட, வட்டமுடன் சீஷவர்க்க மனதுவந்து மகத்தானசமாதியது யிடமுந்தேடி, அட்டமுடன்குழியதுவுந் தோ ண்டியேதான் அழகானசமாதியதுகட்டிட்டாரே. 446

கட்டவேசமாதியதுயென்னசொல்வேன்கைலாசசெயமுனியார் சித்துதாமும், திட்டமுடன்சமாதிக்குச்செல்வேனென்றுசிறப்புடநே சீடவர்க்கந்தனையழைத்து, மட்டவிழ்கொள்மாண்பர்களேசீமானே கேள்மகத்தானசமாதிக்குசெல்லப்போறேன், இட்டமுடன்நீங்களெ ல்லாங்கிட்டிருந்து யெளிவானசமாதிதனை முடிப்போடே. 447

செயமுனியார்சமாதியில் சென்றபோது அசரீரிவாக்கு

போடென்றுசொல்லுகையில்சித்தர்தாமும்பொங்கமுடன்சீடவ ர்க்கங்கிட்டிழிந்து, கூடேதானுபவாசந்தானிருந்து கொற்றவனா செயமுனியார்சித்துதாமும், வீடேதான்கற்பாறைமேலேமூடிவிருப் பமுடன்மண்ணதனை மேலேதூவி, சாடவேசமாதியதுபொதித்துமே தான் சட்டமுடன்செய்யவென்றுமொழிசொன்னாரே. 448

சொன்னாரேசெயமுனிபார்சித்துதாமும் தோற்றமுடன்வசரீரி கூறலாச்சு, மன்னாகேள்நான்வருருங்காலந்தன்னில்மகத்தானவதிசய ங்கள்மிகநடக்கும், இன்னிலத்தில்குருடரெல்லாங் கண்திறப்பார்யெ ழிலானவூமையள்பேசுவான்பார், பன்னவேசப்பாணிநடப்பான்பாரு பாருலகில்செவிடனெளிகேட்குந்தானே. 449

தானானதேன்மாரிபொழியும்பாருதண்மையுள்ளபிரலயங்கலதிக ங்காணும், கோமானாய்வேந்தர்களும்போரேசெய்வார்குவலயத்தில்மா ண்பரெல்லாம்போரில்மாள்வார், தேனானமனோன்மணியாள்தேசம்மா றிதிசைகெட்டுபதிகெட்டுதிருமபிநிற்பார், பானானவுலகமெல்லாமெ ன்னைப்போற்றி பட்சமுடன் துதிசெய்வார்காண்பீர்தானே. 450

காணவேயிருபதுவாண்டுமட்டும்காசினியையான்மறந்து சமாதி நின்றுபூணவேநான்வருருங்காலந்தன்னில் புகழாகசீடவர்க்கமெல்லா ருந்தான், வேணவேசமாதிவிட்டுவருகும்போது விருப்பமுடனென் பக்கல்நின்றுமல்லோ, மாணவேசமாதியதுவெடிக்கும்போது மண்ட லத்தில்பாறையதுவெடிக்கும்பாரே 451

பாரேதான்சித்துவருங்காலந்தன்னில்பாருலகில்சீடவர்க்கமெல் லாருந்தான், நேரேதான்சமாதியதுவெடிக்குமுன்னே நேர்மையாந்தி

ருக்கூட்டமாண்பரோடும், சீரேதான்சமாதியதுமுன்னேநின்றுசிறப்பானசித்துவருங்காலமென்று, தீரேதான்வெகுகோடி மாண்பராலே தீர்க்கமுடன்சமாதியிட மிருந்தார்தாமே. 452

இருந்தாரேகோடிவர்க்கசேனையோடு எழிலானசமாதியதிமுன்னேநிற்க, பொருந்தவேசமாதியது வெடித்துமல்லோபொங்கமுடன் நாதாந்தசித்துதாமும், திருந்தவேகயாதி கர்ப்பங்கொண்ட தேகமது ஜெகஞ்சாதிமின்னல்போல, வருந்தவேசித்துமகாரிஷிபார்தாமும்வையகத்தில்வந்ததொரு வண்மைபாரே. 453

செயமுனிவர் இரண்டாவது சமாதிக்கேகல்.

வண்மையாஞ்செயமுனியார் சித்துதாமும் வையகத்தைத்தான் மறந்துவந்துமல்லோ, வுண்மையாய்தேகமது யிருந்துமென்ன ஓகோகோநாதாக்கள்கோடிபேர்கள், திண்மையுடன்வையகத்தை மறந்துமல்லோ திகழானசமாதிக்குச்சென்றார்தாமும், பன்மையாய் நான்சிலதுகாலந்தன்னில் பட்சமுடன் சமாதிக்குப்போகநன்றே. 454

நன்மையுடன்சமாதிக்குப்பின்னுமோர் நாதாந்தசொரூபரங்கே மனதுவந்து, வன்மைசெறிபாக்கியமும்நாடுதானும் வளமானநன்னகந்தான்மறந்து, துன்மையெனும்வையகத்தில் வாழ்க்கையற்றுதுப்புரவாய்சமாதிக்குப்போறேனென்று, தன்மையாம்சித்துமுனி சொரூபானந்தர் சட்டமுடன்சமாதிக்கியேகினாரே. 455

ஏகவேசெயமுனியார்சித்துதாமும் யெழிலானசமாதிக்குப்போகவென்று, சாகமுடன் திருப்பாலிகடலோரந்தான் சட்டமுடன்சமாதிக்குயேகவென்று, நாகமுடன்சீடவர்க்கக்கூட்டத்தோடுநலமுடனே சமாதிக்குமுன்னதாக, பாகமுடன் செயமுனியார்சித்துதாமும் பட்சமுடன்சீஷரொடுசென்றிட்டாரே. 456

சென்றாரேசெயமுனியார் சித்துதாமும் செழிப்பான சமாதியதுதோண்டவென்று, நின்றதொருசமாதியதுதோண்டியல்லோ நிட்கஎமாயகல்லாலே அறையுண்டாக்கி, வென்றிடவேகற்பாறைத் தானமைத்து விருப்பமுடன்சீடவர்க்க மாண்பரோடு, கன்றாமல் செயமுனியார்சித்துதாமுங் காசினியைத்தான்மறந்து யேகினாரே. 457

ஏகவேசமாதிக்குச்செல்கவென்று யெழிலானசெயமுனியார் சித்துதாமும், பாகமுடன்சமாதிதனிலிறங்கியல்லோ பட்சமுடன்சீடருக்குக்கூறலுற்றார், வேகமுடன்கற்பாறைமூடிப்போட விருப்பமுட

ன்சீடவர்க்கமுறைத்தபோது, தோகமுடன் சீடவர்க்கமெல்லாங் கூடி தோருமல் பாறைதனைமூடிப்பாரே. 458

மூடவேசெயமுனியார்சித்துதாமும் முனையானசமாதிதனிலிருந்துகொண்டு, நீடவேயசரீரிவாக்குதானும் நிட்களமாய்த் தானுரைத்தார்சீடருக்கு, கூடவேமுப்பதுவாண்டுமட்டுங் குறையாமல்பூமிதனிலிருந்துகொண்டு, ஆடவேவையகத்தையான்மறந்து அவனிதனில்வருவேனென்றுரைத்திட்டாரே. 459

உரைத்துமேசிலகாலஞ்சென்றபின்பு ஓகோகோநாதாக்கள் சித்துதம்மால், திரைப்புடனேமருபடியும் வருவேனென்றுதிட்டமுடன் செயமுனியார்சொன்னவாக்கு, நிரைப்புடனே முப்பதுவாண்டுசென்று நேர்மையுடன்சீடவர்க்கம்வந்துநிற்க, மறைப்பில்லாசித்துமுனிநாதர்தாமும் மார்க்கமுடன்சமாதிவிட்டு வந்திட்டாரே. 460

வந்தாரேசித்துமுனிரிஷியார்தாமும் மார்க்கமுடன்வையகத்தைக்காணவென்று, சொந்தமுடன்சமாதிவிட்டு வந்துமல்லோ தோற்றமுடன்சீடவர்க்கங்காண்பதாச்சு, அந்தமுடன்சீடாதி சீடரெல்லாம் வன்புடனேகுருதனையேவாழ்த்தினின்று, சிந்தனைகள்மிகத்தீர்ந்துகுருவின்பாதம் சிறப்புடனேமாணபரெல்லாம் பணிந்திட்டாரே.

பணியவேசித்துமகாரிஷியார்தாமும் பாங்குடனே சீடவர்க்கந்தாமுரைப்பார், அணியுடனேவையகத்திஞைசைதன்னை வன்புடனேயொழிப்பதுவுமெத்தநன்று, துணிவுடனேவையகத்திலிருந்துமென்ன துப்புரவாய்த்தேகமதை யொழித்தேனென்று, பணிவுடனே சமாதிக்குப்போரேனென்று பண்பாகத்தாமுரைத்தார் சித்துதாமே.

சித்தானசெயமுனியார்ரிஷியார்தாமும் சிறப்புடனே வையகத்தைத்தான்மறந்து, முத்தானசமாதிக்குப்போரேனப்பா மூதுலகில்மறுபடியும்வருவதில்லை, பத்தானசீடவர்க்கமானபேரே பாரைகொண்டுயெந்தனையுமூடவேண்டும், சுத்தமுடன்சதாகாலம் பூசைவர்க்கம்சுடரொளியாந்தீபமதை வைக்கநன்றே. 463

நன்றானசமாதியிலேபூசைமார்க்கம் நாடோறும்நடத்திவருங்காலந்தன்னில், குன்றானகோவேந்தரென்னைத்தானுங்கொற்றவனர்செயமுனியாரெங்கேபோனார், பன்றான்பரமகுருநாதர்தம்மின் பாதாரவிந்துமதுயடைந்தானென்றும், வென்றிடவேயதிசயங்கள்மிகவுரைத்துமேதினியிலாசையது ஒழிப்பீர்தானே. 464

போகர் செயமுனியார் வரலாறுகூறல்.

வானான புலிப்பாணி மைந்தாகேளு தகமையுள்ள செயமுனியார்சித்துதாமும், பானான வையகத்தினைசையற்று பரமகுரு நாதரதுபாதஞ்சேர்ந்தார், தேனான யெனதையர் காலாங்கிநாதர் தேற்றமுடனெந்தனுக்கு சொன்னநீதி, கோனான குருபரனார் செயமுனியார் தாமும் குவலயத்தி னைசைதனை மறந்தார்பாரே. 465

மறந்தாரே செயமுனியார் சித்துதாமும் மகத்தான வையகத்தினைசையெல்லாம், துறந்தாரேபதினாறு பிரமாவைத்தான் துப்புரவாய் யுகங்கடந்து சித்துதாமும், திறமுடனே சகலகலையறிந்து மென்ன திக்கெங்குமொரு குடையிலாண்டுமென்ன, அறமதுவும் வழுவாமல் செய்துமென்ன அவனிதனில் செயமுனியும் மண்ணானாரே. 466

மண்ணாகிப்போனாரே சித்துதாமும் மகத்தான வையகத்தினைசையற்று, கண்ணபிரான் முதலானோர் மண்ணில்மாண்டார் காசினிலாயிருந்தார் வுலகுதன்னில், வண்ணமுடன் சித்துமுனி ரிஷியார்தாமும் வளமுடனே யிப்படியே மாண்டாரல்லோ, எண்ணமது கொண்டல்லோ வுலகுதன்னில் யெழிலானவாசையது வொழிந்திட்டாரே.

ஒழித்தாரே யிப்படியோவனேகஞ்சித்து வொப்புரவே கலியுகத்தினைசையெல்லாம், வழிப்படவே யொழித்தவர்கள் கோடாகோடி வைகுண்ட பதவிதனை யடைந்தார்கோடி, பழிதனக்குயிடங்கொடா வண்ணமாக பாருலகில் சடமொழித்தார் சித்துதாமும், அழியாத சடலமது வழிந்துபோச்சு வப்பனையுலகமதி லொன்றுங்காணே.

காணவேயிப்பெரிய சித்துதம்மை காசினியில் சித்தர்முனியென்னலாகும், தோணவே தவங்கிடந்த ரிஷியார்தம்மை தொல்லுலகில் தெய்வமென்று செப்பலாமோ, வேணபடி வையகத்துமாண்ப ரெல்லாம் விருப்பமுடனிப்படியே மாய்ந்தாரல்லோ, காணவேசித்தர்களின் வர்க்கமெல்லாம் நானிலத்தி லிப்படியே பொய்வாழ்வாச்சே. 469

ஆச்சப்பா புலிப்பாணிமைந்தாகேளு ஆரிருந்தார் வுலகுதன்னில்பொய்யேவாழ்வு, மாச்சலுடன் சமாதிக்குச் செல்வேனென்று மாணிலத்தில் தவமழிந்து கெட்டார்கோடி, மூச்சடங்கி வாசியோகஞ் செய்தபேரும் மூதலகிலிருந்தாரோ லக்கோயில்லை, ஏச்சானவுலகமெலா மிப்படியேயாச்சு யெழிலானமாயசித்தி கிரியைதானே 470

அசுவனிதேவர் சமாதிகண்டது.

தானான புலிப்பாணி மைந்தாகேளு தண்மையுள்ள சீனபதிவிட்டு யானும், கோனானயெனதையர் காலாங்கிநாதர் குருசொன்னவா

க்கினது பிரகாரந்தான், தேஜனைகுளிகையது பூண்டுயானும் தேச மெலாஞ் சுத்தியல்லோ வருகும்போது, மாஜனைவடகோடி. கானகத் தில் மார்க்கமுடன் மலையொன்று கண்டேன்பாரே. 471

பாரேதான் வடகோடிகானகத்தில் பாங்கானதிருப்பாலின் கட லின்பக்கல், சீரேதான்மலையொன்று குண்ஜெனன்றுண்டு சிறப்பாவை சுவனியாப பருவமப்பா, நேரேதான்மலைநாடு நடுமையத்தில் நேர்மை யுடன் குளுகையது கொண்டுமல்லோ, ஊரேதான் குடிகளில்லாமலை கள்நாடு வுத்தமனே யானுமது யிறங்கினேனே. 472

இறங்கியே மலைவளத்தைச் சுற்றுங்கண்டேன் யெழிலானமலை சுத்திகாஜறுண்டு, நிறம்வேறு ரிஷிமுனிவரங்கேயுண்டு நேர்மையுட ன்பச்சைவண்ண மாண்பரப்பா, திறமுடைய சீஷவர்க்கஞ்சொல்லொ ண்ஞது தீர்க்கமுடன் வெகுபேரைக், கண்டேன்யானும், உயமான மாஜுக்கமோடிவந்து வுத்தமனே யெந்தனையுங் கண்டிட்டாரே. 473

கண்டாரேசீஷவர்க்கமோடிவந்து கடூரமுடனெந்தனையு மாரெ ன்முர்கள், விண்டதொரு சீடவர்க்கந் தன்னைப்பார்த்து வீரடங்கி மெய்நடுங்கி யடியேன்றுனும், தொண்டனைப்போ லடிபணிந்து முடி கள்சாய்த்து, தொழுதிறங்கி மிகப்பணிந்து ஐயாவென்றேன் அண் டர்முதல் தான்போற்றுங் காலாங்கிநாதர் அவருடைய சீஷனென்று வறைநதிட்டேனே. 474

அறைந்தேனே காலாங்கிசீஷனென்றேன் அங்கனவே வார்த் தையது வுரைத்தபோது, குறைபேசுவந்ததொரு சீஷவர்க்கம் குறிப் புடனே யெந்தனையும் பார்த்தபோது, முறைபேசி கதைபேசி வுறவு பேசி முதுலகில் சித்துமகாரிஷிநினைந்து, திறமையுடனஞ்சலிகள் மிக வுஞ்செய்து தீர்க்கமுடன் ஆசீர்மஞ்செய்திட்டாரே. 475

செய்தரேயெந்தனுக்கு யினிவுசொல்லி சிறப்புடனே வசுவனியா ந்தேவருக்கு, பையவேகாலாங்கி சீஷர்தாமும் பாருலகைக் காண்பத ற்கு பூபாலன்முன், துய்யவே குளிகைகொண்டு சினம்விட்டு துப்புர வோ மதுடைய வாசீர்மந்தான், வெய்யவே காண்பதற்குவந்தாரென் று விருப்பமுடன் வசுவனிக்கு வுரைத்திட்டாரே. 476

அசுவனிக்கு சீஷர்களுரைத்தது.

இட்டாரேயெந்தனையுஞ் சீஷவர்க்கம் யெழிலான வசுவனியாந் தேவருக்கு, சட்டமுடன்தாமுரைத்தாரென்னைப்பற்றிதண்மையுள்ள

வசிவனியார்தேவர்தானும், வட்டமுடன்யெனையழைத்து யாரென்
றூர்பார்வளமையுடன்காலாங்கிசீடனென்றேன், கட்டமதுவாராமல
டியேனுக்கு கைலாகுசெய்துமல்லோவனைத்திட்டாரே. 477

அனைத்தாரேகாலாங்கிசீடனப்பா அவனியெலாங்குளிகைகொ
ண்டுபறந்தசித்தர். கணப்பொழுதுபூமிதனில்தங்காசித்து கைலாசம்
பறக்குகின்றகடிகைபாலா, சனப்பொழுதுபூமிதனில் நிற்காவேந்தர்
சாங்கமுடன்காலாங்கிக்குகந்தசீடர்,வணக்கமுடனிணக்கமதுகொன்
டசித்தர் வண்மையுள்ளபாலகனைவாவென்றாரே. 478

என்றுமேவசுவணியாங்தேவர்தானும் வெழிலானவெந்தனையுங்
கொண்டணைத்து, குன்றானமகமேரேகோவேகேளும் குவலயத்தில்
சித்தர்களுக்குகந்தசீடா, வென்றிடவேசாற்றிசையும்போற்றும்பாலா
வேதாந்தத்தாய்தமக்குவுகந்தபாலா, தென்றிசையிலகத்தியரும்மெச்
சும்நாதா தெளிவானகண்மணியேயென்றிட்டாரே. 479

கண்ணனக்கண்மணியேபோகநாதாகைலாசரிஷிகள்முதல்மெச்
சும்பாலா,விண்ணுலகில்நவகோடிரிஷிகள்தம்மில்விருப்பமுடன்தேர்ந்
தெடுத்தவிஞ்ஞைபாலா, தண்ணனசுடர்மணியேசூட்சா சூட்சம்தார
ணியில்கற்றறிந்தலோகநாதா, வண்ணமுடன்மேதினியில்கீர்த்திபெ
ற்றவைராக்கியம்போகரென்று மதித்திட்டாரே. 480

மதித்தாரேயெந்தனையுந்தேவர்தாமும் மார்ச்கமுடனெந்தன்மே
ல்பட்சம்வைத்து, துதித்தாரேகாலாங்கிநாதர்தம்மை துப்புரவாயஞ்
சலிகள்மிகவுஞ்செய்து, கதிப்பானசினபதிவிட்டுநீரும் கண்மணியே
யேன்வந்தீராசிர்மந்தான், விதிப்புனக்கு யிருந்துமல்லோ வந்தீரோ
தான் விருப்பமுடன்விதியகலவந்திட்டீர். 481

வந்ததொருவரலாற்றைக்கூறுமென்று வண்மையுடன்தாமுரை
த்தார்தேவர்தாமும், சிந்தனையாய்க்கேழ்க்குகையிலடியேன்றானும் சி
றப்புடனேவசுவணியாங்தேவருக்கு, சொந்தமுடன்தங்களதுவாசிர்ம
ந்தான் துப்புறவாய்க்காண்பதற்குவந்ததென்று, இந்தமுடனடியே
னும் பணிந்துமல்லோ வன்பாகவணங்கிட்டேன் பாதந்தானே.

பாதத்தையான்வணங்கிபரபநாதா பாறுலகில்குளிகைகொண்டு
வந்தேன்யானும், நீதமுடன்தங்களது வாசிர்மத்தில் நிலையானவசுவ
த்தின்மார்க்கந்தன்னை, நேதமுடன்காண்பதற்கு வந்தேன்யானும்
தோற்றமுடன்பறக்குகின்னவசுவந்தன்னை, நீதமுடனடியேனுங் கா
ணவென்றுநீதியுடன்தம்பதிக்குவருகலாச்சே. 483

போகர் அசுவனிதேவரை ஆகாயபுரவிகேட்டது.

ஆச்சென்றுசொல்லுகையிலடியேன்றானும்வன்புடனேமனதுவந்ததேவர்தானும், பாச்சலுடன்தன்பதியிலழைத்துக்கொண்டுபோய்கானகுண்ணருகின்மேலேசென்று, வீச்சுடனேபறக்குகின்றவசுவந்தனைவிருப்பமுடனெந்தனுக்குகாண்பித்தார்பார்,மூச்சடங்கிக்குளிகைதனை கையிலேந்தி மூர்க்கமுடன்புரவியின்மே லேறினேனே. 484

போகர்தன்குளிகையை கையில்மறைத்துக்கொண்டு
அகயாபுரவியின் வேகஞ்சோதிப்பது

ஏறினேன்கானகத்தைச்சென்றயானும் யெழிலானசெம்புரவிகொண்டுமல்லோ, தூறினேனாகாயமார்க்கமாக துப்புறவால்வையகங்களெல்லாஞ்சுத்தி, மாறிடவேயசுவணியா யாசீர்மந்தான் மகத்தானவலசாரியிடசாரியாக, கூறியதோர்மொழிபடியே யடியேன்றானுங்கொண்டுவந்துசெம்புரவி நிறுத்தினேனே. 485

நிறுத்தினேனாகாயபுரவிதன்னைநீதியுள்ள வசுவனியாந்தேவர்தானும், கறப்புடையசெம்புரவி போகநாதா கருவானகுளிகைக்குகரியுமாச்சோ, துறப்புநிகாபலங்குறைந்து தோர்க்கலாச்சே துப்புரவாய்க்குளிகையதுமேலதாச்சோ, பொறப்புடனே பொன்னுலகப் புரவிமேலோ புகழானசீனபதி மார்க்கந்தானே. 486

மார்க்கமுடனசுவனியாந்தேவர்தானும் மகத்தான குளிகைக்குவாசிர்மந்தான், தீர்க்கமுடன்தானுரைத்தார் தேவர்தானும் தீரமுடனெந்தன்குளிகைக்கல்லோ, ஏர்க்கவேமெச்சிடவே ரிஷிபார்தாமும் யெழிலாகயெந்தனுக்கு வசுவந்தன்னை, பார்க்கவேசீனபதிக்கொண்டுபோக பரமகுருவசுவனியாம் விடைதந்தாரே. 487

விடையானதேவரது மொழியுங்கேட்டேன் வீரானபுரவியதுமகிமைகண்டேன், நடையுடனேகசம்புரவி பறக்கும்வேகம் நாதாக்களொருவருந்தான்கண்டதில்லை, தடைதன்றிசெப்புரவி யடியேன்றானும் தன்மையுடன்பேசுவது மகிமைகண்டேன்,படைமுகமாம்புரவியதுசெல்லும்வேகம் பாருலகில் சித்தர்களுங்காணார்தாமே. 488

காணாரேநாதாந்தசித்துதாமுங் காசினியில்வெகுகோடிகண்டேன்யானும், தோணுதமகிமையெல்லாம்யானுங்கண்டு துப்புரவாய்வுலகுபதிசுத்திவந்தேன், நீணவேயசுவணியாந் தேவர்தம்மால் நிட்களமாய்விந்தைவதை யானுங்கண்டேன், பூணவேயதிகாசவித்தையெல்லாம் புகழாகவையகத்தில் கண்டிட்டேனே. 489

கண்டேனே புலிப்பாணி மைந்தாகேளு காசினியிலசுவனியாம கிமைவித்தை, விண்டிடவே சீனபதிதேசத்தாக்கு விருப்பமுடனு ரைப்பதற்கு யானுஞ்சொல்வேன் சண்டமாருதம்போன்ற புரவுதன் னைசட்டமுடன் சைனத்தார் காணவென்று, கொண்டுமேயான், போ றேனப்பாகேளு குவலயத்தி லாச்சரிய மகிமைதானே. 490

போகர் ஆகாயபுரவியின் மல்சைனதேசம் போகிறது.

தானுனகாலங்கி சொன்னநீதி தப்பாமல் புலிப்பாணி மைந்தா கேளு, கோனுனயெனதையர் கடாத்தாலே கொற்றவனே ஆகயபுர விகொண்டு, மானுனலோகமெல்லாஞ் சுத்தியேதான் மகத்தானசெம் புரவி கடிவாளேந்தி, தேனுனசைனபதி தேசமல்லோ சிறப்புடனே யான்போறே னென்றிட்டாரே.

இட்டாரே புலிப்பாணி மைந்தருக்கு பெழிலானவார்த்தையது மிகவுங்கூறி, சட்டமுடன் செப்புரவிமேலேறி தாரணியெல்லாஞ் சுத் திமகிமைபூண்டு,திட்டமுடன் சைனபதி தேசந்தன்னில்சிறப்புடனே செம்புரவி யிறக்கினேன்யான், மட்டவிழ்பூங்கோதையர்க ளெல்லா ருந்தான் மார்க்கமுட னெந்தனையே சூழ்ந்திட்டாரே. 492

போகரை சைனதேசத்துப் பெண்கள் காணல்.

சூழ்ந்தாரேசைனபதி பெண்களோடு சுத்தமுள்ள மாண்பார்க ளுமொன்ருய்க்கூடி, தாழ்ந்ததொரு ஆகாயபுரவிதன்னை சட்டமுட னெல்லவருங் கண்டுவெங்கி, வாழ்ந்தோமே வையகத்தில் வெகுகாலந் தான் வளமையுள்ள வதிசயங்க ளனேகங்கண்டோம், வீழ்ந்ததொரு ஆகாயந்தனிலிறங்கி விடுபுரவி மகிமையது கூறப்போமோ. 493

கூறவென்ருல் நாவில்லைப் பாவுமில்லை குவலயத்தில்பொற்புரவி புதுமையாவும், மாறலுடன் வெகுகோடி வித்தைதானும் மன்னவ னே போகமுனிநாதர்நீயும், தூறலன்றி யெங்களுக்கு வதிதமாற்கம் துப்புரவால் வுபதேசஞ்செய்வீரல்லோ, சீறலதுவாராமல் நாங்களுந் தான் சிறப்புடனே வுபதேசம் பெற்ருேங்காணே. 494

காணவேயுபதேசம் மதிகங்கொண்டு கருத்துடனே சைனபதி வாழ்ந்திருந்தோம், பூணவேதெகுதேச வதிசயங்கள் புகழாகத்தாமு ரைப்பீ ரெங்களுக்காய், ஆணவமாம் சுவமதின் மகிமைதன்னை வன் புடனே வையகத்தில் கண்டதில்லை, நீணவேவாகாய புரவிதானும் நேர்மையுடன் கண்டதொரு மகிமையாரே. 495

பாரேதான் செம்புரவி மார்க்கந்தன்னி பாரினிலே ராஜாக்கள் கண்டதில்லை, நேரேதான்தேசமெல்லாஞ் சுத்திவந்துநேர்மையுடன் சுவதாவனத்தைக் கண்டேன், கூரேதானசுவதாரிடியாசிர்மம் குறிப்பானசைனபதி மார்க்கத்தோரே, தீரேதாஞசிர்மஞ் சென்றமல்லோ திகழான ரிஷியாரைப் பார்த்திட்டேனே. 496

பார்த்திட்டேனசுவதாரிடிவனத்தில் பாங்கான செம்புரவி மகிமைதன்னை, தீர்த்திட்டே ஞகாயப்புரவிதன்னை திறமானவசுவனியார் தவர்தன்னை நேர்த்தியுடன் புரவிதனைவேண்டுமென்றேன் நேர்மையுடன ரிஷியாருமனதுவந்து, பூர்த்தியுடன் யெந்தமக்கும் புரவிதானும் புகழாகத் தான்கொடுத்தார் தேவர்தாமே. 497

தேவராமசுவனியார் கடாட்சத்தாலே தேற்றமுடன் புரவிதனின்மீதிலேறி, ஆவலுடன் சைனபதி மார்க்கத்தோர்கள் வன்பாகக் காணுதற்கு வேண்டுமென்று, மேவலுடன் குளிகைதன்னை சோதித்தேதான் மெச்சியே செம்புரவி கொண்டுவந்தேன், ஏவலதுசெய்வதற்கு சைனத்தோர்க்கு யெழிலான புரவியது மகிமைதானே. 498

தானனபுரவியதுயுந்தமக்காய் தன்மையுடன் கொண்டுவந்தேனருமைமெத்த, கோனனையெனதையா காலாங்கிநாதர் கொற்றவனுர் தாமுரைத்த நீதிதன்னால், பானனகாட்டகத்தை யானுஞ்சென்றுபட்சமுடன் கொண்டுவந்தேன் புரவிதன்னை, தேனனவார்த்தையது மிகவுங்கூறி தெளிவாகத்தாமுரைத்தார் வதிதங்காணே. 499

அதிதமுடன் புரவிதன்னைக்கண்டபோது அங்ஙனவே சைனபதி மார்க்கத்தோர்கள், துதிதமுடன் புரவியதுபோலேசெய்ய துப்புரவா யெத்தனங்கள் மிகவேசெய்வார், நதிதமுள்ளபுரவியது செய்வதற்கு நாதாந்தமுனிவரால் முடியாதல்லோ, கதிதமுள்ள செம்புரவிசெய்வதற்கு கருவாகசைனபதி நினைத்தார்தாமே. 500

நினைத்துமேசைனபதி தேசத்தோர்கள் நிகட்சியுடஞகாய புரவிதானும் பனையமென்ற செம்பாலே புரவிசெய்து பாங்குடனே பஞ்சலோகந் தன்னைசேர்த்து, தினைவுடனே பஞ்சகர்த்தா ளொடுக்கத்தாலும் திகழானபஞ்சலோகந் தன்னிற்சேர்த்து, மூனையானபஞ்சபூதமொன்றாய்ச்சேர்க்க மூசியாமல் செப்புக்கு வுயிருமாச்சே. 501

பஞ்சலோகப்புரவி பஞ்சகர்த்தா ளொடுக்கம்

ஆச்சப்பாயிரிதிவினில் அப்புசேர்ந்து, வன்புடனே வப்புதனில் தேய்வுசேர்ந்து, மூச்சப்பாதேய்வுதனில் வாய்வுசேர்ந்து மூசியாமல்

வாய்வுதனிலாகாயஞ்சேர்ந்து, மாச்சலுடன்பஞ்சபூதமொன்றேடொ
ன்று மார்க்கமுடனொன்றுக்குள்ளொன்றடக்கம், பாச்சலுடன் பூத
ங்களைந்துசேர்ந்து பாங்கானவசு வத்துக்குயிருமாச்சே. 502

உயராசைசீனபதி மார்க்கத்தார்கள் ஒப்பமுடனசுவமது செய்
துமேதான்,மயில்போன்ற செம்புரவிதனையமைத்து மகத்தானவாகா
யங்கொண்டுசெல்ல, பயிலானசூத்திரத்தில் வாய்வுதாக்கி பாரினிமேல
பறப்பதற்கு மயமுண்டாக்கி, அயிலமுடன்சைனபதி மாண்பரெல்
லாம் வன்புடனே அசுவமது சமைத்தாரபாரே. 503

பாரேதான்போகருடவசுவம் போலபாங்குடனே சீனபதிமாண்
பரெல்லாம், நேரேதான்செம்புரவி நியமித்தார்கள் நேர்மையுடன்
செம்புரவிதன்னைத்தானும் சீரேதானசுவதாரிஷிபாருக்கு சிறப்புட
னே சைனபதிவசுவந்தன்னை, தீரேதான்குளிகையது பூண்டுமொண்டு
தீரமுடசுவதாபதி சேர்ந்தேனே. 504

பதியானவசுவனியார் வாசீர்மந்தான்பாலகனே புலிப்பாணிமை
ந்தாகேளு, துதியுடனேவாசீர் மஞ்சென்றேன்யானும்தும்புரவே யசு
வனியாந் தேவர்பக்கல், மதிபொன்ற செம்புரவிதன்னைத்தானும் மார்
க்கமுடன் கொண்டல்லோ சென்றுநின்றேன், அதிவினய பலகாலும்
விண்ணப்பங்கள் வன்புடனே வஞ்சலிகள் செய்தேன்தானே.

தானானவசுவனியாந் தேவர்தானும் தண்மையுடனெந்தன்மேல்
கிருபைவைத்து, கோனான யெனதையர் காலாங்கிநாதர் கொற்றவ
ஞர் பாதமது கடாட்சத்தாலும், தேனானமனோன்மணியாள் கிருபை
யாலும் தேற்றமுடனென்மீதில் பட்சம்வைத்து, பானனமுறைபப
டியே யென்னைத்தானும் பாங்குடனே ஷீவர்க்கம் நினைத்தார்தாமே.

தாமானவசுவனியாந் தேவர்தானும் தண்மையுடனெந்தன்முக
ந்தன்னைநோக்கி, பூமானுங்காலாங்கி கொண்டசீஷர்புகழான யெந்த
னிருமணியே கேண்மோ, சாமானமான தொருபுரவிதானும் சட்ட
முடன் நிர்மித்தவண்மைதன்னை, கோமானேபோக ரிடிதுய்யபாலா
கூறுவீரெந்தனுக்கு வுண்மைதானே. 507

உண்மையுடனசுவனியாந் தேவர்தானும் வுகமையுடனுத்தாரங்
கேட்கும்போது,தண்மையுடனடியேனுந் தாள்வணங்கி சட்டமுடன்
யானுரைத்தேன் தேவர்சங்கம், திண்மையுடனாகாய புரவிதன்மேல்
தீர்க்கமுடனடியேனுஞ் சென்றுமல்லோ, வண்மையுடன் சைனபதி
யானுஞ்சென்றேன் வளமான புரவிதனைக் கண்டார்தாமே.

கண்டாரேசெம்புரவி தன்னைப்பார்த்து கைலாயநாதருட புரவி யென்று, அண்டர்முனி ராட்சதர்கள் புரவிதானே ஆண்டவனார்மயே ஸ்வரனார் புரவிதானே, கொண்டுமேதன் மனதிலெண்ணங் கொண்டு குறிப்புடனேபுரவியது போலமைத்து, சண்டமாருதம்போல புரவி தன்னை சாங்கமுடனெந்தனுக்குத் தந்தார்தாமே. 509

தந்தாரேசெம்புரவிக் குயிருந்தந்து தகமையுள்ள சீனபதிமா ண்பர்தாமும், அந்தமுடன் செம்புரவியமைத்துமேதான அன்பாகத் தான் கொடுத்தாரெங்களுககு, சொந்தமுடனசுவனியாங் தேவருக் குத்தோராமல் செம்புரவி கொண்டுசென்றேன், சிந்தனைகள்மிகந் தீர் ந்து செப்பலுற்றேன் திறமான அசுபனியாங் தேவருக்கே 510

சைனதேசத்துப் புரவியைக்கண்டு அசுவனிதேவர்

ஆச்சரியப்படுதல்.

தேவாரம்ரிஷி முனிவர்நாதர்தாமும் தேற்றமுடன் செம்புரவி தன்னைப்பார்த்து, யாவலுடன் சீனபதிமார்க்கத்தோர்கள் வன்பாகச் செய்து வைத்தபுரவிதன்னை, மேவிவேகுளிகையது வேகந்தன்னைவிரு ப்பமுடன் கண்டல்லோ மிகக்களித்து, தாவலுடன் புரவிக்கு வுபதே சங்கள் சட்டமுடன் தான்கொடுத்தார் ரிடியார்தானே. 511

தானனபுரவிக்கு மகிமைசொன்னார் தண்மையுள்ள வசுவனியாங் தேவர்தாமும், கோனனவுபதேசம் யென்னவென்றால் கெ ற்றவனார் போகரிடிவுத்தாரந்தான், தேனனசெம்புரவி கேட்பதற்குசெப்பினார் தேவரிடி முனிவர்தானும், பானனவுலகமெலாம் சுத்தும்போது பண் பாக நில்லென்றால் நிற்கவேண்டும். 512

வேண்டுமே போவென்றால் போகவேண்டும் விருப்பமுடன் விடு திதனில் நிற்கவென்றால், தூண்டுமிகக்கருமானபஞ்சதாதும் தொட் டவுட னசைவற்று நிற்கவேண்டும், தாண்டியேசெல்லாமல் போகர் வாக்கு தட்டாமல் மகிமை தனையறியவேண்டும் யாண்டுடனே வெகு கால மிருக்கவென்று வன்புடனே வரமதுவுங் கொடுத்தார் பாரே.

போகர் சிக்கிந்தாமலையின் ரிடியைக்கண்டது.

பாரேதான்புலிப்பாணி மைந்தாகேளு பண்புடனே யுந்தமக்கு ச்சொல்வேன்யானும்,நேரேதான்தெற்குமுகந் தன்னிலப்பா நேரான சிக்கிந்தாமலைதானுண்டு, கூரேதான்மலைதனிலே வதிசயங்கள் குறிப்

பானவடிவேர்கோயிலுண்டு, யாரேதான் வைகையென்ற நதியுமுண்டு வனமானசுனையுண்டுகாணுறுண்டே. 514

உண்டான மலைதனிலேசித்தரப்பா ஓகோகோகோநாதாக்கள்கோடியுண்டு, கண்டாலும்விடுவார்கள் முனிவர்தானும் காசினியில்மாண்பர்கட்கு கண்ணிற்கிட்ட, பண்டுடனே கிழங்குமுதல் சரிகையாவும் பாலமுர்தங் கொண்டல்லோயிருப்பார்தாமும், பெண்டானமாய்கையது அறியாரப்பா பேரானசித்தர்முனி கூட்டந்தானே. 515

கூட்டமாமலைதனிலே குளிகைகொண்டு கொப்பெனவேமலைமீதிலிறங்கினேன்யான், நீட்டமுடன் மலைதனிலேயிருந்தசித்து நேர்மையுடனெந்தனது புரவிகண்டார், தாட்டிகமாய்ப்புரவியிடங்கிட்டிநின்று சாங்கமுடனெந்தனையுங்கண்டிட்டார்கள், வாட்டமுடன்சிறுபாலாபுரவியென்ன வந்தவகையாரெனக்குச்சொல்லென்றாரே. 516

சிக்கிந்தாமலை சித்தரிடம் செய்புரவிபேசுவது.

சொல்லென்று கேட்கையிலேசித்துதாமும்தோமுமல்புரவியது மகிமையோடு, வெல்லவேசித்துமுனிநாதருக்கு வெழிலான யெந்தனது புரவிதானும், நல்லதொருவார்த்தையது மிகவுங்கூறி நன்மையுடன் தானுரைக்கும் புரவிதானும், புல்லவேகாலாங்கிசீஷர்தம்மின் புகழான போகரிடி யென்னலாச்சே. 517

என்னவே புரவியதுமகிமைதன்னால் யெழிலான வார்த்தையது மிகவேகூறி, பன்னவே அசுவனியாந் தேவர்தானும் பாங்கானபோகரிடிநாதருக்கு, சொன்னமென்ற புரவியதுதான்கொடுத்தார் துப்புரவாய்சைனபதி கொண்டுசென்றார், அன்னமதுதன்போலெவாய்திறந்து அழகான வார்த்தையது கூறலாச்சே. 518

கூறவேசைனபதி மாண்பரெல்லாம்குறிப்பானபுரவியதுமகிமை கண்டு, மாறவேபஞ்சலோகந் தன்னிலேதான் மகத்தான புரவியதுவுண்டுசெய்து, ஆறலுடன் பஞ்சபூதங்களைத்தான் வன்பாகத் தான் கொடுத்துயென்னைத்தானும், வீறலுடன்போகரிடி நாதருக்கு விருப்பமுடன் தான்கொடுத்துவனுப்பினாரே. 519

அனுப்பவே செம்புரவியடியேன்றன்னை அழகானபோகரிடிமுனிவர்தானும், மனுவுடனேயெந்தனையும்வசம்தாக்கி மகிழ்ச்சியுடன் குளிகையதுதானும்பூண்டு, தனுர்வுடனே ஆசீர்மங்கொண்டுமல்லோ தகைமையுள்ள சிக்கிந்தாமலையைத்தேடி, கனுவுடனேவந்தாரேபோகநாதர்கைலங்கிரி நாதரைத்தான் காணத்தானே. 520

தானனபுரவியது கூறும்போது தண்மையுள்ள திருவேலதேவர் தானும், தேனைசெம்புரவிதன்தனக்கு தேற்றமுடன் ஞானோபதேசஞ்சொல்லி, பானைகாலாங்கிநாதர்தம்மின் பான்மையுள்ளசீஷனென்றுமனதுவந்து, தேனைமருத்துவமாங்கிரியைதன்னை தேற்றமுடனுபதேசஞ் செய்தா பாரே. 521

பாரேதான் செம்புரவியுபதேசத்தைபாங்குடனேகொண்டபின் புயடியேனுக்கு, நேரேதான் திருவேலரிடியாசிரமம் நேர்மையுடன் சீஷவர்க்கங்கொண்டுசென்று, தீரேதான்திருவேல ரிடியார்முன்னே தீர்க்கமுடன்யெந்தனையுங் கொண்டுசெல்ல, வேரேதான் சிக்கிந்தா மலைநாடுள்ளே விடுதிதனில்புரவிவிட்டு யிறங்கினேனே. 522

போகர் சிக்கிந்தாமலையில் திருவேலரிடியாரைக்கண்டது.

இறங்கினேன் சிக்கிந்தாமலைதானுள்ளே யெழிலான சீஷவர்க்கந்தன்னைக்கண்டேன், சுறங்கமென்ற குகைதனிலே சீஷர்தாமும் சூட்சமுடனெந்தனையுங்கொண்டுசென்றார், மறங்களுடன் மலைதனிலேகோட்டையுண்டு மகத்தான கோட்டைக்குவாசல்நான்கு திறமுடையவாசல்வழி யென்னைத்தானும் திகழுடனேகொண்டு சென்றார் சீஷர்காணே. 523

காணவே கோட்டைவழிதன்னிற்சென்று கருவாகமுன் வாசல் நிற்கும்போது, தோணவேதாளதுதான் திறந்ததங்கேதுப்புரவாய்லிங்கமென்றசமாதிகண்டேன், பூணவேரெண்டாங்கால்வாசல்சென்று புகழாக யெந்தனையுங்கொண்டுசென்றார், நாணவே சோதிலிங்கஞ் சமாதிகண்டேன் நாதாந்தசித்தொருவர் கண்டேன்பாரே. 524

பார்த்தேனே நாதாந்தசித்துதாமும் யாங்கானமூன்றாங்கால்வாசல்சென்றேன், தீர்த்தமுடன் சிவலிங்கந்தன்னைக்கண்டேன் தீர்க்கமுள்ளசித்தொருவரங்கிருந்தார், ஆர்க்கவேநாலாங்கால்பதிதானப்பாவன்புடனே வாசல்வழிசென்றேன்யானும், நாற்கமலசமாதிதனில் வீற்றிருக்கும் நடராஜசுந்தரனைப் பார்த்திட்டேனே. 525

இட்டேனே நான்குதிருகோட்டைவாசல் யெழிலானசித்து முனிசமாதிகண்டேன், வாட்டமுடன்கோட்டையது வாசல்தாண்டி வண்மையுள்ள திருவேலரிடியார்முன்னே, தட்டாமலெந்தனையுஞ் சீஷவர்க்கம்சட்டமுடன்யெந்தனையுங்கொண்டுசென்றார், திட்டமுடன் திருவேலரிடியார்தாமும் தீர்க்கமுடனெந்தனையுங் கண்டிட்டாரே.

கண்டாரே திருவேலரிடியார்தாமும் கடினமுடன் சீஷவர்க்கந்தனையழைத்து, அண்டமதில்குளிகைகொண்டுசிறுபாலன்றான் ஆகாய

செம்புரவிவிட்டிறங்கி, சண்டமாருதம்போல மலைதானுள்ளே சட்ட முடன்வந்தவரையாரென்றென்ன, துண்டரீகமுள்ளதொருசிஷவற் கம்துப்புறவாய்த் தனையழைத்துக்கேட்டார்தாமே. 527

திருவேலரிஷிகேட்கையில் சீடர் போகரைக் கல்லாய்

சமைத்தது.

சீகட்கையிலேதிருவேலரிஷியார்தாமும் கெவனமுடன் சிஷவர் க்கமோடிவந்து, விட்கமுடன்போகரிஷி நாதர்தம்மை மிரட்டியே மி கபேசிவாதுகூறி, தாழ்க்கமலந்தனிலிருக்கு வேலரான தகமையுள் ளரிடியாருமுந்தன்மீது, ஆட்கமுடன்சினமதுவும் நேர்ந்துமல்லோ அப்பனேயுன்மீதிற் சீறினரே. 528

சீறவேசீடவர்க்கநாங்களுந்தான் சிறப்பான திருவேலரிஷியார் வாக்கு, மீறியேவந்ததொருமொழியினாலே மிக்கவேயுந்தனையுஞ் சபி க்கவென்று, ஆறியதோர்கோபமதை தனையகற்றி வப்பனேயுன்முன் னேவந்தோம்நாங்கள், மாறியதோர்கல்லாடே யுனைசபிக்க மகத்தா னவேவர்முனி விடைதந்தாரே. 529

விடைதந்தாரெங்களதுசித்துதாமும் வேதாந்தரிஷியாருமனது வந்து, தடையதுவும்நேராமல் யாங்களுந்தான் சாங்கமுடன் கல்லா கச்சமைப்போமென்று, சடைபோள்றசித்துமுனி சிஷவர்க்கம் சது ரானபோகரிஷிநாதர்தம்மை, படைவீரர் ஒன்றாகக்கூடியல் லாபாரி னிலேகல்லாகச் சமைத்திட்டாரே. 530

சமைத்துமேபோகரிஷி நாதர்தாமும் தகமையுள்ள சிக்கிந்தாம லைதானுள்ளே, அமைந்துமேகல்லாகச் சமைந்தாரப்பா அங்ஙனவே மாண்பர்களுங்கண்டதில்லை, இமைந்ததொருபோகரிஷிநாதர்தம்மை யெழிலானநாதவொளிசித்துதாமும், சமைந்ததொருபோகரிஷிநாதர் தம்மை சட்டமுடன்சித்தொளிவு மெழுப்பினரே. 531

நாதவெளிசித்து போகரை எழுப்புதல்.

எழுப்பினர்நாதாந்தசித்துதாமும் யெழிலானபோகரிஷி நாதர் தம்மை, வழுக்கில்லாநாதாந்தசித்துதாமும் வளமாகபோகருக்கு வா சிர்மித்து, அழுக்கறவே அவனிதனிவெந்தநாளு வப்பனேசிரஞ்சீவி பட்டந்தந்தேன், ஒழுக்கமுடனுமதுபதி போகவென்று வுத்தமனர் சித்தொளியும் விடைதந்தாரே. 532

தந்தாரேநாதாந்தசித்துதாமும் தண்மையுள்ளபோகரிஷி நாதர் தம்மால், அந்தமுடன்தானெழுப்பி வினயங்கேட்க அழகானபோக

ரிஷிமுனியார்தாமும், சொந்தமுடன்காலாங்கி சீடனென்றேன் சுந்தரனையெனைப்பார்த்து மிகக்களித்து, விந்தையுடனுபதேசங் கூறியல்லோ விண்ணுலகில் போகவென்று வரந்தந்தாரே. 533

தந்தாரேகாதவொளிசித்துதாமும் தகமையுடன்போகரிஷி நாதருந்தான், சந்தரமாந்திருவேலரிடியார்தம்மை சுத்தமுடன்யான்கண்டபோதுமல்லோ, விந்தையாயெந்தனையும் பார்த்துமல்லோ விட்டகுறையிருந்ததினால் பெழுந்தீரேதான், அந்தமுடன்காலாங்கி கிருபையாலே அவனிதனில்மறுபடியும் பிறக்கலாச்சே. 534

பிறந்துமேசனனமது வொழிந்துமேதான் பேறானபோகரிஷிநாதர்கேளும் இறந்தவர்களிவ்வுலகில்பிறந்ததுண்டோ யெழிலான மகிமையதுகூறொண்ணாது, திறமுடையசித்துமசாரிடியார்தாமும் தீர்க்கமுடனெந்தனுக்குவுபதேசங்கள், வுறமாகத்தான்கொடுத்து வாசீர்மித்து வுற்பனங்கள்மிகவுமல்லோ ஓதினாரே. 535

ஓதவேயடியேந்தாள்பணிந்து வுத்தமனார்திருவேலரிஷியாருக்கு நீதமுடன்கரங்குவித்துசிரம்பணிந்து நீட்சியுடன் வுத்தாரஞ்சொன்னேன்பாரு, போதமுடன்யெந்தனையுல் கண்டதாலே புகழாக யுந்தனுக்குக்கிருபைசெய்வேன், தோதமுடன்சிலகால மெந்தன்பக்கல் தோற்றமுடன்நீரிருந்தா லருள்சொல்வேனே. 536

சொல்வேனேலோகவதிசயங்களெல்லாம் சுருக்கமுடனுந்தனுக்குவுபதேசித்தேன், புல்லலைதிருவேல ரிடியார்தாமும் புகன்றிட்டாரெந்தனுக்கு வாக்குமல்லோ, வெல்லவேதசவருடம் யானுமங்கே வீறானசிக்கிந்தாமலைதானுள்ளே, வல்லதொருசித்தருடன் கூடயானும் வளமாகவனந்தனிலேயிருந்தேன்பாரே. 537

பாரேதான்புலிப்பாணிமைந்தாகேளு பாங்கான காட்டகத்தே சித்தர்கூட, நேரேதான்யானுமதுவாசம்பூண்டு நெடுங்கால மங்கிருந்தேன்காட்டகத்தே, சீரேதான்சீஷருடன்கொண்டுசென்று சிறப்பாகவிருக்கையிலே ரிஷியார்தாமும், பேரேதான்கூப்பிட்டு திருவேலர்தாமும் பேரானமகிமைதனைக்கூறினாரே. 538

கூறினார்சிக்கிந்தாமலைதானுள்ளே கூறானகதவுமுண்டுமலைதான்பக்கல், மாரிடவேரிடியாருஞ் சமாதிபூண்டு மகத்தான சமாதியது சொல்லொண்ணாது, நீறியதோர்கண்ணக்கூடமப்பா நிலையானசமாதியிதிஞ்சென்றாயானால், தேரிடவேசிக்கிந்தா ரிடிதானப்பா செயலானசமாதிக்குள் ளிருப்பார்காணே. 539

## சிக்கிந்தரிஷிசமாதி.

காணவேநாலுயுகங்கண்டசித்து கருவானபிரளயத்தில் மிதந்த சித்து, பூணவேலோகமது முடிவுதன்னில் பொங்கமுடனுலிலையைக் கடந்தசித்து, தோணவேவாதாமின் யோவான்தன்னைத் தோருமல் கண்டறிந்த சித்துவாகும் நீணவேபிரளயங்கள்வந்த பின்பு நிலையாகி நின்றதொரு சித்தர்தாமே. 540

தாமானசித்துமகா சொரூபரப்பா தாரணியில் வெகுகாலங்கட ந்தசித்து, கோமான்களிருந்த தில்லைகொடிய சித்துகொற்றவனே பேர்கரிஷியறிய மாட்டாய், பூமானுமூனதையர் காலாங்கிநாதர் புக முடனே கண்டறிந்த சித்துவாகும், நாமாகவறிந்தபடி சொன்னேன ப்பா நாட்டிலே யாரேனுஞ்சொல்லார்தாமே. 541

சொல்லாரே சிக்கிந்தா மலைதானுள்ளே சொரூபமென்ற சித்து மகாரிஷிபார்தாமும், வெல்லவே வெகுகாலமலையின்மேலே வேழக் கையுடன் தாமிருந்தார் ரிஷியர்தாமும், புல்லவேசமாதிக்கு யேகவெ ன்று புகழானசீஷவர்க்கந் தன்னோடொக்க, அல்லல்படுத்த வையக த்தில் ஆசைவிட்டு வன்புடனே தாமெழுந்தார் ரிஷிபார்தானே.

தானானசிக்கிந்தா ரிஷிபார்தாமும் தகமையுடன் சீஷவர்க்கந் தன்னைநோக்கி, கோனானயெனதையர் திருவேலரிஷியார் கொற்றவ னுரைத்தாரப்படியேதானும், பானானசமாதிக்குச் செல்வேனென்று பட்சமுடன் சீஷருக்குத்தரமுரைத்து, தேனான சிக்கிந்தா மலைக்கு மேற்கே தீரமுடன் புரப்பட்டார் சித்துதாமே. 543

## சிக்கிந்தாரிஷிசீடருக்கு விசேடமுரைத்தல்.

சித்தானசிக்கிந்தாமலை தான்சித்து சிறப்பானசீடருக்குத் தாமு ரைப்பார், முத்தானதிருவேலரிசியார்வாக்கு முதலகைக்கடந்தசொ ருரிசியார்தாமும், எத்தனையோ வரைகோர்டிகாலமப்பா ஏற்றமுடன் வையகத்தி லிருந்தார்தானும், பத்தியுடன்லோகமதி லிருந்துமேகான் பாருலகில்லாபமதைக் காணுர்பாரே. 544

காணுரேதிருவேல ரிஷிபார்தாமுங் காசினியில்நாலுயுகமிருந்து மென்னதோணுதகாய, கற்பங்கொண்டுவ மன்னதுப்புரவா யாகை தனை விட்டொழித்தார் வேணவே யானவர்க்குத் தொண்டு செய்து வெகுகாலம் வையகத்தி லிருந்தேன்யானும், பூணவே பார்தனிலே வாசையற்று புகழானசமாதிக்கு யேகினேனே, 545

ஏகுவேன்சமாதிக்கு சீடவர்க்கம் யெழிலான சிங்கிந்தாமலைக்கு மேற்கு, ஆகுடனேசமாதியது தோண்டவென்று வன்புடனே சீஷருக்கு விடைகொடுக்க, பாகுமொழிதவறாமல் சீஷவர்க்கம் பண்புடனே சென்றார்கள் மலையோரத்தில், வேகுடனேசமாதியது கட்டவென்று வெளிப்படுத்தான் தொடர்ந்தார் மாண்பர்தானே. 546

மாண்பானசீடர்களுஞ் சமாதிகட்டி மார்ககமுடன் சிக்கிந்தா ரிஷியாருக்கு ஆண்பான சமாதியது கட்டியல்லோ அழகான பாரையதுமேலமைத்து, காண்பான ரிஷியார்க்கு முன்னேநின்றுகர்த்தாவே சிக்கிந்தாமலை தான்சித்தே, நீண்பானசமாதியது முடிந்ததென்று நிஷ்டைவிட்டு வருகவென்று பணிந்திட்டாரே 547

பணிந்துமேமாண்பரெல்லாம் தொழுகும்போது பட்சமுள்ள சிக்கிந்தா ரிஷியார்தாமும், துணிந்துமே சிக்கிந்தாமலையைவிட்டு துப்புரவாய் வெகுஜனங்கள் பின்னடக்க அணியணியாய் மாண்பர்களுங்கூட்டத்தோடு வன்பானரிஷியாரும் முன்னடக்க, கணிவுடனே சிக்கிந்தாமலைக்கு மேற்கே கர்த்தாவும் சமாதிபதி வந்திட்டாரே.

வந்ததொரு ரிஷியாருஞ் சமாதிகண்டு வளமையுடன் மாண்பர்களை நோக்கங்கொண்டு, அந்தமுட னடியார்கள் தன்னைநோக்கி வன்புடனே மனதுவந்து வார்த்தைசொல்வார், இந்ததொரு வையகத்தினுைசைவிட்டேன் யெழிலான சமாதிக்குச் செல்வேனப்பா, சொந்தமுடன்பாறைதனை முடியல்லோசுத்தமுடன் காத்திருங்களென் றிட்டாரே. 549

என்றுமே நாதாந்தசித்து தாமும்யெழிலான சமாதிதனிலிரங்கும்போது, குன்றானமகமேரே மாண்பரேகேள் குறிப்பான சமாதிதனிலிறங்குறேன்யான், வென்றிடவே பாறைகளைமூடவென்று வெழ்க்கமுடன் குறுவாக்குகூறும்போது, அன்றுரைத்த மொழிபோலே மாண்பரெல்லாம் வன்பாகப்பாறைதனை மூடிட்டாரே. 550

சிக்கிந்தாரிஷிசமாதியில் அசரீரிவாக்கு.

மூடினார்சீடவர்க்கமாண்ப ரெல்லாமூதுலகைக் கடந்ததொரு சித்துதாமும், நீடியேவருவதற்கு முன்னதாக நிட்களங்கமானதொருவாக்குதானும், கூடியேநான் வருகுங்காலமப்பா கொற்றவனேஅறுபத்துவாண்டுமாகும், தேடியே நீங்களெல்லாஞ் சமாதிபக்கல் தேற்றமுடன் கார்த்திருங்க ளென்றிட்டாரே. 551

என்றுமேநான்வருகுங்காலந்தன்னில் யெழிலானசப்பாணிநடப்பான்பாரு, குன்றின்மேல்மேயுகின்ற மிருகமெல்லாங்கொப்பென வேவாய்ஞானம் மிகவேகூறும், வென்றிடவேகுருகுனவன் கண்திறப்பான்வேதாந்தம் வூமையன் மிகவேசொல்வான், நன்றானபட்சியது ஞானங்கூறும் நாதாந்தசித்துவருங் காலமாச்சே. 552

ஆச்சப்பாபுலிபசுவுமொன்றாய்க்கூடி அடர்ந்ததொருபொய்கை தனில் நீரையுண்ணும், பாச்சலுடன்நரிவந்து கரியைவெல்லும் பாங்கானபரியதுவும் அரியைவெல்லும், மேச்சலுடன்சந்திரனுங் கலைகள் மாறி மிக்கானநிலைதனியே நிற்பான்பாரு, காச்சலுடன்கதிரோனுந் திசைகள்மாறி கண்ணுக்குத்தோற்றாமல் நிற்பான்பாரே. 553

பாரேதான்காலாங்கிசொன்னநீதிபட்சமுட னிவ்வுலகில்மெய்யதாச்சு, நேரேதான்பூவுலகிலப்பாகேளுநெடிதானபட்டமரந்துளுத்து நிற்கும், சீரேதான்பிரளயங்களதிதங்காணும்சிறப்பானசித்தரெல்லாம் முன்னேநிற்பார், கூரானயிவ்வண்ணவதிசயங்கள் குவலயத்தில் நடக்குமென்று சொல்லிட்டாரே. 554

சொல்லவேசிக்கிந்தாரிஷியார்தாமும்சுத்தமுடன்சித்துவருங்காலமாச்சு, வெல்லவேஅருபத்துவாண்டுமாச்சு வேதாந்தசித்துவருங்காலமாச்சு, புல்லவேசமாதியிடமாண்பரெல்லாம் புகழான சித்துமுனி கூட்டத்தோடும், வல்லதொருநாதாந்தமுனிவர்தானும்வளமையுடன் சமாதிவிட்டு வருநாளாச்சே. 555

சிக்கிந்தாரிஷிசமாதிவிட்டு வருவது.

வருகின்றநாளாச்சுசித்துதாமும்வண்மையுடன் சீஷவர்க்கமுன்னேநிற்க, பெருகவேசமாதியின்றன் பாறைதானும்பேரானநாள்வருகுங்காலந்தன்னில், வுருவுடையபாறையதுவெடிக்கலாச்சுஓகோகோ நாதாந்தசித்துதாமும், சொரூபமென்றசெகசோதிமின்னல்போலசுந்தரனார்சித்தொளிவும் வந்திட்டாரே. 556

வந்திட்டார்நாதாந்தசித்துதாமும் வையகத்தின்பவக்கடலைக்காணுதற்கு, சொந்தமுடன் சீஷவர்க்கமெல்லோருந்தான் சொர்ணமென்ற சித்தொளிவைக் கண்டாரங்கே, அந்தமுடன் சித்தொளிவுசொன்னவாக்கு அவனிதனில்மெய்யாச்சோ பொய்யுமாச்சோ, சுந்தரம்போல் வாய்திறந்து ரிஷியார்தாமும் சூட்சமுடன் சுந்தரரைக்கேட்டிட்டாரே. 557

கேட்டாரேசிக்கிந்தாமலையின்வேந்தன்கீர்த்தியுடனிவ்வுலகிலிருக்கிறாரே நீட்டமுடன்யானுரைத்தவாக்குவண்ணம் நீடாழியியுலகமதிலுறுதியாச்சோ, தாட்டிகமாய்சித்துமுனி வுரைக்கும்போதுதண்மையுடன் சீஷவர்க்கமாண்பரெல்லாம், மாட்டிமையாய்நிறைவேறிப்போச்சுதென்று மகதேவரென்றுசொல்லிவணங்கிட்டாரே. 558

வணங்கியதோர்சீடருக்கு வுபதேசங்கள் வளமாகத்தாமுரைத்தார் ரிடியார்தாமும், இணங்கியேசிக்கிந்தாமலையின்மேலேயெழிலான சிக்கிந்தா ரிஷியார்தாமும், மணங்கமழுஞ்சமாதிவிட்டுமுனிவர்தானும்மார்க்கமுடன்சமாதிவிட்டுவந்துநின்றார். சுணங்கமதுவாராமல்ரிஷியாருக்கு சுத்தமுடன் ரிஷியாருஞ் சூழ்ந்திட்டாரே. 559

சூழ்ந்துமே அஞ்சலிக ளாசிர்மங்கள் சுத்தாதிமாந்தர்முதல்வேந்தர்யாவும், தாழ்ந்துமே சிறங்குனிந்து வனங்கனிந்து சட்டமுடன் ரிஷியாரைத்தோத்தரித்து, வீழ்ந்துமேபதாம்புயத்தைப்போற்றிநின்று வீறானவுபதேசம்பெறுவதற்கு, ஆழ்ந்துமே பவக்கடலைவிட்டகற்றிவன்புடனேகார்த்தருளுமென்றிட்டாரே. 560

போகர்சிக்கிந்தாமலை ரிடியாரைக்கண்டது.

இட்டாரேமாண்பரெல்லா மிதயங்கூர்ந்து யெழிலானமனதுவந்துநிற்கும்போது, சட்டமுடன்காலாங்கிசீஷர்தாமும்சதுராகசீனபதிவிட்டுமல்லோ, அட்டதிக்குகாணுதற்குகுளிகைகொண்டுஅவனியெலாஞ்சுத்திவருங்காலந்தன்னில், பட்டமதுபக்காலமுச்சிதன்னில் பாரினிலேசிக்கிந்தாரிடிகண்டாரே. 561

கண்டாரேபோகரிடிநாதர்தாமுங்காசினியில் சிக்கிந்தாமலையைக்கண்டு, அண்டமுடன்தேவாதிதேவரெல்லாம் வன்புடனேதானிறங்கும் மலையென்றெண்ணி,கொண்டர்களுஞ்சித்தர்முனியிருக்கும் நாடுதுரைராசசிக்கிந்தாமலைவளத்தை, சண்டமாருதம்போலே போகர்தாமுஞ்சட்டமுடன் கண்டுமல்லோலிறங்கினாரே. 562

இறங்கியேபோகமுனிரிடியார்தாமும்யெழிலாநசிக்கிந்தாமலையினுச்சி, சுறங்கமென்றமேற்கணையில்வந்துநின்றுதுரைராசர்வடிவேலர்சுனையைக்கண்டு, கரந்தட்டி காசிவிசுவநாதர்தம்மைகருத்தினிலேதானினைந்து கூப்பிட்டேன்தான், வறமுடனே மச்சமென்றமீனைத்தானும் வாகுடனே கரந்தட்டி யழைத்திட்டாரே. 563

தட்டியேபோகரிடிநாதர்தாமும் தகமையுடன்வடிவேலர்சுனையி ல்நின்று, எட்டியேசுனைதனையே பார்த்துமல்லோயெழிலானகாசிலெ ன்றவிசுவர்தம்மை, அட்டில்லாதனையழைக்க மச்சந்தானும் வன்புட னேபோகரிடிசத்தங்கேட்க, கொட்டியெனுஞ்சுனைதனிலே மட்சக்கூ ட்டஞ்சுந்தரரைக்காணவல்லோ வருகலாச்சே. 564

ஆச்சப்பாபோகரிடி முனிவர்தானும் வண்புடனே மச்சமென்ற சுனையைத்தாண்டி, பாச்சலுடன்ரெண்டாங்கால் வரையிலப்பாபாங் கானபோகரிடிமுனிவர்தானும், பாச்சலுடன்கெவனமென்றகுளிகை தன்னை மகத்தானபோகரிடி முனிவர்தானும், வீச்சுடனே குளிகை சென்று போகும்போது விருதைடந்தனிலே தனைக்கண்டாரே.

சுந்திரமூர்த்தியார் எழுப்பியமதலையின் முதலை

கண்டாரேரெண்டாங்கால சுனையிலப்பாகருவாகபோகரிடி நாத ர்தாமும், கண்டாரேபடுமுதலைசுனையிலப்பா கருவாகசுந்திரனார் மூர் த்திதன்னால், கண்டாரேவந்ததொருமுதலையப்பா கனமுடனேமதலை தனைவிழுங்கிவிட்ட, கண்டாரேமுதலையனைப்பார்த்துமல்லோகனத்த தொருவிசாரமது கொண்டிட்டாரே. 566

கொண்டதொருபோகரிடி நாதர்தம்மை குன்றுனமலைதனிலே யிருக்குஞ்சித்தர், கண்டுமேபோகரிடிநாதர்பக்கல்கனமுடனேசித்தர் முனிகூட்டமெல்லாம், மண்டலத்தில்காணுதவதிசயங்கள்மகத்தான மலைமீதிற்கண்டோமென்று, விண்டுமே தங்கள் தங்கள் மனதிலெண் ணிவிருப்பமுடன் போகர்பக்கல்வந்திட்டாரே. 567

வந்துமேபோகரிடிபக்கல்நின்று மகத்தான முனிக்கூட்டந்தேவ ர்கூட்டம், அந்தமுடனாயிரம்பேராடிவந்து ஆங்காரகோபமதுசிகா ரமிஞ்சி, இந்ததொருமலைமீதில்வந்தபாலன் யெழிலான வரலாற்றை யறிவோமென்று, சிந்தனையாயத்திரள்கூட்டம் படைகளோடுதீர்த்த முடன்போகர்பக்கல் வந்தார்தானே. 568

தானனபோகரிடிநாதர்தம்மை தண்மையுள்ளசிறுபாலா யாரெ ன்றார்கள், கோனனகாலாங்கிநாதர்தம்மை கொற்றவனார்போகரிடிக ளைத்துமல்லோ, பானனயென்குருவே யெந்தன்நாதாபட்சமுடனிவ் வேளைப்பாதுகாத்து, தேனனமனோன்மணியாள் கடாட்சந் தன்னால் தேர்வேந்தரெந்தனையும் ரட்சிப்பீரே. 569

இரட்சித்துக்காத்தருளவேண்டுமென்றும் யியலானபோகரிடிவ ணங்கியல்லோ, பரமவொளிகைலங்கிரி நாதாபோதா பாருலுகி லுன் னைவிடசித்துமில்லை, நிரந்தரமாய்நிரைந்தபரா பரமேபோற்றிநிட்கள ங்கமானதொருநிதியேபோற்றி, வரந்தந்துயெந்தனையுங்கார்க்கவென் றுவாகுடனே போகரிடிபணிந்திட்டாரே 570

பணிந்துமேசித்தர்முனிதன்னைநோக்கி பான்மையுட னவர்பாத ந்தொழுதுமேதான், துணிந்துமேகாலாங்கிசெடனென்றுர் துப்புரவா ய்க்குளிகையது யானுங்கொண்டு, பணியானகுளிகையது பூண்டுமல் லோ மகத்தானவையகங்கள்சுத்திவந்தேன், கனிவுடனே சிக்கிந்தா மலையைக்கண்டு கருவானமலையென்று யிறங்கினேனே. 571

இறங்கியேவதிசயத்தைப்பார்க்கவென்று யெழிலான சித்தருக் குத்தாமுறைத்தார், திறமுடையசித்தர்முனிமனதுவந்து நீர்க்கமுட ன்காலாங்கிசெடனென்று, அறமதுவும்நேருமல் வாசீர்மித்து வன்புட னேபோகருக்குயிதவுகூறி, உறமுடனேவுபதேசமிகவளித்து வுத்தம ர்க்குவரமதுவுங் கொடுத்தார்பாரே. 572

போகர் சிக்கிந்தாமலைவதிசயத்தை.

சித்துகளைக் கேட்டது.

பாரேதான்போகரிடி முனிவர்தாமும் பாங்குடனேசித்துதமை க்கேட்கும்போது, நேரேதான்முகதாவில்போகருக்கு நேர்மையுடன் தாமுரைத்தார்சித்துதாமும், தீரேதானிம்மலையிலதிசயங்கள்| திறமா னவெகுகோடிசித்தரப்பா, ஊரேதான்மலைதானுஞ்சித்துநாடு ஓகோ கோநாதாக்கள் கூட்டந்தானே. 573

கூட்டமாம்சுனைதனிலேமட்சமுண்டு கோடானகோடி யுகமிருக் குமட்சம், நீட டமுடன்சித்தர்முனிகாவலுண்டு நெடிதான முதற்சு னையில்மைந்தாகேளு, தாட்டிகமாய்ரெண்டாங்கால் சுனையிலெல்லா ந்தாக்கானமுதலையுண்டுசித்துமுண்டு, வாட்டமுடன்யுகத்தில் குழந் தைதன்னை வாரியுண்டமுதலையின்றன் சுனையுமாமே. 574

ஆமேதான்முன்யுகத்தில் சுந்திரமூர்த்தி வன்புடனேயெழுப்பி விட்டமதலையப்பா, தாமேதான்மதலைதனைவிழுங்கிவிட்ட தன்மையு ள்ளமுதலையிதுயென்றுசொல்லி, வேமேதான்முதலையின்றன்மகிமை தன்னைவிருப்பமுடன்தாமுறைத்தார் போகருக்கு, தீமேதான் நேரு மல்சித்துதாமுஞ் சிறப்பானமுதலைமொழிகூறினாரே. 575

போகர்முதலையைக் காணவரையேறினது.

கூறினார்சித்தர்முனிரிடிகள் தாமும் குறிப்பான சிக்கிந்தாமலையி னுச்சி, ஆறவே மேல்வரையிற் சென்றமேதான் வன்பானபோகரிடி முனிவர்தாமும், சீறலுடன் சினங்கொண்டு வுறுதிகொண்டு சிறப்பா ன சுனையருகில் கிட்டிநின்று, தேறவேசுனை முகத்தைக்காணும்போ து துப்புரவாம் சித்தொருவர் கண்டிட்டாரே. 576

கண்டாரே போகரிடிநாதர் தம்மை கனமானசிக்கிந்தா மலையில் சித்து, விண்டதொரு சுனைவளத்தை போகருக்கு விருப்பமுடனுப தேசஞ்செய்யலுற்றார், மண்டலங்கள் தான்புகழுஞ் சுந்திரனார்தாமு ம் மகத்தானமுதலைதனை யெழுப்பிவைத்து, துண்டரிகமான தொரு முதலை தானுந்துப்புரவாய் யிச்சுனையைக் காணலாமே. 577

காணலா மெந்தனதுவுத்தாரந்தான் கனமான சிறபாலா சுனை யின்பக்கல், நீணவே வுத்தாரமன்றியல்லோ நீதியுடன்சுனையருகிற் செல்லலாகா, பூணவேவுத்தாரம் பெற்றுக்கொண்டு புகழானபோக ரிடி செல்லலாகும், வேணபடி தாமுரைத்தார் சித்தர்தாமும் விருப்ப முடன் கேட்டாரேபோகர்தாமே. 578

தாமான போகரிடிசித்துதாமும் தன்மையுடன் ரிடியாரைவண ங்கியேதான், பூமானுஞ் சுந்திரனார் முதலைதன்னைபுகழுடனேயடியே னுங்காணவென்று, வேமானமாகவல்லோ போகர்தாமும் விருப்பமு டன் ரிஷிதமையே, கேட்டபோது சீமானும் போகரிஷிவந்தாரென் றுசிறப்புடனே முதலைதனை யழைத்தார்காணே. 579

காணவேபோகரிஷிநாதர்தானுங் கனமான முதலைதனைக் கண்ட போது, நீணவே போகரிடிநாதர்தாமும் நியாயமுடன் முதலைதனை கண்டபோது, வேணவேயுபசாரமஞ்சலிகள்தானும் விருப்பமுடன் தான் செய்தார்போகர்தானும், மாணவேசினங்கொண்டு போகர்தா னும் மகத்தானமுதலைதனைக் கண்டிட்டாரே. 580

முதலைபோகருக்கு வரலாறுகூறல்.

கண்டதொ முதலையது மனதுவந்து கனமானபோகரிடிநாதரு க்கு, உண்டானமுன்யுகத்தி லதிசயங்கள்வுத்தமர்க்குத்தானுரைக்கு ம்முதலைதானும், மண்டலங்கள்தான் புகழுஞ்சுந்திரனார்தாமும்மகத் தான நாடுவளஞ்சுத்தும்போது, அண்டமெலாந்தான்புகழுமாதிநாடு அவ்வனத்தின்வூர் வழியேவந்திட்டாரே. 581

வந்ததொரு சுந்திரனார் மூர்த்திதானும் வளமுடனே யவ்வீதிவ ருகும்போது, அந்தமுடன்மனுக்கூட்டஞ் சோழர்கூட்டம்வழகான

திருவாசல், வாசல்முன்னே சிந்தனையாய்சோழனதுகூட்டத்தார்கள் சிறப்புடனே மனங்கலங்கிப் புலம்பும்போது, விந்தையுட னெதிர்மாளிதிருமணமாம்வாசல் விகல்பமுடன்கண்டாரேமூர்த்திதாமே

மூர்த்தியாஞ்சுந்தரனார் மனதுவந்து முத்தத்தில் நின்றதொரு மாந்தர்தம்மை, பார்த்துமேஅமுகையென்றசத்தமென்ன பாங்கான சோழவர்க்கஞ்சொல்லுமென்ன, தீர்த்திடுவே னுந்தமது வபவாதத்தை திகழாகசெப்புமென்றார்மூர்த்தியாகும், ஆர்த்துமே சோழவர்க்கமாண்பரெல்லாம் வன்பாகத்தலைவணங்கி சொல்லிட்டாரே.

சுந்தரமூர்த்திக்குசோழர்பிள்ளைவரலாறுகூறல்.

சொல்லுவார்சோழவர்க்கமாண்பரெல்லாம் துரைராஜசுந்திரனார்மூர்த்தியார்க்கு, நல்லறிவுவுடையதொருமைந்தன்சாமி நலமானபாலனவனொருவனுண்டு, புல்லவேதோழனுடன்கூடியல்லோ புகழானசாத்திரங்களோதும்போது, வல்லதொரு வாகுநாளென்றுசொல்லிவளமானவிடுதிமுலைவிட்டார்தாமே. 584

விட்டாரேபாலனதுகுருவாம்சுவாமி விடுதிக்குப் போகவென்று விடையுந்தந்தார்,சட்டமுடனிருவருமேபேசிக்கொண்டுதண்மையுடன்குளக்கரையில் படியில்நின்று,திட்டமுடன்ஸ்தானங்கள்செய்யும் போதுதிகழான எங்களதுமைந்தன்தன்னை, வாட்டமுடன் முதலையதுவந்துமல்லோவாகுடனேமைந்தனைத்தான் விழுங்கிப்போச்சே.

விழுங்கியே பதினாறுவாண்டுமாச்சு வீறானதிருக்குளமும்வற்றிப்போச்சு, மழுங்கமழுங்கூடிருந்ததோழனுக்குமகத்தான திருமணமும் புரியலாச்சு, ஒழுங்குடைய யெங்களதுமதலைதானும்வுத்தமரேதாமிருந்தானுங்களுந்தான், தொழுங்கமுடன் திருமணமுஞ் செய்வோமல்லோதுரை ராசமதலையைத் தானிழந்திட்டோமே. 586

இழந்தோமே மதலையைத்தானென்று சொல்லியெழிலான சுந்திரற்குத்தாமுரைத்தார், குளந்தனையேகாட்டவென்று மூர்த்தியாரும்கொப்பெனவேசோழவளநாடார்தம்மை, பளமையுடன் மூர்த்தியவர்கேட்கும்போது பாங்கானசோழவளநாடார்தாமும், வளமையுடன்வுரைக்கலுற்றார், மூர்த்தியார்க்கு வாகுடனேமதலையாகஞ்செய்தார்பாரே. 587

முதலைவாயிற் சுந்தரமூர்த்தி மதலைவாங்கினது.

பாரேதான்யாகமது செய்யும்போது பாங்கானசுந்திரனார்மூர்த்தியாகும், நேரேதான்குளந்தனிலேசலமுண்டாக்கி நேர்மையுடனெந்தனையும்வரவழைத்து, சீரேதான்விழுங்கியதோர் மதலைதன்னைசிறப்பாகத்தான்வாங்கி வெளியில்விட்டார், கூறேதான் மைந்தனையுஞ்சோழமாண்பர் குறிப்புடனே தானெடுத்துக்கொடுபோனாரே.

போனவுடனடியேனுஞ்சாமத்தாலேபுகழானசந்திரனார்மூர்த்தி
தன்னால், வானமுடன்தேவர்களும் வணங்கும்நாடு மகத்தானசிக்கிந்
தாமலையினுச்சி, தேனமிர்தமானதொருசுனையினுள்ளேதேற்றமுடன்
வெகுகோடிகாலமப்பா, ஞானமிர்தமுண்டல்லோசுனையில்யானும் மக
த்தானமலைதனிலேயிருக்கின்றேனே. 589

இருக்கின்றேனென்றல்லோபோகருக்குயெழிலான முதலையதுகூ
றியேதான், சுருக்கமுடன்சந்திரனார் மூர்த்தியாரின்சூட்சாதிவரலாற்
றைக்கூறியேதான், பெருக்கமுடன்சுனையருகில் வந்தாலேபேருனவு
ந்தனுக்குச்சாபம்நேரும், திருக்கமலவேலவனார் ரிடியார்தாமும்சிறப்
பானபாதமதுபணிகுவீரே. 590

முதலைசிக்கிந்தாமலையின் சித்தர்மகிமை போகருக்குகூறல்.

பணிந்துமேயெந்தனைத்தான் கான்பீரானால்பாருலகில் மருத்து
வங்கள்யானுரைப்பேன், துணிந்துமேமுதலையதுதானுரைக்க துரை
மன்னரானதொருபோகர்தானும், அணியுடனேதிருவேலர்தேவஸ்த்
தானம்வன்புடனே பதாம்புயத்தைநண்ணுதற்கு, மணிபோன்றசிக்
கிந்தாமலையினுள்ளமகத்துவாங்கடிஸ் தலத்தைநண்ணினானே. 591

போகர் சிக்கிந்தாமலையில் திருவேலரைக் கண்டது.

நண்ணியேகாலாங்கி நாதர்தாமும்நலமுடனே சித்தொளிவைம
னதிலெண்ணி, அண்ணலார் பதாம்புயத்தைகாணுதற்கு வன்பான
போகரிடிசென்றாரங்கே, வண்ணமுடன்திருவேலரிடியார்தாமும்வள
முடனே போகரிடிதன்னைப்பார்த்து, நண்ணியேபோகரிடிநாதர்தம்
மைநலமுடனேயாரென்றுவினவினாரே. 592

வினவியே திருவேலரிடியார்தம்மை விருப்பமுடன் யாரென்று
கேட்கும்போது, கனமுடனேகாலாங்கி நாதர்தமமை கருத்துடைய
நற்சீஷனென்றுசொன்னார், தினகரன்போல் முகத்தொளிவைக்கண்
ணிற்கொண்டுதீர்க்கமுடன்திருவேலரிடியார்தாமும், மனதுவந்துவந்
தெனக்குவாசீர்மங்கள் வண்மையுடன் தானுரைப்பார்வேலர்தாமே.

தானான திருவேல ரிடியார்தாமுந்தகமையுடன் தானுரைப்பார்
போகருக்கு, வேலானவிட்டகுறையிருந்தாலே விடுபட்டுவந்தீர்காண்
மலையைத்தேடி, கோனானகாலாங்கிகிருபையாலே கொற்றவனேயெந்
தனுக்குவாய்த்ததல்லோ, தேனான திருவினையாள்மனோன்மணியாள்
தானும் சிகாமதுவுச்சிமலை யரியார்காணே. 594

காணவேமனோன்மணியாள்பார்த்ததில்லை கைலாசதிருவேலர்ம லையினுச்சி, நீணவேநீசெய்த தவத்தினாலே நீதியுடன்மலைதனையேகா ணலாச்சு, வேணதொருமகத்துவங்க ளறியலாச்சுவேதாந்த சின்மய த்தின்பொருளுங்கண்டீர்,வாணர்முதல்மதலைதனைக்கண்டதில்லைவண் மையுடன்வுந்தனுக்குக் காணலாச்சே. 595

ஆச்சப்பா போகரிஷிநாதாகேளும் வன்புடனேயுந்தமக்குவரு ளுஞ்சொல்வேன், மூச்சடங்கிப்போனதொரு வெகுகோடிசித்துமுசி யாமல் மலையடிவாரந்தன்னில், மாச்சலுடன்சமாதிதனில் வெகுபேர் களுண்டுமகத்தானநாதாக்கள் சொல்லொண்ணாது,ஆச்சரியமானசித் துவனேகங்கோடி அடிவாரம் மலைதனிலேகாணலாமே. 596

காணலாம் போகரிஷிமைந்தாநீயுங் கண்டாலோசித்து சாப மெய்தும்,தோணவேசாபமது வந்திட்டாலும் தோற்றமுடனெந்த னையும்நீனைப்பீரானால், வேணவுதாருவுபகாரமுந்தனுக்குவிருப்பமுட ன்செய்வதற்கு ஐயமில்லை, பூணவேயுந்தனுக்குசாபம்நீக்கிபொங்கமு டன்வரந்தருவேனென்பார்பாரே. 597

பாரேதான்காலாங்கி சீஷபாதா பரிவுடையயெந்தனிருகண்ணி ன்வேலா, சீரேதானுகாயகுளிகைகொண்ட சிறப்புடனே கற்பமுண் டமாயதூபா, கேரேதானுந்தனுக்கோ வொருவருண்டோ நேரான குளிகைகொண்டநேயபாலா, விரேதான் சைனபதிவிட்டமாண்பர்வீ ருனபொன்மணியே யென்றிட்டாரே. 598

என்றுமேதிருவேலர் சொல்லும்போது யெழிலானபோகரிஷி நாதர்தாமும், குன்றான பருவத்தின் மேலேசென்றுகோடானகோடி மனுமகிமைகண்டு, தென்திசையில்கும்பமுனி மலையுங்கண்டு தேற்ற முடன் குளிகையது கொண்டுசென்று, வென்றிடவே மலையடியாம் வாரந்தன்னில் மேன்மையுடன் போதரவிறங்கினாரே. 599

இறங்கியேபோகரிஷிமனதுவந்து யெழிவான சமாதிபதிதன்னி ற்சென்று, அறமதுவும்வழுவாமல்முனிவர்தாமும்வன்புடனேசமாதி யர்ச்சனையுஞ்செய்து, திறமுடையகாலாங்கிதனை நினைந்துதீர்க்கமுடந் சமாதிதனில்முன்னே நின்று, குறவகற்றிமுனியாருங்கை குவித்து கோலமுடன் சமாதிதனைவணங்கிட்டாரே. 600

வணங்கியேயடிவாரசமாதிதன்னில் வண்மையுடன்போகரிடிமு னிவர்தானும், இணங்கியேகரங் குவித்துநிற்கும்போது யெழிலான சமாதியதுதிறந்துதங்கே, மணமுடையசொரூபமென்றசித்துதாமும்

மகத்தான ரிஷியாருங் கண்திறந்து, சுணங்கமதுநேராமல் போகர் தம்மைசுத்தமுடன்வாய் திறந்து கேட்டிட்டாரே. 601

கேட்டதொரு ரிஷியார்க்குமனதுவந்துகிருபையுடன்காலாங்கி சீஷனென்றார், நாட்டமுடன் போகரிஷிநாதர்தம்மை நாதாந்த சித்தொளிவுரிடியார்தாமும், தேட்டமுடன் திரிச்சங்கு அயோத்திமைந்தன் திகழானவரிச்சந்திரன் சுகமோவென்றார், வாட்டமுடன்போகரிடிமுனிவர்தானும் வுளமுடனேயான் கண்டதில்லையென்றாரே. 602

என்றாரேபோகரிடிமுனிவர்தானும்யெழிலான திருச்சங்குமைந்தன் றன்னை, குன்றானமலையிறங்கிகுளிகைபூண்டு குவலயத்தையான் சுத்திவருகும்போது, தென்றிசையில் திருப்பாலின் கடலின்மேற்கே திகழான மயானமென்ற கரையில்தானும், தன்றாளவ கிருஷ்ணனைப் போல்கல்லாய்த்தானும் தாரணியில் கண்டேனேயென்றிட்டாரே.

போகர் அரிச்சந்திரனை மயானத்தில் கல்லாய்க்கண்டது.

இட்டாரேபோகரிடிமுனிவர்தானும் யெழிலானவரிச்சந்திரன் தன்னைத்தானும், பட்டதொருமாண்பர்களின் கடலைதன்னில் பாங்குடனே காவலதுயிருக்கவென்று, கட்டதொருமாண்பர்கட்குக்கூலியாளாய்ச்சுடலைபதிக்கார்த்திருக்கக் கண்டேன்யானும், கட்டவிழுஞ் சத்தியத்துக்காளதாகி காசினியில் சுடலைபதியிருந்திட்டாரே. 604

இருந்தாரேகல்லாகவெகுகோடிகாலம் யெழிலான திருச்சங்கு மைந்தன்றானும், பொருந்தவே கல்லயனைக்கண்டேன் யென்று பொன்னடிக்குத்தெண்டனிட்டார் போகர்தாமும், திருந்தவே சமாதிகளிலிருந்தசித்து தீர்க்கமுடன் கலியுகமும் பிறந்ததென்ன,குருந்தமுடன் சைனபதிதுரைத்தனங்கள் குவலயத்திலமைத்துதோதானென்றிட்டாரே. 605

என்றுமேமபோகரிடி முனிவர்தம்மை யெழிலான நாதாந்தசித்துதாமும், சென்றுமேசமாதிதனைமூடவென்று சினத்திலேபோகருக்கு விடையுஞ்சொல்ல, நன்றுடனே போகரிடிமுனிவர்தானும்நாதாந்த சித்தொளிவை கெதியேதென்றார், குன்றுடையகாலாங்கி சீஷருக்கு கூறுவார்சித்தொளிவுங்கூறுவாரே. 606

போகருக்கு சித்துகூறுவது.

கூறுவார் காலாங்கிசீஷர் கேளும் கொற்றவனேசைனபதிவிட்டு நீயும், மாறலென்றகுளிகையது பூண்டுகொண்டு மகத்தானசிக்கிந்தாமலையைத்தேடி, சாரலென்றமேற்பதியில்வந்துநீயும்சட்ட முடன்

சமாதிதனைக்கண்டுமேதான், சேரவேயெந்தனைநீபார்த்ததாலே செப்பமுடனுந்தனுக்குவருள்சொல்வேனே. 607

அருளானமகிமையது யென்னவென்றால் வப்பனேகாலாங்கிசீஷர்கேளும், பொருளானமூன்றுயுகங்கடந்துபோச்சு பொங்கமுடன் கலியுகமும்பிறக்கலாச்சு, இருளானகலியுகத்தின்முடிவுதன்னில்யெழிலாகயெந்தனைநீகாண்பாயானால், தெருளகற்றியுந்தனுக்குவனேக போதம் தெளிவானகிரிகைகளுஞ்செப்புவேனே. 608

செப்புவேனுந்தனுக்குயென்றுசொல்லி தேற்றமுடன்தாமுரைப்பார்சித்துதாமும், ஒப்பமுடன்போகரிடிநாதருக்கு ஓகோகோநாதாந்தசித்துதாமும், இப்புவியிலதிசயங்கள்யாவுங்கூறி யெழிலாகத் தாமுரைத்துபோகருக்கு, எப்போதும்போலாகசமாதிதன்னை யெழிலாகமூடவென்றுவிடைதந்தாரே. 609

போகர்சித்தினுடன்விடைபெற்று திருவேலரிடினிடஞ்சென்றது,

தந்தாரேவிடையதுவும்பெற்றுக்கொண்டு தகமையுள்ளதிருவேலரிடியார்முன்னே, அந்தமுடன்போகரிடிமுனிவர்தானும் வன்பாக மலைமீதிற்சென்றுமல்லோ, சொந்தமுடந்திருவேலரிடியார்பக்கல்தோற்றமுடன்போகரிடிமுனிவர்தானும், விந்தையதுபெற்றுமல்லோரிடியார்பக்கல் விருப்பமுடன்சிரங்குனிந்து நின்றிட்டாரே. 610

நின்றதொருபோகரிடிமுநிவர்தம்மைநேர்மையுடந் திருவேலரிடியார்பார்த்து, குன்றின்மேலேறியல்லோ குளிகைபூண்டு கொற்றவனேயெந்தனிடம்வந்தாயப்பா, நன்றானவதிசயங்களுந்தனுக்கு நலமுடனேயானுமல்லோவுபதேசிப்பேன், என்றுமேரிடியாரும்வாக்களித்து ஏத்தமுடன்பச்சமாய்சொல்லிட்டாரே. 611

சொல்லவேதிருவேலரிடியார்தாமும்சோருமல்போகருக்குமகதுவந்து, வெல்லவேசைனபதிவிட்டுமேதான் வேதாந்தகாலாங்கிவிடையும்பெற்று, அல்லலெனும்பவக்கடலைவிட்டகற்றி அவனியெலாங்குளிகைகொண்டுதிரிந்துமைந்தா, வல்லதொரு சிக்கிந்தாமலையைத்தேடி வந்ததினாலுந்தனுக்குத் துறைசொல்வேனே. 612

துறையானகாலாங்கிநாதபாதா துப்புரவாய்ச்சமாதியிடஞ்சென்றுமேதான், மறையானவடிவாரமலையோசத்தின்மகுத்துவமாஞ்சித்துகளனேகமுண்டு, சிறைமீளாசமாதிதனிலிருந்தசித்து சீரானநாதாக்

கள்வெகுபேருண்டே, கறைபடுமாமாபுறத்தில் சமாதிமாண்பர் கன
மானசொரூபசித்துகாணீர்தானே. 613

கண்டரோசமாதியென்றசொரூபசித்தைகைலாசசைனபதிபோ
கர்நாதா, விண்டதொருதிருவேலர் திருவாக்குக்கு விருப்பமுடன்போ
கரிஷியுரைக்கலுற்றார், சண்டமாருதம்போலசமாதிகண்டேன்சாங்க
முடனவ்விடத்தில்சித்துமுண்டு, தெண்டமுடன் சமாதியிடம்நின்று
யாமும் தெரிசித்துசமாதியிடம் வந்தித்தேனே. 614

அரிச்சந்திரனுகத்திலிலங்கிய சித்துமகிமையை

திருவேலருக்கு கூறல்.

வந்திதத்தேனஞ்சலிகள்மிகவுஞ்செய்தேன்வாகுடனேசமாதியின்
றன்சொரூபருக்கு, சிந்தனையாய்நெடுங்காந்தானிருந்மு சித்துமகாபு
ருடனையும் வேண்டிக்கொண்டேன், அந்தமுள்ளசமாதியதுபாறைதா
னும் அண்டரண்டங்கிடுகிடுக்க வெடிக்கலாச்சு, பத்துளவமாலையணி
கிருஷ்ணன்போல பார்த்தேனே சித்தொளிவை வணங்கினேனே.

வணங்கவேசமாதிமுகந்தனிலிருந்துவளமானசித்துமகாரிஷிபா
ர்தாமும், இணங்கவேயெந்தனையும் மனதுவந்து யெழிலானைசிறுபா
லாயாரென்றென்ன, சுணங்கமதுவாறுமலடியேன்றானுந்துப்புரவாய்
க்காலாங்கிசீஷனென்றேன், மணங்கமுழுஞ்சித்துமகா சொரூபர்தா
னும் மனக்களிப்பாய்வார்த்தையது கூறுவாரே. 616

கூறுவார்வாய்திறந்துயெந்தனைத்தான் கூறுனவரிச்சந்திரனெங்
கேயென்றார், மாறுபடுயெந்தன்மனம்பேதலித்து வையகத்திலரிச்சந்
திரன்கண்டதில்லை, வீறுபுகழ்சுடலைபதிதன்னில்யானும்விருப்பமுட
னரிச்சந்திரன்கல்லைக்கண்டேன், ஆறுபுகள்சூழ்நகரமரசுவேந்தன்அ
வனிதனில்மாண்டிட்டா ரெண்டிட்டேனே. 617

என்றேனேவரிச்சந்திரன்றன்னைக்காணேன்யெழிலானவரிச்சந்
திரன்கூறும்போது, குன்றுனமகமேரு ரிஷிபார்தாமும் குவலயத்தி
லில்லையென்றமொழியுங்கேட்டு, சென்றுமேமூன்றுயுகங்கடந்துபோ
ச்சே செயலானகலியுகமும் பிறக்கலாச்சே, என்றுமே ரிஷியாருமன
னதுநொந்து யெழிலானவார்த்தையது சொல்லிட்டாரே. 618

சொல்லவேயடியேனைபாறைகொண்டு சோராமல் மூடவென்று
விடையுந்தந்தார், புல்லவேயடியேனுஞ்சமாதிதன்னை புகழாகமுடிய

ல்லோசமாதிவர்க்கம், அல்லவருங்கண்டதினு லோகமெல்லாம் அவ மானவார்த்தைக்குடையுண்டென்று, சொல்லியேயெந்தனையு மூடச் சொல்லி துப்புரவாய்வாக்கதுவுந் தந்திட்டாரே. 619

தந்திட்டாரென்றனுமே வரலாறுந்தான் தகமையுடன் பதிவே லர்க்குரைத்தேன்யானும், அந்தமுடன்திருவேலரிடியார்தானும் வன் புடனேமனங்களித்து யெந்தன்மீது, சொந்தமுடனென்மீதிற்பட்ச ம்வைத்து சுத்தமுள்ளகாலாங்கிகிருபையாலே, விந்தைபுகழ்தேசாதி மகிமையெல்லாம் விருப்பமுடனெந்தனுக்கு ஓதினாரே. 620

போகருக்குதிருமேலரிடி உலகமகிமை யுரைத்தல்.

ஓதியேதிருவேலரிடியார்தாமும் ஓகோகோபோகரிடி நாதருக்கு நீதியுடன்ஞானோபதேசங்கூறி நிட்களங்கமானதொரு மகிமையெல் லாம், வாதியாஞ்சித்தர்முனிசொரூபந்தானும் வளமானவதிசயங்கள் காணுதெல்லாம், பாதிமதிசடையணிந்தபோகருக்கு பட்சமுடனுப தேசஞ் செய்தார்பாரே. 621

சிக்கிந்தாமலையில் வடிவேலர்வாகனம் போகரிடம்பேசுவது.

பாரேதான்காலாங்கிசீஷபாதா பரிவாகயுந்தனுக்குச் சொல்வே னப்பா, நேரேதான்சிக்கிந்தாதலையினுச்சி நெடியானவடக்குபுறந்தெ ற்குவாசல், சீரேதான்வுத்தமென்ற சுனையொன்றுண்டு சிறப்பான பொன்மயிலுமங்கேயுண்டு, சேரேதானுவடியார்சமாதியுண்டு செங்க ண்மால்சக்கரமு மங்கேயுண்டே. 622

உண்டானசக்கரமுங்காவலுண்டு வுதகமென்றமலைமேலே சுனை யிலப்பா, அண்டர்தொழும்ஆவடியார் தன்றன்பக்கல் வழகானபொ ன்மயிலுமங்கேயுண்டு, கண்டுமேமனதுவந்து களிப்படைந்து கனமு டனேவார்த்தையதுமிகவுங்கூறி, மண்டலத்தி லதிசயங்கள் யாவுஞ் சொல்லிமார்க்கமுடன்வருகவென்று விடைதந்தாரே. 623

விடையானவிடையதுவும் பெற்றுக்கொண்டு வீருனகுளிகைய தூண்டுகொண்டு, தடையறவேசிக்கிந்தமலையினுச்சி தண்மையுடன் வடக்குபுறம்மேற்குவாசம், சடைபோன்றபோகரிடி நாதர்தானும் ச ட்டமுடன் சிவலிங்கந்தன்னைக்கண்டு, நடையுடனேமேற்பதியிற்செ ல்லும்போதுநலமான பொன்மயிலைக் கண்டிட்டாரே. 624

கண்டாரேபொன்மயிலை போகதானும்கனமுடனே யெதிர்நின் றுமுடிகள்சாய்த்து, தெண்டமுடன்பதாம்புயத்தைத் தான்வணங்கி தேற்றமுடன் கூறலுற்றார், ரிடியார்தாமும், பண்டதுபோல் தங்க

மென்றமயில்தானப்பா பாண்டவனைபோகரிடி தன்னைப்பார்த்து, ஒண்டியுடன் மலைமேலேவந்தபாலா வுத்தமனே யாரென்று கேட்கலாச்சே. 625

தேவேந்திரன்சாபத்தால் திரேதாயுகத்தில் சிக்கிந்தாமலைரிடியார்

சுப்பிரமண்ணியர்க்கு பொன்மயிலானது

கேட்டதொருவடிவேலர் பட்சிக்கல்லோ கிருபையுடன்போகரிடிநாதர்தானும், வாட்டமுடன்பொன்மயிலாந் தன்னைக்கண்டுவளமாகவுத்தாரஞ்சொல்லலுற்றார், நீட்டமுடன்திருவேலரிடியார்தாமும் நீதியுடன் அரிச்சந்திரன்சித்துமுன்னே, தேட்டமுடன்கண்டறிந்துவந்தபின்பு செப்புவேன்விடையென்க்கு யென்றிட்டாரே. 626

என்றுமேதிருவேலரிடியார்சொல்ல வத்தமுடன்வுத்தாரம் பெற்றுமேதான், வென்றிடவேமறுபடியுந் திருவேலர்முன்னே வேகமுடன்வந்தல்லோ வணங்கிநின்றேன், குன்றானமலைமேலே வுச்சிதன்னில் கொப்பெனவேயெந்தனையும் போகச்சொன்னார், நன்றாகவடியேனும் விடையும்பூண்டு நலமாகயுந்தனையுங் காணலாச்சே. 627

காணவேநாளாச்சுதென்றுசொல்லி கருத்துடனே தாள்பணிந்து கூறும்போது, பூணவேபோகரிஷிநாதருக்கு பொன்மயிலும் மனதுவந்துயேதுசொல்லும், தோணவேகாலாங்கிநாதர்சீஷர் துப்புரவாயெந்தனையுங்கண்டதாலே, வேணபடியுந்தனுக்குவுபதேசங்கள் விருப்பமுடனுரைப்பேனென்று சொல்லலாச்சே. 628

ஆச்சப்பாகாலாங்கிநாதர்பாதா அருண்மைந்தா சொல்லுகிறேனுந்தனுக்கு, வீச்சுடனே திரேதாயி னுகத்திலப்பா விண்ணுலகுதெய்வலோகப்பதியில்யானும், மாச்சலுடன்மகாகோடி ரிடிகள் தன்னில் மகத்தானமகிமைகளுங் கிரியைபூண்டு, ஆச்சரியமாகவல்லோயிந்திரன்பக்கல் அமர்ந்தேனே கொலுமேடை தன்னில்தானே 629

தானானசித்தர்கூடமண்டபத்தின் தகமையுடனிந்திரனார் கொலுவிருக்க, தேனானரம்பையூர்வசியாள்தாமுஞ் சிறப்புடனே நாட்டியங்கள்செய்துநிற்க, பானுவூர்வசியாள் தன்னைப்பார்த்து பட்சமுடன்கலவிக்கு யெண்ணங்கொண்டு, மானானமகத்துவமாம்ரிடியார்தாமும் மார்க்கமுடன் காதலதுகொண்டிட்டாரே 630

கொண்டதொருகாதல்தனை யிந்திரனுங்கண்டுகொற்றவனார்யிந்திரற்குக்கோபம்பொங்கி, அண்டர்முனிறட்சதர் தேவாதிமுன்னே அகங்கொண்டரிடியார்க்குச் சாபங்கொண்டு மண்டலங்கள் தான்

புகழும்வடிவேலர்க்கு மகத்தானபொன்மயில்வாகனமுமாக்கி, துண்டரிகமாகவல்லோயிந்திரன்றான் துப்புரவாய்ச்சாபமது கொடுத்தார் தாமே. 631

தாமானசாபத்தால் மயிலுமானேன் தகமையுள்ள சிக்கிந்தாமலையின்மேலே, கோமான்கள்கோடிபேர்கண்டதுண்டு கொற்றவர்கள் சாபமதைத்தவிர்க்கவில்லை, பூமானுங்காலாங்கிநாதர்பாதாபொங்கமுடன்யெந்தனையுங்கண்டதாலே, சாமானமானதொரு காலாங்கிநாதர்சட்டமுடன்யென்சாபம் நீக்கொண்ணாதே. 632

காலாங்கிநாதர் பொன்மயில்சாபம் நீக்கினது.

ஒண்ணாதுசொரூபமென்ற சித்துதாமும் வுலகபதிமூன்யுகத்தில்ரிடியாருமாய், எண்ணதேவெகுகாலந்தானிருந்து யெழிலானதேவபுரஞ்சென்றேன்யானும், கண்ணானவாயிரங்கண்ணிந்திரன்றான் கடுங்கோபமென்மேலேவதிகமாகி, திண்ணமுடன்சாபமது யெந்தனுக்குதீர்க்கமுடன்தான்கொடுத்தார் பாருபாரே. 633

பாரேதான்ரிடிபானமயிலுமப்பா பாலனெனும் போகர்முகந்தன்னைநோக்கி, நேரேதான்காலாங்கிராதருக்கு நேர்மையுடனெந்தனதுவளப்பங்கூறி, சீரேதான்பொன்மயிலுஞ்சாபம்நீங்கி சிறப்பாக முன்போலரிடியுமக்கு, சேரேதான்வையகத்தில் சித்துமாக சிறப்புடனேசெய்வதுவுன்பாரந்தானே. 634

போகரிடியாகிய பொன்மயிலுக்குகூறல்.

தானானதேவரிஷிமயிலேகேளும் தண்மையுடன் வடிவேலர்க்குகந்தமாக, கோனானயெனதையர்காலாங்கிக்கு கொற்றவனேயுன்வளப்பமிகவனைத்தும், தேனானதேவேந்திரன் வளப்பந்தானும் தேற்றமுடன்யானுரைக்கச்சாபம்நீங்கி, மானானவையகத்தில் ரிடியுமாக்கி மார்க்கமுடன்வுன்சாபந்தீர்ப்பேன்காணே. 635

காணவேபோகரிஷிநாதர்தானும் கனமானவடிவேலர் மயிலுக்கல்லோ, தோணவேயுபசாரவார்த்தைகூற தோன்றாமல் பொன்மயிலும்மனதுவந்து, பூணவேதேவர்பதிமகிமையெல்லாம் புகழானபொன்னுலோகமர்மனைத்தும், வேணவேயமார்பதிசரித்திரங்கள் விருப்பமுடனுபதேசங்கூறலாச்சே. 636

ஆச்சப்பா கைலாசமர்மமெல்லாம் அடைவுடனே போகரிடிமுனிவர்தாமும், பேச்சுமொழிவாய்ஞானந்தன்னிற்றானும் பேறானவுபதேசமனைத்துங்கொண்டு, பாச்சலுடன்விடையதுவும் பெற்றுக்கொண்டு பாங்கானகுளிகையது பூண்டுமேதான், ஆச்சரியமாகவல்லோசைனதேசம்வன்புடனே தம்பதிக்குவந்திட்டாரே. 637

வந்தாரேசைனபதிதன்னிற் சென்றுவளமுடனேமுக்காதக்கோட்டைக்குள்ளே, அந்தமுடன்போகரிடிமுனிவர்தானும் அகங்களித்துமனதுவந்துகுளிகைவிட்டு, சொந்தமுடன் காலாங்கிசமாதிபக்கல் சுத்தமுடன் மேற்புறத்தில்வாசல்நின்று, சிந்தனையாய்வஞ்சலிகள்மிகவுஞ்செய்துசிறப்புடனே சிறங்குனிந்துவணங்கிட்டாரே. 638

வணங்கியேயிருகரமுந் தான்குவித்து வளமுடனேபதாம் புயத்தைமிகவும்நண்ணி, இணங்கியேசமாதியதுகபாடவாசல்யிணக்கமுடனர்ச்சனைகள்புரியும்போது, சுணங்கமதுவாராமல்காலாங்கிநாதர்சுடரொளியாஞ்சமாதியதுதிறந்துதங்கே, கணமுடனேவாத்தியங்களார்பரிக்ககர்த்தாவாஞ்செக ஜோதிக்காணலாச்சே. 639

சிக்கிந்தாமலை பொன்மயில்ரிடியார் சாபத்தை போகர்

காலாங்கிக்கு கூறுதல்.

காணுகையில் யோகரிடிமுனிவர்தானுங் காலாங்கிசெகஜோதிநாதருக்கு, தோணவேசைனயதிவிட்டுமல்லோ துரைராஜபோகரிடிமுனிவர்தானும், நீணவே குளிகையதுமிகவேகொண்டு நிட்களங்கசிக்கிந்தாமலையிற்றானும், வேணதொருதான்கண்டவதிசயங்கள் விருப்பமுடன்கூறுவார்காலாங்கிக்கே 640

காலாங்கிநாதரென்ற ரிடியாருக்குகனமுடையசிஷவர்க்கம்போகர்தானும், பாலானசிக்கிந்தாமலையினுச்சி பாங்குடனேகுளிகைகொண்டுசென்றதுந்தான், மாலானதிருவேலரிடியார்தம்மை மார்க்கமுடன்பேசியல்லோகண்டதுந்தான், சீலானசிக்கிந்தாயடிவாரத்தில்சிறப்புடனேரிடியாரைக்கண்டார்தானும். 641

கண்டாரே அரிச்சந்திரன்சித்துதானும்கனமுடனேதன்றனக்குவுரைத்தசொல்லும், அண்டாமல்வா த்தையதுமிகக்கூறாமல் வம்மலைக் மறுபடியும்யேகவென்று, சண்டமாருதம்போலமுதலைதன்னைதகமையுடன்தான்கண்டசேதியாவும், வுண்மையுடன்சுந்தரனார்மூர்த்தியாரும் வுரைத்தமொழிதப்பாம லுருதிகொண்டே. 642

கொண்டேதான் வார்த்தையதுமிகவும்நண்ணி குறிப்பானபொன்மயிலைக்கண்டதுந்தான், அண்டமதுவாகாயவிந்திரன்றான் அமரர்பதிசமர்களத்தில் ரிடியார்தம்மை, தெண்டனைகள்சாபமதுமிகக்கொடுத்துதேவேந்திரபகவானுமஞ்சலித்து, வண்டணிமார் கோபத்தால் சாபந்தந்துவண்மையுடன்மயிலாக்கிப்போவென்றாரே. 643

போகவென்றார் தேவேந்திர பகவான்றானும் பொங்கமுடன்வடிவேலர்வாகனந்தான், சாகமுடன் சதாகாலம்வடிவேலர்க்கு சட்டமு

டன் பொன்மயிலா யிருக்கவென்று, வேகமுடன்தேகிவந்திர பகவான்ருனும்வெழிலானசாபமதுதந்தாரென்றும், பாகமுடன்சாபமதைத்தீர்க்கவென்று பட்சமுடன் பொன்மயிலுங்கேட்கலாச்சே. 644

காலாங்கிநாதர் போகர் மீதில்பட்சம்வைத்து பொன்மயில் சாபம்நீக்குவது.

கேட்கவேகாலாங்கிநாதர்தாமும் கிருபையுடன்பொன்மயிலின் சாபந்தீர்க்க, நீட்கமுடன்போகர்மேல்பட்சம்வைத்துநிலையானரிடியினதுசாபந்தன்னை, வாட்கமுடன்மனோன்மணியாள்கிருபையாலேவாகுடனேயிந்திரபதிசென்றுமல்லோ, தாட்கமுடன்நவரத்தின பீடந்தன்னில்தார்வேந்தரிந்திரனுர்சபைகண்டேனே. 645

கண்டாரே காலாங்கி நாதர்தம்பின்கனமான போகரிடிநாதர்தாமும், அண்டர்முடிதேவாதிதேவரெல்லாம்வண்பாக தேவேந்திரன்பக்கல்தன்னில், கொண்டல்முடி அச்சுதனுர்கோபாலன்றன்குருவானபீடமதுதன்னைக்கண்டார், சண்டமாருதம்போலேயிந்திரன்பக்கல்சாங்கமுடன்போகரிடி கண்டார்தானே. 646

கானுனபோகரிடிமுனிவர்தானும்தண்மையுள்ள இந்திரனுர்றன்னைநோக்கி, கோனுனயென்தேவா பகவானேகேள்கொற்றவனுர் ரிடியாரின்சாபந்தன்னை, மானுனகாலாங்கிநாதரல்லோ மகத்தானநாலுயுகங்கடந்தசித்து, தேனுனமனோன்மணியாளறிந்தசித்து தேசமெல்லாங்கரைகண்டசித்துமாமே. 647

சித்தானதேவேந்திரபகவானேகேள் சிறப்பானலோகமதில் கீர்த்திபெற்ற, முத்தானகாலாங்கிநாதர்தாமும்முடிவணங்கியடிவணங்கி சமாதிதன்னில், சுத்தமுடன் தேவேந்திராயுந்தமக்கு சுடரொளியே செகசோதிசொரூபநந்தா, சித்துமதுமமாதுவந்து தேர்வேந்தேகேள் சீரானரிடிசாபநீக்கென்றுரே. 648

தேவேந்திரபகவான்ரிடியினது அக்கிரமங்கூறல்.

என்றுரேமயில்ரூபந்தன்னைமாற்றி யெழிலானபகதேவயுடியார்தம்மை, முன்னுனயுகந்தனிலே யிருந்தாப்பால மூதுலகில்சாபமதைத்தீர்த்துமல்லோ பின்னுனமயில்ரூபந்தன்னைமாற்றி பேருனரிடிபோலேவடிமாக்கி, மன்னவனேவையகத்தில்பிறவிமாற்றம்மகதேவாசெய்வதுவுன்பாரமாமே. 649

பாரமாமென்றல்லோ போகர்தாமும் பட்சமுடன்பலகாலுந்தாள்பணிந்து, தீரமுடன்தேவேந்திரன் றன்னைநோக்கி தீற்கமுடபன்லகாலுந்தெண்டனிட்டார், சூரர்முதல்தேவர்கணபூதத் தோடுதுப்பு

றவாய்த்தேவேந்திரபகவான்றனும், வீரமுடன் போகர்முகந்தன்னை நோக்கிவிருப்பமுடன் தேவேந்திரபகவான்றனே. 650

தானனகாலாங்கிநாதர்பாதா தண்மையுள்ளசிசுபாலா போகநாதா, கோனனதேவேந்திரபதியைக்காண கொற்றவனேவந்ததொருதிரமாறு, தேனனமனோன்மணியாட் குகந்தசீஷாதேசத்தில்சித்தர்மெச்சுங்குணக்குன்றேகேள், பானுநயெந்தனது பக்கல்தன்னில் பட்சமுடன்கொலுவிருந்தார் கோடியாமே. 651

கோடியாம் நவகோடி ரிடிகளப்பா கொற்றவர்கள் யெந்தனது கொலுகூடத்தில், நீடியேநவகோடி ரிடிகளப்பா நிலைமையுடன் கொலுவிருந்தார் கோடிமாண்பர், ஆடியேயெந்தனது சபையின்முன்னே அரம்பைமுதல் மேனகையுமாடிநிற்க, தேடியேமாதரிடங் கிட்டேனின்று தேவிகள்மேல்மோகமது கொண்டிட்டாரே. 652

கொண்டாரேரிடியாரு மாதுபேரில் கொற்றவனாரிடியாரின்பெண்ணந்தன்னை, கண்டேனேமனந்தனிலே சந்தேகங்கள்கசள்ள பாவியென்றுமனதிலுன்னி, தெண்டனைகள்செய்யாமல்ரிடியார்தன்னைசிறப்புடனே சாபமதுயான்கொடுத்து, அண்டமதில் தானேகும்பிலைப்போலஅவனிதனில்போகவென்றுவரந்தந்தேனே. 653

தந்தேனேபொன்மயிலாய் வடிவமாகித்தாரணியில் சதாகாலமிருக்கவென்று, இந்ததொருதேவேந்திரலோகம்விட்டு யெழிலானவையகத்திலேகவென்று, நிந்தைகெண்டபாவியர்க்குவையகந்தான் நீடாழியுலகமேசதாகாலந்தான், சொந்தமாய்வையகத்திலிருக்கவென்று சொன்னேனேசாபமது ரிடிக்குத்தானே. 654

தானனசாபமது பெற்றுமல்லோதாரணியில்பொன்மயிலாயிருக்கவென்று, மானனதுவாபரயுகத்திலப்பா மகத்தானசாபமதுநேர்ந்துதங்க, பானுனரிடியாரைச்சாபந்தீர்க்க பாருலகில் சமாதிகொண்டசொரூபசித்து, கோனனகுருசாமிகாலாங்கிநாதர்கொற்றவனார்மனனுப்பு சொன்னார்காணே. 655

சொன்னாரேகாலாங்கி நாதர்தானும்சொர்ப்பமுள்ளரிடியார்க்கு சாபந்தீர்க்க, மன்னவனே மனோன்மணியாள்றிந்தசித்து மகத்தான காலாங்கிநாதரப்பா, முன்னேதான்மூன்றுயுகங் கடந்தசித்துமூதுலகோர்தான்றியாமாயாசித்து, நன்மையாய்வையகத்தை மறந்தசித்து நாதாந்தசொரூபமென்றசித்துதாமே. 656

தாமான்காலாங்கி நாதர்வாக்கு தாரணியிலொருகாலந்தடுக்கப்போகா, சாமானியமானதொருசித்துதாமும் சட்டமுடன்வாக்களித்

தபிரகாரந்தான், நாமேதான் செய்வதற்குயையமில்லை மாலானசித்தி னுடவாக்குபாதம், வேரேதான் மயில்ரூபமாறியல்லோ வேகமுடன் சாபமதுகொடுத்தார்பாரே. 657

பாரேதான்பொன் மயிலும்ரூபமாறி பாங்குடனேமறுபடியும் ரிஷியுமாகி, நேரேதான்ரிடியாருஞ்சாபந்தீர்ந்து நேர்மையுடன்வையக த்தில்வாழ்ந்திருக்க, சீரேதான்தேவேந்திரபகவான்றானும் சிறப்புட னேவையகத்தில் மாண்பனாக, நீரேதான்சாபமதுநிவர்த்தி செய்துநீ ர்க்கமுடன்வையகத்துக் கனுப்பினாரே. 658

அனுப்பினார்தேவேந்திர பகவான்றானும்வன்புடனே போகரிடி விடையும்பெற்று, மனுநீதிவழுவாமல் யிந்திரன் பக்கல்மாட்சியுடன் போகரிடிமுனிவர்தானும், தனுசுடையயிந்திரனார் வில்லுங்கண்டு தா ழ்மையுடன்போகரிடி விடையும்பெற்று, பனுவலுடன்வையகத்தில் வந்துமல்லோபட்சமுடன்ரிடிதனையே கண்டிட்டாரே. 659

கண்டாரே போகரிடிமுனிவர்தானும்கருவானரிடியாரைத்தானு ம்பார்த்து, அண்டரண்டஞ்சென்றுமல்லோவிடையும்பெற்று ஆண்ட வனேயென்சாபம்மீட்டிவந்தேன், தண்டுலகாந்தான்புகழுங்காலாங்கி நாதர்தாளடிக்கி யடிபணிந்துசெப்பவேண்டும், விண்டுலகில்தனில்வா ழும்யிந்திரன்செய்திவிருப்பமுடன்வரைப்பேனென்றிட்டார்தானே

போகர்சிக்கிந்தாமலை நீங்கிசைனபதியேல்.

தானனபோகமுனிரிடியார் தானும்தண்மையுடன்குளிகைதனை ப்பூண்டுகொண்டு, கோனனயெனதையர் காலாங்கிநாதர்கொற்றவனா ர்சீர்பாதசமாதிகாண, தேனனமனோன்மணியாள் தனைநினைந்துதேற் றமுடன்சைனபதிசென்றுமல்லோ,பானனகாலாங்கிநாதர் வாசல்பட் சமுடன்சமாதிமுகம்நின்றிட்டாரே. 661

நின்றாரேநெடுநாழிசமாதிபக்கல் நிட்களங்கமானதொருபோகர் தானும், குன்றனமலைபோலே சிறுபாலன்றான்கொற்றவனார் சமாதி முகம்நிற்கும்போது, தென்றலுடன்கபாடமென்றவாசல்தானும் தெ ளிவுடனே போகர்முன் திறக்கலாச்சுநின்றாரேநெடுங்காலநாதசித்து நேர்மையுடன் கெசசோதி காணலாச்சே. 662

போகர்காலாங்கிநாதர் சுடரொளி கண்டது.

கண்டாரே செகஜோதிப் பிராணயத்தைக் கண்ணுக்குத்தோற் றுதுகடினமெத்த, தண்டமுடன்தாள்பணிந்து சீர்பாதத்தை சட்ட முடன்போகரிடியடிபணிந்து, விண்ணுலகமடியேனுஞ்சென்றேன்சா மிவீரானதேவேந்திரன் பக்கல்நின்றேன், மண்ணளந்தான்மாயவரை நானுங்கண்டேன்மகதேவா கொலுக்கூடங்கண்டேன்தாமே. 663

தாமானதேவேந்திரனென்னைக்கண்டு தகமையுடன் வாய்ஞான ங்கேட்கும்போது, கோமனுமெனதையர் நாமதேயம் கொற்றவனுரி ந்திரற்குயாதுரைத்தேன், சாமானமாகவல்லோயிந்திரன்றான்சட்ட முடன்சாபமதை நிவர்த்திசெய்து, போமெனவேயுத்தாரந்தந்தாரை யாபொன்னடியைக் காணவல்லோ வந்திட்டேனே. 664

வந்தேனேபோகரிஷியடியேன்றானும் வாக்களித்தார் மகதேவ னுதருக்குச் சொந்தமுடன்மகதேவர் மனதுவந்து சுடாமணியேஎன் சீஷாசிலதுகாலம், அந்தமுடன்சமாதியிடமிருந்துமல்லோ வப்பனே போகவென்றுவிடையுந்தந்து, சிந்தனையாயச்சமாதியிட கபடவாசல் சீர்பெறவேமூடவென்று விடைதந்தாரே. 665

விடையென்றுசொல்லுகையில் போகர்தானும் விருப்பமுடன் சமாதியிடம்மூடியேதான், தடையறவேதசவாண்டுயங்கிருந்தார் சட் டமுடன்சைனபதிதேசந்தன்னில், படைவீரர்காவலுடன்சமாதிபக் கம்பட்சமுடன்தாமிருந்தார் போகர்தானும், சடைபோன்றசீஷவர்க் கமனேகம்பேர்கள் சாங்கமுடன்கொலுவிருந்தார் சமாதிகாணே.

போகர்மறுபடியுஞ் சிக்கிந்தாமலைக்கேகல்

காணவேபோகரிஷி முனிவர்தானுங் கனமுடனே சைனபதிப் பெண்களோடு, பூணவேகல்விமுகம் சிலதுகாலம் பொங்கமுடன் தா மிருந்தார்லீலைதன்னில், வேணதொருவுலகாதி வித்தையெல்லாம் வி ருப்பமுடன்மாதர்களுக்குபதேசித்து, நீணவேகவனமென்றகுளிகை தன்னைநீதியுடன்தாம்பூண்டார் போகர்பாரே. 667

பாரேதான்போகரிஷிமுனிவர்தானும் பராபரியாளம்பாளின் கி ருபையாலே, நேரேதான்குளிகைமுகம் பூண்டுகொண்டு நேர்மையுட ன்தேசபதிசுத்தியேதான், ஊரேதான் சிக்கந்தாமலையைத்தேடி வுத் தமனே திருவேலரிடியார்முன்னே, சேரேதான்மலைமீதிலுச்சிதன்னி ல்சிறப்புடனே தானிறங்கி நின்றிட்டாரே. 668

சிக்கிந்தாமலை சீஷவர்க்கம் போகருக்கு மரியாதைகூறல்

நின்றதொருபோகர்முனிதன்னைப்பார்த்துநிட்களங்கமானதொ ருசீஷவர்க்கம், குன்றின்மேல்தானிருந்தார் யுகாந்தபேர்கள் கொற்ற வனேவரைகோடி திகழ்கோடிதானும், சென்றுமேகாலாங்கிநாதசீஷ ர்சிறப்புடனேபோகர்முனிபதாம்புயத்தை, நன்றுடனே யஞ்சலிகள் மிகவுங்கூறி நாதாந்தபோகர்தனைக் கண்டார்தானே. 669

தானனசீடவர்க்கங்கண்டுமேதான் தகமையுள்ள திருவேலரிடி யாருக்கு, கோனனசொரூபமென்றநாதருக்கு கொற்றடிமை கொண்

டதொருசீடரெல்லாம், தேனுனவவர்பாதங் கிட்டியல்லோதோற்றமு டன்சென்றார்கள்கோடிமாண்பர், மானுனரிடியாரின் பக்கல்சென்று மகத்தானகுருவென்று தொழுதிட்டாரே. 670

தொழுதாரேபோகரிஷிவந்தாரென்று தோற்றமுடன்கோடிபே ர்மாண்பரெல்லாம், பழுதுபடாதிருவேல ரிஷியாருக்குப் பட்சமுட ன்தாமுரைத்தார் மாண்பரெல்லாம் வழுவில்லாகாலாங்கிநாதசீடன் வண்மையுடன் வந்ததொரு மகத்துவத்தை, மழுவேந்துந் திருவேல ரிஷியார்தானும் மகாதேவர் சந்தோஷங்கொண்டிட்டாரே. 671

இட்டாரேதிருவேலரிடியார்தானும் யெழிலான போகர்முனித ன்னைத்தானும், சட்டமுடன் தம்பதிக்கு வருகவென்று சாங்கமுடனு த்தாரங்கூறும்போது, வட்டமுடன்பொன்மயிலு மிருக்குந்தானம் வாகுடனேபோகமுனிவந்துநிற்க, திட்டமுடன் திருவேல ரிஷியார் தாமும் தீர்க்கமுடன்போகர்தமைக் கண்டார்பாரே. 672

பார்க்கையிலேபோகர்முனிமனதுவந்துபட்சமுடன் திருவடிக்கு த்தெண்டனிட்டு, தீர்க்கமுடன்வஞ்சலிகள்மிகவுங்கூறி திகழுடனே பொன்னுலகஞ்சென்றமார்க்கம், ஏர்க்கவேதேவேந்திரன் றன்னைக்க ண்டு யெழிலானபொன்மழன்சாபந்தன்னை, ஆர்க்கவேசாபமதைநிவ ர்த்திசெய்து வன்புடனேசென்றேனே சீனந்தானே. 673

சீனமாம்பதிதனிலேகாலாங்கிநாதர் சிறப்புடனே தாமுரைத்த வண்ணமெல்லாம், ஞானமென்றமாணுக்கர்சொன்னநீதி நலமுடனே தாமிருந்தசெய்தியாவும், மானமுளமாதர்முகலீலாவர்க்கம் மகத்தா னகோடிவரைசங்கமெல்லாம், ஆனதொருவையகத்தின் கதைகள்மா ர்க்கம் வன்புடனேதாமுரைத்தார் போகர்காணே. 674

கண்டதொருவதிசயங்களெல்லாந்தேர்ந்து களிப்புடனே திரு வேலரிஷியாருக்கு, வண்டணிமார்மாதரிடம் வகுத்தகாதைமகதேவரி டியாரின்சொரூபருக்கு, தண்டுலகந்தான்புகழும் மயிலின்சாபந்தரு பதிக்குத்தாமுறைத்தார்போகர்தானும், கொண்டணைத்து திருவேல ரிஷியார்தானும் கொற்றவர்க்கு ஆசீர்மஞ்செய்தார்பாரே. 675

போகரிஷி சிக்கிந்தாமலையில் மறுபடியும்

முதலையைக்காணல்.

பாரேதான்காலாங்கிநாதர்சீடர் பாங்கானபோகரிடிமுனிவர்தா னும், நேரேதான்தெற்குமுகம் சுனையின்மேலேநெடிதானசுனையருகி ல்போகர்தானும், சீரேதான்குளிகையதுபூண்டுகொண்டு சிறப்புடனே முதலையைத்தான்காணும்போது, ஆரோதான்வந்தாரென்றெண்ணி யல்லோ அடைவானமுதலையது யெண்ணலாச்சே. 676

எண்ணியேமுதலையது சுனையிற்றானும் யெழிலான கரையோர மேவறியல்லோ, நண்ணியேகாலாங்கிநாதர்சித்து நாதாந்தபோகரிடி தன்னைத்தானும், வண்ணமுடன்கண்டல்லோ போகர்தம்மைவளமுட னேயிக்காலஞ்சென்றேனீர்தான் கண்ணபிரானருளாலே யென்னைக் காணகாசினியில் வாய்த்ததென்று சொல்லலாச்சே. 677

ஆச்சப்பாபோகரிடிமுனிவர்தன்னை அடவானமுதலையதுயேது கூறும், மூச்சடங்கிவெகுகாலமிருந்தசித்து மூதுலகைத்தான்கடந்த நாதர்தாமும், பேச்சரியாகாலாங்கிநாதர்தாமும் பேருனசைனபதித ன்னிலேதான், ஆச்சரியமானதொருசொரூபர்தாமும் அவர்சுகத்தை மிகவிரும்பி கேட்கலாச்சே. 678

வேட்கவேபோகரிஷிமுனிவர்தாமுங் கெவனமுடன் முதலைக்கு கூறலுற்றார், நீட்கமுடன்யெனதையர் நாலாங்கிநாதர்நீடாழி யுலக மதில்சுகமேயென்றார், வாட்கமலம்வீற்றிருக்கும் மனோன்மணியாள் தாமுல் வையகத்தில்மற்றவருஞ் சுகமோவென்றார், கேட்கவேபோக ர்கனி ரிடியார்தாமுங் கீர்த்தியுடன்வையகத்தில் சுகமென்றாரே.

என்றாரேபோகமுனிரிடியார்தானும் யெழிலானமுதலைக்கு யே துசொல்வார், குன்றானமுதலையது மனதுவந்துகிருபையுடன்போக ரிடிமுனியாருக்கு, இன்றுமுதலுந்தனுக்குயானுமல்லோ யெழிலான வுபதேசங்கூறுதற்கு, வென்றிடவேதன்மனதிலெண்ணங் கொண்டு விருப்பமுடன் போகருக்குக்கூறலாச்சே. 680

சுந்தரமூர்த்திநாயனார் முதலை மூன்றுயுகப்பிரளய

வதிசயத்தை போகருக்குக்கூறல்.

கூறவென்றால்காலாங்கிசீடருக்கு கோலமுடன் முதலையதுயே துசொல்லும், மாறறுடன்மூன்றுயுகப்பிரளயத்தை மகத்தானபோக ரிடிநாதருக்கு, தீரமுடதிரேதாயினுகத்திலப்பா தீர்க்கமுடன் பிரள யங்கள்வந்தபோது, சாரலுடன்நற்மதாகிழக்கேயப்பா சாங்கமுடன் போகரிடியாரின் மடுகண்டேனே, 681

கண்டேனேநவகண்டரிடியார்யேரி கனமானபிரளயங்கள் வந்த போது, வண்ணமுடன்திரேதாயினுலகத்தில்பானும் வண்மையுடன் நவகண்டரிடியார்பேரி, அண்டர்முதல்ராட்சதர்கள் காணேயேரி அம் மடுவில்யானுமல்லோ சிலதுகாலம், கொண்டவண்ணனச்சுதனார் கிரு பையாலே கொற்றவனேநானிருந்தே னென்னலாச்சே. 682

என்னவேசிலகாலமடியேன்றானும் யெழிலானமடுதனிலே வதிசயங்கள், பன்னவேநதகண்டரிடியார்கோட்டை பாலகனே சுரங்கமதுவங்கேயுண்டு, மன்னவர்கள்தானறியா கோட்டைதானும் மகத்தானஆழியென்சுரங்கமப்பா, இன்னிலத்தில் கண்டவர் களாருமில்லை யெழிலானகாயாபுரிக்கோட்டைதானே. 683

கோட்டையாங்காயாபுரிக்கோட்டைதன்னில் கொற்றவனேயானுமல்லோசிலதுகாலம், நாட்டமுடன்யான்கண்டவதிசயங்கள் நலமாகத்தானுரைப்பேனுந்தனுக்கு, வாட்டமுடன் ஆழியதுகோட்டைதன்னில் வளமானதெத்துவாசல் நான்கேயாகும், பூட்ல்கமாமுதல் வாசல்காளிகாவல் புகழானரெண்டாங்கால் வீரபத்திரனாமே.

ஆமேதான்மூன்றாங்கால்ருத்திரன்காவல் அடவான நாலாங்கால்மாடனாகும், தாமேதானித்தனையுங் கடந்துபோனால் தகமையுள்ள கோட்டைக்குளதிசயங்கள், நாமேதான்சொன்னபடிமுதலையுண்டு நலமானநவகண்டரிடியார்தம்மை, போமேதான்திரேதாயினுகத்திலப்பாபொங்கமுடன் விழுங்கியதோர்முதலைதானே. 685

தானானமுதலைபதுடங்கேயுண்டுதன்மையுள்ளமுதலைதனைக்கண்டாயானால், கோனானநவகண்டரிடியார்சாபம் கொற்றவனேயுந்தனுக்குரைக்கும்பாரு, பானானசாபமதுநேர்ந்ததன்மை பட்சமுடன்நீருமல்லோவறியலாகும், வேனானநவகண்டரிடியார்பாட்டன்வேதமுதலாகமங்களோதினாரே. 686

திரேதாயுகத்தில் நவகண்டரிடியார்பாட்டன் யாகஞ்செய்கையில்

நவகண்டரை முதலைவிழுங்கியது.

ஓதவேவேதமுதலாகமங்கள் வுற்றதோர்கிரிபைக ளோதும்போது, நீதமுடன்சதகோடிரிடிகளெல்லாம் நீதியுடன்நவகண்டர்பாட்டன்பக்கல், வேதமுதலிதிகாசப்புராணமெல்லாம் விருப்பமுடன்பாகத்தில்கூறும்போது, தீதுபுகழ்நவ கண்டரிடியார்தானும் தீர்த்தமதுகொண்டுவரமடுசென்றாரே. 687

சென்றாரேசர்வதீர்த்த குப்பிதன்னில் செம்மலுடன் மடுவுக்குயேகிபல்லோ, நின்றாரேசலமதனில்தானிறங்கி நிலையாழிமடுதனிலே நிற்கும்போது, குன்றானமலைபோலேமுதலைதானும் கொப்பெனவேநவகண்டரிடியார்பாதம், மென்றுமேதான்விழுங்கிமுதலைதானும் மேதினியில்மடுவுக்குச்சொல்லலாச்சே. 688

நவகண்டரிஷியை முதலைவிழுங்கியது.

சொல்லவேமுதலையது ரிடியார்தம்மை சிறப்புடனே தான்விழு ங்கி மடுவிற்சென்று, மெல்லவே கொண்டல்லோ யேகியேதான் மேன் மையுடன் தானிருக்கும் வேளைதன்னில், புல்லவேநவகண்ட ரிடியா ர்தம்மை புகழான யாகமத்திற்றேடும்போது, வல்லதொரு முதலைய துகொண்டசேதி மகத்தான பாட்டனவர் கேடிட்டாரே. 689

கேட்டாரே நவகண்டரிடியார்தன்னை கீர்த்தியுடன் முதலையது விழுங்கிற்றென்று, வாட்டமுடன்யாகமது தவிர்த்துபோச்சு வளமா னமுதலையின்றன் மோகத்தாலே, நீட்டமுடன் நவகோடி ரிடியார் தானும் நீதியுடன் ஜெபதபங்கள் செய்யும்போது, கூட்டமுடன் மண்மேடுபுத்துபோலாம் குவலயத்தில் சமாதிபோல் வளரலாச்சே.

ஆச்சப்பா நவகண்டரிடியார்பாட்டன் வன்பானயாகமது செய் யும்போது, மூச்சடங்கிநின்றதொரு சமாதிவர்க்கம் முனையானபிரிதி விபோடன்னிற்சேர்ந்து, பாச்சலுடன் வையகத்தை மறக்கலாகி பாங்கான பேரனைத்தான் தேடவெண்ணி, கூச்சலுடன்மாமி யிடந் துயரமாகி கூறுவார் ரிடிவர்க்கங்கூட்டந்தானே. 691

போகர் நவகண்ட ரிடியை எழுப்புதல்.

தானான காலாங்கிநாதாபாலன் தன்மையுள்ளபோகரென்றசிஷ ன்தானும்,கோனான சிக்கிந்தா மலையைத்தேடி கொற்றவனே நவகண் டரிடியார்பக்கல், தேனான மனோன்மணியாள் கடாட்சத்தாலே திற முடன் நவகண்ட ரிடியார்பாகம், மானானகலைவளத்தைக் கண்டுமல் லோ மன்னவனர் போகரிடி யடுத்திட்டாரே. 692

அடுத்தாரே போகரிடி நாதர்தானும் வன்பானநவகண்ட ரிடியா ர்பாட்டன், கடுத்தமுகந் துயரமதாய் நின்றசேதி கடுங்காலை சோக ரிடிகண்டுமல்லோ, நடுக்கலுடன் நவகண்டரிடியார்பக்கல் நாதாந்த சித்துமுனி போகர்தானும், தடுத்துமேரிடியாரின் முகத்தைப்பார்த் து தயாநிதியே மனத்துயர மென்னென்றாரே. 693

என்றவுடன் நவகண்ட ரிடியா பாட்டன் யெழிலான போகரி டிநாதருக்கு, குன்றானபருவதம் போலெந்தன்பேரன் கூறானயாகங் கள் செய்யும்போது, சென்றதொரு திரேதாயினுகத்திலப்பா திற மானயாகமது செய்தேன்யானும், அன்றல்லோ நவகண்டரிடியார் யேரிவன்புடனே ஜலங்கொள்ள நண்ணினாரே. 194

நண்ணியே யென்பேரன் நவகண்டந்தான் நலமான மடுதனிலே சென்றுமல்லோ, தண்ணீரை முகந்துவர சென்றபோது தன்மையுள் ளமுதலையது விழுங்கியல்லோ மண்ணுடனே மடுதனிலே,மடிந்துமே

தான் மகத்தான யென்பேரன்சொர்க்கஞ் சேர்ந்தான், எண்ணியே யென்மனது குண்ணியேதான் யெழிலான தவநிலைக்குவந்திட்டேனே

வந்தேனே திரேதாயினுகத்திலப்பா வளமானயென்பேரன் காணுமற்றான், நொந்தேனே தவசுமுகஞ்சென்றுமேதான் நோக்கமுடன்மறைகோடி காலமாச்சு, சிந்தனையால் வையகத்தை யான்மறந்து சிற்பரனை யென்னியல்லோ மண்மேடாச்சு, பந்தமதுவிட்டகற்றிபார் லோகத்தில் பதவிதனைக் காணுதற்குப் பகர்கின்றேனே. 696

பதைக்குதே யென்மனது வுள்ளந்தானும் பாங்கானவுடல்பொருள்களாவியெல்லாம், சிகைவுடனே வெகுகோடி காலந்தானும் தீரா தவிசனமது மிகவுண்டாகி, வதையான முதலையது தானுமல்லோ வளமான யென்பேரன் தன்னைத்தானும், சதையுடனே விழுங்கியதோர் முதலைதன்னை தாரணியிலெப்போது காண்பேன் தானே. 697

தானான நவகண்ட ரிடியார்பாட்டன் தண்மையுள்ள போகரிடி பாலனுக்கு, மானான மகதேவர் தன்னைநோக்கி மதிப்புடனே நடந்ததோர் சேதிவண்ணம், மோனான முதலையின்றன் வளப்பமெல்லாம் மொழிபோல வார்த்தையது கூறலுற்றார், தேனான காலாங்கிநாதர் சீஷன்தெளிவான போகரிடி வுரைத்திட்டாரே. 698

உரைத்தாரே போகரிடிமுனிவர்தானும் ஓகோகோ நவகண்ட ரிடியார்பாட்டர், மரைத்ததொரு முதலையின்றன் மதலைதன்னை மகதேவர் வாங்குதற்கு ஐயமில்லை, சுரப்புடைய மடுவதுதா னெங்கே யென்று சுந்தரனார் காலாங்கிநாதர்சீஷன், விரப்புடனேபோகரிடி கேட்கும்போது விசனமுடன் ரிடியாருங் கூறினாரே. 699

முதலை விழுங்கிய நவகண்டரிடியார் மகிமைபோகர் கண்டது.

கூறவேபோகரிடி முனிவர்தானுங் கொதிதான மடுமதனிலே சென்றுமேதான், மாறலுடன் நவகண்ட ரிடியார்தன்னை மார்க்கமுடன்விழுங்கியதோர் முதலைதம்மை, சீறலுடன்கண்டறிய வேணுமென்று சிறப்புடனே மடுவுக்குவந்தபோது, சேறதுவும் வற்றியல்லோ மடுவுங்காய்ந்து செம்மலுடன் யிருப்பதுவுங் கண்டிட்டாரே. 700

போகர் நவகண்டர் மடுவில்ஜல முண்டாக்கியது.

கண்டாரே மடுதனையே போகர்தானும் கண்கொள்ளாவாங்காரக்கோபத்தோடும், தண்மையுடன் மடுவற்றி வெடுத்துமல்லோ தாரணியிலிருந்ததொரு மார்க்கந்தன்னை, வண்மையுள்ள வதிசயத்தைக் கண்டுமல்லோ வளமானகாலாங்கி சீஷன்தானும், உண்மையுடன் காலாங்கி நாதர்தம்மை வுற்பனமாய்த் தன்மனதில் நினைந்திட்டாரே.

நினைக்கவேகாலாங்கி நாதர்தானும் நீடாழிமடுதனில் சென்றானென்று, புனைமேவுஞ்சீஷனுக்குவரமுந்தந்து புகழான முதலையது சாபந்தீர்ந்து, வினையகற்றி நவகண்டரிஷியாருக்குவீரான பிறவியது தானுந்தந்து, சுனைமடுவைவிட்டுமெல்லோவருவதற்குத் துப்புறவாய் வரமதுவுங்கொடுத்திட்டாரே. 702

கொடுத்ததொருவரமதுதான் போகர்தானும் கொப்பெனவே தன்மனதில்மனதுவந்து, அடுத்துமேமடுதனிலே நின்றுகொண்டு வன்புடனேபராபரத்தின்பொருளைநண்ணி, கொடுத்தமெதொரு மனோன்மணியைமனதிலெண்ணி துப்புரவாய்யாகமது செய்யும்போது, மடுதனிலேஜலமதுவும் பொங்கியல்லோ மகத்தான முதலைதனைக் காணலாச்சே. 703

போகரைமுதலைகண்டு அஞ்சலிப்பது.

காணவேபோகரிடிமுனிவர்தாமும் கருவானமடுதனிலே முதலைதன்னை, ஆணவங்கள்தானொடுங்க கரத்தைக்காட்டி அகங்காரசீரனுடன்வழைக்கலுற்றார், பூணவேமுதலையதுயடிவணங்கிபுகழானபோகரிடிமுனியைப்பார்த்து, வேணதொருவஞ்சலிகள் வுபசாரங்கள்விருப்பமுன் போகருக்குச்செய்யலாச்சே 704

செய்யவேபோகரிடி மனங்களித்து சிற்பரனார்காலாங்கி தனைநினைந்து, வையகங்கள்தான்புகழுங் காலாங்கிநாதர் மகதேவாயெந்தனதுகுருவேகேளும், மெய்தவங்கள்பூண்டதொரு மகிமையானும் வேதாந்தமனோன்மணித்தாய்க்கிருபையாலும், கைதவமாய் வந்துதித்து முதலைதானுங் காசினியில்மடுதனிலேகண்டிட்டேனே. 705

இட்டேனேசாபமது நிவர்த்திசெய்து யெழிலான முதலையின்றன்மடுவைக்கண்டே, பட்டதொருநவகண்டரிடியார்தம்மை பாலகனைதானெழுப்பவேணுமென்று, சட்டமுடன்யெந்தனுக்குகொடுத்தசாபம் சற்குருவைதனைநீக்கி மடுவிலேதான், சட்டமுடன்பாலகனைத்தானழைக்க மகத்தானமடுதனிலே சென்றேன்பாரே. 706

போகர்முதலைவாய்ப்பிள்ளை வாங்குவது

பாரேதான்போகரிடி முனிவர்தானும் பாங்கான முதலைமுகந்தன்னைநோக்கி, நேரேதான்திரேதாயினுகத்தில்தானும் நேர்மையுடன்யாகமுகஞ்செய்யும்போது, நீரேதான்நவகண்ட ரிடியார்தம்மைநீதியுடன்விழுங்குதற்குஞாயமுண்டோ, சீரேதான்யிட்சணமே மைந்தன்றன்னை சிறப்புடனேகொண்டுவரவிடைதந்தாரே. 707

விடையென்றுசொல்லுகையில் முதலைதானும் விருப்பமுடன் நவகண்டரிடியார்தம்மை தயையறவேவிழுங்கியதோர் பாலன்றன்னை

தட்சணமேபோகர்முன்னேகக்கலாச்சு, நடையுடனே நவகண்ட ரிடி யார்தானும் நாதாந்தபாலகனும் வெளியிலேரி, சமைபோன்ற போக ருடபதாம்புயத்தை சட்டமுடன் தான்வணங்கி பணிந்திட்டாரே.

பணிந்தொருநவகண்டரிடியார்தம்மை பாலகனுர் போகரிடிதா னுங்கண்டு, மணிபோன்றநவகண்ட ரிடியாருக்குமார்க்கமுடன் சாப மதுநிவர்த்திசெய்து, துணிவுடனேபாட்டனும் பக்கலுக்கு துப்புற வாய்ச்சென்றல்லோ கொண்டுமேதான், அணிபெறவேநவகண்டரிடி யார்தம்மை யன்புடனேகொண்டுபோய் விட்டிட்டாரே. 709

விட்டதொருபோகரிடி தன்னைப்பார்த்து வேதாந்த நவகண்ட ரிடியார்பாட்டன், சட்டமுடனுசீர்மம் மிகவுஞ்செய்து சாங்கமுடன் காலங்கிசீஷருக்கு, திட்டமுடன்திரேதாயி னுகத்தில்காணும் தீர்க்க டனதிசயங்களுளவுமார்க்கம், இட்டமுடன்தாமுரைத்தார்போகரு க்குயெழிலானவேதாந்தரிடியார்தாமே 710

நவகண்டரிடியார்பாட்டன் முதலைவாய்ப் பிள்ளை

வாங்கினதற்காக போகருக்கு திரேதாயினுகத்தின்

மகிமையைக் கூறுகின்றார்.

தாமானதிரேதாயினுகத்திலப்பா தண்மையுள்ளகாலாங்கிசீஷா கேளும், நாமேதான்கண்டபடி சொல்வோம்கேளீர் நாதாக்கள் நவக ண்டரிடியார்கோட்டை, போமேதான்யோசனையோ சொல்லொண் ணுதுபொங்கமுடன் வேதரிடிகோட்டையப்பா, வேமேதான் சித்து முனிரிடிகள்கூட்டம் வேதாந்தத்தவமுனிகள் கோடிபேரே.

ரேணுகையால் நாதாக்கள் தவமிழந்தது.

பேருறுகோட்டைமுகம் லட்சங்கோடி பெருமையுள்ள தவமு னிகள்ரிடிகள்தானும், நேரேதான்தவமிருப்பார்கோடிசங்கம்நேர்மை யுள்ளஅரண்வாயல் கோட்டைதன்னில்,சீரேதான்யாகங்கள் செய்யு ம்போது சிறப்பானயோகங்களோதும்போதும், ஊரேதான்சமுசார வாழ்க்கையற்று வுற்பனமாய்ப் பராபரத்தை நினைப்பார்தானே.

தானனதவநிலையிலிருக்கும்போது தகமையுள்ளரேணுகையாள் பூமாதல்லோ, கோனனகுருதனையே நினைந்துகொண்டு கூறுனவிழி தனையேமூடாமற்றுன், பானனபராபரத்தை மனதிலெண்ணி பட்ச முடன்பூசைமுகம் கூறும்போது, தேனனரேணுகையாள் மாதுதா னும் தேற்றமுடன்யாகமதைக் கெடுத்திட்டாளே. 713

கெடுத்தாளேரேணுகையாள்மாதுதானும்கீர்த்தியுள்ளநாதாந்த சொரூபாபூசை, அடுத்ததொருரிடிமுனிவர் தவங்கள்யாகம் அழி படவேசெய்தாளே மாதுதானும், முடுமுன்னேமாயவலைமிகவுண்டா

கிபாரினிலேதவநிலைக்குக் கெடுதிவுண்டாய், விடுபடவேசெய்தாளே யாகமெல்லாம் விண்ணுலகில் ரிடிகளெல்லாங் கேட்டார்காணே

கேட்டாரே ரேணுகையின் மோகத்தாலேகெடியான தவநிலைக ளெல்லாமற்று, பட்டாரேபாழ்நரகிலாளுமாகிபாங்கானரிடிதேவர்மு னிவர்தானும், விட்டகுறைகாணுமல் வீணுய்த்தானும்வீறுனரேணு கையின்மோகத்தாலே, தட்டழிந்து தடமடைந்து தவமழிந்துதார ணியில்கெட்டாரேசித்தர்தானே. 715

தானான லோகத்துமாண்பரெல்லாம் தகமையுள்ள ரேணுகையி ன்மாதுதன்னுல், கோனான குருபரனைத் தான்மறந்தார்கொற்றவனுர் சிவபூசைதானிடைந்தார், தேனானமனோன்மணியை மனதிலெண்ணு ர்தேசொளிவின் சின்மயத்தைத்தானொளித்தார்,பானானவையகத்தை த்தான்மறந்துபாங்கான ரேணுமோகங்கொண்டிட்டாரே. 716

கொண்டாரேகோடிமனு சித்தரெல்லாம் குவலயத்தில் கெட்ட ழிந்து தட்டழிந்து, பண்டுளபகிருஷ்ணவதாரனைப்போல் பாருலகில் மோகவலைசிக்கினுர்கள், அண்டர்முனிதவரிடிகள் சித்துதாமும் அரி வையராம் ரேணுகையின்பாசத்தாலே, விண்ணுலகைத்தான்மறந்து பாவங்கொண்டுவிடுபட்டு நின்றுர்கள் கோடிபேரே 717

நவகண்டரிடியார் பாட்டன்போகர் தவலைக்கு ஆச்சரியப்பட்டது.

பேரான திரேதாயினுகத்திலப்பாபெருமையுள்ள நவகோடிரிடி கள்தானும், சீறுனதவநிலையில்நிலைகொள்ளாமல் சிக்கினுர்கோடிபேர் முனிவர்தானும், நேரானபவக்கடலுக்காளுமாகிநேர்மையுள்ளயின்ப சாகரத்தைவிட்டு, பாரானவையகத்தில்தலைமேர்பாவம் பாங்குடனே கொண்டாரிடிகள்காணே. 718

காணவென்றுல்காலாங்கிநாதபாதாகைலாயங்கண்டதொரு சித் துதேவர், வேணதொருதவமுனிகள் ரிடிகள்தானும்விடுபட்டுவந்தார் கள்சிக்கிந்தாவில், மாணமரும்பூபாலாயுன்னைப்போலே மகத்தானசி த்தொளிவைக்கண்டதில்லை, பாணமதுபோலெழும்பி சீனர்தன்னில் பட்சமுடன்குளிகைகொண்டு வந்திட்டாயே. 719

வந்ததொருகாலாங்கி சீர்பாதாகேள்வளமையுள்ளகலியுகத்திலு ன்னைப்போல, வந்தையுள்ளசிறுபாலா யாருங்காணேன்விட்டகுறை யிருந்ததினுல்வந்தாயப்பா, சிந்தனையிலுந்தனையாளுசீர்வாதித்துதுப் புறவாம்யெண்ணமதில் வியனங்கொண்டு, அந்தமுடன்நின்றதொரு தவநிலைக்குவப்பனெசந்தோஷங் கொண்டிட்டேனே. 720

இட்டதொருசைனபதிப் பெண்களாலேயெழிலான யுந்தனது ஞானயோகம், சட்டமுடன்கெட்டழிந்துதடுமாறுமல்தாக்கானகாலா

ங்கிவலுவினாலே, பட்டமாம்போலிருந்துனானந்தன்னைபாலித்தாய்த வயோகபூரணத்தை, அட்டதிசைத்தான்புகளும்போகநாதா அவனித னிலுனைபோலசித்துமுண்டோ. 721

உண்டானதவநிலையை வுறுதிகொண்டு வுண்மையுடன்மடுதனி லேநின்றுகொண்டு, தண்மையுடன்முதலைவாய்ப்பிள்ளை தன்னைதக மையுடன்வாங்கினதோர்சாபந்தன்னை, திண்மைபெறமனநிலையைவு றுதிகொண்டுதீர்க்கமுடன்யோக மதைசாதித்தல்லோ, உண்மையுட ன்நின்றதொருயிதிகாசத்தை வுத்தமனேயென்சொல்வேனென்றார் தாமே. 722

திரேதாயுகத்தில்ரேணுகையின்பூஷணங்கள் இருப்பிடத் தைநவகண்டரிடிபாட்டன் போகருக்கு கூறல்.

தாமான போகரிடிமைந்தாகேளும் தாரணியில்திரேதாயினுகத் திலப்பா, பூமானுஞ்சித்துமுனிரிடிகள்கோடிபுகழானநாதாந்த சித்து தாமும், சாமானமாகவல்லோவாதந்தேடி தாரணியில்சமைத்தார்கள் மலைபோற்றங்கம், நாமேதானறிந்தமட்டுஞ் சொல்வேனப்பா நாதாங் தசித்தொளிவின் தங்கந்தானே. 723

தங்கமாம்நாதாந்த சித்துதாமும்தாரணியில்வெகுகோடிவாதவி த்தை, புங்கசித்திபெட்டுடனேவஷ்டபோகம் புகழானரேணுகையி ன்மோகத்தாலே, சங்கமுகந்தான்போலே பூஷணங்கள்சதுராகத்தா ன்முடித்தாரமலைபோற்றங்கம், இங்கிதமாம்லீலைதனில்மையல்கொண் டுயெழிலாகத்தான்சமைத்தார் மேருபொன்னே. 724

மேருபோற்பொன்னையல்லோ தானமைத்துமேதினியில்ரேணு கைக்குபூஷணங்கள், சீருடையவாபரணங்கோடாகோடிதிக்கெங்கும் கண்டதில்லை பூஷணங்கள், காரிமையாள்ரேணுகைக்கு வாதத்தங்கம் கட்டழகர்சித்தரெல்லாம்முடிப்பித்தேதான், பாரினிலேதவநிலையை த்தான்மறந்துபதாம்புயத்தைப் பாருமல் கேட்டார்பாரே. 725

பாரேதான்காலாங்கி நாதசிஷாபட்சமுள்ளகண்மணியேபகரக் கேளும், நேரேதான்வடக்குமுகம்மலைதானுண்டுநெடிதானவடாகோ டிகானகந்தான், சீரேதான்சித்தர்முனிதவமிருந்தசிறப்பானவுத்தமு ண்டுசுனைதானுண்டு, ஊரேதான் கண்டவர்களாருமில்லை ஓகோகோ நாதாக்கள் கண்டார்தானே. 726

தானேதான்மலைநாடு சுனையோரத்தில் தண்மையுள்ள சித்துவர் க்கம்கோடாகோடி, மானேதான்ரேணுகையின் சமாதியுண்டுமகத்தா னசமாதியிடஞ்சென்றாயானால், தேனேதான்வண்டுரையுங் கதண்டுக் காடுதெளிவானரேணுகையின் சமாதிகோட்டைகோனேதானகுருக் கள்முனியாசிர்மங்கள் கூறுனசமாதியிடங்காவல்தாமே. 727

காவலாஞ்சமாதியிடஞ்சென்றாயானால்காரிகையாள்ரேணுகையின் ஆசிர்மத்தில், போவதற்குவழிதடங்கள் காணமாட்டார் புகழானரே ணுகையின்கோட்டைதன்னில், ஆவலுடன்சென்றாலுஞ்சமாதிகாண் போர் வப்பனேவிட்டகுறையிருந்தால்வாய்க்குப், ஏவலுடன்குரும் கள்மார்ரிஷிகள்கூட்டம்யெழிலாகதாமிருப்பார்சத்திகாணே. 728

காணவென்றால்ரேணுகையைப்பார்ப்பதற்கு கடைகோடிகான கத்தில்சென்றாலுந்தான், பூணவேகுளிகைகொண்டுசென்றபோதுப் புகழான ரேணுகையைக்காணமாட்டார், தோணவேரேணுகையாள் சமாதிபக்கம் துப்புரவாய்ப்பாலகனேநின்றாயானால், நீணவேசமாதி யிடதடமுந்தோன்றும் நிலையானரேணுகையின்கோட்டைதானே.

தானநகோட்டையதுசமாதிபக்கம்தகமையுடன்நின்றாலேதடந் தான்காணும், கோனனகுருக்கள்மார்ரிஷிகள்கூட்டம்கொம்மனைமார் சமாதியிடம்பக்கம்நிற்பார், தேனனசித்தர்முனிநாதர்தம்மை தேற்ற முடன்வாய்திறந்துகேட்பாயானால், மானனசமாதியிடவழியுஞ்சொ ல்லி மகத்தானரேணுகையின்விதிசொல்வாரே. 730

போகருக்குசித்தர்கள் ரேணுகைதீய்ந்த காயகற்பபெருமைகூறல்.

சொல்வாரேகாலாங்கிநாதசீஷா சொரூபமுள்ளபோகரிஷிமுனி யேகேளும், வல்லதொருரேணுகைக்குசித்தரெல்லாம்வளமாக காயா திகற்பந்தன்னை, புல்லதொருமாதுக்குத்தான்கொடுத்து புகழானதே கத்தைக்கற்றாணுக்கி, நல்லதொருகாயமதை வையகத்தில் நாதாக்க ள்நிலைநிறுத்தினாட்டினாரே. 731

நாட்டியேரேணுகையின் மோகந்தன்னில் நலமானநாதாக்கள் சித்துதாமும், தாட்டிகமாய்ப்பட்சமதைமிகவேபூண்டு தகமையுள்ள ரேணுகையின்வசியத்தாலே, பூட்டகமாந்தேகமதை கற்றாணுக்கிப் பொங்கமுடன்வெகுகால மிருக்கவென்று, வாட்டமுடன்வரமதுவும் மிகவுந்தந்து வண்மையுடன்ஞானோபம் போதித்தாரே. 732

போதித்தார்சித்தாதிசித்தரெல்லால் பொங்கமுடன் ரேணுகை யாள்மாதுக்கல்லோ, நீதியுடன்ஞானோபதேசமோதிநிலையானசமாதி க்கியிடமுந்தேடி, சாதித்துசமாதிதனில் யிருக்கவென்று சட்டமுட ன்மூன்றுயுகந்தாமுமீய்ந்து, வாதித்துசமாதிக்கி யேகவென்று வண் மையுடன்ரிஷிசாபங்கூறிட்டாரே. 733

சித்தர்கள்சாபத்தால் ரேணுகை சமாதிக்குப்போனது.

கூறவேரேணுகையாள்மாதுதானும் கொப்பெனவே சமாதிக்கு சென்றுமல்லோ, மாறிடவேவையகந்தான்மறந்து மகத்தான தேயக்

தைவினயம்பூண்டு, வீறுபடுறேகமதுவழியாமற்றுன் விண்ணுலகில் லெப்போதுமிருக்கவென்று, ஆறுபடைவடகோடிகானகத்தில் அங் ஙனவேசமாதியதுயிறங்கினுரே. 734

இறங்கியேரேணுகையாள் மாதுதானும் யெழிலானவடகோடி கானகத்தை, திறமுடையகுருக்கள்மார்கூட்டத்தோடும்தீர்க்கமுடன் சமாதிதனிலிருக்கிறுன்கான்,திறமுடையமாதுமையாள்சமாதிபக்கல் நிஷ்களங்கமாகவல்லோகண்டறிந்து,சிறப்புடனேபோகரிஷிபாலாநீயு ம்சீருடனேகாணவென்று வரந்தந்தாரே. 735

தந்தாரேகாலாங்கிசீடருக்கு தார்குழலாள்ரேணுகையின்மகுத் துவங்கள், அந்தமுடனறிவதற்கு விதியுஞ்சொல்லி வன்புடனேநவ கண்டரிஷிபார்பாட்டன், சொந்தமுடன்போவதற்குவிடையுந்தந்து துப்புரவாய்குளிகைகொண்டுசெல்கவென்று,விந்தையுடன்போகருக் குவரமுந்தந்து விருப்பமுடனுபதேசஞ்செய்திட்டாரே. 736

செய்யவேபோகரிஷிமுனிவர்தானும் சிறப்புடனேவடகோடிகா னகத்தில், பையவேவுத்தாரந்தானுமல்லோ பாங்குடனேபாலகனும் பெற்றுக்கொண்டு, துய்யநல்லகுளிகைதனைப்பூண்டுமல்லோ துப்புர வாய்த்தானுமல்லோ கானகத்தில், ஐயமின்றிஆரிழையாள்சமாதிபக் கம்வன்புடனேயிறங்கியல்லோ நின்றிட்டாரே. 737

நின்றதொருபாலகனைக்குருக்கள்தானும் நீதியுடன் கேட்கலுற் ருர்முனிவர்சித்தர், வென்றிடவேபோகர்முகந் தன்னைப்பார்த்து வே தாந்தகுருக்கள்சித்துகூறுவண்ணம், செனறுமேசிறுபானறுகில்வந்து செம்மலுடன்யா ரென்னவென்றுகேட்ட, இன்றுமுதல் புதிதாகத் தோணுதப்பாயெழிலானபாலகனேயென்ருர்பாரே. 738

பாரேதான்குருக்கள்சித்துகேட்கும்போது பாங்கான சிறுபால முனிவன்ருனும், நேரேதான்சித்தர்முகந் தன்னைநோக்கி நெடிதான பாலகனுங்கூறலுற்ருன், தீரேதான்காலாங்கிசீஷனல்லோதீரமுடன் நவகண்டரிஷிபார்பாட்டன், சீரேதான்கிட்டிருந்துவிடையும்பெற்று சிறப்புடனேவடகோடிவந்தேன்தானே. 739

தானனரேணுகையின்சமாதிகாண தகமையுடனிப்பதியே வந் தேனென்ருர், தேனனமனேன்மணியாள்கடாட்சத்தாலேதெரியனை க்குயெந்தனுக்குநாளுமாச்சு, கோனனநவகண்டர்பாட்டன் வாக்கு வலயத்தில்பொய்யாமல் மெய்யாகத்தான், நானேதான் காப்பதற்கு விதியுஞ்சொல்லி நலமுடனேயெந்தனுக்கு வழிசொல்வாரே. 740

வழியென்று கேட்கையிலே சித்தர்தானும் வண்மையுடன் தானுரைப்பார்போகருக்கு; பழியானரேணுகையைக்காணுதற்குப்பாரு லகிலாராலுமுடியாதப்பா குழியானசமாதியிட கோட்டைதன்னில் கொற்றவனைசெல்வதற்குயிடமுமில்லை, வழிகாணவேண்டுமென்றால் சொல்வோம்யாமும் வண்மையுடன் கண்டல்லோதெரிசிப்பாரே.

தெரிசிக்கவேண்டுமென்றால் தெத்துவாசல்தெளியவேயுந்தனுக்குத்தோற்றும்பாரு, பரிசனங்கள் காவலுடனங்கிருப்பார் பாம்கான சமாதியிடபக்கந்தன்னில்,சரியுடனேசமாதிமுகந்தன்னின்நின்றுசட்டமுன் வுச்சாடஞ்செய்வீராகில், அரிவையராம்ரேணுகையின்சரீர வாக்கு வப்பனேயுந்தனுக்கு கேட்கும்பாரே. 742

கேட்குமேயுந்தனுக்கு யசரீயப்பா கிருபையுள்ளரேணுகையின் வார்த்தைதானும், நீட்கமுடன்சமாதிதனில் வார்த்தைதோன்றும்நெடிதானசப்தமதைக்காணலாகும்,வேட்கையுடன்குருக்கள்மா சித்தர் தாமும்விருப்பமுடனசரீரிகேட்டபின்பு, ஆட்கொள்ளவேண்டுமென்றுபோகர்தம்மை வன்புடனேவரங்கேட்க சொல்லிட்டாரே. 743

ரேணுகையை போகர்வரங்கேட்டது.

கொல்லவேகாலாங்கி நாதர்தம்மை சுத்தமுடன்போகர்முனிதாள்பணிந்து, வெல்லவேயென்சாமி யெந்தனுதாவேதாந்தத் தாயாரும் ரேணுமாது,யுல்லவேகாயாதிகற்பங்கொண்டுபுகழாநசித்தர்களைமுடக்கஞ்செய்து, கொல்லவேஜபதபங்கள்கெடுத்தமாது கொம்பனையாள் சமாதியிடஞ் சென்றேதானே. 744

சென்றேனேசமாதியிடஞ்சென்றேன்சாமிசிறப்பானரேணுகையின்பக்கல்தன்னில், நின்றதொருயெந்தன்மேல் பட்சம்வைத்து நீதியுடன்வாமருள்கவென்றுமேதான்,குன்றானகொம்பனையாள்மநதுதானும் குறையாமல்யென்மீதில்பட்சம்நல்க, வென்றிடவேமனங்கறையரேணுகைக்கு வேகமுடனுசீர்மஞ்செய்வீர்தானே. 745

தானானபோகரிடிமுனிவர்தானும்தண்மையுள்ளரேணுகையைக் காண்பதற்கு, மானானமகாதேவர்கிருபையாலே மகத்தானரேணுகையின்சமாதிபக்கல், கோனானகுருபரனார்காலாக்கிதம்மைகொற்றவனார்போகரிடி தாம்நினைந்து, தேனானதேசேரவின் மயத்தினாலேதேர்வேந்தன்ரேணுகையை நினைத்திட்டாரே. 746

நினைக்கையிலேரேணுகையாம் வார்த்தைசொல்வாள்நீதியுடன் போகரிடிமுனிவருக்கு,பனைப்புடனேசைனபதிவிட்டுவந்தபாலகனை

போகரிடிநாதாகேளும், வினைப்பயனைவிட்டகற்றியெந்தநாளும் விண்ணுலகில் கீர்த்தியதுபெறுவதற்கு, முனைப்புடனேமூதுலகில்வாழ்க வென்று மொழிந்திட்டாள் ரேணுகையும்மொழிந்திட்டாளே. 747

ரேணுகை போகருக்கு ஆசீர்வதித்தது.

மொழியவே ரேணுகையாள்மாதுதானும் முனையானபோகரிடி நாதருக்கு, அழிவிலாக்காயாதிகற்பங்கொண்ட வன்பானகாலாங்கி சீஷப்பாதா ஒழிவானகாயமதைநிலைநிறுத்தி புற்பனமாய்க்கற்பது கொண்டபாதா, வழியோடேயெனைக் காணவந்ததாலே வரமுனக்கு யான்றருவேனென்றிட்டாளே. 748

இட்டாளே ரேணுகையாள் மாதுதானும்யெழிலானபோகரிடி நாதருக்கு, அட்டதிசைசுத்திவந்த அரங்கநாதாவன்பானபாலகனே யுந்தனுக்கு, வட்டமுடன்நாலுவதிசயங்கள், வன்மையுடனுனுரைப் பேன் அருண்மைந்தாகேள், திட்டமுடன்வெகுகோடிகாலமப்பாதீர்க்கமுடன்காயாதி கொண்டேன்பாரே. 749

கொண்டேனேகாயாதி கற்பங்கொண்டுகுவலயத்தில்சித்துமகா புருஷர்தம்மை, கண்டல்லோவலக்கழித்தமாயா சித்துகனமானரேணுகையாள்மாதுதானும், கொண்டல்வண்ணன்மாயாதிகிருஷ்ணகாரன்குவலயத்தி லென்வலையில்சிக்கினரே, தண்டவனரிடிகளெல்லாம் மயக்கிவிட்டேன் தாரணியில் பூபாலாயென்றிட்டாளே. 750

என்னவேரேணுகையாள்மாதுதானும்யெழிலானபோகரிடிநாதருக்கு, பன்னவேநாலுயுகசித்துமார்க்கம்பாலித்தாள்போகரிடிபாலனுக்கு, துன்னவேபோகரிடிநாதர்தாமும் துப்புரவாய்ரேணுகையைசிந்தித்தல்லோ, நன்னயமாய்ரேணுகையாளம்பாள்தன்னை நமஸ்கரித்து முக்காலும் பணிந்திட்டேனே. 751

பணியவேபோகரிடி நாதர்தாமும்பண்பானரேணுகையாள் மனதுவந்து, அணிபெதவேவரிஞனும்பாலகனுக்குவன்பான காயாதிகற்பந்தன்னை, துணிவுடனேதாமுரைத்தாள்மாதுதானும்துறையோடும் முறையோடுமதுகளற்றி, மணிபோன்றபோகரிடிநாதருக்கு மகிழ்ச்சியுடன்பின்னுமல்லோ முறைசொல்வாளே. 752

சொல்வாளேமாதுமையாள்ரேணுதாமும் துறையானபாலனுக்குமுறையோடல்லோ, வல்லதொருநாலுயுக சித்துதாமும்வண்வமயுடன்தாமுரைத்தமுறைபாடெல்லாம், கல்லானகாயாதிகற்பந்தன்னை

பாலன்றானும், சந்தோஷங்கொண்டல்லோகுளிகைபூண்டு சைனபதி மாதர்களைக்காணவென்று, சிந்தையிலே தாம்நினைந்து சிறியபாலன் சிற்றின்பக்கடல்தனிலேயழுந்தினாரே. 753

அழுந்தியேபோகரிடியானபாலன் வன்புடனேசைனபதிமாதர் தன்னை, பழுதுபடாத் திருமேனிக்காவலோனும் பட்சமுறப்பெண் களுடன்வந்துசேர்ந்து, எழுங்குடனேநவகண்ட ரிடியார்தம்மைவுற் பனமாய்க் கண்டதொருவதிசயந்தான், மழுவான ரேணுகையின் மார்க்கந்தானும் மகத்துவங்களத்தனையுங்கூறுவாரே. 754

கூறுவார்வாய்திறந்து போகர்தாமும் கொப்பெனவே சைன பதிப்பெண்களுக்கு, மாறுபடாலோக வதிசயங்களெல்லாம் மகத் தான நாலுயுகவதிசயங்கள், ஆறுபுடைசூழ்நகரம் வடதேசந்தான் அடைவான காறுமலைகள் குண்கள், வீறுபுகழ் ரேணுகையாள் சமாதிபாகம் விருப்பமுடன்தானுரைத்தார் போகர்தானே. 755

தானனபோகரிடி முனிவர்தானும் தண்மையுள்ள பெண்களு க்கு வுபதேசிப்பார், கோனனநவகண்டரிடியார்தானும் குறிப்புட னே தாமுரைத்தவண்மையாவும், மானன ரேணுகையாள் லீலாகற் பம் மகத்தான குருக்கள்மார்ரிடிகள்சித்தர், பானகயின்னம் வெகு மாண்பரெல்லாம் பாருலகில்கேட்டகதை பகருவாரே. 756

போகர் ரேணுகையின் சமர்த்தைக்கூறல்.

பகருவார் நாலுயுககாலந்தன்னில்பண்பானதிரேதாயி னுகத்தி லப்பா, நுகரவேரேணுகையின்மாயலீலை நுட்பமுடன் சைனபதிப் பெண்களுக்கு, சிகரம்வரைசிக்கிந்தாமலையைநாடிதீரமுடன் நவகண் டரிடியார்தம்மை, தகரவேதாள்பாமங் கிட்டினின்று சாங்கமுடன் பணிந்திட்டேன் ரிடியார்காணே. 757

காணவேரேணுகையின் மார்க்கந்தன்னைகடிதானசீனபதிப் பெ ண்களுக்கு, பூணவேசெய்தியெல்லாந்தானுரைத்து பொங்கமுடன் மகிமைதனைக்கூறுவார்காண், தோணவேதேசாதிதேசமெல்லாந்துப் புரவாய்வலசாரியிடமதாக, நீணவேதேசமெல்லாங்குளிகைகொண்டு நீதியுடன்சுற்றி வதிசயங்கண்டேனே. 758

கண்டேனே ரேணுகைபோல்மாயாசித்து காசினியிலெங்கேனு ங்கண்டதில்லை, அண்டர்முனிராட்சதர்களனேகங்கண்டேன் அகில மதில்வெகுகோடிசித்துகண்டேன், புண்டரீகமானதொரு கிருஷ்ண தாரன் பூவுலகிலதிசயங்கள் சொல்லொண்ணாது, தண்டவன ரிடிக ளெல்லாமனேகசித்துதாரணியில்செய்தவருங்கோடிப்பேரே. 759

கோடியாம்வெகுகோடிவதிசயங்கள்குவலயத்தில் கண்டதுண்டு யிதுபோலில்லை, தேடியேதேசமெல்லாஞ் சுற்றிவந்தேன் தெளிவான ரேணுகைபோலசித்துமுண்டோ, வாடியேபோகாதமாயாசித்து வள மையுள்ள காயாதிகொண்டமாது, நீடியே நீனிலத்தில் ரிடியார்தம் மை நீதியுடன் வலதழித்தசித்துமாச்சே. 760

சித்தானசித்துமுனி மாதுதானும் சிறப்பானமானிலத்தி லதிச யங்கள், மெத்தனவேசெய்துமல்லோ காயங்கொண்டு மேதினியில் சமாதிக்குப்போனமாது, சத்தானலோகமதில் அடியார்தம்மைசதா காலம் வலதழித்த கன்னிமாது, முத்தானநாலுயுகங் கடந்தசித்து மூவுலகில்ரேணுகைபோல சித்துமுண்டோ. 761

உண்டான ரிடிகளெல்லாம் யாகஞ்செய்யும் உதகமென்றமலை தனிலேதானுஞ்சென்று, கண்டாளே ரேணுகையாள் மாதுதானுங் களிப்புடனே நாதாந்தசித்துதம்மை, துண்டரிகமாகவல்லோ தவங் கள்யாவும் துப்பறவாய்த்தானழித்து வசியம்பூண்டு, கொண்டபடி வாதமென்ற மலைபோற்றங்கம் கொப்பெனவே தான்செய்து வாங்கி னாரே. 762

வாங்கியேநவகோடி சித்துதாமும் வண்மையுள்ள வாபரணப் பணிதியெல்லாம், சாங்கமுடன் நவரத்தினகசிதத்தாலே சட்டமுட ன்பெற்றுவந்தமாயாசித்து, ஏங்கவேரிடிகளெல்லாம் மதியப்பூண்டு யேமாந்துவாதமென்றயேமந்தன்னை, பாங்குடனேதான்கொடுத்தார் கோடிபொன்னை பட்சமுடன்ரிடிமுதலோர்முனிவர்தானே. 763

தானானரேணுகையின்சமாதிபக்கல் சட்டமுடன் மாண்பரெல் லாம்போவதுண்டு, கோனனையெனதையர் காலாங்கிநாதர் கொற்றவ னார்தன்பாதகடாட்சத்தாலும், தேனனமனோன்மணியாள்கடாட்சத் தாலும் தேற்றமுடன் சமாதியிடம்யானுஞ்சென்றேன், பானனநவ கண்டரிடியார்பாட்டின் பதமதுவும்தப்பாமல் சென்றிட்டேனே.

சென்றேனேரேணுகையின்சமாதிபக்கல்செம்மலுடன்குளிகை கொண்டுயானுமல்லோ, குன்றானபருவதம்போல சமாதிகண்டேன் கொப்பெனவே சீனபதிப்பெண்கள்மாரே, நின்றேனே சிலகாலம் சமாதிபக்கல்நீட்சியுடன்வடபாகங்கார்த்திருந்தேன், தென்றலுடன் சப்தமதுவசரீரிவாக்கு செப்பமுடன் யெந்தனுக்குக் கேட்கலாச்சே.

ஆச்சங்கேரேணுகையின் சமாதிபக்கல் அடவானவசரீரிவாக்கு தானும், பேச்சுடனேசப்தமதுகேட்கக்கண்டேன்பேரானரேணுகை யைக்கண்டதில்லை, மூச்சடங்கிப்போனதொரு மாயாசித்து மூதுல

கில் நாலுயுகங்கடந்தமாது, வீச்சுடனேதேவாதிரிடிகளோடுவிருப்ப முடன்காயமது கொண்டசித்தே. 766

சித்தானசித்துமுனியென்னலாகும் சீரானநாலுயுகங் கடந்தமாது, நித்தமுமேதேவாதிரிடிகளெல்லாம் நீணிலததில் ரேணுகையின்சித்துகாதை, புத்தியுள்ளசீஷமார் வர்க்கத்தோர்க்குபுகழ்பெறவேசதாகாலம்வசனிப்பார்கள், பத்தியுடன்சதாநித்தம் மாண்பரெல்லாம்பாருலகிரேணுகையைப்போற்றுவாரே 767

போற்றுவாரென்றுமேபெண்களுக்கு பொங்கமுடன் தாமுறைப்பார்சீனத்தோர்க்கு, தேற்றமுடன்குளிகைகொண்டு வெகுதேசங்கள்திறமையுடன் சுத்திவந்தேன்புத்திமானாய், ஆற்றவேபோகாது ரேணுமாது வன்பானவல்லமையான்கண்டதில்லை, மாற்றமென்றமையுடனேயானுஞ்சென்று மங்கையரைக்கண்டேனே வெகுவாய்த்தானே.

தானானசீனபதிப்பெண்கள்மாரே தன்மையுடன் வதிசயங்களின்னஞ்சொல்வேன், கோனானயெனதையர் காலாங்கிநாதாகொற்றவனார்குருபாதக்கடாட்சத்தாலும், தேனானமனோன்மணியா ளருளினாலும்தேசமெல்லாஞ் சுத்திவந்தேனிதுபோலில்லை, யானானரேணுகையின் தரிசனத்தைப்பாருலகிலடியேனுங் கண்டிட்டேனே. 769

கண்டேனேரேணுகையின் வல்லபத்தை களிப்புடனே மனதுவந்துவரமும்பெற்றேன், விடைதொரு பொருள்தோய்ந்து வினயம்பெற்று வேதாந்தசற்குருவைமனதிலெண்ணி, கொண்டல்முடி அச்சுதனாமுன்னேநிற்க கொம்பனேயே குளிகைகொண்டு பின்னும் வந்தேன், வண்டணிமார்விட்டகுறையிருந்ததாலே வண்மையுடன் சீனபதிவந்திட்டேனே. 770

துவாபரயுகத்தில் திரௌபதை சமாதியை போகர்கண்டது.

வந்திட்டேனென்றனுமேமுனிவர்கூறவாகானபுலிப்பாணிமைந்தாகேளு, அந்தமுடன்குளிகையது பூண்டுகொண்டு அவனிதனில்சுற்றிவருங்காலந்தன்னை, சிந்தையுடன் வடபாகங்கடலோகத்தில்சீதாவின்பிராட்டியரின்சமாதிபக்கல், சொந்தமுடன்குருட்சேத்திர பூமிதன்னில் தோற்றமுடனடியேனு மிறங்கினேனே. 771

இறங்கினேன்குளிகையதுவிட்டுமல்லோ யெழிலானவடபாகங்கடலோரத்தில், இறங்கவேபாஞ்சாலராஜனப்பாதிகழானகோட்டை

யதுகெடிமுகத்தில், சிறந்ததொருகோட்டைமுகம்வரண்வாசல்தான் சிரானவாழிதடங்கண்ணிற்கண்டேன், குறைவின்றிகூறுத சித்திரக் கூடம் கொற்றவனூர்பாஞ்சாலன் பதிகண்டேனே. 772

பதியானருசமகாருசபோசன் பாங்கானகோட்டைமுகம் மண் மேடிட்டு, துதியானசமாதியது கோடாகோடி துப்புறவாய்க் காணு தற்குயிடமோயில்லை, நதியானபாஞ்சால நதிதானப்பாநவில்லவேமுடி யாதுகாணூர்தானும், மதிபோன்றபாஞ்சாலன் சயாதியல்லோமகத்து வங்கள்மெத்தவுண்டு கூறொண்ணுதே. 773

ஒண்ணுதுபாஞ்சாலன்சமாதிபக்கல் ஓகோகோநாதாக்கள் ரிடி கள்கூட்டம், அண்ணூர்ந்துபார்த்தாலுமளவுண்டோ ஆகாயக்கோட் டையதுஅறையப்போமோ, திண்ணமுடன்கோட்டையது யிடபாக த்தின் திடமானபாஞ்சாலன்மண்டபந்தான், வண்ணமுடன்மண்டப மாந் தென்பாகத்தில் வளமானபாஞ்சாலன் வில்கண்டேனே.

வில்லானவில்லதுவும் விளம்பப்போமோ மேதினியில்வச்சிரமா மவில்தானப்பா, கல்போன்றமலைகளையு மெறியும்வில்லுகாவலனூர்கா ட்டகத்தேயிருக்கும்வில்லு, மல்போன்றசமர்க்களத்தைக்கொல்லும் வில்லு மகத்தானபாஞ்சாலனுணியில்லு, வல்லதொரு வில்லதனைக்க ண்டேன்யானும் வளமானசித்தாதிக்காவலுண்டே. 775

உண்டானகாவலாஞ் சொரூபசித்தை வுத்தமரை யான்கண்டு கேட்டேனப்பா, அண்டாதிவில்லுணியாருதென்றேன் வப்பனே பா ஞ்சாலன்வில்லென்றார்கள், தெண்டமுடன்பாஞ்சாலன் வில்லென் றோத தெளிவானபுத்தியதுமனங்கலங்கி, கண்டுமேமதியேங்கி புத்தி மாறி கலங்கியேபூமிதனில் விழுந்திட்டாரே. 776

இட்டேனேயடியேனுமதிகலங்கி யெழிலான கோட்டைமுகம் தன்னில்யானும், பட்டதொருபடுகளம்போலெந்தனுக்கு பட்சமுட ன்சித்துமுனிசொரூபந்தானும், திட்டமுடன்கைலாகுதான்கொடுத் துதீரமுடன் விடையாற்றியெந்தனுக்கு, அட்டதிசைத்தான்புகழும் வில்சமர்த்தை வன்புடனேயெந்தனுக்கு ஓதினாரே. 777

ஓதவேயடியேனுங் களைகள்நீங்கி வுத்தனும் வுபதேசம்பெறவே யெண்ணி, நீதமுடன்வில்லினது அருகிற்சென்றேன் நிட்களங்கமா கவல்லோகாரங்குவித்தேன், பாதமதுதன்னளவாம் சிரங்குவித்துபட் சமுடனடிவணங்கிதெண்டனிட்டு, ஆதமுடன்வணங்கியல்லோநிற்கு ம்போது அங்ஙனவேயசரீரி வாக்குண்டாச்சே. 778

ஆச்சப்பாவில்லதுவு மேதுரைக்கும் வன்பான காலாங்கிநாதர் போதா, மூச்சடங்கிப்போனதொரு ராசனப்பா முனையானபாஞ்சாலரூசன் தானும், வீச்சுடனேகரமேந்திவிட்டநாணு வீரானவில்லதுவும் நான்தானுச்சே, மூச்சடங்கிப்போனதொரு சமாதிபக்கல் மூதுலகில் கார்த்திருக்கும் வில்லுமாச்சே. 779

வில்லானபாஞ்சாலன் நாணுவில்லு வெகுகோடிரூசர்களும்மெச்சும்வில்லு, வல்லதொருலோகாதி சித்தரெல்லாம்மகத்தானரிடிகள் முதல்வணங்கும்வல்லு, நில்லாதுபடைமுகத்தில் வரசர்தம்மை நீணிலத்தில் வெல்லுகின்றயிந்திரவில்லு, சல்லாபமுடையதொரு வில்லுமாகும் சதுரானவையகத்தில் சமாதிவில்லே. 780

வில்லென்றபாஞ்சானநானிதானும் விருப்பமுட னெந்தனுக்குவுரைக்கும்வார்த்தை, சொல்லென்றவசரீரிவாக்கினாலே சுத்தமுடனுபதேசம்பெற்றுவந்தேன், புல்லறிவாலெந்தனுக்குவுபதேசங்கள் புகட்டவேயானுமல்லோ வரமுங்கொண்டேன், கல்லானகல்லினது வரமுமல்ல கைலாயவில்லினதுவரமுமாமே. 781

ஆமேதான்காலாங்கினாதர் தம்மால் வன்புடனே யானுமல்லோவரமுங்கொண்டேன், போமேதான்திரௌபதியாள் சமாதிகண்டேன் பொங்கமுடனெந்தனுக்கு விடையுமாச்சு, நாமேதான் சொன்னபடி விடையும்பெற்று நாதாந்த திரௌபதையாள் சமாதிகாண, வேமேதான் வுத்தாரவிடையும்பெற்று வேகமுடன் சமாதியிடன் வந்திட்டேனே. 782

இட்டேனேவடபாகங் கடலோரத்தில் யெழிலானபாஞ்சாலன் தேசந்தன்னை, திட்டமுடன்கோட்டையது வெளிபுறத்தில் தீர்க்கமுடன்திரௌபதியாள் சமாதிபக்கல், சட்டமுடன்குகைவிட்டுநானிறங்கி சாங்கமுடன்தென்புறத்திலிருந்துகொண்டு வட்டபுரி திரௌபதியாளம்மன்றன்னை வணங்கினேன் போகரிஷிவணங்கினேனே.

திரௌபதைசமாதிபக்கலிருந்த சித்தர்கள்போகரை யாரென்று வினவல்.

வணங்கவேசமாதியிட பக்கல்தன்னில் வாகுடனே யடியேனும் நிற்கும்போது, இணங்கவேநாதாந்தசித்துதாமும் யெழிலாக யெந்தனையும் யாரென்றார்கள், சுணங்கமதுவாராம லடியேன்றானும் சுத்தமுடன்மனதுவந்துசொன்னேன்யானும், மணங்கமழுங்காலாங்கிசீஷனென்றேன் மகத்தானபோகரிஷி யென்றிட்டேனே. 784

யென்றிடவேகாலாங்கிதாள்பணிந்து யெழிலாகரேணுகையின் சமாதிகண்டேன், சென்றுமேநவகோடி ரிஷிகள்தம்மால் செப்பிய

தோர்மார்க்கமெல்லாந் தெரிந்துயானும், வலுவாகதேகத்தை கற்பங் கொண்டு காசினியில்வரைகோடிகாலந்தானும், செல்லாமல்தேகமது யிருப்பதற்குசெம்மலுடன் ரேணுகையும் போதிப்பாளே. 785

போதிக்ககாயாதிகற்பந்தன்னை பொங்கமுடன்போகரிஷி நாதர் தாமும், ஆதித்தன்சந்திரன்போல் கற்பந்தன்னை வன்புடனேதாமறிந்துகொண்டாரல்லோ, பேதித்துக்காயாதி குளிகைதன்னைபெருமையுடன்சிறுபாலன்பெற்றுக்கொண்டு, சாதித்துசிலகால மங்கிருந்துசட்டமுடன்சைனபதிக்கேகினாரே. 786

ஏகுதற்குமுன்னமல்லோபோகர்தாமும் யெழிலான ரேணுகையின்மாயாகற்பம், வாகுடனேபெற்றல்லோ நாயன்றானும் வண்மையுடன்ரேணுகையாள்பாதம்போற்றி, சாகுதற்குயிடமதுவும் நேராமற்றான்சட்டமுடன்போகரிஷிநாதர்தாமும், ஆகுடனேகுளிகையது பூண்டுகொண்டுவன்புடனே சைனபதிக்கேகினாரே. 787

போகர் சைனபதிப்பெண்களுக்கு ரேணுகையின்
வரலாறு கூறல்.

ஏகவேபோகரிஷிநாதர்தானும் யெழிலானகுளிகையது பூண்டு கொண்டு, சாகமுடன்சைனபதிக்கேகியல்லோ சட்டமுடன்காலாங்கிநாதர்தம்மை, வேகமுடன்சமாதியிடங்கண்டுமல்லோ விருப்பமுடன்காலாங்கிபாதம்நோக்கி, சோகமுடன்யெந்தன்குரு நாதாவென்று சுத்தமுடன்தாள்பணிந்து நின்றிட்டாரே. 788

நின்றதொருகாலாங்கிநாதர்தானும் நீதியுள்ளபோகரிஷி நாதருக்கு, சென்றுவந்தகாரியங்கள் செயந்தான்கொண்டீர்செம்பவளபோகரிஷிபுனிதவானே, கன்றுதான்தாயைவிட்ட கதையைப்போல கடுங்காலைநீதானே சென்றுவந்தாய், வென்றிடவே லோகாதிலோகமெல்லாம் விருப்பமுடன்செயம்பெற்றுவாழ்குவீரே. 789

வாழ்கவென்றுகாலாங்கிநாதர்தாமும் வளமானபோகரிஷி நாதருக்கு, சூழ்கவேஆசீர்மம்மிகவுங்கூறி துப்புரவால்யோகபதி மாண்பனை தாழ்வாகவெந்நாளுங்கீர்த்திவானாய் தாரணியிலிருக்கவென்று வரமுந்தந்து, நீழ்கவேசைனபதிப்பெண்களோடு நெடுங்கால மிருக்கவென்றுவரந்தந்தாரே. 790

போகர்காலாங்கிநாதருட ஆசீர்வாதத்தைப்பெற்று
சைனபதிப் பெண்களைக்காணல்.

தந்தாரேபோகரிஷிநாதருக்குசாங்கமுடன்காலாங்கிநாதர்தாமும்,விந்தையுடன்விடையதுவும்பெற்றுக்கொண்டுவேதாந்த போகரிடி

என்றேனேயடியேனுமன துவந்து யெழிலாகக்குளிகையதுபூண்டுகொண்டு, சென்றேனேசினபதிதேசந்தன்னில்சிறப்புடனேவதிசயங்களெல்லாஞ்சொன்னேன், குன்றானநாகமலைதன்னைக்காணகொற்றனேமனதுவந்துகுளிகைபூண்டு, சென்றேனேவாகாஷந்தான்பறந்து செம்மலுடன்வுச்சி முகங்கண்டிட்டேனே. 791

போகர் நாகமலைகண்டது.

கண்டேனே நாகமலைதன்னியப்பாகருவானபுலிப்பாணிமைந்தா பாரு, உண்டானவுச்சிமுகந் தன்னிற்சென்றேன்வுதகமுண்டு சுனையுண்டுவதிசயந்தான், அண்டர்முனிதாமறியா பாதாளந்தான்வதின்கீழேசமாதியதுகாவலுண்டு, திண்டானபட்சியதுகழுகுவப்பா திரள்கோடிவரைகோடி சொல்லொண்ணாதே. 792

ஒண்ணாதபட்சியதுயானுங்கண்டேன் வுத்தமனேபட்சியெனைக் கண்டபோது, அண்ணார்ந்துவடியேனுமனதுவந்து அன்புடனேகாலாங்கிசீஷனென்றேன், கண்ணானகாலாங்கிசீஷனென்று கைதொழுது முடிவணங்கிதெண்டனிட்டேன், மண்ணதனில்சுனைகீழேயிருக்குஞ் சமாதிமார்க்கமுடன் யெந்தனுக்குகூறலாச்சே. 793

கூறவென்றால்மூன்றுயுகங்கடந்தசித்துகுறிப்பானகிரேதாயினுகத்திலப்பா, மாறலுடன்காயாதிகற்பங்கொண்டு மானிலத்தில்வெகுகாலமிருந்தசித்து, சீறலது வாறுதுகழுக்குன்றிசித்துசிறப்பானசீயாகியல்லோதவசியாருங், ஆறலது, பூண்டதொருகொடியசித்து வப்பனேகிரேதாயின்சித்துதாமே. 794

சித்தானதேவசித்து மானிடசித்துசிறப்பானபிரளங்கள் கடந்தசித்து, முத்தானகிரேதாயினுகத்திலப்பா முனையாறநாகமலை யிரளயத்தில்சத்தசாகரம், பொங்கிமேலெழும்பிடசட்டமுடன் மலையதுவுமுழுகிப்போச்சு, வித்தகனார்மலைபோலே யிருந்தசித்து விடுபட்டுமடியாமலிருந்திட்டாரே. 795

இருந்தாரேமூன்றுநாளாறுவேளையெழிலான பிரளயத்தின்மலையினுச்சி, திருந்தமுடன்சலஸ்தம்பஞ்செய்துகொண்டுதிரளானநவரிடிகள்யிருந்தாரங்கே, பொருந்தவேபிரளயங்கள் போனபின்பு பொங்கமுடன் நவகோடிசித்தர்தாமும், வருந்தியேகனைகீழே யிருந்தசித்தை மாற்கமுடன்கண்டல்லோ வுணங்கிட்டாரே. 796

வணங்கியேசமாதிபுரம் நிற்கும்போதுவாகான சமாதியதுவெ டிக்கலாச்சு, இணங்கவேவகவகோடிரிடிகள் தாமும்யெழிலானசமாதி யிடம்பக்கல்நின்ருர், கணமுடனேகழுக்குன்றிசித்துதாமும்கருவாக யெந்தனையுங்கண்டபோது, மணங்கமழும்சித்துமுனி தேவர்நாமும் மார்க்கமுடனெந்தனையா ரென்றிட்டாரே. 797

என்றுமே கழுக்குன்றிசித்துதாமும் யெழிலாகயெந்தனையாரெ ன்றுகேட்க, வென்றிடவே காலாங்கி நாதர்தம்மின்வேதாந்தசித்தின துசீஷனென்றேன்,நன்றிபுரிந்தென்னையவர்சித்துதாமும்நலமுடனே யெந்தனுக்குவுபதேசங்கள், குன்றின்மேல்தானிருந்து கோடியாகங் குறிப்புடனே யெந்தனுக்குக்கூறிஞரே. 798

கூறிஞருபதேசம்யானுங்கண்டு குறிப்புடனேமனதுவந்துகுளி கைகொண்டு, மீறிடவேசீனபதி யானுஞ்சென்றுமிக்காணமாண்பருக் குயாவுங்கூறி, தேறிடவேசிலகாலமங்கிருந்துசிறப்புடனே காலாங்கி விடையும்பெற்று,நாறியேகுளிகையதுபூண்டுகொண்டுதுப்புறவாய்த் தென்றிசையில் வந்திட்டேனே. 799

போகர்நீலாஞ் சனக்கிரியைக்கண்டது.

வந்தேனேநீலாஞ்சக்கிரியிலப்பாமகத்தான புலிப்பாணிமைந்தா பாரு, சிந்தைமனமொன்ருகிமனங்களித்து சிறப்புடனேதென்கூடப் பதியமர்ந்தேன், பந்தமுடன்குளிகையதுபூண்டுகொண்டுபார்தனிலே கடலோரஞ்சுற்றிவந்து, விஞ்சைபுரிவஞ்சனமாங்கிரியைக்கண்டேன் விண்ணுலகு கொள்ளாதமகிமைதானே. 800

தானனமலையதனைக்கண்டுயானும் தகமையுடன்சிகரம்வரைகான வெண்ணி, கோனனயெனதையர் காலாங்கிநாதர் கொற்றவனுர்தன் பாதக்கிருபையாலும், தேனனமனேன்மணியாள் கடாட்சத்தாலும் தேவர்முதலசுரர்கள்கிருபையாலும்,மானனபலபேர்கள்ரிடிகளாலும் மகத்தானகிரிதனையேபோற்றினேனே. 801

போற்றினேன்குளிகையதுசெல்லவென்று பொங்கமுடன்மலை திற்சென்றேன்யானும், ஆற்றலுடன் குளிகைகொண்டுசிகரஞ்செ ன்றுவப்பனேமலைதனிலே யிறங்கினேன்யான், மாற்றலுடன்சுராக் கள்கூட்டத்தோடுமகத்தான தேவரிடிசூழக்கண்டேன், நீற்றமுடன் மலைதனிலேசுற்றியானும் நிகட்சியுடன்மூலவரைக் கண்டிட்டேனே.

கண்டேனேகிரிகோடியமுனைகோடி கண்கொள்ளாதூரமதுவின யங்கண்டேன், கொண்டல்வண்ணனச்சுதனுர்மலையுங்கண்டேன்குறி

ப்பானகிருஷ்ணகிரியென்னலாகும், தண்டுளவமாலையணிமாலைபூண்ட தாக்கானசெந்தாமரைப்புவியைக்கண்டேன், மண்டோதரித்தானவ சிக்கும்மலையுங்கண்டேன் மகத்தானமயிலிராவணன்கண்டேனே.

கண்டுமேயதற்கப்பால் நெடுந்தூரந்தான்கனமான வஞ்சனமா ங்கிரியில்வாழும் தண்டுபுகழ், வேலாயுதசூலத்தோடும்தன்மையுடன் சித்தினது சமாதிகண்டேன், குண்டுபோல்மலையொன்று மிருக்குமங் கே குவலயத்தில் மாண்பர்களுங்கண்டதில்லை, வண்டினங்கள் கீதமு டனேசை கூறுமவளமான சமாதியது பார்த்திட்டேனே. 804

போகர் அஞ்சனக்கிரியில் சதாசிவரிஷியைக்கண்டது.

பார்த்துமேயடியேனுங்குளிகைவிட்டு பாங்குடனேசமாதிபுரஞ் சென்றேனப்பா, தீர்த்தமுடன் சிவலிங்கக் குளிகைகண்டேன் சிவா னந்தரிஷிகளப்பா கோடாகோடி, ஆர்த்தியுடன்பூசைநைவேத்தியங் கள் வப்பனேயேவல்பணிசெய்துநிற்பார், சாரத்தகியாமாழ்வார்க ளொருபக்கந்தான்சாங்கமுடனேவனுக்கு முன்னிற்பாரே. 805

நிற்கையிலேயடியேனுமனதுவந்து நீதியுடன்சமாதிமுகஞ்சுத்தி வந்து பொற்கைவளநாட்டினில், வாழ்சித்தர்தம்மை பொற்பாதந் தாள்பணிந்துவடியேன்றானும், சிற்பரனுஞ்சதாசிவனுர் சமாதிதன்னை சிரப்புடனேயடியேனுங்காணவந்தேன், கற்பனையாயெந்தனையுமாசீர் மித்து கடாட்சிக்கவேண்டுமென்று கருதினேனே. 806

கருதவேயெந்தனையுஞ்சித்தர்கூட்டம் கருத்துடனே மனதுவந் துயாரென்றார்கள் திருதமுடன்காலாங்கிசீஷனென்று தீர்க்கமுடன டியேனுந்தெண்டனிட்டேன், வருகவென்றுசித்துமுனியசுராள்கூட் டம்வளமையுடனெந்தனுக்கு வணக்கஞ்செய்து, பெருகவே யெந்த னையுந்தானழைத்துபேருன சமாதிமுகஞ்சென்றிட்டாரே. 807

சென்றுமேயடியேனுங் கொண்டுவந்து சிறப்புடனே சமாதிமு கம்நில்லென்றார், குன்றுமேல்தானிருந்த சீஷர்தாமும் கோலமுட னெந்தனையுங்கண்டபோது, அன்றுதித்தமான்தோலும் புலித்தோ லப்பா வப்பனே யெந்தனுக்குத் தான்கொடுத்து, இன்றுமுதல் சில காலமிங்கிருந்தால் யெழிலானவுபதேசங்கிடைக்கும்பாரே. 808

பாரென்று சீஷவர்க்கம் பகர்ந்தாரப்பா பட்சமுடனனுமங்கே சிலதுகாலம்தீரமுடன், ஆசனத்தின்மேலிருந்து தீர்க்கமுடன் தவநி லையிலிருந்தேனப்பா, சாரலெனுஞ்சமாதிமுகஞ் சென்றசித்துசட்ட

முடன் நெருங்காலஞ்சென்றசித்து, வீரமுடன்சமாதியது தான்திர ந்து விருப்பமுடன் குளிகையைவிட்டுவந்திட்டாரே. 809

வந்தாரே சதாசிவரிஷியார்தாமும் வணக்கமுட னசுரர்க்கள் தேவகூட்டம்சிந்தனையாமனது, வந்துவஞ்சலாகிசிறப்புடனே சதாசி வரிஷியார்தம்மை, பந்தமுடன்வெகு கூட்டவசுரர்களோடும்பட்சமு டன் தாள்பணிந்து நிற்கும்போது, அந்தமுடனடியேனுந் தவசைவி ட்டு வப்பனே யான்வணங்கிப் பணிந்திட்டேனே. 810

பணிந்ததொருயெந்தனையுவாரென்றேதான் பட்சமுடன்சதா சிவரிஷியார்தாமும், கணிதமுடன்கருத்துவந்து கனிந்துகேட்க கை லாச காலாங்கிநாதர்தம்மின், அணிகடவுள் விசுவாசபாதம்பெற்றவ ப்பனேபோகநாதாசீஷனென்றேன், மணியானகுளிகைகொண்டுமலை யிற்சென்று மகதேவாவந்து நெடுநாளுமாச்சே. 811

ஆச்சப்பாவந்துநெடுங்காலமாச்சு வப்பனேதாள்பணிந்து வண ங்கிநின்றேன், மூச்சடங்கிமலைதனிலேயிருந்தசித்து முசியாமலெந்த ன்மேல்பட்சம்வைத்து, பாச்சலுடன்மலைதனிலே குளிகைகொண்டு பாலகனேவந்ததொரு புண்ணியத்தால், மாச்சலுடன்வசுரர்கள்கூட் டந்தன்னில் மன்னவனேவந்ததொரு புண்ணியத்தானே. 812

தானனவிட்டகுறை யிருந்ததாலே தண்மையுடன் மலைகளிலே வந்தீரப்பா, தோனன எனதையர் காலாங்கிநாதர்கொற்றவனர்சென் ய்ததொருதவப்பலன்ருன், மானனவசுராக்கள்கூட்டந்தன்னில் மன் னவனேதான்கடந்து வந்தீரப்பா, தேனனமனேன்மணியாள்கடாட் சத்தாலே செம்மலுடன் சபியாமலிருந்திட்டாரே. 813

இருந்தாரேயுந்தனது புண்ணியந்தான்யெழிலான வசுராக்கள் கூட்டத்தார்கள் பொருந்தவே வெகுகோடிமாண்பரப்பா பொங்கமு டன் மலைதனிலேவந்தாருண்டு, திருந்தவேயசுரர்க்கள் கூட்டத்தார் கள் சீறலுடன் சபித்தவர்கள் கோடியுண்டு, வருந்தியேயுந்தனையும் வணக்கஞ்செய்து மன்னவனே கொண்டாடினத்தார்புண்ணியமாச்சே.

ஆச்சப்பாமுன்செய்தபுண்ணியத்தால் வப்பனே யெந்தனையுங் காணலாச்சு பாச்சலுடன் காலாங்கிப்புண்ணியத்தால் பட்சமுடன் மலைதனிலே வந்தீரப்பா, மாச்சலது வராமலுந்தமக்கு மன்னவனே யுபதேசஞ்செய்வேனென்று, வீச்சனுடன் ஞானோபேதகந்தன்னைவி ப்பமுடனெந்தனுக்கு ஓதினரே. 815

போகருக்கு சதாசிவரிஷி ஞானோபதேசங்கூறல்.

ஓதவேசதாசிவரிடி யார்தாமும் வுத்தமனுரெந்தனுக்குக்கூறும்வ ண்ணம், நீதமுடன்காலாங்கிசிஷபாதா நீதியுள்ளபுலிப்பாணிமைந்தா கேளு, நீதமுடன்திரேதாயினுகத்திலப்பா திக்கெல்லாம்பிரளயங்க ள்கண்டபோது, தோதமுடனடியேனும் தவமிருந்து துப்புறவாய் ச மாதிநிலைநின்றிட்டேனே. 816

நின்றேனேசமாதிநிலைத்தானிருந்து நீடூழிகாலம்வரைப் பிரளய த்தில், குன்றேரிமலைமீதில்நானிருந்தேன் குவலயங்களெல்லா மழிந் துகுண்ணுமாகி, சென்றவர்கள்மாண்பரல்லோ கோடாகோடிசேனதி ரள்கூட்டமதுமலையிற்றங்கி, வென்றிடவே தவயோக நிலையில்நின்று விருப்பமுடனெந்தனுக்கு சிஷராச்சே. 817

ஆச்சப்பாசிஷர்களோ கோடிமாண்பர் வப்பனே யெந்தனிட ச மாதிபக்கல், மூச்சடங்கிசென்றிருந்தேன் வெகுகாலந்தான்முனையா னசிஷரெல்லாம்பூசைகொண்டு, பாச்சலுடன் பிரளயங்கள்வடியுமட் டும் பண்பாகயெந்தனிடம்பாதுகார்த்து, வீச்சலுடன்யெந்தனுக்குச் சோடசாரம்வினையங்கள் செய்துகொண்டாடினாரே. 818

ஆடியதோர்சிஷவர்க்கமாண்பருக்கு வப்பனேயானுமல்லோவுப தேசங்கள், தடியேசின்மயத்தைக்கண்டாராய்ந்து சிறப்புடனே ஞா னோபஞ்செய்தேன்யானும், கூடியதோர்ஞானோபம்பெற்றுமல்லோகு வலத்தில் நெடுங்காலமிருந்தார் மாண்பர், வாடியேதிரியாமலுந்தமக் குவளமையுடனுபதேசங் கூறுவேனே. 819

கூறுவேன்திரேதாயினுகத்திலப்பா கொற்றவனேஅயோத்தின கர்தனிலிருந்து, மாறுபடாசமுசாரி ஞானவானும்மார்க்கமுடனெடு ங்காலமங்கிருந்து, ஆறுதலாந்தான்கடந்து சித்தரோடே யப்பனேய வர்தமக்குத்தொண்டுசெய்து, வீறுடனேகாயாதிகற்பங்கொண்டுவிரு ப்பமுடனவர்களிடங் கார்த்தேன்பாரே. 820

பாரேதான்யிதிகாசவித்தையெல்லாம் பண்புடனே கூடிருந்து கண்டாருய்ந்து, நேரேதான்சின்மயத்திலிருந்துகொண்டு நீதியுடன் மலைமீதிற்சென்றுயானும், தீரேதான்தவநிலைக்குயானுமாகி தீர்க்கமு டன்யாகமதுசெய்யும்போது, ஆரேதான்ஒருவரப்பாரிடியார்போலே வப்பனேமுன்வந்து நின்றிட்டாரே. 821

ஆகாயகெந்தருவரிடி சதாசிவரிடியாருக்கு
காயகற்பங் கொடுத்தது.

நின்றுமேயெந்தனுக்குக் காயகற்பம் நீடூழியுலகுபதி யிருக்க வென்று, குன்டுன்மேலாகாயதேவரிடிதாமும்கொற்றவனேஎன்முன்

னேவந்துநின்று, அன்றுரித்தமான்தோலும் புலித்தோலுமாக வப்ப
னேகண்ணிற்குந் தோற்றங்கொண்டு, இன்றுமுதலெந்தனுக்குக்காய
கற்பம்யெழிலாகவுண்ணவெனவரந்தந்தாரே. 822

தந்தாரேவரமதுவுந்தான்கொடுத்து தகமையுடன்காயாதிகற்ப
ந்தந்து, சிந்தையுமொன்றாக்கி யெந்தனுக்கு சீர்பெரவே நாலுயுகமி
ருக்கவென்று, சொந்தமுடனெந்தனுக்குஞானமோதி சுடரொளியா
ந்தோற்றமதை முன்னுண்டாக்கி, விந்தைகளுமிகக்கூறியெந்தனுக்கு
விண்ணுலகிலிருக்கவென்று மதிசொன்னாரே. 823

சொன்னாரே அன்றுமுதலின்றுமட்டும் துப்புறவாய்நெடுங்கால
மிருந்தேன்யானும், மன்னவனார் இருபத்தோர்முறைகள்கண்டேன்
மகத்தான திருச்சங்குயானுங்கண்டேன், நன்னயமாம்தசரதறையா
னுங்கண்டேன் நளராஜபதியைத் தானுங்கண்டேன், வின்னமிலா சூ
ர்ப்பனகைதன்னைக்கண்டேன் வீறானகைகேசி கண்டேன்றானே.

தானானசமர்களத்திலிராவணன்றன் தண்மையுள்ளமண்டோத
ரிதன்னைக்கண்டேன், கோனான ஸ்ரீராமர்தன்னைக்கண்டேன்கொம்ப
னையாள் பிராட்டியரையானுங்கண்டேன், மானானதென்னிலங்கைப
தியிலப்பாமகத்தான வரக்கருடகூட்டங்கண்டேன், பானானராட்ச
தாள்தன்னைக்கண்டேன் பாங்கான வாஞ்சனேயர்கூட்டந்தானே.

கூட்டமாயணியணியாய்யானுங்கண்டேன் கொற்றவனார் ஆஞ்ச
னேயர்சேனைகண்டேன், வாட்டமுடன்வல்லரக்கர்சேனையப்பாவைய
கத்திலெக்கிறகோடி வெள்ளங்கண்டேன், நாட்டமுடன்சதமுகராவ
ணனைக்கண்டேன் நலமானபிரம்மாவையானுங்கண்டேன், நீட்டமுட
னிந்திரனார்சேர்வைகண்டேன் நீடாழிநாரதனார்பதங்கண்டேனே.

கண்டேனேதிருச்சங்குமைந்தனப்பா கண்மணியே வரிச்சந்திர
ன்றன்னைக்கண்டேன், கொண்டல்வண்ணன்ராவணனார்தம்பிகண்டே
ன்கோடிதனம்பெற்றதொரு குபேரன்கண்டேன், அண்டர்முடி தே
வரிடயானுங்கண்டேன் ஆயிரங்கணிந்திரனார்கூட்டங்கண்டேன், தண்
டுளபமாலையணிபூண்டரேனுதகமையுள்ளபூதகியைகண்டேன்பாரே.

பாரேதான்திருதராட்டிரன் றன்மைந்தன் பாங்கானதிரியோதி
ரன்சேனைகண்டேன், சீரேதான்குருகுலமாம் வம்ஙிமிஷத்தில்சிறப்பு
டனேவந்துதித்துபாண்டுராஜன், நேரேதான்பெற்றெடுத்தவைவர்ப
ஞ்சர் நேரானராஜர்களையானுங்கண்டேன், ஆரேதான் பாஞ்சாலவர்
க்கம் ஆண்டகையாள் திரௌபதையைக் கண்டிட்டேனே. 828

இட்டேனேகாளாங்கினியையானுங்கண்டேன் யெழிலானபர
த்வமகாரிஷியைக்கண்டேன், பட்டமுடன்வாழ்ந்தவொருபாண்டிநா
ட்டில்பாங்கான அதிவீரராமன்கண்டேன், வாட்டமுடன்நவகோடி
ரிடியைக்கண்டேன் வளமானமுப்பத்துமூன்றுகோடி, திட்டமுடன்
தேவர்களையானுங்கண்டேன் தீரமுடன் ஐராவத ரிஷிகண்டேனே.

கண்டேனே நாலுயுகமுடிவுக் ள்ளே கலியுகத்திற்காணுதகாட்
சியெல்லாம், தண்டகம்போல்நாலுயுகபிரளயததின் தகமையுள்ளகா
ட்சிகளுமனேகங்கண்டேன், பண்டிதங்கள் சாத்திரங்கள்நாலுவேத
ம்பாங்குடனே கோடிவரை யானுங்கண்டேன், துண்டரிக மாகவல்
லோசமாதிநின்று துப்புரவாய்யுகய்யுகமாய்ச் சென்றுனே. 830

சென்றேனேயுகந்தோறுஞ் சமாதிமார்க்கம் சிற்பரனைமனதிலு
ன்னிதெரிந்தேன்யானும், குன்றுனபருவதத்தில் கோடியாகம்கொற்
றவனேயான்செய்தேன் லக்கோயில்லை,வென்றிடவேநாலுயுகமிப்படி
யேசென்றுவிண்ணுலகவதிசயங்கள்யாவும்பார்த்தேன், இன்றுமுதல்
வையகத்துவதிசயங்கள் யெழிலாகமெத்தவுண்டு நாவொண்ணுதே.

ஒண்ணுதுகாலாங்கிநாதசீஷா ஓகோகோ நாதாக்கள் யாருங்கா
ணா, திண்ணமுடன்நாலுயுகம் நானிருந்துதீர்க்கமுடன் கண்டவதி
சயங்கள்கோடி, பண்ணவெனக்கும்மையல்லாய் யார்க்குரைப்பேன்
பாலகனேபோகரிஷிபண்பாய்க்கேளீர், நண்ணமூடன் நம்மலையைத்
தேடியல்லோ நலமுடனேவந்ததினுற் பலனுண்டாச்சே. 832

சதாசிவரிஷி போகரைக்குறித்து சந்தோஷப்படுதல்

ஆச்சப்பாகாலாங்கிநாதசீஷர் வன்பானபோகரிஷி மணியே கே
ண்மோ, மூச்சடங்கிநெடுங்காலமிருந்தசிற்று மூதுலகில் கோடியுண்
டுலக்கொண்ணுது, எச்சலதுவாராமலும்மைப்போலே யெழிலானசி
த்தர்களுங்கோடியுண்டே, மாச்சலுடன்மலைவந்ததுண்டோசொல்லு
ம்மகத்தானபோகரிடி யென்றிட்டாரே. 833

என்றுமேபோகரிடிகுளிகைபூண்டு யெழிலானமலைதனிலேவந்தீ
ரப்பா, குன்றின்மேலெந்தனையு மொருவருந்தான் கொற்றவனேகண்
டதில்லையென்பார்தானே, சென்றுமேஎழுகடலுஞ் சுற்றிவந்துசெம்
மலுடன் யெந்தனையுங்கண்டீரப்பா, நன்றுகவுந்தமது வுபதேசங்கள்
நலமுடனேயோதிவைப்பே னென்பார்பாரே. 834

பாரேதான்லோகமதிலனேகசித்து பான்மையுடன் நெடுங்கால
மிருந்தாரப்பா, நீரேதானவர்களிடசாபந்தன்னை நீடாழியுலகமதிலி

ருந்தவாறு, நேரேதான்முன்செய்தபாக்கியந்தான் நிட்சயமாய் இந் நாள்மட்டிருந்தீரப்பா, கூரேதான்உம்மைப்போல் சித்துமுண்டோ குவலயத்தில்விட்டகுறை யிருந்தசித்தே. 835

சித்தானசித்துமுனியுந்தமக்கு சிறப்பானவுபதேசமென்னவெ ன்றால், முத்தானலோகமதிலதிசயங்கள் மூதுலகில் மெத்தவுண்டு சொல்வேன்கேளீர், புத்தியுள்ளபூமானே துவாபரயுகத்தில்புகழான காலாங்கியுந்தநாதர், சத்தியரிச்சந்திரனார் திருச்சங்குக்கு சத்தமுட ன்வரமதுவும்மிமத்தந்தாரே. 836

தந்தாரேவரமதுவும்மிகவும்பெற்று தாரணியில்காயாதி கற்பங் கொண்டு, பந்தமுடனயோத்திநகர்தன்னையல்லோ பட்சமுடன் நெ டுங்காலமாண்டிருந்து, விந்தையுள்ளவதிசயங்கள் யாவுங்கண்டு மிக் கானகாயாதிகற்பங்கொண்டு, அந்தமுடன் குருவினுபதேசம்பெற்று வரிச்சந்திரன்மைந்தனையும் பெற்றார்தானே. 837

காயகற்பத்தால் அரிச்சந்திரன் பிறந்தது.

தானான திருச்சங்குராசனுக்கு சார்பாகநெடுங்கால மைந்தனில் லை, கோனான காலாங்கிநாதர்தானும் கொற்றவனார் தேவரிடிகொடுத் தகாயம், தேனான திருச்சங்குகொண்டபின்பு தோற்றமுடன்மைந்த னையும்பெற்றுமல்லோ, பானுனசத்தியரிச்சந்திரன்றான் பார்தனிலே பிறந்ததொருவண்மைகேளே. 838

கேளேதான்சித்தினதுவாசிர்மத்தில் கீர்த்தியுடன் சத்தியரிச்ச ந்திரன்றான், நாளேதான்போகாமல் சதாகாலந்தான் நாவுதவராமல ல்லோ சிறுபாலன்றான், பாளேதான்தேகமதுவழிந்திட்டாலும்பக்கு வமாய்வையகத்தில் பொய்கூறாமல், சூளேதான்தேவாதி தேவர்மெச் சசுந்திரனுந்தேவிதனையிழந்திட்டானே. 839

இழந்தானேநெடுங்காலஞ்சுடலைகார்த்துயெழிலானபணிவிடை க்கியானுமாகி, புழங்கிடவேவையகத்திலாகசெய்து புகழானகீர்த்தி யதிகம்பெற்று, வழங்கிடவேராசாதிராசர்மெச்ச வளப்பமுடன் தே வசித்துயென்றுகூற, தழம்பிடவேநெடுங்கால மரசுசெய்து சட்டமு டன்மண்ணதனில் சென்றார்பாரே. 840

பாரேதான்வுந்தமக்குவயந்தனாலே பார்த்திபனே யுபதேசம்பெ றுவதற்கு, சீரேதான்நற்காலம்சேர்ந்துதப்பா சிறப்பாகஞானோபதே சஞ்செய்தேன், ஆரேதான்சித்தர்முனிரிடிகள்தாமும் வப்பனேயுந் தமக்கு லொன்றுங்கூறார், நீரேதான் கொண்டதொரு குளிகையப்பா நீதியுடனேவரைசெல்லுந்தானே. 841

சதாசிவரடியார்போகர் குளிகைக்கு இமயகிரியில் இருபத்தோர்
வரைசொல்லும்படி வரங்கொடுத்தல்.

தானனகாலாங்கிநாதசீஷா தண்மையுடனுந்தனது குளிகையல்லோ, கோனனயிமயகிரிபர்வதத்தின்கொற்றவனே யேழுவரைசென்றுதல்லோ, பானன பதினன்குவரையுஞ்செல்ல பார்த்திபனே யுந்தனுக்குவரமுமீய்வேன், மானன சித்தர்முனி ரிஷிகள்தாமும் மார்க்கமுடன்சாபமது தந்தார்பாரே. 842

தந்தாரேசித்துமுனிரிஷிகள்சாபம் தான்கொடுத்த சாபமதை நிவர்த்திசெய்து, அந்தமுடன் வுந்தமக்குகுளிகைசெல்ல வப்பனே வரமதுவுந்தந்தேன்யானும், இந்தநொரு வரமதுவு முந்தனுக்கு யெழிலாகயிருபத் தோர்வரையுமட்டுப், முந்தவேயேழுவரைசெல்லும் போக முனையானபதினலுவரை செல்வீரே. 843

செல்லவேகுளிகையது கொண்டுமல்லோ சிறப்புடனே மலைதனைலசெல்லும்போது, புல்லவேவெகுகோடிவதிசயங்கள் புகழான மலைதனிலே காணலாகும், கொல்லவேயுந்தனையுஞ் சித்துதாமும் கொப்பெனவே வருவார்கள் கோடிபேர்கள், வெல்லவேயவர்களையு முந்தனுக்கு விருப்பமுடனுபதேசஞ் சொல்வேன்காணே. 844

காணவேபோகரிடிபுனிதவானே கண்மணியேயுந்தனுக்குயிடையூர்வந்தால், தோணவேகாலாங்கிநாதர்தம்மை தோற்றமுடனவர்பாதந்தனைநினைந்து நீணவேயஞ்சனமாங்கிரியில்வாழும்நிஷ்களங்கமான சதாசிவத்தையப்பா, ஆணவங்கள் தானொடுங்கி நீயுமப்பா வப்பனே யெந்தனையும் நினைத்திடாயே. 845

நினைக்கையிலேயுந்தனுக்கு வந்ததுன்பம் நிட்களங்க மாகவல்லோஜெயமுங்கொண்டு, தினகரன்போலவர்களுக்குப் புனிதவானுய் தீர்க்கமுடனீநினைத்தகாரியங்கள், சினமதுவும்வாராமல் ஜெயமும்பெற்றுசிறப்புடனே குளிகையதுகொண்டுமேதான், வனமெலாந்தான் திரிந்து சிகரமட்டும் வாமுடனேதலைதனைவிட்டிறங்குவாயே. 846

இறங்கியே யென்னளுங்கீர்த்திவானுய் யெழிலாக வையகத்திலிருந்துகொண்டு,துறவரத்தில்செல்லாமலில்லரத்தில்துப்புரவாயெந்நாளும் பாக்கியவானுய், குறையதுவும்நேராமல் குவலயத்தில்கொற்றவனே சீனபதிக்குவானுய், நிறையுடனேவாழ்கவென்று ஞானந்தந்தா நீதியுடனுபதேசஞ் செய்தார்தாமே. 847

போகர் சதாசிவரிடியாரிடத்தில் விடைபெற்று
சீனபதிக்கு யேகுதல்.

தாமேதானின்னமொருமார்க்கஞ்சொல்வேன் தயவானபுலிப்பாணிமைந்தாபாரு,நாமேதான் சொன்னபடிவஞ்சனந்தான்நலமானகிரி

தனிலே சென்றேன்யானும், போமேதான்சதாசிவனார்ரிடியைக்கண் டேன்பொங்கமுடன்சகலவரம்யானும்பெற்று, வேமோதான்சினபதி யேகுதற்கு விருப்பமுடன் விடையதுவும்பெற்றேன்தானே. 848

தானேதான்குளிகையது கொண்டுமல்லோ தண்மையுள்ள சீன பதிமாண்பருக்கு, மானேதானஞ்சனமாங்கிரியில்வாழும் மகத்தான சதாசிவனார் ரிஷியோர்சேர்வை, தேனேகேள்சினபதிப் பெண்களுக் குத்தேற்றமுட னுபதேசம்பெற்றதெல்லாம், வானேகேள்குளிகையது கொண்டுமல்லோ மகத்தானயிமயகிரி சென்றார்காணே. 849

போகர் பிமயகிரிபர்வதத்தில் எட்டாவதுவரை சென்றது

காணவே யின்னமொரு மார்க்கம்பாரு கருவான புலிப்பாணி மைந்தாகேளு, தோணவே யிமயகிரிபர்வதத்தில் துப்புரவாய்க்குளி கைகொண்டுயானுமல்லோ, நீணவேயெட்டாவதுவரையிலப்பா நீடா னகுளிகையது கொண்டுயானும், வேணபடிகிரிதனிலே செல்லும் போது விருப்பமுடன் குத்துக்கல்கண்டிட்டேனே: 850

கண்டேனேகுத்துக்கல்லருகிலப்பா கனமான திட்டென்றவா சல்தன்னை, சண்டமாருதம்போலவயிரக்கல்லைசட்டமுடன் தாள்பூட் டியிருக்கண்டேன், அண்டர்முனிராட்சதர்போலிரண்டுசித்தர் வப்ப னேதனிவாசல் காக்கக்கண்டேன், தண்டுலகந்தான்புகழும் ரத்ன ஸ்தம்பம் சட்டமுடன்தானிருக்கக் கண்டேன்தானே. 851

கண்டேனேயண்டர்முனிசித்துதம்மை கைலாசநாதரென்றுவடி பணிந்து, தெண்டமுடன் முடிவணங்கிநமஸ்கரித்துதேற்றமுட னெ ன்குருவேயென்றுசொல்லி, கொண்டுகரங்குவித்தல்லோ தாள்பணி ந்துகொற்றவனே பாதுகாக்கவென்றுகூறி, விண்டிடவேநமஸ்கரித்து பாதந்தொட்டு விருப்பமுடன்பணிந்திட்டே னுண்மைதாமே. 852

உண்மையாமின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் ஓகோகோநா தாக்கள்கண்டதில்லை, திண்ணமுடனடியேனுங்குளிகைபூண்டுதீர்க்க முடனெட்டாங்கால் வரையிற்சென்றேன், வண்மையுடன் ரிடிதேவ ரிருவர்தாமும், வளமையுடனெந்தனையாரென்றுகேட்க, திண்ணமுட ன்காலாங்கிசீஷனென்றேன்தீர்க்கமுடன்சதாசிவத்தின்சீஷன்றானே.

சதாசிவத்தின் சீஷரென்று அடியேன்கூறசட்டமுடன் காவல் நின்றயிருவர்தாமும், பதாப்புயத்தையானிணைக்கயெந்தன்மீதில்பட்ச மதுமிகப்புரிந்துபண்பதாக, கதாயுதங்கள்தான்பிடித்துயிருவர்தாமு ம்காவலரையுட்புகுந்துபின்னேசென்று, நிதாம்பஜமாம்வயிரத்தூண் தனைக்கடந்து விடுதிக்குமுன்பின்னுய்க்கொடுபோனாரே. 854

போனதொருமலைமீதில் யானுஞ்சென்று பொன்னரங்கமான தொருபொய்கைபக்கம், தேனமரும்மடவார்கள் சத்தகன்னிதேவி யர்கள்வீற்றிருக்கும் பொய்கைகண்டேன், கானமாதொடையாருங் கன்னிமார்கள் கைலாசநாதரைப்போல் சித்தருக்கு, மானமுடன்தி ருத்தொண்டுசெய்துமல்லோ மகத்தானதிருக்கன்னியிருக்கின்றாரே.

இருக்கவேசமாதியதுவருகிற்சென்றேன் யெழிலானகன்னிமா ரெந்தனைத்தான், பொறுக்கவேயாரென்றுயென்னைக்கேட்டு பொங்க முடன்சபிப்பதற்கு யெண்ணங்கொண்டார், உருக்கமுடன் யானும ல்லோமனதுவந்து வுத்தமியேகாலாங்கி சீஷனென்றேன், வருக்கமு டன்சதாசிவத்தின்சீஷனென்று வளமையுடன் பலகாலும் மொழிந் திட்டேனே. 856

மொழிந்தேனே யெந்தனது வரலாறெல்லாம் முனையானகன்னி மாருனவர்க்கு, வடியோடே யாமுரைக்க மாதுதாமும் வளமையுட னெந்தன்மேல் பட்சம்வைத்து, பழியதுவும்நேருமலெந்தனுக்குபாங் குடனேசமாதிபுறங்கொண்டுசென்று, அழியாதவரமதுவு மெனக்கு ஓதி வன்பானசமாதியிடஞ்சென்றார்தாமே 857

சென்றுமேயெந்தனையுங்கொண்டுமல்லோ செம்மலுடன்சமாதி பக்கல்கொண்டுநிற்க, வென்றிடவேசமாதியதுபிற்பாகத்தில் விருப்ப முடனிந்திரனார்யானைக்கண்டேன், குன்றுமேல்வெள்ளானைதன்னைக் கண்டேன் குறிப்புடனேயடியேனும் மனம்நடுங்கி கன்றுடனேமெய் நடுங்கிநிற்கும்போது நலமானவெள்ளானை கேட்கலாச்சே. 858

இந்திரன்வெள்ளானை போகனையாரென்று வினவல்.

ஆச்சப்பாவெள்ளானையெந்தனைத்தான் வப்பனேயாரென்றுகே ட்கும்போது, மூச்சொடுங்கிபோனதொரு காலாங்கிநாதர் முனையா னசீஷனென்றுயானுரைத்தேன், மாச்சலுடனஞ்சனமாங்கிரியில்வா ழும் மகத்தானசதாசிவத்தின் சீஷனென்றேன், ஆச்சரியமாகவல் லோகுளிகைகொண்டு வன்பாகமலையேறி வந்திட்டேனே. 859

இட்டதொருபோகரிடியென்றுசொல்லி யெழிலாகத் தாமுரை த்தேன்போகர்யானும், அட்டகிரிதனில்வாழும்வெள்ளையானை வன்புட னேமனதுவந்துமனங்களித்து, சட்டமுடனெந்தனையுந்தலைமேற்கொ ண்டுதண்மையுள்ளஎட்டாங்கால்தறையிற்சென்று, திட்டமுடன்தே வேந்திரன்சமாதிபக்கல் தீர்க்கமுடன்கொண்டல்லோ விடுகலாச்சே.

ஆச்சப்பாசமாதியிட பக்கல்சென்றேன் வப்பனேயங்கிருக்குஞ் சித்துதன்னை, பாச்சலுடன்குளிகைவிட்டு யானுமல்லோபண்புடனே

சித்தரிடம்னின்றேன்யானும், வீச்சுடனேயங்கிருக்கும் காவல்சித்தர் வினையமுடனெந்தனையு மாரென்றார்கள், கூச்சலிடசித்துமுனி கூட்டத்தார்கள் கொப்பெனவே யெந்தனுக்குப்பயன்சொல்வாரே.

சொன்னமொழிதான்கேட்டுத் தப்பாவண்ணம்சுந்தரமேயிமய கிரிக்காணவென்று,நன்னயமாய்க்குளிகைகொண்டுசீனம்விட்டுநளரா ஜயிந்திரனைக்காணவென்று, மன்னவனார்காலாங்கி விடையும்பெற்று மகத்தானசதாசிவத்தினருளும்பெற்று, உன்னிதமாய் எட்டாங்கால் வரையிற்சென்று வுத்தமனேவந்தேனென்று தொழுதிட்டேனே.

## தேவேந்திரன் சமாதியை சித்தர்கள் போகருக்கு காண்பித்தது.

தொழுதேனேயெட்டாங்கால்வரையிலப்பா தோற்றமுடன்ரிடி தேவர்முனிவர்தாமும், பழுதுறுவண்ணமது அடியேன்னிற்கபட்சமுடனென்மீதிற்கிருபைகூர்ந்து, மழுவலுடன்வேதேந்திரன் சமாதிதன்னைமகிட்சியுடன்கொடல்லோ ரிடிகள்தாமும், முழுதுமேசமாதியது பெருமைதன்னை முனையானசித்துமுனி யுரைத்திட்டாரே.

உரைத்தாரேதிரேதாயினுகத்திலப்பாவுத்தமனார்தேவேந்திரன் வுண்மைதன்னை, திரைப்புடனேகெருடகாந்தருவரோடும்தீர்க்கமுடன்கிம்புருடர்விஞ்சையோடும், முறைப்படியேமெல்லிமேனகையினோடும்மேனகையாள் திலோர்த்தமையாள்ரம்பையோடுகுறையாமல்வூர்வசியாள்கன்னியோடும் குவலயத்தில்வெகுகால மாண்டார்தானே.

தானனேதேவேந்திரபகவான்றானும் தரணிபதி யாண்டிருக்குங் காலந்தன்னில், கோனனபரமசிவன்கடாட்சத்தாலே கொற்றவர்க்கு ஞானமதுமிகவுண்டாகி, தேனனமனோன்மணியாள் தரிசனத்தைசெம்மலுடன்தேவேந்திரன்தானுங்கண்டு, மானனவையகத்தின் வாழ்க்கைதன்னை மகதேவர்தன்மனதில் னினைத்திட்டாரே. 865

நித்துமேசப்தமேகங்கள்தன்னை நேர்மையுடன் றனழைத்துயிந்திரன்முன், தினையளவுபொன்னதுவும் நோரதப்பாதீர்க்கமுடனெடுங்காலமிருந்துமென்ன. மனையுடனேசமுசாரவாழ்க்கையற்றுவையகத்தைதான்மறந்து யிந்திரன்றன், சினமதுவும்வாராமலிந்திரன்றன்சிறப்படனேமேகமது வழைத்தார்காணே. 866

காணவேமேகமதை தானழைத்து கயிலாயயிந்திரனுங்கூறலுற்றார், பூணவேயெந்தனையுங்கொண்டுசென்றுபுகழானமேருகிரிதன்னிலப்பா, நீணவேஎட்டாங்கால்வரையில்தானும் நீதியுடன்சப்தமேகங்கள்யாவும், காணவேயிந்திரனைக்கொண்டுமல்லோ துப்புரவாய்மலைதனிலேசெல்லலாச்சே. 867

ஆச்சப்பா தேவேந்திரன்ஞானப்பூண்டு வப்பனேசமாதிதனிலி றங்கினார்பார், மாச்சலுடனாயிரத்துயெட்டுமாற்றுமகத்தான சிம்மா சினந்தான்மறந்து, மூச்சடங்கிதேவேந்திரபகவான்றானும்முனையான மலைதனிலேயிறங்கியல்லோ, பாச்சலுடன்நெடுங்கால மித்திரன்றான் பாங்கான மலைமீதிலிருக்கின்றாரே. 868

இருக்கின்றார் தேவேந்திரபகவான்றானும்யெழிலானசமாதிபுர ம் நெடுங்காலந்தான், பொருக்கவேயுந்தனுக்கு வுபதேசங்கள் புகலு வார் சிலகாலமிங்கிருந்தால், திருக்கமலம்பாதாரசமாதிபக்கல் தீக்க முடன் நீரிருந்தாலசரீர்வாக்கு, கருக்காகவுந்தனுக்கு வுபதேசங்கள் சுந்தரனே கிடைக்குமெனவருள்சொன்னாரே. 869

சொன்னவுடனசரீரி வாக்குண்டாச்சு சுத்தமுடன் சுந்தரனார் போகர்தாமும், நன்னயமாய் விடைபெற்று குளிகைபூண்டு நாதாந்த சித்தொளிவின் பாதம்விட்டு, மன்னவனார்போகரிஷி ஒன்பதாங்கால் மார்க்கமுடன் குளிகையது பூண்டுகொண்டு, பன்னவேபத்தாங்கால் தன்னின்மட்டும் பாங்குடனே குளிகைகொண்டுசென்றிட்டாரே.

சென்றதொருகாலாங்கிநாதர்பாதம்சிறப்புடனேமேல்வரையிற் சென்றுமல்லோ, குன்றானமலைமீதிற் பத்தாங்காலில் கொற்றவனார் குளிகையதுவிட்டிறங்கி, வென்றிடவே பச்சைவண்ணப்புரவிதன்னை விருப்பமுடன் போகரிஷிகண்டேன்யானும், தென்றிசையாமொன்ப தாம் வரையிலப்பா தோற்றமுடன் சென்னிதக்கொக்குதானே.

பச்சைவண்ணப்புரவியும் சென்னிறக்கொக்கும்,
போகரிடம்வார்த்தையாடல்.

தானான சென்னிறக்கொக்குதானும் தன்மையுள்ள பச்சவண் ணப்புரவிதானும், பானானசோதியுடனெந்தன்மக்கல்பட்சமுடனாரெ ன்றுயென்னைக்கூற, கோனானகாலாங்கிநாதசீஷன்கொற்றவனார்போ கரிஷியென்றுமல்லோ, மானானமனோலயத்தை வுறுதிபூண்டுமகிழ்ச்சி யுடன் தானுரைத்தேன் வளமைகேளே. 872

கேளப்பாபுலிப்பாணி சொல்லும்போது கெவனமுடன் பச்சை வண்ணப்புரவிதானும், ஆளப்பாசென்னிறக்கொக்கோடொக்க வப்ப னேயெந்தனுக்குவார்த்தைகூறும், மாளப்பாயுந்தனைத்தான்சபிப்பே னென்றுவார்க்கமுடனிருபேருங்கூறலாச்சு, நாளப்பாபோகாமல் யா னடுங்கி நலமுடனேமுடிசாய்த்து வணங்கிட்டேனே. 873

வணங்கியேயெந்தனுக்கு மனதுவந்துமகத்தானபட்சியுடன்புர வியோடும், இணங்கவே சதுர்முகப்பிர்மாவின்றன் யெழிலானசமாதி

யதுயங்கிருக்க, மணங்கமழும்கிரிமீதில்வந்ததாலே மார்க்கமுடனெந் தனையுங்கொல்வோமென்று, கனமுடனேபுரவியது அனுமானித்துக் கண்டவரியே எந்தனையுங்கொல்லலாச்சே. 874

கொல்லவே எந்தனிடம்வந்தபோது கொப்பென வேயடிவணங்கி முடிகள்சாய்த்து புல்லவேகாலாங்கிதனைநினைந்துபுகழ்ச்சியுடனுத்தா ரங்கூறும்போது, வெல்லவே எந்தனுக்குவிடையுந்தந்துவிட்டகுறை யிருந்ததொரு புண்ணியத்தால் கல்லாகசபிக்கவந்த எந்தனைத்தான் காத்துரட்சிக்க மனங்கொள்ளலாச்சே. 875

கொள்ளவே சதுர்முகனார்சமாதிபக்கல்கொற்றவனே யெந்தனை யுங்கொண்டுசென்று விள்ளவே கிரேதாயினுகத்திலப்பா விருப்பமு டன்சமாதிமுகமிறங்கியல்லோ, உள்ளபடி நெடுங்காலமிருந்த சித்து ஓகோகோநாதாக்களறிந்ததில்லை, கள்ளமினமில்லாதகாயசித்துகடுஞ் சித்து சதுர்முகசித்துமாமே. 876

சித்தானசதுர்முகப்பிர்மாதன்னை சிறப்புடனேயடியெனுங்கான வென்று, முத்தானகிரிதனிலேநெடுங்காலந்தான்மூர்க்கமதுவாராமல் நானிருந்தேன், பத்தியுடன்சமாதிபுரம் நிற்கும்போது பாங்காணவ சரீரிவாக்குண்டாச்சு. சத்தியவான் சதுர்முகப்பிர்மாவின்றன் சது ரானவார்த்தைதனைக் கேட்டேன்பாரே. 877

பாரேதான்சதாசிவனாரிஷிகள்தம்மின் பாங்கானகாலாங்கி சீஷ னென்றேன்சீரோடு, மெந்தன்மேல் மனதுவந்துசிறப்புடனேயெந்த னுக்குகாயகற்பம், தீரேதான்கிரிதனிலேயிருக்கும்தானம்தீர்க்கமுட னெந்தனுக்குஓதினார்காண், ஆரோதான் சொன்னாற்போ லசரீரிவா க்கு வப்பனேமலைமீதிற்கேட்கலாச்சே. 878

கேட்டவுடனடியேனுமனதுவந்து கெவனமுடன்காயாதிகற்பந் தன்னை, தாட்டிகமாயுண்டல்லோ மகிமைபூண்டுதாரணியில் மேல்வ ரைசெல்லுதற்கு வாட்டமுடனெந்தனுக்கு நேத்திரங்கள்வளமுட னேசோதிமின்னல்கண்டாற்போலே, நீட்டமுடன்பிரகாசவொளியு ண்டாச்சு நீதியுடன்பதினெட்டாங்கால்சென்றேனே. 879

போகர் இமயகிரியில் பதினெட்டாம்வரைசென்றது.

சென்றேனே யிமயகிரிபர்வதத்தில் சிறப்பானபதினெட்டாம்வரை யிற்சென்றேன், குன்றானமலையேறிக்குளிகைகொண்டுகொற்றவனே பதினெட்டாம்வரையிற்சென்றேன், வென்றிடவேயன் மென்ற பட்சி தன்னை வீரானகுகைதனிலே கண்டேன்யானும், வென்றிடவேஎந்த னையுமெண்ணங்கொண்டு கொற்றவனே யருகதனிற் செல்லலாச்சே.

செல்லவேயெந்தனையுங்கண்டபோது சீறிபேசினமதுவுமிகவுமா கி, புல்லவேயன்னமது யெந்தனைத்தான்புகழுடனேயாரென்று வின விக்கேட்க, நல்லதொருவன்னத்தையானுங்கண்டு நயமுடனேகாலா ங்கிசிஷனென்றேன், வல்லதொருவன்னமதுயெந்தனுக்குவாகுடனே யெந்தன்மேலிரங்கலாச்சே 881

இரங்கியேயெந்தனையுங்கொண்டணைத்து யெழிலாகவெந்தனுக் குவினயஞ்சொல்லி, கரங்கொடுத்துஎந்தனையு மாசீர்மித்து கைலாச பட்சியல்லோ அன்னமப்பா, சாங்கமதுக்குள்ளிருக்கும் ரிஷியார்தா மும் சுந்தரனேஜம்புமகாரிஷியாருக்கு, வரங்கொடுத்தபிரகார மவரு க்கல்லோமன்னவனே பணிவிடைக்குஆளானேனே. 882

ஆளாகிதேவேந்திரன்சாபத்தாலே யன்னமென்றபட்சியதுவரு வமாகி, நாளாகிநெடுங்காலம்நானிருந்து நாயகனேசாபமதைநிவர்த்தி செய்து, மாளாதவரம்பெற்றுயானு மல்லோ மகத்தான ரிஷியினிடம் விடைகள்பெற்று, தூளானபதாம்புயத்தை யான்வணங்கித் துப்புர வாய்ச்செல்வதற்கு நாளுமாச்சே. 883

ஆச்சப்பாபோகரிஷிநாதாகேளு வப்பனேயுந்தனுக்குவுபதேசங் கள், மாச்சலுடன்செய்யுகிறேனுந்தமக்கு மகத்தானஜம்புமகாரிஷியு ன்பக்கல், பாச்சலுடன்கொடுபோயி விடுவேனென்று பகர்ந்திடவே யன்னமதுயெந்தனுக்கு, ஆச்சரியமாகவல்லோதானுரைக்கவப்பனே குகைதனிலேசென்றேன்பாரே. 884

போகர் ஜம்புமகாரிஷியைக்கண்டது

பாரேதான்புலிப்பாணிமைந்தாகேளு பாங்குடனேஜம்புமகாரிஷி யைக்கண்டேன், ஆரென்றுயெந்தனையும்வினவிக்கேட்க வப்பனேகா லாங்கிசிஷனென்றேன், நேரேதான் நெடுங்காலஞ்சென்றசித்து நேர் மையுடனென்மீதிற்கிருபைகூர்ந்து, வேரேதானெந்தனதுசமாதிபக் கல்விருப்பமுடன்வருந்துவதும் மெய்யேபாரே. 885

மெய்யென்றுவிட்டகுறையுந்தமக்கு மேதினியி லிருந்ததொரு தன்மையாலே, பொய்யானதிரேகமதுநீர்படைத்து பொங்கமுடனி வ்விடத்தில்வந்தீரப்பா, வையகத்தில்தானிருக்கும் மாண்பரல்லோவ ளமுடனேவருதற்குநீதியுண்டோ, துய்யபுகழ்சுந்தரனே யுந்தனுக்கு துப்புறவாயோகசித்துகிட்டலாச்சே. 886

கிட்டவேசிறுபாலாமைந்தாகேளுகீர்த்தியுள்ளவையகத்தில்கோடிசித்தர், அட்டதிசைதான்புகழுமனைகசித்து வப்பனையுனைக்கண்டால் விடுவாரோசொல், திட்டமுடன்சாபமதுயுந்தமக்குத் தீர்க்கமுடன்தான்கொடுத்து சபிப்பாரப்பா,வட்டமுடனுந்தமக்குஞானயோகம் வண்மையுடன்தான் கொடுத்தான் மகிமைகேளே. 887

கேளேதான்காலாங்கிநாதர்பாதா கெவனமுள்ளசதாசிவனாரருளும்பெற்று, நாளேதான்போகாமல் மானிலத்தில்நலமுடனேசித்துவிளையாடும்பாலா, வாளானகுளிகையதுவுந்தமக்கு வளமுடனேயான்றருவேன்போகநாதா, பாளைதான்போகாமல் மனதுவந்து பட்சமுடன்குளிகையது கொள்வீர்தானே. 888

தானானகுளிகையதுகொண்டுமல்லோ தண்மையுடனடியேனுமருளும்பெற்று, கோனானகுருபதத்தைதமனதிலுன்னி கொற்றவனையடியேனுங்கொண்டுமல்லோ, தேனானமனோன்மணியைத் தெரிசித்தேதான் தேற்றமுடன்பனிரெண்டாம் வரையிற்சென்றேன், மானானகுளிகைவிட்டுயானுமல்லோ மகத்தானகிரிதனிலே யிறங்கினேனே.

பனிரெண்டாம்வரை சென்றது.

இறங்கியேமேருகிரிதன்னிற்சென்றேன் யெழிலான காமதேனுதன்னைக்கண்டேன், திறமானகாமதேனையென்னைக்கண்டு தீர்க்கமுடன்யாரென்றுவினவிக்கேட்க, சிறகுடையகாமதேனு தன்னைப்பார்த்து சிறப்புடனேகாலாங்கிசீஷனென்றேன், குறமாதுயென்போலருபங்கொண்டுகொற்றவனையெந்தனையிஞ் சீறலாச்சே. 890

சீறவேயடியேனுமனதொடுங்கிசீர்பாதம்முடிவணங்கிதாள்பணிந்து, ஆறவேமனதுவந்துகரங்குவித்து வப்பனையடியேனுஞ்சாஷ்டாங்கித்தேன், மீறவேயெந்தனுக்கு வுபதேசங்கள்துக்கமனு நீதிமுறையாவுங்கூறி, மாறலுடன்பனிரெண்டாம் வரையிலப்பா மகத்தானசமாதியிடங்கொடுபோலாச்சே. 891

ஆச்சப்பாவசிட்டமகாரிஷியின்பக்கல் வப்பனையானல்லோசென்றுநின்றேன், மூச்சடங்கிசமாதிதனிலிருந்தசித்து முனையான வசிட்டமகாரிஷியார்தாமும், பேச்சடங்கிவெகுகால மிருந்தசித்து பிரியமுடனெந்தனுக்குவுபதேசங்கள், மாச்சலதுவாராமல் குளிகைதன்னை மகத்தானசாரணைகள் கூறலாச்சே. 892

கூறவென்றால் சாரணைகளென்னசொல்வேன் கொப்பெனவே வசிஷ்டமகாரிஷிபார்தாமும், மாறனுடன்குளிகைக்குவுறுதிசொல்லி மகத்தான சாரணைகள்மிகவுஞ்செய்து, ஆறவேயெந்தனுக்கு வதிதங் கூறிவப்பனே குளிகையிடமார்க்கங்கூறி, சேறவேமகமேருகன்னிலப் பாதேற்றமுடன் செல்கவென்று வரந்தந்தாரே. 901

போகர்பதின்மூன்றும்வரைசென்றது.

தந்தாரே யின்னமொருமார்க்கஞ் சொல்வேன்தயவான புலிப் பாணிமைந்தாகேளு, தெந்தமுடனடியேனுங் குளிகைகொண்டுதுப் புறவாய்மேருகிரி தன்னிற்சென்றேன், அந்தமுடன்பதின்மூன்றும் வரையிற்சென்று அவ்வரையில் விநாயகரைகாணவென்று, விந்தை யுடனடியேனுமனதுவந்து விருப்பமுடன் குளிகை கொண்டுசென் றேன் தானே. 902

தானனகுளிகைகொண்டு காலாங்கிநாதர் தன்மையுடன் குரு தனையேநினைந்துகொண்டுதேனனபதின்மூன்றும்வரையிற் சென்றே ன்தோற்றமுடன் விநாயகரின் சமாதிகாண, கோனனதும்பிக்கை யுடைய மாண்பன் கொற்றவனுங்கணபதியாரமென்றசித்து, மானன மகதேவரொன்னுஞ் சித்துமகத்தான சமாதிபதிகண்டிட்டேனே.

கண்டேனே சமாதியிடபக்கந்தன்னில் கருவான சித்துமுனி கோடாகோடி, விண்டதொருநாதாக்கள் கூட்டந்தன்னை விருப்ப முடன்யான் கண்டுமனதுவந்து, தெண்டமுடனடியேனும் முடிகள் சாய்ந்து தேற்றமுடன் பதாம்புயத்தைப் பணிந்துநின்று, கொண்ட ணைத்துயெந்தனுக்கு விதிகள்கூறி குருவான விநாயகரைக்காண்பிப் பீரே. 904

காண்பிக்கவேண்டுமென்று வடியேன்றானும் கணமான சித்து களைவினவும்போது, வீண்பாலா வுந்தனையுஞ்சபிப்பேனென்றுவினவு டனேசித்துமுனிகூறும்போது, ஆண்மையுள்ளரிஷிதேவரனேவோருக் கும் வப்பனேதாதரிக்கவென்றுசொல்லி, கேண்மையுடனடியேனுங் காலாங்கிதம்மை கீழ்மையுடனடியேனும் நினைந்திட்டேனே. 905

நினைத்தேனே யெந்தனையுமாதரித்து நிலையானபதின்மூன்றும் வரையிற்கொண்டு, கனைபோன்ற விநாயகரின் சமாதிபக்கல் சுத்தமு டன் கொண்டலல்லோ சித்துதாமும், தினையளவுகுற்றமது நேராமற் றன் தீரமுடனெந்தனுக்குவுளவுகூறி, பனையளவாய் வுயரமதுகுளி கைபூண்டு பார்த்தேனே விநாயகரின் சமாதிகாணே. 906

விநாயகரைக்கண்டது.

காணவே விநாயகரின்சமாதிகண்டேன்கருவான சமாதியமுட வில்லை, பூணவேயங்குசமும் ஒத்தைக்கொம்பும்புகழான யானைமுகம்

தன்னைப்போலே, ஊணவேபூமிதனில் சமாதிபூண்டு உறுதியுடனிரு காமுமேந்திகொண்டு, காணவேவெகுகால மிருந்தசித்து மகத்தான மூன்றுயுகங்கண்டசித்தே. 907

சித்தானசித்துமுனி விநாயகன்முன் சிறப்பானமேருகிரிதன்னி லப்பா முத்தானபதின்மூன்றும் வரையில்தாம் முனையான குளி கையினுல் கண்டுவந்தேன், பத்திதருமநெடுங்கால மிருந்தசித்துபாரு லகில்சாத்திரத்தின் முதலாஞ்சித்து, வெத்திபெறும் விநாயகரின்சித் துதம்மை வேகமுடன் மேருவர பார்த்திட்டேனே. 907

பதின்நான்காம்வரை சென்றது.

பார்த்தேனேயின்னமொரு மகிமைசொல்வேன் பாங்குடனே பதினுன்காம் வரையிற்சென்றேன், தீர்த்தனுடன்மேருகிரி தன்னில ப்பா திறமானசிவலிங்கப் பதியைக்கண்டேன். ஆர்த்தியுடன்கோடி யே ரிஷிகளப்பா அம்மலையில்சூழ்ந்திருக்யானுங்கண்டேன், மூர்த்தி யுடன் திருமூர்த்திசொரூபரோடும் முனையான சிவலிங்கங் கண்டிட் டேனே 909

லிங்கதெரிசனம்

சிவலிங்கங்கண்டேனே யதற்குமேலே திருவானசிவலிங்கம்பதி னுயிரத்தெட்டு தவமுடனேநாதாக்கள்ரிஷிகள்தாமும் தண்மையுடன் சிவலிங்கந்தன்னுனெணாக்க, பவமகற்றியரச்சனைகள் மிகவுங்கூறிபாங் குணனேநாதாக்களிருப்பாரங்கே, குவலயத்தில் மற்றொருவர் காணு மற்முன் கொற்றவனே பதினைந்தாம்வரைசென்றேனே. 910

போகர் பதினைந்தாம்வரை சென்றது.

சென்றேனே புலிப்பாணிமைந்தாக்கேளு சிறப்பான காலாங்கி கடாட்சந்தன்னில், குன்றேரிகுளிகைதனைக்கொண்டுமல்லோ கொற் றவனேமேருகிரி தன்னிற்சென்றேன், அன்றுரித்தமான்தோலும்புலி த்தோலுமாக வப்பனேவாயிரம்பேர்ரிஷிகள்கண்டேன். தென்றிசை யிலகஸ்தியனுர் முனிவர்போலும் தேற்றமுட னுயிரம்போ ரிஷிகண் டேனே. 911

கண்டேனே பதினைந்தாம்வரையிலப்பா கயிலநாதருட சீஷவர் க்கம், பண்டுபோல்மேனியது சோதிமின்ன பாங்குடனே தேவரிஷி வாயிரம்பேர், கொண்டெல்லோ பாரிசாதபுட்பந்தன்னை கொம்பனை யாள்மனோன்மணியாள் தன்றனக்கு, தொண்டடனே யர்ச்சனைகள் மிகவுங்கூறி தோமுமல்யாகமது செய்வார்பாரே. 912

பாரேதான்யாகமது செய்துக்கொண்டு பாங்குடனேசித்துமுனி யிருக்கும்போது,நேரேதான்பதினைந்தாம்வரையில்யானும்நெடிதான குளிகைகொண்டுசெல்லும்போது, நேரேதானுயிரம்பேர் சித்துதாமு

தீர்க்கமுடனெந்தனையுங்கண்டு மல்லலோ, சோரேதானெந்தனதுபக் கல்வந்து சிறப்புடனேயாரென்று கேட்டிடாரே. 913

கேட்டவுடனடியேனுங் காலாங்கிதம்மை கிருமையுடன் யென் மனதி லெண்ணங்கொண்டு, வாட்டமுடனவர் பாதசீஷனென்றேன் வளமையுட னெந்தனுக்குயிதவுங்கூறி, நீட்டமுடன் பதினெந்தாம் வரையில்தானும் நீதிதப்பிவந்ததினாலுந்தமக்கு, தாட்டிகமாய் சாப மது வந்துநேரும்தயவுள்ள பாலகனேயென்றிட்டாரே. 914

என்றுமே கூறலுமேயடியேன்றானும்யெழிலான காலாங்கிகடா ட்சத்தாலே, குன்றுமேசாபமதை நிவர்த்திசெய்து குளிகைகொண்டு ரிடியாரையானுங்கண்டு, வெறிடவேயெந்தனையு மாதரித்து வேகமு டன் சாபமதைநிவர்த்திசெய்து, தென்றிசையில்கும்பமுனி தன் னைப்போலே தேற்றமுடனெந்தனையு மாட்கொள்வீரே. 915

போகருக்கு நாதாக்கள் மனோன்மணியாள் ஜோதிகாண்பித்தது.

கொள்ளவேயடினும் மனதுவந்து கோடியுகந்தவஞ்செய்யும்ரிடி யார்தம்மை, மெள்ளவேயடியேனுந்தாள்பணிந்து வேதாந்த தாயிம னோன் மணியாள் தன்னை, தெள்ளமூர்தமானதொரு சோதிபீடம் தேற்றமுடனடியேனுந்தான்பணிந்து, உள்ளபடியெந்தனுக்குத்தெரி சனத்தை வுத்தமரேகாட்டவென்று பணிந்திட்டேனே. 916

பணிந்துமேகிற்கையிலேசித்தர்தாமும் பான்மையுடன்பதினெந் தாம்வரையின்மேலே, துணிவுடனேயடியேனைத் தாமழைத்து துப் புறவாய் மனோன்மணியாள்பீடந்தன்னை, கணிதமுடனெந்தனுக்குக் காண்பித்தகைலாகைலாச மனோன்மணியாள்ரூபந்தன்னை, துணிந்திட வே கண்டவர்களாருமில்லை துப்புரவாய்சோதிமயங்காணலாச்சே.

ஆச்சப்பா வையகத்தில்வெகுகோடிசித்து அம்தகையாள்மனோ ன்மணியைக்கண்டதில்லைமூச்சடங்கிசென்றதொரு நெடுங்கால்சித்து மூதுலகில் யாரேனுங்கண்டதில்லை பாச்சலுடன் மனோன்மணியாள் சொரூபவொளிகண்டசித்து மகத்தானவனந்தசித்துகோடியுண்டே.

கோடானகோடியும்நாலுயுகமப்பா குவலயத்தில் மனோன்மணி யைக்கண்டதில்லை, நாடாண்மைதனில்வாழும்ரிடிகள்தேவர்நலமான சித்து முனிநாதர்தாமும் காடாண்மைகொண்டதொருமனோன்மணி யாள்ரூபம் தாரணியில்யாவருந்தான் கண்டதில்லை பாடாண்மைகொ ண்டதொருசோதிமயந்தன்னை பாருலகில் கண்டவர்கள் கோடிபேரே

பேரானதிருக்கமலம் வீற்றிருக்கும் பெருமையுள்ளமனோன்ம ணியாள் பீடந்தன்னை, சீரானசித்துமுனிநாதர்தாமும் சிறப்புடனே பாடிவைத்தார்பலநூல்தன்னில் நேரானசாத்திரங்களுளவுகண்டோ நேர்மையுடன்சின்மயத்தைமனதிலுன்னி, ஆரானபீடமென்ற ஆரா தாராம்வப்பனேயொடுங்கி நின்றசமாதிதானே. 920

தானானமாதிநிலே நின்றுகொண்டு தன்மையுள்ள ஓங்காரந்தன் னைநோக்கி, கோனானகுருபதத்தை மேலேயுன்னி கும்பகத்தைமேல் நோக்கிபதியமர்ந்து, தேனானமனோன்மணியைக் காணவல்லோ தேச த்தில் வெகுமாண்பர் சுவயோகிதானும், பானானபராபரத்தைதியா னித்தேதான் பான்மையுடனெடுங்காலந் தவஞ்செய்வாரே.

செய்தாலும் மனோன்மணியைக் காண்பதில்லை தேசமதில் நாலு யுகங்கடந்தாலென்ன, வையகங்கள் தான்முழுது மழிந்திட்டாலும் புகழுஞ்சித்தர் புகழானசோதிமயங்காண்பதல்லால், மெய்யானரூம மதைக்காண்பதேது வேதாந்த நூல்களிலுஞ் சொன்னார் தாமே.

சொன்னாரே சித்துமுனி ரிடியார்தானும் துப்புரவாயெந்தனுக் குக்சொன்னார்கோடி, தென்னானகும்பனிகூறும்நூலில் தோற்றமுட னுபதேசஞ்சொன்னார்போலு, நன்னயமாயெந்தனுக்குவேதங்கூறிநா தாந்தகாலாங்கிபெயரைமாறி, உன்னிதமாயுபதேசஞ்செய்துமல்லோ உவமையுடன் விடையெனக்கு த்தந்திட்டாரே. 923

தந்தாரே சோதிமயந்தன்னைக்கண்டு தன்மையுடன் கிரிதனிலே விடையும்பெற்று, அந்தமுடன்பதினாறும் வரையைக்காண வன்புட னேகுளிகையாது பூண்டுகொண்டு, சொந்தமுள்ளகாலாங்கிநாதர்தம் மைசுந்தரனார்பதாம்புயத்தைமனதிலுன்னி, இந்தவரைவிட்டுமல்லோ மேலேயப்பா யெழிலானகிரிபோக வெண்ணினாரே. 924

மோகர்மதினாறும்வரை சென்றது.

எண்ணினேன்பதினாறும் வரையைக்காண யெழிலானமேருகிரி தன்னில்யானும், குண்ணனமலையதுங் குகைகள்தாண்டி கோற்றவ னேசுனை யதுவுங்கடந்துமேதான், தண்ணான கிரிவளத்தைக்காண வென்றுதாக்குடசே குளிகையதுபூண்டுக்கொண்டு, கண்ணனகாலாங் கிநாதர்தம்மைக்கருத்திலே மனதுவந்துநடத்திட்டேனே. 925

போகர்கருவசுனையும் கறும்பசுவுங்கண்டது.

நடந்தேனேயிமயகிரிதன்னிலப்பாநலமான மருகிரிசாரலோரம் கடந்தேனேபதினுறும் வரையில்தானும் கருவானசுனையுண்டு தடாக முண்டு, அடர்ந்ததொருசுனையருகேசுரங்கமுண்டுஅதன்புறத்தேயிரு ளடைந்தசோலையுண்டு, தொடர்ந்ததொருசித்துமுனிநாதர் கூட்டம் தோமுதரிஷவர்க்கமனேகமுண்டே. 926

உண்டானமலைதனிலே கோடிசேனை உலகமதில்மெத்தவுண்டு சொல்லொண்ணுது, அண்டர்முனிராட்சதர்களிருக்குநாடுஅடைவா னநாடதனிலதிசயத்தை, கண்டதொரு காரியங்களென்னவென்றால் கடிதானவதிசயத்தையென்னசொல்வேன், தொண்டனைப்போலடி யேனுங்குளிகைபூண்டு துப்புரவாய்வெகுகாலமிருந்திட்டேனே. 927

இருந்தேனேகானகத்தின்வழியில்தானும் யெழிலாநகுகையோ ரம்தன்னில்நின்றேன், குருந்தமாந்தன்னருகேசித்துதாமும் கொப் பெனவேரிஷவர்க்கந்தன்னிற்சேர்ந்து, பொருந்தவேநெடுங்காலம்தவ மிருந்துபொங்கமுடன்சுனையோரம்சாரல்தன்னில், விருந்தமூர்த்மாந தொரு பசுனை தன்னை விருப்பமுடன்சித்துமுனியும்பார்த்தாரே. 928

தானுனகறுப்பசுனையுண்டபோது தகமையுள்ளசித்துமுனிரிஷி யார்தாமும், கோனுனகுருசொன்னமூலிதன்னை கூறுனசித்துமுனி நாதர்தானும், பானுனமூலிதன்னையந்திசந்தி பாகமுடன்தானிருந்து வருங்காலத்தில், மானுனமூலியதுமுனிவருக்குமகத்தாநயிலையதுவும் பதினுரெட்டே. 929

எட்டானமூலிதனைசித்துதாமும் யெழிலானவந்திசந்திகாயகற் பம்,திட்டமுடன்சதாகாலாங்கொள்ளும்போதுதிரமாநமூலியதுஒரு நாள்தன்னில், பட்டமாந்தனிலல்லோதழைகள்மென்றுபாங்குடனே தானிருக்கும்வண்மைதன்னை, தொட்டவர்கள்யாரென்று சித்துதா மும்தோற்றமுடன் வுள்ளமதிலெண்ணிட்டாரே. 930

எண்ணியேநாதாந்தசித்துதாமும் யெழிலானமூலியதுசென்ற பேர்க்கு, கண்ணமுடன்ஞானமென்றகுளிகைதன்னுல் தகமையுடன் தான்பார்க்கும்வேளைதன்னில், வண்ணமுடன்கறும்பசுவும் மலையோ ரத்தில்மார்க்கமுடன்தினந்தோறும்மேய்ந்துமல்லொ, புண்ணியனுர் சித்துமுனிவைத்தமூலி புகழானகாயாதிகற்பந்தின்னலாச்சே. 931

தின்னவேகாயாதிகற்பமூலி நீரமுடனெந்தமக்குவாய்த்ததாலே மன்னவனுர்தேவாதிசித்துதாமும் மார்க்கமுடன்விட்டகுறையிருந்த

தாலே, பன்னவேகாயா திகற்பமூலிபாங்குடனேவாய்த்ததென்றுமன திலுன்னி, தென்பொதிகைதனிலமைந்த கதையைப்போலும் தேவ னதுகடாட்சமதால்வாய்க்கலாச்சே, 932

## மூலிகையைகரும்பசுவுதின்றதால் சித்துசாபமீய்தல்.

ஆச்சென்றுகறும்பசுவு மனதிலெண்ணி ஆண்மைகொண்டுயிரு க்குமந்தகாலந்தன்னில், மூச்சடங்கிதானிருக்கும் மாயாசித்து முனி யானகறும்பசுவைத்தன்னைப்பார்த்து, மாச்சலென்றசினமதுவுமதிக மாகிமகத்தானசாபமதுகொடுத்தபோது, கூச்சலுடன்கறும்பசுவுமன் னில்வீழ்ந்து கொப்பெனவேயலறியல்லோவிழுகலாச்சே. 933

விழுந்துமேகாராவும்கதறும்போது விருப்பமுடன் கன்றதுவு மோடிவந்து, அழுதுமேகாராவைத்தான்முகந்து அலறியேபசளையெ ன்றமூலிதன்னை, தொழுதுமேசித்துமுனிபாதந்தன்னில்துப்புறவாய் வாய்தனிலேயூட்டும்போது, பழுதுபடாசித்துமுனிமனதுவந்துபான் மையுடன்விசனமது கொண்டிட்டாரே. 934

கொண்டுமேமட்க்கவலையதிகமாகி குவலயத்தில்பசுதனையேகொ ன்றதாலே விண்டுமேபாபமதுநேரலாச்சு வீண்பழிக்கு ஆளாகினும் விண்ணிலப்பா, துண்டரிககமானதொருகோபத்தாலே துப்புறவாய் விசனமதுவதிகமாகி, பண்டுளவமாலையணிகிருஷ்ணரூபன் பட்சமு டன்தான்வளர்ந்தகோவுமாமே. 935

தேதானரத்னகிரிமலையிலப்பாகொப்பெனவேநாதாக்கள்கண்ட துண்டு, ஆவலுடன்தாயுடனேகன்றுமாகஆண்மையுடன்கிரிதனையே சுற்றிமேய்ந்து, பாவமதுநேராமல்நாதர்கட்குபான்மையுடன்தானட க்குங்கோவுமல்லோ. சாவதுநேர்ந்ததொருதன்மையாலே சாங்க முடன்சித்துமுனிபுலம்பிட்டாரே. 936

## சித்துகாராம்பசுவை எழுப்பியது.

புலம்பியேமனந்தேறி சித்துதாமும் புகழானகாராவின்பசுவுக் கல்லோ, நலம்பெறவேசாபமதைநிவர்த்திசெய்துநன்மையுடன்காரா கன்றுக்கேதான், சலமதுவுங்குகைதனையேதானுங்கண்டு சட்டமுட னிருப்பதற்குபுலமுங்கண்டு, வலம்பெரியகானகத்தில் னெடுங்காலந் தான்வளமையுடன்வாழ்கவென்று வரந்தந்தாரே. 937

தந்தாரேபதினுரும்வரையிலப்பாதன்மையுடன்காராவின்கன்று தானும், சொந்தமுடனவரையி லிருக்கக்கண்டேன் சுதரனேபுலிப் பாணிமைந்தாகேளு, விந்தையுள்ளகாதைதனை வையகத்தில் விட்ட குறையிருந்தவாக்குயெய்துமென்று, அந்தமுடன்யென்மனதிலென் னியல்லோவப்பனேகுளிகைகொண்டு பறந்திட்டேனே. 938

போகர் பதினேழாம்வரைசென்றது

பறந்தேனேயின்னமொருமார்க்கஞ்சொல்வேன்பாங்கான புலிப் பாணிமைந்தாகேளு, இறந்ததொருகாருவின்பசுவின்காதையெழிலா குளிகைகொண்டுவறிந்தமட்டும், துறந்தேனேசொல்லிவிட்டேனுண் மையாகதுப்புரவாய்பதினேழாம்வரையில்சென்றேன், சிறந்ததொரு வதிசயங்கள்சொல்வேனப்பா துப்புரவாய்மனதுவந்துகேட்பீர்தாமே

விஷ்ணுசமாதி.

தானானமேருகிரிதன்னிலப்பா தாக்கானவிஷ்ணுவின்சமாதிதன் னை, கோனானயென்குருவாங்காலாங்கிநாதர் கொற்றவனார்செ ரூபர துகடாட்சத்தாலே கேனானமலைமேலேசென்றேனங்கேதேற்றமுடன் பதினேழாம்வரையிற்கிட்டி, மானானமகதேவர்கடாட்சத்தாலேமார் க்கமுடன்குளிகைகொண்டு நின்றிட்டேனே. 940

நின்றேனேபதினேழாம்வரையிலப்பாநீதியுள்ளசித்துமுனிகோ டானகோடி, குன்றினிமேல்யெந்தனையுங்கண்டுமல்லோகொப்பெனவே யாரென்றுவினவிக்கேட்க, வென்றிடவேயடியேனும் பயந்தொடுங்கி விருப்பமுடன்பதாம்புயத்தைபணிந்துநின்று, சென்றேனேமகாவிஷ் ணுசமாதிதன்னை சேர்வையெனக்கருள்தருக வென்றேன்தானே.

தானானபதாம்புயத்தைப்பணிந்துகேட்க தகமையுடன்சொரூப முனிசித்துதாமும், மானானமகாவிஷ்ணுதன்னைக்காண மானிலத்திலா ருலுமாகுமோசொல், கோனானயெனதையர்காலாங்கிநாதர் கொற்ற வனார்நெடுங்காலங்கார்ததிருந்தார், பானானபதாம்புயத்தைக்காணுத ற்கு பாருலகில்யாராலுமுடியாதென்றே. 942

முடியாதமகத்துவங்களுந்தமக்கு மூதுலகில்கிட்டாது யாருக்க ன்று, அடியார்கள்சிவகூட்டமாணபரோடும் அம்மலையில்நெடுங்கால ங்கார்த்திருந்தார், படிதோறும்நாதாக்கள் காவலுண்டுப தாம்புயத் தைக்காணுதற்கு முடியாமற்றான், கெடியானமேறுகிரி தன்னைநீக்கி கெவனமுடன்குளிகைகொண்டு யிறங்கினாரே. 943

இரங்கினாரென்றல்லேரயெந்தனுக்கு யெழிலானசித்துமுனி ரி ஷிபார்தாமும், உம்முடைய வார்த்தையதுகூறும்போது ஓகோகோ நாதாக்கள்காணபியார்கள், திறமுடையயெந்தனது வலுமையாலே தீர்க்கமுடனடியேனுங்குளிகைகொணடு, சிறகுடையபட்சியதுபோ லேயானும் சீறுடனேமேல்வரையிற்சென்றேனபாரே. 944

பாரேதான்மகாவிஷ்ணு சமாதிபக்கபட்சமுட னடியேனுஞ்செ ன்றுவந்து, நேரேதான்சமாதியது மேலேநோக்கி நிட்களங்கமான தொருசொரூபர்தம்மை, தீரேதான்திரிகரணசொரூகமூர்த்தி திகழு டனேயெந்தனுக்குயிதவுகூறி, வேரேதான்கதியெனக்கு யெள்ளவெ ன்று விட்டகுறையிருந்ததினால் வந்திட்டேனே. 945

வந்தேனேயெந்தனுக்கு சொரூபநாதா வரமுடனே காட்சியது தருகவென்று, நொந்துமனந்தானுருகிதாள்பணிந்துகொடிக்குள்ளே சிரங்குனிந்துபணிந்தபோது, அந்தமுடன்மகதேவர் விஷ்ணுதாமும் அங்ஙனவேயசரீரவாக்குகூற, மந்தமுடனடியேனுங்கால்நடுங்கிபட்ச முடனுபதேசங்கேட்டிட்டேனே. 946

மகாவிஷ்ணு போகருக்கு அசரீரிவாக்கால்

உபதேசங்கூறியது.

கேட்டேனேமகதேவர்மனமிதங்கி கிருபையுடனென்மீதில்மன துவந்து, நாட்டமுடனசரீரவாக்காலப்பா நயமுடனே யெந்தனுக்கு வேகங்கூறி, நீட்டமுடன்காலாங்கநாதசீஷர் நீதியுடன் நெடுங்காலங் குளிகைபூண்டு, தாட்டிகமாய் வையகத்திலிருந்தாயப்பா தண்மையு ள்ளகுளிகையது வலுமைகாணே. 947

காணவேயிமயகிரிதன்னிலப்பா கருவானசித்தர்களு முனிவரு ண்டு, பூணவேநாதாக்கள்வலுமையுண்டு புகழானமேருகிரிதன்னிலப் பா, ஆணவங்கள்கொண்டல்லோகுளிகைபூண்டு யவனியெலாஞ் சுற் றிவந்தாய்மகிமையாலே, வேணதொரு தேசாதிதேசமெல்லாம் வேக முடன்மலைநதிகள் வென்றிட்டாயே. 948

வென்றுமேநெடுங்காலந்தாமிருந்து வேகமுடன்சீனபதிக்கேகிய ல்லோ, சென்றுமேசீனபதிமாண்பருக்கு செயலானமகிமை யெல்லா மனைத்துங்கூறி, குன்றானமேருகிரிதன்னிலப்பா கொற்றவனேகுளி கைகொண்டுவந்தாய்நீயும், இன்றுநீவந்ததினாலுந்தமக்கு எழிலானவு பதேசங்கூறுவேனே. 949

கூறுவேனெந்தமக்குயென்றுவல்லோ குவலயத்தில்சித்தர்முனி காணுவண்ணம், மாறுபடசித்துமுனியுளவுங்கூறி மார்க்கமுடன்கை யெனக்குவிடையுங்கூறி, தேறுதலாய்ஞானோபதேசஞ்சொல்லி தெ ளிவுறவேபதினெட்டாம்வரையிற்சொல்ல, ஆறுதலஞ்சிராமவரைமு டியைக்காண வன்புடனேயெந்தனுக்கு வருள்தந்தாரே. 950

போகர் பதினெட்டாம்வரைசென்றது.

அருளான விடையதுவும் பெற்றுமேதான் வன்பான குளிகை யதுயானும்பூண்டு, இருளானமலைதனியேயான்கடந்துஎழிலானபதி னெட்டாம்வரையிற்சென்றேன், மருளானமார்க்கண்டர்தன்னைகான மார்க்கமுடன் குளிகையது பூண்டுகொண்டு, பொருளானமேருகிரி யடியன்றானும் பொங்கமுடன்பதினெட்டாம்வரை சென்றேனே.

வரையானமார்க்கண்டன் சமாதிகாண ரீவளமுடனேயடியேனு ஞ்சென்றபோது, திரைகடலுஞ் சத்தசாகரங்கடந்து திறளானமனு கோடி முனிவரெல்லாம், நரைகற்றி காயாதிகொண்டுமல்லோ நவ கோடிரிடியாரும் முனிவர்தானும், வரைகோடிலக்கில்லை கணக்கோ யில்லை வளமானபதினெட்டாம் வரையிற்றானே. 952

வரையானசமாதியது வனேகங்கண்டேன் வளமானமார்க்கண் டன்லிங்கந்தன்னை, நிரையானநாளொன்றுபூசைமார்க்கம் நீதியுடனு யிரமாஞ் சொச்சந்தன்னை, கரையானலிங்க மகாரபூசை கருவாக மார்க்கண்டன்செய்யுமார்க்கம், திரைகடலுங்கொள்ளாதுவேதயாகந் திரளாழிலிங்கமதைக் கண்டிட்டேனே 953

பத்தொன்பதாவதுவரையில் பதினெண்சித்தர்கள் நவகோடி

ரிடிகள் நாற்பத்தெண்பேர் முனிவர்கள்செய்தபெருநூல்கள்

மூன்றுயுகசமாதிகாணல்.

கண்டேனே யின்னமொருமார்க்கஞ்சொல்வேன் கருவானபுலிப் பாணிமைந்தாகேளு, கொண்டேனே காலாங்கிகிருபையாலேகோடி யுகம் தானிருக்க குளிகைபெற்றேன், துண்டரிகமாகவல்லோ குளி கைபூண்டு துப்புரவாய்ப்பதினெட்டுஒன்றிற்சென்றேன், சண்டமாரு தம்போலே மேருதன்னில்சாங்கமுடன்குளிகையிட்டு யேறினேனே.

ஏறினேன் பத்துவொன்பதியிற் சென்றே யெழிலான குளிகை போற்றசித்தருண்டு, மாறினேன்மகாதேவர் சித்துபக்கம் மகத்தான வஞ்சலிகள் யானுஞ்செய்து, கூறினேன் பதாம்புயத்தைவணங்கியா னும் கொற்றவனே முடிதாழ்ந்துவடிபணிந்தேன் சீறியே என்மீதிற் கோபம்விட்டு சிறப்புடனே யெந்தனையாரென்றிட்டாரே. 955

என்றாரே சித்துமுனி கூறப்போது யெழிலானகாலாங்கிநாதர் தம்மை, குன்றானமலைமீதில்நின்றுகொண்டுகொற்றவரேசீஷபதி யெ ன்றேன்யானும், சென்றிடவேஎன்மீதிற்பட்சம்வைத்துசிறப்புடனே

யெந்தனுக்குயிகவுகூறி, நின்றதொருளந்தனுக்கு வாதினங்கள்நீட்க ளங்கமாகவல்லோ கொடுத்தார்தானே. 956

கொடுத்தவுடனடியேனுமுடிவணங்கி கொப்பெனவே பத்து வொன்பதியில்வந்தேன், அடுத்ததொருநூலிருக்குஞ் சமாதிதன்னை யன்புடனேயான்பார்க்கவேண்டுமென்றேன், கொடுத்ததொரு காவி யங்களாயுற்வேதய் தோருமல்சமாதியதுமலைபோற்கண்டேன், படுத்த தொரு தெண்பக்கம் மேருதன்னில் பாங்கான சமஸ்கிருதநூல் கண் டேனே. 957

கண்டேனேமேருகிரி தன்னிலப்பா கருவானவடபாகம் நூல் கள்சொல்வேன், விண்டதொருநூலெல்லாம் வடமொழியேயாகும் வீரானசாத்திரங்கள் மலைபோற்கண்டேன், அண்டமுடன் மேருகிரி தன்னிலப்பா வழகானகிழக்குமுகம் நூல்கான்சொல்வேன் சண்ட மாருதம்போல நூல்கள்தானும் சார்பானகீர்வாணமென்னலாமே.

என்னலாம்மேருகிரிதன்னிலப்பா எழிலானமேற்குமுகஞ்சமா திகண்டேன், துன்னவேசாத்திரங்கள் மலைபோற்கண்டேன் துப்புர வாய்ப்படிப்பதற்குநாளுமில்லை. சொன்னதொரு பரிபாஷைநூல்க ளப்பா தோருமல்மேருகிரிதன்னிற்சென்றேன்,பன்னவேபலபேருங் கூடிச்சொன்ன பாரினிலேசாத்திரங்களனேகந்தானே. 959

தானனசாத்திரங்கள்மேருதன்னில் தண்மையுடன்நாலுமுகஞ் சமாதிகண்டேன், கோனன குருநூலும் பெருநூலுமாக கொற்றவ னே மலைபோலே சமாதிகண்டேன, பானன மூன்றுயுகப் பிரளயங் கள் பாங்குடனேவந்தநெடுங்காலந்தன்னில், மேதனை சாத்திரத்தை மேருதன்னில் தேற்றமுடன் சமாதிதனில் வைத்திட்டாரே. 960

வைத்தாரேமேருகிரிதன்னிலப்பா வண்மையுடன்பிரளயங்கள் நேர்ந்தபோது, கைத்துவமாயவரவர்கள் செய்தநூலின் காசினியில் மலையோரம்பிரளயத்தில், மெய்த்தெனவேதிருப்பாலின்கடலினோரம் மேதினியில்லை ஒதுங்கிமிதந்துமல்லோ, சாத்தசாகரந்தனிலே சிலது நூல்கள்சாங்கமுடன் கலியுகத்தில் கண்டார்தாமே. 961

கண்டாரே கலியுகத்துமாண்பரெல்லாம்கருவானசாத்திரத்தை காணவில்லை, தொணடுமிகவடியேனுஞ் செய்துமல்லோ துப்புரவாய் காலாங்கிகடாட்சத்தாலே, சண்டையிட்டு குளிகையது பெற்றுமே தான் சதுரானமேருகிரிதன்னிற்சென்று, விண்டிடவே போகரேழா யிரத்தை விருப்பமுடன் மனதுவந்துகொண்டிட்டேனே. 962

கொண்டேனே போகரேழாயிரந்தான் குருவானவகஸ்தியனார் காவியந்தான்,சண்டமாருதம்பன்னீராயிறந்தான்சட்ட முடங்பணிகா

லாயிர, முந்தானும்பண்டானசதுர்காண்டம்நாலாயிரந்தான் பாங்கா ணகருமமென்ற, காண்டந்தானும்விண்டானபன்னீராயிரந்தானப்பா வுத்தமனேநாலி பன்னீராயிரந்தானே. 963

நாடியாஞ்சுகர்பன்னீராயிறந்தான் நலமானபூசி பன்னீராயிரந் தான்தேடியுங்காணாத, கருமகாண்டம்தெளிவானசாத்திரமுமலையிற் கண்டேன், கோடிதனங்கொடுத்தாலும்கிட்டாதப்பா கொற்றவனே தன்வந்திரிகிரந்தந்தானும் நீடியேவேதபுராணங்களெல்லா நிதியான மலைபோலபார்த்திட்டேனே. 964

பார்த்தேனேசதகோடிபுராணமெல்லாம் பாங்கானசித்துமுனி யாயுள்வேதம், சேர்ந்ததொருகோர்வைபல்லோகோடாகோடி தேற்ற முடன்மலைதனிலே, கண்டேன்யானும்ஆர்த்துமேபிரளயத்தில்மிதந்த நூல்கள், ஆயிரத்திலொருபங்குமாண்பர்கண்டார்நேர்த்தியுள்ளசாத் திரங்கள்முழுதுமேதான் நேர்மையுடன்மலைதனிலேசமாதிகாணே.

போகர் இருபதாவதுவரை சென்றது.

காணவேயின்னமொரு மார்க்கஞ்சொல்வேன்கருவானபுலிப்பா ணிமகனேகேளீர், பூணவேகாலாங்கிகடாட்சத்தாலே புகழானகுளி கையதுகொண்டுமேதான், வேணதொருவதிசயங்கள் காண்பதற்கு விருப்பமுடனிருபதாம், வரையிற்சென்றேன் ஊணவேகுளிகையது கொண்டுமல்லோ வுத்தமனேமேல்வரையிற்சென்றேன்பாரே. 966

பாரேதான் குளிகைகொண்டுவடியேன்றானும் பட்சமுடன்மலை தனிலேயேறும்போது, நேரேதான்சூரியமகாரிடியார்தாமும்நேர்மை யுடனருணனைத்தாம்பூசைசெய்து, சீரேதாங்கிழக்குமுகந்தானிருந்து சிறப்புடனே யாகமதுசெய்துமல்லோ, சேரேதான் கிட்டிருந்துவடி யேனப்பா செவ்வண்மைமகாரிடியைப்பார்த்திட்டேனே. 967

பார்க்கையிலே சூரியமகாரிடியார்தாமும் பண்பாகயெந்தனையு மனதுவந்து, தீர்க்கமுடன்நமஸ்காரபூசையோடு தீரமுடன்வந்தவனு ரென்றுகேட்க, கோர்த்தகரம்தனையோடு முடிவணங்கி குருபரனே யரிடியரென்றுகூறி, வேர்த்துவுடல்தானடுங்கியடியேன்றானும்வேதா ந்தக்காலாங்கி யென்றிட்டேனே. 968

என்றேனேகாலாங்கிசீஷனென்றேன் யெழிலானசூரியனு ரிடி யாருக்கு, குன்றானமலையேறிகுளிகைபூண்டு கொற்றவனே மேல்வ ரையைக், காணவந்தேன் சென்றிடவேயடியேனும்வந்ததாலே செம் மனுடனெந்தனுக்கு, காட்சிதந்துவென்றிடவேம்கிமைதனைக்கூறவெ ன்றுவிழுந்திட்டேனவர் பாதமழுந்திட்டேயன. 969

இட்டதொருயெந்தனுக்குயிதவுகூறி யெழிலானசூரியனார் ரிடியார்தாமும், சட்டமுடன் ஆதித்தன்பிறக்குஞ்சோதி தண்மையுள்ள சந்திரனாரிருக்குமஸ்தானம், வட்டமுடனட்சத்திரவரையுங்கண்டேன்வளமானமேகமண்டலமுங்கண்டேன், திட்டமுடனக்கினிமன்டலமுங்கண்டேன் தீரமுடன்சப்தமேகந்தனை கண்டேனே. 970

கண்டதொருவதிசயங்களெல்லாங்கண்டேன் காசினியில்காணுதகாட்சியெல்லாம், சண்டமாருதமென்னு மேருதன்னில் சாங்கமுடன்மகிமையெல்லாங் கண்ணிற்கண்டேன், கொண்டல்வண்ணன்மேகமென்றயிடியுங்கண்டேன், கோடானகோடிவரைமுனையுங்கண்டேன் விண்டிடுவதிசயங்கள்யாவும், பாக்கவிருப்பமுடன்மேல்வரையில்வந்திட்டேனே. 971

வந்தேனேயென்றுமேதான் யிதவுகூற வளமையுள்ள ரிடியாமனதுவந்து, விந்தையுள்ளவதிசயங்களெல்லாஞ்சொல்லிவேதாந்தத்தாயினதுமார்க்கங்கூறி, அந்தமுடன்கைலாசபதியிற்செல்லவப்பநேயெந்தனுக்குவிடையுந்தந்து, சுந்தரனே யெந்தனையுமாசீர்மித்துசூட்டிஞரிருபத்தோர்வரையிற்காணே. 972

போகர் இருபத்தோராவதுவரையில் கைலைபதிகண்டது.

வரையானகைலாசபதியைக்காண வண்மையுடன்காலாங்கிகடாட்சத்தாலே, திரைபோன்ற கடலோரஞ்சுற்றிவந்தேன் தீரமுடனிருபத்தோர்வரையிற்சென்றேன், நரையானமேருகிரிசிகரந்தன்னில் கைலாசநாதரையான்காணவெண்ணி, குறையதுவும்நேராமலடியேன்றானும் குளிகைகொண்டுமேல்வரையிற்சென்றேன்றானே. 973

தானானமேருகிரிதன்னிலப்பா தண்மையுடனிந்திரனார் பதியுங்கண்டேன், தேனானமனோன்மணியாள்பீடங்கண்டேன்தேற்றமுடன் கருடகாந்தருவர்கண்டேன், கோனான யஷ்டதிக்கு பாலர்கண்டேன் கூறானநாற்பத்தெண்ணாயிரம்பேர், மானானமகாதேவா முனிவர்கண்டேன் மகத்தானமுப்பத்துமூன்றுதானே. 974

மூன்றானதேவர்முதல்கோடியப்பா முனையானரம்பையூர்வசியாளோடும், சான்றதொருநந்தீசர்முதலானோரும் சார்பானபிருங்கிமகாரிடியாரோடும், போன்றதொருமார்க்கண்டமுனிவரோடும் புகழான குருதர்முதல்வசிட்டரோடும் சான்றதொருநாரதமா முனிவரோடும் சார்பானபதிதனையே பார்த்திட்டேனே. 975

பார்த்திட்டேன்சிவனடியார்கூட்டத்தோடும் பாங்கானதேவகநாதரோடும், தீர்த்தமுடன்வைகைதனை வரவழைத்து தீர்க்கமுடன்

வாரிதியையுண்டதீரன், கோர்த்தவகைவைத்ததொருகுண்டோதான் றன்குண்டலியாம் பூதமதையானுங்கண்டேன், ஆர்த்துமே பிர்ம்மா வின்பாதங்கண்டேன் வன்பானசிவபாததூள்கண்டேனே. 976

தூளானபாத்திரதின்தூசுகண்டேன்துகளற்ற விஷ்ணுசக்கர முங்கண்டேன், காளானின்நிறம்போலபாரிசாதம்களவமென்றமாலை யுடனநேகர்கண்டேன் பாளானநரகமுடன்மோட்சங்கண்டேன்பாங் கானயெமதூதர்சேர்வைகண்டேன், ஆளானமாண்பர்களின் பாவந்த ன்னை அணியாயமானதண்டனைகண்டேனே. 977

தண்டனையாமவரவர்கள் செய்தகுற்றம் தாக்கானபடுநரகில்வீ ழக்கண்டேன், மிண்டானவவரவர்கள் செய்தகன்மம் விளைந்துதடா கொடியதொருநீதிதண்டம். அண்டர்முனிராட்சதர்கள் முதலானோ ர்கள் அவரவர்கள்செய்ததொருவினைபாவத்தால், தண்டனைகள் கால தூதர்செய்யக்கண்டேன் தகமையுள்ளயிந்திர பதியிற்றானே. 978

தானகவவரவர்கள்செய்தபுண்ணியம் தக்கபடிமாண்பாகளுக்கு கந்தமாற்கம், கோனனையெனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் சொற்படியே யாவுங்கண்டேன், தேனானமோட்சமென்ற பீடந்தன் னில் தேற்றமுடன்புண்ணியர்களிருக்கக்கண்டேன், மானனமகதே வர்புண்ணியககூட்டம் மார்க்கமுடன்கூடிருக்கப் பார்த்திட்டேனே.

பார்த்தேனேயொருகோடிவெள்ளஞ்சேனை பாங்கான மேருகிரி தன்னிலப்பா, தீர்த்தமுடன்கைலங்கிரிவாசர்தன்னைசிறப்புடனேகை லாயபதியிற்கண்டேன், சேர்த்ததொருவெகுமாண்பர்கூட்டத்தோடு ம்ஜெகதலத்தில் புண்ணியர்களநேகங்கண்டேன், நேர்த்தியுடன் பட் டதிசைதன்னிலப்பா நேர்மையுட னதிசயங்கள் மிகவுண்டாமே.

உண்டானமேருகிரி தன்னிலப்பா வுத்தமனேயட்டகிரி மலைதா னுண்டு, செண்டான்தேவரதமங்கேகண்டேன் சிறப்பானகைலாசரத முங்கண்டேன், கொண்டல்வண்ணனச்சுதனார் பீடங்கண்டேன் கு றையாத வட்டாரதந்தானுங்கண்டேன், பண்டுளவமாலையணி மாலைபூ ண்டபாங்கானபற்குணனார் ரதங்கண்டேனே. 981

கண்டேனேவருச்சுனனா ரதமுங்கண்டேன் பாங்கானபாசுபதந் தன்னைகண்டேன், துண்டரிகமானதொரு யிந்திரன்வில்லை துப்புரவா ய்கைலாயபதியிற்கண்டேன், சண்டமாருதம்போல யிந்திரன்சேர் லைத்தன்மையிடன் கைலாயபதியிற்கண்டேன், புண்டரிகமானதொ ருபிரமன்வில்லை புகழாகபதிதனிலே பார்த்திட்டேனே. 982

பார்த்தேனே மேருகிரி தன்னிலப்பா பாங்கானதங்காதம்மேலிற் றானும், தீர்த்தமெனும்லிங்கமுடனிந்திரன்றானும் சிறப்பான வாயிர ங்கண்தன்னோடொக்க, ஊர்த்துவமாமாயிரத்தெட்டுமாற்றுக் குகந்த சிம்மாதனமதிலேயிந்திரன்சேர்வை, கோர்த்துமே கோடானகோடிம ன்னர் கொற்றவர்க்குயேவல்செய்ய வறிந்திட்டேனே. 983

அறிந்தேனேகைலாயபதியிலப்பா வன்பானதேவாதி தேவர்தா மும், செறிந்திடவேவெகுகோடிமாண்பரோடும் செம்மலுடன்வினய மதுசொல்லொணாது, முறிந்துதொருநரகமென்ற குழியிலப்பா மு னையானவக்கிரமக்கூட்டத்தார்கள், குளிர்ந்துமேவேதனைகள் செய்யு மார்க்கம் கொற்றவனைகண்டுமல்லோ நடுங்கிட்டேனே. 984

நடுங்கினேன்கைலாயமேருதன்னில் நலமானவதிசயங்களனேக ங்கண்டேன், ஒடுங்கியதோர்மாண்பர்களின் பாபந்தன்னை ஓகோகோ நாதாக்கள்கண்டதில்லை, படுந்துயரங்காணுமல்நூல்கள்பாடி பட்சமு டன்மாண்பர்களுக் கோதினார்காண், இடும்புமிகயான்றலைத்து மேரு தன்னில் யெழிலானவதிசயங்கள் கூறிட்டேனே. 985

கூறினேனித்தாதிகாட்சியெல்லாம் குவலயத்திலாரேனுங் கண் டதில்லை, மீறியேயெந்தனதுபுண்ணியத்தால் மிக்கானகாலாங்கிகடா ட்சத்தாலும், தேறியேமனோன்மணியாள் கடாட்சத்தாலும் தேற்ற முடன்மேருகிரிதன்னிற்சென்றேன், சீறியேயென்மீதிற் சினந்துமல் லோசிதாபாசனமங்தேறி சென்றிட்டேனே. 986

போகர் கடலைப்பாராமல் விசனமுற்றல்.

சென்றேனே ஆதியென்றகடவுள்காணேன் சிறப்பானவெகுமகி மையானுங்கண்டேன், குன்றானமேருகிரி தன்னில்யானும் குறையா மல்கடவுளது மகிமைகண்டேன், வென்றிடவேயாதியென்ற வஸ்து காணேன் வீணாகவனாதியென்ற வஸ்துகண்டேன் நின்றதொரு தே வாதிதேவர்தாமும் நிகட்சியுடன் பதாம்புயத்தை தவஞ்செய்வாரே.

தவமானமேருகிரிதன்னிலப்பா தண்மையுள்ளதேவாதிதேவரெ ல்லாம், சவம்போலயாகமதுசென்றார்கள் சாங்கமுடன் தேவனையுங் கண்டாரில்லை, பவமகற்றிமேருகிரிதன்னில்தானும் பட்சமுடன் சாக மதுசெய்துமென்ன, அவப்பொழுந்தவப் பொதுழுங்கொண்டு மெ ன்னவவர்களுந் தானொருபலமுங்காணார்தாமே. 988

கைலாயபதியிலுங் கண்டதில்லை.

தானானகைலாசபதியில்தானும் சட்டமுடன்தேவாதிதேவர்தா னும், கோனானகடவுள்தனின்பதாம்புயத்தை கொற்றவரு மாண்பர்

களுங்கண்டதில்லை, தேனுனமனோன்மணியாள்முதலானோரும்தெளி வானசங்கையதையறியவதில்லை, பானுனபரலோகங் கண்டுமென்ன பாரினிலேகடவுள்தனைக் காணார்தாமே. 989

காணமல்கைலாசங்கண்டுமேதான் கருத்துடனே பாடிவைத்த நூல்களெல்லாம், வீணுகவாதியந்த பொருள்காணமல் விட்டமுறை பித்தமென்றவீம்புபேசி, தோணுதபொருள்களெல்லாம்நூலிற்கூறி தொகுப்புடனே சாத்திரங்கட்டிவைத்தார், ஆணுகபெண்ணுக பிறந்தகூர்மைவவனிதனிற்கண்டதல்லா வில்லைதானே. 990

இல்லையேவாண்பெண்ணுலிரண்டுங்கண்டார்யெழுலான சாத்திரங்கள்கற்றுகண்டார், தொல்லையெனும்பிறவியதுகண்டதில்லைதோரு மல்சாத்திரத்தைவுளறிஞர்கள், கொல்லனதுவீதிதனில் வூசிவிற்றகூ ரானகதைபோனயென்முன்னுக, எல்லையுள்ளசித்தர்முனிரிடிகளெல் லாம்யெழிலாகப்பாடிவைத்தார் நூல்கள்தாமே. 991

நூலான நூல்களெல்லாமதிதஞ்சொன்னு நுணுக்கமுடனுதிய ந்தவஸ்துவில்லை, பாலான நூல்போலேபலரும்பாடி பாரினிலே யொளித்துவைத்தார்முனிவர்சித்தர், காலான நூலதுதானிருபத்திரண்டு கணக்குடனேபாடி வைத்தார்லட்சமாக, மாலானசாத்திரத்திலாதிய ந்தம் மகதேவர்சங்கையதை சொல்வார்தானே. 992

சொல்லாதசாத்திரங்களதுக்கல்லோ தொல்லுலகில்பலநூலு ங்கற்றுமென்ன, புல்லர்களாய்வெகுமாண்ப பாலர்கூடி புகட்டினார் சித்தர்முனிசாத்திரத்தை, வெல்லவேகடவுளதுயிருக்கும் ஸ்தானம் வேதாந்தத்தாயாருங்கூறவில்லை, நல்லதொருசித்துமுனி சாத்திரங்க ள்நலமான நூல்களெல்லாம் பாழாய்ப்போச்சே. 993

போச்சென்றுவிடுமாமல் புண்ணியர்கள்புகட்டினார் வையகத்து மாண்பர்க்கெல்லாம், மூச்சடங்கிபோனதொரு சித்துதாமும் மூனையானதெய்வமதுவொன்றென்றுண்டு, பாச்சலுடன்பலபேரு மறியவல்லோ பண்பாகப்பொதுப்படவே சொன்னாரங்கே, ஆச்சரியமான பராவஸ்துதன்னைவன்புடனே கண்டறிந்தோரில்லைபாரே. 994

பார்க்கையிலே சாத்திரங்களிதிகாசங்கள் பண்புடனேபாடிவை த்தார்முனிவர்தானும், ஆர்க்கமுடன்யாரேனும் விள்ளக்கூறிவன்புட னேசாத்திரங்கள்கூறவில்லை, மார்க்கமதுதெரியாமல் வீணின்காதை மயக்கமுடன்பாடிவைத்தார் நூல்கள்தோறும், சூர்ப்பனகைமாதுவு க்குதனங்கள்போன சுருதிபொருளாகமங்கள் கதைபோலாச்சே.

ஆச்சப்பாகைலாயமேருகண்டேன் அங்ஙனவேமகிமையெல்லா ங்கூறினேன்யான், வீச்சுடனேகுளிகையதுபூண்டுகொண்டு வீரமுட ன்மேருகிரிதன்னைநீங்கி, பாச்சலுடன்சீனமெனும் பதியிற்சென்றுப ண்பானமாண்பர்களுக்குகந்துயானும், ஆச்சரியமானதொரு மகிமை யெல்லாமன்புடனேயானுரைத்தேன் சீனத்தார்க்கே. 996

சீனமாம்பதினெண்பேர்சித்துதாமும் சிறப்பான சாத்திரங்கள் கோடியுண்டு, மானமுடன்சித்தாதிசித்தர்தாமும் மயக்கமுடன் வெகுநூல்கள்பாடினார்கள், ஈனமதுவாருது எந்தன்நூலு யெழிலானகுருநூல்தான்சத்தகாண்டம், வானமது மேருவென்றகைலைமேரு வளப்பமெல்லாமின்னாலும் பகர்ந்திட்டேனே 997

பகர்ந்தேனேகாலாங்கிநாதர்தம்மால் பாங்கானசீனபதி யான்கடந்து, உகர்ந்ததொருதேசாதிதேசமெல்லாம் வுத்தமனே குளிகையதுபூண்டுகொண்டு, அமர்ந்துமேயட்டதிசையானுங்கண்டு வண்பானகைலாசமேரிற்சென்றேன், சுமர்ந்திட்டவாதிசேடன் தன்னைத்தானும்துப்புரவாய்க்கண்டதில்லை வுண்மைதானே. 998

தானான சாத்திரத்தின்பெருநூலப்பாமேன்மையுள்ளகுருநூலாம்சத்தகாண்டம், கோனானபெயனதையர்காலாங்கிநாதர் கொற்றவனார்குருபாதகடாட்சத்தினாலும், தேனானதென்பொதிகை தன்னில்வாழும் தேஜொளிவினகத்தியனார் கிருபையாலும், மானானசீனபதிசமாதிசென்ற மகத்தானகமலமுனி கடாட்சங்காணே. 999

காணவேசத்த காணடமேழிற்குள்ளே கருவிகரணும்பொருளாதியந்தம், தோணவேதுறைமுகமும் யானுங்கணடுதுப்புரவாய்ப்பாடிவைத்தேன்குருநூல்தானும், வேணதொருபொருள்களெல்லா மிதிலடக்கம் விரும்பியேயானுரைத்த பெருநூல்தானும், ஆணவங்கள் தானொடுங்கியைந்தாங்காணட மன்புடனேபாடிவைத்தேன்முற்றதாமே.

## போகர் சத்தகாண்டம்-7000.

5-வதுகாண்டம்.

முற்றிற்று.

---

கடவுள்துணை.

மஹாமகுத்துவம்பொருந்திய

# போகமுனிவர்

திருவாய்மலர்ந்தருளிய

# சத்த காண்டம்-எசு.

## ஆறுவது, காண்டம்

காப்பு.

அண்டபகிரண்டாண்ட மரனேகாப்பு
ஆனந்தபூரணமா முமையாள்காப்பு
குண்டமெனுங்குவலயத்தில் குறியேகாப்பு
குமாரகுருசீர்முருகர் பாதங்காப்பு
புண்டரீகதிருப்பெருமாள் புவனேகாப்பு
புகழானபிரமனவன் புனிதன்காப்பு
சண்டமாருதம்போலே வேழாயிரத்தை
சாற்றுகிறேன்காலாங்கி பாதங்காப்பே. 1

காப்பானவாறுவதானகாண்டம் கருவானபொருளெல்லா மிதி லடக்கம், சேப்பானவேழாயிரம் பொருள்தானப்பா சிலப்பானசத்த காண்டகமுமாகும், வேப்பானவாறுவதானகாண்டம் வெகுபொருள் களிதிலடக்கம் வினயமெத்த, பரப்பானகாண்டமது வாறுக்குள்ளே பார்லோகவித்தையெல்லாங் காணலாமே. 2

காணலாம்பெருநூலா மேழாயிரத்தில் கருவான சரக்கெல்லா மிதிலேதோயும், பூணவேகுருநூல்தான் பெருநூலப்பா புகலானச த்தசாகரந்தானாகும், வேணதொருகருக்குருவுமிதிலடக்கம் வேகமு டன்பாடிவைத்த சத்தகாண்டம், நாணவேநாதாக்கள் ரிஷிகள்பாத ம்நான்வணங்கிபாடிவைத்தேன் நன்மைபாரே. 3

பாரேதான்மாந்திரீக ஜாலப்போக்கு பாங்கான வயித்தியமும் யோகமார்கம், சீரேதான்சிமிட்டுவித்தை யனந்தம்போக்கு சிறப்பான கால்வரிசைசிலம்புலாட்டம், நேரேதான்பற்பமுடன் செந்தூரங் கள்நெடிதானகட்டினமும் நீற்றினமுமாகும், தீரேதான்லேகியங்கள் குளிகைமார்கம் திறமானலோகமாரணமுமாமே. 4

ஆமேதான்புலிப்பாணி வருண்மைந்தாகே ளப்பனேசொல்லுகி றேன் புத்திவானே, நாமேதான்காலாங்கிநாதர்பாதம் நலமுடனே யான்வணங்கிகூறலுற்றேன், வேமேதான்வெகுநூல்கள் பார்த்துமே தான் விருப்பமுடனின்னூலையுந்தனுக்கு, தாமேதான்குருநூலாய்ப் பொருள்கள்கண்டு தக்கபடிசெய்தேனே தரணியோர்க்கே. 5

தாரணியில்நூல்கண்டோர்காமிகட்கும் தகமையுள்ளசண்டாள ர்பாவிகட்கும், காரணியாம்நயம்பேசிகதையுரைக்கும் கடிதானதுரோ கிகட்குயிந்தநூலை, தூரணியாய்கொடுத்தாக்கால் பாவமெய்தும் து ப்புரவாய்க்கொடுக்காதே புண்யவானே, வேரணியாய் தர்மிகட்கும் புண்ணியோர்க்கும் வேணவுபசாரமுடன் கொடுப்பாய்தானே. 6

தானனபோகமேழாயிரந்தான் தாரணியில்கண்டவர்கள் விள் ளார்தாமே, கோனனயெனதைடர் காலாங்கிநாதர்குவலயத்தில்கொ ற்றவர்தான் கடாட்சத்தாலும், வேனனசத்தகாவியத்தைப்பாவிரு ப்பமுடன்பாடிவைத்தேன் மைந்தாகேளு,தேனனயிந்நூல்தான்சொ ர்னநூலாம் தெளிவாகப்பாடிவைத்தேன் புவியுளோர்க்கே. 7

கள்ளனைப்பிடிக்க தந்திரம்.

புவியானயின்னமொருமார்கம்பாரு புகழானதந்திரமாஞ் ஜால வித்தை, கவியானசித்தர்முனி ரிஷிகள்யாரும் கழறவில்லை யெவ்வித நூலிலப்பா, பவியானபணிதிகளைகொள்ளைகொண்டோர் பாருலகில் காண்பதற்கு வரிதேயாகும், குவிதமுடன்சாலமாந் தந்திரவித்தைக் கூறுவேன்மாணுக்கள் பிழைக்கத்தானே. 8

தானனகொள்ளைகொண்டோர்மாண்பர்தம்மைதாரணியில்பிடி ப்பதற்குவுபாயதந்திரம், மானனமச்சென்ற மாளிதன்னில் மகத்தா னகாகமொன்றுபதிதானப்பா, பானனமேடையது வொன்றுசெய்து பாங்கானமேடையின்மேல் கலசம்வைத்து, கோனனகுருதலையமன தினுன்னி கொற்றவனைகலசமதில் தேங்காய்வையே. 9

வைத்துமேதேங்காய்மேல் காயந்தன்னை வளமாகத் தான்பூசி மைந்தாநீயும், பையவேசந்தேகப்பட்டபேரை பாங்குடனே கும்பலாய்க்கூட்டிக்கொண்டு, மெய்யாகநீங்களெல்லாமாளிசென்றுமேன்மையுடன்தேங்காயைத்தொட்டுவந்தால், கைதனையேசோதிப்பே னென்றுசொல்லி கருத்துடனேவுறுதிமொழிகூறுவாயே. 10

கூறுவாய்காயத்தின்வளமைதன்னைகுறிப்பாகமர்மமதாய்மனதிலுன்னி, தேறுவாய்கைதனையேகண்ணிலொத்தித் தேற்றமுடன்முத்தமதுயிட்டாற்போல, மாறுபாடாகவல்லோவாசந்தன்னை மதிமுகத்தில்மோர்ந்துமல்லோ தெரிந்துகொள்வாய், தீதுடையமனிதரவரெல்லாங்கூடி சிறப்பாகக்கையதனைக் காட்டுவாரே. 11

காட்டுவாரொவ்வொருமனிதர்தானுங்கைநீட்டிபரீட்சையதுசெய்யுமென்பார், தாட்டிகமாய்கைநீட்டிக்காட்டும்போது தகமையுடன் வாசனையைதெரிந்துகொள்ளு, மேட்டிமையாய்வாசனைக ளிருக்குமாண்பர்மேதினியில்பொருளதனைத் தீண்டாமாண்பர், பூட்டகமாய்வாசனைகளில்லாவிட்டால் புண்ணியனேதிருடனென்று செப்பலாமே.

செப்பலாம்பயங்காளிபானமாண்பன் சென்றுமே மாளியிடங்கட்டினின்று, ஒப்பமுடன்கையெடுத்த தோஷத்தாலே ஓகோகோ தொட்டாலேமோசம்நேரும், எப்படியும்தப்பிக்கவழிதான்வேண்டும் யெழினதேங்காயைதொடக்கூடாது, இப்படியேதன்மனதிலுள்ளடக்கி யெழிலாகயான்தொட்டேனென்பான்பாரே 13

பாரேதான்பயங்கரத்தையுள்ளடக்கி பான்மைபெற சபையார்முன்சோதனைக்கு, நேரேதான்முன்னிற்பான்பாவிதானும் நெடிதானசண்டாளன்குருத்துரோகி, கூரேதான்சத்தியமாய் வார்த்தைசொல்வான் குணமில்லான்மணமில்லான் மானமில்லான், சேரேதான்மெய்வார்த்தைமிகவுங்கூறி செழிப்புடனே தான்வருவாள்திருடனுமே.

திருடனும்பொய்சூதுகபடுதந்திரம் தீரமுடன்றுன்பேசிதப்பிப்பான்பார், பொருடனையேகொள்ளைகொண்டலோபன்றுனும் பொங்கமுடன்பொருளெடுத்தமாண்பென்ன, குருதனையே தானினைத்துதிருடதென்றுகுறிப்புடனே சொல்லியல்லோ பொருளைவாங்கு, அருளுனக்குவுண்டாகுமைந்தாபாலாவப்பனேகாலாங்கிகடாட்சந்தானே

தானுகபொருள்தீண்டாமாண்பரெல்லாம் சட்டமுடன்தேங்காயைத்தொருவார்பாரு, வேனுனபொருளெடுத்தோன் சந்தேகத்தால்

வேற்றுமுகமாகியல்லோதீண்டானப்பா, மானுனவைபமென்றயெண்ணத்தாமேலமயக்கமுடன்தேவதைகள்கொல்லுமென்று, பானுனகிலே சமதுவெகுவாய்தோன்றிபான்மையுடங்கைதனையேதீண்டான்பாரே.

தீண்டான்காண்பொருளெடுக்காபூபன்றூனும் திறமுடனேதப்தக்கவருயேபார்ப்பான், பூண்டகமாயதிதமென்றபோக்குசொல்லிபுனிதமுடன்தப்பிக்கவழியேகாண்பான், காண்டகமாமிந்தவித்தையாருங்காணூர் காசினியில்புத்திமான்காண்பார்பாரு, வேண்டிதோர்கருமானமின்னமுண்டுவிருப்பமுடன் சொல்லுகிறே னினனங்கேளே.

கஸ்தூரிஜாலம்.

கேளப்பாபுலிப்பாணிமைந்தாபாரு கெடியானகஸ்தூரி ஜாலமப்பா, நாளப்பாபோகாமலிந்தசாலம் நாட்டினிலேசெய்வார்க ளனந்தம்போக்கு, மாளப்பாபுத்திமான்செய்யுஞ்சாலம் மகத்தானசாலமதுவிஞைதவித்தை, வீளப்பாஜெகசாலகூதுவித்தை விள்ளாரேயாருந்தான்விள்ளார்தானே. 18

விள்ளாரேகஸ்தூரிஜாலவித்தை விளம்புகிறேன்மாணுக்கள் பிழைக்கவென்று, புள்ளானதடியொன்றுமூன்றேயாகும் புகழானமச்சென்றமாளிதன்னில், விள்ளவேநடுமையந்தன்னிலப்பா விருப்பமுன்கோல்நாட்டிமுக்கோணந்தான், கொள்ளவேமுக்கோணக்குச்சிக்குள்ளேகுறிப்புடனேகாகமென்றகவசம்வையே. 19

வைக்கவேகலசமதில்கலசம்வைத்து மகத்தானகலசமதில்வோடுவைத்து, நைக்கதவயோட்டின்மேல் தலைதானப்பாநலமானசெம்மறியின்தலைதானும், பொய்க்காமல்தலைமேலேசாணம்வைத்துப்பொங்கமுடன்சாணமதில்கலசம்வைத்து, மெய்க்கவேகண்டமதில்தீபமேற்றிமேன்மையுடன்மந்திரங்களோதுவாயே. 20

ஓதுவாய்பஞ்சாட்சரவட்சரத்தை வுத்தமனே நூற்றெட்டுவுருதான்போடு, வாதுபுகழ்செம்மறியின்முகத்திலப்பா வண்மையுடன்வாடையென்றகஸ்தூரிதானும், தீதறவேகள்ளனைத்தா னறியவேண்டிதிகழானகஸ்தூரிதன்னையப்பா, சேதுபந்தமாகவல்லோ முகத்தில்பூசிசெம்மலுடன் பதனமதுசெய்குவாயே. 21

செய்யவேகஸ்தூரிதன்னைத்தானும்சிறப்புடனேபூசியல்லோமைந்தாகேளு,வெய்யவேமாளிதனில்கன்னம்போனுல் வேகமுடன் திருடாகளைப்பிடிக்குமார்க்கம், பையவேசந்தேகப்பட்டபேரையாங்குடனே

யாவரையுங்கூட்டிவந்து,நையவேமச்சென்றமாளிதன்னில்நலமுடனே
சபைகூட்டிநிற்கச்செய்யே. 22

நிற்கவேயேகஜனஞ்சூழ்ந்துநிற்க யெழிலாநகள்ளனைத்தானறிய
வேண்டி,துர்க்கையென்றகாளியதுமந்திரத்தால்துப்புறவாய்நவகண்ட
மோதும்போதும், அற்பமென்றுநினையார்கள்மாண்பரப்பாலப்போதே
யெடுத்தவனுமேங்கிநிற்பான், சொற்பமென்றதந்திரமந்திரத்தினாலே
சோர்வடைந்துகள்ளனவன்முழிப்பான்பாரே. 23

பார்க்கையிலேகள்ளனவன்லகுவாய்நிற்பான் கருத்தினிலேசதா
சிவமுந்திடுக்கிட்டேங்கி, தீர்க்கமுடன்வொவ்வொரு வராகவல்லோ
தீரமுடன்மச்சென்றமாளிதன்னில், ஏர்க்கவேசோதனைக்கு மாளிக்
குள்ளேயென்தாயேயீஸ்வரியேதீண்டவில்லை, ஆர்க்கவேசத்தியத்தை
செய்துமல்லோ வப்பனேமுகமதனைத்தீண்டிடாயே 24

தீண்டவேவேண்டுமென்று சொல்லியல்லோசோதனைக்குவுள்ள
கற்றித்துலைவாய்நில்லு, ஆண்டகையேமாதாவேயென்றுரைத்து அங்
ஙனவேயட்சதையைத்தூவுதூவு, மாண்டதொருசெம்மறியின்முகத்
தைத்தொட்டுமார்க்கமுடன்வொவ்வொருவர்வருங்காலத்தில், வேண்
டியேயவர்கரத்தைநீதானப்பா விருப்பமுடன்றனைத்து முகத்தி
லொத்தே. 25

ஒத்தையிலேகஸ்தூரிமணந்தான்வீசும்ஓகோகோபொருளெடுக்
கவில்லையென்று, சத்தியமாய்நீசொல்வாய்மகனேயப்பாசாங்கமுடன்
பொருலெடுக்கவில்லையென்று, புத்தியுடன்பொருள்தொட்டேங்கரத்
தில்வாசம் பொங்கமுடன்யிருக்கவேமாட்டாதப்பா, வெத்தியுடன்நீ
நினைத்துமாண்பர்தம்மை மேதினியில்சொல்லுவதுதருமமாமே. 26

தருமமாம்பொருள்களவுகண்டுதேறி தண்மையுடன்சொல்வது
வேமனுதர்மமாகும், கருமமதுயெய்யாதுவுந்தனுக்குக்காசினியில்நீயு
மொருநீதவனாய், பருமமுடன்வையகத்தில்மாண்பர்க்கெல்லாம் வள
மையுடன்குருசம்ப்ரபோதவானாய், அருமையாயெல்லவருமுந்தனைத்
தான் அப்பனேசதாகாலம்போற்றுவாரே. 27

போற்றுவார்தந்திரமாஞ்ஜாலவித்தை பொங்கமுடன்யாருக்கும்
விள்ளவேண்டாம்,ஏற்றியேகர்மிகளும்பாபியோரும்யெதாஸ்தானசந்
டாளரனேகருண்டு, நாற்றிசையும்மிருப்பார்கள்புண்ணியவாங்கள்நவி
லாதேயொருவருக்கும்நவிலவேண்டாம், மாற்றியேமாந்திரிகமென்று
ரைத்து மருத்துவமாய் ஞானிபோலிருந்திடாயே. 28

இருக்கையிலேயெல்லவரும்போதங்கொண்டு யெங்குருவேயெங் சாமியென்றுமல்லோ,பொருக்கமுடன்பொருள்கொள்ளையிட்டபேர் கள் பொங்கமுடனவுனைத்தேடிவருவார்பாரு, தருக்கமதுமிகப்பேசி மகனேயப்பா தருவித்தபொருளதனைக்கொடுப்பேனென்று, அருட் கமலம்வீற்றிருக்குமம்பாள்தானு மப்பனேகூட்டிவைப்பா ளென்று சொல்லே. 29

சொல்லையிலேயெதிராகவந்தபேர்கள்சொக்கியே யுங்வலையில்சிக் கியல்லோ, வல்லதொருகுருசாம்பிரதாயபூபாவளமையுடநெந்தனது பொருளையப்பா,மெல்லவேதருவித்துத்தந்தாயானுல்மேன்மையுடன் வுந்தமக்குப்பாதியீவேன், சல்லியங்கள்நேராதுசுவாமியென்றுதப்பா மலடிபணிந்துசேவிப்பாரே. 30

சேவிப்பார்கடவுளென்று வும்மைதானும் செகதலத்தில்மாண்ப ரெல்லாமயங்கியல்லோ, தாவியேசதாகாலம்பக்கலப்பாசட்டமுடன் கார்த்திருப்பார்கோடிமாண்பர், ஆவிபொருளுடலாதியனைத்துமப்பா வப்பனேயுந்தமக்குதத்தமென்பார் பாவியெந்றநாமமதுபடைக்காமற் ருன் பாருலகில்சத்தியனுய்வாழ்வாய்தானே. 31

தானனபுலிப்பாணிமைந்தாகேளு தப்பாமலெந்தனுக்குகுருதா னப்பா, தேனனகாலாங்கிநாதர்தம்மைதேற்றமுடன்சதாகாலமனதி லுன்னி, பானுனமனோன்மணியாள்பாதம்போற்றிப் பான்மைபெற யெப்போதும் தொழுதுமல்லோ, கோனனகுருக்கள்மார்ரிடிகள்தம் மெ கொற்றவனேதானினைந்துநடத்துவாயே. 32

நடத்துகையிலின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் ராஜாதிராஜ ரெல்லாமெச்சுதற்கு, திடமாநதந்திரமாஞ்ஜாலபோக்குசெப்புகிறேந் மாணக்கர்யுந்தமக்கு, அடலாநதந்திரமாமாயதந்திரம்அப்பனேயாருந் தானறியமாட்டார், கடலானகள்ளனைத்தான்பிடிக்கவல்லோ காசினி யிலின்னமொருமதிசொல்வேனே. 33

பச்சரிசிஜாலம் கள்ளனைப்பிடிக்க

மதியானஜாலமொன்றுசொல்வேனப்பாமகத்தானகாலாங்கி நா தர்தம்மை, துதியுடனேயான்வணங்கிதுய்யபாலாதுப்புரவாயுந்தனுக் குக்கூர்வேன்யான், நிதியெடுத்தகள்ளனைத்தானறிவதற்குநீதியுடன் தந்திரமாஞ்ஜாலவித்தை, பதியானகளவுசென்றமாளிதன்னில்பட்ச முடன்ருனடுத்து செப்பக்கேளே. 34

செப்பவென்றால்நீதிபோனமாளிதன்னில்சிறப்புடனேநீசென்று ஜாலஞ்செய்வாய்,ஒப்பமுடன் நீதியெடுத்தமான்பர்தம்மைஓகோகோ யாவரையுந்தானழைத்து, தப்பிதங்கள்நேராமல்மைந்தா நீகேளு தன் மையுடன்சந்தேகப்பட்டபேரை, மெப்புடனேயவர்கையில்வரிசியப் பா மேன்மையுடன்றானெடுத்துச் சொல்லக்கேளே. 35

கேளப்பாவவரவர்கள்கையிலப்பா கெடியானபச்சரிசிநிரம்பவுந் தான்,ஆளப்பாதனித்தனியேகொடுத்துமைந்தாவப்பநேயவர்களுக்கு வணக்கங்கூறி,மாலப்பாமான்பர்களேநீங்களெல்லாமயங்காமற்பொரு ளெடுக்கவில்லையென்று,தேளப்பாகொட்டினதுபோலேயப்பாதேற்ற முடன்யான்கூறுமொழியைக்கேளே. 36

மொழியானவார்த்தையதுயென்னவென்றால் மோசமில்லைநீங்க ளுந்தானடுங்கவேண்டாப்,வழியுடனேபச்சரிசிவாயிலிட்டுவண்மையு டன்றான்மென்றுமைந்தாகேளு,சுழியானவாயில்மென்றவரிசிதன்னை சூட்சமுடன்பூமிதனில்முழியவேண்டும், பழியானஎனுமிச்சம்பழத் தையப்பா பாண்மையுடன்வாய்தனிலேகடிப்பாய்தானே. 37

கடித்துமேபழசாரத்தைமாணுக்காளே கருத்துடனேபூமிதனில் முழியவேண்டும், துடிப்புடனேபொருளெடுக்கவில்லையென்று தூய்மை யுடன்சத்தியங்கள்செய்யவேண்டும்,நடித்துமேசோதனைகள்தந்துமல் லோ நலமுடனேசெல்கவென்றுவிடையுந்தந்து,முடித்துமேமந்திரங் களோதினுற்போல் முனையானதலைவாசல்முன்னேநில்லே. 38

நிற்கையிலேமாண்பரெல்லாஞ் சோதித்தாகிவந்துநிலையானநிலை தனிலேநிற்கும்போது, அற்பமென்றுநினையாமல் வவரவர்கள்தன்னை அன்புடனேதானிணைந்து வப்பாகேளு, சொற்படியேநீயுமிந்த வரிசி தன்னை சொந்தமுடன்காட்டவென்றுவினையங்கேளு, உற்பனமாயு மிழ்ந்ததொருவரிசியப்பா ஓகோகோகுழம்புபோலிருக்கும்பாரே.

பாரப்பாபொருளெடுத்தோரங்வரிசிதானும்பான்மையுடன்பொடி பொடியாயிருக்கும்பாரு,நேரப்பாயெடுக்காதபேர்கட்கெல்லாம் நேர் மையுடன்வரிசியது குழம்பாய்நிற்கும், சீரப்பாபழமதுவுமிழ்ந்தபேர் கள் சிறப்பானநாவதனில்ரசமுண்டாகும், ஆரப்பாயெடுக்காதபேர் கட்கெல்லா மப்பனேரசமதுவுமதிகங்காணே. 40

காணவென்றுலெடுத்தவர்கள்மாண்பருக்குகடிதானபழமதுவும் ரசந்தானப்பா, பூணவேரசமதுவும்குறைந்துகாட்டும் புகழானயெலு மிச்சம்பழந்தானப்பா, தோணவேதிருஷ்டாந்திரங் கண்டுகொள்ளு தோராமல்சபையார்க்குகூறுகூறு, வேணதொருவுபசாரக் கள்ளனேத் தான் வேகமுடன்கண்டறிந்துசெப்புவாயே. 41

செப்பவென்றால்நாவில்லேபாவுமில்லே ஜெகதலத்திலுனேப்போல மகுத்துமுண்டோ, ஒப்பவேசபையார்முன்கள்ளனேத்தான் ஓங்கார மிட்டல்லோயழைப்பாய்பாரே, தப்பிதங்கள்நேர்ந்ததென்று மனதி லுன்னிதண்மையுடன்பொருளதனேத்தருவான்பாரு இப்படியேஜால தந்திரத்தினாலே யென்மகனேபொருளதனேவாங்குவாயே. 42

மாட்சிமைகூறல்

வாங்கையிலேபுத்திமானென்றுசொல்லிவார்த்தைசொல்வார்வை யகத்திலுன்னேயப்பா, தூங்கியேதிரியாதேமைந்தாகேளுதுப்புரவாய் நீயுமொருகெவுளியாவாய், ஏங்கியேயுனேக்கண்டோரெல்லாருந்தான் யெழிலுடனேயுந்தமக்குவணக்கங்கூறி, பாங்கியர்கள்தங்முதலாய்பரிசு யீவார் பாரினிலேநீயுமொருசித்தனுமே. 43

சித்தனென்றுசொல்லியல்லோயுன்னேயப்பா சிதாபாசக்கட்டளே யைமனதிலுன்னி, பத்தியாய் திரிகாலபூசைசெய்து பலகாலும்சிந்தித் துப்பணிவுகூறி, முத்திபெறநல்வழிக்குவாளதாகி முயன்றுமேயெப் போதுமுயற்சிவானுய், நத்தியேயுமதிடத்தில்சீஷனுக நாடோறும் பணிவிடைக்குநிற்பாரே. 44

பொரிஜாலம்.

பாரப்பாநெற்பொரியின்வித்தைசொல்வேன் பாங்கானநெல்லது வுங்குறுணிகொண்டு, நேரப்பாசிலேதன்னில்முடிந்துதானும்நெடிதான சுண்ணும்புக்காளேதன்னில், சீருடனேகிளிஞ்சிநடுமையந்தானும்சிரப் புடனேவைத்துமல்லேகிளிஞ்சிமூடி, காருடனேதானவித்துயெடுத் துக்கொண்டு கவனமுடன்முடிச்சதனேயவித்திடாயே. 45

அவிழ்க்கையிலேநெல்லதுவுங்காரமேறி அழகுட நநெல்லதுவு ங்கண்ணீர்ற்றோற்றம், புவிதனிலேவெகுசனங்கள்கூட்டத்தோடுபொ ங்கமுடன்முனைத்துக்கும்பல்சேர்த்து, பவிமதிகள்போன்றதொரு மாந்தருக்குப்பண்பானஜாலமொன்றசொல்வாயப்பா, துவிதமுள்ள நெல்லதனேசபையோர்முன்னே துப்புரவாய்பூமிதனில்கொட்டிடாயே

கொட்டியேபலபேர்கள் பார்க்கவல்லோ கொப்பெனவே ஜலமதனை நெல்லின்மேலே, திட்டமுடன்ருன் றெளிப்பாய் மைந்தாய் நீயும் தீர்க்கமுடன் நெல்லெல்லாம் பொரியேயாகும், சட்டமுடன் பொரியெடுத்துப் பார்க்கும்போது, சார்பானநெற்பொரியும் மெய்பதாச்சு, வட்டமுடன் நெருப்பில்லாப் பொரியுமாச்சு மகத்தானவித்தையது ஜாலமாச்சு. 47

ஜாலமென்ருல் நெருப்பில்லாப் பொரியுமாச்சு சாங்கமுடன் கண்டவர்கள் மயங்கலாச்சு, கோலமுடன் பொரியெடுத்துச் சபையோர்முன்னம் பொங்கமுடன்ருன் கொடுத்துபரிசுவாங்கி, தாலமுடன் வையகத்தில் சித்தனைப்போல் தரணிதனில் வெகுகாலமிருந்துகொண்டு, சீலமுடன் லோகவதிசயமுங்கண்டு சிற்பரனைப்போலிருந்து பூசிப்பாயே. 48

பூசித்துத்தானிருக்குங் காலந்தன்னில் பொங்கமுடன் மாந்தரெல்லா முன்னையப்பா, ஆசித்துவணங்கியேதான் வன்புகூர்ந்துவப்பனே யெந்நாளும் பதாம்புயத்தை, நேசித்துயுந்தமக்கு கருணைகூர்ந்து நெடுங்காலங் காத்திருப்பார் மாண்பரெல்லாம், காசுமிகப்பொன்னையெல்லாம் தருவார்பாரு கடாட்சித்து மவர்களுக்கு கதிசொல்வாயே

கசகசா மீன்ஜாலம்.

சொல்லவே புலிப்பாணி மைந்தாகேளு சொற்பெரிய காலாங்கிதனைநினைந்து, வெல்லவேசினையுள்ள மச்சந்தன்னை விருப்பமுடன்ருனெடுத்துப் புனிதவானே, புல்லவே பனிநீரைத் தாமெடுத்துப் புகமூாகசினைதனக்கு நித்தியந்தான், செல்லவே ரவிதனிலே சுறுக்குதாக்கு செம்மனுடன் சூரியனும் வலிப்பான்பாரே. 50

வலித்துமேசினைதானும் பனிநீர்தன்னை வளமுடனேருன் குடித்து நிற்கும்போது, பலிப்புடையசினை யெல்லாமுதிர்த்துக்கொண்டு பட்சமுடன் கசகசாவில்கலப்பாயப்பா, சலிப்பின்றி பாணிதனிலடைத்துமே தான் சட்டமுடன் பதனமது செய்துகொண்டு, கலிதனிலே வெகுமாண்பர் கூட்டத்தோடு களிப்புடனே ஜாலமதுசெய்குவாயே.

செய்யவென்ருல் ஜாலமதுமாற்கங்கேளு செம்மண்ணுதொட்டியொன்றுபாண்டமப்பா, துய்யநல்லசலமதுவும் பாண்டந் தன்னில் துப்புரவாய் நிறையவிட்டு புகலக்கேளு, பையவேபரனைதனைதிறந்து மைந்தா பாலகனேபாரினிலே வெகுபேர்காண்க, வையகங்கள் பிரமிக்கக் கசகசாவை வண்மையுடன் ருனெடுத்துக் கொட்டுவாயே. 52

கொட்டையிலே ஜனங்களெல்லாம் மயங்குவார்கள் கோடியிலே புத்திமானொருவனுண்டு, சட்டமுடன் மற்ருேர்கள் காணுரப்பாதார

ணியில் காண்பதுவுமரிதேயாகும், திட்டமுடன் பாண்டமதை மூடி ப்போடு தீர்க்கமுடனொரு நாழிகையானபின்பு, வட்டமுள்ள பாண்டமதை திறந்துபார்க்க வளமானசினையதுவு மீனுமாச்சே. 53

ஆச்சப்பா சினையெல்லா மீனுமாச்சு வப்பனேகசகசாநின்றுபோச்சு, நீச்சப்பா சிறுமீன்கள் பொடிகளப்பா நிலையானபாண்ட மதில் மேயலாச்சு, மேச்சப்பா பொரித்ததெல்லாஞ் சினைதான்கெட்டிமேன்மையுள்ளகசகசா சொத்தையென்று, ஆச்சரியமாகவல்லோ வுரைப்பாயப்பா வருண்மைந்தா மெய்யென்று நம்புவாரே. 54

நம்பியேமாண்பரெல்லா யேக்கங்கொண்டு நடுநடுங்கி பிரமித்து சோபித்தேதான், வெம்பியேமுகம்வாட யுளங்களித்து வேகமுடனூசிர்மமிகவுஞ்செய்து, தம்பியேயெந்தன்குரு நாதாபோதா தாரணியில் லுனைப்போல சித்தனுண்டோ, கும்பியேகைகுவித்து வுளங்களித்துக் கொப்பெனவே கால்தனிலே பணிகுவாரே. 55

பணிகுவார் யெந்தன்குருநாதா வெண்பார் பாரினிலே வெகு கோடி சித்துவெண்பார், துணிவுடனேஜாலமல்ல சிருஷ்டியென்பார் தோய்ந்தபொருளுள்ள தொருகருவேயென்பார்,கணிவுடனே வாயாதிகற்பங்கொண்ட கைலாசநாதமுனி கடவுளென்பார், மணிபோன்றலோககுரு விவர்தானென்பார் மாசற்றசற்குருவா மென்பார்பாரே

எலுமிச்சம்பழ வித்தை.

பாரப்பாயின்னமொரு கருமானங்கேள் பாரினிலே யெல்லவரும்பயந்துஓட, ஆரப்பா வாச்சரியமானவித்தை வப்பனே கறிவுள்ளானறிவான்பாரு, சீரப்பாபிரதிவா மெழுகினாலே சிறப்புடனே கத்தியொன்று செய்வாய்தானும், நேரப்பாசெம்பருத்தம் சப்பார்த்துப்பூநெடிதான செம்பாளைப் பழத்தை வாங்கே. 57

வாங்கியேசார்பிழிந்து மன்னுகேளுமகத்தான யிரும்பினிடகத்திமேலே, தூங்கியேதிரியாதே புத்திவானே துடிப்புடனே சாறதனைப்பூசிப்பூசி, மாங்குபெறரவிதனிலே காயவைத்துப் பான்மையுடதன்னையே பதனம்பண்ணி, சாங்கமுடன் சபைகூட்டி மைந்தாகேளுசட்டமுடன் ஜாலம்விளையாடு வாயே. 58

ஆடுவாய் சபையார்முன்செப்பக்கேளு வப்பனேயோர் சிறுவன் புத்திவானாய், தேடியேகொணடுவந்து கூட்டத்துள்ளேதெளிவுடனே யவன்கழுத்தில் நிம்பந்தன்னை, சாடியேகழுத்திலே நிம்பழத்தைச்சட்டமுடன் றுன்றரித்து கயறுபூண்டு, வாடியேதிரியாமல் மயங்கிடாமல் மன்னவனே கத்திகொண்டு யரிகுவாயே. 59

அரிகையிலே யெனுமிச்சம்பழரசந்தான் வப்பனேரத்தமதுபோ லேசாயும், கிரியையிது மெய்க்கிரியை சாலவித்தை கீர்த்திவுள்ளவித் தையிது வென்பார்பாரு, சரியானசெகஜாலமிதுவே யென்பார்தார ணியில் செய்பவர்களிதைபோலுண்டோ. குரியானரத்தமது ஜாலவி த்தைக் கொற்றவனே கழுத்தறியும் வித்தைதானே. 60

தானனவித்தையிது சூட்சம்சூட்சம் தாரணியில் யாரேனும்கா ண்பதுண்டோ, கோனனகாலாங்கிநாதரப்பா கொற்றவனெந்தனுக் குவுபதேசித்த, தேனனவித்தையிது தேசிவித்தை ஜெகஜலத்தில் கோடிபேர் மயங்குவார்கள், பானனபராபரியாள் கடாட்சத்தாலே பாலகனேயுந்தமக்கு யோதினேனே. 61

ஓதினேன்ஜாலமென்ற விநோதஜாலம் வுத்தமனேவையகத்தோ ர்பிழைக்கவென்று, நீதியுடனுந்தமக்குச் சொன்னேன்யானும் நிட்க ளங்கமாகவல்லோ வுரைத்தேனப்பா, பாதிமதிதானணிந்த தம்பிரா னேபாருலகில் சித்தனைப்போலிருந்துகொண்டு, சோதிமயங்காணுத ற்கு சூட்சாசூட்சம் தொல்லுலகில் காண்பதற்கு வழிகொள்வாயே.

கொள்ளவென்றால் குருபதத்தின் கொள்கைவேண்டும் கோளா றுதானகற்றி நடக்கவேண்டும், எள்ளலவும்பொய்சூது கபடுதந்திரம் யென்மகனே மனந்தனிலே நண்ணலொப்ப, புள்ளிமயிலேறி வருப்பு னிதவானை புகழுடனே யெந்நாளும் நினைக்கவேண்டும், விள்ளவேயவ ருமக்கு வுபதேசிப்பார் வித்தகனேயெல்லோரும் போற்றுவாரே.

பாண்டம் சலமில்லாமல் சாதம் சமைப்பது.

போற்றுவாரின்னமொரு கருமானங்கேள் பொங்கமுட னுந்த மக்குக் கூறுவேன்யான், ஆற்றலுடன் காலாங்கிநாதரோடு வன்புட னே வனஞ்சுத்தி வருகும்போது, காற்றுடனே வனந்திரங்கள் சுற் றம்போது கண்மணியே யெந்தனுக்கு களையுண்டாச்சு, நீற்றலுடன் காலாங்கியென்னைப்பார்த்து நீட்சியுடன்களைபோகநினைத்திட்டாரே.

நினைத்துமேவரிசிதனை கொண்டுவந்து நீதியுடன்காலாங்கி நாதர் தாமும், புனைப்புடனே சிலைதனிலரிசி கொட்டிப்புகழுடனேதோளா ந்திரமாகவல்லோ, சினைப்பதற்குவரிசிக்கு நாலுகொண்ட சிறப்பான யிடமதுவு மதிகம்விட்டு, பனைப்புடனேதான் முடிந்து வாற்றோரந் தான் பட்சமுடன் மணல்தனிலே பதிந்திட்டாரே. 65

பதிந்துமே முடிச்சியின்மேல் மணலைக்கொட்டி பாங்குபெறதீய தனை மேலேமூட்டி, அதிந்திமேயோர் சாமமெரித்தபோது வப்பனே யாற்றுநீர் கசிந்துமேதான், துதிந்துமேயரிசியதுவூறலாகி துய்யானி

ன்னிறம்போலே சாதமாச்சு, முதிந்துமே போகாமல் பதத்தெடுத்து முத்தமனே யெந்தனுக்குத் தந்தார்தானே. 66

தானுன காலாங்கிநாதர்தாமும் தணமையுடனெந்தமக்குகொடுத்தஜாலம், கோனுனகுருகொடுத்த ஜாலமப்பா கொற்றவனே யுந்தனுக்கு யானும்தந்தேன், பானுனபராபரியாள் கடாட்சத்தாலே பாலித்தேனுந்தமக்கு யிந்தப்போக்கு, தேனுனஜாலமது யிந்திரஜாலம் தேற்றமுட னுலகுதனில் செய்வாய்பாரே. 67

பாரப்பாவரிசியென்ற சாதமப்பா பண்புடனே கணடவர்கள்பிரமிப்பார்கள், நேரப்பா பாண்டமில்லா வித்தையப்பா நெடிதான தந்திரமாஞ் ஜாலவித்தை, ஆரப்பாசெய்வார்க ளிந்தபோக்கு வப்பனே யாமுமக்குச் சொன்னநீதி, சீரப்பாவுலகுதனில் சித்தனைப்போல்சிறப்புடனே தாமிருந்து யாடுவாயே. 68

ஆடையிலே வையகத்து மாண்பரெல்லா மப்பனேயிந்திரமாஞ் ஜாலமென்பார் கூடையிலே, வெகுபேர்கள் மாணபர்தானும் குறிப்புடனே யிச்சாலஞ்செய்து பார்ப்பார், தேடையிலேபாண்டமது சலமுமில்லா தேசத்தில் வித்தையிது சொகுசுமெத்த, நீடையிலேசபைகூடி செய்துபார்த்து நீதியுடனுந்தனையும் வணங்குவாரே. 69

வணங்கியேயேவல்களு மிகவுஞ்செய்து வஞ்சலிகள்மிகச்செய்து வன்பாயப்பா, இணங்கியே சோடசோபசாரஞ்செய்து யென்குருவே யென் சாமியென்பார்பாரு, மணங்கமழுந்தாமரையை வடிபணிந்து வையத்தி லெப்போதும் சதாநித்தந்தான், பணங்காசுமிகத்தந்து பலவாயீந்து பாலகனேயெப்போதும் போற்றுவாரே. 70

போற்றுவாருனைநித்தம் புணணியவானே பொங்கமுடன் சதாகாலம் பணிவார்பாரு,சாற்றலுடன் திரிகாலம்பூசைகொள்வார் சதாநித்தம் யேவல்களு மிகவேகொள்வார், ஆற்றலுடன் சித்தனைப்போல் நீயுமப்பா வப்பனே யெப்போது மகிமைபூண்டு, நீற்றலுடன் சிவயோகம் பூணடுமல்லோ நீதியுடநீயிருந்து கொண்டு நிலையங்காணே.

ஆட்டுக்கடா பண்ணினஜாலம்.

காணவே யின்னமொரு மார்க்கம்பாரு கருவானஜாலமப்பாவராகஜாலம், பூணவேகடாவொன்று வராகமொன்று பொங்கமுடன்கொண்டல்லோ செப்பக்கேளு, தோணவேசபைகூட்டி வேந்தர்முன்னே தோற்றமுடன் டோலியென்றமேளமப்பா, நாணவேடோலிக்குள் வராகந்தன்னை நாட்டமுடன் வாய்கட்டி யடைத்திடாயே. 72

அடைத்துமேபோலிருக்குமிருபக்கந்தான் அடவாக வாயிறுக்கிக்கட்டிப்போடு, படைமுகம்பார்த்திருக்க சீஷனென்று பாலகனை மனதிற்கு வுகந்தமாண்பன், தடைகூடிசீஷப்பா பாலகனுகசற்பனைகள்தெரிந்தவனைப் தேர்ந்தெடுத்து, விடைதனக்குவுகந்தவனையஞான மோதிவித்தகனை கழுத்தினிலேடோலிமாட்டே. 73

மாட்டியேடோலிதனை யடிக்கச்சொல்லிமன்னவர்கள் பார்த்திருக்க நீயுமப்பா, கூட்டமுடன்வாடதனை சபையோர்முன்னே குறிப்பாகக்கத்திகொண்டுவெட்டுவாய்நீ தேட்டமுடன்வாடதுதான்வராகமாகும் தெளிவாகவுதிரமது பூமிநிற்கும் நீட்டமுடன் வாடதுவும் ரூபமாறி நிலையான வராகமதுவாகும்பாரே. 74

பாரென்றுசொல்லியல்லோ பாலர்மெச்ச பாரினிலேதிரைகொண்டுமைந்தாநீயும், நேரேதான் டோலிதனையடித்துக்கொண்டுநிஷ்ங்கமாகவல்லோ சபையார்முன்னே, வேறேதான்விள்ளிருக்கும் வராகந்தன்னை விட்டல்லோவாடதனை யுள்ளேபோடு, நாரேதான்வாராலே யிறுக்கிக்கட்டி நலம்பெறவேதிரையதனையவிழ்த்திடாயே. 75

அவிழ்த்துமே சபையார்முன் வராகந்தன்னை யங்ஙனவேவிட்டு விடுபிரமிப்பார்கள், புவிதனிலேயிந்தவித்தை ஜாலவித்தை புகழான வித்தையிது காணப்போகா, துவிதமுள்ளஜாலமே தந்திரஜாலம்துப் புரவாய் காண்பதுவேமரிதேயாகும், குவிதமுள்ளடோலினது வித்தைதன்னைக் குவலயத்தில்காணார்கள்மட்டிமாடே. 76

மாடானவித்தையிது மகிமையப்பா மகிதலத்திலெவராலும் கூறப்போமோ, கூடானகூடுவித்தை பாயும்வித்தைக் கூறினேன்வையகத்தில் நீதவித்தை, தாடாண்மைகொண்ட தொருவராகவித்தை தாரணியில் யாரேனுஞ்செய்வாருண்டோ, பாடானதந்திரமாம்ஜாலப் போக்குபாலித்தேன் மாணுக்கள் பிழைக்கத்தானே 77

## ஆஞ்சநேயர் ஜாலம்.

தானான யின்னமொரு கருமானங்கேள் தன்மையுள்ள வாஞ்சநேயாபிடித்துவந்து, கோனான குருதனையே நினைந்துகொண்டுகொற்றவனே சிற்றுமணக்குவித்துகாணும், தேனானவித்தையதை யெடுத்துக்கொண்டு தேற்றமுடனசனத்தின் வழியதாக, மானானவயறு நிறைகொள்ளுமட்டுமக்கான கொட்டைதனை பொதிந்திடாயே. 78

பொதியவே குழிவெட்டிவாஞ்சநேயர்பொங்கமுடன்தான்போட்டுமண்ணைமூடி, விதியானமாற்கமதுபோலேயப்பா வித்தகனேநாள்

தோறும்ஜலத்தைவிட்டு, பதியானநாள்கடந்து பார்த்தாயானால்பால கனே செடியாகும்பண்பாய்கேளு, துதியுடனேகாயதுவும் காய்த்த பின்பு தூய்மையுடன்வித்ததனை யெடுத்திடாயே. 79

எடுத்துமேதயிலமது வாட்டியப்பா யெழிலானதயிலமதை பத னம்பண்ணு அடுத்துமே வழிஞ்சியின்றன் றயிலங்கூட்டி வப்பனே பரணிதனி லடைத்துநீதான், விடுத்துமேவிடுதியொன் றுமச்சியொன் றுவிரிவானமாளியதுவீட்டுக்குள்ளே தொடுத்ததொருவிளக்கதினில் றீபமேற்றி தோற்றமடாவுன் ரூபம்கிரங்குமாமே. 80

ஆமப்பாவெளி நின்றமாந்தற்கெல்லா மப்பனேதோற்றமடாகு ரங்குரூபம், போமப்பாவுள்ளின்று பேசும்போது பேரானரூபமது குரங்குபோலாம், நாமப்பாவெளிநின்று பேசினுக்கால்நாயகனே நீயு மொருமனிதனப்பா, தாமப்பாயிந்தபடி ஜாலஞ்செய்து தாரணியில் பிழைப்பதுவுமதிதமாமே. 81

அதிகமென்றவித்தையிது யார்தான்காண்பார் அன்பானபுததி யுள்ளானறிவான்பாரு, துதிதமுள்ளதருவினது ஜாலப்போககுதூய் மையுடன் காணுபவன்சித்தனப்பா, பதிதனிலேயிந்தவித்தைசெய்து மல்லோ, பாலகனே கீர்த்தியது கொண்டுமேதான், மதிமயங்கயெல்ல வருங்கண்டுயேங்க மானிலத்திலெப்போதும் துதிகொள்வாயே.

கொள்ளவே யின்னமொருமார்க்கம்பாருகூறுவேன்யெனதையர் காலாங்கிநாதர், உள்ளபடிகண்டதொருவதிசயங்க ளுத்தமனேயானு மது வெகுவாய்ச்சொல்வேன், வள்ளலுறைதென்னிலங்கைப் பதியி லப்பா தளமானவதிசயங்கள்கூறுவேன்யான், தெள்ளுமையான்து வாரத்திலிலங்கையப்பா தெளிவானபதிமகிமைகூறுவேன். 83

கூறுவேனிலங்கை பதிமார்க்கந்தன்னை கொற்றவனேபுலிப்பாணி மைந்தாகேளு, தேறுபுகழ்நவகண்டந்தன்னிலப்பா தேர்வேந்தராஜர் களின் கோட்டைதன்னில், வீறுபுகழிராவணனார் கோட்டையப்பா விண்ணுழி கோட்டையதுவிளம்பப்போமோ, மாறுபடாக்கோட்டை யதுவளம்பஞ்சொல்வேன் மகத்தானவதிசயங்கள் மெத்தவுண்டே.

இலங்கையழிவுகூறல்.

உண்டானதேசமதுயிலங்கையப்பா வுத்தமனேவெகுகோடிகால முன்னே, கண்டேனேகுளிகையது பூண்டுகொண்டு கண்கொள்ளாக் கோட்டையதுயானுங்கண்டேன், அண்டர்முனிராட்சதர்களிருக்குங் கோட்டைவரசனது ராவணனார்கோட்டையப்பா, சண்டமாருதம் போலக்கோட்டையுண்டுசாங்கமுடன்கற்கோட்டைகூறொண்ணாதே

ஒண்ணுதுதேசமது நூறுகாதமுத்தமனே காடுவன பூமியெல்லாம் அணுணூர்ந்து பார்க்கவொண்ணு கோட்டையப்பா வழகான கோபுரங்கள்மாபுரங்கள், கண்ணும்புபூமியது வையகந்தான் சுற்றிலும் சாகரமேவலைகள்மோதும், தணமையுடன் யெந்நாளும் வாடைக்காற்று சாங்கமுடனிருப்பதுவுங் கண்டிட்டேனே. 86

கண்டதொரு தேசமது யிலங்கைநாடு காசினியிலப்பதிபோலெங்குமில்லை, உணடானவதிசயங்கள் மெத்தவுண்டு வுலகத்திலெங்கேனுங் கண்டதுணடோ, திணடானகோட்டைக்கு வகழிமத்தி திறளானசாளரங்கவாசலுண்டு, தணடானவகழிக்குங்கடலுக்குந்தான் தாக்கானவழிதட்டு முணடேபாரே. 87

பாரப்பா சலமதுவும் போக்குவுண்டு பாங்கானகோட்டைக்குமகழிக்குந்தான், நேரப்பாசாகரமு வழியுமுணடு நிலையானயிலங்கைபதிகோட்டைதன்னில், ஆரப்பாவெகுகால மிப்படியேயுண்டு வப்பனேவோடமதுபோவதுணடு, கூரப்பா நெடுங்கால மிப்படியே யப்பா கூரானகோட்டையது யிருக்குந்தானே. 88

தானுனகோட்டையது வாசல்தன்னில் தார்வேந்தன் மன்னனது செங்கோல்தன்னில், தேனுனமனோன்மணியாள் ரூபம்போலதேர்வேந்தர் சபைமுன்னே தோற்றலாச்சு, மானுனவசரீரி வாக்குதானும் மன்னவர்முன் தன்செவிக்கு கேட்கலாச்சு, கோனுன வேந்தனுமே திடுக்கிட்டேங்கி கொற்றவனும் பயந்தல்லோ விழுந்திட்டாரே.

இட்டாரே தேர்வேந்தராசர்தாமு மெழிலானகோட்டைக்குள் மத்தியானம், பட்டதொருராசர்முன் மாண்பரெல்லாம் பயந்தொடுங்கி கண்கலக்கமிட்டபோது, அட்டதிசைத்தான்கலங்கி சாகரந்தான்வடியோடே யலையதுவுமேலேபொங்கி, சட்டமுடன் கோட்டைக்குள் சாகரந்தான் சடுதியிலே பொங்கியது முழுகலாச்சே

ஆச்சப்பா கோட்டையது முழுகலாச்சு வப்பனேராஜாதி படைகள்தாமும், போச்சப்பா கோட்டையது மண்மேடாச்சு பொங்கமுடன் மறுயுகத்தில் சாகரந்தான், பாச்சலுடன் பொங்கியல்லோமண்ணுதுங்கி பாங்குடனே நிலையாழிசாகரத்தில், வீச்சலுடன் கோபுரங்கள் மாபுரங்கள் விண்ணுழிக்குள்ளாக மறைந்துபோச்சே.

மறைந்துமேயிலங்கையது போனபின்பு மகத்தானகோட்டைக்குள்ளிருக்கும்வாசல், திறந்துமேகதவுகளும் கலசத்தோடு திரையழிக்கட லதனில்சிகரந்தானும், உறைந்ததொரு கோபுரத்தின் கலாச

மெல்லாம் வுற்றதொரு கறைவழியேகாணலாச்சு, இறையோடு ராவ ணனு மிலங்கைதன்னிற் றிட்டமுடனிருப்பரெனப்பேருண்டாச்சே.

பேருண்டாய் வையகத்தில் மாண்பரெல்லாம் பேருலகில் யெப் போது மிலங்கைதன்னை, சீருடனேபோற்றியது மிகவுஞ்செய்து சிற ப்புடனே யெந்நாளுந் துதியேசெய்து, பாருலகம்சீனகபதி யிருக்கு தென்று பாணமையுடன் வையகத்தோர் துதிப்பார்கண்டீர், தாருல கமழிந்து மல்லோ சேனையெல்லா தப்பாமல்கடவுள் பதிசேர்ந்தார் காணே. 93

அரிசிஜாலம்.

காணவே யின்னமொரு மாற்கம்பாரு கருவானஜாலமொன்று வரிசிஜாலம், தோணவேயரிசிதனை யெடுத்துக்கொண்டு தோற்றமுள் ளபடியொன்று பாத்திரந்தான், மாணவே படிநிறைய வரிசியிட்டு மன் னவனே கூரெழுத்தாணி கொண்டு, நீணவேகிட்டணைகள் செய்து மல்லோ நினவாக யெழுத்தாணி தன்னைவாங்கே. 94

வாங்கியேசபையோர் முன்னுயிரம்பேர் வளமாகத்தானழைத்து செப்பக்கேளு, ஏங்கியேயெல்லவரும் பார்த்தொடுங்க யெழிலான கூரெழுத்தாணிதன்னை, ஓங்கியே குத்தியல்லோ தூக்குவாய்நீவுத்த மனே யடியதுவுமேலேயாகும், தூங்கியேதிரியாதே மைந்தாகேளு துப்புரவாய்ஜாலமது செய்துகாட்டே. 95

காட்டையிலே யெழுத்தாணிதானுமப்பா கருவானவரிசிதனைப் பிடித்துக்கொண்டு, வாட்டமுடன் நிற்கின்றவண்மைதன்னை வையக த்தில் கண்டவர்கள் மயங்குவார்கள், கேட்டமுடனரிசிதனைக்கொட் டிகாட்டத்திறமுடனே கேட்பவர்க ளாமேயானல்,நீட்டமுடன்கொ ட்டியதைக் காட்டுவாய்நீ நிஜமென்று ஜாலமதை மெய்யன்பாரே

பாரேதான்லோகமெல்லாம் பிர்மித்தேங்கி பாலகனே யுனைக் கண்டு வஞ்சலிப்பார், சீரேதானுந்தமக்கு சிறப்புமுண்டு சிற்பரனைப் போலாக யென்னியல்லோ, நேரேதான் திரிகாலபூசையோடு நீதியுட னுபசாரணை மெத்தவுண்டு, வீரேதான்சதாகால முனைப்பணிந்துவிரு ப்பமுட னெப்போதும் துதிப்பார்தாமே. 97

கோழிமுட்டை புட்டிகளிலடைத்தல்.

துதியானயின்னமொரு ஜாலங்கேளு துப்புரவாய் கோழியென் றமுட்டைதானும், பதியானவாணமது மேலேயேற்றிப் பாங்குடனே காரமென்றகாடிதன்னில், விதியானமூன்றுநா ளூறப்போடு விருப்ப முடன் மூன்றுநாள்கழிந்தபின்பு, மதிபோன்றபூணிராங் கிளாசுபாத் திரம் மதிப்புடனே போட்டடைக்க விதிதான்கேளே. 98

கேளப்பா சின்னவாய்க்கொண்டபாத்திரம் கெடியானபாத்திர மாம்வாயினுள்ளே, பாளப்பாபோகாமல் முட்டைதன்னை பான்மை புடங்கையினூற்றள்ளமுட்டை,வீளப்பாதோல்போலவுள்ளேபோகும் விருப்பமுடன்மறுபடியும்பாண்டத்துள்ளே, நாளப்பாபோகாமல்ஜல த்தைவிட்டு நாயகனே யொருநாழிபொருத்திடாயே. 99

பொறுத்துமேஜலமதனை யிறத்துப்போடுபொன்னவனே யெப் போதும்போலேயப்பா, நிறுத்துமேமுட்டையதுகல்லுபோலாம்மீமக னே பாண்டத்துள்ளுருட்டிக்காட்டு, திருத்தமுடன் முட்டையது மகிமைவித்தை தீர்க்கமுடன் யாரேனுங் காணமாட்டார், பொருந்த முள்ளமுட்டையென்றவித்தைதானும் பொங்கமுடன் மாணுக்கன் பிழைக்கத்தானே, 100

பசுவுபால்கறக்காதிருக்க ஜாலம்.

தானனயின்னமொருஜாலமார்க்கம் தண்மையுடன்கூறுகிறேன் மைந்தாகேளு, தேனனமனோன்மணியாள்கிருபையாலேசெகதலத்தி லனேகவித்தைச்செப்பக்கேளு,கோனுநகாலாங்கிநாதர்தம்மால்குவல யத்தில் கோடியுகமிருந்துமேதான், பானுனவதிசயங்கள் மிகவும் சொல்லிப்பாலித்தாரெந்தனுக்கு கோடியாமே. 101

கோடியாப்பசுமாடு யிருக்குங்கூட்டம் கொற்றவனே நீசென்று மைந்தாபாரு, தேடியே கரும்புலியின் கொழுப்புதன்னைத்தீவிரமாம் கொண்டல்லோகாற்றுவாடை,நாடியேயோரிடமாய்வைத்துகொண்டு நலம்பெறவேகோனுனின்னருகேசென்று,பாடியேபால்கறக்கச்சொல் வாயப்பா பாலகனேமாடெல்லா மோடும்பாரே. 102

ஓடியேபால்கறக்கமாட்டாதப்பாவுத்தமனே சமுசாரியலைவான் பாரு, தேடியேமாடெல்லாம் பிடிப்பான்பாரு தேசத்தில்மாடெல்லா மோட்டங்காட்டி, நீடியேயவனிடத்தில்வாராதப்பாநிட்சயகாலாங்கி ஜாலமப்பா, கூடியேஜனங்களெல்லாம் கூட்டமிட்டுக் கொப்பனவே மயங்கியல்லோதியங்குவாரே. 103

தியங்கியேமாந்துநிற்கும்போது தீரமுடன்கோனுரின்பக்கல் வந்து, மயங்கியேதோர் கோனனைக்கண்டல்லோதான் மார்க்கமுடன் தானழைத்துமண்ணுகேளு, நயம்படவேயவன்றனக்கு குறிகள்சொ ல்ல நன்மையுடன் செம்பொன்னைக்கேட்பாயப்பா, செயம்பெறவே காளியிடசாபத்தாலேசெகதலத்தில்மாடெல்லாமோடலாச்சே. 104

ஆச்சப்பாசாபத்தைநிவர்த்திசெய்தவப்பனேகாளிபூசைசெய்ய வேண்டும், மூச்சடங்கிபோனதொருமாடெல்லாந்தா னுத்தமனே

மந்தைவந்துசேரும்பாரு, பாய்ச்சலுடன்வேங்கையிடகொழுப்புதன்னைபாலகனே நீ மறைவாய்வைத்துவிட்டு, கூச்சலுடன் பாவையாய் மந்தைமாட்டைக் கொப்பெனவேதானழைக்க வருகும்பாரே. 105

பாரப்பாமந்தையெல்லாஞ் சேர்ந்தபின்பு பரிவாகக்காளிக்குப் பூசைபோடு, நேரப்பா பூசையதுநேரும்போது செடிதானசன்னதங்கள்மிகவுங்கூறி, ஆரப்பாயடர்ந்தவனந்தனிலிருக்குமப்பனே கோனனேசொல்லக்கேளும், சீரப்பாயுந்தமக்குகுறைவுமில்லைசிறப்புடனே மாதமொரு பூசைசெய்யே 106

செய்யவேகாளிக்குகாணிக்கையப்பாசெப்பியதோருத்தாரப்படி தானப்பா, உய்யவே யெப்போதும் பூசைமாற்க முத்தமியே போடுகிறேனென்றுகூறி, பையவேகப்பணங்கள் கட்டியேதான் பான்மையுடன்காணிக்கைதருவேனென்று, வெய்யவேகற்பூரவாலாத்திக்கொண்டு விருப்பமுடன் போற்றியதுசெய்வாய்தாமே. 107

தாமானபூசைகொண்டகாளிதானும் தன்மையுடன்சந்நதங்கள் வந்தாற்போல, கோமானனும்மிடையன்முன்னெதிரேநின்றுகொற்றவனேகுறிசொல்லுங் காலந்தன்னில் சாமானமானதொருகுறிகளல்லோதாரணியிலிவர்போலுஞ்சித்துமுண்டோ, போமேதான்சகலசித்துங்கடந்தஞானி பொங்கமுடன்குறிசொல்லுஞ்சித்தென்பாரே.

என்பாரேகரும்புலியின்கொழுப்பின்மாற்கம்யெழிலானவித்தையிதுகூறப்போமோ, அன்பானதோழனவனிருக்கவேண்டுமவனுக்கே மர்மங்கள்கூறவேண்டும், பன்மையாய்பலபேர்கள் கூடுவார்கள்பார்க்கையிலே கர்மிகளுந்தர்மிகளுமுண்டு, நன்மையுடன் வெகுவார்த்தைபசியல்லோ நலம்பெறவேகருதனையே கேட்பார்காணே. 109

கானவேமர்மத்தைகூறவேண்டாம்காசினியில்மகிமைகள்மெத்தவுண்டு, பூணவேமர்மத்தைவெளிகாட்டாமல்பொங்கமுடன்ஜாலமதைசெய்துகொண்டு, நாணவேவையகத்தில்வித்தைசெய்துநன்மையுடன் பிழைப்பதுவேமெத்தநன்று, தோணவேயிப்பாகமைந்தாபாருந்தோற்றமுடனுந்தமக்கு வுரைத்ததாமே. 110

உரைத்தேனேபுலிப்பாணிமைந்தாபாருவுத்தமனேயின்னமொரு பாகஞ்சொல்வேன், கரைக்கின்றமருந்தினிட ஜாலமப்பாகண்கண்டவித்தையடாகமறப்போமொ, துரைத்தனத்தார் மெச்சுகின்ற ஜாலமப்பா துப்புரவாய் நானுரைப்பேன் துய்யபாலா, கரையானகுளங்கண்டுமடுவுகண்டு கட்டழகாஜாலமது செய்வாய்தானே. 111

தானனவித்ததுதான்பேன்கொட்டையப்பா தாக்கான ஜாதிய துபெருவித்தாக, மானனவித்ததுதான்கொண்டுவந்து மகத்தானவக் கினியில் வறுத்துப்போடு, தேனனவித்ததனை வறுத்தபின்பு, தெளி வாகப்பொடியம்மிதனிலரைத்து, கோனனகுருபதத்தை மனதிலெ ண்ணிகொற்றவனேயதிற்சேர்க்க வுகமைகேளே. 112

கேளேதான்புலிப்பாணிமைந்தாகேளு கெடியானபூசாக மன்னி த்தோடு, பாரேதான்போகாமல் கிளறிப்போடு பாங்காகக்கொதியிட் டுயெடுத்துக்கொண்டு, காளேதான்போகாமல் மத்தியானம் நலமான மடுவுதனில்மச்சங்கண்டு, ஆளேதானம்மருந்தை நீரிலேதானப்பனே கரைத்துவிடு மைந்தாபாரே. 113

பாரேதான்போதையென்ற மருந்தினாலே பாங்கான மச்சமெல் லாந்தியக்கங்கொண்டு, சேரேதான்கரையோரம்வந்துசேரும்செயலா னமருந்தினிடவேகத்தாலே, நேரேதான்சாலத்தைவிட்டு யெகிறிப் பாயும் நெடிதானமச்சமெல்லாங் கூறப்போமோ, வீரேதான்விஷமே றிமயக்கங்கொண்டு விடுபட்டுயேகுமல்லோ மச்சந்தானே. 114

தானனஜாலவித்தையதிதவித்தை தாரணியில்சூட்சமதை யறி யாமாண்பர், கோனனகாலாங்கிநாதர்வாக்கு குவலத்திற்பொய்யாது மெய்யேயாகும், தேனனஜாலவித்தைசெய்துமல்லோ தேசத்தில் பி ழைக்கவல்லோமாண்பருக்கு, யானனபராபரியாள் கிருபையாலேபா லித்தவித்தையது பாண்மையாமே. 115

பாண்மையாமிவ்வித்தை யறிந்துமைந்தா பாங்கான ராசரிடஞ் சென்றயானால், தேன்போன்றஜாலமதை மிகவாய்ச்சென்று தேற்ற முடனவர்மனதுங்களிப்புண்டானால், மேன்மையாமுந்தனுக்குவேண் டீவார்மேதினியிலுனைப்போலசித்தருண்டோ, பாண்மையுடன்சிவரா ஜயோகஞ்செய்து பாலிப்பாய்வெகுகோடிவித்தைதாமே. 116

வித்தையால்செகசாலவித்தையப்பா விருப்பமுட னுந்தனுக்கு வுபதேசித்தேன், சுத்தமுடன்ஞானோபதேசவித்தை சூட்சாதிசூட்ச மெல்லாந்திறந்துவிட்டேன், நித்தமுமேமதியமூர்த்தம் நிலையம்பூண்டு நீனிலத்தில்நீயுமொருசித்தனைப்போல், கத்தனையேயென்னாளுமனதி லுன்னி கைலாயபதிபோலவாழ்ந்திடாயே. 117

உடுக்கை யுடைக்கஜாலம்

வாழுவென்றுலின்னவொரு மாற்கம்பாரு வளமானவித்தையது கருதானப்பா, தாழவேபுலிப்பாணிமைந்தாகேளு தகமையுள்ளகண் மணியேபுகல்வேன்பாரு, வேழமையாய்தேவதைகள் கூட்டத்தோடு ம்வெகுமாண்ப ருடுக்கோசைத்தன்னிலேடும், சாழலெனும் யோசை யதுமுறிந்துபோகசட்டமுடன் யாமுரைப்போம் வளமைகாணே.

காணவேபேயோட்டு மந்திரவாதி கனமானபத்துபேர் மாண்பர் கூடி, தோணவேசிலம்பங்கள் பாடும்போது துப்புரவாய்க்கூச்சலுட ன்போரேவந்தால், வேணவேமர்மங்கள் மனதிற்கொண்டுவேட்கையு டன்வுடுக்கைதனைவுடைப்பதற்கு, நாணவேகெந்தகத்தின்திராவகத் தால் நலமாகக்குச்சிதன்னுற் கோடுபோடே. 119

போடேதானெதிருளிகாணுமற்றுன் போக்கான திராவகத்தை த்தீட்டும்போது, நீடவேசவ்வென்றசர்மந்தானும் நிட்களங்கமாகவல் லோவெந்துமேதான், கூடவேயிருக்குமந்தகாலந்தன்னில் கொப்பெ னவேயெதிராளிவந்துமல்லோ, சாடவேயுடுக்கைதனையடிக்குப்போது சட்டமுடனுடுக்கதுவுங் கிழியுந்தானே. 120

தானுனவுடுக்கையதுகிழியும்போது தாக்கானயெதிராளி மாண் பரெல்லாம், கோனுனசற்குருவைமனதிலெண்ணிகொப்பெனவேமக தேவாவனியாயந்தான், தேனுனவுடுக்கையது கழி கைமுன்னேதெளி வான ஓசையதுபாடிற்றல்லோ, மானுனமபேஷ்வரியே யென்னபாவ ம்மங்கையரேயெந்தனுக்குக் கூரென்றுரே. 121

பூசாலியின்பேரில் சன்னதம்வருதல்.

கூரென்றுசொல்லுகையில்பாலன்பேரில் கொப்பெனவேசன்ன தங்களேகியல்லோ, ஆரென்றுயெண்ணுதே யெந்தன்மீதிலப்பனேச க்கலாதேவியப்பா, ஊரென்றுயிந்தவூர்பதியுமல்ல வுத்தமனேவடகா சிவயோதியல்லோ, தேரென்றபதிதனிலே வீற்றிருக்கும் தேவியல் லோசக்கலாதேவியாச்சே, 122

ஆச்சென்றுசொல்லுகையில்பாலன்றுனும் வன்பானதோழரெ ல்லாம்மொன்றுய்க்கூடி, பேச்சொன்றும்பேசாமல் பின்னேடாமல்பி ரியமுடன்மனதுவந்து தேவியார்க்கு, கூச்சலுடன்குறைநீங்கி யெங் களுக்குக்கொம்பனேயேசெய்தகுற்றங் கூறுமம்மா, பாய்ச்சலுடன்ம லேயேறிப்பதியைத்தேடிப் பாங்குடனே போகவென்றுவரங் கேட் டாரே. 123

கேட்டதொருமாண்பருக்குத் தேவியாரும்கிருபையுடன்மனங் களித்துக்கூறும் வர்த்தை, நீட்டமுடன் யெதிராளிமந்திர தந்திரம் நேர்மையுடன் நீங்களல்லோவறியாமற்றுன்வாட்டமுடன்பகையாளி செய்தசூற்றம் வண்மையுடனறிவதற்குமனமிருந்தால் தாட்டிகமாய்ச் செம்பொன்னைத் தட்டில்வைத்து சடடமுடன் கேட்டாலே விதி சொல்வேனே. 124

விதியான வழியதுவுங்கூறும்போது விருப்பமுடன் மாண்பரெ ல்லாமொன்றாய்க்கூட்டி, மதிமயங்கிச்செம்பொன்னைதட்டில்வைத்து மார்க்கமுடன் காணிக்கையோர்வையென்ன, பதிகடந்துமாண்பருக்கு கருவின்மார்க்கம், பட்சமுடன் தாமுரைபற்றுபழியுந்தீர்த்து நீதி யனைத்தும் பெற்றல்லோ ஜாலதந்திரம் நீதியுடன் சித்தனைப்போல் செய்வாய்பாரே. 125

பாரேதான் கருவறிவான்புத்திவான்தான்பாரினிமேலமற்றவரோ காணப்போரார், நேமரதான்வுலகமதில்ஜாலதந்திரம்சேர்மையுடனிப் படியேசெய்வார்பாரு, மேசரேதான்கிட்டிருந்துநிதிகொடுத்தும்சேவை யுடன் தேவதைகள் மார்க்கங்கண்டு, கூரேதான் வையகததில்சாலஞ் சொய் கொப்பெனமேவ மாண்பரெல்லாம் பிழைப்பார்காணே.

இதுவும் வுடுக்கைவுடைக்க.

காணவேயின்னமொருமார்க்கம்பாரு கருவானபுலிப்பாணிமை ந்தாகேளு, தோணவேவுடுக்கைதனை வுடைப்பதற்கு துப்புறவாய்க் கருமானமொன்று சொல்வேன், நீணவேவீரமெனறகாடிகாரம்நீதியு டன்தானெடுத்து மைந்தாபாரு, வாணமென்ற வுடுக்கைதனைக்கையி லேநீதிவளமானகோடதுபோல் தீத்திடாயே. 127

தீத்துமே காடியென்றகாயந்தன்னால் தீரமுடன்கீறலது வூனும் போது, வேத்துமேசவ்வதுவு வெந்துமேதான் மேவதாந்தத் தாயினது வுடுக்கைதானும், ஆத்துமேவெந்துனைந்து யிருக்கும்பாரு, வப்பனே படுக்கைத்துமச்சந்தானும், கீத்தலுடன்கைதட்டியடிக்கும்போதுகீர் த்தியுடன் வுடுக்கையது உடையும்பாரே. 128

உடைந்ததொரு வுடுக்கையதுகாணும்போதுவுத்தமர்கள்மாண் பரெல்லாம் திடுக்கிட்டேங்கி, படைமுகந்தான்கலங்கி பொறிகலங்கி பாங்கான மாண்பரெல்லாம் மதிகெட்டேங்கி, கடையானமாந்திரீக தந்திரசாலம் கண்காணுவித்தையென்று கததுவார்கள், விடையான பாலரெல்லாம் மெய்யென்றெண்ணி விருப்பமுட னதிசயித்துநின்றி ட்டாரே. 129

பூசனிக்காய் சாலம்

நின்றேரேயின்னமொரு மாற்கம்பாரு நிலையான புலிப்பாணி மைந்தாகேளு, வென்றிடவே மாணுக்கர் பிழைப்பதற்கு விருப்பமு

டன்சாலமதுசொல்வேன்யானும், குன்றுனமலைக்கல்லு போலேயப்பா குழியானமண்பாண்டமொன் றுசெய்து, நன்றுனவாயதுவுங்கலசம்போலே நலமானசிறுவாயாய் செய்திடாயே. 130

செய்யவேபாண்டமது கலசந்தன்னில் செயலான வித்தையது யெல்லோர்காண, பையவேபூசினியாம் பிஞ்சுதன்னைபாங்குடனே மண்பாண்டந்தன்னிலிட்டு, மெய்யுடனேசின்னவாய்க் கொண்டபாண்டம்மெல்லெனவேபூசினிக்காய் வளர்ந்துமல்லோ,கொய்தபின்புதனையெடுத்துபாண்டந்தன்னைகொப்பெனவேரவிதனிலேவைக்கக்கேளே.

கேளேதான்பாண்டமது ரவியில்வைக்ககொடியான காயதுவும் பழுமையாகி, நாளேதான்முத்தினதோர்பழமுந்தானும்நலமானபாண்டமதிலுருளும்பாரு, சூளேதான்கலசமென்ற பாண்டந்தன்னைதுப்புறவாய்ப்பதனமது செய்துகொண்டு, ஆளேதான்தலைமீதில்குடத்தைதைவைத்து வன்புடனேசாலமது செய்வாய்தானே. 132

தானுனசபையேறி வேந்தர்முன்னே சட்டமுடன் மாணுக்கள் கூடிருக்க, கோனுனவேந்தர்களும்திடுக்கிட்டேங்க கொற்றவனேபாண்டமதைமுன்னிறக்கி, தேனுனபூசினிக்காய் வேறங்கான்று தேற்றமுடன்சபையோர்முன் கொண்டுவந்து, பானுனபராபரியை மனதிலெண்ணி பட்சமுடன்சாலமதுசெய்துகாட்டே. 133

காட்டவேதனக்குகந்தசீஷனுக கருவாகமர்மமதை யவனுக்கோதி, நீட்டமுடன்பாண்டமதையவன்கைதந்து நிறையவே சலமதனைக்கொடுவாவென்று, வாட்டமுடன்பாண்டமதில்சலமும்நிற்க வாகுடனேவலுவேந்தர்பார்த்திருக்க, நீட்டமுடன்மரமென்றடோலிதன்னைநினைவாகயவன்கழுத்தில் மாட்டிடாயே. 134

மாட்டியேதிரைவளைத்து மதியம்பூணமார்க்கமுடனெல்லவரும் பார்த்திருக்க, தாட்டிகவாய்ரவியதனி லிருந்துகொண்டு சட்டமுன் பூசினிக்காய்த்தனையெடுத்து, நீட்டமுடன்டோலியென்றகச்சைக்குள்ளேநினைவுடனேயாருமதுங் காணுமற்றுன், பூட்டகமாய்ப்பூசினிக்காய்தனையெடுத்து பொங்கமுடன்டோலிக்குள் பொதிவாய்மூடே.

மூடியேதிரைநீக்கிமைந்தாபாரு முனையானபூசினிக்காய் குடத்துள்மேளகி, ஓடியேகாயதுவும் பாண்டத்துள்ளே வுத்தமமேயிருக்கின்றவயணம்பாரு, சாடியேசலமதனை யகற்றிப்போடு சட்டமுடன் பாண்டமதைத்திறந்துகாட்ட, வாடியேகுடததுக்குள் காயைக்காட்டவண்மையுள்ள சாலமென்றுமயங்குவாரே. 136

மயங்குவார் குடத்துக்குள் பூசினிக்காய் மார்க்கமுடன்சென்ற தொருபதுமைகண்டு தியங்கியேசெகசாலயேந்திரசாலாம்தீர்க்கமுடங் மாந்தீரீகமிதற்கீடுண்டோ,நயப்படவேதாமுரைத்துமான்பரெல்லாம் நாதாந்தசித்தனென்று நடுங்குவார்கள், செயம்பெறவேவித்தையிது மதிகவித்தை செய்கிறதோர்வண்மைகண்டு பிரமிப்பாரே 137

பாரேதாளிவ்வண்ண தந்திரசாலம் பாரினிலேகருவாளியறிவான் பாரு,நேரேதான்சாலவகைசெய்துமல்லோநெடிதானபிர்ம்மலபிகடங் தொன்போலே, சேரேதான்மாணுக்கர் கோடிமுன்னேசெய்துமேதந் திரமாம் சாலம்போக்கில், நீரேதான்பணமதுவும்மிகவேவாங்கி நீதி யுடன்பிழைப்பதுவுந் தருமமாமே 138

தருமமாஞ்செகசாலதந்திரசாலம்தாரணியில் பிழைப்பதுவேநீதி யாகும், கருமமாமற்றொருகை தொழிலினாலேகாசினியில் வெகுபாவ மெய்தும்பாரு,மருமமதுயாருக்கும்வெளியிடாமல்மார்க்கமுடன்ஜீவ னத்தைச்செய்துகொண்டு, சொரூபமென்றஞானோபதேசந்தன்னை சுத்தமுடன்பெறுபவனேசித்தனாமே. 139

சித்தனாய்ப்பிறந்தாலும் தீர்மைவேண்டும் சீருலகில்பலபேர்கள் மதிப்பேவேண்டும், கத்தனுங்காலாங்கிபோலேகீர்த்தி காசினியிலவர் போலேபெறவேவேண்டும், நித்தமுமேமனோன்மணியாளருளேவேண் டும் நீங்காததவத்துறுதிகொள்ளவேண்டும், பத்தியுடன்சித்துமன முறுதிவேண்டும் பாரினிலேநீயுமொருநீதிவானே. 140

## கற்பூரவித்தை.

நீதியாயின்னமொரு மாற்கம்பாரு நிலையானகருமானமொன்று சொல்வேன், சோதியேசுடரானமதிவிளக்கேதோற்றமுடன்யாமுன க்குவுரைப்பேன்பாராய்,ஆதியாம்கர்ப்பூரமணிவிளக்கையப்பநேசால மென்ற மணிதான்சொல்வேன், சாதியினிலுயர்ந்ததொருபூரமப்பா தண்மையுள்ளபூரமது ஆலாத்தியாமே. 141

ஆமேதானாலாத்திகர்ப்பூரத்தையடைவுடனே தானெறிக்கவண் மைசொல்வேன், நாமேதான்சொன்னபடிமக்கமாளிநலமாநமாளிகை யில்நடுமையத்தில், போமேதான்குடவிளக்கு தன்னையப்பா பொங்க முடன் பத்தடியாந்தூரந்தன்னில், வேமேதான்வீண்போகா வண்ண மப்பா விருப்பமுடன்பதிதனையேவைக்கச்கேளே. 142

கேளப்பா புலிப்பாணிமைந்தாகேளுகிருபையுள்ள யெந்தனிரு கண்ணேயப்பா, பாளப்பாபோகாமல் புத்திமானே பாங்கானகால

மொந்றுசெய்வாயப்பாசீளப்பாபதிமுகத்திலிருந்துகொண்டுசீதியுடந் காந்தியதுபூசைமார்க்கம், வேளப்பாநோயாளிமுந்நதாகவேள்வியுடந் வோமமதுசெய்திடாயே. 143

செய்யவே நோயாளிபடிநிதானம் சேர்த்தியுடன் யாககுண்டம் வளர்த்தும்போது, பையவேபூசைமுகம்கர்ப்பூராத்தி பாங்குடனே சாலமதுசெய்யக்கேளு, துய்யநல்லதிமுறுகல்பாஷாணத்தை துப்புற வாம்சலமதனில்வைத்துக்கொண்டு, மெய்யுடனேசலமதனைக்கையிற் றேய்த்துமேன்மையுடன் பாஷாணம்பதனங்கொள்ளே. 144

கொள்ளவேதிமுறுகல்பாஷாணத்தை கொப்பெனவேவெண்ணீ றில்தான்கலந்து, விள்ளவே ஓம்நமசியென்றுஓதி மிக்கவேகர்பூரம் மேலிற்போடு, துள்ளவேசிஷனுக்குகூறம்வார்த்தைதுடியானகர்பூரம் விளக்கில்லாமல், அள்ளவேகுதிகொண்டு தீபம்போலே வாத்தாளே யெறியவென்றுவபயஞ்சொல்லே. 145

சொல்லவேகற்பூரம்விளக்கில்லாமல் துப்புறவாய்சோதியுடனெ ரியும்பாரு, வெல்லவேதீபமதுதூரநிற்கவேதாந்தத்தாயினதுகடாட் சத்தாலே, மெல்லவேயெறிந்தவண்ணந்தன்னைப்பார்த்துமேதினியில் மாந்தரெல்லாமெய்நடுங்கி,கொல்லவேவந்ததொருபூதந்தானுங்கொப் பெனவே கற்பூரமெறியலாச்சே. 146

ஆச்சப்பா சாலமென்றதந்திரவேதை வதரணங்கள் தன்னாலே யெறியலாச்சு, மூச்சொடுங்கிப்போ யிருந்தபூரந்தானும் முனையான கொழுந்துவிட்டுயெறியும்வண்ணம்,பாய்ச்சலுடன்மாண்பர்களுங்கண் டுமல்லோ பாங்குடனேயிது புதுமைகாலமென்பார், ஆச்சரியமான தொருவித்தைதானுமவனியிலே யாரறிவார்புத்திமானே. 147

திருவெண்ணீரில்லாமல்கேணியில் ஸ்நானஞ்செய்துசூரியனில்

நிற்கமேனியில்வெண்ணீர் கண்டது.

புத்தியுள்ளபுலிப்பாணிமைந்தாகேளுபுநிதமுடனுந்தமக்குயின் னஞ்சொல்வேன், சத்தியமாய்கருமானமின்னவென்று சட்டமுடன் யானுரைப்பேன்மைந்தாகேளு,வெற்றிபெறமாண்பர்களிலாயிரம்பேர் வேடிக்கைசிமிட்டுவித்தைவினோதம்பாரு,தத்துவமாய்சபையோர்கள் முன்னதாக சார்புடனே கரங்குவித்துநிற்பாய்பாரே. 148

பாரேதான்சபையோர்கள்பார்த்திருக்கபண்பாகக்கேணிதநிலிற ங்கிமுன்னே, நேரேதான் எரிகாலன்பாலேயப்பா நேர்மையுடன்கரந் தனிலேகுழப்பிக்கொண்டு, சீரேதான்மறவடமாய்நின்றுகொண்டுசிற ப்புடனேவெண்ணீர்போல்குழைத்துபோடு, நீரானபாதைவுமாண்ப ருக்கு நிறமானவெண்ணீர்போல்தோற்றுதன்ம்ற. 149

அன்றானவெண்ணீரைப்பூசிக்கொண்டு வன்பான கேணிதனில் வந்துநின்று, குன்றானபருவதம்போல்கோடிமாண்பர் கொற்றவர்கள் திருமுகத்தைத்தானும்பார்த்து, வென்றிடவேயேகாந்தி நிஷ்களம் போல்விருப்பமுடன்சலமதனில் மூழ்கியேதான், சென்றுமே சலத்தைவிட்டுக்கேணியேறி சிறப்புடனேசூரியனில் நிற்பாய்தானே.

தானானசலமதுவுங்காய்ந்தபின்பு சட்டமுடன் திருவெண்ணீர் காணலாகும், கோனானகுருபரனார்பூசைசெய்துகொற்றவனே தேவ தாண்தலத்தைவிட்டு, தேனானமனோன்மணியாள் பாதங்கண்ட தேவி தனைப்பூசைசெய்தபுனிதனென்பார், பானானபரஞ்சுடராய்மேனியெல்லாம் பாங்கானபட்டையது காணலாமே. 151

காணலாம்சிவயோக மாண்பன்போல கைலாயசித்தமுனி நீதானென்பார், பூணவேபிர்மலபிகடந்தசித்து புகழானகேணிதனிலிறங் குஞ்சித்து, தோணவேயெரிகாலன்தந்திரசாலம்தோற்றமுடன்காண் பதற்குப்பிரம்மையாகும், நீணவேசாலமாந்தந்திரபோக்கு நீதியுடன் செய்துமல்லோ பரிசுவாங்கே. 152

வாங்கப்பாராசரிடம்பரிசுவாங்கி வளமுடனே வையகத்தில்சித் தனைப்போல், தூங்கியேதிரியாதேதுய்யபாலாதுரைராசசுந்தரன்போல்போகஞ்செய்து, ஏங்கியேமாணபரெல்லாந்திடுக்கிட்டேங்க வெழிலானமாயவித்தைவெண்ணீர்வித்தை, சாங்கமுடன் செய்துமல்லோ தரணிமீதில்சட்டமுடன் காலாங்கிதன்னைப்போற்றே. 153

சங்கிலி சாலம்

போற்றியேயின்னமொரு கருமானங்கேள் புகழான காலாங்கி நாதர்தம்மால், தேற்றமுடன்யெந்தனுக்கு வுபதேசித்த தெளிவான சாலவித்தைமரக்காணந்தான், ஆற்றலுடன்மணத்தவளேநெய்யைவாங்கி வப்பனேவுடும்பினிடனெய்யுங்கூட்டி, சாற்றலுடன்விலாங்கின துயிணமுஞ்சேர்த்து சட்டமுடன்குழித்தயிலம் வாங்கிடாயே.

வாங்கியேதயிலமதை யிறக்கிக்கொண்டுவண்மையுடன்சீசாவிற் பதனம்பண்ணு, பாங்குடனேசிங்கமும் பாண்டஞ்செய்து பதனமுடன்மேல்வாயாங் தளவாய்போல, தேங்கவேபாண்டமதில் கரியைக் கொட்டி தேற்றமுடன் தீயதனைப்போட்டுமல்லோ, ஓங்கவேசிறுகழியாய்விறகுதன்னை ஒப்பமுடன் போட்டுமல்லோ யெறித்திடாயே.

எரிக்கையிலேகொழுந்ததுபோலெறியும்போது யெழிலானசங் கிலிபாம்பீரமப்பா, முறுக்கியதோர்சங்கிலியைத்தீயிற்போட்டுமுனை

யானதீயதனிற்காச்சிகொண்டு,பரிக்கியேயபல்பேர்கள்மாண்பர்பார்க்க பட்சமுடன்செய்யதனைக்கையிற்றேய்த்து, நெருக்கியே சங்கிலியை வுருவும்போது நெடிதானதீயதுவும்பற்றாதன்றே. 156

அன்றானசங்கிலியைப் பார்க்கும்போது அடலானதீபமதுசுடர் போல்தோற்றம், குன்றானமலைக்கல்லுகருங்கல்லப்பா கொப்பென வேயிதுபோலயெடுக்கலாகும், சென்றுமேரர்சரிடம்சாலஞ்செய்து சி றப்பானபரிசுமுதல் யாவும்பெற்று, வென்றிடவேசாலமதுதந்திரசா லம்வித்தைமுடன் செய்துமல்லோ பரிசுகொள்ளே. 157

கொள்ளவேவெகுதபர்கள் மெச்சும்பாலாகுவலயத்தில்நீயுமொ ருசித்தனைப்போல், எவ்வளவுங்குறையதுவும் நேராமற்றான்யெழிலா னவித்தையதுசெய்துமல்லோ, வுள்ளபடிசிவயோகம்ராசயோகம்வுத் தமனேசமாதிநிலை நின்றுகொண்டு, கள்ளமில்லாதேவரிடி தம்மைப் போலகாசினியில் வெகுகாலம் வாழ்குவீரே. 158

வாழ்க்கையிலேயுமைக்கண்டமாண்பரெல்லாம் வையகத்திலிவர் போலுஞ்சித்துமுண்டோ, தாழ்மையுடன்யுமைப்பணிவார் கோடிமா ண்பர்தாரணியிலுனக்கிடு வொருவருண்டோ, ஆழ்மையுள்ள மாண் பாலாபுத்திவானே வவனிதனில்சாலவித்தை செய்துகொண்டு, மேழ் மையுடன் பூலோகவாழ்க்கைதன்னில் மேதினியில்யெப்போதும்வா ழ்குவீரே. 159

பேயாட.

வாழவேயின்னமொருகருமானங்கேள் வண்மையுள்ள புலிப்பா ணிமைந்தாபாரு, தாழவேரெண்டகமாஞ்ஜாதியப்பா தாக்கானபூசா லிசெய்யுமார்க்கம், ஆழவேபேய்கொண்டமாண்பர்தம்மைவன்புடனே தாமழைத்து சபையோர்முன்னே, சாழவுடன்பேயாட்டங் கொள் ளுமார்க்கம் சட்டமுடன்தேவதைகள் வாவுதானே. 160

தானானபேய்கொண்டமாண்பருக்குதாக்கானகருவொன்றுசொ ல்வேன்பாரு, தேனானதேவிமனோன்மணியாள்பூசை தோற்றமுடன் தானமைத்துக்கும்பம்வைத்து, கோனானகுருபரனைத்தியானஞ்செய் துகொப்பனவேவுடுக்கோசைத்தனையெடுத்து, மானான மந்திரத்தை யுச்சரித்துமார்க்கமுடன் பேயாடவழிசொல்வேனே. 161

வழியானதேவதையைத்தானழைத்து வளமையுடன்செபதபங் கள்மிகவேயோதி, பழியானமுப்புலியுந் தான்கொடுத்து பான்மையு டன் ஓமமதுசெய்யும்போது, சுழிமாரிமயக்கமது வதிகங்கொண்டு சுடரொளியாந் தீபமுகம்பார்க்கும்போது, குழிபோன்றகண்ணிரண் டுமிருளுந்தோன்றி குப்புரவாய்லாடகவிபேசுவாரே. 162

பேசியகூந்தலதுவதிகமாகிபேராநமராட்டகமும்மிகவுங்கூறி, ஆசித்துப்பூசித்துக்கரங்குவித்து வப்பனேதேகமது நடுங்கலாகி, நாசிதனில்சுவாசமதுமிகவேயோங்கி நடுக்கமுடன்குறட்டையதுவதிகமாகி தூசிபடமேனியதுபிரண்டுமல்லோதுள்ளியபற்கடித்துயெழும்புவாரே

எழும்பியேவேதாளமார்க்கரித்து யெழிலானபிடாரபலிகொண்டபேய்போல், தழும்புபடாமேனியதுதழும்புமாகிதற்பரனுஞ்சொருபமதைக்கண்டாற்போல, தொழும்படவேதலைவிரித்துஆட்டங்கொண்டுதோற்றமுடன்வெகுபினத்திலதிகமாகி, அழுதுமே ஆயாசத்தியக்கமாகி வப்பனேகரங்குவித்து வாடும்பாரே. 164

பாரேதான் சின்மயத்தைக் கண்டாற்போல பட்சமுடன்வுதிரமதைவாயாற்கக்கி, நேரேதான்பூசைமுகந்தன்னைக்கண்டு நேர்மையுடன்யேர்வையதுயெனக்கொவ்வாது, சீரேதான்பிதுர்வனத்தைகத்துமாண்டிசிறப்பான ஓங்காரபேய்தானல்லொ, கூரேதான்பூசையதுமயானபூசைகொப்பெனவே யெந்தனுக்குதருவீர்தாமே 165

தாமானபேயாட்டங்கொண்டமாண்பர் தன்மையுடன் பூசைமுகம்யேர்வையில்லை, நாமானமாகவல்லொவேதமோதி நடுச்சாமபூசையதுசெய்வேனென்றும், வேமானலாடகவிமுனிதானென்றும் விட்டகுறையிருந்ததினாலிங்கே வந்தேன், சாமான்னியமானதொரு முனிதானல்ல தத்துவத்திற்பேர்கடந்த முனிதான்பாரே. 166

முனியானமுனியல்லோபிரம்மராட்சிமூதுலகைக்கடந்ததொரு ஞானசித்து, சனியானராட்சதனு மெனைத்தொடர்ந்து தாரணியில் கேணிதனில்விழுந்தபூதம், பனிபோன்றமலைவளத்தை சுற்றும்பூதம் பட்சமுடன் பிடாரிகளைவணங்கும்பூதம், தனியான தத்துவங்களதிகங்கொண்ட தயாபரியைபறவாதபூதமாமே. 167

பூதமாம் பேயாட்ட முப்பத்திரெண்டு பூதலத்தில் மிக்ககூறும் மதிதவித்தை, நீதமுடன்சற்பனையோடொபசாரம் நீதியுடன் நடப்பதுவுஞ்சிலதுபூதம், நீதமுடன் தலைவிரித்த லாட்டங்கொண்டு திகழானவார்த்தைகளும் மிகவேகூறும், கோதகமாய் மலையிலேறிப்போவேனென்றும்தோற்றமுடன் சிலபூதங்கூறுங்காணே. 168

காணவேயிந்திராதி சாலமப்பா கருவான கருவிகளும்மையினுும், கோணவேயட்சரத்தின்பீட்டகந்தான் சொல்லும் வில்லாலுங்

கரணத்தாலும், பூணவேகாஞ்சோரிப் பொடியினாலும் புகழானதிரு வெண்ணீர்கலப்பினாலும், ஆணவங்கள்தானொடுங்கிப் பேய்கள்தானும்வன்புடனேவாய்திறந்து கூறுந்தானே. 169

தானானபிரணவத்தையுச்சரித்து தன்மையுடனகஸ்தியனார் காண்டந்தன்னில், கோனானயென்பாட்டன்கும்பயோனிகுருசொன்ன காவியம்பன்னீராயிரந்தான், தேனானகாண்டமதுபனிரெண்டுக்குள்ளே திறமானமுதற்காண்டந் தன்னிலப்பா, மானான இலங்கைபதிவேந்தனுக்கு மகத்தானமையொன்றுகூறினாரே. 170

கூறியதோர்மையதனாலனேகசித்து குவலயத்திலாடலாம் பேய்தனக்கும், மீறியதோர்மையினாலஷ்டசித்துமேதினியில் வெகுகோடிமாண்பசப்பா, சீறியதோர்வேதாளம்பேயாட்டங்கள் சிறப்புடனேகருவென்றமையினாலே, வீறியதோர்கருமானந் தன்னைக்கொண்டு விட்டகுறைதனையகற்றி செய்வாய்பாரே. 171

செய்யவேமையினுடபெருமைதானும் சிறப்பான பூதலத்திலெவராலாகும், வெய்யவேவிட்டகுறையிருந்தவர்க்குமேதினியி லம்மைதான்பலிக்கும்பாரு, துய்யநல்லமையதுவுஞ்செய்வாரானால் துரைராசசுந்தரனைக்காணலாகும், மெய்யான மையினிடபோக்குதன்னை மேதினியில்காண்பவனே சித்தனாமே. 172

சித்தனாம்பூவுலகில்ரிஷிதானென்பார் சிறப்பானகருவிகரணாதியுள்ளோன், முத்தனாம்மூதுலகங்கடந்தஞானி முனையானபிரம்மலபிகடந்தோனென்பார், சத்தியத்தைதவறாதவேள்வியோனும் தரணிபதியுலகாளும்ராசனென்பார், நித்தியமும்பிராணநிலை கலையில்நின்று நிட்களங்கமானசட ரென்பார்தாமே. 173

சுடரானவையத்துசித்தனென்பார் சூட்சாதிசூட்சமதைக் கடந்தஞானி, அடலானமாண்பரெல்லாம்வணங்குஞ்ஞானி வவனிதனில்விட்டகுறையிருந்துதானால், திடமானஞானியென்றுபேர்வகுப்பான் தீர்க்கமுள்ளஜெகசாலமந்திரவாதி, மடலானதத்துவங்கள் தொண்ணூற்றாறும் மார்க்கமுடன்தானறிந்த மதியவானே. 174

மதியானமையினுடமார்க்கத்தாலே மகத்தானலோகமெல்லாம் வசியமாகும், கதியானமோட்சமென்றமாளிதானும் காணிக்கையெப்போதுங்கழரொண்ணாது, விதியானவிதியிருந்தால் மையின்போக்கு வீணிலேபோகாதுசதாகாலந்தான், துதியானயிலங்கைமன்னன்மையினாலே தொல்லுலகோர் யெப்போதுந் துதிப்பார்காணே. 175

இல்லரத்துப்பெண்கள் தேவதா பொய் மசக்கல்.

காணவேயின்னமொரு மார்க்கஞ்சொல்வேன்கருவாநபொய்மச க்கல்தலையாட்டந்தான், பூணவேகும்பமது கலசம்வைத்து பொங்க முடன் பேயாட்டங்கொள்ளும்போது, தோணவே லாகிரிகள்வஞ்து வாலும் தொல்லுலகில் மாதர்மேல் சன்னதங்கள், வேணபடி தன் மீதில்வந்தாப்போலும் வெகுபிறட்டல் தலைசுழட்டலதிகந்தானே.

தானுனதெய்வமதுவனேகங்கொண்டுதாக்காநசன்னதங்களதிக மாகி, கோனுனதன்புருஷன்றன்னைநோக்கி கொற்றவாயெந்தனுக்கு யேர்வையில்லை, மானுனமருத்துவங்களதிகங்கொண்டு மன்னவர்க்கு தெய்வமது கூறினாற்போல், பானுனகரங்குவித்து தலைமேற்கொண்டு பாலகனே பூசையில்லையென்பார்பாரே. 177

மாதுதெய்வத்தால் சமுசாரிமயங்கள்.

பாரேதான்கன்னியர்மேல்சன்னதங்கள் கைலாயவடிவேலந்தன் னைப்போல, நேரேதான் நிற்கிறவருரோ நீர்தான் நீதியுள்ளவாண் பிள்ளை நினைவாய்க்கேளீர், சீரேதானுந்தனிடமாளிதன்னில்சிறப்பான பூவாடைக்காரியப்பா, வேரேதான்கட்டுதற்குவாடையில்லை வித்தக னேமனங்கலங்கிநின்றாள்தானே 178

நிற்கவேபூவாடைக்காரிதானும் நிடகளங்கமாகவல்லோ வெகு காலந்தான், துற்கையென்றபிடாரியதுதானுமல்லோ துதியானகாட் டேரிசின்னுனப்பா, சொற்பமுவாராத கருப்பன்றானும் சுடரொளி யாஞ்சத்தகன்னிமாதுதானும்,கற்பமதை யுவிகொள்ளும்ரத்தமுன்டி கருவழிக்கும் மாடனதுநானுந்தானே. 179

நானுனதெய்வமடாபூவாடையப்பா கன்மையுடன் சித்தடிமேல் மையல்கொண்டு, கோனுனதேவதைகள்வாடைகட்டிகொப்பெனவே சன்னதங்களதிகங்கொண்டு,தேனுனநடுவீட்டுசெல்லியத்தாள்தெளி வானவங்காளபூபதிதானப்பா, மானுனயீஸ்வரியாளெல்லைக்காத்தாள் மகத்தான தெய்வமது வந்திட்டோமே. 180

வந்திட்டோமென்றல்லோ மையலாகி மகத்தானசன்னதங்கள் திகங்கொண்டு, குன்றுனபுருஷனையும் மிகவேநோக்கி குடிதனக்கு வனர்த்தங்கள் நேர்ந்ததென்று, இன்றுமேயெந்தனுக்கு யிந்தபூசை யெழிலானபூசையது யேர்வையில்லை, கன்றுதான்பூசையது பரியே கொண்டு காணிக்கைவைத்தாலேயேர்வையாமே. 181

ஏர்வையாம்வையகத்துப்பெண்களெல்லாம் யெழிலாநபுருஷனை யிந்தூஷணிப்பார், சேர்வையாம் சீனபதிப் பெண்களெல்லாம் சிறப்

புடனே புருஷனையும் போற்றுவார்கள், பார்வையாங் குளிகையது கொண்டுமல்லோ பாருலகம் யெழுகடலுஞ் சுத்திவந்தேன், நேர்மையாஞ்சீனபதிப்பெண்களுக்கு நெறிமுறைகள் தத்துவங்கள் மிகவுண்டாமே. 182

உண்டான தெய்வமது யாதுமில்லை வுத்தமனேகடவுளன்றி வேறொன்றில்லை, பாண்டான பொய்கொலைகள்களவுமில்லைபாங்கான கர்மமதுவொன்றேயுண்டு, திண்டானவிசுவாசயருளுமுண்டுதிறளாந பாவமதுயில்லையப்பா, கண்டேனே சைனபதிமார்க்கத்தோரைகாசினியில் காலாங்கிகடாட்சந்தானே. 183

தானானகாலாங்கிகடாட்சத்தாலும் தாக்கானமனோன்மணியாள் கிருபையாலும், மானானநாலுயுகங்கடந்துவந்தேன் மகத்தானவையகத்திலெல்லாருந்தான், கோனானசீனபதிப்பெண்கள்நீக்கி குவலயத்திலெல்லாருமிருந்தமார்க்கம், வேனானவெட்டவெளி மயக்கத்தாலே விருதாவாய் மாண்பரெலலாமயங்கினாரே. 184

பிரதமைநடக்க.

மயங்கவே யின்னமொருமார்க்கஞ்சொல்வேன் மகத்தானபுலிப்பாணி மைந்தாகேளு, தயங்கவே தந்திரமாஞ்ஜாலஞ்செய்வேன் தாக்கான மானிடர்கள் பிழைக்கவென்று, புயங்கமுடன்நோயாளிசாந்தியப்பாபுகழாநபிணிகொண்டமாண்பருக்கு,செயம்பெறவேசாந்தியது சொல்வேனப்பா செய்கின்றமார்க்கமதுயண்பாய்க்கேளே. 185

பண்பானநோய்கொண்டபிணியாளர்க்குப் பாகமது சொல்லுகிறேன்பாண்மையாக, திண்ணமுடன்மச்செந்றமாளியப்பாதிறமுடநே கிழக்குமுகமாகவல்லோ, நன்மையுடன்கொலுக்கூடமொந்றமைத்து நாதாந்தக்கூடமதுயேகவட்டம், வண்மையுடன்சோடசதூணிறுத்தி வாகுபெற சின்மயத்தின் பூசைசெய்யே. 186

செய்யவேமயானத்தின்பூசையப்பா செப்புகிறேன்வருமைமைந்தாகேளுகேளு, உய்யவேகும்பமென்றகலசமப்பாவுத்தமனே நடுமையுந்தன்னில்வைத்து, பையவே நவகோணவாசல்விட்டு வாகமுடன் கலசமென்றபாண்டமப்பா, மெய்யுடனே தானியமாமொன்பதாகும் மேன்மையுடன் கலசமதில் கீழேவையே. 187

கீழானகலசமதுதன்னிலப்பாகிருபையுடன்தாநியங்கள்வைத்தபின்பு, தாழானகுடுவைக்கு நூலைச்சுற்று தகமைபெறகுச்சதுதான்

நாலதாகும், தீதானசரணமதுவொன்றேயாகும் நீதியுடன்நடுமையம் தன்னில்வைத்து, சாழனைதேங்காயை வதின்மேலப்பா சட்டமுடன் வைத்தல்லோமஞ்சள்பூசே. 188

பூசியேகுங்குமமுந்தானணிந்து புகழானமாயிலையும்புட்பஞ்சாத்தி, ஆசியேஅவலுடனேகடலையப்பா வன்பாகமுக்கனியுங் கொண்டுபோற்று, வாசியென்றபிரணவத்தைமனதில்மாறி மகாதேவாயெந்தனையுங்காருமென்று, தேசியென்னும்பழமதுவேகிறியப்பா திக்கெட்டும்போட்டுமல்லோ செப்பக்கேளே. 189

செப்பவென்றால் வத்துமுதல் மதுபானங்கள்செம்மலுடன்பலகாரவர்க்கமெல்லாம், ஒப்பமுடன்றாமமைத்துபுண்ணியவானே ஓகோகோநாதாக்கள்செய்யும்வண்ணம், தப்பிதங்கள்நேராமல் மன்னுகேளு தண்மையுடன் சோடசமாம்பூசைமார்க்கம், செப்பமுடன்றானமைத்துநீதிவானே நிட்களங்கமாகவல்லோ நேமிப்பாயே. 190

நேமமுடன்செம்மறியின்தலைதானப்பா நேர்மையுடன் கொண்டுவந்துமைந்தாகேளு, தாமமுடன்கலசத்திற் கெதிரேவைத்துச் சட்டமுடன்வகண்டமது மேலேவைத்து, ஓமமுடன்யாகமதுசெய்வாயப்பாவுத்தமனேயாயிருந்தா னுநகான்போடு, சாமமது நடுச்சாமமேவேளையப்பாசாந்தியதுசெய்யும்வகை தண்மைபாறே. 191

பாரப்பாபரசாந்தியதுசெய்யும்போது பட்சமுடன் பிரமையது போவதற்கு, நேரப்பாநோயாளிதன்னிலப்பா நேர்மையுடன் கிரகமதுபோவதற்கு, சீரப்பாசடையதுவால் பொம்மையொன்று சிறப்புடனேதானமைத்துவுபாயங்கேளு, ஆரப்பாதானறிவார் வுபாயமார்க்கமப்பனேசொல்லுகிறே னன்பாய்த்தானே. 192

தானுனபிரதமைக்குவாடைபூண்டு சட்டமுடன் வாபரணமெல்லாம்பூண்டு, கோனுனலாகங்கிசொன்னவாக்குகொற்றவனே பிசகாமலாமைதன்னை, பானுனயாமையதுகொண்டுவந்து பாலகனே பிரதமையின்பாதத்தின்கீழ், தேனுனவுளுந்திணிடமாவைப்பா திண்மைபெறயாமையதுஒட்டிற்பூசே. 193

பூசியேபிரதமையின்பாதத்தின்கீழ் புகழாகயாமைதனை பொதிந்துபோடு, காசியென்றபட்டினால் பாதங்தொட்டு பாங்குபெறவுடுப்பதுவுபணிந்துமல்லோ, தூசிபடாபாதமது தெரியாமற்றான் துப்புரவாய்பிரதமையைச்சாய்த்துவைத்து, கூசிடாவண்ணமது யோமசாந்திகொற்றவனேசெய்துமல்லோ சொல்லக்கேளே. 194

சொல்லவென்றால்பிரதமைமை நோயாளிமுன்னேசுத்தமுடன் றனிறுத்திவைக்கும்போது, வெல்லவேவபிரதமைதான் சுத்தியல்லோ விருப்பமுடன்றன்வருகும்போதிலப்பா, கொல்லவேவந்தொரு கிரகமப்பாகொற்றவனே பிரதமையின்மேலேயப்பா, புல்லவேவமையல துபலியையேகொண்டு கோபாலாபோகுதடா வென்றுசெப்பே.

செப்பிடவேகிட்டிருந்தமாண்பரெல்லாம் செம்மலுடன் பிரத மைமையைக்கண்டபோது, ஒப்பிடவேசாந்தியினால் கிரகம்நீங்கிஓங்கார பலியதுவுங்கொண்டுதானும், செப்பிடவேகிரகமது போகுதென்று மேதினியில்யெல்லவருமயங்குவார்கள், தப்பிதங்களில்லாமல் பிணி யாளன்றன்சட்டமுடன் சுகமாவான் பாரீர்பாரே. 196

பாரப்பாபிணியாளன்சுகமுமாகி பான்மையுடன் பிரம்மையது நீங்கியல்லோ, சீரப்பாபிரதமையின்ஜாலத்தாலே சிறப்புடனே யெங் நாளும்பிணிகள்நீங்கி, வேரப்பாசாந்திபதுமகிமையாலும் வேதாந்தத் தாயினதுகிருபையாலும், ஆரப்பாபிரம்மையது நீங்கியல்லோவவனி தனில்சுகமாகவாழ்வார்தானே 197

தானனசடந்தனக்கு நோய்கள்வந்தால் தகமையுடன் மாண்ப ரெல்லாஞ்செய்யுமார்க்கம் கோனஈதன்தெய்வ குலதெய்வந்தான் கொப்பெனவே வம்மனென்றும்பிடாரியென்றும், பானன பலதெய் வகுற்றமென்றும்பாங்குபெற கப்பணங்கள்கட்டுவாகும்,மானனமுனி தேவர்முடங்கனென்றும் மகத்தானபலவிதமாம் வண்ணமாமே.

வண்ணமாமிப்படியே லோகமெல்லாம் வகுப்புடனே புத்திபது மாறலாகி, எண்ணமுடன் தன்னறிவுநிலைபுங்கெட்டு யெழிலானபதா ம்புயத்தைநினையாமற்றன், திண்ணமுடன்கடவுள்தனை மனதிலுன் னிதீர்க்கமுடன்யேகாந்தவுருவைவிட்டு, பண்ணிபலோர் கோலமதை பென்னசொல்வேன் பாருலகில்மாண்பருடன்மைதாமே. 199

போகர் புலிப்பாணிக்கு சாயாபுருஷ தரிசனங்

காண்பிப்பது.

தன்மைபாயின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் றன்மையுள்ள புலிப்பாணிமைந்தாகேளு, பன்மையாம்யெந்தனதுபாட்டனப்பாபா ங்கானகாலாங்கிநாதரையா, வன்மையாம்வருமையசீஷனையாவளமா னகாலாங்கிநாதர்தாமும், மின்மையாயெந்தனது குருநாதனையாமே ன்மையுடனெந்தனுக்கு வுரைத்தார்பாரே. 200

பாரேதான்யெந்தனுக்குச்சொன்னமார்க்கம் பாருலகில் யாவரு க்குஞ்சொன்னதில்லே, நேரேதான்வெகுகாலகோடியப்பா நேர்மை யுடன் காலாங்கிநாதர்தாமும், தீரேதான் குருபாதங்கார்த்திருந்து தீரமுடன்வாங்கினதோர் வித்தையப்பா, சீரேதானுந்தனுக்கு யானு மல்லோ சிறப்புடனேயோதிவைக்கும் வண்மைகேளே. 201

கேளப்பாவையகத்தில் நன்மைதுன்மைகீர்த்தியுடன்தானிருக் கும் வளமைதாமும், சூளப்பா தேகமது வழியா வண்ணம் சுந்த ரனேவெகுகாலமிருப்பதற்கும், நாளப்பா போகாமல் கற்பஞ்சொல் வேன் நளினமுடன் கற்பமது யென்னவென்றால், ஆளப்பாவாகாய கற்பமாகும் வப்பனேசொல்லுகிறேன் வரிசைபாரே. 202

வரியான புலிப்பாணிகண்ணேகேளு வாகுபெற வாகாயதெரி சனந்தான், துரிதமுடன்வையகத்திலிருப்பதற்குதுப்புரவாய்ச் சாத னங்களுரைப்பேன்கேளீர், சரியானபூமிதனில் மேடுபள்ளம் சட்ட முடனாராய்ந்து சரிதைகாண, பிரியமுடன் செங்கதிரோன் கிழக்கு திக்க பிசகாமல் மேற்குமுகந்தன்னைக்காணே. 203

ஆகாயத்தில் ரூபங்காணல்.

காணவேசாமமது ரெண்டுக்குள்ளே கருவானகாயாதி கற்பங் கொண்டு, கோணவே போசனங்களுண்டுமேதான் தோறாமல் பூமி தனில் நின்றுகொண்டு, நாணவேமுடிதனையேயசைக்காமற்றான் நன் மையுட னிருதரமுந்தொங்கவிட்டு, பூணவே தன்னிழலைக் கண்ணுற் கண்டு பொங்கமுடன் நன்மைதுன்மை யறிந்திடாயே. 204

அறியவே நுட்பமது யென்னசொல்வே னாகாகா நாதாக்கள் கண்டதில்லை, முறியவேநேத்திரங்கள் நிமைகொட்டாமல்முனையான தன் சிரசைத்தானும்பார்த்து, குறியுடனே வாகாயந்தன்னைநோக்கி கொற்றவனே பார்க்குமந்தசமயந்தன்னில், நெறியுடனே யுமைப் போல ரூபங்காணும் நேர்மையுடன் ரூபமதில் வினயங்கேளே. 205

வினயமது யென்னவென்றால் செப்பக்கேளீர் வேதாந்தக் காயி னதுசொரூபம்போல, நினவதுவுந்தவராமல்மைந்தாநீதான் நீதியுட னாகாயந்தன்னிற்றானும், கனவுகண்ட கதைபோலே சுடரானந்தங் கண்ணிற்குத் தோற்றுமப்பா கடினவேதை, பனையளவு வுயரமப்பா வுந்தன்ரூபம் பாரினிலேதானிருந்து காணலாமே. 206

காணவென்றால் சொரூபமது முறைமை சொல்வேன் கண்ணி ற்கு வாகாயந்தன்னிலப்பா, தோணவே சுடரொளிபோலுந்தன் ரூபந்தோற்றுமப்பா கண்ணிற்கு கூச்சங்காணும், சாணளவுரூபமது

கொண்டுமல்லோ சட்டமுடன் பனையளவாய்த்தோற்றும்பாரு, நீணவேமாயாதிரூபந்தானும் நிட்களங்கமாகவல்லோதோற்றும்பாரே.

பார்க்கையிலே சிரசதுவுந்தோன்றுவிட்டால் பாலகனேயொருதிங்கள் சாவான்பாரு, தீர்க்கமுடனிருகரமுங் காணுவிட்டால் தினமதுவும் மூன்றுதிங்கள் மறிப்பான்பாரு, சேர்க்கவே பார்பதனில் துவாரங்கண்டுசெங்கதிரோன் கண்ணிற்குத் தோற்றுமாகில், ஆற்றவேயறுதிங்கள் மரணமாவா னப்பனேசாயாவின் புருஷன்தானே.

தானான தரிசனங்கள் காணும்போது தகமையுள்ளசொரூபமதுகுறைவுகண்டால், கோனான காலாங்கிவாக்குபோலே கொற்றவனேமுடிவதற்குப் பிசகொன்றில்லை, தேனான மனோன்மணியாள் சொரூபம்போல தெளிவாக வுன்ரூபங்கண்டாயானால், பானான பாருலகில்வெகுகாலந்தான் பாலகனே யிருப்பதுவும் வுறுதியாமே. 209

உறுதியாம் பனிரெண்டுவாண்டுதானும்வுத்தமனே தரிசனைகள்காண்பாயானால், நிறுதியாய் வுன்ரூபங்கண்டரூபம் நிட்களங்கமாகவல்லோ பின்றொடர்ந்து, சுருதியுடன் கருவிகரணுதியோடு சுத்தமுடன் வுடலாவி கொண்டுமல்லோ, பரிதிவிட்டுயுந்தனிழல் கூடேநிற்கும்பாலகனே சாயாவின் வண்மைபாரே. 210

வண்மையாஞ் சொரூபநிலைப்பின்றொடர்ந்து வாகுடனே யுந்தனிடமூலாவும்பாரு, திண்மையாய்சயனங்கள்செய்யும்போது தீர்க்கமுடன் பூமிதனில் நடக்கும்போது, புண்மையாயுனுக்கார்த்திருக்கும்போதும் தகமையுடனொருவருடன் பேசும்போது, உண்மையா யுந்தனுக்கு வருங்காலத்தை வுத்தமனே யுந்தமக்குக் கூறும்பாரே. 211

கூறுமே நன்மையென்ற தீமையாவும் குறிப்புடனே யுந்தமக்குமுன்னேசொல்லும், மாறுபடாமேனியதுவாசிகூறும் ளமான தேகமது கற்றானுதும், வீறுடனேவையகத்தில் கோடிகாலம்வித்தகனேயிருப்பதுவும் நிட்சயந்தான், காறுமுடலழியாதுகோடிகாலம் நாணிலத்தி லிருப்பதுவுஞ்சமாதியாமே. 212

ஆமேதான் சாயாவின்றரிசனத்தை வப்பனேகண்டவர்க்கு யெல்லாஞ்சித்தி, தாமேதானட்டமாசித்தியாவுந்தாரணியிலடைவதற்குவையமில்லை, போமேதான் பனிரெண்டுவாண்டுமட்டும் பொங்கமுடன் கண்டவர்க்கே சித்தியாகும், வேமேதாண்காணுதமாண்பருக்குகுறையிருந்தாலும் வாய்க்காதன்றே. 213

அன்றான தரிசனத்தைக்கண்டமாண்பர் வவனியிலேதானுமொருசித்தனைப்போல், குன்றானமலைதனிலேயிருக்கலாகும்குவலயத்தில் நீயுமொருசித்தனைப்போல், வென்றிடவே தேவாதிரிஷிகள் தம்மை

விண்ணுலகில்காண்பதற்குயிடமுண்டாகும், தென்றிசையிலகத்திய ஞர் முனிவர்தானும் செப்பினுர்யிந்தமுறை சொன்னுர்பாரே. 214

பாரேதான்சரநூலாம் பஞ்சாட்சிபாரினிலே மாணுக்கர் பிழைக்கவென்று, நேரேதாள்சாத்திரத்தைப் பாடிவைத்தார் நீதியுடன் சாயாவின்தரிசனத்தை, சேரேதான் தரிசனத்தைக் காண்பதற்கு செம்மனுடன் வழிசொன்னுர் மைதானில்லே, கூரேதான்மையினது மார்க்கந்தன்னே கூறினேன் காலாங்கி கடாட்சந்தானே. 215

தானுனசித்துமுனி கும்பயோனி தாரணியில் கருவுதனேமறைத்துப்போட்டார், மானுனகாலாங்கியெந்தநாதர் மகாதேவர்கடாட்சமதுகிருபையாலே, தேனுன கருக்குருவையானுங்கற்று தெளிவாக மாணுக்கன் பிழைக்கவென்று; பானுனசாஸ்திரங்கள்யாவும்பார்த்து பாருலகில் பாலகர்க்குப் பாலித்தேனே. 216

சாயபுருஷ தெரிசனமை.

பாலிப்பேனின்னமொருமார்க்கங்கேளும் பாங்கானபுலிப்பாணி மைந்தாகேளு, நீலியென்ற கருங்காலிமூலிதானும் நீட்சியுடன்கண்ணனுடமூலிவேரும், சூலியென்ற நத்தையின் சூரியப்பாசூரியனுர் காந்தியதுமூலிவேரும், வேலியென்றபருத்தியப்பாயிருவேலிதானும் வேகமுள்ள கருப்புவூமத்தைவேரே. 217

வேரான சடையனதுமூலிதானும்வேகமுடன்பொன்னிஞமத்தைவேரும், தூரானமையூரின்சிகையுங்கூட்டி துப்புறவாய்த்தான் சுருக்கிப்பொடியதாக்கி, சேரானபொடிதனிலே வைங்கோலத்தைச் செப்பமுடன் தானுரைத்துசொல்லக்கேளு, கூரானபுழுகுரோசனேயுஞ்சேர்த்து குறிப்புடனேமைசேர்த்து வறைத்திடாயே. 218

சேர்த்துமேபேரண்டந்தன்னிலப்பா செம்மனுடன்மையதனேப் பிடித்துக்கொண்டு, கோர்த்துமேகுமரி யுடமையுங்கூட்டி கொற்றவனே தானரைத்து சிமிளில்வைத்து, பார்த்துமே நேத்திரமாம் புருவந்தன்னில் பாலகனே மைதீட்டி வாகாயத்தை, தீர்த்துமேபார்க்குகின்ற ஜாலந்தன்னில் திறமுடனே தரிசனமுந்தெரியுந்தானே. 219

தானுனசூரியனேமேகந்தானும்சட்டமுடன்மேகமதுமறைத்திட்டாலும், பானுனமேகமதுக்குள்ளிருக்கும் பாலகனே சூரியனுங்கண்

ணிற்ருேற்றும், மாஞனசந்திரனைக்காணும்போதுமகத்தான தரிசனை யுங் கண்ணிற்ருேற்றும், தேஞனதேசொளிவின்மயக்கத்தைப்போல ஜெகசோதி மின்னல்போல் தோற்றும்பாரே. 220

பாரேதான் மையினுல் மேகசாலம் பாங்குடனே தரிசனையுங் காணலாகும், நேரேதானிக்கருவை சித்தர்தானும் நெறிமுறைமை தானறிந்து கூருமற்ருன், சீரேதான்கருக்குருவைமறைத்துவிட்டுசீர் தப்பித் தெரிசனத்தைப் பாடிவைத்தார், ஆரோதானெனைப்போல சொன்ஞரப்பா வப்பனேவுண்மையது வுரைத்திட்டோமே. 221

உண்மையாய்ச் சாத்திரங்கள்கண்டாராய்ந்து உவமைரிடன்மா ஞுக்கன் பிழைக்கவென்று, திண்மையாய்க்காலாங்கி கிருபையாலே திறமுடனே யுந்தமக்கு வோதிவைத்தேன், வண்மையாய்நீயுமொரு சித்தனைப்போல் வளமுடனேயுலகு கனிலிருந்துகொண்டு, நன்மை யாய்நாதாக்கள் பாதம்போற்றி நாட்டமுடனெப்போதும் வாழ்வீர் காணே. 222

போகர்சீனபதிக்குப்போவது.

காணவேபோகரிடிநாதர்தாமும் கனமானகாலாங்கிநாதர்பாதம் பூணவே யவர்பாதந்தொட்டுமல்லோபுகழுடனேமதியமுர்தம் பூண்டு மல்லோ, தோணவே குளிகைதனைப் பூண்டுகொண்டு துப்புரவாய் சீனபதிக்கேகியல்லோ, நீணவேகாலாங்கிசமாதிபக்கல்நின்ருரேநெடு நேரம் நின்றிட்டாரே. 223

நின்றதொரு போகரிஷிவந்தசேதி நீதியுள்ளகாலாங்கி நாதரு க்கு, சொந்தமுடன் மஞேலயத்திலறிந்துகொண்டு தோற்றமுடன் போகரிஷிநாதருக்கு, அந்தமுடனசரீரிவாக்கினுலே யங்ஙனவேசப்த மது கேட்கலாச்சு, விந்தையுடன் சப்தமதைக் கேட்டபோது விரு ப்பமுடன் போகரிஷி வணங்கிட்டாரே. 224

வணங்கியதோர் போகரிஷி நாதர்தாமும் வாகான ஞாஞேப தேசங்கேட்டு, இணங்கியே சிரம்பணிந்து கைகுவித்துயெழிலான காலாங்கிநாதருக்கு, மணங்கமழும் வேதாந்ததாயாருக்கு மகிழ்ச்சி யுடன்யிருபாதந்தெண்டனிட்டு, சுணங்கமதுவாராமல்போகர்தாமும் துப்புரவாய் சீனபதிவந்திட்டாரே. 225

போகர் சீனபதிபெண்களுக்குச் சாயாபுருஷ

தெரிசனஞ்சொல்வது.

இட்டதொருபோகரிஷிநாதர்தாமுமெழிலானசீநபதிப்பெண்க ளுக்கு, சட்டமுடன்சாயாவின் றரிசனத்தைச்சாங்கமுடன்போதித்த

ர்போகர்தாமும், அட்டதிசைதான்புகழும் சாயாவின் றன்வன்பான தரிசனத்தைக்கூறும்போது, திட்டமுடன்மாதரெல்லாம் கண்டுமல் லோதிறமுடனேமனதுவந்து களிப்புற்ருரே. 2 6

களிப்பானதரிசனத்தைப்பெண்களெல்லாம் கருத்துடனேபார் த்தல்லோசந்தோஷித்து, தளிர்போன்றகரமதனைக் கண்ணிலொத்தி சார்புடனேசாயாவின் றரிசனத்தை, பளிங்குடனே யெங்களுக்கு போதித்தாலேபாங்குடனே தரிசித்துமனங்களித்து, அளியாமலெங் களதுகாயந்தன்னை வவனியிலேதாளிருக்கச்செய்வோம்பாரே.

பாரேதான்காயாதிகற்பங்கொண்டு பாங்குபெறயெந்நாளும்பா ரின்மீது, சீரேதான்தாமிருந்து யோகசாதம் சிறப்புடனே கண்டல் லோநாங்களுந்தான், நேரேதான் பனிரண்டுவாண்டுமட்டும் நேர்புட னேசாதனைகள் மிகவுஞ்செய்து, வீரேதான்விண்ணுலகுவதிசயத்தை விருப்பமுடன் காண்பமென்று வினவிட்டாரே. 228

இட்டதொருபெண்களுக்கு போகர்தாமும்யெழிலானவித்தை யென்றசாதனத்தை, தொட்டகுறிபோலல்லோ காண்பித்தேதான் தேறுமலெப்போதும்காண்பதற்கு, பட்டதொருகுறிபோலதரிசனத் தைப்பாங்குபெறப் போதித்துப்பெண்களுக்கு, சட்டமுடன் குளி கையதுகொண்டுமல்லோ சாங்கமுடன்மறுபடியும் வந்திட்டாரே.

வந்தாரேமேருவுக்குதெற்கேயப்பா வளமுடனேநர்மதாநதிக்கு ப்பின்னல், அந்தமுடன்போகரிஷி நாதர்தாமுமன்பாககுளிகையது பூண்டுக்கொண்டு, நிந்தனைகளில்லாமல் ரிடியார்தாமும் நீதியுடன்வே டிக்கை சிமிட்டுவித்தை, சொந்தமுடன்செய்தல்லோ மாண்பருக்கு சூட்சாதிசூட்சமெல்லாங் காண்பித்தாரே. 230

பானையுடைக்க தண்ணீர்நிற்க.

காண்பித்தார்மாண்பருக்குவினோதவித்தைக் களிப்புறவேபோக ரிடிநாதர்தாமும், ஆண்பிள்ளைபுலிப்பாணியெந்தன்பாலாவப்பனேயு ந்தனுக்கு வினோதஜாலம், நண்பானபானையது பாண்டமப்பா நவில லேயானுரைப்பேன் மைந்தாகேளு, சாண்பானதவளமதுகலசம்போ ல சட்டமுடன்செய்துமல்லோ செப்பக்கேளே. 231

செப்பவென்றால்நாவில்லைபாவுமில்லை கெஜதலத்தில் நாதாக்கள் சொன்னதில்லை, ஒப்பமுடன்பாண்டமதுசெய்துமல்லோ ஒளிவான

நறுவளியமேபழத்தையப்பா, இப்புவியில் மாண்பர்களுக் கறியாமற் ருன்யெழிலானபழமதுவைப் பாண்டத்துள்ளே, அப்பியே பூசியல் லோகாயப்போடு அங்ஙனவேசெய்யுமுறை வறையக்கேளே.

கேளப்பாசலவதனைபாண்டமிட்டு செப்புகிறேன் கட்டுயென்ற கொடிதானப்பா, பாளப்பாபோகாமல் யெனையுங்கூட்டிப் பாங்குபெறசார்பிழிந்துசலத்தினுள்ளே, நாளப்பாபோகாமலப்போதேதான்நலம்பெறவேசார்பிழிந்துசீனிபோட்டு, ஆலேதான்யெல்லவரும்பார்த்திருக்கவப்பனே பாண்டமதைவுடைத்திடாயே. 233

உடைக்கவேசலமதுதான்யீறல்போல வுத்தமனேயிறிகியல்லோவெண்ணைபோலாம், படைசேர்ந்தகொலுமுகத்தி லிந்தஜாலம்பாலகனேசெய்துமல்லோவெண்ணையீவாய், தடையறவேமாண்பரெல்லாங் கண்டுயேங்கி தகமையுடன் பொசித்தல்லோ யுன்னைமெச்சி, சடைபோன்றதம்பிரான்மருத்துவந்தான் தாரணியிலிவர்போலுமில்லையென்பாரே. 234

என்னவேவேணதொரு பொருளுமீவார் யெழிலான மாந்திரீகரென்றுமல்லோ, துன்னவேயுந்தனுக்குச்சோடசாரம் தோருமல்செய்தல்லோதனமுமீவார், நன்னயமாம்வேதாந்தசித்துயென்று நாட்டினிலேயுந்தமக்குப்பேருண்டாகும், பன்னவேபலபேரும் போற்றுவார்கள்பாலகனேநீயுமொரு சித்தனுமே 253

கள்ளச் சைவம்.

சித்தனுமின்னமொருமாற்கஞ்சொல்வோம் சிறப்புள்ளபுலிப்பாணிமைந்தாகேளு, பக்தியுடன்குளிகையதுபூணடுமல்லோ பார்லோகம்சத்தகடல் சுத்திவந்தேன், முத்திபெறமாண்பரெல்லாங்கோடிகோடி முயன்றுமே காவிகாஷாயத்தோடும், நித்தமுமேசெபதபங்களதிகமுண்டு நீநிலத்தில்வெகுபேர்கள் கோடியாமே. 236

கோடியாம்சாதியிலேயனந்தஞ்சாதி கொற்றவனே பதினெட்டு சாதியுண்டு, பேடிகளுஞ்சூரர்களுமெத்தவுண்டு போரானபதிதனிலேலக்கோயில்லை, தேடியேபலதேசங்கண்டாருய்ந்தேன் தேசத்தில்சைவமதுகாணவில்லை, நீடிரேவெகுமாண்பர்தேசமெல்லாம் நிலையானசைவமென்று சொல்வார்பாரே. 237

சொல்லுவதுவாக்கியத்தைக்கேட்டதுண்டு சொற்பமுள்ள சைவர்களைக்கண்டதில்லை, பல்லவேயிறைச்சிவகை புசிப்போமென்றும் புலால்வகைகள் புசிப்பதில்லையென்றுகூறி, வெல்லவேமதாச்சார பேதாபேதம் வெகுசாகப்பினத்தியல்லோ திரிவார்பாரு,கொல்லவே நித்தியமும் புலாலைத்தின்றுகூசாமல் சைவமென்றுகூறுவாரே.

கூறுவார்பலபேத சாதிதன்னில் குறிப்புடனே பிரமமென்றசாதியப்பா, மாறுதலாம்சைவத்தைக்கூறிபல்லோ மருத்துவங்க ளாகமங்கள்மிகவுஞ்சொல்லி, தாறுமாறாகவல்லோ வேதங்கள்கூறி தாரணியில்வெகுமாண்பர்பிழைப்பாரப்பா, ஆறுதலம்கரைகண்டயோகநிஷ்டைவப்பனேசெய்வார்கள் மட்டிமாடே. 239

மாடானமாடல்லோ மாண்பரப்பா வையகத்தில் ஜாதிகெட்ட சைவரப்பா, கோடானகோடிபேர்சைவமென்று கூறியதோர் மொழியதனைக்காதிற்கேட்டேன், தாடானமாமிஷத்தைத்தின்பார்பாதி சட்டமுடன்நெய்யதனைக்குடிப்பார்பாதி, நீடானதயிர்பாலில் சைவமுண்டோநிட்சயமாய் சைவமென்று நப்புவாரே. 240

நம்பவென்றால்சைவங்களில்லையப்பா நாதாந்தகித்துகளுஞ்சொல்லவில்லை, வம்பென்றுமறைத்துவைத்தார் சைவந்தன்னை வளமுடனேபுலால்தின்னாரெவருமில்லை, வெம்மியதோரோகமென்ற செம்மறிதானப்பா விருப்பமுடன்பொசிக்கின்றார் சூத்திரருமப்பா, தம்பியுடன்பிரமகுலச்சத்திரியர்தாமும் துகளகற்றிநெய்மோரைக்குடிப்பார்தாமே. 241

குடிப்பாரேபால்தயிர்கள் நெய்குடிப்பார்குற்றமென்றுயிறைச்சிதனைநீக்கிவிட்டார், நடிப்புடனேசைவமென்று சொல்லலாமோநாதாக்கள்கைமறைப்பாய்காட்டவில்லை, துடிப்புடனேமற்றதோர்ஜாதியெல்லாம் துப்புரவாய்புலால்வகைகள் மிகவுந்திண்பார்,அடிப்படைதான்மாமிஷங்களென்னலாகு மப்பனேமேல்மிதக்கும் நெய்யுமாமே.

நெய்யானவகைகளெல்லாங்கொஞ்சமல்ல நிட்சயமாய்சேருக்குவெட்டிலொன்று, துய்யதொருமாமிங்கள்தின்போன்சைவன் துப்புரவாய்நெய்தின்போன்சைவனல்ல, வெய்யதொரு மாமிஷத்தில்நெய்யேயில்லை, விருப்பமுடன்ரத்தமது சுண்டியல்லோ பையவேபாலாகிவந்தநெய்தான் பாலகனேயிறைச்சிக்குவதிகமாமே. 243

அதிகமாம்காய்கரிகள் புழுவேயுண்டு வப்பனே யெலவகையில் புழுவுமுண்டு, கதிதமுடன் தண்ணீரிற்புழுவுமுண்டுகண்காணுயெச்ச

லதுமலமுமுண்டு, துதிதமுடன்சுத்தமது யெதிலேயுண்டு சுகமுண் டோசைவத்திலதிசமுண்டோ, பதிதமுடன்பொய்ச்சைவமல்லாலப் பாபாரினிலேமெய்ச்சைவ முண்டோபாரே. 244

பாரப்பாயின்னம்வெகு விநோதமப்பா பாரினிலே மாணுக்கர் செய்யுமாற்கம், ஆரப்பாகற்பகத்தருவின்மூலம் வப்பனையார்தின்ற யெச்சலப்பா, சீரப்பாமாண்ய ரெல்லாமாதாரந்தான் சிறப்புடையகி ழங்கென்றுபொசித்தாரப்பா, நேரப்பா பலபேரும்பொசித்த மூலம் நினைவழிந்துநின்றுமல்லோ கெட்டார்மாண்பர். 245

கெட்டாரேயிப்படியேவையகத்தோர் கேடழிந்து சீரழிந்துசை வங்கெட்டு, இட்டபடிபிறவியென்றசைவமாக யெழிலுடனேமாண்ப ரெல்லாம்நம்புறுர்கள், தொட்டதொருபொருளெல்லாம்சைவமில்லை தோராமல் மாண்பரெல்லாம் புலாலேதின்பேபார், சட்டமுடன் யெந் தன்குருகாலாங்கிநாதர் சாங்கமுடனெந்தனுக்கு வுரைத்த நூலே.

நூலான நூலுக்குள்ளதிதங்காணும் நுட்பமென்றபொருளெல் லாமிதிலேதோயும், காலானகாலாங்கி சொன்னவாக்கு காசினியில் பொய்யாதுமெய்யேபாகும், மாலானமாண்பரெல்லாம் சிற்றின்பத்தி ல்மதிகெட்டு தேவதாமங்கையோடு, கோலானலீலையது மிகவுமாடிகு வலயத்தில்யெல்லில்தனை விரும்பினரே. 247

விரும்பியேகலவிதனிலிருவரெச்சை மெய்யுடலாவிபொரு ளெ ல்லாந்தந்து, சுரும்பியளகைப்பொருள்கள்யாவுந்தந்துசுந்தரமேமோ ட்சமிதுயோனியென்று, கரும்புடனே மூத்திரக்குழியையப்பா கை லாசமேருகிறியென்றுநம்பி, துரும்பாகப்போனவர்கள் கோடாகோ டிதூங்கியேமாண்டவர்கள் கோடியாமே. 248

கோடியாம்ரிஷிதேவர் முதலாயுள்ளோர் குவலயத்தில் மாண்ட வர்கள்கணக்கோயில்லை, தேடியேமாயவலைசிக்கியல்லோதேசத்தில்கெ ட்டவர்களதிகமாண்பர், நீடியேவையகததிலிருந்தோரில்லைநிட்சயமா ய்காலாங்கிசொன்னநீதி, வாடியேபோகரிஷிபடியேனப்பா வன்புட னேதாமுரைத்தநீதிதானே. 249

தானனநீதியதுயாருக்கென்றால்தாரணியில்சீனபதியுலகத்தோா ர்கள், மானனவாக்கியத்தைமெய்யென்றெண்ணி மகவதிலும் பதின் மடங்குவதிகமாக, கோனனகாலாங்கிநாதர்சொல்லை கொப்பெனவே மெய்யென்று நம்பியல்லோ, வேனனவொழுக்கமாசாரத்தோடும் மே தினியில்நடப்பதுவுமுண்மையாமே. 250

சீனபதியாருக்குச்சைவமில்லை.

உண்மையாஞ்சீனபதிதேசத்தோர்க்குஓகோகோசைவங்களில்லை யப்பா, கண்மையாய்மாமிஷங்கள் புலால்தானும் கபடன்றிபுசிப்பது நீதியாகும், வண்மையுடன் செபதபங்கள் குளிபனுண்டு வளமான நேமநிஷ்டை யனேகமுண்டு, திண்மையாம் மாமிஷப்பிலாதிவர்க்கம் திகழுடனே திண்பார்கள் சைவந்தானே 251

சைவமென்பார பேதா பதங்களில்லை சாதுரிய பதார்த்தவகை பொசித்திட்டாலும், கைதவங்கள்பிசகாதசுழிகள்போலும் கைலாய நாதரைப்போல்தவமுஞ்செய்வார், மைவனங்கள்மெத்தவுண்டுசீனத் தார்க்கு மகாவிஷ்ணுகிருஷ்ணவதாரமென்பார், வெப்தவம் பூண்டா லுஞ் சீனத்தார்கள் விருப்பமுடன் சைவமதுயில்லைதானே. 252

போகர்சீனபதிதேசத்தாருக்கு சாஸ்திரமில்லையென்றுகூறல்.

தானை புலிப்பாணி மைந்தாகேளு தகமையுடனின்னமொரு மார்க்கஞ்சொல்லுவன், கோனையெநதையர்காலாங்கிநாதர்கொற்றவ னார் பாதமது கடாட்சத்தாலே, தேனைதேசமெல்லாங் குளிகை கொண்டுதெளிவுடனே யெழுகடலுஞ்சுத்திவந்தேன், மானைமாண் பரிடசைகைகண்டேன் மகத்தானசாஸ்திரங்கள்மெத்தவுண்டே.

உண்டானலோகபதி மாண்பரெல்லாம் ஓகோகோ நாதாக்கள் சொன்னவாக்கு, கண்டல்லோசாஸ்திரங்களதிகம்பார்த்துகாசினியில் தத்துவத்தில்மிகுந்தோர்போல, மிண்டான வார்த்தைகளும் மிகவுங் கூறி மேதினியில்கரைகண்ட வித்துவான்போல், அண்டர்முனி முத லானோர்கண்டுயேங்க வவனியிலே சித்தனைப்போல் பேசுவாரே. 254

பேசியேவெகுகோடி மாண்பரெல்லாம் பினத்தினர் சாஸ்திரத் தின்குப்பல்தன்னை, பூசிதங்கள் கொண்டல்லோ பகட்டுகாட்டி புக ழுடனே சாஸ்திரத்தை மெய்போற்சொல்லி, ஊசிதமாந் தத்துவங் கள்தியாகமார்க்கம்உறுதியுடன்நாதாக்கள்சொன்னதில்லை, வாசித்து நால்வேதமாறுசாஸ்திரம்வகையுடனேகதைகட்டிவுரைத்திட்டாரே.

உரைத்திட்டகதையெல்லாம்பொய்யேயாகும் வுத்தமனேசாஸ் திரங்களதர்வணந்தான், கரைத்திட்டமாகவல்லோமாண்பருக்குகாசி நியில்தாமுரைத்தார்சாஸ்திரங்கள், நிறைத்திட்டமாகவல்லோயானு ஞ்சென்றுநீடாழியுலகுபதிசுத்திவந்தேந், வரைக்கமலம்வீற்றிருக்குந் தாயார்பாதம் வளமையுடனென்னாளும் பதங்கண்டேனே. 256

பதமானபதுமதுவுஞ் சாஸ்திரங்கள் பாங்குடனே மேதினியில் கண்டேன்யானும, மிதமுடனே தர்க்கங்கள்யாகமங்கள் மேதினியில் வெகுபேர்கள்சொல்வாரப்பா, நிதமுடனேசாஸ்திரத்தின்தொகுப்பை யெல்லாம்நீதியுடன் மெய்போலேபேசுவார்பார், சதகோடிசாஸ்திரங் கள்கூறிட்டாலும் சட்டமுடன் சீனபதிக் கிணையாகாரே. 257

இணையான தென்காசிபதியிலப்பா யெழிலானதேசமதுவனேக முண்டு, சணமதிலேகுளிகையதுபூண்டுகொண்டுதாரணியில்சதகோடி தூரமட்டும், கணமதுவும்நில்லாமலடியேன்றானுங்காசிபதிமாண்பரெல் லாங்கண்டுவந்தேன், பிணமதுவுமடிந்தாக்கால்சாஸ்திரங்கள்பேரான சாங்கியங்கள் மெத்தவுண்டே. 258

உண்டானசமுசாரிகோடிமாண்பர் வுத்தமர்கள்வேதாந்திகடந்த ஞானி, செண்டானமுறைமைகெட்டு மையல்கொண்டுஜெகந்தனிலே மடிந்தவர்கள்கோடாகோடி, அண்டமுடனுகாயந்தன்னளவ்வாயகில மெல்லாங் கொடிகட்டி வாழ்ந்தார்கோடி, புண்டரீக கிருஷ்ணவதார னைப்போல் புகழான கீர்த்தியுடன்மடிந்தோர் தாமே 259

மடிந்தோர்மாணுக்கள்மானிலத்தில் மகதேவர்பாதமதுவடைந் தோர்கோடி, கடினமுடன் வையகத்தில் வாழ்வுபெற்று காசினியில் சாத்திரங்கள்மிகவுங்கற்று, அடியளவு வேதமுதலாகமங்களறுபத்து நாலுங்கலைசாத்திரங்கள், முடியோடுமுனிவர்பதந்தாள்பணிந்துமூதுல கில் கற்றென்ன ஒன்றுங்காணே. 260

காணவென்றால்மடிந்தவர்க்கு சாத்திரங்கள் கைலாயஞ் சென்ற வர்க்குப்பார்க்கலாமோ, தோணவே வுடல்பொருள்களாவியெல்லாம் தோற்றமல்மண்ணோடேமண்ணாய்போச்சு, வேகதொருசாத்திரங்கள் பார்த்தாலென்னபார்த்தாலும்வையகத்திலிருப்பாருண்டோ,பூணவே யாகாத நாளில்மாண்டோர் புகழானவாத்துமமு மிருந்ததுண்டோ.

இருந்துமேவையகத்தில் மாளிவிட்டுயெழிலானகிரகமதுபோவ துண்டோ, திருந்தவேவருடமது ஆறுதிங்கள்திறமானமாளிதனிலிரு ந்துகொண்டு, பொருந்தவே பெற்றோர்கள் குடும்பத்தாரை பொங்க முடன்வம்புகளுங்கூர்வதுண்டோ, வருந்தியேமாண்டதொரு கிரகந் தன்னை வளமுடனே தானடைப்பார் பாருபாரே. 262

பாரப்பாகலமானநாளில்மாண்டோர்பாருலகில்கிரகத்தைவிட்டு மல்லோ,நேரப்பாசமுதாயங்கைலாயத்தில் நேர்மையுடைக்கலமாய் சென்றதென்றும், சீரப்பாவாத்துமமுங் கைலாயத்தில் சிறப்புடனே சென்றதென்பார்மாண்பரெல்லாம்,ஆரப்பாகண்டவர்கள்வையகத்தி லாருமில்லை வுண்மையிதுபாருபாரே. 263

பாரேதான்தேகமது மண்ணுய்ப்போச்சு பாருலகிலாத்துமமுங் காணுர்மாண்பர், சீரேதாஞெடுக்கனிலையாருங்காணுர் சிறப்பானபிர பஞ்சவாழ்க்கனைத்தும், வேரேதான் மறுபிறப்புங் கண்டதுண்டோ வெட்டவெளியாகாய மொன்றுங்காணும், தீரேதான் சென்றநிலை காணுமற்ருன்றிகைத்துமே மாண்பரெல்லாந்திகைப்பார்தானே. 264

தாஞனகாலாங்கி யெந்தநாதா தகமையுள்ளவாக்கதுவும்பொய் யெண்ணுது, கோஞனயென்குருவாம் சற்புருஷன் வாக்கு குவலயத் தில்பொய்யாதுமெய்யேயாகும், மாஞனமகதேவர்படி நிதானம் மார் க்கமுடன் வயததுவுங்கூறியல்லோ, தேஞன தேவரது பாதங்காண தெளிவான கட்டளைகளுண்டுபாரே. 265

உண்டான கட்டளைகளமைந்திருக்க ஓகோகோ சாஸ்திரங்கள் வேதமென்ன, திண்டானநல்லநாள் தீயநாளுந்திகழுடனேமகதேவர் படைப்பாருண்டோ, சண்டாளமாண்பரெல்லாஞ்சாத்திரத்தைதக்க படியுணராமல் மதியீனத்தால், கொண்டபடி யவரவர்கள் தியானத் தாலே குறிப்புடனே தீயநாளென்றிட்டாரே. 266

இட்டாரேதீயநாள்நல்லநாளா யெழிலான சாத்திரங்கள் கூர்வ துண்டோ, விட்டகுறையமைந்தபடிமாண்பர்க்கெல்லாம்மேதினியில் சாஸ்திரங்கள் மெய்யதாச்சு, நட்டமதுமாண்பர்தன்ஞல் நாதாக்கள் சாத்திரங்க ளேதுக்காச்சு, பட்டமதுதான்பிறந்த பாவனைப்போல் பாருலகில் சாத்திரம் பொய்யதாச்சே. 267

ஆச்சப்பாவையகத்தில்சாத்திரங்கள் வனேகமுண்டு நாதாக்கள் செய்தநூலில், மூச்சடங்கிப்போனதொரு தேகந்தானும் மூதுலகில் திரும்பிவந்தசேதியில்லை, பாச்சலுடன் சாத்திரங்கள் கற்றுமென்ன பாங்கானதத்துவங்களறிந்துமென்ன, ஆச்சரியமானதொரு தேகமப் பா வவனியிலேயிருப்பதுவும் பொய்யுமாச்சே 268

பொய்யாதுதேகமது நிலைநில்லாது பொங்கமுடன்சாஸ்திரங்கள் வேதமொன்ன, மெய்யானவாத்துமமு மழியாதென்று மேதினியில் கட்டுமுறைவாக்கியந்தான், வெய்யவேசாஸ்திரத்திகைமங்கள்விட்ட குறையிருந்தல்லோ வெளியுமாச்சு, பையவே யவரன்றி ஓரணுவுதா னும் பாருலகிலசையாதுமெய்யதாமே. 269

ஆமேதான்கெட்டநாள்நல்லநாளாய் ஆகவைக்கவுன்னலேயாகு மோதான்,போமேதான்கதிரோனின்நாளேயெல்லாம் பொங்கமுடன்

நல்லநாளென்றிருக்க, வேமேதான்நாளெட்டும் நல்லநாளாய்வேதாந் தத்தாயினது கிருபையாலே, ஆமேதாநாதரவர்செய்திருக்கவப்பனே நம்மாலேயாவதென்னே. 270

என்னவேதேவனதுபெட்டுநாளுமெழிலாகமாண்பருக்குவமைந் திருக்க, பன்னவே வெள்ளிதனில் திரவியங்கள் பாருலகிலீவதுவே தருமமல்ல, சொன்னபடி காரிதனில் சவளமாகா துப்புரவாய் அருக் கனில்விருந்துமாகா, நன்மையாய் திங்களதுவாரசூலே நலமுடனே மாண்பருக்கு காட்டினாரே. 271

நாட்டமுடன்செவ்வாய்க்கு மேற்குதானும் நலமுடனே பயண மதுவாகாதென்றும், தேட்டமுடன்புதனுக்குவடக்கேதானுஞ்செம்ம லுடன் பயணமது வாகாதென்றும், நீட்டமுடன் குருவாரம்ஸ்தான மாகா நிலையானநாளெல்லாந் தீயநாளாய், வாட்டமுடன் சாஸ்திரங் கள் கூறிருக்கவளமுடனே நாளெந்த பலந்தான்காணே. 272

காணவேநாளெல்லாம்முறைப்பாடாககாசினியில்சாஸ்திரங்கள் பார்த்ததாலும், தோணவேயெந்தநாள்நல்லநாளென்றப்புரவாய் தன் மனதிலெண்ணலாகும், வேணவேநாளெட்டும் நல்லநாளாய் விருப்ப முடனும்பரனார்செய்திருக்க, நீணவேமதியீன மாண்பரெல்லாம் நிலை கெட்டுப்பதிகெட்டு நின்றிட்டாரே. 273

சீனபதிப்பெண்களுக்குதீட்டில்லை.

நின்றாரே காலாங்கிநாதர்தப் மால்நீடூழிகாலம்வரை யடியேன்று னும், குன்றனவவர்பாதந்தொழுதுமல்லோ குளிகைகொண்டு குகை யேறிமலைதான்கண்டேன், சென்றேனேசீனபதிக்கிடபாகத்தில்சிறப் பானதேசமதுவனேகமுண்டு, வென்றிடவேபலஜாதிமாண்பர்தாமும் விருப்பமுடன் கண்டல்லோ வறிந்திட்டேனே. 274

அறிந்தேனேசாஸ்திரங்களனேகமுண்டுவவர்களதுபேதமைகள் சொல்லொணாது, குறிந்துமேமுழுகுநாள்தன்னிலப்பா கூறான சாஸ் திரங்கள்மெத்தவுண்டு,முறிந்ததொருவுதிரமதுதீட்டேயென்றமுனை யான சங்கநதி முழுகவென்று, நெறிந்துமே ஸ்நானமது செய்ய வென்று நேரானவாற்றோரஞ்சொல்வார்பாரே. 275

பாரேதான் ஸ்நானமது செய்யநன்று பாங்கானசடங்குகளுஞ் செய்யநன்று, நேரேதான் ஓமமது செய்யநன்று நெடிதான தீட்டது

வைக்கழிக்கநன்று, சிரேதான்சாஸ்திரத்தின் தொகுப்பைப்போலசி
றப்பானவைதீகஞ்செய்யநன்று, திரேதான்திட்டினதுமார்க்சத்தாலே
திகழுடனேயொன்றதான் காணுர்பாரே. 276

காணுரேசூதகங்கள் நேர்ந்தபோதுங் கடிதானவேலைமுகஞ்செய்
யும்போதும், நீணவேமண்பாண்டந் தனையெடுத்து நீதியுடன் ஜலச்க
ரைக்குப்போகும்போது, வேணபடியன்னமது சமைக்கும்போதும்
வேண்டியேவிருந்தமுர்தங் கொள்ளும்போதும், ஆணவங்கள்தானெ
டுங்கிதிட்டேகண்டால் அவனிதனில்விட்டெறிந்துபோட்டார்தாமே

போட்டாரோபாண்டமது வன்னந்தானும் பொங்கமுடன்காய்
ப்பதார்த்தங்கள்பேதம், நீடடமுடன்சமைத்ததுவும் போட்டிட்டா
ரோங்கிலையானதிட்டதுவும்மெய்யேயாகும், தேட்டமுடனவர்போட்ட
வேஷமெல்லாந்தெளிவானவேஷமென்றசெப்பலாகும், வாட்டமுட
ன்திட்டதனில் பிறந்தோர்தாமுப வண்மையுடன்திட்டதுவும் மெய்
யென்றாரே. 278

மெய்யானதிட்டதுவுந் தயங்கியல்லோ மேதினியில் தேகமென்
றவுருவுமாச்சு, கையுடனேகருவிகாணுதியோடும் காசினியில்மாதர்க
ளின்கெர்ப்பக்கோளில், பையுடனேவந்துதித்த சாற்பாத்திரந்தான்
பாலகனேதிரண்டுருவாய் வடிவங்கொண்டு, எய்யவேகடவுளது வரத்
தினாலேயெழிலானசடலமது பிறக்கலாச்சே. 279

ஆச்சப்பாசதகோடிமாண்பரெல்லா மப்பனேபிறவியது யிதனா
லாச்சு, மூச்சுடனேதேகாதிகற்பத்தோடும் மூதுலகைக்கண்டதொரு
மானிடமுமாச்ச, பாச்சலென்றபிறவியதுதிட்டேயாச்சு பாங்கானஜ
டலமதுமண்கூறாச்சு, மாச்சலுடன்மகதேவர் கடாட்சத்தாலேமானி
லத்தில்சகலவுயிர்திட்டலாச்சே. 280

திட்டென்றசொல்லுவது கருமமாமோ திகழானலோகமதிமா
ண்பருக்கு, வாட்டமுடன்லோகாதி வையகங்கள் மானிலத்தி லெல்
லவரும்மதியேகெட்டு, தேட்டமுடன்சாஸ்திரத்தில்திட்டே சொல்
லிதெளிவானமதபேதங்கூறியல்லோ, நீட்டமுடன் மாண்பரெல்லா
மிந்தபாகம் நிதிகெட்டு மதிகெட்டாரே. 281

கெட்டாரேமானிலத்தில் மாண்பரெல்லாங் கீர்த்தியுடனிந்தவ
ண்ணபாகத்தாலே, சட்டமுடன்சீனபதிப்பெண்களுக்கு சாஸ்திரங்
கள் ஜாதியில்லைதிட்டுமில்லை, இட்டமதுபோலிருந்துபோகஞ்செய்து
யெழிலானபிறவிமக்களனேகமுண்டு, அட்டதிசைத்தான்புகழுஞ் சீ
னத்தார்க்கு வன்பானமதியகிலையதிகந்தானே. 282

போகர்சிங்கி விளையாட்டு.

தானனையின்னமொருமார்க்கம்பாரு தகமையுள்ள புலிப்பாணி மைந்தாகேளு, கோனனையெனதையர் காலாங்கிநாதர் கொற்றவனா யெந்தமக்குச்சொன்னநீதி, பானைகடலேழுஞ்சுற்றும்போது பால கனேகருமிகளுந்தருமியுண்டு, மானுகநல்லவர்போல் சினேகிப்பார்க ள் மர்மமதைமனதில்வைத்து கொல்வார்பாரே. 283

கொல்லவந்தமித்துருவாஞ் சத்துருவின்மார்க்கு குறிப்புடனே சொல்லிவைத்தசிங்கியப்பா, வெல்லவேயவரெனக்கு கொடுத்தபாக ம்விருப்பமுடனுந்தமக்குச்சொன்னநீதி, புல்லவேஜெகசாஞ்சிங்கிஜா லம புகழானசத்துருவைக்கொல்லுஞ்சாலம், மெல்லவேமித்துருபோ லிருந்துகொண்டு மேதினியில் ஜாலமதை செய்வார்தாமே 284

தாமானஜாலமதுயென்னவென்றால் தண்மையுடன் சொல்லுகி றேன் கண்ணேபாரும், நாமேதான் கௌரியென்ற பாஷாணந்தான் நலமானயெலிப்பகையுந்தன்னேடொக்க, போமேதான் வீரமென்ற காடிதானும் பொங்கமுடன்வேங்தோன்றிகிழங்குங்கூட்டி, தீமேதான் செய்யுகின்றமுருகல்தானும் சிறப்பாககிழங்கண்டு தானுங்கூட்டே.

கூட்டியேகருஞ்சோராசெஞ்சோராதானும் குடிகெடுக்குங்கு முனுவின்கிழங்குங்கூட்டி, தாட்டிகமாய்ச்சேங்கொட்டைப்பூரந்தானும் தண்மையுடன்சரியெடையாய் நிறுத்திக்கொண்டு, வாட்டமுடன்பா ம்பினது விஷத்தாலாட்டி. வளம்பெறவேசிமிள்தனிலே பதனஞ்செய் து, ஆட்டமது ஆடுதற்கு வயணஞ்சொல்வேன் வப்பனே யெந்தனது முறைமைபாரே. 286

சத்துருக்களுக்குச் சிங்கிதாக்குவது.

முறையானமுறையதுவுமென்னவென்றால் மூர்க்காரங் கருமிக ட்குஞ்சண்டாளர்க்கும், கறையானநேத்திரத்தில்கண்டபோது கரம் பேசிநயம்பேசி குடிகெடுக்கும், திறையானபாவிகட்கு யிந்தபாகந்தி கழுடனேவுள்ளங்கால்தாக்குவாய்நீ, சிறைகொண்டுமானிலத்தில்நோ யுங்கண்டு சீரழிந்துகுழிவிழுந்து போவான்பாரே. 287

போவானேதிரேகமெல்லாம் புண்ணுமாகி பொங்கமுடன்வைய கத்தினுசைவிட்டு, சாவானேசடமொழிந்து ஆறுதிங்கள்சட்டமுடன் காலில்வந்துபணிவானானல், நேர்வானபிணியதுவுந்தீருதற்கு நுட்ப முடன்வெள்ளையென்றகுன்றிதானும், தேவானதழைய துவும் பிடுங் கிவந்துதேற்றமுடன் பாதாளமூலிசேரே. 288

மூலியென்றசிறுகீரைவேருஞ்சேரு முனையாகச் சரிபெடையா யெடுத்துக்கொண்டு, நீலியென்றமூலியப்பா சரிசிரொக்க நீமகனேசி னைவாகப்பாண்டமிட்டு, சாலியனுர்பாண்டமதில்ஜலமேவிட்டு சாங்க முடன்கியாழமதுசெய்துகொண்டு, நாலிலொருகியாழமது காய்ந்து தானுல்நலமானகியாழமதை யிறக்கிடாயே. 289

இறக்கியேகியாழமது நாளொன்றக்கு யென்மகனேநீசினைவாய் நாழியாக, உறக்கமதுவாராமலந்திசந்தி யுததமனையிருவேளைக்கொ ள்வாராகுல், திறமுடையகியாழமது வேகத்தாலே தீருமேகுழிவிழு ந்தபுண்ணுமாறும், சிறமானமுன்சொன்ன மூலியப்பாசித்தமுமே மேலரைத்துப்பூசிடாயே. 290

பூசியேமண்டலந்தானிந்தபாகம் பொங்கமுடன் தான்குடித்து வருகும்போது, மாசிபடாதேகமதில்வந்தரோகம் வலுவழிந்துநாட்கு நாள்குறைந்துமல்லோ, பாசிபதுபோல்படர்ந்த சில்மிஷங்கள் பாலக னேமேனிலிட்டுபறக்கும்பாரு, காசினியிலுன்னையப்பா கடவுளாகக ருத்தில்வைததுகாலில்வந்து பணிகுவாரே. 291

பணிகுவார்கருமிகளுமுன்னையப்பா பாங்குடனே குடிகெடுக்கு ம்பாவிமார்கள், அணியணியாய்வுன்பாதந்தொழுவாரப்பா வப்பனே யுந்தமக்குத்தருமமுண்டு, துணிவுடனே நீயுமொருசித்தனுக துப்புர வாய்லோகமதிலிருந்துகொண்டு, மணிபோன்றசின்மயத்தைமனதிலெ ண்ணி மகிட்சியுடன்லோகமதில் வாழ்குவீரே. 292

வாழ்கவென்றல்பாவிகளுந்துரோகஞ்செய்தால் மார்க்கமுடன் மனந்தனிலே வையாமற்றன், தாழ்கவேவவர்களுக்குப்பின்னும்நீதி சட்டமுடன்தான்செய்ய மெத்தநன்று, ஆழ்கவேவையகத்தில் கீர்த் திக்கொண்டு அடுத்தஜெனம் பகையாளியெவர்வந்தாலும், வாழ்கவே யவர்களுக்குச்சோடசார வண்மையுடன்செய்குவதும் தருமம்பாரே.

போகர் நோயாளிக்குக் காயகற்பங்கூறல்.

பாரேதானின்னமொருபாகங்கேளு பட்சமுடன்சொல்லுகிறே ன்பண்பாயப்பா, நேரேதான்காலாங்கிநாதர்பாதம் நெறிமுறைமைத் தான்வணங்கிநீதியாக, சீரேதான்சிங்கியது கொண்டமாண்பர் சிறப் புடனேநோயகலுங்காயமப்பா, தீரேதான்தேகமது வீறுபோக தீர்க் கமுடன்காயாதிகற்பஞ்சொல்வேன், கூரேதான்கற்பமதை செய்தும ல்லோகொற்றவனே நீகொடுக்கத் தருமமாமே. 294

தருமமாமகத்தியருமிந்தபாகம் சட்டமுடன்பூரணத்திற்சொல்லவில்லை, கருமமதுவழியாமல்மூலிகற்பம் சாங்கமுடன் சொன்னாரே வேறொன்றில்லை, திருமகளின்கடாட்சத்தால் காயகற்பந்திட்டமுடன்சொல்லவில்லைபூரணத்தில், குருவானயெனதையர் காலாங்கிநாதர் குறிப்புடனே சொன்னதொரு நீதியாமே. 295

நீதியால்பூமிசர்க்கரையின்மூலம் நிட்களங்கமானதொருபரங்கிப்பட்டை, சாதியாம்நல்லதொரு மாஞ்சில்தானும் தண்மையுள்ள தண்ணீரின்மிட்டாந்தானும், வேதியாம்மூச்சரணைமூலந்தானும் வேகமென்றகொடிவேலிமூலந்தானும், ஆதியாம்பொன்னிறவாரைமூலம் வப்பனே நிலைப்பனையின் மூலங்கூட்டே. 296

கூட்டவேகற்பகமாந்தருவின்மூலம் குணமானவெந்தோன்றிமூலந்தானும், நீட்டமுடன்நனறுரிமூலமப்பா நிலையான வெள்ளையென்றகுன்றிமூலம், நாட்டமுடன்மிதுவெள்ள மொன்றாயல்லோநளினமுடன்சரியெடையாய் நிறுத்திக்கொண்டு, பூட்டகமாய் ரவிதனிலே காயப்போடு புகழானமூலமதை பொய்யாய்ச்செய்யே. 267

செய்யவேகல்லுரலிலிட்டுமைந்தா செப்புகிறேன் மலைத்தேனுங்கூடவிட்டு, பையவேமெழுகுபதந்தனிலிடித்து பாண்மையுடன் சிமிழ்தனிலேபதனம்பண்ணு, துய்யதொருமெழுகதனையந்திசந்தி துப்புரவாய்த்தானுமல்லோ கொண்டபின்பு,வெய்யவேயாவின்பாலுடனே கொள்ளுவேமென்ற வீரதுவுந்தணியுந்தானே. 268

தணியுமேமுன்போலதேகந்தானுஞ்சட்டமுடன் காந்தியதுமின்னலாரம், மணிபோன்றகாயாதி கற்பந்தன்னை மண்டலத்தி லுண்டதொருமாண்பருக்கு, துணிவுடனே களஞ்சிக்குமேலேயப்பாதுப்புரவாய்க்கொள்ளுவதும்மெத்தநன்று,நணிலானதேகமதுயிறுகியல்லோ நயனமதுபரிதிமுன்னே ஜொலிக்கும்பாரே. 299

ஜொலிக்குமேபரிதியதுமயங்கிப்போகும் தோறுமலருந்ததியுங்கண்ணிற்காணும், வலித்ததொருநேத்திரமுங்நீரேகுன்றிவளமையுடன்கண்ணொளிவுபிரகாசந்தான், ஒலிக்குமேவையகங்கள் கண்ணிற்றோற்றும் ஓகோகோகாலாங்கிகாயகற்பம், பலிக்குமேபாருலகில்யார்தான்செய்வார் பாலகரே புண்ணியர்க்கு வாய்க்கும்பாரே. 300

பொன்மாற்றுயாவும்.

பாரேதானின்னமொருமார்க்கம்பாரு பாருலகில்மாணுக்கள் பிழைக்கவென்று, சீரேதான்சிடிகையென்ற வேதைசொல்வேன் சிறப்பானநாதாக்கள் சொன்னதில்லே, நேரேதான் பலபலவாஞ்சாத்திரத்தில்நேர்மையுடன் பாடிவைத்தார்சித்தரெல்லாம், நீரேதான் நுணுக்கமென்றவேதைதானும் திறமுடனேபாடிவைத்த வுண்மைபாரே.

உண்மையாய்மாணுக்கள்பிழைக்கவென்று வுத்தமனே யேமமென்றசிடிகைவேதை, நண்மையென்றபாஷாணஞ் சிங்கிதானும் நயமானதாளகமும்பூரங்கூட்டி, வெண்மையெனுங் குச்சியென்ற வீரந்தானும்வெளியானகெவுரியென்ற பாஷாணந்தான், தண்மையுள்ள தாருசுடனே துத்தங்கூட்டி தகமையுள்ள வெடியுப்புக் கூடச்சேரே.

சேர்க்கவேவெண்காரஞ் சீனந்தானும் சிறப்பானநாகமுடன் சூதங்கூட்டி, ஏற்கவேமதியுப்புதானுஞ்சேர்த்து யெழிலான கெந்தகமுஞ்சாரங்கூட்டி, தீர்க்கமுடன்லிங்கமது வொன்றாய்ச்சேர்த்துசிறப்புடனே சரியிடையாய்நிறுத்துக்கொண்டு, ஆர்க்கவேமூவகையின் ஜெயநீராலேவப்பனே நாற்சாமமரைத்திடாயே. 303

அரைத்துமேவில்லையதுலகுவாய்ச்செய்து வன்பானரவிதனிலேகாயப்போடு, வரைக்கலம்போலாகப் பீங்கான்தன்னை வளமுடனேதான்மைத்துப்பீங்கான்மூடி, திரையானசீலையது வலுவாய்ச்செய்து திட்டமுடன் ரவிதனிலேகாயவைத்து, சுரைபோலபூமிதனில் குழிதானப்பா சுத்தமுடன்சாணீளம் குழிதான்செய்யே. 304

செய்யவேகுழிதனிலேமணலைக்கொட்டி சிறப்புடனேமேலதனில்பீங்கான்வைத்து, பையவேமேலுமந்த மணலைக்கொட்டிபாங்குபெதபுடமதுவும்பெருவுபத்து, வெய்யவேசூடாறிக் குளிர்ந்தபின்புவேதாந்தத்தாய்தனையே மனதிலுன்னி, உய்யவேசெந்தூரந்தன்னையெடுத்து வுத்தமனேகுழிக்கல்லிற்றன்னிற்போடே. 305

போடேதான்பின்னுமந்த செயநீர்தன்னால் பொங்கமுடன் தானரைப்பாய்நாலுஜாமம், நீடேதான்சிறுபில்லைத்தகடுபோலாம் நிட்களங்கமாகவல்லோபில்லைசெய்து, நாடேதான்ரவிதனிலேகாயவைத்து நலமாகமுன்போலப் பீங்கான்தன்னில், சூடேதான்வில்லையது வுள்ளேவைத்துசுத்தமுடன்சீலையது வலுவாய்ச்செய்யே. 306

வலுவானசீலையது ரவியில்வைத்து வளமுடனே காய்ந்தபின்பு யெடுத்துமுன்போல், மலுவானபுடமதுவும் போட்டுமைந்தா மார்க்க

முடன்தீயாறியெடுத்துப்பார்க்க, சுலுவானசெந்தூர மென்னசொல் வேன்சுந்தரனே சத்திசிவமதிலேகாண்பாய், வலுவானசெந்தூரமித ற்கீடுண்டோ வையகத்தில் சித்தர்முனிசொல்லாரன்றே. 307

அன்றனசெந்தூரதுந்தபாகம் வப்பனேபுடம்பஞ்சதசமுமாகு ம்வென்றிடவேபுடமதுவும்போட்டுமைந்தா விருப்பமுடன்தானெடு த்துசிமிளில்வைத்து, குன்றனமகமேருசெந்தூரத்தைகுறிப்புடனே பாச்சுதற்குவகையைக்கேளீர், தென்றிசையில் பொதிகைமுனிகும்ப யோனிசெப்பவில்லையிந்தமுறை செப்பார்தானே. 308

தானனகுன்றியிடைசெந்தூரத்தைத் தகமையுள்ள வாறுமாற் றுண்ணியாக, கோனனயென்குருவாங் காலாங்கிநாதர் கொற்றவனர் சொன்னதொருநீதிபோலே, பானனபரித்தகடுலேசாய்த்தட்டிபட்ச முடன்களஞ்சிக்குன்றிவீதம், மானனமூவகையின் ஜெயநீராலேமய ங்காமல்செந்தூரங் குழைத்துக்கொள்ளே. 309

கொள்ளவேசெந்தூரந்தன்னையப்பா குறையாமல்களஞ்சியென் றபொன்தகட்டில், மெள்ளவேபுத்திசலிறகுபோலே மேன்மையுடன் தான்தடவிசெப்பக்கேளீர், வள்ளலுடன்காவிக்கால் தானுங்கூட்டிவ ளமானயெருச்சாம்பல் தன்னிற்சேர்த்து, உள்ளபடிரெண்டையுந்தா ன்ரேசித்தல்லோ, வுத்தமனேதகடதனை வைக்கக்கேளே. 310

கேளப்பாவிக்கல் யெருவுக்குள்ளே கெவனமுடன் பரித்தகட் டைமேலேவைத்து, நாளப்பாபோகாமல் தீமைமூட்டி நலம்பெறவே தகடதனைஉள்ளமர்த்தி, சூளப்பாபுடம்போடவரணமாகி சுந்தரனே வரணமது சொல்லொணுது, ஆளப்பாயிப்படியே வறுபுடமுந் தீர்த் தால்வப்பனேதங்கமென்ற வரணமாச்சே. 311

ஆச்சப்பாவரணமென்றேயமந்தன்னைவப்பனேமூசையிட்டுவுரு க்கிப்பாரு, மூச்சடங்கிவரணமதுயேரியல்லோ முனையான யேமமது பசும்பொன்னுச்சு, மாச்சலென்பிறவியது தங்கமாச்சு மகத்தானசுய த்தங்கமிடற்கீடாயோ, பேச்சொன்றுங்கூறார்கள் பிறவித்தங்கம்யெ ழிலானசாயமென்றதங்வந்தானே. 312

தானனதங்கமதுபிரகாசந்தான் சதகோடிசூரியருக் கொப்பே யாகும், கோனனசித்துமுனி ரிஷிகள்தேவர் குவலயத்திலெந்தனைப் போல்கூறவில்லை, தேனனமனோன்மணியாள் பூசைக்காக செப்பிய தோர்வித்தையதுவரணம்பொன்னும், மானனபொன்னிதுதானெவர் தான்காண்பர் மகத்தானசிவயோகிக் காண்பார்பாரே. 313

குடவன் பொன்

பாரேதான்யின்னமொரு மார்க்கங்கேளுபாலகனேபுலிப்பாணி மைந்தாபாரு, நேரேதான் செந்தூரந்தனையெடுத்து நேர்மையுடன் முன்சொன்னநீராலாட்டி, சீரேதான்குடவனையே தகடுதட்டி சிறப் பாகமருந்ததனைமேலேபூசி, நீரேதான்சொன்னபடி மார்க்கமப்பாநி றுதியுடன்புடம்போட பொன்மாற்றுமே. 314

மாற்றானபொன்னதுவுமென்னசொல்வேன்மகத்தானதங்கமது பிறவிக்கொப்பாம், காற்றமுள்ளகுடவனதுகட்டிப்போச்சு நலமான நாதாக்கள்கண்டதில்லை, கூற்றமென்னுஞ்செம்பதுவும் ஓறமேலதி கு ணமானநாகமது சீறல்நின்று, ஏற்றமதுவாராமல் பொன்னேயாகில் யெழிலானமாற்றதுவுங் காட்டுந்தானே. 315

காட்டுமேகுடவனிலேயெட்டுமாற்று கண்காணுவித்தையடா ரி டிகள்வித்தை, நீட்டமுடன்சமுசாரிக்கானவித்தை நிலையானவித்தை யதுவேறுண்டோசொல, பாட்டனார்காலாங்கித்தூதனப்பா பண்டை யுள்ளகாலாங்கிநாதருக்கு, சூட்டியதோர்யிவ்கதை சூக்குமவேதை சூட்சமுடன்காட்டிவிட்டாரையர்தாமே. 316

தாமானபாட்டனவர் காலாங்கிக்குதயவுடனேகூறினதோர்வே தைமார்க்கம், நாமேதான்பட்சம்வைத்து யெந்தன்மீது நலமுடனே ஓதிவைத்தசுளுகருவேதை, போமேதான்வையகத்தில்பொய்யாகாம ல்பொங்கமுடன்மாணாக்கர்பிழைககவென்று, வேமேதான்மேதினியி ல்பலநூல்பார்த்துவேகமுடன் ஓதிவைத்தார் வையத்தோர்க்கே.

வையகத்தோர்பிழைக்கவென்று கருமானங்கள் வகையுடனே சொல்லுகிறேன்மைந்தாபாரு, பொய்யாதுயென்குருவாம் காலாங்கி வாக்குபூதலத்தில்மெய்யாகும்பொய்யேயில்லை, மெய்யான நூல்பார் த்துமாண்பருக்குமேதினியில்கண்டறிந்த சுளுக்குவேதை,செய்தாலு ங்கைகூடுமேமவாதை செப்பினரெந்தன் காலாங்கிதானே. 318

தம்பாக்குவேதை.

தானனயின்னமொரு கருமானங்கேள் தகமையுடனுரைப்பே னுமைந்தாபாரு, கோனனயென்குருவாங் காலாங்கிநாதர் கொற்றவ ன்ரெந்தனுக்குச்சொன்னநீதி, தேனனசெம்பதுவுந் தூலமேயா ம் தெளிவானசெம்பதனையடுத்துக்கொண்டு மானன மஞ்ஞண்மணியா ள்சித்தரூபி மகிழ்ச்சியுடன்தானரைத்து கவசம்போடே. 319

போடேநீகவசமதுசெய்துமைந்தா பொங்கமுடன் ரவிதனிலே காயவைத்து, நீடேதான்கோழியென்றபுடத்தைப்போடு நிட்களங்க

மாக்கியல்லோ கத்திசெம்பாம், கூடேதான்செம்பதுவும்லூறலேகி குணமானகாந்தியது மிகவுண்டாச்சு, ஆடேன்தான்செம்பதுவு மென்ன சொல்வேனப்பனேசத்திசிவ மிதிற்காண்பாயே. 320

காண்பாயேயிந்தமுறை பத்துவிசையோடு களிப்பானசெம்பதுவும் லூறவற்று, ஆண்பானவல்லிமலர்போல்நிறந்தான் வப்பனேசுந்தராயென்னசொல்வேன், வீண்போகாதிந்தமுறை செய்துமல்லோ விருப்பமுடன்முன்சொன்னசெந்தூரத்தை, காள்படவே ரவிதனையே யுருக்கிகொண்டு நலம்பெறவேசெந்தூரம் பத்துக்கொன்றே.

ஒன்றானசெந்தூரமென்னசொல்வே னுத்தமனேபத்துக்குவொன்றேயீந்து, குன்றானசெம்பொன்றக் கூடச்சேர்த்து கொற்றவனே வாரடித்துப்புடத்தைப்போடு, வென்றிடனே சொருசாவின் கடைதானப்பா வித்தகனேசிவவேடம் பூண்டோர்க்கெல்லாம், நன்றானக வசகுண்டலத்துக்காதிநாயகனே என்னசொல்வேன் வதீதம்பாரே.

மேற்சொன்ன செந்தூரத்திற்கு ஜெயநீர்.

பாரேதான்முன்சொன்னசெந்தூரத்தைப் பட்சமுடன்செய்வதற்குமைந்தாகேளு, சீரேதான்மதியுப்புசீனத்தோடு சிறப்பான வுமருப்புகூடச்சேர்த்து, நேரேதான்வாயென்றபாத்திரத்தில் நெடிதான செயநீரோலிறக்கிமைந்தா, நீரேதான்சீசாவி லடைத்துக்கொண்டு நிகழானசெந்தூரமரைப்பாய்தானே. 323

தானானசெயநீரின்போக்கைதானும் தண்மையுள்ள நாதாக்கள் சொன்னதில்லை, கோனானயெனதையா கால்ாங்கிநாதர்கொற்றவனார் தாமுரைத்தமுறைப்பாடெல்லாம், பானானவையகத்தோர் பிழைக்கவென்று பாருலகில்பாடிவைத்த குருநூலாகும், வேனானசாத்திரத்தினுளவாறுய்ந்துவிட்டகுறையிருந்தோர்க்கு லபிக்கும்பாரே.

செம்புசுத்தி.

பார்க்கவென்றாலின்னமொருகருமானம்பார் பாடுகிறேன்புலிப்பாணிமைந்தாகேளு, தீர்க்கமுடன்பேரண்டந் தலையண்டந்தான்திறமானஓடதுவுங்கொண்டுவந்து, ஆர்க்கவேவெடியுப்புக்கூடச்சேர்த்து வப்பனேமூலிகையின்செயநீர்தன்னில், ஏர்க்கவேநாற்சாமமரைத்து பாலாயெழிலாகவில்லைதட்டிக்காயவையே. 325

காய்ந்தபின்புதனையெடுத்து வோட்டிலிட்டுகசகாமல்சீலையதுவலுவாய்செய்து, தோந்துமேவறுகமென்ற புடத்தைப்போடு துப்புற

வாய்ப்புடமாறி யெடுத்துப்பாரு, மாய்ந்துமே வெடியுப்புச் சத்துரு வுஞ்சேர்ந்து மகத்தான பற்பமது யென்னசொல்வேன், தீய்ந்ததொ ருபற்பமதை யெடுத்துமைந்தா திறமான சீசாவிற்பதனம்பண்ணே.

பண்ணவே ரவிதனையே யெடுத்துநீயும் பான்மையுடன்தானுரு க்கிராசமீவாய், எண்ணவே செம்புக்குபாதியீவர் யெழிலான பற்ப மமதை யென்னசொல்வேன், உண்ணவே சோறுதின்ன வேண்டு மென்றால் வுத்தமனே செம்புசுத்திப் போதாதோதான் வண்ணமு டன் செம்பதனை யுருக்கிமைந்தா மகதேவர் கவசகுண்டலஞ் செய் வாயே.

செய்யவே சிவயோகி வேடம்பூண்டு தேசத்தோர் நண்பருக்கு யிந்தவேதை, உய்யவே தான்கொடுக்க மநுதர்மமாகும் வுத்தமனே சமுசாரிக்கானவித்தை, துய்யதொரு செம்புவித்தையிதுதானப்பா துப்புரவாய் கலசகுண்டலத்துக்காதி, பையவே யுந்தமக்கு வுபதே சிப்பேன் பாங்குபெற கர்மிகட்குச் சொல்லாரன்றே 328

சொல்லான சொல்லிதுதான் சிவவேடந்தான்துப்புரவா யிருப் போர்க்கு யீயலன்று, புல்லான மாண்பர்களில் தருமிகளுமுண்டு புக ழான தருமிகட்குயீயலன்று, கல்லானகருமிகட்கு கொடுக்கலாக கப டன்றி மெய்சொல்லுவோர் குடுக்கலன்று, வல்லகொரு சித்துமுனி வேதையப்பா வளமையுடன் செய்பவர்க்கு சித்தியாமே. 329

சூதவெள்ளி.

சித்தியாம்பின்னமொருபாகஞ்சொல்வேன் சிறப்பான நாதாக் கள்சொன்னதில்லை, முத்திபெறகடுகளவுரசமேநின்றால் முனையான மோசமதுப் பெறவேயாகும், சத்திசிவம் சூதமதிற் காணலாகும் தாரணியில் கண்டவனே வாதியாவான், வெற்றிபெற கெந்தகமும் பலமைந்தாகும் விருப்பமுடன் பூநாகம் பலமைந்தாமே. 330

ஆமேதான் லிங்கமது பலமைந்தாகும் வப்பனே யெரிகாலன் பாலாலாட்டி, தாமேதான் கோளாறு நேரிடாமல் காட்சியுடன் ரவி தனிலே காயப்போடு, வேமேதான் மறுபடியும் பொடியாய்ச்செய்து விருப்பமுடன் செய்யுமந்த முறமைகேளு, நாமேதான் மதியதுவுந் துலமுறும் நன்மையுடன் செய்யுகின்ற வரிசைகேளே. 331

கேளப்பாவெள்ளிதனை குகையிலிட்டு கெவனமுடன் வுருக்கி யல்லோ செப்பக்கேளு, தூளப்பாமுன்சொன்ன மருந்தையல்லோ துப்புரவாய்க்கிரசமது யீவாய்தானும், நாளப்பா போகாமல் மூசை

தன்னை நலம்பெறவே வுடைத்துப்பார்க ளங்கேயாகும், பாளப்பா போகாமல்களங்குதன்னை பட்சமுடன் றனெடுத்து செப்பக்கேளே.

செப்பவென்றால் நாவில்லைப் பாவுமில்லை ஜெகந்தனிலேரசித மென்ற குளிகையாச்சு, ஒப்பமுடன்குளிகைதனை யெடுத்துபூபாவுத் தமனை கலசமதில்சூதமிட்டு, தப்பிதங்கள் நேராமல் சூதந்தன்னில் தகமையுடன குளிகைதனை கலசத்திலிட்டு, ஒப்பனையாம் வாய்மூடி சீலைசெய்து வுத்தமனை நெருப்பதனிற் காச்சிடாயே. 333

காச்சியே கலசமதைத் திறந்துபாரு கனமான சூதமது வெண் ணெய்போலாம், ஆச்சரிய மானதொரு சூதவித்தை வப்பனே யார றிவார் மாண்பரப்பா, கூச்சலுடன் தானொடுங்கி சூதந்தானும் கொ ற்றவனே கீழ்நிற்கும் வெண்ணெய்தானும், பாச்சலுடன் குளிகை யது மேலேநிற்கும் பண்பான குளிகைதனைப் பதனம்பண்ணே.

பண்ணவென்றால் சூதவெண்ணெய் தானெடுத்து பட்சமுடன் காந்தமெனு மூசைதன்னை, எண்ணவே தானடைத்துச் சீலைசெய்து யெழிலாகத் தானுருக்கி யெடுத்துப்பாரு, நண்ணவே வானத்துமீன் தானப்பா நலமானவெள்ளியதுயென்னசொல்வேன், திண்ணமுடன் வெள்ளிதனை சிவயோகஞ்செய்து சித்தனைப்போல் தானிருந்து வரு ந்திடாயே. 335

அருந்தவேவருமைவருங் காலந்தன்னில் வப்பனே சிவயோகம் வாறியுண்ண, திருந்தவே யொருவரை பேசவேண்டாம் தீரமுடன் சினமதுவுங் கைக்குள்ளாச்சு, பொருந்தவேதனக்குகந்த சீஷன்தேடி பொங்கமுடன் குணங்கண்டு குறியுங்கண்டு, மருந்தினிட கைபாகஞ் செய்பாகத்தை மன்னவனையவன்றனக்குப் போதிப்பாயே. 336

போதித்துவெகுகாலஞ்சென்றபின்பு பொங்கமுடன் வுள்ளுள வும் மிகவேயோதி, சாதித்து வுபதேசங்கூர்ந்துமைந்த சட்டமுடன் சின்மயத்தி லிருந்துகொண்டு, ஆதித்தன் சந்திரனுமறியாமற்றான் அப்பனேதன்மனதி லொடுக்கமாகி, சாதித்துவாதமென்ற வித்தை கன்னைசட்டமுடன் கார்த்திருந்து சாதிப்பாயே. 337

சாதிப்பாய் நல்லோர்கள் தீயோருண்டு சற்பனைகள் கண்டல் லோ மிகவாராய்ந்து, வாதியாந் தெரிந்தவர்போல் வாதுபேசி வந் துன்னைத் தடுத்தல்லோ தர்க்கங்கூறி, நீதியாய் நூல்தெரிந்த நிபுண னைப்போல் நிஷ்டூர முனைப்பேசி நிகழ்த்துவான்பார், பார்வதியை சடையணிந்ததம்பிரான்போல் வேஷம்போட்டல்லோபகட்டுவாரே.

பகட்டுவாரவர்வலையில்சிக்கவேண்டாம் பாருலகில் வெகுகோடி கவலையோடும், முகமதுவின்முன்னின் றுநீதிபார்த்து முனையானராசி முதலுறவுகண்டு, இகபரமுமுள்ளளவும்வையகத்தில் யெழிலாகசீஷ னென்றேவுருதிகொண்டு, சகமுழுதும்சதாகால முன்னையப்பா சட் டமுடன்துதிக்கும்வழி தேடிக்கொள்ளே. 339

போகர் செம்புவித்தை.

கொள்ளவென்றுலின்னமொருமாற்கங்கேளு, கொற்றவனேசர க்கதுதான்செப்பக்கேளு, விள்ளவேபூரமது வொன்றேயாகும் வித்த கனேவீரமதுவொன்றேயாகும், மெள்ளவேசூதமது வொன்றேயாகு ம் மேன்மையுடன்கெந்தியது வொன்றேயாகும், உள்ளபடிலிங்கமது வொன்றேயாகும் வுத்தமனேகெவுரியது ஒன்றுகூட்டே. 340

கூட்டியேகாரமதுவொன்றுசேர்த்து கொற்றவனே நிம்பழத்தி ன்சாற்றாலாட்டி, மாட்டியேநாற்சாம மறைத்தபோது மன்னவனே மெழுகதுபோலாகும்பாரு, தாட்டிகமாய்மாத்திரைகள் செய்துமே தான்சட் டமுடன்ரவிதனிலேகாயவைத்து, நீட்டமுடன் செய்யும்வ கைவரிசைகேளு நீதியுடன்கைபாகங் கண்டிடாயே. 341

கண்டதொருசெய்பாகஞ் சொல்வேன்கேளு கருத்துடனேசெ ம்புதனையெடுத்துமைந்தா, விண்டபடிதுலமதுவு மிரண்டேயாகும் விருப்பமுடன்தானெடுத்துக் குகையிலிட்டு, அண்டமுடன் றனுரு க்கிமாநந்தையப்பா வப்பனேசெம்புக்குப்பாதியாக, வண்டலது போ வதற்கு கிராசமீவாய் வரிசையுடன்றனெடுத்து வண்மைபாரே.

வண்மையாஞ்செம்பதனைத்தகடடித்து வளமைபெறபூங்காவித ன்னிலப்பா, சண்டமாருதம்போல லவணஞ்சேர்த்துசட்டமுடன் நி ம்பத்தின் சாற்றாலாட்டி, கொண்டபடிமேல்தனில் தகட்டிற்பூசிகொ ற்றவனேபுடம்போட்டுயெடுத்துப்பாரு, பண்டிடுவகிருஷ்ணவ தார னைப்போல் பட்சமுடன்துலங்கியது மின்னும்பாரே. 343

மின்னவேசெம்பதுவுமென்னசொல்வேன மேதினியில்நாதாக் களாடுங்கூத்து, பன்னவேசெம்புதனையெடுத்துமைந்தா பட்சமுடன் நதிதனிலேநாலுக்கொண்டு, துள்ளவேதாளுருக்கி யெடுத்துப்பாரு துப்புரவாய்மதியதுவுஞ் செபபுமாற்சு, கன்னபுரிவேந்தனிடஞ்சென் றுமல்லோ கருவானவித்தைதனைக் காட்டிடாயே. 344

காட்டவென்றனுந்தனுக்குச்சோடசாரம் கனமுடனே செய்து மல்லோமணந்தான்கொள்வர், ஆட்டவொண்ணுவாட்டமது செம்பி

நாட்டம்வப்பனே கூர்வதற்குநாவுமில்லே, கேட்டமுடன்செம்புதனை யெடுத்துமைந்தா தெளிவானதங்கமது பத்துக்கொன்று, தாட்டிக மாய்த்தானுக்கி யெடுத்துப்பாரு தங்கமென்றசெம்பதுவுஞ் சொல் வொணுதே. 345

வொண்ணுதுதங்கச்செம்பிதுவேயாரும் ஒகோகோ நாதாக்கள் கூர்ந்ததில்லே, அண்ணூர்ந்துபார்த்தாலுங்கண்ணேகூசும்வப்பனேநட ராஜாவிக்கினந்தான், மண்ணுலே கருவதுங்கட்டியல்லோ மார்க்கமு டன்செய்துவைத்தார் கருவூரார்தான், திண்ணமுடன் பரிசனமாஞ் செம்புவேதை செப்பினேன்லோகமதிமான்பருக்கே. 346

மாண்பானமாண்பருக்குயிந்தவேதை மார்க்கமுடன்யார்சொல் லப்போராரப்பா, வீண்போன்றகருமிகட்கு பாவிகட்கும் விள்ளாது சொன்னுலும்விள்ளாதப்பா, சாண்கொண்டசிறுபாலர்புத்திமானேர் சட்டமுடன்சொன்னுலுங்கண்டுகொள்வார், ஆண்பான வித்தையதி வதிதவித்தையப்பனே சிவயோகிக்காகுந்தானே. 347

அபினிசெம்பு

தானுளபின்னமொருபாகஞ்சொல்வேன் தகமையுடன் மாணுக் கள்பிழைக்கவென்று, கோனுனயெனதையர்காலாங்கிநாதர் கொற்ற வனுரெந்தனுக்கு வுரைத்தநீதி, மானுனமனேன்மணியாள் பாதம் போற்றி மகத்தானசெம்புதனேக்கூறுவேன்பார், தேனுனசெம்பென் றதோட்டிதன்னே தேற்றமுடன்றுனெடுத்து செப்பக்கேளே.

செப்பவென்றுல்முறையதனேசொல்வேன்பாரு தெளிவானபுலி ப்பாணிமைந்தாகேளு, ஒப்புமுடனபினியையொன்றேயாகு மொளிவா னதொட்டியதுவொன்றேயாகும், செப்பமுடன்காரமதுவொன்வோ ன்றேயாகும் நெடிதானசாரமதுவொன்றேயாகும், செப்பவே குழிக் கல்லில்தன்னிலிட்டு செயம்பெறவேதானரைத்து வரிசைகேளே.

வரிசையுடன்முறையோடுங் குறைவில்லாமல் வளம்பெரிய மூ சைதனிலடைத்துமைந்தா, பரிசையதுபுகைகொண்டு மேலிடாமல்ப ட்சமுடன்சீலையதுவலுவாய்செய்து, கரிசலதுவாராம னுருக்கிமைந் தா கனமானமூசைதனேயுடைத்துபாரு, துரிசானகளிம்பதுவும்நீங்கி யல்லோ துப்பற்றசெம்பதுவு மாகும்பாரே 350

பாரேதான்செம்பதுவு மென்னசொல்வேன் பாரினிமேல நாதாக் கள்செய்யும்வேதை, சீரேதான்செம்பதுவு மெடுத்துமைந்தா செயம் பெற்றேயோடதனி லூதிப்போடு, நேரேதான் செம்பதுவு மூறலேகி நெடிதான கவசகுண்டலத்துக்காதி, ஆரோதான் செய்வார்களிந்த பாகம் வப்பனே விதியாளிக் கமைக்கும்பாரே. 351

விதிதான செம்பதனை யெடுத்துமைந்தா விருப்பமுடன் தான் போரும் வழியைக்கேளு, மதியான வெள்ளிதனில் நாலுக்கொன்று மகத்தானசெம்பதனைக்கொடுத்தாயானல்,பதியானமதியதுவும்பழுப் பேயேறி பாங்கான செம்பதுவுந் தங்கச்செம்பாய், துதியான சிவத் துக்கு வுறுதிசெம்பொன் துறையானவழிபாடு முறைபாடாமே.

பாடான செம்பதுவுமென்னசொல்வேன் பாரினிமேல்நாதாக்கள் செய்யும்வேதை, தாடாண்மை கொண்டதொருசித்துவேதை தகமை யுள்ள புத்திமானறிவான்பாரு, நாடான வையகத்தில்கருமிமாண்பர் நன்மையுடன் கதைபேசி முறைகள்பேசி, சாடானநயம்பேசிகாமும் பேசி சார்பான முறைதனையே கேட்பார்பாரே. 353

கேட்டாலும் முறைதனை ய கொடுக்கவேண்டாம் கெடியான மாண்பருக்குக் கொடுத்தாயானல், வாட்டமுடனுன்றலைதான்தெரித் துப்போகும்வளமுடனேநாதாக்கள்சொன்னவாக்கு, தேட்டமுடன் நண்பருக்குக்கொடுத்தாயானல் தெளிவான சிவயோகம்கிட்டும்பாரு, ஆட்டமது செம்பினது ஆட்டமல்லோ வவனிதனில் யார்காண்பார் வதிதம்பாரே. 354

நாகக்கட்டு செந்தூரம்.

பாரேதா னின்னமொரு மார்க்கங்கேளு பான்மையுள்ள புலிப் பாணி மைந்தாபாரு, நேரேதான்நாகமொருசேர்தானும் நிலையான யிலுப்பை நெய்தன்னிலப்பா சீரேதான்நாகமதை யுருக்கிக்கொண்டு சிறப்புடனே சாரமதைகிராசமீவாய், தீரேதான்கிராசமதுகொடுத்து மல்லோ திறமுடனே யிலுப்பைநெய்யி லுருக்கிச்சாயே. 355

சாய்க்கவேநாகமது சுத்தியாச்சு தகமையுடன் மூவைந்துதரமே சாய்க்க, வாய்க்கவேநாகமது கண்ணொடுங்கி வளமானநாகமதுசவளை போலாம், நாய்த்துளசி மூலிதனை யரைத்துமைந்தா நலமான நாகத் துக்கங்கிபூட்டி, மாய்க்கவே சீலையது வலுவாய்ச்செய்து மறவாமல் கோழியது புடமுந்தானே. 356

தானனபுடமதுவுமிப்படியேபோடு தண்மையுள்ள நாகமதுகண் ணடங்கி, வேறனவெள்ளியது வுருக்குபோலே வெகுசோதி நாகமப்

பாயென்னசொல்வேன், கோனுனமுன்சொன்ன மூலிதன்னுல்கொற் றவனே புடமூன்று போடுபோடு, மானுனநாகமது சீறலற்று மார்க்க முடன் வெள்ளிபோலிருக்கும்பாரே. 357

இருக்குமேவெள்ளியென்ற நாகந்தன்னை யெழிலாகத்தானெடு த்துசெப்பக்கேளீர், சொருக்கியே நாகமதையெடுத்துமைந்தாநோக்க முடன் சூதமது சரியாய்ச்சேர்த்து, பருக்கியெகெந்தகத்தின் தயி லத்தாட்டிபாங்குபெற ரவிதனிலே காயவைத்து, தெரிக்கவே குழி யம்மி தன்னிலிட்டு தெளிமையுடன் பொடிபண்ணி செப்பக்கேளே.

செப்பவென்றால் காசியென்றகுப்பிதன்னில்சிறப்புடனேமருந் தையெல்லாங் குகையிலூட்டி, ஒப்பமுடன் மரக்கல்லால் கொண்டு மூடிவுத்தமனேசீலையதுயேழுஞ்செய்து, தப்பிதங்கள்வாராமல்பாண் டந்தன்னில் தன்மையுடன் மணலைதனைக் கீழமைத்து, அப்போதே மணலதனை மேற்பொதிந்து வண்புடனேபாண்டமதை சீலைசெய்யே.

செய்யவே சீலையது வலுவாய்ச்செய்து திறமுடனே தானெறிப் பாய் நாலுஜாமம், வெய்யவே நாற்சாம மெரித்தபோது வேதாந்தத் தாயின்து செந்தூரந்தான் துய்யபுகழ்யிராஜாதிராசர்தானும்துப்புர வாய் வருணனென்றசெந்தூரத்தை, பையவேசோதித்து வுந்தனைத் தான் பட்சமுடன் கேட்டுவழி யறிவார்தாமே. 360

அறிவானசெந்தூரமென்னசொல்வேன் வப்பனேகுன்றியிடைத் தானெடுத்து, முறியாதவெள்ளிதனில் பத்துக்கொன்று முனையாகத் தானுருக்கிகொடுத்துப்பாரு, குறியானமாற்றதுவுமேழதாகும்கொற் றவனே நாலுக்கோர்தங்கஞ்சேர்த்து, முறிபோன்றமூசைதனிலுருக் கிக்கொண்டு மயங்காமல் புடத்தகடாய் வடித்துப்போடே. 361

அடித்துமே தகடதனை யருண்மைந்தா கேளப்பனே முன்சொ ன்னசெந்தூரத்தை, நடிக்கமலம் வீற்றிருக்கும் மனோன்மணித்தாய் நாதாந்ததேவியரின் தாள்பணிந்து, படியான செந்தூரம் பரித்தகட் டில் பக்குவமாய்த்தான் பூசிப்புடத்தைப்போடு, கடியானகடிசதுவும் மிகவேநீங்கி கனகமென்ற தங்கமது வாங்கும்பாரே. 362

தங்கமாம்பிரிதியென்றபிரிவியாச்சு தாரணியில்நாதாக்கள்செய் யும்வேதை, பங்கமதுநோரது வொருக்காலுந்தான் பாரினிலே தருமி கட்சுகிட்டும்பாரு, குங்குமப்பூதன்னிறமாக தங்கந்தங்கம் குவலயத் தில்காணபதுவுமறிதேயாகும், சங்கமென்ற குகைதனிலேயிருக்குஞ் சித்தர் சட்டமுடன் செய்கின்ற பாகந்தானே. 363

திரிவங்கச்செந்தூரம்.

தானனயின்னமொருபாகங்கேளுதண்மையுள்ளசெந்தூரந் திரிவங்கந்தான், கோனனகரிவங்கம் வெள்வங்கந்தான்கொற்றவனேநாகமதுசரியாய்க்கூட்டி, மானனஜெயநீராமென்னசொல்வேன்மகத்தாநவாறுவகை ஜெயநீர்தன்னில், பானனமூன்றுவகைத் திரிவங்கந்தான் பட்சமுடன் குகைதனிலே வுருக்கித்திரே. 364

உருக்கியேஜெயநீரில்தாக்குதாக்கு வுத்தமனே நாகமதுகண்ணுறங்கி, பெருக்கமுள்ள கண்ணதுவுந்தாளுெடுங்கி பேரானசவனையதுபோலேயாகும், நெருக்கமுடன் சூதமது நிகராய்ச்சேர்த்துநேர்மையுடன்கல்வமதிலிட்டுமைந்தா, பொருக்கவேகெந்தியதுநாலுக்கொந்றுபொங்கமுடன் தான்சேர்த்து வரைக்கக்கேளே. 365

கேளப்பா கெந்தியுடன் தாரங்கூட்டி கெடியான மனோசிலையுந்துருகவீரம், நாளப்பா போகாமல் யிடைதாளுெக்கநாயகனேகெந்தியிடைத்தானுங்கூட்டி, ஆளப்பாவாறுவகைஜெயநீர்தன்னால்வப்பனேநாற்சாமமரைத்துமேதான், பாளப்பா போகாமல்கிழவுவர்த்தி பாலகனேமுன்போலப் பொடிசெய்வாயே 366

பொடியானமருந்ததனை யெடுத்துமைந்தா பொங்கமுடன்காசியென்ற மேருதன்னில், படியளவாய்க் குப்பிதனிற் பாதியிட்டு பாலகனே யேழுசீலை வலுவாய்ச்செய்து, வடியுடனே ரவிதனிலே காயவைத்துக்கனமானவாலுகையந்திரத்தில், துடியாக நாற்சாமமெரித்தபோது துப்புரவாய் செந்தூரமாகும்பாரே. 367

லோகப்பாய்ச்சல்.

பாரேதான்செந்தூரந்தனையெடுத்து பாங்குபெற வெள்ளிசெம்பில்பத்துக்கொன்று, தீரேதான் தானுருக்கிகுருவென்றீய திறமான மாற்றதுவுங் காணும்பாரு, சீரேதான் வோட்டிலிட்டு ஆதிப்போடு சிறப்பானமாற்றதுவுமெட்டதாகும், நேரேதான்பத்துக்கோர்தங்கஞ்சேர்க்க நிலையான மாற்றதுமாகும்பாரே. 368

ஆகுமேதங்கமது யென்னசொல்வேனுகாகாநாதாக்கள்செய்யும்வேதை, ஏகுமேசெந்தூரந்தனையெடுத்து யெழிலான குடவனிலேகொடுத்துப்பாரு,போகுமேவூறலதுயேகியல்லோபொங்கமுடன்மாற்றதுவுமாணித்தங்கம், பாங்குபெறதங்கமது சிவத்துக்காகிபாரினிலே தவயோகி காண்பான்தானே. 369

காண்பானேநாதாக்கள்தாள்பணிந்து கருத்துரவேமனதுவந்து நடந்துகொண்டாள்.ஆண்பானவாதமதுசித்திக்குந்தானடவானபெரியோர்கள்கிருபைதன்னால், மாண்பானசிவஞானம் கிட்டும் பாருமறவாமல்சின்மயத்தைமனதிலுன்னி, ஜாண்பாம்பேயானாலும்பிடிவேண்டல்லோ சட்டமுடன் தெருவழியில் நில்லாய்தாய்தானே. 370

நில்லவேகாலாங்கிதாள்பணிந்தேன் நிலையான குளிகையதுபூண்டுகொண்டு, பல்லவேசீனபதிசென்றேயானும்புகழானகாண்பர்களைக் கண்டுமல்லோ, வெல்லவேவாதமென்றகடலையப்பா வேதாந்தத்தாயினதுகிருபையாலே, செல்லவே ஞானோபதேசங்கெட்டு துப்புரவாய் வாதமதை போதித்தேனே. 371

போதித்தேன்சீனபதிப் பெண்களுக்கு புகழான வாதமென்றகடலையப்பா, ஆதித்தன் சந்திரன்போ லதிதவித்தை யவர்களிடம்யானதென்றுபோதித்தல்லோ, சோதித்துமணங்தேறி புத்திகொண்டு சொற்பெரியவேதையெல்லாந்துடர்ந்துபற்றி, நீதியாய்ப் பூநீரின்மார்க்கங்கண்டு நிலையான வுப்புமணி செய்தேன்பாரே. 372

போகர் சீனபதிபெண்களுக்கு உப்புமணிபவளமணிபாலமணிபச்சைமணி நீலமணி கறுப்புமணி முத்துமணி முதலானவைகள் கூறல்.

பாரேதான்பின்னமொருமார்க்கங்கேளு பாலகனேபுலிப்பாணிமைந்தாபாரு நேரேதான்சீனபதிவடபாகத்தின் நெடியான கடலோரந்தன்னிலப்பா, வேரேதான்பூநீறுவிளையுமார்க்கம்விடங்கண்டுதலங்கண்டு விதியுங்கண்டு, சீரேதான் வளர்பூமிவளமுங்கண்டு சிறப்பான பூநீரையெடுத்தேன்றானே. 373

தானபூநீரையெடுத்துமைந்தன் தண்மையுடன் மூசையென்றபாண்டமிட்டு, கோனானநவவாசல்துவாரமிட்டு கொற்றவனேபூநீரையதிற்பொதிந்து, தேனானமனோன்மணியாள் பாதம்போற்றி தெளிவுபெறசீனபதிமாண்பருக்குபானனபூநீதை யுருக்குதற்குபட்சமுடன் தீமூட்டி வழிகொண்டேனே. 374

கொண்டேனேபூநீரையுருக்கியல்லோ கொற்றவனே மாண்பர்களும் பிழைக்கவென்று, கண்டேனேபூநீரின்மார்க்கமெல்லாம்கனம்பெறவே தானுருக்கிப் பலகையாக்கி, அண்டர்முனி தேவாதி ரிஷிகளெல்லாமண்பாகக்கண்ணாடிகாச்சுதற்கு, விண்டதொரு வழிதுரைபுமறியாமற்றான்விட்டாரே தேவசித்து முதலானோரே. 375

உப்புமணி வுற்பததி

முதலானமுப்புவென்ற பலகைதன்னைமுயர்ச்சியுடன்பிரதியெ ன்றமூசையிட்டு, பதமுடனே தானுருக்கி யெடுத்துமைந்தா பாலக னேமயிர்க்கம்பியிரும்பாலப்பா, கதமுடையரசமதுபோல் நூணிரு த்தி கசகாமல்பலகைதன்னை வுருக்கிக்காய்த்து, இதமுடனேமண்க வசந்தன்னைநீக்கி யெழிலானமணியதனைக் கொட்டுவீரே. 376

பாலமணி வுற்பத்தி

கொட்டவென்றால்மணியதுவுஞ் சதகோடிகாணும்கொற்றவநே பூநீராம்பலகைதன்னை, திட்டமுடன்தானுடைத்து மூசையிட்டுதிற முடனேபாலமணி யமைக்கவில்லை, குட்டமுள்ளதொங்கலதுநூறுக ம்பம் குறிப்பாகமயிர்க்கோதித் தொங்கலிட்டு, பட்டதொரு பூநீரின் பலகைதன்னை பாங்குபெறகடல் நுரையால் சுத்திசெய்யே. 377

செய்துமேதானுருக்கியெடுத்துமைந்தா செமமலுடன்கருக்கட் டிவார்க்கும்போது, பையவேவிரும்பினது மயிர்ப்பாய்ச்சலப்பா பாங் ங்கிபெறபூநீறவுருக்கிச்சென்ற, மெய்யானகருவதனில் பாய்ந்துமல் லோ மேன்மையுடன்சதகோடி மணிகளாகும், பொய்யாதுகாலாங்கி நாதர்வாக்குபொங்கமுடன்செய்துவர வரிசைகேளே. 378

கேளேதான்கவசமது வுடைத்துப்பாருகெடியானபாலமணியெ ன்னசொல்வேன், பாளேதான்போகாமல் மணியுமாகிபாங்கான பூநீ றுமணியுமாச்சு, நாளேதான்விட்டகுறை யின்னமொன்று நலமான பச்சைமணிபுகலுவேன்பார், சூளேதான்பூநீறு பலகைதன்னை சுத்த முடன்தானெடுக்க வரிசைகேளே. 379

பச்சைமணி வுற்பத்தி

வரிசையாம்பின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் மகத்தானபுலி ப்பாணிமைந்தாபாரு, பரிசையுள்ளபூநீறு பலகைதன்னைபாங்குபெற ரங்கென்றபூநீர்தன்னை, விரிவுடனேதான்சேர்த்து வுருக்கியல்லோவி ருப்பமுடன் கருக்கட்டிவார்க்கும்போது, சரியானகருவதனில் பாய் ந்துமல்லோ சட்டமுடன்மயிர்ப்பாச்சல் நிறையலாச்சே. 380

ஆச்சப்பாபூநீறுறங்கினாலே வப்பனேபச்சையென்றமணியுமாச் சு, மூச்சடங்கியிருந்ததொரு கருவைத்தானும் முக்கியமாய்வுடைத் துப்பார்யென்னசொல்வேன், பாச்சலுடன்பச்சையென்றமணிதான ங்கே பாங்குடனேசதகோடி யென்னலாகும், மாச்சலுடன் சீனபதி பெண்களுக்கு மார்க்கமுடனேதிவைத்தே னுண்மைபாரே. 381

நீலமணிவுற்பத்தி.

உண்மையாயின்னமொரு மார்க்கம்பாருவுத்தமனே புலிப்பாணி மைந்தாபாரு, வண்மையாஞ்சீனபதிப் பெண்களுக்குவளமான நீலமணிசெய்வேனப்பா, தண்மையாம்பூநீராம் பலகைதன்னில் தகமையுள்ளநீலத்தினுட்படுத்து, பண்மைபெறமூசையிட்டு வுருக்கியல்லோ பட்சமுடன்நீலமணி செய்தான்றானே. 382

செய்யவென்றால்சிறுகம்பி மயிர்பாலந்தன்னில்சிறப்புடனே ஸ்தம்பமது நிறுத்தியல்லோ, பையவேகருக்கட்டி துவாரமிட்டு பாங்குபெறமூசையிட்டு வுருக்கியல்லோ, வெய்யவேமூசையது வுருக்கியேதான் மேன்மையுடன்கருவதனில் பாயும்போது, துய்யதொரு நீலமணியென்னசொல்வேன் துப்புரவாய்சதகோடி யென்னலாமோ.

என்னவேகாலாங்கிநாதர்வாக்கு யெழிலானவேதைமுகம் பொய்யாதப்பா, பன்னவேசீனபதிப் பெண்களுக்கு பாலித்தவேதையது கோடாகோடி, மின்னவேபவளமணிசொல்வேன்பாருவித்தகனேசித்தர்முனிசொன்னதில்லை, நன்னவேநாதாக்கள் தாள்பணிந்து நவிலுகிறேன்பலளமணிநவிலத்தானே. 384

பவளமணி வுற்பத்தி.

நவிலவேமண்பவளமென்னசொல்வேன் நாதாக்கள் சித்துமுனி வந்ததில்லை, சவிலமுள்ளபூநீறு பலகைதன்னை சட்டமுடன் ஈயமென்றசெந்தூரத்தை,குவிலவேமூசையிட்டுத்தானுருக்கி கொற்றவனே மயிர்ப்பாலந்தூணித்தி, பவிலவேகருக்கட்டிவாய்தான்விட்டு பக்குவமாய்வுருக்கியதை யெடுத்துவாரே. 385

வாரக்கவேகருவதுதான் பாய்ந்துமல்லோ வளமானசதகோடிமணியுமாக, ஏர்க்கவேமூசைதனையுடைக்கப்பாரு யென்ன சொல்வேன்பவளமென்றமணிதானப்பா, தீர்க்கமுடன்நாதாக்கள் சொன்னதில்லைதிறமானவேதைமுகங் கண்டுமல்லோ; ஆர்க்கவேசீனபதிமாண்பருக்குவன்புடனே போதித்தமணியுமாமே. 386

கறுப்புமணி உற்பத்தி.

மணியானமணியதுவுமென்னசொல்வேன் மார்க்கமுட னின்னமொருபாகங்கேளு, அணியானபூநீராம்பலகைதன்னிவப்பனேயிரும்பினிடசத்துவாங்கி, துணிவுடனேமூசையிட்டு வுருக்கிக்கொண்டு துப்புரவாய்துவாரமதுவிட்டுமேதான், கணிதமுடன்மயிர்ப்பாலங்கால் நிறுத்திகணக்குடனே சிறுகம்பி ஸ்தம்பமாட்டே. 387

நாட்டியேமூசைதன்னை யெடுத்துமைந்தா நலமுடனே கருவத னில்பாய்ச்சியேதான், வாட்டமுடன்கருவதனையுடைத்துப்பாருவள மானகறுப்புமணிசதகோடியப்பா, நீட்டமுடன் சீனபதிமாண்பருக் குரியமித்தகறுப்புமணி பூநீர்தானும், ஆட்டமது யென்னசொல்வே ன்பூநீராட்ட மப்பனேசித்துமுனி சொல்லாரன்றே. 388

முத்துமணிவுற்பத்தி

அன்றானயின்னமொருமார்க்கம்பாருவருமையுள்ளபுலிப்பாணி மைந்தாகேளு, குன்றானகுளிகைகொண்டு சீனஞ்சென்று கொற்றவ னேயான்செய்த வேதையப்பா, நன்றானநீறுபலகைதன்னை நலமான நவநீதசத்துசேர்த்து, வென்றிடவே தானுருக்கிமூசைகட்டி வேகமு டன்காய்ச்சுதற்கு வகையைக்கேளே. 389

வகையானமயிர்ப்பாலந்தன்னிலப்பா வளமானசிறுகம்பி ஸ்தம் பம்நாட்டி, மிகையானகருவதுவும் வமைத்துமேதான் மேன்மையுட ன்றானுருக்கிமூசைதன்னை, நகையெனவேவகருவதனி லுருக்கிவாருந லமானகருவதுவும்பாய்ந்துமேதான், பகையிலாமுத்துமணியென்ன சொல்வேன்பாலகனே சதகோடியெண்ணலாமே. 390

எண்ணவேமுத்துமணிசூரியன்போ லெழிலானகாந்தியது யெ ன்னசொல்வேன், பண்ணவேரிடிமுனிவர் சித்தராலும் பாருலகில்மு டியாதுயிந்தவேதை, நண்ணவேகாலாங்கி கடாட்சத்தாலேநாட்டிநே ன்சீனபதிமாண்பருக்கு, வண்ணமுள்ளவேதையிது மகாசங்கந்தான் மார்க்கமுடன்பூநீரின் வேதையாமே. 38ட

கல்லுப்புசெந்தூரம்.

வேதையாம்பின்னமொருமார்க்கங்கேளு விருப்பமுடன்சொல் லுகிறேன்வுகந்துபாரு, பாதையாம்மூப்பென்றசெந்தூரத்தைபலபல வாஞ்சாத்திரத்தில் மிகவுஞ்சொன்னார், நீதையுடன்உப்பென்றசெந் தூரத்தை நீட்சியுடனுங்களுக்குமுகஞ்சொன்னதில்லை, சோதையுட ன்பலபலவாஞ்சாத்திரத்தைதோறாமல் கண்டல்லோதுணிவுற்றேனே.

துணியானலவணமென்ற செந்தூரந்தான் துப்புரவாயானுரை ப்பேன்மைந்தாகேளு கனிதமுடனுப்பென்ற கல்லுப்பல்லோ கருத் துடனேசேரதுதான் லொன்றேயாகும், பணிவுடையகுழியம்மி தன்னி லிட்டுபாலகனேமூலிவகை செப்பக்கேளு, துணிவுடனே செவ்வல்லி ப்பூச்சாறுகொண்டு சிறப்புடனே நாற்சாமமரைத்திடாயே. 393

அரைத்துமேநாற்சாமமானபின்பு வப்பனேபில்லையது தட்டிய ல்லோ, வரைத்ததொருரவிதனிலே காயவைத்து வளமான பில்லையது

வலுவாய்ச்செய்து, திரைத்துமேகோழியென்றபுடத்தைப்போடு தீர முடன்செந்தூரமாகும்பாரு, யரைத்துமேயிப்படியே பத்துமுறை யோடு பாங்கானசெவ்வல்லிமூலிதாமே. 364

மூலியாமின்னமொருபாகங்கேளு முனையானபுளியாரைச் சாற் றிலே, சலியாமல்தானரைப்பாய்நாலுசாமம் சட்டமுடன்ரவிதனி லேகாயவைத்து, மாலியுடன்வோட்டிவிட்டுச்சீலைசெய்து மகத்தான ரவிதனிலே காயவைத்து, ஆலியதுவாராமல் புடந்தானப்பாவப்பனே கோழியென்றபுடந்தான்போடே. 395

போடவேசெந்தூரமென்னசொல்வேன் பொங்கமுடனுதாக்க ள்சொன்னதில்லை, நீடவேயிப்படிபத்துபுடம்போடு நெடிதானசெந் தூரமாகும்பாரு, தேடவேயின்னமொருமூலிசொல்வேன் தெளிவா னசெந்தூரமாகும்பாரு, கூடவேமூலியதுதான்பிழிந்து கொற்றவனே தானரைக்கவகையைக்கேளே. 396

கேளப்பாமூலியதுசாற்றிலே கெடிதானவுப்பென்றசெந்தூர த்தை, மாளப்பாநாற்சாமமரைத்துமேதான் மகத்தான வில்லையதுத ட்டியல்லோ, சூளப்பாரவிதனிலேகாயவைத்து சுத்தமுடன்வோட்டி விட்டுச்சீலைசெய்து, ஆளப்பாகோழியென்ற புடத்தைப்போடு வப்ப னேசிந்தூரமாகுங்காணே. 367

காணவேயிப்படியேபத்துமுறைபோடு கயிலாசநாதருடசெந்தூ ரந்தான், தோணவேசெந்தூரந்தனையெடுத்து துப்புரவாய் ஜெயகுரு த மடக்கிப்பாதி, வேணபடித்தானெடுத்துக்கல்வமிட்டு வேதாந்தத்தா ய்தனைமனதிலுன்னி, நீணவேகல்வமதிலிட்டுமைந்தா நீதியுடனரை ப்பதற்கு வகைதான்கேளே. 368

வகையானசெந்தூரமரைப்பதற்கு வண்மையுடனுறுவகைஜெய நீரப்பா, துகையானதுருசுவெடியுப்புக்காரம் தோற்றமுள்ள வருஞ் சாரங்கரியுப்புமாகும், பகையானசீனமது வொன்றாங்கூட்டி பக்குவ மாய்ஜெயநீருந்தானிரக்கி, மிகைபடவேதானரைப்பாய் நாலுஜாமம் மேன்மையுடன்வில்லையது லகுவாய்த்தட்டே. 399

தட்டியேரவிதனிலேகாயவைத்து சாங்கமுடன் வில்லையதுவோ ட்டிவிட்டு, சட்டமுடன்சீலையது வலுவாய்செய்து சாங்கமுடன்புட மதுவுங்கோழியாகும், திட்டமுடன்தான்போட்டெடுத்துப்பாருதிற

மான செந்தூரமாகும்பாரு, வாட்டமுள்ள செந்தூரந்தனையெடுத்து வளமையுடன் முன்போல பகர்ந்துதீடிரே. 400

தீரேதான் செந்தூரமென்ன சொல்வேன் திறமான நவகோடி ரிஷிகளப்பா, பூரேதான் சொன்னார்களிந்தபோக்குவப்பனே யாமுன க்குச் சொன்னோம்பாரு, சீரேதான் நாதாக்கள் சொன்னதில்லை சிற ப்பான கல்லுப்பு மார்க்கவேதை, வீரேதான் பலபலவரஞ் சாஸ்திர த்தில் விருப்பமுடன் பாடிவைத்தார் கோடியாமே. 401

கோடியாம் லவணமென்ற செந்தூரத்தை கொப்பனவே மூலி வகை தன்னிலப்பா,நாடியேயாராய்ந்து சொன்னாரப்பா நலமானசெ யநீர்தான் சொல்லவில்லை, மூடியேதான மறைத்தார் ஜெயநீர்போக் கை முதன்மையா யானுரைத்தேன் ஜெயநீர்தன்னை, வாடியே மயங் காமல் செந்தூரத்தை வளமுடனே செய்யுவனே வாதியாமே.

செந்தூரவேதை மூலம்.

வாதியாஞ் செந்தூரந்தன்னைத் தாக்கவளமுடனே சொல்லுகி றேன் வுண்மைபாரு,சோதியாம் ரசிதமென்ற வெள்ளிதன்னில் துப் புரவாய்ப்பத்துக்கு வொன்றேயீய, நீதியாய்மாற்றதுவு மெட்டேயா கும் நிலையான நாதாக்கள் செய்யும்வேதை, ஆதியாம் தேவரிஷிமுனி வர் தாமுமன்புடனேசெய்த செந்தூரந்தானே. 403

தானான செந்தூரப்போக்கு தன்னைதண்மையுடன் சொல்லுகி றேன் மைந்தாகேளு, கோனான யெனதையர் காலாங்கிநாதர் கொற் றவனார் தாமுரைத்த நீதியாகப், பானனபாராபரியை மனதினின்னி யாச்சப்பா செம்புதனில் பத்துக்கொன்று, மானனமாற்றதுவு மொ ன்பதாகும் மகத்தான் வேதையிது வதிதம்பாரே. 404

பாரேதான் செந்தூரமேகும் போக்குபாலகனே சொல்லுகிறே ன்பண்பாய்க்கேளு, நேரேதான் குடவனிலே பத்துக்கொன்று நேர் மையுடன் தான் கொடுக்கத்தங்கமாகும், சீரேதான் சுயத்தங்கம் பிற வித்தங்கம் சிறப்பானசித்தாது தங்கமாகும், ஆரேதான் செய்வார் கள் பிறவித்தங்கம் வப்பனே யறிவுளோன் செய்வான்காணே.

காணவே செந்தூரம்போகும் போக்குகருவாகச் சொல்லுகிறே ன்பண்பாய்க்கேளும், பூணவேமட்டமென்ற ஆணிப்பொன்னும் பொ ங்கமுடன் களஞ்சியது தூறதாகும், வேணபடி தானெடுத்து மூசை விட்டு விருப்பமுடன் தானுருக்கி குருவொன்றீய, நீணவேமாற்றது வுமொன்பதாகும் நிலையான பிறவியென்ற பசும்பொன்னாமே. 406

பொன்னுன பொன்னல்லோ நாதர்வேதை பொங்கமுடன்யார் செய்வார் வையகத்தில், கன்னுனுக்கருவூரான முன்ஜென்மத்தில்கை லாயநாதரென்ற நடேசருக்கு, தென்னவனும் பாண்டியரின் வுத்தா ரந்தான் தேர்வேந்தன் சொற்படிக்குக் கருவுசெய்து, நன்னயமாய்த் தங்கமென்ற செம்புசெய்து நாதரைப்போல் கருவுசெய்து நாட்டி னுரே. 407

நாட்டினுர் கருவூரார் தங்கமப்பா நாயகனே யித்தங்க மொப்ப தாகும், மேட்டிமையா யனேகம்பேர் சித்துதாமும் மேன்மையுடன் பலபலவாய் வாதஞ்செய்து, தாட்டிகமாய்த் தரணிதனில் பூசைக்கி தாரணியில் வெகுபேர்கள் செய்தார்மாண்பர், வட்டமுடன் காலாங் கிமுறைகள்போல வையகத்தில் கண்டதில்லை யாருந்தானே. 408

தானுன செந்தூரந்தன்னையப்பா தன்மையுடன் மண்டலந்தா ன்கொண்டபேர்க்கு, கோனுன காலாங்கிநாதர்தாமுங் கொற்றவனுர் குருசொன்னவாக்குபோலே, பானுனசட்டையது மிகவேநீங்கி பள பளத்து தேகமது மின்னம்பாரு, மானுன மயேஸ்வரியாள் நிர்த்தஞ் செய்வாள் மன்னவனே யுந்தமக்கு வழிசொல்வேனே. 409

சொல்வேனே யின்னமொரு மார்க்கங்கேளு துப்புரவாப் புலிப் பாணி மைந்தாபாரு, வல்லதொரு செந்தூரந்தனை யெடுத்துவளமு டனே கிருதங்களெக்கியங்கள், புல்லறிய செந்தூர மனுபானத்தினு ல் பொங்கமுடன் தான்கொடுக்க காயகற்பம், இல்லையே மற்றொரு செந்தூரத்தா லெழிலான வர்ணமிது யில்லைதானே. 410

## போகர் நீலாஞ்சனக் கல்கண்டது.

தானுனயின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் தகமையுள்ள புலி ப்பாணி மைந்தாகேளு, கோனுன யெனதையர் காலாங்கிநாதர் கொ ற்றவனுர் குருசொன்ன நீதியப்பா, தேனுன மனோன்மணியாள் கடா ட்சத்தாலும் தெளிவான வஞ்சனமாஞ் சல்லியப்போக்கு, மானுன வண்டமென்ற காகமப்பா மகத்தான சத்தூறுவருஷமாமே. 411

நூறுனவருஷமது கடந்தகாகம் நுட்பமுடன் கண்டறிந்து மை ந்தாகேளு, நாறுனவண்டமென்ற காகமப்பா நலமானதாகமது கொ ண்டுவந்து, மாறுனவுயிரதுவும் போக்கியல்லோ மகத்தானசிரசதனை சோதித்தாக்கால், கூறுனநீலஞ்சனக் கல்லுதானும் கொற்றவனே யிருக்குமது பாருபாரே. 412

பாரேதான் நீலாஞ்சக்கல்லுதன்னை பட்சமுடன் தானெடுத்து மைந்தாகேளு, சீரேதான் பதனமது செய்துமல்லோ சிறப்பானவை யகத்தில் மாந்திரீகவானுய்,நேரான ராஜாதிராசர்தானும் நேர்மையு

டன் சமாதிவைத்த நிதியனைத்தும், கூமேதான் சல்லியமாம் வித்தை தன்னால் குறிப்பான வஞ்சனத்தா லெடுக்கக்கேளே. 413

கேளேதான கருவென்றமைதானப்பா கெணிதமுடன் உள்ள ங்கைதன்னிற்றேய்த்து, சூளேதானஞ்சனமாங் கல்லைத்தானும் சுத்த முடன் வுள்ளங்கை தன்னில்வைத்து, பாளேதான் யோகாமலஞ்சன த்தை பஞ்சமுடன் தான்பார்க்கநிதிகள் தோன்றும், ஆமேதான்திர வியத்தை யெடுக்கலாகு மப்பனே நீலாஞ்சமகிமைபாரே. 414

மகிமையாம் யின்னமொரு மார்க்கங்கேளு மகத்தான நீலாஞ்ச க்கல்லினாலே, அகிலமெல்லா நிதியெடுக்க யிதனாலாகுமப்பனே யஞ் சனமுமிதற்கீடல்ல, முகியாமல் சித்தர்முனி ரிஷிகள்தாமும் மூர்க்க முடன் சாஸ்திரங்களனேகஞ்செய்தார், தகியுடனே நீலாஞ்சக்கல்லி ன்மார்க்கம் சாற்றவில்லை சித்தர்முனி ரிஷிகள்தாமே. 415

தரமான சாஸ்திரத்தினுளவுகண்டு தண்மையுடன் சீனபதிப் பெண்களுக்கு சாமானமாகவல்லோ குளிகைகொண்டு சட்டமுடன் சீனபதிக் கேகினேன்யான், நாமேதான் சொன்னபடி நீலாஞ்சனத் தை நாட்டமுடன் போதித்தேன் மாண்பருக்கு, வேமேதான் சீன பதிப்பெண்களெல்லாம் வேகமுடன்தெரிசனத்தைக் கண்டார்தாமே

கண்டாரே யின்னமொரு மார்க்கங்கேளு கனமான சீனபதி மாண்பரெல்லாம், தெண்டமுடன் காலாங்கிநாதருக்கு தேற்றமுடன் சீர்பாதந்தாள்பணிந்து, வண்டணிமார் பெண்களெல்லா மாலோசித் து வளமான வண்டமென்ற காகந்தன்னை, கொண்டுவர தம்மனதி லாலோசித்து கொம்பனைமாரெந்தனுக்கு ஓதினாரே. 417

ஓதவேசீனபதிப் பெண்களல்லோ வுத்தமர்களெல்லவருமொன் றாய்க்கூடி, நீதமுடன் காகமதைத்தேடும்போது நிலையான காகமது காணமற்றான், வேதமுடன் வெள்ளையென்ற காகந்தானும், வெட்ட வெளி கானகத்தில் காணலாச்சு, ஆதமுடன் காகமதைக் கண்டுமல் லோ வப்பனே கல்லதனை யெடுத்தார்தானே. 418

தானான கல்லதனை யெடுத்தபோது தண்மையுள்ள கல்லதுவும் வெண்மையாச்சு, கோனான குருசொன்ன வாக்குபோலகொற்றவனே நிலமென்ற கல்லேயில்லை, பானானமாண்பரெல்லாம் பலபேர்கோடி பண்பான யோசனைகள் செய்திட்டார்கள், மானானதேசமது வெண் மையப்பா மகத்தானகாகமது வெள்ளையாச்சே, 419

ஆச்சப்பா நீலாஞ்சக்கல்லுதன்னைவப்பனே பரிட்சையது செய்யும்போது, மூச்சடங்கி முன்போன காகத்தின்கல் முளையான நீலமென்ற வாணத்தாலே, பாச்சலுடன் வையகத்தில் நிதிகளெல்லாம் பாங்குடனே யெடுப்பதற்குப் பண்பதாச்சு ஆச்சரியமானதொரு வெண்காகத்திலன்பான கல்லதுவும்வோடா தன்றே. 420

வன்பான கல்லதுவும் வெண்மையாச்சு வப்பனே திரவியங்கள் எடுக்கலாச்சு, வென்றிடவே நீலாஞ்சகல்லினாலே விருப்பமுடன் வையகத்தில் நிதியனைத்தும், குன்றுனமலைபோலே யெடுக்கலாகும், கொற்றவனே நீலமென்ற கல்லினாலே, வென்றிடவே நவகோடி ரிஷிகளெல்லாம் வேகமுடன் கண்டறிந்து மறந்தார்தாமே. 421

சீனபதிப்பெண்கள் வெண்காக வஞ்சனக்கல்லால்
வானத்திலதிசயங் கொண்டது.

மறந்தாரே வெகுகோடி ரிஷிகளப்பா மகத்தான சிடிகையென்றவேதைதன்னை, துறந்தாரே காலாங்கிநாதர்தாமும் துப்புரவாய் வையகத்து மாண்பருக்கு, சிறந்ததொரு நூல்பார்த்துக் கண்டாராய்ந்து சிறப்புடனே சொன்னதொரு நீதியெல்லாம், கறந்ததொரு பால்போல யிருக்குமப்பா காலாங்கி சொன்னதொரு வாக்குமாச்சே.

வாக்கான சீனபதிப் பெண்களெல்லாம் வளமுடனே வெண்காகங்கல்லெடுத்து, நோக்கமுடன் வுள்ளங்கை சஞ்சனத்தில் நுணுக்கமுடன் கல்லதனை கையில்வைத்து, ஏக்கமுடனாகாயந்தன்னைக் காணவெழிலான வதிசயங்களுள்ளதெல்லாம், ஆக்கமுடன் தோன்றிற்று மாண்பருக்கு வப்பனே வானவதிசயங்கள் தானே. 423

அதிசயமாம் வானத்துள் மார்க்கமெல்லாம் வப்பனே சப்தலோகமெல்லாம் தோன்றும் பதியான வையகத்தினதிசயம்போல் பான்மையுடன் வானத்தினதிசயங்கள் மதியான சந்திரனுஞ் சூரியன்றன்மகத்தான வருந்துதியுங் காணலாகும், துதியானகைபாகம் பார்தான் காண்பார் துப்புரவாய் சீனபதிமாண்பர் தாமே. 424

மாண்பரா மின்னமொரு மார்க்கங்கேளு மகத்தான சீனபதிப் பெண்களெல்லாங், காண்பான வெள்ளைவென்ற காகந்தன்னில் கருத்துடனே கல்லதனைக் கண்டாராய்ந்து, மாண்பான வையகத்தோர் பிழைக்கவென்று மார்க்கமுடனெந்தனுக்கு வுபதேசித்தார், ஆண்பானவுபதேசம் பெற்றுமல்லோ வன்புடனே குளிகைகொண்டு வந்திட்டேனே. 425

வந்தேனே சீனபதிவிட்டுமைந்தா மகத்தான குளிகையது பூண்டுகொண்டு,அந்தமுடன் வையகத்து மாண்பருக்கு வன்புடனேயான்

கண்ட வித்தையெல்லாம், சொந்தமுடனுபதேசஞ் செய்யவெண்ணி துப்புரவா யதிகமெல்லாம் வுரைத்தேனப்பா, பந்தமுட னென்னுரு ம்பதாம்புயத்தைப் பற்றியல்லோ பதவிவழி நடந்திடாயே

போகர் சீனபதிப்பெண்களுக்கு ஈடுரைத்தல்.

நிற்கவே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் நிலையான புலிப் பாணி மைந்தாகேளு, வற்பமென்று நினையாதே யிந்தப்போக்கு வரு மையுள்ள சீனபதிப்பெண்களுக்கு, சொற்பதமாய் ஈடொன்று சிடி கை வேதைசெப்பினேன் சீனபதிப்பெண்களுக்கு, வுற்பனமாயானு ரைத்தகைமசக்கு வுத்தமனே ஈறுவகை சொல்வேன்பாரே. 427

பாரேதான் மருளினூமத்தைவித்துப் பாங்கானநாய்ப்பா கல்வி த்துங்கூட்டி, நேரேதான் சாதிக்காய் தன்னேடொக்க நேர்மையுட ன்கொவ்வையுடவித்துதானும், சீரேதான் சுழல்வண்டு தானுமப்பா சிற்பானே குழியானைத் தானுங்கூட்டு, வீரேதான் காந்தமது தானு ங்கூட்டி விருப்பமுடனீப் புலியுங்கூடக்கூடே. 428

கூட்டியே மதனபூவம் வபின்கிராம்பு கொற்றவனே பேய்க்கரு ப்பஞ்சாற்றுலாட்டி,வாட்டமுடன் தானரைப்பாய் நாலுசாமம் வகை யாக யிடைசரியாய்த் தானரைப்பாய், நாட்டமுடன் பயிரதுபோல் திரட்டிமைந்தா நயம்பெறவே குளிகையது செய்துகொண்டு வாட்ட முடன்மதியீடு பெண்களுக்கு வப்பனே கொடுத்துவிட வகைதான் கேளே. 429

வகையான குளிகைதனைப் பதனம்பண்ணு வன்மையுட னறக வையாந் தண்ணிற்றுனும், சிகையான பார்த்தவகை தன்னிற்றுனும் சிறப்புடனே யுனதுவிந்து கூடச்சேர்த்து, பகையான மாதர்கட்கு கொடுத்தாயானல் பண்பான மனதுவந்து பிரியமாகி, திகையான மதிமயக்கங் கொண்டுமல்லோ தீரமுடனுன்னைவந்து யனைவார்கானே

காணவே கேட்டதெல்லா முந்தனுக்கு கனமுடனே தான்கொ டுத்து விநோதஞ்செய்வார், பூணவேகிருஷ்ணவ தாரனைப்போல பொ ங்கமுடன் மதனகனையைத தீரவாயப்பா, ஊணவே ராஜாதிராஜர் போலும் வப்பனே சிற்றின்பவாசைதன்னை, காணவே வையகத்தில் அனுபவித்து காட்சியுடனென்னாளும் பதங்கொள்வாயே. 431

கொள்ளவே யின்னமொரு பாகஞ்சொல்வேன் கொற்றவனே புலிப்பாணி மைந்தாகேளு, விள்ளவே சித்துமுனி ரிஷிகள்தாமும் வெகுவாய்ப் பாடிவைத்தா ரீடுமார்க்கம், மெள்ளவே யவர்களுடசாத்

திரங்கள்மேதினியில் வெகுபலவாய்க்கண்டேன்யானும், கள்ளமில்லா முரையனைத்தும் கோடாகோடி காசினியில்விருப்பமுடன்பாடினாரே

அடைக்கலக் குருவியினீடு.

பாடினாரனேகவிதை யீடுதானும் பண்பானமாணாக்கள் பிழைக்கவென்று, தேடியே புலிப்பாலிமைந்தாகேளு தெளிவான யீடொன்றுசொல்வேன்பாரு, நீடியேலடைக்கலமாங் குருவிதானும் நீண்மையுடன்கொண்டுவந்து செப்பக்கேளீர், ஆடியேமயிர் போக்கிக் குடல்கள்போக்கி வப்பனே சூதமுடன் காந்தந்தானே. 433

தானான பாஷாணக் கெவுரிதானும் தாக்கான தாளகமுமொன்றாய்க்கூட்டி, மானானகெஞ்சாவின் வித்துஞ்சேர்த்து மகத்தானயெலிப்பகையுங் கூடச்சேர்த்து, தேனான குடோரியது சமனதாக்கு தேட்டமுடனடைக்கலத்தின் வாயிலூட்டி, பானானகலசமென்ற குடுவை தன்னில் பாங்குபெறதானமைத்து வன்துவூட்டே. 434

ஊட்டியே சாராயமென்றவஸ்து வுத்தமனேதான்சேர்த்து தீயில்வைத்து, தாட்டிகமாய் ஆமத்தின் விறகினாலே தகமையுடன்றானெரிப்பாய் நாலுசாமம், நாட்டமுடன் சாராயசுண்டமட்டும் நலம்பெறவே தானெரித்து யெடுத்துமைந்தா, கூட்டியே குழிக்கல்லில் தன்னிலிட்டு கொற்றவனே சாற்சாம மரைத்திடாயே. 435

அரைத்துமே பயிரளவாய்க் குளிகைசெய்து வன்பான சிமிழ்தனிலே பதனம்பண்ணு, திரைகடலிலுள்ளதொரு மாண்பர்தம்மில் திறளான கர்மிகளும் மர்மிகளுமுண்டு, வரையான கர்மிகட்கு சொல்வேன்பாரு மகத்தான குளிகைதனை மீவாயப்பா கவையான குளிகைதனை மீய்ந்தபோது கனமானரோகமது பலிக்குந்தானே.

தானான பரியாசஞ் செய்தபோக்கு தாக்கான தருமத்தைக்கெடுத்தபோக்கு, மானானசமுசார வாழ்க்கைதன்னை மார்க்கமுடன்தான்கெடுத்த பாவிகட்கும், கோனானகுருதனையே துரோகஞ்செய்து குடிகெடுத்த சண்டாளர் துரோகிகட்கு, தேனான ஸ்திரீசங்கஞ்செய்துமல்லோ தெருதனிலே வலையவிட்ட பாவிக்காமே. 437

பாவியாஞ்சிசுவதைகள் செய்தபேர்க்கு பாருலகில் கருதனையே யழித்தபேர்க்கு, ஆவியுடன் காயமதை யழிக்கவல்லோ வழும்புமிக செய்ததொரு பாவியோர்க்கு, நாவிதனைப் பால்தனிலே கலந்தபேர்க்கும் நட்பான நேசமதைக் கெடுத்தபேர்க்கும், காவிகாஷாயமதுபூண்டஞானி கருவானசித்தர் தமைக்கெடுத்தோர்க்கே. 438

கெடுத்துமேநயம்பேசிக்காரங்கள்பேசி கெடுவழிக்குயே துவகைத்
துரைகள்பேசி, அடுத்ததொருகதபாத்திர முள்ளபேரை அகடான
வார்த்தைகளுமிகவுங்கூறி, கொடுத்ததொருபொருடனேயேமோசஞ்
செய்துகொற்றவர்க்குத் துரோகமது செய்தபேர்க்கும், தடுக்காமல்
கொடுக்குமொருபுண்ணியோரை தவிர்க்கவேசெய்வதற்கு மொழி
தான்கேளே. 439

கேளேதான்நம்பியே துரோகஞ்செய்தநெடுங்கால சண்டாளமா
ண்பருக்கும், நாளேதான் போகாமல் கூலிவாங்கி நலம்பெறவே தொ
ழில்தனையேகெடுத்தபேர்க்கும், பரவேதான்பார்த்தவுடன் நயங்கள்
பேசிபண்பாகக்காணுட்டல் முறைகள்பேசி, ஆளேதான் கண்டவுட
ன்கூறுபேசி அவனிதனிலிருந்ததொரு மாந்தருக்கே. 440

மாந்தராமன்னமிட்டபுண்ணியோரை மார்க்கமுடன் கன்னமிட்
டபாவியோர்க்கும், சாந்தகுணமுள்ளதொருசிஷந்தம்மை சாங்கமு
டநிபந்தனைகள் செய்தபேர்க்கும், போந்தமுடன்பிணியாளம்தம்மை
யல்லோ பொங்கமுடன்நிதிகெட்டுப் பிணிதீரார்க்கும், பாந்தளென்
னும்பாணமது கையிலேந்தி பாராமல்விட்டதொரு பாவியோர்க்கே.

பாவியாஞ்சண்டாளமூடருக்கும் பாரினிலே வெகுகுடியைக்கெ
டுத்தபேர்க்கும், காதினில் யமலோசைக்கேட்டுமல்லோ கண்களித்து
ப்பாராமல்கொன்றபேர்க்கும், தீவினையாலென்னுளும் மடிந்தபேயர்
திறமானநிதிகொடுத்ததுத் தீராதுரோகி, பாவியெனும்பண்டிதர்கள் நி
தியைவாங்கும் பண்பானகருமிகட்கும் வேண்டும்பாரே. 442

பாரேதான்கோயில்தனையிடித்தபேர்க்கும் பாங்கான வாலயத்தி
ல்தீபந்தன்னை, நேரேதான்விற்றல்லோ சிலைகள்தன்னைநேர்மையுடன்
கொள்ளைகொண்ட துரோகிமார்க்கும், சீரானமடுக்கள்குளமடைத்த
பேர்க்கும் சிறப்பான பண்டிதரைப் பழித்தபேர்க்கும், ஆரோதான்
நடுச்சாமவழியிலப்பா அபகரித்துக்கொள்ளைகொண்ட கருமிகட்கே.

கருமியாந்தேவபூசைக்கெடுத்தபேர்க்கும் கலியாண மணமுகூர்
த்தமழித்தபேர்க்கும், மருமமாய்வஞ்சனைகள் வதிகங்கொண்டு வைய
கத்தில் வியாபாரமோசங்கூறி, தருமமாய்நியாயமது மிகவேபேசிதக
மையுடன் வியாபாரமுடக்கல்செய்து, குரூரமதுதன்மனதிலுள்ளட
க்கி குடிகெடுக்குஞ்சண்டாளர்க்காகுந்தாபன. 444

தானானசகோதரை துரோகஞ்செய்து தண்மையுடன் வீடுமனை பறித்தபேர்க்கும், கோனானகுருமாது பத்தினியைத்தானும் குணம் பேசிவலகழித்த கள்வனுக்குப், மானானமகதேவர்தன்னைத்தானும் மண்டலத்தில்குறைபேசி வைத்தபேர்க்கும், பானானவகதிபர தேசிதன்னைபறக்கடித்தபாவிகட்கும் வேண்டுபாரே. 445

வேண்டியேநம்பியதோர் நிதிகள்தன்னை வேட்கமுடன் மோசமதுசெய்தபேர்க்கும், கூண்டதனில் பட்சிகளைத்தானடைத்து குறைகேடாய்கானகத்திற்சோரமற்றான், ஆண்டியைத் தானடித்து வகடு பேசிவனியாயஞ்செய்ததொரு கர்மிகட்கும், தூண்டிதனில் மச்சமதைப்பிடித்தபேர்க்கும் துர்மார்க்கப்பாவியர்க்கு வேண்டுங்காணே.

காணவேகணவனைத்துரோகஞ்செய்து காணாமல்சோரமதுசெய்தபேர்க்கும், பூணவேபுருஷக்கு மருந்துசெய்து பொங்கமுட னன்னமதிலிட்டபேர்க்கும், கோணவேசாராயந்தன்னிற்றானும் துப்புரவாய் மருந்திட்டபாவியோர்க்கும், வேணபடியுபசாரமிகவுங்கூறி விருந்ததனில்மருந்திட்ட பாவியோர்க்கே. 447

மருந்திட்டபாவிகட்கும் சண்டாளர்க்கும் மகத்தானகணவனுக்குநயங்கள்பேசி, விருந்திட்டுசோரநாயகனுக்காக விருப்பமுடன் மருந்துவைத்துக்கொன்றபேர்க்குப், திருந்தவேபொன்னதனைப் புதைத்துவைத்து தீர்க்கமுடன்பிறருக்கு பொய்சொன்னோர்க்கும், அருந்தவேமுகம்பார்த்து வன்னந்தானார் வவனிதனில் கண்டாக்கிதுதான் பாரே. 448

பார்க்கவேபச்சைமரம் வெட்டினோர்க்குரு பாங்கான ஜீவவதை செய்தபேர்க்கும், ஏர்க்கவேயுதாசினங்கள் மிகவுங்கூறி வெளிதாக போர்தனிலேசண்டையிட்டு, மார்க்கமுட னனியாயமிகவுஞ்செய்து மடிபிடித்து சண்டையிட்டபாவியோர்க்கும், ஆர்க்கவேகுளிகைதனை யெடுத்துமைந்தாவப்பனே யனுபானந்தன்னில்தாக்கே. 449

தாக்கவேநெய்தனில் வெண்ணைப்பா தண்மையுடன்மூன்றுநாள்கொடுப்பாயப்பா, நாக்கமலம்வுந்தியெனும் படிகந்தன்னில்நலமான குளிகைபதுவூரியல்லோ, தேக்கமதுககாண்டல்லோ நான்காநாளில் திறளானகாத்தனது வதிகமாகி, நோக்கமுடன்கண்சிவந்து சுரமுண்டாகி நோயதுவும்பிறக்குமது திண்ணம்பாரே. 450

## கருமிகட்கு ரோகவுற்பத்தி.

திண்ணமாம்வெகுகோடி போக்குசொல்வோன்திகழாககுளிகை யது கொண்டபோது, வண்ணமாஞ்சுரமதுவும்மிகுதியாகி வளமுட னேதீராதரோகமாகும், நண்ணவேபண்டிதரை மிகவேதேடி நயமுட னேரோகமது தீர்ப்பதற்கு, குண்ணியே மனதுவந்து மருந்துகொள் வார் கூறுனரோகமது ஜெனிக்குந்தானே. 451

தானனகுளிகையதுகொண்டபேர்க்குத்தகமையுடன் மருந்தறி ந்தினோர்கட்கெல்லாம், கோனன சுரமதுவுமதிகமாகிகொப்பெனவே தீராதநோயுமாகும், தேனன மருந்ததனையருந்தாமற்றுன்தெளிவான புத்தியுடன் மனதுவந்து, மானனமகதேவர்தன்னைநோக்கிமகத்தான வேண்டுதலுங் கேட்கான்றே. 452

நன்றான வேண்டுதலின் கோளேதென்றால் நலமானகாமத்தால் வந்தரோகம், குன்றானவாய்மதத் தால்வந்தரோகம்கூறுனசாபத்தால் வந்தரோகம், வென்றிடவே மாந்தரிடகைமசக்கால் வினையினால்வந்த தொருரோகந்தானும், சென்றமேயாராய்ந்துமிகநினைத்து செம்மனு டன்பரிகாரஞ்செய்யநன்றே. 453

செய்யவேசிலகாலஞ் சென்றபின்பு சீருடனே நீர்சென்றுயவர் கள்வாசல், பையவேபரிகாரம் மிகவும்பார்த்துபட்சமுடன்கடவுளுக் குப்பொதுவதாக, மெய்யானரோகமதை தீர்ப்பேனென்றமேன்மை யுடன்வழிபாடுமிகவுரைத்து, துய்யதொரு பதாம்புயத்தை மிகவே நண்ணி துப்புரவாய்க்கியாழமதைக் கொடுத்திடாயே. 454

கொடுக்கவேபட்சமதுமிகவேவைத்து கொப்பெனவேகியாழமது சொல்வேன்கேளீர், அடுத்ததொருவெண்குன்றிவேரைதானுமடவாக மூலியொடுசமூலங்கூட்டி, தொடுத்துமே கூகைநீர்தானுஞ் சேர்த்து துப்புரவாய்க்கியாழமது கொடுத்தபோது படுத்ததொரு சுரமதுவும் நாட்குநாளாம் பாங்குடனே தீருமெனப்பகருவீரே. 455

பகரவென்றால் நோய்தீர்ந்தமாண்பருக்கு பட்சமுடன் மனது வந்துவுரைக்கக்கேளீர், நிகரமுடன்நல்லோர்கள்தம்மையப்பாநிகட்சி யுடன்வுதாசினங்கள் கூறவேண்டாம், சிகரமுடன் வுத்தமரைப்பகடி செய்துசீறலுடனவர்தனையே கொடுக்கவேண்டாம், சகரமுடன் வுப தேசவார்த்தைகூறி சட்டமுடனவர்பாதம் பணிகுவீரே. 456

பணியவேயுந்தமக்குகாட்சிசெய்தும்பாருலகில்வினைதநக்குஆளு மாகா, அணிகடவுள்செய்கையினாலுந்தமக்கு வப்பனேநினைத்தவண் ணம்லபிக்கும்பாரு, துணிவுடனே காயாதிகற்பங்கொண்டு புதிதான

திரேகம்போலாகும்பாரு, மணியானவுபதேசஞ்செய்துமல்லோ மார்க்கமுடன் வாழ்கவென்று வரமீய்வாயே 457

## ஸ்ரீவசியவாடை

வரமானவரமதுவுமென்னசொல்வேன் வகையான மார்க்கமது சொல்வேனப்பா, உரமுடையபுலிப்பாணிமைந்தாகேளு வுத்தமனே யுந்தமக்குச்சொல்வேனப்பா, சிரமானவசியமென்றுபொடிதானப்பா சிற்பரனேகாலாங்கிசொன்னவாக்கு, வரமதுவும்பொய்யாதுமகிமை மெத்த வண்மையுடன் சொல்லுகிறேன் பண்பாய்க்கேளே. 458

பண்பான பொடியதுவுமென்னவென்றால் பாங்கானமசானமதி லிறந்துபோன, நண்பான தந்தமது முன்னிரண்டு நலமானதந்தமதைக் கொண்டுவந்து, திண்பானபிரேதமது மேலேசாற்றும் திறமானமாலையதுபூவின்வாடை, கண்பானசுட்டதொரு யெலும்புதன்னில் கலங்காமல் சாம்பல்தன்னை யெடுத்திடாயே. 459

எடுப்பாயேகாடாற்றுமுன்னதாக எழிலானசாம்பல்தனை யெடுத்துமைந்தா, கொடுத்துதே சானமதில் பறக்குகின்ற துப்புரவாய்த் தும்பிதனைக்கொண்டுவந்து, படுத்ததொரு வாத்மஜலந்தானுங்கூட்டி பாங்கானவாடையென்ற காற்றுதன்னில் அடுத்துமேபறக்குமாவிலை தானப்பா வப்பனேதான் சேர்த்துயெடுக்கநன்றே. 360

நன்றானகருவதனை யொன்றாய்க்கூட்டி நாயகனேபொடியதுவாய்ச்செய்துகொண்டு, குன்றானமனோன்மணித்தாய் கிருபையாலும் கோவேந்தர்காலாங்கி கிருபையாலும், பன்றாகசிமிழ்தனிலே யடைத்துக் கொண்டு பாங்குபெற சின்மயத்தை மனதிலுன்னி, வென்றிடவே பூமிதனில் வீடமைத்து விருப்பமுடன் நவகோணங்கீறிடாயே.

கீறவேநவகோண மென்னவென்றால் கிருபையுடன் சொல்லுகிறேன்மைந்தாகேளு, ஆறவேகோணமதில் நின்றுகொண்டுவப்பனே ஓங்காரம்மனதிலுன்னி, மாறலென்ற வட்சரமாய்யௌவும்சௌவும் மகத்தான ரீங்ரீங்ஐயுங்கிலியுமாற, தூறலதுவாராமலெளியபாலா துப்புரவாயட்சரத்தையோதிடாயே. 462

ஓதையிலேலட்சமதுவுருவுபோடு வுத்தமனேமனோன்மணியாள் நிர்த்தஞ்செய்வாள், நீதமுடன் தரிசனைகள் கண்டபோது நீனினைத்த காரியங்கள் சித்தியாச்சு, சாதனைகள் செய்தாலேயெல்லாஞ்சித்தி சட்டமுடன் வையகத்தில் மாந்தர்கவாளுய், தோதகமுடன் தாமிருந்துவாழ்க்கைபூண்டு தோறாமலஷ்டசித்தியாடுவாயே. 463

ஆடவென்றால்கருவென்ன பொடிதானப்பா வப்பனே நீ நினைத்தமாதுதன்மேல், போடவேமனதுவந்துவசியமாகி பொங்கமுடன் பின்னேயதுதுடறுவாள்பார், நீடவேதொடர்ந்ததொருமாதுதன்னை நீநினைத்த கலவிதனிலனுபவித்து, சாடவேயென்னாளும் பட்சம்வைத்து சட்டமுடன் பாதுகொள்ள நினைப்பீர்தானே. 464

தானானகாலாங்கிசொன்னவாக்கு தாரணியில்பொய்யாதுமெய்யேயாகும், கோனானகருக்கள்வித்தைகோடிசொன்னார் குவலயத்தில் செய்வதற்குயாராலாகும், தேனானவித்தையதுசிடிகை வேதைசெப்பினே னுந்தமக்குக்கூர்ந்துபாரு, மானானவையகத்தில் சித்தனைப்போல் மாசற்றுயென்னாளும்வாழ்குவீர 465

வாழ்கவென்றாலின்னமொரு மார்க்கங்கேளு வகையானபுலிப்பாணிமைந்தாபாரு, ஆழ்கடலுஞ் சத்தசாகரமுந்தாண்டி வப்பனே காலாங்கித்தாள்பணிந்து, மூழ்கியேசகலநதி தீர்த்தமாடிமூதுகிலகில் குளிகைகொண்டு வந்தேன்யானும், பாழ்நகர தேசமது வனேக முண்டு பார்த்தேனே வெகுகோடி வித்தைதானே. 466

அடைக்கலபட்சிகூடு.

தானானவித்தையது கோடாகோடிதகமையுள்ள கண்மணியேயின்னங்கேளு, கோனானயெனதையர்காலாங்கிநாதர் கொற்றவனார் தன்பாத கிருபையாலே, பானானபட்சியது வடைக்கலந்தான் பண்பான ஆண்பட்சிக்கொண்டுவந்து, மானானமடமாதர் சுரோணிதந்தான் மகத்தானவாத்மஜலங்கூடக்கூட்டே. 467

கூட்டியேரெண்டையுந்தான் பட்சிதன்னில்குறிப்புடனேவாயியிடதன்னிலூட்டி, தாட்டிகமாய் மண்கலசந்தன்னில்வைத்துதம்மையுடன்மண்சீலை யேழுஞ்செய்து, வாட்டமுடன்வாலுகையாமேந்திரத்தில் வளமுடனேதானெரிப்பாய் வைந்துநாளும், தேட்டமுடன் தீயாறி யெடுத்துப்பாரு தெளிமையுடன் தவனமென்றபற்பமாச்சே.

ஆச்சப்பா பற்பமது யென்னசொல்வேனாறிவாரடைக் கலத்தின்வசியயீடு, மூச்சடங்கிப்போனதொரு தேகந்தானும் முனையானயீடுதன்னால் மோகமாகி, பேச்சதுவும் பேசுதற்கு முன்னேதானும் பேரின்பந்தனைமறந்துகல்விகட்கும், ஆச்சப்பாபற்பமதையனுமானத்தில் வப்பனெகொடுத்திடு கவசியமாமே. 469

வசியமாமனுபான மேதென்றாக்கால் வளமானபரணி யென்ற தண்ணீராகும், கசிதமுள்ளதண்ணீரில் சிடிகைதாக்க கருவான பற் பத்தால்வசியமாவார், நிசிதமுள்ள மாதர்களும் வசியமாகி நிலையான கலவிக்குழைவ்யலாகி, முசிதமுடனென்னாளுமுந்தன்பக்கல்மோகித்து யுனையணைந்து வணங்குவாரே. 470

வணங்கியே சதாநித்தமுந்தன்பக்கல் வளமான நிதியனைத்து முனக்கேயீவார், சுணங்கமது வாராமலெந்தநாளும் துப்புரமாயுனைப் பணிந்துபோற்றுவார்கள். மணங்கமழும்லீலாவிம்னுதந்தன்னில்மார் க்கமுடனென்னாளும் பட்சம்வைத்து, இணங்கியே பரபுருஷர் முக மும்பாராரெழிலான வடைக்கலந்தன்வசியம்பாரே. 471

அண்டங்காக்கைவசியவாடை.

பாரேதான்யின்னமொரு கருமானங்கேள் பட்சமுடன்யானு ரைப்பேன் மைந்தாகேளு, சீரேதான் காலாங்கிநாதர்தம்மால் சிறப் பானவித்தையதுசிடிகைவேதை, நேரேதான் நூறாண்டுசென்றகாகம் நெடிதான காகமதுகொண்டுவந்து, நீரேதான்காகமது வாயிலப்பா திகழான கறுப்பனென்ற பூச்சிதானே. 472

தானானகாகமது சொல்லக்கேளு தண்மையுள்ள புலிப்பாணி மைந்தாபாரு, வேனானகாகமது தன்னிலப்பா விருப்பமுடன் பூச்சி தனை யூட்டியேதான், கோனானமண்டாண்டங் கலசமப்பா கொற்ற வனே தாளியிட்டு சீலைசெய்து, தேனானவாலுகையா மேந்திரத்தில் தேற்றமுடன் தானமைத்து யெரித்திடாயே. 473

எரிக்கவென்றால்விறகதுவுமென்னசொல்வேன்யெழிலான வூம த்தைவிறகேயாகும், நரிக்கியேநாறசாமந் தீயைமூட்டி நலமாகத்தா னெரிக்கபற்பமாகும், முரிக்கவேபற்பமதை யெடுத்துமல்லோ முனை யான பற்பமதை பதனம்பண்ணு, சிரிக்கவே பற்பமதை யெடுத்தே மைந்தா சிறப்பானவாத்மஜலந்தன்னிற்கூட்டே. 474

கூட்டியேபற்பமதை யெடுத்துமைந்தாகொப்பெனவே மாண்ப ருடமேலிற்றாலும், தாட்டிகமாய்தூவி வரப்பலனைக்கேளும் சட்ட முடன்மாண்பரெல்லாம் வசியமாவர், வாட்டமுடன்கேட்டதெல்லா முனக்கே மீவார்வளமான வஷ்டசித்து விதனாலாகும், மாட்டிமையா யென்நாளுமுந்தனுக்குமகிழ்ச்சியுடன்கேட் டதெல்லாந்தருவார்பாரே

தருவாரேயுந்தனது பொடியேபட்டால்தாரணியிலுள்ளதொரு
மாண்பரெல்லாம், குருவானகுருவிலர்தா னென்றுசொல்லி கொற்ற
வனையுந்தனையும் பணிகுவார்பார், திருவானமாமுனியின் கடாட்ச
த்தாலே சித்திக்குமஷ்டசித்து கைக்குள்ளாகும், நிருவாணி மயேஸ்
வரியாளெந்தநாளும் நீதியுடன்வுன்பக்கல் நிற்பார்பாரே. 476

நேத்திராஞ்சன மை

நிற்பாரேயின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் நிலையான புலிப்
பாணிமைந்தாகேளு, அற்பமென்றுநினையாதே யருள்மைந்தாபார்
அருமையுள்ள காலாங்கிசொன்னநீதி, சிற்பரனார் யெந்தன்குருவாக்
குதானும் சீருலகிலொருநாளும் பொய்யாதப்பா, துப்புறவாய் தகர
முடன்தாரஞ்சேர்த்து துகையானவெள்ளையென்ற பட்டுதானே.

தானானசீலையதுதன்னில்மைந்தா தண்மையுடனிரண்டையுந்தா
னதனிற்சுற்றி, மானானவெள்ளையென்ற கடுகுதானும் மகத்தானபா
ண்டமதிலிட்டுமைந்தா, பானானவெள்ளைகடுகெண்ணெய்தன்னால் பக்கு
வமாய்தானெரிப்பாய்நாலுசாமம், தேனானசிரசதுவாம் மோடுதனனி
ல்தேற்றமுடன் மையதனைவாங்கிடாயே. 478

வாங்கியேமைதனிலே கூடச்சேர்க்கும் மகத்தானசரக்கதுவும்
சொல்லக்கேளும், ஓங்கியேபச்சையென்ற பூறந்தானும் வுத்தமனே
வாடையென்றகஸ்தூரியப்பா, தூங்கியேதிரியாமல் புனுகுமைந்தா
துடியானகுங்குமப்பூ ரோஜனையுஞ்சேர்த்து, சாங்கமுடன்சவ்வாதுந்
தானுங்கூட்டி சட்டமுடன்தானரைப்பாய் பன்னீராலே. 479

பன்னீரால்நாற்சாமமறைத்துமேதான் பாங்குபெறமையதனைப்
பதனம்பண்ணு, இன்னிலத்திலுனைப்போலார்ச்சித்து யெழிலான பூ
பதியாமென்னக்கூறும், நன்னயமாயாவினதுவெண்ணெய்தன்னால்நயம்
பெறவேதான்கூட்டி மத்தித்தேதான், சொன்னபடிமையதனைக்கண்
ணிற்றீட்டி சுகியுடனேவையகத்தைச்சுற்றுவீரே. 480

சுற்றயிலேயுனைக்கண்டமாண்பரெல்லாஞ் சுகமுடனே மன்மத
னாரென்றுசொல்லி, வெற்றிபெறயுனைவணங்கிபின்னேசென்றுவிருப்
பமுடன்கேட்டதெல்லா மீவார்பாரு, எற்றிசையுமுனைக்கண்டு யேங்
குவார்களெழிலானமையினது வேகத்தாலே நெற்றிதனில்மையதனை
யிட்டாயானால் நேர்மையுடன் சிவராஜனென்பார்பாரே. 481

பாரேதான்சித்தர்முனி ரிஷிகள்தேவர் பண்புடனேசாத்திரங்க
ளநேகஞ்செய்தார், நேரேதான்சிடிகையென்றவேதையப்பா நேர்மையு

டன்கைகண்டவேதைதன்னை, தீரேதான்வையகத்துமான்பருக்குசிற ப்புடனேபாடியல்லோமறைத்துவைத்தார், கூரேதான்மாணாக்கள்பி ழைக்கவென்று கூறினேன்சிடிகையென்றவேதைகாணே. 482

காணவேமையதனாலனே கசித்து கருத்துடனேலலாடமதிலிட்டு மைந்தா, தோணவேயுந்தனுக்குவேணமட்டும் துப்புறவாய்ராஜரிட கோட்டைதன்னில், பூணவேநிதியிருக்கும்ஸ்தானந்தன்னில்பொங்க முடன் சென்றல்லோமைந்தாகேளு, நீணவேகாவலர் முன்னிருக் கும் நிதியனைத்துங் கண்ணெதிரேயெடுக்கலாமே. 483

எடுக்கலாம்கோடிதனமெடுக்கலாகும்யெழிலானவரண்மனையின் நிதிகளெல்லாம், அடுத்ததொருமாண்பர்களும்பார்த்திருக்கவளவற்ற திரவியங்களெடுக்கலாகும், தொடுத்ததொருவசியமென்றமையினாலே தோறுமலஷ்டசித்துமாடலாகும், விடுத்ததொருகாலாங்கிகடாட்சத் தாலே விருப்பமுடன்பாடினதோர் வசியமாமே. 484

ஸ்ரீவசியம்.

அமேதானின்னமொருமார்க்கஞ்சொல்வேன் வப்பனேபுலிப்பா ணிமைந்தாகேளு, நாமேதான்சொன்னபடிபோகர்வாக்குநானிலத்தி ல்பொய்யாதுமெய்யேயாகும், போமேதான்மாதரிடவசியமப்பாபொ ங்கமுடனின்னமொருவயணஞ்சொல்வேன், வேமேதான்தாரமென்ற சிலையுங்கூட்டு விருப்பமுடன்ரோசனையுந்தானுங்கூட்டே. 485

கூட்டியேபச்சையென்றபூரந்தானும் கூறானகாந்தமது தானுஞ் சேர்த்து, மாட்டியேவாஞ்சிநேயர்பலத்தினாலே மார்க்கமுடன்தான ரைப்பாய்நாலுசாமம், வட்டமுடன்தானரைத்து சிமிளில் வைத்து வளமாகஸ்தூரிபுனுகுசேர்த்து, நாட்டமுடன்கரந்தனிலே பூசிமைந் தா நலமாக ஸ்ரீதலையில் பூசிடாயே. 486

பூசியேநசிமசியென்றேயோது புகழானகருவதுவும் வுருவுமேறி மாசிபடாமனத்துவங்கலங்கியேதான் மகத்தானசிந்தனையும் வதிக மாகி, ஆசியுடன்வரும்போதுமைந்தாகேளுவப்பனே ஆத்மஜலங்கூட ச்சேர்த்து, வாசியுடன்வுருவதுவும்லட்சமோது வரையுடனே பெண் ணுருவாய்வருவாள் பாரே. 487

வருவாளேமோகமதுகொண்டுமல்லோ மகத்தானநிதியனைத்து, மீவாள்பாரு, உருகியேமனமதுவும்மிகவும்வாடி வுத்தமனேயுன்பின் னேதுடருவாள் பார், கருகியே முகம்வேர்த்து மனம்வேருகி கட்

டழகிபொன்மாதுவருவாள்பாரு, திருவிணையாள் மனோன்மணியாள் முன்னேநிற்பாள் திரமுடனே அஷ்டசித்தி கைக்குள்ளாச்சே.

ஆச்சப்பாகமலமுனியனந்தம்போக்கு வப்பனே சொல்லிவைத் தார்லக்கோயில்லே, மூச்சடங்கிவையகத்திற்சென்றமேதான் மூதூல கில்திரும்பிவந்துகண்டபின்பு, பேச்சொடுங்கிசிலகாலஞ் சமாதிநின் றபேரின்ப நிலைதனிலேயிருந்துகொண்டு, பாச்சலுடன் சிடிகையெ ன்றவேதைகோடி பலபலவாய்பாடிவைத்தார் கமலர்தானே.

தானனவித்தையதுவதிகஞ்சொன்னார் தன்மையுடன்காலாங்கி வித்தைக்கொவ்வா, கோனனையெனதையர் காலாங்கிநாதர் கொட்டி னூர்துபோலசிடிகைவேதை, தேனனமனோன்மணியாள் கிருபையா லே தெரிவித்தேனுந்தனுக்குச் சொன்னேனப்பா, பானன வித்தை யெல்லாங்கூறப்போனால் பாங்கானவேழாயிரமிடங் கொள்ளாதே.

ஸ்ரீபுருஷாள் வசியம்.

கொள்ளாதுயின்னமொருமார்க்கஞ்சொல்வேன் கூறுனவித்தை யிதுசொல்லொண்ணாது, விள்ளவேயிருபிறப் பாளரப்பா விருப்பமு டன்யிறந்ததோர் சபத்தைக்கண்டு, மெள்ளவேமயானமதில்சென்று பாலாமேன்மையுடன் கருமுடிக்கச் சொல்வேன்கேளு, தெள்ளிய தோர்கோல்ரெண்டுமுழந்தான்ரெண்டு தேற்றமுடன் கைதனிலேபி டித்திடாயே. 491

பிடித்திடவேமசானகரைசுத்திவந்து பேரானவுருவதுவும்லட்ச ம்போடு, நடித்திடவேவுருவதுவும் யேதென்றக்கால் நாதாந்தத்தாயி னதுபீஜாட்சரந்தான், கொடுத்திடவே வங் சிங் மங் கென்றேயோது கொற்றவனேலட்சமுரு குறையாதய்யா, விடுத்தபொரு கழிதனக்கு வுருவுமேற்றி விருப்பமுடன்சொல்லுகிறேன் தன்மைபாரே.

வண்மையாம்புழுகுடனே பூரந்தானும் வளமான ரோஜனையுங் கஸ்தூரிகூட்டி, நண்மையாமாத்மஜலந்தன்னிலாட்டி நலம்பெறவே கழிதனக்கும்பூசியல்லோ, திண்மையுடன்சவந்தனையேசுத்திவந்துநீர் க்கமுடன்சபம்மேகுஞ் சமயந்தன்னில், உண்மையாம்தலைமாடு கால் மாடாகவுத்தமனே நெல்லதனையுருட்டிடாயே. 493

உருட்டவே கைபிடித்தகழிதானப்பா வுத்தமனேதானெடுத்து செப்பக்கேளு, பொருப்புடனேஸ்ரீதானும் வேகும்போதுபொங்கமு டன்வலதுபக்கம் தடியால்குத்து, கருவுடையநிணமதுவும் கழியில்

தாக்குகருத்துடனேயிடதுபுறமிப்படியேதாக்கு, மருப்பனேய நிணமதுவுங்கழியில்தாங்கிமகத்தான மாத்திரைக்கோல் பிணமுமாச்சே.

ஆச்சப்பாகருவென்றகோலுமாச்சு வப்பனேகோலதனைப்பதனப்பண்ணு, பாச்சலுடன்வையகத்திலிருந்துகொண்டு பாங்குடனேகிருஷ்ணவதாரனைப்போல், மாச்சலுடன்கலவிதனிலிருந்துகொண்டு மகத்தானஸ்ரீகளையனுபவித்து, ஏச்சலதுவாராம லெந்தநாளு மெழிலானசித்துதனையாடுவீரே. 495

ஆடவென்றால்சித்ததுவு மேதென்றக்கால் வப்பனே நீபிடித்த கழித்தானப்பா, போடவேமாதர்களைகண்டபோது பொங்கமுடன் கழிதன்னால்தொட்டுபேச, நீடவேவலதுகைகழிதான்தொட்டால்நீதியுடன்புருஷனவன் வசியமாவான், சாடவேயிடதுகைகழிதான்தொட்டால் சாங்கமுடன்மங்கையரும் வசியந்தானே. 496

தானனவசியமது யேதென்றக்கால் தகமையுடன் கழிக்கொம்பேவசியமாச்சு, கோனனவித்தையிது கருதான்வித்தை கூறுகின்றேன்பிரம்மகுலகிருதானவித்தை, வேனனவித்தையிதுவிஞ்ஞதவித்தை வேடிக்கைகருவிதனையாருங்காணார், மானனவித்தையிது வையகத்தில்மார்க்கமுடன்சென்றல்லோ செய்துபாரே. 497

செய்யவேஜெகதலத்திலுன்னையப்பா தோற்றமுடன்சித்தனென்றபுருஷனென்பார், பையவேயுந்தனிடம்கிட்டிவந்து பாங்குடனே கருவினுடவழியுங்கேட்பான், மெய்யானகருவினுட வழியுஞ்சொன்னால் மேன்மைபெறவுந்தனுக்கு நிதியுமீவாய், உய்யவோ சதாகாலம் ஆழியனுகவுத்தமனே காத்திருப்பார் வுண்மைபாரே. 498

உண்மையாலோகமதில்சித்தனுக ஓகோகோ நாதனைப்போல்வாழ்வாயப்பா, வண்மையுள்ளசித்தனென்று வையகத்தோர் வுலகதனிளென்னும் வாழ்த்துவார்கள், திண்மையுடன்ராஜாதிராஜர்பக்கல் தீரமுடன்பிக்கருவை கொண்டுசென்று, கண்மைபெறகருவாட்டமாடினக்கால் கனகமென்ற நிதியனைத்துங் கொடுப்பார்தாமே. 499

கொடுத்துமேயுந்தனுகருச்சோடசாரம் கொற்றவனே மதிமந்திரியாகக்கொள்வார், அடுத்ததொருவேந்தர்களு முன்னைக்கண்டால் வப்பனேசற்பாத்ரசித்தனென்பார், நடுக்கமுடன்வையகத்தோரெல்லாருந்தான் நாடியேயுன்பாதம் பணிவாரப்பா, ஒடுக்கமுள்ள கருவிகானுதிவித்தை ஓகோகொ போகரிடவித்தைதானே. 500

## ஸ்ரீவசியமை.

வித்தையாமின்னமொரு மார்க்கங்கேளு வேதாந்தப்புண்ணிய
னேவிளம்புவேன்பார், சித்திபெறகாலாங்கிநாதர்வாக்கு சீருலகில்
பொய்யாதுமெய்யேயாகும், சத்தியமாங்காலாங்கிசொன்னநீதி சதா
காலமெந்தனுக்குக்குருவாக்காகும், நித்தியமும் அந்திசந்தியாதம்
தொட்டு நினைக்கிறேன்போகரிஷிநினைக்கிறேனே. 501

நினைக்கிறேன் ஸ்ரீலீலா விநோதந்தன்னை நிலையானகருமானமே
தென்றாக்கால், கனையானமலையோரந்தேடிப்போனால் சுருக்கானவாத்
தலரிவேர்தானுண்டு, தினைபோலேவித்துள்ளமலைதாங்கியப்பா சிறப்
பானதிருநீற்றுசூலியாகும், பனைபோன்றவேரதனை வெள்ளிதன்னில்
பட்சமுடன்காப்பதுவுங்கட்டிடாயே. 502

கட்டியேகாப்பதுவுந்தீர்ந்தபின்பு கணேசருக்குப்பொங்கலிட்டு
காவுந்தந்து, எட்டியுடவடவேவரைத்தான்பிடுங்கி யெழிலாகயெரிகால
ன்வேருங்கூட்டி, தட்டியேரழிஞ்சிமூலந்தானும் சாங்கமுடன்பொன்
னிறவாரைக்கூட்டி, குட்டியென்றமிளகுசாரணையுஞ்சேரு கூறுனசு
மணிடையாய்க்களஞ்சிதூக்கே. 503

தூக்கியேதலைச்சுருளிமூலங்கூட்டி துப்புரவாம்ருதுகாலசிலைதன்
னில், ஆக்கமுடன்தலைமைஞ்சங்கொடியுஞ்சேர்த்து வப்பனேசிலைத
ன்னில்வைத்துருட்டி, நோக்கமுடனேங்கோலத்தயிலத்தாட்டி நானு
க்கமுடன்பேரண்டந்தன்னிலப்பா, தீக்கமலமானதொரு கலசந்தன்
னில் திகழுடனேதீபமதுயேற்றிடாயே. 504

ஏற்றியேமையதனைவாங்குவாங்கு யெழிலானசிமிழ்தனிலேபத
னம்பண்ணு, போற்றியேமனோன்மணித்தாய்பாதாம்புயத்தை பொ
ங்கமுடன்சதாகாலம்நியிர்த்தஞ்செய்து, ஆற்றியேவைங்லோகருவின்
மையை வப்பனேலலாடமதில்விட்டுமேதான், கூற்றனெனும்காலனை
வன்றானடுங்க குவலயத்தில்சாரியதுவருவாய்பாரே. 505

பாரேதான்மையதனைத்தீட்டியல்லோ பாருலகில்மங்கையரைக்
கண்டபோது நீரேதான்மன்மதனென்றுசொல்லி நினைவுதடுமாறி
யங்கேயுனைநினைத்து, ஆறுபுடைசூழ்நகரம்நிதியும்விட்டு ஆஸ்தானவ
ரண்மனையுந் தான்மறந்து, வீறுபுகழ்மன்மதனென்றெண்ணியல்
லோ வீடுவிட்டுநாடறியவருவாள்காணே. 506

காணவேமையதனைக்கண்டபோது கடுங்காளையானதொருமான்
பரெல்லாம், பூணவேயுமதிடத்தில்புத்திகூர்ந்து புகழானசித்தாவ

ரென்றுகூறி, ஆணவங்கள்தானொடுங்கியதிகநட்பா யப்பனேயுன்னை வந்துவணங்குவார்கள், காணறியபரஞ்சுடர்போல் கருதிலுன்னி கடாட்சித்துவ்வர்தமக்குவதிதஞ்செய்யே. 507

செய்யவேநட்பாலரெல்லாங்கூடி செம்மலுடன்மனதுவந்துயு மைப்பணிந்து, வெய்யதொருவிட்டகுறையிருந்ததாலே வேதாந்த சித்து தமைக்காணலாச்சு பையவேயுன்பாதங்கிட்டியல்லோ பரா பரத்தின் பரவொளியைகாணவென்று, உய்யவேபிரணையந்தன்னில் நின்று ஓகோ கோவதிதமிகச்செப்வார்பாரே. 508

பார்க்கையிலேயுந்தமக்கு லோகந்தன்னில் பாரிலுள்ளராஜமுடி மன்னரெல்லாம், ஏர்க்கவேமகாசத்துயிவர்தானென்று யெழிலான வாசீர்மப்மிகவுங்கூறி, தீர்க்கமுடன்மையதனைத்தருகவென்று திர ளானநிதியனைத்துங் கொடுப்பாரப்பா, ஆர்க்கசிம் மாதனந் தான் கொடுத்து வப்பனேயஞ்சலிகள்செய்வார்பாரே. 509

பார்க்கவேயஷ்டசித்து முனக்குள்ளாச்சு பாங்கானவையகமுங் கைகுள்ளாச்சு, ஏர்க்கவேசிற்றின்பநிலைமறந்து யெழிலானபேரின்ப சாகரத்தை, ஆர்க்கமுடன்மனந்தனிலநிட்சயித்து வப்பனேபதாம் புயத்தைமேலேநண்ணி, தீர்க்கமுடன்சமுசாரக்கடலைநீக்கி சிற்பரனை யறியும்வகைதேடிக்கொள்ளே. 510

ஸ்ரீகளுக்குஈடுமுறை.

கொள்ளவேசீனபதிப் பெண்களுக்கு கொட்டினேனீடுவகைய னந்தமுண்டு, மெள்ளவேகுளிகைகொண்டு யானுமல்லோமேதினியி லெழுகடலுஞ்சுத்திவந்தேன், தெள்ளவேபுலிப்பாணிமைந்தாகேளு தேர்வேந்தராஜரிடஞ்சென்றுயானும், வள்ளலாம்விததையதுசிமிட்டு வித்தை வரைகோடி திறைகோடி கறைகண்டேனே. 511

கண்டதொருவேதைதன்னில் சிடிகைவேதை கண்ணுக்குத்தோ ற்றுதுகடினவேதை, விண்டதொருவேதையிலேகருவுவேதை வித்த கனயிருந்தாக்கால்கண்டுகொள்வாய் கொண்டதொருவுருப்பதனில் குறையிலானல் கூரறியபுத்திதனில்மிகுந்தவானய், கண்டறிந்துவொ ருவனைநீதோழனுக காசினியில்சீஷபதியமைத்துக்கொள்ளே. 512

கொள்ளவே சீஷனய்த்தேடிக்கொள்ளு கொற்றவனே யுந்த மக்கு வுரியவாறுய். உள்ளபடிகபடுபொல்சூதுதந்திரய் வுற்றுருமை யில்லாத புத்திவானய், எள்ளளவும்மனந்தனில்கலக்கமில்லா யெழி லானகற்றறிவுபாலனக, தெள்ளுதமிழ் பண்டிதத்திலதிகவானய் தற்றமுடேன் சீஷன்றனைநாடுவாயே 513

நாடியேசிஷனைக்கொண்டுமல்லோ நற்பாலாயுந்தனுக்குத்தேவை யான, நீடியதோர்கருவிகரணாதியெல்லாம் நீட்சியுடனுந்தனுக்குத்த ருகவென்று, தேடியேகண்டுமிகவாராய்ந்தல்லோ தெளிவான தோழ மைதான்கண்டுமல்லோ, வாடியேயதிரியாமல்மனமேங்காமல்மார்க்கமு டன்கருதொழிலைச் செய்திடாயே. 514

செய்யவேவகருமான மேதென்றாக்கால் சிறப்புள்ள பெரிகாலன் வித்துதானும், பையவேமருளி ஞாமத்தைவித்தும் பாங்கானபொன் னிறவாரைவித்தும், வையகங்கள்புகழுங்கோரக்கர்வித்தும் வாகான சூரியனார்காந்திவித்தும், துய்யதொருகுடைக்காளான் பூவுஞ்சேர்த் துதுப்புரவாய் ஆத்மஜலந்தன்னிலாட்டே. 515

ஆட்டவேநாற்சாமமானபின்பு வப்பனேகுளிகையது செய்வா யப்பா, தேட்டமுடன்பயரளவாய்க் குளிகைசெய்து செம்மலுடன் நிழல்தனில்தானுலர்த்தி, நீட்டமுடன்பஞ்சாட்சரவுருவுதானும்நீதி யுடன்லட்சமதுபோட்டபின்பு, வாட்டமுடன்பரணிதனிலடைத்து க்கொண்டு வளம்பெறவேதானடுத்து வண்மைகேளே. 516

கேளப்பாமங்கையரைக்கண்டபோது கெவனமுட னவர்மனது முன்மனதுமானால், பாளப்பாபோகாமலெந்தநாளும் பட்சமுடனுன் மீதில்மன்னலயிச்க, ஆளப்பாசொல்லுகிறேன்குளிகைதன்னை வப்ப னேயறுசுவையாம் பதார்த்தந்தன்னில், மீளப்பாபோகாமல் தாம்பூல த்தில் மிகபடவேபாலதனில் கொடுத்திடாயே. 517

கொடுக்கவேமங்கையருமனதுவந்து குவலயத்திலெண்ணுளுமு ந்தன்மீது, அடுக்கவேமற்றொருவர்தம்மைக்கண்டால் வப்பனேசத்து ருவாய்மனதுலெண்ணி, ஒக்கமுடன்உன்பக்கல் சதாகாலந்தான்வுத் தமனேபட்சமதுகருணைகூர்ந்து, நடுக்கமுடன்யேவலுக்கு முன்னேநி ன்று, நாள்தோறும்கருணையதுபுரிவான்தானே. 518

சத்துருவைத் துன்பப்படுத்தல்

தானனையின்னமொருமார்க்கங்கேளு தயவானபுலிப்பாணிமைந் தாபாரு, கோனனைசித்தர்களும்முனிவர்தேவர் குவலயத்தில்கோடிவி த்தைவிநோதஞ்செய்தார். தேனனமனோன்மணியாள் கடாட்சத்தா லேதெளிவானவித்தையெல்லாம் மறைத்துப்போட்டார், மானனைவித் தையிதுமாந்திரீகவித்தைமன்னவனேகண்மணியேசொல்வேன்பாரே

சொல்லவேகாலாங்கிதாள்பணிந்து சுத்தமுள்ள யெந்தனுக்குவுக்ந்தசீஷா, வெல்லவேவையகத்தில்மாண்பர்தாமும் விருப்பமுடனிதிகாசவித்தையெல்லாம், புல்லவேயுந்தனிடமருந்துகொண்டு புகழான குருவென்றுமனதிலெண்ணர், அல்லல்படுந்துயரமதுமிகவாய்ச்செய்துவப்பனேதுரோகமது செய்வார்பாரே. 520

பாரேதான்துரோகமதுசெய்தபேர்க்கு பண்பானகருமானமொன்றுசொல்வேன், நீரேதான்மனங்கொண்டுமனங்களித்து நீதியுடன் துரோகமதுசெய்தபேர்க்கு, கூரேதானமாவாசையருக்கநாளாம்குறிப்புடனேமாளிதனில்வாழுகின்ற, சீரேதான்மீஞ்சூரு தன்னைப்பிடித்து சிறப்புடனேயதில்செய்யும் வகையைக்கேளே. 521

வகையானமீஞ்சூரைக்கொண்டுவந்து வன்குடலிற் காயமதைச்சுத்திசெய்து; தொகையானவுருவதுவும லட்சமோதி சுந்தரனேயெதிராளிபேரைமாறு, சிகைதனிலேரோமமது சேகரித்துசிறப்புடனே மீஞ்சூருக்காப்புகட்டி, பகையானயெதிராளிமூலங்கண்டு பட்சமுடன்கருதனேயோ நாடிப்பாரே. 522

நாடியேயுந்தனுக்குதுரோகஞ்செய்த நலமானபடுபாவி சண்டாளன்ருன், தேடியேயவனிருக்குமிடத்திற்சென்று தேற்றமுடன்கோஜத்தின்ஜலத்தின்மண்ணையப்பா, நீடியேதானெடுத்துக் கொண்டுவந்து நெடிதானகருமானமண்ணையப்பா, கூடியேபேதனங்கள்கூறி கூசாமல்மீஞ்சூரின்வாயிலூட்டே. 523

ஊட்டியேபிரிதிவென்றமண்ணைத்தானும் வுற்றதொருகருவிகாணுதிமண்ணை, தாட்டிகமாய்மீஞ்சூரின்வாயின்மட்டும் தயங்காமல்கிட்டணைகள்செய்தபின்பு, வாட்டமுடனிருவாயைமூடியல்லோ வளமுடனேதான்தைத்து சீலசெய்து, ஆட்டமுடன்மீஞ்சூரின் பவனிவாயை வப்பனேமேல்நோக்கி நிறுத்திடாயே. 524

நிறுத்தியேதலைகீழாய்மீஞ்சூர்தன்னை நீதியுடன்நவகோணச் சக்கரத்தில், உறுத்தியேதராசுமென்றமுள்தானப்பா வுத்தமனேநாற்சதுரசாகநாட்டி, கருத்துடனேவராகமென்ற சவ்வைதானுங் கலங்காமல்நாற்சதுரமூலைமாட்டி, பொருத்தமுடன்நடுமையந் தொளாந்திரமாக பொங்கமுடன்வசிநாட்டி வுருவுமோதே. 525

ஓதவேயெதிராளிப்பேரைமாறி வுத்தமனேபேதனத்தைசெய்துமல்லோ, நீதமுடன்யாகங்கள்தானுஞ்செய்துநிஷ்களங்கமாகவல்லோ வோமகுண்டம், போதவேபிராணயந் தன்னிற்சென்று போங்க

முடன் சின்மயத்திலேறிநின்று, சாதகமாம் வாசிதனை தியானித்தே தான் சட்டமுடன் பிறணவத்தை சாற்றுவீரே. 526

சாற்றவேயெதிராளிதன்றனக்கு சட்டமுடன்மலஜலமுங் கட்டிப்போகும், கூற்றனுக்குவிடமுண்டு பின்னுந்துன்பம் குவலயத்திலார்படுவாரியிந்தபாடு, ஏற்றமொரு கருவிகாணுதியாலேயெழிலான துன்பமதுக் கிடமேயாச்சு, மாற்றமுடன் கருவென்றபிரதிவினாலே மகத்தானகோடிவித்தை யாடலாமே. 527

ஆடலாம் புலிப்பாணிமைந்தாகேளு வவனிதனிலுனைப் பகைத்தமிடியோர்தானும், தேடியேவுன்றனைத்தான் மிகவேநாடி தேற்றமுடன்பாதந் தொழுதிட்டாக்கால், நீடியேமுன்வைத்த கருமானத்தைநிகட்சியுடன்நிவர்த்தியது செய்துமல்லோ, கூடியேயுபசாரவார்த்தைகூறி கொற்றவனேதிருப்பிவிட்டால் தருமமாமே. 528

தருமமாமுந்தனுக்குமோட்சமுண்டு தாரணியில்குடிகெடுக்கும் பாவியோரை, கருவென்றகருவிகாணுதியாலே கலக்கமவர் செய்தவனே தியக்கங்கொண்டு, பொருளதனையவனிடத்தி லபகரித்துபொங்கமுடன் சாந்தியதுமிகவேசெய்து, குருதனையே தானினைந்து கருமியோர்க்கு குவலயத்தில்புத்திமதி கூறநன்றே. 529

பேர்சொல்லிவேர்பிடுங்கல்.

நன்றானயின்னமொரு போக்குசொல்வேன் நலமான காலாங்கி சொன்னநீதி, குன்றானமலைபோலே கோடிவித்தை கூறினாரெந்தனுக்குலக்கோயில்லை, வென்றிடவேசிலபாகஞ் சிடிகைவேதை வேதாந்தத்தாயினதுகிருபையாலே, தென்றிசையிலடியேனுங் குளிகைகொண்டுதேற்றமுடன்வித்தைமிகக் கண்டேன்பாரே. 530

மலையாளக்கறுப்பன் சிங்கமோகமணி.

பாரேதான் சீனபதிவிட்டுமல்லோ பாங்கானகுளிகையது பூண்டுகொண்டு, நேரேதான்மலையாளங்குடகுநாடு நேர்மையுடன் வெகுதேசஞ்சுற்றிவந்தேன், சீரேதான்சிங்கணர் கொங்கணவர் தாமும்சிறப்பான மராட்டியப்பரரைக்கண்டேன், கூரேதான்கன்னடையர்மலையாளரப்பாகுறிப்பான குசலவர்வேளாளர்தாமே. 531

தாமான துலுக்கருடன்மனுக்கர்தாமும் தகமையுள்ளவேளாளமாண்பருண்டு, கோமானகுருக்களென்றும் ராஜனென்றுங்குவலயத்தில்சித்துமுனிபுருஷனென்றும், தேமானபலபலவாஞ் சாதிபேதம் தேசமதில்கண்டதல்லாலக்கோயில்லை, பூமான்கள்சுற்றமொருதொழிலையெல்லாம் பூவுலகில்கண்டறிந்தேன் போகர்தானே. 532

விலாடபுரத்து வசியம்.

தானான போகரிஷிமுனிவர்தானும் தகமையுடன் கண்டறிந்த அதர்வணத்தை, வேனனவிடலாமென்ற நகருக்கப்பால் வெந்தருட பதிதனிலேசென்றேன்யானும், மானனமகதேவர்காலாங்கி நாதர்ம ன்னவனார்கூறியதோர் வாக்குநீதி, கோனனகாலாங்கிவாக்குபோலே தேசமென்றவிலாடநகர் சென்றிட்டேனே. 533

சென்றேனேவிலாடநகர் பதியிலப்பா செம்மலுடன் மாண்பரு டவதிசயங்கள், குன்றானமலைபோலேகோடியுண்டு கொற்றவர்கள் ப ஞ்சவரின் சேனைகண்டேன், வென்றிடவேமூலபல யுத்தந்தன்னில் வெகுகோடிமாண்பரெல்லாம் மடிந்தாரங்கே, அன்றுதிரியோதிரா ர்சேனைவர்க்கம் அவ்வனத்தில் சமாதிபதிகண்டிட்டேனே. 534

கண்டேனேசமாதியது கோடாகோடி காசினியில்யாரேனுங் க ண்டதில்லை, அண்டர்முனிராட்சதர்கள்சமாதிவர்க்கம்அவ்வனத்தில் சுத்திவந்துகாண்பாரங்கே, கொண்டல்வண்ணனச்சுதனார் போர்கள் செய்த கோடானகோடிவகையாயுதங்கள் பண்டுளவமாலையணிபூண் டமாதுபாங்கானகோயில்தனில் பார்த்திட்டேனே. 535

பார்த்தேனேவில்லம்பு முப்பத்திரெண்டும் பாங்கானகாளியுட தேவஸ்தானம், சேர்த்துமேமலை போலேவாயுதங்கள் சேனையெடுப டைகூட்டந்திரள்கூட்டங்கள், கோர்த்துமேவிலாட புறபதியிலப்பா கொற்றவர்கள் சமாதியதுபடியுங்கண்டேன், தீர்த்தமுடன்சிவலிங்க சமாதிகோடி திரைகோடிவரைகோடி தீராதானே. 536

தீரவேசமாதி யிடஞ்சென்றேன்யானும் திரள்வீரர்பஞ்சவர்கள் போர்க்களத்தை, சோரமெனும்வீராதிவீரர்தாமும்சொற்பெரியஅர ன்வாயல்அரக்குக்கோட்டை நேரமுடன் குளிகையது கொண்டுயா னும்நெடுந்தூரம்பாஞ்சாலன்பதியின்மட்டும், சேரவேசென்றல்லோ வெற்றிகொண்டேன் செயமாநசமாதியிடங்காவலுண்டே. 537

காவலாங் கட்டென்னவதிகாரங்கள் கருதவென்றாலாதி சேட னிலுமாகா, அவனுடன்காலாங்கிதமைநினைத்து அதிகவழிநெடுந்தூ ரஞ்சென்றேனப்பா, போவதும்வருவதுவுஞ் சமாதிபக்கல் பொங்க முடன் மாண்பர்களோ சொல்லொண்ணாதுசாவதுவில்மாடுபிடி போ ர்க்களத்தில் சட்டமுடன்காவல்தனை பார்த்திட்டேனே. 538

பார்த்தேனேமாண்பர்களை யடியேன்றானும் பக்குவமாய் வாய்மொழியையறியவென்று, சேர்த்துமேகரங்குவித்து தாள்பணிந்து தேற்றமுடன்மாண்பர்களைக்கண்டேன்யானும், தீர்த்தமுடன்சமாதியதுவதென்றென்ன திரளானபடைவீரர்காவலாளி, பார்த்தனெனும்பஞ்சவர்கள்படுகளந்தான் பாரினிலே போரிட்ட விலாடங்காணே.

சுாணவேயெந்தனுக்குச்சொன்னாரங்கே கவனமுடன் குளிகைகொண்டுநின்றமல்லோ, தோணவேதிடுக்கிட்டு மனதுயேங்கி தொல்லுலகில்துரியோதனன்களந்தானங்கே, பூணவேயெந்தனுக்குச் சொல்லவென்று புகழாகவடியேனுங் கேட்டேனங்கே, ஆணவம் பூண்டதொருபோர்க்களத்தையங்ஙனவே யெந்தனுக்குக்காண்பித்தாரே.

காண்பிக்கவடியேனுமனதுவந்து கருத்துடனே மாண்பர்களைக் கேட்டபோது, வீண்பானசிறபாலாபோகநாதா விட்டகுறையிருந்ததினுலிங்கேவந்தாய், ஆண்மைகொண்டுவந்ததினாலுந்தனுக்கு வப்பனேசாபமதுதருவோமென்றும், தீண்பானவாக்கினைகள்செய்வோமென்றுதிறமையுடனெந்தன்போ கேட்டிட்டாரே. 441

கேட்கவேயடியேனும் பிரமைகொண்டு கெவனமுடன்காலாங்கிசீஷனென்றேன், மீட்கவேயடியேனுங் குளிகைபூண்டு மேதினியெலாஞ்சுற்றியிங்கேவந்தேன், காட்கவேவிலாடபுரங்காணவென்று தகமையுடன்போர்க்களத்தில் வந்தேனப்பா, ஆட்கொண்டுயெந்தனையுமாசீர்மித்து வன்புடனே பாதுகாக்கவென்றிட்டேனே. 542

இட்டேனேமாண்பர்களைக்கண்டுயானும்யெழிலானவஞ்சலிகள் மிகவுஞ்செய்தேன், அட்டதிசைதான்புகழும் அதர்வணத்தை யன்புடனேயெந்தனுக்குவோதினார்கள், சட்டமுடன்பிரணவத்தின் தழைகள்பூண்டு தாக்கானமரந்தனிமேலேகாப்புகொண்டு, விட்டதொருயெதிராளிபேரைமாறி விருட்சமென்றமூலிதனில் காண்பிததாரே.

காண்பித்தார்விலாடபுரந்தன்னிலப்பா தண்மையுள்ள போர்க்களத்திலதிகமாண்பர், ஆண்மையுடனெதிராளிபேரைச்சொல்லி அங்ஙனவேமாந்திரீகபிரணவத்தால், வீண்பழிக்குயாளாக வாகாமற்றான் விட்டகுறையிருந்ததொரு சாபத்தாலே, நீண்படவேமாந்திரீகதாந்திரீகத்தால் நிலையானபோர்க்களத்தை வென்றிட்டாரே. 544

வென்றுரேமூலியிடவிருட்சத்தாலே வேகமுடன்கோடானகோடிபேரை, சென்றதொருவித்தைகளையெந்தனுக்கு சிறப்புடனேபோதித்துவதீதஞ்செய்தார், குன்றுனகோடிவித்தையானுங்கண்டு,கொற்றவனேகுளிகையதுபூண்டுகொண்டு, தன்றுன கருமானவித்தையெல்லாம் தணமையுடனுனறிந்து வந்பேன்பாரே. 5;5

போகர்பேர்சொல்லி வேர்பிடுங்கும் வித்தையை

புலிப்பாணிக்கு கூறல்.

பாரேதானின்னமொரு கருமானங்கேள் பாங்கானபுலிப்பாணிமைந்தர்பாரு, நேரேதானுந்தனுக்குத்தீங்குசெய்த நேரானகருமிகட்குயிந்தபாகம், தூரேதானிருந்தாலும்மஞ்சவேண்டாம் துப்புரவாய்க்குடிகெடுக்கும்பாவிதன்னை, சீரேதான்பிரணவத்தின்மூலியாலேசீர்பதத்தைமாற்றியல்லோ பேர்தான்கொள்ளே. 556

கொள்ளவேயெதிராளிபேரைக்கூறி கொற்றவனே நெல்லிக்குக்காப்புகட்டி, விள்ளவேயவன்பேரைதலைகீழாக விருப்பமுடன்மனோன்மணியாளட்சரத்தை, உள்ளபடி வங்சிங் யங் கென்றபோது வுத்தமனேலட்சமதுவுருவுகொண்டு, தெள்ளுதமிழ்பாவாணர் சித்தர்வாக்குதேசமதிற்பொய்யாது மெய்யாம்பாரே. 547

மெய்யானபிரணவத்தின்மூலியாலே மேதினியில்பிணம்போலேயிருப்பான்பாரு, பையவேயவர்சென்றுயெதிராளிதன்னை பட்சமுடன்தானழைத்து வருந்திட்டாலும், துய்யவேசவம்போல யிருப்பான்பாரு துப்புரவாய் வையகத்தைதான்மறந்து, உய்யவே பஞ்சபூதங்களெல்லாம் ஒடுக்கமுடன்தானொடுங்கி யிருப்பான்தானே. 548

தானனபேவல்தொழிலொன்றுமில்லை தண்மையுள்ள பூலோகவாசையில்லை, கோனனகோவேந்தர் போருமில்லை கொற்றவர்க்குயெதிராளிபடையுமில்லை, தேனனமாந்திரீகத்தாந்திரீகத்தால் தேசமெங்குஞ்ஜெயிப்பதற்குஐயமில்லை, பானனபாபமென்றதொழிலுமில்லை பாருலகிலிவ்வேதை பண்பாய்ச்செய்யே. 549

பண்பாணவேதையினுல்லஷ்டசித்தி பாருலகில்செய்வதற்குஐயமில்லை, நண்பானமூலிதனிலனந்தம்வேதை நாட்டினிலே செய்துமல்லோகீர்த்திகொண்டு, திண்மையுடன்செய்தல்லோவையகத்தில் தீர்க்கமுடன்கருமிகளைவெல்லலாகும், வண்மையாமூலியுட போக்கனந்தம்வையகத்தில்கோடியுண்டு செய்வார்பாரே. 550

## திகைப்பூண்டுக்கு காப்புகட்டல்.

பாரப்பா இன்னமொரு கருமானங்கேள் பாலகனேசொல்லுகி
றேன்மைந்தாபாரு, நேரப்பாவையகத்தில் கோடிவித்தை நேர்மையு
டன் கண்டதுண்டுபார்த்தோருண்டு சீரப்பாயிதிகாச வித்தையெல்
லாம் சிறப்புடனேசித்தர்முனி மறைத்துவைத்தார், ஆரப்பாயெனை
ப்போலே சொல்வாருண்டோ வப்பனேகண்டவரை யுரைத்திட்
டேனே 551

உரைத்தேனே வையகத்துமாண்பருக்கு ஓகோகோநாதாக்கள்
சொன்னதில்லை, நிரைத்திடவே கருமானவித்தையப்பா நீதியுடன்
பேர்கூறிவேர்பிடுங்கும், கரைத்திடவே பிரணவத்தை மாறல்செய்து
கருவுடனேபேர்மாறிவேர்பிடுங்கி, சிரைத்திடவே பூண்டுக்குக்காப்பு
கட்டி சீர்பெறவேசொல்லுகிறேன் பண்பாய்க்கேளே. 552

பண்பானவாரமது ஆதிவாரம் பகலானவுச்சியது மத்தியானம்,
திண்பானவுருவமது நடுச்சாமந்தான் திகழானமூலிக்கு காப்புகட்டி
நண்பான எதிராளிபேரைக்கூறி, நம்படவே-வங்-சிங்-யங்-கென்
றோது, கண்ணான மனோன்மணியாள் பீஜமந்திரங்கருவான லட்சம்
வுருபோடுபோடே. 553

போடப்பாதேவி மனோன்மணியாள்பீஜம் பொங்கமுடன் வுரு
வனைத்துந்தீர்ந்தபின்பு, நீடப்பாமாந்திரீகத்தாந்திரீகத்தால் நிலையா
னவாத தமது கபாலஞ்சொக்கி, கூடப்பா சுவாசமதுவுள்ளேபுக்கி
குவலயத்தில் செத்ததொருசவத்தைப்போலும், ஆடப்பாபிரணவத்
தின் மகுத்துவத்தால்வப்பனேசவம்போலே செய்திடாயே. 554

செய்யவென்றால் நாவேதுப்பாவுமில்லை செகதலத்திலுனைப்போ
லேசித்துமுண்டோ, பையவேகர்மியென்ற எதிராளியப்பா பாருலகி
லுன்மீதிற்படையுமில்லை, மெய்யான எத்தனங்கள் யாதொன்றில்லை
மேதினியிலிருந்தென்னபயனுமில்லை, துய்யதொருவாத்மாவுஞ் சொ
க்கியல்லோ துப்புரவாய்பிரேதம்போ லிருப்பான்தானே. 555

தானான பகையாளிதன்னையப்பா தயவுடனேமறுபடியும் பெய
ரைமாற்றி, கோனான மூலியிடசாபம்நீக்கி கொற்றவனே யெதிராளி
பகைவன்றன்னை, தேனான யிலையமுர்தங்காப்புநீக்கி தேற்றமுடன்
வுருவுதனைமாறியல்லோ, பானான பராபரியை ஸ்தோத்தரித்து பட்ச
முடன்காப்பாற்றல் தருமமாமே. 556

தருமமாமுந்தனுக்குக்கீர்த்தியுண்டு தண்மையுள்ளராஜரிஷிராஜ
யோகா, தருமத்தையென்னாளும் நிவர்த்திசெய்து காப்பாற்றல் மனு

தர்மநீதியாகும் சொரூபமென்ற நிலையதனைக்காண்பதற்கு சூட்சாதி சூட்சமதை யறிந்துகொள்ளு, கிருபையதுயுந்தன்மேல் வருவதற்கு கீர்த்தியுடனென்னாளும் பதங்கொள்வீரே. 557

மலையாளபூபதி கறுப்பண்ணன் மந்திரம்.

கொள்ளவேயின்னமொருமார்க்கம்பாரு கூறுனபுத்தியுள்ளமைந்தாகேளு, வெள்ளமதுநிறைந்திருக்கும் கால்வாய் தன்னில்வெட்டவெளிவனந்தரத்திற்சாரலோரம், தெள்ளுதமிழ்வேளாளர் குடியனைத்தும்தேற்றமுடன் காய்கறிகளனந்தவர்க்கம், உள்ளபடிபரதெய்வசாட்சியாக வுத்தமர்கள்பயிரிடுவர் கோடிதாமே. 558

கோடியாங் காய்கறிகள் பழவர்க்கங்கள் குவலயத்தில் மாண்பரெல்லாம் பயிரேசெய்வார், நீடியேவெகுநாள்கள் பயிர்கள்பக்கல்நேர்மையுடன் போகாமலிருப்பதுண்டு, கூடியே கறுப்பண்ணன்காவல்வைத்துகொற்றவனே தாமிருப்பார்மாளிதன்னில், தேடியே வையகத்தில் சிலதுமாண்பர்தெரியாமல் கனிவர்க்கம் தீண்டுவாரே. 559

தீண்டியேபொசிப்பதற்கு யெண்ணங்கொண்டு திருடியேகன்னமிடமனதிலெண்ணி, வேண்டியேபேராசைக் கொண்டுமல்லோ விருப்பமுடன் கனிவர்க்கங்காய்கள்தம்மை, காண்டிபமாய் தோட்டமதுவருகிற்சென்று காய்களைத்தான் தொட்டுமல்லோ கொள்ளைகொள்வோர், பாண்டியனார்கறுப்பண்ண சாமிதானும் பட்சமுடன் தொட்டவரைப் பிடிப்பர்தாமே. 560

தாமானபழவகைகள்தொட்டபேர்கள் தகமையுடன்கறுப்பண்ணன்காவல்தன்னால், பூமான்களதிகார வார்த்தையாலே புகழாக தொட்டதொரு கரத்தைத்தானும், சாமானியமானதொரு கறுப்பன்றானும் சட்டமுடன்கைதனையேபிடித்திழுப்பான், வேமானமாகவல்லோ வெகுநாளாக விருப்பமுடன்காயருகில் நிற்பாற்காணே.

காணவே புலிப்பாணிமைந்தாகேளு கருவானமாண்பரெல்லாந் தொழிலேசெய்வார், பூணவே காவலாளியாரென்றாக்கால் புகழான கறுப்பண்ணசாமியாகும், தோணவேவீரியனுங் காத்தராயன் தோருதஜின்னுதேவதையுந்தானும், ஆணவமாங்காளியென்ற துற்கைதானும் அடைவானகானகத்தில் காவலாச்சே. 562

ஆச்சப்பா யின்னமொருமகிமைகேளு அடவானபயிரிடுங் குடியாளர்க்கு, மூச்சடங்கிபோனதொரு கிரகந்தானும் முக்கியமாயேவலுக்குமுன்னேநின்று, பாச்சலுடன்பில்லியென்றபசாசுதானும் பால

கனே பிரணவத்தாலுச்சாடித்து, ஏச்சதுவாராமல் மாண்பரெல்லாம் யெழிலாகக் கைவசஞ்செய்திருக்கிருரே. 563

இருக்கிறதோர்பசாசியின்தந்திரத்தால்யெழிலானமந்திரங்கள் மெய்யேயாகும், மருட்கமலம் வீற்றிருக்கும் மனோன்மணித்தாய்மக த்தான வட்சரத்தையோதுவார்கள், இருட்கடலை முறுக்கியசற்றிர விபோலும் யெழிலுருவங்காட்டுமொளிவட்டம்போலும், அருட்கட லாமீஸ்வரியாளட்சரத்தா லவனிதனில் தாந்திரீகஞ்செய்வார்பாரே.

பாரேதான் மூலிச்சுகாப்புகட்டி பாங்கானபிசாசுகைவசமேயா னல், நேரேதான்வுலகுதனில் திருடுமாண்பர் நேர்மையுடன்வாய்பே சாகையாடாமல், சீரேதான் யிவ்விதமாயிருப்பாயானல் சிறப்பான கீர்த்தியதுலபிக்கும்பாரு, ஆரோதான் வையகத்தில் புத்திமான்கள் அவனிதனில் மாந்திரீகஞ்செய்தார்பாரே. 565

பாரென்று சொல்லியல்லோ பாரில்தன்னில் பலவிதமாம்வார்த் தையதுகூறுவார்கள், நேரொன்று பசாசினதுமந்திரத்தால் நேர்த்தி யுடன்காவலது செய்வார்பாரு, வேறொன்றுமில்லையப்பா யெதிராளி பேரில் வியர்வான பசாசினதுதந்திரந்தான், ஆரொன்று மாண்பர்க ளும் வையகத்தில் அனியாயஞ்செய்வதற்கு முடியாதன்றே. 566

முடியாதுமூலியுடசாபமந்திரம் முக்கியமாய்பேயினிடவட்சாந் தான், குடியானமாண்பரெல்லாம் வையகத்தில் கொற்றவனேயேயவ னுக்குமுன்னதாக, மிடியான வருத்தமது தன்னேடொக்க மேதினி யில்கருவிகரணதியோடும், துடியான மாந்தரீகத்தாந்திரீகத்தால்துப் புரவாய்மாண்பரெல்லாம் பிழைப்பார்தானே. 567

தானனயிவ்வகையாம்வண்ணமெல்லாம் தகமையுடன் தட்சண த்தார்செய்யும்வேதை, கோனன யெனதையர்காலாங்கிநாதர் கொற் றவன ரெந்தனுக்குச்சொன்னநீதி, பானவித்தையது பழுதுபோ கா பாரினிலே வெகுகோடி வதிதஞ்சொன்னர், மானமகரசங்க விதைசொல்வேன் மகத்தான வையகத்தோர் மாண்டோர்தானே.

காலாங்கிநாதர் சமாதிக்குப்போகுமுன்

இறந்தவர்கள் கணக்கு.

தானனபுலிப்பாணிமைந்தாகேளுந்தண்மையுடன் என்குருவாங் காலாங்கிநாதர், தேனன மனோன்மணியாள் கடாட்சத்தாலே தேச மெல்லாங்குளிகைகொண்டு சென்றபோது, கோனன குருதனக்கு வயதுசொல்வேன்கொற்றவனேமுந்நூற்றுப்பதினைந்தாகும்,பாழான வாண்டுமதுவஞ்சேயாகும் பாங்கானவாண்டுக்கு வறுபதாமே. 569

ஆமேதான் வறுபதுவும்யென்றவாக்கு வப்பனே தலைமுறைதா ஞென்றேயாகும், கோமான்கள் ஓராண்டு யிருந்ததில்லை கொற்றவ னேதேகமதைமெய்யென்றெண்ணி, வேமேதான்முன்னூறு வாண்டு சொச்சம் வேதாந்தத்தாயினதுகிருபையாலே, தாமேதான்முந்நூறு வாணமட்டும் தகமையுடன்காலாங்கி யிருந்திட்டாரே. 570

இருந்தாரேவெகுகாலம் காலாங்கிநாதர் யெழிலானவையகத்து மாண்பர்முன்னே, பொருந்தவேவதிசயங்களெல்லாங்கண்டார் பொ ங்கமுடனிறந்தவர் கணக்குங்கண்டார், திருந்தவேயவர்கண்டகணித மப்பா தீர்க்கமுடனெந்தனுக்கு அருளினார்பார், குருந்தமிழாமாசிரி யர்முனிவர்தாமும் கூறவில்லைநூல்தனில் கூறாரின்றே. 571

இன்றான சாத்திரத்தின் விருப்பமெல்லாம்யெழிலாகபாடிவை த்தார்சித்தர்தாமும், குன்றானமலைபோலே கோடிநூல்கள் கூறினார் வையகத்துவதிசயங்கள், சென்றதொரு வையகத்து சேதியெல்லாம் சிலருரைத்தார்சிலர்மறைத்தார் தேசமாண்பர், வென்றிடவே யடியே னும்மனதுவந்துவிருப்பமுடன்மறைத்ததெல்லாம் வெளியிட்டேனே

இட்டேனேகாலாங்கிசொன்னநீதி யெழில்பெறவேபுலிப்பாணி மைந்தாகேளு, பட்டதொரு படுகளத்தின் மாண்பர்சேதி பாரினிலே விதியினால் மடிந்தோர்சேதி, சட்டமுடனென்னுயன் காலாங்கிநாதர் சாங்கமுடன்யெடுத்துரைத்ததொகையைத்தானும் வட்டமுடன்நபி யுரைத்ததோப்புதன்னில்வளமானவையகத்துத்தொகையுந்தானே.

தானானநபிநாயன்சாத்திரத்தில் சாற்றினார்வெகுகோடி வதிசய ங்கள், கோனான யேசுவின்றன்வேதந்தன்னில் கூறினதோர்வையகத் துமாண்பர்சேதி, பானான பரலோகமடிந்தசேதி பட்சமுடனவர் நூலுங்கண்டாராய்ந்து, மானான யென்குருவாங்காலாங்கிசுவாமி மா ர்க்கமுடனெந்தனுக்கு வுரைத்தார்தானே. 574

காணவேசீனபதிமாண்பருக்கு கருவாகவடியேனும் மனதுவந் து, தோணவே மூலமென்றபாஷைதன்னில் திரட்டியதோர்தொகை முழுதும்யானுங்கண்டு வேணபடிபதினெண்பேர்நூலாராய்ந்து விரு ப்பமுடனுபதேசஞ்செய்தேன்யானும், நீணவே யுந்தனுக்கு யோத வல்லோ நீட்சியுடன் மனதுவந்து யெண்ணினேனே. 575

## கிரேதாயுகத்துத் தொகை.

எண்ணினேனென்னுயன்காலாங்கிநாதர் யெழிலானகாயாதிகற் பங்கொண்டு, நண்ணவேசீவியகாலமட்டும் நலமாகக் கிரேதாயினுகத்

திலப்பா, மண்ணிலேமடிந்தவர்கள் கோடிசங்கம் மகத்தானகோடியி லேசங்கமாறு, திண்ணமுடன்மகாசங்க மற்புசங்களெட்டு திடமான வற்புதத்தில் பதினாறுதாமே. 576

திரேதாயகத்துத் தொகை.

தானானதிரேதாயி னுகத்திலப்பா சாற்றுகிறேன் வையகத்தில் மடிந்தமாண்பர், மானனலட்சமது நூறுசங்கம் மகத்தானமகாசங்கம் பதினாறுகோடி, தேனனவற்புதங்கள் நாலாறுபத்து தேசத்தில்மாண் டவர்கள் தொகைதானப்பா, கோனனகுருமீவேந்தர்சொன்னநீதிகொ ற்றவனே தானிருந்தநாள்வரைக்கும், வானனபராபரியாள் கடாட்ச த்தாலே வளமுடனே தானறிந்த தொகையைக்கேளே. 577

துவாபரயுகத்துத்தொகை.

கேளேதான் துவாபரமாம்யுகத்திலப்பா கெடியான மாண்பர்க ளும்மாண்டசேதி, ஆளேதான்லட்சமது யெண்பத்திரண்டு வழகான சங்கமதுயெட்டுபத்திரண்டு, கோளேதான்வாராமல் மகாசங்கமேழு கொற்றவனேயற்புதமாகாற்புதங்கண்டு, நாளேதான்வையகத்தி லிற ந்தமாண்பர் நலமானதொகையிதுதான் கண்டுகொள்ளே. 578

கொள்ளவேகாலாங்கியிருந்தமட்டும் குவலயத்தில் சமாதிக்குப் போகுமுன்னே, எள்ளளவுபிசகாமல் முன்னோர்தாமும் மெழிலான சாத்திரத்தின் தொகுப்பாராய்ந்து, உள்ளபடிகலியுகத்திலிருந்தமட் டும்வுத்தமனே மாண்டவர்கள் தொகையைக்கேளீர், கள்ளமே லட்ச மதுநாற்பத்திரண்டு கவனமுடன்சங்கமது நாலுமாமே. 579

நாலானசங்கமதுமகாசங்கமெட்டு நலமான அற்புதங்கள்ரெண் டுபத்துநாலு, நூலானமற்றவர்கள் கணக்கையெல்லாம் நூலுக்கமுட ன்சித்ரபுத்ரன்கணக்கிற்கூறும், காலானகணக்குவகை யாராற்கூறும் காசினியில் யுகமுடிவி லிருந்தோர்மாண்பர், பாலான முன்னோர்கள் சொன்னநூலில் பாலித்தகணக்கிதுதான் பண்மையாரே. 580

பண்மையாய்வையகத்தில்மடிந்தபேரை பாருலகில் ராஜாதிரா ஜர்தாமும், வண்மையுடன்கலியுகத்துமாண்பர்தம்மில் வளமையுடன் ருஜாதிருஜரெல்லாம், நன்மைபெற தொகைகணக்கு கண்டதில்லை நாணிலத்தில் மடிந்தவர்கள்சேதியப்பா, உண்மைபெறசீனபதிமாண் பரெல்லாம் வுற்றதொகை சற்றேரக்கண்டார்தாமே. 581

கண்டாரேசீனபதிமாண்பர்தாமும்காசினியில்துகைகணக்கைத் தாமறிந்தார், விண்டதொருருஜாதிருசரெல்லாம் விருதாவாய்வைய

கத்தையாண்டுமென்ன, கொண்டல்வண்ணனச்சுதனுங் காணுமற்று ன்குவலயத்தில்தான்மடிந்தார் மற்றொன்றுமில்லை, அண்டர்முனிரா ட்சதர்களானபேரும் அவனிதனில்கணக்கதனை யறியார்காணே.

காணவேவையகத்துக்கணக்கையெல்லாம் கண்டறிந்தார் எந்த ன்குருநாதசாமி, தோணவேயவரிருந்தநாட்கள்மட்டும் தோற்றமல்மா ண்பரிடதொகையைத்தானும், பூணவேயுகாந்தவரை சாத்திரத்தை புகழானகாலாங்கிநாதர்தாமும், மாணவேதொகுப்பினது வரலாறெ ல்லாம் வளமுடனேகண்டறிந்து வகுத்திட்டாரே. 583

போகர்பூமியளவும் சமுத்திர அளவுங் கூறல்.

வகுத்தாரேபுலிப்பாணிமைந்தாகேளு வளமையுள்ள கண்மணி யேசொல்வேன்பாரு, தொகுத்ததொரு மாண்பர்களின்கணக்கு தம் மை தொல்லுலகில்தாமறிந்த மட்டுஞ்சொன்னார், தகுத்திடவே வை யகத்தினளவுதானும் தகமையுடன்பூமிவளமேதென்றுக்கால், மிகுந் திடவே சத்தசாகரமுஞ் சேர்ந்து மேதினியில் மூன்றுபங்கு ஜலமு மாச்சே. 584

ஆச்சப்பாபூமிவளம்நாலிலொன்று வப்பனேகர்த்தாது யேற்பா டல்லோ, பாச்சலுடன்பூமிக்குப்பாதியல்லோ பாங்கான மலைவளங்க ளென்னலாகும், மாச்சலுடன்தீவுகளுமஷ்டதிக்குமகத்தானதிசை நான்குமென்னலாகும், ஆச்சரியமானதொரு பட்டினங்கள்வதில்நா ன்கு ஓர்புரமுஞ்சொல்லலாமே. 585

சொல்லவென்றால் முப்புரமுங்காடேயாகும் தோற்றமல்பட்டி னத்தின் தொகைதான்சொல்வேன், வெல்லவேபட்டினங்க ளறுபத் துநான்கு மேன்மையுடன்குரிச்சிகளோ கணக்கேயில்லை, புல்லவே ந திபாகம்நூற்றிருபதாகும் புகழானசிறுநதிகளனந்தங்கோடி, மெல்ல வேயேரிவகைமிருநூற்றுப்பத்து மேன்மையுடன் கால்வாய்கள்கணக் கில்லைதானே. 586

ஸ்தலப்பெருமை

தானுன்தேவதாஸ்தலங்கள்தன்னை சாற்றுகிறே னஷ்டதிக்குப் பூமிமட்டும், கோனுனகாலாங்கிநாதர்தாமும் கொற்றவனார்குளிகைய துபூண்டுசென்ற, தேனுனதேவாலயத்தொகையைச்சொல்வேன் தே ற்றமுடன் நூற்றியிருபத்திரெண்டு, மானுனமகாஸ்தலங்க ளிதுவே யாகும் மகத்தானசிறுஸ்தலங்கள் சொல்லொண்ணாதே. 587

மனிதர் பேதாபேதம்.

ஒண்ணாதுமானிடர்கள் வளப்பஞ்சொல்வேன்வுத்தமனேகாலா ங்கிகிருபையாலே, திண்ணமுடன்வையகத்தில் திசைகளெட்டும்சுத் திவந்தேன்சத்தகடல் பூமியெல்லாம், அண்ணாந்துமலைவனத்தில் சிக

ரங்கண்டேன் அதிலிருந்தமார்க்கமெல்லாந்தெரிந்தேன்யானும், வண்ணமுடன்மானிடரின் ரூபந்தன்னை வளமையுடன் சொல்லுகிறேன் பண்பாய்க்கேளே. 588

கேளப்பாசிலதேசமாந்தர்தானும் கெடியானரூபமது அஸ்வரூபம், மாளப்பாசிலதேசமார்ந்தர்தானும் மகத்தானசிங்கமென்றமுகமேயாகும், ஆளப்பாசிலதேசமாண்பர்தானும் வப்பனே ஆஞ்சநேய ரூபமாகும், வீளப்பாசிலதேசமாண்பர்தானும் விகாரமுள்ளராட்சதரின் பேதமாமே. 589

ஆமேதான்சிலதேசமாண்பரப்பா வப்பனேயலைகடலிலிருப்பார்தானும், நாமேதான்சிலதேசமாண்பர்தானும் நலமுடைய மன்மதன் ரூபம்போலும், போமேதான்சிலதேசமாண்பரப்பா புகழானரூபமது பார்க்கொண்ணாது, தாமேதான்ரூபமது விகாரரூபம் தனியான ஜல ரூபஞ்சொல்லொண்ணாதே. 560

ஒண்ணவேசிலதேச மாண்பரப்பா வுத்தமனே அந்தவண்ணான் முகமுமாகும், எண்ணவேமுடியாது ஜாதிபேதம் யெழிலானபேதமதுலக்கோயில்லை, கண்ணவேசாதியது பதினெட்டாக காசினியிலவதரித்தார்கோடிமாண்பர், எண்ணவேமுடியாது யாராலுந்தானெழிலானஜாதியிடமார்க்கந்தானே. 591

## பட்சிகள் பேதாபேதம்

மார்க்கமாமின்னமொருமகிமைகேளுமகத்தானபுலிப்பாணிமைந்தாபாரு, ஓர்க்கவேஜாதியதுபேதாபேதம் எழுநூற்றிருப்பதினாறு சொச்சமாகும், மூர்க்கமாம்மாண்பரொடுபேசும்பட்சி மூனையான முப்பத்திரெண்டேஜாதி, ஆர்க்கவேபரிபாஷைதெரிந்தபட்க்ஷிவப்பனே சோடசமும்ஜாதிபதினாறே. 592

ஆறுனபட்சியதுஅனந்தமுண்டு அதுதனக்கு குணகுணபேதமில்லை, நூறுனவாண்டுக்குளிருக்கும்பட்சி நுண்மையுடன் கலைகள்பதினறுதாகும், நூறுனமற்றதோர்பட்சியெல்லாம் துப்புரவாய் வயதுவுங் கொஞ்சமாகும், தேறுனமற்றதோர்பட்சிக்கப்பா தேசத்தில் பகுத்தறிவு இல்லைதானே 593

## மிருகபேதாபேதம்.

தானனமிருகத்தின்வளம்பஞ்சொல்வேன் தண்மையுள்ள புலிப்பாணிமைந்தாகேளு, கோனனையனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார்குருபாத கடாட்சத்தாலும், தேனனமனோன்மணியாள் கடாட்

சத்தாலும் தேசமெல்லாங்குளிகைபதுபூண்டுகொண்டு, மானனமிரு கத்தின்மருத்துவத்தை மண்டலத்தில் கண்டறிந்துவந்தேன்பாரே.

பாரேதான்மிருகததின் வளப்பஞ்சொல்வேன் பாங்கானமனே லயத்தையறிந்தஜாதி, நேரேதான்மிருகமது சோடசமாகும் நேர்மை யுடன்ஜாதியதுபதினூறேயாகும், சீரேதான்மிருகமது பரிபாஷைபே சும் சிறப்பானமற்றதோர்மிருகமெல்லாம், வேரேதான்பகுத்தறிவுயி ல்லையப்பா வேதாந்தகாலாங்கியருள்வாக்காச்சே. 595

வாங்கானவாக்கதுவும் மறிந்தஜாதி வளமானநயமென்றபாஷை தன்னே, நோக்கமுடன்தானறியும்மிருகஜாதி நுண்மையுடன்மார்பத னில்நகருஞ்சாதி, ஏர்க்கவேஜாதியதுபேதாபேதம் யெழிலாகத்தாம ரைப்பேன்வண்மைபாரு, தீர்க்கமுடன்பூமிதனில் நகருஞ்சாதி திற மானகாலில்லாஜாதிதானே. 596

மாரால்நகரப்பட்டஜீவஜெந்துக்களின்பேதாபேதம்.

தானனஜாதிவகை சொல்வேன்கேளு தயவானபுலிப்பாணிமை ந்தாபாரு, தேனனபூமிதனில்விஷமுள்ளசெந்து தேசத்திலறிவுள்ள ஜெந்தொன்றப்பா, மானனமாணிக்கப்பாம்பேயெல்லால் மற்றதொ ருஜெந்துக்கள்யாதொன்றில்லை, பானனவையகத்தில்கோடியுண்டுபா லகனேவாலகாலப்பாம்பாகாதே. 597

ஆகாதுபரிபாஷைத்தெரிந்தபாம்பு வப்பனேயாரறிவார் மண்ட லத்தில், சாகாதுகோடியுகமிருக்கும்பாம்பு சர்ப்பராஜனென்றல்லோ பேறண்டாச்சு, வேகாதுகாடுதீப்பட்டெரிந்தால் வேகமுடனுகாயம் பறக்கும்பாம்பு, போகாதுசிறகுடையசர்ப்பமல்லோ பொங்கமுடன் கண்டறிந்தபாம்புதானே. 598

பாம்பானமற்றதோர்ஜீவஜெந்து பாரினிலே யெத்தனையோகோ டியுண்டு, தீம்பானஜெந்துக்கள் வையகத்தில் திரளானகணக்குவகை கூறப்போமோ, வீம்புடனேசீவவதைசெய்திட்டாலும் வித்தகனேய தற்கொன்றுந்தெரியாதப்பா, ஆம்பலுடன்கொட்டியவர் மலர்தல் போலும் வப்பனேயவனிதனிலதிகமுண்டே. 599

உண்டானபுலிப்பாணிமைந்தாபாரு வுத்தமனே யின்னமொரு மார்க்கஞ்சொல்வேன், கண்டதொருவையகத்தில் விருட்சந்தன்னில் காலாங்கிநாதரவறிந்தமட்டும், அண்டமதிலாகாய தேவரெல்லாம் வ ன்புடனேயுகந்துகொண்ட விருட்சந்தன்னை, சண்டமாருதம்போல விருட்சந்தன்னைசாற்றுகிறேன் புலிப்பாணிமைந்தாபாரே. 600

விருட்சங்களின் பேதா பேதம்.

பாரப்பா புலிப்பாணி மைந்தாகேளு பாண்மையுட னறிந்தவ்வை சொல்வேன்யானும், சீரப்பாவையகத்தில் விருட்சந்தானும் சிறப்பானகோடியுண்டு லக்கோயில்லை, நேரப்பா கனிவகைகள் கோடியுண்டு நேர்மையுடன்கண்டறிந்து பார்த்ததுண்டு, ஆரப்பாகர்ப்பகமாம்விருட்சந்தானும் அவனிதனில்மாண்பர்களுக்குகந்ததாச்சே.

ஆச்சப்பா விருட்சவகைகோடியுண்டு லப்பனே கர்ப்பத்தின் விருட்சந்தன்னை, மாச்சலுடன் யெதுகேட்டால் தருவேனென்று மகத்தான விருட்சமது கூறும்வண்ணம், ஏச்சலது வாராமலிருக்கும் விருட்சம் யெழிலான வையகத்தோர்க்கானஜாதி, காச்சலுடன் பூமிதனில்வாழுஞ்சாதி கனமான விருட்சமென்ற மரமுமாச்சே. 602

மனிதர்க்கு அறிவு ஐந்துமிருகங்களுக்கு அறிவு நான்குபட்சிக்கு அறிவுமூன்று மாரால் நகரும் பிராணிக்கு அறிவு இரண்டு விருட்சத்துக்கு அறிவுவொன்று கூறுதலாம்.

ஆச்சப்பாமாந்தருக்குப் பஞ்சபூதம் வப்பனேவாத்துமமாமென்னலாகும், மூச்சொடுங்கும் மிருகமதுக்கறிவு நாலுமுனேயான சீவனென்றேசெப்பலாகும், பாச்சலுடன் பறக்கின்றபட்சியப்பா பாங்கானவறிவதுவும்மூன்றேயாகும், மேச்சலுடன்மார்பதனால்நகருஞ்செந்து மேன்மையுடனயறிவதுதான் ரெண்டதாமே. 603

இரண்டானவிருட்சத்துக் கறிவுவொன்று யெழிலானசாத்திரத் தொகுப்பின்கூற, திரண்டதொருகவிவாணர் சொன்னவாக்குதிக்கெட்டும்சித்தர்முனி கண்டாராய்ந்து, மிரண்டதொரு மானிடர்க்கு வையகத்தில்மிக்கான தொகுப்புவகையாவுங்கூறி, காண்டகம்போல் போகரேழாயிரத்தான் காசினியில்பா டிவைத்தபண்பதாமே.

சக்கரவர்த்திகள் செங்கோற்பெருமைகூறல்.

பண்பானயின்னமொரு மார்க்கங்கேளு பாங்கானபுலிப்பாணி மைந்தபாரு, நண்பானவையகத்தில்கோடிமன்னர் நாடாண்டு காடுறைந்தார்லக்கோயில்லை, பெண்பான செங்கோலின் பெருமைமார்க்கம் பேரானவமைப்பு சிலர்கண்டாரங்கே, சண்டாளம்வந்தருக்குயாதொன்றில்லை சட்டமுடன் போகரிஷிகூறுவேனே. 605

கூறுவேன்சக்கரவர்த்தி யென்றுமேதான் குவலயத்தில் பேர்கொண்டுலாபமென்ன, மாறுடைய வேந்தர்களாயவதரித்து மானிலத்தில்மன்னவராயிருந்துமென்ன, வேறுபட மாண்பர்களை வுறுத்தல்

செய்துவேண்டியதோர்நிதியனைத்துங்கொள்ளைகொள்வார், ஆறுதல ங்கட்டறியார்மன்னர்தாமும் அகதிபரதேசியரைத் தேடார்தானே.

தானானமன்னவர்க்கு முறைமையதென்றால் தாக்கானவங்கமது பத்துமுண்டாய், கோனான அஷ்டசெல்வந் தானுங்கொண்டு கொற் றவனார்பேர்தனையேவகிக்கவேண்டும், தேனானவெற்றியது யெட்டும் பெற்று திரளானபொருளுளவும் நான்குங்கொண்டு மானானநிதி யனைத்துங்கொண்டுமல்லோ மகத்தானமங்களமுமெட்டுந்தானே.

எட்டானமங்களமு மிருக்கவேண்டும் யெழிலானபேறுபதினாறு வேண்டும், மட்டானகனமெட்டு மிருக்கவேண்டும், மகத்தானவிளை யாட்டுமெட்டுவேண்டும், திட்டமாஞ் சேனைதுகை பத்தும்வேண்டும் திகழானபுங்கசித்தி யெட்டும்வேண்டும், வட்டமுடன் போகமதுயெ ட்டும்வேண்டும் வளமான ராஜர்களுக்குகந்தவாறே. 608

வாறான செருக்குயிரு நாலதாகும் வண்மையுள்ள செங்கோலு மேழதாகும், கூறானகலையதுவும் ஆறும்வேண்டும் குறிப்பானகாம மதைமூன்றும்விட்டு, தாறானதிரவியங்களைந்தும்பெற்று தாக்கான தீக்குணங்கள்பத்தும்விட்டு, சேறாடுங்கொங்கையாமும் மணியும் பெற்று சிறப்பான பணிதிமுதல்கொண்டார்தாமே. 609

கொண்டதொரு வேந்தனுக்கு யிதுகள்வேண்டும் கோடான கோடிபொருள்யிருந்துமென்ன, அண்டிவந்தயதிதிபரதேசியர்க்கு வ ன்புடனேகர்ணனைப் போலீயவேண்டும், வண்டணிமார் குடிப்படை கள் தன்னைத்தானும் வளமையுடன் கற்பழிக்கலாகாதப்பா, சண்ட மாருதம்போலே செங்கோல்நாட்டி சதுருடனேயாள்பவனே மன்ன னாமே. 610

மன்னனும்படுகளத்திலு யிரைத்தானும் மார்க்கமுடன் விடுவத ற்கு அஞ்சலில்லாய், தென்னதன்போல்திக்கெட்டும் புகழுவல்லாய் தேசமெங்கும்மாண்பர்களுந் துதிக்கவல்லாய் இன்னிலத்திலவரித் துமகுடம் பூண்டு யெழிலானராஜாதிராசனென்றும், நன்னயமாய் பராபரத்தின் ரூபங்கொண்டு நயமுடனேயவதரித்தோன்வேந்த னாமே. 611

வேந்தனுஞ் சத்தியத்தில்வாக்கு பெற்றோன் வேதாந்தமறிந்தோன் மணியாளருளும்பெற்றோன், போந்தமுடன்மகம்மேரு வில்லும்பெ ற்றோன் புகழானவிசயனென்று பேருங்கொண்டோன்,சாந்தமுடன் வேதவழிதன்னிற் சென்றோன் தவந்தனிலே தான்மிகுந்த யோகவா னாய், காந்தமதிகொண்டதொரு விலாசனாக காசினியிலிருப்பவனே யரசனாமே. 612

அரசனுமிப்படியேகாலாங்கிநாதர் வன்புடனே குளிகையதுபூண்டுகொண்டு, முரசுடனேமுன்சொன்னவமைப்புபோல முப்பத்திரண்டரசர்தன்னைக்கண்டார், திறமுடனேகாலாங்கிதாள்பணிந்துதீர்க்க முடனடியேனுங்குளிகைபூண்டு, உரமானபதினறு அரசர்தம்மைவுத்தமனுமடியேனுங்கண்டிட்டேனே. 613

கண்டேனே ராஜாதிசக்கரவர்த்தி காசினியில்நானிருந்தநாட்கள் மட்டும், உண்டானசக்கரவர்த்தி பதினறுகண்டேன் ஒகோகோநாதாக்கள் சொன்னதில்லை, அண்டபுவனங்களெல்லாம் கண்டராஜர் அவனி தனிலிவர்போலுஞ்சித்துமுண்டோ, தண்டவனரிஷிகளெல்லாஞ் சித்துதாமும் தாரணியில்மறைத்தாரேகோடியாமே. 614

சுப்பிரமணியர் தியானம்.

கோடியாமின்னமொருமார்க்கங்கேளு குறிப்பான புலிப்பாணிமைந்தாபாரு, நாடியேவடிவேலர்தியானமப்பா நாட்டுகிறேன்யுந்தனுக்குநன்மையாகும், கோடியுகமிருந்தாலுமென்னலாபம் குவலயத்தில்கதிபெறவேவழிதான்வேண்டும், தேடியபரஞ்சுடரை நண்ணவேண்டி தேசத்திலுறுதிமனங்கொண்டிடாயே. 615

கொண்டிடவேவடிவேலர்தன்னையப்பா கூறுகிறேன்வசியமென்றமார்க்கஞ்சொல்வேன், கண்டறியமேதனுமென்றால் கைலாசர்தம்மைகருத்தினிலேசதாகாலம் நிர்த்தஞ்செய்து, பண்டதிகமானதொருபழவாக்கங்கள் பாலகனேசர்க்கரையா மமுதுதானும், விண்டதொருவறுகோண நிர்த்தஞ்செய்து விருப்பமுடன்பிரணவத்தைமாறுவாயே.

மாறுதல்சக்கரம்.

மாறலென்றால்மேல்மூலங்கீறலொன்று மகத்தான அடிமூலங்கீறலொன்று, ஆறுடன்கீழ்த்திசையாங்கீறலொன்று வப்பனைமேற்றிசையாங்கீறலொன்று, மீறலுடன்தென்றிசையாங் கீறலொன்று மேன்மையுடன்வடதிசையாங் கீறலொன்று, வாறலுடன்குணதிசை யாங்கீறலொன்று வகுப்பானகீறலது அறுகோணமாமே.

கோணமாம்மூலவரைசூலம்போடு குறிப்பானவரையாறும்மூலஞ்சூலம், வேணபடிநடுமையங்கரணப்போடு வேகமுடன்சுழிமையம்பிரணவந்தான், சீணமதுவாராமல்பிறணவத்தை செப்புகிறேன்வுள்மூலங்கொண்டுமாறு, காணறிய பரஞ்சுடராம்வடிவேலர்தாமும் கர்த்தனைப்போல்வந்துதிப்பார்பாருபாரே. 618

பாரப்பாமேல்மூலம்ஹரி வோம்பாடுபாங்கான கீழ்மூலம்ஐயுங் கிலியும், நேரப்பாகீள்மூலம்சௌவும் ஸ்ரீயும்நேர்மையுடன் ஹரியுடனே இம்மென்றோது, சீரப்பா அங்குடனே -லிங்-வங்-ஓங்-சிறப்பான சிங்குடனே ஆங்கென்றோது, ஆரப்பா-மங்-யங்-நங்-நங்கென்றேசொல்லுவப்பனே சிவசுப்பிரமணியென்பாயே. 619

என்னவே அம்பிகைப்பாலாவாவா யெழிலானசரவணபவனே வாவா, துன்னவே-வசி-வசி-வருக-வருக துப்புரவாய்சுவாஹாயாசிரோமணியேவாவா, பன்னவேபுரணவத்தையோதும்போது பாலகனேசுப்பிரமணியர் நிர்த்தஞ்செய்வார், மின்னவேமயில்வாகனரூடராக மீட்சியுடன்தரிசனைக்குவுள்ளாவாரே. 620

உள்ளதொருவறுகோணம்நடுமையத்தில் வுத்தமனேநாமிருந்து நிர்த்தஞ்செய்தால், கள்ளமதுவாராமல்சுப்ரமண்யர் காட்சியுடனுந்தனுக்குவரமேயீவார், எள்ளளவுகுறையாமல்பிரணவந்தான் யெழிலானவட்சரத்தைலட்சம்போடு, தெள்ளுமணிபாலகனார்முன்னேநிற்பார் சிவசுப்பிரமணியனெனச்செப்பலாமே. 621

செப்பலாஞ்சுப்பிரமணியனென்பார்பாரு சிறப்பானமனிதனல்லால்வேறொன்றில்லை, ஒப்பமுடன் நீநினைத்தசுப்பிரமணியன் ஓகோகோநாதாந்தக்கடவுளாச்சு, எப்படியும்நாதாந்தக்கடவுளுக்கு யெழிலானவவதாரபுருஷனென்றும், இப்படியேகோடான கோடிநாமம் யெழிலானசாத்திரங்கள் சொல்லலாச்சே. . 622

சொல்லவேயவரவர்கள்தக்கநேர்மை சுந்தரனேதன்மனதிலயிக்கியங்கொண்டு, வெல்லவேபலவிதமாந்தெய்வம்போலே விசாரணைகளில்லாமல்பேதைநெஞ்சாய் புல்லவேகவிவாணர்கட்டுவாக்கியம் புகழாகப்பலபலவாம்நாமந்தன்னை, சொல்லவேநற்கடவுளென்றுகூறிசெம்மலுடன்மதிகெட்டுந்துதிப்பார்பாரே. 623

பாரப்பாபூலோககர்த்தனுக்கு பாங்கானமூன்றுபேர்வகுக்கலாச்சு, நேரப்பாஹரியயனும்பிர்ம்மாவென்று நெடிதானசாத்திரங்கள் கூறலாச்சு, சீரப்பாநாமமதுமூன்றுமல்லோ சிறப்பானகடவுளுக்குப் பேருமாச்சு, தேரப்பாதேசாதிதேசமெல்லாஞ்செப்பினார்பலநூலுஞ் சொன்னார்தாமே. 624

கடவுளுண்டென்பதற்கு திருஷ்டாந்திரம்.

சொன்னாரே கடவுளல்லால்வேறொன்றில்லை சுந்தரனேகடவுள் தனைக்காணமாட்டார், மன்னவனேதெய்வமதைக்காணுதற்கு மகத்தான திருடாந்திரமேதென்றாக்கால், தென்னவனேதேவஸ்தான

ந்தன்னில் திகழானமணியோசை கேட்குமல்லோ, முன்னவனேம ணியோசைகேட்கும்போதுமுனேயானமணியொன்றுயிருக்கலாச்சே.

இருக்கவென்ருல்மணியென்ற கருவொன்றுண்டு யெழிலானக ருவதனைக்கண்டதில்லை, திருத்தமுடன் மணியோசைக் கேட்டபோ து திகழானமணியொன்றுயிருக்கும்பாரு, பொருத்தமுடன்வையகத் திலதிசயங்கள்பொங்கமுடன்கோடானகோடியுண்டு, வருத்தமுடன் பிறப்பதுவும், பிறப்போர்தம்மை வளப்பமுடன் மறைதனையேகண் டிட்டோமே. 626

கண்டோமேலோகபதிவதிசயங்கள் காசினியில்வேருென்று கா ண்பதேனே, அண்டமுடன் வுலகுபதிக் கடவுள்தானும்வன்புடனே யிருப்பதற்கு ஐயமுண்டோ, உண்டானசாத்திரங்கள் பேதாபேதம் வுத்தமனேபாடிவைத்தா ரனேகமுண்டு, சண்டானமுறமைகெட்டு சாத்திரங்கள்செப்பிஞர் பலபேதைமாண்பர்தாமே 627

மாடன் மந்திரம்

மாண்பரா மின்னமொருமார்க்கங்கேளு மகத்தான புலிப்பாணி மைந்தாபாரு, ஆண்மையுள்ளமாடனவன் வசியமப்பா வவனிதனில் யாரறிவார் சித்துமாண்பர், காண்மையுள்ள கருவாளியறிவான்பாரு காசினியில்சண்டாளன் சத்துருவேதை, பாண்மையுள்ள கருமிகட் கும்மர்மிகட்கும் கருவானமாடன் மந்திரமுமாமே 628

மந்திரமாம்மாடனதுவசியத்தாலே மகத்தானமாண்பரெல்லாம் வசியமாவார், எந்திரமாம்மாடனதி பிரணவத்தால் யெழிலானதேவ தைகளெல்லாஞ்சித்தி தந்திரமாம் மாடனதுமந்திரத்தைதண்மையு டன்சொல்லுகிறேன் தயாளபாலா, சுந்தரமாங்கருவறிந்தமாண்பரப் பா சூட்சமுடன் செய்வான்பார் மர்மிதானே. 629

தானனபிரணவங்களேதென்ருக்கால்தண்மையுள்ள ஹரிஓம்கே ளென்றேயோது, கோனை அகோரமடா கெம்பீராயா குறிப்பான அகோரதர்க்கவாழ்முனீசா, தேனை ஸ்ரீங்கார பகவதிபுத்திராதெ ளிவானவீராதிவீரமாடா, வானைசமானமென்ற சுடலைமாடாமகத் தானயென்வார்த்தைகேட்டிடாயே. 630

கேட்கவென்று வுத்திரவின் மாடாகேளுகெடியானயென்வார் த்தைகைவிடாதே, தாட்கமலம் வீற்றிருக்கும் மனேன்மணியாள்பா தம் தயங்காமல்முன்னின்றுகாக்கவென்று, வேட்கையுடன்கிருபை யருள்விநேதமாடா வீருனரீங் சௌவுங்-கிலியென்ருேது, சூட்ச முடன்மய்-ஐயுங்-கிலியென்ருேது சுடருன ரீங்குடனே வாவாவென் ருேதே. 631

பாரப்பாமேல்மூலம்ஹரி வோம்பாடுபாங்கான கீழ்மூலம்ஐயுங் கிலியும், நேரப்பாகீள்மூலம்சௌவும் ஸ்ரீயும்நேர்மையுடன் ஹரியுட னே இம்மென்றோது, சீரப்பா அங்குடனே-லிங்-வங்-ஓங்-சிறப்பான சிங்குடனே ஆங்கென்றோது, ஆரப்பா-மங்-யங்-நங்-நங்கென்றேசொ ல்லுவப்பனே சிவசுப்பிரமணியென்பாயே. 619

என்னவே அம்பிகைப்பாலாவாவா யெழிலானசரவணபவனே வாவா, துன்னவே-வசி-வசி-வருக-வருக துப்புரவாய்சுவாஹாயாசி ரோமணியேவாவா, பன்னவேபுரணவத்தையோதும்போது பாலக னேசுப்பிரமணியர் நிர்த்தஞ்செய்வார், மின்னவேமயில்வாகனரூட ராக மீட்சியுடன்தரிசனைக்குவுள்ளாவாரே. 620

உள்ளதொருவறுகோணம்நடுமைய்த்தில் வுத்தமனேநாமிருந்து நிர்த்தஞ்செய்தால், கள்ளமதுவாராமல்சுப்ரமண்யர் காட்சியுடனுந்த னுக்குவரமேயீவார், எள்ளளவுகுறையாமல்பிரணவந்தான் யெழி லானவட்சரத்தைலட்சம்போடு, தெள்ளுமணிபாலகனூர்முன்னேநிற் பார் சிவசுப்பிரமணியனெனச்செப்பலாமே. 621

செப்பலாஞ்சுப்பிரமணியனென்பார்பாரு சிறப்பானமனிதனல் லால்வேறொன்றில்லை, ஒப்பமுடன் நீநினைத்தசுப்பிரமணியன் ஓகோ கோகாதாந்தக்கடவுளாச்சு, எப்படியும்நாதாந்தக்கடவுளுக்கு யெழி லானவவதாரபுருஷனென்றும், இப்படியேகோடான கோடிநாமம் யெழிலானசாத்திரங்கள் சொல்லலாச்சே. 622

சொல்லவேயவரவர்கள்தக்கநேர்மை சுந்தரனேதன்மனதிலயிக் கியங்கொண்டு, வெல்லவேபலவிதமாந்தெய்வம்போலே விசாரணைக ளில்லாமல்பேதைநெஞ்சாய் புல்லவேகவிவாணர்கட்டுவாக்கியம் புக ழாகப்பலபலவாம்நாமந்தன்னை, சொல்லவேநற்கடவுளென்றுகூறிசெ ம்மலுடன்மதிகெட்டுந்துதிப்பார்பாரே. 623

பாரப்பாபூலோககர்த்தனுக்கு பாங்கானமூன்றுபேர்வகுக்கலா ச்சு, நேரப்பாஹரியயனும்பிர்ம்மாவென்று நெடிதானசாத்திரங்கள் கூறலாச்சு, சீரப்பாநாமமதுமூன்றுமல்லோ சிறப்பானகடவுளுக்குப் பேருமாச்சு, தேரப்பாதேசாதிதேசமெல்லாஞ்செப்பினார்பலநூலுஞ் சொன்னார்தாமே. 624

## கடவுளுண்டென்பதற்கு திருஷ்டாந்திரம்.

சொன்னீர கடவுளல்லால்வேறொன்றில்லை சுந்தரனேகடவுள் தனைக்காணமாட்டார், மன்னவனேதெய்வமதைக்காணுதற்கு மகத் தான திருடாந்திரமேதென்றக்கால், தென்னவனேதேவஸ்தான

ந்தன்னில் திகழான மணியோசை கேட்குமல்லோ, முன்னவனை மணியோசைகேட்கும்போதுமுனையானமணியொன்றயிருக்கலாச்சே.

இருக்கவென்றால்மணியென்ற கருவொன்றுண்டு யெழிலானக ருவதனைக்கண்டதில்லை, திருத்தமுடன் மணியோசைக் கேட்டபோ துதிகழானமணியொன்றயிருக்கும்பாரு, பொருத்தமுடன் வையகத் தில திசயங்கள்பொங்கமுடன்கோடானகோடியுண்டு, வருத்தமுடன் பிறப்பதுவும், பிறப்போர்தம்மை வளப்பமுடன் மறைதனையேகண் டிட்டோமே. 626

கண்டோமேலோகபதிவதிசயங்கள் காசினியில்வேறென்ற கா ண்பதேனோ, அண்டமுடன் வுலகுபதிக் கடவுள்தானும்வன்புடனே யிருப்பதற்கு ஐயமுண்டோ, உண்டானசாத்திரங்கள் பேதாபேதம் வுத்தமனேபாடிவைத்தா ரனேகமுண்டு, சண்டானமுறமைகெட்டு சாத்திரங்கள்செப்பினோர் பலபேதைமாண்பர்தாமே 627

மாடன் மந்திரம்

மாண்பரா மின்னமொருமார்க்கங்கேளு மகத்தான புலிப்பாணி மைந்தாபாரு, ஆண்மையுள்ளமாடனவன் வசியமப்பா வவனிதனில் யாரறிவார் சித்துமாண்பர், காண்மையுள்ள கருவாளியறிவான்பாரு காசினியில்சண்டாளன் சத்துருவேவதை, பாண்மையுள்ள கருமிகட் கும்மர்மிகட்கும் கருவானமாடன் மந்திரமுமாமே 628

மந்திரமாம்மாடனதுவசியத்தாலே மகத்தானமாண்பரெல்லாம் வசியமாவார், எந்திரமாம்மாடனதி பிரணவத்தால் யெழிலானதேவ தைகளெல்லாஞ்சித்தி தந்திரமாம் மாடனதுமந்திரத்தைதண்மையு டன்சொல்லுகிறேன் தயாளபாலா, சுந்தரமாங்கருவமிந்தமாண்பரப் பா சூட்சமுடன் செய்வான்பார் மர்மிதானே. 629

தானான பிரணவங்களேதென்றக்கால்தண்மையுள்ள ஹரிஓம்கே ளென்றேயோது, கோனான அகோரமடா கெம்பீராயா குறிப்பான அகோரதர்க்கவாழ்முனீசா, தேனான ஸ்ரீங்கார பகவதிபுத்திராதெ ளிவானவீராதிவீரமாடா, வானானசமானமென்ற சுடலைமாடாமகத் தானயென்வார்த்தைகேட்டிடாயே. 630

கேட்கவென்று வுத்திரவின் மாடாகேளுகெடியானயென்வார் த்தைகைவிடாதே, தாட்கமலம் வீற்றிருக்கும் மனோன்மணியாள்பா தம் தயங்காமல்முன்னின்றகார்க்கவென்ற, வேடிக்கையுடன்கிருபை யருள்வினோதமாடா வீறனரீங் சௌவுங்-கிலியென்றேது, சூட்ச முடன்மய்-ஐயுங்-கிலியென்றேது சுடறான ரீங்குடனே வாவாவென் றேதே. 631

இருக்கிறேன் துவாபரயுகந்தொடங்கியெழிலாகயிந்நாளும்வுறுதியாக, திருக்கமலம்விற்றிருக்கும் தூமாதேவிதிகழான சன்னதியைப்பாதுகாற்று, உருக்கமுடன் பத்மாசனத்திருந்து வுத்தமனேகாலமதைகழித்துகொண்டு, பெருகமுடன்கன்னிமார் பூசையோடும் பேரின்பநிலைதனிலேநிற்கின்றேனே. 645

நிற்கின்றேன் தூமதாபதியிலப்பா நிலையானக்ஷேத்திரத்தில்வெகுகாலந்தான், துற்கையெனும் மலையாளசன்னிதானம் துப்புரவாய் சமாதிமுகமிருந்துகொண்டு, அற்பமென்றமலோகபதி வதிசயத்தையருள்கடந்து கடல்கடந்து, வன்பவனாய் சற்பமென்றசடாபாரந்தலையிலேந்தி சாங்கமுடன்மலையாளமமர்ந்திட்டேனே. 646

இட்டேனெகாலாங்கிநாதசீஷா யெழிலாகயெந்தனைநீகண்டதாலே, சட்டமுடன்மனதுவந்துயுந்தமக்கு சாங்கமுடன் தூமதாதேவி மந்திரம், திட்டமுடன்வுந்தமக்கு வுபதேசங்கள் சிறப்பானதேவதா பிரணவத்தை, வட்டமுடனுந்தனுக்கு வுபதேசிக்கும் வளமையுடன் யெந்தனது பாரந்தானே. 647

தூமாதேவி பிரணவமந்திரத்தை போகருக்கு சித்துகூறல்.

பருபரமாங்காலாங்கிநாதசீஷா பட்சமுடன்பிரணவத்தைசொல்லக்கேளீர் தீரமுடன்ஓமென்றவட்சரத்தை தீர்க்கமுடனெந்தனுக்குவுபதேசித்தார், வீரமுடன் தூம் தூம்யென்றேசொல்லி விருப்பமுடன்பிரணவத்தை யுச்சாடித்து, கோரமுடன் கிலி கிலியென்றே சொல்லிகொற்றவனே ஸத்தம்பயவென்றிட்டாரே. 648

என்றாரேஅண்டமதைத்தான்பிடுங்கி யெழிலானவாகாயந்தனிலெறிந்து, குன்றானநாற்கடலுந் தத்தளிக்கதூறிப்புடனேயென்முன்னேஓடிவாவா, சென்றுமேஐயுங்கிலியும் சௌவுமென்று செப்பினார் பிரணவத்தை என்முன்நிற்க, வென்றிடவேலட்சமுருவோதுவோது வுத்தமனே வசி வசி சுவாஹாயென்னே. 649

என்னவேமண்டலத்தில் வசியமாச்சு யெழிலானதூமதா தேவி மந்திரம், சொன்னதொருமந்திரத்தாலஷ்டசித்தி சுரதரனே யுந்தமக்குப்பலிக்கும்பாரு, பன்னவேகுளிகையது பூண்டுகொண்டு பாருலகஞ்சுற்றிவருங்காலந்தன்னில், முன்னமேசித்துமுனி ரிஷிகள்தாமும் மூர்க்கமுடன்சபித்திடவே வருவார்பாரே. 650

பாரேதானுந்தனையுஞ் சபிக்கவந்தால் பாலகனே தூமதாபிரணவத்தை, நேரேதானுச்சாடஞ்செய்யும்போது நிஷ்களங்கமாகியல்லோ வணங்கியுன்னை, சேரேதானரு களைத்து யுந்தனுக்கு செப்புவார்வெணுபதேசமெல்லாம், வேரேதானுபதேசமுந்தனுக்கு வேண்டுமோ தூமதாமந்திரந்தானே. 651

தானான தூமதா மந்திரத்தால் சட்டமுடன் தரணிதனைஜெயிக்கலாகும், கோனானயிடையூறுவந்தபோது கொற்றவனேமந்திரவுச்சாடனத்தை, தேனான மன்னன்மணியைத் தானினைந்து செப்பிடவேயுந்தனுக்குயெல்லாஞ்சித்தி, பானானதேவதாமந்திரத்தை பட்சமுடன் ஆருக்குஞ்சொல்லொண்ணாதே. 652

ஒண்ணான குருமந்திரம் தேவதாமந்திரம்வுத்தமனே புலிப்பாணியுந்தனுக்கு, திண்ணமுடனுபதேசஞ்செய்தேனப்பா தீர்க்கமுடன் யென்னாளும் மனதிலுன்னி, வண்ணமுடன் வுந்தனுக்கு யிடையூற்காலம் வந்திட்டால்பிரணவத்தை யுச்சாடித்து, தண்ணமுடன்சின்மயத்திலிருந்துகொண்டு சதாநித்தம்தேவியை நீபோற்றலாயே. 653

மலையாள கறுப்பண்ணன்வசியம்.

போற்றுகிறேன் யின்னமொரு வசியங்கேளுபுகழான புலிப்பாணிமைந்தாபாரு, ஆற்றலுடன் கறுப்பண்ணன் வசியந்தன்னை வப்பனேமானுக்கள்பிழைக்கவென்று, மாற்றவேகுளிகையது பூண்டுகொண்டு மகத்தான சீனபதிவிட்டுமல்லோ, ஏற்கவே மலையாளபதியிலப்பா யெழிலாகவாறாண்டு யிருந்திட்டேனே. 654

இருந்தேனே தூமதாதேவன்தானம் யெழிலான சன்னிதிக்குவடபாகத்தில், பொருந்தவேசமாதியது யானுங்கண்டேன் பொங்கமுடன்கறுப்பண்ணன் விருட்சமுண்டு, திருந்தவேகுளிகையது யானும் விட்டு தீரமுடன்சமாதிபுரம் நிற்கும்போது, அருந்தவசியங்கொருவரிருந்தாரப்பா வப்பனேயெந்தனையுங்கண்டிட்டாரே. 655

கண்டாரேசித்துமகாரிஷியார்தாமும் கருத்தாக எந்தனைத்தான் கண்டபோது, திண்மையுடனாரென்று என்னைகேட்க தீர்க்கமுடன் காலாங்கிசீடனென்றேன், வண்ணமுடன் தாள்பணிந்து யடியேனானும்வளமாக சிரங்குனிந்துதெண்டனிட்டேன், கண்ணபிரான்றன்னைப்போல் ரூபங்கொண்டகர்த்தாவு மெந்தனையுமதித்திட்டாரே.

மதித்துமே யெந்தனையுமாசீர்வித்து மகிட்சியுடன்ஞானோபதேசஞ் செய்வேனென்றார், துதித்துமேயடியேனு மனதுவந்து துப்புரவாய்

தமதுடையபாதாரந்தான், மதித்துமே வையகத்தி லடியேன்றனும் வளமையுடன் ரதானித்தங் குருவெண்றெண்ணி, கதிப்படவேகாலா ங்கியென்றுசொல்லி கர்த்தாவேயென்நாளும் மறவேன்றனே. 657

மறவேனேயென்றுசொல்லி மனங்களித்து மார்க்கமுடனடியே னுங்கூறும்போது, திறமான சமாதியிது கறுப்பன்சமாதி தீரமுடன் விருட்சாதிவிருட்சத்தின்கீழ், உறமுடனே வெகுகோடிகாலமாக வுத்தமனே சமாதியிடதவசியானும், குறைவதுவும்நேராமல் கோடி காலம் கொற்றவனேயானுமல்லோ யிருந்திட்டேனே. 658

இட்டேனே வெகுகோடி காலமப்பாயெழிலானகறுப்பண்ணன் சமாதிபச்கல், வட்டமுடன் யெத்தனையோகோடாகோடி வண்மையு ள்ளதவசிகளும் வருவார்போவார், சட்டமுடன்கறுப்பனுக்குயெதி ராளோர்கள் சாங்கமுட னிதுவரையிற்கண்டதில்லை. திட்டமுடன் கறுப்பண்ணன்வசியந்தன்னை தீர்க்கமுடனனேகம்பேர் கேட்டிட் டாரே. 659

கேட்டாரேவெகுமாண்பர் கேட்டாரப்பா கெடியானகறுப்பண் ணன்வசியந்தன்னை, வாட்டமுடன்வொருவருக்குஞ் சொன்னதில்லை வண்மையுடனெந்தனுக்கு வுபதேசித்தார் தாட்டிகமாய்க்குளிகை யது பூண்டுகொண்டு தண்மையுடன் போகுகின்றவுனக்குமைந்தா, நீட்டமுடன் பிரணவத்தையுபதேசித்தேன் நிஷ்களங்கமாகவல்லோ கேளுகேளே. 660

கேளேநீயென்றுசொல்லி பிரணவத்தைகெணிதமுடனெந்தனு க்குவுபதேசித்தார். பாளேதான்போகாமல் பிரணவத்தைபங்கமுட னுந்தமக்குவுபதேசித்தேன், ஆளேதான்மந்திரமோ பிரணவந்தான் வப்பனேஓர் சங்கரிசங்கரியென்ன, வீளேதான்வுச்சாடமந்திரத்தை விருப்பமுடன் சங்கரியேவாவாவென்னே. 661

என்னவேதேவதா கறுப்பண்ணன்பகலா யெழிலானவுக்கிரகறு ப்பண்ணுவாவா, துன்னவே ஆகாகாகாளியொடுங்கறுப்பாதுடியான வாங்காரமுள்ளதீபா, யன்னவே அம் அம் அம் மென்றே ஓது பட்ச முடன் கடுகெனவேவந்துநிற்பாய், சொன்னபடி ஆஞ்சநேயர்மக னே வாடாசுந்தரனே கொஞ்சிஎன்றசடையோன்றனே. 662

தானுன அந்திசந்தி தன்னில்நின்று தலையுருட்டுக்கறுப்பண்ணு தயாளபாலா, கோனுனமாலைதனில் மயங்குங்கறுப்பா கொற்றவனே அடி அடிபிடியென்றோது, வேனுன அங்-ஆங் கென்றேயோதுவிருப் பமுடன் ஆவேசு ஆவேசுயென்றும், பானுனஅகோர கறுப்பண்ணு வாவா பாலகனேசீக்கிரம்வாவவென்னே. 663

சீக்கிரமாஞ்சிவாயநம யென்றயோதுசிறப்புடனேபிரணவத்தை யுச்சரித்து, சாக்கிரதையாகவல்லோ கறுப்பன்றன்னை தகமையுடன் வுச்சாடித்தடுமையாக, வாக்குதப்பாமலேயுருவுபோடு, வளமுடனே மண்டலந்தான்லட்சம்போடு, நாக்கதுவும்பிசகாமல் நளினபாலா நய முடனேவுச்சாடஞ்செய்வீர்காணே. 664

காணவென்றாலுச்சாடவசியத்தாலே கறுவான கறுப்பண்ணன் முன்னேநிற்பான், தோணவேபிரணவத்தாலஷ்டசித்தி தொருமலுந் தனுக்குபலிக்கும்பாரு, பூணவேயஷ்டமாசித்துயோடும் புகழானதே வதைகளெல்லாஞ்சித்தி, நீணவேசின்மயத்திலிருந்துகொண்டு நிஷ்க ளங்கமாகவல்லோ வோதுவீரே. 665

சத்துருமாரணம்.

ஓதவென்றால்புலிப்பாணிமைந்தாகேளுவுத்தமனேசத்துருமா ரணந்தான்சொல்வேன், நீகமுடன்சத்துருவின்பிரணவத்தைநிகட்சியு டன்யாரறிவார் வுலகில்மாண்பர், தோதமுடன்கருவாளி காண்பான் பாரு தொல்லுலகில்மற்றவருங் காணமாட்டார், நாதமென்ற மனோ ன்மணியாள்கிருபையாலே நாதாந்தசித்தொளிவுங் காண்பான்பாரே.

பாரேதான்யெதிராளிசத்துருதன்னை பாங்குடனேமரணத்தாற் கொல்வதற்கு, நேரேதான்பிரதமைபோல் பாவுசெய்து நெடிதானம ண்பாத்திரந்தனிலமைத்து, சீரேதான்நடுமையம்வுந்திதன்னில் சிறப் பானவருகமென்றமுள்ளையப்பா, வீரேதான் நடுமையந்தனிலமைத் துவிருப்பமுடன்வசிதன்னையே நாட்டிடாயே. 667

நாட்டுவாய்காந்தமென்றவூசிதன்னை நலம்பெறவே முப்பத்திர ண்டுவூசி, நீட்டமுடன்கால்பத்து கரங்கள்பத்து நெடிதானவசிதன்னை யேநாட்டிட்டாய்நீ, வாட்டமுடன்யிருவிலாநெஞ்சுதன்னில் வளமா னதிலெட்டும்வசிகள்நாட்டி, தேட்டமுடன்பஞ்சகருவையெடுத்துதெ ளிவுடனே பாவுதனில்தூவிடாயே. 668

தூவிடவேகருவினதுமார்க்கங்கேளாய்துகளற்றசாலியனுர்மண் ணுங்கூட்டு, ஆவியெனும்மானிடரின் மசானச்சாம்பல் வப்பனேஎதி ராளிபாதநூளும், நாவிதனுர்கையழுக்கும் மலத்திஹுப்பும் நலம்பெ றவேதானெடுக்கப்பஞ்சகோசம், பாவியெனுஞ்சண்டாளப் பதுமைக் கப்பாபாங்குடனே ஐங்காயந்தானுஞ்சேரே. 669

சேர்த்துமேலலாடமதிலிட்டுமைந்தாசெம்மலுடன் அம்மென்று கும்பித்தல்லோ, ஆர்த்துமேபிரணவத்தையுச்சாடித்து வன்புடனே

லட்சமதுவுருவுபோடு, கோர்த்துமேவுருவதனுலொல்லாஞ்சித்திகொ ற்றவனேசின்மயத்திலிருந்துகொண்டு, பார்த்துவேநவகோணபீடந்த ன்னில் பக்குவமாய்சொரூபநிலைநின்றிடாயே. 670

திரிசூலி மந்திரோச்சாடனம்.

என்னவேதிரிசூலிபிரணவத்தை யெழிலானசத்துருவின்பாவுக் கல்லோ, சொன்னபடிமந்திரமாம் வட்சத்தைசோருமல் தானுரைத் துவுருவுபோடு, நன்னயமாய்வுருவதுவும் யேதென்ருக்கால்நலமான ஹரிஹரியென்றேஓது, குன்றுன அரனொளிசக்கரத்தை கொற்றவ னேசொரூபமதில் நின்று ஓதே. 671

ஓதவேதிருதிருயென்றேயோது ஒளிவானசக்கரத்தைப்பின்னு மோது, நீதமுடன்திருபுரையின்புவனேவாலை நிலையானஓம்பத்திரகா ளிவாவா, நீதோதமுடன் சத்துருசம்மாரிவாவா தோருமல் ஓம்ஓம்யெ ன்றேயோது, ஆதமுடன்வுனகையில் கபாலமேந்திவப்பனே கண்ட கோடாலியென்னே. 672

கோடாலியென்றதொரு பீஜமோது கொற்றவனே அகோரமெ ன்றகோரவாவா, தாடாண்மைகொண்டதொரு உக்ரஉக்ரதண்மையு ள்ளபுகைபுகைதனியேவாவா, பாடான்மைபெற்றஜல ஜலமோவாவா பாங்கானகும்பயகும்பயமென்ருேது, நீடாண்மை ஹணஹண நீயே வாவாநிகட்சியுடன் தகதகயென்றேயோதே. 673

என்றவுடன்பாஷயபாஷயவென்றேயோதுயெழிலான அம்இம் குரோம்யென்றேஓது, வென்றிடவே லலி லலிலாங் கென்ருேதுவே தாந்தத்தாயினது கிருபையாலே, சென்றிடவே லிலி லிலி கிலி கிலி யென்ருேது செயலான லுலு லுலு லும்யென்ருேது, தென்றிசை யாற்பரிபாவைகுறையாமற்ருன் செயலானவட்சரத்தையோதுவீரே

ஓதுவீர்வுயிரென்றபிரணவந்தான் ஓகோகோநாதாக்கள்சொல் லமாட்டார், தீதுபுகழட்சரங்கள்கூறுெண்ணுத தீரமுடன் மம மம வசங்கென்ருேது, வாதுகுரி சிவ சிவ யாமென்றேயோது மகத்தான குரு குரு வாவென்ருேது, சூதுபுகழ் ஓம் கிலிம் கிலியும் வா வா சுந் தரனேபகவதியேசுடரென்ருேதே. 675

சுடருனஓங்குடனேபாஷாங்குசத்ரி சுத்தமுள்ள சூலிசூலி வா வா வா வா, தடமானசொரூபமதில் நக நக வென்ருேது தாக்கான கலைவகுத்து தகதகவென்ருேது, திடமுடனே எகுட எகுட வட்சர த்தைதீர்க்கமுடன் தலைசுழற்றி மாறு மாறு, சடமுடனே கும்பகரு ம்பகமென்ருேது சாங்முடன் சுவாலாமென்ருேதல்கூறே. 676

கூறமேவுசிசுவாலாம்யென்றேபோது குறிப்பான பிரணவத்தை தலைகீழாய்மாறு, மாறமேவபிரதிசுவாலமென்றேயோது மகத்தான அக்கினிச்சுவாலாவென்று, ஆறமேவுரதிர யென்றேயோது வப்பனேக ருவானபீஜமாகும், மீறமேவுகோமாங்கிஷ பட்சணியேவாவா மிக்கான பாஜிபந்துபந்தென்றே. 677

பந்தானபந்ததுவும் குருபீஜமாகும் பாங்கான அகோரகோரவட்சரந்தான், சிந்தனையில்தானினைக்கு மாறுமாறு சிறப்புடனேடாட்டேடாட்டே யென்றேயோது, தொந்தமுடன ஐயுங்கிலியும் தற்கொவ்வாது சூதானவட்சரந்தான் அதர்வணமையாகும், பந்தமுள்ளவட்சரங்ளொவ்வொன்றுதானும் பாலகனேயொன்றுக்கொன் றுயிருமாமே

உயிரானமெழுத்துக்கு ஒவ்வொன்றுக்கும் வுத்தமனே பஞ்சபூதஆவியுண்டு, பயிலானவட்சந்தான் மாமாமாகி மகத்தான ராம்ராம் ரீம்மென்றே, பயிலானவட்சரந்தான் ரூம்ரூம்மாகும் பாங்கான ஆக்குருக்ஷா ஆக்குருக்ஷாயாகும், ஓயிலான கிலிம்சௌவும் ஐயும்மாகும் வுத்தமனே பகவதி ஓம்மென்றேயோதே. 679

ஓம்யென்றவட்சரந்தான் சத்துருசங்காரம் ஓகோகோநாதாக்கள்மறைத்துவைத்தார், ஆமென்ற சத்துருவை மடிமடி யென்றேது வப்பனே மசி மசி நசி நசியென்றே, ஏம்யென்றவட்சரந்தான் படுபடு சுவாஹா யெழிலானமித்துருவுக் கிதுபோலுண்டு, றீம்யென்றசுடரானவட்சரந்தான் றீர்க்கமுடன் மித்துருவிங் குண்டேபாரே

உண்டானவட்சரத்தால் பகையாளிதம்மை வுத்தமனேரோகமதைவிளைக்கலாகும், கண்டாலும்விடுவார்கள் புத்திமான்கள்காசினியிலாரறிவாரிந்தப்போக்கு, திண்டானசாத்திரங்கள் ரிஷிகள்தேவர்தீர்க்கமுடனின்னூல்போல் சொன்னாரில்லை, பண்டான பிரணவத்தால் பாரில்மாண்பர் பார்தனிலேமருவது திண்ணந்தானே. 681

மாரணவித்தையால் மடிந்தவரை எழுப்புதல்.

தானனையின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் தண்மையுள்ளபுலிப்பாணிமைந்தாபாரு, கோனனமாரணத்தால்மடிந்தோர்தம்மைகொற்றவனேயெழுப்புதற்கு மார்க்கஞ்சொல்வேன், தேனன மனோன்மணியாள்பாதம்போற்றி செப்புவேன்மாணுக்கள் பிழைக்கவென்று, பானனசாத்திரத்தின் யுயிரெழுத்தை பாருலகில்பாடுகிறேன் பண்பாய்த்தானே 682

பண்பான அதர்வணத்தால் மடிந்தோர்தம்மை பாலகனேவிதிப் படியேகொண்டுவந்து, நண்பானமசானமென்ற கரையிலப்பா நாயகனேசடங்கதும்பால் தவத்தைதானும், திண்மையுடன் தானிறுத்தி காவலோடும் தீரமுடன்காளியின்றன் வசியத்தாலே, உண்மையாய் பிரணவத்தையுச்சாடிக்க வுத்தமனேவுயிரதுவும் வருகும்பாரே.

பாரென்றால் பிரணவங்களேதென்றுக்கால் பாங்கான ஹரிஓம் ஓம் கிலியும்சௌவும், நேரேதான் அம் மம் இம்மென்றேயோது நெடிதானகும்பகத்தினட்சரந்தான், சிம்ரதான் சிவ்லிங்வங்கென்றமேயாதுசிறப்பான ரீங்ரீங்ங் ராவென்றோது தீரதான் யௌவுசௌவும் கிரீம்மென்றோது தீர்க்கமுடன் பிரணவத்தைபோதுவாயே.

ஓதமேவ ரூம் ரூம் லூம்மென்றோது வுத்தமனே லௌவுடனே வெள்வென்றோது, நீதமுடன்ஞௌவுடனே பௌவென்றோதுநிலையானலாடகவி பிரணவந்தான், சாதகமாய்சுடல்காத்தான் மசானங்காத்தான் சாங்கமுடன்ருத்ராவிருத்ரவீரி, ஆதமுடன்மசானத்தின் யெல்லைக்காரி அதிகாரிவரிச்சந்திர பகவான்காணே. 685

காணவேவாய்க்கரசிக் குடையதேவா கருவானதரமாங் காளிவசியா, பூணவேசெம்பூசி நாட்டும்பாலா புகழான வுந்தியென்ற வூசிநீதான், வேணவேவிருட்சமென்ற வடமூலந்தான் மிக்கானவேர்பிடுங்கிவசியதேவா, ஆணவத்தில்மிகுந்ததொரு அகோரதீரா வப்பனே சோடசங்களுடையோன்றானே. 686

சோடசமாம்பதினாறு கரமும்பெற்ற சூலமுடன் கையேந்தும் டாகினிவாவா, பாடமுடன்மசானதுர்க்கிவாவா பார்மீதுசிம்பத்தின் பகவதிவாவா, ஆடலுடன்சங்கீத வாத்தியங்கேட்கும் வன்பான அகோரவீரகாளிவாவா, கூறலுடன்தென்கூடப் பதியமர்ந்துகோடாலி யுதிரபலி கொள்ளுந்தேவே 687

கொள்ளவேகுடல்பிடுங்கி மாற்பிற்ஜெஞ்சம் கொடியதொருயெதிராளிசத்துருமாரி, ஆள்ளவேயதர்வணத்தைத் தலைகீழாக்கிதுப்புரவாய்முடியோடுமாலைபூண்டு, விள்ளவேவாய்க்கரிசி துள்ளிவீழவிஷங்குடித்தவாயாலே யமுர்தங்கொள்ளு, உள்ளபடியமுர்தரசங் கொள்வாயப்பா வுத்தமனேபோனவுயிர் வாவென்றோதே. 688

ஓதவேதலேமாடுகால்மாடாக்கி வுத்தமனே சபந்தனேயேபிரட்டு வாய்நீ, சாதகமாய்சடாட்சரபவனேவாவா சட்டமுடன்போனவுயிர் திரும்பிவாவா, வேதனேகள்நீங்கியல்லோ வுருட்டிப்பார்த்து வேகமுடணதர்வணந்தானில்லேயில்லே, தூதனேயுங்காலனேயுஞ் செபித்தேசென்று துப்புரவாய்லட்சமுரு போடுபோடே. 689

போடப்பாநாதாந்தவுள்ளெழுத்தை பொங்கமுடன்லட்சமுரு போடுபோடு, ஆடப்பாமசானகரை நின்றுகொண்டு வப்பனேவாசல் வழிதடைகள்கட்டி, நீடப்பாவரிச்சந்திரன் காவல்முன்னேநிச்சயமாய்அதர்வணத்தால் சிக்கிஞேனே, பாடப்பாமசானகரை விட்டுவிட்டு பார்நீதுஓடிவிடு ஓடென்றுமே. 690

ஓடென்றவுச்சாடங்கூறும்போது வுத்தமனேயதர்வணமும் நீங்கியல்லோ, நீடென்றவன்துசுத்திபானஞ்செய்து நிலேயுடனே பாலமிர்தம்வாயிலிட்டு, கூடென்றவசிமூலி வாயிற்கொண்டு கொற்றவனே செவிதனிலேயூதும்போது, மேடென்றவையகத்தில் கண்திறந்துமே தினியிலுயிரதுவும் வருகும்பாரே. 691

பாரேதயன்சித்துமுனி ரிஷிகள்தாமும் பாருலகிலதர்வணத்தை மறைத்துவைத்தார், ஆரோதான்சொன்னவர்களாருமில்லே வப்பனே யாமுமக்குச்சொன்ஞேம்பாரு, நேரேதான்காலாங்கி நாதர்தாமும் நேர்மையுடனெந்தனுக்கு வுரைத்தநீதி, பேரேதான் சொல்வதற்கு யாருமில்லே போரானபோகரிஷி யுரைத்தேன்பாரே. 992

உரைத்தேனேயேழாயிர சத்தகாண்டம் வுற்பனமும்விற்பனமுமெத்தவுண்டு, நிரைத்தேனேயாருவது காண்டத்துள்ளே நேர்மையுடனதர்வணத்தைக்கூறினேன்யான், விரைத்ததொருபொருளெல்லாமிதிலடக்கம் விருப்பமுடன்பாடிவைத்த சத்தகாண்டம், குரைந்ததொருபொருளெல்லாமெந்தனுபர், குருமுனியாமகஸ்தியத்தில் காணலாமே 693

காணலாமகத்தியனூர்காவியத்தில் கருவான பன்னீராயிரததிலப்பா, பூணலாம்பனிரெண்டுகாண்டத்துள்ளேபுகட்டினூர்காவியவகைக்களஞ்சியங்கள், தோணவேயண்டசுராசரங்களெல்லாந் துறட்டியென்றகுலட்துபோல்கூறினூர்காண், வேணபடி குருநூலாம்பன்னீராயிரம் விருப்பமுடன்பாடிவைத்தார் முனிவர்தாமே. 694

முனிபானவென்பாட்டன் அகஸ்தியர்தாமும்முனைவானகாலாங்கிநாதர்தாமும், சொன்னபோலேசாத்திரங்களெனக்குரைத்தார்தோற்றமுடன்பிரகாசவானசித்து, மனைதோறும்சாத்திர வேதாகமங்கள் மார்க்கமுடன்பாடிவைத்தார் பலநூல்சித்தர், வினையாலேமாண்டதொருமாண்பருக்கு விரிவான அதர்வணங்கள் சொல்வார்காணே.

பதினெண்சித்தர்கள் சாதியும் தலைமுறைமையும்

கூறல்.

காணனபுலிப்பாணிமைந்தாகேளு தகைமையுள்ளகாலாங்கிசொன்னநீதி, கோணனபதினெண்பேர் சித்தர்தாமும் கொற்றவனே நவகோடிசித்தர்தாமும், பாணனநாற்பத்தெண்பேர்களப்பாபலபலவாஞ் சாத்திரங்கள்பாடிவைத்தார், மாணனதலைமுறைகள் சாதிவர்க்கம் மன்னவனேசாத்திரத்திற் சொல்லாரன்றே. 696

சொல்லவில்லைசிலபேர்கள் சொன்னாரப்பா சுந்தரனே சிலபேர்கள்மறைத்துவைத்தார், வெல்லவே காலாங்கிநாதர்தாமும் வேகமுடன்குளிகையதுகொண்டுமல்லோ, கல்லானமலைகளிலும் குகைகள்தன்னில் கண்டுமேஆராய்ந்து சித்துதம்மை, புல்லவேசாதிபதங்கள்ரெண்டுபுகழானசாத்திரத்தில் வசனித்தாரே. 697

வசனித்தாரெந்தமக்குக் காலாங்கிநாதர், வளமுடனேசொன்னதொருசாதிமார்க்கம், நிசமுடனேயானுரைப்பேன் நீதிவானே நிஷ்களங்கமானதொரு பேதஞ்சொல்வேன், தசமானகாலாங்கிநாதர்தாமும்தாக்கான மயன்சாதியென்னலாகும், கசடன்றுதலைமுறைகள் பத்தேயாகும் காசினியில்கண்டவரை யுரைத்திட்டோமே. 698

உரைத்தோமேயெந்தனிடசாதிமார்க்கம் வுத்தமனேவிஸ்வகர்மனென்னலாகும், நிரைத்ததொரு ரோமரிஷிசாதிபதம் நிலையானவலைவீசுஞ்சாதியப்பா, திரைத்ததொருஎந்தனதுதலைமுறைதானப்பா திரளானபதினெட்டுத் தலைமுறையேயாகும், வரைத்ததொருரோமரிடிதலைமுறைதானப்பா வாகானபனிரெண்டு தலைமுறைதானாமே.

தலைமுறையாமச்சமுனி சாதிபதம் தண்மையுள்ள கல்லுடையோரென்னலாகும், கலையானகோத்திரங்க ளருபத்திரண்டு காசினியில்கண்டவரைசொல்லலாச்சு, மலையானசட்டமுனிசாதிபதம் மகத்தானசிங்களவனென்னலாகும், சிலையானகோத்திரங்கள் பதினொன்றாகும் சிற்பரனேகண்டநூலறிந்தமட்டே. 670

மட்டானயிடைக்காடர் ஜாதிபேதம்மகத்தானகோனேரேயென்ன லாகும், சிட்டமுள்ளகோத்திரங்கள்பதினெட்டாகும் திகழாநூலதை னிற்கண்டமட்டும், சட்டமுடன் தன்வந்திரிஜாதிபேதம்தகமையுள்ள மகாவிஷ்ணுவென்னலாகும், வட்டமுள்ள தலைமுறைகள் முப்பத்தி ரெண்டு வளமுடனேகண்டறிந்த நூலிதாமே. 701

தாமானபுலிப்பாணிமைந்தாகேளுதகமையுள்ளமுலத்தீயீசகப்பா சாமானியமானதொருஜாதிபேதம்சாங்கமுடன்வேளாளனென்னலா கும், கோமானுந்தலைமுறைகள் யிருபத்தேழாம் கொற்றவனே னூற் படியேசொல்லலாச்சு, பூமான்கள்சித்தவர்க்க னூல்கள்தன்னில் புக ட்டவில்லை ஜாதிபேதம் புகலார்தாமே. 702

தானான சிலநூலில்சொன்னாரப்பா தண்மையுள்ள சிலநூலிற்சொ ல்லவில்லை, கோனான அகத்தீசர்ஜாதிபேதம் கொற்றவனே வேளாள னென்னலாகும், பானான தலைமுறைகளேதென்றக்கால் பதமுடனே நாற்பத்தியெட்டேயாகும், மானான நூல்தனிலேகண்டாற்போலமகத் தான போகரிஷிவகுத்திட்டேனே. 703

வகுத்தேனேசிவவாக்கியர்ஜாதிபேதம் வளமானசங்காகுலமென் னலாகும், தொகுப்புடனே தலைமுறைகள் யிருபதாகும் தோருமல் சாத்திரங்கள்புகன்றவாரும், மிகுத்திடவேராமதேவாஜாதிபேதம்மிக் கான விஷ்ணுகுலமென்னலாகும், பகுத்திடவேதலைமுறைகளாறதா கும் பாங்கானவவர்நூலிற் கண்டோம்யாமே. 704

கண்டோமேபுஜண்டரிடஜாதிபேதம் கருவானவக்கினிகுலமென் னலாகும், விண்டதொருதலைமுறைகள்நாற்பத்தைந்துவீரானசாத்தி ரத்தில்கண்டதுண்டு, பண்டிதமாம்வன்னியரின்புராணக்கூறு பலபல வாய்ப்பாடிவைத்தார்கவிவானர்தாமும், கண்டகம்போல்சாத்திரங்கள் மிகவுங்கூறி தாமறைத்தார் சித்துமுனிரிஷிகள்தாமே. 705

தானானகருவூரார்ஜாதிபேதம் தாக்கானபஞ்சணத்தின் குலத்தி லொன்று, கோனானகன்னார ஜாதியாகும் கொற்றவனே நூல்தனிலே கண்டவாறு, தேனான தலைமுறைகள் நாற்பத்திரெண்டுதெளிவுடனே நூல்தனிலேசொன்னார்பாரு, மானானமார்க்கமதுசமயபேத மார்க்க முடனவரவர் நூலறியலாமே. 706

அறியவேபுண்ணாக்கரீசாதாமும் அவருடைய ஜாதிபேதங்கள் சொல்வேன், நெறியானகன்னடிய ஜாதியாகும் நேர்பானதலைமுறை

களேதென்றாக்கால், குறியாநபதினெட்டுத்தலைமுறைதானாகும்குறிப்பானசாத்திரத்திற்சொன்னவாறு, முறியானசித்தர்மகாரிஷிகள் நூலில் முறைபாடுசிலபேர்கள் சொல்லாரன்றே. 707

சொல்வாரேபுலிப்பாணிமைந்தாகேளுசுத்தமுள்ளகண்மணியேபுகல்வேன்பாரு, வல்லானபுலிப்பாணிமரபேதந்தான் மார்க்கமுடன் வேடனதுஜாதியல்லோ, புல்லாநதலைமுறைகளொன்பதாகும்புகழாநநூல்தனிலேபுகலும்வாறு நல்லானரிஷிதேவர்முனிவர்தானும் நலமுடனேசிலருரைத்து சிலர்மறைந்தாரே, 708

மறைவானநந்திசர்மரபேதென்றால்மார்க்கமுடன் மிருகமகாரிஷியார்தோத்திரம், குறையானதலைமுறைகளேதென்றாக்கால்கொற்றவனேமூன்றுதலைமுறைதானாகும், நிறைவாநசாத்திரத்திற்சொன்னவாறுநிஷ்களங்காாகவல்லோ கண்டறிந்தோம், முறையானமுனிதேவர்ரிஷிகள்நூலில் முற்றிலுஞ்சொல்வார்கள் மறைத்தார்காணே. 709

காணவேயின்னமொருமார்க்கஞ்சொல்வேன்கருவானபுலஸ்தியரின்மரபேதென்றால், தோணவேசிங்களவஜாதியாகும் தோறாமல்தலைமுறைகளெட்டதாகும், பூணவேபுலஸ்தியரிந்நூல்கள்தன்னில்புகலாமல்மறைத்துவைத்தார்முன்னோர்தாமும், வேணபடியான்கண்டவரைதானப்பா வித்தகனேவெளியிட்டேன் பண்பாய்ப்பாரே. 710

பாரேதான்யின்னமொருமார்க்கஞ்சொல்வேன்பாலகனேபுலிப்பாணிமைந்தாகேளு, நேரேதான்வியாசருடமரபேதென்றால்நேர்பாநசந்திரகுலஜாதியாகும், சிரேதான்தலைமுறைகளெண்பதாகும்சிறப்பானபுராணவகைகூறும்வாறு, ஆரோதான்சாத்திரங்களறியாமற்றான்வப்பனேகட்டிவைத்தார் கோடியாமே. 711

கோடியாந்தேறையர் மரபேதென்றால் கொற்றவனேயானுரைப்பேன்கண்டமட்டும், நீடியேபிர்ம்மகுலமென்னலாகும்நெடிதாநகாப்பியங்கள்கூறும்வண்ணம், ஆடியதோர்தலைமுறைகளேதென்றாக்கால்வப்பனேநவதசமுமென்னலாகும், பாடியதோர்ரிடிதேவர்முனிதேவர்தாமும் பண்பாகத்தாமுரைத்தார் பான்மைதானே. 712

பாண்மையாம்யாக்கோபுமரபேதென்றால் பாங்கானகுலம்விட்டுகுலம்புகுந்தோர், மேன்மையாம்முன்சொன்னராமதேவர்மெய்யானகுலமென்றேசெப்பலாகும், தேன்மாரிபொழிகின்றமக்கதேசஞ்சென்றலைலோபெயர்மாறிவுருவுகொண்டார், வர்ன்மீதுவடிந்தாதிபோலுதிக்குந்திரன் மகத்தானராமதேவரென்னலாமே. 713

என்னவேராமதேவரென்னலாகும் யெழிலாநதலைமுறைகள்பதி னுருகும், மின்னவேநாமமதுரெண்டேயாகும் மிக்கானசாத்திரங்கள் சொன்னவாறு, உன்னிதமாய்ப்பலமுனிவர்சித்துதாமும் வுத்தமனே தாமுரைத்தார்மறைப்போமெத்த, நன்னயமாய்ப்பலநூலுங்கண்டா ராய்ந்து நலமுடனேஜாதிபேதம் வுரைத்தேன்பாரே. 714

பாரப்பாகொங்கணரின்மரபேதென்றால் பாங்காயாதவகுலமே யாகும்ஆரப்பாதலைமுறைகளென்னசொல்வேன் வப்பனேயீரெட்டுப் பதினாறாகும், நேரப்பாவவர்சொன்னகாண்டந்தன்னில்நேர்மையுடக் மரபதுவுஞ்சொல்லவில்லை, ஊரப்பாபலபேருங்கூடியல்லோவுத்தமனே தாமுறைத்தார்ஜாதிதானே. 715

ஜாதியாமின்னமொருமார்க்கங்கேளு தயவானபுலிப்பாணிமைந் தாபாரு, ஆதியாம்தட்சணாமூர்த்தியப்பாவப்பனேயவர்மரபுயேதென் றக்கால், நீதியாங்கவுண்டனென்றமரபேயாகும்நிஷ்களங்கமானதொ ருமூர்த்தியென்பார், சோதிடமாம்பலநூல்களாராய்ந்தேதான் சொ ன்னதொருமொழியதுவுமெய்யதாமே. 716

மெய்யானதலைமுறைகள் பதிமூன்றாகும் மிக்கானசாத்திரத்தி லுரைத்தவாறு துய்யவேகோரக்கர்மரபேதென்றால்துப்புரவாம்மாரா ட்டியனுரென்னலாகும், பையவேதலைமுறைகள்பதினொன்றாகும் பாங் கானசாத்திரத்திற்சொன்னவாறு, வெய்யவேவேதமுனிசித்துதாமும் வெகுநூல்களாராய்ந்து பார்த்தார்தானே. 717

தானான இன்னமொருமார்க்கங்கேளு தயவானபுலிப்பாணிகண் ணேயப்பா, கோனானகௌபாலராணிக்கோர்வை கொற்றவனேபாடி வைத்தாருண்மையாக, மானானவவர்மரபுயேதென்றக்கால்பாங்கான பப்பரவர்மறபேயாகும், மானானதலைமுறைகளெட்டேயாகும் மகத் தானபெருநூலில்சொன்னார்பாரே. 718

சொன்னாரேசோதிமா முனிவரப்பா துப்புறவாய் ஆணியென்ற கோர்வைசெய்தோர், தென்னானதட்சணாபதியிலப்பாதேற்றமுடன் மலைதனிலேயிருக்குஞ்சித்து, பன்னவேமரபதுவு மேதென்றக்கால் பாங்கானபள்ளனென்றேசெப்பலாகும், உன்னிதமாய்த்தலைமுறைக ளாறேயாகும் வுற்பனமாய்வோதிவைத்தார் நூலில்தாமே. 719

நூலானநூல்தனிலே சொன்னமார்க்கம் நுணுக்கமுடன்வெகு கோடிசொன்னாரப்பா, பாலாகடமாகர்மரபேதென்றால் பாங்காகமாவ

ரென்றேசெப்பலாகும்,தாலான தலைமுறைகள்நாலேயாகும் தாக்கான வவர் நூலிற்சொன்னவாறு, பாலானமொழிபோலே முனிவர்தாமும் பாடிவைத்தார் பட்சமுடன்பாரில்தானே. 720

பாரினிலேயின்னமொருமார்க்கங்கேளுபாலானபுலிப்பாணிமை ந்தாகேளு, சீரிலகுஞ்சுந்தரனுனந்தர்தாமேசீரானமரபதுவுமேதென் ருக்கால், ஆரியனுர்தாமுரைத்தநூலில்தாமும்வப்பனே அகமுடைய ரென்னலாகும், சூரியன்போல்தலைமுறைகளிருபத்தெட்டு சொல்லு தற்குநாவில்லைப்பாவில்லைதானே. 721

பாவில்லைபுலிப்பாணி யின்னங்கேளு பாங்குடனேவாரிதியாஞ் சாதிபேதம், ஆவியுடன்பூமிதனிலிருந்தசித்து வப்பனேவரத்தினுல் பிறந்தசித்து, காவிலயங்கண்டதொருகள்ளர்ஜாதிகருவானஜாதியென் றேசெப்பலாகும், நாவிலேசொல்வதற்குயாராலாகும் நலமானதலை முறைகள்நாற்பத்தெட்டே. 722

எட்டானவால்மீகர்மரபேதென்ருல் யெழிலானவேடருடஜாதி யாகும்,திட்டானதலைமுறைகள்சொல்வேன்பாரீர் தீர்க்கமுடன் முப் பத்திரெண்டேயாகும்,சட்டமுடன்வால்மீகர்காவியத்தில்சாங்கமுட னெழிதிவைத்தபடிநிதானம் வட்டமுடன்வால்மீகர்நூலறிந்து வள முடனேகண்டறிந்து சொன்னதாமே. 723

சொன்னேனேயின்னமொருமார்க்கம்பாரு தூய்தானபுலிப்பா ணிமைந்தாகேளு, நன்னயமாய்வூர்வசியார்சாத்திரத்தில்நலமாகத்தா னுரைத்தஜாதிபேதம்,உன்னிதமாய்தேவதா மடந்தையென்று வுத்த மர்கள்சித்தர்முனிகூறும்வண்ணம்,பன்னியேதலைமுறைகள்பகுக்கொ ண்ணுதுபாலகனே அடிமையென்றஜாதியாமே. 724

ஜாதியாமின்னமொருமார்க்கங்கேளு சாங்கமுடன் யானுரைப் பேன்மைந்தாபாரு, ஆதியாங்கமலமுனியென்றசித்துவன்பானகுரவ ரிடஜாதியாகும், நீதியாந்தலைமுறைகளாரெட்டாம் நிஷ்களங்கமாக வல்லோசாத்திரத்தில், பாதிமதிசடையணிந்ததம்பிரானும் பாடிவை த்தநூல்தனிலேகாணலாமே. 725

காணவேமகாசித்து அறிவானந்தர்கைலாசநாதரென்றேசெப்ப லாகும்,தோணவேவள்ளுவனுர்ஜாதியாகும்தோமுமலவர்செய்த நூலி ற்காண்பீர், வேணவேதலைமுறைகளெண்பதாகும் வெகுநாளாய்மலை தனிலேயிருந்தசித்து, ஆணவங்கள்தானெடுங்கியிருந்தசித்துவப்பனே அறிவானசித்துதாமே. 726

சித்தானசித்துமுனி சொல்லேன்கேளீர் சிறப்பான அகப்பேயர் சித்தேயாகும், முத்தானஜாதியதுயேதென்றக்கால் முனையானநாய னூர்ஜாதியாகும், சத்தமுள்ள தலைமுறைகள்யீரெட்டாகும் சார்பாக வவர்னூலிற்காணலாகும், நித்தமுமே வாணிபங்கள் விர்த்தி செய்து நிலையாகபூமிதனிலிருந்தசித்தே. 727

சித்தென்றால்சித்தியிது யென்னசொல்வேன்சீர்பாலா புலிப்பா ணிமைந்தாகேளு, புத்தியுள்ள பூலாலாபுனிதவானே பூவுலகிலிருந்த தொருகுதம்பைசித்து, பத்தியுடன்பெண்ரூபங்கொண்டசித்து பாரு லகில்வெகுநாளாயிருந்தார்தாமும், சுத்தியுடன்தேவதா பூசையோடு ம்சுந்தரனேவெகுகால மிருந்தார்தானே. 728

தானானவவர்மரபுயேதென்றக்கால் தாக்கானகோனரின் ஜாதி யாகும், கோனனயிடையரென்றே சொல்லலாகும் கொற்றவனேயவ ர்நூலிற்சொன்னநீதி, மானான தலைமுறைகளேதென்றக்கால்மகத்தா னபத்துரெண்டொன்றமூன்று, தேனானமனோன்மணியாள்கடாட்ச த்தாலே தெளிவாகக்கண்டறிந்தேன் பலனூல்தானே. 729

நூலானபலநூலுங்கண்டாராய்ந்து து பமுடன் தானுரைத்த வண்மைநீதி, பாலானபாம்பாட்டி மரபேதென்றால் பாலகனேஜோகி யென்றஜாதியாகும், கோலானமாதவத்தார் குலத்தினாலே கொற்றவ னேசமாதியது பிரவேசமாகி, சேலானவையகத்தில் சிலதுகாலம்சிற ப்புடனேசமாதிவிட்டு வந்தசித்தே. 730

வந்ததொருசித்துக்கு முறைமைசொல்வேன் வளமுடனேசோ டசமாமொன்றமூன்று, சிந்தனையாயவர்நூலிற்கண்டாராய்ந்து சீரு டனேயானுரைத்தேன் மொழிதப்பாது, சுந்தரனே காலகண்டர் மு னிவர்தாமும் சுத்தமுடனவர்மரபு யேதென்றக்கால், தந்திரமாங்கள ளருடஜாதியாகும் தாரணியிலவர்நூலிற்கண்டவாரே. 731

வானான தலைமுறைக ளொன்றபத்து வளமையுட னவர்நூலிற் சொல்லலாகும், நூறாண்டுவெகுகாலமிருந்தசித்து நுட்பமுடன்சீஷ வர்க்கங்கொண்டசித்து, காரானயின்னமொருமார்க்கங்கேளு கருவா னபுலிப்பாணிமைந்தாபாரு, ஆரானசுப்பிரமணியா மரபேதென்றால் வப்பனேசைவமென்ற பீடமாமே. 732

பீடமாந்தலைமுறைகளேதென்றக்கால் பேரானதூற்றிரண்டு பத்துமூன்று, கோடிநூல்களிலேகண்டவாறு கிருபையுடன் நானறிந்தமட்டுஞ்சொன்னேன், நீடானயூகிமுனிமரபேதென்றால் நிசமானகுறம்பருடஜாதியாகும், தடான தலைமுறைக ளென்னசொல்வேன்தாக்கானபதினெட்டு வொன்றமூன்றே. 733

ஒன்றானஜாதியப்பா யின்னஞ்சொல்வேன் வுத்தமனேபுலிப்பாணிவுகந்துகேளு, நன்றானஜெமதக்கினிஜாதிபேதம் நலமானசைநமென்றஜாதியாகும், குன்றானமலையேறிகிரணந்தன்னை கிருபையுடன் கண்டல்லோசாதமுண்போர், வென்றிடவேதலைமுறைகள் நான்குபத்துவேகமுடன்வந்நூலில் கண்டோம்பாரே. 734

பாரேதாளின்னமொரு மார்க்கங்கேளு பாங்கான திரணக்கியமுனிவர்தானும், தேரேதான்சைனகருடஜாதியாகும் தேரானபிரபுலிங்கலீலநூலாரா, நேரேதானவர்நூலிற்ஜாதிபேதம் நேர்மையுடன் கண்டறிந்தஜாதிமார்க்கம், வேரேதான்தலைமுறைகளிரெட்டொன்று வித்தகனே நூன்தனிலே கண்டோம்பாரே. 735

பாரேதான்சண்டேசர் ஜாதிமார்க்கம் பாங்கானவள்ளுவன ரென்றேயாகும், நேரேதான்தனுமுறைகளொன்றுபத்து நேர்மையுடனவர்நூலிற்சொன்னநீதி,சீரேதான்சித்தர்முனிரிஷிகள்தேவர்சிரப்புடனேபாடிவைத்தநூலைக்கண்டு, பேரேதான்வேர்பிரித்து வகுத்துயானும் பேரின்பநிலைநின்று பாடினேனே. 736

பாடினேனின்னமொரு மார்க்கங்கேளு பாலகனே புலிப்பாணிமைந்தாபாரு, நாடியேதிருமூலவர்க்கத்தார்கள் நலமானஜாதியதுமாபேதென்றால், தேடியேவேளாளஜாதியாகும் திருக்கூட்ட மெத்தவுண்டுசொல்லொண்ணாது, ஆடியதோர்தலைமுறைக ளேதென்றக்கால் வப்பனேரெண்டுபத்து வொன்றுதானே. 737

ஒன்றானசாத்திரத்தினுளவாராய்ந்து வுத்தமனே பலநூலுங் கண்டுதேர்ந்து, சென்றமேரிடிமுனிவர் கூறுநூலும் சிறப்பானசாத்திரத்தின்தொகுப்பைக்கண்டு, வென்றிடவே காலாங்கி தாள்பணிந்து வேகமுடன்குளிகையது பூண்டுகொண்டு, குன்றானமலைகுகைகள்யானுங்கண்டு கொற்றவனேகாவியம்தான் கூறினேனே. 738

கூறினேன்காவியந்தா னேழாயிரமாகும்கூறுன சத்தகாண்டம் போலநூல்கள், மீறியதோர் நூலுண்டோ வையகத்தில்மிக்கான நூலி துபோலார்தான்சொன்னார், மாறுபாடாகவல்லோ சாத்திர நூல்கள் மகத்தானசித்துமுனிசொன்னாரப்பா, ஆறுதலம்போலாக யிந்த நூல் தான்வப்பனேயுந்தனுக்கு வரைந்திட்டேனே. 739

போகர் சித்தர்கள் வயதும் சமாதிமார்க்கமுங்

கூறல்.

அறைந்ததொருபின்னமொரு மார்க்கங்கேளு வப்பனேபுலிப் பாணிமைந்தாபாரு, நிறைந்ததொரு சித்தர்முனிரிடிகளானோர்நீடா ழியுலகுதனிலிருந்தவாறும், குறைந்ததொருவவரவர்கள் வயதுமார் க்கம் கூறுகிறேன்வையகத்தில் கண்டாராய்ந்து, மறைந்ததொருசமா தியின் றன்மார்க்கமெல்லாம் மன்னவனேயுந்தனுக்கு நிகழ்த்துவேனே

நிகழ்த்துவேன்காலாங்கிநாதர்தம்மை நெடுங்காலசெய்தியெலா ம்நிகழ்த்துவேன்யான், புகழானகாலாங்கிநாதர்தாமும் விண்ணியனு ர்வெகுகாலமிருந்துசித்து, அகந்தனிலேமூன்றுயுகஞ் சமாதிசென்று வப்பனேமுயற்சியுடன்வந்தசித்து, செகந்தனிலேசீனபதிதேசந்தன் னில் சிறப்புடனேகுளிகைகொண்டு போனசித்தே. 741

சித்தானகாலாங்கிமுனிவர்தானும் சிறப்புடனேசீனபதி தன்னி ற்சென்று, முத்தானகாலனது வருஷம்பெற்று மூனையான சமாதித னிலிறங்கியல்லோ, சத்தமுடனசரீரிவாக்கினோடும்தாரணியில்சமாதி முகம் இருந்துகொண்டு, பத்தியுடன்சீனபதிமாண்பருக்கு பலகாலு ந்தரிசனைகள் புரிகுவாரே. 742

புரிகுவார்வயதினுடமார்க்கந்தன்னை புகலுவேன்காலாங்கி நாத ருக்கு, சரியுடனேமூவாயிரஞ்சொச்சமப்பா சங்கமுடன் வயதுதா னென்னலாகும், குறியானவருடமது மூவாயிரந்தான்குறிப்புடனே மகாநூலிற்சொன்னநீதி, நெறியுடனேவையகத்தி லிருந்துமல்லோ நேர்மையுடன்தமாதிமுகஞ் சென்றார்தானே. 743

தானனபோகரிடி மார்க்கஞ்சொல்வேன் தயவான புலிப்பாணி மைந்தாகேளு, கோனனையெனதையர் காலாங்கிநாதர் குறிப்புடனே யெந்தனுக்குச்சொன்னநீதி, பானனவயததுவும் மூன்றாரென்று பான்மையுடனெந்தனுக்கு வுபதேசித்தார், தேனனகுளிகையதுபூண் டுகொண்டு தேசமெலாஞ்சுற்றிவந்தேன் காலந்தானே. 744

காலமாம்வெகுகாலமடியேன்றானும் காலாங்கிநாதருட கிருபை யாலும், கோலமுடன் திருக்கமலம்வீற்றிருக்கும் கொம்பனையாள் ம னோன்மணியாள்கிருபையாலே, ஆலகாலமுடையதொரு அரன்பாக த்தில் வப்பனே வையகத்தில் யானுயல்லோ, தாலமெலாஞ் சுற்றிவந் துயடியேன்றானும் தாரணியில்சித்துமுனிரிஷிகண்டேனே. 745

கண்டேனேவெகுகோடிசித்துதம்மை காலாங்கிநாதருடகிருபை யாலே, கொண்டதொரு வையகத்துவதிசயங்கள் கொற்றவனே யடி யேனுந்தானறிந்து, உண்டானவுளவுபதி மார்க்கமெல்லாம் வுத்தம னேகண்டல்லோமிகவாராய்ந்து, பண்டிதங்கள் மிகப்பார்த்துபலநூல் சேதிபாங்குடனே சீனபதிக்குறைத்திட்டேனே. 746

உரைத்தேனேசீனபதிமாண்பருக்கு வுத்தமனேலோகவதிசயங் களெல்லாம், வுரைத்தேனே சீனபதிப்பெண்களுக்கு வகுப்பானசித் துமுனிரிஷிகள்மார்க்கம், திரைகடல்சூழ்ஷ்டாங்க லோகமெல்லாம் திறட்டினேன்போகரேழாயிரந்தான், புரையொன்றும் நேராமல்புக ழ்ந்தநூலாய் புகட்டினேன்சீனபதிமாண்பருக்கே. 747

மாண்பானபுலிப்பாணிமைந்தாகேளு மகத்தானவையகத்தில்மு ன்னூராண்டு, ஆண்மையுடனிருந்தே னதிசயங்கள்வப்பனேயான் கண்டவாறமட்டும், வீண்போகாக்காலமது சாத்திரத்தின் வீரானவு ளவுதிதானங்கள்கண்டு, தாண்மையுடன்யானுரைப்பேன் யிதிகாசங் கள் சட்டமுடன்சொல்லுகிறேன் பண்பாய்க்கேளே. 748

கேளேதான்ரோமரிஷிவயதுமார்க்கம் கெவனமுடன்சொல்லுகி றேன்பண்பாய்க்கேளு, நாளேதான்போகாமல் ரோமர்தானும் நலமு டனேசமாதிமுகஞ்சென்றமல்லோ, ஆளேதான்வருஷமது வையகத் தில் வப்பனேதானிருந்து வெளியுமாகி, பாளேதான்போகாமல் வரு ஷமறுநூறு பாங்குடனேவீற்றிருந்த சித்துமாமே. 749

சித்தானமச்சமுனிவாரேமெதன்றால் சிறப்பானவையகத்திலிருந் தசேதி, பக்தியுடன்முந்நூறவாண்டுமட்டும் பகவானைத்துதிசெய்து காயங்கொண்டு, முத்தியுடன்சமாதிக்குச்சென்றமல்லோமூாக்கமுட ன்மூவாண்டுசமாதிபூண்டு, கத்தனையேதானினைந்து கைலைதன்னில் காசினியைவிட்டுமல்லோ யேகினாரே. 750

ஏகவேசட்டமுனிவாறேதென்றால் யெழிலாக யெண்ணூறவாண்டுமட்டும், போகவேசமாதிமுகம் மூன்றுமுறைதானும் பொங்கமுடன்பூமிதனிலிருந்துமல்லோ, சாலமுடன்வெகுகாலமிருந்தசித்துசாங்கமுடன்சிஷவர்க்க முபதேசங்கள், ஆகமங்களோதியல்லோயிருந்தசித்துவப்பனே யோகமாசித்துமாமே. 751

ஆமேதான்யின்னமொருமார்க்கங்கேளு வப்பனேயிடைக்காடர்வரலாற்சொல்வேன், போமேதான்வெகுகால மிருந்தசித்து பொங்கமுடன்காயாதிகற்பங்கொண்டு, நேமமுடன்நிஷ்டையதுபூண்டுகொண்டுநெடுங்காலம் நூறாண்டுமிருந்தசித்து, வாமமுடன்தேவதா சாபத்தாலே வையகத்தில்யிருந்ததொரு சித்துவாச்சே. 752

ஆச்சப்பாதன்வந்திரிவயதுமார்க்கம் வப்பனே சொல்லுகிறேன் மன்றுகேளு, பாச்சலுடன்வயததுதான் யெண்ணூறாண்டு பாங்குடனேசமாதிமுகங்கொண்டசித்து,மூச்சடங்கிதன்வந்திரிபகவான்றானும்மூன்றுமுறை சமாதிதனிலிருந்தசித்து, ஆச்சரியமாகவல்லோ வையகத்தின்யமர்ந்தசித்து தன்மந்திரி என்னலாமே. 753

என்னலாம்வெகுகோடி மாண்பர்மெச்சும் எழிலான தன்வந்திரிபகவான்றானும், பன்னவேமூலத்தினீசரப்பா பாங்கானவயததுதானேதென்றுக்கால், துன்னவேயிருநூறவாண்டுமாகும் துப்புரவாய் பூமிதனிலிருந்தசித்து, மின்னவேகாலாங்கிநாதர்தம்மின் விருப்பமுடனுபதேசங்கொண்டசித்தே. 754

சித்தானசித்துமுனிமூலத்தீசர் சிறப்பானமலைதனிலே யிருநூறாண்டு, சத்தியுடன்பூசையதுசெய்துமல்லோ சாங்கமுடன்மலைதனிலேஅயிக்கியமாகி, வித்தகனூர்சிஷவர்க்க மாண்பரோடும் விருப்பமுடன்சுனைதனிலேயிறங்கினூர்பார், சத்தபரிசங்களற்றுதரணிமீதில்சாங்கமுடன்தானிருந்தார் சிலநாள்தானே. 755

தானானயின்னமொருமார்க்கங்கேளு தயவானபுலிப்பாணி மைந்தாபாரு, கோனானயெனதையர் காலாங்கிநாதர் கொற்றவனு ரெந்தனுக்குச்சொன்னநீதி. தேனானமனோன்மணியாள் கடாட்சத்தாலே தேஜொளிவின் மயங்கொண்டகும்பயோனி, பானுன பராபரத்துக் கொப்பதான பாருலகிலகஸ்தியரைப் பகருவேனே. 756

பகருவேன் அகஸ்தியர்க்குவ்யதேதென்றால் பட்சமுடன்துகைகணக்குக்கூறொண்ணாது, நிகரமுடன்சொல்வதற்கு யாராலாகும்நீதி

யுடன் நூல்களிலே யுரைத்தமார்க்கம், அகரமென்றவட்சரமும் அவ ராலாச்சு வப்பனேநாலுயுகங்கடந்தசித்து, சகரமெலாந் தான்துதிக் குங்கும்பயோனி சதுரானவகத்தியரென்றமையலாமே. 757

அமையலாம்வெகுகோடிகாலமப்பா வப்பனேசமாதிமுக மிருப த்தொன்று, நிறையவேசமாதிமுகம்வையகத்தில் நேர்மையுடன் தா னிருந்தசித்துமாகும், குறையவே வயததுதான்சொல்வதற்கு குவல யத்தில்முடியாது ஒருவராலும், மறையவேநூல்தனிலே காண்பதற் குமகத்தானதயததுவு மில்லைதானே. 758

இல்லையேயின்னமொருமார்க்கங்கேளு யெழிலானபுலிப்பாணி மைந்தாபாரு, தொல்லுலகம்புகழுஞ்சிவ வாக்கியர்தாமும் தோருத வையகத்தில்வெகுநாளப்பா, புல்லவேசமுசார வாழ்க்கைவேண்டாம் புகழானவன்பத்தோராண்டுமட்டும், வெல்லவேசமுசார வாழ்க்கைய ற்றுவெகுநாளாயிருந்ததொரு சித்துமாச்சே. 759

ஆச்சப்பாவெகுகாலவருஷமாக வப்பனேசமுசாரவாழ்க்கையற் று, மூச்சடங்கிமடந்தனிலே யிருந்தசித்து மூர்க்கமுடன் சமுசாரம் வேண்டியல்லோ, பாச்சலுடன்தாய்தந்தை சீர்பாதத்தைபணிந்துமே மனதுவந்துகேட்டார்தாமும், மாச்சலுடன்தாய்தந்தை மனங்களித் துமார்க்கமுடன் மகன்றனையே கேட்டார்தாமே. 760

சிவவாக்கியர் தாய்தந்தைமாரை இல்வாழ்க்கை கேழ்க்குதல்.

தானனபிரகாசமானசோதி தண்மையுள்ளசிவவாக்கியபுனிதவா னே, கோனனகுருநாதர்கடாட்சத்தாலே கொற்றவனே சமுசாரவா ழ்க்கைவேண்டி, தேனனமனோன்மணியாள் கடாட்சத்தாலே தேற்ற முடனில்வாழ்க்கை கேட்டீரப்பா, மானனயில்வாழ்க்கைகேட்டதா லேமன்னவனேயிப்போது செய்யலாமே. 761

செய்யவேசந்தோஷங்கொண்டுமல்லோ சிறப்புடனே மனதுவந் துமனம்நொடித்தார், துய்யவேசிவவாக்கியர்பெயருண்டாக துப்புர வாய்சிவானந்தர் பிறந்தார்தானும், வெய்யவேஎண்பத்தோறுண்டுமட் டும்விருப்பமுடன் சிவவாக்கியர்தாமிருந்து, வையகங்கள் தான்புகழ சமாதிமார்க்கம் வளமுடனேயிறங்கினதோர் வளமைபாரே.

பாரேதானின்னமொருமார்க்கங்கேளு பாங்கான புலிப்பாணிம ன்னாபாரு, நேரேதான்ராமரென்றங்தேவரப்பா நேர்மையுடன்வெகு காலமிருந்தசித்து, சேரேதான்வயததுவுமிருநூறுண்டுசெம்மலுடன்

சமாதிமுகஞ்சென் றசித்து, கூடேதான்மூன் றமுறைவையகத்தில் குறிப்புடனேசமாதிமுகம் போனார்காணே 763

காணவேயின்னமொருமார்க்கங்கேளு கருவான புஜண்டருடைய தமார்க்கம், தோணவேமூன்றாறு அறுபதாண்டு தோற்றமல்குகைதனிலேயிருந்தசித்து, பூணவேசமாதிமுகமேறவில்லை பொங்கமுடன்மூன்றாற்றுஅறுபதாண்டு, வேணபடிவையகத்து வதிசயங்கள்விருப்பமுடன்யான்கண்டேன் வனைகந்தானே. 764

தானேதான்சித்தர்முனிபுசண்டர்தாமும் தண்மையுள்ள சீஷவர்க்கந்தனையழைத்து, சோனையிலேயெந்தனுக்குச் சமாதிபூண சுத்தமுடன்சுரங்கமதுசெய்யவென்ன, ஆனையளவாகவல்லோசுரங்கஞ்செய்துவண்புடனேமனதுவந்து கூறலுற்றார், மானையவர்கைபிடித்துசுரங்கந்தன்னில் மார்க்கமுடன்சாரலிடஞ் சென்றிட்டாரே. 765

சென்றாரேபுஜண்டரெனுஞ் சித்துதானும் சிறப்புடனே சமாதிமுகஞ்சென்றபோது, குன்றானமலைமீதிற்கூடிருந்த குறிப்பானமானதுவும்மனதுவந்து, வென்றிடவேரிஷியாரின்சித்துபாதம்வெகுநாளாய்தான்வளர்த்தசாபத்தாலே, அன்றமேகூடிருந்த மான்தானப்பாவப்பனேசமாதிமுகஞ் செல்லலாச்சே. 766

ஆச்சப்பாசமாதிமுகஞ்சென்றபோது வப்பனேசீஷவர்க்கமாண்பர்தானும், மூச்சடங்கிப்போனதொருபுஜண்டரப்பாமுனையானவையகத்தில்வருவதில்லை, பாச்சலுடன்சமாதிமுகம்மூடியல்லோபண்பானபாறைகொண்டுயேகியல்லோ, வீச்சலுடன் மாண்பரெல்லாம் வெளியேகிவிட்டாரேகோடிதளங் காணலாச்சே. 767

காணவேயின்னமொரு கருமானங்கேள் காசினியில்கருவூராரென்றசித்து, தோணவேநடேசரென்னுங்கருவுண்டாகி துப்புரவாய்பாண்டியனுக்கருளுந்தந்தார், பூணவேபாண்டியன் தேவாலயத்தில்பொங்கமுடனடேசரைத்தான் செய்துவைத்தேன், தோணவே காயாதிகற்பங்கொண்டு தொல்லுலகில்வெகுகாலமிருந்தசித்து. 768

சித்தானகருவூராரென்றசித்து சின்மயத்தில்பேரின்பங்கொண்டசித்து, முத்தானவயததுவும் மூன்றாராண்டு மூதுலகில்பாண்டியனுக்குகந்தசித்து, பத்தியுடன்சிதம்பரமாந் தேவஸ்தானம்பட்சமுடன்நிர்மித்தஞானசித்து, சத்தியெனும்மடாலயங்களுண்டுபண்ணிசாங்கமுடன்சமாதிமுகஞ் சென்றசித்தே. 769

சென்றதொருசித்துமுனி மார்க்கங்கேளுசெயலானபுண்ணாக்கு
மீசரப்பா, தென்றிடவேவயததுதான் நூற்றிரண்டுபத்து விருப்பமு
டன்வரப்பொந்திலிருந்தசித்து, குன்றமலைகுளிகையதுயளியாசித்து
கோபாலா கோபாலாவென்னுஞ்சித்து, தென்றிசையில்வடகோடிகா
னகத்தில் திருவாத்தின்மரத்தின்மே லிருந்தசித்தே. 770

சித்தானசித்துமுனிநாதருக்கு சிறப்பானவாசானும்பாம்பாட்டி
யாகும், சத்தானவையகத்தில்சிலதுகாலம் சாங்கமுடனறியாத வாலி
பத்தில், சுத்தமுடனறிபூசைசிவனார்பூசை சுந்தரனாரென்னேரஞ்செ
ய்துகொண்டு, கத்தனேகோபாலாகோபாலாவென்று காசினியில்வாய்
பினத்தித்திரிவார்பாரே 771

பாரேதான்மாண்பர்களைக்கண்டபோது பாலகனார் வாய்திறந்து
யாருங்கேளார், நேரேதான்பசிவந்துவுற்றபோது நேர்மையுடன்கோ
பாலாவென்றசத்தம், வீரேதான்வீரிட்டுசபதமிட்டு விண்ணுலகைக்
கண்திறந்துபார்க்கும்போது, ஆரேதான்தேவாதிவரத்தினாலேவப்ப
னேபால்பழமுந்தருவார்தானே. 772

தானானபால்பழமுமுண்டபின்பு தாக்கானவழிதடங்கள் காண
மாட்டார், கோனானபாம்பாட்டிதனைநினைந்து கொற்றவனார் நடுவீதி
பள்ளிகொள்வார், தேனானமனோன்மணியாள் கடாட்சத்தாலே தேச
மெல்லாந்தான்திரண்டுவந்திப்பார்கள், மானானபுண்ணாக்கர்கண்திறந்
துமகத்தானகோபாலா யென்பார்தானே. 773

என்னவேபுண்ணாக்குமீசர்தாமும் யெழிலானமண்ணைதனைத்தா
னெடுத்து, உன்னிதமாய்மாண்பருக்குத்தான்கொடுப்பார் வுத்தமனே
மண்ணாதுவுந்தித்திப்பாகும், பன்னவேநோயாளியார்வந்தாலும்பட்ச
முடன்மண்கிள்ளித்தான் கொடுப்பார், சொன்னபடிநோயாளிரோக
ந்தீர்ந்து சுத்தமுகுன்போவார்கள் மெத்தவுண்டே. 774

உண்டானமாண்பருக்குப்புண்ணாக்கீசர்வுத்தமனேபிருதிவென்
றமண்ணைத்தானும், வண்மையுடன்தான்கொடுத்து வியாதிரோகம்வ
ளமையுடன்தான்தீர்ப்பாரதிதமெத்த, திண்மையுடன் சிலகாலஞ்செ
ன்றபின்புதீர்க்கமுடன்வயததுவும் நூறாண்டாச்சு, தண்மையுடன்
வையகத்திலிருக்கலாகா தற்பரனைகாணவெண்ணி நினைத்திட்டாரே.

இட்டதொருபுண்ணாக்குமீசர்தாமுமெழிலான திருவாத்திமரத்
தின்கீழே, சட்டமுடன்திருப்பொந்திலிருந்துகொண்டுசாங்கமுடன்
சிவயோகஞ்செய்துமல்லோ, திட்டமுடன்சிலநாட்கள் கழிந்தபின்பு

தீர்க்கமுடன் மரப்பொந்திலயிக்கியமாகி, பட்டமரந்துளுந்தல்லோ வையகத்தில் பட்சமுடன்மாண்பருக்கு குருவுமாச்சே. 776

குருவானதிருவாத்தி மரத்தையப்பா கொற்றவனேவையகத்து மாண்பரெல்லாம், திருவானரோகமதுகண்டபோது தீர்க்கமுடன் மரத்துக்குக்காப்புகட்டி, சருவானசருகுவகை கியாழமிட்டு சட்டமுடன் தானருந்திரோகந்தீர்ந்து, பெருமையுடன்வையகத்தில் புனிதனுவாய் பேருண்டாய்வெகுநாளாய் வாழ்ந்தார்தாமே. 777

வாழ்ந்தாரேயின்னமொரு மார்க்கங்கேளு வகுப்பானபுலிப்பாணி மைந்தருக்கு, ஆழ்ந்தவேகாலாங்கிகடாட்சத்தாலே வப்பனே வேங்கை தனிமேலறிக்கொண்டு, தாழ்ந்திடவேஜலந்திரட்டிப் புனிதவானும் சாங்கமுடன்தாரணியில் சுற்றிவந்தோன், சூழ்ந்திடவே வெகுகோடிகாலமப்பா பூதலகிலிழிந்ததொரு சித்துபாரே. 778

பாரப்பாபுலிப்பாணி பாலனான பட்சமுடனுந்தமக்கு வயது சொல்வேன், ஆரப்பாவயததுவுமறுநூறுண்டு வப்பனே வையகத்திலிருந்த சித்து, சேரப்பாசமாதிமுகஞ்சென்றதில்லை நேர்மையுடனெடுங்காலமிருந்தசித்து, சீரப்பாசிவயோகந் தன்னிற்சென்று சிறப்புடனே சின்மயத்திலிருந்தசித்தே. 779

இருந்துமேவெகுகாலமானசித்து யெழிலாகவெந்தனிடவுபதேசங்கள், பொருந்தவேதானடைந்து புனிதனுவாய் பொங்கமுடன் வையகத்திலிருந்தசித்து, திருந்தவேமலேகுகைகள் வனுந்திரங்கள் தீரமுடன் கண்டறிந்தசித்துவாகும், கருந்தமிழுஞ்செந்தமிழுங் கலந்தசித்து காசினியிலுபவாச்சித்துமாமே. 780

ஆமப்பாபுலிப்பாணி மைந்தாகேளு வப்பனேயின்னமொரு மார்க்கஞ்சொல்வேன், போமப்பாநந்தியுடமார்க்கந்தன்னை புகலுகிறேன்வயததுவு மேதென்றுக்கால், நாமப்பாவயததுவு மெழுநூறுண்டு நலமான வெகுகாலமிருந்தசித்து, வேரப்பாசமாதிமுகங் கண்டசித்து வேதாந்த நந்தியென்று சொல்லலாச்சே. 781

சொல்லவென்றால் நாவில்லேப்பாவுமில்லே சுந்தரனுர் யுகங்கடந்த நந்திமூர்த்தி, வெல்லவேமலேயடியாம் வாரந்தன்னில் வேண்டியே சமாதிமுகமிருந்தசித்து, புல்லவேசீஷவர்க்க மில்லாமற்றுன் பூதலத்தில் வெகுநாளாயிருந்தார்தாமும், நல்லதொருதேவதா ஸ்தலங்கள் தன்னில் நலமுடனே நந்தியென்றபேருண்டாச்சே. 782

உண்டாச்சுசித்துமுனி பாலனுக்கு வுற்றதொருநந்திமுகந்தா மாச்சு, கண்டதொருமாண்பரெலா மாலயத்தில் கருத்தினிமேலமுன் நின்றநந்தியென்று, அண்டர்முனிராட்சதரும் ரிஷிகள்தாமும் அந்தர துந்துபிமுதலுந்தேவராளோர், மண்டலத்தில்தேவதா ஸ்தலங்கள் தன்னில் மகத்தானநந்தியென்று மதித்திட்டாரே. 783

மதிக்கவேயின்னமொரு மார்க்கங்கேளு மகத்தான புலஸ்திய ரின் வண்மைசொல்வேன், துதிக்கவேஅகஸ்தியனார் வாசம்பெற்ற துடியான புலஸ்தியனாரென்னலாகும், விதிப்படியேகமலமுனிகோத் திரத்தில்வித்தகராய்வந்துதித்த முனிவர்தாமும், கதிபெறவே யகஸ் தியனார் பாகம் பெற்று காசினியில்வந்துதித்த சித்துமாச்சே. 784

ஆச்சப்பாபுலஸ்தியரின் வயதேதென்றால் வப்பனேயறுநூற்று அறுபதாகும் மூச்சடங்கிப்பிரணவத்தை மாறிமாறிமூதுலகில்வெகு காலமிருந்தசித்து, பேச்சறியாமாவின் சித்துவப்பா பேரின்பநிலை தனையே துறந்தசித்து, நீச்சனெனும்பஞ்சமரோ டிருந்தசித்து நெடுங்காலவையகத்து சித்துமாச்சே. 785

சித்தானபுலஸ்தியருஞ்சமாதிக்கேக சிறப்பானதேரணமாமுனி வர் தம்மை, பத்தியுடன்சீஷவர்க்கங்கொண்டுமல்லோ பாருலகில் சமாதிக்கேகவென்று, முத்திபெறசின்மயத்தை மனதிலுன்னி மூது லகில்சமாதிக்குசெல்கவென்று, சத்தியமாய்பவக்கடலையொழித்து மல்லோ சட்டமுடன் சமாதிமுகமேகினாரே. 786

ஏகவேவையகத்தில் சமாதிதன்னில் யெழிலாகமுப்பதுவாண்டு மட்டும், போகமென்னுமத்வீதநிலையில்நின்று பொங்கமுடன்றாளி ருந்த மாயாசித்து, பாகமுடன்தேரணமாமுனிவர்தன்னால் பாருல கில்மறுபடியும்வந்தசித்து, சாகமதுவாராமலறுநூற்றுசொச்சம் சாங் கமுடன் வையகத்திலிருந்தார்பாரே. 787

பாரேதான்யின்னமொரு வயணஞ்சொல்வேன் பண்பானஎந் தனதுநேசபாலா, சீரேதான்வேதமென்ற வியாசரப்பா சிறப்புடனே வெகு காலங்கடந்தசித்து, கோரமென்றவயததுவும் ஆயிரத்து சொச்சம் குவலயத்தில் வேதமதை யறிந்தசித்து,தீரமுடன்நூலாதி நூல்களெல்லாந் திறைகடல்போலுண்டதொரு சித்துகாணே. 788

காணவேவனந்திரங்கள் குகைகள்நாடு கருவானமலையாறு குண்
ணுதானும், வேணதொருவண்டர்முனி கூட்டத்தார்கள் வெளிகாணு
காடுமுதலுறைந்தசித்து, நீணவேசமயமென்ற மார்க்கந்தன்னை நேர்
மையுடன்துகைபாடுசெய்தசித்து, மாணமருங்கல்விதனி லுறைந்த
சித்து மகத்தானமாண்பருக்கு வுகந்தசித்தே. 789

மாண்பானவையகத்து ஜனங்களுக்கு மார்க்கமுடன்வேதமதை
யோதுஞ்சித்து, ஆண்மையுடன் சாத்திரங்கள் புராணமெல்லா மவர
வர்க்குவுகந்தபடி செய்துவைத்தேன், தாண்மைபெற சைவாதிசமய
மெல்லாம் தாரணியில்கொடிநாட்டி யிருந்தசித்து, நீண்மையுடன்கா
யாதிகற்பங்கொண்டு நெடுங்காலமிருந்ததொரு தவசியாச்சே.

தவசியென்றால்மாண்பருக்கு வுகந்தசித்து தாரணியில்சமுசார
வாழ்க்கையோடும், பவக்கடலைத்தாணொழித்துப்பாரின்மீது பட்சமு
டன்றானிருந்தகொடியசித்து, தவப்பெருமைகொண்டல்லோ ரிஷிக
ளோடும் தயங்காமலரசர்முதல் வணக்குஞ்சித்து, நவகண்ட வையக
முமறிந்தசித்து நலமானவியாசமுனி யென்றசித்தே. 791

முனியானசித்துமுனி வியாசதாமும் மூதுலகில்பெருமைதனை
யறிந்தசித்து, கனிவோடும்பாலோடும் ரிஷிகள்தம்மை கண்ணினால் க
ண்டறிந்தசித்துவாகும், பனிபோன்றமலைநாடு பார்த்தறிந்து பட்சமு
டன்சென்றல்லோ வுபதேசங்கள், தனியாக தானிருந்து பிரணவத்
தைதண்மையுடன் றானறிந்த சித்துதானே. 792

தானானசித்துக்குருசமாதியில்லை தாரணில்வெகுகால மிருந்தசித்
து, கோனானகுருக்கள்மகாரிஷிகள்தேவர் கொஜ்றவனார்சீஷவர்க்கமா
ண்பர்தன்னை, மானானவையகத்திலறிந்தசித்து மகத்தானவியாசமுநி
சித்துபோல, தேனானவேதமதையறிந்தசித்து. திரைகடலிற்கண்டது
ண்டோ வுண்மைதானே. 793

உண்மையிதுயின்னமொரு மார்க்கங்கேளு வுத்தமனேபுலிப்பா
ணிமைந்தாபாரு, வண்மைபெறும்தேறைய ரென்னுஞ்சித்து வளமா
னரோகமதைத்தீர்க்குஞ்சித்து, நண்மைபெறவபததுவு மேதென்றாக்
கால் நாதாந்தசித்துமுனிகும்பயோனி, உண்மையுடனெழுதிவைத்த
சாத்திரத்தில் தீர்க்கமுடன்வயதுமுன்னாரொன்னலாமே. 794

என்னவேவயததுவுமுன்னூறாண்டு யெழிலானதேரையர் முனிவருக்கு, பன்னவேசாத்திரத்தின் வகுப்பைப்போல பட்சமுடன்கண்டறிந்துசொல்லலாச்சு, துண்ண வெயிவர்தமக்குச்சமாதியில்லை துப்புரவாய் ஜகத்தாசைவிட்டோர்தாமும், முன்னவேயகஸ்திரனுருபதேசங்கள் முறைப்படியேகண்டறிந்த சுற்றுமாச்சே. 595

முறையானகருவிகரணுதியெல்லாம் முயற்சியுடன்தாமறிந்தமாயாசித்து, கறையோன்றபதினெண்பேர் சாத்திரத்தைகருத்தினிலேயென்னுளும்மனதுவந்து, மறைவானபொருளெல்லாம் மாண்பருக்குமகத்தானமுறைப்பாடு யாவுங்கண்டு, குறையாமலுபதேசஞ் செய்தசித்து கொற்றவனுர்தேரையமுனிவர்தாமே. 796

முனியானதேரையமுனிவரப்பா மூர்க்கமுடன் சங்கமென்றசபையிற்சென்று, தனியாகவகஸ்தியரின் பின்றொடர்ந்து சட்டமுடன்பிணிதீர்க்கசித்துவாகும், பனிபோன்றவனுந்திரத்தி யிருக்குமூலிபாங்கானசஞ்சீவிமூலிதன்னை, பனிதர்களைத் தானெழுப்புமமுர்தமூலிமார்க்கமுடன் கண்டறிந்த சித்துபாரே. 797

பாரப்பாயேமமென்றவித்தைதன்னை பண்புடனே மனதுவந்து கண்டசித்து, ஆரப்பாயிவர்போலுஞ் சித்துமுண்டோ வவனிதனிலாரேனுங்கண்டதில்லை, நேரப்பாயேமமென்றசித்தேயாகும் நெடிதானமலையனைத்தும்பழுக்குஞ்சித்து, சீரப்பாவையகத்தில் நெடுநாளாக சிறப்புடனேதானிருந்த சித்துதாமே. 798

தாமேகேளின்னமொரு மாரக்கஞ்சொல்வேன் தயவானபாலகனேமைந்தாபாரு, போமேதான்பக்கிரியாக் கோபுவென்றும் பொங்கமுடன்சாத்திரத்தினுரைத்தவார்போல், நேமமுடன்வையததுவுமேதென்றுக்கால் நிலையானவாண்டதுவு மிருநூற்றுசொச்சம், நாமமுடன்நபிநாயன் தன்னைக்காண நன்னயமாய்மக்கபுரி போனுர்தாமே.

போனுரே மலைநாடுகுகைகடந்து பொங்கமுடன் நபிதனையேகாணவென்று, கானுறுபாதவழிசெல்லும்போது கடுங்காளைநபிகூட்டம் மிகவாய்க்கண்டு, மானுனமகதேவர் பதியிலப்பா மார்க்கமுடன்வந்திதனுந்தமக்கு, தீனுனதீன்பதியிலுந்தனைத்தான் திட்டமுடன் சபித்திடுவோமென்றிட்டாரே. 800

என்றவுடன்யாக்கோபு தாள்பணிந்து யெழிலான வார்த்தைய துகூறும்போது, சென்றமேயாக்கோபு தன்னைக்கண்டு சிறப்புடனே சுன்னத்து செய்துமல்லோ, தின்றடவேரொட்டியது தானுமீய்ந்து சிறப்புடனேயசேனுசே னென்றுகூறி, வென்றிடவேயுபதேச பிரண வத்தை விருப்பமுடன் மலுங்குமா ரோதினரே. 801

ஓதவேகபினியர் கூட்டத்தார்கள் வுத்தமர்கள்மனம்போலேமன துவந்து, நீதமுடன்மக்கபுரி கோட்டைக்குள்ளே நிஷ்களங்க பக்கிரி யாக்கோபுதன்னை, தோதமுடன் கொண்டுசென்று ரரண்மனைக்குள் தோருமல் கொத்துமாயோதினர்கள், வீதமதுபயனறிந்த சித்துதா மும் விடுபட்டுவந்ததொரு யாக்கோபாச்சே. 802

ஆச்சப்பாயின்னமொரு வயணஞ்சொல்வேன் வப்பனேகொங் கணவர் வயதுமார்க்கம், பாச்சலுடன் யெண்ணூறு வாண்மட்டும் பாகனிலே யிருந்ததொரு சித்துமாகும், மாச்சலுடன் சமாதிமுகஞ் சென்றசித்து மகத்தான கொங்கணர் சித்துவாகும், ஒச்சலதுயில்லா மல் வுதகுதன்னில் வுத்தமனே வெகுகாலம் வுழன்றசித்தே. 803

சித்தானசித்துமுனி ரிஷிகள்தாமும் சிறப்பான கொங்கணவர் காண்டஞ்சொல்லி, முத்தானகடைக்காண்டம் மூன்றுஞ்சொல்லி முதுலகில் சமாதிக்குயேகலானார், பத்தியுடன் கடைக்காண்டம்நூலி லப்பா பாடிவைத்தார் வெகுசங்கை காணப்போமோ, புத்தியுள்ளமா ண்பர்களுங் காண்பாரப்பா கண்டாலுமதிசங்கை யின்னமுண்டே.

உண்டான கடைக்காண்டம் பாடியல்லோ வுத்தமனுங்கொங்க ணவர் முனிவர்தானும், நண்பானவையகத்தில் மாண்பர்முன்னே நல் மான ரிஷிமுனிவர் தனையழைத்து, வண்பானசாத்திரங்கள் பாடியல் லோ வளமுடனே வெகுசித்தர் மறைத்துவைத்தார், திண்ணமுடன் காயாதி கற்பங்கொண்டு தீரமுடன்சமாதிக்குச் செல்வேன்றனே.

சொல்லவேசமாதிமுகம் நின்றபோது செம்மலுடன் சீஷவர்க்க மனேகங்கோடி, மெல்லவேசமாதிக்கு யிடமுந்தேடி மேன்மையுடன் வழிபாடு செய்துமல்லோ, புல்லவேகொங்கணனார் முனிவர்தானும் புகழானசமாதிமுகம் வுள்ளேசென்று, வல்லமையாய்முப்பது வாண் டுதானும் வளமுடனேயிருந்த சித்துதானே. 806

தானனயின்னமொரு வயனஞ்சொல்வேன் தாக்கானகண்மணி யேபுகலக்கேளு, கோனனதட்சண மூர்த்தியப்பா குவலயத்தில் வெ குகாலமிருந்தசித்து, மானனவயதனவுமே தென்றக்கால் மகத்தான

வாயிரத்து சொச்சமப்பா, பாஞனபடியேழுங் கடலுஞ்சுத்தி பாரி னிலே வுழன்றதொரு சித்துதானே. 807

காணவேதட்சணு மூர்த்தியாகும் காசினியில்திருமந்திரம் பாடி ஞேர்தான், பூணவேசிவாலயந் தன்னிலப்பா பொங்கமுடன் வெகு கால மிருந்தசித்து, தோணவேதிருமந்திரம் பாடியல்லோ தோற்றமு டன் சமாதிக்கு யேகவெண்ணி, ஆணவங்கள் தாஞெடுங்கிசித்துதா னும் வண்பானகாசிபதி சென்றிட்டாரே. 808

சென்ருனேநற்மதா நதியின்பக்கல் சிறப்புடனே தட்சணுமூர் த்திஞயர், குன்ருனகரையோரம் மண்டபந்தான் கொற்றவஞர் சமா திமுகஞ் சென்றுமல்லோ, வென்றிடவே ஒருயுகமாம் வறுபதாண்டு வுத்தமஞர் தானிருந்து வந்தசித்து, தென்றிசையில் தட்சணுமூர்த் தியென்று தேசமதில்போகொண்ட சித்துபாரே. 809

பாரேதானின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் பாங்கானபாலக னேபகரக்கேளு, சீரேதான்கோரக்கர் வயதேதென்ருல் நிஷ்களங்க மாகவல்லோ மாயாசித்து, சேரேதான்வயததுவுமென்பதாகும் செப் பிஞரவர்நூலிற் சூத்திரந்தான், சீரேதான்பதிஞறு சூத்திரத்தில் சிற ப்பாகப்பாடி வைத்த துண்மையாமே. 810

உண்மையாங்குளிகையது தானுமில்லை வுத்தமனே நரைதிரை யும் யாதொன்றில்லை, வண்மையாம் பிணியென்ற ரோகமில்லை வகுப் பான காயாதிதானுமில்லை, தண்மையுடனவையகத்து மாண்பரெல் லாம் தப்பாமல்சிவயோகி யென்பார்பாரு, திண்மையுடன் கோரக் கர் மூலிதம்மை தீர்க்கமுடன் யெப்போது தின்பார்தானே. 811

தின்பாரேகோரக்கர் மூலியாலே தீர்க்கமுடன்கோரக்கர் சித் துமாச்சு, வன்பாகசமுசார வாழ்க்கையில்லை வளமானபொருளின் மேலாசையில்லை, என்னேரந்திரிகால பூசையோடும் யெழிலானகாவி காஷாயத்தோடும், சொன்னபடி மஞேன்மணியாள பிரணவத்தை தொல்லுலகில் யெப்போதுஞ் சொல்வார்தானே. 812

சொல்வாரே யின்னமொரு மார்க்கங்கேளு தூய்தானநற்பாலா தீரவானே, புல்லவேகொளபால சித்துதானும் புகழானவையகத்திலி ருந்தசித்து, வல்லதொரு பொன்னுக்கு வாணிமாற்று வகுப்புடனே கண்டறிந்தஞானசித்து, சல்லியமாம்வித்தைதனில் தேர்ந்தசித்து சட்டமுடன் வுரைகல்லுக் குறியசித்தே. 813

உரையானபொன்னுரைக்குங் கல்லைத்தானும் வுத்தமனே மலை தனிலேகண்டுதேடி, திரையோடும் புரையகற்றி வயிரக்கல்லை திட்ட முடனாராய்ந்த ஞானசித்து, வரையானசித்துக்கு வயதேதென்றால் வளமுடனே கூறுகிறே னின்னங்கேளு, கரைகண்டசித்தல்லோ கௌனசித்து கௌபாலசித்தென்று பேருண்டாச்சே. 814

போரானசித்துக்கு வயதேதென்றால் பெருமையுடன் கூறுகிறே ன்கொற்றவர்கேள், நேரானவயததுவும் இருநூற்றைந்து நெடிதான காடுமலைதிரிந்தசித்து, ஊரோடுங்கூடியல்லோ வுறவுபேசி வுகமையு டன் சாத்திரத்தை யறிந்தசித்து, சீரானகௌபாலசித்தருக்கு சிறப் புடனே ஞானமென்ற தேசந்தானே. 815

தேசமாமுபதேசம் பெற்றுக்கொண்டு தேற்றமுடன் காயாதிக ற்பங்கொண்டு, வாசமதுமலைதனிலே யிருந்துகொண்டு வகுப்பானசி த்தரது வுளவாராய்ந்து, நேசமுடன்சமாதிக்கு யேகவெண்ணி நெடு ங்காலஞ்சீஷவர்க்க மாண்பரோடும், பாசமொடுதனக்குகந்த சீஷனை த்தான் பட்சமுடன்கண்டறிந்து வுரைத்தார்தாமே. 816

உரைத்தாரேசீஷவர்க்க செய்திதன்னை வுத்தமனேசமாதிக்குப் போரேனப்பா, வரையானசமாதிமுகஞ் சென்றபோது வளமுடனே யெந்தனுக்கு வயிரக்கல்லால், குறையாமல்சமாதிதனை மூடியல்லோ கொற்றவனே கருவயிரக்கல்லில்தானும், மறைவாகக் கைநாட்டுச்சித் திரந்தான் மன்னவனேயெழுத்துரையு மென்பார்தானே. 817

என்றவுடன் கௌபாலசித்துதாமும் யெளிதானவயிரக்கல் மே லேயப்பா, வென்றிடவே யெழுத்துமுகம் மாறியல்லோ மேதினியி லெல்லவர்க்கு மறிவதற்கு, குன்றானகல்லின்மே லெழுததுவூன்றி கொற்றவனேகௌபாலர் சமாதியென்று, நன்றாகவரைதீட்டி சீஷர் தாமும் நலமுடனே சமாதிமுகஞ் செய்தார்பாரே. 818

செய்யவேபதினான்கு வருஷமட்டும் செப்பரியசமாதிமுகந் தனி லிருந்து, பையவேவையகத்தில் வந்தசித்து பாங்குடனேயேம மென் றசித்துவாகும், துய்யதமிழ்பண்டிதர்கள் போற்றுஞ்சித்து துறையா னயேமமாற்றறிந்தசித்து, வையகத்தில் சித்துமுனி ரிஷிகள்தேவர் வளமுடனே யெவரறிந்தா ராணிதானே. 819

ஆணியாமின்னமொரு வதீதஞ்சொல்வேன் வப்பனே புலிப்பா னேமைந்தாகேளு, நீணிலத்தில் சோதிமாமுனிவர்தாமும் நீதியுடன் வெகுகாலமிருந்தசித்து, வாணிபங்கள்செய்வதற்கு யேமமாற்றை வளமுடனேகண்டறிந்த சித்துதாமும், காணிகளும்பூமிவள மெல் லாங்கண்டு கருவயிரக்கல்லெடுத்த சித்துதானே. 820

தானனசித்துக்கு வயதேதென்றால் தண்மையுள்ள வருடமது நானூறாகும், பானனகாடுமலைதன்முகத்தில் பாங்குடனே தான்திரி ந்த சித்துமாகும், கோனனகுருக்கள்மார் ரிஷிகள்தம்மை கொற்றவ னர்தான்கண்டு வுரவுபேசி, மானனபொன்மாற்று அறியவென்று மார்க்கமுடன் சென்றதொரு சித்துபாரே. 821

பாரப்பாசோதியென்ற முனிவர்தானும் பட்சமுடன் சமாதிமு கம் வுள்ளேசென்று, சீரப்பாமுப்பத்தா றுண்டுமட்டும் சிறப்புடனே வையகத்தை மறந்தசித்து, நேரப்பாதவசுநிலை தான்கடந்து நேர்மை யுடன் சமாதிவிட்டு வந்தசித்து, ஆரப்பாஅறிவார்கள் சோதிமார்க் கம் வப்பனேயானறிந்து சொல்லிட்டேனே. 822

சொல்லவேயின்னமொரு மார்க்கம்பாரு தாய்தானபாலகனே யென்னசொல்வேன், வெல்லவேடமாகனர் வயதேதென்றால் வுத்த மனே முன்னூற்று சொச்சமாகும், புல்லவேநெடுங்காலம்வையகத்து புகழான பாண்பருடன் கூடியல்லோ, நல்லதொருவதிஷ்டகரு வித் தையெல்லாம் நலமுடனே செய்ததொரு டமார்காணே. 823

காணவே ஜெகஜால டமாகந்தான காசினியிலதீதவித்தை செய் தசித்து, பூணவேநீர்மேலே நடந்தசித்து புகழானவாசியை நடத்து ஞ்சித்து, தோணவேகூடுவிட்டு கூடுபாய்ந்து தொல்லுலகில் வித்தை தனை செய்தசித்து, ஆணவங்கள் தானொடுங்கி காயந்தின்று வன்புட னேவீற்றிருந்த சித்துதாமே. 824

தானுடைடமாகனு ராடுஞ்சித்து நகமையுள்ள சாத்திரத்திற்சொ ல்லவில்லை, கோனனவாகாயந் தன்னின்மட்டும் கொற்றவனர்கெடை கட்டியாடுஞ்சித்து, பானனபரிதிமதி தன்னைத்தானும் பக்குவமாய்த் திசைமாற்றி செய்தசித்து, மானனடமாகனர் சமாதிதன்னில் மார் க்கமுடன் யேகுதற்கு நண்ணினரே. 825

நண்ணவேசகலரிஷி சித்துதாமும்நலமுடனேவையகத்துசமாதி தன்னில், மண்ணதனிலிருந்ததொரு சித்துமாச்சு மகத்தானவவர் போன்றசித்துமல்ல, கண்ணவிந்தகுருடனைப்போல் கேணிதன்னில் காசினியிலிறங்கியல்லோசித்துதானும், தண்ணீரில்பனிரெண்டுவாண்டுமட்டுந் தன்மையுடன்வீற்றிருந்த சித்துதாமே. 826

சித்தானசித்துஜல ஸ்தம்பனசித்து சிறப்பான டமரகர்போல் சொல்லொண்ணாது, முத்தானகேணிவிட்டுவந்தசித்து மூதுலகிலிவர் போலுமெங்குமுண்டோ, பத்தியுடன்வையகத்திலனந்தஞ்சித்துபாரினிலேவெகுமுனிவரிருந்தாரல்லோ, சாத்திரங்கள்மறவாத சித்தானும் ஜலஸ்தம்பனசித்துபோலில்லைதானே. 827

இல்லையேயின்னமொருகவிதைசொல்வேன்யெழிலானயெந்தனிடமணியேகேளும், சொல்லவேசுந்தரானந்தரப்பாதொல்லுலகில்கேசரியாம்வித்தைதன்னை, புல்லவேவதீதமென்றமாண்பருக்குபுகழுடனேபுகட்டியதோர்சித்துமாகும், வெல்லவேயவர்தமக்குவயதேதென்றால் விட்டகுறைதொட்டகுறை மிகுதியாமே. 828

ஆமேதானவர்தமக்குவயதுமெத்த வப்பனேயெண்ணூற்றுசொச்சமாண்டு, நாமேதான்சொன்னபடிகுளிகைபூண்டுநலமாககேசரிமேல் சென்றசித்து, போமேதான்வையகத்திலிருந்துமல்லோபொங்கமுடந் சமாதிமுகஞ்சென்றசித்து, வேமேதானிருபத்தா றுண்டுமட்டும்விடுபட்டுபூமிதனில் வந்தசித்தே. 829

வந்ததொருசித்துக்குசமாதிமார்க்கம்வையகத்தில்மெத்தவுண்டு சொல்லொண்ணாது, சந்ததமாஞ்சீஷவர்க்கங் கோடிமாண்பர்தாரணியில்கணக்குண்டோலக்கோயில்லை, சொந்தமுடன்வெகுமாண்பர் கிட்டியல்லோசுந்தரனார்பாதாரவிந்தந்தன்னை, அந்தமுடன்தாள்பணிந்து சிரங்குனிந்து வன்புடனேபோற்றிசெய்த சித்துமாச்சே. 830

ஆச்சப்பாபுலிப்பாணிமைந்தாகேளு வன்புடனேசொல்லுகிறேந் வதீதமெத்த, மாச்சலென்றவாரிஷியாஞ் சித்துதம்மை வளமுடனே சொல்லுகிறேன்வண்மைபாரு, பாச்சலென்றவயததுவும் யெழுநூற்றுச்சொச்சம் பாருலகில் நெடுங்காலமிருந்தசித்து, மூச்சடங்கிசிவயோகமானசித்து மூதுலகிலிவர்போலுங் காணேர்தாமே. 831

காணுரேதவசியென்னும் வரரிஷிபார்தானும் கருவாககாளிங்கமடுவுதன்னில், வேணபடிதவயோகஞ்செய்யவென்று விட்டகுறைதனையகற்றி மடுவிற்சென்று, தோணவேபனிரெண்டு வாண்டுமட்டும்

தொல்லுலகில்ஜலஸ்தம்பசமாதியாகி, மாண்பரும்வையகத்தோர்கான வென்று மார்க்கமுடன்வந்தோர்சித்துதானே. 832

தானென்றசித்ததுவும் ஜலரூபசித்து தாரணியிலிவர்போலுஞ் சித்துமுண்டோ, வானென்றதேவாதிரிஷிகள்தம்மால்வரத்தினால்பே ருபெற்ற சித்தேயாகும், கோனென்றவாரிஷியா ரென்றுசொல்லிக் கொற்றவர்க்குகுவலயத்தில்பேருண்டாச்சு, மானென்றசித்தர்களும் வணங்கியல்லோ மகத்தானரிஷியாரைப் போற்றுவாரே 833

போற்றுவார்பூதலத்தா ரெல்லாருந்தான் பொங்கமுடனின்ன மொருமார்க்கஞ்சொல்வேன் தேற்றமுடன்வால்மீகரென்றசித்துதெளி வானமார்க்கமதுசொல்வேன்பாரீர், மாற்றமயம்நீங்கியல்லோவையகத் தில்வளமையுடன்வெகுகாலமிருந்தசித்து, ஆற்றலுடன்வால்மீகரா மாயணத்தை அவனிதனில்மாந்தருக்குச் செய்திட்டாரே. 834

செய்ததொருவால்மீகர்வயதேதென்றால் செப்பமுடனேழுநூற் றுச்சொச்சமப்பா, துய்யதமிழ்ப்பண்டிதனுங்கல்விவானும் தூய்தான வகப்பேருகொண்டசித்து, பையவேசமாதிமுகஞ் சென்றதில்லைபாங் குடனேகாயாதிகொண்டுதானும், வெய்யவேநெடுங்காலமிருந்தசித்து வேதாந்தவால்மீகர் தானுமாமே. 835

தானானவையகத்துமாந்தர்க்கெல்லாம் தகமையுள்ளவால்மீகர்சரி கைதன்னை, கோனானகுருவானவால்மீகர்தானும்குவலயத்தில்பேர்கொ ண்டஞானசித்து, தேனானவைதீகசாத்திரங்கள் தெளிவுடனேகட்டி வைத்தஞானசித்து, பானானபராசரிஷிக்கொப்பதான பாங்கானயடி யென்றுசெப்பலாமே. 836

செப்பலாமின்னமொரு மார்க்கங்கேளு செயலான புலிப்பாணி மைந்தாபாரு, ஒப்பமுடன்வூர்வசியாள்வயதேதென்றால் வுத்தமனே நூற்றியிருபத்தேயாகும், தப்பிதங்கள்நேராமல்தரணிமீதில்சாங்கமு டன்வீற்றிருந்தமாதுசித்து, இப்புவியில்வூர்வசியாள் சுருக்கரத்னம் யெழிலாகப்பாடிவைத்த மாதுதாமே. 837

மாதானவூர்வசியாள்காயகற்பம்மகத்தானவையகத்திலுண்டுமல் லோ, தோதானகாவியங்களென்றுகூறி தோருமல் பாடிவைத்தமாது சித்து, நீதானவியாசரிடம்வுபதேசங்கள்நீதியுடன்பெற்றதொருமாது தானும், கோதாவரிகரைதனிலே மடிந்தசித்து கொற்றவனே சமாதி யது அங்கேவுண்டே. 838

உண்டானசமாதியதுமண்டபத்தில்ஓகோகோநாதாக்கள்கண்ட றிந்து,திண்பானவேதமாமாயுற்வேதம்தீரமுடன்கண்டறிந்தமாதுசித் து, கண்டல்லோரிஷிமுனிவர் சித்துதானுங் காசினியில்பூசைமுதல் நைவேத்தியங்கள், சண்டமாருதம்போலே தானடித்து தாரணியில் கோடித்து வருகின்றாரே. 839

வருகிறார்பூவாடைகாரிசித்தை மார்க்கமாமின்னமொருமகிமை கேளு, கருமமதைவையகத்திற்றானகற்றி காசினியில்நெடுங்காலமிரு ந்தசித்து, தருமமதுதானறிந்தகமலசித்துதாரணியில்தானறிந்தகொ டியசித்து, அருமையுடன் சீனபதிதேசந்தன்னில் வன்பாகசென்ற தொருசித்துபாரே. 840

பாரேதான்கமலமுனிவயதேதென்றால் பாலகனேசொல்லுகிறேன் பண்பாய்க்கேளு,நேரேதான்வயததுவும்நாலாயிரந்தான்நேர்மையுட முன்னூற்று சொச்சமாகும், சீரேதான்சீனபதிகன்னிலப்பா சிறப்பு டனேநெடுங்காலமிருந்தசித்து, தீரேதான்சமாதிமுகந்தன்னிற்சென் று தீர்க்கமுடன் இருநூறுவாண்டுதானே. 841

ஆண்டானவருஷமது யிருநூரப்பா வப்பனேபூமிதனிலிருந்த சித்து, கூண்டானகூண்டோடுவந்தசித்து குவலயத்திலிவர்போலுஞ் சித்துமுண்டோ, தாண்டவம்போல்சீனபதிதேசந்தன்னில்சாங்கமுட ன்விந்தைகள்செய்தசித்து, ஆண்டகையானதொரு கமலர்தா மும் வப்பனேவையகத்து சித்துமாச்சே. 842

ஆச்சப்பாயின்னமொருமகிமைசொல்வேன் வப்பனேயதிசயங் கள்மெத்தவுண்டு, மாச்சலுடன்வையகத்தி லிருந்தசித்து மகத்தான அறிவானந்தசித்துதானும், பாச்சலுடன்வயததுவும்மதென்றாக்கால் பண்பானமுன்னூற்றுவறுபதாண்டு, மூச்சடங்கிசமாதிதனிலிருந்த சித்துமூாக்கமுடன்பனிரெண்டு வருஷங்காணே. 843

காணவேபன்னிரண்டாண்டுமட்டும் காசினியில்பூமிதனிலிருந்த சித்து, தோணவேகௌபாலர்சீஷருக்கும் தொல்லுலகிலிவர்மகிமை மெத்தவுண்டு, பூணவேவையகத்துமாண்பருக்குபுகழாகமுன்னடந்த காரியத்தை, ஊணபடிசன்னதங்கள்கொண்டாற்போலேவிட்டகுறை யிருந்தபடி சொல்வார்பாரே. 844

சொல்லவேயின்னமொரு மார்க்கங்கேளு தூய்தானவகப்பேயர் சித்துதாமும், வெல்லவேயவர்தமக்குவயதேதென்றால்விருப்பமுடன் சொல்லுகிறேன்வியனந்தானும், புல்லவேநூற்றுபத்துஒன்றுமூன்று புகழானமரத்தடியிலிருக்குஞ்சித்து, நல்லதொருசமாதிமுகஞ்செந்ற தில்லை நாதாந்த அகப்பைவெளி சித்துதானே. 845

வெளியானசித்துக்கு குருவேதென்றால் விருப்பமுடன்வியாச முனி யென்னலாகும், ஒளிவாககாயாதிதானுமில்லை ஒகோகோவுலக மதில்வாழுஞ்சித்து, களியானசோதியென்றவிருட்சந்தன்னில்கைலா சநாதரைப்போல்சமாதிகொண்டு, வளியானமரப்பொந்தில்தானொடு ங்கிமகத்தாகயிருந்ததொரு சித்துமாச்சே. 846

சித்தானசித்துனுடமார்க்கஞ்சொல்வேன் சீரானபுலிப்பாணிமகு னுபாரு, முத்தானபாம்பாட்டிவயதேதென்றால்மூதுலகில்பெயர்கொ ண்டநெடியசித்து, புத்தியுள்ளசித்துக்கு வயதுசொல்லுவன் புண்ணி யனே நூற்றியருபத்துமூன்று, சுத்தமுடன்பாம்பினதை விஷத்தை வாங்கி துப்புரவாயருந்துகிற சித்துகேளே. 847

கேளேதான்காயாதிகற்பங்கொண்டுகீர்த்தியுடன் சிலகாலமிருந்த சித்து, பாளேதான்போகாமல் தேகந்தன்னை பட்சமுடன்காப்பாற்றி பந்துகொண்டு,நீளேதான் திருவாத்திமரத்தின்கீழேநீதியுடன்கொலு விருந்தகாயசித்து, ஆனேதான்கோகரண சித்துமல்ல வப்பனேசின் மயத்தின் சித்துபாரே. 848

பாரேதானின்னமொரு மார்க்கம்பாரு பட்சமுள்ளயென்தனது பாலாகேளு, சீரேதான்காலகண்டவயதேதென்றால்சிறப்பானவாயிர மாமிருநூறுண்டு, நேரேதான்நெடுங்காலமிருந்தசித்துநேர்மையுடன் குளிகையதுபூண்டசித்து, ஊரேதான்பெயரேது சொல்லவென்றால் வுத்தமனேசேஷனால் முடியாதென்றே. 849

அன்றான ஆதிசேடன்றன்னினாலும் வப்பனேகூறுதற்குமுடியா தப்பா, குன்றானநெடுமலைகள்வனாந்திரங்கள்கொற்றவனேநெடுங்கால மறிந்தசித்து, தென்றிசையில்தட்சணாமூர்த்தியன்சிறப்பானசித்து மகாசிஷனுக்கு, வென்றிடவேயுபதேசஞ் செய்தசித்து விட்டகுறை யிருந்ததொரு காலர்தாமே. 850

காலனும்நெடுங்தூதகாலசித்து காசினியில்சமாதிமுகஞ்செல்வதற்கு,பாலனுஞ்சீஷவர்க்கமாண்பர்தம்மைபட்சமுடன் தாமழைத்தசித்துதாமும், சீலமுடன்முப்பத்துவாறுவாண்டுசிறப்புடனே வையகத்திலிருந்தசித்து,கோலமுடன்முகமறியாபாலசித்துகொற்றவனேவெகுகாலமிருந்தசித்தே. 851

சித்தானசித்தனிடமார்க்கஞ்சொன்னேன்சிறப்பாநயிங்நமொருவயனங்கேளீர், முத்தானவடிவேலர் முருகரப்பா முயற்சியுடன்வயததுவுமேதென்றுக்கால் சத்தியமாய்வயததுவுங்கணக்கோயில்லை சார்பான நூல்தனிலுஞ்சொல்லவில்லை,சித்திபெறஞானவழிகொண்டசித்து சிறப்பானசுப்ரமணிய ரென்னலாமே. 852

என்னவேசிவசுப்பிரமணியரான யெழிலானசித்துக்கு வயதோயில்லை, பன்னவேபலசாஸ்திர நூல்கள்தன்னில்பாகமுடன்வயததுவுங்கூறவில்லை, சொன்னபடிசுருதிமுறைவேதாகமங்கள்தோற்றமுடங் பலபேரும்பாடிவைத்தார், நன்நயமாய்சுப்பிரமணியர்காப்பேயென்று நாட்டினார் நூல்களெல்லாம் நாட்டினாரே. 853

நாட்டினதோர்நாமமதைக்கண்டதல்லால் நாதாந்தவயததுவைக்கண்டதில்லை, தாட்டிகமாயின்னமொருவயணஞ்சொல்வேன்தயாளமுள்ளசிறுபாலாசாற்றக்கேளீர், வாட்டமுடன்பூகியென்ற முனிவர்தானும்வகுப்பானவயததுவுமேதென்றுக்கால், மாட்டிமையாய்வறுநூற்றுயெண்பதாண்டு மார்க்கமுடன்வையகத்து சித்துபாரே. 854

பாரேதாங்நீலகண்டரிஷியார்தம்பால்பாருலகிலுபதேசம்பெற்றசித்து, நேரேதான்சமாதிமுகந்தன்னிற்சென்று நேர்மையுடனிருபத்தோராண்டுமட்டும், தீரேதான்சமாதிமுகமிருந்துமல்லோதீர்க்கமுடன் வையகத்தில் வந்தசித்து, பேரேதான்நூல்தனிலே பூகியென்றும் பேருலகில் கீர்த்திபெற்ற சித்துதாமே. 855

தாமானசாத்திரங்களழிந்தசித்துதாரணியில்நெடுங்காலமிருந்தசித்து, கோமான்களுபதேசம்பெற்றசித்து குவலயத்திலிவர்போலும் யாருமுண்டோ, பூமான்களானதொருமாண்பரெல்லாம்புகழ்ச்சியுடனிவர்பாதம்புகழுஞ்சித்து, சாமான்யமானதொருசித்துபோல சட்டமுடன்வையகத்திற் காணூர்தாமே. 856

தானுநயின்னமொருமார்க்கஞ்சொல்வேங் தகமையுள்ளபூபாலாமணியேகேளீர், பானுதிரணுக்கியமுனிவர்தானும்பாருலகில்நெடுங்

காலமானசித்து, கோனுனவயததுவுமேதென்ருக்கால் கொற்றவனே துலாயிரத்துயெண்பதாண்டு, மானுனசமாதிமுகஞ்சென்றசித்துமார் க்கமுடனிருபத்திரண்டுதானே. 857

ஆண்டானவருஷமதுயிருபத்திரெண்டுவப்பனேசமாதிமுகமிரு ந்தசித்து, பாண்டவர்களைவருங்காணுமுன்னே பாருலகில்வெகுகால மிருந்தசித்து, தாண்டவம்போல்ஜெமதக்கினிமுனிவர்தானும்தாரணி யில்பெற்றெடுத்தசித்துவாகும், மாண்டதொருமாண்பரெல்லாம்வை யகத்தில் வாழ்த்தியல்லோவஞ்சலிகள் செய்தசித்தே. 858

சித்தானசித்துமுனியிவர்தானப்பாசீருலகில்ரிஷிவர்க்ககூட்டத் தோடு,முத்திபெறநல்வழிக்குவுறுதிகொண்டுமூதுலகில்சின்மயத்தை மனதிலுன்னி, சத்தியுடன்மனோன்மணியை தியானித்தேதான் சதா காலநிஷ்டைகுறிகளங்கனுதி, புத்தியுடன்வையகத்தில்தவசியாகிபொ ன்னுலகுபதிதனிலே சேர்ந்தார்காணே. 859

சேரவேயின்னமொருமார்க்கஞ்சொல்வேன் செம்மலுடன்புலிப் பாணிமைந்தாகேளு, வாரமுடஞ்சண்டீசுவரார்வளமைகேளும்வண்மை யுடன்வயததுமேதென்ருக்கால்,தீரமுடன்நானூற்றியறுபதாகும்தீர் க்கமுடனவர்நூலிற் சொன்னநீதி, சாரமுடன்சமாதிமுகஞ் சென்ற சித்து சாங்கமுடன்வையகத்து சித்துகாணே. 860

காணவேசமாதிமுகம்பத்துரெண்டு கருவாமலன்றுடனேதானுங் கூட்டி, பூணவேபூமிதனிலிருந்தசித்து பொங்கமுடன்ஞானமென்ற கிரியாசித்து, நீணவேநாலுயுகவதிசயங்கள் நீடாழியுலகுபதிவறிந்த சித்து, சீணமதுயில்லாமல்நெடுங்காலந்தான் சீவனோடிருந்ததொரு சித்துமாச்சே. 861

ஆச்சப்பாயின்னமொரு முறைமைசொல்வேன்வப்பனேசெங்க னிவாய்க்கொண்டபாலா, ஏச்சலதுவாராமலிருந்தசித்துயெழிலான திருமூலரென்னலாகும், பாச்சலென்றவயததுவு மேதென்ருக்கால் பாரினிலேவாயிரத்துசொச்சமாகும், மூச்சடங்கிசமாதிமுகந் தன்னி லப்பா மூதுலகில்நெடுங்காலமிருந்தசித்தே 862

நெடுங்காலஞ்சமாதிமுகந் தன்னிற்றானும் நேர்மையுடனறுபது வருஷமாண்டு, கடுந்தவசியாயிருந்தசித்துதாமும்கண்டுகொள்ளாவதி சயங்கள்மெத்தவுண்டு, படுந்துயரந்தானறியா மாண்பர்க்கப்பா பாரி னிலேநிதிகொடுத்துவதீதஞ்செய்தார், கடுவாதிதமைக்கண்டுநிர்த்தஞ் சொல்லி துப்புரவாய்விதியுரைத்து வழிசொல்வாரே. 863

வழியானமுறைபாடு தாமுரைத்து வண்மையுடனுபதேசங் கூறி யல்லோ, பழியானவார்த்தைக்கு யாளாகாமல் பாருலகில்சித்து விளையாடச்சொல்லி, முழியானவார்த்தையது வுபதேசங்கள் மூர்க்க மின்றி தானுரைக்கும் ஞானசித்து, சுழியானவாசிநிலை தனிலிருந்து சுத்தமுடன்வையகத்திலிறந்தார்தாமே. 864

போகர் புலிப்பாணிக்கு சித்தர்கள்பிறப்பும்

திருநட்சத்திரமுங் கூறல்.

இறந்தாரேயின்னமொரு மார்க்கங்கேளு யெழிலான பதி னெண்பேர் முனிவர்தானும், பிறந்ததொருவளப்பங்கள் யாவுங் கண்டு பேரின்பநிலைதனிலே மனதிலுன்னி, சிறந்ததொருநட்சத்திர யோகங்கண்டு சீரானபாதங்கள்தான்வகுத்து, துறந்துமேநவகோடி ரிஷிகள்தானும் துப்புறவாய்நாற்பத்தெண்பேர்தாமே. 865

பேரானயிவர்களறுபிறப்புதானும் பேரின்பநட்சத்திர கால் தான் கூட்டி, சீரானசீனபதிமாண்பருக்கு தீர்க்கமுடனுபதேசஞ் செய்தநூலாம், கூரானவையகத்து மாண்பரெல்லாங் குறிப்புடனே தானறியமனதுவந்து, வீரானபோகரேழாயிரத்தை விருப்பமுட னுபதேசஞ் செய்திட்டேனே. 866

செய்தேனேபுலிப்பாணி மைந்தாகேளு செங்கமலகரத்தானே யின்னஞ்சொல்வேன், மெய்யானவேதமிது சத்தகாண்டம் மேதினி யில் சகலகலைக்கியானமெல்லாம்,பையவேவடநூலைத்தனையாராய்ந்து பாடினேன்காண்டமது யேழாயிரந்தான், துய்யதமிழ்ப்பரிபாஷைத் தன்னை நீக்கி துப்புறவாய்வோதிவைத்தேன் காண்டந்தானே. 867

காண்டமா மேழாயிரம் பெருநூலப்பா கருவிகாணுதிமுதலிதி லடக்கம், பூண்டமன துறுதியினுலிந்தநூலைப் புகட்டினேன்காலா ங்கி கடாட்சத்தாலே, வேண்டியதோர்சீனபதி கருமானங்கள் வேற் றுருவமில்லாமல் கூறினேன்யான், ஆண்டகையாமொந்தன்குரு நா தன்றன்ன லப்பனேபாடிவைத்த நூலிதாமே. 868

நூலானனூலிதுதான் நுணுக்கமெத்த நுட்பமுடன்காலாங்கி பிறந்தவண்ணம், பாலான சித்திரையாமாதமப்பா பாங்கானவசுவனி யாம் நாலாங்காலாம். சேலானசெகதகுரு மைந்தனப்பா செயலான பாக்கியமும் பெற்றமைந்தன், காலானகாலாங்கி நாதரப்பா காசினி யில்வந்துதித்தவுருவுமாச்சே. 869

உருவானமார்க்கமது யின்னஞ்சொல்வேன் வுத்தமனேபோ காது பிறப்புநேர்மை, உருவானமாதமது வைகாசியப்பா கருத்தான பரணியது ரெண்டாங்காலாம், குருவானபஞ்சணத்திலொருவனப் பா கொற்றவனே விசுவகர்மன் மைந்தனுகும், திருவானபோகரிஷி யென்றுமல்லோ செப்பினுர் பலநூல்கள் வேதமாமே. 870

வேதமாமின்னமொரு மார்க்கங்கேளு வெளியானபுலிப்பாணி மைந்தாபாரு, போதமாம்ரோமரிஷி பிறந்தநேர்மை புகலுகிறேன் மாணுக்களறியவென்று, நீதமுடன் ஆணியாந் திங்களப்பா நிஷ்களங் கமான கார்த்திகைதானுகும், வீதமுடன்பயனறிய மூன்றுங்காலாம் விற்பரனுர் பிறந்ததொழி நாளுமாச்சே. 871

ஆச்சப்பாசெம்படவன் தன்னையப்பா வப்பனேமாதுருவுங் குறத்தியாகும், பாச்சலுடன் பலநூலுங்கண்டாராய்ந்து பாடிவைத் தமரபதுவுமெய்யேயாகும், மாச்சலுடனிருகுலத்தார் பெற்றமைந் தன் மகத்தான ரோமரிஷியென்னலாகும், மூச்சடங்கி சென்ற தொரு கானீனப்பா மூதுலகில்சென்றதொரு சித்துமாச்சே. 872

சித்தானமார்க்கமது யின்னஞ்சொல்வேன் சீர்பாலாயெந்தனிரு கண்ணேகேளும், பத்தியுள்ளமச்சமுனி பிறந்தநேர்மை பாங்குடனே ளாடியாந்திங்களப்பா, சத்தியுடன்ரோகணியா முதற்காலப்பா சாங்கமுடன்பிறந்த தொருநாளுமாச்சு, புத்தியுள்ள ஆதுலமாங் குலத்துதித்த புகழான கன்னியுடமைந்தனுமே. 873

ஆமேதான் மச்சமுனி யடவுசொன்னேன் வன்பானபுலிப் பாணி மைந்தாகேளு, நாமேதான்சொன்னபடி சட்டநாதர் நன்மை யுடன் பிறந்ததொரு நேர்மைதானும், போமேதான் ஆவணியாந் திங் களப்பா பொங்கமுடன் மிருகசீரிடமுமாகும், வேமேதான்விட்ட குறை மூன்றுங்காலம் விருப்பமுடனவதரித்த பாலனுமே. 874

பாலனுஞ்சிங்களவதேவதாசி பட்சமுடன் பயின்றெடுத்தபுத் திரந்தான், சீலமுடன்சட்டமுனி யென்றுசொல்லி சிறப்புடனே குவலயத்தில் பேருண்டாச்சு, கோலமுடன்யின்னமொரு மார்க்கம் பாரு கொற்றவனே புலிப்பாணி மைந்தாகேளு, தாலமுடனிடைக் காடார் பிறந்த நேர்மை சட்டமுடன்சொல்லுகிறேன் தன்மை பாரே. 875

தண்மையாம்புரட்டாசிமாதமப்பா தாழ்வாகயிரணியனைக்கொன்றமாதம், வண்மையாந்திருவாதிரை ரெண்டாங்காலாம் வளப்பமுடனவதரித்த சிசுபாலன்றான், பெண்மையாக கானகுறைசாதிடப்பா பேரானகானீனன்பெற்றபிள்ளை, திண்மையா மிடைக்காடார் தானுமாகும் தீர்க்கமுடன் பூவுலகிலிருந்தசித்தே. 876

சித்தானயின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் திரளானவேகோடிரிஷிகள்தன்னில், புத்தியுள்ளதன்வந்திரி பகவான்றானும்பூபாலரானதொருமாயாசித்து, சத்தியுள்ள மகாவிஷ்ணுயென்றே சொல்வார் தாரணியில்மானிடமாஞ் சித்துவாகும், முத்திபெறவைப்பசியாந்திங்களப்பா மூலையானபுனர்பூசம் நாலாங்காலே. 877

காலானதன்வந்திரிபிறந்தநேர்மை காசினியிவர்நூலிற் சொன்னவாறு, நூலானபலநூலிற் கண்டாராய்ந்து நுட்பமுடன் பாடிவைத்தேன்குருநூலாகும், பாலானயிருப்பிரப்பாளரப்பா பாங்கான அனுமேலாமன்பெற்றபிள்ளை, சாலானசாத்திரங்கள் யாவுங்கூறும் சகலவிதபண்டிதருங்காணூர்தாமே 878

கண்டேனேநிர்வாண பாஷையப்பா காசினியில் சமஸ்கிரத பாஷையாலும், விண்டதொருயித்தாலிபாளபந்து விருப்பமுடன்பாகவதபாஷையாலும், கொண்டேனேமனத்துருதி யடியேன்றானும் கொற்றவன்ன குவலயத்தில்கண்டாறுய்ந்து, விண்டுமியானுரைத்தேன்விஷ்ணுகாதை விளம்பிட்டேன் சததகாண்ட முண்மைதாமே. 879

தானனயின்னமொரு மார்க்கம்பாரு தயவான புலிப்பாணிமகனேகேளு, கோனனயென்குருவாங் காலாங்கிநாதர்கொற்றவனூர்தானுரைத்தவுளவுகண்டேன், பானனமூலத்தினீசரப்பா பண்புடனே பிறந்ததொருநேர்மைதானும், மானனகார்த்திகையாந் திங்களப்பா மகத்தானபூசமது மூன்றாங்காலே. 880

மூன்றானபாதமதுமூலத்தீசர் மூனையாகபிறந்ததொரு நேர்மையப்பா, சான்றவராமூலத்தினீசரப்பா சட்டமுடன்வந்துதித்தநாளுமாகும், ஈன்றதொருஜாதியிலே பள்ளஜாதியெழிலானகன்னிகையும் பெற்றபிள்ளை, மேன்மையுடன்தான்பிறந்தார் மூலத்தீசர் மேதினியில்ரிஷிதனக்குப் பிறந்தார்தாமே. 881

பிறந்ததொருயின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் பேரானபுலிப்பாணிமைந்தாபாரு, சிறந்ததொரு அகத்தீசருதித்தநேர்மை சிறப்

பானதனுர்மாதமென்னலாகும், துறந்ததொரு ஆயிலியம்மூன்றும்பா தம் துப்புறவாயவர்பிறந்தநாளுமாச்சு, கறந்ததொருபால்பசுவும்கண் ணுமாகி காசினியில்பிறந்ததொரு சித்துமாச்சே. 882

ஆச்சப்பா அகத்தியரின்பிறப்புநேர்மைஅவனிதனிலாராலுமுடி யாதப்பா, மூச்சடங்கிமலையின்மேல்நின்றசித்து முனையானகமலமதி ல்பிறந்தசித்து, மாச்சனுடன்தேவரிஷிவரத்தினாலே மகாதேவர்வந்து தித்தகுருவுமாகும், ஏச்சலதுதாரூத கும்பயோனி யெழிலானவகஸ் தியரென்றறையலாமே. 883

அறையவேயின்னமொரு வயணஞ்சொல்வேன் வன்பானகண் மணியேசொல்லக்கேளீர், நிறையவே சிவவாக்கியர்பிறந்தநேர்மை நீ தியுடன்சொல்லுகிறேன் னைவாய்கேளு, குறையாததைமாதம்மகத் திலப்பா கொற்றவனேரெண்டாங்கா லென்னலாகும், மறையவே தி ருமூலகூட்டத்தாரில் மகத்தானகன்னியது பிள்ளையாமே. 884

பிள்ளையாஞ்சிவவாக்கிய ரென்னலாகும் பேரான திருமூலர்மர பிலுள்ள, வள்ளலெனுஞ்சேய்மடவார் கன்னிதன்னின் மகத்தானசி வவாக்கியராகும்பாரு, தெள்ளுதமிழ்க்கவிவாணரிவர்க்கீடுண்டோசெ ந்தமிழின்சுவையறிந்த சிவவாக்கியர்தான், கள்ளமதுவாராத புனித பாலன் காசினியிலவதரித்த வுருவுமாமே. 885

உருவானயின்னமொரு மார்க்கஞ் சொல்வேன் வுத்தமனேசிகா மணியேயுண்மைபாரீர், திருவானராமரென்ற தேவரப்பாதீர்க்கமுட ன்வந்துதித்தநேர்மைகேளீர், கருவானமாசியென்றதிங்களப்பாகடிய தோர்பூரமதுரெண்டாம்பாதம், அருவமுள்ளராமரென்ற தேவர்தா னும் வப்பனேவந்துதித்த நாளுமாச்சே. 886

நாளானநாலாங்காலென்னலாகும் நலமானராமதேவர்பிறந்தநா ளாம், ஆளானரோமரிஷிபாட்டனுக்கு அழகாகவந்துதித்த ராமதே வன், கோளானநூல்களிலே குற்றஞ்சொல்வார் குறையானமுறைப் பாடுயேதுஞ்சொல்வார், பாளானநூல்தனிலே சொல்லாதாலே பட்ச முடன்யானுரைத்தேன் பண்பாய்க்கேளே. 887

பண்பானயின்னமொரு மார்க்கம்பாரு பாலகனேவைந்தறிவிற் சிறந்தபாலா, திண்பானபுஜண்டருட மார்க்கஞ்சொல்வேன்தீர்க்கமு டன்பங்குனியாந்திங்களப்பா, கண்பானவுத்திரமா மிரண்டாம்பாத ம்காசினியில்வந்துதித்த திருவுமாச்சு, மண்பானவரரிஷியின் சாபத் தாலேமார்க்கமுடனவரித்த பாலனுமே. 888

பாலனுஞ்சந்திரகுலம் விளங்கவந்த பாரினிலேவெள்ளாட்டிபெ
ற்றமைந்தன், மாலானரதிகேளிமடைந்தையாகும் மகத்தானவருந்து
தியுமென்னலாகும், சேலானபாக்கியமும்பெற்றபாலன் செம்மலுட
ன்சாபத்தால்வரத்தில்வந்து, தாலானதவசியென்ற நாமம்பெற்றுதா
ரணியில்புஜண்டரென்ற பேருண்டாச்சே. 889

பேரானயின்னமொரு வழிதான்சொல்வேன் பேருலகில்கீர்த்தி
பெற்றபுனிதவானே, சீரானகருவூரார பிறந்தநேர்மை செப்புகிறேன்
செம்பவளவாயாகேளீர், கூறுனசித்திரையாமாதமப்பா குறிப்பான
வஸ்தமதுரெண்டாம்பாகம், தேருனநாட்களிலே பிறந்தசித்து தேற்
றமுடன்கருவூரா ரென்னலாமே. 890

ஆமேதான்தேவதத்தனென்றுசொல்லி வப்பனே யவன்மைந்த
ன்மயனென்பார்கள், நாமேதான்சொன்னபடி மயனுக்கல்லோநாடா
னக்கருவூரார்பிறந்தாரல்லோ, போமேதான்பொன்னுலகதேவதச்சர்
பொங்கமுடன் கருவூரார்க்கிடுமல்ல, ஆமேதான்பாண்டியற்குவுருவு
செய்து வப்பனேதான்கொடுத்த சித்துமாமே. 891

தாமாகயின்னமொரு வழிபாடல்லோ சாற்றுகிறேன் புத்தியுள்
ளபூபாலாகேள், கோமான்களறிந்ததில்லை சாத்திரதோஷம் கொற்ற
வனையாம்கண்டவரைக்குஞ் சொல்வோம், சாமானியமென்றதொரு
புண்ணாக்கீசர் தாரணியில்வந்துதித்த நேர்மைசொல்வேன், பூமான்
களாரேனுமறிந்ததுண்டோ புகட்சியுடன் கூறுகிறேன்புனிதவானே

புனிதமாம்வைகாசிமாதமப்பா புகழானபுண்ணாக்கு யீசர்தாமு
ம், வனிதமுடன்சித்திரையா மிரண்டாமாதம் மகத்தானபுண்ணாக்க
ர்பிறந்தநாளாம், சனியிராகுடன்கூடி பிறந்ததாலேசாங்கமுடன்வே
தரிஷிதன்னைப்போல மனிதனுயவதாரந்தானெடுத்து மாட்டிடைச்சி
யமங்கிலியன் பிள்ளையாமே. 893

பிள்ளையாயின்னமொரு பாகஞ்சொல்வேன் பேருன கண்மணி
யேபுகலக்கேளீர், எவ்வளவுபிசகாதபுலிப்பாணியும்மை யேற்றமுட
ன்சொல்லுகிறேன் யெழிலாய்க்கேளு, உள்ளபடிநீபிறந்தமாதமப்பா
வுத்தமனேபுரட்டாசி யென்னலாகும், கள்ளமிலாசோதியென்ற நா
லாங்காலாம் கருத்துடனேயவதரித்த சித்துமாச்சே 894

ஆச்சப்பா வேடர்குலம்வந்துதித்த வப்பனேகன்னிகழியாதமங்கை, மூச்சடங்கிகானகத்தில் தவசியாக மூர்க்கமுட ருனிருந்த ரிஷியாருேடு, பேச்சுகளும்மிகப்பேசிவாதுகூறி பேரானநவகண்டரிஷிதானப்பா, பாச்சலுடன்கன்னிகையைச் சேர்ந்துமல்லோபாலகனேபெற்றெடுத்த சிசுதானீயே. 895

சிசுவானபாலகனே நீதானப்பா சிறப்புடனேகாலாங்கிகடாட்சத்தாலே, பசுபோலேவேங்கைதனே வாகனமுமாக்கி பாரினிலேசுற்றிவந்தபாலனுகும், நிசிதமுடன்யெங்களுக்கு சீஷனுக்கி நிஷ்களங்கமானதொருபுத்திவானும், விசுவாசமுள்ளதொரு பாலனுகமேதினியில் வந்துதித்த சித்துமாச்சே. 896

சித்தானயின்னமொரு குறிதான்சொல்வேன் சிறப்பானபுலிப்பாணிமகனேகேளாய், முத்தமுடன்நந்தீசர் பிறந்தநேர்மை மூதுலகோர்தானறிய சொல்வேனப்பா, நித்தமதுவைகாசிமாதமப்பா நீடானவிசாகமதுநாலாங்காலாம், பத்தியுடதிதான்பிறந்த நந்திதேவர்பாரினிலேதேவஸ்தானகுருவுமாச்சே. 897

குருவானதேவதாஸ்தலங்கள்தன்னில் கொற்றவனேநந்தியென்றபேருண்டாச்சு, அருவானதேவேந்திரன் சாபத்தாலேவப்பனே பிரம்மகுலந்தனிலுத்து, உருவாகிமானிட ஜென்மமாகி வுத்தமனேகன்னியது வயிற்றிற்றங்கி, திருவானநந்திரூபங்கொண்டுமல்லோ, சிறப்புடனேவந்துதித்தசித்துதானே. 898

சித்தானயின்னமொரு மார்க்கம்பாரு சீருள்ளபுலிப்பாணிமைந்தாகேளு, புத்தியுள்ளபுலஸ்தியனர் பிறந்தநேர்மை பூதலத்திலெவராலுங்கூறப்போமோ, முத்திதருமாவணியாந்திங்கள்தன்னில் முனேயானஅனுஷமாம்நாலாங்காலில், பத்தியுடன்பிறந்தாரே புலஸ்தியர்தானும் பாரினிலேவந்துதித்த வுருவுமாச்சே. 899

உருவானபுலஸ்தியரின் மார்க்கங்கேளு ஓகோகோநாதாக்களறிந்ததில்லை, கருவானதேவரிஷிதன்வரத்தால் கமலமுனிதன்வயற்றிற்பிறந்தபேரன், திருவானவகஸ்தியருக் குகந்தசீஷன் தீர்க்கமுள்ளசிவராஜபுனிதயோகன், பருவானதிருமந்திர வுபதேசந்தான் பாருலகில்புலஸ்தியரென்றறையலாமே. 900

அறையலா மின்னமொரு மார்க்கம்பாரு வப்பனேபுலிப்பாணி மைந்தாகேளு,நிறையனேவேதமென்றவியாசர்தாமும்நேர்மையுடன் தான்பிறந்த சேதிவண்ணம், மறைபோன்ற வாணியாந் திங்களப்பா மகத்தாநகேட்டையதுரெண்டாங்கால்தான்,குறைபோன்றநாளதனி லுதித்தபாலன் கொற்றவனார் வேதமென்ற வியாசர்தானே. 901

தானானபராசரனுமைந்தனப்பா தாக்கானவியாசனென்றேசெப் பலாகும், கோனான நூற்படியேயானுரைத்தேன் கொற்றவனார்மாண்ப ரிடமறியவேண்டி, பானனயின்னமொருபதமுஞ்சொல்வேன்பாரினி லேமாண்பர்களுந்தெரியவேண்டி, மானனபுலிப்பாணியுந்தமக்குமார் க்கமுடன்முறைபாடு சொல்லலாச்சே. 902

சொல்லவென்றால்தேரையர்மார்க்கஞ்சொல்வேன் சுந்தரமாகபங் குனியாந்திங்களப்பா,வெல்லவேமூலமதுரெண்டாங்காலாம்மேன்மை யுடனவதாரஞ்செய்தார்களாம், புல்லவேதேரையர் முனிவர்தானும் புகழானபிரம்மகுலந்தன்னிலப்பா, வெல்லவேவானரிஷிதன்றனக்கு சிறப்புடனேபெற்றெடுத்த பாலனானே. 903

பாலனாந்தேரையர்முனிவர்தானும்பண்பாநவகஸ்தியருக்குகந்த சீஷன், சீலமுடனாரோபதேசம்பெற்றுசிறப்புடனேமலைதனிலேயிரு ந்தசித்து, கோலமுடன்யமமென்றவித்தைதன்னை குவலயத்தில் மாண்பர்களுக்காகவேண்டி, காலமுடனகஸ்தியராங்குருபாதத்தை தண்மையுடனெதிர்த்ததொரு சீஷனச்சே. 904

சீஷனாமின்னமொரு மார்க்கம்பாரு சீருள்ளபுலிப்பாணிமன்ன வாகேள், தோஷமதுநேராமல்யாக்கோபென்னுந் துப்புரவாய்ஞான மென்றசித்துதானும், வேஷமதுதான்மாற்றி நபிஉபகத்தைவிருப்ப முடன்கண்டுவந்தயோகசித்து, பாஷமுடன்றாண்பிறந்த நேர்மைகே ளும் பாரினிலே பங்குனியாமாதந்தானே. 805

மாதமாம்பங்குனியாந்திங்களப்பா மகத்தானபூராடம்மூன்றாங் கால்தான், தோதமுடன்பக்திரியாக்கோபுதானும் தொல்லுலகைத் தான்மறந்துபிறந்தசித்து, சாதகங்கள்பொய்யாதுவிதியுந்தப்பாதார ணியில்நெடுங்காலமிருந்தசித்து, கோதமென்னும்புலஸ்தியனார்தானு மப்பாகொற்றவனாரீன்றெடுத்த புனிதனாமே. 806

புனிதமாமகமதுமார்க்கந்தந்நில் புகழானகன்னியவள்பெற்றபா லன், சனியுடனேரேவதியுங் கூடச்சேர்ந்தசட்டமுடன் வந்துதித்த

யாக்கோபப்பா, மனிதனெனனுஞ் சென்மமது பெற்றுமல்லோயக்த்மா
னமகமது மார்க்கஞ்சென்று, தனியானயக்கமென்ற தேசந்தன்னில்
சட்டமுடன்போனதொருசித்துமாமே. 907

சட்டமுடனின்னமொரு மார்க்கங்கேளு சங்கரனேபுத்தியுள்ள
மணியேபாரு, திட்டமுடன்கொங்கணனூர்பிறந்தநேர்மைதீர்க்கமுட
ன்யானுரைப்பேன் சுகந்தமாரா, வட்டமுடன்சித்திரையாந் திங்களை
ப்பாவளமானஉத்திராட முதற்காலந்தன்னில், அட்டதிசைத்தான்
புகழப்பிறந்தபாலன் வன்பானகொங்கணவரென்னலாமே.

என்னவேயவர்பிறந்த நேர்மையப்பா யெழிலான சங்கரகுலத்
தவத்துதித்த, பன்னவேகாளீனன் பெற்றபாலனை காசினியில்வந்து
தித்ததிருவுமாகும், பொன்னரங்கம் பூண்டதொருபுனிதவானும்புக
ழானதேவதாசித்துமாகும், நன்னவனுக்கொப்பான கொங்கணவர்தா
னுங்காசினியில்வந்துதித்த திருவுமாச்சே. 909

ஆச்சப்பாயின்னமொருமர்மஞ்சொல்வே னப்பனேபுலிப்பாணி
மைந்தாகேளு, மூச்சடங்கிபோனதொரு மாயாசித்து முனையர்னதட்
சணாமூர்த்தியாகும், பாச்சலுடன்தட்சணப்பதியில்தானும்பாங்குட
னேபள்ளிகொண்டசித்துவாகும், ஆச்சரியமானதொரு மாயாசித்து
அவர்பிறந்தவண்மைதனைப் புகலுவேனே. 910

புகலுவேன்ஆவணியாந் திங்கள்தானும் பூரணமாந்திருவோண
முதற்காலப்பா,நிகலவேதட்சணாமூர்த்திநாயன்நீதியுடன்றான்பிறந்த
காலுமாச்சு, அகலவேகொல்லிமலைநாதன்பேரன்வன்பானவைஷ்ண
குலசம்பிரதாயன், சகலமுமறிந்ததொருஞானசித்து தாரணியில்வந்
துதித்த சித்துமாச்சே. 911

சித்தானகுலசம்பிரதாயபூபன்சிறப்பானதட்சணாமூர்த்திநாயன்
முத்தானையின்னமொரு மார்க்கஞ்சொல்வேன்மூதுலகைகடந்ததொ
ருபுனிதனாகும், புத்தியுள்ளகோரக்கர்பிறந்தநேர்மைபண்பானகார்த்
திகையாமென்னலாகும், சித்திபெற அயலிடமா மிரண்டாங்கால்தா
ன்சிறப்பானநாளென்றே சொல்லலாமே. 912

சொல்லவேகோரக்கர் பிறந்தநேர்மைசந்தரனூர்வசிஷ்டமகாரிஷி
யாருக்கு, புல்லவேகானகுறஜாதியப்பா புகழானகன்னியவள்பெற்ற
பிள்ளை, வெல்லவே அனுலோமனென்னலாகும் வேதாந்தகோரக்கர்
சித்துதாமும், நல்லதொருபிரகாசமானசித்து நாதாந்தசித்தொளிவு
மென்னலாமே. 913

என்னவேயின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் யெழிலான புலிப்பாணிமன்னுபாரு, தன்னவேகௌபாலசித்துதாமும் சுடரொளியாம் பிரகாசமானசோதி, மின்னவேவைகாசிமாதமப்பா மிக்கான சதயமது ரெண்டாங்கால்தான், நன்னயமாயவர்பிறந்த நாளேயாகும் நல்மான கௌபாலசித்துபாரே. 914

பாரேதான்தேவதாதச்சனப்பா பாங்கானஜகத ஈரு கம்மாளன்றன், நேரேதான் தவத்துதிசித்துவென்றும் நெடிதானகௌபாலரிஷிதானென்றும், தீரேதான்வயிரக்கல்கண்டெடுத்து தீர்க்கமுடன் பொன்னுறைத்தசித்துவென்றும், சீரேதான்பலநூல்காப்பியங்கள் கண்டு செப்பினேன் கௌபாலசித்துகாணே. 915

காணவேயின்னமொரு புதுமைசொல்வேன் காசினியில்நாதாக்கள் கூறவில்லை, தோணவேஜோதியென்றமுனிவர்தானும் துப்புறவாய்தானுதித்த வண்மைபாராய், பூணவேபுரட்டாசிமாதமப்பா புகழான பூரட்டாதியென்னலாகும், மாணவேநாலாங்கால் தன்னிலப்பா மகத்தான சோதிமுனி யுதித்தவாறே. 916

வாரானபிரம்மரிஷிமைந்தனப்பா மகத்தானசூரியகுலந்தனிதித்த, தூரானபெண்மாது வரவர்ஜாதி துகளானசோதிமா முனிவர்தானும், வேரானமலைகுகைகள் குண்ணுதேடி விளக்கமறநல்லதலை வாரய்ந்தேதான் கூறுனவயிரக்கல்கண்டெடுத்த கொற்றவனார்சோதிமா முனிதானச்சே. 917

ஆச்சப்பாயின்னமொரு மர்மஞ்சொல்வேன் வப்பமேனபுலிப்பாணி வண்ணலேகேள், மூச்சடங்கிசென்றதொரு மாடர்தானும் மூனையுடனேதான்பிறந்த வண்மைகேளீர், மாச்சுலென்றமார்கழியாந் திங்களப்பா மகத்தான உத்திரட்டாதிதானும், வீச்சுடனேநாலாங்காலென்னலாகும் விரைவானநாள்தனிலே பிறந்தார்தாமே. 918

பிறந்தாரேடமரகர் யாரென்றக்கால் பேரானசுந்தரனார் மைந்தனப்பா, இறந்ததொருசுந்தரற்கு மைந்தனப்பா யெழிலானபிள்ளையது ரெண்டாம்பிள்ளை, துறந்ததொருஞானியப்பாசைவஞானி சுத்தமுள்ள வீராதிவீரனப்பா, மறந்ததொருமார்க்கமெல்லாம் மாந்திரீகத்தால் மகத்தானபுத்தியினாலறிந்தசித்தே. 919

சித்தானயின்னமொரு மகிமைசொல்வேன் சீர்பாலாபுண்ணிய னே பகலக்கேளீர், முத்தானஞானியிலு மூயர்ந்தஞானி முனையான சுந்தரனார்சித்துதாமும், புத்தியுள்ளபூபாலன் தான்பிறந்த புகழான மாதமது யேதென்றக்கால், சுத்தமுள்ள ஆவணியாந்திங்களப்பா சுடரானசுந்தரனார் பிறந்தார்தானே. 920

தானனரேவதியா மூன்றுங்காலாம்தண்மையுடன்பிறந்தமொரு நாளுமாச்சு, கோனனசுந்தரன ருளவுகேட்டால் கொற்றவனேசித் கிந்தர் மலையினுச்சி, தேனனநவகண்டரிஷிபார்தம்மின் சிறப்பாக யவர்தமக்கு பேரனகும், மானனமகத்துவங்களுள்ளசிதது மண்ட லத்தில்சிவஞான சித்துபாரே. 921

பாரேதானின்னமொரு வதிதஞ்சொல்வேன் பாலகனேசிறுபா லா பகரக்கேளும், கூரேதான்சொன்னார்களிதிகாசங்கள் வப்பனே யார்தானுஞ்சொல்லவில்லை, நேரேதான்யின்னமொரு மார்க்கஞ்சொ ல்வேன் நெடிதானவரரிஷியாமென்றசித்து, சீரேதானவர்பிறந்தவண் மையப்பா சிறப்புடையசித்திரையாந் திங்கள்தானே. 922

சித்திரையாமசுவனி மூன்றுங்காலாம் சிறப்பானநாள்தனிலே பிறந்தாரென்றும், பத்தியுடனவருடைய மார்க்கஞ்சொல்வேன் பண் பான திரணக்கிய முனிவர்பேரன், முத்திவழிசெல்லுகின்ற சித்து வாகும் முனையானவரரிஷியாமென்றும்பேரு, சத்தியங்கள்தவராத விசுவயோகி தாரணியில்வரரிஷியா மென்னலாமே. 923

என்னவேயின்னமொரு வயணஞ்சொல்வேன் யெழிலானயெந் தனதுபுத்திவானே, துன்னவேவால்மீகா பிறந்தநேர்மை துப்புரவா யவருடைய வளமைசொல்வேன், மன்னவனுக்கொப்பானவால்மீகர் தானும் மகத்தானலோகமதில் பெரியசித்து, சொன்ன தொருபுரட் டாசி திங்களப்பா சொற்பெரியவனுஷமது நாலாம்பாலே. 624

காலானவால்மீகர் வேடனப்பா கன்னியாள்பெற்றதொரு குற த்தி மைந்தன், கோலானமராமரா வுபதேசங்கள் கொற்றவனார் பெற்றதொரு சித்துமாச்சு, பாலானமாண்பருக்கு ஞானகாண்டம் பகுத்தறிய வால்மீகர் சரிதையப்பா, மாலானவவர்பெருமை யாருக் குண்டு மகத்தானரிஷிகளுக்கில்லைதானே. 925

இல்லையே இன்னமொரு சரிதைசொல்வேன் யெழிலானயெந்த னதுபுத்திமாரா, தொல்லுலகிற்கீர்த்திபெற்றமாதுசித்து தப்புரவா பூர்வ சியாலென்னுமாது, எல்லவருந்தான்புகழுவைகாசிதன்னில் யெழிலான பூரமென்றநாலாங்காலாம், வல்லமையாய்வந்துதித்த தேவமாது வையகத்திலூர்வசியாளென்றமாதே. 926

மாதானவூர்வசியாள்மார்க்கந்தானும் மகத்தானகானகத்துரிஷி தானப்பா, நீதானபிரிங்கிமாரிஷியின்பேத்தி நீர்க்கமுடன்கானீனன் பெற்றமாது, ஆதானசாத்திரங்கள் சித்துநூலில் அறிவுடையவூர் வசியாள் மாதுதானும், கோதானந்தான்கொடுத்துபிறந்தமாது குவ வயத்திலூர் வசியாஞ் சித்துகாணே. 927

காணவேயின்னமொரு கவிதைசொல்வேன் கண்ணானகண்மணி யேகமுரக்கேண்மோ, பூணவேபுலிப்பாணிமைந்தாபாரு புகழான யெந்தனிருமணியேகேளும், வேணவேயின்னம்வெகு வனேகசித்து வேடமது பூண்டுமல்லோயிருந்தாரப்பா, மாணமருங்கல்வியுள்ள சித் துகன்னில் மகத்தானசித்துகளை கூறலாச்சே. 928

கூறவென்றால்கமலமுனிபிறந்தநேர்மை கூறுவேன்வைகாசிதிங் களப்பா, மாறலுடன்பூசமதுரெண்டாங்காலாம் மகத்தானகமல முனிபிறந்தநாள்தான், சீறலதுவாராததேவசித்து தெளிவுடையவை யகத்துக்குகந்தசித்து, ஆறவேயொருவரால் கூறப்போமோவப்பனே ஞானவொளிசித்துபாரே. 929

பாரேதான்சித்தொளியின்மகிமைபாரு பாங்கானகாலாங்கி பா ட்டன்வர்க்கம், நேரேதான்வம்மிஷத்திற்பிறந்தசித்து நெடிதானசின் மயானந்தசித்து, வேரேதானின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் வெளியாங்கமான தொருமாராகேண்மோ, சீரேதான் அறிவானனந் தசித்தர் நீர்க்கமுடன்பிறந்ததொரு நேர்மைமாணே. 930

காணவேமாசியென்றதிங்களப்பா கருவானரேவதியாமூன்றும் பாதம், பூணவேயவர்பிறந்தநாளதாகும் புகழானமார்க்கமது யே தென்றாக்கால், வேணதொருடமரகனார்மைந்தனப்பா வேதாந்தஅறி வானனந்தராகும், தோணவேபிரதிலோ மனென்றே சொல்வார் தொல்லுலகிலிவர்போலுஞ் சித்துமுண்டோ. 931

உண்டானயின்னமொருமர்மஞ்சொல்வேன்வுத்தமனேநாதாந்த மணியேகேண்மோதொண்டனானுஞ்சித்துமுனிரிஷிகளுக்குதோற்ற

முள்ளவகப்பேயர் சித்துவாகும், கண்டவர்கள் விடுவார்கள் சித்து தம்மை காசினியிலுபதேசம் பெற்றசித்து,அண்டமெனும் வையகத்தில் பிறந்தநேர்மை வப்பனே யானுரைப்பேன் சொல்லுவன்பாரே.

ஆச்சப்பா கன்னியவள் பெற்றபிள்ளை யவதாரபுருஷனென்றே செப்பலாகும், மூச்சடங்கி வெகுகாலமிருந்தசித்து முனையான வகப்பேயர் சித்துவாகும், மாச்சலுடனின்னமொரு மார்க்கங்கேளு மகத்தான குதம்பையென்ற சித்துதாமும், ஏச்சலதுவாராமல் தான்பிறந்த யெழிலான சித்தினிட மார்க்கங்கேளே. 833

கேளேதானடியாங் திங்களப்பா கெவனமுடன் விசாகமென்ற மூன்றுங்காலில், நாளப்பா தான்பிறந்த குதம்பைசித்து நலமுடனே திரிகால பூசைசெய்து, வேளப்பாயாகமது முடித்துமல்லோ வேள்வியுடன் பாலாமுர்தமுண்டசித்து, ஆளப்பாபெரியோர்கள் நேசம்பெற்று வப்பனேமரப்பொந்தி லிருந்தசித்தே. 834

சித்தான மாநவமாங்குலத்துதித்த சிறப்பானகுதம்பையென்ற சித்துவப்பா, முத்தானபாலமுர்த முண்டுமல்லோ மூதுலகைத்தான் பழித்தசித்துவாகும், பத்தியுடன் வையகத்தில் நெடுங்காலந்தான் பான்மையுடன் வீற்றிருந்த பரமசித்து, சுத்தியுள்ள திருவாத்தி மரத்தின்கீழே சுந்தரம்போலிருந்ததொரு மாயாசித்தே. 935

மாயானசித்தல்லோ மகிமைபாரு மகத்தானபுலிப்பாணி மைந்தாகேளு, தாயானபாம்பாட்டி சித்தரப்பா தாரணியில் நெடுங்காலமிருந்தசித்து, காயானமுப்பழமும் பாலுங்கொண்டு கலியுகத்தில் நெடுநாளா யிருந்தசித்து சேயானபாம்பாட்டி சித்துதாமும் சீருலகில்பிறந்ததொரு சித்துதானே. 936

தானானபாம்பாட்டி பிறந்தமாதம் தாக்கானகார்த்திகையாந்திங்களப்பா, கோனானமிருகசீரிடந்தானாகும் கொற்றவனே மூன்றுங்காலென்னலாகும், தேனானவவற் பிறந்தநாள்தானப்பா தேசத்தில் சித்தர்முனி கண்டதுண்டோ, மானானபதினெண்பேர் நூலைப்பார்த்து மார்க்கமுடன் றானறிந்து சொல்லிட்டேனே. 937

சொல்லவென்றால் பாம்பாட்டி மர்மந்தானும் தோற்றமுடன் ஜோகியென்ற வம்மிஷந்தான், புல்லவேமசானகுறி யோகியப்பா புகழ்பெரிய குருடனார் பெற்றபிள்ளை, வெல்லவேமாலைசுற்றித் தான்பிறந்த வேதாந்தப் பாம்பாட்டி யென்னலாகும், நல்லதொரு சித்துமுனி வுபதேசங்கள் நலம்பெற்ற பாம்பாட்டியாமே. 938

பாம்பானயின்னமொரு மார்க்கங்கேளு பண்பான புலிப்பாணி நேசபாசா, தீம்பில்லாகாலகண்ட ரிஷியார்தாமும் தீர்க்கமுடன் பிறந்தவொரு திண்ணம்பாரு, தாம்புகழுச்சித்திரையாந் திங்களப்பா தாக்கான வுத்திராடமிரண்டாம்பாதம், மாப்புலமாம் வட்டாரந்தன்னிலப்பா மகத்தான சிவவேடம்பூண்ட சித்தே. 939

பூண்டதொரு காலகண்ட ரிஷியார்தாமும் புகழானபேரண்ட முனிதான்சித்து, ஆண்டகையார் சித்துமுனி மைந்தனுக்கு வன்பானபேரனது பேரனப்பா, தாண்டகையாங் காலகண்ட சித்துவாகும் தாரணிபதி சிவயோக சித்துவாகும், வேண்டியதோர் கருமானமறிந்த சித்து வேதாந்த காலகண்ட ரென்னலாமே. 940

என்னவேயின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் யெழிலான புலிப்பாணி கண்ணேகேளும், பன்னவேவடிவேலர் தாம்பிறந்த பதாம்புயத்தைச் சொல்லுகிறேன் பண்பாய்கேளும், துன்னவேமூன்றா யுகங்கடந்தவேலர் துப்புறவாய்ப் பிறந்தவொரு நேர்மையப்பா, சொன்னபடியாவணியாந் திங்களப்பா சொல்லுகிறேன் முதற்பூசங்கால் தானென்றே. 941

ஒன்றானகால்தனிலே பிறந்தநாளாம் வுத்தமனார் வடிவேலர்பிறந்தாரென்று, குன்றானமலைபோலே சாத்திரங்கள் கூறினார்குவலயத்தில் சொல்லொண்ணாது, தென்றிசையில் கஸ்தியருக்குபதேசங்கள் செய்தவொரு வடிவேலர் சித்துதாமும், பன்றிபெருச்சாளியின்மேல் சாரியேகும் பண்பான விநாயகர்க்கு தம்பியாமே. 942

தம்பியென்று சாத்திரங்கள் சொல்லலாச்சு சதகோடிவடிவேலர்சித்துதன்னை, வெம்பியதோர் மாண்பருக்கு ரோகந்தீர்க்கும் வெட்டவெளி வடிவேலரென்றேசொல்வார், தும்பியேமனங் கொதித்து வந்தபேர்க்கு கோடானகோடி பொருளீவாரப்பா, தம்பியேயெந்தனுக்கு குருவுமாகும் தாக்கானவடிவேலர் தண்மைபாரே. 943

பாரேதானின்னமொரு பதமுஞ்சொல்வேன் பாங்கான்புலிப்பாணி மகனேபாரு, சீரானயூகிமுனி பிறந்தவண்ணம் சிறப்புடனே சொல்லுகிறேன் திறமையெத்த, நேரானவாவணியாந் திங்களப்பா நெடிகான பூசமதுமூன்றாங்காலாம், கூரானநாளதனிற் பிறந்தசித்து குறிப்பான யூகியென்ற முனிவர்தானே. 944

தானானயூகிமுனி மார்க்கமென்றால் தகமையுள்ள தன்வந்திரிக்
குற்றபேரன், கோனானசிங்க ளவகுலத்துதித்த கொம்பனையாள் கா
ளினன்பெற்றபிள்ளை, தேனான திரவிடத்திற் சொன்னார்போலே தீர்
க்கமுடன் வடமொழியிற் சொல்லலாச்சு, மானானமாண்பருக் குப
யோகத்தால் மாட்சியுடன் சொன்னதொரு நீதியாமே. 945

நீதியாமின்னமொரு மர்மஞ்சொல்வேன் நிஷ்களங்கமான புலி
ப்பாணியப்பா, ஓதிலாஜெமதக்கினி முனிவர்தானும் சிறப்புடனே
பிறந்ததொரு நேர்மைசொல்வேன், கோதிலாவற்பசிமாதமப்பா குறி
ப்பான புனர்பூசமூன்றாங்கால்தான், பாதிமதிசடையணிந்த தம்பி
ரான்போல் பாரினிமேல யவதரித்த சித்துதாமே. 946

சித்தான ஜமதக்கினி முனிவர்தானும் சிறப்பான பரத்துவமாம்
ரிஷியின்பேரன், முத்தானவனுலோமன் பெற்றபிள்ளை மூதுலகில்
கீர்த்தியுடனிருந்தசித்து, சத்தானயூகியென்ற சாத்திரந்தான் சாங்
கமுடன் பன்னீராயிரந்தானாகும், சுத்தமுள்ள ரிஷிதேவர் சொன்ன
தில்லை சுந்தரனாரிதிகாசங் கூறினாரே. 947

கூறினாரின்னமொரு குறிப்பைக்கேளு கூரானபுலிப்பாணி மை
ந்தாபாரு, மீறியதோர்திரணாக்கிய முனிவரப்பா மிக்கானபிறந்ததொ
ரு வண்மைசொல்வேன், ஆறுபுடைதிங்களாம் புறட்டாசியப்பா வப்
பனே திருவாதிரை ரெண்டாம்பாதம், வீறுபுகழ்சாத்திரத்தை மன
திலுன்னி விருப்பமுடன்பாடி வைத்தார் நூலிதாமே. 948

நூலானமார்க்கமது யேதென்றாக்கால் நுணுக்கமுடன் ஜெமத
கினி பெற்றபாலன், கோலானகுறத்தியுட சற்புத்திரந்தான் குறிப்
பான பிரதிலோம லென்னலாகும், பாலானமார்க்கமது யேதென்றா
க்கால் பட்சமுடன் சொல்லுகிறேன் பண்பாய்க்கேளு காலானபுலிப்
பாணி மைந்தாபாரு கசடற்றபுத்திரனே புகல்வேன்பாரே. 949

புகலுவேன் கண்டீசர் பிறந்தநேர்மை புகழான வைகாசி மாதமா
கும், நிகலுவேன்பூரமென்ற மூன்றாங்கால்தான் நீதியுடன் பிறந்த
நாளேயாகும் சகலமுமறிந்ததொரு சித்துதாமும் சதாகாலம்வையக
த்தி லிருந்தசித்து, அகலவேபுலத்தியருக் குற்றபேரன் அன்பான
வேடருட ஜாதிதானே. 950

சாதியாங்கானீனன் பெற்றபிள்ளை சாங்கமுடனெடுங்கால மிரு ந்தசித்து, சோதிமணிசுந்தரம்போல் குகைதானுள்ளே சுட்டெறிக் கும் நிலாப்போலே யிருக்குஞ்சித்து, நீதிமனுமுறைதவறு யிருந்தசி த்து கடாழியுலகபதியாண்டசித்து, நீதிலாசங்கமென்ற புலவருக்கு தீர்க்கமுடன் வுபதேசஞ் செய்தசித்தே. 951

செய்யவேயின்னமொரு மார்க்கம்பாரு செம்பவள கனிவாயா துய்யபாரா, உய்யவேதிருமூலரென்றேசித்து வுலகமதில்தான் பிறந் தசேதி வண்ணம், பையவேபுரட்டாசி திங்களப்பா பாலகனுர்வந்து தித்த மாதமாகும், வெய்யவே யவிட்டமென்ற மூன்றாங்கால்தான் மேதினியில் வந்துதித்த சித்துமாச்சே. 952

ஆச்சப்பாதிருமூல வர்க்கத்தோர்கள் அவனியிலே சொல்லுத ற்கு நாவுமில்லை, மூச்சடங்கிபோனதொரு பாண்டியர்கள் தாமும் முன்னையான சங்கமதில்வாது செய்தோன், பாச்சலுடன் சேரனுக்குப் பெற்றபாலன் பாரினிலேயனுலோம னென்னலாகும், வீச்சலிடனி திகாச புராணமெல்லாம் விருப்பமுடன் பாடிவைத்த சித்துகாணே.

போகர் தட்சணபதி மாண்பரின் குறியை சீனபதி

யாருக்குறைத்தல்.

காணவேயின்னமொரு கருமானங்கேள் கருவான புலிப்பாணி மைந்தாபாரு, தோணவே யெழுகடலுஞ் சுற்றிவந்தேன் தோறுமல் தட்சணமாண்பர்தமை, பூணவேநெடுங்கால மிருந்துமல்லோ பொங் கமுட னதிசயங்கள் மிகவுங்கண்டேன், வேணதொரு தேவாதிதேவ ரல்லோ விருப்பமுடனனேகவித கோயிலுண்டே. 954

உண்டானவையகத்து மாண்பர்தம்மில் வுத்தமனே சன்னதங் கள் மெத்தவுண்டு, கண்டாலும் மாண்பர்களைப் பார்த்தபோது கரு வான தெய்வங்களுச்சாடத்தால், செண்டான முறைமைகொண்டு வுறவுபேசி செம்மலுடனருகிருந்து சிலதுமாண்பர், திண்மையுடன் குறிசொல்லவந்தோனுக்குதீர்க்கமுடன் தானுரைப்பார்வதீதந்தானே

அதிதமாஞ் சமுசாரிசெய்யும்வித்தை வன்போடுவாயிரம்பேர் குறிகேட்டாலும், கதிதமுடன் தேவதைகள் வசியத்தாலே கதிரான சுகசேதி சொல்வோன்போல, மதிபோன்ற தேவதாகிருபையாலும் மகத்தான உண்மைமொழி கூறினற்போல், சதியுடனே சன்னதங் கள் மிகவுமாகி சட்டமுடன் கூறலுற்றார் மாண்பர்க்காமே. 956

மாண்பான குறிசொல்லும் மார்க்கங்களும் மகத்தானபத்து பேரெண்டுபேர்கள், ஆண்பிள்ளைத்தன்னோடும் பாலரோடும் வழகானமாதர்களின் கூட்டத்தோடும், வீண்பேச்சிவார்த்தைகளு மிகவாய்ப்பேசி விருப்பமுடன் யாதொன்றுந் தெரியாற்போலும், நாண்போடுதூதுரைக்கும் மாண்பர்தாமும் நலமானமாந்தருடன் பேசுவாரே.

பேசியேமாண்பாரொடு வுறவுபேசி பேரானகுறிகேட்க வந்தோர்தம்மை, காசினியிற்வந்ததொரு மாண்பர்காங்கள் கருவாகக்குறிசொல்லு மாண்டிதன்னை, பாசிபடாகுறியுரைப்பா ரென்றுசொல்லி பட்சமுடன் வெகுதூரங் கேட்டுவந்தோம், மாசியென்னும் பதிதனிலே குறிகள்கேட்டோம் மகத்தான குறியதுவுஞ் சொல்லலாச்சே.

சொல்லவென்றால் குறியதுவு மென்னசொல்வோம் சோடசத்திலொன்றேனும் பொய்யேயில்லை, வெள்ளவேகுறிகேட்டோர் மெய்யைப்போலே மேன்மையுடன் கூடிவருமாண்பரோடு, புல்லவேவுறவு கொண்டு நயங்கள்பேசி புகழானயெதிரியின் வார்த்தைதன்னை,மெல்லவே யவருரைக்கும் வார்த்தைதன்னை மேன்மையுட னுபாயத்தாலறிவார்தானே. 959

தானுகளதிமாண்பர் கூறும்வார்த்தை தண்மையுடனுபாயமதாயத்தானறிந்து, கோனுனகுறியுரைக்குஞ் சங்கன்றனும் கொப்பெனவேயடையாள ரூபத்தோடும், மானுகயெதிரியின்றன் வார்த்தையெல்லாம் மார்க்கமுடன் றனுரைத்து ஆளைக்காட்டி,பானுகபதிமேடைமறைந்துகொண்டு பாங்குடனே குறிசொல்வோர் பின்னிற்பாரே.

நின்றுமேதூதுரைத்து ஆள்காணுமல் நேர்மையுடனோர் பக்கம் மறைவாய்நின்று, சென்றதொரு மாண்பருக்கு குறியுஞ்சொல்ல செம்மலுடன் ஜங்கமனும் வேடம்பூண்டு, நன்னயமாய் கிருஷ்ணமுடிதானும்பூண்டு நலமான வுடுக்கைதனைக் கையிலேந்தி, பன்னவேபலபேர்கள் கூட்டத்தோடும் பாரினிலே பலகுறிகள் சொல்வான்பாரே.

சொல்வானே யவரவர்கள் வார்த்தைகொண்டும் துப்புரவாய் முன்சொன்ன தூதைக்கொண்டும், புல்லவேகுறிமேடைதனிலிருந்து புகழானயாவேசம் வந்தாற்போல, மெல்லவேவாய்திறந்து பொன்னுங்காயை மேன்வையுடன் மென்றுதின்று உமிநீர்தன்னை, நல்லதொருமதுவுண்ட நாற்றம்போல நயமுடனே வமனமது செய்வான்பாரே

செய்யவேமதுபானங் கொண்டுமல்லோ செயலான தன்னிலைதனக்குமாறி, பையவேமயன்மீதில் வாடைகொண்டு பதறாதே தேகமது நிலைகொள்ளாது, உய்யவேயார்வந்து யெதுகேட்டாலும் உத்த

மனே சித்தடியேன் சொல்வேன்பாரு, துய்யபுகழ்பாண்டியன்போல் வுதாரம்பேசி துப்புரவாய்க் குறிசொல்வோன் கேட்பான்பாரே.

பாரேதான் முன்சொன்ன வடையாளம்போல் பாங்குடனே மாண்பர்களை யுருட்டிப்பார்த்து, நேரேதானீசானிய மூலைப்பா நெருக்கமுடன் நடுபந்திதனிலிருக்க, சீரேதான்கட்டமுகி மாதுதன்னை சிறப்பான சித்தடியைக் கூப்பிடென்று, ஆரோதானம்மம்மா குறைகளொன்று ஆர்க்கமுடிபோதாது என்பான்பாரே. 964

என்னவேயுந்தனுக்குக் குறைகள்மெத்த வர்க்கமுடி போகாது ரோகம்மீறி, பன்னவேயுன்புருஷ னுன்னைவிட்டு பாரினிலே வனசாரிசென்றானம்மா, துன்னமே மைந்தனுக்குக் கண்ணும்போச்சு, துப்புரவாய்ப் பாவாடைராயனுக்கு, மின்னவே கங்கணமுங் கட்டியல்லோ மிக்கான பொங்கல்களு மிட்டீர்காணே. 965

காணவேயிருபத்தோர்வாரம்மா கட்டமுகிகாணிக்கை கொண்டுசென்று, தோணவேமுதற்பூசை யன்னுதென்று துப்புறவாய்ச்சொல்லினதும் உண்டோகூறும், நாணவேகுறு முகத்தில் வந்துயென்னை நன்மையோ துன்மையோ வென்றுசொல்லி, பாணம்போல் மனதுருகி மனதுவந்து பாலகனேகேட்க வந்தீருண்மை தானே. 966

உண்மையா மென்குறிகள் பொய்பாதம்மா வுத்தமியே நாதாக்கள் வணங்குவார்கள், வண்மைபாங் கைகண்டகுறிதானென்று வளப்பமுடன் நிதியெனக்கு குடுப்பீர்பாரு, திண்மையாம் பாதகாணிக்கையோடும் தீர்க்கமுடன் புஷ்பதாம்பூலத்தோடும், தண்மையுடன் வேணவுபசாரத்தோடும் தட்டாமலெந்தனுக்குத் தருவார்தாமே.

தட்டாமல் தருவதானென்றுசொல்லி சர்க்கமிட்டு சித்தடிக்கு வாதுகூறி, கொட்டாவி கொண்டல்லோ மலையேறியப்பா கொப்பெனவேயான் போறேனென்றுசொல்லி, சட்டமுடன் கற்பூரபழத்தை வாங்க சாங்கமுடன் வாய்தனிலே கொண்டுமல்லோ, வட்டபுரியம்மன்து பாதம்போறேன் வளமுடனே யெல்லோரும் பணிவீர்தாமே.

பணியவென்று குறிசொல்வோன் கூறும்போது பண்பானமுழுமூடர் கழுதைமாண்பர், அணியணியாய்க் குறிகேட்டு மெய்யென்றெண்ணியவன் பாதந்தன்னில் வீழுஞ்சண்டிமாண்பர், மணியான தெய்வமது வொன்றிருக்க மார்க்கமுடன் மதுகொள்ளும் மாண்பர் தன்னை, கணிதமுடன் குறிகண்டு குணமுங்கண்டு காசினியில்வந்துதித்த தெல்வந்தானே. 969

தானனமது கொள்ளும் மதுரைவீரன் தாரணியில் குறிசொல்லுந் தெய்வமென்றுங், கோனனமுழுமடையர் பேயரப்பா, குவலயத்தில் கல்விகற்றும்பேயனாகி, மானனபஞ்சறிவந்தா னறிந்துமகத்தானசாத்திரங்கள் படித்துக்கேட்டு, பானகக்குறி சொல்வோர் வலையிற்சிக்கி பண்புடனே மயங்குகிறார் மடையர்தாமே 970

மடையானமாண்பர்களும் பலநூல்கற்று மகத்தானமாயாவின் வலையிற்சிக்கி, இடைநடுவில் வையகத்து வாழ்க்கைதன்னை யெழிலாகத் தன்மனதில் பாருமற்றான், கடைபோன்ற ஞானவழிகோடி சித்தர் கருவானசாத்திரங்கள் செய்திருக்க, திடமுறவேசற்றேனு மனதுறாமல் தீர்க்கமுடன் பலநூலும் பார்த்தார்தானே. 971

சத்தகன்னி குறிகேட்கல்.

தானன யின்னமொரு மார்க்கஞ் சொல்வேன் தகமையுள்ள புலிப்பாணி மைந்தாகேளு, கோனனயெனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார் தாமிருக்குங் காலந்தன்னில் பானனவையகத்து மாண்பரெல்லாம் பதிகெட்டு மதிகெட்டு குறிகள்கெட்டு, தேனனமனோன்மணியை மறந்துமல்லோ தீர்க்கமுடன் மூடவழி சென்றார்பாரே.

பாரேதான் குறியுரைக்குஞ்ஜங்கன்றானும் பாங்கானபதிமேடைதனிலிருந்து, நேரேதான் மான்பர்களின் கூட்டந்தன்னை நேர்மையுடன் தானோக்கிப் பார்த்துமேதான், சீரேதான்சத்த கன்னிவந்தேனப்பா சிறப்புடனே சன்னதங்கள் மிகவுண்டாச்சு, கூரேதான்வாடைகொண்டு வீசுதையா கொற்றவரே குறிகேட்டால் கூறுவேனே.

கூறுவேன் விளையாடி சன்னதங்கள் கொப்பெனவே ஓங்காரசத்தத்தோடு, மாறுபடாதிருமேனி மங்கையப்பா மகத்தானபச்சைரிஷிவனத்திற்றானும், ஆறுண்டுகுளமுண்டு மடுவுமுண்டு அங்கிருக்கும் வனத்து கன்னியானுமல்லோ, வீறுடனேவெகுநாளா யுந்தன் வாசல் விருப்பமுடன் விளையாடவந்தேன் பாரே. 974

வந்தேனென்று சொல்லுகையில் ஜங்கன்றானும் வகையறிபமுமூடர் மாண்பர்தம்மில், சிந்தனையாயதி லொருவர்தா னெழுந்து சிறப்புடனே குறிகேட்க வந்துநின்று, பந்துமுலைஸ்தனத்தாளே பச்சைகன்னி பட்சமுடனெந்தனுக்குக் குறிகள்கூறும், தந்தையார் வைத்ததோர் நிதிகள்கோடி தாரணியிலமெத்தவுண்டு சொல்லொணாதே

உண்டான திரவியங்கள்மெத்தவுண்டுஓகோகோநாதாக்கள்கொடுத்த பாக்கியம்,தண்மையுடன்தேவதாஸ்தலங்கள்யாவும் தகமையுடன்தருமமதுசெய்தேன்யானும்வண்மையுடன்யாகமதுசெய்துமல்லோ

மகத்தானகாணிக்கையாவுந்தந்தேன், உண்மையாய்க்கொடுத்தநீதி கோடியுண்டு வுத்தமனேமைந்தனிலையென்றார்தாமே. 976

என்றுமேமாண்மர்களிலொருவனப்பா யெழிலானஜங்கமனைக் கண்டுமல்லோ, குன்றானமலைநாடு குகைகள்தன்னில் கொம்பனையே வந்த தொருகன்னிதாமே, சென்றுமேதம்பதிக்குவந்தேனம்மா செம்மலுடன் யெந்தனுக்கு மைந்தன்வேண்டும், இன்றுமேகுறியுரைத்து யெந்தனுக்கு யெழிலுடனேயேகவென்று தொழுதிட்டாரே. 977

தொழுதாரேசமுசாரி பானமாண்பன் துப்புறவாய்பாதகாணிக்கையிலிட்டு, அழுதாரேதேவியுடன்றானுமல்லோ அங்ஙனவேயிரு பேருஞ்சாஷ்டாங்கிட்டு, முழுவதிலுமெங்களைநீர் பாதுகாத்துமொய் குழலேயெங்களுக்கு மைந்தனீந்து, மழுவுடனேகற்பூரதீபாராத்தி மகிழ்ச்சியுடன்தருவேனென்று பணிந்திட்டாரே. 978

பணியவேசத்தகன்னிஜங்கன்றானும் பட்சமுடன்மனதுவந்து மனங்களித்து, மணியானமைந்தனல்லோ வுனக்குண்டாகும மகப்பேறு மெத்தவுண்டுயுந்தனுக்கு, கணிதமுடன்குறியுரைத்தேன்மைந்தா பாலா கட்டமுகியுன்றேவியின்றுமட்டும், துணிவுடனேயிருபத்தோர் வாரமப்பா துப்புரவாய்பூசைமுகம் வரச்சொல்வீரே 979

சொல்லவேசத்தகன்னிஜங்கன்றானும் சுத்தமுடன்சமுசாரி மாண்பன்கேட்டு, வெல்லவேதன்றேவிதனையழைத்து விருப்பமுடனின்று முதல்நீயுமேதான், புல்லவேசத்தகன்னிஜங்கன்றானும் புகழாக வாக்குரைத்ததன்மைபோலே, நல்லதோர்யிருபத்தோர்வாரமட்டும் நலமுடனேபதிமுகத்தில் செல்வீர்தாமே. 980

தாமானசமுசாரி மாண்பன்தேவி சட்டமுடன்நாயகன்சொற்கடவாமற்றான், பேமானிதானுரைத்தவார்த்தைதன்னைபேருலகிலுபதேசம் மெய்யென்றெண்ணி, சாமான்யமானதொரு பெண்பால்தானும் சட்டமுடன் ஜங்கமனறன்வாசற்சென்று, பூமான்களறியாமல் பதிமுகத்தில் புகட்சியுடன்ஜங்கமனைக் கண்டாள்பாரே. 981

கண்டதொருசத்தகன்னிஜங்கன்றானும் கருத்துடனேகொம்பனையைக்கொண்டுசென்று, அண்டர்முனிதேவாதிதேவர்க்கெல்லாம் அவனியிலே குறியுரைத்தேன் மெத்தவுண்டு, தண்டுளபமாலையணி கிருஷ்ணன்போல தகமையுடன்மாதுதனைக் கைபிடித்து, கொண்டணைத்துசைதன்னியஞ் செய்துமல்லோ கொப்பெனவேமைந்தனுமுண்டாக்கினேனே. 982

ஆக்கினைன்யிருபத்தோர்வாரமட்டும் அங்கனவேபதிமுகத்தில் சென்றுமல்லோ, பாக்கியங்கள்பெற்றவர்போங் வாரவாரம்பதிமுகத்தில் ஜகமன்றன்கூடிருந்து, சாத்திரங்கள் சொற்பனங்கள்கண்டாற்போலே சட்டமுடன்தம்பதிக்கு வந்துமல்லோ, நீக்கியேசத்தகன்னி வரமும்பெற்று நீடேயுங்டன்வடபதிக்கு வந்திட்டாரே. 983

வந்தாரேவெகுநாட்கள் தான்கழித்து வளமையுடன் மைந்தனையும் பெற்றபின்பு, சிந்தனைகள்தாம்நீங்கி கலியும்நீங்கி சிற்பரனைப்போல ஒரு பாலன்பெற்று, பந்தமுடன்மணவாளன்மனைவிதானும் பட்சமுடன் மைந்தனையுங் கொஞ்சியல்லோ, அந்தவுலகத்தினிலே சத்தகன்னி எழிலானகுறிப்போலே யுண்டென்பாரே. 984

என்பாரேமுழுமடையர்தானுமப்பா யெழிலானசாத்திரங்கள் கற்றுமென்ன, வன்பானமாண்பனல்லோ நம்மைப்போல வளமையுடன் வையகத்தில் வந்தமாண்பன், தன்போலேமனிதனென்று வறியாமற்றுன் தண்மையுடன்சத்தகன்னி ஜங்கன்றன்னை, நன்னயமாய் மனிதனையுஞ்சுவாமியென்று நலமுடனேயவர்காலில் விழுந்திட்டாரே. 985

விழுந்தாரேயவன்கலைவி தன்னிற்சென்று விட்டகுறையிருந்ததொருபாவத்தாலே அழுந்தியேயவன்வலையிற் சிக்கியல்லோ அவனியிலேபேருண்டாய்பேறும்பெற்று, தொழுதுமேகுலதெய்வமவன்தானென்று தொல்லுலகில்கெட்டதொரு கழுதைமாண்பர், மழுவேந்துங் கதைபேசிநயங்கள்பேசி மாநிலத்தில்கேட்டவர்கள்கோடியாமே

பட்சணமாண்பருக்கு பலவிதத்தேவதை குறிகூறல்.

கோடிபாமின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் குறிப்பானதட்சண மாமாண்பருக்கு, நீடியேபலதேவகோடியாக நீதியுடன்தாமுரைப்பா ரனந்தமார்க்கப், வாடியேவையகத்துமாண்பரெல்லாம் வளமையுடன் பலகாலுந்தொழுதிரஞ்சி, தேடியேதிரவியங்களனைத்துந்தந்து தீர்க்கமுடன்தான்கொடுத்து நிதிகேட்பாரே. 987

நிதியானமானிடர்மேல்குறிகள்வந்துநினைத்துவிளையாடுமதுசன்னதங்கள், பதியானபதிவிட்டுவந்தேனென்றும் பாலகனேதெய்வகன்னி நான்தானென்றும், துதியுடனேமரத்துமுனி யென்பேரென்றும் துப்புரவாயெல்லையதுபிடாரியென்றும், மதியானலாடமுனி நான்தானென்று மகத்தானசன்னதங்கள் கூறுந்தானே. 988

தானானவம்மனது காளியென்றும் தாக்கானவேல்முருகர் யான் தானென்றும், கோனானவாடை முனியான்தானென்றும் குறிப்பான காட்டேரியான் தானென்றும், தேனானதிருவேங்கட பதிதானென்றும் சிறப்பான அங்காளவல்லியென்றும், மானானகாத்தவராயனென்றும் மகத்தான அனேகவித தெய்வம்பாரே. 989

பாரேதான்தெய்வமது வனேகங்கோடி பாரினிலேமாண்பர்மேல் சன்னதங்கள், நேரேதான் றெய்வமயல் கொண்டோர்போலும் நேர்மையுடன் பலபலவாஞ்சன்னதங்கள், கூரேதான் குடிகள்படைசேனைதன்னில் கோஷ்டமிட்டு சன்னதங்கள் மிகக்கொண்டாடும், வீரதான்பிராணாயவுட்சாடந்தான் வீரமுடன்தானுரைப்பார் வெகுவாய்தானே. 990

தேனேகேள்ளாடகவி யனேகஞ்சொல்வோர் தாக்கான பரிபாஷைமிகவுஞ்சொல்வார், மானேகேள் சன்னதங்கள் மிகவுண்டாகி மார்க்கமுடன் திரேகமது நடுக்கல்கொண்டு, தேனேகேள்சிதாபாச நிலையில்நின்று நிர்க்கமுடன்வதிதங்கள் மிக்வுரைப்பார், தானேதான் தெய்வமது கொண்டாற்போலே தகமையுடன் பலபிரட்டுபேசுவாரே

பேசுகின்ற வார்த்தைதன்னை மெய்யென்றெண்ணி பேரானதட்சணத்து மாண்பரெல்லாம், காசிபணம்நிதியனைத்தும் மிகவுந்தந்துகருத்துடனே குறிமுறைகள் கேட்டாரப்பா, ஆசுகவிசாத்திரங்கள்பார்த்துமென்ன அறிவுகெட்டமாண்பருக்கு மதியீனந்தன் தேசலவு பூந்துடையாய்போகசீஷர்தெளிவுடனேமிகவுரைப்பேன்கேளுகேளே

கேளேதான் தட்சனத்துமாண்பரெல்லாம் கெவனமுடன் குறிகேட்டுமதியுங்கெட்டு, பாளேதான்சாத்திரத்தை மிகப்பாருமல் பாருலகில் மதிகெட்டகுருடராகி, ஆளேதானறிவழிந்துமானங்கெட்டு வப்பனே வஞ்ஞானவலையிற்சிக்கி, நாமேதான்போகாமல் நமனுக்காளாய் நாட்டினிலே யிருந்தவர்கள் கோடிகாணே. 993

காணவேயெந்தனது சீஷபாலா கருவானபுலிப்பாணி மைந்தாகேளு தோணவேதேசாதிதேசமெல்லாம் துப்புறவாய்குளிகைகொண்டு வடியேன்றானும், நீணவேகாலாங்கி கடாட்சத்தாலே நீதியுடன்சத்தசாகரமுந்தாண்டி, பாணமுடனெழுகடலுஞ்சுற்றிவந்து பாங்கான நிலைதனிலே நின்றிட்டேனே. 994

இட்டேனே அட்டதிசையாலுங்கண்டேன்யெழிலான தட்சணத்துமாண்பர்போலே, கெட்டதொருமாண்பர்களைக்கண்டதில்லை கெடி

யானதட்சணமாம் பதியிலப்பா, திட்டமுடன்வெகுகோடி மாண் பர்தம்மை தீர்க்கமுடன்கண்டேனே தட்சணத்தில், சட்டமுடன் காலாங்கி நாதர்தாமும் தானுரைத்தவண்ணமதுபோல்கண்டேனே.

காண்டேனேயடியேனும் யானுமல்லோ கணமானபோகரேழா யிரத்தை, அண்டர்முனிதேவாதிதேவரெல்லாம் வன்புடனேமனது வந்து களிப்பதற்கும், தண்டபம்போல்வையகத்துசித்துமாண்பர்தரு வான குருக்கள்மனுவேந்தருக்கும், சண்டமாருதம்போலேயிந்த நாலை சாற்றினேன் பெரியோர்கள் சமுசாரிக்கே. 996

சாரிகேள்சமுசாரியானபேர்க்குஞ் சட்டமுடன்சித்துமுனியா னபேர்க்கு, வாரிதிபோல் பெருநூலேழாயிரந்தான்மகத்தான நூல்க ளெல்லா மிதிலடக்கப், மீறியதோர்யின் னூலுக்குற்றநூலாம் மேன் மையுடனகஸ்தியனார்காவியந்தான், வீறியதோர்பன்னீராயிரக்காண் டந்தான் வித்தகனார்பாடிவைத்த நூல்தான்பாரே. 997

பாரேதான்சத்தகாண்டந்தன்னிற்குள்ளே பாங்கானலோகவதி சயங்களெல்லாம், நேரேதானுருவதானகாண்டம் நெடிதானகாண்ட மிது குருநூலாகும், நீரேதான்கடைகாண்டமேழாங்காண்டம் தீர்க் கமுடனின்னவதிசயங்கள்கூறும், சீரேதான்காலாங்கி கடாட்சத்தா லே சிறப்புடனேபாடிவைத்தேன் பெருநூல்தானே. 998

நூலான நூலிதுதான்சத்தகாண்டம் நுணுக்கமுடனிதிலடக் கஞ் சொல்லொண்ணாது பாலானபதினெண்பேர் சொன்ன நூலும் பயிலானவிந்நூலுக்கொள்ளாதப்பா, சேலானநவகோடி ரிஷிகள்தா மூம் செம்மலுடன்கோடிவரை நூலுஞ்செய்தார் மாலான நூலிதுவும் மகிமைமெத்த மகத்தானவின்னூல்போ லில்லைதானே. 999

தானனயெனதையர் காலாங்கிநாதர் தண்மையுடனவர்பாத கடாட்சத்தாலும் தேனனமனோன்மணியாள் கிருபையாலும் தேற்ற முடன் காவியமேழாயிரத்தை, மானனவையகத்தோர் பிழைக்க வென்று மகத்தான்சினபதிமாண்பருக்கு, பானனகாண்டமேழாயிர த்தில் பட்சமுடனிருமூன்று காண்டமுற்றே. 1000

போகர் சத்தகாண்டம்-7000.

ஆருவது காண்டம்.

முற்றுப்பெற்றது

---

௨

கடவுள் துணை.

மஹா மருத்துவம்பொருந்திய

# போக முனிவர்

திருவாய்மலர்ந்தருளிய

# சத்த காண்டம்-எசு.

## ஏழாவது, காண்டம்

### காப்பு.

தானான பிரகாசமானநந்தி
 தண்மையுள்ளமனோன்மணியாள்பாதம்போற்றி
கோனானவேல்முருகர்தாள்பணிந்தேன்
 கொற்றவனே அரிஅயனும்பதந்தான்போற்றி
மானானவகஸ்தியனார்பாதம்போற்றி
 மகத்தானகமலமுனிதாள்பணிந்தேன்
தேனானசதாசிவத்தினடிபணிந்தேன்
 தேற்றமுடன்காலாங்கிபாதங்காப்பே.

காப்பானபதினெண்பேர் முனிவர்தானும் பலபலவாய்ப்பாடிவைத்தார்நூல்கள்பேதம், மூப்பானநூல்களுமே யனேகஞ்சொன்னார் முனையானசித்துமகாரிஷியார்தாமும், வாப்பானபெருநூலிலனந்தஞ் சொன்னார்வளமையுடனின்னூல் போலாருஞ்சொல்லார், தாப்பான நூலிதுதான்சத்தகாண்டம்தண்மையுடன்பாடிவைத்தா ரேழாயிரந்தானே. 2

தானானசததகாண்டமேழாயிரத்தில் தண்மையுள்ள காண்டமிதுயேழாங்காண்டம், கோனானகாலாங்கிகடாட்சத்தாலேகூறினேன் வையகத்துவதிசயங்கேள், தேனானமணிபோலேழாயிரத்தில் தேற்றமுடன் சொல்லிவைத்தே னேழாங்காண்டம், மானானகடைக்காண்டம்நீதிமார்க்கம் மன்னவனேயுந்தமக்காய்ஓதினேனே. 3

ஓதினேன்சீனபதி மாண்பருக்கு வுத்தமனே காண்டமேழாயிரந்தான், நீதியுடன்சன்மார்க்க நிலையுஞ்சொன்னேன் நிஷ்களங்கமானதொருவழியுஞ் சொன்னேன், பாதிமதிசடையணிந்த தம்பிரான்கள் பாருலகில் செய்ததொரு நூலையெல்லாம், ஆதியந்தமுடியுடனே பொருளாராய்ந்து வப்பனே சின்மயத்தின் வழிசொன்னேனே. 4

சொன்னதொரு பொருள்களெல்லா மிதிலடக்கம் சுந்தரனே போகரேழாயிரந்தான், மன்னவர்கள் வையகத்துவாழ்க்கை யெல்லாம்மார்க்கமுட னிதிலடக்கஞ் சொல்லொண்ணாது, தென்னவர்கள் தேவாதிமுனிவர்தாமும் தேற்றமுடன் செய்ததொரு நூலையானும் பன்னவே திரட்டியல்லோ பெருநூலாக பாரினிலே விந்தைவகை சொல்லிட்டேனே. 5

இட்டேனேயிதிகாசப் பொருள்களெல்லாம் யெழிலானபோகரேழாயிரத்தில், சட்டமுடன் பாடியல்லோ நுணுக்கமாக சாங்கமுடன்செய்துவைத்த பெருநூலப்பா, நட்டமது வாராதுயிந்நூலப்பா நலமான வேதையிது கோடிக்கோடும், திட்டமுடன் நாதாக்கள்சொன்னதில்லை தீர்க்கமுடன் சத்தகாண்டம் பண்புதானே. 6

பண்பான வறுவகை காண்டத்துள்ளே பலகோடிவேதை முகமணந்தஞ் சொன்னேன், நண்பானநாதாக்கள் நீதிமார்க்கம் நலமுடனேயாரேனுஞ் சொன்னதில்லை, திண்பானநீதிவழிக் குறியசித்தைத் தீர்க்கமுடன் பாடிவைத்தே னிந்நூலுக்குள், வன்பானபெருநூல்தான்குருநூலாகும் வண்மையுடன் பாடிவைத்தேன் காண்டமாமே.

காண்டமாஞ் சத்தகாண்டமேழாயிரந்தான் காவியங்கள் போலவொருநூலுமில்லை, பாண்டவாள் வையகத்து மாண்பரெல்லாம் பாங்குடனே சித்துவகை முனிவர்வாழ்க்கை, தாண்டவம்போல் குருநூலேழாயிரத்தில் சாற்றினே னறுகாண்டந் தன்னிற்குள்ளே, பூண்டதொரு லோகவதிசயங்களெல்லாம் புகட்டினேன காலாங்கிகடாட்சந்தானே. 8

தானானசத்தகாண்டந் தன்னைப்போலே சாற்றினாரகஸ்தியனார் முனிவர்தானும், கோனானபன்னீராயிந்தானப்பா கொற்றவனே புலஸ்தியருக்குபதேசித்தார், பானானபனிரெண்டு காண்டஞ்சொன்னார் பாலகனே வாயிரத்துக்கொரு காண்டந்தான், தேனானமனோன்மணியாள் கிருபையாலே தேற்றமுடன் பாடிவைத்த நூல்தான்பாரே.

பாரேதானேமூலட்சங் காப்புதன்னை பாலகனேபாடிவைத்தார
னந்தமாக, நேரேதானின்னூலேழாயிரந்தான் நேர்மையுள்ளகாண்ட
மது தன்னைப்போலும், சீரேதா னகஸ்தியனுருண்டுசெய்த சிறப்பா
னபன்னீராயிரத்தைப்போலும், ஆரோதான் சொன்னதுண்டோநூ
லையப்பா வப்பனே யானுமல்லோ வுரைத்திட்டேனே. 10

உரைத்தேனே வெகுநூல்க ளனந்தங்கோடி வுத்தமனே யின்
னூலுக்கொப்பதாமே, கரைத்ததொரு பொருள்களெல்லா மிதிலட
க்கம் காசினியில் கண்டவர்கள் விடுவாரோசொல், நரைதிரையும்வரு
வதில்லை யிந்நூல்கண்டால் நாதாக்கள்தான் முதலோர்நாணுவார்கள்
சுரையடர்ந்த கதைபோலே யெண்ணவேண்டாம் சுந்தரனே குருநூ
லாம் மெய்நூலாமே. 11

நூலான னூலுக்குள் மார்க்கஞ்சொன்னேன் நுட்பமுடன் மார்
க்கமது யென்னவென்றால், பாலானசித்தருக்கு நீதிசொன்னேன்பா
ங்குடனேயனீதவழி விதியுஞ்சொன்னேன், சேலான சன்மார்க்கந்து
ன்மார்க்கந்தான் செப்பினேன் கடைக்காண்ட மேழினுள்ளே,மாலா
னமருத்துவங்கள் சொல்லொண்ணாது மகத்தானநீதிவழிபாடுகாணே

காணவேசத்தகாண்ட மேழினுள்ளே கருவானகடைக்காண்டந்
தன்னுக்குள்ளே, பூணவேசிடிகையென்ற நுணுக்கமப்பா புகட்டினே
ன்புலிப்பாணி மைந்தாகேளு, ஆணவங்கள் தானொடுங்கி மைந்தாநீயு
ம்வப்பனே சித்தாதி முனிவர்க்கெல்லாம், நாணமுடன் முடிவணங்கி
கரங்குவித்து நாற்பாதகமலமதை வணங்குவாயே. 13

வணங்கியே நூலதனைப் பதனம்பண்ணு வகையில்லா கசடருக்
குயீயவேண்டாம், சுணங்கனெனுங் கழுதையப்பா மாண்பர்தாமுஞ்
சுந்தரனே வெகுபேர்க ளிருப்பாருண்டு, கணமுடைய ராட்சதர்கள்
தன்னைப்போலே கருமிகளு மெத்தவுண்டு யீயவேண்டாம், மணங்க
மழும் புண்ணியர்கள் தம்மைத்தேடி மகத்தான னூல்கொடுத்தால்
புனிதமாமே. 14

புனிதமாங் கருமிகட்கு கொடுத்தாயானால் பூபாலகன் மணியே
பாபமெய்தும், கனிவுடைய புண்ணியர்கள் வெகுபேருண்டு காசினி
யிலுன்னை வந்து நூல்கேட்டாலே, இனிதானவார்த்தையது மிகவுங்
கூறியெழிலான நூலுக்குசாபந்தீர்ந்து, தனியாகத்தானழைத்து வுப
தேசித்து தாரணியில் பிழைக்கும்வகை சொல்லுவீரே. 15

சொல்லவென்றால் நாவில்லைப்பாவுமில்லை துரைராஜகாலாங்கி நாதர்தம்மை, புல்லவேயவர்தமது பதாம்புயத்தை போற்றியே யென்னுளும் மனதுவந்து, அல்லதுவிட்டகற்றியன் புகூர்ந்துவப்பனேசதா நிததம் மனதிலுன்னி, வெல்லவேயுபதேச மோதியல்லோ விருப்பமுடன் நூல்கொடுத்தால் புண்ணியமாமே. 16

புண்ணியமாமின்னமொரு மார்க்கங்கேளு புகழான புலிப்பாணி மைந்தாபாரு, மண்ணிலே வெகுகோடி சித்துதாமும் மகத்துவங்கள் கொண்டதொரு புனிதவான்கள், நண்ணியதோர் நூல்களெல்லாமிக வுங்கூறி நலமுடனே மறைத்துவைத்தா ரனேகங்கோடி, உண்மையாய் நூலதனைப்பாடியல்லோவுத்தமனேமறைத்ததிறுலொன் றுங்காணே

ஒன்றான சித்துமுனிரிஷியைப்போலும் ஓகோகோ நாதாக்கள் தன்னைப்போலும், குன்றான நூலதனை மிதவும்பாடி குகைதனிலே மறைத்து வைத்தார் கோடிமாண்பர், வென்றிடவே யகஸ்தியரு மிக வாய்ப்பாடி வெட்டவெளி குகைதனிலே மறைத்துவைத்தார், தென்றிசையில் சித்தர்களுந்தாமுமல்லோ தெளியாமல் மலைமீதிலொளித்தார்தானே. 18

தானானசாத்திரத்தை பாடியல்லோ தன்மையுடன் குகைதனிலேவைத்தாரப்பா, கோனானகும்பமுனி ரிஷியார்தாமும் கூட்டமிட்டுசாத்திரத்தை மறைத்துவைத்தார், மானானகாலாங்கி நாதர்தாமும் மார்க்கமுடன் நூலதனைப்பாடியல்லோ, தேனானசீஷவர்க்க மாண்பருக்குத் தேற்றமுடன் நூல்கொடுத்தார் திண்ணமாமே. 19

## போகர் இமயகிரி வடபாகத்தில் சிங்கம்குட்டி ஈனுவதைக் கண்டது.

திண்ணமா மின்னமொரு மார்க்கம்பாரு தீர்க்கமுடன் புலிப்பாணிமைந்தாகேளு, வண்ணமாமேருவுக்கு வடபாகத்தில் மகத்தான கடலோரங் காட்டகத்தில், நண்ணவேசிங்கமதையானுங்கண்டேன் நாதாக்கள் சித்துமுனியங்குமுண்டு, திண்ணமுடன் குளிகையது கொண்டுமல்லோ தீர்க்கமுடன் வனத்தை யிறங்கினேனே. 20

இறங்கினேன் வடபாகங்கடலோரத்தில் யெழிலான யிருளடைந்த கானகந்தான், உறங்குமே காடிபுலிசிங்கந்தானும் ஓகோகோ

நாதாக்கள் மெத்தவுண்டு, திறமுடைய கரிக்கூட்டஞ் சொல்லொண்ணாது திரளான வடகோடி கானகத்தில், குறைவன்றிவாழுமது மிருகமெல்லாம் கொற்றவனே யிமயகிரிவடபாகந்தானே. 21

தானனமுற்பக்கம் அரிகள்கூட்டம் தாக்கானபிற்பக்கங் கரிகள் கூட்டம், கோனனமேற்பக்கம் பரிகள்கூட்டம் கொற்றவனே கீழ்பக்கம் நரிகள்கூட்டம், தேனனநடுமையற் கானகந்தான் தேவிமனோன்மணியாளுமறியநாடு, மானனபரிதிமதிகாணாநாடு மகத்தான சில்லென்ற காடுதானே. 22

காடான நடுமையங்கானகத்தில் கரடிபுலிசிங்கமதுவாழும்நாடு, தாடாண்மைகொண்டதொரு தழைத்தநாடு தகமையுள்ள கானகந்தான்சித்தர்நாடு, நாடாளும் ராஜர்பதிகண்டதில்லை நலமுடனேதேவரிஷியிருக்கும்நாடு, பாடாண்மைகொண்டதொரு பசுக்கள்நாடு பாரினிலே யாரேனுங் காணார்தாமே. 23

காணாமே ரயவ்வனத்தில் மகிமைதன்னை கதையுரைப்பேன் புலிப்பாணி மன்னுகேளு, தோணுமல்சித்தர்முனி ரிஷிகளுக்கும் தொல்லுலகில் கண்டறியாவதிசயங்கள், நாணாதுசிங்கமென்ற காட்டகத்தைநன்மை யுடன்குளிகை கொண்டு சென்றயானும், வீணாகக்காலமது கழியாமற்றான் விருப்பமுடன் சிலகாலமிருந்திட்டேனே. 24

இட்டேனே நெடுங்காலமடி யேன்றானும் யெழிலானகாலாங்கி கிருபையாலே, திட்டமுடன் குளிகைகொண்டு கானகத்தில் தீர்க்கமுடன் சுற்றிவருங்காலந்தன்னில், பட்டையம்போலாண் சிங்கம்பெண்ணைக்கண்டு பாச்சலுடன் மோகமது வதிகமாகி, சட்டமுடன்கலவிதனில் மிகக்கலந்து சாங்கமுடனிருக்குமது காலந்தானே. 25

காலமாமானுடனே பெண்ணுங்கூடி கல்விதனிலிருக்கின்றநாளுங்கண்டேன், தாலமாம் பன்னிரண்டு வருஷந்தானும் தாக்கான பெண்சிங்கம்வுருவுமாகி, கோலமுடன் பூரணமாங் கெற்பங்கொண்டு கொற்றவனே யீனுகிறகாலமாச்சு, சாலமதுயென்சொல்வேன் மன்னனேகேளு சாங்கமுடனொருவருந்தான் கண்டிலாரே. 26

பெண்சிங்கம் யானைக்கூட்டத்தில் குட்டியீனுவது.

கண்டேனே கானகத்தி லதிசயங்கள் கண்கொள்ளாமகிமையது யென்னசொல்வேன், அண்டர்முனி ராட்சதர்களறியாநாடு யவ்வனத்தில் சிங்கமது கற்பங்கொண்டு, பண்டுபலவஸ்துக்களருந்தியல்லோ

பாங்குடனே கெற்பவேதனையுமாகி, அண்டமுடியாமலது சிங்கந்தானும் அவனிதனில் வேதனைகள் படுகலாச்சே. 27

ஆச்சப்பாவாண்சிங்கந்தானுமல்லோ அரிவையெனும் பெண்சிங்கந் தன்னைக்கண்டு, பாச்சலுடன் யானையதுயிருக்குங்கூட்டம் பாண்மையுடன் தானறிந்து மனதுவந்து,மேச்சலுடன் பெண்சிங்கந் தன்னைக்கூட்டி மேன்மையுடன் கரிக்கூட்டந் தன்னிலங்கே, மாச்சலது வாராமல் சிங்கந்தானும் மன்னவனை சென்றல்லோ நிற்கலாச்சே.

நிற்கவேகரிகூட்டம் முன்னதாக நேரானசிங்கமது பின்னதாக, விற்பனமாய் முதுகொடுத்து நின்றுகொண்டு வீரமுடன் குட்டியது யீன்றபின்பு, சொற்பெரிய குட்டியென்ற சிங்கந்தானும் சுந்தரமேனமத்தகெஜந் தலையிற்பாய்ந்து, உற்பனமாமூளையது உரிந்துமல்லோ வுத்தமனே சிங்கமது யிறங்கும்பாரே. 29

பாரேதான் சிங்கமது யிறங்கும்போது பாங்கான கரிக்கூட்டம் நடுங்கியல்லோ, நேரேதான் தலைவாறுதிசைமாறிதானும் நேர்மையுடன்கானகத்தைச் சென்றுபோகும், சீரேதான்சிங்கமென்ற குட்டிதானும் திறளானகரிக்கூட்டந் தன்னிற்சென்று, வீரேதான் நான்குநாள்யிரையுங்கொண்டு விடுபட்சி காட்டகத்தே வருதுங்காணே. 30

காணவேசிங்கமது பிறவியல்லோ கைலாயநாதருட கடாட்சத்தாலே, தோணவே வையகத்தில் குட்டியீன்று தொல்லுலகில் வாழ்குவது மகிமைமெத்த, ஆணவங்களதிகமுண்டு அரிதனக்கு அவனியிலே ராஜனென்ற மிருகமாச்சு, பூணவேவையகத்தின் மிருகமெல்லாம் புகழானசிங்கத்தில் கீழுமாச்சே. 31

கீழானமிருகமது வனேகமுண்டு கீர்த்தியுள்ளசிங்கமது ராசனப்பா, பாழானகாடுகளி லிருக்குஞ்சிங்கம் பார்த்தவர்க ளாரேனுங் கண்டதுண்டோ, சாழலுடன் காறுறுதன்னிலப்பா சட்டமுடன் விழுந்திறந்த கதைகேட்டார்கள், ஆழானபடுக்களிலே விழுந்திறந்த அதிசயங்கள் வையகத்தில் கண்டார்தாமே. 32

சிங்கத்தினால் சித்தர்கள் மடிந்தது.

தாமானயின்னமொரு மார்க்கம்பாரு தண்மையுள்ள புலிப்பாணிமைந்தாகேளு, கோமான்களறிந்ததில்லை குவலயத்தில் கொற்றவனேயின்னமொரு மகிமைசொல்வேன், சாமானியமான தொருசித்தரப்பா சட்டமுடனன்பதும்பேர் கூட்டமாக, அமானமாகவல்லோகூட்டங்கூடி அடவானகாட்டகத்தில் வந்திட்டாரே. 33

வந்தவொரு வழிதனிலே மார்க்கங்கண்டு வண்மையுடன் சிங்க மது கர்ச்சித்தல்லோ, சிந்தனையாய் மாண்பருடைசைதன்னை சீற லுடன் தானறிந்து கோபமிஞ்சி, தொந்தரவுசெய்வதற்கு மனதுவந்து தோற்றமுடன் பாச்சலதுவதிகமாகி, விந்தையுடன் சிங்கமதுவேவு கொண்ட வீரியத்தைக் கண்டார்கள் சித்துதாமே. 34

சித்தர்கள் சிங்கத்தைக்கண்டு கல்லாலமரத்தின்மே

லேறிக் கொண்டது.

சித்தானசித்துமுனி ரிஷிகள்தாமும் சீறலுடன்வருகின்ற சிங் கந்தன்னை, புத்தியுள்ளசித்துமுனி பார்த்துவேங்கி புகழானவன்பது பேர் கூட்டத்தோடும், பத்தியுடன் கல்லாலின் மரத்தின்மேலே பரி வுடனே யேறியல்லோ பார்க்கும்போது, சுததியெங்கும் பார்த்துமல் லோ சிங்கந்தானும் சுந்தரனாரன்பதுபேர் காணலாச்சே. 35

காணவேசிங்கமது சித்தர்தம்மை கனதானவீரியத்தால் கோப மிஞ்சி, தோணவே சிங்கமதுயேதுசெய்யும் தோற்றுமல் கோபமது வதிகங்கொண்டு, பாணம்போல் சிறுநீரைபூமிதன்னில் பள்ளமதாய் ச்செய்துமல்லோ மண்ணைத்தானும், பூணவேமுதநிரத்தில் வாலைவி ட்டு புகழுடனே மண்ணதனைப் பிரட்டலாச்சே. 36

பிரட்டியேவால்தனிலே மண்ணையேந்தி பின்பக்க மாகவல்லோ திரும்பியேதான், வரட்டியேவாலதனைத் தூக்கியேதான் வளமையுட ன்மண்ணதனை நோக்கியல்லோ, துரட்டியேவால்சுற்றியெறியும்போது துப்புரவாய் மண்ணதனை மேலேநோக்கி, மிரட்டியே தானெறிய மண் தானப்பா மீறியேசித்தரின்மேல் விழுகலாச்சே. 37

விழுகவேநாற்பத்தி யெண்மர்பேரில் விஷமானமண்ணதுவும்மே லேபட்டு, பழுதுபடாமேனியதில் விஷமுங்கண்டு பாங்குடனே நித் திரைகள் வந்தாற்போலே, கழுகியேசிங்கமது சென்றபின்பு நடுக்கமு டன்திரேகமது ஒடுக்கமாகி, முழுதுமே நாற்பத்தியெண்மர் பேரும் மூதுலக மண்மீதில் விழுந்திட்டாரே. 38

மண்ணான பூமிதனில் விழுந்தபோது மயக்கமுடன் கண்ணுறங் கியிருந்தாற்போலும், திண்ணமுடன் மடிந்தார்கள் சித்தரெல்லாம் தீர்க்கமுடன் வையகத்தைக் கண்டதில்லை, எண்ணியே மரத்தின்மே லிருந்தபேர்கள் யெழிலானயிருவருமே யிறங்கியேபின், குண்ணியே முகம்வாடி மனமயர்ந்து குவலயத்தில் மடிந்தவரைக் கண்டார்தாமே

தானானமண்படா திரண்டுபேருஞ் சட்டமுடன் மரம்விட்டுக் கீழிறங்கி, கோனானசிங்கமது சென்றபின்பு கொற்றவனேயிருவருமே

யறிந்துகொண்டு, தேஜனமனேன்மணியை மனதிலுன்னி தெளிவுடனே புத்தியதுமிகவுமாகி பானுனசித்துமுனி யிருவர்தானும் பரிட்சிக்க எண்ணமது கொண்டிட்டாரே. 40

கொண்டுமே மரத்தடியை விட்டிறங்கி கொற்றவர்கள் சிங்கத்தின் பள்ளங்கண்டு, விண்டிடவே மூத்திரமாம் பள்ளங்கண்டு விருப்பமுடன் சோதனைகள் செய்யவெண்ணி, கண்டிடவேகரமதனி லிருந்தசெம்பை கட்டமுகர்தானெடுத்து மண்ணிற்போட,கொண்டதொருசெம்பதுவுதங்கமாச்சு கொற்றவனே யதின்விஷபத்தை யறிந்தாபாரே. 41

பாரேதான் விஷமேறி பழுக்கலாச்சு பாங்கான அரியினது மூத்திரந்தான், நேரேதான் மண்ணதினில் விஷமுமாகி நேர்மையுடன் சித்தரின்மேல் படுகலாச்சு, சீரேதான்தேகமது புண்ணுமாகி தீர்க்கமுடன் தானிறந்தார் சித்தரெல்லாம், ஆரேதான் கண்டவர்களுலகில் லில்லையப்பனே சித்தர்முனி கண்டார்தானே. 42

கண்டாரே சித்துமுனி ரிஷியார்தாமும் கானகத்தில் நடந்ததொருவதிசயத்தை, தண்டம்போல் தான்கண்டு பிரமித்தேதங்கி தாரணியில் குளிகைகொண்டு சீனந்தன்னில், வண்ணமுடன் சீனபதிமாண்பருக்கு வளமானவதிசயத்தை யெடுத்துக்கூற,திண்ணமுடன்மனதுவந்து மனங்களித்து தீர்க்கமுடன் சீனபதிக்கேகினாரே. 43

போகர்சீனபதிக்கு வந்தது.

ஏகவேயின்னமொரு மார்க்கங்கேளு யெழிலான புலிப்பாணிமணியேபாரு, சாகமுடன் நெடுங்காலம் வடமேருதன்னில் சட்டமுடன்நானிருந்தேன் சிலதுகாலம், பாகமுடன் சிங்கத்தின திசயத்தை பாரினிலே நாதாக்கள் கண்டதில்லை, ஏவகமுடன் யான்கண்டு சீனத்தார்க்கு விருப்பமுட னுபதேசஞ்செய்திட்டேனே. 44

செய்தேனே வடமேருதனனிலப்பா சிறப்பானசிங்கத்தின் மகிமைதன்னை, வெய்யபுகழ் சீனபதிமாண்பருக்கு விருப்பமுட னுபதேசஞ்செய்தேன்யானும், பையவே யான்கொண்ட காயகற்பம்பட்சமுடனவர்களுக்குக் கொடுத்தேன்பாரு, துய்யவேசீனபதி மாண்பரெல்லாந் துப்புரவாய் காயாதிகொண்டார் பாரே. 45

பாரேதான் காயாதிகொண்டபின்பு பாங்கானசீனபதிமாண்பர்தம்மில், நேரேதான் சிலதுபேர் ஞானவானாய் நேர்மையுடன் குளிகையது பூண்டுகொண்டு, தீரேதான்வடமேருகானகத்தில் தீர்க்கமுடன் தான்சென்று காணுதற்கு, வீரேதான் குளிகையது பூண்டுகொண்டு விருப்பமுடன் வடமேருக்கேகினாரே. 46

ஏகினார்சிங்கமென்றகாட்டகத்தில் எழிலானநாதாக்கள்தன்னை ப்போலே, பாகமுடன்காயாதிகொண்டுமல்லோ பக்குவமாய்க் குளிகைவிட்டுக்கானகத்தில், சாகமுடன்சிங்கமதைக் கண்டாரங்கே சட்டமுடன் சிங்கமது கொர்ச்சித்ததான், வேகமுடன்சேனபதிமாண்பர் தம்மை வீறுடனே கொல்லுதற்கு வருகலாச்சே. 47

வருகவேவசித்துமுனி தம்மைப்போலே வாகானசேனபதி மாண்பரெல்லாம், பெருகவே கல்லாலின்மரத்தின்மேலே பேரானமுன்னிருந்தசித்துபோலே, சொரூபமதைக்கண்டவுடன் மரத்தின்பேரில்சுந்தரனேபார்த்துமல்லோ திகைத்துநின்று, அருவமென்ன சிங்கமதைக் கண்டுமல்லோ வப்பனைபிரமமித்து நின்றிட்டாரே. 48

நின்றுமேவசித்துமுனி ரிஷியார்தாமும் சேரானசிங்கமது கண்டுமேதான், குன்றிடவே தன்மனதிலுறுதிகொண்டு கூரான சிங்கமது யேதுசெய்யும், வென்றிடவேமுன்போலே மண்ணைவாரி விட்டெறிய சேனபதிமாண்பரெல்லாம், தன்றிடவேகல்லாலின் மரத்தின்பேரில் சட்டமுடன்மேலிருந்து விழுந்தார்தாமே. 49

தாமானசேனபதி மாண்பரெல்லாம் தகமையுடன் மண்ணதனில் விழுந்துமேதான், பூமான்கள்விஷமதுவுஞ் சகியாமற்றான் புகழான தேகமதுசிலிர்த்துமல்லோ, காமானபஞ்சேந்திரியமுள்ளடங்கி நமனுக்கு ஆளாகிபொறிகலங்கி, வேமானமாகவல்லோ மண்ணின்பேரில் விழுந்துமே பிரண்டிருக்கக் கண்டிட்டேனே. 50

## போகர் சேனபதிமாண்பருக்கு சிங்கத்தின்விஷத்தை முறித்து உயிர்கொடுத்தல்.

கண்டேனேசேனபதிமாண்பர்தம்மை கடுகெனவேவிஷமேறி யிருந்தபேர்க்கு, தண்டகம்போல் காயாதிமுறிப்புயானும்தகைமையுடன் தான்கொடுத்து யெழுப்பியல்லோ, மண்டலங்களுள்ளளவும்சிங்ககற பம்மடியாமலிருப்பதற்கு மனதுவந்து, விண்டவேயான்கொடுத்து வுயிர்கொடுத்தேன் விட்டகுறை யிருந்ததினு லெழுந்தார்பாரே

பாரேதான் சேனபதிமாண்பருக்கு பாங்கானகற்பமுறை யானுஞ்சொல்லி, நேரேதான்பிழைப்பதற்குவழியுஞ்சொன்னேன்நேர்மையுடன்கருவாளி கண்டுகொள்வார், சீரேதான்சித்தர்முனி மார்க்கந்தன்னை சிறப்புடனே யானுரைத்தேன்மாண்பருக்கு, வேரேதான் மற்றோரால்சொல்லப்போமோ வேதாந்தகாலாங்கி கடாட்சந்தானே.

தானானசேனபதி மாண்பரெல்லாந் தகமையுடன் தானெழுந்து முடிவணங்கி, கோனானகாலாங்கி கடாட்சத்தாலே கொற்றவனார் சேனபதிமாண்பரெல்லாம், பானானவிட்டகுறை யிருந்துமல்லோபாங்குடனேயென்னாலே யெழுப்பப்பட்டார், மானானமகதேவர்கடாட்சத்தாலேமறைபொருளை யானுமல்லோ வுணர்ந்திட்டேனே. 53

போகர் உச்சிலிங்கத்தேளைக் கண்டது.

உணர்ந்தேனே யின்னமொருமார்க்கம்பாரு வுத்தமனே புலிப்பாணிமைந்தாகேளு, மணங்கமழும்வடகோடி கானகத்தில்மார்க்கமுடன்மகமேருபக்கந்தன்னை, கணமுடனேயனேகவித தெய்வந்தானும் காட்டகத்தேவாசமது செய்துகொண்டு, பிணைமதனையாபூதி கொள்ளுங்காளிபேரான காட்டகத்தை கண்டேன்தானே. 54

தானேகேளண்டமுனியறியாக்காடு தகமையுள்ளவனந்தனிலே திரிந்துயானும், மானேகேள்மகமேரு சாரல்பக்கம் மகத்தான குண்ணுகளுமலையுமுண்டு, தேனானமலைதனிலே வாசஞ்செய்யும் தேளதுவுந்திரள்கூட்டஞ் சொல்லொண்ணாது, கோனானதேளதுவின் கூட்டந்தன்னைதேற்றமுடன் கோடிவரையான்பார்த்தேனே 55

பார்த்தேனேசெந்தேளாங்கோடிவர்க்கம் சாங்கமுடன் யுகம்பிரித்துநடக்கும்போது, தீர்த்தலிங்கந்தனிலுதித்த செந்தேளப்பா தீரமுடன்கோடிதளம் வருகும்போது, ஆர்த்தியுடன்மேலேறி வருகுந்தேளாம் வப்பனேவுச்சிலிங்கத்தேளேயாகும், மூர்த்தியுடன் மும்மூர்த்தியானபேரும் மூதுலகில்நடுங்குவது திண்ணமாமே. 56

திண்ணமாமுச்சிலிங்கந் தேள்தானப்பா தீர்க்கமுடன்காட்டகத்தேயிருக்கக்கண்டேன், வண்ணமுடன்மலைசாரல் காளிகோயில்வளமானதேவதாஸ்தலமுங்கண்டேன், எண்ணரியகோயிலது மூலஸ்தானம் யெழிலாகவாள்நுழைய விடமுமுண்டு, கண்ணமுடன் காளிதனைக்காணவென்றால் சாங்கமுடன் சுரங்கம்வழி சொல்வார்பாரே.

பாரேதான்தேவதாஸ்தலத்துக்குள்ளே பாங்கான வழியதுவுமூலஸ்தானம், நேரேதான்காளிதனைக்காணவென்றால்நேர்மையுடன்மார்பாலேநகர்ந்துமல்லோ, தீரேதானெண்சானு விடமுந்தாண்டி தீர்க்கமுடன் காளிதனைக்காணலாகும், கூரேதானதற்கப்பால் காளிவாசம்கொற்றவனே தானிருக்கக்காணலாமே. 58

சுரங்கத்தில் உச்சிலிங்கத்தேளிருப்பது.

காணலாம்வுச்சிலிங்கத்தேள்தானப்பா கடியதொருசுரங்கமதில் வாசஞ்செய்து, பூணவேநெடுங்காலம் வாசஞ்செய்து பொங்கமுடனி

ருக்குமந்தகாலந்தன்னில், நீணவேயவ்விடத்தில் கரிக்கூட்டங்கள்நீதி யுடன்சொல்லுவதற்குலக்கோயில்லை, ஆனைவங்கள்மிஞ்சியல்லோ யானைக்கூட்டம் வப்பனைகணக்குண்டோ சொல்லொண்ணாதே. 59

யானை கோனானைத் துறத்துவது.

ஒண்ணாதுகாட்டகத்தே கோனனதானும் வுத்தமனே மாடாடு மேய்க்கும்ஸ்தானம், அண்ணார்ந்துபார்ப்பதற்கு முடிகொள்ளாது வப்பனைபசுக்கூட்டம் மெத்தவுண்டு, கண்ணாலேயானையது கோனன் றன்னைகடைநோக்கிப் பார்த்தல்லோசீறலாகி, மண்ணோடே தும்பிக் கையாற்புரண்டி மகத்தானகோனானைத் துறத்தலாச்சே. 60

ஆச்சப்பாகாரியல்லோ கோனானைத்தான் வப்பனே தூரத்துகின் றவேளைதன்னில், பாச்சலுடன்கோனனும் ஓட்டங்கொண்டுபதுங்கி யேசெல்வதற்கு காளிகோயில், மூச்சடிங்கியோடியல்லோ தேவஸ்தா னம் மூனையாளிகாளிபதுமூலஸ்தானம், மாச்சலதுவருவதற்கு முன் னதாக மகத்தானசுரங்கவழிச் சென்றான்தானே. 61

சென்றாரேகோனனும் காளியக்கல் செம்மலுடன் பதுங்கியல் லோமூற்புறத்தில், நின்றாரேகோனனும் வுடல்நடுங்கிநீதியுடன்காளி புறம்தன்னில்நிற்க, குன்றேறிவாழுகின்ற யானையப்பாகொற்றவனை சுரங்கம்வழிவருகலாச்சு, வென்றிடவேயானையது தும்பிக்கையால்வீ ரமுடன்சுரங்கமது நுழையலாச்சே. 62

நுழையவேசுரங்கத்தின்வழியிலப்பா நுண்மையுடன் தும்பிக் கைவிட்டுமல்லோ, குழையவேதேகமது செல்லாமற்றான் கொற்றவ னேயானையதுநின்றுகொண்டு, தழைமேய்க்குங்கோனானை தும்பிக்கை யால்தட்டாமல் நாற்புறமும்தடவும்போது, நுழையவே கதிதனக்கு யிடமுமில்லை நுட்பமுடன்யிடையூறு நேரலாச்சே. 63

ஆச்சுதே தும்பிக்கையாலேதானும் வப்பனேகோனானைத் தேடும் போது, மூச்சடங்கித்தானிருந்து கோனன்றானும் மூனையான காளி யின்மேல் சிந்தையாகி, மாச்சலதுவாராமலிருந்துகொண்டான் மகத் தானயானையுந்தன் தும்பிதன்னை, வீச்சலுடன் வுச்சிலிங்கத்தேள்தா னப்பா வீரமுடன்கொட்டிடவே சத்தமாமே. 64

சத்தமதுகொண்டிடவே யானைதானும் சதுரானமலைதனிலேகே ட்கும்போது, முத்திபெறஞ்சித்தர்களின் கூட்டத்தார்கள் மூனையா னசத்தமதைக்கேட்டுமேதான், புத்தியுடன் யானையது தன்னையல் லோபுகழானவுச்சிலிங்கத்தேள்தானப்பா, வெத்தியுடன் கொட்டிய தோர் தேள்தானென்று வீரமுடன்சித்தர்களு மறிந்திட்டாரே.

அறிந்தாரேவுச்சிலிங்கெத் தேள்தானப்பா வப்பனேகரிதனேயே கொட்டிற்றென்று, செறிந்துமேமலேதனேயேவிட்டிறங்கி செம்மலுடன்யானேயதுபக்கல்வந்தார், குளியானயானேயதுவிஷமுமேறி கொப்பெனவேநெருப்பதுபோ லெறியுதங்கே, முறியுடனேதந்தமெல்லாம் பற்றியல்லோ முனேயானகொழுந்துவிட்டு யெரியலாச்சே. 66

எரிந்துமேபிரிதிவென்ற சாம்பலாச்சு யெழிலானயானேயதுமடிந்துபோச்சு, சொரிந்ததொருசாம்பல்தன்னே சித்தர்கண்டுசோராமல வரவர்கள்பங்குவீதம், புரிந்துமேபங்கதுவும் பகரும்போது புகழான கோஞனுஞ்சுரங்கத்தண்டே, வரிந்துமேகோஞனே சித்தர்கண்டுவகையுடனே வளப்பமதைக் கேட்டிட்டாரே. 67

கோஞன்மீதில் இரக்கம்வைத்து சித்தர்கள் பங்குகொடுத்தது.

கேட்டவுடன்கோஞனும் மனநடுல்கிகெவனமுடன் சித்தர்கட்குகூறலுற்றான், வாட்டமுடன் மாடாடுமேய்க்கும்போது வளமான யானேயதுயென்னேக்கண்டு, தாட்டிகமாய்ச்சீரலது மிகவுண்டாகிசட்டமுடனெந்தனேயுந் துறத்தலாச்சு, கோட்டமுடன்யானேயதுவருகும்போது நொப்பெனலே யான்பயந்து ஓடினேனே. 68

ஓடினேன்தங்குதற்குயிடமில்லாமல் ஓகோகோ நாதாக்கள் முனிவரேகேள், தேடியேகாளிபது தேவஸ்தானம்தேற்றமுடன் யான் கண்டுமனதுவந்து, வாடியேசுரங்கமது வழியிற்சென்றுமகத்தானகாளியின்றன்பக்கல்நின்றேன், நீடியேயானேயது யெந்தனேத்தான் நிஷ்களங்கமாகமல்லோ தேடலாச்சே 69

ஆச்சையாசித்துமுனி ரிஷியாரேகேள் ஆங்காரமுள்ள தொருயானேதானும், மூச்சடங்கித்தும்பிக்கை தன்னிஞலேமுனேயானசுரங்கத்தின்வழியிலுள்ளே, பாச்சுஉடன்தும்பிக்கைவிட்டபோதுபாழானசுரங்கமதில் மகிமையேதோ, கூச்சலுடன்வீறிட்டு யெறிந்துமேதான் கொப்பெனவே பிரதிவென்ற சாம்பலாச்சே. 70

சாம்பலாய்ப்போனதொரு சேதிகண்டு சட்டமுடன்சுரங்கமதுவுள்ளிருந்து, தீம்புகளும்நேராது யென்றுசொல்லி தீர்க்கமுடன்வெளியரங்கம்வந்தேனென்றான், வீம்புடையகோஞனின் வார்த்தைதன்னேவிருப்பமுடன் சித்தர்முனிகேட்டுவந்து, நாமிவனுக்கோருதவிசெய்யவென்று நலமுடனேசித்தரெல்லாம் நினேத்திட்டாரே. 71

நினேத்துமேவுச்சிலிங்கத்தேளிஞலேநிஷ்களங்கமானதொருதிரவியங்கள், சுனேபோல ஏமமென்ற தங்கந்தானும் துப்புரவாய்நந்தம

க்குவாய்ந்ததென்று, சுனையானகோனனால் வந்தபாக்கியம் காசினியி
ல்சதகோடி சொல்லொண்ணாது, பணையளவுபாக்கியமு மிலனலாச்சு
பட்சமுடன் சித்தர்முனி யெண்ணினாரே. 72

எண்ணினபெசித்தர்முனி மனதுவந்து யெழிலானகோனனைத்தா
னழைத்து, பண்ணவே யேமமென்ற வித்தைதன்னை பட்சமுடனிவ
னுக்கோர்பாகமீய்ந்து, வண்ணமுடன் செய்பாகங்கைபாகங்கள் வள
மையுடன் காண்பித்து விதியுஞ்சொல்லி, சுண்ணமென்ற சாம்பல்
தனையோர்பாகந்தான் சுத்தமுடன் கைகொடுத்துப்போ வென்றாரே.

போமென்று சொல்லியல்லோ முனிவர்தானும் பொங்கமுடன்
கோனனுக்குறுதிகூறி, நாமென்ற காலாங்கிவாக்குபோலே நலமுட
னே ஞானோபதேசஞ்செய்து, தாமென்ற பிரிதிவாஞ் சாம்பல்தன்னை
சட்டமுடன் தான்கொடுத்து மதியுஞ்சொல்லி, வேமென்றகாட்டக
த்தே சித்தர்தாமும் வேகமுடன் குகைதனிலே சென்றிட்டாரே.

சென்றவுடன் கோனனுஞ்சாம்பல்தன்னை செம்மனுடனவர்பதி
க்குக் கொண்டுசென்று, பொன்னான மாற்றதுவுஞ் செம்பிலேற புக
ழான செம்பதுவுந்தங்கமாச்சு, மன்னவனைப்போலாகக் கோனன்
தாமும் மகத்தவர் சித்தர்முனி தம்மைப்போலும், தென்னகரி ராம
ருடசெல்வம்போலும் திரளானகோகிவரை பார்த்திட்டானே. 75

பார்த்தானே சித்தருட மகிமைதன்னால் பாங்கான யேமமென்
றவேதைதன்னை, சீர்த்தியுடன் முறைசெய்த தபோபலத்தால் சீர்
பெற்றான் கோனனுஞ்சித்துதம்மால், பேர்பெற்றான் கோனனுங்கா
ட்டகத்தில் பேருலகில் வீட்டுகுறையிருந்ததன்னால், தார்வேந்தர்
மெச்சிடவே தரணிதன்னில் தாமுமொரு சிவயோகி போலானானே.

போகர் சதுரகிரிவதிசயத்தை புலிப்பாணிக்கு கூறல்.

ஆனேனயின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் வப்பனே புலிப்பா
ணிபுத்திவானே, கோனனகதையுரைத்தேன் மகிமையல்ல கொற்ற
வனே யின்னமொரு மகிமைசொல்வேன், தேனனதேவி மனோன்ம
ணியாள்பாதம், தோற்றமுடன் யான்வணங்கி காதைசொல்வேன்,
பானுகாலாங்கிநாதர்பாதம் பட்சமுடன்யான்வணங்கிபகருவேனே.

பகருவேன் புலிப்பாணி மன்னாகேளீர் பாருலகில் குளிகைகொ
ண்டுசித்திபெயதான், நிகாமுடன் வையகத்து வதிசயத்தை நீதியுடன்
யான்கண்டு மலையிற்றேறடி, சிகாமது சதுரகிரி மலையிலப்பா சிறப்புட
னேயானிறங்கி யிருக்குங்காலம், நிகாமுடன் கிரிதனையே சுத்தியல்
லோ நீடூழிகாலம்வரை திரிந்திட்டேனே. 78

### பனையளவுசித்தரை போகர்கண்டது.

திரிந்துமேமலையோரந்தன்னிற்சென்று தீர்க்கமுடன் யான்காணும்வேளைதன்னில், புரிந்துமே சிகரமதுகிரியில் நின்று புகழான பனையளவுசித்துதாமும், தெரிந்துமேமலையைவிட்டுக் கீழிறங்கிசிறப்புடனேமாண்பர்களைக் காணும்வண்ணம், செரிந்துமேமகிமையதுகோடியுண்டு தேசமதில்விதியுள்ளான் காண்பார்பாரே. 79

### சதுரகிரிசித்தர் பொதிமாட்டுக்காரரை புகயிலை கேட்டது.

பாரேதானின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் பாலகனேபுலிப்பாணிமன்னுகேளு,ஆரோதான்பொதிமாட்டுக்காரரப்பா ஆயிரம்பேர் ஒருகூட்டமாகக்கூடி, தேரோடும்பாவனைபோல் மாண்பரெல்லாம் தேற்றமுடன் மலையோரஞ்செல்லும்போது, சீரோடும்புகையிலையின் பொதிகைதன்னை சிறப்பானசித்துமுனி கண்டிட்டாரே. 80

கண்டாரேபுகயிலையின் வாசந்தன்னை பாங்கானபனையளவு சித்துதானும், கொண்டதொரு புகையிலையெண்ணமப்பா கொற்றவனே மயக்கமது மிகவுண்டாகி, எண்ணமுடன் புகையிலையின்கற்கந் தன்னை ஏற்றமுடன்புகைபிடிக்க மனதயர்ந்து, வண்ணமுடன் மலையைவிட்டுக்கீழிறங்கி வளமுடனேவருவதற்கு எண்ணினாரே. 81

எண்ணியேசித்துமுனி ரிஷியார்தாமும் யெழிலானகிரியைவிட்டுயிறங்கும்போது, நிண்ணதொருபனமரம்போல் தோற்றமாச்சுநிஷ்களங்கமாகவல்லோ யிறங்கும்போது, தண்ணமுடன்மேற்பதியை விட்டுமல்லோ தாழவேபடிபடியாய் இறங்கும்போது, புண்ணியனார் சித்துமுனிரிஷியார்தாமும் புகழுடனே யிறங்கிவரக் குறைவானோர்.

குறைவானரோமமென்ற காடிபோலும் கொத்தவனே சித்துமுனிருபங்கண்டார், திரையானபொதிமாட்டுக்காரரெல்லாம் தீர்க்கமுடன்சித்துமுனியிறங்கும்நேர்மை, மறைவாகவாள்ரூபங் குறைந்துகாணும் மகத்தானரோமமது தெரியவில்லை, முறையானமருத்துவத்தையெண்ணமற்றான் மூர்க்கமுடன்சித்துதமை வசனிப்பாரே.

வசனிக்கபொதிமாட்டுக்காரரெல்லாம் வளமையுடன் ஒருவருக்கொருவமைகூறி, நிச்முடையபனையளவுசித்தும்போலும் நிதியுடன் சித்துதமைமதியாமற்றான், புசமுடையதேவாதி சித்துதம்மை புகழானமருத்துவங்களெண்ணமற்றான், கசம்போன்ற ஆயிரம்பேர்மாண்பரெல்லாங்கட்டாக ஒருவருக்கோர்பேசுவாரே. 84

பேசுவார்மலையைவிட்டுயிறங்குஞ்சித்தை பேறான மருத்துவங்களறியாமற்றான், காசுபணமில்லாதசித்தரென்றும் கருவானசதுரகிரி

யிருக்குமாண்பன், வீசுபுகழ்மகுத்துவங்களில்லாரென்றும் வீரமுட ஞெருவருக்கோருகந்துபேசி, ஆசுகவிபோலாக வார்த்தைகூறி வப்ப னேசம்வாதம் செய்வார்தனே. 85

தானுனபொதிமாட்டுக்காரரெல்லாம் தகமையுடன் ஒருவருக் கோர்வாதுகூறி, கோனுனகுருவென்று மதியாமற்றுன் கொற்றவர்ந குப்பலதுமிகவுங்கூடி, கோனுனபுகையிலையின் பொதிசைதன்னைதே ற்றமுடன்தானிறக்கியமுதுகொள்ள, மானுனசாவடியாங்கிரியோரந் தான் மகத்தான அமுதுகொள்ள நண்ணுவாரே. 86

நண்ணியேயேகாந்தகூட்டந்தன்னில் நலமுடனேதானிருக்கும் வேளையப்பா, திண்ணமுடன்கிரிதனிலை யிருந்தசித்து தீர்க்கமுடன் மாண்பருடகூட்டந்தன்னில், தண்மையாய்பொதிமாட்டுக்காரர் தம் மைதகமையுடன்சித்துமுனி யருகிற்சென்று, உண்மைவே புகையிலை யின்கற்பமப்பா வுத்தமனேயெனக்கருளு மென்றிட்டாரே. 87

என்றுமேயேதுரைத்தார் முனிவர்தாமும் யெழிலானமாண்பர் களின்முகத்தைநோக்கி, குன்றும்மேல்சித்துமுனியொருவருண்டு குவ லயத்திலொருநாளும் வருவதில்லை, இன்றுமுதல்காற்றினது வாடை யாலே யெழிலானபுகையிலையின் வாசமப்பா, வென்றிடவேயவர்தம க்குகாணலாச்சு விட்டகுறையிருந்ததனுல் கிடைக்கலாச்சே 88

ஆச்சப்பாபொதிமாட்டுக்காரர்பாலாவப்பனேயெந்தனுக்குமன துவந்து, மூச்சடங்கித்தானிருக்குஞ் சித்துதானும் முனையானவனத் துரிஷிமுனிவருக்கு, பாச்சலென்றபுகையிலையின் கற்பமப்பா பட்ச முடன்நீரவர்க்குத் தருவீரானுல், மாச்சலென்றவினையகலுமுந்தமக் குமகயோகபுண்ணியமது கிட்டும்பாரே. 89

பொதிமாட்டுக்காரர்கள் சித்தர்பெருமை யறியாமல்

பகடிசெய்யல்.

பாரேதானென்றலுமே யோகிதானும்பாங்குடனே சித்துமுனி நாதருக்கு, சீரேதான்புகையிலையின்கற்பந்தானும் சிறப்புடனேயாங் களதுகொடுப்போமானுல், நேரேதானும்மாலே மகிமையென்னநேர் மையுடனெந்தமக்குக் கூறுமென்றுர், தீரேதான்சித்துமுனி ரிஷியா ர்தாமும்சிறப்புடனே மனதுவந்து கூறுவாரே. 90

கூறுவார்வாய்திறந்துமுனியார்தாமும்கொப்பெனவேபொதிமா ட்டுக்காரருக்கு, தேறுதலாய்வார்த்தையதுகூறும்போது தேற்றமுட னதிலொருவன் தானெழுந்து, மாறுதலாய்சித்துமுனி தம்மையப்பா

ர்த்து மகத்தானேரிஷிபாரே பண்பாய்க்கேளும், ஆறுபுடைசூழ்ந்திரு
க்கும்நதியோரத்தில் அசோகமென்றவிருட்சமது விழுகலாச்சே.

சித்துமுனிசாய்ந்த அசோகமரத்தை நேராய்நிறுத்தல்.

விழுந்ததொருஅசோகமென்ற விருட்சந்தன்னைவீறுடனே நிமி
ரவதுசெய்வீரானால், பழுதுபடாத்திருமேனி தன்றனக்குபட்சமுட
ன்கெற்பமதுதருவோம்நாதா, வழுதுணையாங் கற்பமது கொண்ட
போது மகத்தானசித்துமுனியெங்களுக்கு, முழுதுமே புகையிலையி
ன்கற்பந்தன்னை முளையாகயாங்கொடுப்போம் காணீர்தானே. 92

காணவேமாண்பரெல்லாங் கூறும்போது கருவானசித்துமுனிரி
ஷியார்தாமும், தோணவேயவர்களுக்கு பிரமைதோன்ற துப்புரவா
ய்சித்துமுனிநாதரல்லோ, வேணதொருகாயாதி கொண்டறிந்து வேக
முடன்சோகமென்ற விருட்சந்தன்னை, பூணவேதானோக்கிப்பார்த்து
மல்லோ புகழானவிருட்சமதை நிமிர்த்தினாரே. 93

நிமிர்த்தவேவிருட்சமதுதானெழுந்து நீதியுடனிலையூன்றிநிற்கு
ம்போது, சமர்த்துள்ளசித்துமுனி தம்மைக்கண்டுதாரணியில்மகிமை
பெரிதுமல்லோ, கமர்போன்றகானகத்திலிருக்கும்நல்லாம் கடிதான ம
லைக்கல்லைத்தன்னைத்தானும், சுமந்துமேயெந்தனிடங்கொண்டுவந்து
சுந்தரரேகொடுத்தாலே நம்புவோமே. 94

நம்புவோமென்றல்லோ மாண்பரெல்லாம்நயமுடனேவார்த்தை
யதுமனதுவந்து, வம்புடனேசித்துமுனி தம்மைக்கண்டுவளமுடனே
வார்த்தையதுகூறும்போது, தெம்புடனேகுன்றுமலை தன்னைநோக்
கிதீரமுடன்பொதிமாட்டுக்காரர்முன்னேகுப்பல்தனில்முண்ணதனை
யெடுத்துமல்லோ கொப்பெனவேகொண்டல்லோ போட்டிட்டாரே.

போட்டாரேசித்துமுனிரிஷியார்தாமும் பொங்கமுடன்கொண்
டுவந்துமாண்பர்முன்னே, நீட்டமுடன்முண்ணதனைக் கொண்டுவந்த
நிலையானவித்தையது மகிமையல்லோ, வாட்டமுடன் யின்னமொரு
மார்க்கஞ்செய்தால் மகத்தானமகிமையென்று நம்பியல்லோ, கூட்ட
முடனுந்தமக்குப்பணிகள்செய்து கொப்பெனவே சீஷர்களா யிருப்
போம்தானே. 96

தானானவார்த்தையதுகேட்டபோது தண்மையுடன் சிவஞான
சித்துதாமும், கோனானபொதிமாட்டுக்காரர்தம்மை கொப்பெனவே
மகிமையதுசொன்னவேண்டும், தேனானமகிமையது வேண்டுமானால்
தேற்றமுடன்சித்தொளிவுஞ்செய்யக்கூடும், மானானமகதேவர் கடா
ட்சத்தாலே மார்க்கமுடன்மகிமையது வதிதமுண்டே. 97

பொதிமாட்டுக்காரர் சித்துவைமழை வருஷிக்கச்சொன்னது.

தருவேனென்று சித்துமுனிகூறும்போது தகமையுள்ள பொதிமாட்டுக்காரர்தாமும், குருவானசித்துமுனி ரிஷியாரேகேள் கொற்றவரே யெங்களுக்கு யின்றுதானும், பருமழையு மின்னலிடிகாந்தல் தாமும் பட்சமுடன் வரவழைப்பீராகுலல்லோ, திருவானகுருவென்று வும்மைத்தானும் தீரமுடனென்னாளும் வந்திப்போமே. 99

வந்திப்போமும்மையொரு குருவாயெண்ணி மகத்தான நாதாக்கள்நீர்தானென்றும், சிந்திப்போம் சதாகாலமர்ச்சித்தேதான் சீருடனே சின்மயத்தை மனதிலுன்னி, எந்நாளுங்கிரிவாழும் பதாம்புயத்தை யெழிலான சர்க்குருவை மெய்க்குருவென்றெண்ணி, பங்கியே கிரிதனிலே மாண்பரெல்லாம்பாங்குடனே சதாநித்தமர்ச்சிப்போமே.

போமேதான் வார்த்தையது கூறும்போது பொங்கமுடன் வனத்துமகாரிஷியார்தாமும், தாமேதான்சொன்னபடி வனத்தில்தானும் தகமையுடன் மண்காற்றுமழையுமாக, ஆமேதான் மின்னலிடிஜோதிபோலும் அவனியெலாந் தத்தளிக்க மிகவேசெய்தார், வேமேதான் பொதிமாட்டு காரரெல்லாம் விருப்பமுடன் கண்டல்லோ பிர்மித்தாரே. 101

பிர்மிக்க சிறுபாலர் மாண்பரெல்லாம் போரான சித்துமுனிரிஷியார்தம்மை, வர்மமுடன் பதாம்புயத்தை சுற்றிவந்து மனதுவந்து முடிசாய்த்து வஞ்சலித்து, தர்மமுள்ள நாதாந்தசித்தேநாங்கள் தாரணியி லென்னாளுமுந் தமைத்தாம், மர்மமதுவையால் வையகத்தில் மார்க்கமுட னென்னாளும் வசனிப்போமே. 102

வசனிப்போஞ் சற்குருவே யெந்தநாதா வளமையுட னென்னாளுங் கிரியில்வாழும், நிசமுடயவேதாந்த சித்தேகேளும் நிஷ்களங்கமானதொரு சொரூபபாதா, துசங்கொண்ட வீராதி சித்தேகேளும் துவாபரமா மூன்றுயுகந் தன்னில்தானும், குசமுடைய சின்மயத்தி லிருந்தசித்தை கோடானகோடிவரை கண்டிட்டோமே. 103

கண்டோமே யஷ்டகிரி தன்னில்நாதா காணோமேயும்மைப்போலொருவரேனும், தொண்டுசெய்துவெகுகோடி மாண்பரெல்லாந்தொல்லுலகில் கெட்டார்களனந்தங்கோடி, விண்டுரைசொல்கேளாத வீணர்கோடி வெகுகோடி வையகத்தில் கண்டதுண்டு, துண்டரீகமானதொரு சித்துபோலே துப்புரவாம் வையகத்தில் காணோம்தானே.

பொதிமாட்டுக்காரர் புகையிலை கற்புக்கொடுத்தது.

தானனகற்பமது கொடுக்கவேதான் தகமையுள்ள பொதிமாட்டுக்காரரெல்லாம், கோனனகிரிதனிலே யிருக்குஞ்சித்து கொற்றவனை

ர்மாயாவின் சித்துவுக்கு, மானனபுகையிலேயின் கற்பந்தன்னை மார்க்கமுடன் சித்தரவர்கொள்வதற்கு, பானன மாண்பரெல்லா மொன்ருய்க்கூடி பட்சமுடனுள் பாரங்கட்டினரே. 105

கட்டினார்மாண்பரெல்லா மொன்ருய்க்கூடி சனமானசுமையது வுமென்னசொல்வேன், இட்டமுடன் சுமையதுவை யெடுக்கும்போதுயெழிலான சிததுமுனி நடுக்கங்கொள்ள, வட்டமுடன் பாலரெல்லாமொன்ருய்க்கூடி வளமானசித்தருக்கே கொண்டுசென்று, பட்டமரம்போலேயல்லோ மாண்பரெல்லாம் பரதவித்து நின்றல்லோ பார்த்திட்டாரே. 106

பார்த்தவுடன் மலையில்வந்தசித்துதாமும் பாலரெல்லாந் தானடுங்க கரத்திலேந்தி. தீர்த்தகிரிசிவலிங்கப் பொதியைப்போலும் திறமுடனே கிரிதனிலே கொண்டுசென்று,பூர்த்தியுடன் குருபாதந்தனை வணங்கி புகழுடனே யஞ்சலிகள் மிகச்செய்தாரே. 107

செய்யவேசித்துமுனி சீஷர்தாமும் சிறப்புடனே குருநாதர்மனதுவந்து, துய்யபுகழ் புகையிலேயின் கற்பந்தன்னை துப்புரவாய் மனதுவந்து நாதர்தாமும், வெய்யவேகாயாதி கற்பந்தன்னை வேண்டியே விருப்பமுடன் கொடுத்தமாண்பர், பையவேயெவ்விடத்திலிருப்போரப்பா பான்மையுட னவர்களுக்கு விதிசொல்வீரே. 108

குருவுத்திரவின்படி சீஷராகிய சித்து பொதிமாட்டுக்

காரருக்கு உபதேசித்தல்.

விதியான குருமதியினுபதேசத்தை வித்தகனர் சீஷவர்க்கந்தானுங்கேட்டு, மதியான வுபதேசம் மாண்பருக்கு மார்க்கமுடன் செய்வதற்கு மனதிலெண்ணி, துதியுடனே பொதிமாட்டுக்காரர் தம்மை துப்புரவா யவர்மனதி லெண்ணங்கொண்டு, நிதியதுவுந் தான்கொடுத்து மாண்பருக்கு நீதியுடனுபதேச மெண்ணினரே. 109

எண்ணியேபொதிமாட்டு மாண்பர்தம்மை யெழிலாக வரவழைக்கமனதுபூண்டு, வண்ணமுடன் சரமாரிபொழியவல்லோ மார்க்கமுடன் மகதேவர்தனைநினைந்து, திண்ணமுடன் ரிடியாரும் நினைக்கும்போது தீர்க்கமுடன் பிரளயங்களதிகமாகி, எண்ணமுடன் பொதிமாட்டுக்காரரெல்லாம் யெழிலான மலைதனிமேல வந்திட்டாரே. 110

வந்ததொருமாண்பரெல்லாஞ் சித்துதம்மை மகதேவர் முன்னிருந்த சித்தென்றெண்ணி, சொந்தமுடனவர்பாதம் முடிவணங்கி சுந்தரம்மா நெடுந்தூரஞ் சென்ருேமையா, அந்தமுடன் சரமாரிபொ

றிந்துமல்லோ வையனே பிரளயங்களதிகமாகி, விந்தையுடன்வந்த தொருயிடையூர்தன்னால் விசனமுடன் மலையேறி வந்தோம்தாமே.

வந்தோமேயென்றுசொல்லி மாணபரெல்லாம் வளமுடனேசித் துவுக்கு கூறும்போது, பந்தமுடன் மாண்பருக்குசித்துதாமும் பட் சமுடன் கூறலுற்றார் நாதர்தன்னை, விந்தையது வுபதேசஞ் செய்வ தற்கு வித்தகனார் குருமொழியின் வாக்கதாச்சு, சிந்தனையா யெல் லோரும் வந்திருந்து சிறப்புடனே சித்துமுனிகூறினாரே. 112

கூறினார்சித்துமுனி மாண்பருக்கு குவலயத்தில் நீங்கள்செய்த அறத்தினாலே, மீறியதோர வுங்களுக்கு வுபதேசங்கள் மிக்கமனுநீதி யுடன் குருவின்வாக்கு, தேறியே பலநூலும் ஞானந்தேர்ந்து தேற் றமுட னுங்களுக்கு வுபதேசங்கள் சீறியேகோபமது வாருமற்றுன் சிறப்புடனே வுபதேசஞ் செய்தார்பாரே. 113

பாரேதானுபதேசஞ் செய்தவண்ணம் பாருலகில் யாருக்குங்கி ட்டாதன்று, நேரேதான் கிரியிலுள்ள வனப்பும்வாய்ந்து நேர்மையு டன் மநுநீதி கலைக்கியானம், கூரேதான் வேதமுதலாறு சாத்திரம் குறிப்பான கலைக்கியான மறுபத்துநான்கு, நீரேதான் மாண்பருக்கு வுபதேசித்தார் தீர்க்கமுடன் சித்துமுனி ரிடியார்தாமே. 114

பொதிமாட்டுக்காரருக்கு எமவித்தை காண்பித்தது.

தானானரிஷியாரு மன்புகூர்ந்து தகமையுடன் பொதிமாட்டுக் காரருக்கு, கோனானகுருசொன்ன வாக்குபாதம் குவலயத்தில் யா தொன்றுங் குறைவில்லாமல், மானானமனோன்மணியாள் கடாட்சத் தாலும் மகத்தானகாலாங்கி கிருபையாலும், தேனான தேவர்முனி ரிஷியார்பாதம் தெளிவுடனே வாதமது போதிப்பாரே. 115

போதிக்கவாதமதுயேதென்றாக்கால் போக்கானமலைதோறுங்கு வடுதோறும், ஆதித்தன் சந்திரனார்காணுவண்ணம் அகஸ்தியனார்மலை மூலியனைத்துங்காட்டி, வாதிகளுமறியாத மூலிவர்க்கம் வளமையுட ன்கிரிமூலி பசிமூலியாவும், வேதிக்கி மூலிகளு மனைத்துங்காட்டிவே கமுடனுபதேசஞ் செய்திட்டாரே. 116

செய்துமேயேமமென்ற வித்தைதன்னை செப்பினார்பொதிமாட் டுக்காரருக்கு, கைதவமாம்மூலிகைக்குச் சாபஞ்சொல்லி கபடகற்றி வுளவுமுதல் யாவுங்காட்டி, வையகங்கள்தான்புகழ மாண்பருக்கு வண்மையுடன் யேமமென்ற வித்தைதன்னை, துய்யபுகழ் மாண்பருக் கு வுளவுமூலிசெப்பினார் நாதரிஷிசெப்பினாரே. 117

## பொதிமாட்டுக்காரருக்குக் காண்பித்த மூலியெல்லாம் போகர் புலிப்பாணிக்கு கூறல்.

செப்பவே யின்னமொரு மார்க்கங்கேளு செயலானபுலிப்பாணி மைந்தாபாரு, ஒப்பமுடன் பொதிமாட்டுக்காரர்தாமும் ஓகோகோ நாதாக்கள் முனிவருக்கு, தப்பிதங்கள்நேராமல் புகையிலைகற்பஞ்சட் டமுடன் தான்கொடுத்த வுபசாரத்தால், செப்பவே யேமமென்ற மூலிதன்னை செயலாகக்காண்பித்தார் கண்டிட்டேனே. 118

கண்டேனே வனத்திலுட மூலியெல்லாம் கருவாகக் குளிகை கொண்டு கிரியைசுற்றி, விண்டதொரு மூலிகையின் வகுப்பையெல் லாம் விருப்பமுடனுந்தமக்கு வுபதேசங்கள், பண்டதுபோல் யான் பகுத்துச் சொல்வேனப்பா பட்சமுடன் மூலியநுபோக்குசொல்வே ன், சண்டமாருதம்போல செய்வாய்நீயும் சாங்கமுடன் கருமிகட்குச் சொல்லொண்ணாதே. 119

### வசனைமூலி 1008-மாற்று.

சொல்லவென்றுலின்னமொரு மார்க்கங்கேளு தூயதானவசனை யென்ற மூலிமார்க்கம், புல்லவே கறுவாளைகொண்டுவந்து புகழான முப்பூவுங்கூடச்சேர்த்து, கொல்லவே தாம்பரமாந் தகட்டின்மேலே கொப்பெனவே முப்பூவைமத்தித்தேதான், மெல்லவே தகட்டின்மே ல் பூசியேதான் மேன்மையுடன் கோழியென்ற புடந்தான்போடே.

போடேதான் புடமதுவுமாறிப்பாரு பொங்கமுடன் மாற்றதுவு மென்னசொல்வேன், கூடேதானவலோகஞ் செந்தூரங்கள் கூறுன மூலிகைக்கு யீடுமுண்டோ, நாடேதான் மூலிவகை யறியாமாண்பர் நாட்டினிலே சுட்டலைந்து கெட்டார்கோடி, மாடேதான் குருமுடிக் கும் வகையுங்காணூர் மட்டிகளாங் கூர்மையில்லா மாண்பர்தானே.

### பொன்முசுட்டை 500-மாற்று.

மாண்பானயின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் மகத்தானபுலி ப்பாணி மன்னுகேளு, காண்பான பொன்முசுட்டை மூலிதானும் காடெல்லாந் திரிந்தாலுங் கிடையாதப்பா, மாண்பான காறுறுகுகை கள் கண்டு மடிந்தவர்கணக்கில்லை கோடாகோடி, சாண்பாம்பு நீளம ப்பா மூலிதானும் சட்டமுடனணிவோருமற்றுமே. 122

ஆணியாம் மூலிகைக்கு மூலமப்பா வப்பனேசாணீளஞ் சொல் லலாகும்,காணிமுதல் காடெல்லாந்திரிந்திட்டாலும்கசடருக்கும்கிட் டாது கருமிகட்கும்,வாணியாஞ்சரஸ்வதியாள் வீற்றிருக்கும் வளமா

னமூலியதுபொன்முசுட்டை, பாணியதுபூமிவளந்தன்னிலப்பாபாங்கான மூலமதுகாணுதன்றே. 123

அன்றானமூலிகைதான்கொண்டுவந்துவப்பனேமுப்பூவுங் கூடகசேர்த்து, குன்றானசமூலமுடன் கூட்டியல்லோகொற்றவனே குருத்தயிலமாகக்கொண்டு, வென்றிடவேநவலோகதகட்டின்மேலே வீரமுடன்தைலமதைப்பூசியல்லோ, சென்றிடவே பாண்டமென்றவோட்டிலப்பாசெம்மனுடன்சிலையதுவலுவாய்ச்செய்யே. 124

வலுவானசிலையதுசெய்தபின்பு மகத்தானபுலிப்பாணி மன்னுகேளு, சுலுவானபுடமதுவுங்கோழியாக துப்புரவாய்ப்போட்டெடுக்கயேமந்தானும், மலுவானதடமதுவும் பழுப்புமேறி மகத்தானமாற்றதுவுமைந்நூறாகும், நிலுவையாம்பிரதிவென்றதங்கமப்பாநீதிசொல்லயிதற்கீடுசொல்லொண்ணாதே. 125

பொன்னுவாரை-2108-மாற்று.

சொல்லனேயின்னமொருமார்க்கங்கேளு சுந்தரனேபுலிப்பாணிமன்னுபாரு, வெல்லவேநாதாக்கள் சொல்லவில்லை வேதாந்தத்தாயாருஞ்சொல்லவில்லை, புல்லவேகாலாங்கிநாதர்தாமும் புகழானவகன்'தியருங்கூறவில்லை, நல்லதொருகுளிகையதுபூண்டதாலே நாட்டிலேநானுமல்லோ வறிந்திட்டேனே. 126

அறிந்தேனேபொன்னினுவாரையப்பா வழகானமலைதோறுஞ்சுனைகள்தோறும், செறிந்துமேமூலிகையினுளவுபார்த்துசெம்மனுடன்முப்பூவுங்களஞ்செடுத்து, மறிந்துமேபோகாமல்தைலமாக்கி மூர்க்கமதுவாராமல் மனதினுன்னி குறித்ததொருதயிலமதை யெடுத்துக்கொண்டு கொற்றவனேகுடவனிலே பூசிடாயே. 127

பூசிடவேகுடவனிலே யென்னசொல்வேன் புகழானநாதாக்கள்கூறவில்லை, காசியென்றசெம்பதுவுங்காணும்போது கனமானமாற்றதுவுமிருநூற்றெட்டு, மாசிபளாதங்கமது யென்னசொல்வேன்மகத்தானபிரதிவென்றதங்கமாச்சு, ஊசியென்னுமிரும்பினிலேதாக்கினுக்கால்வுத்தமனேசுயத்தங்க மயத்தங்கமாமே. 128

பொன்னூமத்தை-708-மாற்று.

தங்கமாம்யின்னமொருவதிதஞ்சொல்வேன் தகமையுள்ளபுலிப்பாணிமகனேபாரு, அங்கமாம்பொன்னூமத்தையப்பா அழகானமூலியதுகொண்டுவந்து, துங்கமாம்வழலையது வாரகனென்று துப்புரவாய்மூலியதுசாற்றினாலே, பொங்கமுடன் மதியென்றதகட்டிலப்பாபுகழாகப்பூசிடவேயேமமாமே. 129

ஏமமாங்காயாதிகொண்டமூலி யெழிலானகாயகற்பமூலியாகும் சாமமென்றமூலியதுவாணமூலி தாக்கானசித்தருண்ணும்மூலியாச்சு

வாமமுடன்மாற்றதுவுமெழுநூற்றெட்டு வளமானகயத்தங்கம்பிறவி த்தங்கம், நேமமென்றபூசைக்குக் கருவித்தங்கம்நெடிதான சித்து முனிமூலியாச்சே. 130

கறுப்புக்காக்கையாந்தகரை 108-மாற்று.

ஆச்சப்பாயின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் வப்பனேபுலிப் பாணிமன்னுகேளு, மூச்சடங்கிநெடுங்காலங் கொண்டசித்து மூதுல கில்யாரேனுங்கண்டதில்லை, பாச்சலென்றமூறலியது கறுங்கையாறு கும்கதிரோனைக்கண்மறைக்கும்மூலிதானும், மாச்சலென்ற மூலியது வதிதஞ்சொல்வேன் மகத்தானமாற்றதுவும் நூற்றெட்டுமாமே.

எட்டானமூலியதுதுலமேயாகும் யெழிலானபூனீறுகளஞ்சியா கும், சட்டமுடன்மத்தித்துவெண்ணையாக்கி சதிரானசெம்பென்ற தகட்டிற்பூசி, திட்டமுடன்சில்லிட்டுச்சீலைசெய்துசிறப்பான புடம துவுங்கோழியாக, வட்டமுடனுறியபின்னெடுத்துபாரு மகத்தான தங்கமென்றசெம்புமாமே. 132

செம்பான செம்பதுவுமென்ன சொல்வேன் செழிப்பானதங்க மென்றசெம்புமாச்சு, அம்பொன்னுந்தங்கமென்றசெம்புதன்னைவப்ப னேபதிதனிலேநூற்றுக்கொன்று, கும்பிடவேதாறுருக்கி குருவொ னறியகுற்றமற்றமதியதுவுந்தங்கமாச்சு, வெம்பியதோர்விஷமதுவுந் தீண்டினுற்போல் வேதாந்தசித்தனுடதங்கங்காணே. 133

காணவேதங்கமதை யென்னசொல்வேன் கைலாசநாதருந்தான் காணமாட்டார், பூணவேசுபத்தங்கம் பிறவித்தங்கம்புகழானநாதாக் கள்செய்யுந்தங்கம், ஆணவங்கள்காமியங்களொடுக்குந்தங்கம் அரக ராயித்தங்கமென்னசொல்வேன், வேணதொரு நாதாக்கள்பாடுபட்டு வேதைமுகங்காணுமல் மறைத்திட்டாரே. 134

மறைத்தாரேயுத்தங்கமாருக்கென்றால்மகத்தான சிவயோகிஞா னிகட்கும், குறைந்தங்கமானுலைவையகத்தில் கொற்றவர்கள்மாண்ப ருக்குவிடுதியாகும், நிறைந்ததொரு பரிபூரணதங்கமப்பா நீதியுள்ள ஞானிகட்குஞ்சிவயோகிக்கும்,மறைகொண்டுகானகத்தில்வாழுஞ்சித் துசிரானதேவரிஷிவாய்க்குந்தானே. 135

வாய்க்குமேமற்றவர்களுசித்தியில்லை மகத்தான கொற்றவருங்க ண்டதில்லை, காய்க்குமேயிம்மூலிவேதைதன்னை காசினியிலாருக்குங் கிட்டாதப்பா, தோக்கமலம்வீற்றிருக்கும்அம்பாள் பாதம்தொழுது மேபணிந்துநித்தஞ்சதாகாலந்தான், சேய்போலேயம்பாட்குப் பணி கள்செய்து சித்தம்வாமனதுவந்து நடந்துகொள்ளே. 136

சிறியாநங்கை 64-மாற்று.

கொள்ளவே யின்னமொரு வதிதஞ்சொல்வேன் கூரானபுலிப் பாணிமகனேகேளு, எள்ளளவுங்கோளாறு நேராமற்றான் யெழிலா னகானகத்தின்மூலிகண்டேன், மெள்ளவே சிறியாணின்நங்கை தன் னைமேன்மையுடன் கொண்டுவந்துகூறக்கேளும், விள்ளவே மூலியது சாற்றிலப்பா வீரமுடன்சூதமதைத் தாக்கிடாயே. 137

நாகவேதை.

தாக்கவேசூதமென்றரசத்தைத்தானும் தண்மையுள்ள நாதமதி ல்தன்னிலூட்ட, நோக்கமுடன்நாகமதுகண்ணடைந்து நெருங்கியே சவளையதுபோலேயாகும், ஊக்கமுடன்சவளைதனையெடுத்துமைந்தா ஓகோகோநாதாக்கள்சொன்னநீதி, தூக்கமறு கொள்ளாமல் செம்பி லப்பா துப்புரவாய்நூற்றுக்கு ஒன்றுதாக்கே. 138

ஒன்றான சவளையதுகொடுத்தபோது வுத்தமனேமாற்றதுவு மெ ன்னசொல்வேன், வென்றிடவேமாற்றறாவு மறுபத்துநான்கு வேதா ந்தத்தாயாருமுரைத்தநீதி, குன்றினில்வாழ்சித்தர்முனி கூறாரப்பா (ு)வலயத்தில் லுந்தனுக்கா யுரைப்பேன்யானும், சென்றிடவே நெடு ங்காலம்மலையில்காத்து செம்மலுடன் வாங்கியதோர் வேதையாரே.

பாரேதான்சிறியாணின் நங்கைவேதை பாருலகில்யார்செய்வார் மாண்பரப்பா, நேரேதான்நாதாக்கள் செய்யும்வேதைநேர்மையுடன் கண்டறிந்துமனதுவந்து, நீரேதானுந்தமக்கு மனங்களித்துதீர்க்கமு டன்யாள்கொடுத்த வேதைதன்னை, சீரேதான்மற்றவருங் காணுமற் றான் சீருலகில் புத்திவாணுய்வாழ்வீர்தாமே. 140

பெரியாநங்கை 128-மாற்று.

வாழவேயின்னமொரு வதிதஞ்சொல்வேன் மகத்தானபுலிப்பா யதிதவானே, தாழவேபெரியாளின்மூலியப்பா தாரணியில் சித்தர்க ளுங்காணமாட்டரர், மூழவேகண்டாலுங்கூறமாட்டார் முனையான மூலிதனைமறைத்துப்போவார், சூழமேகானகத்திலிருக்குமூலி சுடர் மூலிவிடமூலிசுருதியாமே. 141

சுருதியாம்மூலியுடவேகந்தன்னை சுந்தரனே யென்னசொல்வே ன்மச்சகேந்திரா, நிருதியாங்காடெல்லாந்திரிந்தாலுந்தான் நிஷ்களங் கமானதொருமூலிதன்னை, குருதியாம்மூலிநிறமேயாகும் குவலயத்தி ல்கண்டவர்கள் விள்ளாரப்பா, பருதிமதிகாணுத விருட்சத்தின் கீழ் படர்ந்துமேதானிருக்கு மூலியாமே. 142

மூலியாந்தழையதனைக்கொண்டுவந்து முனையான ரசமதுவுந்துலமேயாகும், காலிலோர்பங்கதுவுஞ் சூதந்தன்னை நலமுடனே தான்கூட்டி மத்தித்தேதான், வேலியெனும்வீரமதைக் கால்தான்கூட்டி வேகமுடன்மூன்குழைத்துமன்றுகேளு, பாலியெனும்பரித்தகட்டிற் பூசியேதான் பாங்கான ஓட்டிலிட்டுச்சீலைசெய்யே. 143

சீலையதுசெய்தபின்புரவியில்வைத்து சிறப்பானேகோழியென்ற புடத்தைப்போடு, வேலையெனும்புடமதுவு மாறிப்பின்பு வேதாந்தத் தாயதனைமனதிலுன்னி, நூலையதுவரன்முறைபாய்த் தொகுப்புங்கண்டு நுட்பமுடன் கைபாகஞ்செய்பாகந்தான், மாலையுடன்புடமாறியெடுத்துப்பாரு மகத்தானயேமமது களங்கமாச்சே. 144

ஏமமென்றகளங்கதனை யெடுத்துமைந்தா யெழிலான வெள்ளிதனில் நூற்றுக்கொன்று, வாமமுடன்தானுருக்கி குருவென்றீய மகத்தானவெள்ளியது யேமமாச்சு, நாமமென்றவெள்ளியது பிறவித்தங்கம் நாதாக்கள் கண்டதொருநாகத்தங்கம், ஆமமென்றதங்கமது வர்ணத்தங்கம் வப்பனே மூலிகையின் பெருமைபாரே. 145

பெருமையா யனேகவிதபோக்குமுண்டு போானவழலைக்கு மூலிவேண்டும், கருமமதுதானகற்றி புண்ணியவானே காசினியில் சித்துபோல்பெயருங்கொண்டு, அருமையுள்ளசித்தருக்கு வடிபணிந்து வன்புடனேயே வலது மிகப்புரிந்து, ஒருமைபடவையகத்திலெந்நாளும் வுலகமதில் பெயருண்டாய் வாழ்வீர்தானே. 146

தானனமாற்றதுவும் நூற்றிருபத்தெட்டு தண்மையுள்ள நாதாக்கள்செய்யுந்தங்கம், கோனனசித்துமுனியனேகமாக கூறினார்வெகுகோடிநூலிலப்பா, தேனனமனோன்மணியாள் கடாட்சத்தாலேதேற்றமுடன் கண்டறிந்தவேதைதன்னை, மானனமகதேவர் புண்ணியத்தால் மகிழ்ச்சியுடனென்னாளும் மணங்கொள்வீரே. 147

மணமுடனே சிதாபாசம்மனதிலுன்னி மார்க்கமுடன்மதியமூர்தங்கொண்டுமல்லோ, கணமதுவும்நேராமல் யோகந்தன்னில் கழற்சியுடன்சிவயோகநிலையில்நின்று, குணமுடனே திரிகரண சொரூபமாக குவலயத்திலஷ்டாங்க யோகங்கண்டு, வணங்கியேயஷ்டாங்கிலை பதியைக்கண்டு வாமமுடனர்ச்சித்தவலுகொள்வீரே. 148

உண்டானவித்தையதுவனைகமுண்டு வுத்தமனேபார்க்கவென் ருல்கண்கொள்ளாது, திண்டானவித்தையதுசொல்வீராஞல்தீரமுட ன்செய்வதற்குவைரீமில்லை, பண்டானகுலைகளவுயில்லாவித்தைபட்ச முடனெந்தமக்குச் சொல்வீராஞல், வண்மையுடன் செய்துமல்லோ வுந்தமக்கு வளமையுடன்காட்சியது தருவேன்பாரே. 148

கறுப்புக்கோடாசுழி 50-மாற்று.

கொள்ளவேயின்னமொரு குணமுஞ்சொல்வேன் கூரானபுலிப் பாணிபுனிதவானே, விள்ளவேகாடெல்லாந்திரிந்தாலுந்தான் விட்ட குறையிருந்தாலேலபிக்கும்பாரு, வெள்ளமதுகண்டாலேயழியுமூலி வேதாந்தத்தாயிருக்குமூலியப்பா, எள்ளளவுங்குற்றமதுநேராமூலி யெழிலானகறுப்புகோடாலியாமே. 149

கோடானசுழியென்றமூலியப்பா கொற்றவனேகொண்டுவந்து சொல்லக்கேளும், தாடானமூலிரசந்துலமேயாகும்தாக்கானவீரமது விராகனென்று, கூடானசூதமதுவிராகனென்றுகொற்றவனே மூன் றையுந்தானொன்ருய்க்கூட்டி, வாடாமல்வெண்ணையதுபோலரைத்து வளமானசெம்பதினில்பூசிடாயே. 150

பூசவேமயினமதைசெம்புதன்னில் புகழாகவேபித்துக்காய்ந்தபி ன்பு, வாசமுடன்கரியோட்டிலிட்டுமைந்தா வளமையுடன்சில்லிட்டு ச்சீலைசெய்து, பாசமதுதானகலாவியில்வைத்து பட்சமுடன்கோழி யென்றபுடத்தைப்போடு, கோசமென்றபீஜமதுசேர்ந்ததாலேகொற் றவனேசெம்பதுவும்வரணமாச்சே. 151

ஆச்சப்பாசெம்பதுவும்வரணமீறி வப்பனேமாற்றதுவுமைம்ப தாகும், மாச்சலென்றகளிம்பதுவும்விட்டகன்று மகத்தானசெம்பது வும் பழுப்புமீறி, காச்சலுடன்திரைசுவடுகளிம்போடூரல் கசடகற்றி சவளையுடனமுகள்மாறி, ஆச்சரியமானதொருவூட்டங்காய்ப்புவப்ப னேகரகரப்புடனயப்புதானே. 152

தானுனபிறவியென்றதங்கம்போலே தண்மையுள்ளகுற்றமதுநீ ங்கியேதான், கோனுனகுருத்தங்கம்பிறவித்தங்கம் குவலயத்தில்நா தாக்கள்செய்யுந்தங்கம், மானுனமகமேருவானதங்கம்மகத்தானமூலி யுடகாரசாரம், தேனுனபரிசமது பட்டபோது தெளிவானவுறுதி யென்றதங்கந்தானே. 153

தங்கமாபதிதனிலேநூற்றுக்கொன்று தாக்கடாசோடசமுங்கா ணுங்காணும், வங்கமாம்படுபாவியானவங்கம் வளமானவாணமதைக்

கொள்ளாதப்பா, புங்கமாமஷ்டசித்தியிதற்குள்ளாகும் புகழானதங் கமதுபிறவித்தங்கம், பங்கமதுவாராதுநாததங்கம் பாருலகில்மாண் பருக்குக்கிட்டாதன்றே. 154

அன்றானவிதியாளிவருவானானல் அவனுக்கேகிட்டுமதுமற்றோ ர்க்கில்லை, குன்றானமலைநாடுதேசந்தன்னில் கொற்றவருஞ்சிவயோகி மாண்பருண்டு, தென்றிசையிலகஸ்தியனார்மலையிலப்பா தீரமுடன் சென்றவந்தோர்கோடியுண்டு, வென்றிடவேமவர்களிலுங்கருமியுண் டுவேதாந்தசிவயோகிதானுமுண்டே. 155

உண்டானமனோலயத்தையறிந்துகொண்டு வுத்தமனேநூல்பார் த்தவாதிகண்டு, கண்டாலும்விள்ளாதகாணியாளர் கசடகற்றிமனம் பொருந்திகருத்திலுன்னி, அண்டர்முனிதேவாதிரிஷிகட்கொப்பாய் வப்பனேமுற்பவத்தையகற்றிவாழும், சண்டமெனும் மாருதம்போல் பாசம்விட்டு சட்டமுடன்வாழுகின்றயோகியாமே. 155

யோகியாந்தத்துவத்திலிருந்தவானாய் யோகமெனும்பதிதனக் குகந்தசீஷன், போகமதுதானகற்றிபொதிந்துவாழும்பொங்கமுடன் ஞானமென்றமான்பர்கண்டு,ரோகமதுயில்லாதபுண்ணியவானாய்நொ டிக்குள்ளேபகுத்தறிவு கொண்டதீரன், காகமதுநேராதசீஷன்கண்டு சட்டமுடனுபதேசஞ்செய்குவீரே. 157

சிகப்புசித்திரமூலம்-25-மாற்று.

செய்யவேயின்னமொருமார்க்கஞ்சொல்வேன் செயலானபுலிப் பாணிவதிதவானே, துய்யதமிழ்ப்பாண்டியனுக்கொப்பதான துரை ராஜசுந்தரனேபுகலக்கேளீர்,வையகங்கள்தான்புகழும்வனாந்திரத்தில் வண்மையுள்ளசிவந்தகொடி வேலியப்பா, மெய்யானமலைதனிலேமெ த்தவுண்டு மேதினியுளோர்காண்பதுவுமரிதுபாரே. 158

பாரேதான்மலைதனிலேசுற்றும்போது பாங்கானபாறையின்றன் வெப்புதன்னில், நேரேதான்விளைந்திருக்குஞ்சிவந்தமூலி நெடிதான கொடிவேலியென்னலாகும், சீரேதான்கொடிவேலிதனையெடுத்துசிற ப்புடனேசூதமதை யெடுத்துமைந்தா, வீரேதான்வீரமதுகளஞ்சிகூ ட்டி நீதியுடன்மத்தித்துரவியிற்போடே. 159

போடவேசீலையதுவலுவாய்ச்செய்து பொங்கமுடன்கனயெரு விற்புடத்தைப்போடு, நீடவேபுடமாறியெடுததுப்பாரு!நிலையானசெ ம்பதுவுமென்னசொல்வேன்,கூடவேசெய்புதனைபதனம்பண்ணுகொ ற்றவனேகவசகுண்டலத்துக்காகும், ஆடவேமாற்றதுவு மிருபத்தை ந்து வப்பனேகுங்குமப்பூநிறமுமாச்சே. 160

ஆச்சுதென்று விடுகாதே யின்னங்கேளு ஆகாகாநாதாக்கள் மறைத்தஜோதி, வாச்சுதேசிவயோகிக்குகந்ததங்கம் வர்ணதங்க மித ற்கல்லோ யீடாமோதான், போச்சுதென்று விடுகாதே புண்ணியவா னேபுகழான நாதாக்களாடுங்கூத்து, காச்சமேசிவந்த சித்திரமாமூலி கனகமென்ற வேதையது கைக்குள்ளாச்சே. 161

உள்ளானபொருளெல்லா மிதிலேதோயும் வுத்தமனேநாதாக்க ள்கூறுரப்பா, கள்ளமின்றி நேராகயேமவித்தை காசினியில் சித்துமு னிசெய்யுமார்க்கம், எள்ளளவும் பிசகதுவும் வாரதப்பா யெழிலான விதனதையது யென்னசொல்வேன், கொள்ளைகொண்ட குருவினது வாக்குதானும் குவலயத்தில் பொய்யாது மெய்யதாமே. 162

மெய்யான சிவந்தசித்திரமாமூலி மேதினியில் வெகுமாண்பர் காணுமற்றுன், பொய்யானமூலிதனை மெய்யென்றெண்ணி பொங்க முடன் கெட்டலைந்தார் கோடிகோடி, துய்யதமிழ்சாததிரங்கள் கூறு ம்வண்ணம் துப்புரவாய் தலைமாடுகால்மாடாக, செய்யதொரு காப் பேடு பாராமற்றுன் சேனைதிரள்மாண்பர்களுங் கெட்டார்தாமே.

மேற்படி மூலிகற்பம்.

கெட்டாரே சிவந்தசித்திரமாமூலிகெடியானவையகத்தில்காணு மற்றுன், பட்டலைந்து மலைவளங்கள் குண்ணுநாடு பாருலகில் தேடி யல்லோ காணுமற்றுன், அட்டகிரிதான் புகழும்மேடுதன்னில் வன் பான மூலிதனைக்கண்டறிந்து, விட்டகுறையிருந்ததொரு தன்மை யாலே மேதினியில் சிலபேர்கள் கண்டார்தாமே. 164

கண்டாரேகாலாங்கி கிருபையாலே காசினியில் நாதாக்களிருக் கும்ஸ்தானம், தொண்டுமிக செய்தல்லோமூலிதன்னை தோறுமல்மன துவந்து கற்பங்கொள்ள, சண்டமாருதம்போலே மூலிகற்பம் சாங்க முடனிருவேளை யுண்டுமல்லோ, வண்டுமூதுகோடாது போலவரண ங்கொண்டு வையகத்தில் வெகுமாண்பரிருந்தார்தானே. 165

தானானமூலியது கொண்டபோது தாக்கானவாசியது கீழ்நோக் காகும், கோனானகுருநாதர் சொன்னவாக்கு குவலயத்தில் பொய்யா மல் மெய்யென்றெண்ணி, தேனானசிவப்பு சிததிரமாங்கற்பம் தேசம தில் கோடானகோடிபேர்கள், மானானமலை வளத்திலிருந்துகொண்டு மார்க்கமுடன் கற்பமது கொண்டிட்டாரே. 166

கற்பமாஞ்சித்திரமாமூலிகற்பம் கனமுடனே யுண்டவர்க்கு வய தேசொல்வேன், சொற்பமென்று யெண்ணாதே துய்யபாலா சொர்ன

மபோல் தேகமதுமின்னும்பாரு, விற்பனமு மிகவுண்டாமறிவு முண்டாவிருத்தம துவாராதுபாலன்போலாம், அற்பமென்று நினையாதேயறியபாலா வாயிரமாம் வருடமது யிருக்கலாமே. 167

இருக்கவென்றுலகுபதி சித்துதாமும் யெழிலுடனே நெடுங்காலமிருந்தசித்து, பொருக்கவே காயா திகற்பங்கொண்டு பொன்னுலகுபதிதனிலே சேர்ந்தாரப்பா, வருத்தமுடன் வெகுகோடிசித்துதாமும் வளமானமூலி கற்பங்கொண்டுமேதான், திருக்கவல வீற்றிருக்குமம்பாள்பாதம் தீர்க்கமுடனெடுங்கால மிருந்தார்பாரே. 168

போகர் புலிப்பாணிக்கு பொய் இன்னதென்று கூறல்.

பாரேதானின்னமொரு பண்புசொல்வேன் பாங்கானபுலிப்பாணிபாக்கியவானே, நேரேதானுலகுபதி மாண்பரெல்லாம் நெடிதான மொய்சதனை நுகரும்நேர்மை, தீரேதான்யான்தெய்வ மென்பார்தானும் திரளானசார்வாகம் பொய்யேயாகும், கூரேதான்கடவுளனுமதம் பொய்குவலயத்தில் தேவனில்லை யென்பார்தாமே. 169

தாமானமார்க்கமது பொய்யேயாகும் சகலகலையறிவதுவும் பொய்யேயாகும், நாமானமோகனங்கள் பொய்யேயாகும் நலமானவசியமுதல்மாற்றம்பொய்யே, வேமானமுள்ளதொரு வுச்சாடணங்கள் வெகு பிறட்டுதலை திரட்டுமேதினிக்குள், சாமாணியமானதொரு தேவசங்கம் சட்டமுடன் வரவழைத்தல் பொய்யதாமே. 170

பொய்யான செப்பிடுகள் வித்தைபொய்யேபொங்கமுடன்தூலங்கள் சொல்லப்பொய்யே, துய்யகெஜதாணமது சுத்தம்பொய்யேதுப்புரவாய்க் குளிசங்களெல்லாம்பொய்யே,வெய்யபுகழ்தேகமதுதானும்பொய்யே மேதினியிலிருப்பவரும்பொய்யே, யாகும்வையவரு மூகமதிலெல்லாம் பொய்யேநாதாக்கள் சொல்லுமுறை சிலபொய்தானே

போகர் புலிப்பாணிக்கு மெய்கூறல்.

தானானபுலிப்பாணி தார்வேந்தாகேள் தண்மையுடன் சொல்லுகிறேன் தருமவானே, கோனேதானுலகுபதி மாண்பரெல்லாம் கோர்வையுடன் பலநூலுங்கற்றுமென்ன, வீணேதான் பொய்மெய்யுமறியாமாண்பர் விருதாவாய் சிவயோகஞ்செய்துகொண்டு, காணமல்வையகத்தினுண்மைதன்னை கசடகற்றி மெய்யறிய மறந்தார்பாரே.

பாரேதான்வையகத்தில் தெய்வமுண்டுபொங்கானமோட்சமென்றவீடுமுண்டு,நேரேத்தான்பாவிகட்கு நரகமுண்டு நீடாழியுலகமதுவழிவதுண்டு,சீரேதான்வாதமது மெய்யேயாகும்சிறப்பான குளிகையது

மெய்யேயாகும், வீரேதான்சற்பமதுமெய்யேயாகும் விருப்பமுடன் யிறப்பதுவும்மெய்யதாச்சே 173

நன்னாரி கற்பம்.

ஆச்சப்பாபுலிப்பாணிபுனிதவானே அவனிதனிலின்னமுண்டுக ற்பங்களீர், மாச்சலென்றநன்னாரி கற்பமப்பா மகத்தானகற்பமதை ஆண்டுகொண்டால், பாச்சலென்றவுதிரமது விஷங்காணாது பாங்கா னதேகமதுகனமேலாது, வீச்சுடனேநேத்திரங்கள் குளிர்ந்துகாணும் வீரானசுவாசமது கீழ்நோக்காமே. 174

நோக்கானமூலிகையாங் கற்பந்தன்னில் நுணுக்கமுள்ள மாண் பர்களுங்கொண்டுவந்து, தாக்கானமதிமயக்கம் பூண்டுகொண்டு வண் மையுடன்தவநிலைக்கு வுருதிகொண்டு, வாக்குமனம் சித்தமார்க்கம் பொங்கிவளமையுடன் வாசியது கீழேநோக்கி, தேக்கமுடன்சிவயோ கபதியிற்சென்று தேற்றமுடன்நெடுங்கால மிருக்கலாமே 175

கற்பமுண்பவர்க்கு யேமசித்திலிங்கப்போக்கு.

இருக்கவேயின்னமொருமகுத்துவந்தான் யெழிலான புலிப்பா ணிதிலர்தவானே, பொருக்கவேகாயாதிகொண்டபேர்க்கு பொங்கமு டன்சீவனத்துக் கிடமேதென்றால், திருக்கையிலேதானிருக்குஞ் சிவ ஞானஞ் தீர்க்கமுடன்வாதமது புகலக்கேளும், பெருக்கமுடன் கா லாங்கிநாதர்பாதம் பெருமையுடன்யான்வணங்கி கூறுவேனே.

கூறுவேன்ஜாதிலிங்கம்பலந்தானென்று கொற்றவனேமுலைப்பா லிலூறப்போடு, தேறுதலாய்முப்பொழுதுமானபின்புதெளுவிருத்து லிங்கமதையெடுத்துமைந்தா, மாறபடாயெறிகாலன்மாலையப்பா மா ர்க்கமுடனெண்சாமஞ் சுருக்குதாக்கு, வீறுடைய குமரியின்றன்பா லால்தானும் விருப்பமுடன் நாற்சாமஞ்சுருக்குதாக்கே. 177

தாக்கானலிங்கமதையெடுத்துபாலா தண்மையுடனாதாரச்சர க்காம், போக்கானசரக்கதுவுமேதென்றுக்கால் பொங்கமுடன்துருசு வெடியுப்புக்காரம் நோக்கானசாரமுடன்சீனந்தானும், நுண்மையுள் ளகரியுப்புகூடச்சேர்த்து, வாக்கதுவும்பிசகாதுமண்ணமப்பாவளமை யுடன் தீநீராஞ்செயநீர்தானே. 178

தானானவாராதாரச்சரக்கால்தாரணியிலண்ட பிண்டந்தானுமா ச்சு, கோனானகுருவருளுங்காணலாகும் கொப்பெனவேசத்தி சிவமா ற்றிகாண்பீர், பானானசெந்தூர கட்டுப்போக்கும் பாங்கான களங்கு முதலானாலாகும், தேனானதேவிமனோன்மணியாளபாதக் தேர்ந்தெடுத்த வாராதாரந்தான்பாரே. 179

பாரேதான்ஜெயநீரி லனந்தம்போக்கு பாடினார் ஜெகதலத்தில் முனிவர்கோடி, நேரேதான்குருக்கிடையுங்கருக்கிடையுமப்பா நெடிதானசாஸ்திரங்களனந் தஞ்சொன்னார், வேரேதான்சாஸ்திரத்தி லிந்தப்போக்கு வேதைமுகங்காணுதற்குகுறிகள்காணார், நீரேதான்சாத்திரத்தினுளவுகண்டு நீதியுடனாராதாரத்தைக்காணே. 180

காணவேஆருதாரத்தைகண்டால் கனகமெனும்வாதமது கைக்குள்ளாச்சு, தோணவேலிங்கமது தன்னிலப்பா தோரூமலெண்சாமஞ்சுருக்குதாக்கு, வேணவேஜெயநீரில்நின்றபாகம் வேகமுடன் தூரதனில்நின்றசத்து, நீணவேசத்ததனையெடுத்துமைந்தா நிகட்சியுடன் லிங்கமதிற்கவசம்பூசே. 181

பூசியேலிங்கமதிற்கவசம்போடு புகழானலிங்கமது புடந்தான்பத்து, மாசில்லாலிங்கமதுமணல்தானப்பா மகத்தானபுடமதுவும் பத்தேயாகும், தேசியெனும்ஊசிநீருருதாரம் தெளிவுடனே சுருக்கதனைல்கட்டும்பாரு, ஊசியெனுங்காந்தமது லிங்கமப்பா வுத்தமனேவுருக்கதுபோலிருக்கும்பாரே. 182

உருக்கவே லிங்கமதுயெடுத்துமைந்தா வுத்தமனேமேற்போக்கு கூறக்கேளும், பொருக்கமுடன்சாரமென்றசெயநீர்தன்னால் பேறானதங்கமதைபத்துக்கொன்று, குருக்கியதங்கமதைஜெயநீராக்கிகூசாமலிங்கமதில்சுருக்குதாக்கு, நெருப்பினிமேலவைத்தல்லோ சூடுதாக்கி நேரானஜெயநீரை சுருக்குதாக்கே. 183

தாக்கிடவேலிங்கமதுயிறுகிமைந்தா தண்மையுடன் வெட்டுருக்குபோலேகாணும், நோக்கிடவேமேற்போக்கு புகலக்கேளும் நுட்பமுடன்தேனதனைகருக்குதாக்கு, வாக்குடனேகாலாங்கிநாதர் பாதம் வண்மையுடனவர்பாதம்வணங்கியல்லோ, தீக்குழியிலயமதனால் கட்டிதன்னை தீர்க்கமுடன்தானத்து செப்பக்கேளே. 184

கேளேதான்லிங்கமதையிரும்பில்வைத்து கெடியானதேனதனைமனதுவந்து, பாளேதான்போகாமல் சுருக்குதாக்குபட்சமுடன்லிங்கமதுயிருகிக்காணும், சூளேதான்சுருக்கதுவு மறுபத்துநான்கு சுயமானதேனதனால்வருக்குதாக்கு, மீளேதான்லிங்கமது ஜெயக்கட்டாகும்மிக்கானகட்டதுவு மரிதாம்பாரே. 185

அரிதானகட்டதனையெடுத்துமைந்தா வப்பனே சிற்றண்டதயிலம்வாங்கி, பொரியானவெங்காரம் பத்துக்கொன்று பொங்கமுடன்

தைலமதில்சேர்த்துமல்லோ, வரியானலிங்கமதை சுருக்குதாக்கு வண்மையுள்ளலிங்கமது யிளகிக்காட்டும், பரியானதங்கமது ஜெயநீர் சேர்ந்து பாங்கானலிங்கமது மொழுகுமாச்சே. 186

ஆச்சப்பாலிங்கமதுகல்மெழுகேயாகும் வப்பனைமெழுகதனைப் பதனம்பண்ணு, காச்சலென்றலிங்கமது யிளகிக்காட்டும் கருவான லிங்கமதுபோக்குசொல்வேன், மாச்சலதுவாராமலிங்கந்தன்னைமயங் காமல் கருவங்கஞ்சுத்திசெய்து, பாச்சலுடன்வங்கமதை லிங்கந்தன் னைபட்சமுடன் தானுருக்கி யிடைதானீயே. 187

இடையானயிடையதுவு மென்னவென்றால் யெழிலான சரியிடையேசெப்பலாகும், மடைபோன்றவங்கமதை யுருக்கிமைந்தா மயங்காமல் வுருக்குமுகந்தன்னிலீய்ந்து, கடையானதங்கமதில் வங்கலிங்கம் கருவுடனேவுருகிநின்ற களங்குதன்னை, தடையறவே தங்கமதிற்கொடுத்துமைந்தா சட்டமுடன்தானுக்கி யெடுத்துப்பாரே.

எடுத்துமிகப்பார்க்கையிலே யென்னசொல்வேன் யெழிலானகளங்கமதுயேமவித்தை, கொடுத்ததொரு களங்குதனையெடுத்துபாலாதோறுமல் வெள்ளிசெம்பில் பத்துக்கொன்று, கொடுத்திடவேவுருக்குமுகந்தன்னிலீய்ந்து கொற்றவனேசெம்பதனை யூதிப்போடு, விடுத்ததொரு மாற்றதுவுமென்னசொல்வேன் விட்டகுறையிருந்தவர்க்கு லபிக்குந்தானே. 189

தானனவெள்ளியதுயென்னசொல்வேன் தண்மையுள்ள மாற்றதுவுமாறதாகும், மானனமட்டநிகர்நாலுக்கொன்று மகத்தானதங்கமதுவொன்றுசேரு, தேனனதேவியுட கடாட்சத்தாலே தேற்றமுடன்மாற்றதுவுமெட்டதாகும், கோனனபுடத்துக்கு வுறுதிதங்கம் குவலயத்திலாரறிவார் சித்தர்தானே 190

சித்தானசித்துமுனிநாதர்தாமும் சிறப்பானரிடிதேவர் சொன்னமார்க்கம், முத்தானவேதையிது யின்னஞ்சொல்வேன் முனையான மார்க்கமதுபோலொண்ணுது, பத்தியுடன்சிவராஜயோகிமாண்பர்பாலகனேசெய்யும்வகை யனேகமுண்டு, சுத்தியுள்ளசெம்பதுவுந் துலந்தானென்று துறையானலிங்கமது துலந்தான்ரெண்டே. 191

துலமானசெம்பதனில் லிங்கம்ரெண்டு தூக்கான லிங்கமதைக் கிராசமீவாய், நலமானயிருண்டசெம்பு கட்டிப்போகும் மாற்றமுள்ள வூறலதுயேகிப்போகும், சலமானவூறலதுவேகியல்லோசாங்கமுடன் திரைசவடுமற்றுப்போகும், குலமானதங்கமதை சரியாய்ச்சேர்த்து குகைதனிலே தானுருக்கியெடுத்திடாயே. 192

எடுத்துமேமதிதனிலே பத்துக்கொன்று யெழிலானதங்கமதை தாக்குதாக்கு, கொடுத்திடவேமாற்றதுவுமாறதாகும்கொப்பெனவே தங்கமதுயெட்டிலொன்று, அடுத்துமேதான்கொடுத்துவுருக்கிக்கொண்டுவப்பனே வாரடித்துப்புடந்தான்போடு, கொடுத்ததொருமாற்றதுவுமென்னசொல்வேன் தோறுமல் வயதுதுவுமேழதாமே. 193

ஏழானபொன்னதும் பசுமைமெத்த யெளிதான யேற்றமொன்றுயின்னஞ்சொல்வேன், தாழானமட்டமது மாற்றுகாணும் தண்மையுள்ளபசுமையது யென்னசொல்வேன், காழான துருசினுடசெந்தூரத்தால் கருவானமாற்றதுவுமதிதங்காணும், சூழானசூதவித்தையேமவித்தை சுந்தரனேசொல்லவுந்தான் நாவொண்ணாதே. 194

ஓண்ணாதுயின்னமொருமார்க்கஞ்சொல்வேன் ஓகோகோ புலிப்பாணியுகந்தபாலா, கண்ணானலிங்கமது களஞ்சியொன்று கருவானநாகமது களஞ்சியொன்று, மண்ணானவாயுவென்ற பிரிதுவுதானும் மகத்தானவங்கவது களஞ்சியொன்று, திண்ணமாம்லோகமதையொன்றுய்க்கூட்டி திரமுடன்மூசைதனி லுருக்கிடாயே. 195

உருக்கியேகண்விட்டு ஆடும்போது வுத்தமனேலிங்கமென்ற களஞ்சிதன்னை, பெருக்கியேயுருக்குமுகந் தன்னிலப்பா போரானலிங்கம்குருவொன்றீய, வருக்கமுடன்மூசைதனை யாற்றிப்பாரு வளமானகளங்கமது யென்னசொல்வேன், சுருக்கமுள்ள சிமிட்டுவித்தை வேதைகாணும் துப்புரவாய்மூசைதனை யுடைத்துப்பாரே. 196

உடைத்துமிகப்பார்க்கையிலே யென்னசொல்வேன் வுத்தமனே லோகமென்ற களங்குலிங்கம், தடையறவே மதியதுவுமேழதாகும் தாக்கான ரவியதுவுமூன்றதாகும், கடையானகளங்கமது வொன்றதாகும் களங்கமறதானுக்கு குருவொன்றீய, மடைபோன்ற களங்கமதைத்தானெடுத்து மகத்தானவோட்டில்வைத்து வூதிப்போடே.

போடேதான்கரியோட்டி வூதும்போது பொங்கமுடன் வெள்ளியதுசவளைபோலாம், நாடேநீ செம்பகலவூதிப்போடு நலமானபசும்பொன்னுயென்னசொல்வேன், தேடேநீபுடமதனில் தாக்கிப்பாரு தெளிவானதங்கமதுஜோதிமெத்த, ஆடேநீஜீவனத்தை செய்துகொண்டுவப்பனேதவநிலையை சாதிப்பாயே. 198

நத்தைகற்பம்.

சாதிப்பாயின்னமொரு கற்பஞ்சொல்வேன் சற்பாத்ரமுள்ள தொருமைந்தாகேளு,வேதினிலேரிதனில்வளருகின்றமேன்மையுள்ள நத்தையது ஒன்றாவீதம், ஆதியென்றமுப்பதுவுங் கூடச்சேர்த்து வப்பனேமண்டலந்தான் கொண்டாயாளுல், நீதியுடன்காயமதுகற்ப மீறி நீணிலத்தில்வெகுகாலமிருக்கலாமே. 199

இருக்கவென்றால் கோடிவரையிருக்கலாமேயெழிலானகாலாங் கியுண்டகற்பம், திருக்கமலம்வீற்றிருக்கும் தாயார்பாதம்தீர்க்கமுட னென்ஞளுமனதிலுன்னி, வருத்தமுடன்நத்தையின்றன் கற்பந்தன் னைவாருடனே கொண்டவற்குகாயசித்தி, பெருக்கமுடன்முப்பூவின் வலுமையாலே பேரானநத்தையதுகற்பமாச்சே. 200

கற்பமென்றநத்தையது யேதென்றுக்கால்கருவானபிரிதிவினில் வளர்ந்தபிண்டம், சொற்பமென்றுநினையாதே துய்யபாலாதுப்புரவா ய் பிரதிவனில் வளர்ந்தசொர்னம், விற்பனர்கள்ராஜாதியோகிமாண் பர்விருப்பமுடன் கொண்டருளும் காயகற்பம், துப்புரவாய்யிருந்த தோர்க்குவொன்றுமில்லை துறைகோடி வரைகோடிகற்பமாமே. 201

கற்பமுண்பதற்கும் ஔஷதம்பலிப்பதற்கும் வாதஞ்
செய்வதற்கும் சூட்சமப்பூ.

வரையானயின்னமொருமார்க்கஞ்சொல்வேன் வளமையுள்ளபு லிப்பாணியிந்திரகோபுர, திரைமரைவுநேராமல்முப்புமார்க்கம் செப் புகிறேனுந்தமக்குப்புனிதவானே, முறையானவழிபாடு முன்னந்தம் முனையானசுருக்கமதுயிதிலடக்கும்,குறையாதுசிடிகையென்றவேதை யப்பா குவலயத்தில்சித்துமுனி சொல்லார்தானே. 202

தானனமனோன்மணியாள் கிருபையாலும்தாக்கானகாலாங்கிக டாட்சத்தாலும், தேனனமுப்பூவின்வளமைதன்னை தேற்றமுடன் வெளியாங்கமாகச்சொல்வேன், பானனமுப்பூவை யெடுக்குமார்க்கம் பாலகனேமுறைபாடுவழிபாடாகும், மானனபங்குனியாம் பருவந்த ன்னில் மார்க்கமுடனமாவாசைபருவந்தானே. 233

பருவமாம்வடக்குவெகுதூரமப்பா பாங்கானவளர்பூமிதன்னிற் சென்று, உருவுடனேநடுச்சாமவேளைதன்னில் வுத்தமனேமனோன்ம ணியையமனதிலெண்ணி, குருவானபூநீரையெடுப்பதற்குகொற்றவனே வெடிகாலந்தன்னிலப்பா, பருவமுடன்பூர்க்குமந்தமுப்புதன்னைபட் சமுடன்தானெடுத்துவறைபக்கேளே. 204

கேளேதான்முப்பூவென்ற பூநீர்தன்னைகவனமுடன்பிங்கானிற் பதனம்பண்ணு, நாளேதான்போகாமல் குருமுடிக்கும் நலமாகக்கை பாகஞ்சொல்வேனப்பா,பாளேதான்போகாமல்பூநீர்தன்னைபாங்கான நிலமதனிற்சொல்லக்கேளீர், ஆளேதான் பூநீர்களெடுத்தபூமி வதி லிருக்குமர்மமதையறைவேன்பாரே. 205

பாரேதான்வோராளுமட்டமாக பான்மையுடன் குறியதுதான் தோண்டும்போது, நேரேதான்பிரமமென்றகலைதானப்பாநேர்மையுட ன்தானிருக்கும்நிகலக்கேளு, தீரேதான் பிரமமென்றசுக்கான்கல்லே தீரமுடன்தானெடுத்துசொல்லக்கேளு, சேரேதான் கல்லதனைப்பத னம்பண்ணு செயலானபாக்கியமுமனேகமுண்டே. 206

உண்டானயின்னமொருமர்மஞ்சொல்வேன்வுத்தமனேமுப்பூவி ன்மார்க்கமப்பா, திண்டான கல்லுப்புவேணமட்டும் திரமுடனேதா னெடுத்துபுகலக்கேளும், வண்மையுடன் கல்லுப்பைபதனம்பண்ண வாருடனேபோகும்வகை வண்மைபாரீர், வண்பாகமூன்றையுந்தான் முடிப்பதற்கு நலமானமும்மூர்த்திசொரூபந்தானே. 207

காடிமுடிக்கவிபரம்.

தானானபழச்சாறுயென்றமார்க்கம்தண்மையுடன்முடிப்பதற்கு ப்பருவஞ்சொல்வேன், கோனானகுருவையென்ற நெல்தானப்பாகொ ற்றவனே அவிக்காமல்தானெடுத்து, பானானவரிசியது படிதானன்கு பாலகனேதானளந்து வரிசைபாரீர், மானானபுதுப்பாண்டம்தன்னில் தானும் மார்க்கமுடன்றான் சமைக்கும்வகைதான்கேளே. 208

வகையானவரிசியது பொங்கியேதான்வண்மையுடன்தானிரக்கி யாரப்போடு, தொகையுடனேமருபாண்டந்தன்னிலிட்டு தோறுமல் ஜலமதுவுஞ்சோடசந்தான், முகையுடனேபாணியென்ற தண்ணீர் தன்னை முசியாமல்தான்காய்ச்சி யிறக்கிக்கொண்டு, பகையானவாசி யென்றசாந்தன்னில் பக்குவமாய்நிலம்விட்டு மூடக்கேளே. 209

மூடவேரவியென்றவெய்யில்தன்னில் முனையானகாடியென்ற பாண்டந்தன்னை, நீடியேநாள்தோறுமருணன்முன்னில் நிலையானபா ண்டமதைவெயிலில்வைத்து, சாடியென்றபாண்டமதில் ஜலமுந்தா னும் தாக்கானரவியினிலேசுண்டுமட்டும், கூடியதோர்ஜலமதனைக்கா ய்ச்சிமைந்தாகொற்றவனே குறைவுக்குவிட்டிடாயே. 210

விட்டிடவேநாள்தோறுங் குறைவுமட்டும் வீரானகாடியென்ற பாண்டந்தன்னில், கொட்டளவுவெந்நீரையாரவைத்து குறையாமல்

நாள்தோறுமிப்படியேவாரு, சட்டமுடன்பாண்டமதையாறுதிங்கள் சாங்கமுடன் தினந்தோறும்ரவியில்வைத்து, திட்டமுடன்ராக்காலம் பனியில்வைக்க தீர்க்கமுடன்செய்குவதுப்பாகமாமே. 211

பாகமாங்காடியென்றபாண்டந்தன்னை பரிதிமுன்னே தினந்தோறும் வைக்கும்போது, நாகமதுசீரியதோர்விஷத்தைப்போலநாதாந்தக் காடிக்கிகாரமேரி, வேகமுள்ளசரக்குக்குகாலனுச்சுவேகாதசரக்கெல்லாம்வெந்துநீறும், யூகமுடன்காலாங்கிப்பாதம்போற்றி வுத்தமனே காடியது வழிசொன்னேனே. 212

சொன்னதொருகாடிதன்னையாறுதிங்கள் துப்புரவாய்ரவிதனிலேவைக்கும்போது, நன்னயமாய்நாதாக்கள் செய்பாகந்தான் நலமானபழச்சாறுயென்னலாச்சு, வின்னமதுநேராதுமுப்புமார்க்கம் விள்ளார்கள்சித்துமுனிரிஷிகள்தேவர், பன்னவேசாத்திரத்தில்சூட்சமுப்பு பாடவில்லேசித்தர்களும்பாடார்தானே. 213

தானான ஆதியென்றமுப்புதன்னை தண்மையுள்ளபதினெண்பேர் சித்துதாமும், மானானசாஸ்திரத்தில்சூட்சமாக மார்க்கமுடன்முடிக்கும்வகைசொல்லார்தாமும்,கோனானகுருநூலாஞ்சத்தகாண்டம்கூறினேன்போகரேழாயிரத்தில் பானனசூட்சமென்றமுப்புதன்னைபாருலகில்மாண்பருக்குப்பாடினேனே. 214

பாடினேன்காடியென்றபழச்சார்சொன்னேன் பாண்மையுள்ள நாதாக்கள்மறைத்துவிட்டார், நீடியதோர்சிவமுப்புயிந்தமுப்பு நீடாழியுலகமெலாமிதிலடக்கம், கூடியதோர்கருவிகாணுதியந்தம்குருவானஜெயநீர்களிதிலடக்கம் ஆடியதோர்சரக்குஅறுபத்துநான்கு வப்பனே சிவமுப்பால்மடிவுகாணே. 215

மடியவேசரக்குவறுபத்துநான்கும் மார்க்கமுடன்கைபாகஞ்செய்பாகந்தான், முடியுமேகைபாகம்தவறிட்டாலும்முனையான வயித்தியத்துக்காதியாகும், அடியானகாயகற்பமிதுவேயாகும்வப்பனேகாடியென்றபழச்சார்தானும், நெடியானகாரமதுயேற்றுதற்கு நேர்மையுடன்கைபாகஞ்சொல்லக்கேளே. 216

காடிதிராவகம்

சொல்லவேகாடியென்றமார்க்கந்தன்னை தோருமல்திராவகமாய் முடிப்பதற்கு, வெல்லவேவாலையென்றசக்ரவாலை வேகமுடன்தீநீராய்வாங்குதற்கு, புல்லவேகாடியென்றமண்பாண்டத்தில் புகழானவாலையதைமேற்பொதிந்து, சில்லுடனேசீலையதுவலுவாய்ச்செய்து தீர்க்கமுடன் வாலுகையாமடுப்பிலேற்றே. 217

ஏற்றவேதீபதூபந்தான்கொடுத்து யெழிலானவாலையென்றபா ண்டத்திற்கு, நாற்றிசையுங்குழலமைத்துசீசாவைத்து நலமுடனே திராவகத்தையிரக்கிக்கொண்டு, மேற்புறமாம்ஜலமதனைத்தள்ளிநீக்கி மேன்மையுடன்மறுபடியும்ஜலத்தைவாறு, ஆற்கமுடன்மறுபடியுங் குழலமைத்து வப்பனேதிராவகத்தைவாங்கிடாயே. 218

வாங்கியேதிராவகத்தைபதனம்பண்ணு வளமானகாடியென்ற பழச்சார்தன்னை, தூக்கியேதிரியாதேவருண்மைந்தாகேள் துப்புரவா ய்குருமுடிக்குந்திராவகந்தான், ஏங்கியேதிராவகத்தைமுடியாமற்று ன்யெழிலானவையகத்துமாண்பரெல்லாம், சாங்கமுடன்சாத்திரத் தையுணராமற்றான் சட்டமுடன்பலதுறையாய்ப்போனார்தாமே 219

பூவழலையெடுக்க.

தாமானவழலையதுயெடுக்கும்பூமி தாக்கானநெடுங்காசிதன்னி லப்பா, பூமான்கள்செல்வதற்குவளப்பஞ்சொல்லீவன் புகழான திண் டிக்கல்பீம்பாறையாகும், நாமேதான்சொன்னபடி திருப்புவனமாகும் நலமானயாவடியார்கோயில்தானும்,வேமேதான்விலாடபுரம்தன்னில் தானும் மிக்கானவயநாடுபூமியாச்சே. 220

ஆச்சப்பாதென்காசிபதியில்தானும் வப்பனேகன்னியாகுமரியா கும், நீச்சானவளையலென்றகுப்பிதன்னை நேர்மையுடன்தான்முடிக் கும்காளாஸ்திரிதானும், மூச்சுடனேநெடுந்தூரஞ் சென்றாலப்பா முனையானபாளமென்றகோயம்புத்தூர், வீச்சுடையபூமியதுபள்ள நாடு விரானகள்ளழகர்நாடுதாமே. 221

நாடானநற்மதாதேசமப்பாநலமானசித்தூரஞ்சிங்கிநாடு, பாடா ண்மைகொண்டதொருரீனதேசம் பாங்கானமுப்பூவுக்கிடமேயாகும் கோடானகோடிமனுமாண்பர்க்கெல்லாம் கொற்றவர்க்குபின்னும்மேட வஞ்சிநாடு, தாடாண்மைகொண்டதொருதேசமப்பா தாரணியில்பூவி ழலையெடுக்கும்நாடே. 222

எடுப்பதற்குயிந்நாடுசிந்துதேசம்யெழிலானதேசமெல்லாம்பின் னுடாகும், கொடுப்பதற்குசிவயோகிமாண்பருக்கு கோடானகோடி முறையிதிலொப்பாகும்,தடுப்பதற்குயிப்பூமிவிட்டாலப்பா தாக்கான பூமிவளதமக்குமில்லை, உடுக்கையென்றபிரகக்கல்தானுமப்பா வுத்த மனேயெடுக்கும்வகைசெப்பினேனே. 223

செப்பினேன்வழலையதுயெடுப்பதற்கும்செயலானகாடியதுமுடி ப்பதற்கும், ஒப்பானமுப்பூவின்மார்க்கந்தன்னை ஒழுங்குடனேமுடிப்

பதற்குவழிதான்சொன்னேன், தப்பிதங்களில்லாமல் குருமுடித்தல் தண்மையுள்ளமுப்பூவும் முடியும்பாரே. 224

பூநீறுகாய்ச்சல்.

பாரேதான்பூநீறுசுத்திசெய்து பாகமுட னெடுப்பதற்கு வகை யைக்கேளும், நேரேதான்பூநீறுபடிதானப்பா நிலையான முன்சொன் னகாடிதானும், சீரேதான்பூநீரில்விட்டுமைந்தா சிரப்புடனே கலக்கி யதைத்தெளிவுறுத்து, கூரேதான்ரவிதனிலேகாயவைத்துகொப்பெ னவேயுப்பதனையெடுத்திடாயே. 225

எடுத்துமெயிப்படியே பத்துமுறைகலக்கி யெளிதான ரவிதனி லேகாயவைதது, தொடுத்ததொருவுப்பதனைப் பதனம்பண்ணு தோ றுமல்பத்துமுறை செய்தவுப்பை, கெடுத்திடாவண்ணமதுஃபீங்கான் றன்னில், கவனமுடன்பதனமாய்ச்செய்துகொண்டு நடுத்தெருவாங் கருமியென்றமாண்பருக்கு நவிலாதே நவின்றிட்டால் சாபமாமே.

பிரம்மக்கலசுன்னம்

சாபமாமின்னமொருமார்க்கங்கேளு தப்பாதுகாலாங்கி வாக்கு தானும், பாபமதுநேராது புண்யவானே பாருலகில்சித்துமுனிசொல் லார்தாமும், கோபமதுகொண்டல்லோமுனிவர்தாமும், கூறுரே சிவ முப்புகுருட்சந்தன்னே, தாபமுடன்மனோன்மணியாள் கடாட்சத்தா லேசாங்கமுடனடியேனு நவின்றிட்டேனே. 227

இட்டதொருபிரம்மக்கல் தனையெடுத்துயெழிலானகருப்பதனை நீக்கிமைந்தா, தொட்டளவுகுருசொல்வாக்குபோல துறைமுகமுங் கண்டறிந்து பளிங்குக்கல்லாய். சட்டமுடன்கல்லதனை யிடித்துமை ந்தா சாங்கமுடன்பச்சையென்றபூநீர்தன்னை, திட்டமுடன் கல்லுக் குரெண்டேயாகும் நீரமுடன்றான்கலந்து பாண்டம்வையே.

பாண்டமதுதனிலமைத்துப்பாகங்கேளீர் பாங்காக முன்னுரை த்தகாடிநீரை, வேண்டியேபூநீறக்கரைதானப்பா விருப்பமுடன் பா ண்டமதிலூட்டுமைந்தா, தூண்டியதோர்கருமான யிரண்டும்வேக து ப்புரவாய்க்காடியென்றநீரினாலே, மாண்டிடவே தானெறிப்பாய்க்கா டிநீர்தான் மார்க்கமுடன் கண்டமட்டும் மெரித்திடாயே. 229

எரித்துமேபச்சையென்றகாடி நீரால் ஏற்றமுடன்தானலம்பிர யிற்போடு, மரித்துமேபிரமமென்றகல்தானப்பாமகத்தானஎண்ணே யது கக்கிப்போச்சு, குரித்தபொருள் பிரமமென்றசுண்ணக்கல்தான்

கூரானதேகமதுலதிகங்கொண்டு, தெரிந்துமே பொடிப் பொடியாம்
தகடுபோலாம் வெளிவானசுன்னத்துக்கிடந்தானுச்சே. 230

ஆச்சென்றுவிடுகாதேயின்னங்கேளு வப்பனேகாலாங்கிசொன்
னநீதி, காச்சலென்றசுன்னமதைத்தானெடுத்து கருவான கல்வமதி
விட்டுமைந்தா, மாச்சலென்றசிற்றண்டம்கருதானப்பா மகத்தானபி
ரமக்கல்சுன்னந்தன்னை, வீச்சுடனேதானரைப்பாய் மடியுமட்டும்வீ
றுனசுன்னமதைப் பில்லைசெய்யே. 231

செய்யவேசிறுபில்லைகாசதாக செம்மலுடன்ரவியுலர்த்திசொல்
வேன்பாரீர், துய்யதொருபில்லைமுகந்தானுலர்ந்து துப்புரவாய்மூசை
யிட்டுசீலைசெய்து, வையகத்தேதானிருக்கும் கருமமான வளமான
பாகமதையறியாமற்றுன், கைபாகந்தவறுமல்மைந்தாநீயுங் கருத்து
டனே உலையில்வைத்து ஊதுவாயே. 232

ஊதவேசுன்னமதுவாகுமாகும் உத்தமனேமூசையதுவழுகுமட்
டும், நீதமுடன்வூதிடனேசுன்னமாகும் நிலையானசுன்னமது பிரமக்
கல்லாம், தோதமுடன்மூசை தனையுடைத்துப்பாரு சுந்தரனேசுன்ன
மதுபிரமக்கல்லாம், சாதமதுதான்கொடுக்கும் சுக்காங்கல்லாம்சட்ட
முடன்நாதாக்கள் பெருமையாரே. 233

பாரேதான்சுன்னமென்ற பிரமக்கல்லை பாங்குடனேபீங்கானிற்
பதனம்பண்ணு, நேரேதான்சரக்குக்கேரலாச்சு நெடிதானபிரமக்கல்
லென்றசுன்னம், ஆரோதான்முடிப்பார்களப்பாகேளு ஆதியென்ற
சுன்னமதைமுடியாரப்பா, சீரேதான்சாத்திரத்திலுளவாறுய்ந்து சி
றப்புடனே பார்த்துவைத்தசுண்ணமாமே. 234

கல்லுப்பு காய்க்கமுறை.

சுண்ணமாமின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் சுந்தரனே ரகு
பாலாபுண்யவானே, வண்ணமுடன்கல்லுப்பு பெரிதாய்க்கொண்டு வ
ளமுடனேபடியதுவும் தானெடுத்து, திண்ணமுடன் பாண்டமதிலி
ட்டுமைந்தா, தீர்க்கமுடன்முன்சொன்ன காடிநீரை நண்ணமுடன்
மருபாண்டம்தன்னிலப்பா நலமுடனேஜலமதனை படிதான்வாரே.

வார்க்கையிலேமுன்சொன்னகாடிநீர்தான் வளமான பாண்டம
திலிட்டுமைந்தா, தீர்க்கமுடன்தான்கலக்கதெளுவிறுத்துதீரமுடன்
பாண்டமதையடுப்பிலேற்றி, எர்க்கவேயுப்பதுவும் பூர்க்குமட்டும்யெ
ழிலானவுப்பதனைகாய்ச்சியல்லோ, சேர்க்கவேமறுபடியுங் காடிவிட்
டுசிறப்புடனேகலக்கியதையெடுத்திடாயே. 236

எடுத்திடவேயிப்படியே பத்துமுறைகாச்சு யெழிலானகல்லுப் பும் குருவுப்பாகும், கெடுத்திடாவண்ணமது பீங்கான்றன்னில் கிரு பையுடன்பதனமதுமிகவாய்ச்செய்து, தொடுப்பதற்கு முன்போலே வுப்பைநன்றாய் சுத்தமுடன்சேர்க்கும்வகை விபரங்கேளு, அடுத்து மேமுன்சொன்னகைபாகந்தான் அப்பனேமுறைபாடு கூறுவேனே.

முப்பென்றதற்கு நாமம்.

கூறவேமுப்பென்ற மார்க்கந்தன்னை குவலயத்தில்மாண்பர்களு ந்தெளிவதாக, ஆறவேமுன்சொன்னவழலைமார்க்கம் வப்பனே பலம துவுமெடுத்துக்கொண்டு, மாறவேபிரமமென்ற முப்புதன்னைமார்க்க முடன்பலமதுவுமெடுத்துக்கொண்டு, தேறவேகல்லுப்புசுன்னந்தன் னைதேற்றமுடன் பலமதுவும் வொன்றாக்கூட்டே. 238

கூட்டியேமூன்றையுந்தா னொன்றாய்க்கூட்டி குறிப்புடனேவீர முடன்புழுகுதானும், தேட்டமுடன்வார்கனதுரண்டேயாகும்தெளி வுடனேமுன்சொன்னநாடிதன்னை, வாட்டமுடன்தானரைப்பாய்நா லுசாமம் வளமானபில்லையது லகுவாய்ச்செய்து, நீட்டமுடன் ரவித னிலேகாயவைத்து நிஷ்களங்கமானதொரு வகலில்வையே. 239

அகலானபாண்டமது தன்னில்வைத்து வப்பனேசீலையது வலு வாய்ச்செய்து, அகலானரவிதனிலே காயப்போடு பாங்குடனேகாய்ந் தபின்புசெப்பக்கேளு, நிகலவேதோழியென்றபுடந்தான்போடு நிஷ் களங்கமாகவல்லோ நீறிப்போகும், புகலவேபற்பமதைப்பதனம்பண் ணுபுகழானமனோன்மணிக்குப் பூசைசெய்யே. 240

பூசையாமனோன்மணியா ளாராதாரம் பொங்கமுடன்தான்செ ய்துயெடுத்துமைந்தா, ஆசையதுகொள்ளாம லருண் மைந்தர்கள் வப்பனே சிசாவிற்பதனம்பண்ணு, காசுபணம்தேடுதற்கு வுரிமைகே ளுகனமானபாஷாணம் பலந்தானொன்று, மாசுபடாமுப்பூவும் பலந் தான்காலாய் மார்க்கமுடன்கல்வமதில் போட்டிடாயே. 241

போட்டவுடன்சாக்கதுவு மொன்றாய்க்கூட்டி பொங்கமுடன் முன்னுரைத்தகாடிநீரால், வாட்டமுடன்தானரைப்பாய் சாமமப்பா வளமானபில்லையது லகுவாய்ச்செய்து, நீட்டமுடன் ரவிதனிலே கா ய்ந்தபின்பு னீதியுடன்முன்சொன்ன மார்க்கம்போலே, மேதட்ட மு டன் புடமதுவுங்கோழிபார் தெளிவுடனேபோடுவதும முறைதான் கேளே. 242

முறையானபுடமதுவுமாறிப்பின்பு முனையானபற்பமதை யெடுத்துமைந்தா, நிறைபோடுவனுவளவுங் குறையுமில்லை வீட்டமுடன் பற்பமதுபாரமெத்த, குறையாதுபாஷாண மென்னசொல்வேன் குவலயத்தில் சித்துமுனிகூருவண்ணம், அறைந்தேனே வுலகுபதிமாண்பருக்கு வப்பனேசிவயோக தலத்தில்லே. 243

நிற்கையிலேயமுனேன்மணியாள் மனதுவந்து நிஷ்களங்கமாகவல்லோவுனுக்குமைந்தா, சொற்பமென்ற வாதமதுபலிக்கும்பாரு சுந்தரனேவுன்னைப்போலசித்துமுண்டோ, அற்பமென்றுநினையாதேதுய்யபாலாவருண்மைந்தா முப்பாலே யெல்லாஞ்சித்தி, விற்பனர்கள் கொண்டாடுமிந்தவேதை மேதினியில்சமுசாரிக்கானவாறே. 244

வாரானபற்பமதுபோக்குசொல்வேன் வளமையுள்ள வெள்ளீயந்தன்னைத்தானும், கூரானசேபதுதானென்றேயாகும் குறிப்புடனே தானுருக்கிசெப்பக்கேளும், நீரானபாஷாண பற்பந்தன்னை நீமகனே வராகனிடைகாலதாக, சேரோடும்வெள்ளீயமுறுக்குயல்லோ செம்மலுடன்பற்பமதை தாக்குவாயே. 245

தாக்குவாய்வெள்ளீயம் பற்பத்தாலே தண்மையுள்ள நீரதுவுமுரிந்துகொள்ளும், வாக்குடனே காலாங்கிமொழிபொய்யாது வளமையுடன் போகரேழாயிரந்தான், நோக்கமுடன் நீர்வடிந்து வெள்ளிதன்னை நுணுக்கமுடன் வருமைவருங் காலந்தன்னில், ஏக்கமது கொள்ளாமல் வெள்ளிதன்னை யெளிதாகசமுசாரி யுண்ணலாமே.

உண்ணவென்றால் சாபமதுயாதுமில்லை வுத்தமனே சரக்குவறுபத்துநான்கும், திண்ணமுடனிம்முறைபோல் செய்வாயப்பா தீரமுடன்சரக்குவறுபததுநான்கும், வண்ணமுடன்நிற்றுதற்குப் பிசகோயில்லை வளமானமுப்பூவின் சுன்னமப்பா, சுன்னமுடன் முப்பூவின் காரத்தாலே நலமானசரக்கெல்லாம் நீறிப்போமே. 247

நீறுமேசூதமென்றசரக்குதானும் நீதியுடன்பலமதுவுமெடுத்துக்கொண்டு, வீறுடனேமுப்பூவை சரியாய்க்கூட்டி வீரமுடன் முன்சொன்னநாடிதன்னால், மாறாதலும்தேராமல் பற்பந்தன்னை மார்க்கமுடன்தானரைப்பாய் சூதங்கட்டி, நூனுடனே கலசமென்ற பாண்டந்தன்னில் துப்புரவாய் சில்லிட்டுச் சீலைசெய்யே. 248

சிலையதுயெழுசிலைவலுவாய்ச்செய்து சிறப்புடனேரவிதனிலே காயவைத்து, வாலையென்றயந்திரமாம்புவனைவாலைவளமானவாலுகை யாமடுப்புதன்னில், காலையதுஜாமமதுநாலதாக கருவானசூதமதை பெரிப்பாய்நீயும், மாலையதுசூதமதையெடுத்துப்பார்க்கமகத்தானகடு ங்கார சுன்னமாச்சே. 249

அறுபத்துநான்கு சரக்காலும் வேதைமுகம்.

சுன்னமென்றால்சுன்னமதுயென்னசொல்வேன் சுந்தரநேநாதாக்கள்செய்யும்வித்தை, வின்னமதுவாராது யிந்தப்போக்குவிருப்பமுடன்செய்வதற்கு மனதுவந்து, அன்னமெனுங் காடியின்றன்பழச்சாரப்பா, ஆகாகாசித்துமுனி மரத்தாரங்கே சொன்னமதுமுப்பூவால்கைக்குள்ளாச்சு சோறாமல்செய்பவர்க்குசித்தியாமே. 250

சித்தியாம்பஞ்சபூதசரக்கைத்தானும் சிறப்புடனேதானெடுத்து செப்பக்கேளீர், வெத்தியுடன்முப்பூவைசரக்குபாதி வேகமுடன்காடியின்றன்பழச்சாராலே, சுத்தியுடன்தானரைத்து பில்லைசெய்துதுப்புரவாய்ரவிதனிலேகாயப்போடு, சுத்தியுடன்வோட்டி விட்டுச்சீலை செய்து சாங்கமுடன்புடமதுவுங்கோழிதானே. 251

தானானகோழியதுபுடமதாக தண்மையுடனாறினபின்னெடுத்துப்பாரு, கோனானகுருசொன்னவாக்குபோலேகொற்றவனேபற்பமது தவளம்போலாம், மானானபற்பமதையெடுத்துமைந்தாமகத்தானசீசாவிற்பதனம்பண்ணு, பானானரவிமதியில் தாக்கவல்லோபாண்மையுடன்சொல்லுகிறேன் பண்பாய்த்தானே. 252

பண்பானவெள்ளிசெம்பில் பத்துக்கொன்னுபாங்குடனேபற்பமதையொன்றுதாக்க, நண்பானமாற்றதுவுமேழதாகும் நலமானபுடமதுவுக்கேகாவர்ணம், திண்பானபட்டசெம்பு ஆறுவெள்ளிதீர்க்கமுடன்தான்கொடுக்க மாற்றெட்டாகும், உண்மையுடன்தங்கமதுநாலுக்கொன்று வுத்தமனேசேர்க்கநலமாகும்பாரே. 253

பாரேதானவமதுவுமொன்பதாகும்பாங்கானபுடத்தங்கம்பிறவித்தங்கம், சீரேதான்பஞ்சமுகக் கருத்துதானும் சிறப்புடனேமறைத்துவைத்தார்சித்துதாமும், நேரேதான் சரக்குவறுபத்துநான்கும்நேர்மையுடன்முன்சொன்னமுப்பூவாலே, வீரேதான்சுண்ணமென்றமுப்பூவாலே விண்ணுலகும்மண்ணுலகுங் காணலாமே. 254

காணலாமுப்பூவா லனந்தப்போக்கு காசினியில்நாதாக்களாடுங்கூத்து, பூணவேசிவயோகிசித்தருக்கு புகட்டவில்லையிந்தவழிமுப்பூ

மார்க்கம், தோணவேகைமுறையாயெடுத்துபாகம் துப்புரவாய்வைய கத்துமாண்பருக்கு, வேணதொருகருவிகாணுதியந்தம் விருப்பமுடன்பாடிவைத்த நுண்மைதானே. 255

பாடினேன்முப்பூவின்வழலைமார்க்கம் பாருலகில்சகலசித்துமாடும்பாரு, நீடியதோர்முப்பூவைக்கூன்றிவீதம் நீதியுடன்மண்டலந்தான்கொண்டாயானால், வாடியதோர்திருமேனி சடலந்தானும்வண்மையுடன்காயாதிகற்பத்தாலே, கூடியதோர்தேகமது சட்டைதள்ளும் குணமானமுப்பூவின் காட்சிகேளே. 256

காட்சியாம்முப்பூவைக்கொண்டபேர்க்கு காசினியில்நரைதிரையுமில்லையப்பா, மாட்சியுடனெடுங்காலமிருக்கலாகும் மகத்தானவாசியதுமேல்நோக்காது, நீட்சியுடன்பகாம்புயத்தை நண்ணலாகும் நிஷ்களங்கமானதொருசித்தனாவான், மீட்சிபெறவையகத்தில்மாண்பரெல்லாம் மேன்மையுடனென்னைத் துதிப்பார்பாரே. 257

துதிக்கையிலேசித்துமுனிரிஷியார்தாமும் துரைராஜசிவயோகியிவரேயென்பார், மதிக்கவேயெல்லவர்க்கும்போகவாளும் மகத்தானகாயாதிகற்பத்தாலே, விதித்ததொருவயதகுவுமேலதாகிமேதினியில் வெகுகாலமிருப்பாயப்பா, துதியானமுப்பூவின்கைபாகந்தான்சாற்றவில்லைவெகுகோடி ரிஷிகள்பாரே. 258

கோடியாங்காலாங்கிகிருபையாலே கூறினேன்போகரேழாயிரந்தான், தேடியேபார்த்தாலுங்கிட்டாதப்பா தேசத்தில்விட்டகுறையிருந்தால்கிட்டும், வாடியேயலையாதேமன்னுகேளு மகத்தானபோகரேழாயிரந்தான், பாடியதோர்போகரேழாயிரத்தில்பாங்கானகடைக்காண்டம்முப்பூபாரே. 259

பாரேதான்போகரேழாயிரத்தில் பட்சமுடன்காண்டமதுயேழுதன்னில், நேரேதான்கடைக்காண்டமேழிலப்பாநெடிதானமுப்பூவாஞ்சூட்சமப்பு, சீரேதான்வையகத்துமாண்பருக்குசிறப்புடனே பாடிவைத்தேன்சூட்சமாக, ஆரோதான்கருவாளிசெய்வானப்பாவப்பனே யண்டபிண்ட மறிவான்கேளே. 260

## போகர் புலிப்பாணிக்கு பூநீறெடுக்க புத்திகூறுதல்.

கேளேதானின்னமொருமார்க்கஞ்சொல்வேன் கெடியானபுலிப்பாணிமன்னுகேளு, மீளேதான் பூநீறெடுப்பதற்கு மீளாமல்வெகுமாண்பர்மாண்டாரப்பா ஆளேதான்வையறியா மாண்பரப்பாவப்பனேசாத்திரங்கள்படித்துக்கெட்டு, சூளேதான்சுடுவாதிமாண்பர்கூடி துறைமுகத்தைக்காணமல் கெட்டார்தாமே. 261

கெட்டதோர்மாண்பர்களின்சாத்திரவண்ணம் கேடறியார்பாட றியாரயுனுங்காணூர், நட்டதொருபயிரதனைகளைகள்போக்கநாதாந்த சித்துமுனிசொல்லைப்போல, விட்டகுறையிருந்ததொரு மாண்பர் போலேவீணுகைவாசைகொண்டுமதியுங்கெட்டு, தொட்டலைந்துபூநீரா யெடுக்காமற்றுன் சேர்ந்துருண்டுவெகுபேர்கள்மடிந்தார்தானே.

மடிந்தாரேவையகத்துமாண்பரெல்லாம் மகதேவர்கடவுளதுயே மவித்தை, கடிந்ததொருபொருளறியமாட்டாமற்றுன் காசினியில் வெகுமாண்பர்மாண்டாரப்பா, முடிந்ததொருசிவாநந்தப்பொருளைக் காண மூதுலகில்யாராலுங்கிட்டுமோசொல், படிந்தபொருள்முப்பூ வின் நிதானமார்க்கம் பாருலகில்விதியாளியறிவான்பாரே. 263

விதியானவிதியிருந்தாலதற்குக்கிட்டும் வீணுககருமிகட்குகிட் டுமோசொல், துதியானபராபரமானவஸ்துதன்னை துறைமுறையாய் க்கண்டறிந்தோன்காண்பான்பாரு, மதியானமூடனுக்குவாய்க்குமோ சொல்மகத்தானயேமவித்தைபிரம்மவித்தை, கதிகாணயெண்ணமது கொண்டபேர்க்கு கைவசமாம்யேமவித்தைகிட்டும்பாரே. 264

கிட்டுதற்குபூவழலையெடுக்கவல்லான் கீர்த்தியுடனடராஜனரு ளைவேண்டும், தொட்டகுறிபோலதுபோல்காண்பதற்கு துரைராஜர் குருமுறைகள்வேண்டுமப்பா,பட்டமரம்போல்துளுக்கும்வழலைகாண பராபரியாள்கிருபையதுவேண்டுமப்பா, விட்டகுறையிருந்தாலேலை பிக்கும்பாரு விருதாவாய்மாண்டவர்கோடியாமே. 265

கோடியாமனுகோடிராஜமன்னர் குவலயத்தில்வழலையுடமார்க் கந்தன்னல், நாடியேவழலையதுபூர்க்குங்காலம் நலமுடனேகண்டறிய மாளாமற்றுன், ஓடியேயபிருமாப்புவனப்புவாய்ந்து ஓகோகோமாண்ப ரெல்லாமடிந்தாரப்பா, நீடியதோர்பொருளதுவும் விஷகாலந்தான் நிகட்சியுடன்யெடுப்பதற்குயில்லைதானே. 266

இல்லையேவெகுபேர்கள்மாண்பரப்பா யெழிலானசாத்திரத்தை ப்பாராமற்றுன், அல்லல்படுந்துயரமதுவருமையாலே வன்புடனே பூநீரையெடுப்பதற்கு, தொல்லையெனுஞ்சாத்திரத்தை முன்பின்னுக சேராமல்பாடிவைத்தார்சித்தர்யாவும், கல்லுதெய்வம்பேசுமென்று கையெடுத்து காசினியில்கதையுரைத்தகாட்சியாமே. 267

காட்சியாம்கனகமென்றபொருளையப்பா காசினியில்வெகுபேர்கள்காண்பதற்கு, தாட்சியில்லாசாத்திரங்கள்கண்டாராய்ந்துதடுமாறி தலைமாறிக்கலையுமாறி, மாட்சியுடன்கோர்வையென்ற சாத்திரத்தை மார்க்கமுடன்காணாமல் மயங்கினார்கள், ஆட்சிபந்தம்வெகுநூல்கள் சொன்னாருண்டு வப்பனே குருநூல்தான்பாரார்தானே. 268

பாராமல்மாண்பரெல்லாம்பதியுங்கெட்டு பாங்கானசாத்திரத்தின்முறையுங்கெட்டு, நேரேதான்சாத்திரத்தைவிட்டகற்றி நேர்மையுடன்மதியூன்றிபாராமற்றான், பூராயமானதொருரிஷிகள்நூலில் புகன்றிட்டமர்மமதையறியாமற்றான், சாராயமானதொருவஸ்துதன்னை சாங்கமுடன்கற்பமென்றுகொண்டிட்டாரே. 269

கொண்டாரேலாகிரிகளருந்தியல்லோ கோடானகோடிநூல்கள் மறைத்திட்டார்கள், விண்டதொருசாத்திரத்தை வினயங்கொண்டு வீண்காலம்போக்கியல்லோ மடிந்திட்டார்கள், கண்டனையாஞ்சாபமதுவுள்ளுமாகிதாரணியில்வெகுபேர்கள்சமைத்திட்டார்கள், சண்டமாருபோலேசத்தகாண்டம் சாற்றினேன்போக ரேழாயிரமுங்காணே. 270

புலிப்பாணிக்குபோகர் மறுபடியும்புத்திகூறல்.

காணவேயின்னமொருமார்க்கஞ்சொல்வேன் கருவானபுலிப்பாணிமைந்தாகேளு, தோணவேபூநீரையெடுக்கும்போது சுந்தரனேயுந்தனுக்குபயமுண்டாகும், வேணதொருசித்துமுனிரிஷிகள்தாமும் வேதாந்தத்தாயினதுகடாட்சத்தாலே, பூணவேவேஷமது மாறாமல் கொண்டு புகழானமுன்னிற்பார்பிரம்மைபாரே. 271

பாரேதான்வேஷமதுபூண்டுகொண்டு பாங்கானகபாலமதுயேந்திகொண்டு, நேரேதான்முன்னாகவந்துநின்று நேர்மையுடனுங்காரகொர்ச்சிப்போடும், ஆரோதான்பூநீரையெடுக்கவல்லான் வாண்பிள்ளை நீதானோவென்றுகூறி, தேரோடும்சத்தமனகிரிச்சிபோலும் தேற்றமுடன்சத்தமதுகேட்கும்பாரே. 272

கேட்டுமேசித்துமுனியசரீர்வாக்கு கெவனமுடன் கேட்டதுவுமுந்தமக்கு, ஆட்களில்லாவனந்தனிலேயிந்தவோசை வப்பனேவதிசயங்கள்காணுதென்று, நிட்கமுடன்தலையெடுத்துப்பார்க்கும்போது நிலையானகறுப்பண்ணர்சாமிபோலே, வீட்கமுடன்முன்னிற்ககண்டபோது வித்தகனேபயந்தொடுங்கிசாவார்தானே. 273

சாவாரேயின்னபோரு மார்க்கஞ்சொல்வேன்சட்டமுடன்வோமென்றுவேதத்தோடும், ஆவதுபோல்மகபேரு தன்னைப்போலேகப்

பனேஜடலமதுகொண்டுமல்லோ, வேவனுடன்சவுக்காரவழலையாலே வேதாந்தத்தாயினது வருளினாலே, மேமனுடன்நடுக்கமது பலமுண் டாய மேதினியில்வெகுமாண்பர் மடிந்தார்தானே. 274

வையகத்துமாண்பர் பூநீரெடுக்கும்போது கருஞ்சாரையி

னபாயத்தை போகாபுலிப்பாணிக்கு வுபதேசித்தல்.

தானையின்னமொருமார்க்கஞ்சொல்வேன் தண்மையுள்ளபுலி ப்பாணிமைந்தாகேளு, கோனையெனதையர் காலாங்கிநாதர் கொற் றவனாரெந்தனுக்குச்சொன்னநீதி,பானைவையகத்துமாண்பரெல்லா ம்பாருமல்பூநீறினபாயந்தன்னை, மோனைமௌனமென்றமதியீனத் தால் மூதுலகில்சாபத்தால் மடிந்தார்தாமே. 275

மடிந்தாரேவன்போடுங்கூடியல்லோ மகத்தானமேன்மக்க ளிரு வர்கூடி, துடிந்ததொருபூநீறையெடுப்பதற்கு துப்புரவாய் மனதுவந் துமாண்பர்தாமும், விடிந்ததொருநாழிகையில் ஜாமந்தன்னில்|விடுப ட்டுவனாந்திரத்திலிருவர்தாமும், முடிந்ததொருமுப்பூவைக்காண்பத ற்கு மூயற்சியுடன் பூமிவளஞ்சென்றிட்டாரே. 276

சென்றாரேவனந்தனிலேவிருவர்தாமும் சிறப்புடனேபூநீரை எ டுக்கும்போது, அன்றறிந்தகருஞ்சாரை சற்பந்தானும்வப்பனேபூநீற் றையெடுக்கவந்த, நின்றிருந்தசிவயோகிமாண்பர்தம்மை நெடுந்தூரந் தான்துரத்திவருகும்போது, குன்றானமலைபோலே விருட்சமப்பாகூ றானவிருட்சந்திலேறிட்டாரே. 277

ஏறினதோர்மாண்பர்தம்மைகண்டபோது யெழிலானசற்பமது விருட்சந்தன்னில், சீறியேதான்கண்டுசினந்துமேதான்தீர்க்கமுடன் சிவயோகியிருவாதம்மை, மீறியேதீண்டுதற்கு விடமுங்கொண்டு மிக் கானமானிடரைக்காணும்போது, தூறியேசிவயோகி யிருவர்தாமும் துப்புரவாயம்பதனாலெய்திட்டாரே. 278

எய்யவேசற்பமதின் சிரசிற்பட்டுயெழிலானசற்பமதுமடிந்துத ங்கே, பையவேசிவயோகிமாண்பர்தாமும் பார்த்துமேசர்ப்பமது மடி ந்ததென்று, துய்யநல்லவிருட்சமதைவிட்டிறங்கி தூயதான வடிமட் டும்வருகும்போது, வெய்யதொருவதிசயங் ளென்னசொல்வேன்வே தாந்தத்தாயினுடமகிமைகேளே. 279

இறந்துபோனகருஞ்சாரையை மற்றொரு கருஞ்சாரை

மூலிகையாலெழுப்புதல்

கேளப்பாபுலிப்பாணிமகனேமைந்தா கீர்த்தியுள்ளமகிமையது மென்னசொல்வேன், ஆளப்பாசிவயோகியிருவர்தாமும் வப்பனே பூ

வெடுத்தவண்மைதன்னை, மாளப்பாபூவெடுக்குங்காலந்தன்னில் மகத்தானகருஞ்சாரைகண்டுமல்லோ, மீளப்பாபோகாமலிருப்பதற்கு மீட்சியுடன்சந்திரங்கள் செய்யலாச்சே 280

தந்திரமாமூலியுடமகிமைதன்னை சதகோடிசூரியரும் கண்டதில்லை, விந்தையுள்ளசித்தராதிருக்கூத்தப்பா விண்ணுலகு மண்ணுலகுங்கண்கொள்ளாட, சிந்தையுடனிருமனதுமொன்றதாகி சிறப்புடனேபூவழலையெடுக்கும்போது, வந்ததல்லோகருஞ்சாரை காலந்தானும்வளமையுள்ளமகிமையது புதுமைதானே. 281

புதுமையாம்சர்ப்பமது யென்னசொல்வேன் புகழாகமூலிதனை மனதுவந்து, கதுமையுடன்கானகத்தில்சென்றுமல்லோ கடிதானமலைகுகைகள்தான்கடந்து, மெதுவான சஞ்சீவிமூலிதானும் மேன்மையுடன்வாய்தனிலே கௌவிக்கொண்டு, பதுமமென்றசர்ப்பமது யிருக்கும்ஸ்தானம் பான்மையுடன்வந்தல்லோ நிற்கலாச்சே. 282

நிற்கின்றமறுசர்ப்பந்தன்னைக்கண்டு நீதியுடன்சிவமாண்பரிருவர்தாமும், அற்பமென்றுநினையாமல் வாலோசித்து அறிவுள்ள சர்ப்பமதைகண்ணிற்கண்டு, துப்புரவாயெய்ததொரு சர்ப்பந்தன்னைதுணிவுகொண்டுமூலிதனை மணங்கள்வீச, சொற்பெரியசர்ப்பமது வுயிருண்டாக்கி சோருமலெழுந்திருக்கக் கண்டிட்டாரே. 283

கண்டாரேசர்ப்பமது மூலிதன்னால் கைலாசஞ்சென்றதொருசர்ப்பந்தன்னை, பண்டுளவமாலையணி கிருஷ்ணன்கொண்ட பாங்கானமூலியதுவிஷமூலிதானும், தொண்டல்லோ தான்கொடுத்துவுயிருண்டாக்கி கூட்டுறவாயழைத்து கொண்டுசென்றநேர்மை, சண்டமாருதம்போலேயிருவர்மாண்பர் சட்டமுடன்பிரமித்து திகைத்திட்டாரே.

திகைத்துமேசிவமாண்பரிருவர்தாமும் தீர்க்கமுடன்மனஞ்சேர்ந்துநிற்கும்போது, புகைபடர்ந்தவனந்தனில்சர்ப்பந்தானும்புகட்சியுடன்முன்னிறந்தசர்ப்பங்கூட்டி, பகைபோன்றசிவ மாண்பரிருவர்காணபாங்குடனே கானகத்தைச்சென்றவண்ணம், தகைமையுடன் சர்ப்பமதுகொண்டுசெல்லதாட்சியுடன் சிலமாண்பர்பார்த்திட்டாரே

பார்த்துமேசர்ப்பமதுசென்றுதென்று பாங்குடனேசிவமாண்பரிருவர்தாமும், கீர்த்தியுள்ளமூலிகைதானென்றறிந்து நேர்மையுடன்சிவமாண்பர்மனதிலெண்ணி, பூர்த்தியுடனிருக்கப் பயந்தானுண்டோ புகழானவடிவாரமரத்திற்றானும், கார்த்திருந்துமூலிதனைக்கையிற்றானும்கவனமுடன்னெடுத்துவர நண்ணினாரே. 286

## சிவமாண்பரிருவரும் சர்ப்பத்தின் மூலியெடுத்து துன்பப்படுதல்.

நண்ணியேசர்ப்பமது சென்றபின்பு நாதாந்தத்தாயாரைமனதிலெண்ணி, குண்ணியேமனதுவந்துமுகமும்வாடிகூறானமூலிதனையெடுக்கவல்லோ, வண்ணமுடன்சிவமாண்பரிருவருந்தான்வளமையுடன்வுறவுகொண்டாடிகூட, திண்மையுடன்மூலிதனையொரு தோழன்றான்துப்புரவாய்ததானெடுக்கக்கண்டிட்டேனே. 287

கண்டேனேசிவமாண்பர் மூலிதன்னை கரந்தனிலே மூலிதனைத் தொட்டபோது, அண்டர்பிரான்மகிமையது யென்னசொல்வேன் ஆகாகாவையகத்தில்யார்தான்கண்டார், சண்டமாருதம்போலேசர்ப்பந்தானும் சட்டமுடன்மூலிதனைவைத்தநேர்மை, தண்டகம்போலடியேனுங்கண்டுயேங்கி சட்டமுடன் மகிமைதனைப் பார்த்திட்டேனே.

பார்த்தேனேசிவமாண்பரொருவன்தானும் பண்பானமூலிதனைக்கரத்திற்றானும், நேர்த்தியுள்ளமூலிதனையென்றயப்பி நேர்மையுடன்கரந்தனிலேயெடுக்கும்போது, பூர்த்தியுள்ளமூலியதுயென்னசொல்வேன் புகழானவஞ்சனமாம்மூலிதானும், ஆர்த்தியுடன் சிவமாண்பர்தோழன்றன்னை வப்பனேயிருக்கவது பார்த்திட்டேனே 289

பார்த்தேனேமூலியதுமகிமைதன்னைபாண்மையுடன்பிர்ம்மித்துயேங்கும்போது, தீர்த்தமுடன்மூலியது வளத்திற்றானும்தீர்க்கமுடன்சிவமாண்பர்கரத்தைப்பற்றி, நேர்த்தியுடன்மூலியது தன்னைத்தானும் நேரானவனந்தனிலே யிழுக்கும்நேர்மை, பூர்த்தியுடன் யான்கண்டுதிடுக்கிட்டேங்கி புகழாகக்குளிகைகொண்டு வந்திட்டேனே.

வந்தேனேகல்லாலின் மரத்தின்பேரில் வளமையுடன் குளிகை கொண்டுநிற்கும்போது, அந்தமுள்ளசிவமாண்பர் தன்னைத்தானும்வதிதம்மைசிறப்புடனேதானிழுக்கும், வண்மைமார்க்கம் தந்திரமாமூலியதுவசியமூலி தண்மையுடன்மகிமையது கூறுவேனே. 291

கூறுவேன்புலிப்பாணி புனிதவானே குவலயத்தில் சித்துமுனியாரேனுந்தான், சீறுகின்றசர்ப்பத்தின் கற்பமூலிசீருலகில் கண்டவர்களெவர்தானுண்டு, தேறுபுகழ்பதினெண்பேர் நவகோடிதாமும்தேசமதில்வெகுமகிமை பூண்டாரல்லோ, மாறுடையகூறுஞ்சாரை சர்ப்பமூலிமாநிலத்தில்கண்டவர்களில்லைதாமே. 292

இல்லையேசித்தர்களுன்வணக்கங்கூறுர் எழிலானசாத்திரத்தை தானுங்காணுர், தொல்லையெனும்வனமூலி விஷத்தைக்காணுர் தொட்டதொருகிட்டிருந்தமூலிகண்டார், அல்லல்வினைதானறுக்கும் வசியமூலியவனிதனில்வெருசித்தர் கண்டாருண்டு, கொல்லிமலைதிரிந்தாலுமிந்தமூலி குவலயத்தில் கிட்டாது கிட்டாதன்றே. 293

கிட்டாதுமென்றதொருமூலிதானும் கீர்த்தியுள்ளசிவமாண்பர் தன்னையல்லோ, எட்டாதபொருள்தேடிப்போனதாலே எழிலானசிவமாண்பர்தானுமங்கே, சட்டமுடன்பணியைநம்பி யுழுதவர்போல் சாங்கமுடன்மூலியது வினையமாச்சு, கிட்டகுறைமிருந்தகனல்வாய்க்கும்பாரு விண்ணுடர்மண்ணுடர் காணுர்தாமே. 294

தானனபதாம்புயத்தைக்கண்டாலல்லோ தாக்கானவசியமூலிவாய்க்கும்பாரு, மானனசிவமாண்பர்மூலிகொண்டு மகத்தானகானகத்தேசெல்லும்போது, பானனபாம்பதுதான்சென்றபாதை பாங்கானபடும்பாதையென்றேயெண்ணி, கோனனகுருதனையேமனதிலுன்னி கொற்றவனுர்மோசமென்று நினைத்திட்டாரே. 295

மோசமதுவந்ததென்று மனதிலெண்ணிமுனையான சிவமாண்பரேதுசெய்தார், பாசமுடன்கைதனிலேயிருந்தமூலி பட்சமுடன்பூமிதனிலுதறிட்டாரே, நாகமதுகொண்டதொருமூலிதானும் நற்கமலகரந்தனிலே வீழாமற்றானும், வீசலுடன்மூலியதுகரத்தைப்பற்றிவிருப்பமுடன்கானகத்தி லிழுக்கலாச்சே. 296

ஆச்சப்பாமூலியதுயிழுக்கும்போது வப்பனேகூடிருந்த தோழன்றானும், மூச்சுடனேயவர்கரத்தையிவருங்கூடி முனையாகத்தானிழுக்கப்பார்த்தேன்யானும், கூச்சலுடனிருவருமேகுய்யோவென்று கூர்மையுடன்மனதுவந்து யெண்ணங்கொண்டு, பாச்சலுடன்கரமிருந்தவாளால்தாமும் பான்மையுடன் கரமதனைதுணித்தார்பாரே. 297

பாரேதான்கரமதுவுந்துணிந்தபோது பாங்குடனேமூலியுடன்கானகத்தில், நேரேதான்கரந்தனையே மூலிதானுந்நேர்மையுடன்தானிழுத்துபோகக்கண்டேன், சீரானசிவமாண்பரிருவர்தாமும் சிறப்புடனேமறுபடியும் பதிதிரும்பி, கூரானபூவமலை காய்க்கு மார்க்கம் குறிப்புடனேவந்துமல்லோ யமர்ந்திட்டாரே. 298

கறுஞ்சாரைமூலியால்முப்பூஎடுக்கப்போனசிவமாண்பர்
கரமிழந்துமறுபடியும்குரு வருளால்வழலையெடுத்தல்.

அமர்ந்தாரேசிவமாண்பரிருவர்தாமும் வப்பனேபுலிப்பாணிமை ந்தாகேளு, சுமர்ந்ததொருவிருட்சமதில்பின்னுமாண்பர் சுந்தரனே மறுபடியும்யேங்கிவந்து, சமர்த்துடனேபூவழலையெடுப்பதற்குசட்ட முடன்குருசொன்னநீதிபோல, தமர்ந்திடாவண்ணமுடன்புனிதவா ன்கள் சட்டமுடன்தானெடுத்தார்புண்யராமே. 299

மூலியாலிழந்தகரத்தைசர்ப்பம் தன்னுசீர்மத்திலிருக்கும்
குருவாகியசித்துவுக்குகாண்பித்தல்.

புண்ணியராம் புலிப்பாணிமைந்தாகேளு புகழானசிவமாண்பர் கரத்தையல்லோ, வண்ணமுடன்சர்ப்பமதுமனதுவந்துவளமையுடன் தன்தேவன்குருநாதர்க்கு, திண்ணமுடன்கரந்தனையேகாட்டவென் று தீர்க்கமுடன்வாயுதனிலேகெளவி யல்லோ, எண்ணறியநற்பொரு ளேயெந்தன்நாதா யெழிலானகானகத்தின்வளமைகேளே. 300

சர்ப்பம்குருவுக்குசுரம்வந்த விசேடமுறைத்தல்.

கேட்கலென்றுலடியேனுங்கானகத்தில் சீர்த்தியுடனுனபெண் ணுய்தானிருந்தோம், மீட்கமுடன்யிரைதேடிபோகும்போது மிக்கா னகானகத்தில்யாம்திரிந்தோம், சூட்சமுடன்பாலையென்றவனத்தில் நாங்கள் சுந்தரமேசித்தொளிவேபோகும்போது, ஆட்கள்விட்டுவொ ருவரையும்பிரிந்துமல்லோ வையனேகல்லாலமரங்கண்டோமே 301

கண்டோமேசிவசித்துமாண்பர்தம்மை கைலாசநாதரைப்போல் வேஷங்கொண்டு, உண்டானபொருள்தேடிகற்பமுண்ண வுத்தமரே யிருவர்தமைக்கண்டேன்யானும், விட்டதொருவழலையென்ற முப்பூ தன்னை விருப்பமுடனெடுக்கவந்தமாண்பர்தம்மை, சண்டமாருதம் போலேதுரத்தியானும் சாங்கமுடன்சீறலதுசீறினேனே. 302

சீறியேயோடுகையில்மாண்பர்தாமும்சிறப்பானகல்லாலின்மரத் தின்பேரில், மீறியேயெனைக்கண்டுபயந்தொடுங்கி மீளாதமரத்தின் மேலேறிநின்றார், வீரியமாயப்பாலேயெந்தனைத்தான் விட்டல்லோ கொண்டுமேசிதைத்துபோட்டார், கீரியென்னும்விஷமூலி தன்னைத் தானும் கிருபையுடன்யெந்தனுக்கொடுக்கலாச்சே. 303

கொடுக்கவேயென்சேனைபிணையிலொன்று கொப்பெனவேநானி றந்தபாவனத்தை, அடுத்துமேகண்டல்லோவாலோசித்து ஐயனே குருமூலிதேடிவந்து, அடுத்திருந்தயெந்தன்மூன்வந்துநின்றுபாங்கா

னமூலிதனைமுகததில்வைக்க, றடுத்தலையில்வில்லறுந்தநாணிபோலே நாதனேவுயிர்கொண்டுவந்திட்டேனே. 304

வந்தேனேயென்பிணையுங்கூடியல்லோவளமானமரம்விட்டுவந்தபோது, சிந்தனையாய்மூலிதனைவிட்டகற்றி சிறியேநாமிருவர்வந்தபின்பு, பந்தமுள்ளசிவமாண்பரிருவர்தாமும்பட்சமுடன்கல்லாலின்மரத்தைவிட்டு, சந்தோஷமாகியல்லோயிறங்கிமாண்பர் சட்டமுடன்மூலிதனைத்தொட்டிட்டாரே. 305

தொட்டிட்டமூலியதுயெந்தனுதாதுடர்ந்துமேகைதனையே பற்றியல்லோ, விட்டுவிடாதவர்கரத்தைப்பிடித்துமல்லோவீருனநாமிருக்குங்கானகத்தில், சட்டமுடன்காந்தனையேபற்றியல்லோ சாங்கமுடன்முனிமூக்குங்காலந்தன்னில், விட்டகுறையிருந்ததொருபுண்ணியத்தால் வீரமுடன்விரல்தனை துண்டிட்டாரே. 306

துண்டிடவேகரமதுவுமெந்தன்பக்கல் துப்புரவாய்விஷமூலிவேகத்தாலே, கண்டிதமாயவர்செய்தபாவத்தாலே கர்த்தாவேகரமதுவும்வந்துதென்று, திண்டிரைசூழ்வையகத்தில் சமாதிபூண்டதிராளனயெந்தன்குருதீர்க்கநாதா, கொண்டுவந்தேனுக்தமக்குசாட்சியாக கொற்றவனேகதியென்னயென்னலாச்சே. 307

வனத்துரிஷியார் பாம்புக்குபிதவுகூறல்.

யாச்சென்றுசொல்லுகையில்ரிஷியார்தாமும் அங்ஙனவேசர்ப்பமதுக்கோதுவார்பார், மூச்சடங்கியிருந்ததொருசர்ப்பந்தன்னை முசியாமலுயிர்மூலிதான்கொடுத்து, பாச்சலுடன்கானகத்தில்பின்னுமல்லோ பட்சமுடனிருபேரும்வந்திட்டார்கள், ஆச்சரியமானதொருவிஷமூலிதன்னால் வப்பனேபிழைத்ததுவுமருமைதானே. 308

தானனசர்க்குருவின்கடாட்சத்தாலும் தாக்கானமனோன்மணியாள்கிருபையாலும், கோனனமகதேவர்கிருபையாலும்கூர்மையுடன் பிழைத்ததுவும்புண்ணியந்தான், தேனனசிவமாண்பன்கரமறிந்துதீர்க்கமுடன்வந்ததுவும்பாவமாச்சே, மானனபாவத்துக்கிடங்கொடாமல் மகத்தானசாபமதைநீக்குவீரே. 309

நீக்கினால்வெகுகோடிபுண்ணியந்தான் நிட்களங்கமானதொருமாண்பருக்கு, ஆக்கமுடன்கரந்தனையேயொட்டிக்கொள்ளவப்பனே மூலியதுகொண்டுவந்து, நோக்கமுடன்றான்கொடுத்து வனுப்பினுக் கால்நெடிதானவிரலதுவும்விருட்சந்தன்னில், பாக்களவுபிறந்ததொருகதையைப்போலே பாங்கானவிரலதுவும்வோட்டும்பாரே. 310

ஒட்டுமேபின்னுமந்த மாண்பர்தாமும் ஓகோகோவழலைதனைத் தானெடுக்க, கிட்டியேமறுபடியும்வருவாரங்கே கீழானவிடலைதுவுமவ ரைக்கண்டு, எட்டியேதான்தூரத்திகையிலொட்டி யெழிலானவங்கம துபங்கப்நீக்கி, சுட்டியேசிவமாண்பர்தானுமப்பா சொஸ்தமுடன் கரங்கொண்டுவாழ்குவாரே. 311

வாழ்ந்தாலேதந்தமக்குமோட்சமுண்டு வளமானகீர்த்தியதுவதி கமுண்டு, ஆழ்ந்ததொருவார்த்தைக்குக்குறைவில்லாமல்அங்ஙனவே மூலியது ஆராய்ந்தல்லே, தாழ்ந்துமேகுருபாதம்வாக்குதப்பி தான டைந்தால்குருவுக்குபாவமென்று, சூழ்ந்துமேகுருவுரைத்தவாக்கு போலே சூட்சமுடன்செய்யவல்லேலாயெண்ணலாச்சே. 312

தாம்பிரகற்பம்சிவலிங்கமானது.

எண்ணவேயின்னமொருமார்க்கஞ்சொல்வேன் யெளிதானபுலி ப்பாணிமகனேபாரு, வண்ணமுடன்காலாங்கிகிருபையாலே வளமை யுடன்லோகபதியெல்லாங்காண, திண்ணமுடன்குளிகையது பூண்டு கொண்டு தீர்க்கமுடன்சீனபதிசென்றேன்யானும், அண்ணலெனும் பதாம்புயத்தையானுங்கண்டு வப்பனேகாலாங்கி வரம்பெற்றேனே.

பெற்றதொருவரத்தினாலனேகம்பெற்றுபோரானபேரின்ப வீட றிந்து, கற்றதொருசிவயோகிதவக்கியானி கைலாசசட்டமுனிநாதர் கூட்டம், சுற்றமுள்ளதிருமூலவர்க்கத்தோரும், சுந்தரானந்தரொடு ரோமந்தானும், மற்றுமுள்ளசித்தாதிசித்தரெல்லாம் மகிட்சியுடன் மலைதனிலேபார்த்திட்டேனே. 314

பார்த்தேனேயவரவர்கள்செய்தநூலைபாங்கானசமாதிமுகம்நின் றுகொண்டு, நேர்த்தியுள்ளபெருநூலாங்கிரந்தங்கோடி நெடிதான விரிநூலுஞ்சுருக்கங்கோடி, பூர்த்தியுட னவரவர்க்குயிதவுகூறி புக ழான சாத்திரத்தைக்கையிற்பற்றி, தீர்த்தமுடன்சிவலிங்கபதியிற் சென்று சிற்பரனேநூல்களையாம்பூசித்தேனே. 315

பூசித்தேனதிதமென்றநூல்கள்தம்மை புகழானசீனபதிமாண் பருக்கு, வாசித்தேன்சந்தேகந்தெளிவுநீங்கி வாகுடனேகருவிதானாதி யந்தம், நேசித்தேன்சீனபதிபெண்களைத்தான் நெடிதானசாத்திரத் தின்மார்க்கங்கண்டு, ஆசித்தேனெடுங்காலமங்கிருந்தேன் வப்பனே குளிகைகொண்டு பறந்திட்டேனே. 316

போகர்புவனகிரியில் உச்சிலிங்கத்தேனென்னும்
சிறகுடையசெந்தேனைக்கண்டது.

பறந்தேனேகுளிகையதுபூண்டுகொண்டு பாங்கானவிமயகிரிமேற்கேயப்பா, சிறந்ததொருபுவனமென்றகிரியில்யானும் சிற்பரனேகுளிகைவிட்டுயிரங்கியேதான், நிறைந்ததொருகுகைதனிலே சென்றேன்யானும் நெடிதானதேவரிஷிகோடாகோடி, குறைந்ததொருகணக்கதுவும்லக்கோயில்லை கோடானகோடிசித்துமுனிகண்டேனே. 317

கண்டதொருசித்துமுனிரிஷியார்தாமும் கைலாசபுவனகிரிதன்னிற்றானும், அண்டமுடிபோகாமல்யாகஞ்செய்து வப்பனேதானிருக்குங்காலந்தன்னில், தண்டறிகமானதொருகானகத்தில் தாட்டீகமுள்ளதொரு செந்தேளப்பா, சண்டமாருதம்போலேரெக்கைகொண்டு சட்டமுடனிறங்கிநிற்கப்பார்த்திட்டேனே. 318

பார்த்தேனேபுவனகிரி சிகரந்தன்னில் பாங்கானசெந்தேளின் கொடுரந்தன்னை, தீர்த்தமுடன்சிகரம்விட்டுமேலேநோக்கி திகழான கொடிமுனையைப்பற்றினின்று, வேர்த்துடலம்விஷமதுவுந்தலைகொண்டேறி மிக்கானசிகரமென்றசெம்புதன்னை, ஆர்த்துமேதானேக்கி கொட்டும்போது வழகானசெம்பதுவும்வுருகிப்போச்சே. 319

உருக்கியேசெம்பதுவும்மலையோரத்தில் வுத்தமனேபாய்ந்துமல்லோலிங்கமாச்சு, மெருகானலிங்கமதுசெப்பாகி மேன்மையுள்ள சமாதியென்றபீடமாச்சு, திருவானபீடமதுசித்தர்கண்டு தீரமுடன் சிவலிங்கமென்றுசொல்லி, பருவமுடனமாவாசைகாலந்தன்னில்பட்சமதுகுருபூசைசெய்வார்தானே. 320

தானானபூசையதுசெய்யும்போது தாக்கானசிவலிங்கந்தன்னில் நின்று, தேனானஜலமதுவுமுத்துபோலேதேற்றமுடன்சிவலிங்கந்தன்னிற்பொங்கி, கோனானவிஷமதுவும்பொங்கியல்லோ கொப்பெனவே ஜலமதுவாய்சுத்திநிற்கும், பானானநிலமதனையெடுத்துசித்தர் பாங்குடனேசீசாவிலடைப்பார்பாரே. 321

பாரேதான்ஜலமதனையெடுத்துமல்லோ பாங்கானசெம்பதனையுருக்கிக்கொண்டு, நேரேதானாயிரமாங்களஞ்சிதானும் நேர்மையுடன் தானுருவங்காலந்தன்னில், சேரேதானிருக்குமுகந்தன்னிலப்பாசேர்வைகண்டுவிஷநீரைதாக்குவார்பார், கூரேதானாயிரத்துக்கோர்களஞ்சுகொடுத்துமிவ்வுருக்கியல்லோயெடுப்பார்காணே. 322

காணவேயாயிரத்துயெட்டுமாற்று கனமானதேவேந்திரன் தங்க மாச்சு, பூணவேதங்கமது பிறவித்தங்கம் புகழாளசித்துமுனி வழங்கு ந்தங்கம், வீணவேபூசைக்குவுதவுந்தங்கம் வேறுபடாத்தங்கமது சுய ம்புத்தங்கம், நீணவேகைலாசநாதர்தாமும் நீதியுடன் வீற்றிருககும் பீடந்தானே. 323

பீடமாமாயிரங்கண்ணிந்திரர்க்கு பேரானவாசளத்தின் தங்கமா கும், கூடகோபுரந்தனக்கு சிகரந்தங்கம் குவலயத்தில் மாண்பர்களு ங்காணுத்தங்கம், மாடமாளிகைநெருங்கும் மன்னர்தாமும்மார்க்கமு டனுதீனத்தங்கமாகும், தேடரியநாதாக்கள் ரிஷிகள்தேவர் தோற்ற முடன்கண்டதொரு தங்கமாமே. 324

தங்கமாம்புவனகிரிதன்னில்நின்று தாக்கானவிஷமீறிவந்ததங்க ம், லிங்கமாம்சமாதியென்ற பீடந்தன்னில் நிஷ்களங்கமாகிவந்ததங்க மாச்சு, புங்கசித்தியெட்டுடனேபிறந்ததங்கம் புகழானநாதாக்கள் வ சிக்குந்தங்கம், பங்கமிலாத்தங்கமது பாரில்மாண்பர் பார்க்காத பிற வியென்றதங்கமாச்சே. 325

பாஷாணகற்பம்.

ஆச்சப்பாயின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் வப்பனே புலிப் பாணிசு ு ணமாரா, பாச்சலென்றபாஷாண கற்பஞ்சொல்வேன்பாரு லகில்நாதாக்கள்சொன்னதில்லை, நீச்சுடையசர்ப்பமது தான்பிடித்து நீமகனேபாஷாணங்களஞ்சிரெண்டு, மூச்சுடனேசர்ப்பமதுதானிருக் கமுனியானபாஷாணந் தன்னைவாங்கே 325

வாங்கியேஅரவத்தின்வாயில்தன்னில் வளமானபாஷாணங் கள ஞ்சிதன்னை, தூக்கியேதிரியாமல் மைந்தாபாரு துப்புரவாய் வாயில் வைத்துதைத்துப்போடு, ஏங்கியேபோகாமல பாண்டந்தன்னில் யெ ழிலாகத்தானடைத்துவாரமிட்டு, ஓங்கியேபோகாமல் மேலுமூடிவுத் தமனேபதனமது நாள்தானெட்டே. 327

எட்டானநாளதுவுஞ்சென்றபின்பு யெளிதானபாண்டமதைதி றந்துமைந்தா, கட்டானஅரவத்தின் வாயைத்தானும் கடுகெனவே தானவிழ்த்துபார்க்கும்போது, திட்டமுடனரவமதுசீவன் செத்துதீ ர்க்கமுடனுயிரதுவும் சற்றேநிற்கும், சட்டமுடன்பாஷாணந்தனை எ டுத்து சாங்கமுடன்பாம்புக்குப் பாலைவாரே. 328

வார்க்கையிலேயரவமது வுயிருண்டாகி வளமானஅரவமதுமகா மேசெல்லும், பாக்கையிலேபாஷாணம்விஷந்தானேறிபாங்கானநா

யகற்பமாச்சுதப்பா, தீர்க்கமுடன்பாஷாணைந்தனையெடுத்து இனையள வுவாகவல்லோமண்டலந்தான், ஏற்கையிமேலமண்டலமு மூன்றுகொண்டால் யெழிலானகாயமது யிறுகும்பாரே. 329

அறுகுமேபாஷாணகற்பத்தாலே யெழிலானகற்பமது கொண்டபேர்க்கு, குறுகியேதேகமதுவயிரம்போலாம் குவலயத்தில் சித்துமுனிதம்மைப்போலே, அறுவதுவும்மிகவாகி புத்தியுண்டாய்அவனியிமேலீயுமொருசித்தனுவாய், நறுவலென்றதிரைகரையு மற்றுப்போகும்நாதாந்தசித்தொளிவு நிதியுமாச்சே. 330

சித்தானசித்துமுனிரிஷிகளெல்லாம் தேசமதில்பலபலவாய் நூல்கள்கூறி, முத்தானபாஷாணகற்பஞ்சொல்ல மூதுலகில் மறைத்துவைத்தார்சித்தரெல்லாம், சத்தசாகரங்கடந்துகுளிகைபூண்டு சாயுச்சியபதவிதனைக்காணவென்று, புத்தியுடன்காலாங்கிதாள்பணிந்து புகழானகற்பமதைக் கூறிட்டேனே. 331

கூறினேன்கற்பமதைச்கொண்டபேர்க்கு குவலயத்தில் நெடுங்காலமிருக்கலாகும், மாறிட்டமேனியது தங்கம்போலாம் மகத்தானவாசியதுமேல்நோக்காது, தின்றிட்டமேனியது தவளம்போலாம் நிட்களங்கவாசியதுமேலோடாது, வீறிட்டுவார்த்தையது மொழிசொன்னாலும் வீணாகிதேகமது குண்ணுதன்றே. 332

## ஆமைகற்பம்.

அன்றான்புலிப்பாணிமைந்தாகேளு வப்பனே சொல்லுகிறேனுந்தமக்கு, குன்றானமலைமேறிகுளிகைகடந்துகூறானசுவர்ணகிரி பதியமர்ந்து, வென்றிடவேகுளிகையது பூண்டுகொண்டு வீறானசிகரமென்றபதியைக்கண்டேன், தென்றிசையில்தட்சணாமூர்த்திநாயன் தோற்றமுடன்கண்டதொருகூர்மந்தானே. 333

### திரேதாயுகப்பிரளயத்தில் தட்சணாமூர்த்திநாயன் மைந்தனை விழுங்கிய கூர்மத்தை சுவர்ணகிரியில் போகர் கண்டது.

தானானகூர்மமதுதன்னைக்கண்டேன் தாக்கானதிரேதாயினுகத்திலப்பா, மானானபிரளயங்கள்வந்தபோது மகத்தானகூர்மமது மலையிற்சென்று, தேனானமனோன்மணியாளிருக்கும்பீடம் தெரிசனமே செய்வதற்குமனதிலுன்னி, பானானபார்லோகப் பிரளயத்தில் பட்சமுடன்கூர்மமதுவந்ததாச்சே. 334

வந்ததொருகூர்மமதைக்கண்டேன்யானும் வளம்பெரியசுவர்ணகிரிமலையிலப்பா, அந்தமுடன்மலையைவிட்டுக் கீழிறங்கிவப்பனே ச

ளையருகேசென்றேன்யானும், சிந்தனையாய்மனதுவந்து படியிறங்கி சிற்பரனைத்தெரிசிக்கதியானங்கொண்டு, சந்தோஷமாகியல்லோசுனை யோரத்தில் சட்டமுடனிறங்கையிலே கண்டிட்டேனே. 335

சுனையில்கூர்மம் போகரைக்கண்டது.

கண்டவுடன் கூர்மமதுயெனைப்பணிந்துகைலாசநாதரென்றுதா ள்பணிந்து, தெண்டமுடன்பதாம்புயத்தைப்பணிந்துபோற்றிதெளி வாகசுனையேறி மேலேநின்று, அண்டர்பிரானெந்தனையுங்காணவந்த வன்பானரோகரிஷிநாதாகேளும், துண்டரிகமாகவல்லோதட்சணுய ன்துப்புரவாய்சாபமது தந்திட்டாரே. 336

தந்ததொருசாபத்தால் திரேதாயுகத்தில் சட்டமுடன் பிரளய த்தில்வந்தேனிங்கே, அந்தமுடன்நெடுங்காலம்சுனையில்யானும் வன் புடனேவாசமதுசெய்திருந்தேன், சித்ததொருசுவர்ணகிரி சுனையில் தானும் சிறப்பானசித்துமுனிவந்ததில்லை, விந்தையுடனெந்தனுக்கு சாபந்தீர்க்கவிட்டகுறையிருந்ததினல் வந்தீர்பாரே. 337

பாரேதான்காலாங்கிநாதபாதாபட்சமுடனெந்தன்மேல்கிருபை வைத்து, சீரேதான்சாபமதைநிவர்த்திசெய்து தீர்க்கமுடனெந்தனை யும்மீட்பீரானல், நேரேதானுந்தமக்குக்காயகற்பம் நெடுங்காலந்தா னிருக்கயான்கொடுப்பேன், கூரேதான்வார்த்தையதுமொழியுங்கூறி குறிப்புடனேவரலாறுகூறலாச்சே. 338

போகர் சாபம் நிவர்த்திசெய்தது.

கூறவேகூர்மமதுசொல்லும்போது கொற்றவனேசாபமது நிவர் த்திசெய்தேன், மீறவேகூர்மமதைசாபம்நீக்கி மிக்கானகற்பமதைக் கேட்கும்போது, மாறவேயெந்தனுக்குத்தெரியவோதிமகத்தான கற் பமதைக்கேட்கும்போது, நாறலுடல்கூர்மமது வயிற்றிருக்கும்நலமா னகுளிகைதனைத்தருகலாச்சே. 339

தருகவேவயிற்றிலுள்ளகாயகற்பம் தண்மையுடன் மனதுவந்து அடியேன்றானும், பெருகவேயான்வாங்கி மண்டலந்தான் பேரானகு ளிகைதனில்குன்றியுண்ண, மெருகவுடன்தேகமதுயிறுகியல்லோமே தினியில்நெடுங்காலமிருப்பதற்கு, பொருகவேகாயாதிகற்பங்கொண் டுபேருனவுலகுதனில்வசித்திட்டேனே. 340

வசித்ததொருகுளிகையினலெந்தனுக்கு வாகானமகிமைகளு'ம னேகமுண்டு, பசிபதுவுமில்லைபப்பா பண்புள்ளோனே பாலகனேசித் தர்களுக்கிடைக்குமோசொல், நிசிதமுள்ளகாயாதிகற்பந்தன்னை நிக ழ்ச்சியுடன்முன்னிருந்தநாதர்தாமும், உசிதமுடன்கண்டவரும் யா ருமில்லை வுத்தமனேநாதாக்கள் சொல்லார்பாரே. 341

கலைமான் கற்பம்.

சொல்லாரேயின்னமொருமார்க்கஞ்சொல்வேன் சுவர்ணமென்றமலையிலப்பாபேற்பாகத்தில், வெல்லவேகுளிகைகொண்டுவடியேன்றானும்வேதாந்தத்தாயினதுகடாட்சத்தாலே, புல்லவே வனந்தனிலே கலைமான்றன்னை புகழ்ச்சியுடனடியேனுங்கண்டபோது, நல்லதொரு கலைமானுமென்னைக்கண்டு நலமுடனேவோடிவந்து பணியலாச்சே.

பணிந்துமேயெந்தனுடபாதம்போற்றி பட்சமுடனெந்தனையும் வினவிக்கேட்க, துணிந்துமேகாலாங்கி நாதர்பாதம்தப்புரவாய் மனதுவந்தஅடியேன்றானும், அணிகடனன்பதாம்புயத்தின் சீஷனென்றேன் ஆத்தாளின் கடைபாததுளியென்றேன், மணிபோன்ற வார்த்தையதுகூறும்போது மகத்தான என்குருவே யென்னலாச்சு.

என்னவேகாலாங்கிநாதசீஷா யெழிலாகயெந்தனுக்குவந்தசாபம், பன்னவேபுஜண்டரிஷியார்தாமும் பாங்கானகானகத்தில் யாகஞ்செய்ய, துன்னவேயடியனுல்வந்தமேர்மை துப்புரவாயாதென்றுவினவிக்கேட்பீர், முன்னமேபெரியோர்கள் செய்தயாக மூதுலகிலடியேனுமறியேன்றானே. 344

தானானபுஜண்டமகாரிஷியார்தாமும் தன்மையுடன்தவஞ்செய்யுங்காலந்தன்னில், கோனானவுமதையர் காலாங்கிநாதர் கொற்றனார் தாமுரைத்தநீதிபோலே, தேனானமனோன்மணியாள் கிருபையாலும் தேற்றமுன்சாபமதைநீக்கவெண்ணி, பானானகுருபரனாரிடியாசீர்மம் பாங்குடனேயான்வணங்கிநின்றிட்டேனே. 345

நின்றேனேபுஜண்டமகாரிஷியார்பக்கல் நிட்களங்கமானதொரு சமாதிதன்னை, சென்றேனேநெடுங்காலம்நானிருந்தேன்தேஜொளிவின்கிருபையதுவண்லமயாலே, வென்றதொருயான்செய்த பாவந்தன்னைவேட்கையுடனணிதவராவண்ணமியானும், குன்றுடனேமலைதேடி சமாதிபக்கல் சொற்றவனேசாபமதால் சென்றிட்டேனே. 346

இட்டதொருசாபமதை நீக்கியல்லோ யெழிலாக வெந்தனுக்கு காட்சிதந்து, சட்டமுடன்ஞானோபதேசங்கொண்டு சாயுச்சியபதவிதனைக்காணவென்று, திட்டமுடன்மலையத்தாலருளுந்தந்து தீர்க்கமுடனுசீர்மஞ்சாபநீக்கி, விட்டகுறையிருந்ததொரு மேர்வையாலே விடுதிக்கிப்போகவென வருள்கொள்வீரே. 337

கொள்ளவென்றுகலைமானிங்கூறும்போது கொப்பெனவேகாலாங்கிகடாட்சத்தாலே, தெள்ளமூர்தமானபராபரியின்பாதம்தேற்றமு

டனடியேனுமுடிவணங்கி, எள்ளளவுந்தீங்குமிக கோமற்றுன் யெழிலான மஞேன்மணியைப் போற்றிசெய்து, உள்ளபடி கலைமானைப் பாதுகாக்க உவமையுடனென்மனதி லெண்ணினேனே. 348

எண்ணியே கலைமானின் சாபந்தீர்ந்தேன் யெழிலான காயாதி தான்கொடுக்க, உண்ணவே நெடுங்காலம்நானிருந்தேன் வுத்தமனே சித்துமுனிரிடியார்கூட்டம், வண்ணமுடன்கலைமானின்கற்பந்தன்னை வாகுபெறவுண்டவர்க ளாருமில்லை, கண்ணபிரான்கொண்டதொரு கற்பந்தானும் கலைமானின்கற்பத்துக் கீடாகாதே. 349

ஈடானகற்பமதை யுண்டேன்யானும் பெழிலான வையகத்து மாண்பரெல்லாம், தேடாமல் கற்பமதையுண்டேன்யென்று தேசமதில்சந்நியாசிவேஷங்கொண்டு, கோடானகோடிபொருள் சம்பாதிக்க கூறினார்கற்பமதுகொண்டேன்யென்று, தாடாண்மைகொண்டதொருபொய்ஞ்ஞானிக்கு தாரணியில் தனங்கொடுத்து கெட்டார்பாரே.

பாரேதான் கற்பமதைக் கொண்டபோது பாங்குடனே சீனபதிசென்றேன்யானும், நேரேதான் குளிகையது பூண்டுகொண்டு நெடிதானகடலோரஞ்சென்றுயானும், சீரேதான்சுவர்ணகிரியிடபாகத்தில்சிறப்புடனேமலையேறிசென்றேன்யானும், ஆரோதான்கண்டவர்களாருமில்லை வப்பனேசுவர்ணகிரி கண்டிட்டேனே. 351

கேசரிகற்பம்.

கண்டேனேயின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் கருவானபுலிப்பாணிமைந்தாகேளு, சண்டமாருதம்போல குளிகைகொண்டு சாங்கமுடன்சுவர்ணகிரி யிடபாகத்தில், தண்டகாரணியமதி லடியேன்றானும்சாங்கமுடன்சமாதிமுகந்தன்னில்நின்றேன், அண்டர்பிரானருளினது கடாட்சத்தாலே வப்பனேகடலோர மமர்ந்தேன்தானே.

தானான வையகத்து மகிமையெல்லாந் தாக்கானசுவர்ணகிரிகடலோரத்தில், மானான மருத்துவங்களதிகமென்று மார்க்கமுடன் சுந்தரானந்தரேசர், தேனானசாத்திரங்கள் பாடியல்லோ தேற்றமுடன் குகைதனிலேவைத்தாரப்பா, கோனானயென்குருவாங் காலாங்கிநாதர் கொற்றவனாரெந்தனுக்குக் கூறினாரே. 353

கூறியதோர்நூலதுவும் பொய்யாதென்று கொற்றவனேசமாதியென்றபீடம்நின்று, மீறியே யஷ்டாங்கயோகஞ்சென்று மிக்கான தவநிலையில் நிற்கும்போது, நீறுடைசுந்தரா நந்தரேசர் நிஷ்களங்கசொரூபமென்றசுடரேகொண்டு, மாறுடைய சித்தனைப்போல் வேஷங்கொண்டு மார்க்கமுடன்தரிசனங்கள் தந்திட்டாரே. 354

தந்தாரேயெந்தனுக்குத் தரிசனங்கள் தாக்கானயெந்தனையுமா ரென்றேதான், சிந்தனையாய்மனதுவந்துகேட்கயானும் சிறப்புடைய காலாங்கிசீஷனென்றேன், அந்தமுடன் சீனபதிவிட்டுயானும் வைய கனே குளிகையது பூண்டுகொண்டு, விந்தைகளையறியவென்று யிட பாகத்தில் விருப்பமுடன்யான்பணிந்து துதித்திட்டேனே. 355

சுந்தரானந்தர்சரிமார்க்கக்குளிகையை போகருக்கு கொடுத்தது.

துதிக்கையிலே சுந்தரானந்தரேசர் துப்புரவா யெந்தனுக்குத் துகளகற்றி, மதிப்புடனே யெந்தனையுமனதுவந்து மார்க்கமுடன் கண்டதொரு வினயத்தாலும், விதிப்புடைய விட்டகுறை யிருந்த தாலும் விருப்பமுடனுந்தமக்கு வுபதேசங்கள், கதிபெறவே ஞானோ பதேசஞ்செய்து கருவானகேசரியுந்தருவேன்பாரே. 356

பாரேதான்புலிப்பாணி மைந்தாகேளு பாங்குடனேசுந்தரானந் தரேசர், சேரேதான் யெந்தனுக்குக் குளிகைதந்து தேற்றமுடனுல குபதிமகிமையெல்லாம், நேரேதான்சதாகாலஞ்சீஷனுக நேர்மையுட னென்மீதில்மனதுவந்து, கூரேதான் கேசரியின்மார்க்கந்தன்னைகுறி ப்புடனேயெந்தனுக்கு கூறினாரே. 357

போகர்புலிப்பாணிக்கு சன்மார்க்கவிதி கூறல்.

கூறவேபுலிப்பாணிமைந்தாகேளு குவலயத்திலெந்தனுக்குசீஷ மார்க்கம், தேறவேகண்டல்லோ வாராய்ந்தேதான் தேற்றமுடனிரு ப்பதற்குமுறையுஞ்சொல்வேன், மாறவே தொண்டுசெய்யும் சீஷனு க்கு மகத்தான சன்மார்க்கமேதென்றாக்கால், ஆறவே விசுவாச மரு ளும்வேண்டும் வப்பனே அறிவுஜெபம் வேண்டும்பாரே. 358

வேண்டுமே யாசையுட னின்பம்வேண்டும் விருப்பமுடன் தவ முடனே பொருமைவேண்டும், தாண்டவம்போல் குருமொழியின் வணக்கம்வேண்டும்தாரணிலல் சீவகாருண்ணியம்வேண்டும், ஆண்ட கையின்பதாம்புத்தை நண்ணல்வேண்டும் வப்பனே யிறக்கமுட னீகைவேண்டும், தூண்டியதோர் கருமான மின்னஞ்சொல்வேன் துப்புரவாய்த் துகளகற்றி யிருக்கநன்றே. 359

நன்றாகயிறவாமல் முயற்சிதேடல் நலமான கற்புடமை நண் ணல்வேண்டும், குன்றானகொடியதொருபாவம்நீக்கி குவலயத்திலிரு ப்பவனே சன்மார்க்கன்றான், தென்றிசையி லகத்தியர்க்கு நேர்மை யாக தேற்றமுட னுபதேசஞ்செய்யவல்லோன், நன்றிபுரி வேணுடு வாழுமாண்பர் நலமான சித்துமுனிக்குவணையாச்சே. 360

ஆச்சப்பா பொய்சூது கபடுதந்திரம் வப்பனே நிந்தையுடன் நிலைமைமாறல், பேச்சுடனே மெய்தவறல் பொறுமைகூறல் பேரான பேரினபநிலைமறத்தல், மூச்சடங்கி மெய்போலே யாகஞ்செய்தல் முனையானநற்குருவை தூஷணித்தல், ஆச்சரியமானதொரு களவு மார்க்கம் வப்பனேநீக்குவது முண்மைபாரே. 361

உண்மையாம் முன்புகயம் புரணிகூறல் வுத்தமரை யுதாசினங் கள்மிகவும்பேசல், நண்மையாம் பெரியோரைப்பகடிகூறல் நலமுடனேபரிசுத்தோன்போலேகூறல், கண்மையாம்மென்மேலும் போர் விளைத்தல் கருவானபோருக்குமுயன்றுநிற்கல், தண்மையாம் சித்து முனிநூல்களெல்லாந் தானறிந்த பித்தனைப்போல் பினற்றுவானே.

பித்தனென்றால் சொல்லுகிறே னின்னங்கேளு பிணிதீர்க்கும் பண்டிதன்போல்பெயர்வகுத்து, சுத்தமுடன் காவிகாஷாயம்பூண்டு சுந்தரனே யுபதேசங்கூறவல்லோன், சத்திநெறிதவறாத தருமவான் போல் தாரணியில் வேடமதுபூண்டுகொண்டு, புத்தியுடன் கோபமதையற்றவன்போல் புலம்பியேதிரிவானே கழுதைமாண்பே. 363

மாண்பானவையகத்தி லனேகரப்பா மார்க்கமுடன் பலபலவாய் வேஷங்கொண்டு, ஆண்பிள்ளைபோலாக வீரங்கொண்டு அதட்டியே வார்த்தையதுமிகவுங்கூறி, காண்பவர்களெல்லவர்க்குங் கருத்துளான்போல்கைதனிலேருத்திராட்சமாலைபூண்டு, வீண்பிள்ளையாக வல்லோ திரிந்துகொண்டு விருதானவேஷமது கொள்வார்தானே.

தானானபுலிப்பாணி யின்னங்கேளு தண்மையுள்ள பூபாலா சொல்வேனப்பா, கோனான குருவருளும்பெற்றோனாக குவலயத்தில் கீர்த்திகொண்டுயிருப்போனாக, தேனான மனோன்மணியாள் பதாம்புயத்தை தேற்றமுடனெந்நாளுந்துதிப்போனாக, பானனபரசிவன் புத்திவானாய் பாருலகில்வசித்திருக்குஞ் சீடன்பாரே. 365

## கற்பமுண்ணகெந்தகத்தயிலம்.

பாரேதானின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் பாங்கான புலிப்பாணிமகனேகேளு, நேரேதானுந்தமக்குக் காயகற்பம் நெகிழ்ச்சியுடன் சொல்லுகிறேன் நேர்மையாக, வீரேதான் நெல்லிக்காய்கெந்திதானும் விருப்பமுடன் பலமதுவுமைந்துசேரு, சீரேதான் தாளகமும்ரெண்டுசேரு சிறப்பானசிங்கியது வொன்றுகூட்டே 366

கூட்டவேமனோசிலையு மொன்றுசேரு குணமான கௌவுரியது வொன்றுசேரு, நாட்டமுடன் பூரமதுவொன்றுசேரு நலமானவீர

மது அரையேசேரு, வாட்டமுடன்பினியது வொன்றேசேரு வகுப் பானலிங்கமது வொன்றாகூட்டு, தேட்டமுடன் துருசதுவு மொன் றேசேரு தெளிவானதுத்தமது வொன்றுதூக்கே. 367

தூக்கியேசிற்றண்டங் கருவிலப்பா துடியாகத் தானரைப்பாய் நான்குஜாமம், தாக்குவாய்வாலுழுவைத் தயிலத்தாலே தானரைப் பாய் ஜாமமதுயெட்டதாக, நோக்கமுடன் கருஞ்சீரந்தயிலமப்பா நுணுக்கமுடன்தானரைப்பாயாறுஜாமம், வாக்கதும்பிசகாதவண் ணமப்பா வளமானதாழம்பூ சாத்தான்கூட்டே. 368

சாறுனதாழம்பூ நாலுஜாமம் தண்மையுடன்மந்தாரை நாலுஜா மம், நாறுனசரக்கெண்ணை நாலுஜாமம் நலமானகொடிவேலியாறுஜா மம், தேருனகௌதும்பையாறுஜாமம் தேற்றமுடன்துவரையது நா லுஜாமம், செருனவெண்குன்றி யாறுஜாமம் செம்மையுடன் தான ரைப்பாய் மைந்தாகேளே. 369

கேளேதான்சரக்கெல்லா மரைத்தபின்பு கெவனமுடன் பில்லை யதுலேசதாக, நாளேதான்போகாமல் ரவியில்வைத்து நயமானபுது க்கலசந்தன்னிலப்பா, கோளேதான்நோமல மைந்தாநீயும் குமுற வேதானடைத்துச் சீலைசெய்து, கீளேதான் கலசமது துவாரமிட கிருபையுடன் தயிலமதுயிறக்கிடாயே. 370

இறக்கியேகுழித்தயில மாகவல்லோ யெழிலானகலசமதில்வடி தான்கொண்டு, சிறக்கவே முப்பூவுங் களஞ்சிசேர்த்து சிறப்புடனே கலசமதிற் பதனம்பண்ணி, திரமானதயிலமதை யாரேனுந்தான்தீர் க்கமுடன்சொல்லவில்லை நூல்கள்தன்னில், உறமானதயிலமதுசித்து தாமும் ஓகோகோநாதாக்கள் சொல்வாரன்றே. 371

அன்றுனயிலமதை யாராய்ந்தேதான் அவனிதனில் மாண்பர் களும்பிழைக்கவென்று, குன்றுனவழிபாடு முறைபாடெல்லாம்கூறி னேன்போகரேழாயிரத்தில், தென்றிசையில்பொதிகைமலைதன்னில் வாழும் தெளிவானசித்துமுனிநாதர்தாமும், வென்றிடவே தயிலம தைமறைத்துவைத்தார் வேதாந்தநுட்பொருளைக் காட்டார்தானே.

தானுனசாத்திரத்தி னுளவுகண்டு தண்மையுள்ளகருவிகாணுதி யெல்லாம், கோனுனயெனதையர் காலாங்கிநாதர் கொற்றவனு ரெந் தனுக்குச்சொன்னநீதி, தேனுனமனோன்மணியாள் கடாட்சத்தாலே தேற்றமுடன்தயிலமதைவாங்கிமைந்தா, பானுனபரிதியென்ற சூதந் தன்னில் பாங்குபெற தயிலமதைக்களஞ்சிநீட்டே. 373

நீட்டவேபத்துக்குவொன்றமேதான் நீதியுள்ள மதவானையடங்கிநிற்க, வாட்டமுடன் தயிலமதையிரண்டுசாமம் வாகுபெறத்தானரைக்கசூதமாகும், நாட்டிகமாய்சூதமதை செந்தூரிக்க தன்மையுடன்சொல்லுகிறேன் மைந்தாபாரு, நாட்டமுடன் தாரமென்றநாதந்தானும் நலமானகளஞ்சியது வொன்றுசேரே. 374

சேர்த்துமேமுன்சொன்ன தயிலத்தாலே செவ்வையாய்த்தானரைப்பாய்நாலுசாமம், நேர்த்தியாய்மெழுபதமா மட்டும் நேர்மையுடன்தானரைத்து செப்பக்கேளீர், ஊர்த்துவமாய் குப்பிக்குச் சீலைசெய்து வுத்தமனேசரக்கதனைக குப்பியிட்டு, தீர்த்தமென்றகுப்பிக்குமாக்கல்லாக திறமாகமேல்முடி சீலைசெய்யே. 375

செய்யவேதளவாயாஞ் சட்டிதன்னில் சிறப்புடனேமணல்தனைக்கொண்டுவந்து, பையவேதளவாயாஞ் சட்டிதன்னில் பாங்குடனேரவியில்நாலுவுயரம்போடு, துய்யநல்லகுப்பிதனை மண்மேடிட்டுதுப்புரவாய்க்குப்பிவாய்தெரியமூடி, எய்யவே மேற்பாண்டந்தன்னில்மூடி வுத்தமனேசீலையது வலுவாய்செய்யே. 376

வலுவானசீலையதுசெய்தபின்பு மைந்தனேமயங்காமல் செய்வாயப்பா, மெலுவானவாலுகையா மேந்திரத்தில் மேன்மையுடன் தானெரிப்பாய்நாலுசாமம், சுலுவானதீபமது கமலம்போலாம் சுந்தரனேதானெரிப்பாய்செப்பக்கேளு, உலுவானதீபமது ஆறிப்பின்புவுத்தமனேதானெடுக்க வகையைக்கேளே. 377

கேளப்பாகணபதிக்குப் பூசைசெய்து கெட்டியாய் மனோன்மணியைமனதிலுன்னி, நாளப்பாபோகாமல் செந்தூரத்தை நலமாகசீசாவிற்பதனம்பண்ணு, பாளப்பாபோகாமல் தேகந்தன்னைபட்சமுடனெடுங்காலமிருப்பதற்கு, வேளப்பா காயாதிகற்பங்கொள்ள விருப்பமுடன்சொல்லுகிறேன் பண்பாய்க்கேளே. 378

பண்பானசெந்தூரங்குன்றிவீதம் பாலகனேமண்டலந்தானிரண்டுவேளை, நண்பானதேனதனில் கொண்டாயானால் நலமானதேகமதுகற்றாணாகும், திண்பானவாசியதுமேல்நோக்காது தீர்க்கமுடன் கொண்டவற்குநரையுமில்லை, உண்டானகாயாதிகற்பமெல்லாம் வுத்தமனேயிதற்கிடு சொல்லொண்ணாதே. 379

ஒண்ணாதுசெந்தூரந்தானுமப்பா வுத்தமனே கோடிவரையிருக்கலாகும், கண்ணானசெந்தூரந்தன்னையப்பா கருத்துடனே பாச்சுகின்றவிதத்தைக்கேளு, மண்ணானசெம்பதுவுங் களஞ்சிநூறு மகத்தா

னசெந்தூரங்களஞ்சியொன்று, ஒண்ணுதுதானுருக்கிமூசைதன்னில் வுத்தமனேதானெடுத்து சாய்த்திடாயே. 380

சாய்க்கவேசெம்பதுவும்மாற்றேபத்து தனியானமாற்றதுவுமெ ன்னசொல்வேன், வாய்ந்ததொருபிறவியென்றதங்கந்தானும்மகத்தா னதங்கமதுயிதற்கீடுண்டோ, தேய்ந்ததொருதெய்வுமென்றதங்கமப் பா தேற்றமுள்ளபிறவியென்ற தங்கமாச்சு, மேய்ந்ததொருமலைமேபா லேவிளைந்ததங்கம் பெருமையுள்ள சிருஷ்டிப்புத் தங்கந்தானே.

தானனதங்கமது யோகிதங்கம் தண்மையுடன்சிவவேடம் பூண் டோர்க்காகும், கோனனகுருத்தங்கம் ஞானத்தங்கம்கொற்றவர்கள் ராசாக்களணியுந்தங்கம், பானனமனேஞன்மணியாட்குகந்ததங்கம்பா ரினிலேசித்தர்மெச்சுந்தங்கமப்பா, தேனனகுருக்கள்மாரணியுந்தங்க ம் தேஜோளிவின்சொரூபமென்ற தங்கந்தானே. 382

தங்கமாமின்னமொருபோக்குசொல்வேன் தண்மையுள்ளபுலிப் பாணிமகனேகேளு, பங்கமில்லாத்தங்கமது யென்னசொல்வேன் பா லகனேஒன்பதுக்கு வொன்றுதாக்கு, துங்கமுள்ளரசிதமது மாற்றேரு பத்து துடியானபசுமையென்றமேமமாச்சு, புங்கசித்தியெட்டுடைய சிவயோகிக்குப் புனிதனேதங்கமது வாய்க்கும்பாரே. 383

பாரேதான்கருமிகட்குஞ் சண்டாளர்க்கும் பலியாது யிவ்வே லைதப்பலியாதப்பா, ஆரோதான்சாத்திரங்க ளனேகஞ்சித்தர் அபரி தமாய்ப்பாடிவைத்தார்கோடாகோடி, நேரேதானிவ்வேதைக்குவமை கூறநெடியபுகழ்வையகத்திலொருலாகும், சீரோதான்விட்டகுறையிரு ந்தபேர்க்கு தீர்க்கமுடன்வாய்ப்பதும் மெய்யதாமே. 384

மெய்யானவித்தையது யென்னசொல்வேன் மேதினியில்நாதா க்கள்கூறும்வித்தை, பொய்யானவித்தையது வனேகங்கோடி பூட்டி ஞர்வெகுகோடிமாண்பர்க்காக, வையகத்தில்வாழுகின்ற மாண்பருக் குமகத்தானசெந்தூரம்வுண்டபேர்க்கு, ஐயமறரோகாதி ரோகமெல் லாம்வப்பனேவுடலைவிட்டே யேகும்பாரே. 385

விலாங்கு கற்பம்.

ஏகுமேயின்னமொருகற்பம்பாரு யேற்றமுடன் சொல்லுகிறே ன்மைந்தாபாரு, பாருடையநெய்போன்ற விலாங்குதன்னை பட்சமு டன்தான்பிடித்து யண்பாய்க்கேளு, சாகுதற்குமுன்பாக சூலந்தன் னைசட்டமுடன்வாயிலிட்டு விலாங்குதன்னை,வேகுதற்குபாண்டமது தானமைத்து வேகமுடன் பூநீரைப்பாண்டம்போடே. 386

போட்டுமேவிலாங்குதனைமேலேவைத்து பொங்கமுடன் மேனு மந்தபூநீர்விட்டு, நாட்டமுடன்ஜலமதனைமேலேவிட்டு நிஷகளங்கமா கவல்லோ பாண்டமூடி, வாட்டமுடன்தானவித்து ரவியிற்போடு வ ளமான விலாங்கதுவு முலர்ந்தபின்பு, தாட்டிகமாய்க்கல்லுரலி லிட்டு மைந்தாசட்டமுடன் இரும்புலக்கை தன்னாற்சாடே. 387

சாடவேசூரணமாய்ச்செய்துகொண்டு சட்டமுடன்சுக்குடனே வோமஞ்சேர்த்து, கூடவேமிளகுடனேவாய்விலங்கம் குணமான பர ங்கியென்றபட்டை தானும், போடவேயேலமுடன் ஜாதிபத்திரிபொ ங்கமுடன் வெந்தயமுமிருசீரந்தான், கூடவேபச்சையென்ற பூரந் தானும் சுத்தமுள்ளரோசனையும் கூடச்சேரே. 388

சேர்த்துமேவகைக்கு வொருபலமதாக சிறப்புடனேநெய்தேனு ம்விட்டுக்கிண்டி, பேர்த்துமேபுதுக்கலசந்தன்னிலப்பாபெருமையுட ன்சீனிசர்க்கரையுங்கூட்டி, ஆர்க்கவேபாகுபதந் தன்னிலப்பா வப்ப னேமுன்னுரைத்தலேகியத்தை, தீர்க்கமுடன் தான்சேர்த்து கிளரி வாங்கிதிட்டமுடன் பீங்கானிற்பதனம்பண்ணே. 389

பண்ணவேகணபதிக்குப்பூசைசெய்து பாலகனே சோடசத்தில் வைத்துப்போற்றி, உண்ணவேமண்டலந்தான் கொண்டாயானால்வுத் தமனேகழற்சிக்காய் விகிதம்கொள்ள, தண்ணமுடன்தேகமது யிறு கிக்காட்டும் தாக்கானவாசியது மேல்நோக்காது, கண்ணபிரான் செ ய்தவொருகுளிகையப்பா கண்மணியேவுந்தனுக்கு போதித்தேனே.

போதித்தேன்விலாங்கினுட மாயாகற்பம் பொங்கமுடன் சமு சாரிக்கானகற்பம், வாதிகளுங்கண்டறிந்துசெய்வாரப்பா வையகத்தி ல்நிகியுள்ளான்செய்யுமார்க்கம், சோதித்துசாத்திரங்கள் கண்டாரா ய்ந்து சுந்தரனேவுந்தனுக்கு வோதிவைத்தேன், சாதித்தால்குளிகை யென்றவிலாங்குகற்பம் சாங்கமுடன்யோகிகட்குவுறுதியாமே.

உறுதியாஞ்சித்தின்பங் கொண்டபேர்க்கு வுத்தமனே யாக்கை நரம்புடையபேர்க்கும், நிறுதியெனுந்தாதுவிர்த்தி யில்லாதார்க்கும்நீ டூழிபோகமது கொள்வோருக்கும், குறுதியதுயல்லாத தேசத்தோர் க்கும் குணமில்லாமணமில்லா மேனுயோர்க்கும், அறிவுகுன்றியிருப் பதொரு மாண்பருக்கும் வழகானகுளிகையது பாருபாரே.

பாரப்பாகுளிகையது கொண்டபேர்க்குபாங்குடனேயேழாஙை பலமுண்டாகும், ஆரப்பாகுளிகையது செய்யப்போறூர் வப்பனேய றிவுடையோர்செய்யும்வேதை, நீரப்பாதனிலிருக்கும் விலாங்குகற்ப ப்நீதியுள்ளகற்பமது யென்னசொல்வேன், பேரப்பாசிவயோகி செய் யாரப்பா பேரின்பநிலைநடந்தோர் செய்யார்தானே. 393

செய்வார்கள்சிற்றின்பமுடையபேர்கள் ஜெகதலத்தில் கோடி யுண்டுலக்கோயில்லை, துய்யதமிழ்ப்பண்டி தங்கள்மெத்தவுண்டு துப்பு ரவாங்செய்துமல்லோ வதிதஞ்செம்வார், மெய்யானகற்பமதை செய் தபேர்கள்மேதினியில் கலவிக்குமுதன்மையாவார், பொய்யானகற்ப மதுகூறவில்லை புண்ணியனேயுந்தனுக்குப் புகட்டினேனே. 394

புகட்டினேனுந்தனுக்கு வன்புகூர்ந்துபுகழானவிலாங்கினதுகற் பந்தன்னை, சகமுழுதுஞ் சித்துமுனிசாத்திரத்தில் சாங்கமுடன் ம றைத்துவைத்தாரென்னசொல்வேன், அகங்கொண்ட மாண்பர்களு க்காகாவென்றவப்பனே சிடிகையெல்லா மறைத்துப்போட்டார், சு கம்பெறவே யடியேனுமனதுவந்துகூட்டினேன் மான்பர்களுக் குகந் தவாறே. 395

வாறுனசூத்திரத்தில் மறைத்ததெல்லாம் வாகுடனே சாத்திர த்தில்பெருக்கிவிட்டேன், கூறுனகிடிக்கையென் மார்க்கந்தன்னை கு ணம்பெறவே செய்தவர்க்கு யெல்லாஞ்சித்தி, மாறுமல்கைபாகஞ்செ ய்பாகந்தான் மன்னவனேசெய்தவர்க்கு யெல்லாஞ்சித்தி, ஆறுன மார்க்கமதுசென்றபேர்க்கு துப்புரவாயாதொன்றும் பலியாதன்றே.

பலியாதுகுடிகெடுக்கும்பாவியோர்க்கும் பாங்கானசண்டாளது ரோகியோர்க்கும், வலிதானபவமுடைய கருமியோர்க்கும்வாகுடை யசிடிகையென்றவேதைதானும், நவியாளர்தங்களுக்கு மவஹதியோ ர்க்கும் நற்பெண்டிர்களைகெடுத்த துரோகியோர்க்கும், கலியுடைய சப்பாணிகுருடருக்கும் சட்டமுடனெருக்காலும் பலியாதன்றே.

அன்றுனபோகரேழாயிரத்தில் வப்பனே கடைக்காண்டந்தன் னிலப்பா, குன்றுனமலைபோலேகோடிகற்பம் கொட்டினே ஞதாக்க ளறிந்ததில்லை, தென்றிசையிலகத்தியனூர் காவியத்தில்தேற்றமுடன் வெகுகோடிபாடிவைத்தார், வென்றிடவே சத்தகாண்டந் தன்னிலப் பாவிருப்பமுடன் பாடிவைத்தேன் கோடியாமே. 398

நாரை கற்பம்.

கோடியாமின்னமொருகற்பஞ்சொல்வேன் கோபாலாயென்குரு ஞ்வகுமரவேலா, வாடியேமயங்காதேமன்னுகேளு வளமையுடன்நா வரையென்றகற்பஞ்சொல்வேன், தேடியேகருநாரைகொண்டாராய்ந் துதேற்றமுடன்குடல்போக்கிசிறகுபோக்கி, ஆடியதோர்சூதமென்ற யானைதன்னை வப்பனேதன்வாயிற்புகட்டிடாயே. 399

புகட்டவேயிருவாயுந்தைத்துமல்லோ பொங்கமுடனேன்தாளியெ ன்றபாண்டந்தன்னில், அகலமதுசாணநவும்விரள்தானுவப்பனே பூநீரைப்பறப்பிமைந்தா, நிகலவேநாரையென்றபட்சிதன்னை நிஷ்களங்கமாகவல்லோ பாண்டம்வைத்து, புகலவேமேலுமந்தபூநீர்விட்டு புண்ணியனேமேற்பாண்டந்தன்னைமூடே. 400

மூடவேசீலையதுவலுவாய்ச்செய்து மூசியாமல்தானெரிப்பாயிர ண்டுசாமம், நீடவேபட்சியதுவெந்துமல்லோநீதியுடன்தீயாறியெடுத் துப்பாரு, கூடவேமேலிருந்தபாண்டம்நீக்கி குற்றமறமாமிஸத்தை யெடுத்துமைந்தா, சாடவேகுழிக்கல்லில்தன்னிலிட்டு சட்டமுடன் யிருப்புலக்கைதன்னுற்சாடே. 401

சாட்டியபின்சூரணமாய்ச்செய்துகொண்டு சாங்கமுடன்சூரண த்தில்நாலுக்கொன்று, தாட்டிகமாய்பஞ்சமுஷ்டிதானுஞ்சேர்த்துச ட்டமுடன்பஞ்சதிரவியங்களைந்தும்,வாட்டமுடன்திரிகடுகுதிரிபலா திவகைகவகைக்குநாலுக்குவொன்றுசேரு, பூட்டவேயித்தாதிசரக்கை யெல்லாம் புகழ்பெறவேநெய்தேனும்விட்டுக்கிண்டே. 402

கிண்டியேபரணிதனில்பதனம்பண்ணு கீர்த்திபெறவுண்பதற்கு விபரங்கேளு, தண்டகம்போலிருவேளையுண்பாயானால்தாட்டிகமாய் வாசியதுமேல்நோக்காது, மண்டலந்தான்கொண்டவர்க்குவாசியோ கம் மகத்தானமார்க்கமெல்லாம்வழியேகாட்டும், சண்டமாருதம்போ லேயிந்தகற்பம் சாங்கமுடனுண்பவர்கருப்பலனைக்கேளே. 403

கேளப்பாகுளிகையதுகொண்டபேர்க்கு கெடியானசின்மயத்தி லொடுக்கவாசி, நாளப்பாதன்மயமுங்காணுமற்றுன் நலமானவாசிவ ழிக்கிடங்கொடுக்கும், ஆளப்பாவாருதாரத்தைக்காட்டும்வப்பனேய திலொடுக்கும்கலைகள்ரெண்டும், தேளப்பாகொட்டியதோர்விஷத்தை ப்போலும் தேஜொளிவின்பூரணத்தைக்காணலாமே. 404

காணலாஞ்சுழுத்தியிலேயிருந்துகொண்டு கருவிகரணுதியந்தம் மேலேதொட்டு, பூணலாம்விசித்தியிலேவாசிநாட்டிபுகழ்பெறவேவனு

129

கதத்தைமேலேபூட்டி, தோணமேவசுடரொளியைத் தாக்கும்போது சூட்சமென்றதலைதனையேபிரித்துக்காட்டும், மாணமேவமாயாதிசித்த ரெல்லாம் மார்க்கமுடன்மறைத்துவைத்தாருண்மைபாரே. 405

உண்மையாய்வாசிதனை நடத்தும்போது வுத்தமமேனசிகரமது மூஞ்சிக்காட்டும், தண்மையாய்நடுமையமவுனம்பார்த்துதாக்குவாய் அங்கென்றாகும்பித்தாக்கால், வண்மையாஞ்சுழுத்தியிலேதானே க்கும் வளம்பெறமேவபூரணத்தைப்பதியக்காட்டும், கண்மையாஞ்சு வாசமதுசுபாலம்பற்றி கைலாயவங்குலத்தைகாட்டும்பாரே. 406

காட்டுமேசூட்சமென்றகுறியையாலே கதிரொடுங்கிசடாபோ லேகண்பிதுங்கி, நீட்டமுடன்பஞ்சபூதங்களைக்கும் நிலையானவொடு க்கவழியடங்கநின்று, கூட்டமுடன்பிரிநிவினிலேதய்வுதங்கி குறிப் புடனேதேய்வினிலேவாய்வுதங்கி, காட்டிடமேயோகாஸம்வப்பில்தங் கிகனமானயோகநிலைநிறத்தும்பாரே. 407

பாரேதான்கண்ணேமேலமணக்கண்ணாலே பாங்குபெறயோகநிலை நடத்துதற்கு, சீரேதான்சித்தமுனிரிஷிகள்தாமுமசிறப்புடனேருன் டலியாம்யோகந்தன்னை, நேரேதான்நெடுங்காலங்கற்பமுண்டுதேற்ற முடன்போகநிலையொடுக்கந்தன்னை, வேரேதான்கருவான நூல்கள் பார்த்து விட்டகுறையிருந்ததென்றுவிட்டிட்டாரே. 408

விட்டாரேதேவதாரிஷிகளெல்லாம் விண்ணுடர்மண்ணுடர்மா ண்பர்தாமும், கெட்டாரேயோகநிலைசூட்சங்காணார்கேடழிந்துபாட ழிந்து விழலாய்ப்போனார், தொட்டகுறிபோலாகவுந்தமக்குதோரும லோதிவைத்தேன்புண்ணியவானே, விட்டகுறையிருந்ததொருபுண் ணியத்தால் வித்தகனேயுந்தமக்குவமைக்கலாச்சே. 409

ஆச்சப்பாகாலாங்கி கிருபையாலும் வப்பனேமகேனண்மணியா ளாசீர்மத்தால், மூச்சடங்கிவாசியோகஞ்செய்வதற்கு முனையானகா யாதிகற்பமெல்லாம், வாச்சுதேபுலிப்பாணிமன்னேசுகுணவளம்பெறமேவ யுந்தமக்குயோகங்காண, மாச்சலென்றயோகநிலையுந்தமக்கு மகத் தானமகிமைகளும்போதித்தேனே. 410

## மயில்முட்டைகற்பம்.

போதித்தனின்னமொரு மார்க்கம்பாரு புகழானபுலிப்பாணி மகனேயப்பா, ஆதித்தன்சந்திரன்போலுந்தமக்குவப்பனேயானுரை ப்பேன்மகிமைபாரு, சோதிமயமானதொருமயிலின்முட்டை சுந்தர

னேமனதுவந்துமுட்டைதன்னில், பாதிமதிவிந்துடனேயாயினுதம்
பாங்குபெறதானெடுப்பாய்களஞ்சியொன்றே. 411

ஒன்றான களஞ்சியதுவகைவகைக்கு வுத்தமனேதானெடுத்து
செப்பக்கேளீர், குன்றாமல்முட்டைதனில்துவாரமிட்டு குறையாமல்
சரக்கெல்லாமடைத்துமைந்தா, வென்றிடவேசிலையதுவலுவாய்ச்செ
ய்து விவரமுடன்துவாரமதைமறைத்துமைந்தா, சென்றிடவேபாண்
டமதில்மணல்தான்கொட்டி, செழித்துமேமேலுமந்தமணலைக்கொட்
டே. 412

கொட்டியேமேற்பாண்டந் தன்னைமூடி குமுறவேசிலையதுவலு
வாய்ச்செய்து, சட்டமுடன்வாலுகையாமேந்திரத்தில் சாங்கமுடன்
தானெரிப்பாய்நாலுசாமம், பட்டயம்போல்மணலதுவுஞ்சிவந்தபின்பு
பாலகனேயெடுத்துப்பாரண்டந்தன்னை, நட்டமென்னகாயாதிக்குரு
தியாச்சு நலம்பெறவேகவசமதைபிரித்துவாங்கே. 413

வாங்கியேகவசமதையெறிந்துபோடு வளம்பெறவேயண்டமதை
வுறலிலிட்டு, தூங்கியேதிரியாதேயிருப்புலக்கை துப்புரவாய்த்தான்
கொண்டுஜாடும்போது பாங்குபெறமெழுகதுவுமென்னசொல்வேன்
பாரினிலேகோதாக்கள்மறைத்துவைத்தார், ஏங்கியேயிருந்தாக்கால்வெ
ன்னசித்தி யெழிலானகற்பமதைத்தேடிக்கொள்ளே. 414

கொள்ளவேகயற்பெறவே கற்பந்தன்னை குணபாகங்கைபாகஞ்
செய்பாகத்தால், மெள்ளவேகுளிகைதனை முடித்துக்கொண்டு மேதி
னியில்நீயுமொருசித்தனைப்போல், உள்ளதொருவேஷமதைவிடுத்துமல்
லோ வுத்தமனேசிவராஜயோகன்போலே, விள்ளவேநெடுங்காலமி
ருப்பதற்கு விருப்பமுடன்காயாதிகற்பமுண்ணே. 415

உண்ணவேமண்டலந்தானந்திசந்தி வுத்தமனேமயில்கற்பங்கொ
ண்டாயானால், திண்ணமுடன்நரைதிரையுமாற்றிப்போகும் தீர்க்கமு
டன்நெடுங்காலமிருக்கலாகும், வண்ணமுடன்காயாதி கற்பத்தாலே
வளமானவாசிதனைநடத்தலாகும், திண்ணமுடன்காலாங்கிநாதர்தா
மும் சட்டமுடனெந்தனுக்குவோதினாரே. 416

ஓதவேகாயாதிகற்பந்தன்னைவுத்தமனேயுந்தமக்கு வுரைத்தேனப்
பா, நீதமுடன்காயாதிகற்பமுண்டு நீணிலத்தில்நீயுமொருசித்தனைப்
போல், தோதகமாயென்காலாஞ்சென்றபின்பு துப்புரவாய்லோகா
திலோகமெல்லாம், சாதகமாய்த்தான்திரிந்துமைந்தாநீயும் சட்டமு
டன்சீனபதிக்கேகுவீரே. 417

ஏகவேயுந்தமக்குவாமுந்தந்தேன் யெழிலானமகிமையெல்லாந் தானுரைத்தேன், போகவேகுளிகையதுபூண்டுகொண்டு பொங்கமுடன்காயாதிகற்பமுண்டு, சாகாமலிருப்பதற்குவினயங்கொண்டு சட்டமுடன்காயாதிகற்பந்தன்னை, ஆகாயந்தனிற்செல்லகுளிகைதானுமப்பனேயுந்தமக்குத்தந்திட்டேனே. 418

தந்தேனேயென்றுசொல்லிபோகர்தாமும்சட்டமுடன்சீனபதிக்கேகியல்லோ, அந்தமுடன்சீனபதிபெண்களுக்கு யவனிதனில்நடந்ததொருவதிசயங்கள், சொந்தமுடன்தாமுரைத்து சித்துதாமும் சுந்தரனூர்காலாங்கிசமாதிபக்கல், விந்தையதுயின்னமிககாணவென்றுவிருப்பமுடன்குளிகையிட்டுசென்றிட்டாரே. 419

போகர் சீனபதிபுறவிஅதிசயத்தை புலிப்பாணிக்கூறல்.

சென்றாரேசீனபதிக்கடலோரத்தில் சிறப்புடனேபோகமுனிநாதர்தாமும், வென்றிடவேசிலநாளாங்கிருந்துமல்லோ வேகமுடன்மேருவடபாகத்தில், குன்றானமலையோரஞ்செல்லும்போது கூறானசார்பலென்றகுகையோரத்தில், அன்றுமல்லோசெம்புறவிதன்னைத்தானும்அங்கெனவேபோகர்முனிகண்டார்தாமே. 420

தானானகுளிகையதுபூண்டுகொண்டு தாரணியில்வடபாகங்குகையோரத்தில், மானானமகமேருதன்னைப்போல மகத்தானவசுவதாபுறவிதன்னை, பானானசூரியன்போல்புறவிதானும் பாங்குடனேகண்டவரும் பிரமித்தேங்கி, தேனானமகோனன்மனோன்மணிதனிலுன்னி தேற்றமுடன்பிறவியிடமிறங்கினாரே. 421

இறங்கியேபோகரிஷிமுனிவர்தாமும் யெழிலானசெம்புறவியருகில்வந்து, திறமுடனேகுளிகையதுவிட்டுமல்லோ தீர்க்கமுடனஞ்சலித்துகரங்குவித்து, நிறமுடையசெம்புறவிதன்னைக்கண்டு நிட்களங்கமானபரவசமுங்கொண்டு, குறவனைப்போல்சித்துமுனிரிஷியார்தாமும்கும்பிட்டுமுடிவணங்கிப்பணிந்திட்டாரே. 422

பணிந்துமேபோகரிடிமுனிவர்தாமும்பட்சமுடன் முடிவணங்கி நிற்கும்போது, மணியானசெம்புறவிதானுங்கண்டு மகத்தானபோகரிடியாரென்றென்னை, அணியானகாலாங்கிநாதர்பாதம் அவர்பாதசீஷனென்றுயானுரைத்தேன், துணிவுகொண்டுவடிவேயுங்கூறும்போது துப்புரவாயென்மீதில்கருணையாச்சே. 423

கருணையெனும்வாய்மொழியையறிந்துயானும் கர்த்தாவேயென்தனையாதரிக்கவென்று, அருணனைப்போல்மின்னுகின்றபுறவிதன்னை

அடிவணங்கிமுடிவணங்கி தொழுதேன்யானும், வருணரிஷிவளர்த்த தொருபுறவியொன்றவாகுடனே யாசீர்மம்மிகவுங்கூறி, தருணமது வந்ததொருகாரியத்தை சாங்கமுடனுரைக்கவென்று கேட்கலாச்சே

வருணரிஷியார் அசுவம் போகரைக்கேட்பது.

கேட்கவேபோகரிஷிமுனிவர்தானும் கெடியானலோகாதி தேச மெல்லாம், மீட்கமுடன்குளிகைகொண்டு சுத்திவந்தேன் மிக்கானப திதனையேகானவென்று, வாட்டமுடன்தரிசனைக்குவந்தேன்யானும் வளமானகாலாங்கிகடாட்சத்தாலே, தேட்டமுடன்யெந்தனுக்குதெ ரிசனைத்தான் தேவனேகிடைத்துதென்று பணிந்திட்டாரே. 425

பணிந்தாரேபோகரிஷிநாதர்தாமும் பாங்கானசெம்புறவி யேது கூறும், துணிவுடனேகுளிகைபூண்டு யிங்கேவந்து துய்யதொரு சிறு பாலாவுந்தனுக்கு, மணியானவுபதேசஞ் செய்வேனென்றுமார்க்கமு டன்செம்புறவி கூறியல்லோ, பணிபோன்றசெம்புறவி மாலையொன் றுபட்சமுடன்தான்கொடுத்து மதிக்கலாச்சே. 426

மதிக்கவேநவரத்தினமாலையொன்றும் மன்னவனூர்போகரிஷிநா தருக்கு, துதிக்கவேநெடுங்காலமிருப்பதற்கும் துடியான கற்பமென் றமார்க்கந்தானும், நதிராகத்தான்கொடுத்து அசுவந்தானும்நயம்பெ றவேகருவுளவானதெல்லாம், கதிர்போன்றபோகரிடி நாதருக்குக னமாகத்தான்கொடுத்துக் கருதலாச்சே. 427

செம்புறவிபோகருக்கு உபதேசித்தல்.

கருதவேகாலாங்கிநாதர்தம்மை கனமுடனேகேட்டதொருபுண் ணியத்தால், பொருந்தவேபோகமுனிநாதருக்குபொங்கமுடனுபதே சஞ்செய்யவெண்ணி, அருமையுடன்மூலிகற்பமானதெல்லாம்வன்பு டனேகொண்டுபோய்மனதுவந்து, பெருமைபெறசதாகாலம் வையக த்தில் பேருனமகிமைதனைக்கூறும்பாரே. 428

பாரேதான்போகரிஷிநாதாகேளும் பாருலகில்வந்ததொருகுளி கைபாலா, சீருடையசித்தாதிமுனிவர்தாமும்சீரான கானகத்திலநே கருண்டு, வீறுபுகழ்நாதாக்கள்சபிப்பாரப்பா வித்தகனே யுந்தமக்கு த்தீங்குநேரும், மாறுபாடானதொரு வார்த்தைகூறி மன்னவனே ம திமோசஞ்செய்வார்தானே. 429

தானனகாலாங்கிசித்துபாலா தண்மையுடனுந்தமக்குமூலிகற்ப ம், கோனனமலைதனிலேசென்றுயானும் கொற்றவனேயுந்தனுக்குமூ லிகற்பம், தேனனசெம்புறவியுண்டகற்பம்தேசமதில்மாண்பரெல்லா

ங்காணுகற்பம், பானுசூரியனார்காணுகற்பம் பட்சமுடன் மனதுவந்துகொடுக்கலாச்சே. 430

கொடுக்கவேவருணரிடிதன்றனக்கு கொற்றவனுருபதேசஞ்செய்தமூலி, நடுக்கடலில்கிருஷ்ணவதாரங்கொண்ட நலமானகண்ணபிரான்மூலிதன்னை, அடுத்துமேஆகாசந் தான்பறந்து அலைகடலில் மையவதிலிறங்கியல்லோ, எடுத்துமேவாய்தனிலே கௌவிக்கொண்டுயசிரியேமேற்பறந்து வருகலாச்சே. 431

தருகவேமூலிதனைசாபந்தீர்த்து சட்டமுடன்போகரிடிநாதருக்கு, குருவுரைத்தகற்பமென்றமூலிதன்னை குவலயத்தி லொருவருக்கும்விள்ளாதப்பா, சருகுடையமூலியின்தன் கற்பத்தாலே சட்சாதி கோடிவரையிருக்கலாகும், திருவருளாலுந்தனுக்கு யெல்லாஞ்சித்தி தீர்க்கமுடன்மூலிதனைப் பெற்றுக்கொள்ளே. 432

கொள்ளவேயென்றுமல்லோமனதுவந்து கொற்றவர்க்குமூலிதனைக்கொடுத்துமேதான், எள்ளளவும்நாதாந்த சித்தர்தம்மால் யெளிதாகயேற்றமதுமேருமற்றான், உள்ளபடிஞானோபதேசமார்க்கம் வுத்தமனைதான்கொடுததுவதிதங்கூறி, தெள்ளமூர்தமானதொருமாயாகற்பம் தெளிவுடனேசெம்புறவி யீயலாச்சே. 433

ஆச்சப்பாபுலிப்பாணிமகனேகேளு வட்டதிசைதான்கடந்து புறவிகண்டேன், பாச்சலுடன் குளிகையதுமனதுவந்து பட்சமுடன் கண்ணபிரானுண்ணகற்பம், மூச்சடங்கிவருமளரிடி கொண்டகற்பம் முனையானவசுவமது வுபதேசத்தால், ஆச்சரியமானதொரு கற்பந்தன்னை வன்புடனேபெற்றுவந்தே னென்றிட்டாரே. 434

என்னவேகாலாங்கிநாதர்தம்மாலெழிலான எட்டுதிசைகுளிகை கொண்டேன், பன்னவேசுவதாகடாட்சத்தாலே பாலகனை பெருங்கற்பம்யானுங்கண்டேன், துன்னவேமேதவதாரிடிவரத்தால்துப்புறவாய்மகமேருகற்பங்கொண்டே, உன்னவேபுஜண்டமகாரிடிசாபத்தால் வுத்தமனேகற்பமது பெற்றிட்டேனே. 435

பெற்றேனேசிங்கிந்தாரிடிவனத்தில் போனகுளிகைகற்பம்யானுங்கொண்டேன், கற்றதொருமுதலைகற்பம்யானுங்கொண்டேன் கருவானபச்சைவண்ணப்புறவிகற்பம், வெற்றியுடன்யிமயகிரிபர்வதத்தில்வேகமுடன் யேழுவரைசென்றேன்யானும், பற்றியங்கனமேயிருந்ததேவர்பாங்கான ரிடிநாதர்முனிகண்டேனே. 436

கண்டேனேயவரிடமுங்குளிகைகொண்டேன் காணவேமற்றொ ருவகையுங்கண்டேன், விண்டபொரு ளிருபத்தோர்வரையுஞ் சென் றேன்விட்டகுறையிருந்ததுவும் வளைத்துங்கண்டேன், கொண்டல் முடியச்சுதனார்மூலிகற்பம் கொடிதானசஞ்சீவியனைத்துங்கண்டேன், தண்டமாருதம்பாலேபுறவிகற்பம் சாங்கமுடன்கண்டேனென்றிட் டார்தானே. 437

தானனபுறவியதுயெந்தனுக்கு தன்மையுள்ளகற்பமதுகொடுத் ததாலே, கோனனயெந்தேவர் காலாங்கிநாதர் கொற்றவனார்பாதமது கடாட்சத்தாலும், தேனனமனோன்மணியாள்கிருபையாலும் தேற்ற முடன்கற்பமதுகொண்டுமல்லோ, பானனவையகத்திற் பகைஞர்தம் மைபட்சமுடன்வென்றுமல்லோ ஜெயித்திட்டேனே. 438

இட்டேனேபுலிப்பாணிமைந்தாகேளுயெழிலானகற்பமதையா ருக்குந்தான், தொட்டகுறிபோலாகசொல்லிவந்தேன் துரைராஜசுந் திரனேயுந்தமக்கு, விட்டகுறையிருந்ததொரு புண்ணியத்தால் வி ருப்பமுடனுந்தமக்கு வுபதேசித்தேன், சட்டமுடனென்னுளுங் கா லாங்கிபாதம் சதாகாலந்தான்வணங்கி வாழ்குவீரே. 439

லவணபற்பம்.

வாழ்கவேயின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் வளமையுள்ளபு லிப்பாணிமகனேகேளு, தாழ்கவேலவணமது யிருபத்தைந்துதப்பா மல்வகையொன்றாக் களஞ்சிவீத, மூழ்கவேகுழிக்கல்லில்தன்னைவிட் டுமுன்னையானகாடியென்ற நீராலப்பா, நீழ்கவேமுன்சொன்னகாடிதா னும்முசியாமல் தானெடுத்துவரைத்திடாயே. 440

அரைத்துமேநாற்சாமமானபின்பு வன்பாகபில்லையதுலகுவாய்ச் செய்து, குறையாதுரவிதனில்லேகாயவைத்து குணமாகசில்லிட்டுசீலை செய்து, முறைதானும்பிசகாமல் பின்னுமப்பா முசியாமல்கோழியெ ன்றபுடந்தான்போடு, நிறைபோலேதீயாறியெடுத்துப்பாருநிட்களங் சமானதொரு பற்பமாச்சே. 441

ஆச்சப்பாலவணமதை யெடுத்துமைந்தாவப்பனேமுன்போலக் காடியாலே, மூச்சுடங்கத்தானரைப்பாய்நாலுசாமம்முசியாமல்முன் போலசீலைசெய்து, பாச்சலுடன்ரவிதனில்லேகாயவைத்துபாங்குபெற

புடந்தனேயேபோடுபோடு, மாச்சதுவாராது லவணபற்பம்மகத்தான நாதாக்கள்வித்தையாச்சே. 442

வித்தையாம்லவணமென்றபற்பந்தன்னேவீறுடனே யிரண்டுபத்துப்புடமேபோடு, சுத்தமுள்ளபற்பமதுயென்னசொல்வேன் சுந்தரனேநாதாக்கள் செய்யும்வேதை, சத்தியமாயானறிந்த மட்டுமல்லோ தண்மைபெறவுந்தனிக்குவோதினேன்யான், புத்தியுள்ளபூபாலாபுண்ணியவாளே புகழுடனேசெய்துகொண்டால் சித்திதானே. 443

லவணவகை யிருபத்தைந்தும் என்னுடைய

நிகண்டிற்காண்க.

தானேகேள்புலிப்பாணிமகனேயப்பா தண்மையுள்ள லவணவகையிருபத்தைத்து, மானேகேள்யெந்தனது நிகண்டிலப்பா மகத்தானவாயிரத்து மெழுநூற்றுக்குள், கோனனையென்குருவின் கடாட்சத்தாலேகொற்றவனே லவணவகையிருபத்தைந்தும், மானனைபேர்கண்டுயிடையுங்கண்டு மகத்தானயினங்கண்டு சேர்வைகாணே. 444

காணவேலவணவகை பற்பந்தன்னேகருவாகமுடித்தவர்க்கு யெல்லாஞ்சித்தி, பூணவேபாஷாண முப்பத்திரண்டும் புகழாக லவணவகைபற்பத்தாலே, ஆணவங்கள்தானொடுங்கிமடங்கிக்கொல்லும் ஆகாதாரைத்தாங்கள்மறைத்துவைத்தார், வேணதொருசரக்கெல்லாம் லவணத்தாலே விஷங்கொண்டுமடிந்தல்லோ முடியும்பாரே. 445

லவணவேதை முகம்.

பாரேதான்லவணமதைக்கொண்டபோது பாலகனேதேகமதுசுசிவேயில்லே, நேரேதான்கந்தமருயிருக்கிக்காட்டும் நேர்மையுள்ளதேகமதுவுளுப்பேயில்லே, சீரேதான்காயாதிகற்பமாகும் சிறப்பானலவணத்தின்பற்பமல்லோ, வீரேதான்கவனமென்ற காரத்தாலே வெகுவித்தையாடுதற்குயினமுங்கேளே. 446

கேளேதான்பற்பமதுதானெடுத்து கெடியானவெள்ளிதனில்நூற்றுக்கொன்று, நீளவேகளஞ்சியது வொன்றுநாக்க நிட்களங்கமானதொருகுருவினலே, பாளமென்றவெள்ளியது பழுக்கும்பாருபாருலகில்நாதாக்கள்செய்யும்வேதை, ஆளாவமாற்றதுவுமென்னசொல்வேன்வப்பனேபதினறுமாற்றுகாணே. 447

காணவேசிவயோகிமாண்பருக்கு கருவானலவணமென்ற தங் கந்தானும், பூணவேபூசைமுகஞ்சொன்னதல்லால் புகழானவையக த்து மாண்பருக்கு, வேணபணிசெய்வதற்கு சொன்னதல்ல வேதை முகந் தங்கமென்றலவணந்தன்னை, மாணமருன்கல்வியுள்ள வேடத் தோர்க்கு மகத்தான சிவயோகிக்காகும்பாரே. 448

போகர்புலிப்பாணிக்கு தந்திரபுத்திகூறல்.

பாரேதான் புலிப்பாணிமன்னுகேளு பாருலகில் கருமியுள்ள மாண்பருண்டு, நேரேதானவர் வாசல்காத்துநின்று நேர்மையுள்ள பழக்கமது செய்யவேண்டும், சேரேதான் கிட்டிருந்த பழக்கத்தாலே சேர்வையுடன்மனதுவந்துநூல்கள்கூர்வார், வீரேதான்வாதமென்ற போக்கைக் கேட்பார்வேறுபட தூறுபடமயங்குவாரே. 449

மயங்குவார்பலநூலுமறிந்தாற்போல மார்க்கமெல்லாந்தெரிந்த தொரு மவுனிபோலும் தியக்கமுடன்நூல்பார்த்துத் தெரிந்தோர் போலும், தீர்க்கமுடன் பவாகத்தி யிருந்தோர்போலும் தயக்கமது கொண்டல்லோவாதுகூறி தப்பாமல்வேதைமுகங்கேட்பார்பாரு, நய ம்படவேயவர்களுக்குயிதமுகூறி நன்மையுடனிருப்பதுவு நன்றாய் பாரே. 450

நன்றானவார்த்தையதுமிகவுங்கூறி நலம்பெறவேயவர்க்களுக்கு மதிகள்கூறி, குன்றானசாத்திரங்கள் கற்றநீங்கள் குவலயத்தில் வே தைமுகம்வேணதுண்டு, வென்றிடவேயுந்தமக்குவேறுண்டோசொல் வேதாந்தசித்தமுனியார்தானுண்டோ, சென்றவர்கள் மடிந்தவர்கள் கோடாகோடி செகதலத்திலும்மைப்போல்சித்துகாணே. 451

சித்தானகாதரையாம் கண்டதில்லை சிறப்புடையநாதரவர் நீர் தானென்று, புத்தியுள்ளபூபாலருமம்மைப்போல பூவுலகில் பெரி யோரைக்கண்டதில்லை, சத்தியத்தில்மிகுந்ததொருதருமவான்போல் சட்டமுடன் முகதாவில்வந்தீரென்று புத்தியுடன்தந்திரமாய்வார்த் தைகூறி புனிதமேனவிட்டகற்றல்மெத்தநன்றே. 452

நன்றானவார்த்தையதுமிகவுங்கூறி நலமுடனேபொய்ப் பகட்டு யாவுங்கூறி, சென்றிடவே பின்றொடர்ந்துவழிதான்விட்டுசென்மமு ள்ள சீவிந்தானுள்ளமட்டும், வென்றிடவேயெப்போதும் மறக்கே னென்றும் வேதாந்தசித்தொளிவைப் பணிவேனென்றும், குன்றி யேமுகம்வாடி மனதுவந்து குருபரனே தந்திரமாய்ப்பணிகுவாயே.

பணியவே கருமியென்றசீடருக்கு பாலமூர்த முண்டதொரு சந்தோஷம்போல், சவனிதமுடன்தமக்குகந்த சீடனென்று கருத்து

டனேயுன்மீதிற்பட்சம்வைத்து, அணிபெறவேவிழியில்லானென்று வந்து வப்பனேகடாட்சமதுமிகப்புரிந்து, துணிவுடனே யுன்மீதிற்கிருபைவைத்து துப்புரவாய் பற்பமதுகொள்ளார்தானே. 454

தானனபுலிப்பாணிமைந்தாகேளு தண்மையுள்ள நல்லோருந் தீங்கோருண்டு, கோனனகுருக்கள்மார் யோகிமாண்பர் கொற்றவனேஜகதலத்தில்மெத்தவுண்டு, தேனனவார்த்தையதுமிகவுஞ்சொல்வார் தெள்ளமூர்தமானதொருகேசஞ்செய்வார், பானனசீடன்மேல் பட்சம்வைத்து பகட்டுவார்·மெய்புகட்டு வதிகம்பாரே. 455

மாரணவேதை

பாரப்பாலோகமென்றமாரணத்தைப் பக்குவமாய்ப் பகருகிறேன்மன்னுகேளு, ஆரப்பாலோகமாரணத்தைச்சொன்னுர் வப்பனே சொன்னவர்கள் மறைத்துச்சொன்னுர், நேரப்பாயுந்தனுக்கு சிடிகைவேதை நேர்மையுடனுனுரைப்பேன் நீதியாக, கூரப்பாசெம்பதுவும் பத்தேயாகும் குறிப்பானவெள்ளியதுரெண்டுதானே. 456

தானனநாகமது வொன்றேயாகும் தாக்குடனேபதின்மூன்றுமொன்ருய்க்கூட்டி, தேனனசெம்புதனையூதிப்போடு தேற்றமுடன் சுத்தித்தசெம்புதன்னை, மானனசெம்புதனைப்பதனம்பண்ணு மகத்தான போகும்வகைவரிசைகேளு கோனனதங்கமது வொன்றேயாகும்குறிப்பான வெள்ளியது வொன்றுகாணே. 457

காணவேநாகமது வொன்றேயாகு கனமானசூதமதுவொன்றேயாகும், தோணவேமுன்னுரைத்த செம்புதன்னில தோருமலோரிடைதானெடுத்துக்கொண்டு பூணவே மூவகைஜெயநீராலேபுகழாகத் தானரைப்பாய்சாமமப்பா, மாணவேசரக்கெல்லாமறைத்த பின்புமார்க்கமுடன் மாத்திரைகளேந்துபாரே. 458

செய்யவேவெள்ளிதனில் பத்துக்கொன்று செம்மலுடன் ருனுருக்கிகுருகானென்று, பையவேகண்விட்டு ஆடும்போது பாகமுடன் ருனுருக்கி குருவொன்றீயதுய்யதொரு வெள்ளியது மாற்ருருகு துப்புரவாய்ப்பசுமையது சொல்லப்போமோ, மெய்யான வித்தையிதுயேமவித்தை மேதினியில் செய்பவர்களில்லைதானே. 459

இல்லையே பத்துக்கோர்தங்கஞ்சேர்த்து யெழிலானவாரடித்துப்புடத்தைப்போடு, தொல்லையெனும்பிறவியது மாருத்தங்கம் சுயத்தங்கம் புடத்தங்கம் பசுமைத்தங்கம், அல்லலதுபோக்கடிக்கு மருமைத்தங்கம் ஆகாகாநாதாக்கள் மறைத்ததங்கம், கல்லிலது விளைந்ததொருதங்கந்தானும் கருவானதங்கமிதற்கொவ்வாதன்றே. 460

அன்றான தங்கமதுயென்னசொல்வேந் அரகரநாதக்கள்ளொளி த்ததங்கம், குன்றானசாத்திரத்தில்மறைத்ததங்கம்கோவேந்தர்கட்ட லைந்துகெட்டதங்கம், வென்றிடவேயுந்தமக்குவோதிவைத்தேன்வே தாந்தக்கண்மணியேயுத்திவானே, கன்றில்லாப்பால்கறந்தகதையைப் போல காசினியில்சித்தரெல்லாமொளித்தார்தானே. 461

சூதவெள்ளி

தாமானயின்னமொருமார்க்கஞ்சொல்வேன் தண்மையுள்ளபுலி ப்பாணிதம்பிரானே, கோமானுக்கொப்பான கோவேகேண்மோகுவ லயத்திலெந்தனிடசத்தியவானே, ஆமானமானதொருசாத்திரங்கள் வப்பனேவெகுகோடிநூல்கள்பார்த்து, சாமானியமானதொருசூத வெள்ளிசாற்றுகிறேன்சன்மார்க்கபுனிதவானே. 462

புனிதமாஞ்சூதமதுதுலாமேவைந்து புகழானகாடியென்றகாரந் தானும், கனிவுடனேகாரமதுவொன்றேயாகும் கனமானமூசைதனி லிட்டுமைந்தா, பனிபோன்றவாறுவகைஜெயநீர்தன்னால் பாங்குட மூசைதனில்நிறையவிட்டு, இனிதாககலசமென்றமண்பாண்டத்தில் யெழிலாகமணலிட்டுமூசைவையே. 463

வைத்துமேல்மூடிசீலைசெய்து வளமாகமேலுமந்தமணலைக்கொ ட்டி, சத்தமதுபோகாமல்பாண்டமிட்டு சதுராகசீலையதுவலுவாய்ச் செய்து, சுத்தமுடன்கணபதியைப்போற்றி செய்துசுந்தரனேநாற் சாமமெரிப்பாயப்பா, ஆத்தமெனுங்காடியென்றசாரத்தாலைதடியா னசூதமது மடியலாச்சே. 464

ஆச்சப்பாபாண்டமதைதிறந்துமைந்தா வப்பனேமூசைதனிலி ருக்குஞ்சத்தை, பாச்சலென்றசூதமதுவெண்ணை தன்னைபக்குவமாய் வருத்தெடுத்துபீங்கானிட்டு, மூச்சடங்கிப்போனதொரு சூதந்தன் னில் மூசியாமல்கல்லுப்புதுலாம்மேபோடு, மாச்சலுடன்சூதமென்ற வெண்ணைதானு மார்க்கமுடனுருகியல்லோ நிற்கும்பாரே. 465

நிற்குமேசூதமென்றவவண்ணைதன்னை நீதியுடன்மூசையிட்டுவு ருக்கிப்பாரு, அற்பமென்றாநிணையாதேயறிவுள்ளானே ஆகாகாவா னத்துமீன்தானொச்சு, சொற்பமென்றாநினையாமல் ரவிவான்சேர்த்து திப்புரவாய்ப்பூசையதுசெய்யக்கேளு துற்கையென்ற காளிக்குப்பூ சைபோடுதுறையானவெள்ளிமுகங்காணலாமே. 466

காணலாம்சூதமென்றவெள்ளிதன்னைகாசினியில்நாதாந்தசித்த ர்தாமும், பூணலாஞ்சித்தமுனிக்கானவேதை பூவுலகில்சமுசாரிக்கா

காவேதை, வேணபடிசூதமதைக்கொன்றபேர்க்கு வெகுபாடுவெகு கேடுகுஷ்டரோகம், ஆணவங்கள்தானொடுங்கி யழிந்துதேகம் வப்ப னேசகரோக மாவார்பாரே. 467

பாரப்பாசூதமதைக்கொன்றபேர்கள் பாருலகில்வெகுபேர்கள் மடிந்தாரப்பா, நேரப்பாதவயோகிவேடம்பூண்ட நிஷ்களங்கமான தொருசிவயோகிக்கும், கூரப்பாவித்தையதுபலிக்கும்பாரு குவலயத் தில்பற்றோர்க்கும்பலியாதப்பா, ஆரப்பாபுலிப்பாணி புனிதவானே அன்புடனேயானுரைத்தேன் பண்பாய்க்கேளே. 468

சூதசெந்தூரம்.

பண்பானபுலிப்பாணிபாலாகேளீர்பகருகிறேந் சூதமென்றசெந் தூரத்தை, நண்பானநூல்களுள்வாராய்ந்தேதான் நாதாந்தசித்துமு னியறிந்துமல்லோ, திண்பானசெந்தூரப்போக்குதன்னை திசைமாறி யடைமாறிபிரட்டல்செய்து, உண்மையாய்ச்சொன்னதொருமொழி யைப்போலேவுவமைகொண்டுபாடிவைத்தார் பேதந்தானே. 469

பேதமாம்சூதமென்றவெண்ணைத்தானும் பேரானகெந்தியென் றதிராவகத்தால்,நீதமுடன்தானரைப்பாய்யிரண்டுஜாமம்நிர்மலமாய் பூமதைமடிந்துகொல்லும், போதமுடன்காசியென்ற குப்பிதன்னில் பொங்கமுடன்மாக்கல்லால்கொண்டுமூடி வாதமதுபலிப்பதற்குமொ ய்யேயானல் வளமானசீலையதுவலுவாய்போடே. 470

போடேநீகுப்பிக்குச்சீலையேழு பொங்கமுடன் வாயைவிட்டுச் சீலைசெய்து, கூடேநான்தளவாயாம்பாண்டந்தன்னில் கொற்றவனே மணலிட்டுக்குப்பிவைத்து, நாமேதான்குப்பிதனில்மணலுமிட்டு நய மாகமேல்மூடிசீலைசெய்து, ஆடேநீநாற்சாமமெரித்தபோது வப்ப னேசெந்தூரமாகும்பாரே. 471

பாரேதான்செந்தூரந்தனையெடுத்து பாங்குடனேநாதாக்கள் சொன்னமார்க்கம், சேரேதான்வெள்ளியதுகளஞ்சிநூறுதேற்றமுட ன்தானெடுத்துகுகையிலிட்டு,கூரேதான்தானுருக்கிமைந்தாகேளுகு றிப்புடனே குருவொன்றுதன்னையீய, வீரேதான்வர்ணமதுஎன்ன சொல்வேன் வீறுனபோக்கதுவுங் கூறப்போமோ. 472

போமேதான்வெள்ளிதனையுருக்கிப்பார்க்க போக்கானவெள்ளி யதுதங்கமாச்சு, நாமேதான்சொன்னபடி தங்கமாற்றுநாதாக்கள்தம் மாலேகூறப்போமோ, வேமேதான்பிறவிடென்றதங்கந்தானும் வே தாந்தத்தங்கமதுயிதற்கிடுண்டோ, ஆமேதான்சிவயோகத்தங்கமாகு ம்வப்பனே காலாங்கி தங்கமாமே. 473

தங்கமாமின்னமொருபோக்குசொல்லேன், தண்மையுள்ள புலி ப்பாணிதயவாய்க்கேளு, வங்கமதைதான்கொடுத்து ஆதிற்செம்பை வளமாகத்தானுருக்கி யெடுத்துமைந்தா, துங்கமுள்ள செம்பதனில் நூற்றுக்கொன்று துப்புரவாய்த்தானுருக்கி குருவொன்றீய, பங்கமி லாத்தங்கமதுயென்னசொல்வேன்பாருலகில்சிவயோகிகாணலாச்சே.

ஆச்சப்பாசெம்பதுவும்தங்கமாச்சு வப்பனே நாதாக்கள்மறைத் துவைத்தார், மாச்சலதுவாருதுதங்கச்செம்பாம் மகத்தானதங்கமது யிதற்கீடுண்டோ, பூச்சுடையபிறவியென்ற தங்கரேக்குபுகலவொண் ணுசுயத்தங்கமிதற்கீடுண்டோ, ஆச்சர்யமானதொருதங்கமாச்சு வப் பனேநாதாக்கள் மறைத்தார்தானே. 475

தானான தங்கமதைத்தானெடுத்து தண்மைபெற வெள்ளிதனில் பத்துக்கொன்று, கோனான குகைதனிலேவிட்டுருக்கி கொற்றவனே செம்பதுவுமொன்றேயீந்தால், தேனானவெள்ளியது பழுக்கும்பாரு தேற்றமுடன்மாற்றதுவுங்கூறப்போமோ, மானானதேவேந்திரன்வீற் றிருக்கும் மகததானவாணியென்ற தங்கமாச்சே. 476

ஆணியாமின்னமொருபோக்குசொல்வேன் வப்பனே புலிப்பா ணிமைந்தாகேளு, காணியாஞ்செந்தூரமெடுத்துமைந்தா காத்துட னேகுடவனிமேலேநூற்றுக்கொன்று, வாணிபதந்தான்வணங்கிகொடுத் துப்பாரு வளமானகுடவனதுஆறலேகி, ஆணியாந்தங்கமது கொப் பேசொல்வார் வப்பனேயிந்திரபீட தங்கமாச்சே. 477

இந்திரனார்வீற்றிருக்குமாணித்தங்கம் யெழிலானதங்கமதுயெ வர்தான்செய்வார், சுந்தரம்போல் சிவனேவடம்பூண்டுமல்லோ துப்புர வாய்த்தானிருக் ம் யேகவான்கள், விந்தையுடன்விநோதமென்றவே தைதன்னை விருப்பமுடன்செய்துமல்லோ மனதுவந்து, அந்தரமெ லாம்புகழவரமும்பெற்று வப்பனேவசித்திருப்பார் போகமாண்பே.

வெடியுப்புகட்டு.

மாண்பானயின்னமொரு போக்குசொல்வேன் மகத்தானபுலிப் பாணிமன்னுகேளு, ஆண்மையுள்ள காலாங்கிநாதர்பாதம் வப்பனே நான்வணங்கினதேசம், வீண்காலம்போகாமல் குளிகைகொண்டுவி ட்டகுறையிருந்ததொருபுண்ணியத்தால், தாண்டவம்போல்தேசாதி தேசமெல்லாம் சற்குருவைத்தானடுத்து வரம்பெற்றேனே 479

பெற்றேனேகாலாங்கிகடாட்சத்தாலும் பெருமையுள்ள மனோ ன்மணியாள்கிருபையாலும், கற்றறிந்தநாதாக்களருளினாலும் கைலா.

சநாதருடபுண்ணியத்தால், சுற்றெங்குந்தேடியல்லோகண்டாருய்ந்து சுத்தமுடன்வேதைமுகமுளவுகண்டு, பெற்றதொரு மைந்தனைப்போ லென்னையெண்ணி பெருமையுள்ள மார்க்கமெல்லா மோதினேனே.

ஓதினேன்சிடிகையென்றவேதையப்பா வுத்தமனே வெடியுப்பு ஐந்தாங்காய்ச்சல், தீதில்லாவுப்பதுவுங்கப்பியுப்பு தீர்க்கமுடன் பல மைந்துநிறத்துமைந்தா, ஆதியென்றமுப்பூவைப்பழச்சாற்றாலேவப் பனேதானரைத்துக்கவசஞ்செய்து, சோதிமயந்தான்பெறவே ரவியி ல்வைத்து சோராமல்சீலையது வலுவாய்ச்செய்யே. 481

செய்யவேகோழியென்றபுடத்தைப்போடு செயலானவுப்பதுவு ங்கட்டிப்போச்சு, பையவேவுப்பதுவுங் கட்டிற்றாறல் பாலகனேயே மமென்றசெடியுமாச்சு, துய்யதொருவுப்பாலேயெல்லாஞ்சித்தி துப் புரவாம்ஜகத்தொளிவையற்றபேர்க்கு, உய்யதொருபொருளெல்லாந் தோயும்தோயும் வுத்தமனே வெடியுப்பைக் கண்டோர்க்காமே.

கண்டவர்களுப்பினிடமார்க்கந்தன்னை காட்டார்கள் கருவாளி மாண்பரெல்லாம், விண்டதொருவுப்பினலைப்புக்கட்டும் விண்ணுலகு மண்ணுலகுமிதிலடக்கம், சண்டமாருதங்கொண்ட வுப்பினாலே சக மெலாப்படல்கட்டியாடலாகும், தொண்டுசெய்து வுப்பதனையறிய வேண்டும் துரைராஜசுந்தரனே செப்பக்கேளே. 483

செப்பவென்றால் வேடியுப்பைவிட்டாலல்லோ செம்மனுடன்பூ வுமில்லைக்காயுமில்லை, அப்பினலுப்பதனைக் கட்டலாகும் ஆகாகாநா தாக்கள்சிடிகைவேதை, ஒப்பமுடன்சிடிகையென்ற வுப்புதன்னை ஒ கோகோநாதாக்கள் மறைத்துவைத்தார், தப்பிதங்கள்நேராது வுப்பி ன்மார்க்கம் தன்மையுள்ளமன்னவனே சாற்றக்கேளே. 484

சாற்றமென்றாலுப்பினிடகட்டினத்தைசாங்கமுடன்குகையிலி ட்டுவுருக்கிமைந்தா, திட்டமுடன்குழலொன்றுசெய்துமல்லோ தீர் க்கமுடன்நாலுபட்டையாகச்செய்து, வட்டமுடனுப்பதனை வுருக்கி மைந்தா வளமையுள்ளகருக்குழலில் பாய்ச்சியேதான், நாட்டமதுமீ றாமல்கருவைநீக்கி நயம்பெறவேவுப்பதனை யெடுத்திடாயே. 485

எடுத்துமேயுப்பதனைச்சொல்லக்கேளு யெழிலான பஞ்சவர்ண மேற்றப்பாரு, தொடுத்ததொருலிங்கமதை யரைத்துமைந்தாதோறு மலொருபக்கம்பூசிப்போடு, விடுத்ததொருதாளகத்தை யெடுத்துபா லாவிருப்பமுடனொருபக்கம் பூசிப்போடு, படுத்ததொருகெந்தகத்தை யரைத்துமைந்தா பாங்குடனேவொருபக்கம் பூசிப்போடே. 486

போடேதான்கெவுரியது யெடுத்துமைந்தா பொங்கமுடனொரு பக்கம்பூசிப்போடு, ஆடேதானுற்சரக்குமானபின்பு வப்பனே சீலைய துவலுவாய்ச்செய்து, காடேதான்ரவிதனிலேகாயப்போடு நலமானபு டமதுவுங்கோழியாகும், தேடவேபுடம்போடு எடுத்துப்பாரு தெளி வானவாணமது தோற்றும்பாரே. 487

போற்றவேபக்கமொருவர்ணபேதம் தோணுதகம்பியுப்புசாரணை யேயாக்க, மாற்றதுவும்சொல்லவென்றால் நாவேயில்லை மகத்தான சாஸ்திரந்தானேனும்பாரு, ஆற்றலேலிங்கமது மாற்றுயிரந்தான் வப் பனேசொல்வதற்குநாவுமில்லை, தேற்றமுடன்தாளகமும் ரெண்டா யிரமாற்று தெளிவான வுப்பினிடவேகம்பாரே. 488

வேகமாங்கெந்தியது மூவாயிரமாற்று வெழிலானவேதைமுகஞ் சொல்லொண்ணாது, பாகமுடன்கெவுரியது வைந்நூறுமாற்று பாங் குடனே வேதைமுகஞ்சொல்லும்பாரு. சாகமுடன்வுப்பினுட மேற் பட்டையப்பா சதாநந்தர்வைத்துந் தாரறிவாரோதான், போகமதுகொ ண்டதொருகாலாங்கிநாதர் பொன்னவனே யெந்தனுக்குவுரைத்தார் தானே. 489

தானைமாற்றிவுடவேகமப்பா தாரணியில்சித்தர்தம்மால் சொ ல்லப்போமோ, கோனைகாலாங்கி கடாட்சத்தாலே கொற்றவனேயா னுரைத்தேனுந்தமக்கு, தேனைமுறையதுவை யாருஞ் சொல்லார் தேவாதியென்றுருவே யெந்தன்மைந்தா, பானைபரஞ்சுடரே யுந்த மக்குப்பாரினிலே பாலித்தேன் பண்பாய்த்தானே. 490

பண்பானவேதையிது தாம்பிரவேதை பாலகனேயாருந்தான்வி ள்ளாரப்பா, நண்பானசாத்திரத்திற்சொல்லிருந்தும் நலமானமனோ ன்மணித்தாய்மறைத்தபாவர், உண்மையாய்உளவறிந்துகண்மலரோ பொன்மலரோ நீயெனக்குகருகாதே வொருவருக்குங் காட்டொண் ணாதே. 491

காட்டினல்லோகமெல்லாஞ் சித்தாய்ப்போகும்கனமோசங்கன லோகம் கருவாய்ப்போகும், நீட்டமுடன்சிவயோகி மாண்பரப்பா நீ ணிலத்தில்செய்துமல்லோ கண்டாருய்வார், வாட்டமுடன்முறைபா டுகைபாடாக வளமையுடன்செய்தவர்க்குயெல்லாஞ்சித்தி, தாட்டிக மாய்ப்புத்திவானறிவானப்பா சண்டாளகருமுகளு மறியார்பாரே.

கல்லுப்புவேதை

பாரேதானின்னமொருபோக்குசொல்வேன் பண்பான பரிகாரமானபேர்க்கு, நேரேதான்புலிப்பாணிமன்னனேகேளு நேர்மையுடனுந்தமக்குவுபதேசிப்பேன், சீரேதான்பெரும்பாடியாம் லவணந்தன்னை சிறப்புடனேதானெடுத்து மனதுவந்து, நீரேதான் சொன்னமுறை வழிபாடாக நிமலனேகைபாகஞ் செய்திடாயே. 493

செய்யவென்றுலுப்பதனை சேகைவாங்கி செப்பவென்றால் வன்னியதுபட்டையப்பா, கொய்யவேதானிடித்துமாவதாக்கி சுகம்பெறவேயுப்புக்குகீழ்மேலிட்டு, துய்யநல்லவுப்பதனைநடுவேவைத்துதுரைருஜசுந்தரமே செப்பக்கேளு, வெய்யதமிழ்ப்பண்டிதங்கள் பலிப்பதற்குவேதாந்தத்தாயாரை வேண்டிக்கொள்ளே. 494

கொள்ளவேயுப்பதனை சீலைசெய்துகொப்பெனவே ரவிதனிலேகாயவைத்து, மெள்ளவேகோழியென்றபுடத்தைப்போடு மேன்மையுள்ளவுப்பதுவுங் கட்டிப்போகும், கள்ளமதுவாறுது வுப்புக்கப்பா காசினியில் கருவாளியறிவான்பாரு, உள்ளபடியானுரைத்தே னுந்தமக்கு வுத்தமனேகையாகஞ் செய்வாய்காணே. 495

காணவென்றுலுப்பதனை யெடுத்துமைந்தா கலங்காமல்பூநீரை சுத்திசெய்து, தோணவேநாலுக்கோரிடைதான்சேர்த்து தோறமல்தானரைப்பாய்கல்வமிட்டு, வேணபடிவன்னியின்றன் பட்டைச்சாற்றால்வேகமுடன் றனரைப்பாய்நாலுசாமம், பூணவேயில்லையது லகுவாய்ச்செய்துபுண்ணியனே கோழியென்றபுடத்தைப்போடே.

புடமானபுடமதுவுமாறிப்பாரு புகழானவுப்பினிட கட்டியல்லோ, நீடேதான்நிஷ்களங்கமானவுப்பு, நீடாழியுலகுபதி யார்தான் கண்டார் கோடானகோடிமனுசித்தருண்டு, கொற்றவர்கள்கண்டுமல்லோமறைத்தேவைத்தார், பாடானபாடதும் யார்தான் செய்வார் பாலகனே விதியாளிசெய்வான்றானே. 497

உப்புக்கட்டு செந்தூரவேதை.

விதியானகட்டென்ற வுப்பைத்தானும் விமலனேசெந்தூரஞ் செப்பக்கேளு, மதிபோன்றவுப்பதுவுங்கசிவுநீங்கிமகத்தான தவளம்போலுருகியல்லோ, துதியானவுருக்கினம்போல் குடோரியாகதுப்புரவாயிருக்குமந்தவுப்புதன்னை, பதியானவன்மென்ற பேதிதன்னை பாலகனேநாலுக்கோரளவுசேரே. 498

சேர்த்துமேகல்வத்தில்பழச்சார்விட்டு செம்மையுடன்தானரைப்பாய்நாலுசாமம், பார்த்துமேபில்லையதுலகுவாய்ச்செய்துபாலகனேரவிதனிலேகாயவைத்து, ஆர்த்துமேசில்லிட்டுச்சீலைசெய்துவப்பனையெழுசீலைவலுவாய்ச்செய்து, பூர்க்கவேசெந்தூரம்லபிப்பதற்கு புகழானவடுப்பில்வைத்துயெரித்திடாயே. 499

எரிப்பதற்குவயணமதுசொல்வேனப்பாயெழிலானதளவரம்பாண்டந்தன்னில், திரியானமணலதனைக்கொட்டிமைந்தாதீர்க்கமுடன் கல்தன்னைமேமேல்வைத்து, சொரியானகருமணலையின்னுமல்லோசோராமல்பாண்டமதில்மணலைக்கொட்டி, சரியாகமேற்பாண்டந்தன்னைமூடி சட்டமுடன்தானெரிப்பாய்ச்சாமம்நாலே. 500

நாலானசாமமதுயெரித்தபோது நலமானசெந்தூரமென்னசொல்வேன், காலானசெந்தூரந்தனையெடுத்து கருமானவெள்ளிதனில் பத்துக்கொன்று, மாலானவெள்ளியதுவுருகும்போது மகத்தான செந்தூரங்களஞ்சிமியந்து, கோலானகரியினால்கிண்டும்போது கொற்றவனேவுட்கொண்டிருக்கும்பாரே. 501

பாரேதான்மாற்றதுவுமென்னசொல்வேன் பாங்கானவயததுவுமெட்டுமாகும், கூரேதான்நாலுக்கோர்தங்கஞ்சேர்த்துகுறிப்புடனேவாரடித்துப்புடத்தைப்போடு, சேரேதான்மறுபடியு முருக்கிப்பாரு நேர்மையுள்ளதங்கமதுகூறப்போமோ, ஆரேதான்செய்வார்களிந்தப்போக்கு வப்பனையுந்தமக்குவுரைத்தேன்றானே. 502

தானேபுடத்தங்கம்பிறவித்தங்கம் தண்மையுள்ளகுடோரியது உறங்காதப்பா, கோனேசிவராசதங்கமப்பாகொற்றவனேலவணமதிற்பிறந்ததங்கம், தேனேசிவயோகிக்குகந்ததங்கம் தெளிவானநாணயத்துக்குகந்ததங்கம், மானேவைபகத்தில்மாண்பர்தாமும்மார்க்கமுடன்செய்கின்றதங்கமாமே. 503

தங்கமாம்லவணமென்றசாரகாரம்தாரணியில்வெகுமாண்பர்காணமாட்டார், புங்கசித்தியட்டுரியோன்காண்பான்பாருபுகலானசித்துமுனிசெய்யுந்தங்கம், வங்கமதற்கேங்காதுவரணத்தங்கம்வளமான புரிசடையோனணியுந்தங்கம், இங்கிதமாய்சமுசாரிவழங்குந்தங்கம் யெழிலானவுப்பினுடதங்கங்காணே. 504

தேர்மகிமை பஞ்சபூதவொடுக்க வேதைமுகம்.

காணேதானின்னமொருமார்க்கஞ்சொல்வேன் கருவானபுலிப்பாணிகண்ணியவானே, தோணவேபூதமென்றால்பஞ்சபூதம்சொல்லு

கிறேன்னாதாக்கள்மகிமைதன்னை, வேணபடிவாதமெனுந்தேர்தானப்பா விருப்பமுடன்பூட்டுகிறேன்பஞ்சபூதம், ஆணாசாமுன்னுகதுளஞ்சுபூதம் வப்பனேசரக்குவகைபூதமஞ்சே. 505

அஞ்சானதேதென்றுகேட்பாயானல் வப்பனேதங்கமதுபிரிதிவாகும், துஞ்சலென்றயிரும்பதுவும்வாயுவாகும் துப்புரவாய்ச்செம்பதுவுந்தேய்வாகும், மிஞ்சவேகாரீயமப்புவாகும் மிக்கானநாகமதுஆகாசந்தான், துஞ்சலென்றலோகமதுவஞ்சுங்கூடி துறையானபஞ்சபூதமொடுக்கந்தானே 506

ஒடுக்கமாந்தேருர்குபிரிசியாச்சு வுத்தமனேபீடமதுவுரைப்பேன்பாரு, தொடுக்கவேபாஷாணபஞ்சபூதம் தோராமல்பீடவகையரைப்பேன்பாரு இடுக்கமுள்ளகெந்தியதுபிரிதிவாகும்யெழிலானகெவுரியதுதேய்வேயாகும், விடுக்கவேலிங்கமதுவாகாசமாகும் விரிவானவீரமதுவப்புமாமே. 507

அப்பானதுரிசியதுவாய்வுமாகும் வழகானபாஷாணபஞ்சபூதம் உப்பானகாரசாரபஞ்சபூதம், வுத்தமனேயானுரைப்பேன்விபரங்கேளுகப்பலென்றதேருக்குவுருளேயப்பாகனமானலவணமென்றபூதமெல்லாம், ஒப்பமுடன்வெடியுப்புபிரிதிவாகும் ஓகோகோநாதாக்களாடுங்கூத்தே. 508

கூத்தானவெடியுப்புபிரிதிவாச்சு குணமானவளையலுப்புதேய்வுமாச்சு, நாத்தமென்றகல்லுப்புவப்புவாச்சு நலமானசீனமதுவாய்வுமாச்சு, சாத்திரத்திலுரைத்தபடிபூநீரப்பா தண்மையுள்ளதாகாசந்தானேயாகும், சூத்திரமாம்பிரிதிவினிலுப்பவித்தசூடானவுப்பதுவுமாகாசமாச்சே. 509

ஆச்சப்பாசரக்குவறுபத்துநான்கும்வப்பனேவைந்தைந்தாயுகம்பிரித்து, மூச்சடங்கிக்கிடந்ததொருதேருக்கப்பா மூணையானசட்டமதில்தாள்கள்பார்த்து, ஆச்சரியமாகவல்லோசிகரமட்டும் வப்பனேதூணிருத்திகால்கள்நாட்டி, மாச்சலென்றவுபசாரங்கள்தொண்ணூற்றாறும் மார்க்கமுடனலங்கரித்துவரிசைகேளே. 510

வரிசைபெறநவரத்னமொன்பதுந்தான் வளமைபெறகள்ளாணியாக்கிக்கொண்டு, அறிவுடையசிம்பமதில்அத்திரந்தான்வப்பனேமூலிகையைக்கயர்போலாக்கி, புரிசடையோன்தம்பிரான்றன்னைதானும் புகழானதேர்மீதிலுச்சாடித்து, சரியுடனேமூலமதிற்றுள்கொண்டுபூட்டி தற்பரனைகள்ளாணி முடிக்கிடாயே. 511

முடுக்கமேவகருவிகாரணதியந்தம் முனையானவுடல்பொருள்களா வியெல்லாம், தொடுக்கமேவயண்சராசரங்கள்மட்டும் தோருமல்தாம் கண்டமேவைதைமேகாடி, நடுக்கடலில்நாணியறுந்திட்டார்போலே நலமா னபூதமெல்லாமொன்றேயானுல், படுகணையில்மாறன்விட்ட வம்பு போலே பாரினிமேலவாதமதுபலிக்கும்பாரே. 512

பலிக்குமேயறிவுடையோன்செய்துகொள்ளும் பாங்காநவேதை முகங்கோடாகோடி, ஜொலிக்குமேபிரணவத்தால்மூலிகட்டும், சோ ராமல்சரக்கெல்லாஞ்சுருண்டுமாளும், ஒலிக்குமேலோகமெலாமொ ன்ருய்க்கூடிவுத்தமமேனவாதத்துக்குறுதியாச்சு,சலியாதசரக்கெல்லா மைந்தைந்தாக சட்டமுடன்செய்வார்க்கு வாதமாமே. 513

வாதமென்ருல்சரக்குகளுல்பஞ்சபூதம்வளமானபூதமதிலொன் றுதப்பில், கீதமென்றகின்னரிக்குநாணற்ருப்போல்கீர்த்தியுள்ளசரக் கெல்லாமிழவைய்ப்போகும், தோதமுடன்வாதமது காணவென்ருல் தோருமல்பஞ்சபூதத்தைப்பாரு, பேதமதுவாராதுபூதங்கண்டால் பேரான வுலகினிமேலசித்தாவாயே. 514

சித்தானசிந்துமுனி யிந்தமார்க்கம் சிறப்புடனேசாத்திரத்திற் சொல்லவில்லை, முத்தானநூலெல்லாமனேகங்கண்டேன் முனையான பஞ்சபூதமேபதந்தன்னை, சத்தேனுமாண்பர்களும்பிழைப்பதற்குதயவு வைத்துயாரேயுங்கூறவில்லை, முத்திபெறசாத்திரங்கள்கோடாகோ டிமூதுலகில்சொன்னவர்கள்கோடியுண்டே. 515

கோடியேநாதாந்தசித்தாமும் குறிப்புடனேசாத்திரங்களதி தஞ்சொன்ஞர், தேடியேசாத்திரங்கள் தலைவகுத்துசெப்பினூர்யா தொன்றுங்கண்டதில்லை, பாடியதோர்வெகுநூல்கள்கைமறப்பு பாரு லகில் பாடிவைத்தார்சித்தர்தாமும், நீடியேயுந்தனுக்குவாதங்காணநீ தியுடன்போதித்தேனுண்மைதானே. 516

சூதவெள்ளிமணி.

உண்மையாமின்னமொருபாகஞ்சொல்வேன் வுத்தமனேநாதாக் கள்சொன்னுரில்லை, வண்மையுள்ளகாலாங்கிகிருபையாலேவளம் பெ ரியசித்தரெல்லாமறைத்துவைத்த, தண்மையுள்ளகைபாகஞ்செய்பா கத்தைசட்டமுடன்நாதாக்கள்கூறவில்லை, நண்மைபெறமாண்பர்களு ம்பிழைக்கவென்று நன்மையுடன்யானுரைப்பேன்பண்புதானே.

தானனசூதமதுபலந்தானைந்து தாக்குடனேசுத்திசெய்தெடுத் துமைந்தா பாங்குடனேமிருதாருசிங்கிதன்னை பட்சமுடன்தானெடு

த்துசெப்பக்கேளு, மானுனபலமதுவும்பத்தேயாகும்மகத்தானகல்வ மதிலிட்டுமைந்தா, தேனுனசெவ்வாவின்பழரசத்தால் தேற்றமுடன் தானரைப்பாய்சாமம்நாலே. 518

நாலானசாமமதுவரைத்தபின்பு நலமானமூசையது குறைதான் செய்து, பாலானரவிதனிலேகாயவைத்துபாங்குபெறமூசைதனையெ டுத்துமைந்தா, தாலானதளவாயாம்பாண்டந்தன்னில்தண்மையுடன் பூமணலைகொட்டியல்லோ, காலானமூசைதனைமையம்வைத்து கண்ம ணியே மூசைதனில்சூதந்தாக்கே. 519

தாக்கவேமேலுமந்தபில்லைமூடி தளமுடனேமணலதனைமேலே செய்து, நோக்கமுடன்தானெரிப்பாய்நாலுஜாமம்நுட்பமுடன்தீயா றியெடுத்துப்பாரு, பாக்கதுபோல்வுருளையது திரண்டுமல்லோபாங் குடனேதானிருக்கும் வருண்மைந்தாகேள், வாக்கதுவும்பொய்யாது புண்ணியவானே வரம்பெறவேசூதமதையெடுத்திடாயே. 520

எடுத்துமேசூதமென்றமணியையப்பாயெழிலானசாரணைதான் செப்பக்கேளு, கொடுத்துமேயாறுவகைசெயநீர்தன்னால்துப்புரவாய் ததானரைப்பாய்நாலுசாமம், வித்ததொருவெண்ணைதனைத்தானெடு த்துவிருப்பமுடன்நாகுயென்றகாசந்தன்னை, அடுத்துமேபலமதுவும் நிறுத்துமைந்தா வப்பமேனகவசமதுசெய்திடாயே. 521

செய்யவென்றால்காடியென்றகாரந்தன்னில் செம்மலுடன்சூத மென்றவெண்ணைதன்னை, பையவேகவசமதுசெய்துபாலாபாங்குபெ றசுக்கானின்சீலைசெய்து, துய்யதொருரவிதனிலேகாயவைத்துதுப் புரவாயெழுசீலைவலுவாய்ச்செய்து, வெய்யவேயுமிபடத்தில் போட் டுமைந்தா விருப்பமுடன்றுனெடுப்பாய்பதமாய்த்தானே. 522

பதமானசீலையது பிரித்துமைந்தா பாங்குபெறத்தானெடுப்பாய் சூதந்தன்னை, கதமானசூதமதுபிறகியல்லோ கண்மணியேநல்லது போலிருக்கும்பாரு, பதனமுடனேமணியெடுத்துசெப்பக்கேளுபாங் குபெறவெள்ளாட்டுப்பாலினாலே, மிதமுடனேநாற்சாமஞ்சுருக்குதா க்குமிக்கானசூதமென்றமணியுமாமே. 523

மணியானசூதமதையெடுத்துமைந்தா மார்க்கமுடன்குளிகைக் கூறுதான்சொல்வேன், அணியானபூநாகம்பலம்பத்தப்பாவப்பனே மணிபோக்கியெடுத்துப்பாரு, கணிதமுடன்தேனதனிலரைத்துமைந் தாகருத்துடனேமணிதனக்குக்கவசஞ்செய்து, பணிதமுடன்சீலையது காவிக்கல்லால்பாண்மையுடன்தான்பொதிந்துரவியிற்போடே. 524

போடவேரவிதனிலேகாய்ந்தபின்பு பொங்கமுடன் மணமறைவிற்புடத்தைப்போடு, தேடவே தீயாறியெடுத்துப்பாரு தெளிவுடனே கவசமதுயிறங்கியல்லோ, மூடவேகவசமதை யுடைத்துமைந்தா வுத்தமனேபார்க்குமந்த வேளைதன்னில், கூடவேமண்ணுகளு செம்புதானும்குணமானசூதமதை யிறுகலாச்சே. 525

ஆச்சப்பாசூதமது மணியுமாச்சு வப்பனேசாரணைக ளின்னஞ் சொல்வேன், மூச்சடங்கிநெடுங்காலமிருப்பதற்கு முனையான சூதமதைமணியேசெய்தால், பாச்சலுடன்நெடுந்தூரம்நடக்கலாகும் பாங்கானகுளிகையதுகீழ்நோக்காது, வீச்சுடனேகிருஷ்ணவதாரனப்பாவிண்ணுலகிலாடியதோர் குளிகையாச்சே. 526

குளிகைக்குசாரணைகளென்னவென்றால் கொத்தவனேமூமத்தங்காய்கள்தன்னை, நளினமுடன்தானரைத்துக்கவசஞ்செய்து நலமுடனே சீலையதுவலுவாய்ச்செய்து, பளிதமதுவாறுதுபாலாகேளுபாங்குபெறமணல்மறைவிற்புடத்தைப்போடு, வனிதமுடன்கவசமது நீக்கிமைந்தா வளமையுடன்தானெடுத்து செப்பக்கேளே. 527

செப்பவென்றால்குளிகையது யென்னசொல்வேன் செம்மலுடன்போகும்வகைமுறைமைகேளு, ஒப்பமுடன் குளிகைதனை யெடுத்துமைந்தா முகோகோநாதாக்கள்செப்பும்வண்ணம், தப்பிதங்கள் வாராமல்தவளைசங்கு சாங்கமுடன் தானிடித்துமாவதாக்கி, இப்புவியில் சித்துவிளையாடுதற்கு யெழிலானசாரணைகள் சொல்வேன்பாரே.

சொல்லவென்றால்சாரணைகள் நிம்பழத்தால் சுத்தமுடன்தானரைத்துமைபோலாக்கி, வெல்லவேசூதமென்றகட்டியப்பா வேகமுடன்தானரைத்துக்கவசஞ்செய்து, புல்லவேரவிதனிலே காயவைதது புகழானமண்மறைவிற் புடத்தைப்போடு, வெல்லவேபுடமாறியெடுத்துப்பாரு வேதாந்தத்தாயினது கடாட்சந்தானே. 529

தானானபுடமதுவுங்கவசம்நீங்கி தண்மையுள்ளமணிதனையேயெடுத்துமைந்தா, பானானசக்கினிடசுண்ணந்தன்னை பார்த்திபனே தானெடுத்துமைபோலாட்டி, கோனான்குருசொன்னநீதிபோலே கொற்றவனேமைமுறைகள் பிசகாமற்றான், ஊனானசங்குதனைகவசஞ்செய்துவுத்தமனேபுடம்நூறு போட்டிடாயே. 530

புடமதுவுஞ்சதமென்றால்நூறுபோடு புகழானரசமணியுங் கட்டும்பாரு, தடமதுவும்நடப்பதற்குயிதுவேசித்தி தண்மையுள்ள சூதமதுகுளிகையாச்சு, மடந்தனிலேதானிருக்குஞ்சிவயோகிக்குமகத்தானகுளிகையதுகிட்டிற்றானால், நடராஜசுந்தரனார்கிருபையாலே நாதாந்தசித்துவெனச்செப்பலாமே. 531

சித்தானசித்துகளுமிவர்க்கீடுண்டோ சிறப்பானநாதாக்கள்கண்டதில்லை, வெற்றியுடனஷ்டசித்தி யிதனாலாகும் வேதாந்தத்தாயாரும்பிரசங்கிப்பாள், முத்திபெறமோட்சவழிக்காணலாகும் முனையான சிவயோகியிவர்தானென்பார், சத்தியங்கள்தவறாமல்குளிகைகொண்டுசட்டமுடன்நடப்பவனே சித்தன்பாரே. 532

பாரேதான்குளிகையதுயென்னசொல்வேன் பாங்கானபுலிப்பாணிப்பாவலோனே, நேரேதான்சாத்திரங்க ளுளவாராய்ந்து நேர்மையுடன்மாண்பர்களுக்காகாவென்று, சீரேதான்குளிகைதனைமுடித்துமல்லோ சிறப்புடனேயஷ்டசித்துயாராலாகும், ஆரோதானுந்தமக்கு போதிப்பாரே வப்பனேயுந்தமக்கு வருள்செய்வேனே. 533

அருளானவருளிதுவுமென்னவென்றால் வப்பனே முன்செய்த புண்ணியத்தால், பொருளானசூதமென்றமணிதானப்பா புண்ணியனேயுந்தமக்குக்கிட்டலாச்சு, இருளானபவக்கடலைவிட்டகற்றியெழிலானதவக்கடலையேகியல்லோ, மருளானஞானமென்றக் கடலைக்கண்டுமன்னவனே சிவயோக நிலையில்நில்லே. 534

நிற்கவென்றாலுந்தமக்கு யெல்லாங்கிட்டும்நீதியுடன்சூதமென்றகுளிகைதன்னால், அற்பமென்றநினையாதேயருண்மைத்தாகேள் ஆகாகாவிதியிருந்துகிட்டலாச்சு, சொற்பமெனுங்கருமியென்றமாண்பர்தம்மை சுட்டறுத்துவிட்டகற்றிதுகளகற்றி கற்புடைய மாயவலைசிக்கறுத்துகளங்கமில்லாசிவயோக தவத்தைப்போற்றே. 535

போற்றியேசூதமென்றகுளிகைதன்னை பொங்கமுடன் துவாரமிட்டுக்கயர்தான்மாட்டி, நாற்றிசையுமெச்சுதற்கு கண்டம்போல்நாயகனேகழுத்திலிட்டுவேடம்பூண்டு, ஆற்றவேநெடுந்தூரம் நெடுந்தேசம்வப்பனேவயிரமாங் காதவோசை, ஏற்றமுடன்றானடக்க வாசியோடுமஎழிலானகுளிகையது மகிமைபாரே. 536

பார்க்கவென்றாலறுபத்துநான்குசித்தும் பாருலகில் வெகுகூத்துஆடலாகும், நீர்க்கமுடனாவினதுமுதுகில்வைத்தால் திறமானபசுவதுவும்பால்கொடாது, ஏர்க்கவேகுளிகையதுவேகத்தாலேயெளிதானபாலதுவும் மேலேநோக்கும், ஆர்க்கமுடன்மணியதுவையெடுத்தாலல்லோ வப்பனேபாலதுவுங் கறக்கும்பாரே. 537

கறக்குகின்றஆவதுவும்பால்கொடாது காசினியி லிதுவுமொருசித்துவாகும், திறமுடையகுளிகைதனையெடுத்துமைந்தாதீர்க்கமுடன்பதனமாய்ச்செய்துகொண்டு, உறமுடனேநெடுங்காலமிருந்துகொண்டு வுத்தமனேசிவயோகஞ்சாதித்தேதான், நிறமதுவும்மாறாமல் சதாகாலந்தான் நீட்சியுடன்சமாதிமுகம்நின்றிடாயே. 538

நிற்கவேவிதியிருந்தபுண்ணியத்தால் நிலமையுள்ளகுளிகையது கிடைக்கலாச்சு, அற்பமென்றபொருளெல்லா மாண்பாகேளு வப்பனேயுந்தனக்குகிடைக்கலாச்சு, விற்பித்தமன்னவரும் நன்றமைத்துவிட்டகுறையிருந்ததொரு புண்ணியத்தால், உற்பனமாங்குளிகையது வாய்க்கவாச்சு ஓகோகோநாதாக்கள் கடாட்சந்தானே. 539

செம்புசுத்தி.

காணவேயின்னமொரு போக்குசொல்வேன் கருவானபுலிப்பாணிமகனேகேளு, தோணவேசெம்பதுவுஞ்சேர்தானென்று செப்புகிறேன்செம்புதனைமூசையிட்டு, வேணபடிசாக்குவகை சொல்வேனப்பா வேதாந்ததாயினது கடாட்சத்தாலே, பானமெனும் வெடியுப்புபலந்தானென்று பாங்குபெறதுருசதுவும் பலந்தானென்றே. 540

ஒன்றானவளையுப்புபலந்தானென்று வுத்தமனேசாரமது பலந்தானிங்கு, குன்றானவீரமதுபலந்தான்ரெண்டு குறையாமல் கல்லுப்புபலந்தான்ரெண்டு, வென்றிடவேமன்னமென்றபேயப்பா வேகமுடன்யண்டோடுதானுஞ்சேர்த்து, சென்றுமேபொடியாக்கித்திரள்வேந்தாகேள் செப்புகிறேன்கைவரிசை முறைமைபாரே. 541

முறையானசரக்கெல்லாமொன்றாய்க்கூட்டி வுத்தமனேகல்வமதில்பொடியதாக்கி, குறையாமல்செம்புதனை யுருக்கிமைந்தா குணம்பெறவேநயம்பெறவே கிராசுமீவாய், திறையகற்றுசெம்பதுவுமிருளுமேகிதீர்க்கமுடன்சிவந்துமல்லோ யின்னம்பாரு, துறையான செம்பதனையெடுத்துமைந்தா துகளகற்றிவூதியெடுசுத்தியாச்சே. 542

சுத்தியாஞ்செம்பதனையெடுத்துபா சுந்தரனே யாறுவகைஜெய நீர்தன்னால், வெற்றிபெறதானுருக்கி காய்ப்பாயப்பா வேதாந்ததாயி னதுகடாட்சத்தாலே, சத்திரமாய்ஆறலதுமேயகியல்லோ சண்முகனு ர்னுபூசைக்குயேற்றமாச்சு, அத்திரபுரந்தானெரித்தவாலங்காடார்வ ப்பளேதானணியுஞ் செம்புமாச்சே. 543

செம்பானசெம்புதனைபதனம்பண்ணு செயலான முத்தியமும் பெறுவாயப்பா, கும்பமுனிசாஸ்திரத்திலநேகஞ்செம்பு கூறினார்பன் னீராயிரத்திலப்பா, நம்பியல்லோசெய்தவர்க்குயெல்லாஞ்சித்திராதா ந்தசித்துமுனிசாத்திரத்தில், அம்பொன்னுஞ் செம்பொன்னின் வி னோதவித்தைவப்பனே கோடிதனைகூட்டினாரே. 544

கூட்டினேனிச்செம்புசிடிகைவேதை சிறப்பானசெம்புகளுமின் னமுண்டு, வாட்டமுடன்யிச்செம்பைமதியில்தானும் வளம்பெறவே பத்துக்குவொன்றுதாக்க, நாட்டமுடன்வயததுவு மென்னசொல் வேன் நல்மானமாற்றதுவுமாணிக்காறு, ஆட்டிடையன்கதைபோலே யிருக்கவேண்டா மப்பனே செம்பிருந்தவலைவாருண்டோ. 545

உண்டானவெள்ளிதனையுருக்கிமைந்தா வுத்தமனேபத்துக்கோ ர்தங்கஞ்சேர்த்து, கண்தமாய்வாரடித்துப்புடத்தைப்போடுகண்மணி யேயென்னசொல்வேன் மாற்றேளட்டு, பண்டிதங்கள் பொய்யாது ஆயுர்வேதம் பாரினிமேல்கலைவகுத்து நிலைவகுத்து, விண்டிடவேபோக ரேழாயிரத்தை விருப்பமுடன்பாடிவைத்தேன் காண்டமேழே.

ஏழானகாண்டமது கடைக்காண்டத்தில் யெழிலானசிவயோக ந்தவயோகங்கள், ஆழவேவைப்புமுதல் சிடிகைவேதை வப்பனேயா னுரைத்தேனுந்தமக்கு, வாழவென்றுலின் னுல்தான் சத்தகாண்டம் வையகத்துமாண்பருக்கும்போதாதுண்டோ, மீழவேகருவறிந்துபொ ருள்றிந்து மிக்கானகுருவறிந்து நினைவாய்க்கொள்ளே 547

கொள்ளவென்றால்சாத்திரத்தையுன்னிப்பாருகோடானகோடி முறைகுறிப்புசொன்னேன், விள்ளவேமனேனுண்மணியாள் பதாம்புய த்தைவிருப்பமுடன்பணிந்தாக்கால் யெல்லாஞ்சித்தி, உள்ளதொரு பொருளெல்லாமிதிலேதேயும் வுத்தமனேகாண்டமது யேழுங்கண் டால், கள்ளமதுவாராது புண்ணியவானே கருத்துடனே பாடிவைத் தேன் காண்டமேழே. 548

## செம்புசுத்தி.

கண்டமாமின்னமொருபோக்குசொல்வேன்கண்மணியேவிண்மணியேகனிருவாய்க்கேளு, வேண்டியசீதார்கருமானவிநோதமுண்டுவித்தகனேநாதாக்கள்மறைத்துவைத்தார், தூண்டியேபொருளறிந்துதொடர்பறிந்துதாய்தானசாத்திரத்தின்நிலையறிந்து, ஆண்டியெனுஞ்சித்தர்முனிபதமறிந்துவப்பனேகருமுறைகள்சொல்வேன்யானே.

சொல்லவென்றால்புலிப்பாணிசொகுசுள்ளானே சுந்தரனேயிந்திரனேசுகுணமாரா, புல்லறிவாளுந்தனக்குபுகட்டுவோம்யாம்புகழானசெம்பினுடசுத்திதன்னை, வெல்லவேசெம்பதுவும்பலமொன்றாகும் வேகமுள்ளவீரமதுபலமொன்றாகும், சொல்லவேகாரமதுபலமொன்றாகும்செயலானநிமிளையதுபலமொன்றாமே. 550

ஒன்றானசாரமதுபலமொன்றாகும் வுத்தமனேகெவுரியது பலமொன்றாகும், வென்றிடவேதுருசதுவும்பலமொன்றாகும் வேகமுள்ளசீனமதுபலமொன்றாகும், நன்றானலிங்கமதுபலமொன்றாகும் நலமானவெடியுப்புபலமொன்றாகும், பன்றானகரியுப்புபலமொன்றாகும் பாலகனேயிதுகளெல்லாமொன்றாய்க்கூட்டே. 551

கூட்டவேசாக்கெல்லாங்கல்வமிட்டுகுமுறவேபொடியாக்கிமைந்தாகேளு, நாட்டமுடன்செம்புதனைக்குகையிலிட்டுநலமாகத்தானுருக்கிகிராசமீவாய், வாட்டமுடன்கிராசமதுகொடுக்கும்போதுவளமானசெம்பதுவுமூறமேகி, நீட்டமுடன்தங்கமென்றசெம்புபோலாம்நிதியானசெம்புதனைபதனம்பண்ணே. 552

பண்ணவேசெம்பொடித்துமைந்தாகேளு பாங்குபெறவெள்ளிதனில்பத்துக்கொன்று, தண்ணமுடன்கொடுத்துருக்கிமாற்றைப்பாருதாக்களையாதுவும்சுத்தமாகும், திண்ணமுடன்சுயத்தங்கம்பிறவித்தங்கம்தீர்க்கமுடன்தங்கமதின்பாகுமையாகும், உண்ணவேசீவனத்துக்கிடம்வேறுண்டோ வுத்தமனேநாதாக்கள்செம்புதானே. 553

தானானவெள்ளிதனில்பத்துக்கொன்றுதண்மையுடன்தங்கமதுஒன்றுசேர்த்து, கோனானகாலாங்கிகடாட்சத்தாலேகொற்றவனேதானுருக்கிவாரடித்துப், பானானபுடமது வுந்தீர்ந்துகாணல் பாலகனேமாற்றதுவுமெட்டதாகும், மானானமனோன்மணியாள்கடாட்சத்தாலேமன்னவனேசெம்பினுடவேதைகாணே. 554

## வைரவைப்பு.

வேதையாமின்னமொருபோக்குசொல்வேன் வேதாந்தத்தாயினுடமகிமையாலேநீதொன்றும்கேராமல்ரவியின்னமார்க்கம்தீர்க்கமு

டன்சொல்லுகிறேன் திறமாய்க்கேளு, போதமுடன்சீனமென்றபடிக
க்கல்லாம் பொங்கமுடன்சேராதுவும்திறத்திமைந்தா, வாதமதில்மே
லானவைடூரியந்தான் வளமானவச்சிரமாங்கல்லின்போக்கே. 555

போக்கானபடிகமென்றகலதானப்பா பொங்கமுடன்வச்சிரமா
ங்குகையிலிட்டு, வாக்கதுவும்பொய்யாமல்வசனிப்பேன்யான்வளமா
ணமாந்தளிரமுருக்குப்பச்சை, நோக்கமுடன்சேராதுவுங்கால்தானெ
ன்றுநுட்பமுடன்பூரீறுக்கிடமொன்ருக, ஆக்கமுடன்காக்கையென்
றகிமிளையப்பா அடவானசேராதுவுங்கால்தானென்றே. 556

காலானதுடோரியென்றகாரஞ்சேர்ந்து கருவாகமூசையிட்டுவு
ருக்கும்போது, பாலானசரக்கெல்லாமொன்ருய்க்கூடிபாருபதம்போ
லுருக்கிதண்விட்டாடும், மாலானவயிரமதுபோலேதான் மம்மகத்
தானகிமிளையென்றவேதைதன்னால்சூலானகெற்பமதுவுள்ளேதான்
றிசுக்கிரன்போல் சாணைவெளிகாணலாமே. 557

காணலாம்ரவையென்றகல்லுமாச்சு கருவானதவளம்போலேயி
ருக்கும்பாரு, பூணலாம்சாணையிட்டுவொளியேகொண்டால்புகழான
சுக்கிரன்போல்பூர்க்கும்பாரு, தோணவேவேணமட்டும்குகைதானிட்
டுதோருமல்முன்சொன்னகணக்குபோலே, வேணபடிகணக்கெடுத்து
வுருக்கிப்பாரு வெகுகோடிநிதியனைத்துங்காண்பாய்பாரே. 558

பாரப்பாமூசையிட்டுவுருவும்போதுபாலகைகசிறுமணியாங்கரு
வமைத்து, நேரப்பாவுருக்கியதைசாய்ப்பாயானால் நெடிதானஜெக
ஜோதியென்னசொல்வேன், சீரப்பாயிதற்கிடுரத்னமுண்டோசீருல
கில்வெகுமாண்பர்தெரியாமற்றான், ஆரப்பாமுறைமையோடுப் வழியா
டோடும் வப்பனேதாமுறைத்தாரதிகவானே. 559

அதிகமாம்வயிரமென்றபோக்குதன்னை வப்பனையானுரைத்தே
னுணுக்கமெத்த, பதிதமுள்ளவைப்பதனைசித்துதாமும்பாருலகில்மா
ண்பருக்குத்தெரியாமற்றான், துதியோடும்பதியோடும் நூல்கள்சொ
ல்லிதுப்புரவாய்மதிதனக்குயோமற்றான், விதியானசிடிகையென்ற
கைபாகத்தைவிட்டகற்றி நூல்மறைத்துவிலக்கினாரே. 560

விலக்கவேவைப்புமுதலுளவுதன்னைவெகுபேர்களறியாமல்வின
யங்கொண்டு, துலக்கமுடன்நூல்தனைக்காணமற்றான்துப்புரவாய்க்க
ருவிகரணதியந்தம், பலக்கவேசிடிகையென்றவேதைதன்னைபாராமல்
பாருலகில்கெட்டார்கோடி, ஜலக்கம்பமென்றதொருகெந்திபோலே
சாங்கமுடன்செய்வதற்குமதிபோனாரே. 561

மதியானவயிரமதுபிறவிபோலாம் மகத்தானநாதாக்கள்செய்த
வேதை, துதியானபிறவியென்றகல்லினாலேதுப்புரவாய்ராசாதிராஜர்
தாமும், நதிகளிலும்மலைகளிலுங்கண்டெடுத்த நாதாந்தசித்தொளி
யேகல்போலாகும், பதியானசுனைதனிலும்ஓடைதன்னில் பாங்குட
னேவயிரமதுவிளையுந்தானே. 562

கெம்புவைப்பு.

தானானயின்னமொருபோக்குசொல்வேன் தண்மையுள்ளபுலிப்
பாணிதம்பிரானே, கோனானவிந்தமுறைவேதையப்பா குவலயத்தில்
நாதாக்கள்கூறவில்லை, பானானபடிகமதுசேர்தானென்று பாலகனே
பூநீறும்பலந்தானொன்று, தேனானதேன்வளையல் சேர்தான்காலாம்
தேற்றமுடன்பவளமென்றபுத்துகாலே. 563

காலானபண்பவளஞ்சேர்தான்காலாம் கண்மணியே வளையலுப்பு
சேர்தான்காலாம்,மாலானசரக்கெல்லாமொன்றாய்க்கூட்டிமகத்தான
வங்கமென்றசெந்தூரந்தான், நூலானநூற்படியேகால்சேர்கூட்டிநு
ட்பமுடன்தானுருக்கிகருவமைத்து, சூலானகெற்பமது வுள்ளிருக்க
துப்புரவாய்மணிபோலேவார்த்திடாயே. 564

வார்க்கவென்றால்மணியதுவுமுருகியல்லோ வளமானகெம்பினு
டதளம்போலாகும், தீர்க்கமுடன்தளமெடுத்தசாணைதன்னில்திறமு
டனேதான்கொடுத்துமதியம்பூண்டு, ஏற்கவேயிவ்வேதைசிடிகைவே
தையெழிலானகெம்பினுட தளந்தானாச்சு, பூர்க்கவேசாணைதனில்
மணிகொடுத்தால் புகழானகெம்பினுடசோதிதானே. 565

சோதியாங்கெம்பினுடமகிமைதன்னை சுந்திரனார்சித்துமுனிம
றைத்துவைத்தார், வாதிகளுங்காணாமல்மதியம்பூண்டு, வண்மையுட
ன்கைமறைப்பைத்தெரியாமற்றான், நீதியுடன்சாத்திரங்கள் படித்த
யர்ந்து நிஷ்களங்கமாயிருந்தார்கோடிபேர்கள், வீதியெனுங்கொல்ல
னது மாளிதன்னில்விரும்பூசிவிற்றதொருகதையுமாச்சே. 566

கதையானகதைகாட்டிமையம்பூண்டு காசினியில்தான்மறைத்
தார்விநோதவித்தை, கெதையானவுப்பினுடகெதையைச்சொன்னே
ன்கெணிதமுடனொன்னிகண்டு காணாமற்றான், விதைபோட்டால்
சுரையொன்றாகாய்க்குமோசொல் வித்தகனே நூல்களெல்லாவினைய
ங்கூறி, உதயம்போல்கெம்புவைப்பிருக்க வுத்தமனேவெகுதேசஞ்
சென்றார்பாரே. 567

பாரேதான்மணிதன்னையேசாணைதன்னால்பக்குவமாய்த்தான்பொடித்துவொளியுங்கொண்டு, நேரேதான் வைணிகரிடஞ்சென்றாயானால் நெடிதானசெம்பதுவும்பிறவியென்று, சீரேதான்செகத்திலுள்ளமாண்பரெல்லாம் செகதலத்திற்பிறவியுள்ளகல்லையென்று, தீரேதான் செகத்திலுள்ளமாண்பரெல்லாம் செப்பிடுவார்பின்னென்றும் செப்பார்தானே. 568

தானானகெம்பதனையார்தான் செய்வார் தன்மையுள்ளபுலிப்பாணிமன்னாகேளு, கோனானநாதாக்கள்சித்துதாமும் குவலயத்தில்மறைத்துவைத்தார்நூல்களெல்லாம், தேனானநூல்களெல்லாமுளவாராய்ந்து தேற்றமுடனே நினைத்[illegible]துமக்கு பானானபாரஞ்சுடரே போற்றிசெய்து பாலகனேசதானித்தம்துதிப்பாய்தானே. 569

நற்பச்சைவைப்பு.

துதிப்பானயின்னமொருபாகஞ்சொல்வேன் துப்புரவாய்ப்புலிப்பாணிமன்னாகேளு, மதிப்புடையபடிகமென்றகல்தானப்பா மன்னவனேசேரதுவும்நிறுத்திக்கொண்டு, பதிவுடையகாச்சிக்கல் பச்சைதன்னை பாங்குபெறயிருசேராய்நிறுத்துக்கொண்டு, மதிபோன்றபூநீறுங்கூடச்சேர்த்து மகத்தானவளையல்ரங்குதானுஞ்சேரே. 570

சேரேதான்குகையிலிட்டுசெப்பக்கேளும் செயலானவாறுவகை செயநீர்தன்னை, வீரேதான்மூசையிட்டுதம்டாரிசேர்த்து விருப்பமுடன்துருத்தியதுநாலுகொண்டு, நேரேதான்தானுருக்கிமைந்தாகேளு நேர்மையுடன்கருக்கட்டிவார்ப்பாயப்பா, ஆரேதான்மற்றொருவர் காணாமற்றான் வப்பனே ஆறியபின்னுடைத்துப்பாரே. 571

உடைத்துமேபார்க்கையிலேயென்னசொல்வேன் ஓகோகோநாதாக்கள்மறைத்தவண்ணம், படிகமும்நவநீதம்யானறிந்து பட்சமுடன்யானுரைத்த பச்சைதன்னில், மடைபோன்றசிரலது யிருக்கும்பாருமகத்தானவணிகரிடஞ்சென்றாயானால், சடைநீக்கிசாணைதனில் கொண்டுமல்லோ சட்டமுடன்சோதிதனையறிந்துபாரே. 572

அறிவானபச்சையென்றவைப்புதன்னை வப்பனையுந்தமக்குவுரைத்தவார்போல், குறியானமுறையறிந்துவழியறிந்துகுணமானபாகமதுதானறிந்து, முறியாமல்வுருக்குமுகம்பாலறிந்து முனையானகருவதனில்பாச்சும்போது, நெறியானபிறவியென்றகல்லைப்போலும் நெடிதானபச்சையென்றதளமுமாச்சே. 573

ஜண்டரசபற்பம்.

ஆச்சப்பா யின்னமொருபாகஞ்சொல்வேன் அறிவுள்ள சிறுபாலாவன் புள்ளானே, ஆச்சரியமானதொருசெப்புதன்னைவப்பனே புலிப்பாணியறைவேன் பாரு, மூச்சடங்கிதானிருந்தேன் நெடுங்காலசித்துமுதலகில்சமாதிகொண்ட காலாங்கிநாதர், பாச்சலுடன் சேனபதி சமாதிருந்து பட்சமுடனெந்தனுக்கு வுரைத்தவாறே. 574

வாறுனவெடியுப் புபலமோபத்து வளமையுள்ளசீனமதுபலமோபத்து, கூறுனகண்டாதுபலமோபத்து குறிப்பான்கல்லுப்புபலமோபத்து, சேறுனமிருதாருசிங்கிபலமோபத்து செம்பவளபுத்துமதுபலமோபத்து, மாறுனகெந்தியது துலாமோவைந்து மகத்தானபூரமது பலமுமைந்தே. 575

அஞ்சானசாரக்கெல்லாமொன்றாய்க்கூட்டி வப்பனே சாரமென்றசெயரீர்தன்றால், மிஞ்சமேவேதானரைப்பாய்நாலுசாமம் மிக்கானபில்லையதுவாய்செய்து, அஞ்சாமல்சக்ரமாம் வாலைதன்னில் துப்புறவாய்த்தானமைத்துபாண்டந்தன்னில், பஞ்சமென்றகவசமது வைந்தும்வைத்து பட்சமுடனொன்றின்மேலொன்றுவையே. 576

வைத்துமேகாகமென்றபாண்டந்தன்னில் வளமுடனேசீலையதுவலுவாய்ச்செய்து, பொய்த்துமேபோகாமல் தீயைமூட்டிபொங்கமுடன்தானெரிப்பாய்க்கமலம்போலே, சுத்துமேசலமதனை விட்டுமைந்தா சுந்தரமேனவாலையெரிக்கும்போது, பத்துமேதீயதுவு மோராமற்றான் பாங்குபெற வாலைதனை யெரித்திடாயே. 577

எரிக்கையிலேயபுதங்கமதுயென்னசொல்வேன் பெழிலாகசமதிலலைந்திலே, சரியானருதமென்றபதங்கந்தானும் சதுரானமேற்கலசந்தன்னைப்பற்றி, சுரிகுழலில்மேலாகப்பதங்கமேறி அத்தமுடன்தவளமதுநிறந்தைபோலும், உரியதொகுருதமென்ற ஆசுதானும் வுத்தமனேபளபளத்துநிற்கும்பாரே. 578

பாரப்பாசரிபமதுகாலையாகும் பாங்குபெறதானெரிப்பாய்க்கமலம்போலே, சேரப்பாயெரித்தவுடன்காரமேறி நேர்மையுடன்சரக்குமிகசேர்த்துமல்லோ, வேரப்பாவடிப்பாண்டஞ் சிட்டங்கின்று விளக்கொளிபோல்சிறுபொடியாக் கப்போலே, ஆரப்பாதவளம்போலிருக்கும்பாரு வப்பனேசண்டரசப் பெருமைதானே. 579

பெருமையாச்சண்டரசமென்றபற்பம் பேருலகில்நாதாக்கள் மறைத்துமல்லோ, அருமையாமுள்ளதொரு பற்பந்தன்னை வப்பனே தான்மறைத்துப்பாடிவைத்தார், ஒருமையாவெல்லவருமறிவதற்குவுத்தமனேயுந்தமக்குவுகமைகூறி, பெருமையாயானுரைத்தேனுந்தமக்குபோாணகைமுறையைத் தெரிந்துகொள்ளே. 580

கொள்ளவேசண்டரசபோக்குசொல்வேன் குறிப்பான ரோகமதைக்கொல்லும்வேகம், விள்ளவேசீறுகமதுயென்னவென்றால் வீறனசூலையது பதினெட்டும்போம், உள்ளதொருகுன்மமது யெட்டும்போகும் ஓகோகோபாண்டுவகையாறுந்தீரும், கள்ளமிலா பித்தமது நாற்பதும்போகும் கருவானவாதமென்பதுவும்போமே. 581

போமேதான்வாயுவென்றரோகம்போகும் பொல்லாதபிலிகையும்மகோதரம்போம், ஆமேதான்கவுசியென்றகெண்டைபோகும் வப்பனேவிக்கலென்றவுளமாந்தைபோகும், நாமேதான்சொன்னபடி வயிற்றுவலிபோகும் நலமானசோகையோடுபிரமேகம்போம்,வேமேதான்மேகமதுயிருபதுவும்போகும் வேகமுடன்விஷபாகந் தீருந்தானே.

தானானகயரோகஞ்செயரோகம்போம் தாக்கானயிருமலொடுவிளைகச்சும், கோனானமண்டையில்சூலைபோகும் கெடிதானகருப்பனென்றவியாதிபோகும், பானானபடர்தாமரைகறுப்புபோகும்படையோடுசில்விஷங்களெல்லாந்தீரும், தேனானகாலாங்கிநீதிவாக்கும்தசமதில் பொய்யாது மெய்யாதாமே. 583

மெய்யானசில்விஷமாங்குஷ்டம்போகும் மேலானவிப்புருதிமுகண்டமாலை, வெய்யவேகிராணியது கழிச்சல்போகும் வெளுப்பானசீழ்மூலம்சவமூலம்போம், துய்யதொருபவுத்திரமு மறையாப்புமபோம்துலையாதபுத்துவுடல் யோனிச்சூலை, எய்யவேமந்தாரகாரம்போம்,மெழிலானநேத்திரநோய் போகும்பாரே. 584

பாரேதான்கண்ணோய்தான்தொண்ணூற்றாறும் பாங்கானபீடரிநோய்ஜன்னிபதிமூன்றும் நேரேதான்அண்டமென்வாதம்போகும் நெடிதானபாதத்தின்வீக்கம்போகும், கூரேதான்குறிப்புற்றக்கன்னப்புற்றுகுடிகெடுக்கும் ராசனென்றபிளவையோடும், சேரேதான் மூதுவாளை விலாவின்வாளை செயலானதமர்க்காய்ச்சிலந்திகாணே.

காணவேயிடி விழுந்துபுரைமேற்புண்ணும் கண்ணோசைசதைவ ளர்த்திரோகந்தானும், தோணவேகபவாதம் ரத்தவாதம் தோற்றுத கைம்முடக்குகால்முடக்கு, வேணதொருநாவரட்சி சந்திடுப்பு வீரா ணகிலினதுவாய்வுபோகும், தோணவே கரம்புவலி முடிச்சிபோகும் கோளானமலக்குற்றம் போகும்பாரே. 586

போகுமேஅனுபானங்கண்டறிந்து போக்கவே வியாதிகளுக்கு கந்தவண்ணம், ஏகுமேகைபாகஞ்செய்பாகந்தான்யெழிலானபுடபா கம்ருசிபாகந்தான், ஆகுமேயித்தனையுங்கண்டறிந்து வப்பனேநூல் வழியேசென்றாயானால் பாகுபதங்கால்வழிதான்காணலாகும் பாங்கா னநாதாக்கள் கற்பந்தானே. 587

கற்பமாஞ்சண்டாசசருதமப்பா காசினியில்சித்தரெல்லாமறைத் துவைத்தார், பற்பமதுவுலகோர்களறியாமற்றான் பான்மைபெறநூல் களிலேமறைத்துச்சொன்னார், அற்பமென்றெநினையாதேவருண்மைந் தாகேள்வண்புடனே யாமுனக்குவுரைத்தநீதி, கற்பேந்திரகாலமது நெடுங்காலந்தான் காசினியிலிருப்பதுவும் வுண்மைதானே. 588

உண்மையாஞ்சண்டாசபற்பந்தன்னை வுலகுபதிமாண்பர்களுமு ளவறிந்து, தண்மையுடன்கைபாகஞ் செய்பாகத்தால் சட்டமுடன் செய்குவதுமெய்யேயானால், வண்மையாஞ்சித்துமுனி நாதர்போலே வளமுடனேவையகத்தில் நெடுங்காலந்தான், திண்மையுடன் வெகு கோடி காலமப்பா தீர்க்கமுடனிருப்பதுவும் வுண்மைதானே. 589

உண்மையாம்வையகத்தில் நெடுங்காலந்தான் வுத்தமனேநாதா க்கள்சித்தரெல்லாம், பண்மையுள்ளசாத்திரங்கள் பலவாராய்ந்துபாரு லகில்மாண்பர்களும்பிழைப்பதற்கு, கண்மையாய்காலாங்கிதாள்பணி ந்து கர்த்தாவையஞ்சலித்து முடிகள்சாய்த்து, நண்மைபெறவுந்தனு க்குமனதுவந்து நாட்டினேனுண்மைசத்தியமும்பாரே. 590

சத்தியமாமென்றாலேமுழுதும்பார்த்து சாங்கமுடன் செய்பவ ற்குமெய்மைசித்தி, முத்தியதுபெறுவதற்குக் காயகற்பம் முனையா னபற்பமிதுசூதபற்பம், வெத்திபெறவஷ்டாங்க சித்தியெட்டும் வே தாந்தத்தாயினிடகடனமார்க்கம், முத்தியதுபெறுவதற்குதேககற்ப ம்முதலாகில் சத்தியர்க்குப் பலிக்கும்பாரே. 591

பலிக்குமேசூதமுண்டாமாண்பரெல்லாம் பாருலகில்மகானுபாவ னென்பார்பாரு, சொலிக்குமேதேகமது கற்றாணுகும் சோராது வா சியது மேல்நோக்காது, கலிக்காது யிருகண்ணும் வருந்ததியுந்தோ

ன்றும்காசினியில்வேசியாக மாண்பரென்பார், சலிக்காதுசண்டாசப
ற்பமப்பா சட்டமுடன்செய்வேனே யோகியாரே. 592

பஞ்சபூதசிவராசயோக செந்தூரம்.

பாரப்பாபுலிப்பாணிமைந்தாகேளு பாலகனே.காலாங்கிநாதர்நீ
தி, ஆரப்பாயெந்தனுக்கு வுரைத்தமார்க்கம்வப்பனே யஞ்சலித்துமு
டிவணங்கி, சேரப்பாசமாதிமுகஞ்சென்றபோது செம்மலுடனெந்த
மக்குகொடுததபாகம், நேரப்பாசொல்லுகின்றபஞ்சபூதம் நெடிதான
வேதைமுகம் நன்றாய்த்தானே. 593

வேதையாம்வேதைமுகம்பஞ்சபூதம் மேன்மையுள்ளசெந்தூரங்
காயகற்பம், கோதையெனும் மனோன்மணியாள் கடாட்சத்தாலும்
கொற்றவனுர்நாதாக்கள் பாதத்தாலும், பாதையெனும்பஞ்சபூத செ
ந்தூரத்தை பாருலகில்மாணுக்கர் பிழைப்பதற்கும், சூதையது கூறு
மல்குமரவேலா சுந்தரனே கைபாகஞ் செப்புவேனே. 594

செப்புவேன்கெந்தியதுசேர்தான்பாதி செயலானவீரமது சேர்
தான்பாதி, ஒப்பமுடன்லிங்கமதுசேர்தானொன்று வுத்தமனேசாரம
துசேர்தானொன்று, மெய்ப்புடனேபூரமதுசேர்தானொன்றுமேன்மை
யுடன்கல்வமதிலிட்டுமைந்தா, எப்படியும்அரைந்தாம்பஞ்சபூதம்யெ
ழிலானசரக்கெல்லாம் பொடியாய்ப்போச்சே. 595

பொடியானசரக்கெல்லாம்மையதாகி பொங்கமுடன் தாகமது
கருவிட்டாட்டி, கன்னமாஞ்சரக்கெல்லாம் நன்றாயாட்டி. கண்மணி
யேஜாலமெட்டுந்தீர்ந்தபின்பு, வடிவானபஞ்சரசசரக்கையெல்லாம்வ
ளம்பெறவேபில்லையதுவகுவாய்த்தட்டி., மிடியோகவோட்டிவிட்டுச்சீ
லைசெய்து மீட்சிபெறரவிதனிலே காயப்போடே. 596

போடவேரவியாறிக்காய்ந்தபின்புபொங்கமுடன்மண்மறைவி
ற்புடத்தைப்போட, நாடவேயப்படியேபத்துமுறைப்போடு கூவான
தாகமென்றகருவினாலே, சாடவேபுடமதுவும் பத்துந்தீர்ந்தால்சட்ட
முடன்மறுபடியும்செப்பக்கேளு, கூடவேசரக்கதனைக் கல்வமிட்டு
கொற்றவனே கையாளின்ரசத்தைதாக்கே. 597

தாக்கவேநாற்சாமமறைத்தபின்பு சட்டமுடன்பில்லையது வகு
வாய்ச்செய்து, ஆக்கமுடன்ரவிதனிலேகாயவைத்து வப்பனேசில்லி
ட்டுச்சீலைசெய்து, போக்கானசரக்கெல்லாங்கட்டுதற்கு பொங்கமுட
ன்மண்மறைவிற்புடைத்தைப்போடு, வாக்கதும்பொய்யாமல்கோழி
யாகவளமுடனேபுடம்போடக் கட்டும்பாரே. 598

கட்டுமேபஞ்சரச்சரக்குதானும் கருவாக பத்துமுறையிப்படி யேபோட்டால், சட்டமுடன்சரக்கைந்துங்கட்டிப்போகும்சார்பான செந்தூரம்நீலவர்ணம், மட்டுமேசிவப்பதுவுமோராதப்பா மார்க்கன டன் பின்னும்வகைசெப்பக்கேளு, பட்டுப்போல்செந்தூரஞ்சிவப்ப தற்குபாலகனே வரிசையது செப்புவேனே. 599

செப்பவென்றால் நாவில்லைப்பாவுமில்லைதேசத்தின்கருவாளிசெ ய்வாரப்பா, ஒப்பமுடன் சருமிகட்டுவாய்க்காதப்பா ஓகோகோவாய் த்தாலும்விழலாய்ப்போகும், இப்புவியிலுந்தமக்குந்தருமிகட்கும்யெ ழிலானவேதைமுகங் கூறினேன்யான், தப்பிதங்கள்நேராதுசன்மார் க்கவானே சட்டமுடன்செய்பவனே புத்திவானே. 600

புத்தியுடன்சரக்கதனைத்தானெடுத்து பூபாலாபின்னுமந்தக்கல் வமிட்டு, பத்தியுடன்கருந்துளசிசாறுவிட்டு பாலகனேநாற்சாமமறை த்தபின்பு, சத்தியமாய்பில்லையது லகுவாய்ச்செய்துசாங்கமுடன்ரவி தனிலேகாயவைத்து, முத்திபெறசில்லிட்டுச்சீலைசெய்து முனையான சோதியென்றபுடந்தான்போடே. 601

போடேதான்புடமதுவுங்கோழியாக பொங்கமுடனிப்படியே பத்துமுறைபோடு, நாடேதான்செந்தூரம் நவிலப்போமோ நாதாந் தசித்துமுனிசொல்லாவண்ணம், கூடநீசெந்தூரந்தனையெடுத்துகொ ற்றவனேகல்வமதிலிட்டுமைந்தா, ஆடேதான்குமரியின்றன்சாற்றினா லே வப்பனேதானரைப்பாய்ஜாமம்நாலே. 602

நாலானஜாமமதுவரைத்தபின்பு நலமானபில்லையதுலகுவாய்ச் செய்துபாலானரவிதனிமேல், காயப்போடுபாலகனேகாய்ந்தபின்புசில் லிசெய்து, மாலானசீலையதுசெய்தபின்பு மகத்தானமணல்மறைவிற் புடத்தைப்போடு, சூலானபுடமாறியெடுத்துப்பாரு துப்புரவாய்ச் செந்தூரஞ்சொல்லொணாதே. 603

ஒன்றாநசெந்தூர மென்னசொல்வேன்ஓகோகோநாதாக்கள் கூறவில்லை, மண்ணானசரக்கதுவும்பிரிதிவிதன்னால்மகத்தானகாரசா ரமதுமேவயாகி, தண்ணமுடன்வேதைமுகங்கோடாகோடி தாக்கிட வேசிமிட்டுவித்தையென்னலாகும், விண்ணானநாதாக்கள்காணுவித் தைவிருப்பமுடனுந்தனுர்கு வோதினேனே. 604

ஓதினேன்செந்தூரந்தனையெடுத்து வுத்தமநேவெள்ளிதனில்நூ ற்றுக்கொன்று, நீதியுடன்தானுருக்கிகுருவொன்றீய நிஷ்களங்கமா னதொருவெள்ளிதானும், ஆதியென்றபஞ்சபூதசாக்கிமேல வப்பனே

வாணமதுமிகவேயாகி, பாதிமதிசடையணிந்ததம்பிரானால் பலிக்கு மடாவாதவித்தை சொலிக்கும்பாரே. 605

சொலிக்குமேமாற்றதுவுமென்னசொல்வேன்சோராமல்வயதுப ன்னிரெண்டதாகும்ஓலிக்குமேதங்கமதையென்னசொல்வேன்ஓகோ கோசித்துமுனியறியாத்தங்கம், பலிக்குமேசிவயோகமாண்பருக்கு பாவியென்மாண்பருக்குப்பலியாதப்பா, எலித்தலையில்கோடாறிதா ன்விழுந்தாற்போலே யெளிதானகைம்முறைகள் விளைதந்தானே.

தானனசுயத்தங்கம் பிறவித்தங்கம் தாக்கானசிவயோகிசெய் யுந்தங்கம், கோனனகாலாங்கிநாதர்சொன்ன குருவானவாக்கதுவும் பொய்யாதப்பா, தேனனமனோன்மணியாள் கடாட்சத்தாலேதேற்ற முடன் பலவிதமாய்நூலைப்பாடி, மானன மாண்பர்களுமறியாமற் றூன் மயக்கமுடன்மருட்கடலிலழுந்திட்டாரே. 607

மருட்டானசிடிகையென்றவேவதைதன்னை மார்க்கமுடனறியாம ல்மாண்பர்தானும், இருட்டுவழியேகியல்லோபாலரெல்லாம்யெழிலா ன்கைம்முறையைப்பாராமற்றான், பொருளிருக்கும்விடமதுவுந்தோ ன்றுவண்ணம், பொங்கமுடன்மதியீனமயக்கத்தாலேகுருட்டுவிழிப் பூனையதுவிட்டம்பாய்ந்த குறிப்பானகதைபோலமேவலாச்சே 608

நவலோகசெந்தூரம்.

மேவலாமின்னமொரு மேன்மைகேளு மேதினியில்கீர்த்திபெற் றபுண்ணியவானே, ஆவலுடனுந்தமக்கு மனதுவந்துவப்பனேகாலா ங்கிப்பதம்பணிந்துசாவதுவுமென்றைக்குநிட்சயந்தான்சாங்கமுடன் பலதொழிலுங்கற்றுமென்ன, போவதுமெய்யல்லாலிருப்பதில்லைபொ ங்கமுடன் வையகத்துவாழ்க்கையாமே. 609

வாழ்க்கையாம்வெகுகாலமிருப்போமென்னும் வண்மையுடன் பலநூலும்வுளவாராய்ந்து, தாட்கமலபதாம்புயத்தைமனதிலுன்னித் தகமையுள்ளகாயாதிகற்பங்கொண்டு, வீட்கமுடன் நெடுங்காலஞ் சமாதிசென்றுவிருதாவாய்மறுபடியும்வந்துமென்ன, பாழ்க்கமுடன் பவக்கடலை விட்டகற்றிபாருலகிச்சுந்தரம்போலிருப்பீர்தானே. 610

சுந்தரனேகாவிகாஷாயம்பூண்டு சுத்தமுடனிருப்பதுவும்யோகி யல்லோ, தந்திரமாயஷ்டசித்தியாடியென்ன தாரணியில்யோகமது கொண்டுமென்ன, அந்தரமெல்லாப்புகழஞானங்கொண்டு அவனித னில்பொய்வேஷங்கொண்டுமென்ன, மந்திரத்தில்மாங்காய் விழுங் கதையைப்போல மானிலத்தில்வெகுபேர்கள்மயங்குவாரே. 611

மயக்கமேவயெந்தனதுமணியேகேளும் மாசற்றநவலோகச்செந்தூரந்தான், தியக்கமதுவாராமல்லோகந்தன்னைதீர்க்கமுடன் முறைபாடுசொல்வேன்யானும், நயமுடையதங்கமதுவொன்றேயாகும் நலமானகாரீயமொன்றேகாலாம், அயமதுவும்விராகனதுவொன்றேயாகும் வப்பனேநாகமது ஆறதாமே 612

ஆறானசெம்பதுவுமொன்றேயாகும்வப்பனேகுடவனதுவொன்றேயாகும், காரானவெள்ளியதுரண்டேயாகும் கருவானவெள்வங்கமொனறேயாகும், கூறானவெட்டுருக்குவொன்றேயாகும் குறிப்பானநவலோகமொன்றாய்க்கூட்டி, சேறான லோகமெலாமொன்றாய்ச்சேர்த்துசெப்புகிறேன் வரிசைபெறவண்மைகேளே. 613

வண்மையாய் இடைகண்டு யினமுங்கண்டுவகுப்பானசேர்வையதுயாவுங்கண்டு, தண்மைபெறநாதாக்கள்தாள்வணங்கி தாமுரைத்தமுறைபாடுவழிபாடெல்லாம், உண்மையுடன்தாமறிந்துபுத்திவானேவுகமையுள்ளலோகமதைக்கண்டாராய்ந்து திண்ணமுடன்மூசையிட்டு சீலைசெய்து தீர்க்கமுடன்சரவுலையில்லூதிடாயே. 614

ஊதவேநவலோக மொன்றாய்ச் சேர்ந்து வுத்தமனேயுருகியல்லோகளங்கமாகும், நீதமுடன்களங்கெடுத்து வுடைத்துமைந்தாஇக்களங்கமாகவல்லோகல்வமிட்டு, சூதமது யீரிடைக்குவொன்றேசேர்த்து சுத்தமுடன்கெந்தியதுமெரட்டிப்பாக, வாதமதுபலிப்பதற்குவருண்மைந்தாகேள் வளம்பெறவேதாளகமும் பலந்தான்கூட்டே 615

கூட்டியேகண்டாதுகால்தான்சேரு குணமானகெவுரியதுகளஞ்சிரெண்டு, நீட்டமுடன்மனோசிலையுங்காலதாக நெடிதானவீரமதுகளஞ்சிநாலு, காட்டிகமாய்த்துத்தமதுகளஞ்சிரெண்டு தாக்கானபூரமதுகளஞ்சியாறு, வாட்டமுடனிடைகண்டுகல்வமிட்டு வளம்பெறவேதானறைக்கவகையைக்கேளே. 616

வகையான ஆறுவகைசெயநீர்தன்னால்வளம்பெறவே தானறைப்பாயெட்டுசாமம், துகையான சரக்கெல்லாமொன்றாய்க்கூட்டிதோருமல்தானறைத்துபில்லைகட்டி, புகையாமலிருப்பதற்குரவியில்வைத்துபுகழான சீலையதுவலுவாய்ச்செய்து, பகையானபுடமதுவும் மணலிலப்பா பாங்குபெறக்காழியென்றபுடந்தான்போடே. 617

புடமதுவுந்தீயாறிசென்றபின்பு பத்தியுள்ளபூபாலாயுரைப்பேனப்பா, தடங்கண்டுவெளிகண்டுதண்மையோடு சட்டமுடன்மணலதனைநீக்கிமைந்தா, அடலானவாசல்தனை யெடுத்துப்பாரு வப்பனே

செந்தூரம்நீலவர்ணம், மடலானசெந்தூரந்தனையெடுத்துமன்னவனே பின்னுமந்த கல்வம்பூட்டே. 618

பூட்டியேசரக்கெல்லாங்கல்வமிட்டு புத்தியுள்ளகண்மணியேசெய்சீரப்பா, தாட்டிகமாயாதுவகை செயநீர்தன்னால் சட்டமுடன்தானரைப்பாய்ப்பின்னுமல்லோ, வாட்டமுடன்தானறைத்துபில்லைதட்டிவளமுடனேரவிதனிலே காயவைத்து, நீட்டமுடன் சில்லிட்டுச்சீலைசெய்துநீதியுடன் மண்மறைவிற்புடந்தான்தாக்கே. 619

தாக்கவேகோழியது புடமதாக்கி தன்மையுள்ளபூபாலாபோட்டாயானால், நோக்கமுடன்வோடதனை யுடைத்துப்பாரு வுத்தமனே செந்தூரமென்னசொல்வேன், ஆக்கமுடன்செந்தூர மருணன்போலாம்வப்பனேநாதாக்கள்கூறவில்லை, வாக்கதுவும்பொய்யாது வருண்வைந்தாகேள் வண்மைபெறசெந்தூரவேதைதானே. 620

செந்தூரம்வேதைமூகம் ரோகநிவர்த்தி.

தானானவேதைமுகஞ்சாற்றக்கேளீர் தன்மையுள்ளபூபாலாதருமவானே, கோனானயெனதையர் காலாங்கிநாதர் கொற்றவனார்தாமுரைத்தநீதிவண்ணம், பானானபராபரியாள் பாதம்போற்றிபாருலகில் மாண்பர்களும்பிழைக்கவென்று, தேனானசிவயோக நிலையில்நின்று தேற்றமுடன்வேதைமூகங் கூறுவேனே. 621

கூறுவேன்செந்தூரந்தனையெடுத்து குணமான வெள்ளிதனில் நூற்றுக்கொன்று, மாறுதலாய்க்குகையிலிட்டு வுருக்கிமைந்தா மார்க்கமுடன் தகடடித்துப்புடத்தைப்போடு தேறுதலாய்மாற்றதுவுமென்னசொல்வேன், தேற்றமுடன் யெட்டரைக்கு ஆணிக்கொக்கும், கூறுதலாய்ப்பிறவியென்றதங்கமாகும், குணமான செந்தூரவேதை காணே 622

காணவேயின்னமொருமார்க்கஞ்சொல்வேன் கைலாச புலிப்பாணிகருவுள்ளானே, தோணவேசெம்பதனை யுருக்கிமைந்தா துப்புரவாயிடைக்கிடைதான்செந்தூரத்தை, வேணமட்டுஞ்செம்புருக்கிக்கிருசமீவாய்விதகனே செம்பதுவுங்களங்கமாகும், மாணமருங் கல்வியுள்ளபூபாலாகேள் மகத்தானசெம்பதனை யூதிப்பாடே. 623

ஊதவேசெம்பதுவுந் தங்கச்செம்பாம் வுத்தமனேநாதாக்கள்மறைத்தசெம்பு, நீதமுடன்செம்பெடுத்துசெப்பக்கேளும் நிஷ்களங்கமானதொருவெள்ளிதன்னை, தோடமுடன்நூற்றுக்குவொன்றசோகக் துப்புறவாய்மாற்றதுவும்பதினாறாகும், வாதமதுகாண வென்றுலிதுவேவாதம் வளம்பெரியநாதாக்கள் வாதம்பாரே. 624

பாரே தான்வாரடித்துப்புடந்தான்போடு பாதகானவெள்ளியது செப்பினேலே, நேரே தான்மாற்றது மதிகங்காணும் நேர்மையுள்ள பிரவியென்றதங்கமாச்சு, சீரே தானித்தங்கம் சிவயோகத்தங்கம் சிறப்பானமாண்பர்களுக்குகந்ததங்கம், ஆரோதான்சொல்வாக ளுந்தமக்கு வப்பனேயானுரைத்தே னுண்மைபாரே. 625

உண்மையாம்நவலோக செந்தூரத்தை வுத்தமனே யுந்தனுக்குவோதினேன்யான், வண்ணமுடன்சீவனத்துக்கிடமதாக வளம்பெரியசெந்தூரம்பதனம்பண்ணு, எண்ணரியநற்பொருளே குருவாயெண்ணியெளிதான வறுமைவருங்காலந்தன்னில், கண்மறையுங் காலமதுதானறிந்து கண்மணியே சீவனத்துக்கிடந்தான்கொள்ளே. 626

கொள்ளவேவறுமைவருங்காலந்தன்னில் கொற்றவனேநவலோகசெந்தூரத்தை, கள்ளமதுவாருமல் மைந்தாகேளு கணக்குடனேநாளொன்றுக்கிருநேரந்தான், வள்ளலுயர்வணிகரிடஞ் சென்றுமல்லோவகையுடனேபணவிடைதான் பொன்தயனீய்ந்து, உள்ளவரைசீவியநாளுள்ளமட்டும் வுத்தமனேகாலமது கழிக்கநன்றே. 627

நன்றானசெந்தூரம்பதனம்பண்ணு நாதாக்கள் மறைத்துவைத்தசெந்தூரந்தான், குன்றானமலைபழுக்கும் நவலோகந்தான் கொற்றவனேகருபிகட்கு மனம்விடாதே, நின்றாலுமொருவனும்மனதுவந்துதீர்க்கமுடன் மருமமதாயுண்பாயப்பா, அன்றெறித்த ஆதிசிவனுந்தமக்குவப்பனேதான்கொடுத்த வேதையாமே. 628

வேதையாமின்னமொரு போக்குசொல்வேன் வேதபந்தக்கண்மணியோபுனிதவானே, கோதையர்கள் மாயவலைசிக்கிடாதே கொற்றவனேசிக்கினால் மனம்வீணாமே, மாதாவின்சீர்பதத்தை தாரணியிலெப்போதுந்தலைமேற்கொண்டு, சீதையுடன் ராமருந்தானிருந்தநேர்மை செப்பினேன்தாா் கதைதனையே கண்டோர்தானே. 629

கண்டதொரு மாண்பர்களுக்கிந்தலோகம் கருவான ரோகமதுபோவதற்குப், பண்டுளபாலையினி கிருஷ்ணவதாரன்பார் மாலையாககல்லோடூண்டுகொண்டு, தண்டுளவதுளசியென்ற மூலிச்சாற்றால் சட்டமுடன் நவலோகசெந்தூரத்தை, கொண்டிடவே யனுபானம் பணவிடைதானப்பா கொற்றவனே ரோகமதுதீருங்காணே. 930

காணவேநவலோகசெந்தூரத்தால் கசரோகஞ் க்ஷயரோகங் கழன்றோடும், பூணவேதிருகடுகைசூரணத்தில் புகழானசெந்தூரம்பணவிடைதான்கொள்ள, ஆணவத்தால் மிஞ்சிவந்த மேகரோகம்

வப்பனே கடல்புக்கியோடும்பாரு, மாணமருங்கல்வியுள்ள மன்னுகே ளும்மகத்தானவியாதிமுகமின்னங்கேளே. 631

கேளப்பாவனுபானம் செய்தாலும் கெடியானநவலோக செந் தூரத்தை, ஆளப்பாவியாதிமுகந்தானறிந்து வப்பனேயனுபானமறி ந்துகொண்டால், கேளப்பாவொருநாளும் வாராதப்பா குணமுள்ள நவலோகசெந்தூரந்தான், பாரப்பாபோகாமல் மண்டலந்தான் பரிவு டனேகொண்டவர்க்குரோகம்போமே. 632

மோமேதான்பதினெட்டுகுஷ்டம்போகும் பொல்லாதமேகெம ன்றயிருபதும்போம், ஆமேதான் சூலைபதினெட்டும்போகும் வப்ப னேகாமாலையாறுந்தீரும், வேமேதான்வாதமது யெண்பதும்போகும் வேகமுடன்பித்தமது நாற்பதும்போம், நேமேதான்சொன்னபடி கி ராணிபோகும் பலமாகப்பாண்டுவகை தீருந்தானே. 633

தீருமேதேகமதுவூதல்தீரும் தீர்க்கமுடன்ரோகமேல்லாம்போ கும், ஈரதனில்தான்சுரக்கும் விஷமேப்பா யெழிலானதந்தநோயெல் லாந்தீரும், நாறுடலம்கிரந்தியென்றபுண்கள்போகும் நலமானதாது டனேவலியுண்டாகும், கூறுமுனிகாலாங்கிநாதர்வாக்கு குவலயத்தி லொருநாளும் பொய்யாதாமே. 634

பொய்யாதுநவலோகசெந்தூரந்தான் பூட்டுகிறேன் நாலாயிரத் துச்சொச்சம், மெய்யிலுள்ளரோகமது யெல்லாந்தீரும்மேலான நவ லோகசெந்தூரந்தான், வையகங்கள்தான்புகழுஞ்செந்தூரத்தைவளம் பெரியநாதாக்கள் மறைத்துவைத்தார், துய்யகல்லபண்டிதங்கள் மிக வாரய்ந்து துப்புரவாய்வோதிவைத்தே னுனுக்கம்பாரே. 635

பாரேதான்நவலோகசெந்தூரத்தைபாருலகில்நாதாக்கள் மறை த்துவைத்தார், ஆரோதான்சாஸ்திரங்களுளவாராய்ந்துவப்பனேபோ திப்பாராருமில்லை, நேரேதான் வுந்தன்முகமமனதுவந்து செடிதான முறைபாடுவழிபாடெல்லாம், தீரேதானிடைபாகங் கைபாகங்கள் தீ ர்க்கமுடனுந்தமக்கு போதித்தேனே. 636

ரசவெள்ளி.

போதித்தேனின்னமொருமார்க்கங்கேளீர் பொங்கமுடன்புலிப் பாணிபுனிதவானே, ஆதித்தன்சந்திரன்போல் வெள்ளிபாக்கு வப் பனேயானுரைப்பேனன்புள்ளானே, நீதியுடன்சூதமது பலந்தானொ ன்று நிஷ்களங்கமானதொருகார்டிவீரம், தீதில்லாபாஷாணச் சுண்ண மொன்று தீர்க்கமுடன்களஞ்சியிடை தானுந்தூக்கே. 637

தூக்கியேகல்வமதி விட்டுமைந்தா துப்புறவாயாறுவகை செய நீர்தன்னால், நோக்கமுடன்தானறைப்பாயிரண்டுசாமம் நுணுக்கமுடன்மெழுத்தனையுருட்டிமைந்தா வாக்குடனேபாகமது பிசகிடாமல் வளமான சூதமென்றவெண்ணைதன்னை பாக்களவாயுருட்டிபதை மூசையிட்டுபண்புடபெறஇல்லிட்டுசீலைசெய்யே. 638

சீலையென்றால் எழுசீலைவலுவாய்ச்செய்து திட்டமுடன்சாவலையில்வைத்துஊது வாலையுடன் தீயாறியெடுத்துபாரு வளமான சூதமது வெள்ளியாகும், காலையிலேதானுக்குஞ் சூரியன்போல்கருவான வெள்ளியதுசோதிமெத்த, ஆலையெனும் தகடதனையிறத்தி மைந்தா வப்பனே புடம்போடதுலக்கமாமே. 639

துலக்கமாம்வெள்ளியதுயென்னசொல்வேன் துப்புறவாய்சூதமென்றவெள்ளியாச்சு, பலத்ததொருசிவராசவெள்ளிதன்னை பாருலகில்நாதாக்கள்மறைத்துவைத்தார், சுலபமென்றவேதை முகங்காணு மாண்பர் சுந்தரனைவெகுகோடி மாண்பரப்பா, கலக்கமதுவாராது சூதவெள்ளி கருவானவங்கத்துக்கசைந்திடாதே. 640

அசையாது சோதனைக்கு உறுதிவெள்ளி வப்பனேநாதாக்கள் நூலறிந்து, வகையொன்றும்நோமல் தாள்பணிந்து வஷ்டாங்கயோகியிலைதன்னிற்சென்று, இசையெட்டுங்குளிகையது யானுங்கொண்டு திருவினையாள் மனோன்மணியாள் போற்றிசெய்து, இசையுடனேயுந் தமக்கு யிந்தபாகம் யின்பமுடன் தான்கொடுத்தவேதையாச்சே.

ஆச்சப்பாகைபாகஞ்செய்யபாகந்தான் வப்பனே வினயமென்ற பதமறிந்து, மூச்சடங்கி நெடுங்காலமிருந்தசித்து முனையானபாகமதைக்கைமறைத்தார், பாச்சலுடனடியேனுங்குளிகைகொண்டு பாருலகை சுத்தியல்லோ மனதுவந்து, வீச்சுடனே யுந்தமக்குவோதிவைத்தேன் விட்டகுறையிருந்ததினால் வாய்க்கலாச்சே. 642

வாய்க்கவேமுன்செய்தபுண்ணியத்தால் வளமானவினயமென்ற வெள்ளிபோக்கு, தாய்க்கமலத்தாள்பணிந்த புண்ணியத்தாள் சட்டமுடனுந்தமக்கு காணலாச்சு, மெய்பிடித்து மாண்பரெல்லாம் வாதந்தேடி பேரானகிலைகடந்து பதிகடந்து, மாய்கையெனுஞ் சமுசாரமிட்டிறந்து மாடிறந்து வீடிறந்துமாண்டார்தாமே. 643

மாண்டாரேவையகத்தில்கோடிமாண்பர் மானிலத்தில் கணக்குண்டோலக்கோயில்லை, வேண்டியபேதார்கருமானமனேகங்கொண்டுவிட்டகுறையில்லாமல் விழலாய்ப்போனார், காண்டவம்போல் பூர்வீகபு

ண்ணியத்தால் தற்பரனையுந்தமக்கு யீந்தபாகம், ஆண்டகையாள் மனோன்மணியாள் கடாட்சத்தாலே வப்பனேயுந்தமக்குவந்தவாறே.

வெள்வங்கநீர்வாங்கல்.

வாறானயின்னமொருபோக்குசொல்லேன் வளமையுள்ள புலிப்பாணிமன்னாகேளும், கூறானவெள்வங்கம்பலந்தானென்று கொற்றவனே சூவமதுபலந்தான்பாதி, நீறானபாஷாணசுன்னமப்பாநெடிதானமூசையிட்டுவுருக்கியல்லோ, பேறுடையபற்பமது குன்றியப்பா பெருமையுடன்வுருக்குமுகந்தன்னில்தாக்கே. 645

தாக்கவே வெள்வங்கமுருகியல்லோ, தகைமையுள்ள நீர்தனையுநிந்துகொள்ளும், தேக்கலென்றவெள்ளியதுட்டங்காய்ப்பு தெளிவானநீரதுவுதமகியல்லோ, நோக்கமுடன் பிரவியென்ற வெள்ளியாச்சுநெடிதானவங்கமதற்கசையாதப்பா, வக்கமதுகொள்ளாமலீந்தபாகம் யெளிதாகச் செய்தவர்க்குசித்திபாமே. 646

சித்தியாம் வெள்ளியம்பிரயோகிததால் சீரான சமுசாரிக்கான வித்தை, முத்திபெற வழியுண்டு ஞானமுண்டு மூதுலகில் நீயுமொரு சித்தனுவாய், நித்தியமுஞ் சிவானந்தநிலையில்நின்று நீதியுடன் சிவயோகந்தன்னைப்பாரு, சத்தியவான்வார்த்தையப்பா பொய்யாதப்பா சட்டமுடன் காலாங்கிசொன்னவாக்கே. 647

நாகக்கட்டுவேதை.

சொன்னதொருபுலிப்பாணி மைந்தாகேளு சொகுசுள்ள கண்மணியேதீராமாரா, நன்னயமாய் பலநூலுங்கற்றுணர்ந்த நாதாந்த சித்தொனிவைநவில்வேனப்பா, உன்னிதமாய் நாகமென்ற லோகந்தன்னை வுற்பனமாய்த்தானெடுத்து வுண்மைபாரு, பன்னமேவநாகமது தொனெடுத்துபாலகனைவுருக்கியல்லோ சாய்த்திடாயே. 648

சாய்க்கவே யிலுப்பைநெய்தன்னிலப்பா சட்டமுடன் சாரமதைக்கிராசமீந்து, வாய்க்கவேபதிரொரு முறைதானப்பா வளமுடனேயுருக்கிமிகச்சாய்த்தாயானல், மாய்த்துமேசட்டையது சவளையாகிமகத்தான நாகமது வொருகண்ணுகி, பேந்ததொரு மழையினைல் மண்கச்டான பேரானபிரீதிபோலிருக்கும்பாரே. 649

பாரப்ப புலிப்பணியின்னங்கேளு பாகமுடன் முன்செய்த நாகந்தன்னை, நேரப்பா கரிவங்கந்தானுங்கூட்டி நேர்மையுடன்தானுருக்கி செப்பச்சேனீ, ஆரப்பாதேன்வளைய லென்றபூநீர் வப்பனே தானுருக்கி கவுவிட்டாட்டி, தீரப்பாநாகமதற் கங்கிபூட்டி திறமுடனேயேழுவகைசீலெசெய்யே. 650

ஏழானசிலையதுவலுவாய்ச்செய்து யெழிலானரவிதனிலேகாய
வைத்து, ஆழானபுடமதுவுங்கோழியப்பா வப்பனேதான்போட்டு
எடுத்துப்பாரு மீளானநாகமதுகட்டும்பாரு மிக்கானதவளையென்
றேசெப்பலாகும், கோளாறுவாராதுயிந்தபாகம் கொற்றவனேநாக
மதுகட்டிப்போச்சே. 651

கட்டியதோர்நாகமதுயின்னஞ்சொல்வேன் கருவானகையானி
ன்சாற்றினாலே, கிட்டமுடன்தானுருக்கிசாய்ப்பாயப்பா திறமான
நாகமதுசீறலேகி, சட்டமுடன்தவளையதுபோலேயாகி தகமையுள்ள
நாகமதுபசையடங்கி, நட்டமிலாக்களங்கமதுபோல்ஜோதியோடும்
நலமானநாகத்தின்கட்டுதானே. 652

தானானநாகமதுகட்டுதன்னை, தன்மையுள்ள பூபாலாசாற்றக்
கேளு, மானானமருதோன்றிசாற்றினாலே மார்க்கமுடன்தானுருக்கி
சாய்ப்பாயப்பா, பானானபரஞ்சுடர்போல்சோதிமின்னும் பாலகனே
பத்துமுறையுருக்கிச்சாய்க்க, தேனானநாகமதுகண்ணடைந்துகேற்ற
முடன்புத்துமென்றுபட்டுதானே. 653

புட்டானநாகமதைத்தானெடுத்து புகழானபழச்சாற்றிலுருக்
கிச்சாய்க்க, கிட்டமுடன்பத்துமுறையுருக்கிப்பாரு தீர்க்கமுள்ளசவ
ளையதுபோலேயாகும், கட்டமுடன்பாராமல்விராலிதன்னைக் கருவா
கத்தானுருக்கிசாய்த்துப்பாரு, நட்டமென்னசிவந்தகொடிவேலிதன்
னைநன்றாகபத்துமுறை சாய்த்திடாயே. 654

பத்தானமுறையதுஞ்சாய்த்தாயானால்பாலகனேநாகமதுகொ
டியகட்டாம், சத்தானநாகமதுகட்டேயானால்சதகோடிசூரியர்போல்
பிரகாசிக்கும், முத்தமருஞானமுள்ளோர்செய்யமாட்டார் மூதுல
கில்சமுசாரிசெய்யும்வித்தை, சுத்தமதுவாராதுநாகந்தன்னை குண
முடனேசெய்யவேவாதியாமே. 655

வாதியாம்நாகமென்றுகளங்கெடுத்து வரிசைபெறகுருதமதுநேரே
சேர்த்து, நீதியாமாறுவகைசெயநீர்தன்னால் நீட்டியரையெண்சாமந்
தானுமப்பா, ஆதியெனும்பரஞ்சுடரைமனதிலெண்ணி சோராமல்
லாணரைப்பாய்மெழுகுபோலாம், பாதிமதிசடையணியுந்தம்பிரானால்
பாலகனேமெழுகதுபோலிருக்குந்தானே. 656

தானானமெழுகதனையில்லைதட்டி தகமையுடன்ரவிதனிலேகாய
வைத்து, கோனானகுருசொன்னவாக்குபோலே கொற்றவனேசில்லி

ட்டுசீலைசெய்து, மானனமணல்மறைவிற்புடத்தைப்போடுமகத்தான செந்தூரம்நீலவர்ணம், பானனபுடமதுவும்பத்தேயாகும் பாலகனே தானரைத்துபோடுபோடே. 657

போடவேசெந்தூரமருணன்போலாம் பொங்கமுடன்தானெடுத்துசெப்பக்கேளு, ஆடவேஜீவனத்துக்கிடமேதென்றால் வப்பனே வழிபாடுசொல்வேனப்பா, நீடவேசெம்பதுதான்களஞ்சிபத்து நெடிதானசெந்தூரங்களஞ்சியொன்று, கூடவேதானுருக்கிகொடுத்துப் பாரு கொற்றவனேமாற்றதுவுமொன்பதாமே. 658

தாமேதான்செம்புதனைவாரடித்து தன்மைபெறபுடம்போடபிறவித்தங்கம், வேமேதான்காவிக்கு முப்புக்கேகா வேதாந்தக்கன்மணியேவிளக்கம்பாரு, ஆமேதான்பசுமையென்றதங்கமப்பா வப்பனேசமுசாரிக்கானதங்கம், நாமேதான்சொன்னபடிநாகத்தங்கம் நல்ம்பெறவேசெய்பவனே புத்திவானே. 659

புத்தியாமின்னமொருபோக்குசொல்வேன் புகழானவெள்ளியதுபத்துக்கொன்று, வெற்றிபெறதானுருக்கிருவொன்றிய வித்தகனேமாற்றதுவுமென்னசொல்வேன், சத்தியமாயெட்டரைதானணிக்கொக்குசன்மார்க்கபுத்தியுள்ளபூபாலாகேள், நித்தியமுங்குருபதாம்புயத்தைப்போற்றி நீமகனேஜீவித்துயிருப்பீர்காணே. 660

காணவேவாரடித்துபுடந்தான்போடு கருவானவெள்ளியதுபசுமையாகி, நீணவேதானிருக்குமாற்றேதெரத்தநிஷ்களங்கமானதொருதங்கமப்பா, ஆணவங்கள்தானெடுக்கிப்பதாம்புயத்தைவப்பனே யென்னுளுமனதிலெண்ணி, காணவேகரங்குவித்து அஞ்சலித்துகாசினியில்மர்மமதாய்வாழ்குவீரே. 661

வாழ்கவென்றால்செந்தூரம்பதனம்பண்ணு மகத்தானபுலிப்பாணிமன்னாகேளு, வாழ்கவென்றால்செந்தூரந்தனைபெடுத்துவளம்பெறவேசெடரோகந்தன்னிலீவாய், வாழ்கவென்றால்மேகமென்றயிருபதுக்கும் மகத்தானகசரோகந்தன்றனக்கும் வாழ்கவென்றால்காயாதிகற்பம்போலே வண்மையுடன்தானருந்திவளமைகொள்ளே. 662

கொள்ளவேஅனுபானந் தன்னிலீய கொற்றவனேகாசமதுவாறும்போகும், உள்ளதொகுபாண்டுவகையாறுந்தீரும் வுத்தமனேவாயுவென்றதெண்பதும்போம், கள்ளமிலாப்பித்தமதுநாற்பதும்போம் கயரோகஞ்சில்விஷங்களற்றுப்போகும், வள்ளலுயர்மேகமென்றகுஷ்டரோகம் வண்மைபெறுந்தாமரையுந்தானும்போமே. 663

போமேதான்பொல்லாதரோகம்போகும் போக்கான வாய்நாற் றம்ளைளீஜீரும், நாமேதான்சொன்னபடி நளிர்சுரங்கள் நலமிலா க்கிராணியது ஆறுந்தீரும், வேமேதான்நேத்ரவலி தொண்ணூற்ருறு ம்விட்டகலுமேனியது காந்திமெத்த, ஆமேதான் நாதாக்கள்கொண் டகற்பம்வப்பனே நாகசெந்தூரம்பாரே. 664

பாரேதான்செந்தூரமுண்டபேர்க்கு பாலகளேயேழானேபலமு ண்டாகும், நேரேதான்கிருஷ்ணுவதாரனேப்போல்கெடிதான ஸ்ரீலீலை மன்மதந்தான், சீரேதான்செந்தூரந்தானுமல்லோ ஸ்ரீராமர் கொண் டதொருகற்பமாகும், வேறேதான்கற்பமது யிதற்கிடுண்டோ வேதா ந்தத்தாய்கொடுத்த தற்பமாச்சே. 665

கற்பமாம்நாகமென்றசெந்தூரந்தான் காலாங்கிநாதருடகடாட் சத்தாலே, சொற்பமென்றுநினையாதே துய்யபாலாசுந்தரனேசமுசா ரிக்கானவித்தை, விற்பனர்கொண்டாடும் வேதைதன்னை விள்ளாதே பொருவருக்கும் விள்ளவேண்டாம், அற்பமென்றுநினையாதேவருள் மைந்தாகேள் ஆச்சரியமானதொரு மகிமைதானே. 666

பூரக்கட்டு வேதை.

மகிமையாமின்னமொரு போக்குசொல்வேன் மகத்தான புலிப் பாணிமன்னுகேளு, அகிலமெலாந்தான்புகழும் காலாங்கிநாதர் வன் புடனேயெந்தமக்குச்சொன்னநீதி, சகிதமுடனுந்தமக்குஞானேபித் துசகலகலைக்யானமெல்லா முபதேசிப்பேன், விகிதராய்க் கருமிகளு மும்மைப்பற்றி வீரமுடன்நேசமது கொள்வார்பாரே. 667

பர்ரானகருமிகளுமும்மைவேண்டி பாருலகில் சினேகவதஞ்செ ய்யவென்று, காரானநல்லவர்போல்வார்த்தைகூறி கடுஞ்சினத்தைம னதினுள் ளிமெய்யேகூர்வார், நேரானசிடிகையென்ற வேதைமார்க்க ம் நேர்மையுடன்தாமுரைக்கவதியஞ்சொல்வார், கூறுனவார்த்தைய து மிகவிடாமல் குணமுடனேநயனமதுவாய் நேசங்கொள்ளே.

கொள்ளவென்றால்பூரணத்தைக்கேட்பாரப்பா கொற்றவனேமா ம்மமதைவெளிவிடாதே, தெள்ளுதமிழ் வாகடத்தைப்பேசுபேசுதே ஜொளியின்சின்மயத்தை வெளிவிடாதே, உள்ளதொருபொருளெல் லாமுமவனைமோபம் வித்தமனேதடம்பிரித்துக் கேட்பாரப்பா, கள்ள மனமில்லாமல்கபடகற்றி கண்மணியேவுண்மையது புகன்றிடாயே,

புகலவேபுலிப்பாணிமன்னுகேளு புகழானபூரணமென்றவேதை தன்னை, சகலமுனிசித்துகளுஞ்சொன்னாரப்பா தாரணியில்மர்மமதா ய்ச்சொல்லிவிட்டார், நிகலவேசாத்திரங்கள்கோடாகோடி நீதியுடன் கட்டுமுறையனேகங்கண்டார், அகலமுள்ளபிரும்பென்ற பாண்டந் தன்னைவப்பனேவெண்மையதாய்த் துலக்கிப்போடே. 670

போடவேதான்பூரமென்றசரக்குதன்னை பொங்கமுடனயச்சட் டிதன்னிலிட்டு, நீடவேபலமொன்றாய் நிறுததுக்கொண்டு நிஷ்களங் கமானவெள்ளாட்டுப்பாலால், சாடவேசுறுக்கதுமெட்டுசாமம்தண் மையுடன்தான்கொடுத்துப் பின்னுங்கேளு, கூடவேபசுவின்பால் நா லுசாமம் கொற்றவனேதான்கொடுத்து யெடுத்திடாயே. 671

எடுக்கவேபூரமதுயென்னசொல்வேன் யெழிலானதந்தமதுபோ லேகாணும், ஒடுக்கமதாயுருகியல்லோயிறுகிக்காட்டும் வுத்தமனே த வளைநிறம்போலேகாணும், தொடுக்கவேவெடியுப்பு பலமொன்றாகும் தோறுமல்சீனமது பலமொன்றாகும், விடுத்ததொருதுருசதுவும் பல மொன்றாகும் வித்தகனேசிங்கியது பலமொன்றாமே. 672

ஒன்றானசரக்கெல்லாங்கல்வமிட்டு வுத்தமனே நாதாக்கள்சொ ன்னவண்ணம், தென்றிடவேகல்வமதிலிட்டுமைந்தாவேகமுள்ளவரு க்கன்பால்தன்னாலாட்டி, குன்றானபூரமதுக்கங்கிபூட்டி கூர்மையுட ன்ரவிதனிலேகாயப்போடு, நன்றானசீலையதுயேழுசெய்து நலமுட யெரிக்கும்வகைவரிசைகேளே. 673

வரிசையாய்த்தளவாயம்பாண்டந்தன்னில் வகையுடனேபூமண லைகொட்டியேதான், பரியானபூரமதையெடுத்துவைந்தா பாங்குபெ றமணலதனில் பொதிந்துமல்லோ, விரிவானமணலதனால் மேலுமூடி மேலுமந்தப்பாண்டமிட்டுசில்லுசெய்து, துரிதமுடன்ரவிதனிலேகா யவைத்து துப்புரவாய்வாலுகையாலேற்றிடாயே. 674

ஏற்றியேதீபமதுயென்னசொல்வேன் எழிலானபுலிப்பாணிபுத் திவானே, போற்றியேவம்பாளின் பதாம்புயத்தை பொங்கமுடன் தானெரிப்பாய்க்கமலம்போல, நீற்றவேபூரமதுகட்டுவாசி நீதியுடன் தவளம்போல்நிற்கும்பாரு, ஆற்றியேஜாமமது நாலுமாகும் வப்பனே நானெரித்துயெடுத்திடாயே. 675

எடுக்கவேகணபதியைப்போற்றிசெய்து யெழிலானபாண்டமது திறந்துபாரு, விடுத்ததொருபூரமதுயென்னசொல்வேன் விண்ணுலகு

சந்திரன்போல்விளக்கமெத்த, தொடுத்ததொருபூரமதைத்தானெடு த்துசோராமல் கவசமதைநீக்கியேதான், தடுத்திடாமருந்துவகை யா னுரைப்பேன் தற்பரனேசிற்பரனே சார்ந்துகேளே. 676

சார்ந்துமேபூரமதை யெடுத்துபாலா தண்மையுடன் பற்பமது செய்வதற்கு, ஓர்ந்துமேயீயமென்றசெந்தூரத்தை ஓகோகோநாதா க்கள்மறைத்துவைத்தார், தீர்ந்ததொருசெந்தூரந்தனையெடுத்து தீற் கமுடன்பூரமதுக் கிடையேதூக்கி, ஆர்ந்துமேசிற்றண்டக் கருவிலை லேவப்பனேதானரைப்பாய் சாமம்நாலே. 677

நாலானசாமமதுவரைத்தபின்பு நலமாகப்பூரமதுக் கங்கிபூட்டி பாலானரவிதனிலேகாயப்போடு பட்சமுடன்தானெடுத்து சீலைசெய் து, மாலானமண்மறைவிற்புடத்தைப்பாரு மகத்தானகோழியென்ற புடமேயாகும், சூலானபூரமதுக்குள்ளிருந்து சுந்தரனேசூதமதுமடி யும்பாரே. 678

மடியுமேயிப்படிதான் பத்துமுறைபோடு மார்க்கமுட னீயமெ ன்றசெந்தூரத்தால்,படிபடியாய்கருவிட்டு ஆட்டிஆட்டி பாலகனே பூரமதுக்கங்கிபூட்டி, விடிந்தபின்புரவிதனிலே காயவைத்துவித்தக னேசீலையதுவலுவாய்ச்செய்து, முகந்தபின்புமுன்போலே புடமும் போடு முனையானபதமாறியெடுக்கக்கேளே. 679

கேளேதான்பூரமதுஇறுகியல்லோ கெடியானசூதமதுமடங்கிநி ற்கும், வீளேதான்பூரமதையெடுத்துமைந்தா விருப்பமுடன்பின்னு மல்லோ வதிதங்கேளு, நாளேதான்போகாமல் நாதவானேநவிலுகி றேன்பஞ்சபூதவாராதாரம், சூளேதான்துருசுவெடிப்புக்காரம்சுந்தா னேவருஞ்சாரஞ்சீனந்தானே. 680

சீனமாங்கரியுப்புத்தானுஞ்சேர்த்து சிறப்புடனேசெவ்வாலம் பாலாலாட்டி, சோனமதாம்புரத்துக்கங்கிமூட்டிசோராமல் ரவிதனி லேகாயப்போடு, கானமருஞ்சுண்ணம்புச்சீலைசெய்துகடுரவியால்பின் னுமங்கேகாயவைத்து ஊனமதுவாராமல் மணல்தானப்பா வுத்தம னேகோழியென்றபுடத்தைப்போடே. 681

புடமாறித்தீர்ந்தபின்புயெடுத்துப்பாரு புகழானவாறுவகைசர க்குதன்னால், தடமானபஞ்சபூதவாராதாரம்தண்மையுடன்சாக்கதுவு

ஞ்சேர்த்துமல்லோ, திடமாகப்புகழடங்கிவீரடங்கி தீர்க்கமுள்ளபூ ரமதுயென்னசொல்வேன், மடலானபூரமதுவுருகியல்லோமார்க்கமு டன்தந்தம்போ லிருக்கும்பாரே. 682

தந்தமாம்பூரமதுகட்டுமானல் தண்மையுள்ளவேதையதுவென் னசொல்வேன், அந்தமுடன்பூரமதையெடுத்துபாலா ஆகாகாவருக மென்றநெய்யினாலே, பந்தமுடன்சுருககதுவும்நாலுசாமம் பாகமுட ன்தான்கொடுக்கமுழுக்கட்டாகும், விந்தையுடன்பூரமதுசிடிகைவே தைவிண்ணுலகில் மண்ணுலகில் காணார்தாமே. 683

காணமல்சித்துமுனிநாதர்தாமும்கருவானசாத்திரங்கள் வதிக ஞ்சொன்னார், தோணதகருக்குருவும்முறையாடெல்லாம் தோரமல் பாடிவைத்தார்நூல்கள்தோறும், வீணாள்தான்போகாமல் சாத்திரத் தில்விட்டகுறையிருந்தாலேலபிக்குமென்று, மாணாக்களறியவென்று பலநூலெல்லாம் மானிலத்தில்பலவிதமாய்க்கூறினாரே. 684

கூறினார்வாதநூலனேகஞ்சொல்லிகுணமானபாகமதைவிட்டறு த்து, தேறினார்நூல்களெல்லாமுன்பின்னாக தேற்றமுடன் கைமறை ப்பாய்க்கட்டறுத்து, மீறியேசிலநூலில் னுண்மைகூறி மிக்கான செய் பாகம்வேறறுத்து, சீறியேமாணாக்கர்தமைச்சினந்துசீரறுத்துவாரறு த்துதிகைத்திட்டாரே. 685

திகைத்ததொருநூல்களெல்லாமுளவாராய்ந்து தீர்க்கமுடங்கா லாங்கிப்பதம்பணிந்து, பகைத்தொருசித்தர்களைக்கரங்குவித்துபட்ச முடனஞ்சலிகள்மிகவுஞ்செய்து, வகையுடனேகுளிகையது பூண்டு மல்லோவளமானசீனபதியடியேன்சென்று, தகமையுடன்குருபரனு ர்பதாம்புயத்தைதாள்பணிந்து சதாகாலந்தெரிசித்தேனே. 686

தெரிசித்தேன்சமாதிமுகம் மதிவாய்நின்றுதேற்றமுடன்குருவ ணக்கமதிகங்கூறி, புரிசடையோன்பதாம்புயத்தைமனதிலெண்ணிபூ பாலகாலாங்கிநாதர்பாதம் தெரியாதயெந்தனுக்கு வுகமைகூறிதெ ளிவானவுபதேசம்மிகவேநண்ணி, சரியானசமாதியதுபெறவேவேண் டிசட்டமுடன்வரமெனக்கு வருளென்றேனே. 687

என்றதொருவாக்கதுவும்கூறும்போது எழிலானகாலாங்கிநாதர் தாமும், தென்றிசையில்கும்பமுனிநாதருக்கு தேற்றமுடன்தரிசனை கள்தந்தாற்போலே, சென்றதொரு யெந்தனுக்குவாசீர்மங்கள்தெளி வாகமனதுவந்து வதிகங்கொண்டு, கன்றழுகுங்காலமதில்தாயுவந்து தடும்பசிக்குப்பால்கொடுத்தகதைபோலாச்சே. 688

ஆச்சப்பாயெந்தனுக்கு வுபதேசங்கள் அவனிதனிலாரதுதான் சொன்னாரில்லை, மூச்சடங்கிசென்றதொருகாலாங்கிநாதர் முனியாகயெந்தனுக்குவுண்மைகூறி, மாச்சலுடன்சமாதிமுகந்தானிருந்துமன்னவனேகருவிகாணுதியந்தம், ஏச்சலதுவாராமல்பெற்றும்ல்லோயெழிலானசீனபதிகடந்திட்டேனே. 689

மடந்தேனேசீனபதிநீங்கியல்லோ காலாங்கிநாதருடகிருபையாலும், சுடர்போன்றமனோன்மணியாள்கடாட்சத்தாலும் சுந்தரனேவஷ்டதிசைதொடர்ந்துவந்தேன், திடமானமுறைபாடுவழிபாடெல்லாம் தீர்க்கமுடன்குணபாடுதெரிந்துமேதான், சட்டமுடன்காயாதிகற்பங்கொண்டு தாரணியில்நெடுங்காலமிருந்திட்டேனே. 690

இருந்தேனேநெடுங்காலங்குளிகைகொண்டு எழிலானசமாதிமுகமெல்லாங்கண்டு, பொருந்தவேயுந்தமக்குவுபதேசங்கள் பொங்கமுடன்கொட்டிவைத்தேனிடங்கொள்ளாது, திருந்தவேபூரமென்றகாயகற்பம் திட்டமுடன்குன்றிவிதங்கொண்டாயானால், அருந்தியதோர்தேமதுஜோதிமின்னும் வப்பனே பூரமதின்வேகந்தானே

தானனகுருசொன்னவாக்குபோலே சட்டமுடன்மண்டலந்தானுண்பாயானால், பானனதேகமதுபென்னசொல்வேன் பரிதிகண்டபனிபோலேநோய்கள்தீர்ந்து, தேனனமேனியதுகாந்திவீசும் தேசமதில்விதியாளியறியான்பாரு, மானனமகதேவர்கடாட்சத்தாலேமார்க்கமுடனுந்தமக்குவமைக்கலாச்சே. 692

வேதைமுகம்.

அமைப்பானபூரமதையெடுத்துமைந்தா வப்பனேமதிதனிலே நாற்றுக்கொன்று, நிமைப்பொழுதுங்காலமதுவீண்போகாமல்நீதியுள்ளபுலிப்பாணிபுனிதவானே, சுவைதாங்கும்நலியாளர்க்குறைதீர்த்தாப்போல்சுந்தரனேசிடிகையென்றவேதைதன்னை, அமைப்புடனேமதிதானுமுருகும்போது வப்பனேபூரமதுவொன்றுதாக்கே. 693

தாக்கியேவுருக்குமுகந்தன்னிலப்பா தகமையுடன்வெள்ளிதனையெடுத்துப்பாரு, ஆக்கியோன்வாக்கதுவும்பொய்யாதப்பா வப்பனே வெள்ளியதுயென்னசொல்வேன், பாக்கியமுண்டாகுதற்குப்பசுமை

யாகி பாங்குடனேபத்தரையாம் மாற்றுமாகும், வாக்கதுவும்பொய் யாதுமைந்தாகேளு வண்மையுள்ள பிறவியென்ற தங்கமாச்சே.

தங்கமாம்சுயத்தங்கம் பிறவித்தங்கம் தாரணியில் நாதாக்கள் மெச்சுந்தங்கம், புங்கசித்திக்குகந்ததொரு யோகத்தங்கம் புகழான சமுசாரிக்கானதங்கம், வங்கமதற்கசையாத வலுத்ததங்கம் வளம் பெரியசிந்துமுனிபோற்றுந்தங்கம், இங்கிதமாமாண்பர்களுக்குகந்த தங்கம் பெழிலானநடராஜ தங்கம்பாரே. 695

பாரேதான்புலிப்பாணிமைந்தாகேளு பாலகனேயின்னமொரு போக்குசொல்வேன், நேரேதான் செம்பதுவும் களஞ்சிநூறு நேர் மையுடன்குகைதனிலே யிட்டுமைந்த, சீரேதான்பாகமது பிசகிடா மல் தீர்க்கமுடன் தானுருக்கி மருந்தையீவாய், கூரேதான் காரமது விட்டுருக்கி கொற்றவனேகுருவொன்று கொடுத்திடாயே. 966

கொடுத்தவுடன்செப்பதுவு முருகியல்லோ கோவேந்தர் புலிப் பாணிமன்னுகேளு, அடுத்தவிஷஞ்செம்பினது ஆரமெலகி வப்பனே மாற்றதுவுஞ்சொல்லப்போமோ, தடுத்திடவர்ணமது யென்னசொல் வேன் தாரணிலல்நாதாக்கள் மறைத்தகூத்து, நடுப்படையில் வில்லு க்குநாணுமற்று நானிலத்தில்விழுந்ததொரு கதைப்போலாச்சே. ()

கதையானசெம்பதுவு மாற்றேமெத்த காசினியிலாரறிவார்மகி மைதன்னை, சதையாமல்வாரடித்துப் புடத்தைப்போடு சட்டமுடன் தங்கமதுயென்னசொல்வேன், உடையாது புடத்துக்கு வசைந்திடா துவுத்தமனேவங்கமதுக்குறந்திடாது, பதையாமல்வாரடித்துப்புட ந்தான்போட பாங்குபெறசெம்பொன்னின்மகிமையாரே. 698

பாரேதான்கவசகுண்டலத்துக்காதிபாங்குபெற சிவயோகிக்குக ந்ததங்கம், நேரேதான்வருமைவெருங்காலந்தன்னில் நேர்மையுட னும்பதற்குச்சொன்னநீதி, ஆரோதான்சொல்வார்களிந்தப்போக்கு வப்பனேயாமுனக்குவுரைத்தேனப்பா, சீரேதான்நெடுங்காலந்தவமி ருந்து சிற்பரனேவேதைமுகஞ்செய்துபாரே. 699

செய்துமேகுருவணக்கமிகவுங்கூறி செயலானபாக்கியமுமதிகங் கொண்டு, வையகங்கள்தான்புகழுபுத்திவானாய் வளம்பெரியநாதாக் கள்பதம்பணிந்து, துய்யநல்லசிவவேடம்பூண்டுமல்லோ துப்புரவாய் யோகனிஷ்டைதனிலிருந்து, பையவேயுனக்குகந்தசீஷன்தேடி பால கனேவுபதேசஞ்செய்வார்தானே. 700

## கொச்சிவீரக்கட்டு.

தானானயின்னமொருபோக்குச்சொல்வேன்தகமையுள்ளநற்பாலாநண்புள்ளானே, கோனானயெனதையர் காலாங்கிநாதர் கொற்றவனாரெந்தனுக்குச்சொன்னநீதி, தேனானமனோன்மணியாள்கடாட்சத்தாலே தெளிவுடனேயெந்தனுக்கு வுபதேசித்தார், பானானபாஞ்சுடரைப் போற்றியேதான் பாடுகிறேன்கொச்சியென்ற வேதைகாணோன். 701

காணவேகொச்சியென்ற வீரமப்பா கவனமுடன்பலமதுதான் கொண்டுவந்து, தோணவேலட்சுமியாள் வீற்றிருக்கும்துகையானவில்வமதுபழந்தான்பத்து, நீணவேபழமதனைக்கீறியல்லோ நீதியுடன் வீரமதையுள்ளமைத்து, மாணவேசீலையதுவலுவாய்ச்செய்துமயங்காமல்மணல்மறைவிற்புடத்தைப்போடே. 702

போடவேயிப்படியேபத்துமுறைபோடு போக்கானவீரமதுகட்டிப்போகும், நீடவேவீரமதுகட்டினாக்கால் நீடாழியுலகமெல்லாங் கட்டலாம்பார், சாடவேவீரமதைத்தாவணடுத்து சட்டமுடன்சமென்றசெந்தூரத்தை, ஆடவேபழச்சாற்றால்தானரைத்து வப்பனேவீரமதுக்கங்கிபூட்டே. 703

பூட்டியேரவிதனிலே காயவைத்து பொங்கமுடன்சீலையதுவலுவாய்ச்செய்து, நீட்டியேமணல்மறைவிற்புடத்தைப்போடு நீதியுடன் வீரமதுபுகையடங்கி, தாட்டிகமாய்வுருகியகட்டிநிற்கும் தாடாண்மையானதொருவப்புதானும், கூட்டியேபின்னுமந்தவீரந்தன்னைகுணமாகமறுபடியுஞ்செப்பக்கேளே. 704

செப்பவென்றாலின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் செயலான வீரமதுதானெடுத்து, ஒப்பமுடன்மிருதாருசிங்கிதன்னை ஓகோகோநாதாக்கள்மறைப்புநீக்கி, தப்பிதங்கள்வாராமல்சிங்கிதன்னை சட்டமுடன் வெண்கருவால்தானரைத்து, மெய்ப்புடனேவீரமதற்கங்கிபூட்டி மேன்மையுடன்ரவிதனிலேகாயப்போடே. 705

காய்ந்தபின்புசீலையது வலுவாய்ச்செய்து கவனமுடன் மறைவிற்புடத்தைப்போடு, தேய்ந்ததொருவீரமதுகட்டுமாகிதேற்றமுடன்படிகமென்றகல்லுபோலாம், மாய்ந்ததொருவீரமதைத்தானெடுத்துமறுபடியும்முன்போலப்பாகஞ்செய்து, பாய்ந்ததொருவண்மறைவிற்புடந்தான்பத்துபாலகனேபோட்டுவரக்கட்டிப்போமே. 706

கட்டியதோர்வீரமதைத்தானெடுத்து கலங்காமல்சீலையதுவிலக்கியல்லோ, திட்டமுடன்பின்னுமொருபாகஞ்சொல்வேன் தீர்க்கமு

ள்ளபுலிப்பாணிபுகலக்கேளீர், எட்டியென்றவித்ததுவும்பலந்தானேந் துளழிலாகநிம்பழத்தின்சாற்றிலேலே, கொட்டியதோர்விஷந்தனைத் தானரைத்து கூறவேவீரமதற்கங்கிபூட்டே. 707

அங்கியென்றவீரமதைரவியில்வைத்து வப்பனேயேழுசீலைவலு வாய்ச்செய்து, இங்கிதமாய்மண்மறைவில்புடத்தைப்போடு யெழிலா னபுடமாறியெடுத்துப்பாரு, சங்கையில்லாவீரமதுயென்னசொல்வே ன்சட்டமுடன்மணிபோலேயிறுகிநிற்கும், வங்கமென்றமணிபோலே தோற்றும்பாரு வளமையுள்ளவீரமணியாகுந்தானே. 708

தானானவீரமணியென்னசொல்வேன் தாக்கானபுடமதுவுமுன் போலாக, கோனானபுடமதுவும் தூறப்போடு கொற்றவனேவீரமணி யென்னசொல்வேன், மானானவீரமணிகட்டினுக்கால் மதகரியிலேறு தற்குஐயமுண்டோ, தேனானமனோன்மணியாள் கடாட்சத்தாலேதே ஜொலியின் வீரமணிகாணலாமே. 709

காணலாம் வீரமணிதனையெடுத்து கனமானமதகரியின்மேலே சென்று, பூணவேவீரமணிகட்டினேன்யான் புகழாகயெதிரியென்ற மாண்பர்தம்மை, வேணவேமண்டதனைபிளப்பேனென்று விருதுப றையறைந்திடலாமணியினாலே, நாணவேசித்தாதிமுனிவர்தாமும்நடு ங்குவார்மணிதனையே கண்டபோதே. 710

கண்டதொருநாதாந்தசித்துதாமும்கனமுடனேயுந்தனைத்தான் போற்றுவார்கள், மண்டலத்து ராஜாதிராஜர்தாமும் மகாவீரனென் றல்லோமதிப்பார்தானும், கொண்டல்வண்ணனச்சுதனார்கிருஷ்ணவ தாரன் குவலயத்தில்கொண்டதொரு குளிகையென்பார், தெண்டி ரைசூழ்மான்பரெல்லாமும்மையல்லோதேர்ந்ததொருசித்துமுனியெ ன்பார்பாரே. 711

பாரேதான்வீரமென்ற குளிகைதன்னைபாங்குடனேதானெடுத் துப்பகரக்கேளு, நேரேதானுவினதுமுதுகின்பேரில் நேர்மையுடன் தான்வைக்கப்பால்கொடாது, சீரேதான்வீரமணியாட்டந்தன்னால்சி றப்பானபாலதுவுஞ்சுவறிப்போகும், நீரேதான்மணியதனை யெடுத் தாயானால் நிஷ்களங்கமானபால் சுரக்கும்பாரே. 712

சுரக்குமேமணிதனையேயெடுத்துபாலா சுந்தரனேசொல்லுகிறே ன்சூட்சம்பாரு, இரக்கமுடனுண்மீதில்மனதுவந்துயெழிலானமணி யினதுபூட்டகத்தை, திறக்கவேமணியென்றவண்மைதன்னைதீர்க்கமு டன்புகலுகிறேன்திண்ணம்பாரு, பறக்கவேவாயுவேகந்தன்னைப்போ லேபாரினிலேவாயிலிட்டுநடக்கலாமே. 713

நடக்கவேசெந்தூரம் நெடுங்காலந்தான் நடராஜசுந்தரனேநவி
ல்வேனப்பா, அடக்கமுடன்குளிகைதனைவாயிலிட்டு அவனியெலாம்
நடந்தாலுமசைத்திடாது, படம்வரையும்மாதர்தனைப் புணர்ந்திட்
டாலும் பகரவேகூடாதுலீலாவண்ணம், சடமதுவுந்தோன்றுதுயுந்த
மக்குசட்டமுடன் குளிகைதனைக்கொள்வீர்தாமே. 714

குளிகைவேத முகம்

கொள்ளவேயின்னமொரு போக்குசொல்வேன் குணமானபுலி
ப்பாணிகேந்திரகேள், எள்ளளவும்பிசகாது யிந்தபாகம்யெழிலான
வீரமணிவேதையப்பா, விள்ளாதேயொருவருக்கும்விந்தபாகம் விட்
டகுறைபிருந்ததினாலுந்தமக்கு, கள்ளமதுவாராமல்மனதுவந்துகண்
மணியேகடாட்சித்தேன்பண்புதானே. 715

பண்பானவீரமணிதனையெடுத்துப்பார்வேந்தாவெள்வங்கஞ்சே
ர்தானப்பா, திண்ணமுடன்தானுருக்கிகுகையிலிட்டு தீரமுடனேவீ
ரமணிதனையெடுத்து, அண்ணலார்பதம்போற்றி யடிபணிந்து வப்ப
னேகுளிகையதுயெடுத்துமைந்தா, வண்ணமுடன்வங்கமது வுருகும்
போது வளம்பெறவேகுளிகைதனைப் பொதிந்திடாயே. 716

பொதியவேநீருண்டுமேலெழும்பி பொங்கமுடன் மணியதுவும்
தெறிக்கும்பாரு, மதிபோன்றவெள்ளியது வென்னசொல்வேன்மகத்
தானவெள்ளியம்நீர்தானேகி, நுதிபெறவேவெள்ளியது மாற்றுமே
த்ததுப்புரவாய்சொல்வதற்குநாவுமில்லை, பதியானவீரமணிதனிலுதி
த்தபரிதியென்றவெள்ளியது காணலாமே. 717

காணவேயின்னமொருபோக்குசொல்வேன் கண்மணியே புலிப்
பாணிகவிராஜேந்திரா, ஆணவத்தால்வந்ததொருகசரோகங்கள்வப்ப
மேமேதனதனிலனுபானித்தால், நாணமதுவாறுமல் ரோகங்கள்நாடா
துமேனிவிட்டுகழுகும்பாரு, மாணமருங்கல்வியுள்ள புத்திவானேமார்
க்கமுடனின்னமொரு மருமங்கேளே. 718

கேளப்பாமணியதனையெடுத்துமைந்தா கெவனமுடன்பாணித
னிற்பதனம்பண்ணு, வாளப்பாதேகமது செல்லும்போது வளமுட
னேஐந்தறிவுங்குண்ணுமல்லோ, நாளப்பாவுடலைவிட் டாத்துமந்தா
ன்நீங்கியேபோவதற்குமுன்னதாக, பாளப்பாதன்னைத்தான் மறந்து
மல்லோ பாழுடலம்போவதற்கு நாளுமுண்டே. 719

உண்டானகாலமதிலொடுக்கந்தன்னில் வுத்தமனே தாகமென்றகை ருவுதன்னில், கொண்டிடவேவீரமென்றகுளிகைதன்னை கொற்றவ னேதானிழைத்துநாவில்தீட்ட, தண்டமுடன்செத்தசவம்போலாகு லும்தாரணியில் தலையெடுத்துவாரத்தைகூறும், சண்டமாருதம்போ லயிந்தவீரம் சட்டமுடனுந்தனுக்கு ஓனினனே. 720

சகலரோகங்களுக்குஞ் சூரணபாகம்

காயகற்பம்.

ஓதவேயின்னமொருமார்க்கஞ்சொல்வேன் ஸ்ரீகோகோநாதாக்க ளொளித்தமார்க்கம், நீதமுடன் காயகற்பச்சூரணந்தான் நிலையான யோகிகட்குமாண்பருக்கும், தோடமுடன்சரக்குவகை செப்பக்கே ளும் தோன்றுமல்சுக்குடனே மிளகுமாகும், ஆதமுடன்திப்பிலியுங் கடுக்காய்த்தான்றி வப்பனேமாசிக்காய்தானுங்கூட்டே. 721

கூட்டவேதேசரவம்வாய்விளங்கம் குணமான கார்போகங்கடுக் காய்பூவும், நாட்டமுடன் சிற்றரத்தைபேரத்தை நலமானவாலுளு வையோமந்தானும், வாட்டமுடன் சிறுமல்லிபேராமல்லி வளமான குராசுரளியோமந்தானும், கோஷ்டமுடன் கட்டதிப்பிலியுங் கூட்டி குணமானஅதிமதுரமேலந்தானே. 722

தானனகிராம்புடனே லவங்கப்பட்டை தன்மையுள்ள ஜாதிக் காய்ஜாதிப்பத்திரி, கோனைதக்கோலம் பிரப்பின்மூலம்கொடிதான பூமிசர்க்கரையுமாகும், தேனனபரங்கியுடப்பட்டைதானும தெளிவா னவால்மிளகுசெங்கடுக்காய், பானைதுளசியென்ற வித்துதானும்பா ங்கான ஆலினதுவித்துங்கூட்டே. 723

வித்தானஅரசினதுவித்துமாகும் வீரானபிச்சினுட வித்துமா கும், சுத்தமுள்ளபூனையென்றகாலிதானும் சுந்தரனே வூமத்தைவித துங்கூட்டு, மெத்தவரிதானதொருவிராலிவித்துமேன்மையுள்ளபூஅ ரசன்வித்துகூட்டு, சத்தகதிக்கப்பாலே விளையும்வித்து சந்தனமாம் வித்ததுவுங்கூடச்சேரே. 724

சேரப்பாஅத்தியுடவித்துதானும் செயலானஅழிஞ்சியுட வித் துதானும், கூரப்பாசாரத்தின்வித்துதானும்குறிப்பான ஆசத்தின்வி த்துதானும், நேரப்பாமுருக்கிலையின்வித்துதானும் செடிதான எருக் கினுடவித்துதானும், ஆரப்பாசூரியுடவித்துதானும் வப்பனேயெள் ளினுடவித்துகாணே. 725

காணவேவகைவகைக்குப் பலந்தானென்று கருத்தாகத்தான் வறுத்துக்குரானித்து, தோணவேகூரணத்தை யொன்றாய்க்கூட்டிசோராமல் பசும்பாலில் சுத்தித்தேதான், வேணதொரு சரிபாகஞ்சீனிசேர்த்து விருப்பமுடன் சிசாவிற்பதனம்பண்ணு, ஆணவங்கள் வுண்டாகயிந்தபாகம் வப்பனேசரிகூட்டி பதனம்பண்ணே. 726

பண்ணவேமுப்பூவு களஞ்சிசேர்த்து பண்மையுடன் மண்டலந்தான்கொண்டபேர்க்கு, நண்ணவேநடுச்சாம வயதுதன்னில் நாட்டமுடன் சிவயோகஞ் செய்யும்பேர்க்கு, திண்ணவே மண்டலந்தான் காயகற்பம் தீர்க்கமுடன் சமுசாரிக்கானவித்தை, வண்ணமுடனிப் பாகஞ் சித்தருக்கு வளமையுடன் மறைத்துவைத்தா ருண்மைபாரே

பாரேதான் மண்டலங்காயாதியப்பா பாங்குபெறவுண்டவர்க்கு யெல்லாஞ்சித்தி, நேரேதான் சமுசாரிக்கானகற்பம் நெடிதானதுறவிகட்கு முகந்தகற்பம், சீரேதான் காயாதிகொண்டபின்பு தீர்க்கமுடன்வழலையது கொள்ளவேண்டும், நீரேதான்வழலையது கைபாகந்தான்நீதியுட னறிவதற்கு யின்னங்கேளே. 728

யோகஞ்சாதிப்போர்க்கு வழலைத்திராவகம்.

கேளப்பா புலிப்பாணிமன்னுபாரு கெடியானயோகங்கள் சாதிப்போர்க்கு, வாளேதான்சமுசாரி குடியுள்ளோர்க்கு வதுப்பான சிவயோகி வேடத்தோர்க்கும், பாளேதான்யோகமது போகாமற்றுன் பகருகிறேன் திராவகவழலையப்பா, கூளேதான்கைபாகஞ் செய்பாகந்தான் கூட்டுகிறேன் வரிசைமுறை யின்னங்கேளே. 729

முறையானமுறைபாடு யேதென்றுக்கால் முனையானலவணமதுவெடியுப்பாகும், துறையான கல்லுப்பு வளையலுப்பு துடியானசவுட்டுப்பு யிந்துப்பாகும், குறையகற்பம் கரியுப்புபூநீறுப்பு குணமான காரமுடன் சீனகற்பம், பிறைபோன்ற பாஷாணங் கௌரிதானும் போரானலிங்கமது பூரக்கூட்டே. 730

கூட்டவேவீரமுடன் சிங்கிதானும் குணமானதாளகமும் கெவுரிதானும், நீட்டவேமனோசிலையும் வரிதாரந்தான் நிலையானகெந்தியுடன் கற்பாஷாணம், நாட்டமுடன் சங்குயென்ற பாஷாணந்தான் நலமானதுத்தமுடன் துருசுங்கூட்டு, வாட்டமுடன் சரக்கெல்லாஞ் சமனதாக வளமுடனேதானிறுத்து யெடுத்துக்கொள்ளே. 731

கொள்ளவே சரக்குகிகர் சாரஞ்சேர்த்து கொடிதான சீனமதுரெட்டிப்பாக்கி, விள்ளவேகுழிக்கல்லில் பொடியதாக்கி வீரானவாலையிட்டு திராவகந்தான், மெள்ளவேபாண்டமதில் சரக்கையிட்டு

மேன்மையுடன் சக்கரமாம் வாலைதன்னை, எவ்வளவு கோளாறுநேரா மற்றுன் யெளிதான திராவகத்தை வாங்குவாங்கே. 732

வாங்கையிலே திராவகந்தான் வெளுத்தவண்ணம் வளமையுடன்மறுபடியு மடித்துவாங்கு, தூங்கியேதிரியாதே தூய்யபாலா துப்புரவாய் திராவதத்தை யேழுமுறைவாங்கு, ஏங்கியேயிருக்காமல் திராவகதனை யெழிலானசீசாவிற் பதனம்பண்ணு, சாங்கமுடன் யோகமது சாதிக்குங்கால் சட்டமுடன் திராவகதகின் தண்மைகேளே.

தண்மையாம் திராவதத்தை தாக்குவண்ணம் தகமையுள்ள புலிப்பாணி தயவுள்ளானே, உண்மையுடன் மண்டலந்தானந்தி சந்திவுத்தமனே களஞ்சியது கொண்டாயானல், நண்ணமுடன் வாசியதுமேல்நோக்காது நளினமதுவாராது நடுங்காமேனி, சுன்னமதுகொண்டாலுமொன்றுமில்லை சுந்தரனே திராவகத்தை பதனஞ்செய்யே.

புலிப்பாணிக்கு போகர் ஞானப்பால் ஊட்டல்.

செய்யவே யின்னமொரு புலப்பஞ்சொல்வேன் செயலானபுலிப்பாணி கணிதவானே, வையகத்தில் நெடுங்காலமிருந்துமல்லோ வளமுடனே வுபதேசமனேகங் கொண்டீர், வெய்யவே மருத்துவங்கள் கோடாகோடி மேன்மையுடன் தானடைந்தீர் புண்ணியத்தால், பையவேயுந்தமக்கு ஞானப்பாலை பகருகிறேன் புலிப்பாணிபண்புள்ளானே

பண்பானபுலிப்பாணி பாருள்ளானே பகருகிறேன் ஞானமென்றபாலையப்பா, நண்பான்வேங்கைதனை விட்டிறங்கி நலமுடனே திருப்பாலின் கடலின்மார்க்கம், விண்ணதனில் குளிகையிட்டு யென்பின்னாக விட்டகுறை யிருந்ததொரு புண்ணியத்தால், வண்ணமுடன் பின்றொடர்ந்து வருகவென்று வணக்கமுடன்போகரவர் கூறுவாரே.

கூறுவார் வாய்திறந்துபோகர்தாமும் குணமான புலிப்பாணி தன்னைத்தானும், நாறுமுடலந்தமக்கு வுபதேசங்கள் கற்கதிகள்பெறுவதற்கு நயமதாக, ஆறுபுடைசூழ நகரந்தன்னைநீங்கி வப்பனே திருப்பாலின் கடல்வாவென்று, பேறுடைய சப்தமுடனுஞ் சாடித்துப் பெருமையுடன் சீஷனுக்கு போதிப்பாரே. 737

போதிப்பார் லோகமது மார்க்கந்தன்னை பொங்கமுடன் சாத்திரத்தின் வழிபாடெல்லாம், சாதிப்ப யுலக மெல்லாமாடலாகும்தற்பரன்போ லிருப்பதற்குஞாயமுண்டு, நீதியுடன்வையகத்து மகிமையெல்லாம் நிஷ்களங்கமாக வல்லோடத்தலாகும், ஆதியந்தமான தொருசாதிபேதம் வப்பனே னடத்துவதா முண்மைபாரே. 738

பாரேதான்திக்கெட்டுமாளலாகும் பாராளுமன்னவரை வெல்ல
லாகும், நீரேதான்திக்குவிஜயங்கொண்டதீரன் தீர்க்கமுள்ள பற்கு
ணனைவெல்லலாகும், ஏரேதான்னெழுகடலுங்காணலாகும்சிறப்புட
னேநீரின்மேல்நடக்கலாகும், கூரேதான் மிருகமென்ற ஜாதிதன்னை
குறிப்புடனேயழைப்பதற்கு வசியமுண்டே. 739

வசியமாம்பட்சிகளைபிடித்துவந்து வழக்கமுடன் பாஷைகளைச்
சொல்லலாகும், கிசிதமுடனரவமதை யாட்டலாகும் நிஷ்டூரமான
தொருகொடியபேயை, கசிதமுடன்நன்மையாற் சொல்லலாகும் நல
மானபரிபோகஞ்செய்யலாகும், பசிவந்தபாலனுக்கு பால்கொடுத்த
பாருலகில்கதைபோல முடியுந்தானே. 740

தாரணைவுலகமதையாண்டுமென்ன தாரணியில்கீர்த்தியதுபெற்
றுமென்ன, கோரணைகோவேந்தர்தன்னைப்போலே கொற்றவனே கிரீ
டமதைக்கொண்டுமென்ன, தோரணமாளிகையுங் கட்டியென்ன திக
ழானசமுசாரங்கொண்டுமென்ன, பாரணைபாலகரைபெற்றுமென்ன
பாலகனேஞானமென்ற பால்தான்வேண்டே. 741

பாலானஞானமென்றபாலையப்பா பகருகிறேன்புலிப்பாணிபளி
ங்குள்ளானே, மேலானபதந்தனையே நண்ணவேண்டும் மேதினியில்ப
வக்கடலையகற்றவேண்டும், காலானபதந்தனக்குமேலையப்பா நற்பத
மாம்பொற்பதத்தை நண்ணல்வேண்டும், காலானசிதாபாசப் பொரு
ளையப்பா கருதவேணாக்கமக்குக்கருதுவேனே. 742

கருதவென்றுல்காலில்லைப்பாவுமில்லை கண்மணியே புலிப்பாணி
கவிராஜேந்திரா, திருகமுள்ள திருப்பாலின்கடலின்பக்கம் சிற்பரனே
யென்பாலாசிரியரானே, குருவினதுகாலாங்கி வாக்குபோலே குண
மானவுபதேசமும்பெற்று, பரிதிமதியுள்ளநாளளவுமட்டும் பாலக
னேயுபதேசம் போற்றுவாயே. 743

போற்றவேபுலிப்பாணியுகமுள்ளானே பொங்கமுடன்திருப்பா
லின்நடுமையத்தில், ஆற்றவேகிருஷ்ணவதாரனப்பா அலைகடலில்ப
ள்ளிகொண்டவம்பலத்தில், நாற்றிசையுநாதாந்த சித்தர்தாமும் நடுக்
கமுடன்ரிஷிகளெல்லாம் பார்த்திருக்க, மேற்புறத்தில் போகரிஷிநா
தர்தாமும் மெல்லெனவேவடபாகஞ் சாதிப்பாரே. 744

சாதிக்கவடபாகந்தானிருந்துசட்டமுடன்புலிப்பாணிக்குபதே
சிக்க, மேதினியில்தேவாதிதேவரெல்லாம் மேன்மையுடன் கண்டல்
லோபிரமித்தேங்க, ஆதியென்றபராபரியாள்முன்னேநிற்க அங்ஙனே
வேயுபதேசமனதுவந்து, சோதிமணிமந்திரத்தையுச்சாடித்து சுந்தர
ற்குவுபதேசங்கூறுவாரே. 745

கூறுவாருபதேசமென்னவென்றால் குணமானதிருப்பாலின்கட
லின்மேலே, மாறுபாடானதொருமயத்தைநீக்கி மகத்தான சிதபசா
நிலையில்நின்று, தேறுதலாய்சமாதிமுகம் நிற்கவேண்டும் தேஜொளி
வின்சின்மயத்தையறியவேண்டும், ஆறுதலமென்றதொரு பிரளயத்
தையப்பனேவுச்சரித்து நிலையில்நில்லே. 746

நிலையானநிலைபதுவுமென்னசொல்வேன் நிஷ்களங்கமானதொ
ருகபாலபீடம், கலையானகலையதுவும்பிடகலைபிங்கலையில் கருவானநா
சியதுமையம்பற்றி, மலையானகபாலமென்ற பீடம்பற்றிமகத்தானமூ
லவரைமேலேசென்று, தலையானபஞ்சேந்திரமுள்ளடக்கம் சாற்றுகி
றேன்சிவயோகஞ் சாற்றுவேனே. 747

சாற்றுகிறேன்வாரமது வொன்பதுந்தான்சட்டமுடன் தாடை
த்துமேலேபூட்டி, போற்றியதோர்கும்பகத்தில் நின்றுகொண்டு போ
தனுசத்தியெல்லாம்மனதிலுன்னி, தூற்றியேதான்புடைத்து பொரு
ளாருய்ந்து துப்புறவாய்சிதாபாசக்களையறுத்து, மாற்றியேயவட்சரத்
தைவுள்ளாராய்ந்து மகத்தானவுளவுதனை யறிந்துகொள்ளே .

கொள்ளவேயறுபத்துக்கலைநான்காகக் கோடான கலைவகுத்துக்
கயிரகன்மாட்டி, விள்ளவேசச்சிதாநிலையில்நின்று விட்டகுறைவருநம
ளவும்மேலேநோக்கி, உள்ளதொருபூரணத்தைவெளிகாட்டாமல்வுத்
தமனேவிசித்தியிலேநின்றுகொண்டு, தெள்ளமுர்தமானதொரு ஞா
னப்பாலை தேற்றமுடனூசரத்தி லிருந்துதாக்கே. 749

தாக்கவேயூசரத்தைக்கொள்ளும்போது தகமையுள்ள வனுநத
தையெட்டிவாங்கு, நோக்கமுடன் கேசரத்தைக் கொண்டாயானால்
நுணுக்கமுடன்கலைவகுத்துப் பிரிக்கலாகும், ஆக்கமுடன்சித்தியி
லேயிருந்துகொண்டு ஆண்மையுடன் சுழுத்தியிலே மேலேபாய்ந்து
சாக்கரதைசொற்பனமும் வஸ்தையற்று சட்டமுட னிறுப்பதுவேச
மாதிதானே. 750

ஞானப்பாலறிதல்.

தானான சமாதியிலே நின்றுகொண்டு சட்டமுடன் யோகமது கொள்ளும்போது, கோனான குருநிலையைக்கைநிலையாயூன்றி குவலயத்தில்நடப்பவினையோகவானும், தேனானபேஜொளியின் மயத்தைக்கண்டு தேற்றமுடன் சொக்கியல்லோ போகாமற்றான், பானான பரஞ்சுடரைப்பற்றியல்லோ பரவெளியில்சமாதிவழி சாதிப்பாயே.

சாதிக்கமுச்சுடரை யறியலாகும் சட்டமுடன் நிஷ்டானுபூதிகொண்டு, ஆதியந்தங்கருவிகரமுளவாராய்ந்து வஷ்டாங்கயோகநிலை தன்னிற்சென்று, நீதியுடன் மாயவலைசிக்கறுத்து நிஷ்களங்கமான சுபாநிலையிற்சென்று, சோதியெனு முட்பொருளைமனதிலுன்னி சுந்தரனே கமலமென்ற பீடந்தாக்கே. 752

தாக்கையிலே கேசரத்தில்நின்றுகொண்டு தகமையுள்ளபூரணத்தைப்போற்றிசெய்து, நோக்கமுடன் கும்பத்தின்மேலிருந்து நொடிக்குள்ளே சுவாதிஷ்டானத்தெரிந்து, வாக்குடனே மனோலயத்தையுச்சரித்து, வளமுடனேயஷ்டநிலைபதியிற்சென்று, றூக்கமெனுமிருட்கடலை விட்டகற்றி தூய்யகருணைந்தங் கருவிபூணே. 753

பூணவேகருவியென்றால் ஞானப்பாலை புகழானபவக்கடலைவிட்டகற்றி, தோணவேசின்மயத்தை மனதிலுன்னி தோறாதகடுஞ்சினத்தை சிக்கறுத்து, வேணபடிமுச்சுடரைப் பற்றியல்லோ வேதாந்த மனோன்மணியைத்துதித்துநின்று, நீணவேவைராக்கியகியானமூட்டி நிஷ்களங்கமானதொரு நிலையில்நில்லே. 754

நில்லப்பாபசுபதியாம் பாசந்தன்னை நினையானமவுனமென்றநிலையிற்பூட்டி, வல்லதொரு பிரகாசநிலையில்நின்று வளம்பெறவேசூக்குமத்தின்வேரறுத்து, புல்லவேபாஷாந்திர பேதாபேதம் புகழானகருவிகரணதியந்தம், நல்லதொருசிவானந்தநிலையைப்பற்றி நாட்டமுடன்மனதுவந்து நவிலக்கேளே. 755

நவிலவே சிதாபாசவலையகற்றி நலமுடனே பௌஷிகத்தின்வேரறுத்து, நவிலவேகற்பாந்திர காலமட்டும் கருத்துடனே சச்சிதாநிலையைப்பற்றி, புவிலவேயருட்கடலைக்காண்பதற்கு புகழானயிருட்கடலைவிட்டகற்றி, விலவேவிந்தியாரண்ணியத்தை விருப்பமுடன் கூறுகிறே னுண்மைபாரே. 756

பாரேதான்சன்னியாசி வர்த்தங்கொண்டு பாங்கானகலையகற்றி நிலையைப்பற்றி, சேரேதான்சிவானந்த லாகிரியாலே செம்மலுடன்

குருசம்பிரதாயவர்க்கம், நீரேதான்கற்றறிந்து நிலையில்நின்று நிட்சி தமாம்பொருளதனை விட்டகற்றி, கூரேதான்சசிவர்ண சுயரூபத்தை குணமுடனே யோதுகிறேனின்னந்தானே. 757

தானான மனக்குறங்கைவிட்டகற்றி தண்மையுள்ள யிதிகாசப் பொருளறிந்து, தேனானவமுர்மெனுஞ்சீரகாத்திரம் தெகிட்டாத தெள்ளமுர்தஞானப்பாலே, மானனமதியமுர்தங் கொண்டாற்போல மதகரியாமாணுவத்தையொடுக்கின்று, பானனபத்மமெனும்யுகாந் தப்போரை பற்றறுத்துவிட்டறுத்து பதிவாய்நில்லே. 758

நிற்கையிலேசோதிமயந்தன்னிற்றோற்றும் நீதியுள்ளபாடுதுறை வழிதான்காட்டும், அற்பமென்று நினையாதே யடிவணங்கி அம்பரத் தின்மேலிருந்து அறிவாலுன்னி, சொற்பமதாய்வாசியதைகீழ்நோக் காமல்சோராமல்மனந்தளர்ந்து சூட்சமேகி, உற்பனமாய் உமிநீரை வழலையாக்கி வுத்தமனேநாள்தோறு மமுர்தமுண்ணே. 759

உண்ணவே தேகமெனுங் கோட்டைதன்னில் வுத்தமனே வுட் கோட்டையேழுகோட்டை, நண்ணவேதுவாரமது வொன்பதாகும் நலமானபஞ்சேந்திரியமைந்துமாகும், திண்ணவேயுடல்பொருளாவி யந்தம்தீர்க்கமுள்ளயேழுசுற்று கோட்டைக்குள்ளே, வண்ணமுடன் கலையதுதான் முப்பத்திரண்டு வளமானயிடைகலையின் கலைதான்ரெ ண்டே. 760

இரண்டானகலைக்குள்ளே முப்பத்திரெண்டு யெழிலானகலைய துவுமிதிலடக்கம், திரண்டுமேரேசகபூரகத்தைப்பற்றி தெளிவான கும்பகமுமிதிலடக்கம், கரண்டகம்போலாசாகாசகபாடமாகும்கருவி கரணுதியந்தமிதிலடக்கம், வரண்டதொரு மேல்வீடு மோட்சவீடு வளம்பெரிய வாகாயகோட்டையாமே. 761

கோட்டையாங்கபாலமென்ற கோட்டையப்பாகொடிதானசின் மயத்தின் கோட்டையாகும், பாட்டையுடன்வாசலது வதியையுண்டு பாலகனேசின்மயத்தின்வாசலப்பா, தேட்டையெனும்வமுர்தமப்பா வுமிழ்நீர்தேட்டை தேஜொளிவின்பம்பரம்போல் சுரக்குந்தேட்டை, காட்டையதுகண்டாலுங் காணலாம்பார் காயாபுரிக் கோட்டையின் றன்கருகாணுரே. 762

காணுரேபஞ்சேந்திரியகோட்டைதன்னை கருவானதடங்களது காணமாட்டார், தோணுரேவாசலதுதடங்கண்டாலும்தோருமல்சின் மயத்தின்வழியறிந்து, வீணுளேப்போக்காமல் விட்டில்போலேவியா பித்துக்கருவயர்ந்து விழலாய்ப்போனுர், ஊணுமல் பரஞ்சுடரையென லென்றண்ணி யுத்தமனேபாதைவழி தெரியார்காணே. 763

தானானவட்சத்தை யோதமாட்டார் தன்மையுள்ள குருட்டுவ ழிதன்னிற்சென்று, தேனானமடாலயத்தை வீடென்றெண்ணிதேற் றமுடன் கிருஷ்ணாவதாரனப்பா, பானானகீதையிலேயுபதேசித்த ப ற்குணனுருபதேசம்போலேயப்பா, மானானபத்மபீடம் பெற்றேனெ ன்றுமார்க்கமுடன் தாமுரைத்து கெட்டார்பாரே. 764

கெட்டாரேஞானத்தின்பீடங்கண்டால் கெடியானமோக்ஷவழி காணலாகும், தொட்டாலேசின்மயத்தின்பொருளேதொட்டால்தோ ருமல்கேசதான்பத்தலாகும், விட்டகுறையிருந்தாலும் ஞானப்பால் தான்விருப்பமுடனுந்தமக்கு லபிக்கும்பாரு, தொட்டகுறிபோலது வேதப்பாலா துப்புறவாயுபதேசஞ் செய்திட்டேனே. 765

துருசு செந்தூரக்களங்கு

இட்டேனேயின்னமொரு பாகஞ்சொல்வேன் எழிலானபுணிப் பாணிராஜபாலா, நட்டதொருபயிரெல்லாம் பயிர்தானாமோ நாடத னில்பெற்றதெல்லாம்பாலராமோ, துட்டரென்றால் துட்டராதுஞ்சொ ல்லப்போமோ துரைராஜசுந்தரனே துய்யவேலா, கெட்டவர்கள் நல் லவர்களாவாரோதான் கெடியானவைபகத்தில் மாண்பர்தாமே.

மாண்பானவைபகத்தின் மார்க்கஞ்சொல்வேன் மார்க்கமுடன் முறைபாடு வெவ்வேறுதம், காண்பானகொக்கதுதா னன்னமாமோ தாடாண்மைகொண்டதொருகோழிதானும், ஆண்பானகலாபமென் றமயில்தானாமோ வப்பனேகுன்றின்மணி கெம்பாமோசொல், காண் பானசெக்கதுவும் லிங்கமாமோ தாரணியில்முறைபாடு யின்னங் கேளே. 767

கேளேதான்பணியதுவும் மழைதானாமோ கெடியான மின்மினி தான்விளக்காமோசொல், தாளானபிரிதிவென்றபவளந்தானும் தாக் கானநற்பவளமாகுமோசொல், பாளானசிப்பியதுவெள்ளியாமோபா லானவெள்ளைமணலுப்பாமோசொல், கோளானமாண்பர்களில் நிகர் தான்கூறகொற்றவனே வேணவித்தியாசம்பாரே, 768

பாரேதான் சவுரியங்களதிகமுள்ளோர் பாருலகிலொவருக்கோ ரீடுமுண்டோ, நேரேதானவரொக்க ரிஷிகளாவார் நேர்மையுடனிவ ரொக்கரவரேனாவார், சீரேதான்சீவளங்கள் மிகவும்பாடி சிறப்புட னேபேர்வளங்கள் மிகக்கொண்டாடி, கூரேதான்சித்துமுனிசாத்திர ங்கள்கூறினார்வெகுகோடி வேதைதானே. 769

வேதையாமின்னமொருபாகஞ்சொல்வேன் வேதாந்தத்தாயின துகிருபையாலே, பாதையாம் சமுசாரிக்கானவித்தை பாலகனேயுந் தமக்குப்பகருவேன்யான், சீதையெனும்பெண்ணரசி மாதுபூண்டச் செகசோதிதங்கமதை யென்னசொல்வேன், சூதகற்றி மயக்கறுத்து சுட்டிடாமல் சுந்தரனே சிடிகையென்ற வேதைகேளே. 770

கேளேதான் துருசதுவுஞ் சேர்தானெட்டு கெடியான தாரமது சேர்தானென்று, பாளேதான்போகாமல் கல்வமிட்டுபாலகனேதான றைப்பாய்நாலுசாமம், நீளேதான்செருப்படையில் நாலுசாமம் நிலை யான நுணாமூலிநாலுசாமம், கீளேதான்வேரோடிப் படர்ந்திருக்கும் கெடியானகும்மட்டி மூலிவாங்கே. 771

தாங்கியேதானரைப்பாய் நாலுசாமம் வளமுடனே மாத்திரை யாய்ச்செய்துகொண்டு, தாங்கியேதிரியாதே துய்யபாலாதுப்புரவாய் மாத்திரையைப்பீங்கானிட்டு, ஓங்கியேவெள்ளாட்டுக்கோமியந்தான் உத்தமனேமண்டலந்தானூறப்போடு, சாங்கமுடன் மண்டலந்தான் சென்றபின்பு சட்டமுடன்மாத்திரைதானெடுத்துக் கொள்ளே.

கொள்ளவேமாத்திரைதான் பதனம்பண்ணு கோவேந்தர்புலிப் பாணிபுனிதவானே, விள்ளவேவெள்ளியதுபலந்தான்ரெண்டுவிருப்ப முடன்மாத்திரைதான் துலந்தான்பத்து, எள்ளளவும்பிசகதுவும் நே ராமற்றான் எழிலானவெள்ளிதனைமூசையிட்டு உள்ளபடி வெள்ளிய துவுருகும்போது வுத்தமனே மாத்திரைதான் துலமும்போடே.

போடேதான்மாத்திரைதானுருகியல்லோ பொங்கமுடன்தானி றக்கிவைத்துமல்லோ, நாடேதான்மற்றுநாள் பின்னுமப்பா நலமுட னேமூசைதனையுருகிக்கொண்டு, நீடேதான்பின்னுமந்தமூசைதன்னி ல்நிலையானமாத்திரையை துலந்தானீவாய், கூடேதான்மூசைதனையி றக்கிவைத்து குணமாகமற்றுநாளுருக்கிக்கொள்ளே. 774

உருக்கியேபததுமுறை பத்துநாளப்பா மூனையான மாத்திரை யைகிராசமீவாய், செருக்குடனே பத்துநாளானபின்பு செவ்வையுட ன்மூசைதனையெடுத்துமைந்தா, பெறுக்கவேயாதுவகை ஜெயநீர்தன னில்பேறானவெள்ளிதனை யுருக்கிச்சாய்ப்பாய், சுருக்கமது வாராது வெள்ளிக்கப்பா சுந்தரனேபத்துமுறை யுருக்கியூத்தே. 775

ஊத்தையிலேருண்டசெம்பு வெள்ளிதானும் வுத்தமனேமஞ்ச னென்ற வர்ணங்காணும், நாத்தமுள்ளசெம்பதுவு மூறலேகி நலம

னவெள்ளியது பழுக்கும்பாரு, பார்த்தவர்கள் வாதமென்ற சூதுவித் தை பாருலகில் மகிமைதனை யறிவார்ருதான், நேர்த்தியுள்ள கண் டாது மகிமையாலே நேர்மையுள்ள வெள்ளியது பழுக்கலாச்சே.

ஆச்சப்பாமலைநாட்டுக் குள்ளிருக்கும் வப்பனே ரும்பரென்ற சித்துதானும், பாச்சலுடன்காடுமலை வனந்திரங்கள் பாங்கானகுகை தனிலே யிருந்துகொண்டு, எச்சலதுவாராம லென்னுளோக்கும் மெழி லான கண்டருடவேதைதன்னை, ஆச்சரியமாகவல்லோ செய்துகொ ண்டு வப்பனேகடைமாறி யுண்ணிவாரே. 777

உண்ணுவார் சமுசாரி தம்மிடத்தில் உத்தமனேநிதிவாங்கிபொ ன்கொடுத்து, திண்ணமுடன் மாற்றதுவு மென்னசொல்வேன் துய்ய வெள்ளிபத்தரையுங் காணுங்காணும், எண்ணரிய நற்பொருளைக்கா ணமற்றுன் எழிலானசமுசாரி யெல்லாமாய்ந்தார், பண்ணவெனக்கு மமையது வறியாமற்றுன் பாருலகில்யாருமல்லோ மயங்கினேனே.

மயங்கியதோரெந்தனுக்கு மன்னுகேளு மகத்தானகாலாங்கிகிரு பையாலே, நயம்படவேவித்தையது யானுங்கண்டு நாதாந்தய்த்தொ ளிவினொலியுங்கண்டு, செயம்பெறவே வாதமென்ற வேதைதன்னை சேர்வையுட னுந்தனுக்கு யானுந்தந்தேன், பயப்படனேயென்னுளும் பதாம்புயத்தைப் பணிந்துமல்லோ வசலித்து துதிப்பாய்தானே.

தானனஸ்ரீராமர் கொண்டசீதை தகமையுள்ள ஜானகியாற்றன் றனக்கு, கோனனகோவேந்தர்பதியிலப்பா கொற்றவனேசித்தர்களு முடித்தவேதை, தோனனசெம்பொன்னே தங்கவர்ணம் தேற்றமுட ன்பிறவியென்ற தங்கமாகும், பானனசுயத்தங்கம் நயத்தங்கம் பாரு லகில் நாதாக்கள் மறைத்தார்காணே. 780

காணவேநாதாக்கள் மறைத்ததாலே காலாங்கிநாதருட கிருபை யாலும், தோணவே மனோன்மணியாள் கடாட்சத்தாலும் தோறும யுந்தனுக்கு மனதுவந்து, வேணதொரு நீதிமுறைபாடுகூறி வேதாந் தவுபதேசவுண்மைகூறி, நீணவேயுந்தனுக்கு வுபதேசித்தேன் நீடாழி பதவிதனை யாளுவீரே. 781

## தாளகக்கட்டு வேதை.

ஆளவென்று லின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் வப்பனே புலிப்பாணி யறிவுள்ளானே, நீளவேதாரமது சேர்தானெட்டு நிலையா

னகாரமது சேர்தான்ரெண்டு, சூளவேதுருசதுவுஞ் சேர்தான்ரெண்டுசுந்தரனைசூதமது சேர்தான்ரெண்டு, மீளவேயிவையெல்லாங் கல்வமிட்டு மிக்கானசிவகாரந்தை சாற்றாலாட்டே. 782

ஆட்டவே நாற்சாமமானபின்பு வப்பனே மாற்றிரைதான்செய்துகொண்டு, தாட்டிகமாய் வெள்ளிதனை யுருக்கிமைந்தா சட்டமுடன்சேருக்கு பத்துதாக்கு, நீட்டமுடன் வெள்ளியது வுருகும்போது நிஷ்களங்கமானதொரு மருந்துதன்னை, வாட்டமில்லா சேரதுதானென்றுதாக்கு வளமுடனே வெள்ளியது வுரியும்பாரே. 783

உரியுமேமாத்திரையை வாங்கிக்கொள்ளும் வுத்தமனே மூசைதனையாறவைதது, சரியாகவைந்துநாள் தணியவிட்டு சாங்கமுடன் மறுபடியும் பின்னுமல்லோ, புரியானவெள்ளிதனை மூசையிட்டு பட்சமுடன் தானுருக்கி மருந்தையப்பா, வரியானதணக்குடனே முன்போலப்பா வளமுடனேசேருக்கு ஒன்றுதாக்கே. 784

தாக்கவேமூசையிட்டு வுருக்கிமைந்தா தண்மையுடன் ஞளதுவு மைந்ததாக, நோக்கமுட னிப்படியே பத்துமுறையப்பா நுணுக்கமுடனுருக்கியல்லோ ஆரவைப்பாய், வாக்கதுவும் பொய்யாது காலாங்கிநீதி வளம்பெரிய சித்தர்களு மறைத்ததோஷம், ஏக்கமது கொள்ளாமலெழில்வேந்தர்கள் எழிலுடனே செய்குவதும்பாகமாமே.

பாகமாமிப்படியே பத்துமுறைதிர்ந்த பாலானவெள்ளிதனை யெடுத்துமைந்தா, ஆகமத்தில் முறைபாடு செய்பாடெல்லாம் வப்பனே கண்டுமிகவுளவாராய்ந்து, வேகமுடனுறுவகை ஜெயநீர்தன்னில் வெட்கமுடன் தானுருக்கி சாய்ப்பாயப்பா, பாகமதுபொய்யாது மெய்யேயாகும் பாருலகில் செய்தவர்க்கு சித்திதானே. 786

சித்தியாமிப்படியே பத்துமுறைபாடு சேர்வைகண்டு பதனங்கண்டுவுருக்கிச்சாய்ப்பால், சத்தியவான் காலாங்கிநாதர்வாக்கு சங்கரனைபொய்யாது வேதவாக்கியம், பத்தியுடன் மனோன்மணியைத் தொழுதுபோற்றி பாலகனேமுறைபோலே செய்வாயப்பா, சுத்தியுள்ளவெள்ளிதனை பூதிப்பாருசுந்தரனே மாற்றதுவுஞ் சொல்லொண்ணாதே. 787

சொல்லவென்றால் நாவில்லைப்பாவுமில்லை துரைராஜ சுந்தரனே யெவர்தான்காண்பார், வல்லதொரு சித்தாதிமுனிவர் தாமும் வளம்பெரியசாத்திரத்தில் மறைத்துவைத்த, கல்லான முறைகளெல்லாங்

கருக்கள்காட்டி கருவிகரணுதியந்தம் முடிவுண்டாக்கி, நல்லதொரு முறைபாடுசெய்பாடெல்லாம் நாட்டினிலே மாண்பர்களுக் குரைத்திட்டேனே. 788

உரைத்தேனே தாரமென்ற களங்குமார்க்கம் ஓகோகோநாதாக்கள்கூறவில்லை, வரையான பொருளெல்லாம் மிதிலேதாயும் வளமான மாற்றதுவும்பத்தேயாகும், திரைகடலில் நாதாக்கள் மறைத்ததாலே தீர்க்கமுள்ளவேதைமுகம்யானுங்கண்டு, விரைபோட்டால்சுரையொன்று முளைக்குமோதான் வித்தகனே தாரமென்ற தங்கமாமே.

நாற்பத்தெண்பேர் முனிவர்கள் பதினெண்சித்தர்கள்
நவகோடிரிஷிகள் போகரை வருந்தல்.

தங்கமாமின்னமொருவயணஞ்சொல்வோம்தண்மையுள்ளபுலிப்பாணிதயவுள்ளானே, இங்கிதமாயெந்தனையுஞ் சித்தர்கூடி யெழிலான விண்ணப்ப வருந்தல்தன்னை, சங்கமென்றசபையாறு மனதுவந்து சட்டமுடனெந்தனையும் கேள்விகேட்க, வந்தனமாய்ச்சொன்னதொருவளம்பாடெல்லாம வண்மையுடனுந்தனுக்குவோதுவேனே.

ஓதவேயெந்தனையுஞ் சித்தர்கூடி ஓகோகோநாதாக்கள் கூட்டத்தோடும், நீதமுடனெந்தனையும்வரவழைத்து நீதியுடன்முறைபாடு வழிபாடெல்லாம், தோதகமாய்கட்டுரைத்தார் கோடாகோடி தேருமல்யானுமல்லோ விடைகள்சொன்னேன், போதனைகள்மிகவுரைத்தாரிறங்கிபல்லோ பொங்கமுடன்யானும்மல்லோ விடைதந்தேனே.

தந்தேனே விடையதுவு மென்னவென்றால் தகமையுள்ளரிஷிகூட்டமுனிவரெல்லாம், சொந்தமுடன் வாதாடிவுறவுகொண்டுசோருமலெந்தனுக்குயிதவுகூறி, வந்தனங்கள் மிகச்செய்து வஞ்சவித்து வளம்பெரியகாலாங்கிநாதசீஷா, இந்தவரைநெடுங்காலங்கோடிகாலம் இகபரமுங்கண்டறிந்த சித்துபாரே. 792

பாரேதான் வையகத்தின் மகிமையெல்லாம் பட்சமுடன்காலாங்கிநாதர்தாமும், சீரேதானுந்தமக்கு வுபதேசங்கள் செய்துவைத்தபடியாலே தோஷமில்லை, நீரேதான் குளிகையது பூண்டுகொண்டு நீடாழியுலகமெலாஞ் சுற்றிவந்து, கூரேதான் மகிமையெல்லாமறிந்துகொண்டீர் கொற்றவனூர்காலாங்கி கடாட்சந்தானே. 793

தானனமகிமையெல்லாமரிந்தாலுந்தான் தாரணியிலொருபோதுந்தோஷமில்லை, தோனனவுபதையர் காலாங்கிநாதர் கொற்றவனூர்

குருபாத கடாட்சத்தாலே, தேனான சாத்திரத்தின் முறைபாடெல்லாம் தெளிவுடனே சிக்கருத்து சத்தகாண்டம், பானுசூரியன்போலேழாயிரந்தான் பாடிவைத்தீர் சினபதிமாண்பருக்கே. 794

மாண்பானசாஸ்திரத்தை யுந்தன்சிஷன் மகத்தானபுலிப்பாணிக்குபதேசித்தீர், ஆண்மையுள்ளசித்தாதி சித்தரெல்லாம் அவர்பேரில்மெத்த மனஸ்தாபமுண்டு, வீண்போன்ற சாத்திரமாயிருந்தா லல்லோ விருப்பமுடனவர்தமக்கு வுபதேசிக்க, தாண்மையுள்ள சாத்திரந்தான் சத்தகாண்டம் தாரணியில் மருத்துவங்கள் மெத்தவுண்டே

உண்டானசாத்திரத்தை யவர்க்குமல்லோ வுத்தமனே மனதுவந்துவுபதேசித்தீர், கண்டாலும் விடுவரோ ரிஷிகள்தாமும் கருவான மகிமையென்ற வேதைமார்க்கம், சண்டமாருதம்போல யுலகவாழ்கை சட்டமுடன் வெகுகோடி யூதிவிட்டு, மண்டலத்தில் மகிமையெல்லாம் வெளியிட்டாக்கள் மாண்பர்களு மொருவருந்தான் மதியார் தானே. 796

தானானசத்தகாண்ட மேழாயிரந்தான் தகமையுடன் கூறிவிட்டீர் தோஷமில்லை, பானான யெண்ணாயிரஞ் சாத்திரத்தைப் பகரவேண்டாம் புலிப்பாணிநாதருக்கு, தேனான சாத்திரத்தை மனதுவந்து தேற்றமுடன் மேருகிரிதன்னிலப்பா, கோனான குகைதனிலே வைத்தாலல்லோ கொற்றவனேலோகமெலா மதிப்பார்தானே. 797

மதிப்பான சாத்திரத்தை வெளியிலிட்டால் மகதேவரானவருமொருவருண்டோ, துதிப்புடனே யொருவருந்தான் தன்னைதானும் துப்புரவாய் மதிப்பாரு மாருமில்லை, விதிப்படியே விட்டகுறை யிருந்துதானல் விருப்பமுடன் வினயம்வந்து கிட்டும்பாரு கதிபெறுவரெண்ணாயிரங்காவியத்தால் காசினியிலதிதமென்ற மார்க்கம்பாரே.

பாரேதான்காண்ட மேழாயிரத்தில் பாருலகில்வெகுகோடி வதிசயங்கள், நேரேயொன்சித்தாதி கூட்டத்தோடு நேர்மையுடன் பாடிவைத்த நுணுக்கமெல்லாம், சேரேதான்கிட்டிருந்து வளவுகொண்டு சேனரக்கியங்களெல்லாம் வெளியாய்விட்டீர், ஊரேதா னுலகமெலாமிதிலடக்கம் உத்தமனேயேழாயிரம் பாடல்தானே. 799

பாடலாய்மறைத்துவைத்த சங்கையெல்லாம் பாரிலுள்ளமாண்பர்களுங் கண்டுகொள்வார், தேடவே சாத்திரத்தைப் புனிதவானே தேற்றமுடன் புலிப்பாணிக்குறுதிகூறி, ஆடவேயம்பலத்தில்நல்லோர்தம்மை அறிவுடையோர் சிவயோகமாண்பருக்கு, கூடவேசாத்திரத்தை தேர்ந்துமல்லோ குணமானவெகுபுததி கூறுவீரே. 800

கூறுவீர்யிதிகாசபுத்திசொல்லி குவலயத்திலாள்கண்டுபதமுங்
கண்டு, தேறியமேதார்சிறுபாலராலுந்தான் தேற்றமுடன்புத்திமதி
மிகவுரைத்து, சீறியேகட்டளைக்குமிஞ்சிடாமல் மிக்கமனதுவந்து
வல்லோமதிகங்கூறி, ஆறியேயாசினமதுவெமிகவகற்றி வப்பனேநூல்கொ 801
டுத்துப்பாதனஞ்சொல்லே.

சொல்லவேபுலிப்பாணிக் குண்மைகூறித் சோருமல்மனத்திட
முமக்கன்றாய்ச்சொல்லி, வெல்லவே வரவ க்குத்தக்கதாக வேதாந்த
சின்மயத்தையோதச்சொல்லி, புல்லவேசாத்திரத்துக்குறுதிசொல்லி
புகழானசத்தியங்கள்வாங்கியேதான், நல்லதொருசாத்திரத்தைத்தந் 802
திரானல் நலமாகயிருக்குமென்றுநவின்றிட்டாரே.

நவின்றதொருவாக்கதுவும்பிசகாமற்றான் நாதாக்கள்சொல்லுத
ற்குயிடையூறின்றி, குவின்றிடவேபுலிப்பாணிபுனிதவானே குவலய
த்தில்பத்தியுண்டாய்மாண்பர்கண்டு, தவின்றிடவேவிதியாளிகுணமு
ங்கண்டுதக்கபடி நூலீய்ந்தால்தருமமாகும், புவின்றிடவேயுந்தனது 803
மனதுபோலே பூதலத்தில்நடப்பதுவுங்கடாட்சந்தானே.

தானானகாலாங்கிநீதிபோலேசட்டமுடன்போகரேழாயிரத்தை
கோனானவையகத்தில்யாருமப்படி கொற்றவனேயுந்தனுக்குவுபதேசி
த்தேன், தேனானசாத்திரத்தைபாதுகாத்து தேசத்தில்கொடுப்பதுவு
முந்தன்பாரம, பானானகருமிகட்கு கொடுப்பாயானால் பாலகனே 804
பாவம்வந்துபெய்துப்போமே.

பாமேதானின்னமொருமார்க்கஞ்சொல்வேன்பாங்கானபுலிப்பா
ணிபாலிங்குள்ளானே, நேரேதானவரவர்கள்மகிமைதன்னை நேர்மை
யுடன்சொல்லுகிறேனுண்மையாக, சீரேதான்சித்தரெல்லாமொன்றா
ய்க்கூடி சிறப்புடனேகாலாங்கிநாதர்தம்மை, வீரேதான்சீனபதிதன் 805
னிற்றகி விருப்பமுடன்மனதுவந்துவந்திட்டாரே.

வந்தாரேகாயாதிகொண்டசித்து வளம்பெரியசீனபதிமார்க்கந்த
ன்னை, அந்தமுடன்காலாங்கிசமாதிபக்கல்வற்புதமாய்வெகுகோடிநா
தர்தாமும், சொந்தமுடனெனைதையர்காலாங்கிநாதர்சுடரொளியைக்
காணவென்றுமனங்களித்து, விந்தையாய்வுபதேசம்பெறவேநண்ணி 806
விருப்பமுடன்சமாதியிடம்வந்தார்தானே.

தானானநெடுங்காலஞ்சமாதிருந்ததன்மையுள்ளநாதாக்கள்ரிஷி
கள்தாமும், கோனானவெனைதையர்காலாங்கிநாதர் கொற்றவனார்முன்

பாகவினயங்கூறி, தேனுனமகத்துவங்களிதிகாசங்கள் தேற்றமுடன் செய்ததல்லோ மேவல்செய்தார், பானுனபரஞ்சுடரா மெந்தன்நாதா பட்சமுட னதிசயத்தைக் கண்டிட்டாரே. 807

பூதானந்த சித்தர் மகிமை.

கண்டாரேயின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் கனகாதிபூஷணமே கல்விவானே, அண்டமதிலாகாயந் தன்னிலல்லோ வப்பனே மகாபூதாநந்தநாதர், உண்டைவில்லு கவுண்டேகுமகாயத்தில் வுத்தமனே யந்தமட்டுஞ் சொல்வேனென்று, கண்டிதமாய்க்காலாங்கி வாக்குத்தந்து கனமுடனே வாசியோகம் நடத்தினரே. 808

வாசியைத்தானடத்திபூதநாதர் வளமானகேசரத்திளம் பரத்தில், மாசியெனுமண்டலத்திலேகியல்லோ மன்னவனுர் மண்டலந்தானங்கிருந்து, காசிபதிகடலோரந் தன்னிற்சென்று கனமானசீனபதியருகில்வந்து, தேசியெனும் வாசியைத்தானடத்தியல்லோ தேற்றமுடன்சீனபதியிறங்கினரே. 809

இறங்கினர்நாற்பதுநாள் மண்டலந்தான் யெழிலானவாகா சந்தனிலிருந்து, சிறந்ததொரு வாசியைத்தானடத்தியல்லோ சிறப்புடனேவையகத்தோர் காணவென்று, பறந்துமேவையகத்தி லிறங்கியேதான் பாங்கானகாலாங்கி சமாதிமுன்னே, இறந்ததொரு சவம்போலேவிழுந்தாரல்லோ யெழிலாகபூதநாத சித்துதானே. 810

சித்தானசித்துமுனி நாதர்தாமும் சிறப்பானகாலாங்கி தம்மிடத்தில், பத்தியுடனஞ்சலிகள் மிகவுஞ்செய்து பான்மையுடன் சிரங்குனிந்து கரங்குவித்து, முத்திபெற யெந்தனுக்கு வுபதேசங்கள் முனிவரே செய்யவென்று வடிபணிந்து, சத்தியமாயெந்தனைத் தாஞதரிக்க சட்டமுடன் கடாட்சமது வருள்செய்வீரே. 811

அருளானவருளதுவும் பெற்றுமல்லோ வன்புடனே பூதநானந்தசித்து, இருளானயிருளகற்றி மையம்பூண்டு யெழிலானசீனபதிவிட்டுமல்லோ, குருவானடமரகனுந்தனுரை குறிப்புடனே காண்பதற்கு மனதிலெண்ணி, திருவானஜோதிமயந் தன்னைக்காண தீர்க்கமுடன்தென்பொதிகை வந்திட்டாரே. 812

கருவூரார் மகிமை.

வந்தாரேயின்னமொருமார்க்கஞ்சொல்வேன் வளமானபுலிப்பாணிவறிவுள்ளானே, இந்தமானிலத்தில் வெகுவதிசயங்கள் யெழிலானசித்துமுனி கோடாகோடி, சுந்தரனுர்காலாங்கிநாதர்பக்கல் துப்புர

வாய்வந்தவர்கள்லக்கோயில்லை, விந்தைகளுமிகச்செய்தார் ரிஷியாா தாமும்விண் ணுலகுகருவூரார் சித்துபாரே. 813

பாரப்பாபுலிப்பாணி பண்புள்ளானேபாலகனே யெந்தனிரும ணியேகேண்மோ, ஆரப்பாவாகாயமண்டபத்தில் வப்பனே நட்சத்தி ரவளவுமட்டும், நேரப்பாவாசியைத்தானடத்தியல்லோ நேர்மையுட னுகாயஞ்சென்றுரில்லை, கூரப்பாகருவூரா னென்றசித்து கொற்றவ னேவாகாயஞ்சென்றுர்காணே. 814

காணவேகருவூராரென்றசித்து காசினியில்மகிமைவெகுகண்ட சித்து, தோணவேநடேசரைத்தானுண்டுசெய்த தோருதகருவூராரெ ன்றசித்து, மானமரும்கல்வியுள்ளசித்தரெல்லாம் மானிலத்தில் மதி ப்பதற்குக்கீர்த்திகொண்ட, ஆணவமாங்காமியத்தை விட்டொழித்த வப்பனேகருவூராரென்றசித்தே. 815

சித்நானசித்துமுனிகருவூரார்தான் சிறப்பானகாலாங்கி நாதர் முன்னே, சுத்தமுடன்காலாங்கிநாதர்தம்மை சுந்தரனூர்சீனபதிசமா திதன்னில், வித்தகனூர்பார்த்திருக்க மகிமைபூண்டு விண்ணுலகமா காயஞ்செல்வேனென்று, புத்தியுடநட்சத்திரவளவுமட்டும்பரஞ்சுட ரேசெல்வேனென்றுயேகினூரே. 816

ஏகவேவாசியோகஞ்செய்துகொண்டு யெழிலான நட்சத்திரம ண்டலத்தில், போகவேமனவுறுதி கொண்டுமல்லோ பொங்கமுடன் மூன்றுமண்டலந்தானப்பா, சாகாமல் ஆகாயமண்டலத்தில்சட்டமு டன்மூன்றுமண்டலமிருந்து, வேகமுடன்வாசியோகஞ் செய்துகொ ண்டுவேட்கையுடன் பூமிதனிலிறங்கிட்டாரே. 817

இட்டாரேகருவூராரென்றசித்து யெழிலானவையகத்தின் மகி மைகோடி, சட்டமுடன்செய்தல்லோ யாகம்பூண்டு சதுராகநெடுங் காலந்தாமிருந்தார், திட்டமுடன்காலாங்கிநாதர்தாமும்தீர்க்கமுடன் கருவூரார்தன்தனக்கு, வாட்டமுடன்முதலியதோர் மகிமையெல்லா ம்வளமுடனேயுபதேசஞ் செய்தார்பாரே 818

சுந்தரானந்தர் மகிமை.

பாரப்பாபுலிப்பாணிபளிங்குள்ளானே பகருகிறேன் சித்தருட மகிமைதன்னை, ஊரப்பாசீனபதிம்தசந்தன்னில் வுத்தமனூர்காலாங்கி நாதர்தம்மை, சேரப்பாசமாதியிடஞ்சென்றுமல்லோ செம்மலுடன் காலாங்கிதம்மைக்காண, ஆரப்பாவென்றல்லோ காலாங்கிநாதர் வப் பனேமனதுவந்து கூறென்றுரே. 819

கூறென்றசொல்லுகையில் சித்தரானகுணமானசுந்தரா னந்தமூர்த்தி, தேறலுடன்யாரென்றுவினவிக்கேட்ட தெளிவானகாலாங்கிநாதர்தாமும், மாறலதுவாராமல்சித்தர்தாமும் மகத்தானகாலாங்கிநாதருக்கு, ஆறலுடனஞ்சலித்துமனதுவந்து வப்பனேசுந்தரனென்றிட்டாரே. 820

என்றுரேசுந்தராநந்தமூர்த்தி யெழிலானகாலாங்கி நாதருக்குவென்றிடவேயென்தேவாலோகநாதா விருப்பமுடன்தங்களிடம்மனங்களித்து, சென்றுநான்வந்தேனே சீனதேசம்செம்மலுடனடியேனைப்பாதுகாத்து, குன்றுனவுபதேசமெந்தனுக்கு கொப்பெனவே கூறுமென்று பணிந்திட்டாரே. 821

பணிந்துமேசுந்தரானந்தர்தாமும் பட்சமுடன்காலாங்கிநாதருக்கு, துணிந்துமேயெந்தனதுமகிமைதன்னை துப்புரவாய்க் காட்டுகிறேன்குருவேந்தாகேள், கணிதமுடன்மேகமண்டலத்தில்யானும் கர்த்தாவேவாசியோகஞ்செய்துகொண்டு, பணிவுடனேவாகாசஞ் சென்றுவல்லோர்பாக்குடனேமேகத்தோட்டகுவேனே. 822

ஏகுவேன்மேகத்தோடிணக்கமாகி யெழிலானதிருப்பாலின்கடலின்மேலே, போகுவேன்மேகங்கள் ஜலந்திரட்டி பொங்கமுடன் தானிறங்குங்காலந்தன்னில், தாடனேமேகமதுவாகாசத்தில் தகமைமையுடன்செல்லுமதுபக்கமெல்லாம், வாகுடனே ஆகாசந்திரிந்துயானும்வளமுடனேநெடுங்கால மிருப்பேன்தானே. 823

தானனபூமிசஞ்சாரமில்லை தண்மையுடன்மேகத்தில்மேகமாக, கோனனமண்டலத்தில் நெடுங்காலந்தான் கொற்றவரேவாசியோகஞ்செய்துகொண்டு, தேனனமனோன்மணியைத் துதித்துமல்லோதேற்றமுடன்நெடுங்காலந்தானிருந்தேன், பானனபரஞ்சுடரே சொரூபாநந்தாபரம்பொருளே வுபதேசம் பகருவீரே. 824

பகரவென்றசுந்தரானந்தர்கேட்ட பாருலகிலிதிகாச மகிமைகண்டு, நிகரமுடனிவர்தமக்கு வுபதேசங்கள்நீதியுடன்கூர்வதற்குமனங்களித்து, உகரமென்றவட்சரத்தை யுபதேசித்துவுத்தமனார்சுந்தரநந்தருக்கு, ககாமுடன்யரகமுதல் வுயிர்களெல்லாம் கருவானவட்சரத்தைஓதினாரே. 825

ஓதவேயஞ்சலிகள் மிகவும்பெற்று வுத்தமனார் சீனபதிகண்டுமல்லோ, நீதமுடன்விடையதுவும் பெற்றுமல்லோ நிலையானதம்பதிக்கு பேகினார்காண், சேதமதுவாராமல் சித்துதானும் ஜெகதலத்தில் நெடுங்காலமிருந்தாரல்லோ, மீதாதமுள்ள சித்தாதிசித்தரெல்லாம் தோருமல் யென்குருவைக் கண்டிட்டாரே. 826

போகர் புலிப்பாணிக்கு பாஷாணவிளைவுகள் கூறல்.

கண்டாரே யின்னமொரு கருமானங்கேள் கைலாசபுலிப்பாணி கருவுள்ளானே, அண்டரண்ட தேசமெல்லாஞ் சுற்றிவந்தேன் வப்பனே பாஷாணவிளைவுகண்டேன், துண்டரிகமானதொரு விளைவுமார்க்கம் துப்புரவாயான் கண்டுவிடமுங்கண்டேன், சண்டமாருதம்போலவிளைவுகண்டேன் தண்மையுள்ள பாஷாணவிளைவுகேளே. 827

சுருமாக்கல் விளைவு.

கேளப்பாசுருமாவின் விளைவுமார்க்கம் கெடியானடில்லிக்கு மேற்கேயப்பா, ஆளப்பாபூமியெல்லாஞ் சுருமாவாகும் வப்பனேநீலாஞ் சக்கல்லுதானும், கேளப்பாவாராது அஞ்சனக்கல் கொற்றவனே சுருமாவின்கீழ் மட்டந்தான், மீளப்பாவஞ்சனமாம் பாறையல்லோகெடியான கல்லினுட பூமியாமே. 828

கெந்தக விளைவு.

பூமியாம்டில்லிக்கு கிழக்கேயப்பா புகழானகெந்தகத்தின் பூமியாகும், சாமியருகிருமையினுல் விளையுங்கெந்தம் சதுரானசித்தர்களுக்குகந்தகெந்தி, வாமிசிவகாமியம்மாள் வீற்றிருக்கும் வளமானசிவப்பு கெந்தியங்கேயுண்டு, நாமிகவேகுளிகைகொண்டு சென்றேனப்பா நலமான டில்லிக்கு கிழக்கேதானே. 829

கிழக்கானபூமியப்பா நெடுந்தூரந்தான் கிளையானவாறுண்டு சுனைதானுண்டு, பழக்கமதாய் மாண்பர்களும்போனதில்லை பாங்கானகுறும்பருட நாடேயாகும் அழகானபூமியது சொல்லொண்ணுதுவப்பனே கெந்தகந்தான் விளையும்நாடு, தழலானசெடிமரங்கள் பூண்டுமில்லை தாரணியைக் குளிகைகொண்டு கண்டிட்டேனே. 830

தாளகவிளைவு.

இட்டதொரு கிழக்குக்குத் தெற்கேயப்பா யெழிலான திருச்சங்கு மைந்தனல்லோ, சட்டமுடனிண்டிருந்த ராச்சியத்தின் சதுரானமேற்புறத்தி லேறைடையப்பா, வட்டமுள்ள பூமியதுநெடுந்தூரந்தான் வளமானதாளகத்தின் பூமியாகும், திட்டமுடன் பூமியெல்லாந்தாளகந்தான் திரமானநடுமையேறி தாரமாமே. 831

அரிதானவரிதார மென்னசொல்வேன் வப்பனேவதின் மேமை ஞேசிலையுமாகும், சரிதானவிளைவல்லோ பூமியெல்லாம் சாங்கமுடன் தாளகத்தின் பூமியாகும், பரியானதங்கமது விளையும்நாடு பாருலகில் நாதாக்கள் கண்டதுண்டு, திரிலோகந்தான் மதிக்கும்தங்கமப்பா தீர்க்கமுடன் விளைகின்ற நாடுதானே. 832

கற்பரிபாஷாண விளைவு.

நாடானநாடதுதான் சொல்வேனப்பா நலமானபுலிப்பாணி கண்புள்ளானே, காடானகாடெல்லாம் யான்திரிந்து கனமான குளிகையது கொண்டுமல்லோ, மேடானபூமியது திரிந்துமேதான் மேன்மையுள்ள கற்பரிபாஷாணங்கண்டேன், தாடாண்மையுள்ளதொரு பாஷாணத்தால் தாரணியில் தங்கமிகச் செய்யலாமே. 833

செய்யவேகற்பரி பாஷணந்தன்னால் செயலானநவலோகம் வெல்லலாகும், துய்யதொருநவலோம் நீறிப்போகும் துப்புரவாய் லோகங்கள் சத்துருவேயாகும், வெய்யவேநடுமையந் தன்னிலப்பா வேட்கமெனுமவல் பாஷாணந்தானாகும், பையவேயதின்கீழ தானிருக்கும் பாங்கான ஜலபாஷாணந்தான்பாரே. 834

காயகற்ப அயச்செந்தூரம்

பாரப்பாயின்னமொரு பரிகாரந்தான் பாலகனேஸ்நூலமதுவுறுதிசெய்ய, ஆரப்பாமணலிரும்பு கொண்டுவந்து வப்பனேவுருக்கியல்லோதகடடித்து, சீரப்பாமுன்சொன்ன பாஷாணத்தை சிறப்புடனே நிம்பழத்தின்சாற்றினாலே, ஊரப்பாமூன்றுவகை பாஷாணந்தான்வுத்தமனே தானரைப்பாய் சாமம்நாலே. 835

நாலானசாமமது தானரைத்து நலமானயிரும்பதனைத் தகடதாக்கி, பாலானசரக்கெல்லாம்மேலேபூசி பட்சமுடன்ரவிதனிலே காயவைத்து, மாலானசில்லிட்டுச் சீலைசெய்து மார்க்கமுடன் கோழியென்றபுடந்தான்போடு, சூலானவயமதுவும் களங்கமாகி துப்புரவாய்த் தானிருக்கும் வயந்தான் காணே. 836

காணவேயவரெலாந் தானெடுத்து கருவாகபுடமதுவாய்ச்சேர்த்துக்கொண்டு, தோணவேகடைசரக்கு செப்பக்கேளீர் தோருமல்கெவுரியென்ற வீரந்தானும், மாணவேகெந்தகமும் லிங்கந்தானும் மகத்தான சிங்கியுடன்பூரமாகும், நீணவேவகை வகைக்குப் பலந்தான்காலாய் நிஷ்களங்கமாகவல்லோ பழச்சார்தானே. 837

தானானசாறதுவும்பிழிந்துகொண்டு தண்மையுள்ளவயப்பொடியாங்களங்குதன்னில், தேனானசெம்பழத்தின்சாற்றினாலே தெளிவறவேதானறைப்பாய்நாலுசாமம், பானானவில்லையதுலகுவாய்ச்செய்து பாலகனேரவிதனிலேகாயவைத்து, மானானவோட்டிலிட்டுச்சீலைசெய்து மகத்தானமண்மறைவிற்புடத்தைப்போடே. 838

போடேதானிப்படியேபுடந்தான்போடு பொங்கமுடன்தானறைத்துவில்லைதட்டி, நீடேதான்முன்னுரைத்தபாகம்போலே நீதியுடன்வில்லைதட்டிக்காயவைத்து, கூடேதான்சில்லிட்டுச்சீலைசெய்து கொற்றவனேகோழியென்றபுடந்தான்போடு, போடேதான்மண்மறைவிற்பத்துமுறைபோடு பொலிவானவயமதுவுஞ்சிவக்கும்பாரே.

சிவக்குமேஅயமதுவும்பாஷாணத்தால் சிறப்புடையகுற்றமது பதினொன்றம்போம், தவப்பலனைக்கொண்டவர்க்குச் சித்தியாகும் தகமையுள்ளமணலிரும்புசெந்தூரந்தான், தவப்பலனைக்கொண்டோர்கள்காணமாட்டார் வப்பனேபுத்தியுள்ளபுனிதவானே, பவக்கடலைவிட்டகற்றிப்பாளையும் பாருலகில்யிருப்பதுவேபுண்ணியமாமே.

செந்தூரமனுபானம்.

புண்ணியனாயிருக்கவென்றால் பூபாலாகேள் புகழானசெந்தூரமுண்பதற்கு, திண்ணமுடன்தேனதனில்மண்டலந்தான் தீரமுடன்தானருந்ததேகங்கற்றூண், வண்ணமுடன்வாசியது மேல்நோக்காது வளமானசெந்தூரந்தானுமல்லோ, நண்ணமுடன்சட்டையதுதள்ளும்பாரு நாதாந்தசித்தர்கள்தானாடுங்கூத்தே. 841

கூத்தானசெந்தூரம்மண்டலந்தான் குறிப்புடனேகொண்டவர்க்குப்பலனைக்கேளு, நீத்தமுடன்நெடுங்காலமிருக்கலாகும்நெடியானரோகமதுகடலேபோகும், சாத்தகியாழ்வார்தானுங்கொண்டகற்பம் தாரணியில்வெகுகாலமிருந்தாரல்லோ, பூத்தமலர்முகசுகுணமாதர் தம்மை புகழாகவாயிரம்பேர்கூடலாமே 842

கூடலாங்கிருஷ்னாவதாரனல்லோகொற்றவனார்சிலகாலமுண்டகற்பம், ஆடலாம்தேசவிளையாட்டையெல்லாம் வப்பனேவயமென்றசெந்தூரத்தால், ஓடலாம்வெகுதூரம்நடக்கலாகும் வுத்தமனேநடந்தாலும்யிளைப்போயில்லை, தேடலாம்வெகுகோடிதிரவியங்கள் தேடினால்பலனொன்றமில்லைதானே. 843

இல்லையேசெந்தூரம்வேதைகாண வெழிலானவெள்ளியதுகளஞ்சிநூறு, தொல்லையெதுவும்பிறவியதுமாற்றம்போல தோருமல்வர்

ணமதுசொல்லப்போமோ, கொள்ளைதுவுலையில்வைத்துவுருக்கியல் லேகொற்றவனேசெந்தூரங்களஞ்சிதாக்கு, வல்லதொருவெள்ளிய துபழுப்புமாகி மம தானயேமமதுசொல்லொணுதே. 844

ஒண்ணுததங்கமது மாற்றுசொல்லேன் ஓகோகோநாதாக்கள் மறைத்துவைத்து, தண்ணமுடன்மாற்றநுவோலக்கோயில்லை தாடா ண்மைகொண்டதொருவுறத்ததங்கம், பண்ணுதற்குவிட்டகுறையில் லாவிட்டால்பலிக்குமோபாராளும்மாண்பருக்கு, எண்ணமுடன்மன துவந்துயிந்தபாகம் யெழிலாகச்செய்பவர்க்குப்பலிக்குந்தானே.

பலிக்குமேயித்தங்கம்பிறவித்தங்கம் பாரிலுள்ளசிவயோகிக்கா னதங்கம், ஒலிக்குமேஜெகஜோதியானதங்கம் வுத்தமனேகருமிகட்கு வாய்க்காதப்பா, நலியாளர்தங்களுக்குயிந்ததங்கம் நாதியற்றபேர்க ளுக்குநவிலவேண்டும், பலியாதுகருமிகளாயிருப்பாராகுல் பாருலகி ல்கருமிகட்குவாய்க்காதன்றே. 846

மகாசிடிகை அயச்செந்தூரம் சமுசாரிக்கானவேதை.

அன்றானயின்னமொருபோக்குசொல்வேன் வப்பனேபுலிப்பா ணியன்புள்ளானே, குன்றானசெந்தூரமென்னசொல்வேன் குறிப்பா னவயமதுவும்பலந்தான்பத்து, வெனறிடவேசிம்பழத்தின்சாற்றிலே விருப்பமுடன்சுத்தியதுசெய்துமல்லோ, நன்றாககல்வமதிலிட்டு மைந்தா நலமுடனேதானறக்கமருந்தைக்கேளே. 847

கேளப்பாமுருங்கைவேர்பட்டைதன்னை கிருபையுடன்தானிடி ததுசார்பிழிந்து, பாளப்பாபோகாமல்பத்துசாமம் பாங்குடனேதா னரைப்பாய்சுன்னநீரும், ஆளப்பாபலமதுவுமொன்றேயாகும் வப்ப னேதான்போட்டுவறைத்துமல்லோ, சூளப்பாவில்லையதுவைதுவாய்ச் செய்துசுந்தரனேரவிதனிலேகாயப்போடே. 848

காய்ந்தபின்புபில்லையதையெடுத்துமைந்தா கருவாகவோட்டிலி ட்டுச்சீலைசெய்து, வாய்ந்ததொருபுடமதுவும்கெஜமேயாகும் வளமுட னேபோட்டபின்புயெடுத்துப்பாரு, தீய்ந்துமேபோகாமல்செந்தூர ந்தான் தீர்க்கமுடனருனைதுநிறம்போலாகும்,மாய்ந்துமே அயமதுவு ம்மடிந்துமல்லோ மகத்தானசெந்தூரஞ்சொல்லொணுதே. 849

சொல்லவென்றால்நாவில்லைப்பாவுமில்லை துப்புரவாய்நாதாக்கள் மறைத்தசித்து, வெல்லவேயிவ்வேதையார்தான்செய்வார் விதியாளி செய்வாரேமற்றோர்காணுர், புல்லவேசெந்தூரமகிமைதன்னை பூதலத் தில்மாண்பர்களுங்கண்டதில்லை, அல்லவென்றால்செந்தூரங்கோடிபா கம் வப்பனேகண்டதுண்டுமெத்தகாணே. 850

காணவேசெந்தூரம் மண்டலந்தான் கருவாகவொண்டவர்க்குப் பலனைக்கேளு, தோணவேதேனதனில் கொண்டாலல்லோதோருமல் தேகமது யிருக்கும்பாரு, வேணதொரு ரோகமெல்லாம்நீங்கியல்லோ விரைக்குமே நரம்பதுவுந் துடிப்புமெத்த, பாணமெனு மன்மதனர் வேகந்தன்னை பாலிக்கும் வயத்தினுடவீரங் காணே. 851

வீரமாம் வாசியதுமேலோடாறு வீருனநரம்புகளு முறுக்குமேறி, சாரமுடன்தேகமது வலுவுமெத்த சட்டையது மூன்றுவிசை தள்ளும்பாரு, கோரமென்ற தேகமதுவழகுமீறி கொற்றவனேநெடுங்கால மிருக்கலாகும், பாரமென்ற வயமதுவுஞ் சொல்லப்போமோ பாராளுஞ் சித்தர்முனி வேதையாச்சே. 852

வேதையாமின்னமொரு போக்குசொல்வேன் வேதாந்தபுலிப்பாணி புண்ணியவானே, பாதையாம்மதிதனிலே பத்துக்கொன்று பட்சமுடன்தானுருக்கி குருவொன்றிய, சோதனைக்கு யிடையாது வுறத்ததங்கம் சோராமல் லிங்கமிட்டு வூதிப்போடு, வேதைமுறைச் சொன்னவழிதப்பாதப்பா வேதாந்த சித்தினுட வுண்மைபாரே.

சிடிகை அயச்செந்தூரம்.

உண்மையாமின்னமொரு பாகஞ்சொல்வேன் வுத்தமனே புலிப்பாணி புனிதவானே, திண்ணமுட னயமதுவும் பலந்தான்பத்து திறமான நிம்பழத்தின்சாற்றினாலே, வண்ணமுடன் தானரைப்பாய் நாலுசாமம் வாகுடனே பழுவியல்லோ வயமெடுத்து, கண்ணமுடன் கல்வமதிலிட்டுமைந்தா தகமையுடன் பழமதுதான் செப்பக்கேளே.

செப்பவென்றால் கருநாகப்பழரசத்தால் செம்மலுடன் தானரைப்பாய் நாலுசாமம், ஒப்பமுடன் முப்பூவுங்களஞ்சிசேர்த்து வுத்தமனே தானரைத்து பில்லைதட்டி, தப்பிதங்கள்வாராமல் ரவியில் வைத்து சட்டமுடன் சில்லிட்டுச்சீலைசெய்து, மெய்ப்புடனேசோழியென்ற புடந்தான்போடு மேலானசெந்தூர மாகுந்தானே. 855

தானனசெந்தூரந் தனையெடுத்து தண்மையுடன் முன்போல கல்வமிட்டு, தேனனகருநாகப் பழரசத்தால்தேற்றமுடன் முன்போலகல்வமிட்டு, தேனனகருநாகப் பழரசத்தால் தேற்றமுடன் தானரைப்பாய்நாலுசாமம்,பானனபில்லையது லகுவாய்ச்செய்து பாலகனே ரவிமுகத்தில் காயப்போடு, மானனசில்லிட்டுச் சீலைசெய்து மார்க்கமுடன் முன்போலப் புடத்தைப்போடே. 856

போடேதான் பத்துமுறை யிப்படியேபோடு பொங்கமுட னயமதுவுஞ் செந்தூரந்தான், நாடேதான் முறைபோலேசெய்வாயானல்

கலமானசெந்தூரம் வேதையாகும், கூடேதானுவின்பால் வெண்ணை தன்னில் குணமுடனே நெல்லிடைதான் கொண்டேயானல் தேடே தான் காலாங்கி கடாட்சத்தாலே தெளிவாகதேகமது மின்னும்பாரே

பாரேதான் மண்டலந்தான் கொண்டபோது பாங்கான தேகம துசட்டைதள்ளும், நேரேதான்தேகமது வண்டுபோலாம் நெடிதான வாசியதுமேல்நோக்காது, கூரேதான்தேகமது கற்றாளுகும் கொற்ற வனே யமனுக்குநாளுமில்லை, வேரேதான்கற்பமது வேண்டுமோதான் வித்தகனே வயத்தினுட மகிமைகாணே. 858

காணவேயின்னமொரு மகிமைசொல்வேன் கருவானபுலிப்பா ணிகணிதவானே, தோணவேவெள்ளியது களஞ்சிபத்து தோறுமல் தானுருக்கி மருந்தொன்றீய, மாணவேவெள்ளியது மறுக்கும்பாரு மகததான மாற்றதுவு மென்னசொல்வேன், வேணபடிவங்கமதைக் கொடுத்தேயூது வேட்கையுடன் வர்ணமது மேயகாதன்றே. 859

ஏகாதுவுப்புக்குங் காவிக்குந்தான் யெழிலான செந்தார மென் னசொல்வேன், போகாதுபுடத்துக்கு வுறுதிதங்கம் பொங்கமுடன் நாதாக்க ளுறைத்ததில்லை, சாகாமலிருந்திடலாஞ் செந்தூரத்தால் சதாகாலங்கற்பமது வுண்டுபாரு, வேகாதுதேகமது தீயிற்பட்டால் வெந்தாலும் மேனியது வினைகொள்ளாதே. 860

போகர் காலாங்கிநாதர் சீவியசரித்திரத்தை

புலிப்பாணிக்கு வுபதேசித்தல.

கொள்ளவேயின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் கொற்றவனே புலிப்பாணி குணமுள்ளானே, வெள்ளமுர்தமானதொரு யெந்தன் சாமி தெளிவானகாலாங்கி நாதர்தாமும், உள்ளபடி திரேதாயி னுகத் திலப்பா வுத்தமனேதாமிருந்த வண்மையெல்லாம், கள்ளமின்றி யொளிக் காமல் யானுரைப்பேன் கைலாசபுலிப்பாணி கருவாய்க்கேளே.

கருவானதிரேதாயி னுகத்திலப்பர் காலாங்கிநாதருட வண்மை யெல்லாம், திருவானகுருமுனி சொன்னநீதி தீர்க்கமுட னிருவாது சரித்திரங்கள், குருவானயென்தேவ ரெந்தனுக்கு கூறியதோர்லோக வதிசயங்களெல்லாம், கருவறிந்து வழியறிந்து யுந்தமக்குகழறுவேன் புலிப்பாணி கவிவல்லோனே. 862

வல்லதொரு திரேதாயினுகத்திலப்பா வளமானலட்சத்தி நாற் பத்தாண்டில், புல்லானவுலகமது மகிமைசொல்வேன் புகழானபிரள யங்கள் நேர்ந்தபோது, கல்லானமலைகளுமேமுழுகியல்லோகடலெழுந்

தான்கடந்துமலைமட்டடந்தான், வல்லமையாய்சத்தசமுத்திரங்களெல்லாம் வளமுடனேபொங்கியதுநிற்கலாச்சே. 863

நிற்கையிலேகாலாங்கிநாதர்தாமும் நீடாழியுலகமதைக்கண்டேயேங்கி, சொற்பமுடன்தன்மனதிலெண்ணியல்லோதோருமல்காலாங்கிகமலர்தாமும், விற்பனர்களிருவருமாய்க்காலாங்கிகிரியில் வீற்றிருந்தார்மண்டலந்தான் நெடுநாளப்பா, அற்பமுடன்வையகத்துமாண்பர்தம்மில் வனேகம்பேரம்மலையி லிருந்திட்டாரே. 864

இருந்தாரேநெடுங்காலங்காலாங்கிநாதர் யெழிலானமலைமீதிலென்னசொல்வேன், பொருந்தவேகாயாதிகற்பங்கொண்டு பொங்கமுடன்வுலகமதின்மகிமையெல்லாம், திருந்தவேகண்ணிறைகண்டுமல்லோ தீர்க்கமுடன்தன்மனதிலுள்ளடக்கி, அருந்தவத்திலுதித்ததொருரிஷிகள்தேவர் வனேகரிடமகிமையெல்லாம்பார்த்திட்டாரே 865

பார்த்தாரேகாலாங்கி மலையிலப்பா பாங்கானரிஷியினுட மகிமைசொல்வேன், தீர்த்தமென்றகறையிலப்பாரிஷியாருண்டு திரமாகரிஷியாரும்புலிரூபந்தான், ஆர்க்கவேதிருமுகத்தைக்கண்டாலல்லோ வப்பனேமானிடத்தின்சித்துபோலாம், மூர்க்கமதுவாராதுமுனிநாதர்க்கு முனையானவேங்கையுடசித்துதானே. 666

சித்தானவேங்கையென்றமனிதசித்து ஜெகதலத்தில்யாரேனுங்கண்டதில்லை, பத்தியுள்ளயென்தேவர்காலாங்கிநாதர் பாங்கானதிரேதாயினுகத்திலப்பா, வெத்தியுடன்கண்டதொரு மகிமைதன்னைவே தாந்தசித்தெனக்குவெளியிட்டார்காண், எத்திசையும்சித்தர்முனிகண்டதில்லை யெழிலானவதிசயத்தின் கூறுதானே. 867

மச்சரிஷி.

கூறானகோடிவகைவதிசயங்கள் கொற்றவனே காலாங்கி மலையிலப்பா, நீறானமலைமுனியாந்தவசியப்பாநெடுங்காலந்தானிருக்குங்கெடியசித்து, வாறானமச்சமென்றதேகமப்பாவளமானதிருமுகந்தான்மனிதரூபம், சேறுடும்சுனையோரம் மலையோரத்தில்செம்மலுடன் தவமிருப்பா ரிஷியார்தானே. 868

தானானவவர்பெருமைமெத்தவுண்டு தகமையுள்ளசித்தாதிகண்டதில்லை, கோனானயென்தேவர்காலாங்கிநாதர் கொற்றவனாரெந்தனுக்குச்சொன்னநீதி, தேனானமகிமைகளுங்கோடாகோடி திரேதாயினுகத்திலப்பா, கண்டதுண்டு, மானானநெடுங்கால சித்துவென்றுமகதேவர்சொல்லெனக்குத் தெரியலாச்சே. 869

கூர்மரிஷி.

ஆச்சப்பாயின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் வப்பனே புலிப் பாணிவரியவானே, மூச்சடங்கிநெடுங்காலமிருந்தசித்து முனையான காலாங்கிநாதரப்பா, பாச்சலுடன் பிரளயங்கள் வந்தபோதுபாங் கான மலைமீதிலிருக்குங்காலம், மாச்சலுடன்தவயோகி ரிடியார்தம் மை மன்னவனே கண்டவதிசயத்தைக்கேளே. 870

கேளப்பா தேகமது கூர்மவர்ணம் கெடியானதிருமுகந்தான் மனுஷரூபம், வாளப்பாநெடுங்காலந் தவசிருந்து வளமையுடன் கா லாங்கி மலைமேற்றானும், ஆளப்பாபிரளயங்கள்வந்தபோது வப்பனே தவசிருந்தசித்துமாகும், காளப்பாதிரேதாயுகத்தில்தானும் கருவான மலையதனி லிருந்தசித்தே. 871

வராகரிடி.

சித்தான் புலிப்பாணிசிறியபாலா சிறப்புள்ளவதிசயங்க ளின் னஞ்சொல்வேன், பத்தியுடன் காலாங்கிநாதர்தாமும் பாருலகில்தி ரேதாயினுகத்திலப்பா, சத்தியங்கள் தவறாமல்தவசுசெய்து சாங்க முடன் பிரளயங்கள்வந்தபோது, சுத்தியேநிற்பதற்கு யிடங்கொள் ளாமல் சுந்தரனார்மலைமீதில்மேலேறினாரே. 872

ஏறினார்காலாங்கிமலையின்மேலேயெழிலானபிரளயங்கள் வந்த போது, மீறியேயாகங்கள் செய்துகொண்டு மிக்கான மலைகளின்மேலயி ருக்கும்போது, கூறியதோர்வராகமென்ற ரிடியார்தாமும் கொற்ற வனார் மலையதனில் தவசிருந்தார், கோறியே காலாங்கிநாதர்தாமும் கொப்பெனவே தவசியிடஞ்சென்றார் பாரே. 873

பாரேதானெனதையர் காலாங்கிநாதர் பாங்கான மலைதனிமேல தவசிருந்த, சீரானவராகரிடி தன்னைத்தானும் சிறப்புடனே காலா ங்கி காணும்போது, தீரானவுருவமதுவராகம்போலும் தீர்க்கமுள்ள திருமுகந்தான்மனிதரூபம், நேரேதான்தவயோகஞ்செய்துகொண்டு நேர்மையுடன் தானிருந்தரிடிமாண்டாரே. 874

கண்டாரே நெடுங்காலந் தவசிருக்கும் கருவானரிடியாரைமன துவந்து, தெண்டமுடன் காலாங்கிநாதர்தாமும் தேற்றமுடன்ரிடி யாரைக்கேட்கும்போது, சண்டமாருதம்போலே ரிடியார்தாமும்சட் டமுடன் மனதுவந்து சாற்றலுற்றார், திண்ணமுடன்திரேதாயினுக த்திலப்பா திருவாண்டுமுதல்வருஷஞ்சமாதிதானே. 875

தானானகாலாங்கிநாதரேகேள் தகமையுடன்திரேதாயினுகத்தி லப்பா, தேனானமனோன்மணியாள்கிருபையாலே திரளானபிரளயங் கள்வந்தபோது, மானானமகாதேவர்கடாட்சததானே மன்னவனெ டுங்காலந்தவசிருந்தேன், பானானவையகத்திலாரேனுந்தான்பக்கல்வ ந்துகேட்டதில்லை யென்றிட்டாரே. 876

இட்டாரேவராகரிடி முனிவர்தாமும் யெழிலானகாலாங்கிதன் னைக்கண்டு, விட்டகுறையிருந்ததொருபுண்ணியத்தால் விருப்பமுட னெந்தனையுங்காணலாச்சு, சட்டமுடனுந்தனுக்கு வுபதேசங்கள்சா ங்கமுடன்போதிப்பேனென்றுசொல்லி, திட்டமுடன்வுலகத்தில் ம கிமையெல்லாம் தீர்க்கமுடன்காலாங்கிக்கோதினாரே. 877

ஓதினார்சமாதிமுகமிருந்தகாலம் வுத்தமனார்காலாங்கிநாதருக்கு ஆதியெனும்பராபரத்தின்ரகசியத்தை வப்பனைகாலாங்கிக்கோதினா ர்காண், நீதியுடனுபதேசம்பெற்றுமலைலா நிகட்சியுடன்தெற்குமுக ம்திரும்பிவந்தார், பாதிமதிசடையணிந்ததம்பிரான்போல் பரமகுரு ரிடியொருவரிருந்திட்டாரே. 878

நரசிங்கரிடி

இருந்தாரேயின்னமொரு மார்க்கஞ்சொல்வேன்யெழிலானபுலி ப்பாணியின்புள்ளானே, பொருந்தவேதிரேதாயினுகத்திலப்பா பொ ங்கமுடன்காலாங்கிநாதர்தாமும், திருந்தியேகண்டதொருவதிசயங் கள்தீர்க்கமுட னெந்தனுக்குச்சொன்னநீதி, வருந்தவேநரசிங்க ரிடி யார்தன்னை வளப்பமுடன்கண்டதொரு வுண்மைபாரே, 879

உண்மையாங்காலாங்கிநாதாதாமும் வுத்தமனார்திரேதாயினுகத் திலப்பா, வண்மையுடன்காலாங்கிநாதர்தாமும் வாகுடனேமலைமீதிற் கண்டசேதி, திண்மைபெறமார்க்கமது யேதென்றுக்கால் தீர்க்கமுட ன்கிரிசுத்திவருகும்போது, வண்மையுள்ளசுனையொன்றுதடாகமுண் டுவளம்பெரியதவசிதனைப் பார்த்திட்டாரே. 880

பார்த்தாரேநரசிங்கரிடியார்தம்மைப் பட்சமுடன் காலாங்கிகா ணும்போது, தீர்த்தமுடன்ரிடியாரின் தவசின்வேடம் திரேகமெல் லாஞ்சிம்பத்தின்ரூபமாகும், நேர்த்தியுள்ளவர்னமதுதங்கவர்னம் நே ர்மையுடன்வையகத்திலிருந்தசித்து, ஆர்த்ததொருதிருமுபம்மனித ரூபம் வப்பனேதவநிலையை யறிந்திட்டாரே. 881

அறிந்தாரேதவசியதுமகிமைதன்னை வன்புடனேமனதுவந்துய ருகில்வந்து, சிறந்ததொருரிடியாரைக்காலாங்கிநாதர் தேற்றமுடன் வினவியங்கேகேழ்க்கும்போது, குறித்ததொரு காலாங்கிநாதருக்கு குணமானநரசிங்கரிடியார்தாமும், மறித்துமேகாலாங்கிநாதர்தாமும் மன்னவனேமார்க்கமது கூறுவேனே. 882

கூறுவேனென்றலுமேரிடியார்தாமும் குணமான காலாங்கிநாத ருக்கு, தேறுதலாயுபதேசம்மிகவுஞ்சொல்லி தேற்றமுடன்நெடுங்கா ம்மலையிலப்பா, மாறுலகவைபகத்தில்தவசிருந்து மன்னவனே யான றிந்தமகிமைகோடி, ஆறுதலாயுபதேசவதிதங்கூறி வப்பனே போக வென்றுவிடைதந்தாரே. 883

தந்தாரேகாலாங்கிநாதருக்கு தாரணியிலதிசயங்களதிதஞ்சொ ன்னார், பொருந்தியேகாலாங்கிநாதர்தாமும் போனதொரு கிரிகைத ளில்மேற்குபாகம், சொந்தமுடன்காணுதற்கு மனதுவந்து தோறும ல்கிரியோரம்வருகும்போது, விந்தையுடனதிசயங்க ளென்னவென் றால்வீரானவாமரிஷி தனைச்கண்டாரே. 884

வாமரிடி

கண்டாரேபுணிப்பாணிபுணிதவானே காசினியி லின்னும்வெகு வதிசயங்கள், அண்டர்பிரானுதாக்கள் ரிடியார்தாமும்யாரேனுங்கண் டறிந்துசொன்னதுண்டோ, சண்டமாருதம்போல யெந்தன்தேவர்ச ட்டமுடன்காலாங்கிநாதர்தாமும், கண்டறிந்தவதிசயத்தைதயாமுறை ப்பேன் கண்வணியேவிண்மணியே கழறக்கேளே. 885

கேளப்பாயெந்தனதுகாலாங்கிநாதர்கெடிதானதிரேதாயினுகத் திலப்பா, ஆளப்பாகிரிசுத்திவருகும்போது வப்பனேமலையோரம்வட பக்கந்தான், மீளவேதவநிலைபார்க்கவென்று மிக்கான சுனையரு கேவந்தபோது, சூளப்பாரிடியார்கள் கூட்டத்தோடும் சுந்தரனே வாமமகாரிடிகண்டாரே. 886

கண்டாரேவாமமகாரிடியார்தம்மை கருவானதேகமதுவாமரூப ம், கொண்டதொருதிருமுகமும் மனிதரூபம் கோடான கோடியது நெடுங்காலந்தான், அண்டமகாரிடிபோலே வாமர்தாமும் வருளான பெருந்தவசுதானிருந்தார், கொண்டல்வண்ணனச்சுதன்போல்விசுவ ருபம்கொடியதவஞ்செய்திருக்கச் கண்டிட்டாரே. 887

கண்டாரேதிரேதாயினுகத்திலப்பா கடுந்தவசுசெய்திருந்தரிஷி யார்தம்மை, சண்டமாருதம்போலேதவசிருந்து சாங்கமுடன்வையக த்துமகிமையெல்லாம், 'வண்டணியாள்ரேணுகையாள்மகிமைதன்னை வளமுடனேதானுரைத்தார்காலாங்கிக்கு, குண்ணதின்மேலிருந்துத வசியாரும் கூறினார்வெகுகோடிமகிமைதானே. 888

பரசுராமரிஷி.

தானானபின்னமொருதண்மைசொல்வேன் தண்மையுள்ளபுலிப் பாணிகனவானேகேள், கோனானயெனதையர்காலாங்கிநாதர்கொற்ற வனுரெந்தனுக்குச்சொன்னநீதி, தேனானதிரேதாயினுகத்திலப்பாதே ற்றமுடனிருபதாமாண்டுதன்னில், பானானபிரம்மகுலபரசுராமன்பெ ருந்தவசுதானிருந்தவண்மைபாரே. 889

பாரேதான்பிரளயங்கள்வந்தபோது பாங்கானகாலாங்கிமலையி ன்பேரில், நேரேதான்நெடுங்காலந்தவசிருந்து நேர்மையுள்ளபிரம்ம குலசித்துதானும், சீரேதான்கிரிதனக்குகீழ்பாகந்தான் சிறப்புடனே தவமிருந்தரிஷியார்தம்மை, ஆரோதான்காண்பதற்கு வையகத்தில் வப்பனேயாராலும்முடியாதன்றே. 890

அன்றானகாலாங்கிநாதர்தாமும் அறிவுடையசித்துமகாரிஷியா ரல்லோ, குன்றானபருவதத்தைத்தேடியேதான் குணமானகாலாங்கி நாதர்தாமும், சென்றாரேபரசுமகாரிஷியார்பக்கல் செம்பவளரிஷியா ருமருகிற்சென்று, நின்றாரேநெடுநேரமுடிகள்சாய்த்து நீதியுடன்கா லாங்கிபணிந்திட்டாரே. 891

பணிந்திட்டகாலாங்கிநாதருக்கு பட்சமுடன்பரசுமகா ரிஷி யார்தாமும், துணிந்திட்டகாலாங்கிநாதருக்கு துப்புரவாயுபதேசங் கோடிவண்ணம், அணிபெறவேவையகத்து மகிமையெல்லாம் வப்ப னேவுபதேசஞ்செய்தாரல்லோ, கணிதமுடன்காலாங்கிநாதர்தாமும் கருத்துடனே மலையைவிட்டுயேகினாரே. 892

ஏகவேகாலாங்கிநாதர்தாமும் யெழிலானசீனபதி தன்னிற்செ ன்று, பாகமுடன்லோகவதிசயங்களெல்லாம்பாலித்தார்சீனபதிப்பெ ண்களுக்கு, ஆகமசாஸ்திரபுராணங்களெல்லாம் அங்ஙனவேபோதி த்துவினயங்கூறி, போகரென்றயெந்தனையுஞ்சீஷனாக்கி பொங்கமுட ன்நெடுங்காலமிருந்திட்டாரே. 893

ராமரிஷி

இருந்தாரேயின்னமொருவயணஞ்சொல்வேன் யெழிலானபுலி ப்பாணியெந்தன்மாரா, பொருந்தவேசீனபதிவிட்டுநீங்கி பொங்கமு

டன்காலாங்கிநாதர்தாமும், திருந்தவே திரேதாயினுகத்திலப்பா தீர்க்கமுடன்பிரளயங்கள்வந்தபோது, அருந்தவசியாயிருந்தாராமர்தன்னை அங்ஙனவேகண்டுமெல்லோ மதித்திட்டாரே. 894

மதித்தாரேருமரிடிமுனியார்தம்மை மார்க்கமுடன்காலாங்கிநாதர்தேவர், துதிப்புடனேராமரிடியென்றுமேதான் துப்புரவாயஞ்சலிகள்மிகவுஞ்செய்து, விதிப்படியே பட்டாபிஷேகரென்று விருப்பமுடன்தன்மனதிலுவந்துகொண்டு, நதிக்கரையைதான்தேடி தீர்த்தங்கொண்டு நமஸ்காரதுதிகள்மிகசெய்திட்டாரே. 895

செய்ததொருகாலாங்கிநாதர்தம்மை செங்கண்மால் ரிடியாரும் மனங்களித்து, துய்யதொரு துளபமாம்மலைதன்னை துப்புரவாய்க்கையேந்திமுடிகள்சாய்ந்து வெய்யபுகழ்வுபதேசமெந்தனுக்கு விருப்பமுடன்செய்யவென்றுவினவிக்கேட்க, கைதவமாய்வுபதேச வுண்மைதன்னை கர்த்தாவும்யெந்தனுக்குகூறிட்டாரே. 896

கூறியேவுபதேசவுண்மைதன்னை குணமானகாலாங்கிநாதருக்கு தேறியதோர்கிரேதாயினுகத்தில்தானும் தேற்றமுடன் தானடந்த மகிமையெல்லாம், ஆறிடவேகாலாங்கிநாதருக்கு அங்ஙனவே யுபதேசஞ்செய்தாரல்லோ, பீறியேகாலாங்கிநாதர்தாமும் மிக்கவே சீனபதிசென்றிட்டாரே. 897

சென்றுமேசிலகாலமங்கருந்து செம்மலுடன்கிரேதாயினுகத்தில்தானும், குன்றுமலைவனந்திரங்கள் குகைகள்தேடி கூருணசித்துமுனியனைத்துங்கண்டு, தென்றிசையில்கும்பமுனிமலையுங்கண்டு தேற்றமுடன்காலாங்கிமலையைக்காண, வென்றிடவேபிரளயங்கள்வந்தபோதுமேன்மையுடன் மலைதனிலேயிருந்திட்டாரே. 898

பலராமரிடி.

இருந்தாரேயின்னமொருயிணக்கஞ்சொல்வேன்யெழிலானபுலிப்பாணிபுனிதவானே, திருந்தவேதிரேதாயினுகத்திலப்பா தீர்க்கமுடன்காலாங்கிநாததாமும், அருந்தவசிபலராமரென்பூசித்து வம்மலையில்நெடுங்காலந்தவசிருக்க, குருந்தமெனும் மரக்கலப்பைத்தோளிலேந்தி குணமானரிடியாரின்தவங்கண்டாரே. 899

தவமானரிடியாருங்கிரியைதன்னில் சட்டமுடன் நெடுங்காலந்தவசுகொண்டு, சவம்போலேமூச்சடங்கிரூபத்தோடும் சட்டமுடன் தவசிருக்கும்வண்மைதன்னை, பவமகற்றுகாலாங்கிநாதர்தாமும் பண்புடனேமுடிசாய்ந்துதலைகுனிந்து, நவகோடியஞ்சலிகள் மிகவுஞ்செய்துநாதாந்தசித்துருவே கெதியென்றாரே. 900

கெதியென்று காலாங்கி கேட்குங்காலம் கெடியானபல்ராமரிடி யார்தாமும், பதிதனையைத்தேடிவந்த ரிடியாருக்கு பட்சமுடன் ஞானோபதேசங்கூறி மதிபோன்ற மகதேவர்காலாங்கிக்கு மார்க்கமுடனுகை வதிசயங்களெல்லாம், இதிகாசபுராணமெனும் மறைப்பையெல்லாம் யிஷ்டமுடன் மனதுவந்து போதித்தாரே. 901

பௌத்மரிடி.

போதிக்கவின்னமொரு வயணஞ்சொல்வேன் பொங்கமுடன் புலிப்பாணிபுகழுள்ளானே, ஆதித்தன்சந்திரன்போல் பௌத்மசித்து அரகராயென்ன சொல்வேன்கிரியிலப்பா, சோதிபிரகாச மென்ற காலாங்கிநாதர் சொர்ணமென்ற கிரிபைதனிற்சொல்லும்போது,சாதியிலாதவனார் பௌத்மசித்து சட்டமுடன் நெடுந்தவசி பார்த்திட்டாரே. 902

பார்த்தாரேயென்தேவர் காலாங்கிநாதர் பாரானமலைதனிலே தவசியாரை, சார்த்தகையாள்வார்போல தவங்கள்பூண்டு சட்டமுடன் நெடுங்காலசித்துதம்மை, கோர்த்துமேசுரமெத்து அஞ்சலித்து கொப்பெனவே காலாங்கி வணக்கஞ்செய்தார், தீர்த்தமுடன் பத்திரமாந் துளபமாலை தீர்ககமுடன் தான்கொடுத்து வர்ணித்தாரே.

வசனிக்காஞானோபதேசந் தன்னைவளமுடனே பௌத்மமகாரிடியார்தாமும், நிசமுடனேமனங்களித்து மனதுவந்து நிட்சயமாம் ஞானமென்ற யிதிகாசத்தை, வசனமதாயுபதேசவுண்மையாக வாக்களித்தார் காலாங்கிநாதருக்கு, தசமுடனேபஞ்சதசா காயமாக்கி சட்டமுடன் மனதுவந்து கொடுத்திட்டாரே. 904

கலிகரிடி.

கொடுக்கவேயின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் கோளாறுதான்சுற்றிமைந்தாகேளு, விடுக்கவேகாலாங்கிநாதர்தாமும் விட்டகுறையிருந்ததொரு தன்மையாலே, படுகளம்போல்பத்தாவதாரந் தன்னை பாற்கடல்கள்சுற்றிவந்து பான்மைகொண்டார், தொடுகுறிபோல் கலிக்கமகாரிடியார்தம்மை தோருமல்கிரிதனையே கண்டார்தாமே.

தானான கலிக்கமகாரிடியார்தன்னை தகமையுள்ள காலாங்கிநாதர்தாமும், பானான கிரேதாயினுகத்திலப்பா பாங்கானமலைதனிலே கண்டாரங்கே, தேனானபிரளயங்கள்வந்தபோது தேற்றமுடன் மலைதனிலேயின்றசித்து, கோனானகொடுந் தவசியானசித்து கொப்பனவேசித்து மகாபத்துமாமே. 906

கலியுகத்தாருக்கு வியாசமகாரிடியார் இந்த தசரிடிகளை பத்தவதாரமென்று புராணக்கட்டு கூறினார் இவர்கள் கிரேதாயுகத்து மனிதரென்று சொல்லப்படுவர்.

பத்தானமகிமையதுயென்னசொல்வேன் பாங்கானபுலிப்பாணி பாலாகேளீர், செத்துமேசாகாமல் காயங்கொண்டு சேணைநெடுங்கால மதுவரையிலப்பா, முத்தானமோட்சவழி பெறுவதற்கு முனையான பத்துமகா ரிடியார்தாமும், சுத்தமுடன்கிரேதாயி னுகத்திலப்பா சுந்தரனே தவசிருந்து சிததுபாரே. 907

பாரேதான்காலாங்கி நாதர்தாமும் பட்சமுட னெந்தனுக்குச் சொன்னநீதி, நேரேதானவர்களுந்தான் மனிதரன்றி நெடிதானதேவதாரமல்ல, சீரேதான்கலியுகத்து மாண்பரெல்லாம் சிறப்புடனே தசாதாரக்கடவுளென்று, வேரேதானின்னமொரு தெய்வமுண்டோ விதகனே யென்றல்லோ விதிக்கின்றாரே. 908

வித்தகனேயிவர்களெல்லாந் தெய்வமல்ல விண்ணுலகம்பதிப்பதற்குகூடுமோதான், செத்தவர்கள் கோடிமனுமாண்பருண்டு தேவாதிதேவரிடியானபேரும், கைத்தவங்கள்தான்மறந்துமண்ணைப்போனார் காசினியிலியாவருந்தா னிப்படியேபோனார். மெய்த்தவங்கள் செய்துமல்லோகாரம்பூண்டு வெகுகோடி மாண்பர்களுமிருக்கின்றாரே.

போகர் ஆயிரத்தெட்டு சிவாலயப் பெருமைகூறல்.

இருக்கவே யின்னமொரு மகுத்துவங்கள் யெழிலான புலிப்பாணிகண்ணியவானே, பொருக்கவே வையகத்தின் மகிமையெல்லாம் புகட்டினேன் கணக்குண்டோ லக்கோயில்லே,பெருக்கவே துகை கண்டுவிதிகண்டு போனஸ்தலமகிமை யாவுங்கண்டு, குருக்கவேதிசையெட்டு மதிக்குநான்கும் கூறானதேவகோட்டை கூறுவனே. 910

கூறுவேன் புலிப்பாணிமன்னுகேளு கொற்றவனார்காலாங்கிசொன்னநீதி, பேறுடையவையகத்தின் ஸ்தலங்களெல்லாம் பேர்வகுத்துச் சீர்வகுத்துப்பிரித்துச் சொன்னார், ஆறுதலம்பஞ்ச பூதஸ்தலத்தைக்கண்டுவப்பனே யெந்தனுக்குவோதினார்காண், மாறுபடா ஸ்தலமகிமை யுந்தனுக்கு மார்க்கமுடன் வகைபிரித்துச்சொல்வேன்தானே

தானானபஞ்சபூதஸ்தலமேதென்றால் தக்கானகாளஸ்திரி காஞ்சியாகும், தேனான திருக்காசி சிதம்பரந்தான் தெளிவான திருவருணை ஸ்தலமுமாகும், பானனஸ்தலத்தினது சேர்வைசொன்னேன் பாங்

கான ஆறுதாரங்கள் சொல்வேன், மானனமகதேவர் மதுரையைத் தான் மகத்தானஸ்தலமென்று மதிப்பிட்டாரே. 912

மதிப்பானஸ்தலத்தினது கோர்வைசொல்வேன் மகத்தானமதுரைக்கு ளெண்பத்துநாலு, துதிப்புடைய சிதம்பரங்கோர்வை சொல்வேன் தப்புரவாய்ப்பதிறுறு ரெண்டுமெட்டு, யிதிலானவருணைக்குக் கோர்வைசொல்வேன் விற்பனனேசோடசமாமொன்றுநான்கு, மதிப்போன்ற காளஸ்திரிகோர்வைசொல்வேன் மாக்கமுடன் கலைரெண்டுதசங்களொன்றே. 913

ஒன்றானகாசியின்றன் கோர்வைசொல்வேன் ஒகோகோநாதாக்கள் மறைத்தகூத்து, சென்றதொரு கோர்வைபதுமே தென்றுக்கால் செம்மலுடன் ஒன்றுபத்துநான்குமெட்டு, நன்றான திருக்காஞ்சிகோர்வைசொல்வேன் நலமானபஞ்சமரண்டுசத்தம்நாலு, குன்றானகணக்குவகையின்னஞ்சொல்வேன் குணமுள்ளபுலிப்பாணி மன்னுகேளே.

மன்னுகேள்திருவானைக் காவலப்பா மகத்தானஸ் தலத்தினது கோர்வைசொல்வேன், நன்னயமாயதைச் சார்ந்ததேவஸ்தானம் நலமானயிருறு தலமேயாகும், தென்னுடன் கும்பமுனிய கஸ்தியன்தான் தேவதாகிரியுடனே ஸ்தலமுஞ்சொல்வேன், முன்னேதான் பெரியோர்களுரைத்தவண்ணம் முனியான கோயில்வகை கூறுவேனே.

வரையானவகஸ்தியனர் ஸ்தலமொன்றுண்டு வளமானகோர்வையது யின்னஞ்சொல்வேன், திறையானசத்தமது மூன்றேயாகும் திகழானவட்டமது நான்கேயாகும், குறையாதநந்தியது கோட்டையப்பாகொற்றவனர் மலையருகேசுற்றியுண்டு, முறையானவ கஸ்தியனர் தேவஸ்தானம் முனையானலக்கமிது சொல்லொணாதே. 916

ஒண்ணுது திருக்கடையூர் தேவதானம் வுத்தமனேகோர்வையது யென்னசொல்வேன், திண்ணமுடன் கலைநான்குயிருமூன்றுறு திகழானமண்டபங்கள் பதினெட்டாகும், வண்ணமுடன் சீர்காழிதேவதானம் மகத்தானகோர்வையது யென்னசொல்வேன், தண்ணமுடன்கலைநான்கு பதிகளெட்டு தாக்கானமண்டபமும் பதினுலாமே.

காலானசேதுபதி தலமுஞ்சொல்வேன் நலமானகோர்வையது யென்னசொல்வேன், காலானவறுபத்து நாலுமாகும் கருவானமண்டபந்தான் முப்பத்திரண்டு. மாலானமகதேவரெந்த நாதர்மார்க்கமுடன் கண்டறிந்ததலமுமாகும், பாலானமனோன்மணியாள் கடாட்சத்தாலே பாங்கான புதுமையின்னங் கூறுவேனே. 918

கூறுவேன் தணிகையது தலமுமாகும் கூரானகோர்வையது யென்னசொல்வேன், ஆறுதலங்கோட்டையது மலைமேலப்பா வப்பனே தசம்ரெண்டு சத்தம்நாலு, வேறுண்டோ வையகத்தில் சொன்னாரில்லை வெட்டவெளியானதொரு தலமுமில்லை நாறுண்டோபூவதுபோல் மணமுமாகி நானிலத்தில்கோடி தலங்கண்டேன்பாரே. 919

பாரேதான்கோணமது நவகோணந்தான் பாங்கானகும்பமென்றகோணமப்பா, நேரேதான்தேவதா தலமுமாகும் கெடிதானகோர்வையது யென்னசொல்வேன், கூரேதான்கலையாறு குசிகையெட்டு குணமானதேவுதா தலமுமாகும், நீரேதான்வகுத்தறிய யின்னஞ்சொல்வேன் நிஷ்களங்கமாயவர் தலமுமாமே. 920

தலமானதேவதா தலமுமாகும் தாக்கானகோர்வையது யென்னசொல்வேன், பிலமானகோயிலது முப்பத்திரெண்டு பேரானமண்டபந்தான் அறுபத்துநான்கு, வலமானபோஞ்சால தேசமப்பாவளமான தேவதாதலமுமாகும், நலமானகோர்வையது யென்னசொல்வேன் நாட்டிலே நவில்வதற்கு நாவில்லைதானே. 921

நாவில்லைப்பா வில்லையென்னசொல்வேன் நன்மையுள்ள வறுபத்துநாலுசத்தம், காவிலாநேபாளதேசமப்பா கருவானதேவதா தலமுமாகும், பூவிலுயர்கோர்வையது யென்னசொல்வேன் புகழானசத்தமது பரிசமெட்டு, தாவுபுகழாவடையார் தலமுமாகும் தகமையுள்ளகோர்யையது சொல்லக்கேளே. 922

சொல்லவென்றால் நாற்பத்தியாறேயாகும் சுத்தமுள்ள சத்தமதுநாலேயாகும், வெல்லவேபழனி மகாதலமுமாகும் வேதாந்ததலத்தினது கோர்வைசொல்வேன், புல்லவேசதுரெட்டு திசைகள்நான்கு புகழானகோணமது வறுபத்துநான்கு, வெல்லவேகழுக்குன்ற பதிதானப்பா மேன்மையுள்ள தலமென்று செப்பலாமே. 923

செப்பவென்றால் கோர்வையது யென்னசொல்வேன் ஜெகதலத்திலாராலுஞ் சொல்லப்போமோ, ஒப்பமுடன் யிருபத்துநாலுமாகும் ஓசோசை நாதாக்கள் மறைத்தகூத்து, எப்படியும் யீரைந்தாய்ப்பதினாறுக யெழிலானமண்டபமுங் கூறலாகும், தப்பிதங்களில்லாமல் தயவுள்ளானே சாற்றுகிறேன் திருவொற்றியூரைத்தானே.

தானானதுவாபரமாம் யுகத்திலப்பா தகமையுடன் பிரளயங்கள் வந்தபோது, கோனான திருவொற்றியூர்தானப்பா கொற்றவனே நடுக்கடலிலே நெடுந்தூரந்தான்,தேனானமாபுரமுங்கோபுரந்தான்தெரியா

மல்பிரளயங்கள்வந்துமல்லோ, மானுனதலமதுவும்முழுகியல்லோம
ன்னவனே சமுத்திரமும்மேவலாச்சே. 925

மேவவென்றால்கோர்வையது யென்னசொல்வேன் மேன்மையு
ள்ளநாற்பத்தியெட்டேயாகும், தாவுகடலலையதுவு மிஞ்சியேதான்
சட்டமுடன்பூமியல்லோ முழுகலாச்சே, ஆவலுடன்குளிகைகொ
ண்டுசென்றேனப்பா வப்பனே திருப்புவனங்கண்டேன்யானும், நாவ
தனில்கூறுதற்குநாளினமில்லை நலமானதலமதுவும்மகிமையாச்சே.

ஆச்சப்பாகோர்வையது யென்னசொல்வேன்வப்பனேபதினெ
ட்டுரெண்டுபத்து, பாச்சலென்றதிருப்பழனிதலமுமாகும் பாங்கான
மகிமையதுயென்னசொல்வேன், மாச்சலென்றகோர்வையதுமுப்பத
திரண்டு, மகத்தானமண்டபமுமெட்டுநாலு, வீச்சுடனே குளிகை
கொண்டுபார்த்துவந்தேன் விதக்கவேபுலிப்பாணி யின்னங்கேளே.

கேளப்பாபிணிதீர்த்த வயித்தியநாதர்கெடியான தலமென்ற
தொன்றுவுண்டு, ஆளப்பாகோர்வையது யென்னசொல்வேன் வப்ப
னே பதினறுதிக்குநாலு, யாளப்பாதிருப்பரமாங்குன்றந்தானும்வள
மையுள்ளகெடிஸ்தலமாமதற்குப்பேரு, சூளப்பாகோர்வையது யெ
ன்னசொல்வேன் துப்புறவாயிருமூன்றுசதுரமெட்டே. 928

எட்டானதிருவாரூ ரென்னலாகும் யெழிலானகோர்வையது
யென்னசொல்வேன், சட்டமுடன்திருவாசலறுபத்துநான்கு தக
மையுள்ளகலையாறுசத்தமெட்டு, திட்டமுடன்திருவிடையா மரு
தூரப்பா தேவதாதலமென்றுசெப்பலாகும், வட்டமுடன்கோர்வை
யதுவன்பத்தாறு வப்பனேபரிசமதுநாலுதானே. 929

நாலானதிருவிரிஞ்சிதலமுமப்பா நலமானமலைநாடு கள்ளர்தே
சம், பாலானகோர்வையதுயென்னசொல்வேன் பாங்கானவிளையாட்
டுசத்தமெட்டு, காலானதிருச்சோழதலமுமாகும் கருவானமகிமை
யதுயென்னசொல்வேன், நூலானகோர்வையது நாலுபத்துநுட்ப
முடன்கலையாறுபாசமெட்டே. 930

எட்டானசேரனதுதலமுமப்பா யெழிலானமகிமையது யென்
னசொல்வேன், மட்டானதலபதியின்மகிமைசொல்வேன் மகத்தான
கோர்வையது தொண்ணூற்றாறு, திட்டமுடன்பாண்டியனார் தலமு
மப்பா திகழானவைகைவளநாடேயாகும், வட்டமுடன்கோர்வைய
துஎன்னசொல்வேன் வண்மையுள்ளகலைரெண்டுசோடசமுமேழே.

ஏழானகாசியதுயெட்டேயாகும் யெழிலானமகிமையதுயென்
னசொல்வேன், பாழானகோர்வையது நூற்றிரண்டுபத்துசட்ட

முடன்மகிமையதுமெத்தவுண்டு, காழானநாகார்ச்சுனதலமுமாகும் கருவானகோர்வையதுயெழுபத்திரெண்டு, காழானடில்லியதுமகிமை மெத்த தாக்கானகோர்வையது யெண்பத்திரெண்டே. 932

ரெண்டானசீனபதி தன்னிற்சென்று யெழிலானகுளிகையது யானும்பூண்டு, குண்டலியாம்வாசிதனைப்பூட்டியல்லோகொற்றவனே சீனபதியானிருந்து, சண்டமாருதம்போலே சிலநாட்சென்று சாங்க முடன்குளிகையதுபூண்டுகொண்டு, வண்ணமுடன் தீர்த்தவரைகா ணுதற்கு வளமுடனேசென்றதொரு மகிமைபாரே 933

தீர்த்தமகிமை.

பாரேதான்படிகாமாந் தீர்த்தங்கண்டேன் பாங்கானஜம்புவெ ன்றதீர்த்தங்கண்டேன், சேரேதான்செந்தாமரைதீர்த்தங்கண்டேன் நெடிதானமனோன்மணியாள்தீர்த்தங்கண்டேன், கூரேதான்மயேஸ் வரனார்தீர்த்தங்கண்டேன், குறிப்பானமச்சமென்ற தீர்த்தங்கண்டே ன், சீரேதான்மானிடவதீர்த்தங்கண்டேன் சிறப்பானகோபருவதீர்த் தங்காணே. 934

காணவேபட்சியென்ற தீர்த்தங்கண்டேன் கருவானசங்கிலினுட தீர்த்தங்கண்டேன், பூணவேசந்தனமாந்தீர்த்தங்கண்டேன்புகழான வியாசமுனிதீர்த்தங்கண்டேன், மாணவேமகரீதவர்தீர்த்தங்கண்டே ன்மகத்தானபச்சையென்ற தீர்த்தங்கண்டேன், கோணவேதிருப்பா லின்தீர்த்தங்கண்டேன் தோருகவண்டிரன் தீர்த்தமாமே. 935

தீர்த்தமாங்கரியமால்தீர்த்தங்கண்டேன் திறமானநாகேஸ்வரதீ ர்த்தங்கண்டேன், பூர்த்தியாய்ப்பரமசிவதீர்த்தங்கண்டேன் புகழான பாகவததீர்த்தங்கண்டேன், கீர்த்தியுள்ளசெங்கண்மால் தீர்த்தங்க ண்டேன் கெடியானபுண்ணியத்தீர்த்தங்கண்டேன், பார்த்தேதேனச டாயுவென்றதீர்த்தங்கண்டேன்பாங்கானவச்சிரவல்லிதீர்த்தந்தானே

தானனகுசலமென்றதீர்த்தங்கண்டேன் தாக்கானயமுனையென் றதீர்த்தங்கண்டேன், கோனனவகஸ்தியனார் தீர்த்தங்கண்டேன்கு ணமானவன்னியனார் தீர்த்தங்கண்டேன், தேனனமல்லியென்றதீர்த் தங்கண்டேன், தெளிவானவனுமாரின் தீர்த்தங்கண்டேன், பானன காசியென்றதீர்த்தங்கண்டேன் பாங்கானகைலங்கிரிதீர்த்தம்பாரே.

பாரேதான்செண்பகத்தின் தீர்த்தங்கண்டேன் பாங்கானகை கேசிதீர்த்தகண்டேன், சேரேதான்கறுப்பண்ணர் தீர்த்தங்கண்டே ன்கெடிதானகிட்கிந்தா தீர்த்தங்கண்டேன், கூரேதானஷ்டமென்ற தீர்த்தங்கண்டேன், குணமான ஜெகமோகினி தீர்த்தங்கண்டேன், தி ரேதாயின் திருவல்லிதீர்த்தங்கண்டேன் திறமானகற்பத்தின் தீர்த் தங்காணே. 938

காணவேயின்னம்வெகுதீர்த்தமுண்டு கண்மணியே விலாடமென்றதீர்த்தங்கண்டேன், பூணவவயிரணியனூர்தீர்த்தங்கண்டேன் புகழான புஜண்டரிடதீர்த்தங்கண்டேன், வேணபடிதிருமாலின் தீர்த்தங் கண்டேன் விருளானகும்பமென்ற தீர்த்தங்கண்டேன் நீணவேகாளிங்கதீர்த்தங்கண்டேன் நிஷ்களங்கசொர்ணமென்ற தீர்த்தந்தானே.

தானனதீர்த்தமதுயென்னசொல்வேன் தகமையுள்ள புலிப்பாணிதம்பிரானே, மானனதாமரையின்தீர்த்தங்கண்டேன் மகத்தான ஞானமென்றதீர்த்தங்கண்டேன், வேனனயாதவமாந் தீர்த்தங்கண்டேன்வெளியானவமுர்தமென்ற தீர்த்தங்கண்டேன், பானனவசுவணியாந்தீர்த்தங்கண்டேன் பாங்கானவற்புதமாந் தீர்த்தமாமே

ஆமேதான்புலிப்பாணியன்புள்ளானே வப்பனே வனகதத்தின் தீர்த்தங்கண்டேன், நாமேதான்காலாங்கிநாதர்தம்மால் நலமானகுளிகையதுபூண்டுகொண்டு, தாமேதான்காலாங்கிசொன்னநீதி தன்மையுடன்வாக்கதுவும் செயயாமற்றான், போமேதானஷ்டதிசை யான் கடந்துபொங்கமுடன் தீர்த்தமதைகண்டிட்டேனே. 941

கண்டேனேவெகுகோடிதீர்த்தந்தன்னை காசினியி லார்கண்டாரென்னைப்போல, உண்டானசித்துமுனிரிஷிகள்தேவர் வுலகமெலாங்குளிகைகொண்டுசென்றதுண்டே, ஒண்டொடியாய் மரம்பொந்து சமாதிபீடம், ஓகோகோநாதாக்கள்கண்டதில்லை, சண்டமாருதம்போலேகுளிகைபூண்டு சட்டமுடனஷ்டதிசை கண்டிட்டேனே. 942

இட்டேனேயின்னமொருமார்க்கஞ்சொல்வேன் யெளிதானநாதாந்தசித்துதாமும், பட்டமாம்விட்டலவோபாரின்மீது பாருலகிலதிசயத்தைக்கண்டதில்லை, விட்டகுறையிருந்ததொரு புண்ணியத்தால் வேதாந்தத்தாயினது மகத்துவத்தால், சட்டமுடன் வையகத்துமகிமையெல்லாம் தாரணியில் கண்டறிந்தபுதுமைபாரே. 943

புதுமையாம்வெருகோடி சித்தர்தாமும் புகழான வுலகுதனில் கோடாகோடி, கதுமையுள்ளதேவரிஷியிருந்தாரல்லோ காசினியிலதிசயங்கள்கண்டேனென்றும், பதுமமுகமஷ்டதிக்குப்புரிசம்யாவும் பார்த்துவந்தவுறுதியதுங்கூறவில்லை, வதுவைபுரிசுரக்காயுங் கரிக்காயென்றவார்த்தையதுபோலலைவாய் நவின்றிட்டாரே. 944

நவின்றாரேசித்துமுனிகோடாகோடி நாற்பத்து வெட்டுலட்சகிரந்தந்தன்னை, குவின்றதொருசாத்திரங்கள் மலைபோலாக குணமுடனேபாடிவைத்தார் லக்கோயில்லை, கவிந்ததொரு குறுக்குவழிசுறுக்

குமார்க்கம் கண்டுமனதுவந்தல்லோவுளவாருய்ந்து, அவிந்ததிருவிளக்கதுமையேற்றினாற்போல் வப்பனே சத்தகாண்டம் பாடினேனே.

போகர்தன்வரலாற்றை புலிப்பாணிக்கு கூறல்.

பாடினேனின்னமொரு மார்க்கஞ்சொல்வேன் பாலகனே புலிப்பாணிபகரக்கேளாய், நீடியதோர்காலாங்கிகுருவையாலே நீதியுடன் நெடுங்காலமிருந்தேனங்கே, தேடியேகாலாங்கி நாதர்தாமும் தேற்றமுடன்றன்றனக்குருவுகந்தசீஷன், நாடியே வென்றுமென்றாசன்மையாலேநானவற்குநற்சீஷனுகினேனே. 946

ஆகினேனேநெடுங்காலம்பணிதிசெய்து வப்பனேசமாதிக்குப் பூசைசெய்தேன், பாலில்விழுமீயைப்போல்பாதவித்வதன்பட்சமுடனென்மீதில்மனதுவந்து, சாகின்றசடலமதுங் காயந்தந்துசட்டமுடனெந்தனுக்குயிதவுகூறி, மேதிடவேநூற்றைபேதசஞ்சொல்லி மேன்மையுடனெந்தனையா சீர்மித்தாரே. 947

எந்தனையுமாசீர்மம் மிகவுஞ்செய்து வெகுவிலான வுபதேசவுண்மைகூறி, அந்தமுடனுதியந்தமுழுவுஞ்சொல்லி வப்பனேயோகமென்றவழியுங்காட்டி, விந்தையுடன் வையகத்துமகிமைகூறி விட்டகுறையாவனைத்துமொழிந்துவல்லோ, சொந்தமுடனென்னையுஞ் சீஷனுக்கிசுந்தரனேமகத்துவங்கள் கூறினாரே. 948

கூறினார்வெகுகோடியிதிகாசங்கள் கொற்றவனே சமாதிமுறைப்பாடுஞ்சொல்லி, தேறியேசிலகாலமங்கிருந்து தேற்றமுடன் வையகத்துவதிசயங்கள், மீறியேதானுணர்ந்து குளிகைபூண்டு மிக்கானநாடுபதிதேசமெல்லாம், கோறியேதேசமெல்லாம் மதிதம்பூண்டுகொற்றவனே யெந்தனுக்குவருள்தந்தாரே. 949

தந்தாரேயெந்தனுக்குகோடியாகச் சட்டமுடன்காலாங்கிநாதர்தாமும், அந்தமுடனெந்தனுக்குவதிதமார்க்கம் வப்பனே தாமுறைத்துப்போகவென்று, இந்தமாணிலத்திலுள்ள மகிமையெல்லாம் ஏற்றமுள்ளகுளிகையினாலறிந்துகொண்டு, விந்தையுடன் பாடிவைப்பேன் சத்தகாண்டம் விண்ணுலகம்மண்ணுலகம் விடங்கொள்ளாதே.

கொள்ளாதுபோகரேழாயிரந்தான் கொற்றவனேநாதாக்கள்கூறவில்லை, எள்ளளவும்பிசகாதுயின்னூலப்பா யிணையான நூலுக்குயெதுவேதென்றால், கள்ளமிலாக்கும்பமுனி சொன்னநூலாம் காசினியில்பெருநூலாம்பேதமுண்டோ, தள்ளவுந்தான்போகாதகாண்டமப்பா தருவானபன்னீராயிரந்தானாமே. 951

பன்னீராயிரமென்னும் நூல்தானப்பாபயிலானகாண்டமது பனிரெண்டுமாகும், சொன்னமொழிதவறாது துய்யபாலா தீகளை கற்றிப்பன்னீராயிரந்தான் சொன்னார், கன்னியமாய்ப் பனிரெண்டு காண்டஞ் சொன்னார் கண்மணிமைய வாயிரத்துக்கொருகாண்டந் தான், உன்னிதமாயின்னாலுக்குவமைகூறி வுத்தமனார்பாடிவைத் தாருண்மைதானே. 952

உண்மையாமென்னாலைக் கண்டறிந்து வுத்தமனே கும்பமுனி நூலைப்பாரு, திண்ணமுடன்பனிரெண்டுகாண்டம்பாருதீர்க்கமுடன் ரகசியங்களெல்லாம்விள்ளும், நன்மைபெறமோட்சவழிகதியே கொள்வார்நாதாந்தக்கும்பமுனிமுன்னேநிற்பார், தண்மையுள்ள சாத்திரந்தான் பெருநூலப்பா தகமையுள்ளபனிரெண்டு காண்டம்பாரே.

பாரேதானகஸ்தியனார்கோடி நூல்கள்பாருலகில்பாடிவைத்தார் மறைப்புமெத்த, நேரேதான்பெருநூலின் மார்க்கமெல்லாம்நேர்மையுள்ளவென்னால்போல்விள்ளலாகும், சீரேதான்பனிரெண்டுகாண்டமாக சிறப்புடனேபாடிவைத்தார்புலஸ்தியற்கு, வேரேதான்சாத்திரங்கள்பார்ப்பதுண்டோபார்த்தாலும் பெருநூலுக்கொவ்வாதன்றே.

அன்றானசாத்திரங்களனந்தங்கோடி வளவில்லா சூத்திரங்கள் கணக்கோயில்லை, குன்றானமலைபோலே வித்துவைத்தார் கொடிதானசாத்திரத்தின்மகிமையெல்லாம், தென்றிசையில்கும்பமுனிசெய்தநூல்கள்தேசத்தில்பாதியுண்டு வாயுர்வேதம், வென்றிடவேபதினெண்பேர்செய்நூல்கள் வேட்கமுடன்மறுபாதியென்னலாமே.

என்னவேகும்பமுனியென்றநாமம் யெழிலானவகஸ்தியரின்நாமமாகும், பன்னவேயகஸ்தியனார்யென்றநாமம்பலபலவாஞ்சாத்திரத்தில்முறைபாடாக, துன்னவேகும்பமுனி யென்றுமேதான் துப்புரவாயெப்போதும் வழக்கம்பாரு, சொன்னதொரு நூல்களின்மேல மகிமைகோடி தோறாமல்பாடிவைத்தார் முனிவர்தாமே. 956

முனியானசாத்திரங்கள் பலநூல்கோர்வை மூதுலகில்பாடிவைத்தார்சித்தரெல்லாம், கனியானவகனியாம் நூல்தானப்பா கருத்துடனே பனிரெண்டுகாண்டஞ்சொன்னார், பனியதுதான் சூரியனைக் கண்டாற்போலே பறக்குமடாபனிரெண்டுகாண்டமுன்னே, தொனிபோன்றசாத்திரங்கள்களவுமார்க்கம் துப்புரவாய்க்காவியத்துக்கொவ்வாதன்றே. 957

அன்றானசாத்திரமாங்கோர்வையப்பா வப்பனேபனிரெண்டுகாண்டஞ்சொன்னார், குன்றானமலைபோலே கோடித்தங்கம்கொட்டினார் பனிரெண்டுகாண்டத்துள்ளே, சென்றிடவேவயித்தியமும்வாதமார்

க்கம் செயலானயோகமுதல் ஞானமார்க்கம், வென்றிடவே மாந்தி ரீகமாரணவேதம் வேண்டியதோர் கருமானமிக வுண்டாமே. 958

உண்டானசாத்திரத்தி லில்லாமார்க்கம் வுத்தமனே பெருநூலி ற்காணலாகும், கண்டாலும்விடுவாரோ பெருநூலப்பா காசினியில் பனிரெண்டு காண்டந்தன்னை, விண்டதொரு பொருளெல்லா மதி லேதாயும் வித்தகனே மற்றோர்நூல் காண்பதில்லை, சண்டமாருதம் போலே பனிரெண்டுகாண்டம் சங்கையற வாயிரத்துக்கொரு காண் டந்தானே. 959

சங்கையில்லாபெருநூலைப் பார்த்தபேர்கள் சாயுச்சிய பதவித னைப்பெறவேயாகும், இங்கிதமாய்ப் பெருநூல்கள் பார்க்காமாண்பர் யெழிலான சாலோகசாமீபந்தான், அங்கமுடன் சாரூபபதவி மூன் றும் வப்பனேகிட்டுவது மரிதேயாகும், புங்கசித்தியெட்டுவித போக ந்தன்னைபுகழுடனே பெருநூலோர் காண்பார்தானே. 960

போகர் புலிப்பாணியை யாசீர்வதித்து புத்திகூறல்.

தானான யின்னமொரு தன்மைசொல்வேன் தாக்கானபுலிப்பா ணிதயவுள்ளானே, கோனானயென தையர் காலாங்கிநாதர் கொற்றவ னேயெந்தனுக்குச் சொன்னநீதி, பானானபார்லோக மிடங்கொள் ளாது பாலகனே சொல்வதற்கு நாளுமில்லை, தேனானமனோன்மணி யாள் கடாட்சத்தாலே தேற்றமுடன் கோடிமுறைசொல்வேன்பாரே

பாரேதான்கலியுகம் பிறக்கலாச்சு பாலகனே சத்தியமும் விழு லாய்ப்போச்சு, ஆரேதானுனக்குமதி சொல்வார் வப்பனே யுபதேசம் பெற்றமட்டும், பேரிருக்கவூரிருக்க பிதாவிருக்க பேரானமகுத்துவத் தை வெளிவிடாதே, சீரழிந்தமாண்பரெல்லாஞ் செனிப்பாரப்பா ஜெகதலத்தில் கருமியென்ற கோடிபேரே. 962

கோடியாம்நல்லவர்போலிருப்பாரப்பா கொற்றவனே யுந்தனுந் குயுபதேசித்த, தேடியதோர் பொருளப்பா சத்தகாண்டம் தெளிவா னயேழாயிரக்காவியத்தை, பாடியேயுந்தனுக்கு தத்தமாக பட்சமுட ன்யான்கொடுத்த பெருநூலப்பா, வாடியேமயங்காதே மனம்விடா தே மதிகெட்டுநில்லாதே நூல்கொடாதே. 963

கொடுத்தாலும் விதிபாளி பார்த்தறிந்து கொற்றவனே கொடு த்தாலும் புண்ணியமெய்தும், கெடுத்ததொரு குடிகெடுக்கும் பாவி கட்கும் கெடியானசண்டாள மாண்பருக்கும், அடுத்துறவுநயம்பேசி புரணிகூறும் வணியாயக்காரருக்கும் வறிவிலார்க்கும், தொடுத்ததொ ருபெருநூலாஞ் சத்தகாண்டம் துப்புரவாய்க் கொடுத்தாலே பாவ மாமே. 964

பாவமாம்நூலதனைப் பதனம்பண்ணு பாலகனே சமாதிமுகம் வைத்துப்போற்று, ஆவலுடன் விதியாளிவந்துகேட்டால் வப்பனே நீகொடுத்துமதிகள்கூறு, சாவதுவுந்தலைமேலேயிருக்குமப்பா சாங்க முடன் நூல்கொடுத்தால் மெத்தநன்று, போவதுமெய் யிருப்பது பொய்யென்றவாக்கியம் பொங்கமுடன்வேதமது நுணுக்கமாமே.

வேதங்கள் நுணுக்கறிந்து யீயாவிட்டால் வெகுபாவம் வெகு சாபம்நரகமெய்தும், நீதமுடன்பரிசுத்தவாளருக்கு நீதியுடன் கொடுப்பதுவேகர்மமாகும், தோதமுடன் விதியாளிவந்துகேட்டால் தோஷமல்சமாதிமுகமிருந்தநூலை, ஆதவமாமருளினதுவிசுவாசத் தால் வப்பனேநூல்கொடுத்து மதிகள்கூறே. 966

கூறவென்றால் புலிப்பாணி குணமுள்ளானே கொற்றவனேகலி யுகமும்பிறந்துபோச்சு, மாறலுடன்வையகத்தில் வெகுபாடப்பாமா ண்பர்களும்வெகுகேடுபடுவாரப்பா, சீறலுடன்பொய்சூது கபடுதந்தி ரம் சிறப்பானகுறைபாடுவதிதமார்க்கம், மீறவேதானடக்குங்கலியுக த்தில் மிக்கானவுண்மைபது வறிந்துகொள்ளே. 967

கொள்ளப்பா யொருவரையும் நம்பவேண்டாம் கொற்றவனே கலியுகத்திலனியாயங்கள், தள்ளவேபோகாது தரணிமீதில் சட்ட முடன் அநேகவிததெய்வமென்பார், விள்ளவேவிசுவாசம்பாவ முண்டு வித்தகனேயனேகவிதசாத்திரங்கள், உள்ளபடி கூறுவார் மாண்பரப்பா வுத்தமனேமயங்காதே புத்திவானே. 968

புத்தியாய்கலியுகத்தில்சிலதுகாலம் புகழுடனே தாமிருந்துசமா திகொள்வாய், சத்தியத்தைத்தவறாதே தம்பிரானேசதகோடி சூரி யன்போல் ஞானங்கொள்ளு, வித்தகனே விற்பனனேவிண்ணுள்ளா னே விட்டகுறைநேருமட்டும் வையகத்தில், புத்தியாய்நெடுங்காலந் தாமிருந்து புண்ணியனேசமாதிமுகம் புகுவீர்தானே. 969

போகர் சமாதிக்குப்போகல்

தானானபுலிப்பாணிதகமையோனே தாக்கானயென்தேவர்சொ ன்னநீதி, கோனானகாலாங்கி வாக்குபோலே கொற்றவனே சமாதி முகஞ்செல்வேனப்பா, மானானமனோன்மணியாள் கடாட்சத்தாலும் மகதேவர்காலாங்கி கிருபையாலும், பானானபாரிலுள்ளோர் புண்ணி யத்தால் பாலகனேசமாதிமுகஞ் செல்வேன்தானே. 970

செல்கவென்றால்யெந்தன்முறைபாடுபோலே ஜெகதலத்தில்சில காலமீரிருந்து, புல்கவே வையகத்தைத்தான்மறந்து புகழான சமா

திமுகமேவகன்று, விலகவேகலியுகத்திலிருந்துமென்ன விட்டகுறை யிருந்தாலுமென்னலாபம், அல்லவது நெடுநாளுமிருந்தாலுந்தான் வப்பனேதேகமது மண்ணுய்ப்போமே. 971

மண்ணுனதேகமதுயிருந்துமென்ன மகிதலத்தில் நெடுங்காலம் வாழ்ந்துமென்ன, வண்ணமுடன் கலியுகத்தி லனியாயங்கள்வாகுட னேசதாகாலம்நடக்கும்பாரு, எண்ணமதுகலியுகத்து மாண்பருக்கு யெழிலானகோடிமுறை தத்துவங்கள், கண்ணவிந்த மாண்பரப்பா கலியுகத்தார் காசினியைமறப்பதுவும் மெத்தநன்றே. 972

நன்றுனகாசினியைமறந்துமல்லோ நான்போகுஞ் சமாதிமுகந் தன்னைப்போலே, குன்றுன கலியுகத்தில் நீயுமப்பா கொற்றவனே சமாதிமுகஞ்செல்கநன்று, என்றைக்கும் வையகத்தின் வாழ்க்கை யெல்லாம் யெழிலுடனேமறப்பதுவு மெத்தநன்று, தென்றிசையில் கும்பமுனிசமாதிபக்கல் தேற்றமுடன்சமாதிமுகங்கொள்வீர்தானே

போகர் சித்தர்களுக்கும் ரிஷிகளுக்கும் வணக்கங்கூறுகின்றார்.

தானுனவகஸ்தியர்க்குச்சரணஞ்சொன்னேன் தாக்கானவவர்பா தம்போற்றிபோற்றி, கோனுனவாரிஷியார் தாள்பணிந்தேன் கொற் றவனேயவர்பாதம்போற்றிபோற்றி, தேனுனகாலாங்கி சரணஞ்சொ ன்னேன்தேற்றமுடனவர்பாதம்போற்றிபோற்றி, மானுனசட்டமுனி சரணஞ்சொன்னேன் மார்க்கமுட னவர்பாதந்தொழுதிட்டேனே.

தொழுதேனேரோமரிஷி சரணஞ்சொன்னேன் தோருமலவர் பாதம்பணிந்துபோற்றி, பழுதுபடாமச்சமுனிசரணஞ்சொன்னேன் பாலகனே யவர்பாதம்போற்றிபோற்றி, தொழுதுமே சிவவாக்கியர் சரணஞ் சொன்னேன் தோற்றமுடனவர்பாதம் போற்றிபோற்றி, விழுந்துமே நந்தீசர்சரணஞ்சொன்னேன் விருப்பமுட னவர்பாதம் பணிந்திட்டேனே. 975

பணிந்தேனேதன்வந்திரி சரணஞ்சொன்னேன் பாலகனேயவர் பாதந்தொழுதுபோற்றி, அணியானராமருக்குச் சரணஞ் சொன் னேன்வப்பனேயவர்பாதம்போற்றிபோற்றி, துணிந்துமே கௌபா லர்தாள்பணிந்தேன் துப்புரவாய்ச் சரணங்கள் மிகவுஞ் சொன்னே ன், மணியானசுந்தரானந்தருக்கு மகததானசரணங்கள்போற்றி தானே. 976

போற்றியேதேரையர் சரணஞ்சொன்னேன் புகழுடனே யவர் பாதந்தொழுதும்போற்றி, ஆற்றலுடன்பூதனந்தருக்குவப்பனேயவ ர்பாதந்தொழுதுபோற்றி, மாற்றலுடன்புண்ணாக்குயீசருக்குமகத்தா

னசரணங்கள்மிகவுஞ்சொன்னேன், தேற்றமுடன்யிடைக்காடர் சரணஞ்சொன்னேன் தெளிவுடனேயவர்பாதந்தொழுதேன்தானே.

தானானடமரகானந்தருக்கு தண்மையுடன் மிகநோக்கிச் சரணஞ்சொன்னேன், கோனானதட்கணாயருக்குகோடிமுறை சரணங்கள்மிகவுஞ்சொன்னேன், பானானவகப்பேய்சித்தருக்கு பட்சமுடன் வெகுகோடிசரணஞ்சொன்னேன், மானானயாக்கோபுபாதம்போற்றி மார்க்கமுடன்சரணங்கள் கூறினேனே. 978

கூறினேன்குறும்பரென்றசித்தருக்கு கோடானகோடியது சரணஞ்சொன்னேன், தேறியேயவர்பாதந்தொழுதுயோற்றி தேற்றமுடனஞ்சலிகள்மிகவுஞ்செய்தேன், மாறுபடாசோதியென்றமுனிவருக்குமநந்தான சரணங்களதிகஞ் சொன்னேன், ஆறுநதி தீர்த்தமது கொண்டுமல்லோ வவர்பாதமர்ச்சனைகள் செய்திட்டேனே. 979

செய்தேனேயின்னம்வெகு மார்க்கஞ்சொல்வேன் செயலானபுலிப்பாணிசெல்வவானே, துய்யநல்லவூர்வசியாள் சரணஞ்சொன்னேன் துப்புரவாயென்மீதிற்கடாட்சம்வைத்து, வெய்யபுகழ்காலாங்கி கடாட்சத்தாலே விருப்பமுடனென்மீதில்மனதுவந்து, தையலெனும் ஊர்வசியாள்கடாட்சத்தாலேசட்டமுடன் சத்தகாண்டம்பாடினேனே.

பாடினேன்புலிப்பாணிமைந்தாகேளு பாலகனேவியாசமுனிநாதருக்கு, தேடியேயவர்பாதந்தொழுதேனப்பா தேற்றமுடன் சரணங்கள்மிகவுஞ்சொன்னேன், கூடியேகௌதமரிடியாரின்றன் கொற்றவனேயவர்பாதந்தொழுதுபோற்றி, நீடியேவஞ்சலிகள் மிகவுஞ்செய்துநீதியுடனவர்பதத்தைப் பணிந்திட்டேனே. 981

இட்டேனேதிருமூலர்சரணஞ்சொன்னேன்யெழிலுடனேயவர் பாதந்தொழுதுபோற்றி, சட்டமுடன் பாம்பாட்டிசித்தருக்கு சதகோடிநமஸ்காரம்செய்தேன்யானும், திட்டமுடனவர்பாதந் தொழுதுபோற்றி தீர்க்கமுடன்மேலுமஞ்சலிகள்செய்தேன், பட்டமுடன் கடுவெளியார்சித்தருக்கு பாலகனேநமஸ்காரஞ் செய்தேன்பாரே.

பாரேதான்கமலமென்ற முனியாருக்கு பட்சமுடன்சதகோடி சரணஞ்சொன்னேன், சீரேதானவர்பாதந்தொழுதும்போற்றி சிறப்புடனேவஞ்சலிகள்மிகவுஞ்செய்தேன், நேரேதான் கைலாசரிடியாருக்குநேர்மையுடனவர்பாதந் தொழுதுபோற்றி, கூரேதான்நமஸ்காரம் மிகவுஞ்சொன்னேன் கொற்றவனே புலிப்பாணி பண்புள்ளானே.

பண்பானவஞ்சனமாமரிடியாருக்கு பாலகனேசரணங்களதிகஞ் சொன்னேன், நண்புடனேதான்பணிந்துமுடிகள்சாய்த்து நன்மையு

டனவர்பாதந்தொழுதுபோற்றி, வண்பானநவகண்டர்பாதம்போற்றி வளமுடனேயவர்தனக்குச்சரணஞ்சொன்னேன், திண்பானவஞ்சலிகள்மிகவுஞ்செய்து தீர்க்கமுடன்கரங்குவித்து வணங்கினேனே.

வணங்கவேயின்னம்வெகுசித்தருண்டு வளமானநாதாந்தரிஷியாரப்பா, இணங்கினேன்ஜமதக்கினிமுனியாருக்குமொழிலான சரணங்கள்மிகவுஞ்சொன்னேன், சுணங்கமதுவாராமல் ரிஷியாருக்கு சுத்தமுடனவர்பாதந்தொழுதுபோற்றி, மணங்கமழுந்திரணாக்கியமுனிவருக்குமார்க்கமுடனவர்பாதந் தொழுதிட்டேனே. 985

தொழுதேனேயின்னமொருமார்க்கஞ்சொல்வேன் தொல்லையெனும்பிறவியதுமயக்கறுத்த, பழுதுபடா புலிப்பாணி பகர்வேனப்பா பாலகனேயின்னம்வெகுசித்தருண்டு, முழுதுமேமுழுதுலகில் கீர்த்திபெற்றமுனையானவசுவனியாந்தேவருக்கு, தொழுதுமே யவர்பாதம் போற்றிபோற்றி தோற்றமுடனஞ்சலிகள் பகருவேனே. 986

பகரவேபுஜண்டமகாரிஷியாருக்கு பண்புடனேவெகுகோடி சரணஞ்சொன்னேன், நிகரவேயவர்பாதந்தொழுதுபோற்றி நீதியுடனதலைகுனிந்துமுடிகள்சாய்த்தேன், சுகராஜபரிட்சித்து மன்னனுக்கு சட்டமுடன்சோதிடங்கள் தாமுரைத்த, சுகமென்றரிஷியார்க்குச் சரணஞ்சொன்னேன் துப்புரவாயவர்பாதம் பணிந்திட்டேனே

பணிந்தேனேபுலிப்பாணி மன்னவாகேள் பாருலகில் கும்பமென்றயீசருக்கு, துணிந்துமேயவர்பாதந்தொழுதுபோற்றி துப்புரவாய்சரணங்களதிகஞ்சொன்னேன், கணிதமென்றமூலத்தினீசருக்கு கனகாபிஷேகமுடன் சரணஞ்சொன்னேன், மணிபோன்ற பாதமதைத்தொழுதுபோற்றி மன்னவனேசதாகாலம் நினைப்பேன்காணே.

காணவேகருவூரார்சித்தருக்கு கனகாபிஷேகமது மிகவுஞ்செய்து, தோணவேயவர்தனக்குச் சரணஞ்சொன்னேன் துப்புரவாயவர்பாதம்போற்றிபோற்றி, மாணமருங்கல்வியுள்ளகொங்கணர்க்கு மகத்தானசரணங்கள்மிகவுஞ்சொன்னேன், நீணவேவாலையானந்தருக்கு நீதியுடன்பாதமது பணிந்தேன்தானே. 989

தானானபுலஸ்தியர்க்குச்சரணஞ்சொன்னேன் தாக்கானவால்மீகர்பாதம்போற்றி, கோனானசுப்பிரமணியர் சரணஞ்சொன்னேன் கூரானவவர்பாதந்தொழுதுபோற்றி, தேனான ஜெயகண்டி பாதம்போற்றிசெங்கமலவள்ளுவனார் சரணஞ்சொன்னேன், மானான மகதேவர்காலதூதர்மகத்தான பாதமது பணிந்திட்டேனே. 990

இட்டேனேநவகோடிரிடியாருக்கும்யெழிலான பதினெண்பேர் சித்தருக்கும், சட்டமுடன்நாற்பத்தியெட்டுபேர்கள் சதுரானமுனி வருக்குஞ்சரணஞ்சொன்னேன், திட்டமுடன்மனோன்மணியாள்பா தம்போற்றிதிகழானசுடரொளியாஞ்சோதிபோற்றி, அட்டதிசைதா ன்புகழுங்காலாங்கிநாதர் வையனேயுன்பாதம் போற்றிதானே.

போகர் சித்தர்களுக்கு அவையடக்கங் கூறல்.

தானானசித்துமகாரிடியாருக்கு தண்மையுள்ள மனுவொன்று சொல்வேனப்பா, கோனானயெனதையர்காலாங்கிநாதர் கொற்றவனு ர்சீனபதிதேசந்தன்னில், மானானவையகத்துமகிமையெல்லாம் மார்க் கமுடனெந்தனுக்கு வுபதேசித்தார், பானானசதகோடி சூரியன்போ ல்பாடினேன் சத்தகாண்டம் பண்பாய்த்தானே. 992

பண்பானலோகவதிசயங்களெல்லாம் பாருலகில் நாதாக்கள் ம றைத்ததாலே, நண்பானமாண்பர்களும் பிழைக்கவேதான் நலமான புலிப்பாணிபாலனுக்கு, திண்ணமுடனிதிகாசவித்தையெல்லாம்தீர்க் கமுடன்சத்தசாகரத்தைப்போலே, உண்மையாம் போகரேழாயிரங் தான்வுகமையுடன்பாடிவைத்தேன் காண்டம்பாரே. 993

பாரேதான்மகுத்துவங்கள் வெளியாச்சென்று பண்புள்ளநாதா க்கள்நீங்களெல்லாம், வேரேதான்கோபமதுகொள்ளாமற்றான் வேழ க்கமுடனெந்தன்மேல்கிருபைவைத்து, சீரேதான்சிறுபாலனென் னையுந்தான்சிறப்புடனே மனதுவந்துவஞ்சலித்து, நேரேதானென்மீ திற்சினங்கொள்ளாமல் நேர்மையுடன் கொண்டணைத்தல்பாரமாமே.

பாரமாமென்னூலிற்றுகளுண்டானாற் பாலகனே சிக்கறத்தும னங்களித்து, தூரானவார்த்தைபது மிகக்கொள்ளாமல் துப்புரவாய் ச்செந்தமிழைச்சீர்திருத்தி, கூறானவிதிபாடு முறைபாடோடு குண பாடுவழிபாடுதானமர்த்தி, சீறானபோகரேழாயிரத்தை சிறப்புடனே யுகந்துமனங்கொள்வீர்தாமே. 995

தாமானசித்துமுனிரிடியார்முன்னே தகமையுடன்பாடிவைத்த சத்தகாண்டம், ஆமேதான்பசபசுங்கிள்ளைமுன்னே வப்பனே யருங் காக்கைசத்தம்போலும், வேமேதான்செந்தமிழாற் சித்தர் முன்னே வேட்கையுடன்யான்செய்த சத்தகாண்டம், தாமேதான் புல்லறிவா லுரைத்ததாலே தண்மையுடன்பெரியோர் புன்னகையு மாமே.

நகையானபோகரேழாயிரந்தான் நலமானசித்தர்முனி நாதருக் கு, தகமையுள்ளகாண்டமதுபெருமையோசொல்தாரணியிலனேகம்

பேர்சித்தர்கூடி, குகைதனிலேவெகுநூல்கள் பாடியல்லோ கொற்றவனேசமாதிமுகம்வைத்தாரப்பா, வகையானசாத்திரத்துக் கொப்புசொல்ல வல்லவனேயென்றாலும் முடியாதன்றே. 997

அன்றானவாதிசேடன் றன்னாலும் வப்பனேவினவிடவும்போகாதப்பா, குன்றானமலைபோலே சாத்திரங்கள் கொட்டினார்சித்தரெல்லாம்லக்கோயில்லை, வென்றிடவே தம்பமுனி வர்க்கத்தோரும் வேதாந்தத்திருமூலவர்க்கத்தோரும், நன்றாகப்பாடிவைத்தார் கோடிநூல்கள்நலமாகப்பாடிவைத்தேன் சின்னூலாமே. 998

சின்னூலாமென்றதொருயிந்தநூலைசினமதுவுங் கொள்ளாமல் மனதுவந்து, யன்னூலும்பெகுநூலாயிருந்திட்டாலும் பட்சமுடன் மனங்களித்துவாசிர்மித்து, என்னூலைக்குற்றமதுகூறுமற்றான்யெழிலானசிறியேன்மேலன்புகூர்ந்து, நன்னூலாயிதம்பூண்டு யின்னூல்தன்னைநன்மையுடனுசரித்து கொள்ளநன்றே. 999

கொள்ளவேயோகமேழாயிரந்தான் கொற்றவனே நெடுங்காலந்தவமிருந்து, உள்ளபடி யுடல்பொருள்களாவியெல்லாம் வுத்தமனேயிந்நூலுக்கொப்பிவைத்தேன், கள்ளமில்லாசாத்திரமாஞ் சத்தகாண்டம் கலியுகத்தார்தான்பிழைக்கப்பாடிவைத்தேன், உள்ளபடிசாபமதுயிந்நூற்கில்லை வுத்தமனேகாண்டமது யேழுதானே. 1000

தானானகாண்டமதுயேழுக்குள்ளே சதகோடி சூரியன்போல் மருத்துவங்கள், சோனைகாலாங்கிகடாட்சத்தாலே கொற்றவனே பெருநூலாம்குருநூலாக, தேனானமனோன்மணியாள்கிருபையாலும் தேஜொளியின்சின்மயத்தினருளினாலும், மானான போகரேழாயிரந்தான்மார்க்கமுடன் பெருநூலும் முற்றதாமே. 1001

# போகர்சத்தகாண்டம்-௭௲

## ஏழாவது காண்டம்

முற்றுப் பெற்றது.